| நூல் கிடைக்குமிடம் : | AVAILABLE @ : |
|---|---|
| **கௌரா புத்தக மையம்**<br>9, செயின்ட் ஜான் சர்ச்சு வணிக வளாகம், ராக்கின்ஸ் சாலை, திருச்சி - 620 001.<br>9952034876 / 9943428994<br>04312419584.<br>**GOWRA PUTHAGA MAIYAM**<br>9, SAINT JOHN CHURCH COMPLEX, ROCKINS ROAD, TRICHY - 620 001<br>99520 34876 / 04312419584.<br>gowraputhagamaiyam@gmail.com | **கௌரா ஏஜென்ஸீஸ்**<br>4A/186, V.R. பிள்ளை தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 05.<br>9790706548 / 9790706549<br>044 28443791.<br>**GOWRA AGENCIES**<br>4A/186, V.R. PILLAI STREET, TRIPLICANE, CHENNAI - 05.<br>9790706548 / 044 28443791.<br>gowra09@gmail.com |

**மேல் கோட்டை / MEL KOTTAI**

விலை : ரூ. **650** CODE : **1456**

| எழுதியவர் : உதயணன் | AUTHOR : UDAYANAN |
|---|---|
| பொருள் : வரலாற்று நாவல் | SUBJECT : HISTRICAL NOVEL |
| பதிப்பாசிரியர் : எஸ். கௌமாரீஸ்வரி M.A., M.L.I.S., | PUBLISHER : S.GOWMAREESWARI M.A., M.L.I.S., |
| பதிப்பு : முதற் பதிப்பு – 2016 | EDITION : FIRST EDITION - 2016 |
| உரிமை : பதிப்பகத்திற்கே | COPYRIGHT : RESERVED |
| வெளியீடு : சீதை பதிப்பகம், 4/7, ராஜா அனுமந்தா தெரு, திருவல்லிக்கேணி, சென்னை – 600 005. | PUBLISHED @ : SEETHAI PATHIPPAGAM, 4/7, RAJA ANUMANTHA STREET, TRIPLICANE, (OPP TO GHOSHA HOSPITAL) CHENNAI - 600 005. |
| பக்கம் : 968 | PAGES : 968 |
| ஒளி அச்சு : ஜெய் ஜீனா | TYPESET BY : JAIJEENA |
| அச்சிட்டோர் : கிளாசிக் பிரிண்டர்ஸ், சென்னை–2. | PRINTED @ : CLASSIC PRINTERS, CHENNAI - 2. |
| ISBN : 978-93-82689-70-6 | ISBN : 978-93-82689-70-6 |

# பதிப்புரை

செம்மொழித் தமிழின் புத்திலக்கிய வரவாக அமைந்த வகை புதினம் என்பது. ஆங்கிலேயர் வருகைக்குப் பின் நகிழ்ந்த தமிழ்மொழி வளர்ச்சிப் படிநிலைகளுள் இதுவும் ஒன்று. காப்பியங்கள் செல்வாங்கிழந்த காலகட்டத்தில் அவற்றின் இடத்தைப் புதினங்கள் பிடித்துக்கொண்டன. புதினங்கள் விரிவான கதையோட்டமும் கிளைக்கதைகளும் கொண்டு விளங்குபவை. அவை சரித்திரப் புதினங்கள், சமூகப் புதினங்கள், அறிவியல் புதினங்கள், ஆன்மீகப் புதினங்கள் எனப் பல நிலைகளில் படைக்கப்படுகின்றன. அவற்றுள் மேல்கோட்டை என்னும் இப்புதினம் சரித்திர வகையைச் சார்ந்தது. புதினத்தை நாவல் என்றும் அழைப்பர்.

இந்த **மேல்கோட்டை** என்னும் சரித்திர நாவல் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் கருநாடகப் பகுதியில் நடந்த சரித்திர நிகழ்வுகளை அடிப்படையாகக் கொண்டு விளங்குகிறது. இராமானுஜர் கருநாடதகத்தில் தங்கிய காலகட்டம்.ஹொய்சாளர் ஆட்சி நடத்த காலக்கட்டம் சமண சமயம் தலைதூக்கியிருந்த காலகட்டம் என இம்மூன்றும் நடைபெற்ற 12ஆம் நூற்றாண்டின் வரலாற்றுப் பின்னணியில் எழந்த நாவலே மேல்கோட்டை என்னும் இந்நாவல்.

சரித்திர நாவலாசிரியராகச் சிறப்புற்று விளங்கும் **திரு.உதயணன்** அவர்கள் இந்நாவலைப் படைத்துள்ளார். இந்நாவலில் இடம் பெறும் இடங்களைக் கள ஆய்வு செய்து வரைமுறையோடு அமைந்துள்ளதால் இந்நாவல் உயிரோட்டத்துடனும், துடிப்புடனும் அமைந்துள்ளது. நிகழ்ச்சிகள் யாவும் பண்பாடு சிதையுவுறாமல், அவையான வருணனைகளுடன் சிறப்பாக அமைந்திருப்பதை படித்துப் புரிந்து கொள்க.

சிறப்பான பல்துறை நூல்களை வெளியிட்டுவரும் எமது பதிப்பகம் இந்நூலையும் வெளியிட்டு மகிழ்கிறது. வாசகஅன்பர்கள் வழக்கம்போல் வாங்கிப் படித்துப் பயனடைவர் என நம்புகிறோம்.

**பதிப்பகத்தார்**

# முன்னுரை

பன்னிரண்டாம் நூற்றாண்டு

இது கர்நாடக நாட்டிற்கு முக்கியமான ஆண்டு.

இந்த காலகட்டத்தில்தான் ஹொய்சளர் வம்சம் (போசளர் வம்சம்) தலைதூக்கியது. சிற்றரசாக இருந்தது பேரரசாக உயர்ந்தது.

இந்த காலகட்டத்தில் அங்கே சமணர்களின் கை ஓங்கியிருந்தது.

இதே காலகட்டத்தில் சோழநாட்டின் பெரும் சக்தியாக விளங்கிய ஸ்ரீவைஷ்ணவ மதத்தின் ஆச்சார்யரான ஸ்ரீஇராமானுஜர் கர்நாடகத்திற்கு வந்து பன்னிரண்டு ஆண்டுகள் தங்கியிருந்தார்.

அவரது முயற்சியின் பலனாக மேல்கோட்டையில் பெருமாள் கோயில் எழுப்பப்பட்டது. அக்கோயிலுக்குரிய உத்ஸவ மூர்த்தியை டில்லிக்குச் சென்று இராமானுஜர் மீட்டு வந்ததும் இக்காலகட்டத்தில்தான்.

தொண்டனூர், தழைக்காடு, வேலாபுரம் (பேலூர்) கதூகலம், விஜயாபுரம் ஆகிய ஊர்களில் பஞ்சநாராயணர்களின் எழிலார்ந்த ஆலயங்கள் உருவாக்கப்படுவதற்கு இக்கால கட்டம்தான் உதவியது.

கர்நாடகத்திற்கு இது ஒரு பொற்காலம்தான்.

இராமானுஜர் - ஹொய்சளர் - சமணர் இந்த மூன்று சக்திகள் கர்நாடகத்தில் விளைவித்தவற்றைத்தான் இந்த நாவல் சித்தரிக்கிறது.

பன்னிரண்டாம் நூற்றாண்டின் முக்கியமான வரலாற்று நிகழ்வுகள் இந்த நாவலில் கூறப்பட்டுள்ளது.

இந்த நாவல் சிறப்பாக அமைய வேண்டும் என்பதற்காகக் கதைக் களங்களாக அமைந்த பல ஊர்களையும் நேரில் சென்று பார்த்து விட்டு வந்தேன்.

வாழ்க்கையில் இருக்கும் நவரசங்களும் இந்த நாவலில் உண்டு. யாருக்காகவும் தயங்கியோ பணிந்தோ இந்த நவரசங்களை நான் கூட்டவோ குறைக்கவோ இல்லை.

எல்லாவற்றையுமே அதனதன் முக்கியத்துவத்தின் அடிப்படையில் அமைத்திருக்கிறேன்.

இந்நாவல் எழுதி பதிப்பகத்தில் கொடுத்ததற்கு மறுநாள் அதாவது 1.12.2015 அன்று சென்னையில் வரலாறு காணாத அளவிற்கு 39செ.மீ மழை பெய்து சென்னையை வெள்ளக்காடாக்கியது. எங்கும் சேதம், எதிலும் சேதம் என்ற நிலை. எனது நாவலின் கையெழுத்துப் பிரதி என்னாயிற்றோ என்ற கவலை எனக்கு, நல்ல வேளையாக அதற்கு எந்த பாதிப்பும் நேரவில்லை என்பதை அறிந்தபோது என் உழைப்பு வீண் போகவில்லை என்று மகிழ்ந்தேன். அந்த விதத்தில் கையெழுத்து பிரதியைக் காப்பாற்றிக் கொடுத்த பதிப்பக்கதாருக்கு என் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்தக்கொள்கிறேன்.

இக் கதைக்காக என்னோடு கர்நாடகத்திற்கு வந்து எனக்கு வழிகாட்டிய எனது சகோதரர் டி.வி. கோபால் அவர்களுக்கு என் நன்றி.

வலைத் தளங்கள் மூலம் பல தகவல்களையும், புகைப் படங்களையும், வழித் தடங்களையும் தந்து உதவிய திரு. டி.வி. ஜெகன்னாதன், ரவி, கிருஷ்ண பிரசாத் ஆகியோருக்கு என் நன்றி.

இந்நூலுக்குத் தேவையான பல நூல்களைக் கொடுத்து உதவிய மகாத்மா காந்தி நூல் நிலையம், சைதாப் பேட்டை உரிமையாளர் மகாலிங்கம் அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றி.

எனது எழுத்துலகப் பயணத்தில் ஆரம்பம் முதல் இன்று வரை எனக்குத் துணையாகவும் தூணாகவும் இருந்து வரும் காஞ்சிக் கவிஞர் தண்டமிழ் ஞாயிறு திரு. முத்து இராமமூர்த்தி அவர்களுக்கு என் நன்றி என்றுமிருக்கும்.

வாசக அன்பர்களுக்கு அநேக கோடி நன்றி.

மற்றபடி -

அனைத்துமே பகவான் ரமணரின் செயலேயன்றி எனதென்று எதுவுமில்லை.

எனது செயலால் ஆவதொன்றுமில்லை.

வணக்கம்.

**30.12.2015** **உதயணன்**
சென்னை 600 061.



அச்சப்பட்டுக் கொண்டிருப்பவனுக்கு எதிர் காலம் இல்லை. அச்சத்தை விட்டொழித்தவனுக்கு காலமும் இல்லை; தோல்வியும் இல்லை – விட்டலராயன்



# 1

கந்தவேளின் வேலால் காக்கப்பட்டு வரும் நகரம் என்பதால் வேலாபுரி என்றும், வேலைப் போன்ற விழிகளைக் கொண்ட வனிதையர் நிறைந்த நகரம் என்பதால் வேலாபுரம் என்றும் வழங்கப்பட்டு கர்நாடகத்தின் இன்றைய பேலூரின் பிரதான அரண்மனையின் விதானத்தில் நின்றபடி நாலாபுறமும் நீண்ட நேரமாகப் பார்த்துக் கொண்டிருந்தான் விட்டலராயன்.

அவனுக்குப் பின்னால் தளபதிகள் கங்க ராஜனும் பரதனும் நின்றிருந்தாலும் அவர்களிடம் அவன் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. பேச்சு தேவையில்லையோ அல்லது பேச்சால் பயனில்லையோ - அல்லது பேச்சுக்கும் தகுதியில்லையோ - அல்லது பேச்சுக்கு நேரம் வரவில்லையோ - எது காரணம் என்று கூறமுடியாத நிலையில் விட்டலராயனுக்குப் பின்னால் அந்த இருவரும் அவனது நிழலைப் போல நின்றிருந்தார்கள்.

விட்டலராயனின் பிராயம் ஐம்பது இருக்கலாம். அரச வம்சத்தவனாக இருந்தாலும் அரசவம்சத்துக் கேளிக்கைகளை அவன் தூய்க்காமல் ராஜரிஷி போல தன்னை நிருவகித்து வந்ததால் முதுமையும் முதுமையின் சோர்வும் தன்னை அண்ட விடாமல் பார்த்துக் கொண்டானாதலால் அவனது தேகம் காளைக்குரிய கட்டுடல் போல் விளங்கின.

அவன் சமணனான படியால் நெற்றியில் ஸ்வதிக் அடையாளத்தைத் திலகமாக வைத்திருந்தான். அகன்ற முகம் - இருண்ட தோள்கள் - தீட்சண்யமான கைகள் - அளவான மீசை - எடுப்பான நாசி என ஆடவனுக்குரிய சாமுத்ரிகா லட்சணங்களுடனும் அரசனுக்குரிய ஆபரணங்களுடனும் இருந்தான்.

நீண்ட நேரத்திற்குப் பிறகு கங்கராஜனைப் பார்த்து நகரத்தின் மத்தியில் இருந்தத் தூணைச் சுட்டிக்காட்டி "இன்னும் எவ்வளவு காலத்திற்கு இந்த ஜெயக்கம்பத்தில் சாளுக்கியரின் வராகக் கொடி பறக்கும்?" என்று கேட்டான்.

“சாளுக்கியரது ஆதிக்கம் இருக்கும் வரை பறக்கும்” என்றான் கங்கராஜன்.

விட்டலராயன் சற்று நடந்து விட்டு “இந்தச் சாளுக்கியரது ஆதிக்கம் எவ்வளவு காலத்திற்கு நீடிக்கும்?” என்று கேட்டான்.

“எவ்வளவு காலத்திற்கு அனுமதிக்கப்படுகிறதா அவ்வளவு காலம் வரை நீடிக்கும்” என்றான் கங்கராஜன்.

“சாளுக்கியரின் ஆதிக்கத்தை அனுமதித்துக் கொண்டிருப் பவர்கள் யார்?”

“ஆதிக்கத்தின் கீழ் ஆண்டு வருபவர்கள்தான். நம்மையும் சேர்த்து”

“இது எதைக் காட்டுகிறது?”

“ஆதிக்கத்திற்கு அடங்கியும் ஒடுங்கியும் வாழ்வதுதான் சரி என்பதைக் காட்டுகிறது”

“சுயாட்சி பெறவேண்டும் என்று ஒருவருக்குக் கூடவா தோன்றவில்லை?”

“அது தான் உண்மை”

“அது கசப்பாக அல்லவா இருக்கிறது?”

“உண்மை கசப்பாகத்தான் இருக்கும்”

“எனக்கு உண்மையைப் பிடிக்கிறது. கசப்பைப் பிடிக்கவில்லை” என்று சொன்ன விட்டலராயன் “முன்னோர்கள் என்னென்ன கனவுகளைக் கண்டார்களோ தெரியாது. ஆனால் நிச்சயமாகக் கனவுகளைக் கண்டிருக்க வேண்டும். அவை மகத்தானவைகளாக இருக்க வேண்டும். நாம் தொடர்ந்து கனவுகளைத்தான் கண்டு கொண்டிருக்கிறோமோ? பூனைக்கு யார் மணி கட்டுவது என்று யோசித்துக் கொண்டுதான் இருக்கிறோமோ?” என்று கேட்டான்.

“தங்கள் மனதில் இருப்பது என்ன?” என்று கேட்டான் கங்கராஜன்.

“கங்கராஜா! பரதா! நமது ஹொய்சள வம்சம் எப்படி உருவாயிற்று என்று தெரியுமா?” என்று கேட்டான் விட்டலராயன்.

இக்கதை நடப்பதற்கு இருநூறு ஆண்டுகளுக்கு முன்னால் துவார சமுத்திரத்தில் கபில முனிவர் என்றொரு மகரிஷி இருந்தார். அவர் தவத்திலும், பக்தியிலும் ஆழ்ந்த அனுபவம் கொண்டவர். யட்சிணி தேவதையான வாசந்திகா தேவியை வணங்கி வழிபட்டு வந்தவர். ஒரு நாளைக்கு அவர் அவளை

நினைக்கும் நேரமும் துதிக்கும் நேரமும் தான் அதிகம். குறைந்த நேரத்தில்தான் அவர் இதர வேலைகளை கவனிப்பார்.

யட்சிணியே ஒருமுறை "கபிலா! எதற்காக என்னையே நினைத்துக் கொண்டிருக்கிறாய்? உண்மையான பக்தன் ஒரு நாளைக்கு ஒரு முறை நினைத்தால் போதுமே?" என்று கேட்டாள்.

"தாயே! என்னை நான் பக்தன் என்று கருதுவது கூட ஆணவமாக இருக்கலாம் என்பதால் அப்படி நான் எண்ணிக் கொள்வதில்லை. நான் என்ற எண்ணம் கூட ஆணவத்தின் அடையாளம்தான். ஆகவே என்னை நான் இழக்கவே விரும்புகிறேன். அப்படி இழக்கிற போது உன் நினைவு மட்டுமே எனக்கு வருகிறது" என்றார் முனிவர்.

வாசந்திகா தேவி அவரைச் சோதிக்க விரும்பி அவருக்கு நோய்களைக் கொடுத்தாள். அவர் நோய்களைப் பொருட் படுத்தவில்லை. அவளையே நினைத்தார்.

"கபிலா! எத்துணை நோய்களைக் கொடுத்திருக்கிறேன்! நீயோ அவற்றைப் பற்றிக் கவலைப்படாமல் என்னை எப்படி நினைக்கிறாய்?" என்று கேட்டாள் தேவி.

"தாயே! இந்த உடலே ஒரு நோய்தான். அதற்கு ஒரு நோய் வருவது நல்லது தானே! இந்த உடல் விழும் நாள் தானே எனக்கு வேண்டும்? இந்தக் கூடு எனக்கு எதற்கு? அதை நீயே அழிக்க முயலும் போது தடுக்க நான் யார்?" என்றார் முனிவர்.

நோய்கள் அந்த கணத்திலேயே அகன்றன.

அந்த முனிவருக்குச் சளான் என்ற ஒரு மகன் இருந்தான்.

குழந்தையாய் இருந்த போது பாலூட்டி வளர்த்த தாய் அவன் தாலாட்டுப் பருவத்தை அடைந்த போது மரணமடைந்தாள்.

தந்தையான முனிவர் அவனைத் தாயாக இருந்து வளர்த்தார்.

அவன் பருவமடைந்த போது "தந்தையாய் மட்டுமின்றித் தாயாகவும் இருந்து என்னை வளர்த்த என் தந்தையே! என் நன்றியை ஏற்றுக் கொள்ளுங்கள்" என்றான்.

"உன்னை வளர்த்து ஆளாக்கியது நானல்ல மகனே. வாசந்திகா தேவிதான். அவள்தான் அனைவரையும் வளர்க்கிறாள். காக்கிறாள். கடைத் தேற்றுகிறாள். அவளுக்குச் சொல் உன் நன்றியை. அவளை வணங்கு. அவளை வழிபடு. அவள் வழியே உன் வழி என்று நட" என்றார் முனிவர்.

"மகனாகிய நான் தங்களுக்குச் செய்யக் கூடியது என்ன தந்தையே? சொல்லுங்கள். செய்கிறேன்" என்றான் சளான்.

"தேவிக்குச் செய்வது எனக்குச் செய்வதாகும். அவளுக்குச் செய். அது போதும்?

"தந்தையே! வாசந்திகா தேவி என்பது யார்?"

"மகனே! வாசந்திகா தேவி ஒரு யட்சிணி. யட்சிணி என்றால் பாதுகாவலன் என்று பொருள். நம்மையெல்லாம் பாதுகாக்கும் தேவதை அது. சமணத்தில் அதைத் துணைத் தெய்வம் என்கிறார்கள். நானோ அவளுக்கு இணையான தெய்வமே இல்லை என்பேன்."

"அவள் எப்படி இருப்பாள் தந்தையே? அவளுக்குச் சிலை இருக்கிறதா? ஓவியம் இருக்கிறதா?"

"இருக்கிறது. சிலையும் ஓவியமும் மனதில் இருக்கிறது."

"மனதில் இருந்தால் எப்படிக் காண முடியும்?"

"மனக் கண்களால் காணமுடியும். மகனே! நீ அவளைத் துதி செய். அவள் உன் மனக் கண்களில் காட்சி தருவாள். அவள் வடிவத்தை ஓவியமாக எழுது. பிறகு சிற்பமாக வடி. இதுவே நீ அவளுக்குச் செய்யக் கூடிய சீரிய தொண்டாகும். உன் மூலம் அவளது திவ்யமானத்திரு உருவம் உலகிற்குத் தெரியட்டும்."

சளான் எதற்கும் சளைக்காதவன் என்பதை நிரூபித்தான். தந்தை சொல் மிக்க மந்திரமில்லை என்பதை உணர்ந்து நடந்தான். பக்திக் கடலில் ஆழ்ந்தான். மனக் கண்களில் தேவியின் காட்சி தெரிந்தது. தெரிந்த காட்சியை முதிர்ந்த பனையோலைகளில் ஓவியமாக்கினான். காவியம் பாட வில்லை. மாறாக அதைக் கல்லில் சிற்பமாய் வடித்தான்.

தேவியின் சிற்பத்தைக் கண்டு பரவசமடைந்தார் கபிலமுனிவர்.

தன்னால் கூட முடியாததைத் தனயன் செய்து முடித்ததால் அவன் மீது அவருக்கு அளவு கடந்த பாசம் உண்டாயிற்று. நினைவுகளில் பாதி தேவிக்காகவும் மீதி தனயனுக்காகவும் ஒதுக்கினார்.

"தாயே! தங்களுக்கு உருவம் தந்த சளான் இந்த வனாந்தரத்தில் இருந்து வாடுவது தான் தங்கள் திருவுள்ளமா? தங்களைத் தவிர வேறு எதுவும் அறியாத நான் தனயனுக்கு என்ன செய்வேன்? அவன் வாழ்வை எப்படிச் சிறப்பான தாக்குவேன்?" என்று தேவியிடம் அடிக்கடி முறையிட்டார்.

தனக்காக எதுவும் இல்லை என்றாலும் தன் மகனுக்காக ஏதாவது நன்மை செய்ய வேண்டும் என்ற உந்துதல் அவருக்கு உண்டாயிற்று. தேவி சிலைக்குச் சாமரம் வீசினார்.

அபிஷேகங்களைச் செய்தார். அன்னம் படைத்தார். தேவி எதையும் செய்வதாக இல்லை.

எனவே ஒருநாள் தேவியின் மீது கோபம் கொண்டு சல்லேகனை புரியத் தொடங்கினார்.

அதுதான் வேளை என்று கருதிய வாசந்திகா தேவி பயங்கரமான சப்தங்களை உண்டாக்கினாள்.

முனிவரின் சல்லேகனை கலைந்தது.

கண்களைத் திறந்தார்.

அங்கே அவர் கண்ட காட்சி திகைப்படைய வைத்தது.

அவரது மகன் சளான் மீது பாய்வதற்குப் புலி யொன்று தயாராக இருந்தது.

முனிவர் தன் மகனைப் பார்த்து, "பொய்! சளா!*" என்றார்.

அவ்வாறு சொன்ன முனிவர் யட்சிணி தேவதைக்கு வீசி வந்த சாமரத்தின் பிடியைக் கழற்றி வீசினார்.

அதைப் பற்றிக் கொண்ட சளான் அப் புலியோடு போரிட்டு இரும்பினால் ஆன சாமரப் பிடியால் புலியைக் குத்திக் கொன்றான்.

அச்சமயமே யட்சிணி வாசந்திகா தேவி பிரசன்னமானாள்.

இருவரையும் வாழ்த்தினாள்.

முனிவரைப் பார்த்து "கபிலா! புலியாக வந்த என்னை வீழ்த்தினான் சளான். அவன் மகாவீரனாகத் திகழ்வான். அவனது வம்சம் இனி பொய்சொள வம்சம்** என்று அழைக்கப் படும். அந்த வம்சம் ராஜ்யத்தை ஆளும். மகத்தான சரித்திரத்தைப் படைக்கும். அற்புதங்களை நிகழ்த்தும்" என்று கூறி விட்டு மறைந்தாள்.

"விசித்திரமாக இருக்கிறது தந்தையே!" என்றான் சளான்.

"எதைச் சொல்கிறாய் மகனே?"

"நாம் இருப்பது வெறும் கானகம். இதில் நமக்கு இக் குடில் கூடச் சொந்தமில்லை. அப்படியிருக்கும் போது நாம் எப்படி நாட்டை ஆள்வது? எங்கே இருக்கிறது நாடு நாம் ஆள்வதற்கு?"

"மகனே! யட்சிணியின் வாக்கு தப்பாது. அவள் அர்த்தமற்ற வார்த்தைகள் உதிர்ப்பதில்லை. ராஜ்யம் என்பது நம்மைத்

---

* பொய்-சளா என்றால் "சளானே! புலியைத் தாக்கு" என்று பொருள்.

** பொய்சொள வம்சம் என்றாலும் ஹொய்சொள வம்சம் என்றாலும் ஒன்றுதான். தமிழர்கள் இதைப் போசளவம்சம் என்று அழைத்தார்கள்.

தேடி வராது. நாம் தான் அதைத் தேடிப் போக வேண்டும். நமக்கு- அதாவது உனக்கு அரியணை யோகம் உண்டு என்பதை வாசந்திகா தேவி கூறிவிட்ட பின் அதற்கான பாதையை நாம் தான் போட வேண்டும்."

"நாம் இருவர் மட்டுமே இருக்கிறோம். நம்மால் எப்படி பாதை போட முடியும்?"

"நாம் முயற்சி செய்வோம். யட்சிணியின் அருள் மற்றவற்றைச் செய்யும்" என்று சொன்ன முனிவர் "மகனே! நீ சிறந்த வீரன் மட்டுமல்ல. அறிவாளியும் கூட. உன்னை அழைத்துச் சென்று தற்போது இப்பிராந்தியம் முழுவதையும் ஆளும் சாளுக்கிய சக்கரவர்த்தி அவர்களிடம் அறிமுகப்படுத்தி வைக்கிறேன். சிறந்த வீரனான நீ அவரது படையில் சேர்ந்து கொள். அது ஒரு கைப்பிடி மாதிரி தான். அதைக் கொண்டு நீ உச்சிக்கு வர வேண்டும். மலை உச்சிக்குப் போக விரும்புபவனுக்கு கயிறு ஒன்று போதுமானது. கயிறும் முயற்சியும் சேரும் போது மலை உச்சி உன் கைகளுக்கு வந்து விடும்."

ஹொய்சள வம்சம் ஒருவாறாக உருவாகியது.

சளான் என்னும் நிருபகாமனிடமிருந்து ஆரம்பித்து விட்டலராயனைத் தொட்டது.

விட்டலராயன் மேற்கண்ட வம்சக் கதையை கங்கராஜனுக்கும் சொல்லிவிட்டு "கங்கராஜா! நீயும் நானும் ஒன்றாகவே வளர்ந்தவர்கள். போரிட்டவர்கள். உனக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. இருப்பினும் நினைவு படுத்துகிறேன். எங்கள் மூதாதையரான சளர் என்னும் நிருபகாமர் தன்னை ஹொய்சள வம்சத்தவன் என்று சொல்லிக் கொண்டாரே தவிர அந்த வம்சத்தில் அவரைத் தவிர வேறு யாருமில்லை. சாளுக்கியர்களிடம் படை வீரனாக - தனிமனிதனாகப் போய்ச் சேர்ந்தார். தன் வம்சம் என்று எதையும் கூறிக் கொள்ளாமல் தன் பணியை மட்டும் சிறப்பாகச் செய்தார். வீரத்தைக் காட்டினார். விசுவாசத்தைக் காட்டினார். விவேகமாக நடந்து கொண்டார். ஆகவே சாளுக்கிய சக்கரவர்த்தி அவரைச் சேனாதிபதிகளில் ஒருவனாக்கினார். வயது ஐம்பதைக் கடந்தபோது சேனாதிபதி பொறுப்பிலிருந்து விடுவித்த சக்கரவர்த்தி அவரை வேலாபுரத்தில் தனது பிரதிநிதியாக நியமித்தார். இது உனக்குத் தெரியுமல்லவா?" என்று வினவினார்.

"தெரியும் மகாராஜா"

"அதோடு நிருபகாமர் அறிவார்ந்த ஒரு காரியத்தைச் செய்தார். தானும் தன் தந்தையும் வாழ்ந்த காட்டுப் பகுதியிலும் அதைச்

சுற்றியும் வாழ்ந்த மக்களை ஹொய்சள இனத்தவராகக் கருதி அவர்களை வேலாபுரத்திலும் துவாரசமுத்திரத்திலும் குடியேறச் செய்தார். அதுமட்டுமல்ல. அந்த இரண்டும் பேரூர்களில் இருந்த மக்களில் பெரும்பாலானவர்களை ஹொய்சொள வம்சத்திற்கு மாற்றச் செய்தார். அவருக்குப் பதினோரு பிள்ளைகள். அனைவரையும் பலதார மனைவிகளோடு வாழ வழி செய்தார். ராஜவம்சம் விருத்தியாயிற்று. அவர் காலத்திலேயே இரண்டு பேரூர்களிலும் இரண்டு லட்சத்திற்கு மேற்பட்டவர்கள் ஹொய்சொள வம்சத்தவராக இருந்தார்கள். அவர் இந்த காரியத்தைப் பதற்றமான காரியமாகச் செய்யவில்லை. பகட்டான காரியமாகச் செய்யவில்லை. பலரும் அறியும் பிரம்மாண்டமாகச் செய்யவில்லை. மிகவும் அமைதியாகவும் அடக்கமாகவும் செய்தார். ஹொய்சொள வம்சம் என்பது வெறும் பெயராக இருக்கக் கூடாதென்று அதை ஒரு ஜீவனுள்ள வம்சமாக மாற்றினார். இனி ஹொய்சள வம்சம் தன்னைக் காத்துக் கொள்ளும். தன்னை வளர்த்துக் கொள்ளும். தனித்து நின்று உயரும் என்று கருதினார். மற்றபடி சாளுக்கியர் பிரதிநிதியாக பெரும் விசுவாசத்துடன் நடந்து கொண்டார். ஆகவே தான் அவர் மரணமடைந்த போது சாளுக்கிய சக்கரவர்த்தியை நேரில் வந்து கௌரவப்படுத்தியதோடு நிருபகாமரின் வாரிசுகள் தொடர்ந்து சாளுக்கியர் பிரதிநிதியாகப் பதவி வகிப்பார்கள் என்று உலகறிய முறி எழுதி வைத்துவிட்டுப் போனார். அதன் படி நிருபகாமரின் வாரிசுகள் வேலாபுரத்தில் சாளுக்கியர் பிரதிநிதிகளாக இருந்து வருகிறார்கள். எனது தந்தையாரும் இருந்தார். எனது சகோதரர் வல்லாளரும் இருந்தார். அவர் அகால மரணமடைந்து விட்டதால் நான் அந்தப் பதவியை வகிக்கிறேன்."

"உண்மைதான் மகாராஜா"

"கங்கராஜா! நிருபகாமர் அறிவார்ந்தவராகச் செயல்பட்டு ஹொய்சொள வம்சத்தின் எண்ணிக்கையைப் பெருக்கியது போல் அவருக்குப் பின்னால் வந்தவர்களும் அதே காரியத்தைச் செய் தார்கள். அக்காரியத்தை மட்டும் செய்தார்கள். அதுதான் சோகம். நான் சொல்வது உங்களுக்குப் புரிகிறதா?" என்றான் மன்னன்.



விட்டல தேவராயன் தன் முன்னோர்கள் செய்த காரியத்தை மட்டும் செய்யத் தயாராக இல்லை.

ஹொய்சள வம்சம் மட்டும் பெருகுவதில் பயனில்லை என்றும் அது அடையாளம் காணப்பட வேண்டும் என்றும் அங்கீகரிக்கப்பட வேண்டும் என்றும் விரும்பினான்.

ஓவியனை அழைத்து இளம் வீரன் ஒருவன் புலியோடு போரிடுவது போன்ற காட்சியை வரையச் சொன்னான். ஹொய்சள முதல்வனின் சளான் புலியோடு போரிட்ட காட்சி தத்ரூபமாக அந்த ஓவியத்தில் வந்திருந்தது.

தனது ஆலோசகராக இருந்த கங்கராஜரிடம் காட்டி "எப்படி இருக்கிறது?" என்று கேட்டான்.

"நமது வம்சத்தின் அடையாளம் போலச் சிறப்பாக இருக்கிறது?"

"சரியாகச் சொன்னாய். இது நம் வம்சத்தின் அடையாளம். இதை அரண்மனையில் பதிக்கப் போகிறேன். இந்த முத்திரையுடன் நாணயங்களைப் பொறிக்கப் போகிறேன். நமக்கென்று ஓர் அடையாளம் நிறுவப்படும்."

"மகாராஜா! சற்று யோசியுங்கள். இது ஆபத்தை நாமாக இழுத்துக் கொள்வதாகும்."

"கங்கராஜா! நாம் சாளுக்கியப் பிரதிநிதிகளாக எத்தனை ஆண்டுகள் இருப்பது? நமது வம்சம் அடிமை வம்சமா பரம்பரை பரம்பரையாகச் சாளுக்கியர்களுக்குச் சேவை செய்வதற்கு? நமது வம்சத்தவர்களின் எண்ணிக்கையை மட்டும் அதிகரித்துக் கொண்டு போவது ஆட்டு மந்தைகளை பெருக்கிக் கொண்டு போவது போன்றது. நாம் விடுதலை பெற வேண்டாமா? அடிமையின் உடம்பில் ரத்தம் எதற்கு? தினம் அச்சப்பட்டக் கோழைக்கு இல்லம் எதற்கு? ஆண்டாண்டுகளாக ஆண்டான்-அடிமையாக வாழ்ந்ததற்கு முடிவுகட்டத் தீர்மானித்து விட்டேன்."



"மகாராஜா! உங்கள் லட்சியம் மகத்தானது. ஆனால் இப்போதைக்கு ஆபத்தானது."

"லட்சியங்கள் எப்போதுமே ஆபத்தானவை தான் கங்கராஜா! அலைகளுக்கு அஞ்சிக் கொண்டிருந்தால் கடலில் இறங்க முடியாது."

"சாளுக்கியர்கள் நமக்கு விடுதலை தர மாட்டார்கள்."

"அடிமைகளுக்கு எந்த காலத்திலும் விடுதலை கிடைக்காது. அடிமை சாம்ராஜ்யமாகத் திகழ்ந்த ரோமாபுரியில் கூட எஜமானர்கள் அடிமைகளுக்கு விடுதலை தந்தது இல்லை. தந்தால் அது மரண விடுதலையாகத்தான் இருக்கும்."

"மகாராஜா! நீங்கள் கூறும் ரோமாபுரியில் அடிமைகள் புரட்சி செய்தார்கள். ஸ்பாக்டேக்கஸ் என்ற அடிமையின் கீழ் லட்சம் பேர் திரண்டார்கள். ஆனால் அடிமைப் புரட்சி வெற்றி பெறவில்லை. புரட்சி முறியடிக்கப்பட்டது."

"நான் கூற வந்தது அடிமைகளைக் கட்டியாளும் எஜமானர்களின் மனநிலையைப் பற்றித்தான். மற்றபடி ரோமாபுரியில் நடந்த புரட்சி வேறு. நமது நிலைவேறு. நாம் அடங்கியிருக்கிறோமே தவிர அடிமைகளாக இருக்கவில்லை. நமது அச்சத்தை விட வேண்டும். அதற்கு நான் சொன்ன அடையாள வெளிப்பாடு அவசியம். அச்சப்பட்டுக் கொண்டிருப்பவனுக்கு எதிர்காலம் இல்லை. அச்சத்தை விட்டொழித்தவனுக்கு காலமும் இல்லை. தோல்வியும் இல்லை."

"மகாராஜா! சாளுக்கியப் படை நம்மை நோக்கி நகர்ந்தால் எதிர்த்து நிற்க நம்மிடம் படையில்லை."

"இப்போது வேலாபுரத்தில் இருக்கும் படைகளும் துவாரசமுத்திரத்தில் என் மகன் நரசிம்மன் வசம் இருக்கும் படைகளும் சாளுக்கியர்களை எதிர்க்க போதும்."

"சரி மகாராஜா"

"ஆயத்தங்களைத் தொடங்கு. அடுத்தமுறை நாம் சந்திக்கும் போது போர் முரசு ஒலிக்க வேண்டும்." என்றான் விட்டலராயன்.

அதுவரை தேய்ந்து போன தேர்த் தட்டுபோலிருந்த அவன் முகம் தேன் நிலவைப் போல விகசித்தது.





அடிமைத்தனத்தைத் தொடர்ந்து ஏற்பதென்பது இருட்டை விட்டு வெளியே வராமலிருக்கும் அறியாமையைப் போன்றது – கங்கராஜன்




விட்டலராயன் தனது உள்ளக் கிடக்கையை கூறிய போது அது சரியென்றும் ஏற்றுக் கொள்ளக் கூடியதாகவும் இருந்தது கங்கராஜனுக்கு.

அதே சமயம் வேலாபுரத்தில் இருக்கும் படை வீரர்களும் துவாரசமுத்திரத்தில்* இருக்கும் படை வீரர்களும் சாளுக்கிய வீரர்களாக இருந்ததால் அவர்களை என்ன செய்வது என்ற கேள்வி எழுந்தது அவனுக்கு.

அவர்களை விட்டால் விட்டலராயனுக்கென்று தனியாகப் படைகள் இல்லை.

தனியாக வேண்டுமானால் புதியதாக இளைஞர்களைச் சேர்க்க வேண்டும். அதற்குக் காலதாமதம் ஆகும்.

எனவே அது குறித்து விட்டலராயனிடமே கேட்ட போது "நீயும் பரதனும் ஏற்கனவே இந்தப் படையில் உப தளபதிகளாகத் தானே இருந்து வருகிறீர்கள்?" என்று கேட்டான்.

"ஆமாம்"

"நீங்கள் இருவரும் வீரர்களுக்கு நிறைய உதவிகளைச் செய்திருக்கிறீர்கள். அவர்களிடம் உங்களுக்குச் செல்வாக்கு உண்டு. உங்களை அவர்கள் மதிக்கிறார்கள். உங்கள் மீது அன்பு செலுத்துகிறார்கள். உங்கள் இருவரையும் தளபதிகளாக்கி விடுகிறேன். போதுமா?" என்று சொன்ன விட்டலராயன் "நீ மனது வைத்தால் முடியும் கங்கராஜா. என் திட்டம் இது தான்" என்று கூறி திட்டத்தையும் சொன்னான்.

கங்கராஜனுக்குத் தெளிவு பிறந்தது. பரதனிடம் வந்தான்.

வேலாபுரத்தில் இருபதாயிரம் வீரர்களும் துவார சமுத்திரத்தில் பத்தாயிரம் வீரர்களும் இருந்தார்கள். புரவிப்படை ஆயிரமும் யானைப் படை நூறும் இருந்தன. ஆயுதங்கள் மட்டும் குறைவாக இருந்தன.

* தற்போது ஹளபீடு என்று வழங்கப்படுகிறது.

"கங்கராஜா! இங்கே வேலாபுரத்திலும் துவார சமுத்திரத்திலும் ஹொய்சள வம்சத்தவர் மிகுதியாக இருப்பது உண்மைதான். ஆனால் படை வீரர்கள் சாளுக்கியர்கள். அவர்களை வைத்துக் கொண்டு சாளுக்கியர்களுக்கு எதிராக எப்படிப் போரிட முடியும்?" என்று கேட்டான் பரதன்.

"படை வீரர்களையும் ஹொய்சளர்களாக மாற்றி விட வேண்டியது தான்" என்றான் கங்கராஜன், மன்னன் கூறிய திட்டத்தின் அடிப்படையில்.

"இது விசித்திரமாக இருக்கிறது."

"விசித்திரம் எதுவுமில்லை பரதா. வீரர்களைப் பொறுத்தவரை அவர்கள் ஊதியம் பெற்றுப் போரிடும் ஊழியர்களாகவே இருக்கிறார்கள். யாருக்காகப் போரிடுகிறோம் என்று எண்ணிப் பார்ப்பதில்லை. அவர்களுக்கு ஊதியம் வேண்டும். மன்னரின் அரவணைப்பு வேண்டும். அவர்களது குடும்பத்தை அரசாங்கம் கவனித்துக் கொள்ள வேண்டும். அவ்வளவுதான்."

இவ்வாறு கூறிய கங்கராஜன் படை வீரர்களைச் சந்தித்தான்.

"நான் தெரிவிக்கப் போகும் செய்தியால் நீங்கள் மகிழ்ச்சியடைய மாட்டீர்கள் என்று நினைக்கிறேன்" என்றான் கங்கராஜன்.

"தாங்கள் என்ன சொல்கிறீர்கள் ஐயா?"

"வீரர்களே! வீரத்தையே வாழ்வாகக் கொண்ட அன்புள்ளங்களே! நீங்களெல்லாம் நீண்ட காலமாகப் போர்கள் எதுவும் இல்லாமல் மீட்டப்படாத வீணையைப் போல் - இழுக்கப் படாதத் தேரைப் போல் - இசைக்கப்படாதப் பாடலைப் போல் வீணாகிக் கொண்டிருக்கிறீர்கள். வாளை ஏந்த வேண்டும் என்றும், சுழற்ற வேண்டும் என்றும், எதிரிகளின் தலைகளைச் சீவ வேண்டும் என்றும் உங்கள் கைகள் துருதுருக்க வில்லையா?"

"போரிட வேண்டும் என்றுதான் ஆசைப்படுகிறோம்."

"கொஞ்ச காலமாக நீங்கள் போரில்லாமல் இருந்தீர்கள். மகாராஜா நினைத்திருந்தால் உங்களையெல்லாம் கலைத்து விட்டு சுயசம்பாத்தியம் செய்யச் சொல்லியிருக்கலாம். ஆனால் அவரப்படிச் செய்யவில்லை. உங்களுக்கெல்லாம் மாற்று வேலைகளைக் கொடுத்தார். காடு திருத்தும் பணி, நகரைச் சீர்திருத்தும் பணி, ஏரிகளை உருவாக்கும் பணி, ஆலயத்திருப் பணி ஆகியவற்றைக் கொடுத்தார். ஊதியமும் கொடுத்தார். இதையெல்லாம் எல்லா மன்னர்களும் செய்வதில்லை. இதைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?"

“மகாராஜா ஒப்பற்றவர் ஐயா. அவரை நாங்கள் தெய்வமாக மதிக்கிறோம்.”

“நீங்கள் சொல்வது உண்மையென்றால் நான் கேட்பதற்கு பதில் சொல்லுங்கள். நாம் தான் தெய்வத்திற்கு அடிமைகளாக இருக்க வேண்டும். தெய்வம் யாருக்காவது அடிமையாக இருக்க முடியுமா?”

“ஐயா! நீங்கள் என்ன கூறுகிறீர்கள்?”

“புரியாத விஷயத்தையொன்றும் நான் கூறிவிட வில்லை வீரர்களே. தெய்வம் என்று நீங்களும் நானும் நினைக்கும் நம் மகாராஜா விட்டலராயர் இன்னமும் சிற்றரசராக சாளுக்கியர் களுக்குத்தானே அடிமையாகக் கிடக்கிறார்? அவர் மட்டுமல்ல. அவரது மூதாதையர்கள் அனைவரும் அப்படித்தானே இருந்தார்கள்? இதை நீங்கள் ஏற்கிறீர்களா?”

“ஏற்காமல் என்ன செய்வது ஐயா!? இருநூறு ஆண்டு காலமாக நீடிக்கும் நிலைதானே இது?”

“அடிமைத்தனம் நீண்டகாலம் நீடிப்பது இழிவின் அடையாளமேயன்றி உயர்வின் அடையாளமல்ல. அடிமைத் தனத்தை தொடர்ந்து ஏற்பதென்பது இருட்டை விட்டு வெளியே வராமலிருக்கும் அறியாமையைப் போன்றது. நம் மகாராஜா விழித்துக்கொண்டார். கண்களை மூடிக்கொண்டிருந்தது போதும். அறியாமையில் ஆழ்ந்திருந்தது போதும். அஞ்சி அஞ்சி வாழ்ந்தது போதும் என்கிறார். ஆற்று வெள்ளம் போல எழ வேண்டிய நேரம் வந்து விட்டது என்கிறார். சாளுக்கியர்களுக்கு எதிராகத் திரும்பவும் தனது வம்சத்திற்கென்று தனி ராஜ்யம் காணவும் முடிவு செய்து விட்டார். அதை நிறைவேற்றுவதற்காகத்தான் என்னைத் தளபதியாக நியமித்திருக்கிறார். சாளுக்கியருக்கு எதிரான படையை திரட்ட அனுமதித்திருக்கிறார். அந்த முயற்சியில் நான் இறங்கி விட்டேன். படையில் சேர விரும்பும் இளைஞர்கள் நாளை முதல் படை முகாமிற்கு வரலாம் என்ற அறிவிப்பை நாளை வெளியிடப் போகிறேன். அநேகமாக ஒரு மாத காலத்தில் படை திரண்டு விடும்.”

கங்கராஜரின் இந்தப் பேச்சு வீரர்களுக்கு என்னவோ போலிருந்தது. கசப்பான உணவை உண்டது போலிருந்தது. பார்க்கத் தகாத காட்சியைப் பார்ப்பது போலிருந்து.

“அப்படியென்றால் நாங்கள்?” என்று கேட்டார்கள்.

“நீங்களெல்லாம் சாளுக்கியர்கள். உங்களைச் சாளுக்கியர் களுக்கு எதிராகத் திருப்ப முடியாது என்று மகாராஜா நினைக்கிறார்.

அவ்வாறு திரும்புவது அதர்மம் என்று நினைக்கிறார். அது ஆபத்தானது என்றும் நினைக்கிறார். ஆகவே உங்களையெல்லாம் சாளுக்கிய நாட்டிற்கே அனுப்பி விட நினைக்கிறார். அதுதான் பொறுப்புடையதாக இருக்கும். உங்களில் ஒருசிலர் நமது மகாராஜா பொறுப்பிற்கு வர விரும்பினால் இரண்டு நாட்களுக்குள் தெரிவித்து விடுங்கள். ஏனென்றால் இன்றிலிருந்து மூன்றாம் நாள் உங்களையெல்லாம் கல்யாண புரத்திற்கு அனுப்பி வைக்கும் காரியம் தொடங்கும்'' என்று கூறி விட்டு அகன்றான் கங்கராஜன்.

அவர் விதைத்த விதை நன்றாகவே வேலை செய்தது. அவன் எதிர்பார்த்த மாதிரியே வேலை செய்தது.

சாளுக்கிய வீரர்கள் கூடிக் கூடிப் பேசினார்கள்.

“நாம் கல்யாணபுரத்திற்கு அனுப்பப்பட்டால் நமது நிலை எந்த நிலையில் இருக்கும் என்று சொல்ல முடியாது. இங்கே முதல் நிலையில் இருக்கும் நாம் அங்கே கடை நிலையில் இருப்போம்'' என்றார்கள் சிலர்.

“இங்கே நம் மகாராஜா நமக்கு அளிக்கும் ஊதியம் கல்யாண புரத்தில் கிடைக்காது. நமது குடும்பம் இருப்பது வேலாபுரத்திலும் துவாரசமுத்திரத்திலும், தொண்டனூரிலும் தான். நம்மைக் கல்யாண புரத்திற்கு மாற்றி விட்டால் நமது குடும்பத்தையும் அழைத்துக் கொண்டு போக வேண்டும். அது மிகவும் சிரமமானது. உத்திரவாதம் இல்லாதது'' என்றார்கள் சிலர்.

“சாளுக்கிய சக்கிரவர்த்தி விக்கிரமாதித்தர் மிகவும் கோபம் வாய்ந்தவர். நாம் அனைவரும் குடும்பத்தோடு அவருக்கு முன்னால் போய் நின்றால் என்ன செய்வார் என்று சொல்ல முடியாது. நம் மீது நம்பிக்கை இருக்காது. நம்மை வீரர்களாக வைத்திருக்க விரும்ப மாட்டார். நம் அனைவருக்கும் ஊதியம் வழங்கவும் முன் வரமாட்டார். நம்மைக் குடும்பத்தோடு வாதாபிக் காடுகளுக்கு அனுப்பி அடிமைகளாக வேலை வாங்குவார். அடிமாடுகளாய் நடத்துவார். வேண்டாத விருந்தாளியாக இருந்தாலும் பரவாயில்லை. அடிமைகளாக இருப்பது மிகவும் கொடுமையானது. சுகத்தையும் சுதந்திரத்தையும் இழந்து வாழ்வது நரக வாழ்க்கையாக இருக்கும்'' என்றார்கள் சிலர்.

எப்படிப் பார்த்தாலும் சாளுக்கியர் தலைநகர் கல்யாண புரத்திற்குச் செல்வது தங்களுக்கு இழப்பு என்பது தெரிந்தது சாளுக்கிய வீரர்களுக்கு. ஹொய்சள மன்னன் மற்றும் கங்கராஜன் இருவருமே தங்களிடம் அன்பு காட்டி வருவதும் சலுகைகளை அளித்து வருவதும் உண்மையாக இருந்தபடியால் அவற்றை இழக்க அவர்கள் விரும்பவில்லை.

சாளுக்கியரிடம் திரும்பிச் சென்று தங்கள் கௌரவத்தையும் வாழ்வாதாரத்தையும் இழப்பதை விட இருக்குமிடத்தில் இருந்து கொண்டு அவற்றைத் தக்க வைத்துக் கொள்ளவே அவர்கள் விரும்பினார்கள்.

துவாரசமுத்திரத்தில் (தற்போதைய ஹளபீடு) இருந்தச் சாளுக்கிய வீரர்களுக்கும் இதுவே விருப்பமாக இருந்தது.

கங்கராஜர் படைவீரர்களிடம் பேசியதற்கு மறு நாள் படையில் சேருவதற்கு இளைஞர்கள் முன் வரலாம் என்ற அறிவிப்பை வெளியிட்டதால் இளைஞர்கள் பலர் படையில் சேர ஆர்வம் காட்டினார்கள்.

அவர்கள் பெருமளவில் சேர்ந்ததால் மன்னர் தங்களைத் தன்னோடு வைத்திருக்க மாட்டார் என்பதும், சாளுக்கியத் தலைநகருக்கு அனுப்பி விடும் கட்டாயம் உண்டாகி விடும் என்பதும் சாளுக்கிய வீரர்களுக்குத் தெளிவாகப் புரிந்தது.

கங்கராஜனைச் சந்தித்து கல்யாணபுரத்திற்குத் தங்களை அனுப்ப வேண்டாம் என்றும் ஹொய்சள மன்னருக்கு ஆதரவாக இருந்து அவர் தரப்பில் போரிடவே விரும்புவதாகவும் தெரிவித்தார்கள்.

"யாரும் அவசரப்பட்டு முடிவெடுக்க வேண்டாம். அதோடு உங்களில் யாரையும் மகாராஜா கட்டாயப்படுத்தவில்லை. உங்கள் உடலில் ஓடுவது சாளுக்கியர் ரத்தம். இன்றைக்கு மகாராஜாவுக்கு ஆதரவாகப் போரிடுவதாகச் சொல்லிவிட்டு போரின் போது சாளுக்கியருக்கு ஆதரவாக மாறுவதற்கு உங்களுக்கு வாய்ப்பு உண்டு. அப்படி நடந்தால் அது ஆபத்தானதாகி விடும். எனவே நீங்கள் கல்யாணபுரத்திற்குச் செல்வதே சரியானது" என்றான் கங்கராஜன்.

"ஐயா! நாங்கள் சாளுக்கியர்கள் என்றாலும் கடந்த நான்கு ஆண்டுகாலமாக மகாராஜாவின் உப்பைத்தான் உண்டிருக்கிறோம். அன்னமிட்ட வீட்டில் கன்னமிடும் வழக்கம் வீரர்களுக்குக் கிடையாது. நாங்கள் ஆயுதங்கள். பராமரிப்பவர் களிடம் பயன்படுவார்கள். எங்கள் உடலில் சாளுக்கிய ரத்தம் ஓடினாலும் அதை ஓட வைத்திருப்பது மகாராஜா அளித்து வரும் உணவும் அன்புள்ளமும்தான். ஆகவே எங்கள் போர் நடவடிக்கையில் சந்தேகப்பட வேண்டாம். மகாராஜாவுக்கு உயிரைக் கொடுப்போமேயன்றி ஒருநாளும் துரோகம் செய்ய மாட்டோம்."

"அப்படியானால் வீரர்கள் அனைவரும் ஹொய்சளர்களாக மாறுவதில் தயக்கம் இருக்காது என்று நினைக்கிறேன். நான்காண்டு காலமாக மகாராஜாவின் அரவணைப்பில் இருந்த நீங்கள் மகாராஜாவின் வம்சத்திற்கு மாறுவது சரியானது

தானே? அப்படி மாறினால் மகாராஜாவுக்கு மகிழ்ச்சியாக இருக்கும். உங்களுக்கும் மனநிறைவாக இருக்கும். சாளுக்கியர் களுக்கு எதிராகச் செயல்படுகிறோம் என்று உறுத்தல் உங்களுக்கு இருக்காது. மகாராஜா மாவீரர். மாட்சிமை கொண்டவர். கொண்ட கொள்கையிலிருந்து வழுவாதவர். இலட்சியத்திற்காகத் தன்னை அர்ப்பணிப்பாரேயன்றி தனக்காக இலட்சியத்தைக் கைவிட மாட்டார். அவர் மன உறுதி கொண்டவர். ஹொய்சளருக்காக தனி ராஜ்யத்தைப் படைப்பார். பேரரசராக மிளிர்வார். அது நிச்சயம். அப்போது உங்களது பங்களிப்பு வரலாற்றில் பேசப்படும்."

படைவீரர்கள் கங்கராஜனது பேச்சை ஆமோதித்து அவரது யோசனையை ஏற்றார்கள்.

அதையடுத்து வேலாபுரியில் இருந்த வாசந்திகா தேவியின் ஆலயத்தின் சமண யட்சிணியின் முன்னால் படை வீரர்கள் ஹொய்சள வம்சத்திற்கு மாறி மன்னனுக்கும் தங்களை அர்ப்பணித்துக் கொள்வதாக பிரதிக்ஞை எடுத்தார்கள்.

துவாரசமுத்திரத்தில் இருந்த பத்தாயிரம் வீரர்களும் அங்கே இருந்த சமணர் ஆலயத்தில் உறுதிமொழி எடுத்துக் கொண்டார்கள்.

துரு பிடித்த ஆயுதங்கள் பழுது பார்க்கப்பட்டன. புதிய ஆயுதங்கள் வடிக்கப்பட்டன. விற்பொறிகள் உருவாக்கப் பட்டன.

இரு பேரூர்களும் புது வடிவமெடுப்பதைக் கண்ட மக்கள் எழுச்சி பெற்றார்கள்.

புதிதாகப் படையில் சேரும் இளைஞர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்தது. அவர்களுக்கு பரதன் போர்ப் பயிற்சிகளைக் கொடுத்தான்.

ஒரே மாதத்தில் வேலாபுரத்தின் முகம் மாறி விட்டதைக் கண்டு மகிழ்ந்த மன்னன் விட்டலராயன் "ஒரு மாத காலத்தில் ஆட்டிப் படைத்து விட்டாய் கங்கராஜா. இப்போதே சாளுக்கியர்களை வெற்றி கொண்ட மாதிரியான உணர்வு உண்டாகிறது. உன்னை எவ்வளவு போற்றினாலும் தகும்" என்றான்.

அது அவ்வளவு எளிதான விஷயமல்ல என்று உணர்த்துவது போல் பேரிகையொலியொன்று பெரிதாக எழுந்தது.

"கல்யாண புரத்திலிருந்து ராஜதூதர்கள் வந்திருக்கிறார்கள் மகாராஜா. தங்களைச் சிறை பிடிக்கப் வேண்டுமாம்" என்றான் சேவகன்.





சில காரியங்கள் உடனே நடக்கும். சில காரியங்கள் தாமதமாக நடக்கும். நடக்கும் காலம் மாறுபட்டாலும் நடக்கும் காரியம் ஒன்றுதான் – விட்டலராயன்




சேவகன் கூறியதைக் கேட்டு மன்னன் விட்டலராயன் அதிர்ந்து விடவில்லை.

“தூதுவரை தக்க மரியாதையுடன் அழைத்து வாருங்கள். இளைப்பாற விரும்பினால் தகுந்த வசதிகளைச் செய்து கொடுங்கள்” என்றான்.

தூதுவர் அமருவதற்குத் தனியாக ஆசனம் ஒன்றை ஏற்பாடு செய்தான். அது கலைநயத்தோடு இருந்தது.

தூதுவர் இளைப்பாற விரும்பவில்லை. மன்னனின் இருப்பிடத்திற்கே வந்தார்.

அவருக்கு ஏற்பாடு செய்யப்பட்ட சிறப்பாசனத்தில் தூதுவர் அமர்ந்தார். அவருக்கு இருபுறமும் இரு சாளுக்கிய வீரர்கள் நின்று கொண்டார்கள். உருவிய வாட்களுடன் அவர்கள் நின்றார்கள். அவருடன் அந்த மற்றவர்கள் கூடத்திற்கு வெளியே நின்றார்கள்.

அங்கே மன்னன் விட்டலராயனோடு சேனாதிபதி உள்ளிட்ட முக்கியப் பிரமுகர்களான பஞ்சப் பிரதானிகள் என்ற ஐந்து பேர் அமர்ந்திருந்தார்கள். ராஜகுருவான சமணர் ஆனந்த நாதரும் உபசேனாதிபதி பரதனும் அமர்ந்திருந்தார்கள்.

அவர்களில் யாவரும் அதிர்ச்சி அடையவுமில்லை மகிழ்ச்சியடையவுமில்லை. இயல்பாகவும் அமைதியாகவும் இருந்தார்கள்.

சாளுக்கிய தூதுவர் முகத்தில்தான் எள்ளும் கொள்ளும் வெடித்துக் கொண்டிருந்தன. தூக்க முடியாதச் சுமையைத் தூக்கிக் கொண்டு வேதனைப்படும் தொழிலாளியைப் போல் அடக்க முடியாத கோபத்தை அடக்கிக் கொண்டு அவதிப் பட்டவரைப் போல இருந்தார் தூதுவர்.

தன் கையில் இருந்த ஓலையை வீரனின் மூலமாக மன்னனுக்கு அனுப்பி “இதைப் படியுங்கள்” என்றார்.

மன்னன் அதை வாங்கிப் படித்தான்.

"விட்டலராயா! இந்த ஓலையைச் சுமந்து வரும் தூதுவருக்குச் சகல அதிகாரங்களையும் வழங்கியிருக்கிறேன். அவருக்குக் கட்டுப்பட வேண்டியது உன் கடமை" என்று எழுதப் பட்டிருந்தது.

மன்னன் ஓலையைத் திருப்பிக் கொடுத்து விட்டு அமைதியாக இருந்தான்.

ஓலையை வாங்கிக் கொண்ட தூதுவர் "புரிந்ததா?" என்று வினவினார் தோரணையுடன்.

"இது ஒரு பெரிய விஷயமல்ல. தூதுவர் அனுப்பப்படும் போது அதிகாரங்களுடன் அனுப்புவது இயல்புதான்" என்றான் மன்னன்.

"இங்கே என்ன நடக்கிறது?" என்று முரட்டுத்தனமாகக் கேட்டார் தூதுவர்.

"இங்கே என்ன நடக்கிறது என்று தெரியாமலா நீங்கள் இங்கு வந்தீர்கள்?" என்று கேட்டான் கங்கராஜர்.

"எல்லாம் தெரிந்து வந்தேன். இருப்பினும் கேட்பது என் கடமை"

"இங்கே என்ன நடக்கிறது என்று அறிந்தீர்கள்?" என்று கேட்டான் கங்கராஜன்.

"வேலாபுரம் முழுவதும் புதிய கொடிகள் பறக்கின்றன."

"வேலாபுரத்தில் மட்டும் அல்ல. துவாரசமுத்திரத்திலும் பறக்கின்றன. அவை ஹொய்சள வம்சத்துக் கொடிகள்" என்றார் கங்கராஜன்.

"இதைக் கூற உமக்குத் துணிச்சல் வேண்டும்."

"உண்மையைச் சொல்வதற்குத் துணிச்சல் எதற்கு?"

"இந்தப் புதிய கொடிகள் எப்படிப் பறக்கலாம்? இவை திடீரென தோன்றியதற்குக் காரணம் என்ன?"

மன்னன் குறுக்கிட்டு "நாங்கள் ஹொய்சள வம்சத்தவர். அதை உணர்த்தவே புதிய கொடிகளைப் பறக்க விட்டிருக்கிறோம்" என்றான்.

"உங்கள் சகோதரர் வல்லாளர் அவ்வாறு செய்யவில்லை."

"ஆமாம்."

"உங்கள் தந்தை எரியங்கன் அவ்வாறு செய்யவில்லை"

“ஆமாம்.”

“அவருக்கு முந்தையவர்கள் கூடச் செய்யவில்லை.”

“அவர்கள் ஏன் செய்யவில்லை என்பதற்குக் காரணம் தெரியாது. நான் செய்திருக்கிறேன். அவ்வளவுதான்.”

“நீங்கள் எங்கள் சாளுக்கிய சக்கரவர்த்தியின் ஆதிக்கத்தில் உள்ளவர்கள். புதியக் கொடியை வைத்துக் கொள்ள உங்களுக்கு உரிமை கிடையாது.”

“சாளுக்கியரின் ஆதிக்கத்தில் தேவகிரி யாதவர்கள் இருக்கிறார்கள். காகதீயர்கள் இருக்கிறார்கள். இரட்டர்கள் இருக்கிறார்கள். கங்கர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் தனிக் கொடி இருக்கிறது. எங்களுக்கும் இருக்கிறது. இதில் தவறென்ன?”

“திடீரென்று இக் கொடிகளைப் பறக்க விட்டது எதற்கு?”

“சில காரியங்கள் உடனே நடக்கும். சில காரியங்கள் தாமதமாக நடக்கும். நடக்கும் காலம் மாறுபட்டாலும் காரியம் ஒன்றுதான். அதோடு தூதுவர் ஒன்றைக் கவனிக்க வேண்டும். வேலாபுரத்தின் மையப் பகுதியில் உள்ள உயரமான துவஜத்தம்பத்தில் சாளுக்கியரின் வராகக் கொடிதான் பறக்கிறது. இதிலிருந்தே சாளுக்கியரின் மேலாண்மைதான் தொடர்கிறது என்பதை நீங்கள் அறிய வேண்டும்.”

“சாளுக்கிய நாடு முழுவதும் வராகச் சின்னம் பொறித்த வராக நாணயங்கள்தான் உள்ளன. நீங்கள் அதற்கு மாற்றாகப் புதிய நாணயங்களை வடித்தது ஏன்?”

“புதிய நாணயமானது ஹொய்சள வம்சத்தைக் குறிக்கும் அடையாளமாக அமைக்கப்பட்டுள்ளது. வராகனுக்கு மாற்றாக இல்லை.”

“எதற்காக இந்த நடவடிக்கை?”

“நாங்கள் ஹொய்சளர்கள் என்பதைக் காட்டிக் கொள்வதற்காகத்தான்.”

“அது தான் ஏன்?”

“அதில் தவறு எதுவும் இல்லை. சாளுக்கியர்கள் சோழர்களோடு போரிட்டிருக்கிறார்கள். பல்லவர்களோடு போரிட்டிருக்கிறார்கள். வேங்கி நாட்டவரோடு போரிட்டிருக்கிறார்கள். அவர்களோடு சேர்ந்திருந்த சிற்றரசர்கள் தங்கள் தனியான அடையாளங்களை விட்டு விட வில்லையே! தனியான அடையாளங்களை வைத்திருந்ததாலும் சாளுக்கியர்களின் மேலாண்மையை ஏற்றுக் கொள்ளவே செய்தார்கள்.”

“நீங்கள் நாளைக்கு எங்கள் மேலாண்மையை எதிர்ப்பீர்கள் என்று நான் சொல்கிறேன்.”

“ஊகங்கள் எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். நீங்கள் கூறும் விஷயம் கடம்பர்களுக்கும் பொருந்தும். கங்கர்களுக்கும் பொருந்தும். யாதவர்களுக்கும் பொருந்தும். மாதவர்களுக்கும் பொருந்தும்.”

“நீங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள்?”

“சந்தேகப்படுவதற்கு உங்களுக்கு உரிமை உண்டு என்றால் அதை மறுப்பதற்கு எங்களுக்கும் உரிமை உண்டு. சாளுக்கியர்களின் ஆதிக்கத்தை எதிர்க்க நாங்கள் தயாராக இல்லை.”

“உங்களை நான் நம்பவில்லை. சாளுக்கிய சக்கரவர்த்தியும் நம்பவில்லை. ஆகவே உங்களை நான் கைது செய்கிறேன்.”

கங்கராஜன் எழுந்து “எங்கள் மகாராஜாவை கைது செய்யும் உரிமை உங்களுக்குக் கிடையாது” என்றான்.

“எனக்குச் சகல உரிமைகளையும் சக்கரவர்த்தி சபையில் வழங்கியிருக்கிறார்” என்றான் தூதுவர் விறைப்பாக.

“உரிமைகளைத் தவறாகப் பயன்படுத்த உங்கள் சக்கரவர்த்தி உங்களுக்கு அதிகாரம் வழங்கவில்லை. உங்களுக்கு ஏற்பட்டிருந்த சந்தேகம் நிவர்த்தி செய்யப்பட்டு விட்டது. அதற்கு அப்பால் ஊகங்களையும் அச்சத்தையும் நீங்கள் கட்டிக் கொண்டால் அதற்கு நீங்கள்தான் பொறுப்பு. எங்கள் விளக்கத்தை உங்கள் சக்கரவர்த்தியிடம் எடுத்துச் சொல்லுங்கள். அதுவே முறை” என்றான் கங்கராஜன்.

“வெறும் வார்த்தைகளில் நம்பிக்கை வராது. வார்த்தைகளோடு பிணை செலுத்தப்பட்டால் தான் நம்பிக்கை வரும்” என்றார் தூதுவர்.

“பிணையா? அது என்ன?”

“உங்கள் மகாராஜா விட்டலராயரைக் கைது செய்யாமல் இருக்க வேண்டுமென்றால் அவரது ராணியை எங்கள் நாட்டிற்குப் பிணையாக அனுப்பி வைக்க வேண்டும். கொஞ்ச காலத்திற்குத்தான். சம்மதமா?”

தூதுவர் இவ்வாறு கூறியதைக் கேட்டதும் கங்கராஜன் கொதித்தான்.

“அடே அற்பனே! உன்னைத் தூதுவனாக மதித்து, சிறப்பாசனம் அளித்து, சந்தேகத்திற்கான பதிலைத் தெளிவாக விளக்கியபின் இப்படியொரு பிணையைக் கேட்கிறாய் என்றால் உன்னை வெற்று

மனிதனாகக் கூட ஏற்க நாங்கள் தயாராக இல்லை. வீரம் செறிந்த சாளுக்கிய நாட்டிலிருந்து வந்து விட்டு இப்படிச் சோரம் போவதை உனது சக்கரவர்த்தி கூடச் சகித்துக் கொள்ளமாட்டார். எங்கே வந்து என்ன பேசுகிறாய்? உன் அபத்தமான வார்த்தைகளுக்காக மகாராஜாவிடம் மண்டியிட்டு மன்னிப்பு கேட்டு விட்டு வந்த வேளை நல்ல வேளை என்று ஓடிவிடு" என்றான்.

பஞ்சப் பிரதானிகள் பேச முற்பட்டு "இவன் மன்னிப்பு கோருவதற்குக் கூடத் தகுதியில்லாதவன். இவனையும் இவனோடு வந்தவர்களையும் உயிரோடு புதைத்து விடுவதே உகந்தது" என்றார்கள்.

"உயிரைப் போக்க வேண்டாம். தலையை மொட்டையடித்து திகம்பரனாகத் துரத்து விட்டலராயா. அதுதான் இந்த மூடனுக்கு ஏற்ற தண்டனை" என்றார் ராஜகுரு.

"யாரும் பேச வேண்டாம். தூதுவர் கோரிய நிபந்தனையை நான் ஏற்றுக் கொண்டு விட்டேன்" என்று கூறிய மன்னன் தூதுவரைப் பார்த்து "தூதுவரே! இரண்டு நாட்களுக்கு இங்கே தங்கியிருங்கள். ராணியை உங்களுடன் வருவதற்கு அவளை நான் பக்குவப்படுத்த வேண்டும்" என்றான்.

"இதுதான் சரி", என்றார் தூதுவர்.



தூதுவருக்கு எந்தவிதமான குறைவும் இல்லாமல் ஏற்பாடுகளைச் செய்து தரும்படியும் அவருக்கு முழு சுதந்திரம் அளிக்கும்படியும் திட்டமான கட்டளைகளை இட்டிருந்தான் மன்னன் விட்டலராயன்.

அதைக் கண்கூடாகக் கண்டார் தூதுவர். வேலாபுரத்து விருந்தினர் மாளிகை முழுவதும் அவருக்கும் அவருடன் வந்தவர்களுக்கும் ஒதுக்கப்பட்டிருந்ததால் அனைவரும் சுகமாக இருந்தார்கள். அவர்கள் கேட்ட உணவு அவர்களுக்கு வேளாவேளைக்கு வழங்கப்பட்டன.

அவரோடு வந்த வீரர்கள் ஊரைச் சுற்றிப் பார்க்க விரும்பினார்கள்.

"இது உங்களுக்குப் புதிய இடம். தனியாகச் செல்லாதீர்கள். வேலாபுரத்து வீரர்கள் துணையோடு செல்லுங்கள்" என்றார் தூதுவர்.

அவர்களும் அப்படியே தகுந்த பாதுகாப்புடன் சென்றார்கள். தூதுவர் செல்லவில்லை. விருந்தினர் மாளிகையிலேயே தங்கிச்

சிந்தனையில் ஆழ்ந்தார். அப்போது அருகில் ஏதோ சலசலப்பு கேட்கவே ஜன்னல் கதவுகளைத் திறந்து கவனித்தார். அங்கே தூதுவர் கண்ட காட்சி அவருக்கே அசத்தலாக இருந்தது.

அவரது இருப்பிடத்திற்கு அடுத்த குடியிருப்பில் திறந்த அறையொன்றில் பெண்ணொருத்தி நீராடிக் கொண்டிருந்தாள். நாலைந்து அண்டாக்களில் நீரை நிரப்பி வைத்து வாரி இறைத்துக் கொண்டிருந்தாள். அவள் ஆடைகள் எதுவுமின்றி பிறந்த மேனியுடன் நீராடிய படியால் தூதுவர் கிறுகிறுத்துப் போனார். தான் மேலே இருப்பதை அறியாமல், யாரும் தன்னைப் பார்க்கவில்லை என்ற நினைப்பில் நீராடிக் கொண்டிருந்ததாகத் தோன்றியது தூதுவருக்கு. கதவைச் சற்றே மூடினார். ஆனால் அவரது மனக்கண்களில் அப்பெண்ணின் உருவமே தோன்றியது. ஜன்னல் கதவை மீண்டும் திறந்தார்.

அவருக்குத்தான் வெட்கமாகவும் தாபமாகவும் இருந்ததே தவிர அப் பெண்ணிற்கு எதுவும் இல்லை. பாதுகாப்பான இடத்தில் சுகமாக நீராடுவதாக எண்ணிக் கொண்டு பரம ஆனந்தத்தில் இருந்தாள். பன்னீர், மஞ்சள், சந்தனம் ஆகிய வற்றோடு சுகந்தத் தூள்களைச் சேர்த்துச் சேர்த்து நீராடியதால் அந்த மணமானது தூதுவரின் அறைக்குள் பிரவேசித்து அவரை அலைக் கழித்தது. சந்தனத்தையும் மஞ்சளையும் தேய்த்துக் கொள்வதற்காக அவள் குனிந்தாள். நிமிர்ந்தாள். அக்காட்சியைக் கண்டத் தூதுவருக்கு உடம்பு சூடாகியது.

சும்மாயிருக்க முடியாமல் அறையில் இருந்த ஒரு மணியை எடுத்து ஜன்னல் வழியாகக் குறி பார்த்து எய்தார். அது அவள் முதுகின் மீது விழுந்ததுமே திரும்பிப் பார்த்த அவள் தூதுவரைக் கண்டாள். உள்ளுக்குள் ஓடி மறைந்தாள்.

மணியை எடுத்து பிறந்த மேனியோடு நீராடிக் கொண்டிருந்த மங்கை மீது எறிந்த பிறகு தான் தன்னைப் பற்றியும், தன் பதவியைப் பற்றியும், தன் பணியைப் பற்றியும் நினைவு வந்தது தூதுவருக்கு. சும்மாயிருந்த சங்கை ஊதிக் கெடுத்த மாதிரி இருந்தது. சங்கு கெட்டுப் போனால் ஒன்றுமில்லை. இங்கே மங்கை கோபப்பட்டால் விவகாரமாகி விடும். என்ன செய்வதென்று அவருக்குத் தெரியவில்லை.

தெரியாமலேயே செய்யும் தவறுகள். தெரிந்து செய்யும் தவறுகள் உண்டு. எதுவானாலும் தவறுதான். செய்தபின் தான் பெரும்பாலானவர்களுக்கு யோசனை வருகிறது. தூதுவரின் நிலையும் அதுதான்.

கதவு தட்டப்பட்டது.

அவள்தான் தட்டுகிறாள் என்று எண்ணிய அவர் சற்றே தயக்கத்துடன் கதவைத் திறந்தார்.

அவளே தான்.

வேகமாக உள்ளே நுழைந்தாள். அவளோடு நறுமணங்களும் பிரவேசித்தன. நறுமணங்கள் பெண் உருவாகி அறைக்குள் வந்தது போல் இருந்தது.

அவள் பட்டொன்றை எடுத்து அவசர கோலத்தில் மேனியில் சுற்றிக் கொண்டு வந்ததிலிருந்து அவள் கோபத்தில்தான் வந்திருக்கிறாள் என்பது புரிந்தது தூதுவருக்கு.

அவர் ஏதோ பேச ஆரம்பித்தார்.

அதற்குள் குறுக்கிட்ட அவள் "நீங்கள் தூதுவர் என்பது எனக்குத் தெரியும். ஆனால் ஜன்னல் வழியாகப் பெண்கள் குளிப்பதைப் பார்த்து ரசிக்கக் கூடியவர் என்பது தெரியாது" என்றாள். அவளது குரலில் உறுதி இருந்தது.

"நீ நீராடுவது எனக்குத் தெரியாது. சத்தம் கேட்டதும் ஜன்னல் கதவைத் திறந்தேன்...."

"திறந்தீர்கள். பார்த்தீர்கள். சரி. மணியை எடுத்து என் மீது வீசினீர்களே அது ஏன்?"

"அது...."

"எறிவதற்குத் துணிவிருந்தது. ஏனென்று சொல்வதற்குத் துணிவில்லையோ?"

"இல்லை."

"உங்கள் காரியத்தை நான் மகாராஜாவிடம் சொன்னால் என்ன ஆகும் தெரியுமா?"

"தெரியும். ஆனால் தெரியாது."

"நானே சொல்கிறேன்" என்று சொல்லி விட்டு அதைச் சொன்னாள் அவள்.

"இப்படியும் நடக்குமா? இது குரூரம்" - என்றார் தூதுவர். அவரது குரலில் லேசான அதிர்ச்சி இருந்தது.

"சாளுக்கிய நாட்டில் ஆடவர்கள் எல்லாம் இப்படித்தான் இருப்பார்களா? இப்படிப்பட்ட காரியங்களைத் தூதுவர்கள் செய்தால் என்ன செய்வார்கள்?" என்று கேட்டாள் அவள்.

"தலையைச் சீவுவார்கள்."

"இங்கே அப்படியில்லை. என்ன நடக்கும் என்று தெரிந்ததா? இப்போது என்ன செய்வதாக உத்தேசம்?"

"நீ தான் சொல்ல வேண்டும்?"

"நான் எப்படிச் சொல்வது? உங்கள் வயது என்ன?"

"ஐம்பது இருக்கும்."

"பட்ட மரமா? பச்சை மரமா?"

"நீ என்ன கேட்கிறாய்?"

"இது கூடத் தெரியாமல் நீங்கள் எப்படித் தூதுவராக வந்தீர்கள்? உங்களுக்குத் திருமணமாகி விட்டதா?"

"ஆம்"

"இதற்கு முன் பெண்களைப் பார்த்திருக்கிறீர்களா!"

"இது என்ன அர்த்தமற்ற கேள்வி? பெண்ணைப் பார்க்காமல் திருமணம் செய்ய முடியுமா? குழந்தைகளைப் பெற முடியுமா?"

"உங்களைப் பார்த்தால் அப்படித் தெரியவில்லை. குளிக்கும் பெண்களை ரகசியமாகப் பார்க்கும் கோழை என்று தான் தோன்றுகிறது. உங்களுக்கு எத்தனைக் குழந்தைதள்?"

"நான்கு"

"பிறகென்ன"

"நீ பேசுவது விளங்கவில்லை"

"கதவைச் சாத்தித் தாழிட்டு விட்டு வாருங்கள்"

அவர் அவ்வாறே செய்து விட்டு வந்தார்.

"இப்போதாவது புரிகிறதா?"

"கொஞ்சம் புரிகிறது"

"நீங்கள் பசுமையான மரம்தான் என்பதை நிரூபித்துக் காட்டுங்கள். உங்களை மகாராஜாவுக்குக் காட்டிக் கொடுக்க மாட்டேன். என்ன?"

"அதாவது..."

"இன்னுமா புரியவில்லை. முட்டாளே" என்று சொல்லி அவர் எதிர்பார்க்காத காரியத்தைச் செய்தாள் அவள்.

அதுவரை நறுமணங்கள் பட்டாடைக்குள் இருந்தன. தற்போது பட்டாடை தனியாகவும் அவை தனியாகவும் பிரிந்தன.

தூதுவருக்கும் புரிந்து விட்டது.

ஏதேதோ விபரீதங்களை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார் அவர்.

ஆனால் நறுமணச் சொர்க்கமானது தன்னைத் தேடி வரும் என்று சிறிதும் எதிர்பார்க்கவில்லை.

நேரம் பகல் தான்.

நேரம் எதுவானாலும் சுகத்திற்குத் தடையில்லை என்பதை அவர் உணர்ந்தார்.

ஆடையற்றுக் கிடந்த அழகை எல்லையற்று பருகினார்.

கொஞ்சகாலமாக அரசியல் காரணங்களால் அணங்குகளின் அரவணைப்பைத் துறந்திருந்த அவர் தற்போது கிடைத்த சந்தர்ப்பத்தை முழுதுமாகப் பயன்படுத்திக் கொண்டார்.

அடங்கியிருந்த காமம் அணை உடைந்து பெருகியது போல் பெருகியது.

ஆழிப் பேரலை போல் எழுந்து அழகியை அழுத்தினார்.

பகல் நேரம் முடிந்து இரவு நேரம் நுழைந்து நான்கு ஜாமங்கள் நகர்ந்தும் அவர் அவளை விட்டு நகர்வதாக இல்லை.

"போதும். ஒரே நாளில் கொட்டி விடாதீர்கள். வெள்ளம் வந்து விடப் போகிறது" என்று சொல்லி அவள் விலகினாள். பட்டாடையை அணியவும் முற்பட்டாள்.

அவருக்கும் அவள் சொன்னது தான் சரி என்று தோன்றியது.

படுக்கையை விட்டு எழுந்து ஆடைகளை அணிந்து கொண்டு "உன் நறுமணங்களெல்லாம் எனக்கு வந்து விட்டன" என்றார்.

"அசடு வழிய வேண்டாம். இப்போது கூட மகாராஜாவிடம் புகார் சொல்ல என்னால் முடியும்" என்றாள் அவள்.

"நான் தான் நிரூபித்து விட்டேனே!"

"சரியான மிருகம். காண்டா மிருகம்."

"நீ இருப்பது பக்கத்து இல்லம் தானா?"

"ஆமாம்" என்று சொல்லி விட்டு கதவைத் திறந்து கொண்டு வெளியே சென்றாள் அவள்.

தூதுவருக்கு கிளுகிளுப்பாக இருந்தது.

தூது வந்த இடத்தில் இப்படியொரு இன்ப அதிர்ச்சி கிடைத்ததில் அவருக்கு ஆனந்தமாக இருந்தது.

ஆகா என்றிருந்தது. ஐயோ என்றிருந்தது

"ஐயா! உங்கள் அறையிலிருந்து ஒருத்தி வந்தாளே, அவள் யார்?" என்று கேட்டார்கள் அவரது வீரர்கள்.

"அவளா? பெண். என் கண். மேற்கொண்டு கேட்காதீர்கள். கேட்டால் உங்களுக்கு வரும் புண்" என்றார் தூதுவர் கவிஞரைப் போல்.

மறுநாள் அவள் வீட்டிற்கே சென்றார்.

நறுமணத்தை அனுபவித்து விட்டுத் திரும்பினார்.

"ஐயா! நீங்கள் இப்போது எங்கே சென்று விட்டு வருகிறீர்கள்?" என்று கேட்டார்கள் அவரது வீரர்கள்.

"கேள்விகள் வேள்விகளைப் போன்றவை. எப்போதாவது எழ வேண்டும். எப்போதுமல்ல" என்றார் தூதுவர்.

மறுநாள் அவளிடம் சென்ற அவர் "என்னோடு வந்தவர்கள் எனக்குப் புண்ணாக இருக்கிறார்கள் கண்மணி. அவர்கள் மீது அவதூறு சுமத்திச் சிறையில் அடைக்க வேண்டும் நீ செய்வாயா?" என்றார்.

அவள் செய்தாள்.

அதற்குப் பிறகு அவர்களது களியாட்டம் தடையின்றி நடந்தது.

"உன்னை விட அரிய விஷயம் உலகத்தில் இல்லை" என்று சொல்லி கடிக்கக் கூடாத இடத்தில் கடித்தார் அவர்.

"ஐயோ" என்றாள் அவள்.

கதவு தட்டப்பட்டது.

"யாரவன் முட்டாள்?" என்று கோபித்தார் தூதுவர்.

"பேசாமல் இருங்கள். நான் போய் பார்க்கிறேன்" என்று சொல்லி விட்டுக் கதவைத் திறந்தாள்.

வெளியே இருந்த சேவகன் "தூதுவரைப் பார்க்க வேண்டுமாம். மகாராஜா வரச் சொன்னார்" என்றான்.

"தூதுவரே! மகாராஜா உங்களைக் காண வேண்டுமாம். செல்லுங்கள்" என்றாள் அவள்.

"மாட்டேன். முடியாது என்று சொல்" என்றான் தூதுவர்.

அவர் அவளைத் தவிர எதையும் பொருட்படுத்தத் தயாராக இல்லை.

அவளைச் சேறாக்கி அதில் திளைத்தார்.

மதுவை மிதமிஞ்சி குடித்து விட்டு அவளைக் கடித்தார்.

கதவு தட்டப்பட்டது. அவள் திறந்தாள்.

வெளியே இருந்தது-

மன்னன் விட்டலராயன்.





வாளால் பேசவேண்டிய விஷயங்களை வாயால் பேசுவதும் வாயால் பேசவேண்டிய விஷயங்களை வாளால் பேசுவதும் தவறான முடிவையே தரும் - விட்டலராயன்



மன்னனைக் கண்டதும் "வந்தனம் மகாராஜா!" என்று சொல்லி கைகளைக் கூப்பி வணங்கினாள் அப்பெண்.

"தூதுவர் எப்படி இருக்கிறார்?" என்று கேட்டான் மன்னன்.

"மயங்கிக் கிடக்கிறார் மகாராஜா. நினைவு இல்லை."

"நல்லது பவானி. நாங்கள் இன்னும் ஒரு வாரத்திற்குள் புறப்பட இருக்கிறோம். எப்போது வருவோம் என்பதைச் சொல்ல முடியாது. ஆகவே அது வரை தூதுவர் உன் கட்டுப் பாட்டிலேயே இருக்க வேண்டும். கட்டுப்பாட்டை மீற முயன்றால் ஏதாவது விபத்து நடந்த மாதிரிக் காட்டி அவரை வேலை தீர்த்து விடு. அவரோடு வந்தவர்கள் சிறையிலேயே காலம் கழிக்கட்டும்."

"அப்படியே மகாராஜா."

"பவானி! நீ தியாகத்திற்கென்றுப் பிறந்தவள். இந்தத் தாயகத்திற்கென்று பிறந்தவள். பல யாகங்களில் கிடைக்கும் பலன் உன் ஒருத்தியின் தியாகத்தில் கிடைக்கும். நீ செய்து வருவது இழி‹ செயல் அல்ல. மிக உயர்ந்த அர்ப்பணிப்பு. துறவிகள் கூடத் துறந்தவர்களாக இருந்தாலும் உன்னைப் போல உடலைத் தானம் செய்வதில்லை. சல்லேகனைப் புரியும் சமணர்கள் கூட வாழ்ந்தது போதும் என்று இறப்பைத் தேடுபவர்களாக இருக்கிறார்கள். நீ உயிரோடு இருந்து கொண்டு உனக்காக அல்லாமல் உன் நாட்டிற்காக உன் உடலைத் தியாகம் செய்கிறாய். தானம் செய்கிறாய். உனது பெயர் வரலாற்றில் வராமல் போகலாம். அது கூட உனக்கு உயர்வு தானேயன்றித் தாழ்வு அல்ல. சோர்ந்து விடாதே பவானி. நீ சோரம் போகிறவள் அல்ல. பாரத்தைத் தாங்குபவள். இம்மையில் உனக்கு எதுவும் இல்லாமல் போகலாம். மறுமையில் நீ மகாராணியாக இருப்பாய். வருகிறேன் அம்மா" என்று கூறிவிட்டு அகன்றான் மன்னன்.

பவானியின் கண்களில் நீர் பூத்தது.

மன்னன் நேராக ஆலோசனை அவைக்குச் சென்றான்.

அங்கே பஞ்சப் பிரதானிகள் முதலாக அனைவரும் காத்திருந் தார்கள். ராஜ குரு ஆனந்தரும் மன்னனின் மெய்க் காப்பாளக் குழுவான கருடர்களின் தலைவன் கங்கராஜனும் இருந்தான்.

பஞ்சப் பிரதானிகளில் ஒருவரான பிரதம மந்திரி எழுந்து “மகாராஜா! பஞ்சப் பிரதானிகளான எங்கள் ஐவரை நீங்கள் சிலகாலமாக எந்த விஷயத்திலும் ஆலோசனை கலப்பதில்லை. ஐவரிடம் ஐயமும் கேட்பதில்லை. இப்படி எதற்கும் பயனில்லாத நிலையில் நாங்கள் பஞ்சப் பிரதானிகளாக நீடிப்பது தண்டம் என்று தோன்றுகிறது. நாங்கள் பதவி விலக நீங்கள் அனுமதித்தால் எங்களுக்கு நிம்மதியாக இருக்கும்” என்றார்.

அவரது பேச்சால் மன்னன் ஆடிப் போய் விடவில்லை.

“பிரதம மந்திரி! நீங்களும் இதரப் பிரதானிகளும் எனது ராஜ்யத்தின் தூண்கள். நீங்கள் தூண்களாக இருப்பதாலேயே நான் நிற்கிறேன். நீங்கள் இருக்கும் வரை நான் கோபுரம். நீங்கள் விலகிவிட்டால் நான் கட்டாந்தரை. ஆகவே உங்களில் ஒருவரையும் விலகுவதற்கு நான் அனுமதிக்க மாட்டேன். சமீப காலமாக உங்களையெல்லாம் நான் ஆலோசிக்க வில்லை என்பது உண்மைதான். ஆனால் அது என் அலட்சியத்தின் அடையாளமல்ல என்பதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். நீங்கள் ஐவரும் தர்மாதிகாரிகள். தர்மத்தை பரிபாலனம் செய்பவர்கள். உங்கள் ஆலோசனையும் சரி வழிகாட்டுதலும் சரி தர்ம வழியிலே இருக்கும். ஆகவே தான் உங்கள் ஆலோசனைக்கு நான் இடமளிக்கவில்லை” என்றான் மன்னன்.

“நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? நீங்கள் அதர்ம வழியில் செல்லப் போகிறீர்களா?” என்று கேட்டார் பிரதம மந்திரி.

“பிரதானிகளே! எல்லா இலட்சியங்களும் பொது நலத்தைச் சார்ந்தவையாக இருக்க முடியாது. சுயநலத்தைச் சார்ந்ததாகவும் இருக்கும். சுயநலத்தை அடிப்படையாகக் கொண்ட இலட்சியத்தை அடைய தர்மத்திற்குப் புறம்பான வழிகளை மேற்கொள்ள வேண்டி வருவது இயல்பானதுதான். நான் எனது வம்சத்தவரின் உயர்வுக்காக இது நாள் வரை சுதந்திரத்தைத் தவிர அனைத்தையும் அளித்து அந்தச் சாளுக்கியர்களை எதிர்க்க முடிவு செய்தேன். அந்த முடிவு தர்மமானது அல்ல. அப்படியிருக்கும் போது தர்மாதிகாரிகளான உங்களிடம் எப்படி நான் ஆலோசனை கோரமுடியும்?” என்றான் மன்னன்.

“மகாராஜா! இது எங்கும் நடைபெறுகிற விஷயம்தான். மகாராஜ்யங்கள் அப்படித்தான் உருவாகின்றன. ஆதிக்கத்தை

எதிர்ப்பதுதான் அடங்கியிருப்பவர்களின் குணம். அது தான் வழக்கம். நீங்களும் அதைத்தான் செய்கிறீர்கள்! இதில் எங்களிடம் ஆலோசனை கேட்பதற்கு என்ன தயக்கம்?'' என்று கேட்டார் பிரதம மந்திரி.

“அப்படியானால் இப்பொழுதும் ஒன்றும் மூழ்கிவிடவில்லை. உங்கள் ஆலோசனைதான் என்ன?'' என்று கேட்டான் மன்னன் விட்டலராயன்.

“நாம் பல தலை முறைகளாகச் சாளுக்கியர்களுக்கு விசுவாசமாகப் பணி செய்திருக்கிறோம். நமக்குச் சுயராஜ்யம் பெறுவதற்குத் தகுதி இருக்கிறது. எனவே சாளுக்கிய சக்கிரவர்த்தியிடம் சுயராஜ்யத்தைக் கோரலாம். அதுவே வழி'' என்றார் பஞ்சப் பிரதானிகளில் ஒருவரான சாந்தி விக்ரஹி.

“மகாபாரத இதிகாசத்தில் கூட இப்படித்தான் நடந்தது. வனவாசத்திற்குப் பிறகு தங்கள் ராஜ்யங்களைப் பெற பாண்டவர்களுக்குத் தகுதியும் உரிமையும் இருந்தது. அதை அவர்கள் எடுத்த எடுப்பிலேயே போரின் மூலம் முயற்சிக்க வில்லை. தூது அனுப்பினார்கள். அதுதான் முறை. இதுதான் நிறை'' என்றார் ஸ்ரீகர்ண அதிகாரி.

கங்கராஜன் குறுக்கிட்டு “பாண்டவர்களுக்கு உரிமையுள்ள ராஜ்யத்தைத் தருவதற்காக துரியோதனன் மறுத்த போது சுயராஜ்ய உரிமையில்லாத நாம் கோரினால் சாளுக்கிய சக்கிரவர்த்தி கொடுத்து விடுவாரா? அதோடு பாண்டவர் அனுப்பிய தூது துரியோதனனால் நிராகரிக்கப்பட்டது'' என்றான்.

“கங்கராஜா! நீ இளைஞன். உணர்ச்சி வசப்பட்டவன். மகாராஜாவும் உன்னைப் போன்ற இளைஞர். அவருக்குக் கொம்பு சீவி விட்டு வேடிக்கைப் பார்க்காதே. உன் பணி மகாராஜாவின் மெய்யைக் காப்பது. ஆலோசனை சொல்வதல்ல'' என்று அவனைக் கண்டித்த பிரதம மந்திரி “மகாராஜா! நீங்கள் இங்கே உங்கள் கொடியை பறக்க விட்டு தனி நாணயத்தை உருவாக்கி அத்துமீற முயற்சித்ததற்குச் சாளுக்கியர்கள் வேலாபுரத்தின் மீது நேரடியாகவே போர் தொடுத்திருக்கலாம். ஆனால் அவர்கள் தூதுவரை அனுப்பியிருக்கிறார்கள். முறையாக நடந்து கொள்கிறார்கள். அதை நீங்கள் நினைத்துப் பார்க்க வேண்டும்'' என்றார்.

கங்கராஜன் குறுக்கிட்டு “தூதின் லட்சணத்தைத்தான் பார்த்தோமே! உரிய பதிலைச் சரியாக நமது மகாராஜா விளக்கிய பிறகும் அவரைக் கைது செய்கிறேன் என்கிறார் தூதுவர். இது

தான் தூதா? அது மட்டுமல்ல நம்மீது நம்பிக்கை வரும் வரை மகாராணியை சாளுக்கிய நாட்டிற்குப் பிணையாக அனுப்பி வைக்க வேண்டுமாம். எனக்கு மட்டும் அனுமதி தந்திருந்தால் அந்த மானங்கெட்டத் தூதுவனை அப்போதே தலையைச் சீவி யகச்சி நதிக் கரையில் வீசியிருப்பேன். இது வெல்லாம் ஒரு தூதா? சூது. சூதைவிடக் கேவலமானது" என்றான்.

பிரதம மந்திரி பேச முற்பட்ட போது மன்னனே குறுக்கிட்டுப் பேசினான்.

"பிரதானிகளே! பகவான் கிருஷ்ணரே தூது சென்றும் கௌரவர்கள் அதை ஏற்கவில்லை. அப்போதே தூதின் மகத்துவம் போய் விட்டது என்றுதான் கருதுகிறேன். அதோடு நீங்களெல்லாம் சொன்னபடி அனைத்து விஷயங்களும் சம்பிரதாய முறைப்படி ஆரம்பித்தாலும் போகப் போக அவை கைவிடப்பட்டன. விதிகள் மீறப்பட்டன. போரில் அதர்மம் தலை தூக்கியது. மாவீரர்கள் வஞ்சகமாக வீழ்த்தப்பட்டார்கள். ஆகவே மகாபாரத நிகழ்ச்சிகளை நாம் நம் விஷயத்தில் நினைவு கூற வேண்டாம். நம் விஷயம் மாறுபட்டது. சாளுக்கியர்களிடம் நாம் எவ்வளவு காலம் விசுவாசமாக இருந்தாலும் நமக்குச் சுதந்திரத்தைத் தர மாட்டார்கள். அடிமைகளுக்கு விடுதலையும் சுதந்திரமும் எங்கேயும் எப்போதும் கிடைத்ததில்லை. கிடைக்காத விஷயத்திற்கும் முடியாத விஷயத்திற்கும் தூது அனுப்புவதும் பேச்சு வார்த்தை நடத்துவதும் கால விரயமாக்கும் செயல்களே தவிர காரிய சித்தியைத் தரும் செயல்கள் அல்ல. வாயால் பேசும் விஷயங்களை வாளால் பேசுவதும் வாளால் பேச வேண்டிய விஷயங்களை வாயால் பேசுவதும் தவறான முடிவையே தரும். என்னைப் பொறுத்த வரை சாளுக்கியர்களுடன் வாளால் பேச வேண்டிய தருணம் இது. வாயால் பேசும் தருணமல்ல. அவர்களோடு மோதுவதற்கு எல்லா ஏற்பாடுகளையும் செய்து விட்டேன். இச் சமயத்தில் பேச்சு வார்த்தையில் இறங்கினால் கூராகியிருக்கும் வேலும் வாளும் துரு பிடிப்பது போல் வீரர்கள் முடங்கி விடுவார்கள்" என்றான்.

"அது தான் சரி" என்றான் கங்கராஜன்.

"சாளுக்கிய நாட்டுத் தூதுவரை என்ன செய்தீர்கள்?" என்று கேட்டார் பிரதம மந்திரி.

"இதென்ன கேள்வி? அவர் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறார். பலமுறை அழைத்துப் பார்த்தேன். அவர் ஓய்வை விட்டு வருவதாக இல்லை. நான் என்ன செய்ய முடியும்?" என்றான் மன்னன்.

“மகாராஜா! பூனை கண்ணை மூடிக் கொண்டால் அதற்கு வேண்டுமானால் உலகம் தெரியாமல் போகலாம். மற்றவர் களுக்கு அப்படியில்லை. நீங்கள் தூதுவரை என்ன செய்தீர்கள் என்பது எங்களுக்குத் தெரியும். அது சரியல்ல” என்றார் பிரதம மந்திரி.

“நடப்பு இப்படியெல்லாம் போகும் என்பதால்தான் பஞ்சப் பிரதானிகளின் உதவியையோ ஆலோசனையோ நான் நாடவில்லை” என்றான் மன்னன்.

“தெரிந்தே அதர்ம வழியில் இறங்குவது உத்தமமாகாது மகாராஜா. அதர்ம வழி அழிவுதான். அந்த வழியில் போனவர்கள் வெற்றி பெற்றதில்லை” என்றார் பிரதம மந்திரி.

“நான் ஏற்கனவே சொன்னதைத்தான் இப்போதும் சொல்கிறேன். தர்மமா அதர்மமா என்ற கேள்வி இப்போது எழவில்லை. வாய் மொழியா வாள் மொழியா என்பது தான் கேள்வி. வாள்தான் பயன்படும் என்பது என் கணிப்பு. அதிலிருந்து மாறும் உத்தேசம் எனக்கில்லை” என்றான் மன்னன் உறுதியாக.

“அப்படியானால் நாங்கள் பிரதானிகளாக நீடிப்பதில் பொருளில்லை. நாங்கள் விலகிக் கொள்கிறோம்” என்றார் பிரதம மந்திரி.

“அது தான் எங்கள் கருத்து” என்றார்கள் இதரப் பிரதானிகளும். அதில் சேனாதிபதியும் இருந்தார்.

ராஜகுரு அதுவரை மௌனமாக இருந்தார்.

“தங்கள் கருத்தென்ன குருநாதரே?” என்றார்கள் பிரதானிகள்.

“பேச்சுக்கு மதிப்பில்லாத போதும், பேச்சு எடுபடாது என்ற நிலை வரும் போதும் மௌனம்தான் சிறந்தது” என்றார் ராஜகுரு.

மன்னன் விட்டலராயன் எதுவும் பேசவில்லை. தனது முடிவில் அவன் தீர்மானமாக இருந்தான்.

அவை கலைந்து சென்றபின் கங்கராஜனைப் பார்த்து “நீ என் மெய்க் காவலன். அதோடு அந்தரங்க ஆலோசகன். என் உணர்வுக்ளைப் புரிந்திருப்பவன். நான் எண்ணம் என்றால் நீ செயல். இதை மாற்றியும் சொல்லிக் கொண்டாலும் பொருள் ஒன்றுதான். எனக்கு அரியணை இருக்கிறது. உனக்கு இல்லை. ஆகவே நீயே சேனாதிபதியாக இருந்து வழிநடத்து. பஞ்சப் பிரதானிகளில் ஒருவரான மூத்த சேனாதிபதி பகாசூரர் நமக்கு ஒத்துழைக்க விரும்பாமல் விலகுகிறார். ஆகவே அவரது பொறுப்பை நீ ஏற்றுக் கொள்” என்று சொன்ன மன்னன் தன் போர்த் திட்டத்தை விளக்கினான்.

"கங்கராஜா! நாம் நடத்தப் போவது ஆதிக்கத்திலிருந்து விடுபடுவதற்கான போராட்டம். இதைச் சாளுக்கியர்களுடனான நேரடிப் போரில் ஆரம்பிக்க வேண்டியதில்லை. சாளுக்கிய நாடு என்பது கல்யாண புரத்திலிருந்து வாதாபி வரை வடமேற்கே விரிந்திருக்கிறது. அவர்களோடு நாம் மோதப் போவதில்லை. அவர்களது ஆதிக்கத்தில் இருக்கும் ஊர்களைத் தாக்கி வெற்றி கொள்வோம். நான் இருக்கும் வேலாபுரமும் என் மகன் நரசிம்மன் இருக்கும் துவாரசமுத்திரமும் சாளுக்கியரிடமிருந்து விடுதலை பெற்று விட்ட சுயராஜ்யங்களான ஹொய்சளர் ராஜ்யமாக ஆகி விட்டதாகக் கருதுவோம். இவ்விரண்டைத் தவிர்த்து சாளுக்கியருக்கு அடங்கிய பிரதேசங்களாகப் பலவூர்கள் மலை நாட்டில் ஆங்காங்கே சிதறிக் கிடக்கின்றன. அவற்றை ஒவ்வொன்றாகத் தாக்கி நம் வசப்படுத்தி வந்தால் சாளுக்கிய நாடு பலமிழந்து நிற்கும். கடைசி கட்டமாக அவர்களைத் தாக்கலாம். ஏற்கனவே சாளுக்கியர்கள் சோழர்களோடும் வேங்கி நாட்டோடும் போரிட்டு பலமிழந்திருக்கிறார்கள். அவர்களுக்கு பலம் சேர்க்கும் சிற்றரசுகளை நாம் வீழ்த்துவோம். கிளைகளை ஒவ்வொன்றாக வீழ்த்தினால் மரத்தைச் சாய்ப்பது எளிது. எனவே முதல் கிளையாக நுளம்பவாடியைத் தாக்குவோம். நீ படைகளை ஆயத்தம் செய்."

இவ்வாறு கூறிவிட்டு கங்கராஜனை அனுப்பிய மன்னன் தேவி சாந்தலையிடம் சென்றான்.

"தேவி! தற்போது நான் மூத்தோர்களின் ஆலோசனையை விட்டு விட்டு என் போக்கில் நடந்து கொள்ளப் போகிறேன். எல்லோரையும் அலட்சியப் படுத்தினாலும் உன் ஒருத்தியை மட்டும் எக்காலத்திலும் அலட்சியப் படுத்தக் கூடாது என்று தீர்மானமாக இருக்கிறேன். ஆகவே உன் யோசனையும் அறிவுரையும் எனக்கு முக்கியம். இப்போது சொல். என் முடிவு சரியா?" என்று கேட்டான்.

"பிரபு! சில்ஹார நாட்டில் அரசரான என் தந்தையை வென்று என்னைத் தாங்கள் மணந்து கொண்டீர்கள். அன்றிலிருந்து இன்று வரை தங்கள் யோசனையைத் தான் நான் கேட்டு வந்திருக்கிறேன். இப்போது நான் என்ன சொல்ல முடியும்?" என்று கேட்டாள் தேவி சாந்தலை.

"நீ கூறுவது உண்மைதான் சாந்தலை. இருப்பினும் எனக்கு முன்னால் மகத்தான இலட்சியம் இருக்கிறது. அதை நிறைவேற்ற நான் தேர்ந்தெடுத்த வழிமுறைகளில் ஆபத்து இருக்கிறது. அந்த ஆபத்து எப்படி வரும், அதன் வீச்சு எவ்வளவு இருக்கும்

என்பதையெல்லாம் இப்போது சொல்ல முடியாது. ஆகவே தான் உன்னிடம் யோசனை கேட்கிறேன்."

"பிரபு! எல்லோரும் தயங்கிக் கொண்டிருந்தால் துணிபவர்கள் தான் யார்? ஆகவே முன்னோக்கி நீங்கள் எடுத்து வைத்துள்ள தைரியக்கால்களைப் பின்னடையச் செய்யாதீர்கள். முன்னேறித் தான் செல்ல வேண்டும். இது உங்களுக்கு மட்டுமல்ல ஹொய்சள வம்சத்தின் லட்சியம். பல லட்சம் மக்களின் லட்சியம். இது வெல்லும். தாங்கள் புறப்படுவதற்கு முன் வேலாபுரத்தில் இருக்கும் வாசந்திகா தேவியையும் துவார சமுத்திரத்தில் இருக்கும் பார்சவ நாதரையும் வணங்கி விட்டுச் செல்லுங்கள்."

"அப்படியே ஆகட்டும்."

"போருக்கு நம் புதல்வன் நரசிம்மனையும் அழைத்துச் செல்லுங்கள்."

"அப்படித்தான் நானும் நினைத்தேன். ஆனால் அவன் போக்கு பிற்போக்காக இருப்பதாகக் கேள்விப்பட்டேன். அவனை நீ சந்தித்துப் பேசு. நம் லட்சியங்களை விளக்கிக் கூறு. பக்குவப்படுத்து. அடுத்த போரில் அழைத்துச் செல்லலாம்."

ராணி சரி என்றாள்.

பிறகு அவள்; மன்னன் மற்றும் கங்கராஜன் ஆகியோர் வேலாபுரத்தில் இருந்த வாசந்திகா தேவியின் ஆலயத்திற்குச் சென்று வழிபாடு செய்தனர். ஹொய்சள வம்சத்தாருக்கு வாசந்திகா தேவி குலதெய்வமானதாலும் சமண மதத்தின் யட்சிணி தேவதையாதலாலும், சாந்தலைக்கு இஷ்ட தெய்வ மாதலாலும் அவர்களது வழிபாடு ஆழ்ந்த வழிபாடாக இருந்தது.

அடுத்து அவர்கள் துவாரசமுத்திரத்திற்குச் சென்று அங்கிருந்த பார்சவ நாதராகிய சமண தீர்த்தங்கரர் ஆலயத்திற்கும் சென்று வழிபாடு நடத்தினார்கள். கர்நாடக நாட்டின் ஒருமித்த சமணச் சங்கங்களின் தலைவரும் சரவண பெலகோலாவின் பிரதான ஆச்சார்யருமான ஜெயதேவர் துவார சமுத்திரத்திற்கு வந்திருக்கிறார் என்பதை அறிந்த மன்னன் விட்டலராயன் தன்னோடு வந்தவர்களை அழைத்துக் கொண்டு சென்றான்.

அங்கே ஜெயதேவர் மன்னனின் புதல்வரும் இளவரசருமான நரசிம்மனுடன் பேசிக் கொண்டிருந்தார். அவரைச் சுற்றி ஆயிரம் சமணர்கள் கூடியிருந்தார்கள். மன்னனைக் கண்டதும் சமணர்கள் எழுந்து நின்று வணக்கம் தெரிவித்தார்கள். இளவரசன் எழுந்து அங்கிருந்து அகன்றான்.

மன்னரும் அவனோடு வந்தவர்களும் அமர்ந்தார்கள். மூவருமே மிகவும் மதிக்கத் தகுந்தவராக இருந்தார் ஜெயதேவர். அவரை மரியாதையோடு வணங்கினார்கள். மூவரையும் வாழ்த்தினார் அவர்.

மன்னன் ஏதோ பேச முற்பட்ட போது அவரே குறுக்கிட்டு "எனக்கு எல்லா விவரமும் தெரியும் விட்டலராயா. ஆனாலும் அரசியலில் தலையிடவோ, கருத்து சொல்லவோ நான் தயாராக இல்லை. சமண தத்துவங்களுக்கு நேர் மாறானது உங்கள் அரசியல் நடப்புகள்" என்றார்.

"தங்களைச் சந்தித்தது தற்செயலானது அடிகளே. உங்கள் மனம் எனக்குத் தெரியும். எங்கள் அரசியல் குறித்து என்றைக்குமே உங்களிடம் வந்ததில்லை. இங்கு வந்த பிறகு தான் நீங்களும் இங்கு வந்திருப்பதாக அறிந்தேன். மரியாதை செலுத்துவதற்காகவே வந்தேன்" என்றான் மன்னன்.

பிறகு ராணியையும் கங்கராஜனையும் தூர இருக்கும் படிச் சொன்ன மன்னன் ஜெயதேவரிடம் "அடிகளே! என் மகன் நரசிம்மன் உங்களோடு பேசிக் கொண்டிருந்தான். என்னிடம் பேசவில்லை என்றாலும் உங்களோடு அவன் தொடர்பு வைத்திருப்பதில் எனக்கு மகிழ்ச்சிதான். அவனைப் பற்றிய ஐயம் ஒன்று எனக்கு இருந்து கொண்டிருக்கிறது. அது உங்களுக்கும் தெரிந்திருக்கும். அவன் தேறுவானா அடிகளே?" என்று கேட்டான்.

"அவன் நீ விரும்பும் வழியிலும் போகவில்லை. நான் விரும்பும் வழியிலும் போகவில்லை. அவன் செல்லும் வழி இப்போதைக்குச் சரியல்ல. எப்போதைக்குமே அது தான் நீடிக்குமா என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்" என்றார் ஜெயதேவர்.

"நானும் அப்படித்தான் நினைக்கிறேன்" என்று கூறிவிட்டு விடை பெற்றுக் கொண்ட விட்டலராயன் மறுவாரமே படைகளோடு நுளம்பவாடியை நோக்கிச் சென்றான்.

நுளம்பவாடியை அடைந்ததுமே அவனிட்ட கட்டளை கங்கராஜனுக்கு வியப்பாக இருந்தது.





போர் தேவைப்படும் போது போரும் போர் தேவையில்லாத போது சமாதானமும்தான் சரியான உபாயங்களாக இருக்கும் – விட்டலராயன்




"மகாராஜா! நுளம்பவாடியை நாம் தாக்க முற்படும் போது வேலாபுரம் தாக்கப்பட்டால் என்ன செய்வது?" என்று கேட்டான் கங்கராஜன்.

"கங்கராஜா! நாம் எப்படி இருக்கிறோம் என்று உளவறிந்து வர சாளுக்கிய நாட்டிலிருந்து அனுப்பப் பட்ட தூதுவனை இங்கேயே அழுத்தி விட்டோம். ஆகவே நம்மைப் பற்றி பாதகமான செய்தி எதுவும் சாளுக்கிய நாட்டிற்குப் போகாது. தூதுவரிடமிருந்து செய்தி வரும் என்று அவர்கள் காத்திருப்பார்கள். நம் வேலா புரத்தைத் தாக்கும் முயற்சியில் அவர்கள் ஈடுபட மாட்டார்கள். அதற்குள் நாம் நுளம்பவாடியைத் தாக்கி செல்லலாம்" என்றான் மன்னன்.

"நுளம்பவாடியை ஏன் தேர்ந்தெடுத்தீர்கள்?"

"அது சமவெளியில் இருக்கிறது. அதைத் தாக்கிப் பிடித்தால் பெரியதொரு பகுதி நம் வசமாகும். ஏறக்குறைய நமக்கும் சாளுக்கியத் தலைநகர் கல்யாணபுரத்திற்கும் இடையில் இருக்கும் பெரும் நிலப்பரப்பு இது. இது நம் வசமானால் நமக்குத் தெம்பு வரும். பலம் வரும். அதற்குப் பிறகு ஆங்காங்கே சிதறிக் கிடக்கும் ஊர்களைப் பிடிக்கலாம்."

"நுளம்பவாடியைத் தாக்குவதற்கு என்ன போர்த் திட்டத்தைத் தீட்டியிருக்கிறீர்கள்?"

"இப்போது வேலாபுரத்தில் மட்டும் இருக்கும் நமது படை எவ்வளவு?"

"முப்பதாயிரம் பேர். இதில் சாளுக்கிய படைவீரர்களாக இருந்து நம் வீரர்களாக மாறியிருப்பவர்கள் இருபதாயிரம் பேர். புதியதாக படையில் சேர்ந்தவர்கள் பத்தாயிரம் பேர். புரவிகள் ஆயிரமும் யானைகள் நூறும் இருக்கின்றன. துவார சமுத்திரத்தில் இருபதாயிரம் வீரர்கள் இருக்கிறார்கள்."

"கங்கராஜா! நம்மிடம் சேர்ந்துள்ள வேலாபுரத்து இளைஞர் படை பத்தாயிரத்தை இங்கேயே காவலுக்கு வைத்துவிடு. நமது

நாட்டிற்காக - நமது இனத்திற்காக - நமது அடையாளத்திற்காகப் படையில் சேர்ந்தவர்கள் அர்ப்பணம் செய்யக் கூடியவர்களாக இருப்பார்கள். அவர்கள்தான் வேலாபுரத்தைப் பாதுகாக்கத் தகுதியானவர்கள். புரவிப் படையும் யானைப் படையும் இங்கேயே இருக்கட்டும். அதே போல துவாரசமுத்திரத்தில் இருக்கும் எனது மகன் நரசிம்மரின் வசம் இருக்கும் இருபதாயிரம் வீரர்கள் அங்கேயே இருக்கட்டும். நமது ஒற்றர்படை மிகவும் கவனமாக இருக்க வேண்டும். வேலாபுரம், துவாரசமுத்திரம் மற்றும் நாம் படை யெடுத்துச் செல்லும் நுளம்பவாடி ஆகிய மூன்று ஊர்களையும் இணைத்து தகவல்களை நமக்கு அளிக்கும் விதமாக ஒரு காத தூரத்திற்கு இரண்டு புரவி வீரர்கள் மறைந்திருக்க வேண்டும். படைகளின் பணியை விட ஒற்றர்களின் பணி மிகவும் முக்கியமானது. நம் கணக்குகளை மீறி வேலாபுரத்தின் மீதோ துவாரசமுத்திரத்தின் மீதோ சாளுக்கியரது தாக்குதல் நடந்தால் நாம் இருக்குமிடத்திலிருந்து உடனடியாகத் திரும்ப வேண்டும். அதற்கு ஒற்றர்களின் பணிதான் உகந்தது. இந்த ஏற்பாடுகளைச் செய்து விடு கங்கராஜா. பரதனையும் துணைக்கு வைத்துக் கொள். நாளை மறுநாள் அமாவாசை அன்று நாம் நுளம்பவாடியை நோக்கிப் புறப்படுகிறோம்'' என்றான் மன்னன்.

கங்கராஜனும் பரதனும் மன்னரின் கட்டளையை உடனடியாகவும் சரியாகவும் நிறைவேற்றினார்கள். அமாவாசையன்று படை புறப்படுவதற்கு முன்பு களப்பலி கொடுக்கப் பட்டது. களப்பலியாவதற்காக தங்களைத் தியாகம் செய்து வந்தவர்கள் பைரவர்கள் எனப்பட்டார்கள். அவர்களின் குடும்பங்களை அரசாங்கமே நேரடியாகக் கவனித்து வந்த படியால் பைரவர்கள் மகிழ்ச்சியோடு களப்பலிக்கு உடன் பட்டார்கள். களப்பலி முடிந்ததும் ஆஸ்தான ஜோசியர்களும், நிமித்தகர்களும், கடகாச்சாரியார்களும்* நிர்ணயம் செய்து வைத்த நேரத்தில் மங்கல வாத்தியங்களை முழங்க படை புறப்பட்டது. மன்னன் விட்டலராயனைப் பொறுத்தவரை ஏற்கனவே சாளுக்கியர்களுடன் சேர்ந்து போர்க்களம் சென்று போர் செய்திருக்கிறான். இருப்பினும் சாளுக்கியர்களுக்கு எதிராக முதன் முறையாகப் போருக்குப் புறப்பட்டதால் ஆர்வம் ஒருபுறமும் பதற்றம் மறுபுறமுமாக இருந்தது.

அக்காலத்தில் போர்கள் பிரசித்தமாக இருந்தாலும் போர்களுக்கான படைகள் செல்லக் கூடிய பாதைகள்

---

* போருக்காகவும் அதன் வெற்றிக்காகவும் பிரார்த்தனை செய்பவர்கள் கடகாச்சாரியார்கள் என்று அழைக்கப்பட்டார்கள்.

சரியாக இல்லை. அதுவும் கர்நாடகப் பகுதிகளில் பாதைகள் மிகவும் மோசமானதாக இருந்தன. பல இடங்களுக்கு ஒற்றையடிப் பாதை மட்டுமே இருந்தன. சில இடங்களில் பாதைகளே இல்லை. இது ஒருவகையில் கர்நாடகப் பகுதிகளை ஆங்காங்கே ஆண்டவர்களுக்கும் சாதகமானதாக இருந்தது. எதிரிகளை தங்களை எளிதில் அணுக முடியாமல் இருக்க இந்த இடையூறுகள் சாதகமாக இருப்பதாகக் கருதினார்கள். எதிரிப் படைகளின் நடமாட்டம் தெரிந்தால் வழியிலேயே காட்டுப் பகுதிகளில் தாக்கி அழிப்பதற்கு அவர்களுக்கு இது எளிதாக இருந்தது.

இதையெல்லாம் மனதில் கொண்ட விட்டலராயன் ஓர் உபாயம் செய்தான். தனது படைகளுக்கெல்லாம் சாளுக்கியர் கொடிகளைக் கொடுத்து அவர்களைச் சாளுக்கியர்களைப் போற்றும் கோஷங்களை எழுப்பிச் சொல்லி முன்னேறினான்.

நுளம்பவாடியை அடைவதற்கு அரைநாள் பொழுதிருந்த வேளையில் அவனது ஒற்றர்கள் இருவர் வந்து நுளம்வாடியில் தற்போது மூவாயிரம் வீரர்கள் மட்டுமே இருப்பதாகச் சொன்னார்கள். மன்னன் எதுவும் சொல்லவில்லை.

மேலும் நான்கு காத தூரம் முன்னேறிய போது ஒற்றர்கள் வந்தார்கள். நுளம்பவாடியில் மூவாயிரம் வீரர்கள் மட்டுமே இருப்பதை உறுதி செய்தார்கள்.மன்னன் எதுவும் சொல்லவில்லை.

“சிறிது நேரம் கழித்து இன்னும் எத்தனை தூரம் போக வேண்டும் நுளம்பவாடிக்கு?” என்று கங்கராஜனிடம் கேட்டான் மன்னன்.

“இன்னும் இரண்டு காத தூரம் போக வேண்டும் மகாராஜா!

“நமது ஏற்பாட்டின் படி நுளம்பவாடியை அடைவதற்குள் நமது ஒற்றர்கள் இருவரை நாம் சந்திக்கலாம் அல்லவா?”

“ஆம் மகாராஜா. அதோடு நம்மைப் பற்றியத் தகவலும் நுளம்பவாடிக்குச் சென்றிருக்கும்.”

நுளம்பவாடிக்கு இரு காததூரம் இருந்தபோது வந்த ஒற்றனும் ஒரு காத தூரத்தில் இருந்த ஒற்றனும் நுளம்பவாடியில் மூவாயிரம் வீரர்கள் மட்டுமே இருக்கிறார்கள் என்றத் தகவலை உறுதி செய்தார்கள்.

மன்னன் சிரித்தான்.

“எதற்காகச் சிரிக்கிறீர்கள்?” என்று கேட்டான் கங்கராஜன்.

“விரைவில் தெரிந்து விடும் கங்கராஜா” என்றான் மன்னன்.

நுளம்பவாடியை அடைந்த போது "பார்த்தாயா? நமக்கு எதிரில் இருக்கும் எதிரியின் படை மூவாயிரமாக இருக்கும் என்றா நினைக்கிறாய்?" என்று கேட்டான் மன்னன்.

"பத்தாயிரத்திற்கு மேல் இருக்கும் மகாராஜா"

"ஒற்றர்கள் கடைசிவரை மூவாயிரம் என்று சொன்னார்கள். நான் நம்ப வில்லை. ஆகவேதான் சிரித்தேன். இப்போது புரிகிறதா?" என்று கேட்டான் மன்னன்.

"இது சிரிக்கக் கூடிய விஷயமல்லவே மகாராஜா!"

"நான் ஒற்றர்களை நினைத்துச் சிரித்தேன். ஒற்றர்களின் தகவல்கள் இந்த லட்சணத்தில் இருந்தால் நமக்கு எங்கேயும் ஏமாற்றம்தான் கிடைக்கும். தகவல்கள் இல்லாமல் போனால் கூடப் பரவாயில்லை. எச்சரிக்கையோடு இருந்து கொள்ளலாம். ஆனால் தவறானத் தகவல்களால் ஏமாற்றமும் தோல்விகளும் கிடைத்து விடும். ஆகவே ஒற்றர்கள் பணி இவ்வாறு இருக்கக் கூடாது கங்கராஜா" என்று சொன்ன மன்னன் "எதிரியின் படை நம்மை விடக் குறைவானதுதான். நேர் போரில் வெற்றி பெறுவது சிரமமானதல்ல. போர் துவக்கத் தாரைகளை ஊதிப் போரைத் துவக்கி விடலாம்" என்றான்.

அப்போது எதிரி தரப்பிலிருந்து சங்கொன்று ஊதப்பட்டது. அதையடுத்து புரவி வீரன் ஒருவன் வெளிப்பட்டு முன்னேறி வந்தான். வில்லின் அம்புச் செய்தி ஒன்றை வைத்து எரிந்து விட்டுச் சென்று விட்டான்.

ஹொய்சள வீரர்கள் அந்த அம்பை எடுத்து வந்தார்கள்.

"விட்டலராயா! நீங்கள் சாளுக்கியர்கள் அல்ல என்பது எங்களுக்குத் தெரியும். ஆகவே சாளுக்கிய கொடிகளை கைவிட்டு விட்டு உங்களுக்குரிய கொடிகளை ஏந்துங்கள்" என்றிருந்தது ஓலையில்.

மன்னன் கங்கராஜனைப் பார்த்தான்.

கங்கராஜன் மன்னனைப் பார்த்தான்.

"சாளுக்கிய கொடிகளை எரிந்து விட்டு ஹொய்சளக் கொடிகளை ஏந்தும்படி கட்டளையிடு கங்கராஜா" என்றான்.

வீரர்கள் ஹொய்சளக் கொடிகளை ஏந்தினார்கள்.

அதையடுத்து எதிரி முகாமிலிருந்து மேலுமொரு புரவி வீரன் வெளிப்பட்டு அம்புச் செய்தியை அனுப்பினான்.

"விட்டலராயரே! என்னிடம் படைகள் குறைவாக இருப்பதாக எண்ண வேண்டாம். பிரதானப் படைகள் பல பகுதிகளாகப்

பிரிந்து நுளம்பவாடிக்கு அருகில் தயாராகிறது. நீங்கள் போரிட முற்பட்டால் உங்களுக்குத் தோல்வி நிச்சயம்" என்றிருந்தது ஓலையில்.

மன்னன் கங்கராஜனைப் பார்த்தான்.

கங்கராஜன் மன்னனைப் பார்த்தான்.

"இது ஏமாற்று வேலை மகாராஜா, நாம் தாக்குதலை மேற்கொள்வோம்" என்றான் கங்கராஜன்.

"சற்று தாமதிப்போம்" என்றான் மன்னன்.

"இப்போது நமக்கு வேகமே விவேகம்" என்றான் கங்கராஜன்.

"சில நேரங்களில் வேகத்தை விடப் பொறுமையே விவேகமானதாக இருக்கும். வேகம் திறக்காத வாயில்களைப் பொறுமையானது திறக்கும்" என்றான் மன்னன்.

அப்போது மன்னன் எதிர்பார்த்தபடி மூன்றாவது அம்புச் செய்தி வந்தது.

"ஹொய்சள மன்னரை நுளம்பவாடி மன்னர் சற்று நேரத்தில் சந்திப்பார். பொறுமையாக இருக்கவும்" என்றிருந்தது ஓலையில்.

மன்னன் கங்கராஜனைப் பார்த்தான்.

கங்கராஜன் மன்னனைப் பார்த்தான்.

"நான் கூறிய வார்த்தைகளுக்கு பலனிருப்பதைப் பார்த்தாயா?" என்று கேட்டான் மன்னன்.

சிறிது நேரத்தில் பூரண கவசம் அணிந்தவனாய் ஐம்பது வீரர்கள் புடைசூழ படைக்களத்திற்கு வந்தான் நுளம்பவாடி மன்னன்.

ஹொய்சள மன்னனும் கங்கராஜனும் முன்னேறிச் சென்றார்கள் புரவிகளில்.

அருகில் இருவரும் வந்ததும் "நாம் பல சமயங்களில் சாளுக்கியர்களுக்காக அவர்கள் படையில் சேர்ந்து போரிட்டிருக்கிறோம். நினைவிருக்கிறதா?" என்று கேட்டான் நுளம்பவாடி மன்னன்.

"இருக்கிறது" என்றான் விட்டலராயன்.

"இப்போது எங்கள் மீது படையெடுக்க வேண்டிய அவசியம் உனக்கு ஏன் ஏற்பட்டது?" என்று கேட்டான் நுளம்பவாடி மன்னன்.

"உன்னால் ஊகிக்க முடியாத விஷயமல்ல அது"

"என்னால் ஊகிக்க முடிந்த விஷயம்தான். அதே சமயம் உன் மனத்தில் ஓடுவதுதான் என் மனத்திலும் ஓடுகிறது. அதை உன்னால் ஊகிக்க முடியவில்லையா விட்டலராயா?"

"நான் சாளுக்கிய ஆதிக்கத்திலிருந்து விடுபட முயற்சித்து விட்டேன்."

"என் எண்ணமும் அதுதான். ஆசையும் அதுதான்" என்று சொன்ன நுளம்பவாடி மன்னன் "என் யோசனை இதுதான். சாளுக்கியர்களிடமிருந்து விடுபட்டு சுயாட்சி பெறுவதுதான் என் விருப்பம். உன் விருப்பம். இதற்கிடையில் நாம் நமக்குள் சண்டையிட்டுக் கொள்ள வேண்டிய அவசியமென்ன? அதற்குப் பதிலாகச் சாளுக்கியர்களை எதிர்ப்பதில் நாம் இணைந்து பணியாற்றினால் என்ன?" என்று கேட்டான்.

"எங்கள் திட்டம் அதுவல்ல" என்று கங்கராஜன் பேச முற்பட்ட போது அவனை அடக்கிய விட்டலராயன் "உனது திட்டம் ஏற்றதுதான். நான் ஏற்றுக் கொள்கிறேன்" என்றான்.

"நமக்குள் சமரசம் வந்தது சந்தோஷமானது. அரண்மனைக்கு வா விட்டலராயா. எனது விருந்தை ஏற்றுக் கொள். களைப்பாக இருக்கும் உனது படைகளும் உணவருந்தட்டும்."

விட்டலராயன் சென்றான். அவனை நல்ல முறையில் உபசரித்து அவனுக்கும் உபதளபதிகளுக்கும் சிறப்பான விருந்தளித்தான் நுளம்பவாடி மன்னன். படைகளுக்கும் சோறு வடிக்கப்பட்டு கறிக்குழம்பும் பாயசமும் படைக்கப்பட்டது. எல்லோருமே பெருமகிழ்ச்சியடைந்தார்கள். கங்கராஜன் மட்டும் ஊருக்குள் வரவுமில்லை. விருந்தில் கலந்து கொள்ளவும் இல்லை.

விருந்து முடிந்த பிறகு நுளம்பவாடி மன்னனிடம் பேசிய விட்டலராயன் "மன்னா! நீயும் நானும் சாளுக்கியர்களுக்கு எதிராக அணி திரண்டதில் எனக்கு மகிழ்ச்சி. இந்த அணி இன்னும் அதிகமாக வேண்டும். பெரும் சக்தியாக மாற வேண்டும். அதுவரை நமது கூட்டு ரகசியமாகவே இருக்கட்டும். சாளுக்கியர்களை எப்போதும் ஆதரிப்பது போலவே வெளியில் காட்டிக் கொள்வோம். உள்ளே மூண்டுள்ள எரிமலையை அணைக்காமல் பார்த்துக் கொள்வோம். நேரம் வரும் போது எரிமலையைச் சீறச் செய்வோம். இப்போது நான் படைகளோடு விடை பெறுகிறோம். சரிதானே?" என்று கேட்டான்.

"உருவத்தில்தான் நாம் இருவராய் இருக்கிறோமே தவிர உள்ளத்தால் ஒருவராகத்தான் இருக்கிறோம். உங்கள் திட்டத்திற்கு

என் உடன்பாட்டை தெரிவித்துக் கொள்கிறேன். சென்று வாருங்கள்" என்றான் நுளம்பாடி மன்னன்.

அதையடுத்து விட்டலராயனும் அவனது படைகளும் புறப்பட்டன.

கங்கராஜன் எல்லாவற்றிலிருந்தும் ஒதுங்கி விட்டதைக் கண்ட மன்னன் "என்ன கங்கராஜா! வேலாபுரத்தில் என் எண்ணத்தோடு ஒன்றிப் போனவனாக இருந்த நீ நுளம்பவாடியில் ஏன் வேறுபட்டு நின்று விட்டாய்? நுளம்பவாடி மன்னன் தன்னையும் என்னையும் ஒருடல் ஈருயிர் என்று கருதுகிறான். நீயோ ஒருடல் ஒருயிராய் இதுவரை இருந்து விட்டு தற்போது வேறுபட்டு நிற்பது எதற்காக? மன்னனோடு எல்லா விஷயங்களிலும் ஒத்துப் போக வேண்டும் என்று மற்றவர்களுக்கு எந்தவிதக் கட்டாயமும் இல்லை. அதே சமயம் நாகரிகம் கருதாமல் வேறுபட்டு எண்ணுவதும் செயல்படுவதும் எப்படி நியாயமாகும்?" என்று கேட்டான்.

"மகாராஜா! நுளம்பவாடி மன்னனின் கருத்திற்கு நீங்கள் உடன்பட்டது உங்கள் விஷயமாகி விட்டது. எனக்கது பிடிக்க வில்லை. ஆகவேதான் விருந்திற்கு வரவில்லை" என்றான் கங்கராஜன்.

"நான் மட்டும் நுளம்பாடி மன்னனின் கருத்திற்கு உடன் பட்டு விட்டேன் என்று எப்படித் தீர்மானித்தாய்?"

"உங்கள் வாயாலேயே சம்மதித்தீர்கள். அவனோடு சென்று விருந்துண்டீர்கள். போரைக் கைவிட்டு விட்டீர்கள். இதற்கெல்லாம் என்ன அர்த்தம் மகாராஜா?"

"நமது நோக்கம் என்ன கங்கராஜா? சாளுக்கியரது ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு விடுதலையடைந்து சுயாட்சி அரசர்களாக உருவாக வேண்டும் என்பதுதான். முதலில் சுயாட்சி பெற்ற பிறகு அரசாட்சியை விரிவுபடுத்தி பேரரசாக உயரவேண்டும். அதற்காக எடுத்த எடுப்பிலேயே சாளுக்கியர்களுடன் மோதாமல் அவர்களது ஆதிக்கத்தில் உள்ள அரசுகளை வீழ்த்தி வெற்றி கொண்டால் சாளுக்கியப் பேரரசானது கிளைகளை இழந்த மரம் போலாகி விடும். அந்த நிலையில் அதை வீழ்த்துவது எளிது என்று முடிவு செய்து அதை நீயும் ஏற்று ஏற்காத பஞ்சப்பிரதானிகளையே விலகிச் செல்ல வழிவகுத்து நுளம்பவாடியை நோக்கிப் படையெடுத்தோம். அங்கே சென்ற பிறகு தான் நுளம்பவாடி மன்னனும் நமது நோக்கத்தில்தான் இருக்கிறான் என்பது தெரிந்தது. தெரிந்த பிறகு அவனும் நம்மோடு இணைய விரும்பும் போது போருக்கு இடமே

இல்லை. கங்கராஜா! அரசாங்கமானது கர்ண கொடூரமானது மட்டுமல்ல. கருணை தேவதையும் கூட. போர் தேவையான இடங்களில் போரிடுவதும் போருக்கு இடமில்லாத இடங்களில் சமாதானத்தை நாடுவதும் தான் சரியான உபாயங்களாக இருக்கும். நீ போரை மட்டும் விரும்புகிறாய்.''

''மகாராஜா! நான் அவ்வாறு நினைக்கவில்லை. சாளுக்கிய நாடு கிளைகளற்ற வெற்று மரமாகப் பலவீனப்பட வேண்டு மென்றால் அதை ஆதரிக்கும் நுளம்பவாடி முதலிய அரசுகளை நாம் தோல்வியுறச் செய்து நம் வசம் ஆக்க வேண்டும். அதற்கு மாறாக நீங்கள் ஒவ்வொரு சிற்றரசரோடும் சமாதானம் செய்து கொண்டு வந்தால் கிளைகள் அகலாது. மரமும் பலத்தை இழக்காது. சிற்றரசுகள் ஒவ்வொன்றும் உங்களைப் போலவே சுயாட்சி பெற நினைத்தால் நீங்கள் பேரரசை உருவாக்குவது எப்படி?'' என்று கேட்டான் கங்கராஜன்.

''நீ பேசுவது எனக்கு வியப்பாக இருக்கிறது கங்கராஜா. நுளம்பவாடியில் நாம் எதிர்பார்க்காத விதமாக உடன்பாடு வந்தது. அதனால் எல்லா இடங்களிலும் இது போன்றச் சமாதான உடன்பாடுகளைத்தான் விரும்புவேன் என்று எப்படி நினைக்கிறாய்? நுளம்பவாடியில் நான் சமாதானமாகப் போனதற்கு முக்கிய காரணம் அது பெரும்பகுதியை உட்கொண்ட சமவெளி. அதை நாம் வென்றாலும் நம் கட்டுப்பாட்டில் வைத்துக் கொள்வது சிரமம். வாயிலை மூடினால் புழக்கடை திறப்பது போல நாம் ஒருபுறம் வெற்றி பெற்றால் மறுபுறம் அதற்கு எதிர்ப்பு கிளம்பும். இங்கேயே நமது போராட்டம் நீடித்துக் கொண்டிருக்கும். நாம் முன்னேற முடியாது. நல்லவேளையாக நுளம்பவாடி மன்னன் சமாதானத்திற்கு முன் வந்ததால் குறைந்த பட்சம் அவன் நம்மை எதிர்க்காமலாவது இருப்பான் அல்லவா? நாம் பிற கிளைகள் வெட்டி பலம் பெற்று விட்டால் நுளம்பவாடி என்னும் கிளையை வெட்டுவது பெரிய காரியமாக இருக்காது புரிகிறதா?''

''புரிகிறது மகாராஜா. என்ன இருந்தாலும் நீங்கள் அரசர் அரசர் தான்! நான் திடீர் சேனாதிபதி. எனக்கு அறிவு போதாது.''

''அப்படியெல்லாம் பேசாதே கங்கராஜா. முயற்சியும் அநுபவமும்தான் உண்மையான அறிவைத் தரும். வெறும் கேள்வி ஞானங்களில் சந்தேகங்கள்தான் நிவர்த்தியாகும். ஒன்றைமட்டும் நினைவில் வைத்துக் கொள் என்னோடு உனக்கு கருத்து வேறுபாடு இருந்தால் அதைத் தெரிவிப்பது தவறில்லை. ஆனால் தனித்து நின்று இருந்த வேறுபாட்டை வெளிப்படுத்தும் அநாகரிகத்தை மட்டும்

செய்யாதே. விருந்தில் நீ கலந்து கொள்ளாதது தவறு" என்றான் மன்னன்.

"இனி அவ்வாறு நடக்காது மன்னவா" என்று கூறி இணக்கமான சூழ்நிலையை உண்டாக்கினான் கங்கராஜன்.

அதையடுத்து படை சற்றே தெற்கில் திரும்பி மேற்கே சென்றது. மலைக்காட்டுப் பயணமாக இருந்தாலும் அனைவரும் மிகவும் சிரமப்பட்டார்கள். ஓரிரு வீரர்களை வனவிலங்குகள் வேட்டையாடிச் சென்றன. எனவே அடர்ந்தக் காடுகளில் பறைகளைக் கொட்டியபடிச் சென்றன படைகள். நான்கு நாட்களுக்குள் அடைய வேண்டிய இடத்தை ஒரு வாரத்தில் அடைந்தது.

"கங்கராஜா! நாம் இருப்பது பங்காபுரி. இங்கே நாம் ரகசிய பாசறையை அமைப்போம். நமது அடுத்த இலக்கு கதம்பர்கள். அவர்கள் வனவாசியில் இருப்பது உனக்குத் தெரியும். அவர்களது நிலை குறித்துத் திறமையான ஒற்றர்கள் மூலம் தகவலறிய வேண்டும். சந்தேகமற உண்மை நிலை தெரிந்த பின்தான் படைகளை நகர்த்த வேண்டும்" என்றான் மன்னன்.

கங்கராஜனுக்குச் சற்று குழப்பமாக இருந்தது. தான் வந்திருக்கும் பங்காபுரிக்கும் நுளம்பவாடிக்கும் நடுவே சாளுக்கியர் ஆதிக்கத்தில் இருக்கும் ஊரான ஹலால்ஜியைத் தாக்காமல் மிகத் தொலைவில் மேற்கு மலைத் தொடர்களில் இருக்கும் கதம்பர் நாட்டை ஏன் தாக்க வேண்டும் என்று நினைத்த அவன் மன்னனைக் கேட்கவும் செய்தான்.

"கங்கராஜா! நமது முயற்சிகள் சாளுக்கியர்களுக்குத் தெரிந்து விட்டால் ஆரம்பத்திலேயே தடை வந்து விடும் என்பதால் அடுத்தடுத்த ஊர்களைத் தாக்காமல் எங்கெங்கோ இருக்கும் ஊர்களைத் தாக்குகிறோம். ஓரிடத்திலிருந்து ஓரிடத்திற்குச் செய்தி வருவதற்குள் நமக்கு வேலை முடிந்து விடும். சாளுக்கியத் தூதுவனை வேலாபுரத்திலேயே இருத்தி வைத்தது. இந்த அடிப்படையில்தான். தற்போது பங்காபுரியில் ரகசிய முகாம் அமைத்திருப்பதும் அதனால்தான். நாம் இங்கிருக்கும் போது கதம்பர் நாட்டை உளவறிவதோடு நம்மைப் பற்றிச் சாளுக்கியர்களுக்கு ஏதாவது தகவல் போயிருக்கிறதா என்பதை அறியவும் வேண்டும். இங்கிருந்து நமது ஒற்றர்கள் கதம்ப நாட்டுப் பாதையைக் கண்காணித்தபடி தகவல் கூற வேண்டும். நுளம்பவாடி நாட்டுப் பாதையைக் கண்காணித்தபடி தகவல் கூற வேண்டும். நமது தலைநகரான வேலாபுரம் மற்றும் துவார சமுத்திரம் ஆகிய நாடுகளுக்குச் செல்லும் பாதைகளையும்

கண்காணித்தபடி தகவல் கூற வேண்டும். ஒரு சிலரை சாளுக்கிய நாட்டிற்குச் செல்லும் பாதையிலும் உலவச் செய்யலாம். இந்தத் தகவல்களின் அடிப்படையில்தான் நமது நகர்வு இருக்கும். கங்கராஜா! நாமிருக்கும் பங்காபுரிக்கு அருகில் எதிரிகளின் ஒற்றர் நடமாட்டம் இருக்கும். அவர்களை வளைத்துப் பிடித்து வரவும் வீரர்களைப் பயன்படுத்து" என்றான் மன்னன்.

கங்கராஜன் தெளிந்தான். மன்னன் சொன்ன ஏற்பாடுகளைச் செய்தான்.

பத்து நாட்கள் கழிந்தன. சாளுக்கிய நாட்டிலிருந்து தகவல் எதுவும் வரவில்லை.

பிற பகுதிகளிலிருந்து தகவல்கள் வந்து கொண்டிருந்தன.

வேலாபுரத்திலிருந்து ராணி சாந்தலை ஒரு செய்தியை அனுப்பியிருந்தாள்.

அதைக் கண்டதும் வேலாபுரத்திற்கு ஓரிரு நாட்களுக்குச் சென்று வர விரும்பினான் மன்னன்.

கருடர்கள்* நூறு பேர்களுடன் புறப்பட்டான்.

ஒருவாரம் பயணம் செய்து வேலாபுரத்தை அடைந்தான்.

அங்கே அவன் கண்ட காட்சி மனத்தை உலுக்குவதாக இருந்தது.



---

* சோழ மன்னர்களுக்கு இருந்த வேளைக்காரப் படையைப் போல ஹொய்சள மன்னனுக்குப் பாதுகாப்புப் படையாக இருந்து அவனது உயிர்காக்கத் தங்களை அர்ப்பணித்துக் கொண்டவர்கள் கருடர்கள் எனப்பட்டனர்.



நாம் அறியாத, நம் வசப்படாத, நம் அறிவுக்கு எட்டாத பல விஷயங்களை நாம் நம்பாமல் இருக்கலாம். அதே சமயம் அவற்றை இல்லை என்று புறக்கணித்து விட முடியாது – மாந்தரீகர்



அரண்மனை கலவரத்தில் கலங்கிக் கொண்டிருந்தது.

என்ன என்ன என்று விசாரித்துக் கொண்டு சென்றான் மன்னன் விட்டலராயன்.

உள்ளே தர்பார் மண்டபத்தில் அவனது புதல்வி தர்மதேவி காளியாகியிருந்தாள். கத்திக் கொண்டிருந்தாள். அனைவரையும் நெருங்க விடாமல் கத்திக் கொண்டிருந்தாள். கையில் கிடைத்த பொருட்களைக் கண்டபடி வீசிக் கொண்டிருந்தாள். அழகு மயில் போல் இருக்கும் அவளது கோலம் அலங்கோலமாகி யிருந்தது. அவளது தாயும் ராணியுமான சாந்தலை அவளை அடக்க முயன்று தோற்றுக் கொண்டிருந்தாள். இளவரசனும் மன்னனின் மூத்த புதல்வனுமான நரசிம்மன் நீண்ட கழியொன்றை வைத்துக் கொண்டு தங்கை தர்மதேவியை மிரட்டிக் கொண்டிருந்தான். ஓரிருமுறை அவளை அடிக்கவும் செய்தான்.

எல்லாவற்றையும் கண்ட மன்னன் "நிறுத்துங்கள். எல்லோரும் தர்பார் மண்டபத்தை விட்டு வெளியேறுங்கள்" என்று உரக்கக் குரல் கொடுத்தான்.

அனைவரும் வெளியேறினார்கள்.

மண்டபத்தில் தர்மதேவி மட்டுமே இருந்தாள். தொடர்ந்து தனிமையில் கத்தினாள். மூச்சிறைத்தது. மயக்கமாகி விழுந்தாள்.

அவளை அந்தப்புரத்திற்குக் கொண்டு வரச் சொல்லிவிட்டு அரண்மனைக்குச் சென்ற மன்னன் ராணியிடம் கேட்டான். "மகளுக்கு எத்தனை நாட்களாக இந்த நிலை நீடிக்கிறது?"

"தாங்கள் நுளம்பவாடிக்குப் புறப்பட்டுப் போய் பதினைந்து நாட்கள் கழித்து திடீரென உறக்கத்தில் இருந்த தேவி கத்தத் தொடங்கினாள். கெட்ட கனவைக் கண்டிருப்பாள் என்று நினைத்து அவளுக்கு ஆறுதல் சொல்லி உறங்க வைத்தோம். மறுநாள் இரவிலும் அதுபோலவே கத்தினாள். அப்போதும் கெட்ட கனவு தான் என்று நினைத்துக் கொண்டோம்.

மூன்றாம் நாளும் கத்தினாள். நான்காம் நாளும் கத்தினாள். இரவு மட்டுமின்றிப் பகலிலும் கத்தினாள். அழுதாள். சிரித்தாள். கண்டபடி ஓடினாள். அடுக்குபவர்களைத் தாக்கினாள். உடுப்புகளைக் கிழித்துக் கொண்டாள். அலங்கோலமாக அரண்மனைப் பகுதிகளில் ஓடினாள். பலரும் சூழ்ந்து கொண்டு மடக்கினார்கள். அடக்க முயன்றவர்களை அடித்தாள். கடித்தாள். பிறகு ஒருவழியாக அவளைக் கட்டிப் பிடித்து கயிற்றால் கட்டி அந்தப்புரத்திற்குக் கொண்டு வந்தோம். வைத்தியர்களை அழைத்தோம். சிகிச்சைகள் நடக்கின்றன. ஆனாலும் கட்டை அவிழ்த்தால் அவள் ஓடிவிடுகிறாள். அதுதான் இன்று நடந்தது" என்றாள் ராணி.

"நரசிம்மன் எதற்கு வந்தான்? அவளை அடிப்பதற்கா? அவனை அழைத்தது யார்?" என்றான் மன்னன்."

"நான்தான் அழைத்தேன் பிரபு தாங்கள் இங்கே இல்லாததால்" என்றாள் ராணி.

"முதலில் அவனை துவாரசமுத்திரத்திற்கு அனுப்பு. அவன் இங்கிருந்து கொண்டு தர்மதேவியை அடித்துக் கொண்டிருந்தால் அவள் நிலைமை இன்னும் மோசமாகும்" என்று கூறிய மன்னன் சேவகர்களை அழைத்து "வைத்தியர்களை வரச் சொல்" என்றான்.

பிறகு அந்தப் புரத்திற்குச் சென்றான்.

கலைந்து போன கோலத்தைப் போல் கிடந்த தன் புதல்வியைப் பார்த்தான்.

கண்கள் கலங்கின. மறு நிமிடம் சிவந்தன. அவனது கோபம் வைத்தியர்கள் மீது திரும்பியது.

வைத்தியர்கள் வந்ததும் "நீங்களெல்லாம் என்ன வைத்தியம் செய்து கிழிக்கிறீர்கள்? வைத்தியம் செய்தும் இவள் எழுந்து ஓடுகிறாள் என்றால் நீங்கள் செய்ததற்கு வைத்தியம் என்றா பெயர்? ராஜகுமாரிக்கே இந்தநிலை என்றால் சாதாரணப் பிரஜைகளுக்கு என்ன நடக்கும்?" என்று சீறி விழுந்த மன்னன் "என் மகளுக்கு என்ன ஆயிற்று?" என்று கேட்டான்.

"மனநிலை பாதிப்புதான் மகாராஜா!"

"அவளுக்கு இங்கே ஒரு குறையும் இல்லை. மனநிலை எப்படி பாதிக்கும்?"

"மனநிலை பாதிப்பு என்பது விசித்திரமானது. அது எந்த நிலையிலும் வரும்?"

"தர்மதேவிக்கு எந்த நிலையில் பாதிப்பு வந்தது என்று கண்டு பிடித்தீர்களா?"

"அதற்குத் தான் முயன்று வருகிறோம்."

"இன்னும் எத்தனை நாளைக்கு முயல்வீர்கள்?"

"இதற்கு நாள் குறிக்க முடியாது மகாராஜா மெல்ல மெல்லத் தான் முயல வேண்டும்."

அப்போது ராணி குறுக்கிட்டு மன்னனின் காதில் ஏதோ சொன்னாள்.

"ஆம். அது தான் சரி" என்று சொன்ன மன்னன் வைத்தியர் களை கண்ணால் எரிப்பது போல் பார்த்தான்.

"நாளைக்கு எனக்கு மனநிலை பாதிக்கப்பட்டாலும் இது தான் நடக்குமா?" என்று கேட்டான்.

"மகாராஜா! கோபப்படாதீர்கள். மனநிலை பாதிப்பு என்பது நுட்பமானது. ஆழ்மனதில் ஏற்படும் மாற்றமே அதற்குக் காரணம். ஆழ்மனதில் நேர்ந்து விட்ட மாற்றத்தை அவர்களால் உணரவும் முடியாது. கூறவும் முடியாது. நாம் தான் ஆழ்மனதைக் கிளறி அதை வெளிக் கொணர்ந்து அதற்குச் சிகிச்சை செய்ய வேண்டும். ஆழ்மனதை அறிவதற்கு அவசரம் உதவாது. அவசரப்பட்டுக் கிளற நினைத்தால் மனச் சிதைவு அதிகமாகும். தற்போது அரசகுமாரி ஆக்ரோஷமான நிலையில் இருக்கிறார். தன்னை அறியாமல் வன்முறையில் இறங்குகிறார். அதற்காக அவரை அறையில் போட்டுச் சிறை வைத்தால் ஆக்ரோஷம் அதிகமாகி ஆழ்மனது மேலும் சேதமாகும். நம்வழி கொஞ்சம் அவர்வழி கொஞ்சம் என்று விட்டுப் பிடித்துத்தான் வழிக்குக் கொண்டு வரவேண்டும். ராஜகுமாரியைச் சுதந்திரமாக விட்டு கண்காணிப்பதுதான் உகந்தது. நாங்கள் மூலிகை மருந்தை உள்ளுக்குக் கொடுத்திருக்கிறோம். அது வேலை செய்து கொண்டிருக்கிறது. ராஜகுமாரியின் உக்கிரம் விரைவில் தணியும். அதற்குப் பிறகு அவரது ஆழ்மனத்தை அணுகுவது எளிது" என்றார் தலைமை வைத்தியர்.

மன்னனின் கோபம் தணிந்தாலும் அமைதி கிடைக்க வில்லை.

அரசகுமாரி தர்மதேவி அந்தப்புர வளாகத்திற்குள் சுதந்திரமாக உலவவும் அவளை இமை போல பாதுகாக்கவும் உரிய ஏற்பாடுகளைச் செய்தான்.

தனது மாளிகைக்கு ராணியோடு வந்தான்.

“இதை நான் சிறிதும் எதிர்பார்க்கவில்லை சாந்தலை. நான் படையெடுத்துச் செல்கிற சமயத்தில் தர்ம தேவிக்கு இப்படி நடந்திருப்பது என் கால்களைக் கட்டி இழுப்பது போல இருக்கிறது. சங்கடமாக இருக்கிறது. வெற்றியை ஈட்ட படை நடத்துபவனுக்கு வெற்றியைத் தவிர பிற நினைப்புகள் வரலாகாது. அப்படி வேறு நினைவுகள் வந்தால் வெற்றி மீதான கவனமும் சிதறும். வெற்றியும் சிதறும். எனக்கு மகள் மீதான கவலையிருந்தால் போர் முனையில் கவனம் சிதறுவேன். அது மிகவும் ஆபத்தானது” என்றான் மன்னன் வருத்தத்துடன்.

“வருந்தாதீர்கள் பிரபு. வைத்தியர்கள் ஓரளவிற்குத்தான் நமது அருமைப் புதல்விக்குச் சிகிச்சையைச் செய்ய முடியும். இந்த விஷயத்தில் நமக்குத் தகுந்தவர் சிரவணபெலகுலாவில் இருக்கும் நம் சமண ஆச்சார்யர் ஜெயதேவர்தான். அவர் வந்தால் மகளுக்கு நன்னிலைத் திரும்பி விடும். அவரை வருகை தரும்படி தகவல் அனுப்பியிருக்கிறேன். அநேகமாக நாளை வந்து வடுவார்” என்றாள் ராணி.

“தந்தையே! இதெல்லாம் சரியாக வராது. தர்ம தேவியை மரத்தில் கட்டி வைத்து சாட்டையை எடுத்து விளாசினால் சரியாகி விடும். அவளுக்கு எதுவுமில்லை. வேஷம் போடுகிறாள். நம்மை யெல்லாம் ஏமாற்றுகிறாள்” என்றான் இளவரசன் நரசிம்மன்.

ஏதோ பேச வந்த மன்னன் வார்த்தைகளை அடக்கிக் கொண்டு “ராணி! உன் மகனை துவாரசமுத்திரத்திற்கு அனுப்பு. அவனங்கு இல்லாவிட்டால் எதிரிகளுக்கு பயம் விட்டுவிடும். தர்மதேவியை நீ செய்த தர்மம் காக்கும். உன் மகன் நாட்டைக் காக்கட்டும்” என்றான்.

நரசிம்மன் சிறிது தயங்கிவிட்டு “தந்தையே! பத்மினி என்று ஓர் இளம் பெண். மிகவும் அழகாக இருக்கிறாள். அவளை நான் காரியக் கணிகையாகவும் பாவை விளக்காகவும் வைத்துக் கொள்ளவா?” என்று கேட்டான்.

மன்னன் ராணியைப் பார்த்தான்.

“என்ன லட்சணத்தில் இருக்கிறான் பார் உன் மகன்? ஒரு தந்தையிடம் மகன் கேட்கக் கூடிய கேள்வியா இது?” என்று கண்களாலேயே கேட்டு விட்டு மகனைப் பார்த்து “ஆகா! தாராளமாக. பத்மினி மட்டுமல்ல. பத்தாயிரம் பெண்களையும் வைத்துக் கொள்” என்றான் வெறுப்புடன்.

“நமக்கென்ன வந்தது ராணி? மகன் இப்படி என்றால் மகள் அப்படி? இதெல்லாம் என்ன?” என்றான், மகன் அகன்றவுடன்.

“எல்லாம் ஜெயதேவர் வந்தால் சரியாகிவிடும். அவர் வந்தால் ஜெயம் வந்தது போல்” என்றாள் ராணி.

“மகள் விஷயத்தில் நீ வேறு மாதிரி நினைக்கிறாயா ராணி?” என்று கேட்டான் மன்னன்.

“ஆம் பிரபு. அவளுக்கு மனநிலை கெடுவதற்கு காரணம் இல்லை. இது வேறு மாதிரி. அதற்கு ஆசார்யர் தான் உகந்தவர்” என்றாள் ராணி.

மறுநாள் சமண மத ஆச்சார்யரான ஜெயதேவர் வரவில்லை. மாறாக சிரவணபெலகுலாவின் பிரதானத் தலைவர் நீலகேசி தான் வந்தார்.

“ஆச்சார்யார் காஞ்சிக்கு விஜயம் செய்திருக்கிறார். தமிழகத்தில் உள்ள திரமிள சமணச் சங்கத்தின் மாநாடு காஞ்சியில் உள்ள திருப்பருத்திக் குன்றத்தில் நடைபெறுகிறது. அதையடுத்து திருமலை திருப்பாதிரிபுரம், திருப்பரங்குன்றம், கழுகுமலை ஆகிய சமணத் தலங்களில் நடக்கும் நால்வகை சமணச் சங்கங்களின் முதலாவது மாநாடு நடைபெறுவதால் அங்கெல்லாம் செல்லும் பொருட்டு பயணத்தை தொடங்கி விட்டார். அவருக்கு ஒரு மனத்தாங்கல்” என்றார் நீலகேசி.

“அவருக்கு மனத்தாங்கலா? நமது ஆச்சார்யருக்கு மனத் தாங்கல் என்றால் அது எனக்குமல்லவா? அவரது கவலைதான் என்ன?” என்று கேட்டான் மன்னன்.

“தாங்கள் படையெடுப்பில் ஈடுபடுவது அவருக்கு அறவே பிடிக்கவில்லை. சமணநாடாகிய கர்நாடகம் அஹிம்சையைக் கைவிட்டு விட்டு இம்சையை விளைவிக்கும் போரில் இறங்குவது சமண மதத்திற்குக் கேடு என்பது அவரது அபிப்ராயம். முடிந்தால் போரைக் கைவிடும்படி தங்களிடம் என்னைச் சொல்லச் சொன்னார்” என்றார் நீலகேசி.

“அடிகளே! மதமும் சரி அரசும் சரி மக்களுக்கு நலம் விளை விப்பதற்காகவே இயங்குபவை. அதே சமயம் மதம் அரசியலில் தலையிடுவதோ அரசியல் மதங்களில் தலையிடுவதோ உகந்த விஷயமல்ல. அது மக்களுக்கு நலம் பயக்காது. சமண மதம் சிறந்த மதம். சிறப்பான கொள்கைகளைக் கொண்ட மதம். அது அதன் பாதையில் முன்னேறி செழிக்கட்டும். அஹிம்சை மற்றும் சமத்துவத்தைப் போதிக்கும் சமணம் நிலவும் பிரதேசங்களில் போர்களும் உலவுகின்றன. போர் நடவடிக்கையானது அஹிம்சையல்ல. அது ஒரு தர்மம். நாட்டை ஆள்பவனுக்கு அந்த ஆயுதமும் தேவை. நான் போரைக் கைவிட்டு விட்டால் மற்ற

ராஜாக்கள் பேசாமல் இருந்து விடுவார்களா? நம்மீது போர் தொடுப்பார்கள். அதில் நான் மட்டுமல்ல. நம் சமணமும் அழியும். ஆகவே எனது போர் நடவடிக்கை சமணத்தைக் காப்பாற்றுமே தவிர சமணம் நாட்டைக் காக்காது" என்றான் மன்னன்.

"மகாராஜா! ஆசார்யரைத் தவறாக எண்ண வேண்டாம். அவர் சமாதான விரும்பி என்பதால் அவ்வாறு பேசினாரே தவிர தன்னிலை என்ன மகாராஜாவின் நிலை என்ன என்பது அவருக்குத் தெள்ளத் தெளிவாகத் தெரியும். வித்தியாசங்களை அவர் நன்றாகவே உணர்ந்திருக்கிறார். பல சமயங்களில் என்னிடம் பேசும் போது துறவிகளுக்கு உபதேசம் செய்வது எளிதானது. ஆனால் மன்னர்களுக்கு ஆட்சியை நடத்துவது கடினமானது என்று சொல்லுவார். துறப்பது எளிது. துறக்காமல் சாதிப்பது கஷ்டமானது என்பார். தங்களை ராஜத்துறவி என்றே எங்களிடம் கூறுவார். அவர் ஆதங்கம் அது. அவ்வளவு தான். போர்க் கொடுமைகளைப் பற்றிக் கேட்கவோ காணவோ கூடாது என்று தான் பயணம் மேற்கொண்டு விட்டாரோ என்னவோ?" என்றார் நீலகேசி.

"ஆச்சார்யர் செல்லும் ஸ்தலங்கள் சமாதானத் தலங்களாகவோ இருக்கின்றன? அங்கே இல்லையா போர்? அங்கே பாலாறா ஓடுகிறது? ரத்த ஆறுதானே?" என்று வினவிய மன்னன் "நீங்களாவது வந்தீர்களே! வாருங்கள். என் புதல்வியைப் பாருங்கள்" என்றான்.

மகளிருந்த இடத்திற்குச் சென்றபோது அவள் மயக்கநிலையில் இருந்தாள்.

"மகாராஜா! நானிங்கு வருவதற்கு முன்பே தங்கள் திருமகளாரைப் பற்றி அனைத்து விவரங்களையும் ஓலையில் தெரிவித்திருந்தார் ராணியார். அப்போதே தெரிந்து விட்டது. புதல்விக்கு ஏற்பட்டிருப்பது மனநிலை பாதிப்பு அல்ல. இது வேறு. பார்த்ததுமே தெரிகிறது. எதற்கும் உறுதி செய்து கொள்ளலாம் என்று என் கையோடு மாந்தரீகரையும் அழைத்து வந்திருக்கிறேன். அவர் மலையாள நாட்டு மாந்தரீகர். மாந்தரீகத்திலும் தாந்தரீகத்திலும் கை தேர்ந்தவர். இதுவரையில் இருபது லட்சம் பேய் பிசாச கணங்களை மனித தேகங்களில் கண்டறிந்தவர்" என்று சொல்லி வெளியே இருந்த மாந்தரீகரை வரச்சொன்னார் நீலகேசி.

மாந்தரீகரின் தோற்றம் பயங்கரமாக இருந்தது. கறுப்பாக இருந்தார். மலையாள நாட்டவராகத் தோன்றவில்லை; மலைக் காட்டுப் பிசாசு போல கோரமாக இருந்தார்.

"இவரது சகவாசம் பிசாச கணங்களுடனேயே கழிந்து வருவதால் தோற்றம் பிசாசு போல் மாறிவிட்டது. கோலத்தைக் கண்டு யாரும் அஞ்ச வேண்டாம். தொழில் நேர்த்தியைக் கவனியுங்கள்" என்றார் நீலகேசி.

மாந்தரீகரோ தர்ம தேவியைத் தவிர யாரையும் பார்க்க வில்லை. யார் பேச்சையும் செவி கொடுத்துக் கேட்கவில்லை.

அரசகுமாரியை அவர் உற்று உற்றுப் பார்த்த விதமானது கோரமான மிருகமொன்று பசுங்கிளியைப் பார்ப்பது போல இருந்தது.

அவர் தன்கையில் இருந்த எலும்புகளையும் மண்டை ஓட்டையும் அரச குமாரியின் கால் பக்கத்தில் வைத்துவிட்டு ஒரு எலும்பை எடுத்து அவளது உள்ளங்காலில் கீறினாள்.

அரசகுமாரி ஏதோ முனகினாள். என்னவென்று தெரியவில்லை.

மண்டையோட்டைக் கையில் எடுத்து அதைத் தட்டிய படி ஏதோ பாடினார். கொஞ்சம் ஆடினார். முணுமுணுத்துக் கொண்டிருந்த அரசகுமாரியிடம் ஏதோ பேசினார். மொழி புரியவில்லை. கேள்விப்பட்ட மொழியாகவும் தெரியவில்லை.

"இவர் என்ன பேசுகிறார்? என்ன மொழியில் பேசுகிறார்?" என்று வினவினான் மன்னன்.

"பேய் மொழி மகாராஜா. பேய்களுக்கென்றும் துர் ஆவிகளுக்கென்றும் மொழிகள் உள்ளன. அது மாந்தரீகர் களுக்கு மட்டும் தான் தெரியும்" என்றார் நீலகேசி.

"அது இருக்கட்டும். அந்த மொழியில் யாரோடு பேசுகிறார்?"

"பிசாச கணங்களோடு தான் பேசுகிறார் மகாராஜா. தங்கள் திருமகளைப் பிடித்திருக்கும் பேய்களோடுதான் பேசிக் கொண்டிருக்கிறார்."

"அப்படியென்றால் என் அருமைப் புதல்வியைப் பேய்களா பிடித்திருக்கின்றன?"

"மகாராணி அவ்விதம் சந்தேகப் பட்டார். நானும் அவ்வாறே சந்தேகப் பட்டேன். மாந்தரீகரும் அதைத்தான் சொல்லப் போகிறார்."

மன்னனுக்கு என்னவோ போலிருந்தது.

"தாமரைச் செல்விபோல் - தங்கப் பதுமையைப் போல் - தெய்வத் திருமகளைப் போல் - மாசுமறுவற்றுத் திகழ்ந்து வந்த மகள் தர்ம தேவியையா பேய்கள் பிடித்துள்ளன? அது எப்படி?

தூய்மையின் உறைவிடம் - தைரியத்தின் இருப்பிடம் - தெளிவின் பிறப்பிடமான அவளிடம் பேய் பிசாசு நெருங்குவது எப்படிச் சாத்தியம்? தாயைப் போல சமணயட்சிணியான வாசந்திகா தேவி ஆலயத்தையே வாசஸ்தலமாகக் கொண்டு வரும் வசந்த காலத்து மலரைப் போன்ற வாடாத மலராயும் - மணம் வீசும் மலராயும் - மலர்களுக்கெல்லாம் மாட்சியைத் தரக் கூடிய - மருட்சியை தரக் கூடிய - மலர்க்கொத்து மங்கையைப் போய் பேய் பிசாசங்கள் பிடிக்குமானால் வேறு யாருக்குத்தான் பிடிக்காது?" என்றெல்லாம் நினைத்தான் மன்னன்.

தனக்கு வரும் துன்பத்தை விட தனக்கு வேண்டியவர்களுக்கு வரும் துன்பமும் நோயும் தாங்க முடியாத இருக்கும் நிலை சிலருக்கு வருவதுண்டு. தன் மகளின் நோயை நினைத்த போது மன்னனின் நிலை அப்படித்தான் இருந்தது.

இதற்கிடையில் பேச்சை நிறுத்தி, பாட்டை நிறுத்தி, ஆட்டத்தை நிறுத்தி, எலும்புகளையும் மண்டையோட்டையும் பையில் போட்டுக் கொண்டு "இது கொடுமை. இப்படி நேர்ந்திருக்கக் கூடாது மகாராஜா" என்றார் மாந்தரீகர்.

கெட்ட ஆவி கோர உருவம் தாங்கி வந்து பேசுவது போல் இருந்தது அவரது பேச்சு.

"என்ன சொல்கிறீர்கள்? விளக்கமாகச் சொல்லுங்கள்" என்றார் நீலகேசி.

"அடிகளே! இங்கே வேலாபுரத்தில் மாந்தரீகர்கள் யாராவது இருந்தால் அவர்களை வரச் சொல்லி அரச குமாரியை ஆராயச் சொல்லுங்கள். நான் கணித்ததைத்தான் அவர்கள் கணிக்கிறார்களா என்று பார்ப்போம்" என்றார் மாந்தரீகர்.

"தேவைப்படும் போது அதைப் பார்த்துக் கொள்ளலாம். இப்போது நீங்கள் கணித்ததைச் சொல்லுங்கள்" என்றார் நீலகேசி.

மாந்தரீகர் மன்னனைப் பார்த்து "மகாராஜா! தங்கள் மகள் விஷயம் சிக்கலாக இருக்கிறது. அவரைப் பிடித்து ஆட்டுவது ஒரு பேயாக இருந்தால் மிரட்டி விரட்டலாம். அடித்து விரட்டலாம். ரத்தத்தைக் கிளறி விட்டு வெளியேற்றலாம். ஆனால் அரச குமாரியின் உடலில் ஒன்றுக்கு மேற்பட்ட பேய்கள் குடி கொண்டுள்ளன. அவை அனைத்தும் அரிய வகையைச் சேர்ந்த கொடுமையான பேய்கள். ஒன்றை ஒன்று பிணைந்துக் கொண்டிருப்பதால் ஒன்றை வெளியேற்ற இன்னொன்று தடையாக இருக்கின்றன. ஒட்டு மொத்தமாக வெளியேற்ற வேண்டும். மிகவும் சிரமமான பணி" என்றார்.

“நீங்கள் கூறுவதை நான் நம்பவில்லை. இப்படியொரு பேய் விவகாரத்தை நான் கேள்விப்பட்டதில்லையே” என்றான் மன்னன்.

“மகாராஜா! நாம் அறியாத, நம் வசப்படாத, நம் அறிவுக்கு எட்டாத பல விஷயங்கள் நம்பாமல் இருக்கலாம். அதே சமயம் அவற்றை இல்லை என்று புறக்கணித்துவிட முடியாது. இதற்குத்தான் தொடக்கத்திலேயே சொன்னேன். இந்த ஊரைச் சேர்ந்த மாந்தரீகர்களை அழைத்து வந்து பார்க்கச் சொல்லுங்கள். எனக்குத் தெரிந்து இங்கேயே மகாமாந்தரீகர் ஒருவர் இருக்கிறார். மாந்தரீகா என்பது அவரது பெயர். அவரை வரவழைத்து விசாரியுங்கள்” என்றார் மாந்தரீகர்.

“அது இருக்கட்டும். உங்களால் என் மகளின் குறைகளைப் போக்கி நிவர்த்தி செய்ய முடியுமா? முடியாதா?” என்று கேட்டான் மன்னன்.

“மாந்தரீகர்களால் முடியாதது எதுவுமில்லை. தங்கள் மகளைக் குணப்படுத்த என்னால் முடியும். நிச்சயமாக முடியும். ஆனால் சற்று தாமதமாகும்.”

“தாமதம் என்றால் எவ்வளவு நாள்?”

“ஓரிரண்டு மாதங்கள் ஆகலாம். முதலில் மந்திரக் கட்டைப் போட்டால் பிசாச கணங்களின் வீரியம் குறையும். மேன் மேலும் இந்த உடலில் பேய் வாசங்கள் வராது.”

“மந்திரக் கட்டை எப்போது போடுவீர்கள்?”

“நாளை மறுநாள் அமாவாசை. அதுவே உகந்த தினம்” என்று சொன்ன மாந்தரீகன் “தற்போது நிலைமை சரியில்லை” என்றார்.

“எதற்கு நிலைமை சரியில்லை?”

“நம் நாட்டிற்குத் தான்.”

“வேலாபுரத்திற்கா?”

“ஆம். மகாராஜா?”

“என்ன ஆயிற்று நிலைமைக்கு?”

சொன்னார் மாந்தரீகர்.

மன்னனின் புருவங்கள் குறுகின.

ராணி அதிர்ந்தார்.





ஒரு விஷயம் உண்மையா அல்லது வதந்தியா என்பதைச் சொற்கள் நிரூபிக்கத் தவறலாம். நடப்புக்கள் அவ்வாறு தவறாது – தூதன் நரலோகன்




"மகாராஜா! தற்சமயம் கர்நாடகப் பகுதிக்கு சிவப்புத் தலையைக் கொண்ட பேய்ப் பறவைகள் சில பிரவேசித்திருக்கின்றன. நானிங்கே வந்த போது வேலாபுரத்தின் துவஜஸ்தம்பத்தில் ஒரு பேய்ப் பறவை அமர்ந்திருந்ததைப் பார்த்தேன். அவை அரிய வகையைச் சேர்ந்த அபசகுனப் பறவைகள். தமிழகத்தில் கொல்லி மலைப் பகுதியில் மட்டுமே காணப்படும் அவற்றின் மொத்த எண்ணிக்கையே ஐம்பது தான் இருக்கும். சாதாரணமாக அவைக் காட்டுப் பகுதியில் வருவதில்லை. வந்தால் எந்தப் பகுதிக்கு வருகிறதோ அந்தப் பகுதிக்கு கெட்டது வரப் போகிறது என்று அர்த்தம்" என்றார் மாந்தரீகர்.

அவர் கூறியதைக் கேட்டு மன்னனின் புருவங்கள் சுருங்கின.

"நீங்கள் சொல்வது ஆந்தைகளைத் தானே? அவை தான் எங்கும் காணப்படுகின்றனவே?" என்று கேட்டான்.

"மகாராஜா! நீங்கள் கூறுவது சாம்பல் நிறத்தில் இருக்கும் சாதாரண ஆந்தைகள். அவை எங்கும் இருக்கின்றன. எங்கும் இருக்கும் பறவைகளால் எப்போதும் தொல்லையில்லை. நான் கூறுவது சிவந்தத் தலையைக் கொண்ட ஆந்தைகள். இவற்றை அபசகுனப் பறவைகள் என்றும் அழிவுப் பறவைகள் என்றும் சொல்வார்கள். இது நகர்ப் பகுதியில் எங்கு காணப்படுகிறதோ அங்குள்ள மக்களுக்கோ அல்லது அரச வம்சத்தினருக்கோ கேடும் வரும் என்று நம்பிக்கை" என்றார் மாந்தரீகர்.

"எந்த நாட்டு நம்பிக்கை இது? தமிழ் நாட்டவர் நம்பிக்கையா?"

"மக்களின் பொதுவான நம்பிக்கை மகாராஜா. அது எல்லா [illegible] வருக்கும் பொருந்தும். நம்மால் எல்லா ஆபத்துக் [illegible] உணர்ந்து விட முடியாது என்பதால் இயற்கையானது [illegible] த்துகளை மக்களுக்கு குறிப்பால் உணர்த்துகிறது. வால் [illegible] தோன்றினால் அரச வம்சத்திற்கு ஆபத்து என்பார்கள். [illegible] வருவதற்கு முன்னால் ஆழ்ந்த அமைதி உண்டாகும்.

வானவில் தோன்றினால் அது மழை வருவதற்கு அறிகுறி என்று சொல்கிறார்கள். அப்படிப்பட்ட நம்பிக்கை களில் ஒன்று தான் இந்தப் பேய்ப்பறவையின் வரவு. தங்கள் புதல்வியாரின் திடீர் நிலைகுலைவிற்கு இப்பறவையின் வரவு காரணமாக இருக்கலாம்" என்றார் மாந்தரீகர்.

"பறவையை விடுங்கள் என் மகளுக்கு இந்தநிலை எப்படி உண்டாயிற்று?"

"மகாராஜா! நான் பைசாச மொழியில் அவரிடம் குடி கொண்டுள்ள பேய்களோடு பேசினேன். அவற்றோடு பேசினால் அவை பிடித்ததற்கான காரணத்தை அறிய முடியாது அவை சொல்லவும் சொல்லாது. அக் காரணத்தை உங்கள் புதல்வியிடம் பேசித்தான் அறியமுடியும்."

"அவள் உடலில் பேய்க்கணங்கள் குடிகொண்டிருக்கும் போது அவளிடம் எப்படிப் பேசமுடியும்?"

"பேய்களை ஒரு சில மந்திரத்தாலும் மாந்தரீகத்தாலும் கட்டிப் போட முடியும். அப்படிக் கட்டுப் போடும் போது புதல்வியார் இயல்பு நிலையில் இருப்பார். அப்போது பேச முடியும்."

மன்னன் நீலகேசியைப் பார்த்து "நீங்கள் என்ன சொல்கிறீர்கள் அடிகளே?" என்று கேட்டான்.

அப்போது அந்தப் புரத்தில் இருந்த கண்டாமணி அடித்தது.

"போய் என்னவென்று விசாரித்து விட்டுவா" என்று பணிப் பெண்ணை அனுப்பினான் மன்னன்.

அவள் போனாள். வந்தாள்.

"மகாராஜா! தங்களைச் சந்திக்கச் சாளுக்கிய நாட்டிலிருந்து தூதர் ஒருவர் வந்திருக்கிறாராம். உடனே சந்திக்க வேண்டுமாம்" என்றாள்.

"அடிகளே! நீங்களும் இவரும் நான் திரும்பிவரும் வரை இங்கேயே இருங்கள். ராணி! நீயும் இங்கேயே இரு. இவர்களுக்கு ஓய்வு தேவைப்பட்டால் அந்தப்புர வளாகத்தில் இருக்கும் தாபனத்தில் தங்கச் செய்து உபசரிக்கச் சொல்" என்று கூறிவிட்டு அரண்மனைக்குச் சென்றான் மன்னன்.

அங்கே சாளுக்கியத் தூதன் பரிவாரங்களோடு காத்திருந்தான்.

மன்னன் வந்ததும் "நான் தான் நரலோகன். சாளுக்கிய நாட்டுத் தூதன்" என்றான் தூதன்.

"உள்ளே வாருங்கள்" என்று அவனை அழைத்துச் சென்றான் மன்னன்.

“இவர்களும் என்னோடு தான் இருப்பார்கள்” என்றான் தூதன்.

“இருக்கட்டுமே! எல்லோருமே வரலாம்” என்று சொன்ன மன்னன் எல்லோரையும் உள்ளே அழைத்துச் சென்று அமர வைத்து விட்டு “சொல்லுங்கள்” என்றான்.

“சொல்ல வேண்டியது நானல்ல. நீங்கள்தான்” என்றான் தூதன் நரலோகன்.

“என்ன சொல்லவேண்டும்? நீங்கள் கேட்டால் தானே நான் பதில் சொல்ல முடியும்?”

“ஒரு மாதத்திற்கு முன்னால் கல்யாண புரத்திலிருந்து ஒரு தூதர் அனுப்பப்பட்டார். அவர் எங்கே?”

“இதற்கு நான் எப்படி பதில் சொல்ல முடியும்?”

“இங்கே வந்த தூதர் திரும்பவில்லை என்றால் உங்களைத் தானே கேட்க முடியும்?”

“தூதரே வராத போது அவர் திரும்பாதது பற்றி நாங்கள் என்ன கூறமுடியும்?”

“என்ன? தூதர் இங்கே வரவில்லையா? வியப்பாக இருக்கிறது?”

“எனக்கும்தான். தூதரை அனுப்பியிருந்தால் இங்கே தானே வந்திருப்பார்? என்ன ஆயிற்று அவருக்கு?”

“நான் கேட்பதும் அதுதான்.”

“அதற்கு முதலிலேயே பதிலைச் சொல்லி விட்டேன். வராதவரைப் பற்றிக் கேட்டால் பதில் வராது. நீங்கள் விசாரிக்க வேண்டிய இடம் இதுவல்ல.”

“இருபது வீரர்களுடன் வந்தவர் எப்படி மாயமாக மறைய முடியும்?”

“முடியாது. நீங்கள் இப்போது இருபது பேர்களுடன் வந்திருக்கிறீர்களே! மாயமாக மறையவில்லையே!”

தூதன் சற்றே குழம்பினான்.

“அது பற்றிப் பிறகு பேசுவோம். நான் வந்தது பற்றிப் பேசலாமா?”

“ஆகா”

“சாளுக்கிய சக்கிரவர்த்தி உங்களை கல்யாண புரத்திற்கு வரச் சொல்லுகிறார்.”

“சரி”

"எப்போது வருகிறீர்கள்?"

"விரைவிலேயே வருகிறேன்."

"என்னோடு வரும்படி உத்தரவு"

"உங்களோடு வரமுடியாது. இங்கே என் பொறுப்புகளை நிறைவேற்றி விட்டுத்தான் சாளுக்கியத் தலைநகருக்கு வரமுடியும்."

தூதன் சற்று யோசித்து விட்டுக் கேட்டான்.

"சக்கிரவர்த்தி உங்களை எதற்காக அழைக்கிறார் தெரியுமா?"

"தெரியாது?"

"அவருக்கு உங்கள் மீது சந்தேகம்?"

"எதற்காகச் சந்தேகம்?"

"நீங்கள் விடுதலைப் போர் செய்ய முடிவெடுத்திருக் கிறீர்களாம்."

"அது வதந்தி?"

"உண்மையாகவும் இருக்கலாம். ஏனென்றால் சக்கிர வர்த்திக்குத் தகவல் அனுப்பியது ஒற்றனல்ல நுளம்பவாடி அரசர்."

மன்னன் சற்றே அதிர்ச்சியடைந்தாலும் அதைக் காட்டிக் கொள்ளாமல் "தகவல் யார் அனுப்பினால் என்ன? வதந்தி வதந்திதான். உண்மை உண்மை தான். சம்பந்தப்பட்ட நான் சொல்வதை விட்டுவிட்டு மற்றவர்களை சொல்வதை நம்ப வேண்டாம் என்று சக்கிரவர்த்தியிடம் சொல்லுங்கள்" என்றான்.

"விட்டலராயரே! ஒரு விஷயம் உண்மையா அல்லது வதந்தியா என்பதைச் சொற்கள் நிரூபிக்கத் தவறலாம். நடப்புக்கள் அவ்வாறு தவறாது. உங்கள் மீதான குற்றச் சாட்டிற்கான சாட்சிகள் கண் முன்னே இருக்கும் போது அதை நம்பாமல் இருக்க முடியுமா? வேலாபுரம் எங்கும் புதிய கொடிகள் பறக்கின்றன. வேலாபுரத்தைச் சுற்றிப் பாதுகாப்புகள் அதிகரிக்கப்பட்டிருக்கின்றன. பாதுகாப்பு செய்யும் வீரர்கள் புதிய கொடிகளை ஏந்தியிருக்கிறார்கள். ஊரெங்கும் புதிய நாணயங்கள் புழங்குகின்றன. வராகனை காணோம். வராகக் கொடிகளையும் காணோம். இவையெல்லாம் வதந்தியை வலியுறுத்துகின்றன என்று சொல்கிறீர்களா? அது மட்டுமல்ல விட்டலராயரே?"

"வேறென்ன?" என்று கேட்டான் விட்டலராயன் இறுக்கமான முகத்துடன்.

"சாளுக்கியரை எதிர்க்க நீங்கள் கூட்டணி அமைக்கிறீர்களாம். கூட்டணியில் சேருவதற்காக நுளம்பவாடி அரசனை

அணுகியிருக்கிறீர்கள். அவர் உங்கள் கூட்டணியில் சேரவோ சாளுக்கியர்களை எதிர்க்கவோ தயாராக இல்லை. அதை உங்களிடமே சொல்லியிருக்கிறார். நீ கூட்டு சேராவிட்டால் என்ன? என்னோடு கூட்டு சேர ஒரு கூட்டமே இருக்கிறது என்று சொல்லிவிட்டு நீங்கள் வந்திருக்கிறீர்கள். இதெல்லாம் உங்கள் மீதான குற்றச்சாட்டுகளை நிரூபிக்க வில்லையா?"

நுளம்பவாடி அரசன் துரோகம் செய்து விட்டதை உணர்ந்து உள்ளுக்குள் கொதித்த மன்னன் அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் லேசாகச் சிரித்தான்.

"எதற்காகச் சிரிக்கிறீர்கள்?" என்று கேட்டான் தூதன்.

"நீங்கள் சொல்வது எல்லாமே உண்மை என்று நீங்கள் கருதினால் அவை எல்லாம் பொய் என்று சொல்ல எனக்கும் உரிமையுண்டு தூதரே! உண்மை என்பது பொய் போலவும் பொய் என்பது உண்மை போலவும் மருட்டுகிற சந்தர்ப்பங்கள் எல்லோருடைய வாழ்க்கையிலும் வரும். இதில் பொய்யானது கவர்ச்சிகரமாகவும் உண்மையானது இயற்கையாகவும் இருப்பதால் பெரும்பாலானவர்கள் பொய்யின் பக்கமே சாய்ந்து விடுகிறார்கள். அதுதான் இங்கே நடக்கிறது. நான் சாளுக்கியர்களிடமிருந்து விடுதலை பெற வேண்டுமென்றால் அதற்கு கூட்டணி எதற்கு அமைக்க வேண்டும்? கூட்டணி என்பது தற்காலிக ஒற்றுமையே தவிர நிரந்தர அமைப்பல்ல. மாறுபட்டவர்கள் எதிரியை வீழ்த்துவதில் மட்டுமே ஒத்துப் போகிறார்களே தவிர தங்கள் கொள்கைகளை விட்டுக் கொடுக்க மாட்டார்கள். எதிரியை வீழ்த்த கூட்டணி அமைத்தவர்கள் காரியம் முடிந்ததும் கழன்று விடுவார்கள். அதுவும் நுளம்பவாடி அரசனைப் போன்றவர்களை நம்பி இந்த மாதிரி முயற்சியில் இறங்கும் அளவிற்கு என் அறிவு முனை மழுங்கிப் போய் விடவில்லை. அதோடு தூதரே! நாங்கள் பரம்பரை பரம்பரையாகச் சாளுக்கியர்களின் சேவையில் அர்ப்பணித்துக் கொண்டவர்கள். அவர்களிடமிருந்து சுயாட்சியைப் பெற எங்களுக்கு உரிமை உண்டு. அப்படியொரு ஆசை எங்களுக்கு வருமானால் குறுக்கு வழிகளோ கிறுக்கு வழிகளோ தேவையில்லை. சக்கிரவர்த்திகளிடமே கேட்போம். பெறுவோம். அதற்கு எங்களுக்கு அருகதை இருக்கிறது. ஆகவே வதந்திகளை நம்பி எங்கள் மீது அபாண்டமான பழியைப் போட வேண்டாம் என்று சக்கரவர்த்தியிடம் சொல்லுங்கள்" என்றான் மன்னன்.

தூதனுக்கு சுளுக்கு எடுத்து விட்ட மாதிரி இருந்தது. மன்னன் கூறுவது தான் சரியாக இருக்கும் என்று தோன்றியது அவனுக்கு.

மன்னனை மிரட்ட வந்து மிரண்டு போனான். மேலாண்மையைக் காட்ட வந்தவன் மாயையில் வீழ்ந்தான்.

"நல்லது விட்டலராயா! நீங்கள் கூறுவது சரியாகத்தான் இருக்கிறது. ஆயினும் ஒரு கேள்வி. வேலாபுரத்தில் ஏதோ கட்டிட வேலை நடப்பது போல் தெரிகிறதே! என்ன நடக்கிறது?" என்று கேட்டான்.

"இதெல்லாம் ஒரு விஷயமா? ஊர் என்று ஒன்றிருந்தால் இப்படியெல்லாம் நடக்கத்தான் செய்யும். வேலாபுரத்தைச் சுற்றிப் பாதுகாப்பிற்காக மதில் சுவற்றை எழுப்புகிறேன் என்று சக்கிரவர்த்திகளிடம் சொல்லுங்கள். மகிழ்ச்சியடைவார்" என்றான் மன்னன்.

தூதனுக்கு கொஞ்ச நஞ்சமிருந்தச் சந்தேகமும் அகன்றது.

"ஏற்கனவே இங்கு வந்த தூதர் பற்றி எந்தச் செய்தியும் வராதது சக்கிரவர்த்திக்கு கவலையாக இருக்கிறது. ஆகவே இது குறித்து நீங்கள் விசாரித்து தகவல் அனுப்ப வேண்டும்" என்றான் தூதன்.

"நீங்கள் சொல்லிய பிறகு தானே தூதுவர் ஒருவர் உங்களுக்கு முன்னால் அனுப்பப்பட்டிருக்கிறார் என்பது தெரிகிறது. நான் என் ஒற்றர்களை வைத்து விசாரிக்கிறேன். தகவல் அனுப்புகிறேன். வீண் சந்தேகம் கொண்டு இங்கே விசாரணை நடத்தத் தூதுவர்களை அடுத்தடுத்து அனுப்ப வேண்டாம் என்று சொல்லுங்கள். இப்போது நீங்கள் அனைவரும் விருந்துண்டு விட்டுத்தான் செல்ல வேண்டும்" என்று சொன்ன மன்னன் அவர்களுக்குப் பெரும் விருந்தையும் ஏற்பாடு செய்ததால் தூதன் மதிமயங்கிப் போனான்.

"தூதரே! சக்கிரவர்த்தியிடம் ஒரு ரகசியமான தகவலை நான் கூறியதாகச் சொல்லுங்கள். சோழ மன்னன் குலோத்துங்கன் சாளுக்கிய நாட்டின் மீது மறுபடியும் படையெடுக்கத் தீர்மானித்திருக்கிறானாம். அவன் வசத்தில் இருக்கும் கங்கநாட்டில் சோழர்படை கொஞ்சம் கொஞ்சமாகத் திரளுமாம். தக்க நடவடிக்கையை எடுக்கும் படி கேட்டுக் கொண்டதாகச் சொல்லுங்கள். சோழ நாட்டின் மீது படையெடுத்தால் நல்லதாக இருக்கும் என்று சொல்லுங்கள். உதவுவதற்கு நாங்கள் தயாராக இருப்பதாகச் சொல்லுங்கள்" என்றான்.

கட்டியாய் கெட்டியாய் இருந்த தூதன் கரைந்து போனான். கலைந்து போனான்.



தூதன் பேசியதையோ தூதனிடம் பேசியதையோ மன்னன் யாரிடமும் பேசவில்லை.

நீலகேசியிடமும் மாந்தரீகனிடமும் சென்று மகளைக் குறித்துப் பேசினான்.

"மகாராஜா! இந்த மாந்தரீகர் கிடைத்தது நமது பாக்கியம் என்றே சொல்ல வேண்டும். கர்நாடகப் பகுதியில் இவரை விடச் சிறந்த மாந்தரீகர் வேறு யாரும் இல்லை. வேலாபுரத்தில் இருப்பவர் கூட இவருக்கு அடுத்தபடிதான். இவர் இது வரை இரண்டு லட்சம் பேய்களைப் பற்றியும் ஈராயிரம் ஆவிகளைப் பற்றியும் ஆராய்ச்சி செய்தவர். இவர் சாதாரணமாக வாழ்வதே பேய்களின் இருப்பிடத்தில்தான். இவரது சொர்க்கம் சுடுகாடு. இவர் விரும்புவது அங்கே வரும் பிணங்கள். இவரது நண்பர்கள் இறந்தவர்களின் ஆவி தான். இவருக்குக் கட்டுப்படாத பேய்கள் இவ்வுலகில் மட்டுமின்றி எவ்வுலகிலும் இல்லை. எனவே தங்கள் புதல்விக்கு உரிய மாந்தரீகங்களை இவர் செய்யட்டும். இரண்டு மாதங்களில் குணம் தெரியும். அதற்குப் பிறகு நானே கூட அருக மந்திரங்களைப் பிரயோகித்து குணப்படுத்தி விடுவேன்" என்றார்.

மன்னனுக்கு மாற்றாக எதுவும் சொல்லத் தோன்றவில்லை.

"அப்படியே ஆகட்டும் அடிகளே. முதலில் இவளுக்கு இந்த நிலை எதனால் வந்தது என்பதைக் கண்டு பிடித்து விட்டால் எனக்கு ஆறுதலாக இருக்கும். அதோடு ஆச்சார்யர் ஜெயதேவர் எங்கிருந்தாலும் வேலாபுரத்திற்கு வரச்சொல்லி தகவல் அனுப்புங்கள். அவர் வந்து என் மகளை ஒரு பார்வை பார்த்து விட்டால் போதும். எனக்குத் திருப்தியாக இருக்கும்" என்றான் மன்னன்.

"தங்கள் விருப்பப்படியே ஆகட்டும் மகாராஜா. கவலையை விடுங்கள். நான் நாளைக்கு சிரவண பெலகுலாவிற்குப் போகிறேன். அவ்வப்போது இங்கு வந்து பார்த்துக் கொள்கிறேன்" என்றார் நீலகேசி.

ராணியிடம் தனியாகப் பேசிய மன்னன் "சாந்தலை! நீ மகளை விட்டுப் பிரியவே கூடாது. உனக்கு வேறு வேலை எதுவும் இல்லை என்று நினைத்துக் கொள். மகள் இருக்கும் பகுதியில் மாந்தரீகர் மற்றும் நீலகேசி ஆகியோரைத் தவிர யாரையும் அனுமதிக்க வேண்டாம். ஸ்தானிகனிடம் எல்லா ஏற்பாடு களையும் செய்யச் சொல்கிறேன். மகளின் நிலை குறித்து அவ்வப்போது தகவல் அனுப்பு. எங்கிருந்தாலும் எனக்குத் தகவல் வந்துவிடும்" என்றான்.



மன்னனின் நிலை ஒரு நிலையில் இல்லை. மலையாக இருக்கும் அவனது எண்ணங்கள் அலையாக மாறி அலைந்து கொண்டிருந்தன. மனக்கரையில் மோதி மோதி வந்து கொண்டிருந்தன. படையெடுத்துச் சென்ற நேரம் தான் சரியாக இல்லையோ என்று யோசித்தான்.

நுளம்பவாடிக்குச் சென்று போரிடாமல் அகன்றது-

பங்காபுரிக்குச் சென்றதும் மகளின் மனநிலை சரியில்லை என்றச் செய்தி வந்தது-

மகளைக் காண வேலாபுரிக்கு வந்தபோது சாளுக்கிய நாட்டுத் தூதன் வந்தது-

வந்த தூதன் நுளம்பவாடி அரசன் செய்த துரோகத்தைச் சொன்னது-

ஆக-

எல்லாமும் ஒரே நேரத்தில் வந்து விடவே சற்றே குழம்பினான் மன்னன்.

இரவு நேரமாகியிருந்தது.

வேலாபுரம் சுதந்திர நாடாக மாறாமல் ஆதிக்கத்தின் கீழ் அழுந்திய நாடாக இருந்ததால் அடக்கி வாசிக்க வேண்டிய நிலையில் இருந்தது. எனவே அங்கே இரவு நேரம் ஆர்ப்பாட்டமானதாக இல்லை. கல்யாணபுரத்தைப் போலவோ - காஞ்சியைப் போலவோ - கங்கை கொண்ட சோழபுரத்தைப் போலவோ பற்பல அம்சங்களால் தூங்கா நகரங்களாக இருந்த நிலை வேலாபுரத்தில் இல்லை.

கட்டுகளை மீறாத குடும்பப் பெண் வீட்டிற்குள்ளேயே முடங்கிக் கிடந்தது போல் அமைதியில் ஆழ்ந்திருந்தது. பெருநகரமாகப் பெருகாமலும் குக்கிராமமாகக் குறுகாமலும் இருந்ததால் அனைத்துமே அளவோடு இருந்தன. அங்கே சமண மதத்தின் யட்சிணியான வாசந்திகா தேவியின் கோயில் மட்டுமே இருந்தது. ஆள் இல்லாத ஊருக்கு இலுப்பைப் பூ சர்க்கரை என்பது போல் மக்கள் அக்கோயிலுக்கு வந்து போய்க் கொண்டிருந்தார்கள்.

மன்னனின் தந்தை பரந்தமனம் கொண்டவர். "விட்டலா! நீயும் நானும் சமணமாக இருக்கலாம். ஆனால் வேலாபுரத்து மக்கள் அப்படியல்ல. பெருவாரியானவர்கள் வைதீக மதத்தவர்கள். பெரும்பாலானவர்களாக இருப்பவர்கள் விரும்பும் அம்சங்களை மன்னனாய் இருப்பவர் புறக்கணித்தால் காலவட்டத்தில் மக்கள்

அவனைப் புறக்கணித்து விடுவார்கள். பண்டரிபுரம் நமது வசம் இருந்தபோது பிறந்தவன் நீ. ஆகவே பாண்டுரங்கனின் திருநாமமான விட்டலன் என்ற பெயரை உனக்குச் சூட்டினேன். அரச வம்சத்துப் பெயரும் சேர்ந்ததால் விட்டலராயன் என்று நீ அழைக்கப் பட்டாய். அப்போதைக்கு என்னால் அதுதான் செய்ய முடிந்தது. பாண்டுரங்க விட்டலனான நாராயண மூர்த்திக்கு வேலாபுரத்தில் ஆலயம் ஒன்றை அமைத்து அங்கே உள்ள பெருவாரியான மக்களின் ஏக்கத்தைத் தீர்க்க வேண்டும் என்பது என் அவா. அப்படியொரு ஆலயம் அமைந்தால் பெருவாரியான மக்கள் அங்கே திரள்வார்கள். விழாக்கள் நடைபெற்று ஆலயமும் ஊரும் களைகட்டும். எப்போதும் கலகலப்பாக இருக்கும். என் காலத்தில் ஈடேறாத என் ஆசை உன் காலத்திலாவது நிறைவேறும் மகனே! இதை மறந்து விடாதே" என்று கூறியிருந்தார்.

அவர் கூறியது விட்டலராயனுக்குப் பசுமையாக நினைவில் இருந்தது. அவர் கூறியது போல ஆலயம் ஒன்றை வேலாபுரத்தில் அமைக்க அவனும் துடித்தான். ஆனால் வேலாபுரம் சாளுக்கியருக்கு அடிமை நாடாக இருக்கும் வரை அது நடக்காது என்பதை உணர்ந்ததால் சாளுக்கியரிடமிருந்து விடுதலை பெறுவதை முதல் காரியமாகக் கொண்டு அது நிறைவேறிய பின் ஆலயப் பணியைத் தொடங்க வேண்டும் என்று தீர்மானித்தான்.

அவன் தன் மனைவி சாந்தலை தீவிரமான சமண சமயத்தினள் என்பதாலும், கர்நாடகத்தில் பெரும்பாலான பகுதிகளில் சமணர்கள் பரவலாக இருந்ததாலும், சமண மதத்தின் உயர்நிலைத் துறவியாகவும் ஆச்சார்யராகவும் இருந்த ஜெயதேவர் சகலகலாவல்லவராகவும், சமணக் கொள்கைகளைக் கடைப் பிடிப்பதில் இணையற்றவராக இருந்ததாலும், மன்னனை அன்போடு அரவணைத்து வந்ததாலும் மன்னன் சமணனாகவே இருந்தான்.

இருப்பினும் தனது தந்தை கூறியது போல் வேலாபுரத்திலும், துவாரசமுத்திரத்திலும், இதர மலை நாட்டுப் பிரதேசத்திலும் வைதீக மதத்தவர்கள் பெரும்பாலானவர்களாக இருந்த படியால் அவர்கள் மனம் உகந்து வணங்கும் ஆலயங்களை உருவாக்குவது அவசியம் என்று உணர்ந்தான்.

தமிழகத்தில் பல்லவர்களும், சோழர்களும், பாண்டியர்களும் மகத்தான ஆலயங்களை காணுமிடமெல்லாம் எழுப்பி அந்நாடுகளைத் திருநாடுகளாக மாற்றியிருந்தது விட்டல

ராயனுக்கு ஏக்கத்தை உண்டாக்கியது. அது பூர்த்தியாகாததால் தான் தற்போது வேலாபுரம் விழித்துக் கொண்டிராமல் தூங்கும் அமைதியில் துவண்டு இருக்கிறது என்று கருதினான்.

ராணி தனது மகளோடு இருந்ததால் அவளிடம் சென்று ஆறுதல் பெறாத நிலையில் தாசியர் சேரிக்குச் சென்று கதவைத் தட்ட முற்பட்டபோது உள்ளேயிருந்து எழுந்த குரல் அவனைத் திடுக்கிட வைத்தது.

அவர் எதற்கு இங்கே வந்தார்? என்று தனக்குள் கேட்டுக் கொண்டான் மன்னன்.

அப்போது உள்ளேயிருந்து சிரித்த பெண் உதிர்த்த வார்த்தை அவனுக்கு அதிர்ச்சியாக இருந்தது.





மனமும் சித்தமும் பரிசுத்தமாய் இருக்கும் போது உடலானது சொர்க்கத்தில் இருந்தாலென்ன? சுடுகாட்டில் இருந்தாலென்ன – விட்டலராயன்




உள்ளே இருந்த பெண் பட்டாசு போல் சிரித்து விட்டு "இவ்வளவு பெரியதை நான் பார்த்ததே இல்லை" என்றாள்.

மன்னன் அதிர்ந்தான்.

"என் தாசியா இப்படி வெட்கமில்லாமல் பேசுகிறாள்? அவள் யாரிடம் இவ்வாறு பேசுகிறாள்?" என்று தனக்குள் கேட்டுக் கொண்டு கதவைத் தட்ட எத்தனித்த போது மல்லிகைப் பூவின் மணம் எழுந்தது.

"இந்த மணம் எங்கே வந்தது? இங்கே ஏது மல்லிகைக் கொடி? அந்த வாடை அல்லவா வரும்?" என்று நினைத்துச் சுற்றும் முற்றும் பார்த்த போது தான் இடம் மாறி வந்து விட்டதை உணர்ந்தான் மன்னன்.

"கடைசி இல்லம் அல்லவா தாசியின் வீடு? இடுகாட்டை யொட்டித் தனியாக இருக்கும் வீடல்லவா அவள் வீடு? நான் தான் இடம் மாறி வந்து விட்டேன். நாராசமான வார்த்தைகளைக் கேட்கும் படி ஆகிவிட்டது" என்று முணுமுணுத்தபடி அங்கேயிருந்து அகன்றான்.

மன்னர்கள் காலத்தில் ராணி மட்டுமே இருந்ததில்லை. அந்தப்புரம் இருந்தது. அரசியைத் தவிர அணங்குகள் இருந்தார்கள். அடிமைப் பெண்கள் இருந்தார்கள். அதோடு அரச வம்சத்தவருக்கென்று பரத்தையர் குடியிருப்பும் இருந்தது. மன்னனுக்கு வேசிகள் இருந்தது போல் தாசிகளும் இருந்தார்கள்.

தாசிகள் பாலியல் சுகங்களுக்காக இல்லாமல் மன்னர்களின் நோவுகளைக் சாகடிக்கும் ஆறுதல் ஆறுகளாகவும் தேறுதல் தோள் களாகவும் இருந்தார்கள். வேறு எங்கேயும் கிடைக்காத அமைதியும் அரவணைப்பும் அரசர்களுக்கு அத்தாசிகளிடம் கிடைத்தது.

அரசியலில் அலைக்கழிக்கப்பட்டு உலையில் வைக்கப்பட்ட உணவுப் பொருள் போல் சூடாக வரும் அவர்களுக்கு வாடைக் காற்று வீசி குளிர்விப்பது போல் தாசிகள் இருந்து வந்தார்கள்.

அந்த வகையில் விட்டலராயனுக்கு துளசி என்னும் தாசி வேலாபுரத்தில் இருந்தாள். அவனுக்கு மட்டுமே தாசியாக இருந்தாள். பணிவிடை செய்வது ஆடவனாக இருந்தால் அவன் தாசன். பெண்மணியாக இருந்தால் தாசி.

மன்னனின் துளசி தாசி மன்னனுக்காகவே வாழ்ந்தாள். வாழ்நாளில் மன்னனை மட்டுமே நினைத்தாள். மன்னனுக்குச் செய்யும் சேவையை மகேசனுக்குச் செய்யும் சேவையாகக் கருதி அதற்காகக் காத்திருப்பாள். வேர்க்கும் வரையில் சேவையைச் செய்வாள். தேவையை பூர்த்தி செய்வாள்.

அவளது இருப்பிடமானது வேலாபுரத்தில் தாசி புரத்தைத் தாண்டி இடுகாட்டையொட்டி இருந்தது.

"துளசி! உனக்கு இடமா கிடைக்கவில்லை? போயும் போயும் இடுகாட்டிற்கு அருகிலா இருக்க வேண்டும்? தினமும் பிண வாடையல்லவா வீசும்?" என்று மன்னன் அவளைக் கேட்டதுண்டு.

"எல்லோருக்கும் கடைசியாகக் கிடைக்கும் வாடை பிணவாடை தானே மகாராஜா? இறந்த பின் நமது உடல் தரும் கொடை பிண வாடை தானே? அதை உயிரோடு இருக்கும் போதே சுவாசிக்கிறேன் நான். என் சுவாசம் அகன்றபின் என் வாசம் இடுகாட்டில் தானே? ஆகவே தான் அதன் அருகில் என் இல்லத்தை வைத்துக் கொண்டேன்" என்பாள் அவள்.

"துளசி எங்கே இருந்தாலும் அது துளசிதான். நீயும் அப்படித் தான் துளசி. நீ எங்கிருக்கிறாய் என்பதை விட உனக்குள் என்ன இருக்கிறது என்பதே முக்கியம். மனமும் சித்தமும் பரிசுத்தமாய் இருக்கும் போது உடலானது சொர்க்கத்தில் இருந்தாலென்ன? சுடுகாட்டில் இருந்தாலென்ன?" என்று சொல்வான் மன்னன்.

அவனைப் பொறுத்தவரை தாசியைச் சந்தித்தால் உடலில் உள்ள தூசு விலகும். உள்ளத்தில் உள்ள மாசு அகலும்.

இருள் விலகும் ஒளிவிடமாக இருந்தாள் துளசி.

அவள் இல்லத்தை அடைந்து கதவைத் திறந்தபோது அவள் கதவைத் திறந்தாள். உள்ளேயிருந்த நறுமணம் அவளது இருப்பிடத்தின் சிறப்பை உணர்த்தியது.

"வாருங்கள் மகாராஜா" என்று கைகளைக் கூப்பி வரவேற்றாள்.

அவனோ நேராகப் போய் ஆசனத்தில் அமர்ந்தான்.

துளசி கதவைச் சாத்திவிட்டு வந்து தரையில் விழுந்து மன்னனை வணங்கினாள்.

ஈரத்துண்டைக் கொண்டு வந்து அவனது கால்களைத் துடைத்து விட்டு அவற்றைத் தொட்டு கண்களில் கொண்டாள்.

உள்ளே சென்று குவளையில் நீரைக் கொண்டு வந்தாள்.

"துளசி தீர்த்தத்தை அருந்துங்கள் மகாராஜா. துளசியை விட அருமருந்து வேறு இல்லை" என்றாள்.

குவளையை வாங்கி நீரைப் பருகிய மன்னன் "நீ சொன்னது சரிதான் தாசி. உன்னைக் காட்டிலும் அரு மருந்து வேறு இல்லை" என்றான்.

"நான் துளசியைச் சொன்னேன் மகாராஜா."

"நானும் துளசியைத்தான் சொன்னேன். உன் பெயர் அதுதான்."

"மகாராஜா! நான் மண்ணுக்குள் அடங்கப் போகிறவள். துளசியோ மண்ணிலிருந்து மேலே வந்து மருந்தாகும் விருட்சம். நாராயண மூர்த்திக்கு உகந்த அந்த துளசி எங்கே? நான் எங்கே?"

"அது விருட்சம். நீ வனிதை. இதைத் தவிர இரு துளசிக்கும் என்ன வித்தியாசம்?"

"என்னைப் புகழ வேண்டாம். புகழ்ச்சி இகழ்ச்சியில் வீழ்த்தி விடும். நான் பணிப் பெண் என்ற நிலையைத் தவிர வேறு நிலையை விரும்பவில்லை. இந்த நிலையை விட மேனிலை வேறு இருப்பதாக நினைக்கவில்லை."

"துளசி! உள்ளது உள்ளபடி பேசுவது புகழ்ச்சியாகாது. அவ்வாறு பேசாது போனால் உண்மையைப் பேச மறுப்பதாக ஆகி விடும். நீ சுக வெளிச்சத்தை உள்ளே வைத்துக் கொண்டு தோற்றத்திலும் வெளுப்பாக இருக்கும் கற்பூரத்தைப் போன்றவள். எனக்காக இப்போது ஒரு பாட்டு பாடுவாயா?"

"அப்படியே ஆகட்டும் மகாராஜா" என்று கூறி விட்டுப் பாடலானாள் துளசி.

**கண்ணிலே என்ன உண்டு**
**கண்கள் தான் அறியும்.**
**கல்லிலே ஈரம் உண்டு**
**கண்களா அறியும்?**
**என் மனம் என்னவென்று**
**என்னையன்றி யாருக்குத் தெரியும்?**

**- கண்ணிலே**

**நெருப்பென்று சொன்னால் நீரிலும் அணையும்**
**நீரென்று சொன்னால் நெருப்பிலும் வேகும்**

நான் கொண்டு நெருப்பு அணைகின்ற நெருப்பு
யார் அணைப்பாரோ இறைவனின் பொறுப்பு

- கண்ணிலே

சேலைக்குள் ஆடும் மங்கையின் மேனி
மேனிக்குள் ஆடும் மனமெனும் ஞானி
ஞானியின் மனமும் ஆசையில் தேனீ
நான் ஒரு ராணி பெண்களின் ஞானி

- கண்ணிலே

கோடையில் ஓர்நாள் மழை வரக்கூடும்
கோவில் சிலைக்கும் உயிர் வரக் கூடும்
காலங்களாலே காரியம் பிறக்கும்
காரியம் பிறந்தால் காரணம் விளங்கும்.*

- கண்ணிலே

பாட்டைக் கேட்டதும் நிமிர்ந்து அமர்ந்த மன்னன் "சரியாகத்தான் சொன்னாய் துளசி. நீ பெண்களின் ஞானி என்பது சரி. ஆனால் என்னைப் பார். ஒன்றிலும் முற்றுப் பெறாதவன் நான். எல்லாவற்றிலும் இற்றுப் போனவன் நான். என்னிடம் சத்யம் இல்லை. தர்மமில்லை. நேர்மை இல்லை. ஆசை இருக்கிறது. பேரரசை உருவாக்க வேண்டும் என்ற பேராசை இருக்கிறது. ஆசை வந்து விட்டாலே மன்னன் அலைக்கழிப்பிற்கு அருகில் வந்து விடுகிறான். ஆசை என்பது அழிவு என்றால் பேராசை உண்டானால் கேட்க வேண்டுமா? பேராசை என்பது பேரழிவு. என் பயணம் அழிவை நோக்கிச் செல்கிறதோ என்று தோன்றுகிறது துளசி" என்றான்.

"மகாராஜா! உங்கள் துன்பம் தான் என்ன?"

"என் மகள் தர்ம தேவிக்குப் பேய் பிடித்திருக்கிறதாம்."

"அதனாலென்ன மகாராஜா?"

"என்ன நீ இப்படிக் கேட்கிறாய்?"

"தங்கள் மகள் திருமகள். அவளைப் பேய்கள் எதுவும் செய்யாது."

"பிடித்திருக்கிறதே துளசி?"

"அவைகளுக்குத் தங்கள் திருமகளிடம் இருக்கப் பிடித்திருக்கும். நானில்லையா மகாராஜா! தங்கள் நிழலை விரும்பி உங்களோடு இருக்க விரும்புகிறேனே! பேய்களும் அப்படித்தான் வந்திருக்கும். தங்கள் திருமகள் தேகத்தில் வந்ததால் அவற்றுக்கு மோட்சம் கிட்டி விடும்."

* பாடலாசிரியருக்கு நன்றி.

"ஆகா! உன்னைப் போல் பேச ஒருவரும் இங்கில்லையே துளசி. எல்லோரும் பயமுறுத்துகிறார்களே!"

"தாங்கள் பயப்படாமல் இருங்கள் மகாராஜா. பயம் என்பது அதைப் பார்த்து ஒதுங்க நினைப்பவர்களையே பற்றிக் கொள்ளும். அதை எதிர்க்க முற்பட்டால் ஓடி மறைந்து விடும்."

"நூற்றில் ஒரு வார்த்தை. வீரர்களுக்குப் புகட்ட வேண்டிய அமிர்தம். எனக்குத் தேவையான மருந்து" என்று சொன்ன மன்னன் "படையெடுப்பை அவசரப்பட்டு தொடங்கி விட்டேனோ என்று தோன்றுகிறது. அதைத் தொடங்கிய வேளை ஏதேதோ நடக்கின்றன. சிவப்புத் தலையை உடைய ஆந்தையாம். அது கர்நாடக நாட்டிற்கு வந்திருக்கிறதாம். துவஜஸ்தம்பத்தில் அமர்ந்திருந்ததை மாந்தரீகர் பார்த்தாராம். அது அபசகுனப் பறவையாம். ராஜகுலத்திற்கு ஆகாதாம்."

"சரிதான் மகாராஜா. அந்தப் பறவை அமர்ந்தது துவஜஸ்தம்பத்தில். அதில் பறந்து கொண்டிருப்பது சாளுக்கியக் கொடி. ஆகவே அழிவு சாளுக்கிய ராஜ வம்சத்திற்குத்தானே தவிர தங்களுக்கில்லை."

"அப்படியும் இருக்கலாம் அல்லவா? என்னால் ஏன் அப்படிச் சிந்திக்க முடியவில்லை? உன் வார்த்தை எனக்கு ஆறுதலைத் தருகின்றது துளசி. நான் இந்தப் படையெடுப்பைப் பொறுத்தவரை மகா அனுபவசாலிகளான பஞ்சப் பிரதானிகளைப் புறக்கணித்து விட்டேன். அவர்களது தர்ம வழிகளை ஏற்க மறுத்து விட்டேன். அவர்கள் பதவி விலகி விட்டார்கள். இப்போது எண்ணிப் பார்க்கும் போது கவலையாக இருக்கிறது. தவறு செய்து விட்டோமா என்று தோன்றுகிறது. தற்போது வேலாபுரத்தில் பத்தாயிரம் வீரர்கள் பாதுகாத்து வந்தாலும் அவர்களை வழிநடத்த யாருமில்லை. எதிரிகள் திடீரென இங்கு படையெடுத்து வந்தால் என்னாகுமோ தெரியவில்லை."

"மகாராஜா! பஞ்சப் பிரதானிகள் பதவியை விட்டு விலகி யிருக்கலாம். அதே சமயம் அவர்களும் இருக்கிறார்கள். அவர்களது பதவிகளும் இருக்கின்றன. எப்போது வேண்டுமானாலும் அவர்கள் பதவிக்கு வந்து மீண்டும் அமரலாம். இரண்டு நாட்களுக்கு முன்பு பஞ்சப் பிரதானிகளில் ஒருவரான சேனாபதி பகாசூரர் என்னைப் பார்க்க வந்திருந்தார். தாங்கள் [illegible]லை என்பதாலும், ராணியாரிடம் பேசுவதற்கு முகமில்லை [illegible], வேறு யாரிடமும் பேச இயலாது என்பதாலும், [illegible]க்கு உரியவள் நான் தான் என்று கருதி என்னைச் [illegible]. பஞ்சப் பிரதானிகள் பதவியிலிருந்து தான் விலகியது

தவறு என்றார். சேனாதிபதியான தான் பொறுப்பை விட்டு விலகியது நாட்டிற்குச் செய்த துரோகம் என்று வருந்தினார். போர்த் தொழிலைச் செய்யும் சேனாதிபதிகள் வெற்றியை ஈட்டும் நோக்கமாகத்தான் இருக்க வேண்டுமே தவிர தர்மநியாயங்களைப் பார்த்துக் கொண்டிருக்கக் கூடாது என்றும் பல போர்களில் தான் அதர்ம நெறிகளைக் கடைப்பிடித்திருப்பதாகவும் சொன்னார். தான் மீண்டும் அந்தப் பதவிக்கு வராது போனாலும் மகாராஜா இல்லாத கால கட்டத்தில் வேலாபுரத்தைக் காக்கும் பணியை மேற்கொள்ள விருப்பதாகவும் தெரிவித்தார்.

"துளசி! இதை விட மகிழ்ச்சியான செய்தி எனக்கு வேறு இருக்க முடியாது. நீ எனக்கொரு உதவி செய்வாயா?"

"சொல்லுங்கள் மகாராஜா."

"சேனாதிபதி மாவீரர். பல நுட்பங்களை அறிந்தவர். என்னை விட வயதில் மூத்தவர் என்பதால் அவரிடம் தயக்கங்கள் இருக்கலாம். அதன் காரணமாக அவர் தயங்குவதற்கு வாய்ப்பிருக்கிறது. அவரை மீண்டும் பஞ்சப் பிரதானியாகப் பதவியில் அமர்த்தி ஆணை பிறப்பித்து ஓர் ஓலையைத் தருகிறேன். அதை அவரிடம் சேர்ப்பிக்க வேண்டும். வேலாபுரத்தைக் காக்கும்படி நான் மிகவும் வேண்டிக் கொண்டதாகச் சொல்ல வேண்டும்."

"செய்கிறேன் மகாராஜா."

"நான் அரண்மனைக்குச் சென்று ஓலை தயார் செய்து உனக்கு அனுப்பி வைக்கிறேன்" என்று சொன்ன மன்னன் "உன்னிடம் வந்ததில் எல்லா பிரச்சனைகளும் இல்லாதது போல ஆகிவிட்டன. என்னை விட்டுச் சென்று கொண்டிருந்த தெம்பும் சுறுசுறுப்பும் மீண்டும் வந்து விட்ட மாதிரி இருக்கிறது. போன உயிர் திரும்பியது போல் இருக்கிறது என்று சொன்னாலும் தவறில்லை. மனம் நிறைவாக இருக்கிறது. உணவு கொண்டு வா துளசி" என்றான்.

மறுநாள் ஓலையை தாசிக்கு அனுப்பிவிட்டு தனது பாதுகாப்பாளர்களான கருடர்களுடன் பங்காபுரிக்குப் புறப்பட்டான் விட்டலராயன்.

அங்கு சென்றபின் ஒற்றர்களின் தகவலைக் கேட்டறிந்தான்.

அச் செய்திகள் ஓரளவிற்குத் திருப்திகரமாக இருந்தாலும் கதம்பர்கள் நாட்டின் தலைநகரம் வனவாசிக்கு உளவு பார்ப்பதற்காக கங்கராஜன் சென்றிருப்பதாகத் தெரிவிக்கப் பட்டபோது பாகற்காயைத் தின்றது போலிருந்தது மன்னனுக்கு.

"கங்கராஜனுக்கு எதற்கு இந்த வேலை? ஒற்றர்கள் வேலையை இவன் செய்ய வேண்டிய அவசியம் என்ன வந்தது?" என்று கேட்டான் மன்னன்.

"ஒற்றர்கள் கொண்டு வந்த தகவல்கள் அவருக்குத் திருப்தியளிக்கவில்லை. நுளம்பவாடியில் ஒற்றர்களின் பணி திருப்திகரமாக இல்லை என்று தாங்கள் வருத்தம் தெரிவித்திருந்ததால் அதை மனதில் வைத்துக் கொண்டு "நானே நேரில் சென்று உளவறிந்து வருகிறேன்" என்றார். வேண்டாம் என்றாலும் கேட்கவில்லை" என்றான் உபதலைவன் பரதன்.

"ஒற்றர்கள் பணி சரியாக இல்லை என்றாலும் அவர்களது தகவல்கள் திருப்தியாக இல்லை என்றாலும் ஒற்றர்களை மாற்ற வேண்டுமேயன்றி தளபதிகள் ஒற்றர்கள் பணியை மேற் கொள்ளக் கூடாது பரதா. அவரவர் பொறுப்பை அவரவர் செய்தால் அந்தந்த வேலை சரியாக நடக்கும். கங்கராஜன் ஒற்றனாகச் சென்று விட்டால் சேனாதிபதி பொறுப்பைச் செய்வது யார்? நீ செய்வாயா? உன் பணியைச் செய்வது யார்? இன்னொருவனா? வேறு வழியே இல்லாத இக்கெட்டானச் சூழ்நிலைகளில்தான் பணிமாற்றம், பதவி மாற்றம், ஆள் மாறாட்டம் போன்றவை நடக்கலாமே தவிர எப்போது வேண்டுமானாலும் நடக்கக் கூடாது. கங்கராஜனைச் சந்திக்கும் போது இதை நான் வலியுறுத்தியதாகச் சொல். அவனை நான் மிகவும் நம்பியிருக்கிறேன். என் தம்பியாய் எண்ணியிருக்கிறேன். இது போன்ற காரியங்களில் சிக்கிப் புதுச் சிக்கல்களில் அவன் சிக்கிக் கொண்டால் அது என் நம்பிக்கைக்கு ஆபத்தாகும்" என்று சொன்ன மன்னன் "இன்றைக்கே படையை நகர்த்து" என்றான்.

அன்றே படை கிளம்பியது. கதம்பர் நாடான வனவாசி மேற்குத் தொடர்ச்சி மலைகளின் மேற்குச் சரிவில் இருந்ததால் [illegible]காபுரிக்கும் அதற்கும் அடர்ந்த காடுகளும், செங்குத்தான [illegible]களும், ஆழமான பள்ளத்தாக்குகளும், நீர் வீழ்ச்சிகளும் [illegible]யிருந்தன. எனவே படையானது சேதமில்லாமல் [illegible]சிக்குப் போய்ச் சேருவதே பிரம்ம பிரயத்தனமாக [illegible].

[illegible]ன் சமயோசிதமாக காட்டுவாசிகளையும் [illegible]ளையும் துணைக்கு வைத்துக் கொண்டு படையை [illegible]ன். பாதையும் பயணமும் பயங்கரமாய் இருந்தாலும் [illegible]க்கு உணவும் நீரும் கிடைப்பதில் எந்தச் சிரமமும் [illegible]ங்காங்கே படைகள் தங்கி, நீராடி, உண்டு ஓய்வெடுத்து [illegible] வைத்தான் மன்னன்.

ஒற்றர்களின் செய்தியும் அடிக்கடி வந்து கொண்டிருந்தது. கங்கராஜன் தனது ஒற்றன் பணியில் மருத்துவனாக மாறி வனவாசிக் கோட்டைக்குள் சென்று விட்டான் என்ற செய்தியும் அவனுக்குக் கிடைத்தன.

“கங்கராஜனுக்கு வைத்தியம் தெரியும் மகாராஜா! ஆயுர்வேதத்தில் ஆழங்கால் கண்டவர். ரண சிகிச்சை இல்லாமலேயே ரணங்களை ஆற்றக் கூடியவர்” என்றான் பரதன்.

“அப்படிப்பட்டவன் கதம்பர் கோட்டையில் இருந்து நமக்கென்ன பயன்? கோட்டைக்குள் அவன் எதற்காகச் செல்ல வேண்டும்? உள்ளே சென்று அவன் அறிவதற்கு என்ன இருக்கிறது?” என்று கேட்டான் மன்னன்.

வனவாசியை நெருங்கிய போது மன்னனுக்குச் சந்தேகம் மூண்டது. கோட்டையின் நிலைமையைக் காணக் காணச் சந்தேகம் வலுத்தது.

காட்டுவாசிகளிடம் ஏதோ சொல்லி கோட்டைக்கு அனுப்பி வைத்தான்.

கோட்டைவாசிகள் வந்து தெரிவித்த செய்தி மன்னனின் சந்தேகத்தை உறுதி செய்தது.

“கேட்டாயா பரதா? கதம்பர்கள் தற்போது வனவாசியில் இல்லையாம். ஹனகல் கோட்டையில் இருக்கிறார்களாம். கங்கராஜனோ வனவாசிக்குப் போயிருப்பதாக ஒற்றர்கள் சொன்னார்கள். நாம் இப்போது வனவாசிக்குச் செல்வதா? ஹனகல் கோட்டைக்குச் செல்வதா?” என்று கேட்டான் மன்னன்.

“வனவாசியின் உண்மையான நிலை என்ன என்பதை கங்கராஜர் மூலம் அறிந்து கொண்டு ஹனகல் கோட்டைக்குச் செல்லலாம்” என்றான் மன்னன்.

“ஹனகல் கோட்டை இங்கிருந்து எவ்வளவு தூரம்?” என்று கேட்டான் மன்னன் வேடர்களிடம்.

“இங்கிருந்து தெற்கே அரை நாள் பயணத்தில் இருக்கிறது மகாராஜா. அது வனதுர்க்கம்” என்றார்கள் வேடுவர்கள்.

“பரதா! கங்கராஜனுக்காகக் காத்துக் கொண்டிருப்பதில் அர்த்தமில்லை. ஹனகல் கோட்டைக்கே போவோம்” என்றான் மன்னன்.

“நமது படையின் நகர்வு ரகசியமாக இருக்க வேண்டும் மகாராஜா” என்றான் பரதன்.

"பங்காபுரியிலிருந்து அப்படித் தானே வருகிறோம்?" என்று வினவினான் மன்னன்.

"இருந்தாலும் பகைவர் கோட்டையான வனவாசியைக் கடந்து செல்வதால் கூடுதல் எச்சரிக்கை அவசியம்."

"நமக்குக் காடுகள் போர்வையாக இருக்கின்றன. பகைவர்கள் நம்மைக் காண்பது என்பது இயலாத ஒன்று" என்றான் மன்னன்.



ஆனால் வனவாசியில் இருந்தவர்கள் அவர்களைக் கவனித்து விட்டார்கள் என்பதையோ அதற்கு அறிகுறியாக கோட்டையின் மையப்பகுதியில் இருந்த ஸ்தூபத்தில் சிவப்பு விளக்கை எரியச் செய்தார்கள் என்பதையோ மன்னனும் அறியவில்லை. பரதனும் அறியவில்லை.

★★★



பேராசை வந்து விட்டால் எல்லோரும் முட்டாள்கள் தான். அறிவிருக்க வேண்டிய இடத்தை அடைத்துக் கொண்டு முட்டாள் தனமே முதன்மை பெறும்
– ஜெயசிம்மன்




எதிரிகள் தன்னைக் கவனிக்க வாய்ப்பில்லை என்ற எண்ணத்துடன் மன்னன் விட்டலராயனின் படை அங்கிருந்து மகாபாதாளமான பள்ளத்தாக்கில் இறங்கி எதிரே இருந்த மலைமீது ஏறி உச்சிக்கு வருவதற்கு ஒருநாளாயிற்று.

மலையின் உச்சிக்கு வந்த போது எதையோ சுட்டிக் காட்டி "இது என்ன?" என்று வேடர்களிடம் கேட்டான் மன்னன்.

அவன் சுட்டிக் காட்டிய மலை உச்சியில் சிவப்புக் கொடிகள் சில பறந்து கொண்டிருந்தன.

அதை வேடர்கள் பார்த்து விட்டு "மகாராஜா! உங்கள் படை வருவதை வனவாசியில் உள்ளவர்கள் பார்த்து விட்டார்கள் என்பதையே இது காட்டுகிறது" என்றான்.

"எப்படி?" என்று கேட்டான் மன்னன்.

"மகாராஜா! உங்கள் படையை வனவாசியில் உள்ளவர்கள் பார்த்து விட்டால் அங்கே இருக்கும் மையத்தூணில் பகலாக இருந்தால் சிவப்புக் கொடியையும் இரவாக இருந்தால் சிவப்பு விளக்கையும் ஏற்றுவார்கள். அது வனவாசியைச் சுற்றியுள்ள மலைமுகடுகளில் இருக்கும் வேடுவ ஒற்றர்களுக்குத் தெரியும். உடனே அவர்கள் மலைமுகடுகளில் அமைத்துள்ள தூண்களில் சிவப்பு விளக்கையோ கொடியையோ ஏற்றுவார்கள். இந்த அடையாளம் தொற்று நோயைப் போல வனவாசிக்குத் தெற்கே உள்ள ஹனகல் கோட்டை வரையிலான மலை உச்சிகளுக்கும் பரவும். ஹனகல் கோட்டையில் உள்ளவர்கள் தங்களை நோக்கி எதிரிகள் வருவதை உணர்ந்து ஏற்பாடுகளைச் செய்து கொள்வார்கள்" என்றார்கள் வேடர்கள்.

"எங்கள் படை வந்து கொண்டிருந்ததை யார் வனவாசிக்குத் தெரிவிப்பார்கள்?"

"வனவாசியைச் சேர்ந்த ஒற்றர்கள்தான். அவர்கள் மலைப் பகுதிகளில் திரிபவர்கள். பச்சை நிற புறாக்களை வளர்ப்பவர்கள்.

அவற்றைப் பிடித்து கால்களில் சென்னிறப் பழத்தைச் செருகி வைத்திருப்பார்கள். சென்னிறப் பழம் எதிரி வருவதைச் சுட்டிக் காட்டும். வெண்ணிறத் துணி கட்டப்பட்டால் வருவது எதிரிகள் அல்ல என்பதைச் சுட்டிக் காட்டும். வனவாசி ஒற்றர்கள் சென்னிறப் பழங்களையும் புறாக்கள் மூலம் அனுப்பியிருக்க வேண்டும். அதனால்தான் இந்தச் சிவப்புக் கொடிகள் பிரதிபலிக்கின்றன" என்றான் வேடனான மலையன்.

"எங்களை எதிரி என்று வனவாசிக்காரர்கள் எப்படி அறிந்திருக்க முடியும்?" என்று கேட்டான் பரதன்.

இதற்கு மன்னன் பதிலளிக்க முன்வந்து "வனவாசிக்குப் போன நம் கங்கராஜன் அங்கே சிக்கியிருப்பான். அனுகூலம் என்று நினைத்தது பிரதிகூலமாகி விட்டது" என்றான்.

"அப்படியானால் கங்கராஜனின் கதி?" பதறினான் பரதன்.

"இப்போது நம் கதியைக் கவனி" என்றான் மன்னன்.

கவனிக்க வேண்டிய விஷயம் தான் என்பதை உணர்த்துவது போல எதிரே சுட்டிக் காட்டினான் பரதன்.

அங்கே மரங்கள் எரிந்து கொண்டிருந்தன.

"இது என்ன? காட்டு மரம் எப்படி எரிகிறது?" என்று கேட்டான் பரதன்.

"ஐயா! நாம் ஹனகல் கோட்டையை நெருங்கி விட்டோம் என்று எண்ணுகிறேன். அது ஏற்கனவே நான் கூறியது போல் வனக் கோட்டை. இது போன்ற கோட்டையில் இருப்பவர்கள் பகைவர்களிடமிருந்து தங்களைக் காத்துக் கொள்ள கோட்டையை அடுத்துள்ள மரக்காடுகளைக் கொளுத்துவார்கள். எதிரிகளால் கோட்டையை அணுக முடியாது" என்றான் மலையன்.

"அப்படியென்றால் ஹனகல் கோட்டையை நாம் அணுக முடியாதா?" என்று கேட்டான் மன்னன்.

"முடியும்."

"எப்படி?"

"மிகவும் சுற்றுவழி"

"சொல்"

சொன்னான் மலையன்.



இதே நேரத்தில் ஹனகல் கோட்டையில் அரண்மனையில் இருந்த கதம்பர் குல மன்னன் ஜெயசிம்மன் மிகுந்த மகிழ்ச்சியோடு இருந்தான். அவனைச் சூழ்ந்திருந்த முக்கியஸ்தர்களிடம் தனது பிரலாபத்தை விவரிக்கும் விதமாகப் பேச முற்பட்டு "என் கணக்கு சரியாகி விட்டதைக் கண்டீர்களா?" என்று வினவினான்.

சாதாரணமாக அவன் ஒன்றை நினைப்பான். இன்னொன்றைச் செய்வான். நீ நினைத்தது இது தான் என்று சொன்னால் நான் நினைத்தது இதுவல்ல என்று வேறொன்றைச் சொல்வான். எனவே தான் அவன் கணக்கு என்று சொன்னதை அறிந்திருந்தாலும் அதைச் சொல்லி மூக்குடைபட விரும்பாத முக்கியஸ்தர்கள் "எந்த கணக்கைச் சொல்கிறீர்கள்?" என்று கேட்டார்கள்.

"நான் என்ன இரண்டும் இரண்டும் நான்கு என்று கணக்கு சொல்லும் ஆசிரியனல்ல. எதைச் சொல்கிறேன் என்று புரியவில்லையா உங்களுக்கு? நான் சொல்வது எதிரியைப் பற்றிய கணக்கு, புரிகிறதா?" என்று சற்றுக் கோபமுடன் கேட்டான் ஜெயசிம்மன்.

"புரிகிறது" என்றார்கள் பிரமுகர்கள்.

"என்ன புரிகிறது?"

"உங்கள் கணக்கு"

"என்ன கணக்கு?"

"எதிரிகளைப் பற்றிய கணக்கு"

"அது என்ன கணக்கு?"

"அது தான் புரிகிறது என்றோமே!"

"என்ன புரிந்து கொண்டீர்கள்?"

"நீங்கள் போட்ட கணக்கைத்தான்"

கதம்பர் குல மன்னனுக்கு கோபம் வந்து விட்டது. "நீங்களெல்லாம் யாரிடம் பேசுகிறீர்கள் என்பதை மறந்து விட்டு விளையாடுகிறீர்கள். இந்த விளையாட்டிற்கெல்லாம் நான் தயாராக இல்லை. உங்களையெல்லாம் முக்கியஸ்தர்களாக நினைத்து என் அருகில் வரச் சொன்னது தவறுதான். எல்லோரும் எழுந்து சொல்லுங்கள்" என்றான்.

"கோபம் வேண்டாம் மகாராஜா. உங்கள் சுபாவம் தெரிந்த காரணத்தால்தான் வெளிப்படையாகப் பேசத் தயங்குகிறோம். நாங்கள் ஒன்று சொன்னால் நீங்கள் ஒன்று சொல்வீர்கள். பேச்சு வளரும். நேரம் வளரும். பயன் இருக்காது. பயம்தான் இருக்கும்."

"பூ! இவ்வளவுதானா? முக்கியஸ்தர்களே! எனக்கு அப்படியொரு சுபாவம் இருப்பது உண்மைதான். அதற்காக எப்போதும் அப்படித்தான் இருக்க வேண்டும் என்பதில்லை. சுபாவங்களைக் கைவிட்டு பிரபாவங்களை மேற்கொள்ள வேண்டிய கட்டாயம் எல்லோருக்கும் வரும். தற்போது எதிரி நம்மை நோக்கி வந்திருக்கும் கட்டம். இந்த நேரத்தில் நான் என் சுபாவங்களை அடியோடு கைவிட்டு மாறுபட்ட நடவடிக்கைக்கு அடி யெடுத்து வைத்து விட்டேன். நீங்கள் தயங்கவோ அஞ்சவோ வேண்டாம். தைரியமாகப் பேசலாம்" என்றான் ஜெயசிம்மன்.

தளபதி முதலானவர்கள் யாரும் இல்லாத நிலையில் ஊர்ப் பிரமுகர்களான தங்களிடம் மன்னன் பேசுவது தன்னைப் பற்றி பீற்றிக் கொள்வதற்குத்தான் என்பதை உணர்ந்திருந்த பிரமுகர்கள் மன்னனுக்கு ஈடுகொடுத்துப் பேசி போற்றிப் பாராட்டாவிட்டால் தங்களை மறைமுகமாகத் தண்டிக்க முயற்சிப்பான் என்பதையும் உணர்ந்திருந்ததால் "எதிரி யார் என்பதைக் கண்டு பிடித்து விட்டீர்களா மகராஜா?" என்று அக்கறையோடு விசாரிப்பது போல் விசாரித்தார்கள்.

"எனது ஒற்றர்களை என்னவென்று நினைத்துக் கொண்டீர்கள்? அவர்கள் சந்திரமண்டலத்தில் நடப்பதைக் கூட அறிந்து உளவு சொல்லக் கூடியவர்கள். நான் இன்னும் அங்கே அவர்களை அனுப்பவில்லை"

"அவர்கள் அறிந்து கொண்டு வந்து தெரிவித்த எதிரி யார் மகாராஜா?"

"இன்றைக்குக் கதம்பர்களை எதிர்க்கும் ஆற்றல் யாருக்கும் கிடையாது. சாளுக்கிய சக்கரவர்த்தியின் வலது கரமாக விளங்குவது கதம்ப நாடு. சாளுக்கிய சக்கிரவர்த்தியின் கால் விரலைத் தொடவே நாதியில்லாதவர்கள் அவரது வலது கரமான கதம்ப நாட்டையா எதிர்க்கத் துணிவார்கள்? வடக்கே மாளவர் முதல் தெற்கே சோழர்கள் வரை சாளுக்கியர் என்ற வார்த்தையைக் கேட்டாலே வாளுக்கு இரையாவது போல நடுங்கும் போது கதம்பர்களை எவன் அணுகுவான்?"

மன்னன் ஜெயசிம்மன் கூறுவது உண்மைக்குப் புறம்பானது என்பது பிரமுகர்களுக்கு நன்றாகவே தெரிந்திருந்தது. வாதாபியை தலைநகரமாகக் கொண்ட சாளுக்கியர்கள் வேண்டுமானால் [illegible] அரசப் பரம்பரையாக இருந்தார்களே தவிர [illegible]த்தைத் தலைநகராகக் கொண்ட சாளுக்கியர்கள் அப்படி [illegible] என்பதையும் இராஜ ராஜ சோழன் காலம் தொட்டு [illegible] க்கும் காலமான (முதலாம்) குலோத்துங்கன்

காலம் வரை சோழர்களால் அடிக்கு மேல் அடி வாங்கித் தோல்விகளையே தழுவியர்கள் என்பதை அறிந்திருந்த பிரமுகர்கள் ஜெயசிம்மன் கூறிய கோட்டைப் புளுகைக் கண்டு உள்ளுக்குள் சிரித்துக் கொண்டார்கள்.

“அப்படியானால் தங்களை எதிர்க்க வந்திருக்கும் எதிரி யார்?”

“இன்னுமா தெரியவில்லை? கீழைச் சாளுக்கியர்தான். அவர்கள் தான் நமது மேலைச் சாளுக்கியர்களுடன் அடிக்கடி தொல்லை கொடுத்துக் கொண்டிருப்பவர்கள். இப்போது சோழ நாட்டை ஆண்டு கொண்டிருக்கும் குலோத்துங்கன் கூட கீழைச் சாளுக்கிய நாடான வேங்கி நாட்டவன் தானே? அவனது மறைமுகத் தூண்டுதலில்தான் வேங்கி நாட்டவர் மேலைச் சாளுக்கிய சக்கிரவர்த்தி (ஆறாம்) விக்கிரமாதித்தரை வீழ்த்தும் நோக்கத்துடன் மேற்கு மலைத் தொடரில் தங்கள் தளம் அமைத்துக் கொள்வதற்காக நம்மிடம் மோத வந்திருக்கிறார்கள்.”

“நம்ப முடியவில்லை மகாராஜா. எங்கோ கீழைத் திசையில் இருக்கும் வேங்கி நாட்டவரா நம்மீது படையெடுக்கிறார்கள்? முட்டாள்தான் அவ்வாறு முனைவான்.”

“பேராசை வந்து விட்டால் எல்லோரும் முட்டாள்கள் தான். அறிவிருக்க வேண்டிய இடத்தை ஆசை அடைத்துக் கொண்டு முட்டாள் தனமே முதன்மை பெறும். குருட்டு தைரியம் வந்து விட்டது என்று குருடர்கள் கோலேந்தி வந்தால் அது அறிவீனமல்லவா? வறட்டு வீரம் காட்டிக் கொண்டு வயோதிகர்கள் வாளைப் பிடித்தால் அவர்கள் தோளிழந்து போவார்கள். வேங்கி நாட்டவனும் அப்படித்தான் செயல் படுகிறான். முடவன் தன்னை முழுமையானவன் என்று சொல்லிக் கொள்ளலாம். ஆனால் செயலில் அவன் மூடன். முடவன் அப்படித்தான் தன்னிடம் இல்லாததை இருப்பதாக எண்ணி வந்து கொண்டிருக்கிறான் வேங்கி நாட்டான். ஒற்றர்கள் மட்டுமின்றி வனவாசியில் இருப்பவர்களும் கொடிகளை நாட்டி எனக்கு அறிவித்து விட்டார்கள்.”

“தாங்கள் எதிரிக்கு எதிராக என்ன திட்டம் தீட்டினீர்கள் மகாராஜா?”

“சாதாரணமாக எதிரி வரும் பாதையில் இருந்த மலைக் காட்டைக் கொளுத்தி விட்டேன். அதன் மூலமாக எதிரி நம் கோட்டையை அணுகமுடியாது. அணுக வேண்டுமென்றால் இரண்டு மலைகளைக் கடந்து மேற்குப் புறம் இருக்கும் வெட்ட வெளிப்பாதை வழியாகத்தான் வரவேண்டும். அங்கே நான் மலைச் சரிவுகளில் என் படைகளை நிறுத்தி விட்டேன். எதிரி

அவ்வழியாக வரும் போது எனது படைகள் மலைச் சரிவிலிருந்து நீர் வீழ்ச்சியைப் போல விழும். எதிரி அழிவான். எப்படி என் திட்டம்?"

"எதிரிகளின் படைபலம் எவ்வளவு என்பதை அறிந்து விட்டீர்கள் அல்லவா?"

"எதிரிகளின் படை எவ்வளவு இருந்தால் என்ன? இங்கே நாம் தாக்கப் போகும் இடமும் முறையும் தான் முக்கியம். நீங்களே இரண்டொரு நாட்களில் எதிரி அழிந்து பின்னமாகிப் போகப் போவதை அறிவீர்கள். என்னை வெல்ல இனிமேல் ஒருவன் பிறந்தால்தான் உண்டு. அப்படி யாரும் பிறக்கப் போவதில்லை. அப்படிப் பிறந்தால் அவன் என் பிள்ளையாக இருப்பான். என் அரியணையில் இருப்பான். என் பெயரிலேயே ஜெயம் இருக்கிறது. அது என் காரியத்திலும் இருக்கும். நான் ஜெயசிம்மன். வெற்றி பெறப் போகும் சிங்கம். நன்றி. எல்லோரும் சென்று வாருங்கள். வெற்றி விழாவில் சந்திப்போம்" என்று கூறிவிட்டு அந்தப்புரத்தை நோக்கி அலாதியான ஆனந்தத்துடன் சென்றான்.

அந்தப் புரத்தை அடைந்த போது ஆறுஅழகிகள் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள்.

"ஒருத்தி போதும்" என்று சொல்லி விட்டு உள்ளே சென்றான் ஜெயசிம்மன்.

ஒருத்தி வந்தாள்.

"தாங்கள் தினமும் ஆறு பேருடன் தானே ஆனந்தமாய் இருப்பீர்கள்? இன்று ஒருத்தி போதும் என்றுச் சொல்லி விட்டீர்களே! ஏன் மகாராஜா?" என்று கேட்டாள்.

"உனக்கு அரை நாழிகை அவகாசம் தருகிறேன். நீயே காரணத்தைக் கண்டு பிடித்துச் சொல்" என்று கூறிவிட்டு உணவு வகையறாக்களையும் மது வர்க்கங்களையும் மிகவும் திருப்திகரமான முறையில் உண்டான்.

அரை நாழிகை பொழுது போனது.

"என்ன! கண்டு பிடித்து விட்டாயா?" என்று கேட்டான்.

"தெரியவில்லை மகாராஜா" என்றாள் அழகி.

"இதற்கு விடை தெரியாவிட்டால் உனக்கு வேறு எதற்கு விடை தெரியும்?" என்று கேட்டான் ஜெயசிம்மன்.

"உங்கள் கேள்வி சிக்கலானது மகாராஜா"

"சிக்கலில்லாத கேள்வி எது?"

"இப்படிக் கேட்டால் என்ன சொல்வேன் மகாராஜா?"

"வேறு எப்படிக் கேட்க வேண்டும்?"

"அதை நான் எப்படிச் சொல்வது மகாராஜா?"

"சொல்வதற்கு வேறு யாராவது வருவார்களா?"

"இல்லை"

"பிறகு?"

"மகாராஜா! என்னைத் தாங்கள் குழப்பி விட்டீர்கள்."

"நான் ஒருத்தி மட்டும் போதும் என்றேன். நீ எதற்காக வந்தாய்? என்ன விசேஷம் இருக்கிறது என்று வந்தாய்? என்ன சாதிக்க முடியும் என்று வந்தாய்? பதில் சொல்ல முடியாத கேள்வியை நீயே கேட்டுவிட்டு நான் குழப்புவதாகச் சொல்வது தவறல்லவா?"

"தவறு தான் மகாராஜா?"

"நான் ஏன் ஒருத்தி மட்டும் போதும் என்று சொன்னேன் தெரியுமா? அது என் இஷ்டம். இன்று ஒருத்தி போதும் என்பேன். நாளை இருவரைக் கேட்பேன். மறுநாள் அறுவரைக் கேட்பேன். அதற்கு மேலும் கேட்பேன். அதற்கெல்லாம் காரணம் இருக்க வேண்டியதில்லை. இருந்தாலும் உன்னிடம் சொல்ல வேண்டியதில்லை. உன்னுடைய வேலை என்னுடன் பேசுவதற்கல்ல. இது தெரிந்தும் பேசிய உன் வாய்க்கு என்ன தண்டனை தெரியுமா?"

"என்ன மகாராஜா?"

சொன்னான் அவன்.

அவளுக்கு என்னவோ போலிருந்தது.

"வேண்டாம் மகாராஜா" என்றாள்.

"ஏன் வேண்டாம்?"

"அது.... அது...."

"ஏன்? இதற்கு முன் நீ ஈடுபட்டதில்லையா?"

"இல்....லை"

"நீயெல்லாம் அந்தப்புரத்தில் எதற்கு இருக்கிறாய்?"

"மகாராஜா!அது..."

"இதோ பார். நான் உனக்குக் கொடுத்தது உன் பேச்சிற்கான தண்டனை. அதை நீ ஏற்றுத்தான் ஆக வேண்டும்."

"வேறு தண்டனையைத் தாருங்கள்."

“தண்டனையளிக்கும் உரிமை கொற்றவனுக்கே உண்டு. குற்றவாளிக்கு அது கிடையாது. ம். ஆகட்டும்” என்றான் மூர்க்கமாக.

அவளுக்குக் குமட்டியது.

அவன் விடவில்லை. தண்டனையைக் கொடுத்தான்.

“இவனெல்லாம் ஒரு மன்னனா? இவனுக்குச் சாவு வரக் கூடாதா? இந்த தண்டனையை ராணிக்கு அளிக்க வேண்டியது தானே? அங்கே முடியாமல் இங்கே வந்து என்னைப் போன்றவர்களிடம் வீராவேசம் காட்டுவது என்ன அநாகரிகம்? அட்டூழியம்? அநியாயம்?” என்று உள்ளுக்குள் அவள் குமுறினாளே தவிர தண்டனையிலிருந்து தப்ப முடியவில்லை.

அவனுக்கோ ஆனந்தமாக இருந்தது. அந்தத் தண்டனையை இனி எல்லா பெண்களுக்குமே ஒரு நாழிகை நேரமாவது தர வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டான். அவளுக்கு அத்தண்டனையை நீண்ட நேரத்திற்கு அளித்தான்.

தண்டனை போதும் என்று அவன் நினைத்த போது அவள் மிகவும் நைய்ந்து போயிருந்தாள்.

“இனி காமப் போர்” என்று கூறி அவன் அப்பெண்ணை பலவழிகளில் துன்புறுத்தினான்.

“வேண்டாம். வேண்டாம். முடியவில்லை” என்று அவள் கதறினாள்.

“நீ கதறினாலும் உன்னை உதறமாட்டேன்” என்று சொல்லி பேயைப் போலச் செயல்பட்டான் ஜெயசிம்மன்.

அவள் மேற்கொண்டு கதறவில்லை உயிரை இழந்து விட்டதால்.

மதுவின் மயக்கத்தில் அவள் இறந்து போனது கூடத் தெரியாமல் உறவாடினான் அவன்.

அவள் இறந்தது தெரிந்தபின் “பீடை! அதற்குள் இறந்து விட்டது” என்று சலித்துக் கொண்டானே தவிர கவலைப்பட வில்லை.

எதிரியை வீழ்த்தி விட்டோம் என்ற நினைப்பே பெரிதாக இருந்ததால் மூன்று நாட்களுக்கு அந்தப்புரத்தை விட்டு வெளியே வரவில்லை.

அழகிகளை துஷ்பிரயோகம் செய்து கொண்டிருந்தான்.

நான்காம் நாள் அரண்மனை பக்கம் தலையைக் காட்டிய போது கோட்டைத் தளபதி கண்ணில் பட்டார்.

"என்ன தளபதி? வெற்றி பெற்று விட்டோம் அல்லவா? வெற்றி முரசுகள் கொட்டவில்லையே!" என்று கேட்டான்.

"செய்தி எதுவும் வரவில்லை" என்றார் கோட்டைத் தளபதி.

"இன்னும் இரண்டு நாட்களாகலாம். எதிரியின் பாதை சுற்றுப் பாதையல்லவா?"

"மகாராஜா! உங்கள் நம்பிக்கை அபாயமானது. ஆனாலும் கோட்டையில் இருந்த வீரர்களையெல்லாம் எதிரியைத் தாக்க அனுப்பிவிட்டது தவறு. இதை அப்போதும் சொன்னேன். இப்போதும் சொல்கிறேன்."

"நானும் அப்போது சொன்னதைத்தான் இப்போதும் சொல்கிறேன். எதிரியை வேரோடு அழிப்பது தான் என் நோக்கம். அவன் எங்கிருக்கிறானோ அங்கே அவனை எங்கே வீழ்த்த முடியுமோ அங்கே நம் படைகளை அனுப்பாமல் இங்கே வைத்திருக்க வேண்டிய அவசியமென்ன? படைகள் செயல்படுவதற்காகத் தானே தவிர காட்சிப் பொருளாகக் கோட்டை மீது நிற்பதற்காக அல்ல?

"நான் அப்படிச் சொல்லவில்லை. நம்மிடம் இருந்த இருபதாயிரம் வீரர்களில் பாதியை இங்கே வைத்துக் கொண்டு மீதியை எதிரியை நோக்கி அனுப்பியிருக்கலாம் என்பது என் அபிப்ராயம்."

"தளபதி சொல்வதையெல்லாம் மன்னன் கேட்க முடியாது. மன்னனுக்கென்று அதிகாரம் உண்டு. தீட்சண்யம் உண்டு. அதை அவன் பயன்படுத்துவதை யாரும் தடுக்க முடியாது. அதை விடு. நானிருக்கும் போது உனக்கென்ன கவலை. நானிருக்குமிடம் நமனிருக்குமிடம். யமனே இங்கு வர முடியாது? நமன் எப்படி வருவான்?" என்று சொன்ன ஜெயசிம்மன் கோட்டைக்குள் கூட்டம் போட்டு வெற்றிவிழா கொண்டாட எல்லோரையும் தயாராக இருக்கும் படி எழுச்சியுரை ஆற்றினான்.

வெற்றிக்கான அறிகுறி ஒன்று கூட உண்டாகாத போது வெற்றி விழாவுக்கு ஆயத்தமாகும்படிச் சொன்ன மன்னனை விநோதமாகப் பார்த்தார்கள் மக்கள்.

எல்லாம் முடிந்து விட்ட மாதிரியான களிப்பில் இருந்த மன்னன் "நமது ஒற்றர் படை செய்தி எதையும் கொண்டு வரவில்லையா தளபதி? காற்று நுழைய முடியாத இடங்களில் கூட நுழைபவர்களாயிற்றே நம் ஒற்றர்கள்!" என்று வினவினான்.

“உங்கள் ஒற்றர்களை நீங்கள் தான் புகழ்ந்து பாடிக் கொள்ள வேண்டும். நேற்று இரண்டு ஒற்றர்கள் செய்தி கொண்டு வந்தார்கள். நம்மைத் தாக்கப் படையெடுத்திருப்பவர்கள் வேங்கி நாட்டவர்கள் இல்லையாம். வேலாபுரத்துப் படையாம். ஹொய்சளர் வம்சமாம்” என்று சொல்ல நினைத்த தளபதி தன்னை மதிக்காத மன்னனுக்கு எதற்கு சொல்ல வேண்டும் என்று கருதி “செய்தியை எதிர்பார்த்துக் கொண்டே இருக்கிறேன் மகாராஜா” என்றான்.

ஜெயசிம்மன் அடுத்து தன் வேலை அந்தப்புரத்தில்தான் என்று முடிவு செய்தவனாய் அங்கு சென்றான். தன்னை யாரும் தொல்லை தர வேண்டாம் என்றும் தொல்லை தந்தால் தலை சீவப்படும் என்றும் கட்டளையிட்டு விட்டு பிரவேசித்தான்.

“இதோ பார் அழகி. இன்றைக்கு நாம் எப்படியெல்லாம் மகிழவேண்டும் என்று விவரமாகப் பேசிவிட்டு ஈடுபடலாம். நான் மிகவும் வித்தியாசமானவன்” என்றான்.

“நீ வித்தியாசமானவன் அல்ல. விவஸ்தையற்றவன்” என்று நினைத்துக் கொண்டாள் அழகி.

மன்னனும் விகாரமடைந்து பேசக் கூடாதவைகளை யெல்லாம் விவஸ்தையில்லாமல் பேசி அழகிகளை வெறுப் படைய வைத்து இன்பம் துய்த்து வந்தான்.

மூன்று நாட்களுக்கு இந்தக் கூத்து நீடித்தது.

நான்காவது நாள் நான்கு அழகிகளை நிர்வாணமாக வைத்துக் கொண்டு அவர்களது அங்கங்களில் இருந்த வித்தியாசங்களைப் பிட்டு வைத்துக் கொண்டிருந்தான்.

அறைக்கதவு மூர்க்கமாகத் தட்டப்பட்டது.





மனிதனின் மிகப்பெரிய வேதனை என்ன வென்றால் சுயமாகச் சிந்திக்கக் கூட முடியாமல் போகும் சந்தர்ப்பத்திற்குத் தள்ளப்படுவது தான்.




ஜெயசிம்மனுக்கு மகா கோபம் வந்து விட்டது.

யாரும் தொந்தரவு தரக் கூடாது என்றும் தந்தால் தந்தவர்கள் தலை சீவப்படும் என்று திட்டமான கட்டளையைப் பிறப்பித்தும் கூட எவனுக்குக் கதவைத் தட்டும் தைரியம் வந்தது என்று கொதித்தான்.

அதோடு காமக் கடலில் ஆழ்ந்திருக்கும் போது இடையூறு செய்பவர்கள் யாராக இருந்தாலும் தலையைத் துண்டித்து விடும் கொடிய வெறி அவனுக்கு இருந்தது. எனவே அக்கொடிய கொலை வெறி தற்போது அவனுக்கு மூண்டது.

இருப்பினும் அம்மணமாக அவனைச் சுற்றியிருந்த அணங்குகளை அடையாமல் அரைகுறையாக விட்டு விட அவன் விரும்பவில்லை.

எனவே "தட்டுபவர்கள் தட்டட்டும். அவர்களை அப்புறம் கவனிக்கிறேன். இப்போது உங்களைக் கவனிக்கிறேன். அனைவரும் குப்புறப்படுத்துக் கொள்ளுங்கள்" என்றான்.

"ஐயோ! மகாராஜா! தட்டுபவர்கள் கையை உடைத்து விடுவார்கள் போலிருக்கிறது. அப்படிச் செய்து விட்டால் கேவலமாகி விடும். முதலில் நீங்கள் ஆடையை அணிந்து கொண்டு கதவைத் திறந்து பாருங்கள்" என்று சொன்ன அழகிகள் தங்கள் ஆடைகளை எடுத்து அவசரம் அவசரமாக அணிந்து கொண்டார்கள்.

வேறு வழியில்லாமல் ஜெயசிம்மனும் வெறுப்போடு ஆடைகளை அணிந்து கொண்டு கதவைத் திறந்தான்.

வெளியே கோட்டைத் தளபதி இருப்பதைக் கண்டதும் "டேய்! எதற்காக அநாகரிகமாகக் கதவைத் தட்டினாய்? முட்டாளா நீ? உன் தலை இன்றோடு போய்விட்டது" என்று இரைந்ததும்-

"கதவைத் திறக்கச் சொன்னது இவர்கள். இவர்களைக் கேளுங்கள்" என்றான் கோட்டைத் தளபதி.

அவனுக்குப் பின்னால் வீரர்கள் இருபது பேர் உருவிய வாட்களுடன் நின்றிருந்தார்கள்.

ஜெயசிம்மனுக்கு எதுவும் விளங்காததால் "யார் இவர்கள்?" என்று கேட்டான்.

"ஹொய்சளர்கள்"

"ஹொய்சளர்களா? யார் அவர்கள்? காட்டு வாசிகளா?"

"இல்லை. வேலாபுரத்திற்கும் துவாரசமுத்திரத்திற்கும் சொந்தக்காரர்கள்."

"அவர்கள் ஏன் இங்கே வரவேண்டும்?"

"வந்த காரியத்தை முடிப்பதற்குத்தான்."

"வந்த காரியமா?"

"ஆமாம். உங்களைக் கைது செய்வதற்கு?"

"என்னைக் கைது செய்வதற்கா? நீயென்ன கனவு கண்டாயா தளபதி? என்னைக் கைது செய்ய சாளுக்கியர்களே முயல மாட்டார்கள். நான் காலனுக்குக் காலன்."

"காலம் கடந்து விட்டது மகாராஜா. உண்மையிலேயே இப்போது காலனுக்குக் காலனாக வந்திருப்பது இவர்கள் தான். அமைதியாக இருந்து கைதாகி விடுங்கள்."

"இந்த அற்பர்களிடம் நான் ஏன் கைதாக வேண்டும்?"

"வெற்றி பெற்றவர்களிடம் தோற்றுப் போனவர்கள்தான் கைதாக வேண்டும்."

"வெற்றி பெற்றது நாம் தானே?"

"இல்லை. ஹொய்சளர்கள் வெற்றி பெற்று விட்டார்கள். ஹனகல் கோட்டையைக் கைப்பற்றி விட்டார்கள். அவர்களின் மன்னன் விட்டலராயர் உங்கள் அரியணையில் அமர்ந்து விட்டார். உங்களைக் கைது செய்து வரும்படிக் கட்டளையிட்டார்."

"போர் எப்படி நடந்தது? எப்போது நடந்தது?"

"நேற்று நடந்தது."

"நேற்றா? எனக்குத் தெரியாமல் எப்படி நடந்தது?"

"எதையும் பார்க்க மறுத்து படுக்கையில் படுத்தது மட்டுமின்றி தொல்லை கொடுப்பவர்களுக்குத் தலை இல்லாமல் போய்விடும் என்று கட்டளையை விடுத்தவர் நீங்கள். உங்களுக்குத் தெரிய முடியாத விஷயமாகி விட்டது போர்."

"உனக்காவது தெரியுமா?"

“தெரிந்ததால்தான் சொல்கிறேன்”

“அப்படியானால் போரின் போது நீ என்ன செய்து கொண்டிருந்தாய்?”

“வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன்.”

“தளபதி! நீ பேசும் பேச்சா இது?”

“பேசத் தானே என்னால் முடிந்தது! அந்த நிலையில் தானே என்னை வைத்திருந்தீர்கள்? என்னிடம் படையுமில்லை. பலமுமில்லை. நான் என்ன செய்யமுடியும்? வேடிக்கைதான் பார்க்க முடியும்.”

“இதைச் சொல்ல உனக்கு வெட்கமாக இல்லை.”

“இதே வார்த்தையை நான் உங்களிடம் கூறுவது நாகரிகமாகாது.”

கதம்ப மன்னன் ஜெயசிம்மன் ஒரு நிதானத்திற்கு வந்தான்.

“நம்மை நோக்கி வேங்கிப் படைகள் படையெடுத்து வருவதாகத்தானே செய்தி வந்தது?” என்று கேட்டான்.

“அது பொய்ச் செய்தி”

“பொய்ச் செய்தி என்றால்?”

“நம் ஒற்றர்களுக்குப் பொய்ச் சொல்லி சொல்லப்பட்டது; அதை அவர்கள் நம்மிடம் சொல்லி விட்டார்கள். அதே சமயம்...”

“அதே சமயம் என்ன?”

“மூன்று நாட்களுக்கு முன் இச் செய்தியின் உண்மையின் நிலவரம் எனக்குத் தெரியவந்தது. உங்களிடம் சொல்ல முடியவில்லை.”

“என்னிடம் வேறு என்ன செய்தியைச் சொல்வாய்?”

“மகாராஜா! செய்தியைச் சொல்லும்படிச் சேவகர்களைப் பணித்தேன். உங்களைத் தொல்லை செய்தால் தலை போய்விடும் என்று அவர்கள் மறுத்து விட்டார்கள்.”

“நீ வந்து சொல்லியிருக்கலாமே?”

“என் தலையும் மலிவானதல்ல மகாராஜா. அதோடு அச் செய்தியை உங்களிடம் சொல்வதால் ஒருபலனும் இருக்கப் போவதில்லை. எதிரிகள் யார் என்பதில்தான் மாற்றமே தவிர நம் நிலையில் மாற்றம் ஏதும் இல்லை அல்லவா?”

“பொய்ச் செய்தியை நம் ஒற்றர்களுக்குச் சொன்னது யார்?”

“வனவாசியில் உள்ள நமது ஒற்றர்கள்?”

"அவர்களா? அவர்கள் ஏன் பொய்யான செய்தியை நமது ஒற்றர்களுக்குத் தர வேண்டும்?"

"அவர்களுக்கு அப்படித் தானே செய்தி வந்தது?"

"நீ சொல்வது எனக்கு விளங்கவில்லை."

"மகாராஜா! ஹொய்சளப் படைகள் வனவாசிக்கு வரும் முன்பே அவர்களின் சேனாதிபதி கங்கராஜன் உளவாளியாக வந்தான். நிலைமைகளை அறிந்து கொண்டு சாளுக்கிய ஒற்றனாக நடித்தான். அங்கே இருப்பவர்களிடம் படையெடுத்து வருவது வேங்கி நாட்டுப் படை என்று பொய்யைச் சொல்லி நம்ப வைத்திருக்கிறான். அந்தப் பொய்ச் செய்தி தான் நமக்கு வந்திருக்கிறது."

"கங்கராஜன் எதற்காக இந்தப் பொய்யைச் சொல்ல வேண்டும்?"

"வேங்கி நாட்டவர் சாளுக்கியரின் வெளிப்படையான பகைவர். ஆகவே அவர்களது பெயரைச் சொல்லி ஹொய்சளப் படைக்கு பாதுகாப்பு செய்திருக்கிறான்."

"அவன் தறபோது இருப்பது எங்கே?"

"இங்கு தான்"

"இங்கேயா?"

"ஆம். வனவாசியில் பொய்யைச் சொல்லி விட்டு ஹனகல் கோட்டைக்குத் தூது செல்வதாகக் கூறி அங்கிருந்து வெளியேறி ஹொய்சளப் படையோடு சேர்ந்து கொண்டான்."

ஜெயசிம்மன் சிறிது நேரம் வரை மௌனமாக இருந்தான். தன்னைக் கைது செய்ய எதிரி வீரர்கள் காத்திருந்தாலும் பதற்ற மடையாத அளவிற்கு நிதானத்திற்கு வந்திருந்தான். தனது சந்தேகங்களை தளபதியிடம் கேட்டுத் தெரிந்து கொண்டால் தான் உண்டு என்பதையும் சிறைக்குள் போய் விட்டால் எதையும் அறிய முடியாது என்பதையும், அறிய முற்படுவதற்குள் தனது சிரம் அரியப்படலாம் என்பதையும் உணர்ந்து கொண்டதால் தளபதியிடம் கேட்டான்.

"தளபதி! நாம் தீட்டிய திட்டம் உனக்குத் தெரியும். அப்படியிருக்கும் போது எதிரி எப்படி வெற்றி பெறமுடியும்?"

"நீங்கள் திட்டம் தீட்டலாம். பட்டை தீட்டலாம். எதிரி அதை ஒப்புக் கொள்ள வேண்டுமல்லவா? எதிரியைச் சுற்று வழியில் வரவழைத்து அழிக்க நம்மிடம் இருந்தப் படையை முழுவதுமாய்

அனுப்பிவிட்டு மலைக் காட்டைக் கொளுத்தினீர்கள். எதிரியைத் தடுக்க நீங்கள் செய்த ஏற்பாடு அது."

"அது சரியானது தானே?"

"சரியானதுதான். எதிரியும் அப்படி நினைக்க வேண்டும் என்ற அவசியமில்லை மகாராஜா."

"எதிரி என்ன செய்தான்?"

"நீங்கள் திட்டமிட்ட சுற்று வழியில் அவன் வரவில்லையே. மலைக்காடு எரிந்து தணியும் வரை பொறுமையாக இருந்து மலைக்காடு வழியாகவே வந்தான். மலைக்காட்டை அடுத்து இருப்பது நம் கோட்டை. மலைச் சரிவிலிருந்து பார்த்தால் நமது கோட்டையின் உள் வயணங்கள் முழுவதும் தெரியும். கோட்டைக்கு உள்ளேயும் வெளியேயும் படைகள் இல்லை என்பதும் தெரியும். தெரிந்து கொண்டு அவனது படைகள் எரியம்புகளை நம் கோட்டை மீது எரிந்தன. நான் அதைக் கண்டேன். எதிரியோடு போரிட நம்மிடம் படையில்லை. எதிரியை அனுமதித்தால் எரியம்புகளால் கோட்டை பற்றி எரியும். அது எதற்கு? கோட்டையைக் காக்கச் சமாதானத் தாரைகளை வீசினேன். எரியம்புகள் எய்யப்படுவது நின்றது. ஹொய்சளப் படைகள் உள்ளே பிரவேசித்து கோட்டையைக் கைப்பற்றி வெற்றி முரசுகளை முழக்கின. ஹொய்சள மன்னனை நானே அரியணையில் அமர்த்திச் சம்பிரதாயமுறைப்படி சாமரம் வீசினேன். உங்களைக் கைது செய்து வரும்படி எனக்குக் கட்டளையிட்டான் வந்தேன்."

"தளபதி! இத்துணை விவரமாகச் சொல்கிறாயே! உனக்கு நெஞ்சு வெடிக்க வில்லையா?"

"இல்லை."

"இல்லையா?"

"ஆமாம், மகாராஜா. கோட்டையில் இருந்தப் படைகளை யெல்லாம் வெட்ட வெளிக்கு வெளியேற்றிய போதே என் நெஞ்சு வெடித்து விட்டது. இப்போது வெடிப்பதற்கோ விரிவதற்கோ எதுவுமில்லை" என்று கூறி சற்று நிறுத்திய தளபதி சற்றே சலிப்படைந்து "மகாராஜா! போர் என்பது ஒரு சதிக்களம். வெறும் வீரம் மட்டுமே அங்கே வெளிப்படுவதில்லை. ஆகவே அதில் ஈடுபடுவதற்கு முன் பலவாறு யோசிக்க வேண்டும். நீங்களோ ஒரு விதமாக மட்டுமே யோசித்தீர்கள். அந்த ஒற்றை வழி வீர வழியாக இருந்திருந்தால் கௌரவமாக இருந்திருக்கும். நீங்கள் அப்படியும் யோசிக்கவில்லை. நாம் நம்மையும் நம் திட்டத்தையும் மட்டுமே நம்பினோம். பிறர் யோசனைகளை

வில்லை. இக்கெட்டான கால கட்டங்களில் பிறர் னைகளுக்கு இடமளிக்க மறுப்பவன் வெட்ட வெளியில் ப்பட்ட விடலைப் பிள்ளையைப் போல விழி பிதுங்கித் தான் ான்" என்றான்.

னது யோசனையை கேட்காமல் அலட்சியப் படுத்துவதையே பதி மீண்டும் மீண்டும் சுட்டிக் காட்டுகிறான் என்பதை ர்ந்தான் ஜெயசிம்மன். இப்போரை தான் மிகவும் எளிதாக ணி ஏமாந்து விட்டதையும் அதே சமயம் எதிரியோ மிகவும் ிதாக வெற்றி ஈட்டி விட்டதையும் அறிந்த அவனுக்கு கமாகவும் வேதனையாகவும் இருந்தது. தன்னைக் கைது ய்ய எதிரி வீரர்கள் உறுவிய வாட்களோடு நிற்கும் நிலையில் று மாதிரி நினைக்கவோ செயல்படவோ அவனால் லவில்லை.

"ஏன் தளபதி, நமது இருபதாயிரம் படைகள் திரும்பி வந்து தாக்கினால் கோட்டையை மீட்க முடியாதா?" என்று கேட்டான்.

கோட்டையை ஆக்கிரமித்துள்ள ஹொய்சளப் படைகள் ந்தத் தாக்குதலையும் எதிர்கொள்ளத் தயாராகி வருகின்றன. ஹனகல் கோட்டை வனதுர்க்கம் என்று அழைக்கப் பட்டாலும் ண்மையில் அது அவ்வாறு இல்லை.ஆகவே அதை உண்மையான வனதுர்க்கமாக மாற்றப் போவதாக விட்டலராயன் என்னிடமே சொன்னான். அதற்கு நீண்ட நாட்கள் ஆகும். இப்போதைக்குக் கோட்டை பலப்படுத்தப் படுகிறது. எதிரிகளை எதிர்பார்க்காமல் நாம் நமது மதில் பொறிகளைத் துருபிடிக்க வைத்திருந்தோம். அவற்றை எதிரி சரி செய்து சுறுசுறுப்பாக இயங்க ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருக்கிறான். நமது படைகள் திரும்பி வருவதைத் தடுக்க ஆங்காங்கே தடுப்புகளையும் மறைமுகத் தாக்குதலுக்கான பொறிகளையும் அமைக்கச் சொல்லி விட்டான். நமது படைகள் வந்தால் அவற்றை மதிள் மீதிருந்தும் மலைச் சரிவிலிருந்தும் தாக்குவதற்கு வீரர்கள் தயாராகி வருகிறார்கள். நமது படை வந்தால் அழிந்து விடும். எல்லாவற்றையும் விட முக்கியமானது ஒன்றிருக்கிறது. ஹனகல் கோட்டையில் அரசரான நீங்கள் படைகளோடு இல்லை. கோட்டைக்குள், எதிரியின் பிடிக்குள் இருக்கிறீர்கள். உங்களையும், உங்கள் குடும்பங்களையும், இங்கே உள்ள மக்களையும் பணயமாக வைத்து மிரட்டினால் படைகள் எதுவும் செய்ய முடியாது" என்றான் தளபதி.

"நம் படைகளை இங்கே வரவழைக்காமல் வன வாசிக்கு அனுப்பி பத்திரமாக இருக்கச் செய்து பிறகு ஹொய்சளப் படையைத் தாக்கலாம் அல்லவா?"

ஜெயசிம்மன் இவ்வாறு சொன்னதுமே வீரர்கள் நெருங்கி வந்து அவனது இரண்டு கைகளையும் முதுகுப் பக்கத்தில் இணைத்து கயிற்றால் கட்டினார்கள்.

"ஒழுங்காக நடவுங்கள். இல்லையென்றால் கால்களையும் வாயோடு கண்களையும் கட்டும் படி எங்கள் மகாராஜா கட்டளையிட்டிருக்கிறார்" என்று தெரிவித்தார்கள்.

ஜெயசிம்மன் அவர்களை எதிர்த்துப் பேசும் நிலையில் இல்லை.

விழித்தான்.

அறையில் இருந்த ஆறு அழகிகளும் ஆடைகளை அணிந்து கொண்டு வெளியில் வந்து வேடிக்கை பார்த்தார்களேயன்றி வாடவில்லை, வருந்தவில்லை. கண்ணீரைச் சிந்தவில்லை. ஒவ்வொருத்தியும் ஒரு நடன அபினயத்துடன் சிலை போல் நின்றிருந்ததைக் கண்ட ஜெயசிம்மன் "எல்லா மரியாதையும் பதவி இருக்கும் வரை தான். பதவி போய் விட்டால் பச்சாதாபப் படவும் யாரும் இருக்க மாட்டார்கள். மன்னனுக்குப் பதவி போனால் அவன் பிச்சைக்காரன்தான்" என்று எண்ணிக் கொண்டு நடந்தான்.

"மகாராஜா! வனவாசிக் கோட்டை உடைந்து போன கோட்டை அங்கே கொத்தளங்கள் இல்லை. படைகள் இல்லை. மக்களும் இல்லை. உளவறிவதற்காக நமது ஒற்றர் படை மட்டுமே அங்கே இருக்கிறது. பாழடைந்து விட்ட அப்பழையக் கோட்டையில் ஒற்றர்களைத் தவிர நாய்கள் இருக்கலாம். நரிகள் இருக்கலாம். குரங்குகள் இருக்கலாம். கொடிய விலங்குகள் இருக்கலாம். ஆகவே அக்கோட்டையை மறந்து விடுங்கள். தற்போது நீங்களும் நானும் ஆணையிடும் நிலையில் இல்லை. ஆணைக்குக் கீழ்படியும் நிலையில் இருக்கிறோம். எனவே நடப்பதை எதிர்கொள்ளுங்கள். நடக்கக் கூடியது அதுதான்" என்றான் தளபதி.

மனிதனின் மிகப்பெரிய வேதனை என்னவென்றால் சுயமாகச் சிந்திக்கக் கூட முடியாமல் போகும் சந்தர்ப்பத்திற்குத் தள்ளப் படுவதுதான்.

அந்த நிலையில்தான் இருந்தான் ஜெயசிம்மன்.

சோகத்தோடு முகத்தைத் தொங்கவிட்டபடி நடந்தான்.

வீரர்கள் அவனை நேரே அரண்மனைக்கு அழைத்துச் செல்லவில்லை. கோட்டையின் பிரதான சாலைகளின் வழியாக அழைத்துச் சென்றார்கள்.

"இது ஏன்?" என்று கேட்டான் ஜெயசிம்மன்.

"உங்களை ஊர் மக்கள் பார்க்க அழைத்து வரும் படி எங்கள் மகாராஜா விட்டலராயரின் உத்தரவு" என்றார்கள் வீரர்கள்.

"இது தர்மமா?" என்று கேட்டான் ஜெயசிம்மன்.

"பகைவரிடம் தர்மம் காட்ட வேண்டிய அவசியமில்லை என்பார் எங்கள் மகாராஜா" என்று சொன்ன வீரர்கள் "நீங்கள் நிறைய பேசிவிட்டீர்கள். இனிமேலாவது பேசாமல் வந்தால் நல்லது. இல்லையென்றால் வாயைக் கட்டும் படி இருக்கும்" என்றார்கள்.

ஜெயசிம்மன் அதற்குப் பிறகு வாயைத் திறக்காமல் நடந்தான். பிரதான வீதிகளில் மக்கள் அளவுக்கு அதிகமாகவே கூடி அவனது அவல ஊர்வலத்தைக் கண்டார்கள்.

வறட்டு கௌரவம், வீண் பேச்சு, முரட்டுச் சுபாவம், தானென்ற அகங்காரம், பெண்களைப் புல்லாக நினைக்கும் திமிர் ஆகியவைதான் அவனது குணங்களாக இருந்ததால் அவனால் சுகப்படாத மக்கள் அவனது அவலத்தைக் கண்டு அழவில்லை. அரற்றவில்லை. வருந்தவில்லை. வேதனைப்பட வில்லை.

நடக்க வேண்டியது நன்றாகவே நடக்கிறது என்று நினைத்து வேடிக்கைப் பார்த்தார்கள். ஓரிரு இடங்களில் அவன் மீது கற்களை எறிந்தார்கள்.

பதவியில் இருந்து கொண்டு மக்களுக்கு நற்காரியங்களைச் செய்வதற்கான வாய்ப்பும் உரிமையும் இருக்கும் போது அவற்றைக் கைவிட்டு தான், தன் சுகம் என்று வாழ்பவன் பதவி பறிபோனபின் மக்களால் முழுவதுமாகக் கைவிடப்படுகிறான். கைகழுவப்படுகிறான்.

ஊர்வலம் முடிந்து அரண்மனையை நெருங்கிய போது ஜெயசிம்மனை விட்டலராயன் சந்திக்கவில்லை. சிறையில் அடைக்கும் படியும் இரண்டு நாட்கள் கழித்துச் சந்திப்பதாகவும் அங்கிருந்த வீரர்கள் கூறிவிட்டதால் ஜெயசிம்மன் சிறையில் அடைக்கப்பட்டான்.

சிறைக்குள் சென்றதும் விசாரிக்க முற்பட்ட போது அங்கே இருந்தவர்கள் எல்லோருமே ஹொய்சளர்களாக இருந்ததைக் கண்ட ஜெயசிம்மன் எதிரியின் வேகத்தைக் கண்டு அசந்தான்.

சொந்த நாட்டுச் சிறையிலேயே அடைக்கப்பட்ட சோகத்தால் அடிபட்ட நாகம் துடித்த அவன் "இந்தச் சிறையில் வேறு யார் யார் யார் அடைக்கப் பட்டிருக்கிறார்கள்?" என்று வினவினான்.

"உங்கள் மனைவிமார்கள் ஐவர். ஆசை நாயகிகள் அறுவர். அந்தப்புரச் சொந்தங்கள் ஐம்பது பேர். புதல்வியர் பத்து. குடும்ப ஜோதிடர் இரண்டு. உங்கள் வளர்ப்பு பூனைகள் மூன்று" என்றான் காவலன்.

"பூனைகளைக் கூடவா சிறையில் அடைத்து விட்டார்கள்?"

"உங்களுக்கு வேண்டியவர்களிடம் தேடி வருகிறோம். உங்களுக்கு வேண்டப்பட்ட பூனைகள் மட்டுமல்ல புழுக்களாக இருந்தாலும் சிறையில் வைத்து விடும்படி எங்கள் மகாராஜாவின் உத்தரவு."

ஜெயசிம்மன் பேசவில்லை.

அப்போது அவனைப் பார்க்க ஊர் முக்கியஸ்தர்கள் முப்பது பேர் வந்தார்கள்.

வெற்றி விழாவில் சந்திக்க வரச்சொல்லிய பிரமுகர்கள் தான் சிறையில் இருக்கும் போது வந்து நின்றது அவனுக்கு அவமானமாக இருந்தது.

"நான் நடந்தால் யானை. அமர்ந்தால் சிங்கம். பாய்ந்தால் புலி. மேய்ந்தால் பசு. கடித்தால் பாம்பு என்று சொல்வீர்களே மகாராஜா! தற்போது தாங்கள் காலொடிந்த கரகாட்டக் காரனைப் போல் இருக்கிறீர்களே?" என்று வினவினார்கள்.

எதிரே வருபவன் எதைப் பேசக் கூடாது என்று விரும்புகிறோமோ அதையே அவன் பேசும் போது கொடுமையாக இருக்கும்.

"என்னிடம் உயிர் இருக்கும் வரை நான் எமன். இந்த மயிர் இருக்கும் வரை மன்னன். எனக்கு இன்னமும் மானமிருக்கிறது மயிர் இருக்கிறது" என்றான் ஜெயசிம்மன்.

"மயிர்களை மழித்து விட்டு உங்களைக் கழுவில் ஏற்றப் போவதாகக் கேள்விப்பட்டோம் மகாராஜா" என்றார்கள் பிரமுகர்கள்.

"நடவாததைப் பேசவேண்டாம். புறப்படுங்கள்"

"இனி நல்ல காலம்தான் மகாராஜா"

"யாருக்கு?"

பிரமுகர்கள் அதற்குப் பதில் சொல்லவில்லை.

ஜெயசிம்மனோ சிறையில் அரை வினாடி கூட இருக்க முடியாமல் தவித்தான்.

சிறைக் காவலர்கள் அவனை நல்ல முறையில் நடத்தினாலும் அவனுக்கு அது மகிழ்ச்சியைத் தரவில்லை.

பலியிடப் போகும் ஆட்டிற்கு நடக்கும் உபசாரங்களாகவே அவற்றைக் கருதினான்.

நாள்தோறும் அழகிகளோடு ஆனந்தம் துய்த்தே பழக்கப்பட்ட அவனுக்கு பூச்சிகளோடும் புழுக்களோடும் வாழ்வது சித்திரவதையாக இருந்தது.

பல்வேறு பட்ட கைதிகளைப் பலகாலமாகச் சிறையில் அடைத்து அவர்களின் நிலைபற்றி அணுஅளவும் கவலைப் படாமல் காலத்தை ஓட்டிவந்த ஜெயசிம்மனுக்குத் தற்போது தான் சிறை எவ்வளவு கேவலமாக இருக்கிறது என்பது புரிந்தது.

அறையை மாற்றும்படிச் சொன்னான்.

"வேண்டாம் ஐயா. இந்த அறையே நல்லது. பிற அறைகளில் பாம்புகள் நடமாடுகின்றன" என்றான் காவலன்.

மூன்றாம் நாள் நள்ளிரவில் அவனது அறையில் ஓலையொன்று வந்து விழுந்தபோது அவனுக்குப் புதிராகவும் வியப்பாகவும் இருந்தது. இருட்டில் படிக்க முடியாததால் மறுநாள் காலையில் படித்தான்.

அன்று அவனை அரண்மனைக்கு அழைத்துச் சென்றார்கள்.

"எனக்கு என் அரியணை வேண்டும்" என்றான் ஜெயசிம்மன்.

"நான் கூறும் நிபந்தனைகளை ஏற்றால் தருகிறேன்" என்றான் விட்டலராயன். அவற்றைச் சொல்லவும் செய்தான்.

ஜெயசிம்மனுக்கோ நிபந்தனைகளை ஏற்பதை விட இறந்து விடலாம் என்று தோன்றியது.





வேறுவேறு இனமாகவும் வேறுவேறு கொள்கையை உடையவர்களாகவும் இருப்பவர்கள் கூட்டணி அமைப்பது வேர்களை அழித்துக் கொண்டு ஒன்று சேர்வதைப் போன்றது – விட்டலராயன்



சிறைவாசம் எவ்வளவு நாட்கள் நீடிக்கும் என்பது தெரியாததாலும், சிறையின் அறையில் இருந்தப் பூச்சியினங்கள் கடித்து வந்ததாலும், அறையானது சுத்தப்படுத்தப்படாமல் குப்பை சேர்ந்த இடம் போலவே இருந்ததாலும் சுகவாசியான ஜெயசிம்மன் பெரிதும் சிரமப்பட்டான்.

சிறைக்கு வந்த இரண்டாம் நாள் இரவு பாம்பு ஒன்று அவனிருந்த அறைக்கு வந்து கதவிலேயே பிரயாணம் செய்து விட்டுப் போயிற்று. அது அறைக்குள் நுழைந்திருந்தால் அவன் மரண வாசலில் பிரவேசித்திருப்பான். அவனுக்கு மரணயோகம் இல்லை என்பதாலோ என்னவோ நாகப் பாம்பு அவனைக் கடிக்காமல் நல்ல பாம்பாக விலகிச் சென்றது.

ஆக-

சிறையில் கூட நிம்மதியில்லாமல் உயிருக்குப் பயப்பட வேண்டியச் சூழ்நிலையை அவனால் ஜீரணிக்க முடியவில்லை.

மீண்டும் பாம்பு வந்தால் என்ன செய்வது என்ற அச்சத்தில் அவனால் தூங்க முடியவில்லை.

இந்த நிலையில் மூன்றாம் நாள் நள்ளிரவு. சிறைப் பகுதி அமைதியாக இருந்தது. அதோடு அவனிருந்த அறை சிறை வளாகத்தின் கோடியில் தாழ்வான இடத்தில் இருந்தது. இரவு நேரங்களில் காவலர்கள் கூட அங்கே வருவதில்லை. கைதிகளுக்கு உரிய உணவை மாலையிலேயே வைத்து விட்டு பாண்டங்களை மறுநாள் காலையில் எடுத்துச் செல்வது அவர்களுக்கு வழக்கமாகியிருந்ததென்றால் அதற்குப் பேய் பயமே காரணமாக இருந்தது.

கோட்டை இருந்த இடம் அடர்ந்த வனாந்திரமாதலால் துஷ்ட மிருகங்களுக்கு இரையானவர்களின் ஆவிகள் மலைக் காடுகளில் அலைந்து, மலைக் கோட்டைகளில் நுழைந்து அங்குள்ளோர்களது உடம்பில் பிரவேசித்து ஆட்டம்

போடுவதாகப் பேசிக் கொண்டார்கள். அப்பேய்களில் மலை காட்டுப் பேய் ஒன்று சர்வசக்திகளுடன் ஹனகல் கோட்டையில் பிரவேசித்திருப்பதாகவும், சிறை வளாகப் பகுதியில் தினமும் இரவு நேரங்களில் உலவுவதாகவும், சில நேரங்களில் அந்த வளாகத்தில் உள்ளவர்களில் சிலரைக் கழுத்தை நெரித்துக் கொன்று விடுவதாகவும் சிறை வளாகத்தில் நம்பப்பட்டு வந்ததால் அங்கே நள்ளிரவுக்குப் பிறகு நாய்கள் கூடச் செல்வதில்லை.

இது குறித்து ஜெயசிம்மனிடம் காவலர்கள் சிலர் தெரிவித்த போது "பூச்சிக்கடி, பாம்புக்கடி போதாதென்று பேய்க்கடி வேறா?" என்று சொல்லி அதிர்ந்து போனான்.

தன் சிறை இருந்த நிலை தெள்ளத் தெளிவாக அவனுக்குப் புரிந்தது. தனது கோட்டையில் இதுநாள் வரை இருந்து வருவது சிறையல்ல - சுடுகாடு என்பதை உணர்ந்தான்.

இந்நிலையில் மூன்றாம் நாள் இரவு மழை பொழிந்து ஒரு கலக்கு கலக்கியது. ஆறு நாழிகை வரை மழை பெய்ததால் சிறை வளாகத்தில் மழை நீர் ஆறு போல் ஓடியது. ஜெயசிம்மன் இருந்த பகுதியில் தண்ணீர் மிகவும் பெருகி அருகில் அருவியாக வெளிப்பட்டது. இந்த கனமழையின் போது பாம்புகள் வெளிப்பட்டு ஒதுங்க இடம் தேடினால் தன்னிருப்பிடத்திற்குத் தான் சங்கடம் வரும் என கருதி பயந்து கொண்டிருந்தான்.

நல்ல வேளையாக பாம்பு எதுவும் அவன் அறைக்கு விஜயம் செய்யவில்லை.

அந்த அளவில் திருப்தியடைந்தாலும் படுக்க முடியாமல் அறையிலேயே உலவினான் ஜெயசிம்மன். கன மழை பெய்த போதும் சரி, பெய்து ஓய்ந்த போதும் சரி காவலர்கள் மறந்தும் கூட அந்தப் பக்கமாக வரவில்லை. மழை நின்று போய் விட்டதை அறிவிப்பது போல் மேகங்கள் மோதி இடியோசையை எழுப்பி, பிறகு அந்த இடியோசையும் நின்று அந்தப் பகுதியில் அமைதி நிலவத் தொடங்கியது. ஓரிரு தவளைகள் மட்டும் சும்மாயிருக்க முடியாமல் சிறிது நேரம் இரைந்து விட்டு அடங்கின. மயான அமைதி நிலவிய போது இரண்டு ஆந்தைகள் திடீரென அலறிய விதமானது இரவின் அமைதியைக் கெடுக்க நாங்கள் இருக்கிறோம் என்று அறிவிப்பது போலிருந்தது. அவற்றின் திடீர் குரல்கள் ஓய்ந்தபின் 'ஜல்ஜல்' என்றச் சலங்கை ஒலி கேட்டது.

தொலைவில் கேட்ட சலங்கை ஒலி அருகில் கேட்டதையும் தான் இருக்கும் அறையை நெருங்குவதையும் உணர்ந்த ஜெயசிம்மனுக்குப் பேய்ப் பயம் கௌவ்விக் கொண்டது.

பாம்பென்றால் படையும் நடுங்கும். பேய் என்றால் மன்னனும் நடுங்குவான். ஜெயசிம்மன் வீரதீரப் பிரதாபங்களுக்குப் பெயர் பெற்றவனல்ல. எனவே பேய் பிசாசு என்று வரும் போது அவை இல்லை என்று தைரியப்படாமல் இருப்பதாகவே எண்ணிக் கலங்கினான்.

காவலர்கள் தெரிவித்த மலைக்காட்டுப் பேய் தான் தன்னை நோக்கி வருவதாக நினைத்தான். கடைசியில் தன் வாழ்க்கை பேய்களின் கைகளில்தான் முடியப் போகிறதா என்ற கிலி அவனை வாட்டியது.

இதற்கிடையில் அவன் இருந்த அறையை நோக்கி கறுப்பான ஓர் உருவம் வரலாயிற்று. ஜல்ஜல் என்ற ஒலி குறைந்தது. அது பேய்தான் என்று முடிவுகட்டிய ஜெயசிம்மன் “வேண்டாம். வேண்டாம். என்னை ஒன்றும் செய்யாதே” என்றும் சத்தமிட்டான்.

அப்போது ‘டம்’ என்ற சத்தம் அவனது அறையில் கேட்டது.

தன்னை நெருங்கிய பேய் எதையோ அறையில் எறிந்ததைக் கவனித்தான்.

உள்ளே எறியப்பட்டதும் ‘பேய்’ அங்கிருந்துத் திரும்பிச் சென்றது.

ஒரு கணம் ஜெயசிம்மனுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை.

அறை ஒரே இருட்டாக இருந்ததால் கீழே குனிந்து உள்ளே விழுந்த பொருளை எடுக்கத் தடவினான். அவனது கைகளில் சிக்கிய பொருள் தட்டையாக இருந்தது. சுரசுரப்பாக இருந்தது.

அது ஓர் ஓலை என்பதை உணர்ந்தான்.

‘பேய் ஓலையை எறியுமா?’ என்று தனக்குள் கேட்டுக் கொண்ட அவன் “இருக்காது. வந்தது மனிதன்தான்” என்று தெளிந்தான்.

தன் இடத்திற்குக் காவலர்களே வராத நிலையில், நள்ளிரவில் தன்னைத் தேடி ஒருவன் வந்து எதுவும் பேசாமல் ஓலையை மட்டும் எறிந்து விட்டுப் போகிறான் என்றால் அவன் தனக்கு வேண்டியவனாகத் தான் இருக்க வேண்டும் என்று கருதி ஓரளவிற்கு ஆறுதல் அடைந்தான்.

அறை இருட்டாக இருந்ததால் ஓலையைப் படிக்க முடியவில்லை. எப்போது பொழுது விடியும் என்று காத்திருந்தான்.

பொழுது விடிந்ததும் முதல் வேலையாக ஓலையைப் படித்தான்.

'அடங்கவும். அடக்கி வாசிக்கவும். விடுதலை விரைவில்' என்று ஒரு வாக்கியம் மட்டுமே ஓலையில் இருந்தது. அந்த வார்த்தையின் கீழே போடப்பட்டிருந்த வராக உருவத்தைக் கண்டான். அவனுக்கு ஏதோ புரிந்தது.

தனக்கு அபயம் அளிக்கும் ரகசிய ஓலை என்று தீர்மானித்த ஜெயசிம்மன் அதை உடனடியாகக் கிழித்து மூலையில் போட்டான். மூலையில் ஏற்கனவே இருந்தக் குப்பையோடு அதுவும் போய்ச் சேர்ந்தது.

அதற்குப் பின் பல நாழிகைகள் கழித்து ஜெயசிம்மன் அறையிலிருந்து அகற்றப்பட்டு, நீராட்டம் முதலியவற்றுக்கு அனுப்பப்பட்டு, புதிய ஆடைகளை அணிவித்து, உணவு வகைகள் அவனது விருப்பப்படி பரிமாறப்பட்டு அரண்மனைக்கு அழைத்துச் செல்லப்பட்டான்.

அங்கே தனது அரியணையில் அமர்ந்திருந்த ஹொய்சள மன்னன் விட்டலராயனைக் கண்டதும் அவனது கண்களில் அசூயை தோன்றி மறைந்தது.

தான் அமர்ந்து ஆட்டம் போட்ட அரியணையில் எதிரி அமர்ந்து விட்டது தனது தோல்வி என்பதையும், தனது துர்பாக்கியம் என்பதையும், மாபெரும் அவமானம் என்பதையும் அறிந்தாலும் ஆகக்கூடியது எதுவும் இல்லாததால் இயலாமையின் எல்லையில் நின்று புலம்பினான் ஜெயசிம்மன்.

"வேலாபுரத்து வேந்தன் சமணன் என்றும் சமணர் கொள்கையிலும் பிடிப்புடையவன் என்றும் நான் கேள்விப்பட்டிருக்கிறேன். நீ இது வரை நடந்து கொண்டது எதுவும் சமணர் கொள்கைக்கு ஏற்புடையதல்ல. இதற்காக நீ வெட்கப்பட வேண்டும்."

விட்டலராயன் அசரவில்லை.

"நான் இங்கே சமண சமய பிரச்சாரத்திற்காக வரவில்லை. போரிடுவதற்காகப் படைகளோடு வந்தேன். அதோடு மதம் வேறு. ராஜ்யம் வேறு. நான் சமணர்களை ஆதரித்து போற்றினாலும் மன்னன் என்ற முறையில் எல்லா மதங்களையும் மதிக்கிறேன்" என்றான்.

"நீ ஒரு மன்னனாகக் கூட நடந்து கொள்ள வில்லை. சிறையில் நீ எனக்களித்த அறையில் நாய்கள் கூடத் தங்காது" என்றான் ஜெயசிம்மன்.

"நீ கூறுவது உண்மைதான் என்றால் அதற்காக வெட்கப் பட வேண்டியவன் நீதான். உன் சிறையின் நிலைக்கு நீ தான் பொறுப்பு."

“சிறை மோசமாக இருந்தால் தனி மாளிகையில் என்னை வைத்திருக்கலாம்.”

“யார் யாரை எங்கே வைக்க வேண்டும் என்பது எனக்குத் தெரியும். உன்னை அழைத்தது உன் கேள்விக்குப் பதில் சொல்வதற்கல்ல. அந்த ஆசனத்தில் உட்கார்.”

ஜெயசிம்மன் தனது தோரணையைக் குறைத்துக் கொண்டு ஆசனத்தில் அமர்ந்தான்.

விட்டலராயன் பேசமுற்பட்டு “ஜெயசிம்மா! நான் சாளுக்கியரது ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு சுயமாக ராஜ்யத்தை உருவாக்கத் தீர்மானித்து விட்டேன். சாளுக்கியர் ஆதிக்கத்தில் இருக்கும் அரசுகளை வென்று என் ஆதிக்கத்திற்குக் கொண்டு வந்துவிட்டு கடைசியாக சாளுக்கியரோடு மோதுவது என்பது நாங்கள் எடுத்த முடிவு” என்றான்.

“உன் முடிவு பகற்கனவு. ஒரு போதும் நிறைவேறாது” என்றான் ஜெயசிம்மன்.

“கனவா நனவா என்பதை காலம் முடிவு செய்யும். காலத்தின் போக்கில் போவது ஒரு வகை. காலத்தை நம் பக்கம் இழுப்பது இன்னொரு வகை. நான் இரண்டாவது வகை. காலம் கனியும் என்று காத்திருந்தால் ஓலமிட்டபடி ஓட வேண்டியதுதான். ஏற்கனவே தலைமுறை தலைமுறையாகச் சாளுக்கியர்களுக்கு ஊழியம் செய்து விட்டோம். இனியும் காத்திருப்பதில் அடிமைத்தனம்தான் மிஞ்சும். ஆகவேதான் முடிவெடுத்தேன். தொடங்கியும் விட்டேன்.”

“அது உண்மைதான் என்றால் எங்களைப் போன்றவர்களை நட்பால் இணைத்து கூட்டணி அமைத்து சாளுக்கிய சாம்ராஜ்யத்தை எதிர்க்கலாமே?”

விட்டலராயனுக்கு நுளம்பவாடி அரசனின் துரோகம் நினைவிற்கு வந்தது.

“போருக்குப் புறப்பட்டு விட்டபின் சமாதானம் பேச முற்படுவது எல்லா நேரத்திலும் நல்லத் தீர்வாக அமைவதில்லை. ஆகவே நட்பு, கூட்டணி என்றெல்லாம் பேசவோ செயல் படவோ நான் தயாராக இல்லை. வேறுவேறு இனமாகவும் வேறு வேறு கொள்கை கொண்டவர்களாகவும் இருப்பவர்கள் கூட்டணி அமைப்பது என்பது வேர்களை அழித்துக் கொண்டு ஒன்று சேர்வதைப் போன்றது. அது அழிவு வேலையை தவிர ஆக்கப் பூர்வமான வேலையல்ல. அதைப் பற்றிய பேச்சு வேண்டியதில்லை. இப்போது ஹனகல் கோட்டை எங்கள் வசமாகி விட்டது. இது

சம்பந்தமாக மட்டுமே பேச நாம் இப்போது கூடியிருக்கிறோம்'' என்று கூறி சற்று நிறுத்திய மன்னன் விட்டலராயன் "ஜெயசிம்மா! நீ கதம்ப நாட்டின் அரசனாக நீடிக்க வேண்டுமானால் எங்கள் நிபந்தனைகளுக்குக் கட்டுப்பட வேண்டும்'' என்றான்.

ஜெயசிம்மன் "ம்'' என்று ஒற்றைச் சொல்லை மட்டுமே உதிர்த்தான். தனது நாட்டிற்கு வந்து, தனது ஆட்சியை அகற்றி, தனது அரியணையில் அமர்ந்து, தனக்கு நிபந்தனைகளை விதிக்க விட்டலராயன் முற்பட்டது வெறுப்பாக இருந்தது ஜெயசிம்மனுக்கு.

"கதம்ப நாடு ஹொய்சளர் ஆதிக்கத்திற்கு வந்து விட்டதால் இனி அந்த நாடு வருடத்திற்கு நான்கு முறை வேலாபுரத்திற்குத் திறை செலுத்த வேண்டும். இதுவரைச் சாளுக்கிய நாட்டிற்குச் செலுத்தப்பட்டு வந்த திறைப்பணம் நிறுத்தப்பட்டு அத்தொகை இரண்டு மடங்காக எங்களுக்குச் செலுத்த வேண்டும்'' என்றான் விட்டலராயன்.

ஜெயசிம்மன் எதுவும் சொல்லவில்லை.

"கதம்ப நாட்டிற்கு இனி எந்த உரிமையும் கிடையாது. நாங்கள் இடும் ஆணையைச் செயல்படுத்துவது மட்டுமே அந்நாட்டின் கடமையாக இருக்க வேண்டும். தனிக்கொடி, தனி நாணயம் என்று எந்த அடையாளமும் கதம்பர்களுக்குக் கிடையாது. இங்கே பறக்க வேண்டியது எங்கள் கொடி. புழங்க வேண்டியது எங்கள் நாணயம்'' என்றான் விட்டலராயன்.

ஜெயசிம்மன் எதுவும் பேசவில்லை.

"இந்நாட்டிற்குப் படைகளை வைத்துக் கொள்ளும் உரிமை கிடையாது. புதியதாகப் படை திரட்டவும் அனுமதி இல்லை. ஹொய்சளப் படைதான் இந்நாட்டைப் பாதுகாக்கும்'' என்றான் விட்டலராயன்.

ஜெயசிம்மன் எதுவும் பேசவில்லை.

"இந்தக் கோட்டையில் வாழும் கதம்பர் குடும்பங்கள் ஒவ்வொன்றிலிருந்தும் ஒரு பெண்மணி வேலாபுரத்திற்குக் கொண்டு செல்லப்படுவார்கள். ஜெயசிம்மனின் மனைவியர், புதல்விகள், உறவினர், வேண்டப்பட்டவர்கள் அனைவரும் வேலாபுரத்தில் சிறையில் அடைக்கப்படுவார்கள்.

"நீ அரியணையில் அமர்ந்தபின் ஆணவம் தலைதூக்கலாம். ஆட்டம் போடத் துடிக்கலாம். அலட்சியமாக அடாவடிகளைச் செய்யத் தொடங்கலாம். நானே ராஜா நானே மந்திரி என்று எண்ணிக் கொண்டு ஏடாகூடமாகச் செயல்படலாம். அப்படியெல்லாம் நீ ஆரம்பித்து விட்டால் எங்களுக்கு வேலை

வந்து விடும் அல்லவா? அதற்காகத்தான் இந்த ஏற்பாடு. உன் குடும்பத்தாரையும் வேண்டப்பட்டவர்களையும் என் நாட்டில் சிறை வைத்து விட்டால் நீ ஆடமுடியாது. மக்கள் தரப்பிலும் குடும்பத்தில் ஒருவரைக் கொண்டு போய் வேலாபுரத்தில் சிறை வைத்தால் எனக்குப் புதிராகப் புரட்சி செய்ய அவர்கள் முயல மாட்டார்கள்."

"இது எந்த நாட்டிலும் நடவாத கொடுமை" என்றான் ஜெயசிம்மன்.

"நீ உனது நாட்டில் நடத்தி வந்தக் கொடுமைகளை விட எனது நடவடிக்கை கொடுமையானது அல்ல. உனக்குக் கதம்ப நாட்டைப் பற்றியே சரியாகத் தெரியவில்லை. ரோமாபுரியினர் பிற நகரங்களை வென்றால் தயவு தாட்சண்யம் பார்ப்பதில்லை. நீதி அநீதி என்றுத் தயங்குவதில்லை. மக்களை வெட்டிச் சாய்க்கிறார்கள். மற்றவர்களை அடிமைகளாக்கி ரோமுக்குக் கொண்டு செல்கிறார்கள். பிற நாடுகளில் கூட போருக்குப் பின் எதிரி நாட்டவரை அடிமைகளாக்குவதுதான் வழக்கமாக இருக்கிறது. நான் அந்த அளவிற்குப் போகவில்லை."

"எதற்கு இந்த காரியங்கள்? ஹொய்சளர்களுக்கு அடிமைப் பட்டு வாழ வேண்டும். அவ்வளவு தானே? அதற்கு நான் பிரமாணம் செய்து தருகிறேன். சரிதானே?"

"பிரமாணமா? நீயா? உன்னை நம்புகிறவன் உன் நாட்டிலேயே இல்லை என்பது உனக்குத் தெரியாதா? ஜெயசிம்மா! நான் நரியைக் கூட நம்புவேன். உன்னை நம்பமுடியாது. முதலையின் மீது கூடப் பயணம் செய்வேன். உன்னை நம்பி பொறுப்பை அளிக்க முடியாது" என்று சொன்ன விட்டலராயன் "நீ ஒழுங்காக நடந்து கொண்டால் அரியணை உனக்கு அரிய அணையாக இருக்கும். அரியணையில் இருந்து நீ அடங்க மறுத்தால் உன் தலையைச் சீவிவிட்டு உனக்குப் பதிலாக உன் கோட்டைத் தலைவன் கோதம்பரன் அமர்வான். இந்தக் கோட்டையில் பல பிரமுகர்கள் இருப்பதாகக் கேள்விப்பட்டேன். அவர்கள் அறிவாளிகள் என்பதையும், அடக்கமானவர்கள் என்பதையும், திறமையானவர்கள் என்பதையும், தீட்சண்யமானவர்கள் என்பதையும் அறிந்தேன். ஆகவே அவர்களை நிர்வாக ஆலோசகர்களாக நியமிக்கப் போகிறேன். இது தான் என் நிபந்தனைகள். தீர்மானங்கள் ஏற்கச் சம்மதமா?" என்று கேட்டான்.

இந்த நிபந்தனைகளை ஏற்பதை விட இறந்து விடுவதே மேல் என்று தோன்றியது ஜெயசிம்மனுக்கு. அடிமை என்ற வார்த்தை இல்லையே தவிர தன் வாழ்வானது இனி அடிமை வாழ்வுதான்

என்பது அப்பட்டமாக அவனுக்குப் புரிந்தது. மானமுள்ளவன் அவற்றை ஏற்கமாட்டான். மன்னனாக இருந்தவன் மனமுவந்து ஒப்புக் கொள்ள மாட்டான். உண்மையான மனிதன் கூட மறுத்து விடக் கூடிய நிபந்தனைகள்தான் அவை.

ஜெயசிம்மனோ மானத்தோடு வாழ விரும்பியவன் அல்ல. நல்ல மன்னனாக ஆட்சி செய்த பழக்கமும் அவனுக்கு இல்லை. உண்மையான மனிதன் தானல்ல என்பது அவனுக்கே தெரியும்.

அதோடு சிறையில் இருந்த போது ஓர் ஓலை வந்ததும் அதில் தன்னை அடங்கி நடந்து கொண்டால் விடுதலை கிடைக்கும் என்ற செய்தி வந்திருந்ததாலும் அதை நினைவூட்டிக் கொண்ட ஜெயசிம்மன் தான் ஒரு புலியல்ல என்றாலும் தற்போது பாய்வதை விடப் பதுங்குவதே புத்திசாலித்தனமானது என்றும், ஆதாயமானது என்றும் கருதினான்.

தனக்கு வாய்ப்பு தரப்பட்டால் யமனைக் கூட ஏமாற்றி கைது செய்து காராக்கிரகத்தில் காலம் முழுவதும் தள்ள முடியும் என்ற அபத்தமான தன்னம்பிக்கை அவனுக்கு இருந்ததால் நிபந்தனைகளை ஒப்புக் கொண்டான்.

“நாங்கள் இங்கே சில காரியங்களைச் செய்ய வேண்டி யிருக்கிறது. அது முடிய இரண்டு நாட்கள் ஆகலாம். அது வரை சிறையிலேயே இரு” என்றான் விட்டலராயன்.

“மீண்டும் சிறையா? வேண்டாம் விட்டலராயா. அங்கே பூச்சி இருக்கிறது. பாம்பு இருக்கிறது. பேய்கள் இருக்கின்றன” என்றான் ஜெயசிம்மன்.

“அரண்மனை அறையிலேயே நீ சிறை இரு. மற்றபடி உனது சுடுகாட்டிற்கு ஒப்பான சிறை வளாகத்தை எனது படைகள் சீர் செய்யும்” என்றான்.

ஜெயசிம்மன் அரண்மனையிலேயே ஓர் அறையில் அடைக்கப் பட்டு வீரர்கள் காவலில் வைக்கப் பட்டான்.

அடுத்த இரண்டு நாட்களுக்கு எதுவும் செய்ய முடியாதபடி அடர்மழை தொடர்ந்து பெய்தது.

ஜெயசிம்மன் வெட்டவெளி மலைப் பகுதியில் அனுப்பப் பட்டிருந்த படைகள் கோரமழையில் உண்ண உணவில்லாமலும், தங்க முடியாமலும், நகர முடியாமலும் திணறியது. மலைப் பகுதிகளில் மண் சரிந்தது. மரங்கள் விழுந்தன. விலங்குகள் வெளிப் பட்டன. மலைப் பாம்புகள் உலவத் தொடங்கின. இவற்றால் எல்லாம் வீரர்கள் ஆயிரக்கணக்கில் மடிந்தார்கள்.

ஹனகல் கோட்டை எதிரிகள் வசம் போய் விட்டது என்பது அவர்களுக்கும் தெரிந்துவிட்ட படியால் உயிர்மிஞ்சிய வீரர்கள் எங்கே செல்வது என்று புரியாமல் திண்டாடினார்கள். மழை நின்ற பிறகு பலர் கோட்டைக்குத் திரும்ப விரும்பாமல் தாங்கள் விரும்பிய பகுதிகளுக்குத் தப்பிச் சென்றனர். ஹனகல் கோட்டைக்கு வந்து சேர்ந்த வீரர்கள் கைதானார்கள்.

மழையானது அடுத்த பத்து நாட்களில் குறுக்கிடவில்லை. அந்த இடைவெளியில் கோட்டைக்குள் நூறடி உயரத்திற்கு வெற்றி ஸ்தூபியை எழுப்பினான் விட்டலராயன்.

அப்போது மக்கள் வந்து அவனிடம் முறையிட்டார்கள்.

"ஐயா! எங்கள் கொடுங்கோல் மன்னருக்காக எங்களைத் தண்டிக்காதீர்கள். நாங்கள் ஒரு பாவமும் செய்யாதவர்கள். அமைதியாக வாழ்பவர்கள். அந்த அமைதி கெடுகிறதென்றால் அதற்குக் காரணம் ஜெயசிம்மன் தான். அவர் எங்களை மக்களாக நினைக்கவில்லை. மக்களாக நடத்தவில்லை. பலரை அழித்தவர் அவர். குறிப்பாக பெண்களை இம்சைப்படுத்தி அழித்து ஆனந்தம் கண்டவர். அவரை அகற்றி நீங்கள் கோட்டையைக் கைப்பற்றியது எங்களுக்கெல்லாம் மகிழ்ச்சியை அளிக்கிறது. அவரை மீண்டும் அரியணையில் அமர்த்துவது அடிபட்ட புலியை ஊருக்குள் அனுப்புவது போன்றது. துரோகமே அவரது தேகம். வஞ்சகமே அவரது வினை. பொய்யே அவரது மொழி. அவருக்கு நிபந்தனைகள் விதித்து நீங்கள் ஏமாற வேண்டாம். அந்தப் பாதகனுக்காக எங்கள் குடும்பத்தினரை வேலாபுரத்தில் சிறை வைப்பது வேதனைக்குரியது. அப்படிச் செய்தால் நாங்கள் ஒட்டு மொத்தமாக அழிவதைத் தவிர வேறு உபாயமில்லை. இக்கோட்டையைச் சுடுகாடாக்கிய அவப் பெயரைத் தேடிக் கொள்ளாதீர்கள். உங்களை நாங்கள் மிகவும் மதிக்கிறோம். தங்கள் விருப்பப்படியே நடப்போம். இந்த நாடு யாருடைய நாடாக இருந்தாலும் இதை யார் ஆண்டாலும் நாங்கள் எப்போதும் மக்களாகத்தான் இருப்போம். ஆளும் அரசர் அரக்கராய் இருந்தால் அல்லல் படுவோம். அமரராய் இருந்தால் ஆனந்தப்படுவோம். அரக்க ஆட்சியிலிருந்து விடுவித்த நீங்கள் அரக்கராக வேண்டாம்."

அப்போது சேவகன் ஒருவன் வந்து மன்னனின் காதில் "மகாராஜா! ஜெயசிம்மன் தப்பி விட்டான்" என்றான்.





மன்னிப்பது மக்களின் குணமாக இல்லாது போயிருந்தால் இந்த உலகம் எப்போதோ அழிந்து போயிருக்கும் – துறவி



சேவகன் காதில் கூறியதைக் கேட்ட விட்டலராயன் மக்களைப் பார்த்து “உங்கள் மன்னன் தப்பிவிட்டான்” என்றான்.

“நாங்கள் கூறியது சரியாகி விட்டது பார்த்தீர்களா? எங்கள் மன்னன் நரியை விட மோசமான சூழ்ச்சிக்காரன். பல துர் மிருகங்களின் கலவையாக வந்திருக்கும் பிறவி. துன்மார்கனுக்கு மரண தண்டனையைத் தவிர வேறு எந்த தண்டனையும் அவனுக்குச் சாதகத்தையே தரும். அவன் தப்பியிருந்தாலும் கோட்டையில்தான் இருக்க வேண்டும். நாங்களே அவனைத் தேடிப் பிடித்து உங்கள் முன் நிறுத்துகிறோம்” என்று கூறி விட்டு மக்கள் அகன்றார்கள்.

மன்னன் தன் அருகில் இருந்த கங்கராஜனிடம் காதோடு எதையோ கூறி விட்டு அகன்றான்.



தனி அறையானது அரண்மனை வட்டாரத்திலேயே இருந்ததால் அதில் சிறை வைக்கப்பட்ட ஜெயசிம்மனுக்கு சற்று நிம்மதியாக இருந்தது. அரண்மனை வட்டாரம் அவன் புழங்கி வந்த இடமாதலால் சுத்தமான இடமாகவும் சுகந்தம் வீசும் இடமாகவும், சந்தோஷபுரமாகவும் இருந்தது. பூச்சித் தொல்லைகளோ, பாம்புகள் குறுக்கீடோ, பேய் பயமோ இருக்கவில்லை. அறையில் படுத்துக் கொள்வதற்குக் கட்டிலும், மெத்தையும், போர்வையும் இருந்தன. உணவு முதலானவற்றைக் கொண்டு வந்து கொடுப்பதற்கும், குளிப்பதற்கு அழைத்துச் சென்று வருவதற்கும் சேவகர்கள் தயாராக இருந்ததால் அவனது இருப்பிடம் சிறையைப் போலவே இல்லை.

அதே சமயம் -

படுப்பதற்குப் படுக்கையில்லாமல், பூச்சிகள் கடித்துக் கொண்டிருந்த பாழாய்ப் போன சிறையில் மூன்று நாட்கள் இருந்த போது சுத்தமான அறை கிடைத்தால் போதுமென்றிருந்தது.

தற்போது தொந்தரவுகள் இல்லாத சுகமான அறையும், கட்டிலும் படுக்கையும் வேளாவேளைக்கு உணவும் கிடைத்த போது தன்னோடு ஒரு சில அழகிகள் இருக்கக் கூடாதா என்று நினைத்தான் ஜெயசிம்மன். அழகிகள் கிடைத்து விட்டால் தினமும் அவர்களோடு களியாட்டம் போடும் சந்தர்ப்பங்கள் கிடைக்காதா என்று நினைப்பான். அவையும் கிடைத்து விட்டால் தனக்குச் சுதந்திரம் கிடைக்காதா என்றும் அது கிடைத்தால் அரியணை கிடைக்காதா என்றும் நினைப்பான்.

ஆசையான எண்ணங்களுக்கு எல்லையும் இல்லை. விவஸ்தையும் இல்லை. எது கிடைத்தாலும் இன்னொன்றை எதிர்பார்ப்பதும் ஏங்குவதுமே மனிதப் பண்பு.

அப்படித்தான் ஜெயசிம்மனின் எண்ணமும் ஆசையும் விரிந்தது.

சேவகனிடமே அதுபற்றிக் கேட்டான்.

“அழகியா வேண்டும்?”

“ஆம் அப்பனே.”

“அனுப்புகிறேன்” என்று சொன்ன சேவகன் அறுபது வயது கிழவியை அனுப்பி வைத்தான்.

“என்ன இது? இவளா அழகி?” என்று கடுகடுத்தான் ஜெயசிம்மன்.

“நாற்பது வருடங்களுக்கு முன்னால் இவள் அழகியாக இருந்தவள்தான்” என்றான் சேவகன்.

“நான் மட்டும் வெளியே இருந்தால் உன் திமிருக்கு உன்னை விண்ணுலகத்திற்கு அனுப்பியிருப்பேன்.”

“அதனால் தான் உங்களை உள்ளே வைத்திருக்கிறார் எங்கள் மகாராஜா விட்டலராயர்.”

“நான் என்றைக்கும் உள்ளே இருக்கப் போவதில்லை. நீ என்றைக்குமே வெளியே இருக்கப் போவதில்லை. காலங்கள் மாறும். காட்சிகள் மாறும். என்னை அவமானப்படுத்திய உன்னை மறக்காமலிருந்து உன் சிரத்தை அறுக்காமல் இருக்க மாட்டேன். தெரிந்து கொள்.”

“சிறையிலிருக்கும் மகாராஜா, தற்போது தெரிந்து கொள்ளாத நிலையிலும் புரிந்து கொள்ள வேண்டிய நிலையிலும் இருப்பது நீங்கள் தான். நீங்கள் ஆடிய ஆட்டங்களும் ஓடிய ஓட்டங்களும் முடிவுக்கு வந்துவிட்டன. அதேபோல் பேசிய வார்த்தைகளும் படுத்திய பாடுகளும் தடயங்களை இழந்து விட்டன. உங்களிடம்

இருப்பது உயிர் ஒன்றுதான். அதைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமானால் எங்கள் மன்னரைப் போற்றிப் பாடிக் கொண்டிருங்கள். முடியா விட்டால் வாயை மூடிக் கொண்டு இருங்கள். உண்பதற்கு மட்டும் வாயைத் திறந்தால் போதும்."

வாயைக் கொடுத்து வசையை வாங்கிக் கட்டிக் கொண்டதை உணர்ந்த ஜெயசிம்மன் சேவகனைச் சிந்தையிலேயே நிந்தித்து விட்டு "இக்கிழவியை அழைத்துச் செல்" என்றான்.

சேவகன் கிழவியை அழைத்துக் கொண்டுச் சென்றதும் தீவிரமாக யோசித்தான் ஜெயசிம்மன்.

விட்டலராயன் விதித்த நிபந்தனைகளின்படி நடந்து கொள்வது தான் சாத்தியம் என்பது புரிந்தாலும் அதற்கு மாறாக வேறு ஏதாவது வழி இருக்குமா என்று யோசித்தான்.

தனக்கு மரண தண்டனை அளிப்பது எதிரியின் நடவடிக்கையாக இருக்க வேண்டிய கட்டாயம் இருந்தும் எதிரி அதை நிறைவேற்றாமல் விட்டது விதி தனக்களித்த மகத்தான வாய்ப்பு என்று கருதினான்.

தற்போதைய வாய்ப்பை பயன்படுத்திக் கொள்ளா விட்டால் வாய்ப்பானது மறுபடியும் வராது என்பது அவனுக்குத் திட்டமாகத் தெரிந்திருந்தது.

அதே சமயம் புதிய சிறைக்கு வந்ததிலிருந்து அடைமழை பெய்ததைக் கண்ட போது மலைக்காட்டு வெட்ட வெளிக்கு அனுப்பப்பட்ட தனது படை சின்னா பின்னமாகியிருக்கும் என்றும் அவற்றின் மூலம் தனக்கு எந்த ஆதாயமும் கிடையாது என்பதை உணர்ந்த அவன் தனக்கு வந்த ஓலையைப் பற்றி நினைத்துப் பார்த்தான்.

ஓலை வந்து பத்து நாட்களாகியும் அது சம்பந்தமாக ஒரு துரும்பும் அசையாமல் இருந்தது அவனுக்கு வியப்பாயும் வெறுப்பாயும் இருந்தது. தனக்கு ஓலையை அனுப்பியவன் கோட்டைக்குள்தான் இருக்க வேண்டும் என்றும் தன்னைத் தப்புவிக்க வாய்ப்பை எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டும் என்றும் அடைமழை காரணமாக அவன் செயல்படுவது தாமதமாகிக் கொண்டிருக்கலாம் என்றும் நினைத்தான்.

அவனுக்குத் திடீரென ஓர் விஷயம் பளிச்சிட்டது.

அவனது மனம் ஆஹா என்று துள்ளியது.

"விட்டலராயா! நீ மூடன். முட்டாள். கபோதி" என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்டான்.

அன்றிரவு சேவகன் வந்தபோது அறைக்குள் ஒரு பந்தத்தை ஏற்றி வைக்கும் படிக் கேட்டுக் கொண்டான்.

“பந்தம் வைத்தால் உஷ்ணமாக இருக்கும். அகல் விளக்கை ஏற்றி வைக்கிறேன்” என்று சொல்லி விட்டு அவ்வாறே செய்தான்.

ஜெயசிம்மன் அன்று நிம்மதியாக உறங்கினான். காவலர்கள் இருமுறை வந்து கண்காணித்தார்கள். அவன் குறட்டை விட்டு உறங்குவதைக் கண்டார்கள். அகல் விளக்கு எண்ணை தீர்ந்து விட்ட நிலையில் அணைந்து கொண்டிருந்தது.

மறுநாளும் ஜெயசிம்மன் நிம்மதியாகவே இருந்தான். இரவு நேரம் வந்தது. அகல் விளக்கு வந்தது. சேவகர்கள் வந்தார்கள். கண்காணித்தார்கள். அவன் தூங்குவதைப் பார்த்து விட்டு அகன்றார்கள்.

தூங்குவது போல் பாசாங்கு செய்த ஜெயசிம்மன் விழித்துக் கொண்டான்.

கட்டிலை விட்டு இறங்கினான்.

“விட்டலராயா! என் அரண்மனையில் இருக்கும் ரகசியங்கள் உனக்கெப்படி தெரியும்? இந்த அறையில் சுரங்கப் பாதை இருப்பதை அறியாமல் என்னை அடைத்து வைத்த மூடனே! இன்றைக்கு இச் சுரங்கம் மூலம் தப்புவேன். தப்பி விட்ட பின் நான் தான் சகலமும். உன்னைக் கொல்லாமல் விடமாட்டேன். என் அரியணையில் சுதந்திர மன்னனாக அமர்ந்து உன் பிணத்தின் மீது காலை வைப்பேன். அக்காட்சியைக் கண்டு காலனே கலங்குவான். விரைவிலேயே உன் வேலாபுரம் சூறையாடப்படும். உன் மனைவி முதலாக உள்ள அனைத்துப் பெண்களையும் அனுபவிப்பேன். மக்களை ஒருவர் விடாமல் கொல்வேன். சாளுக்கியப் படை எனது தலைமையில் சர்வ நாசங்களைச் செய்யும். உனது வம்சத்தின் கிளைகள் மட்டுமல்ல வேர்களும் விழுதுகளும் அழிக்கப்படும். என் அவமானத்திற்கு மிகவும் சரியான விதத்தில் பழி தீர்ப்பேன்” என்று கொக்கரித்தது அவன் மனம்.

அறையின் வடக்கு பக்கத்தில் இருந்த ஓவியங்களைக் கண்டான். அந்த ஓவியங்களில் நீர்வீழ்ச்சி இடம் பெற்றிருந்த ஓவியத்தை உற்றுப் பார்த்தான். அந்த ஓவியத்தில் சம்பந்தம் இல்லாமல் பூனைமுகம் ஒன்று வரையப்பட்டிருந்தது. அதை அழுத்தினான். தரையில் ஒரு பகுதி விலகி துவாரம் தெரிந்தது. துவாரத்தினுள் படிக்கட்டுகள் தெரிந்தன. அகல் விளக்கை ஊதி அணைத்து விட்டுச் சுரங்கத்திற்குள் இறங்கினான் ஜெயசிம்மன்.

பழக்கப்பட்டச் சுரங்கப் பாதையாக இருந்தபடியால் இருட்டாக இருந்தாலும் சகஜமாக நடந்தான் ஜெயசிம்மன். அரண்மனைப் பகுதியில் அவன் ஆறு சுரங்கங்களை அமைத்திருந்தான்.

ஒவ்வொன்றும் வேறு வேறு காரணங் களுக்காக அமைந்திருந்தன. அவன் சிறையிருந்த அறை மிகவும் அவசரம் என்ற காலகட்டத்தில் சரசமாடும் இடமாக இருந்து வந்தது. அந்த அறைக்கு அவனும் அவன் இஷ்டவிரோதமாக அழைத்து வரும் பெண்களுமே வருவது வழக்கம். அந்த அறைக்கு இழுத்து வரும் பெண்களை இம்சை செய்து அனுபவித்து விட்டு உயிரைப் பறிப்பது அவனது வழக்கமாக இருந்தது. இறந்தவனின் சடலத்தை அறைக்கு வெளியே இழுத்துப் போட்டு விட்டு அறையைப் பூட்டி விடுவான்.

அந்த அறைக்குள் சுரங்கமிருப்பது ஒரு சிலருக்கு மட்டுமே தெரியும். அவர்களோடு சில நேரங்களில் சுரங்கப் பாதையில் அவன் சென்றிருக்கிறான். வேண்டாதவர் சிலரை வேண்டியவர் போல் வரவழைத்துச் சுரங்கத்திலேயே கொன்றுமிருக்கிறான். ஆயினும் சடலங்களைச் சுரங்கப் பாதையிலேயே விட்டு விடாமல் வெளியேற்றி சுத்தம் செய்து சுகந்தப் பொருட்களை வைத்து வந்த காரணத்தால் சுரங்க வழி சொர்க்க வழிபோல் சுகமாக இருந்தது.

சுரங்க வழியில் நடக்கும் போதே மேற்கொண்டு என்ன செய்ய வேண்டும் என்பதை முடிவு செய்து கொண்டான்.

அநேகமாக மழை நின்று விட்டது. மறுமழை வருவதற்கு ஒரு வார காலமாகலாம். அதற்குள் கோட்டையை விட்டு வெளியேறி மலைப் பாதைகளில் நடந்து அல்லது ஓடி இரண்டு நாள் பயணத்தில் இருக்கும் சாஸ்வத முனிவர் ஆசிரமத்தை அடைந்து அங்கே தங்கிக் கொண்டு முனிவரின் சிஷ்யர்களை கல்யாணபுரத்திற்கு அனுப்பி சாளுக்கியர் படையை ஹனகல் கோட்டைக்கு வரவழைக்க வேண்டும். கோட்டையைக் கைப்பற்றிய ஹொய்சளப் படையை துவம்சம் செய்ய வேண்டும். விட்டலராயனை தன் கையாலேயே வெட்டிக் கொன்று அரியணையைக் கைப்பற்ற வேண்டும். பிறகு சாளுக்கியப் படையை வேலாபுரத்திற்கு அழைத்துச் சென்று அந்த ஊரையும் இடித்துத் தரைமட்டமாக்கி விட்டு வெற்றி விழா கொண்டாட வேண்டும். பெண்களையெல்லாம் பிடித்து அங்கேயோ அல்லது எங்கேயோ தன் விருப்பப்படி அனுபவித்துக் களிக்க வேண்டும்.

இவ்வாறு நினைத்த பின் தனது யோசனை மிகச் சரியாக இருந்ததால் அவனுக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது.

இன்ப வாழ்க்கை மீண்டும் மலரப் போகிறது என்ற களிப்புடன் நடந்து சென்றான் ஜெயசிம்மன்.

சுரங்கப் பாதையின் தூரம் அவனுக்குப் பழக்கப்பட்டிருந்த காரணத்தால் எட்டு நாழிகை நடந்த பிறகு சுரங்கப் பாதையின் முடிவுக்கு வந்து விட்டதை உணர்ந்து அதை உறுதி செய்யும் விதமாகச் சுவர்ப் பகுதிகளைத் தடவினான்.

கைப்பிடி ஒன்று கைகளுக்குத் தட்டுப்படவே அதை முழுவதுமாகத் தடவி உறுதி செய்து கொண்டு அதை உட்புறம் அழுத்தினான். சுரங்கத்தின் மேற்பகுதியில் தரை விலகி துவாரம் தெரிந்தது. துவாரம் தெரிந்ததுமே 'கிறீச்' என்று சத்தமிட்ட படி வெளியே இருந்த ஆந்தை ஒன்று சுரங்கத் துவாரத்தில் நுழைந்து உள்ளே பறந்து சென்றது.

ஜெயசிம்மன் அங்கிருந்தப் படிகளில் ஏறி மேலுக்கு வந்தான். துவாரத்தினை உண்டாக்கிய தரைமூடியைக் காலால் அழுத்தினான். அது பழையபடி நகர்ந்து துவாரத்தை மூடியது.

"கோட்டையை விட்டு வெளியே வந்து விட்டோம். விட்டலராயனின் பிடியிலிருந்து விடுதலையாகி விட்டோம். இனி இந்த உலகம் என் கைகளில். நான் நினைப்பது நடக்கும்" என்று வாய் விட்டே கூறிய ஜெயசிம்மன் சுற்றிலும் பார்த்தான்.

சுரங்கப் பகுதியானது கோட்டைக்கு வெளியே சுடுகாடு ஒன்றில் முடிந்திருந்தது. பலநாட்களாக மலைப் பகுதிகளில் கடும் மழை பெய்து வந்தபடியால் சுடுகாட்டிற்குச் சடலம் ஏதும் வரவில்லை. அங்கே மலைபோல் குவிந்து கிடந்தச் சாம்பல் மழை நீரில் கரைந்துச் சுடுகாட்டை சேற்றுக் காடாக மாற்றியிருந்தது.

அதில் எப்படி கால் வைப்பது என்று ஜெயசிம்மன் யோசித்தபடி அருகேயிருந்த நரியொன்று ஊளையிட்ட விதமானது அவனை வரவேற்பது போல இருந்தது. தன்னை வரவேற்க ஒரு நரியாவது இருக்கிறதே என்று எண்ணியபடி ஜெயசிம்மன் சேற்றில் காலை வைத்த போது திடீரென பறைகள் ஒலித்தன. பந்தங்கள் ஒளிர்ந்தன.

"வா ஜெயசிம்மா. நான் எதிர்பார்த்தபடி வந்து விட்டாய்" என்றது ஒரு குரல்.

பந்தங்களின் ஒளியில் கண்கள் கூசியதால் "யார் பேசுவது?" என்று கேட்டான் ஜெயசிம்மன்.

"பேசுவதற்குச் சாளுக்கியச் சக்கிரவர்த்தியா வரப் போகிறார்? நான் தான் வந்திருக்கிறேன்" என்றபடி முன்னே வந்தான் ஹொய்சள மன்னன் விட்டலராயன்.

அவனைக் கண்டதும் ஜெயசிம்மனுக்கு சப்த நாடியும் ஒடுங்கி விட்டது.

"நீ எப்படி இங்கே வந்தாய்?" என்று கேட்டான்.

"நீ வரும் போது - அதுவும் சிறையில் அடைக்கப்பட்டிருந்த நீ வரும்போது எனக்கு வழி தெரியாதா? வர முடியாதா?"

"சுரங்கம் இருப்பது உனக்கெப்படித் தெரியும்?"

"கோட்டையைக் கைப்பற்றியதும் உள்ளே உள்ளச் சுரங்கங்களைப் பற்றி தளபதியின் மூலம் அறிந்தேன். அது எங்கே இருந்து எங்கே செல்கிறது என்பதையும் அறிந்தேன். கோட்டைக்கு உள்ளேயிருந்து வெளியே செல்லும் சுரங்கங்கள் இரண்டு இருப்பதை அறிந்தேன். அவற்றில் ஒன்று இருக்கும் அறையில் சோதிப்பதற்காக உன்னைச் சிறையில் வைத்தேன். என் நிபந்தனைகளை மீறி சுரங்கம் மூலம் தப்ப முயற்சிப்பாய் என்று நினைத்தேன். எனவே என் வீரர்களை இங்கே நிறுத்தினேன். அறையில் உன்னைக் காணவில்லை என்று சேவகர்கள் சொன்னதும் நானும் புறப்பட்டு வந்தேன்."

"சுரங்கம் மூலம் தப்புவது தர்மம் தான்."

"தர்மம் உனக்கு மட்டுமல்ல ஜெயசிம்மா. எனக்கும் இருக்கிறது. எல்லோருக்கும் இருக்கிறது. எதிரியாக என்னிடம் சிக்கிய உன்னைச் சிரச் சேதம் செய்வது எனக்குத் தர்மம். இருப்பினும் உயிரை வாங்க விரும்பாமல் நிபந்தனைகளை விதித்தேன். நீயும் அவற்றை ஒப்புக் கொண்டாய். ஆனால் நிபந்தனைகளை மீறிச் சுரங்கம் மூலம் தப்ப முயன்றாய். இதற்காக உனக்கு மரணதண்டனை வழங்குவதும் தர்மம் தான். இருப்பினும் கூட அந்த தண்டனையை அளிக்க நான் விரும்ப வில்லை. அந்தப் பொறுப்பை உன் மக்களிடமே விட்டு விடுகிறேன்" என்று சொன்ன விட்டலராயன் "ஜெயசிம்மனை உள்ளே கொண்டு வாருங்கள்" என்று வீரர்களுக்கு உத்தர விட்டு விட்டு புரவி மீதேறி கோட்டைக்குச் சென்றான்.

ஜெயசிம்மன் கோட்டைக்குள் வருவதற்குள் அவன் தப்பியதும் பிடிபட்டதும் மக்களுக்குத் தெரியவந்தது. ஜெயசிம்மனை ஊருக்கு மத்தியில் நிறுத்தி அவனைச் சுற்றி இரும்பு கூண்டு ஒன்றை அமைத்த விட்டலராயன் மக்கள் விரும்பினால் அவனோடு பேசலாம் என்றும் ஜெயசிம்மன் விரும்பினால் மக்கள்

அவனோடு பேசலாம் என்றும் அறிவித்தான். ஜெயசிம்மனுக்கு உரிய தண்டனையை மக்களே முடிவு செய்யலாம் என்றும் தெரிவித்தான்.

மக்கள் ஜெயசிம்மனிடம் பேசவில்லை. தூற்றினார்கள். ஏசினார்கள். அவன் பேச்சைக் கேட்க விரும்பவில்லை. சிலர் அவன்மீது கல்லெறிந்தார்கள். சிலர் செத்துப் போன எலிகளை வீசினார்கள். மாமிசத் துண்டுகளை கூண்டிற்குள் போட்டார்கள்.

ஜெயசிம்மனுக்கு எதுவும் முடியாத நிலை. எதுவும் தோன்றாத நிலை. பல ஆண்டுகள் ஆட்சி புரிந்த தனக்கு வரக் கூடாத நிலை வந்து விட்டதைக் கண்டு அவமானத்தில் புழுங்கினாலும் அந்த நிலைக்கு தானே காரணம் என்பதால் மனமும் உடலும் புண்ணாகிய நிலையில் மௌனமாய் இருந்தான்.

அயோக்கியத்தனமும், அடாவடித்தனமும், அதர்மமும் பேயாட்டம் போட்டாலும் முடிவில் அனைத்தும் அடங்கிப் போய் பேசவும் முடியாத பரிதாபமான நிலையைத்தான் அடையும்.

இரண்டு நாட்களாக அந்த கூண்டில் ஊன் உறக்கமின்றி மக்களின் வார்த்தைப் புண்களை மட்டும் பெற்றுக் கொண்டு வேதனையில் இருந்தான் ஜெயசிம்மன்.

அப்போது அங்கே வந்தார் ஒரு துறவி.

மக்களைப் பார்த்து "இது என்ன கொடுமை? மன்னனை இப்படித் தவிக்க விட்டு வேடிக்கைப் பார்க்கிறீர்களே! நீங்கள் மக்களா? மாக்களா?" என்று கோபமாகக் கேட்டார்.

"துறவியரே! இவர் பதவியால் மட்டுமே மன்னர். மக்களுக்கு எந்த உதவியும் செய்யாதவர். அன்பு செலுத்தாதவர். பெண்கள் பலரைச் சீரழித்தவர். தொல்லை தராத தருணமே இல்லை என்று நினைக்கும் அளவிற்கு எங்களுக்குத் துன்பம் தருவதையே வேலையாகக் கொண்டவர்.

சுயநலவாதி. குரூர எண்ணமும் செயலுமே இவரது குணங்கள். இவரை எங்களால் தூற்றத்தான் முடியுமே தவிர போற்றமுடியாது. அடிக்கத்தான் முடியுமே தவிர அன்பு காட்டி அரவணைக்க முடியாது. இக்கோட்டையை வென்ற ஹொய்சள மன்னரது நிபந்தனைகளை ஏற்றுக் கொண்டு பிறகு அவற்றை மீறி நடந்து கொண்டு சிறையில் இருந்து தப்பியவர். இவரை மன்னிக்க எங்கள் மனம் ஒப்பவில்லை" என்றார்கள் மக்கள்.

"மன்னிப்பது மக்களின் குணமாக இல்லாது போயிருந்தால் இவ்வுலகம் எப்போதோ அழிந்து போயிருக்கும். கொடுமையான மன்னனாக இருந்தாலும் அவன் தாய்க்கு மகன். மனைவிக்குக் கணவன். பெண்களுக்குத் தந்தை. அவனை இவ்வாறு அவமானப்படுத்துவது நம்மை நாமே அவமானப் படுத்திக் கொள்வதைப் போன்றது. வேண்டுமானால் வாழ்நாள் முழுதும் சிறையில் காலம் தள்ளட்டும். கொடுங்கோலனை அவமானப்படுத்தி நாமும் கொடுமையானவர்களாக நடந்து கொள்ள வேண்டாம்" என்றார் துறவி.

"பிறரை மதிக்கத் தெரியாதவனை மன்னிக்கலாம். பிறரிடம் அன்புகாட்டத் தெரியாதவனை மன்னிக்கலாம். மதிக்கவும் அன்புகாட்டவும் தெரிந்து அவற்றைக் காட்டக் கூடிய இடத்திலும் இருந்து கொண்டு அலட்சியப்படுத்துபவனுக்கு மன்னிப்புத் தரலாம் என்றால் அதை நீங்களே அளியுங்கள். நாங்கள் வருகிறோம்" என்று சொல்லி விட்டு மக்கள் அகன்றார்கள்.

துறவி ஜெயசிம்மனைப் பார்த்து "மக்கள் என்ன சொல்கிறார்கள் கேட்டாயா? ஒரு துறவி கருணை காட்டிய போது கூட அவர்கள் உன்னை மன்னிக்கத் தயாராக இல்லை. மக்களை மதிக்காத மன்னன் மக்களால் ஒரு போதும் மன்னிக்க மாட்டான். ஜெயசிம்மா! உன்னையும் உன் மனைவிமார்களையும், சுற்றத்தாரையும், உனக்கு வேண்டப் பட்டவர்களையும் இந்த மக்களின் கண்களுக்குப் படாத வண்ணம் வேலாபுரத்திற்குக் கொண்டு சென்று சிறையில் வைக்கப் போகிறேன். உன் தளபதியை அரியணையில் ஏற்றப் போகிறேன்" என்றார்.

"இதையெல்லாம் செய்ய நீங்கள் யார்? உங்களை நான் இதற்கு முன்னால் பார்த்ததில்லையே!" என்றான் ஜெயசிம்மன்.

"உண்மைதான். என்னை நீ துறவியாகப் பார்த்திருக்க முடியாது. நான் துறவியாக வேடம் போட்டு வந்திருக்கிறேன். நான் உன் எதிரி விட்டலராயன்" என்று கூறிவிட்டு அகன்றான் விட்டலராயன்.

அவன் கூறிய அனைத்தும் மறுநாள் நடந்தது. ஜெயசிம்மன் உட்பட ஐம்பது பேர் இருநூறு வீரர்களுடன் கைதிகளாக விலங்கிடப்பட்டு வேலாபுரத்திற்கு அனுப்பி வைக்கப் பட்டார்கள்.

"நாம் வந்த மார்க்கத்தில் செல்ல வேண்டாம். இந்த பவளக்கல் கோட்டைக்கு நேர் கிழக்கில் இருக்கிறது வேலாபுரம். அதற்கான நேர் வழியில் செல்லுங்கள்" என்றான் வீரர்களிடம்.

வேலாபுரத்தில் இருந்த பஞ்சப் பிரதானிகளில் ஒருவரான சேனாதிபதி பகாசூரரிடம் அதற்கான ஆணைகளைக் கொண்ட ஓலைகளை அனுப்பினான்.

கைதிகள் வேலாபுரத்தை அடைந்து விட்டதைச் சேனாதிபதி பதில் தெரிவித்தபின் கோட்டைத் தளபதி கோதையம்பரனை ஹனகல் கோட்டை அரியணையில் அமர்த்தினான் விட்டலராயன்.

அங்கேயே இரண்டு மாதங்கள் தங்கி நிலைமைகளை ஒழுங்குபடுத்தி விட்டு திருப்தியடைந்த விட்டலராயனுக்கு வேலாபுரத்திலிருந்து அந்தரங்க ஓலை வந்தது.

அனுப்பியவர் -

அவனது ராணி சாந்தலை!





சில விஷயங்களில் நாம் பிறரைப் பின்பற்ற வேண்டும். சில விஷயங்களில் பிறர் நம்மைப் பின் பற்றும்படி நடந்து கொள்ள வேண்டும். இதுதான் எங்கேயும் ஏற்புடைய அறமாக இருக்கும் – விட்டலராயன்




-"பிரபு! நமக்கு நல்ல காலம் தான். நமது பிரதான ஆச்சார்யரான மகாஸ்ரீ ஜெயதேவர் வேலாபுரத்திற்கு வந்து விட்டார். காஞ்சியில் இருந்த அவரை நீலகேசி அடிகள் தான் அழைத்து வந்தார். ஆச்சார்யர் ஜெயதேவர் நமது புதல்வி தர்மதேவியைக் கண்டார். ஒன்றுமில்லை. ஒருவாரத்தில் குணப்படுத்தி விடலாம் என்றார். எனது மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.

மாந்தரீகரும் இதே நேரத்தில் மகளின் ஆழ்மனத்தைக் கிளறி அவளது இந்த நிலைக்கான காரணத்தை அறிந்தார். மகள் தர்ம தேவிக்குக் கொஞ்ச காலமாகக் கனவில் வந்து ஓர் உருவம் மிரட்டியதாம். அதன் கைகளில் சங்கும் சக்கரமும் இருந்ததாம். ஓடு ஓடு. என்னை விட்டு ஓடி விடு என்று சொல்லி பயமுறுத்தியதாம். அவள் செய்வதறியாமல் தவித்த போது தான் பேய் கணங்கள் அவளது உடலுக்குள் பிரவேசித்து விட்டதாம்.

"மகளை இனி நான் கவனித்துக் கொள்கிறேன். நீங்கள் உங்கள் லட்சியத்தில் முன்னேறுங்கள். வாசந்திகா தேவியின் அருளால் தாங்கள் ஹனகல் கோட்டையைக் கைப்பற்றியிருக்கிறீர்கள். தேவி தங்களுக்கு அடுத்தடுத்து வெற்றிகளைத் தருவாள்."-

- என்று எழுதப்பட்டிருந்தது ஓலையில்.

அதைப் படித்ததும் திருப்தியாக இருந்தது விட்டலராயனுக்கு.

ஹனகல் கோட்டையின் நிலவரமும் திருப்திகரமாக இருக்கவே "நாம் இனியும் இங்கே இருக்க வேண்டியதில்லை. நாம் இல்லாவிட்டாலும் இங்கே பங்கம் எதுவும் வந்து விடாது. நாம் இங்கிருந்த காலத்தில் சிறுபடை ஒன்றை இக்கோட்டைக் காவலுக்காக நிறுவியிருக்கிறோம். நமது நடவடிக்கைகளால் மக்கள் மிகவும் ஆறுதலடைந்திருக்கிறார்கள். அவர்கள் மக்கள் படையொன்றை உருவாக்கியிருக்கிறார்கள். இக்கோட்டையை எவர் தாக்க வந்தாலும் அவர்களை எதிர்கொள்ள மக்கள் படை தயாராக இருக்கும். இக்கோட்டையில் நமது பிரதிநிதியாக ஆளும் கோட்டைத் தளபதி தன்னிலை மாறாமல் நன்னிலையோடு

இருப்பான் என்ற நம்பிக்கை இருக்கிறது. அவனைக் கண்காணிக்கவும் வழி நடத்தவும் இங்கிருக்கும் முக்கியஸ்தர்களை மந்திரிகளாக நியமித்திருக்கிறோம். அவர்கள் தங்கள் பொறுப்பை ஆவலோடு நிறைவேற்ற ஆரம்பித்து விட்டார்கள். சுடுகாடு போல் இருந்த சிறைவளாகம் சுத்தப் படுத்தப்பட்டு சிறப்பானதாக மாறியிருக்கின்றது. எனவே நமது அடுத்த இலக்கை நோக்கி நாம் நகரலாம்" என்றான்.

"ஆலுபர்கள் நாட்டின் மீது படையெடுக்கலாம் என்றீர்கள். அவர்களை நமது அடுத்த இலக்காகத் தேர்ந்தெடுத்ததற்குக் காரணமென்ன மகாராஜா?" என்று கேட்டான் கங்கராஜன்.

"நமது இலக்கு என்பது சாளுக்கியர் ஆதிக்கத்தில் உள்ள அரசர்களை வென்று நம் ஆதிக்கத்திற்கு கீழே கொண்டு வருவது தான். அந்த அரசர்களில் யாரையும் விட்டுவிட நாம் தயாராக இல்லை. அதுவும் ஆலுபர்கள் (Alupas) சாளுக்கியர்களைத் தீவிரமாக ஆதரிப்பவர்கள். சாளுக்கியர்களுக்குத் தென்மேற்கு எல்லைக் காவலர்களாக விசுவாசத்துடன் இருந்து வருபவர்கள். அவர்களை நாம் வென்று விட்டால் மகிஷநாட்டின் தெற்குப் பகுதி நமது ஆதிக்கத்தில் இருக்கும். அங்கிருந்து தெற்கே போவதற்கு தடையிருக்காது" என்றான் விட்டலராயன்.

"ஆலுபர்களின் நாடு இப்போது நாமிருக்கும் இடத்திற்கு தெற்கே இருக்கிறது. மேற்கு மலைத் தொடர்களின் அடிவாரத்திற்கு அண்மையில் இருக்கிறது. கோட்டைப் பாது காப்புடன் இருக்கிறது. ஒற்றர்கள் கொண்டு வந்தச் செய்தியின் படி ஆலுப நாட்டின் மன்னன் அக்கிரமன் படையெடுப்பு எதுவும் எதிர்பார்க்கவில்லை. ஆனால் நமது படை நகர ஆரம்பித்ததும் நம்மைப் பற்றி அறிந்து கொள்ளலாம். எனவே அவன் விஷயமறிந்து விழித்துக் கொள்வதற்கு முன் நாம் அவனது நாட்டை அடைந்து தாக்க வேண்டும்" என்றான் கங்காஜன்.

"நினைப்பது சரிதான். ஆனால் நினைப்பது போல் நடக்க வேண்டுமே! பங்கா புரியிலிருந்து மலை உச்சிகளிலும் பள்ளத் தாக்குகளிலும் பயணம் செய்த நம்மை வனவாசி ஒற்றர்கள் அறிந்து கொண்டு ஹனகல் கோட்டைக்குத் தகவல் அனுப்பி விட்டார்கள். அந்த ஒற்றர்களே கூட நம்மைப் பற்றியும் நமது படையெடுப்பைப் பற்றியும் ஆலுபர்களுக்குச் செய்தியனுப்பி யிருப்பார்கள். அதோடு நாம் ஆலுப நாட்டிற்குச்* செல்ல வேண்டுமானால் மேற்கு மலை உச்சிகளை விட்டு விட்டுச் சரிவுகளில் இறங்கிக்

* ஆலுப நாடு என்பது வேலாபுரத்திலிருந்து (தற்போதைய பேலூர்) தென் மேற்கில் 145 கிலோ மீட்டர் தூரத்தில் தெற்கு கானரா மண்டலத்தில் இருந்தது.

கிழக்கில் சமவெளியில் செல்ல வேண்டுமாதலால் ரகசியமாக நாம் நகர முடியாது. ஆகவே நமது நகர்வை அவர்களுக்கு தெரிவிக்கும் முறையில் முரசுகளை முழக்கிக் கொண்டே செல்லலாம்" என்றான் விட்டலராயன்.

கங்கராஜன் மறுப்பு எதுவும் சொல்லவில்லை.

படைகள் கடந்த மூன்று மாதங்களாக பருவ மழை பெய்யும் மாரிகாலம் முடிய ஹனகல் கோட்டையிலே தங்கி விட்டிருந்தன. பருவ மழையும் ஓய்ந்து விட்டிருந்தன. எல்லா விதத்திலும் சாதகமே நிலவியதால் ஹனகல் கோட்டையிலிருந்து ஹொய்சளப் படை ஆலுப நாட்டை நோக்கிப் புறப்பட்டது.

ஒரு காதத்திற்கு இருவராகச் சென்று முரசுகளை முழக்கியபடி சென்றார்கள்.

விட்டலராயனும் கங்கராஜனும் புரவி மீது அமர்ந்து படையின் நடுப்பகுதியில் பயணம் செய்தார்கள்.

படை புறப்பட்ட அரைநாளைக்குப் பிறகு மன்னனிடம் கேட்டான் கங்கராஜன்.

"மகாராஜா! ஜெயசிம்மனை சிறையில் அடைத்த தாங்கள் சாளுக்கியர்கள் தரப்பிலிருந்து அனுப்பியது போல ஓலை யொன்றைத் தயாரித்து அவன் இருந்த அறையில் எறியச் செய்தீர்களே, அது ஏன்?"

"கங்கராஜா! ஜெயசிம்மனைச் சோதிக்கப் பல வழிகளில் ஈடுபட்டேன். அவனுக்கு வேண்டிய சாளுக்கிய ஒற்றர்கள் பலர் இருக்கலாம். அவர்கள் மூலம் அவன் சதி செய்ய முற்படலாம். அந்த ஒற்றர்களையும் கண்டறியவே நான் ஓலையைத் தயாரித்து அவனிருந்த அறையில் எறியச் செய்தேன். ஓலையைப் படிக்கும் அவன் உண்மையிலேயே இங்கே சாளுக்கிய ஒற்றர்கள் இருந்தால் அவர்கள்தான் ஓலையை அனுப்பியிருக்கிறார்கள் என்று நம்பி அவர்களுக்கு செய்தி அனுப்ப முயற்சி செய்திருப்பான். அவனோ நாம் எதிர்பார்த்த மாதிரிச் செயல்படவில்லை. அதிலிருந்து அவனுக்கு வேண்டியச் சாளுக்கிய ஒற்றர்கள் இங்கில்லை என்பது புரிந்தது. அடுத்ததாகச் சுரங்கம் மூலம் தப்ப முயற்சித்தான். நாம் போய் வளைத்துக் கொண்டோம். இரும்புக் கூண்டில் அடைத்து மக்களின் பார்வைக்கு வைத்தேன். மக்களைக் கொண்டு தப்ப முயல்கிறானா என்று பார்த்தேன். மக்களோ அவன் மீது கல்லெறிந்தார்கள். அவர்களுக்கு அவனை அறவே பிடிக்கவில்லை. ஆகவே மக்களின் மூலமாகவும் அவன் தப்பிச் செல்ல இயலவில்லை."

"மக்கள் வெறுக்கும் மன்னனை அப்படியே விட்டிருந்தால் மக்களே அவனைக் கொன்றிருப்பார்களே! துறவியாக வேடம் போட்டுக் கொண்டு போய் அவனை ஏன் காப்பாற்றினீர்கள்?"

"தனது அயோக்கிய நடவடிக்கைகளுக்காக அவன் நிரம்ப அவமானப்பட்டு விட்டான். கஷ்டங்களை அனுபவித்து விட்டான். அவனுக்கு மனைவிமார்களும் புதல்விகளும் இருக்கிறார்கள். அவனை நம்பி வாழ்கிறார்கள். இந்த நிலையில் அவனை மிகவும் கேவலமான முறையில் சாவதற்கு என் மனம் ஒப்பவில்லை. அதே சமயம் ஹனகல் கோட்டையில் ஆள்வதற்கு அவன் சிறிதும் தகுதியற்றவன். அவனை இங்கே விட்டு வைத்தால் சும்மாயிருக்க மாட்டான். ஆகவே தான் குடும்பத்தாருடன் வேலாபுரத்திற்கு அனுப்பினேன்."

"இதனால் பயன் என்ன?"

"அவனுக்கு உயிர் போகவில்லை. அவனை நம்பி வாழும் குடும்பத்தினர் ஆறுதல் அடைவார்கள். வேலாபுரத்தில் கொஞ்ச காலம் இருந்தால் அவன் மனம் திருந்தலாம். புது வாழ்க்கைக்கு முயலலாம்."

"தங்கள் நடவடிக்கைக்கு என்ன பெயர் இடுவதென்று எனக்கு விளங்கவில்லை மகாராஜா."

"எந்தப் பெயரும் தேவையில்லை கங்கராஜா. போரிடும் போது மரணங்கள் நிகழும். அவை தவிர்க்க முடியாதவை. அதோடு அவற்றுக்கு வீரமரணம் என்று பெயர். ஜெயசிம்மனின் விஷயம் அப்படியல்ல. அவன் நம்மோடு போரிடவில்லை. தண்டனைக்கு உரியவனாக மட்டுமே மாறிப் போனான். எந்தப் பிரச்சனை ஆனாலும் சரி. எந்த எதிரியானாலும் சரி. மரணமானது தண்டனையாக இருக்க முடியாது. ஒருவனுக்குக் கூட உயிரைத் தர முடியாதவர்கள் உயிரை எடுப்பதற்கு உரிமை பெற்றவர்களாக மாட்டார்கள்."

"தாங்கள் சொல்வது போல் எத்தனை நாடுகள் பின்பற்று கின்றன? எத்தனை அரசர்கள் பின்பற்றுகிறார்கள்?"

"கங்கராஜா! சில விஷயங்களில் நாம் பிறரைப் பின்பற்ற வேண்டும். சில விஷயங்களில் பிறர் நம்மைப் பின்பற்றும் படி நடந்து கொள்ள வேண்டும். இதுதான் எங்கேயும் ஏற்புடைய அறமாக இருக்கும்."

"இந்த நடவடிக்கையை எங்கேயும் எப்போதும் கடை பிடிப்பீர்களா?"

“தர்மமானது சந்தர்ப்பங்களைப் பொறுத்து மாறுபட்டுச் செயல்படும் என்பதை குருக்ஷேத்திரப் போர் உனக்கு உணர்த்த வில்லையா? காலத்தால் அழியாத தர்மங்கள் உண்டு. காலத்திற்கேற்ப மாறும் தர்மங்கள் உண்டு.”

கங்கராஜன் மேற்கொண்டு மன்னனோடு பேச வில்லை. ஆனால் மன்னனைச் சரியாகப் புரிந்து கொண்டான். சந்தர்ப்பங்களே தர்மத்தை நிர்ணயம் செய்கின்றன. அது காலத்திற்கேற்ப மாறுபடுகின்றன என்று புரிந்து கொண்ட அவன் படை நடத்துவதில் கவனத்தைச் செலுத்தினான்.

ஒருநாள் பயண முடிவில் மலை உச்சியிலேயே எல்லோரும் ஓய்வெடுத்தார்கள். தொடர்ந்து நடத்திய பயணத்தால் அனைவரும் சோர்ந்து போய் உறங்கினார்கள்.

சமவெளிப் பகுதியாக இருந்தால் படைகள் ஒரு நாளைக்குச் சராசரியாக இரண்டு யோஜனை தூரம் வரை பயணம் செய்ய முடியும் (அதாவது இன்றைய கணக்கின்படி முப்பது மைல்கள்) ஆனால் மலைப் பிரதேசத்தில் அதற்குச் சாத்தியமில்லை. ஒரு நாளைக்கு ஒரு யோசனை பயணம் செய்வதே சாதனையாக இருக்கும். அதற்குக் காரணம் மலைப் பிரதேசங்களில் தற்போது உள்ளது போல மலைப் பாதைகள் (Ghat roads) இல்லாது போனதுதான். அடர்ந்த மலைகளின் மீது ஏறியும், பள்ளத் தாக்குகளில் இறங்கியும், மரங்களை வெட்டி பாதை அமைத்துக் கொண்டும் செல்ல வேண்டும். அதிலும் மேற்குத் தொடர்ச்சி மலைகள் தொடர்ச்சியாகவும் உயரமாகவும் இருந்ததால் குளிர் வேறு வாட்டியெடுக்கும். வனவிலங்குகளால் தொல்லைகள் ஏற்படும். மலைக்காற்றும் குளிரும் வாட்டியெடுத்துப் பலரை உயிரிழக்கவும் செய்யும்.

ஹொய்சளப் படைகளின் தோற்றமும் வாழ்விடமும் மேற்குத் தொடர்ச்சி மலைப் பகுதிகளாக இருந்த படியால் அவர்களால் வெகுவாகப் பயணம் செய்ய முடிந்தது. மலைகளில் ஏறி இறங்குவதற்கும் காட்டுப் பகுதியில் ஊடுருவிச் செல்லவும் அவர்களால் முடிந்தது என்றாலும் ஒரு யோசனை பயணத்தில் சோர்வடைந்தார்கள். அவர்களது சிரமம் நியாயமானது என்பதால் மன்னனும் அவர்களை ஆடுமாடுகளாக நடத்தாமல் மனிதர்களாக நடத்தியபடியால் ஒவ்வொரு யோசனை பயணத்திலும் அனைவருக்கும் ஓய்வு கொடுக்க அவன் மறுத்ததில்லை.

மலை உச்சியில் இரவு நேரத்தில் மரங்கள் சிலவற்றை வெட்டி மன்னனும், தளபதியும், உபதளபதியும் தங்குவதற்குச் சிறிய

மேடை ஒன்றை வீரர்கள் உருவாக்கித் தந்தார்கள். கங்கராஜனும் பரதனும் படுத்தவுடனேயே உறங்கி விட்டார்கள். உறங்காப் புலி என்று பெயரெடுத்திருந்த விட்டலராயன் கண்களை மூடி படுத்தானே தவிர உறங்கவில்லை. காட்டுப் பகுதியில் தங்களைச் சுற்றி வனவிலங்குகள் பல இரைந்ததைக் கேட்டபின் படைகளாக இருந்ததால் அவர்களது எண்ணிக்கையை உணர்ந்து வன விலங்குகள் ஆற்றாமையில் ஆங்காங்கே கூச்சல் போட்டன. தரைப் படைகளை நெருங்க வில்லை. அவை நெருங்கா வண்ணம் வீரர்கள் பந்தங்களை ஏற்றியும் பறைகளைக் கொட்டியுமாய் இருந்தார்கள்.

மறுநாள் பொழுது விடிந்தபோது ஏதோ கனவிலிருந்து விழித்தவனைப் போல எழுந்து கொண்ட கங்கராஜன் தனக்குப் பதிலாக மன்னனின் உடைகளை எடுத்து அணிந்து கொண்டான்.

உறங்காப் புலியான விட்டலராயன் அதைக் கவனித்து விட்டுச் சீறி விழவில்லை.

"நன்று கங்கராஜா நன்று. எனது அரச உடைகளும் கிரீடமும் என்னை விட உனக்குப் பொருத்தமாக இருக்கிறது. நீ கங்கராஜன் அல்லவா? ஆகவேதான் ராஜ உடை உனக்கு மிகவும் பொருத்தமாக இருக்கிறது" என்றான்.

கங்கராஜனோ "மன்னிக்க வேண்டும் மகாராஜா. ஏதோ கனவு கண்டேன். அதில் உண்டான குழப்பம் இப்படி ஆகி விட்டது. இதோ களைந்து விடுகிறேன்" என்று சொல்லி உடைகளைக் கலைய முற்பட்டான்.

"கலையாதே! அப்படியே இரு. எனக்கொரு யோசனை தோன்றுகிறது. நீ தான் தற்போது மன்னன். பரதன் சேனாதிபதி நான் உபதளபதி. இப்படி நாம் நம்மை மாற்றிக் கொண்டு செல்வோம். என்ன?" என்று வினவிய அவன் அவ்வாறே செய்தான்.

மலையுச்சிக்குப் பயணம் மேலும் இரண்டு நாட்களுக்கு நீடித்த போது அருகில் நீர்வீழ்ச்சி பேரோசையோடு வீழ்ந்து கொண்டிருப்பது கேட்டது. அங்கே பல்வேறு பறவைகள் கத்தித் திரிந்தன. மான்களும் மயில்களும் காணப்பட்டன. மிகவும் ரம்மியமானச் சூழ்நிலை அங்கே நிலவியது.

கங்கராஜன் விட்டலராயனைப் பார்த்து "மகாராஜா! இந்த இடத்தைப் பார்த்தால் இதுதான் விஜயானந்த மகரிஷியின் ஆசிரமமாக இருக்கும் போலிருக்கிறது. வாருங்கள் நாம் அவரிடம் போய் ஆசி வாங்கி வரலாம்" என்றான்.

“நீதானே மன்னனின் வேடத்தில் இருக்கிறாய்? நீ சென்று ஆசி பெறு. நான் அருகேயிருக்கும் நீர்வீழ்ச்சியில் நீராடி விட்டு வருகிறேன்” என்று கூறிவிட்டு அருவியை நோக்கிச் சென்றான் விட்டலராயன்.

படைகளும் அங்கே ஆசுவாசப்படுத்திக் கொண்டன

கங்கராஜன் மட்டும் ஆசிரமத்திற்குச் சென்றான். மூங்கில் களால் அமைக்கப்பட்ட பர்ணசாலை தெய்வீகமாகக் காணப்பட்டது. பர்ணசாலையின் முன்னே துறவிகள் சிலர் நடமாடிக் கொண்டிருந்தார்கள்.

அவர்களிடம் “விஜயானந்த மகரிஷி இருக்கிறாரா?” என்று வினவினான்.

“பர்ணசாலையில்தான் இருக்கிறார். ஆனால் பேசுவாரா என்று தெரியவில்லை” என்றார்கள் துறவிகள்.

“ஏன்?”

“இரண்டு நாட்களாகச் சமாதிநிலையில் இருக்கிறார். எப்போது கண்விழிப்பார் என்று சொல்ல முடியாது. கண் விழித்தால்தான் பேசுவார்.”

“பேசாவிட்டால் பரவாயில்லை. தரிசனம் செய்து விட்டு வந்தால் போதும்.”

“செல்லுங்கள்.”

கங்கராஜன் பர்ணசாலைக்குள் சென்று அங்கே நிஷ்டையில் இருந்த விஜயானந்தரைக் கண்டான்.

அவரைப் பற்றி அவன் நிறைய கேள்விப்பட்டிருந்தானே தவிர நேரில் கண்டதில்லை. அவரது பேச்சை விட பார்வையும் மௌனமும் மிகவும் சக்தி வாய்ந்தவை என்பதை அறிந்திருந்தான். அவர் எந்த மதத்தையும் சேர்ந்தவரல்ல. இணையற்ற முனிவராக மட்டும் இருந்தார். தாழ் சடையும் நீள் முடியும், மூடிய கண்களும், பத்மாசன கோலமும் அவனைப் பரவசப்படுத்தின.

அவரிடம் பேச முடியாமல் போனாலும் பாதங்களில் விழுந்து வணங்கினான் கங்கராஜன்.

அவனது அதிருஷ்டமோ என்னவோ-

சாஷ்டாங்கமாக விழுந்து அவன் வணங்கியதும் மகரிஷி கண்களைத் திறந்தார்.

“யார்?” என்று வினவினார் எந்தச் சலனமும் இல்லாமல்.

“நான் ஹொய்சளன்” என்று கங்கராஜன் ஆரம்பித்ததும் “ஏதோ ஒரு வம்சம். உன்னோடு படைகள் வந்துள்ளதா?”

“ஆம் சுவாமி.”

“எதற்கு? போரிடுவதற்கா? யாரோடு?”

“ஆலுபர்களுடன் சுவாமி.”

“காட்டில் இருந்து கொண்டு நாங்கள் அமைதிக்காகத் தவமிருக்கிறோம். நீங்களோ நாட்டில் இருந்து கொண்டு அமைதியைக் கெடுக்கிறீர்கள்.”

“அவரவர் தர்மம் அவரவர்களுக்கு. தங்களுக்குத் தெரியாததா சுவாமி?”

“அமைதியைக் கெடுப்பதுதான் தர்மமா? போரில்லாமல் சமாதானமாகப் போக உங்களுக்குத் தெரியாதா? சமாதானம் தான் சாஸ்வதமானது. போகட்டும். எதற்காக இந்தப் போர்?”

“ஹொய்சள சாம்ராஜ்யத்தை சிருஷ்டிக்கிறோம். அதற்காகப் பல்வேறு நாடுகளை வெல்ல வேண்டியிருக்கிறது.”

“மனிதனுக்கு இந்த ஆதிக்க ஆசையும் பேராசையும் எப்போது தான் தீருமோ தெரியவில்லை. நூறு நூறு தவசிகள் அமைதிக்காகத் தங்களை வருத்தித் தவமிருக்கிறார்கள். உங்களில் ஓரிரு மன்னர்கள் ஓயாமல் போரிட்டு வாழ்க்கையை நாசமாக்கி வருகிறீர்கள். எங்களைப் போன்றவர்கள் நிம்மதியாக இருக்கிறோமே அது எப்படி? எங்களுக்கு எல்லோரும் ஒன்று தான். எல்லோரும் சுபிட்சமாக வாழ வேண்டும் என்பதுதான் எங்கள் நோக்கம்.”

“சுவாமி! இந்த உலகம் காலம் காலமாக இப்படித்தான் இயங்கி வருகிறதே தவிர மாற்றம் வரவில்லை. தெய்வமானது ராமன் என்றும் கிருஷ்ணன் என்றும் அவதாரம் எடுத்த போது கூட போர்கள் நடந்துள்ளன. லட்சக்கணக்கானவர்கள் மாண்டார்கள். அந்த யுகங்களைத் தொடர்ந்து இன்று வரை அந்த நிலைதான் நீடிக்கிறது.”

“இது அர்த்தமற்ற பேச்சு. போர் வேண்டாம் என்று நீங்கள் நினைப்பது கூட இல்லை. நினைப்பிற்கே வராத ஒன்று நடப்பிற்கு எப்படி வரும்? நீதான் ஹொய்சள மன்னனா?”

“ஆம் சுவாமி”

“உன் இருப்பிடம்?”

“வேலாபுரம்”

"உன்னோடு எவ்வளவு படை வந்துள்ளது"

"இருபதாயிரம் சுவாமி"

"இருபதாயிரமா? அவ்வளவு பேர்களை உபசரிக்க இந்த ஆசிரமத்திற்குச் சக்தியில்லை."

"அந்தச் சிரமத்தை அளிக்க நாங்கள் வரவில்லை சுவாமி. உங்கள் மகத்துவத்தை அறிந்ததால் உங்கள் ஆசியைப் பெறவே வந்தோம்."

"போர் வெறி கொண்டவனாக இருந்தாலும் உன்னிடம் பண்பும் பணிவும் இருக்கிறது. உன் பெயர் என்ன?"

"விட்டலராயன்" என்றான் கங்கராஜன்.

"விட்டலராயா! உன்னால் ஆலுபர்களை ஒருபோதும் வெற்றி கொள்ள முடியாது. ஆகவே படையெடுப்பைக் கைவிட்டுத் திரும்பி விடு!"

"இதென்ன சுவாமி இவ்வாறு சொல்கிறீர்கள்?"

"நீ பண்புள்ளவன். அழிந்து விடக் கூடாது என்பதால் சொல்லுகிறேன். ஆலுப நாட்டு மன்னன் அக்கிரமனிடம் அதிசயமான மந்திர அஸ்திரம் இருக்கிறது. அதை எய்தால் உன் படைகள் முழுவதும் அழிந்து விடும். அதனால்தான் சொல்கிறேன்."

"எதுவானாலும் முன் வைத்த காலை பின் வைக்க முடியாது சுவாமி."

"அப்படியென்றால் நீ அழிந்தாய்."

"என்ன சொல்கிறீர்கள் சுவாமி?"

"திரும்பிப் பார்."

பார்த்தான் கங்கராஜன்.

அவனுக்குப் பின்னால் நூறு வீரர்கள் உருவிய வாட்களுடன் நின்றிருந்தனர்.

துறவி இடிபோல் சிரித்தார்.





குறுக்கு வழி என்பது எப்போதாவதுதான் பயன் தருமே தவிர எப்போதும் பயன்தராது – விட்டலராயன்




"சுவாமி! இதென்ன இப்படிச் சிரிக்கிறீர்கள்! சிரிப்பைப் பார்த்தால் துறவியின் சிரிப்பாக இல்லையே?" என்று கேட்டான், கங்கராஜன்.

"நான்தான் துறவியல்லவே! சிரிப்பு இப்படித்தான் இருக்கும்?"

"அப்படியானால் நீங்கள் யார்?"

"இன்னுமா புரியவில்லை. ஆலுபர் மன்னன் அக்கிரமன் தான் நான்" என்று சொல்லி விட்டுத் தனது தாழ்சடை மற்றும் நீள்முடி ஆகியவற்றைக் கழற்றி விட்டு மன்னனாக நின்றார் துறவி.

கங்கராஜன் திகைத்துப் போய் நின்றான்.

எதிரியிடம் வகையாகச் சிக்கி விட்டதை உணர்ந்தான்.

எதிரிநாட்டு மன்னன் மகரிஷி வேடம் தரித்து ஆசிரமத்தில் இருப்பான் என்பதைச் சிறிதும் அவன் எதிர்பார்க்கவில்லை.

தனக்குப் பின்னால் எதிரியின் வீரர்கள் நூறு பேர் நின்றிருந்ததால் தப்புவதற்கு வழியில்லை என்பதையும் உணர்ந்து செய்வதறியாமல் நின்ற கங்கராஜன் "ஆலுப நாட்டு மன்னா! உன் நடத்தை சரியல்ல. உனது பதவிக்கு உகந்ததல்ல" என்றான்.

"விட்டலராயா! காரியங்கள் எப்படி இருக்க வேண்டும் என்பதை பதவிகளை விடச் சந்தர்ப்பங்களே நிர்ணயிக்கின்றன" என்றான் அக்கிரமன் அலட்சியமாக.

"சந்தர்ப்பங்கள் எதுவாக இருந்தாலும் பதவிக்கேற்ப நடந்து கொள்வது தான் சிறப்பானது" என்றான் கங்கராஜன்.

"நீ கூறுவது பழையது. நான் கூறியது புதியது. புதுப்புது உத்திகள் தான் பயனளிக்கும். பழைமை குப்பையைப் போன்றது. குப்பைகளைக் கோழிகள் வேண்டுமானால் கிளறும். கோமான் கிளற மாட்டான். விட்டலராயா! என் செயல்களை நான் நிர்ணயிக்க வேண்டுமே தவிர நீயல்ல."

"சரி. உன் உத்தேசம் என்ன?"

"உன்னைப் பணயமாக வைத்துக் கொண்டு உன் படைகளை அழிப்பது. பிறகு உன்னை அழிப்பது. இதுதான் என் உத்தேசம்."

"உன் உத்தேசங்களை போரின் மூலம் நிறைவேற்ற முடியாதா?"

"முடியும். ஆனாலும் சிலநேரங்களில் குறுக்கு வழிகள் தரும் நன்மைகளை நேர்வழி தருவதில்லை."

"உண்மைதான் அக்கிரமா. என் எண்ணமும் அது தான்" என்றபடி அங்கே வந்தான் விட்டலராயன்.

அக்கிரமன் முகத்தில் ஏதோ ஒரு குழப்பம் தோன்றி மறைந்தது.

"யார் நீ?" என்றான் முரட்டுத்தனமாக.

"ஹொய்சள மன்னன் விட்டலராயன்."

"விட்டலராயனா? அப்படியென்றால் இவன் யார்?"

"இவனும் விட்டலராயன்தான்."

"இருவரும் எப்படி விட்டலராயனாக முடியும்?"

"எங்கள் வசம் இருக்கும் எல்லோருக்கும் அதுதான் பெயர்."

"ஏன்?"

"அது உனக்கு அவசியமில்லை. இவனை நீ பணயப் பொருளாக கருதிக் கொண்டது போல் நானும் ஒருவரைப் பணயக் கைதியாகக் கொண்டு வந்திருக்கிறேன்."

"யார் அது?"

"இன்னுமா தெரியவில்லை? உன் அன்பு மனைவி மங்களா தான்" என்று சொன்ன விட்டலராயன் "உளவாளியாக வரும் மன்னன் மனைவியைக் கூட அழைத்து வரலாமா? அருவிக்குச் சென்ற போது அவளைக் கண்டேன். அவளிடம் உன்னைப் பற்றி விசாரித்தேன். நீ யார் எதற்காக வந்திருக்கிறாய் என்பதை யெல்லாம் அவள் தான் சொன்னாள். உடனே அவளை நான் உனக்கு எதிராகப் பணயப் பொருளாக்கினேன். இப்போது சொல். உன் உத்தேசம் என்ன?" என்று கேட்டான்.

அதே சமயம் பரதன் அக்கிரமனின் மனைவியைக் கொண்டு வந்து நிறுத்தினான்.

இந்தத் திருப்பத்தை அக்கிரமன் சிறிதும் எதிர்பார்க்க வில்லை.

தான் ஒன்று நினைக்க - தெய்வம் ஒன்று நினைத்து நிலைமையை அடியோடு மாற்றி விட்டதைக் கண்டு தடுமாறினான்.

மனைவியிடம் வேண்டாம் வேண்டாம் என்று பல முறை கூறியிருந்தாலும் அவள் தான் பிடிவாதமாக அவனோடு ஆசிரமத்திற்கு வந்தாள்.

பெண்ணின் பிடிவாதம் குறுக்கிட்டால் அரசியல் அல்லல் தான் படும் என்பதை உணர்ந்த அக்கிரமன் "விட்டலராயா. நான் சொல்வதைக் கேள். உங்கள் எல்லோரையும் உயிரோடு விட்டு விடுகிறேன். பேசாமல் வந்த வழியே போய் விடுங்கள். அது தான் நல்லது" என்றான்.

"அக்கிரமா! நான் அப்படி நினைக்க வில்லை. உன்னையும் உன் மனைவியையும் பணயப் பொருளாக வைத்து உன் கோட்டையைப் பிடிக்கப் போகிறேன்" என்றான் விட்டலராயன்.

"அது வீண் முயற்சி விட்டலராயா. எங்கள் இருவரை வைத்துக் கொண்டு உன்னால் எதையும் சாதிக்க முடியாது. என்னிடம் அபூர்வ அஸ்திரம் ஒன்றிருக்கிறது. அது உங்கள் படையை முழுவதுமாக அழித்து விடும். எங்களைப் பற்றிக் கவலைப்படாமல் ஆலுபக் கோட்டையில் உள்ளவர்கள் இதை நிச்சயமாகச் செய்வார்கள். நான் போனாலும் என் மகன் காரியத்தைக் கட்டாயமாகச் செய்து முடிப்பான். அழிவிலிருந்து தப்பி விடுங்கள்" என்றான் அக்கிரமன்.

"உன்னிடமிருக்கும் அஸ்திரம் அப்படியொரு மகா அழிவை உண்டாக்குமென்றால் நீ இங்கு வந்து துறவி வேடம் போட்டு எதற்காக ஏமாற்ற வேண்டும்? உன் இருப்பிடத்திலேயே இருந்து கொண்டு அஸ்திரத்தை பிரயோகிக்க வேண்டியது தானே?" என்று கேட்டான் விட்டலராயன்.

"மகா மந்திர அஸ்திரம் மிகவும் சக்தி வாய்ந்தது. அதை உபயோகப்படுத்த வேண்டிய தருணம் இதுவல்ல. ஆகவே தான் அதைப் பயன்படுத்தாமல் குறுக்கு வழியைக் கையாண்டேன்."

"குறுக்கு வழி என்பது எப்போதாவதுதான் பயன் தருமே தவிர எப்போதும் பயன் தராது. அக்கிரமா! விக்கிரமன் என்ற உன் பெயரை அக்கிரமன் என்று நீ மாற்றிக் கொண்டதையும் அது ஏன் என்பதையும் உன் மனைவி கூறினாள். எண்ணம் செயல் எல்லாமும் அக்கிரமத்தில் மூழ்கி விட்டதால் அக்கிரமன் என்று உன் பெயரை நீ மாற்றிக் கொண்டாயாம். அது உண்மையோ பொய்யோ! நீ இங்கே வந்து துறவி வேடத்தைப் போட்டுக் கொண்டு ஏமாற்றியதிலிருந்து நீ அக்கிரமக்காரன் என்பது புரிந்து விட்டது. உன்னை நினைக்கவே வெறுப்பாக இருக்கிறது. அக்கிரமா! உன்னையும் உன் மனைவியையும், உன் வீரர்களையும் உயிரோடு விடுகிறேன். எல்லோரும் போருக்குத் தயாராகுங்கள்.

போரில் சந்திப்போம். அதுவே கண்ணியமானது'' என்றான் விட்டலராயன்.

அக்கிரமன் பதிலேதும் சொல்லவில்லை. மனைவியோடும் படைகளோடும் மௌனமாகப் புறப்பட்டான்.

"இந்த அயோக்கியனை எதற்காக விட்டீர்கள் மகாராஜா! இவனையும் இவள் மனைவியையும் பணயப்படுத்திக் கொண்டு நாட்டைப் பிடித்திருக்கலாமே?'' என்று கேட்டான் கங்கராஜன்.

"அவனுக்கும் நமக்கும் வித்தியாசம் இருக்கிறது கங்கராஜா. அவன் வழி குறுக்கு வழி. மானங்கெட்ட வழி. நாமும் அதைக் கடைப்பிடிக்க வேண்டியதில்லை'' என்றான் விட்டலராயன்.

போர்க் காலங்களில் தந்திரமும் குறுக்கு வழியும் உபாயங்கள் தான். அதற்கான வாய்ப்பு வரும் போது தட்டிக் கழிப்பது கௌரவமாக இருக்கலாமே தவிர பயன் கிடைக்காமல் போய் விடும். படையெடுப்பின் ஆரம்பத்தில் தந்திரங்களையும் தர்மத்திற்குப் புறம்பானவற்றையும் செய்வதில் தயங்காத மன்னன் படையெடுப்பின் இடையில் வேறு விதமாக யோசிப்பதும் சிந்திப்பதும் கங்கராஜனுக்கு விளங்கவில்லை.

அதே சமயம் எல்லா விஷயங்களிலும் மன்னனிடம் விவாதிப்பது சரியல்ல என்பதை உணர்ந்தான்.

அக்கிரமன் அகன்ற பின் பர்ணசாலைக்கு உரிய உண்மையான மகரிஷியான விஜயனானந்தரைத் தேடும்படிச் சொன்னான் விட்டலராயன்.

நல்ல வேளையாக அக்கிரமக் காரனான ஆலுப நாட்டு மன்னன் அக்கிரமன் விஜயானந்தரைக் கொல்லாமல் கைகளையும் வாயையும் கட்டி ஒரு வாய்க்காலில் போட்டிருந்தான்.

கங்கராஜன் கட்டுகளை அகற்றி அவரை ஆசிரமத்திற்குக் கொண்டு வந்தான்.

அவர் "எனக்கு ஒன்றுமில்லை. நீங்கள் கவலைப்பட வேண்டாம். உங்கள் வேலையைப் பாருங்கள்'' என்றார் விஜயானந்தர்.

"மகரிஷியான தங்களுக்கு இப்படியொரு கொடுமை நேரலாமா சுவாமி?'' என்று கேட்டான் கங்கராஜன்.

"என் தவத்தில் ஏதோ தவறு. அதற்குத் தான் இந்த தண்டனை'' என்றார் முனிவர்.

நடந்ததையெல்லாம் கூறிய கங்கராஜன் "எங்கள் வெற்றிக்கு ஆசி கூற வேண்டும் முனிவரே'' என்றான்.

“போர் நடத்துபவர்களுக்குத் துறவிகள் ஆசி வழங்கலாகாது மன்னா. இரு தருப்பாரும் எனக்கு ஒன்றுதான். உங்கள் நடவடிக்கையில் முடிவு இருக்கிறது” என்று சொன்ன முனிவர் மேற்கொண்டு பேசாமல் மௌன நிஷ்டையில் ஆழ்ந்தார்.

“சரி. நாம் போகலாம் கங்கராஜா. போலித் துறவிக்கும் உண்மைத் துறவிக்கும் வித்தியாசம் இந்தப் பேச்சும் மௌனமும் தான்” என்றான் விட்டலராயன்.

படை புறப்பட்டது.

ஒரு வார கால பயணத்திற்குப் பிறகு மலைச் சரிவில் இறங்கத் துவங்கியது.

கணிசமான தூரம் இறங்கியபோது எதையோ பார்த்த கங்கராஜன் “மகாராஜா! கவனித்தீர்களா?” என்று கேட்டான்.

விட்டலராயன், கங்கராஜன், பரதன் ஆகியோர் தங்களுக்குரிய பதவிகளுக்கான ஆடைகளையே அணிந்திருந்தார்கள்.

கங்கராஜன் சுட்டிக் காட்டிய இடம் மலை அடிவாரம். அங்கே கணிசமான படையொன்று நின்றிருந்தது.

“அது ஆலுப நாட்டின் படையாகத் தான் இருக்க வேண்டும்” என்றான் விட்டலராயன்.

“மலையின் அடிவாரத்திலிருந்து இரண்டு காத தூரத்தில் இருக்கிறது ஆலுபர்களது கோட்டை. அப்படியிருக்கும் போது அவர்களின் படை இங்கே வரவேண்டிய அவசியம் என்ன மகாராஜா?”

“நாம் மலையிலிருந்து இறங்குகிறோம். இறங்கும் வழி கரடு முரடானது. வேகமாக இறங்க முடியாது. ஆனால் எதிரிப் படைக்கு அந்தச் சிரமம் இல்லை. சமவெளியில் இருக்கிறது. இருந்த இடத்திலேயே இருந்தபடி தீவாளிகளையும், விஷ அம்புகளையும், வெடிகளையும் நம் மீது வீசலாம். நம்மால் அவற்றை மீறி முன்னேற முடியாது. நமது தரப்பில் அதிக பட்சமான சேதத்தை உண்டாக்குவது தான் எதிரியின் நோக்கம். சரியானப் போர் முறை நேர்வழியில் சந்திக்கும் எதிரியை நாம் பாராட்ட வேண்டும்” என்றான் விட்டலராயன்.

“பாராட்டு இருக்கட்டும் மகாராஜா. நாம் இப்போது செய்யக் கூடியது என்ன?” என்று கேட்டான் கங்கராஜன்.

“சமவெளியில் இருக்கும் எதிரிப் படைகளால் நமது படை முழுவதையும் காண முடியுமா?”

“முடியாது.”

"ஏன்?"

"நாம் இறங்குவது மொட்டை மலையல்ல. மரங்களும் பாறைகளும் நிறைந்தது. அவை இரு படைகளுக்கும் இடையே திரையாக இருக்கிறது. நம்மை ஓரளவிற்குத்தான் காண முடியும். அதே சமயம் நமது படையின் எண்ணிக்கை இருபதாயிரம் என்று அக்கிரமனிடம் நானே கூறியிருப்பதால் அது விஷயமாக அவனுக்கு ஊகத்திற்கு இடமிருக்காது. நமது பலம் அவனுக்கு உண்மையாகவே தெரியும்."

"நல்லது கங்கராஜா. நமது படையின் பின் பகுதி இரு புறங்களிலும் பிரிந்து சற்று தூரம் சென்று கீழே சென்று இறங்கட்டும். எதிரியை இரண்டு பக்கங்களிலும் தாக்கட்டும். நாம் இங்கிருந்து மேலே இறங்கி தாக்கலாம். மூன்று பக்கங்களிலும் தாக்கினால் எதிரி அழிவான்" என்றான் விட்டலராயன்.

மன்னனின் திட்டம் வாய்மொழியாகவே பின்னால் இருந்து படைகளுக்குத் தெரிவிக்கப்பட்டு அங்கே இருந்த படை இரண்டாகப் பிரிந்து இருபுறமும் சென்றது. அப்படையை உபதளபதிகள் தலைமை வகித்தார்கள்.

அதே சமயம் விட்டலராயன், கங்கராஜன், பரதன் ஆகியோர் வசம் இருந்த படை ஐயாயிரம் இருக்கலாம். அது ஏதும் அறியாத மாதிரி மலைச் சரிவில் மெல்ல இறங்கியது. அவ்வாறு இறங்கி வந்ததை மலை அடிவாரத்தில் திரட்டியிருந்தப் படையின் முகப்பில் இருந்த ஆலுபர்களின் மன்னன் அக்கிரமன் கவனித்தான்.

தனது அருகில் இருந்தத் தளபதியைப் பார்த்து "நான் சொன்ன திட்டத்தை வேண்டாம் என்றாய். விபரீதம் என்றாய். ஆபத்து என்றாய். அழிவோம் என்றாய். ஆனால் நான் சொன்னபடி - விளக்கியபடி - எதிர்பார்த்தபடித் தான் எதிரியின் படை வருகிறது. மலையானது மொட்டை மலையாக இருந்தால் அவர்களுக்கு அது பலமாக இருந்திருக்கும். ஆனால் இந்தப் பகுதிமலை மரங்களால் ஆனது. பாறைகள் நிறைந்தது. அவர்கள் வேகமாக நம்மீது இறங்க முடியாது. மோத முடியாது. ஊடுருவ முடியாது. நமக்கோ சாதகமான நிலை. தட்டுத் தடுமாறி மெதுவாக வரும் அப்படை மீது நாம் விஷ அம்புகளை எறியலாம். தீயம்புகளை வீசலாம். சக்தி வாய்ந்த பாணங்களைக் கொளுத்திப் போடலாம். அவர்களால் சமாளிக்க முடியாது. திரும்பிச் செல்லவும் முடியாது. அதோடு நாம் விடும் பாணங்களில் மரங்களும் பற்றி எரியும். எதிரிகள் தத்தளித்துச் சாவார்கள்" என்றான்.

தளபதி எதுவும் பேசவில்லை.

“என்ன? எதுவும் பேசவில்லை? வாயடைத்து விட்டதா?” என்று கேட்டான் அக்கிரமன்.

“மௌனம் உத்தமம்” என்றாள் தளபதி.

“மௌனம் நமக்கல்ல தளபதி. துறவிகளுக்கு. துறவிகள் பேசவும் மாட்டார்கள். செய்யவும் மாட்டார்கள். நீங்களும் அப்படி இருந்து விடப் போகிறீர்கள்?” என்று சற்றுக் கிண்டலாகவே சொன்னான் அக்கிரமன்.

இதற்கிடையில் ஹொய்சளப் படை மேலும் முன்னேறிய நிலையில் பாறைகளை அசைத்து உருட்டியது. தங்களுக்குத் தடையாக இருந்த பாறைகளையும் மரங்களையும் வெட்டி மலைச் சரிவில் உருட்டியது. அப்பாறைகள் மலையின் அடிவாரத்தை நோக்கி வந்ததால் “இது என்ன இழவாகிப் போய் விட்டது?” என்று கடுகடுத்த அக்கிரமன் “தாக்குதலைத் துவங்குங்கள்” என்றான்.

அதையடுத்து அவனது படைகள் தீயம்புகளையும் விஷ அம்புகளையும் வீசின. வாணங்களையும் கொளுத்திப் போட்டனர். இதே வேலையை ஹொய்சளப் படையும் செய்தது. அப்படைக்கு மரங்கள் பாதுகாப்பாக இருந்ததால் மறைந்து கொண்டு தீவாளிகளையும் விஷஅம்புகளையும் ஈட்டிகளையும் எறிந்ததால் அடிவாரத்தில் இருந்த அக்கிரமனின் படை மீது அவை விழுந்து சேதத்தை உண்டாக்கின. உருண்டு வந்தப் பாறைகள் வேறு உபத்திரம் செய்தன.

அச்சமயத்தில் அடிவாரத்தில் அக்கிரமன் படையில் இரு பக்கங்களிலும் ஹொய்சளப் படை முரசொலித்துக் கொண்டு முன்னேறி வந்து தாக்கவே தனது நிலை அபாய நிலை என்பதையும் தொடர்ந்து போரிட்டால் அதோ கதியாகி விடும் என்பதையும் உணர்ந்து கொண்ட அக்கிரமன் படைகளைப் பின்வாங்கும்படி கொம்புகளை ஊதினான்.

அதையடுத்து அவனது படைகள் இரண்டு காத தூரத்திலிருந்த ஆலுபர் கோட்டையை நோக்கிப் பின் வாங்கி ஓடின. ஹொய்சளப் படை முடிந்த வரை எதிரிப் படையைத் தாக்கி வீழ்த்தி விட்டு அதைப்பின் தொடர்ந்து சென்றன.

தனது படை கோட்டையை நோக்கி மிக வேகமாகப் பின்வாங்கி வருவதைக் கண்ட கோட்டைத் தளபதி கோட்டையின் எட்டு வாயில்களையும் திறந்ததால் பின் வாங்கியப் படை மின்னல் வேகத்தில் உள்ளே நுழைந்தன. எட்டு வாயில் கதவுகளும் மூடப்பட்டன. மதில் மீது வீரர்கள் ஏறிநின்று ஹொய்சளப் படையைத் தாக்கத் தயாரானார்கள்.

கோட்டையை நெருங்கியதும் படைகளை நிதானிக்கச் சொன்ன விட்டலராயன் படைகளை கோட்டையைச் சுற்றி வளைக்கும் படிக் கட்டளையிட்டான்.

கோட்டையின் வடக்கு புறத்தில் விட்டலராயனுக்கு கூடாரம் அமைக்கப்பட்டது. வீரர்களை உணவுக்கு ஆயத்தம் செய்து கொள்ளும்படி உபதலைவர்களிடம் சொன்னான் விட்டல ராயன். மழைக்காலம் முடிந்து சில நாட்களே ஆகியிருந்ததால் தண்ணீருக்குக் குறைவில்லாமல் இருந்ததால் படைகள் நீரையே முதல் உணவாகப் பருகி ஆசுவாசப்படுத்திக் கொண்டன.

தனக்கு அமைக்கப்பட்ட கூடாரத்தை விட்டு அதற்கு அப்பால் இருந்த பெரிய பாறை ஒன்றின் மீது அமர்ந்து கொண்ட விட்டலராயன் பரதனை அழைத்து "பரதா! உயரமான மரத்தின் மீது ஏறி கோட்டையின் உட்புறம் தெரிகிறதா என்று பார். கோட்டையின் வெளிப்புற அமைப்பு பற்றியும் தெரிந்து வந்து சொல்" என்றான்.

கங்கராஜன் மன்னனைப் பார்த்து "மகாராஜா! ஆலுப நாட்டு மன்னன் தன்னிடம் சக்தி வாய்ந்த அஸ்திரம் ஒன்று இருப்பதாகவும் அதை எய்தால் நமது படை முழுவதும் அழியும் என்று சொன்னான் அல்லவா? அப்படிச் செய்யாமல் நம்மை எதிர்பார்த்து அடிவாரத்திற்கு ஏன் வரவேண்டும்? அப்படி வந்ததில் அவனுக்குத் தோல்வி தானே கிடைத்தது? அவனது நடவடிக்கை முட்டாள் தனமாக அல்லவா இருக்கிறது?" என்று கேட்டான்.

"மந்திர அஸ்திரம் அவனிடம் இருப்பதாக நான் நம்பவில்லை கங்கராஜா. நம்மை பயமுறுத்துவதற்காகவே அப்படிச் சொல்லி யிருக்கலாம். அதோடு அவனிடம் படைபலம் குறைவாக இருக்கும் என்று தோன்றுகிறது. அதனால் தான் மலையடி வாரத்தைத் தனக்குச் சாதகமான இடமாகக் கருதிக் கொண்டு தன் படையை அங்கே அழைத்து வந்திருக்கிறான். அவன் நினைத்தது போல நம்மை அங்கே அழிக்க முடியவில்லை. ஆகவே தான் பின் வாங்கிச் சென்று கோட்டைக்குள் தஞ்சமாகி விட்டான்" என்றான் விட்டலராயன்.

"இக்கோட்டையை முற்றுகையிட்டு எதிரியை வீழ்த்த முடியும் என்று நம்புகிறீர்களா?" என்று கேட்டான் கங்கராஜன்.

"எனது அனுமானத்தின்படி எதிரியின் படைபலம் மிகவும் குறைவாகத்தான் இருக்க வேண்டும். அந்தக் குறைவான படைகளை வைத்துக் கொண்டு அவனால் நம்மைத் தாக்க

முடியாது. வெற்றி கொள்ள முடியாது. அதோடு அக்கிரமனுக்கு நேர்வழி தெரியாது. குறுக்கு வழியில் தான் முயல்வான். அதற்கு இடம் கொடுக்காத விதமாக இன்றிரவே கோட்டையைத் தாக்கி முன்னேற வேண்டும். கோட்டைக் கதவை இடிப்பதற்கான மரத்தண்டுகளைத் தயார் செய்யும்படி வீரர்களிடம் சொல்" என்றான் விட்டலராயன்.

இதற்கிடையில் உபதளபதி பரதன் வந்து கோட்டையைப் பற்றிய தகவல்களைச் சொன்னான்.

"கோட்டைக்கு எட்டு வாயில்கள் உள்ளன. கோட்டையின் விஸ்தீரணம் ஒரு யோசனை அளவைவிடச் சற்று குறைவு. மதில் மீது விற்பொறிகளும் எண்ணைக் கொப்பரைகளும் உள்ளன. வீரர்களும் போதுமான அளவு மதில் மீது சுற்றி வருகிறார்கள். இவ்வளவுதான் என்னால் அறிய முடிந்ததாக இருக்கிறது."

"விசேஷமான அம்சம் எதுவும் இல்லை. சாதாரணமாக ஒரு கோட்டைக்கு இருக்கக் கூடிய அம்சங்கள்தான் இருக்கின்றன" என்றான் விட்டலராயன்.

"இக்கோட்டைக்கு எட்டு வாயில்கள் இருப்பது அசாதாரண மானதல்லவா?" என்று கேட்டான் கங்கராஜன்.

"ரோமாபுரிக்கு முப்பத்திரண்டு வாசல்கள் ஒரு காலத்தில் இருந்தன. அங்கே அடிமைகளை வைத்துக் கொண்டு ராஜ்யம் நடந்தபடியால் அடிமைகளை ரோமுக்குள் பலகட்டடங்களில் கொண்டு வருவதற்காகப் பல வாயில்கள் இருந்தன. ஒவ்வொரு வாயில்களும் இன்னின்னவர்களுக்கு என்று நிர்ணயிக்கப் பட்டிருந்தது. இக் கோட்டைக்கு அப்படி எதுவுமில்லை. இதற்கு எட்டு வாயில்கள் இருப்பது பாதுகாப்பைத் தராது. எனது ஊகப்படி இந்தக் கோட்டை நீண்ட காலமாக எதிரிகளின் தாக்குதலுக்கு உட்படவில்லை என்று தோன்றுகிறது. எதிரிகளின் வரவை விட பல்வேறு வணிகர்களின் போக்குவரவு தான் அதிகமாக இருந்திருக்கும். அவர்களுக்கு வசதியாக இருக்கட்டும் என்று தான் எட்டு வாயில்களை அமைத்திருப் பார்கள். எதற்காக இருந்தாலும் சரி. நான் கூறியபடி இன்றிரவு தாக்குதலைத் தொடங்கி விடலாம்" என்றான் விட்டலராயன்.

வீரர்களை மரங்களை வெட்டிச் சீவி எட்டு வாயிற் கதவுகளையும் இடிக்க ஆயத்தப்படுத்திக் கொண்டிருந்தார்கள்.

மன்னன் கூடாரத்திற்குள் வந்து அமர்ந்து தனது திட்டம் பற்றி கங்கராஜனிடமும் பரதனிடமும் விளக்கிக் கொண்டிருந்தான்.

இரவு நேரம் தொடங்கியது.

பந்தம் எதுவும் ஏற்ற வேண்டாம் என்று கட்டளையிடப் பட்டிருந்ததால் யாரும் பந்தமேற்றவில்லை. கோட்டைப் பகுதியிலும் வெளிச்சமில்லை. ஏறக்குறைய பிசாசுகள் இரண்டு மௌனமாகப் படுத்திருப்பது போலிருந்தது அக்காட்சி.

அப்போது வீரன் ஒருவன் வந்தான்.

கோட்டையிலிருந்து வீசப்பட்டதாகச் சொல்லி ஓலை யொன்றைக் கொடுத்தான்.

கூடாரத்திற்குள் பந்தம் ஒன்றை ஏற்றச் சொன்ன விட்டலராயன் அம்பு மூலம் வந்திருந்த ஓலையைப் படித்தான்.

“ஹொய்சள மன்னர் அவர்களுக்கு. நான் வரும்வரைத் தாக்குதலை துவக்க வேண்டாம்” என்றிருந்தது.

மன்னன் சிந்தனையில் ஆழ்ந்தான்.





பேச்சுக்களுக்கு அவசியம் இல்லாத போதும் பேச்சிற்கு மதிப்பில்லாத போதும் மௌனமாக இருப்பது உத்தமம் – கோட்டைத் தளபதி.



“மகாராஜா! அக்கிரமன் தனது வேலையைக் காட்டுகிறான். இந்த ஓலைச் செய்தி ஒரு புரட்டு. பொய். ஏமாற்று வேலை. தாங்கள் அறிவித்தபடி இப்போதே தாக்குதலைத் துவக்குவோம். பொழுது விடிவதற்குள் வெற்றியை ஈட்டி விடலாம்” என்றான் கங்கராஜன்.

“ஆம் மகாராஜா. அக்கிரமனைப் போன்ற எதிரிக்கு வாய்ப்பு கொடுப்பது ஆபத்தானது. நமது படைபலம் அதிகம் என்பதால் அதை அழிப்பதற்கு நேர் வழி சரிபடாது என்பதற்காகவே ஏதோ சதி வேலையில் இறங்கியிருக்கிறான். அதன் அத்தாட்சி தான் இந்த ஓலை” என்றான் உபதளபதி பரதன்.

“என் சந்தேகம் என்னவென்றால் நம்மை அழிக்கக் கூடிய மந்திர அஸ்திரத்தை நம்மீது ஏவாமல் அக்கிரமன் சதி என்னும் சுற்று வழியை எதற்காகத் தேர்ந்தெடுக்க வேண்டும்?” என்று கேட்டான் மன்னன் விட்டலராயன்.

“நீங்கள் தான் மந்திர அஸ்திரம் என்பது பொய் என்றீர்களே! வெறும் மிரட்டல் ஆயுதம் என்றீர்களே! ஏமாற்று வேலை என்றீர்களே?” என்று கேட்டான் கங்கராஜன்.

“ஊகத்தின் அடிப்படையில் அப்படிச் சொன்னேன். ஊகம் உண்மையாக இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. உண்மைநிலை வேறு மாதிரி இருக்கலாம் அல்லவா?”

“தாங்கள் சொல்வது தான் என்ன? அக்கிரமனிடம் மந்திர அஸ்திரம் இருக்கிறது என்கிறீர்களா?”

“இருந்தால் அதை எய்திருக்கலாமே என்றேன்.”

“மகாராஜா! மந்திர அஸ்திரத்தைப் பற்றிய பேச்செதற்கு? ஓலையைப் பற்றிப் பேசுவோம்.”

“இந்த ஓலையை அக்கிரமனே அனுப்பியிருப்பான் என்கிறீர்களா?”

“அவனுக்குக் குறுக்கு வழிதானே கைவந்த கலை மகாராஜா?”

“ஒரு வேளை ஓலையில் உள்ளபடி அவனே நம்மை சந்திக்க வரலாம் அல்லவா?”

“தாங்களா இப்படிப் பேசுவது? கிழக்கே உதிக்கும் கதிரவன் மேற்கே உதிக்கலாம். ஊமையாய்ப் பிறந்த பெண் பாடலாம். முடமான மனிதன் ஓட்டப் பந்தயத்தில் ஓடலாம். அக்கிரமன் உங்களைச் சந்திக்க வரமாட்டான்.”

“கங்கராஜா! இதில் ஏதோ விஷயம் இருக்கிறது. கண்டறிய வேண்டும். இன்றிரவு தாக்குதல் வேண்டாம் என்று படைகளுக்குச் சொல்லிவிடு.”

“மகாராஜா! தாங்கள் லட்சியத்தை விட்டு வேறெங்காவது போகிறீர்களா?”

“கடுமையான பயணம் போகும் போது ஒரு குழந்தையின் அலறல் கேட்கிறது. பெண்ணொருத்தியின் இசை கேட்கிறது. மயில் ஒன்றின் ஆட்டம் தெரிகிறது. இவற்றைச் சற்று கவனிப்பதால் பயணம் மாறி விட்டதாக அர்த்தமாகுமா? கங்கராஜா! லட்சியம் என்பது கால்களுக்குச் சங்கிலியையும் கண்களுக்குக் கட்டையும் கட்டிக் கொண்டு நடக்கும் பயணமல்ல. வீசும் காற்றை சுவாசித்துக் கொண்டு ஓடும் நீரைப் பருகிக் கொண்டு சுதந்திரமாகச் செல்லும் பயணம். எத்தனையோ வாய்ப்புகள் வரும். வரும் வாய்ப்புகளெல்லாம் பலனைத் தந்து விடாது. வீணாகப் போகும் வாய்ப்புகளும் வாய்ப்பில்லாமல் வீணாகப் போகும் வேளைகளும் எல்லா மனித வாழ்க்கையிலும் வரும். கவலையை விடு கங்கராஜா. இப்போது வீசும் காற்றை அனுபவி. இது எப்போதும் வீசாது” என்றான் மன்னன்.

இதே நேரத்தில் கோட்டைக்குள் ஆலுபர் நாட்டு மன்னன் அக்கிரமன் தன்னைச் சுற்றியிருந்த அனைவரையும் பார்வையால் மட்டுமின்றி வார்த்தைகளாலும் சுட்டெரித்துக் கொண்டிருந்தான்.

அவன் எரிந்து விழும் அளவிற்கோ கரித்துக் கொட்டும் அளவிற்கோ பிறர் மீது தவறில்லை என்பதாலும் அனைத்திற்கும் அவனே காரணம் என்பதாலும் அனைவரும் அமைதியாகவே அமர்ந்திருந்தார்கள்.

அவர்களோடு அக்கிரமனின் மனைவியும் ராணியுமான அருந்ததியும் அமர்ந்திருந்தாள்.

“பேரவமானம் உண்டாகி விட்டது. இப்போது கூட நீங்கள் பேச மாட்டீர்களா? ஊமைகளாகத்தான் இருப்பீர்களா?” என்று கடுகடுத்தான் அக்கிரமன்.

“பேச்சுக்களுக்கு அவசியம் இல்லாத போதும் பேச்சிற்கு மதிப்பில்லாத போதும் மௌனமாக இருப்பதே உத்தமம்” என்றான் கோட்டைத் தளபதி.

“யாரந்தப் புலவர் பெருமான்? அடுக்கு மொழி சக்கிரவர்த்தி? கோட்டைத் தளபதியா? நீ சலித்துக் கொள்ளும் அளவிற்கு நீ எப்போது பேசி நான் மதிக்காமல் விட்டு விட்டேன்? நீ என்ன எனக்குப் பாமாலையா பாடினாய் உன்னை மதித்து மாலையிட?” என்று இடக்காகக் கேட்டான் அக்கிரமன்.

“நான் என் பேச்சைப் பற்றிச் சொல்ல வில்லை மகாராஜா. நான் பேசுபவன் அல்ல. செயல்படுபவன். நீங்கள் தோற்றுத் திரும்பி வந்தபோது நான் பேசிக் கொண்டிருக்கவில்லை. எட்டு வாயில் கதவுகளையும் உடனடியாகத் திறந்து விட்டேன். நான் திறந்திருக்கா விட்டால் நீங்கள் இறந்திருப்பீர்கள். வீரர்கள் மறுபிறவிக்குத் தயாராகியிருப்பார்கள்” என்றான் கோட்டைத் தளபதி.

“கொங்கணா! என்ன பேச்சு பேசுகிறாய் நீ? நீ செய்தது கருணையல்ல. கோட்டைத் தளபதியின் கடமை. அவ்வாறு நீ செய்திருக்காவிட்டால் அதற்குப் பெயர் துரோகம். துரோகம் செய்யவில்லை என்று கவலைப்படுகிறாயா?”

“இல்லை. நான் செயல்படுவனேயன்றி வாய்ச் சொல் வீரனல்ல என்றேன்.”

“இங்குள்ள அனைவருக்கும் சொல்லிக் கொள்கிறேன். வீண் பேச்சு பேச விரும்புகிறவர்கள் யாராக இருந்தாலும் உடனே வெளியேறி விடுங்கள்” என்று கர்ஜித்தான் அக்கிரமன்.

“முதலில் உங்கள் மிரட்டல் வார்த்தைகளை நிறுத்துங்கள் மகாராஜா. இங்கே உங்களைத் தவிர வேறு யாரும் வீண்பேச்சு பேசவில்லை. பேரவமானம் பற்றிப் பேசினீர்களே அதற்கு நாங்களா காரணம்? நீங்களே காரணம். உங்கள் பிடிவாதமே காரணம். மற்றவர் ஆலோசனைகளை மதிக்காததே காரணம். ஆணவம் காரணம். அலட்சியம் காரணம். அலட்டல் காரணம். செத்துப் போன எலியைக் காதில் வைத்துக் கொண்டு நாற்றம் எங்கிருந்து வருகிறது என்று மற்றவர்களைப் பார்த்துக் கேட்பது போல் இருக்கிறது உங்கள் பேச்சு. உங்கள் போக்கு” என்று சிங்கத்தைப் பார்த்து மற்றொரு சிங்கம் கர்ஜிப்பது போலப் பேசினான் தளபதி.

தளபதியின் கர்ஜிப்பினால் சற்று நிதானத்திற்கு வந்த அக்கிரமன் “உங்கள் யோசனையை நான் ஏற்காமல் போனதால் தான் இவ்வளவு கோபமா?” என்று வினவினான்.

“என் யோசனை என்று சொல்லாதீர்கள். சேனாதிபதியின் யோசனை என்று சொல்லுங்கள்.”

“என்ன யோசனை சொன்னீர்கள் சேனாதிபதி? கொஞ்சம் சொல்லுங்களேன்.”

“சேனாதிபதியான என்னை நியமித்து விட்டு நீங்கள் படை நடத்துவது தவறு என்றேன். நீங்கள் கேட்கவில்லை.”

“சேனாதிபதி! நான் வழிப் போக்கனல்ல. மன்னன். இந்த நாட்டு மன்னன். கௌரவர்கள் பீஷ்மரை சேனாதிபதியாக நியமித்து விட்டு அவர்கள் தத்தம் இல்லங்களில் படுத்து உறங்கவில்லை. போரில் கலந்து கொண்டார்கள். பீஷ்மரை சேனாதிபதியாக நியமித்து விட்டு இளவரசன் துரியோதனன் போரில் கலந்து கொண்ட போது மன்னனான நான் கலந்து கொள்ளக் கூடாதா?”

“அதை விடுங்கள் மகாராஜா. நான் நமது படைகளை வெளியே கொண்டு போக வேண்டாம் என்றும் அது ஆபத்து என்றும் யோசனை சொன்னேன். நீங்கள் ஒப்புக் கொள்ள வில்லை.”

“நீங்கள் பதுங்கச் சொன்னீர்கள். நான் பாயச் சொன்னேன். அது தான் எனக்கு வீரமாகத் தோன்றியது.”

துறவி வேடம் பூண்டு ஹொய்சள மன்னனைக் கடத்த முயன்ற அக்கிரமன் வீரத்தைப் பற்றிப் பேசியது தளபதிக்கு விநோதமாக இருந்தது.

“நீங்கள் பாய விரும்பியதின் முடிவு தோல்வி. மகாராஜா! பாய்வது மட்டுமல்ல பதுங்குவதும் வீரம் தான். எதுவுமே சூழ்நிலைகளைப் பொறுத்தது. சேனைக்கு அதிபதி என்ற முறையின் நான் கூறும் ஆலோசனை எதையும் ஏற்காமல் எல்லா வற்றையும் நீங்கள் புறக்கணித்தால் நான் எதற்கு? தாங்கள் வெற்றி பெற்றிருந்தால் பதவிக்கு நான் தகுதியானவனல்ல என்று பதவியிலிருந்து விலகியிருப்பேன்.”

“தோற்றுப் போய் விட்டதால் நான் பதவி விலகி விடட்டுமா?”

“இது அர்த்தமற்ற பேச்சு மகாராஜா. உங்கள் பதவி என்பது உரிமையால் வந்தது. எங்கள் பதவிகளைப் போல சலுகை களாலோ, தகுதிகளாகவோ, அனுபவத்தாலோ வந்ததல்ல. தாங்கள் ஏன் பதவி விலக வேண்டும். இது போல் தாங்கள் பேசுவது எனக்கு வருத்தமளிக்கிறது.”

“போகட்டும். என் மீது வேறென்ன குறை கண்டீர்கள்?”

“மலையடிவாரத்திற்கு வந்த பிறகு எனது கடைசி முயற்சியாக - கடைசி யோசனையாக மந்திர அஸ்திரத்தை எதிரியின் மீது

எய்யச் சொன்னேன். எதிரிகள் முற்றிலும் அழிவார்கள் என்றேன். அதைக் கூடச் செய்யவில்லை."

இதைக் கேட்டதும் அக்கிரமனின் முகத்தில் அசதி தெரிந்தது.

"என் ஆசையும் அதுவாகத்தான் இருந்தது. ஆனால்.....ஆனால்..."

"ஆனால் என்ன மகாராஜா?"

"மந்திர அஸ்திரம் காணவில்லை தளபதி."

அக்கிரமன் சொன்னதைக் கேட்டு அதிர்ந்தான்.

"இதைத் தாங்கள் என்னிடம் சொல்லவில்லையே மகாராஜா? அது எப்படிக் காணாமல் போகும்? தாங்கள் தானே அதை யாருக்கும் தெரியாத ரகசிய இடத்தில் வைத்திருந்தீர்கள். ஈ எறும்பு கூட நெருங்க முடியாத இடம் என்று தாங்கள் தானே கூறியிருந்தீர்கள்? மகாராஜா! மந்திர அஸ்திரங்கள் மகாசக்தி வாய்ந்தவை. அதே சமயம் அவை காணாமல் போவது நாட்டிற்கு நல்லதல்ல" என்றான் தளபதி.

"தெரியும் தளபதி தெரியும். அது காணவில்லை என்றதும் குறுக்கு வழியில் இறங்கினேன். விஜயானந்தர் ஆசிரமத்திற்குச் சென்று அவரது வேடத்தைப் போட்டுக் கொண்டு விட்டலராயனை பணயப் பொருளாக்கினேன். ஆனால் இந்தப் பீடை எல்லாவற்றையும் கெடுத்து விட்டது. இவள் மட்டும் என்னோடு வராதிருந்தால் ஆசிரமத்திலேயே நான் வெற்றியடைந்திருப்பேன்" என்று அருகில் இருந்த ராணியைப் பார்த்துக் கூறினான் அக்கிரமன்.

ராணி மங்களா கோபத்துடன் எழுந்தாள்.

"மகாராஜா! இந்தச் சபையில் ராணியை அவமதிக்கும் உரிமை உங்களுக்குக் கிடையாது. கட்டிய மனைவியைக் காப்பாற்ற முடியாத நீங்களா நாட்டைக் காப்பாற்றப் போகிறீர்கள்?" என்று கூறிவிட்டு மயிலொன்று பறந்தது போல் இமைக்கும் நேரத்தில் வெளியேறினாள் ராணி.

"மகாராஜா! காணாமல் போன அஸ்திரத்தைத் தாங்கள் தேடவில்லையா?" என்று கேட்டான் தளபதி.

"எதிரியை எதிர்கொள்வதா? அஸ்திரத்தைத் தேடுவதா? அஸ்திரத்தைத் தேடுவதற்கு அவகாசமில்லை என்பதால் எதிரியை அழிக்கத்தான் ஆசிரமத்திற்குப் போனேன். அங்கே சாதிக்க முடியாததால் படைகளோடு மலையடிவாரத்திற்கு வந்தேன். அங்கேயும் சாதிக்க முடியாததால் பின்வாங்கி கோட்டைக்கு வந்தேன். எதிரியின் படை கோட்டையை

முற்றுகையிட்டிருக்கிறது. நமது படைபலம் பத்தாயிரம். அதில் ஆயிரம் பேர் மலையடிவார மோதலில் மரணமடைந்திருப் பார்கள். எதிரியின் படை பலமோ நம்மைக் காட்டிலும் இரு மடங்கு. என்ன செய்வது என்று தோன்றவில்லை. நீங்கள் எல்லோரும் என்மீது குறை கூறுகிறீர்களே தவிரக் கூறுவகை ஆராய்ந்து தீர்வு பெறுவதற்கு உபாயம் எதுவும் கூறவில்லை" என்று சொல்லி அயர்ந்து போனான் அக்கிரமன்.

தற்போது அனைவருக்கும் அவன்மீது அனுதாபமே ஏற்பட்டது. மந்திர அஸ்திரம் காணாமல் போன அதிர்ச்சியால் தான் அக்கிரமன் யாரையும் நம்பாமல் தன்னம்பிக்கையுடன் போர் நடத்தியிருக்கிறான் என்பதை உணர்ந்தார்கள்.

இந்த நிலையில் அக்கிரமனுக்கு தைரியமூட்டும் விதமாகப் பேச முற்பட்டு "தாங்கள் கவலைப்பட வேண்டியதில்லை மகாராஜா. நமக்கு இப்போது உதவிப் படைகள் தேவை. அதைப் பெற்றுக் கொண்டால் எதிரியைச் சமாளிக்கலாம்" என்றான்.

"எதிரி நம் தாக்குதலுக்காகக் காத்துக் கொண்டிருக்கப் போவதில்லை. படைபலம் அதிகம் கொண்ட அவன் உடனடியாகத் தாக்குவான். கோட்டைக் கதவுகளை இடிக்கத் தண்டுகளைத் தயார் செய்து கொண்டிருப்பதை மதில் மீதிருந்த நமது வீரர்கள் கூறியிருக்கிறார்கள். எந்த நிலையிலும் போரைத் துவங்கலாம். அதைத் தவிர்ப்பது எப்படி? தவிர்த்து விட்டு படைப் பலத்தைப் பெருக்குவதெப்படி? எங்கிருந்து அதைப் பெறுவது?" என்று கேட்டான் அக்கிரமன்.

"மகாராஜா! எதிரியிடம் சரணடைவது போலவும் சமாதான மாகுவது போலவும் முரண்படுவது போலவும் மாறி மாறி நாடகமாடுவோம். காலம் தாழ்த்துவோம். வேண்டுமானால் அவனையும் அவன் படைகளையும் நமது கோட்டைக் குள்ளேயே வரவழைத்து உபசரிப்போம். முடிந்தால் படை வீரர்களை விஷம் வைத்துக் கொல்வோம். என்னென்ன முடியுமோ அவ்வளவையும் செய்வோம். இதற்கிடையில் சாளுக்கிய நாட்டிற்கு படைவுதவி கோரி ஆட்களை அனுப்புவோம்" என்றான் தளபதி.

"நீ கூறுவது சரியாக இல்லையே தளபதி. சாளுக்கிய நாடு எங்கே இருக்கிறது? அங்கே எப்படிப் போவது? படைகளைக் கொண்டு வருவது? பல வாரங்கள் ஆகுமே! அதுவரை எதிரியை எப்படி அடக்கி வைப்பது?"

"எதிரி விஷயத்தைச் சமாளிக்க நான் பல விஷயங்களைக் கையில் வைத்திருக்கிறேன். தாங்கள் எனக்கு அனுமதியளித்தால் போதும்."

“ஆட்களை எப்படி அனுப்புவீர்கள்?”

“கோட்டைக்குள் வரவும் கோட்டைக்குச் செல்லவும் வைத்தியப் பெண்மணிகளுக்கு அனுமதியுண்டு. ஊமைகளையும் குருடர்களையும் எதிரிகள் ஏதுவும் செய்ய மாட்டார்கள். எனவே யார் யாரை எப்படி அனுப்ப வேண்டுமோ அப்படி அனுப்புவேன். நமது கோட்டைக்கு கிழக்கே சென்றால் அங்கேயிருந்து வடக்கே செல்ல நிறைய பாதைகள் உண்டு. நாம் அனுப்பும் ஒற்றன் அங்கே சென்று விஷயத்தை வெளிப் படுத்தியதும் அங்கிருந்து புரவித் தரகர்கள் புரவியில் செய்தி கல்யாணபுரத்திற்குக் கொண்டு செல்வார்கள். சொல்வார்கள். சாளுக்கியர் படை உடனே வரும்.”

அக்கிரமனுக்குத் தளபதி சொன்னதில் அவ்வளவாக நம்பிக்கை இல்லை என்றாலும் ஏதாவது செய்வது நல்லது தான் என்ற எண்ணத்தில் அனுமதி தந்தான்.

மறுநாள் காலை வடக்கு வாயில் திறக்கப்பட்டது. வீரர்கள் முரசொலித்தார்கள்.

“மகாராஜா அவர்களின் பாட்டியாருக்கு உடல் நலம் மிகவும் கெட்டுவிட்டது. அவரை உடனடியாகச் சிகிச்சைக்கு அனுப்ப வேண்டும். ஹொய்சளப் படை வழி விடும் படி உத்தரவு” என்று ஒரு வீரன் உரக்கப் படித்தான்.

அதையடுத்து பல்லக்கு ஒன்றில் மூதாட்டி ஒருவர் படுத்திருக்க, நான்கு பேர் அவளைத் தூக்கி வந்தார்கள். கூடவே ஒரு மருத்துவப் பெண்மணியும் வந்தாள்.

பல்லக்கு வெளியேறியதும் கோட்டைக் கதவு மூடப்பட்டது.

வெளியேறிய பல்லக்கு ஹொய்சளப் படையை நெருங்கியதும் “பரதா! முதலில் எல்லோரையும் சோதனை செய். சந்தேகப் படக் கூடிய எதுவாக இருந்தாலும் கைப்பற்று” என்றான் விட்டலராயன்.

“ஐயா! உங்களுக்கு இரக்கமே இல்லையா? சாகக் கிடக்கும் மூதாட்டியிடம் கூடவா சோதனை? நான் மருத்துவப் பெண். மூதாட்டிக்குச் சிகிச்சை செய்ய கோட்டைக்குள் வசதியில்லை என்றுதான் பக்கனஹள்ளிக்குக் கொண்டு செல்கிறோம். கருணை காட்டுங்கள்” என்றாள் மருத்துவப் பெண்.

விட்டலரயான் அசைந்து கொடுக்கவில்லை. பல்லக்கையும் மூதாட்டியையும் சோதனை செய்தான். எதுவுமில்லை என்று பரதன் சொன்னதும் “இந்த மருத்துவப் பெண்ணை மறைவுக்கு அழைத்துச் சென்று சோதனை செய்” என்றான்.

மருத்துவப் பெண் மறுப்பைத் தெரிவிக்கும் விதமாக "இது தவறு. அடாத செயல். என்னை மானபங்கப் படுத்தும் காரியம்" என்றாள்.

"நீ பிடிவாதம் பிடித்தால் அனைவருக்கும் முன்னிலையில் உன் ஆடைகளை அவிழ்த்து சோதனையிடச் சொல்வேன்" என்றான் விட்டலராயன்.

"நீங்கள் எல்லோரும் நாசமாகப் போவீர்கள்" என்று சபித்துக் கொண்டே மறைவுக்குச் சென்றாள் மருத்துவப் பெண்.

சோதனைக்குப் பிறகு வந்த பரதன் "எதுவுமில்லை மகாராஜா" என்றான்.

மன்னன் வைத்தியப் பெண்மணியைப் பார்த்து "இந்த மூதாட்டிக்கு என்ன வியாதி?" என்று கேட்டான்.

"மூச்சு கட்டி விட்டது. மூன்று நாழிகைக்குள் சரி செய்யா விட்டால் மூச்சு நின்று விடும். இவருக்குச் சீரான மூச்சைக் கொண்டு வரக் கூடிய வைத்தியர் பக்கனஹள்ளியில்தான் இருக்கிறார். ஆகவே வழி விடுங்கள்" என்றாள்.

"அதற்கு அங்கே ஏன் போக வேண்டும்?" என்று கேட்ட விட்டலராயன் "கங்கராஜா! உனக்கு வைத்தியம் தெரியுமல்லவா? மூதாட்டியை கவனி" என்றான்.

"ஐயா! உயிரோடு விளையாடாதீர்கள். தாமதம் செய்யாதீர்கள். உங்களால் எதுவும் செய்ய முடியாது. மூதாட்டியைக் கொன்ற பாவத்திற்கு ஆளாகாதீர்கள்" என்றாள் பெண்மணி.

விட்டலராயன் அதற்கும் மசியவில்லை.

கங்கராஜன் அந்த மூதாட்டியைத் தொட்டு நாடியைப் பார்த்தான்.

"மகாராஜா! இந்த மூதாட்டிக்கு இயற்கைக்கு விரோதமாக மூச்சு தடை செய்யப்பட்டிருக்கிறது" என்று சொல்லி விட்டு மூதாட்டியின் தொண்டையைச் சில இடங்களில் அழுத்தினான். தளர்த்தினான். மார்பையும் லேசாக அழுத்தி அசைத்தான். மூதாட்டி பெரிதாக மூச்சு விட்டபடி பல்லக்கில் எழுந்து உட்கார்ந்தாள்.

"எனக்கு மூச்சு வந்து விட்டது" என்றாள்.

விட்டலராயன் அது விஷயமாக விசாரணை நடத்த விரும்பவில்லை.

வைத்தியப் பெண்ணைப் பார்த்து "சிகிச்சை முடிந்து விட்டது. கோட்டைக்கு அழைத்துச் செல்" என்றான்.

பல்லக்கு கோட்டையை நோக்கிச் சென்றது.

கோட்டையின் ஓரிரு வாயில்களில் வெளிப்பட்ட மருத்துவ பெண்களும் சோதிக்கப்பட்டுத் திரும்பியனுப்பப்பட்டார்கள். அவர்களிடம் "ஆலுப நாட்டு மன்னா! கோட்டையிலிருந்து வெளியே செல்ல ஒருவரையும் அனுமதிக்க முடியாது. ஏமாற்று வேலைகளில் இறங்காதே" என்று ஓலையில் எழுதிக் கொடுத்தான்.

அன்று மாலை முடவனும் ஊமையுமான ஒருவன் கோட்.டை மதில் மீதிருந்து தூக்கியெறியப்பட்டான்.

வலி தாங்காமல் அவன் "ஐயோ! அம்மா" என்று அலறினான்.

"அவனைக் கொண்டு வாருங்கள்" என்றான் மன்னன்.

மன்னனிடம் ஏதேதோ சொல்வதற்குச் சைகைகளைக் காட்டினானே தவிர யாருக்கும் எதுவும் புரியவில்லை.

"இவனை எதற்காக வெளியே தூக்கி எறிந்தார்கள்? இவன் உள்ளே இருந்தால்தான் என்ன?" என்று வினவிய விட்டலராயன் "கங்கராஜா! இவனது காயங்களுக்கு மருந்து போட்டு கட்டுப் போடு" என்றான்.

"மகாராஜா! தங்களைச் சந்திக்க வருவதாகச் சொன்ன நபர் இன்னும் வரவில்லை! எதிரிகளுக்கு வைத்தியம் செய்யத்தான் நாம் இருக்கிறோமா?" என்று கேட்டான் கங்கராஜன்.

அவனது கேள்வியை அங்கீகரிப்பது போல் நரியொன்று ஊளையிட்டது.





பெண்கள் ஒரு முடிவுக்கு வந்துவிட்டால் அந்த முடிவைத் தவிர வேறு எதையும் பொருட்படுத்த மாட்டார்கள். அவர்களை மாற்ற ஒருவராலும் முடியாது – பங்களா




நரியொன்று ஊளையிட்ட போது சரியாக நள்ளிரவு நேரம் நிலவியதால் அப்பிராந்தியம் முழுவதும் இருளில் மூழ்கிக் கிடந்தது.

அப்போது வடக்கு மதிலில் இருந்த துளை மாடம் ஒன்றில் விளக்கொளி தோன்றியது. சில கணங்கள் மட்டுமே தோன்றிய அது மறைந்தது.

மன்னன் முதலானவர்கள் அப்பகுதியையே பார்த்துக் கொண்டிருந்த போது மதில் சுவற்றிலிருந்து ஓர் உருவம் கயிற்றின் மூலம் வெளிப்புறம் இறங்கியது. இறங்கியதுமே குயில் போல் கூவியது. அதையடுத்து கயிறு உட்புறம் இழுத்துக் கொள்ளப்பட்டது.

உடல் முழுவதும் கறுப்பு அங்கியை அணிந்திருந்த அந்த உருவம் இருளோடு இருளாகக் கலந்து மன்னனின் இருப்பிடத்திற்கு வந்தது.

மன்னன் இருந்த இடத்தில் பந்தம் எதுவும் ஏற்றப்படாமல் இருட்டாகவே இருந்ததால் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்ளவில்லை.

"ஓலையில் சொன்னபடி வந்து விட்டேன். உங்களில் யார் மன்னரோ அவர் மட்டும் என்னுடன் வரட்டும். இங்கே பந்தம் எதுவும் ஏற்ற வேண்டாம்" என்றது உருவம்.

உருவத்தின் குரல் பெண்குரலாக இருந்ததால் "யார் நீ?" என்று கேட்டான் கங்கராஜன்.

"கங்கராஜா! நீ பொறுமையாக இரு. இவளோடு நான் பின்னால் செல்கிறேன். பந்தத்தை ஏற்றுவதற்கு மட்டும் ஒரு சேவகனை அனுப்பு" என்றான் மன்னன்.

இருவரும் பின்னால் நகர்ந்து மன்னன் முன்னால் இருந்த பாறை மீது ஏறி அமர்ந்தார்கள். சேவகன் பந்தத்தை ஏற்றி மண்ணில் புதைத்து விட்டு தூரத்தில் நின்று கொண்டான்.

முகத்தை மூடிக் கொண்டிருந்த பெண் முகத்திரையை விலக்காமல் “நான் யார் என்று தெரியுமா?” என்று கேட்டாள்.

“கேட்ட குரல் தானே? தெரியாமல் போகுமா?” என்றான் மன்னன்.

“நான் தான் வருவேன் என்று தெரியுமா?”

“தெரியும்.”

“எப்படி?”

“என்னைக் காத்திருக்கும்படிச் சொல்லக் கூடிய தைரியம் கொண்டவள் வேறு யாராகவும் இருக்க முடியாது.”

“ஆலுப மன்னருக்கு இருக்கக் கூடாதா?”

“இருக்கலாம். ஆனால் இந்த ஓலையை அவர் எழுத முடியாது.”

“உங்கள் ஊகம் சரிதான். உங்கள் நடவடிக்கைகளும் சரிதான். நீங்களும் சரியான நபர்தான். அதை அருவிக் கரையிலேயே கண்டு கொண்டேன்” என்று சொல்லி முகத்திரையை விலக்கினாள் ஆலுப மன்னனின் மனைவியும் ராணியுமான பங்களா.

மன்னனுக்கு வியப்பேதும் இல்லாததால் அவளது கவர்ச்சியான முகத்தைக் கண்டும் கலகலத்து விடாமல் சாதாரணமாகவே இருந்தான்.

அவனது மனஉறுதியைப் பாராட்டுவது போல் குளிர்ந்த காற்று அவர்கள் இருவரையும் அணைப்பது போல வீசியது.

“சாதாரணமாக ஆண்கள் பாறையைப் போன்றவர்கள். நீங்களோ காற்றைப் போல இருக்கிறீர்கள். நான் பாறை போல இருக்கிறேன் போலிருக்கிறது” என்றாள் அவள்.

“காற்றில் தென்றல் மட்டுமல்ல. சூறாவளியும் இருக்கிறது. பாறைகளில் மணல் பாறைகளும் உண்டு.”

“இக்கட்டான இந்த நேரத்தில் எப்படி உங்களால் இப்படிப் பேச முடிகிறது?”

“காலம் இயல்பாகத்தான் எப்போதும் இருக்கிறது. அதற்கு குணமில்லை. நாம் தான் மாறுபட்டுப் பேசுகிறோம். நடந்து கொள்கிறோம்.”

“பேச்சென்றால் இப்படி இருக்க வேண்டும் என்பது போலப் பேசுகிறீர்கள். நடவடிக்கையும் அப்படித்தான் இருக்க வேண்டும்.”

“அது இருக்கட்டும். நீ எதற்காக ஓலையை அனுப்பினாய்? தாக்குதலைத் தடுத்தாய்? இப்போது இங்கே வந்தாய்?” என்று கேட்டான் மன்னன்.

“உங்களால் ஊகிக்க முடியவில்லையா?”

“எதிரிகள் விஷயத்தில் சரிவர ஊகிக்க முடியாது.”

“என்னை எப்படி எதிரி என்று கருதுகிறீர்கள்?”

“மன்னனின் மனைவி எதிரிதானே?”

“எதிரியாக இருந்தால் இங்கு ஏன் வரப் போகிறேன்?”

“அதைத்தான் ஊகிக்க முடியவில்லை.”

“உங்களுக்கு உதவத்தான் வந்திருக்கிறேன் என்றால் நம்புவீர்களா?”

“எனக்கு எதற்காக நீ உதவ வேண்டும்? நீ ஆலுப நாட்டு ராணி. அக்கிரமனின் மனைவி.நேற்று வரை கோட்டையில் இருந்தவர்கள் எங்கள் எதிரிகள். இப்போதும் எதிரிகள். அவர்களால்தான் நீயும் இருந்தாய். நீ மட்டும் எனக்கு உதவ நினைப்பது நம்பக்கூடியதாக இல்லை.”

“எங்கள் மன்னர் அக்கிரமர் உங்களை முறியடிக்கச் சாளுக்கிய மன்னரிடமிருந்து படையுதவி கோர முயன்றார். சாளுக்கிய நாட்டிற்குச் செய்தி சொல்ல பலரையும் அனுப்பினார்.

“அவர்களையெல்லாம் நான் கோட்டைக்கு அனுப்பி விட்டேன்.”

“நீங்கள் திரும்பி அனுப்பியது எல்லோருமே வெறும் நிழல். உண்மையான ஒற்றனை நீங்கள் விட்டு விட்டீர்கள் என்று நினைக்கிறேன்.”

“என்ன சொல்கிறாய் நீ?”

“எங்கள் சேனாதிபதி மன்னரை விடத் திறமையானவர். வைத்தியப் பெண்மணிகளை உங்கள் கண்களுக்குக் காட்டி உங்கள் கவனத்தைத் திருப்பிய அவர் அதே சமயம் உண்மையான ஒற்றனை வெளியேற்றினார். அவனைக் கண்டு கொள்ளவில்லை நீங்கள்.”

“யாரைச் சொல்கிறாய்?”

“முடவனும் ஊமையுமான ஒருவரைத் தூக்கி எறிந்தார்களே - அவன் தான் உண்மையான ஒற்றன்.”

“அவனையும் பிடித்து விட்டோம்.”

“இப்போது அவன் எங்கே?”

மன்னன் சேவகனை அழைத்து ஊமை ஒற்றனைப் பற்றிக் கங்கராஜனிடம் கேட்டு விட்டு வரும்படிச் சொன்னான்.

"மகாராஜா! அந்த ஊமையனுக்கு இருந்த காயங்களுக்கு மருந்து போட்டு அனுப்பி விட்டாராம் கங்கராஜன்" என்று சேவகன் வந்து சொன்னான்.

ராணி பங்களா கலகலவென்று சிரித்தாள்.

"ஊமையும் முடவனுமான அவன் கல்யாண புரத்திற்கு எப்படிச் செல்வான்?" என்று கேட்டான் விட்டலராயன்.

"முதலில் அவனைப் பிடித்து வரச் சொல்லுங்கள்" என்றாள் பங்களா.

மன்னனும் வீரர்களை அனுப்பினான்.

"இந்த முடவன் சாளுக்கிய நாட்டிற்குப் போக மாட்டான். பக்கத்திலேயே இருகல் தொலைவில் பப்பனஹள்ளி என்ற ஒரு ஊர் இருக்கிறது. அங்கே ஒற்றர் தரகர்கள் இருக்கிறார்கள். அவர்களிடம் செய்தியைச் சொல்லி விட்டால் எங்கே போக வேண்டுமோ அங்கே புரவிகளில் சென்று செய்தியைச் சொல்லி விட்டு சம்பளத்தைப் பெற்றுக் கொள்வார்கள். இத்தகையத் தரகர்கள் பற்பல இடங்களில் இருந்து இப்பணியினைச் செய்து வருகிறார்கள்."

"இந்த ஊமையன் என்ன செய்தியைச் சொல்ல முடியும்?"

"அவனை அழைத்து வரட்டும் காட்டுகிறேன்" என்று சொன்ன ராணி பங்களா "எனது உதவி உங்களுக்கு வேண்டாமா?" என்று கேட்டாள்.

"ராணி! உன் ஓலை மட்டும் எனக்கு வராமலிருந்தால் நேற்றிரவே கோட்டையின் எட்டு வாயில்களையும் தாக்கி உடைத்து உள்ளே பிரவேசித்து எதிரிகளை அதாஹதம் செய்திருப்பேன். கதவுகளை இடிக்க மரத்தண்டுகளையும் தயார் செய்து விட்டேன்" என்றான் மன்னன்.

"நீங்கள் அவ்வாறு செய்வீர்கள் என்பது எனக்குத் தெரிந்து தான் உங்களைத் தடுத்தேன்."

"ஏன்?"

"கோட்டைக்குள் இருக்கும் பயங்கரம்தான் காரணம்."

"பயங்கரமா?"

"கோட்டைக்கு வாயில்கள் நான்கு இருப்பது தான் முறை. எட்டு எதற்கு என்று யோசித்தீர்களா?"

"எதற்கு?"

“எட்டு வாயில்களில் நான்கு வாயில்கள் நரக வாயில்கள். அவற்றை நீங்கள் இடித்து கதவுகளை எளிதில் வீழ்த்தலாம். கதவு உடைந்ததுமே உள்ளே இருந்து விஷப் புகை வெளியே வரும். உங்களால் எதுவும் பார்க்க முடியாது. விஷப் புகையால் தாக்கப்பட்டு எதையும் பார்க்க முடியாமலேயே நீங்கள் அழிந்து விடுவீர்கள். நேற்றிரவு நீங்கள் தாக்கியிருந்தால் உங்கள் படையில் பாதிக்கு மேல் அழிந்திருக்கும். நீங்களும் அழிந்திருப்பீர்கள்.”

“நம்ப முடியாத விஷயமாக இருக்கிறதே.”

“நம்பாவிட்டால் மோதித்தான் பாருங்கள்.”

“ராணி! இப்படிப்பட்ட மர்ம வாயில்கள் ஒரு புறம் இருக்கட்டும். உங்கள் மன்னரிடம் மந்திர அஸ்திரம் ஒன்று இருக்கிறதாமே! அதன் மூலம் எங்களை அழிக்க வேண்டியது தானே?”

“அழிக்கலாம். ஆனால் அந்த மந்திர அஸ்திரம் காணாமல் போய் விட்டது.”

“உண்மையாகவா சொல்கிறாய்?”

“நான் சொல்வதில் எதைத்தான் நீங்கள் நம்புவீர்கள்?”

ராணி இவ்வாறு கேட்டபோது வீரர்கள் முடவனான ஒற்றனைக் கொண்டு வந்தார்கள்.

மன்னனும் பங்களாவும் பாறையை விட்டு இறங்கினார்கள்.

“முடவனைக் கொண்டு வந்து விட்டீர்கள். செய்தியை எப்படி அறியப் போகிறீர்கள்?” என்று கேட்டாள் பங்களா.

பிறகு அவளாகவே ஒற்றனின் வலது கையைப் பிடித்தாள். அதில் கட்டை விரலில் நகம் பெரிதாக வளர்ந்திருந்தது. அதைச் சுட்டிக் காட்டிய அவள் “இந்த நகத்தில் வராகச் சின்னம் பதிக்கப்பட்டிருக்கிறது. இது போக வேண்டிய நாடு சாளுக்கிய நாடு என்பதை குறிக்கும்” என்று சொல்லி ஒற்றனின் இடது கை கட்டை விரலைப் பிடித்தாள். அதிலும் நகம் பெரிதாக இருந்தது. அதில் காகத்தின் உருவம் பொறிக்கப் பட்டிருந்தது. “இது ஆலுபர்களின் சின்னம். எங்கேயிருந்து செய்தி போகிறதென்பதற்கு இது அடையாளம்” என்றாள்.

பிறகு வீரர்களிடம் அந்த ஒற்றனின் உள்ளங் கால்களை லேசாகத் துடைக்கச் சொல்லி விட்டு “உள்ளங் கால்களைப் பாருங்கள்” என்றாள்.

அங்கே ஏதோ சித்திரம் போல வரையப்பட்டிருந்தது.

"இது சித்திரம் அல்ல. ரகசிய எழுத்துக்கள். நகத்தில் உள்ள முத்திரைகளையும் உள்ளங் கால்களில் உள்ள செய்திகளையும் ஒற்றர் தரகர்கள் தெரிந்து கொண்டு செய்தியைக் கொண்டு செல்வார்கள்" என்றாள்.

"அதெல்லாம் சரிதான். செய்தியானது கல்யாணபுரத்திற்குச் சென்று அங்கிருந்து படைகள் வருவதற்கு பல வாரங்கள் ஆகும். அதுவரை நாங்கள் இங்கே காத்திருப்போம் என்று எப்படி நினைக்கிறீர்கள்?" என்று கேட்டான் விட்டலராயன்.

"உங்களிடம் பேச்சு வார்த்தை நடத்துவது - முடியவில்லையென்றால் சமாதானமாகிப் போவது - அதுவும் முடியவில்லையென்றால் சரணாகதி அடைந்து உங்களையும் உங்கள் படைகளையும் வரவேற்று உபசரிப்பது - உங்கள் ஆதிக்கத்தை ஏற்றுக் கொண்டது போல நடிப்பது - இப்படியெல்லாம் செய்து காலத்தைக் கடத்திக் கொண்டிருந்தால் சாளுக்கியப் படை வந்துவிடும் அல்லவா? இது தான் சேனாதிபதியின் திட்டம்."

"இதற்கெல்லாம் நான் சம்மதிக்கிறேன் என்றே வைத்துக் கொள். ஊமை ஒற்றனைத்தான் பிடித்து விட்டோம் சாளுக்கிய நாட்டிற்கு எப்படிச் செய்தி போகும்?"

"வைத்தியப் பெண்களையும் ஊமைகளையும் மட்டுமே நம்பிச் சேனாதிபதி இருக்கவில்லை. தூதுப் புறாக்கள் உள்ளன. அவற்றின் மூலம் கூடச் செய்திகளை அனுப்ப முடியும்."

"நீ நினைப்பது போல் நடக்கப் போவதில்லை" என்று உங்களுக்குள்ளேயே சொல்லிக் கொண்ட விட்டலராயன் "மந்திர அஸ்திரம் காணாமல் போய் விட்டதாகச் சொல்கிறாயே அது எப்படி சாத்தியம்?" என்று கேட்டான்.

"என்னைக் கேட்டால் எனக்கெப்படித் தெரியும்? அதைத் தயாரித்தது முதல் பாதுகாப்பில் வைத்துக் கொண்டது முதல் ஆலுப மன்னன்தான் செய்தார். இப்போது காணவில்லை என்றால் அவர்தான் பதில் சொல்ல வேண்டும்."

"ராணி! சக்தி வாய்ந்த அஸ்திரங்கள் பாதுகாக்கப்படுவது பற்றி நான் நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். அதைத் திருடுவதென்பது இயலாத காரியம்."

"அதனால் நீங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள்? மந்திர அஸ்திரம் காணவில்லை என்பது பொய் என்கிறீர்களா?"

"அப்படித்தான் தோன்றுகிறது."

"அதைப் பற்றிய பேச்சு எதற்கு? அதைப் பற்றி கவலைப்பட வேண்டியது அக்கிரமர். நீங்கள் ஏன் கவலைப்பட வேண்டும்?"

"உனக்குக் கவலையில்லையா?"

"என்னைப் பற்றிக் கவலைப்படாதவர்களின் கவலையைப் பற்றி நான் எதற்காகக் கவலைப்பட வேண்டும்?"

"உன்னைப் பற்றி அக்கிரமர் கவலைப்படவில்லையா? ஏன் அப்படி?"

"அவர் அப்படித்தான்."

"அது தான் ஏன்?"

"ஹொய்சள மன்னரே, நான் இங்கே வந்தது அக்கிரமரின் குணவியல்புகளைப் பற்றி ஆராய்ச்சி செய்வதற்காக அல்ல."

"நீ தானே அவரைப் பற்றிப் பேச ஆரம்பித்தாய்!"

"விட்டலராயரே! நல்ல நல்ல பேச்சுக்களைப் பேசி வந்த நீங்கள் வீணான விஷயங்களைப் பேசி நேரத்தை விரயமாக்குகிறீர்கள்." என்று சொன்ன பங்களா "நான் ஓலையனுப்பியதும் இங்கே வந்ததும் உங்களுக்கு உதவுவதற்காகத்தான். இப்போதையச் சூழ்நிலையில் நான் மட்டும் தான் உங்களுக்கு உதவமுடியும். என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"உன் உதவியை நான் கேட்கவில்லை! எதற்காக நீயாக வந்து உதவ நினைத்துச் சிரமப்படுகிறாய்?"

"விட்டலராயரே! பெண்கள் ஒரு முடிவுக்கு வந்து விட்டால் அந்த முடிவைத் தவிர வேறு எதையும் பொருட்படுத்த மாட்டார்கள். அவர்களை மாற்ற ஒருவராலும் முடியாது."

"எங்களை எப்படிக் காப்பாற்றப் போகிறாய்?"

"சில நிமிடங்களில்."

"சில நிமிடங்களிலா?"

"ஆமாம். ஆனால் ஒரு நிபந்தனைக்கு உட்பட்டால் நிச்சயமாகச் சில நிமிடங்களில் உங்களைக் காப்பாற்றுவேன்."

"நிபந்தனையா? யாருக்கு?"

"உங்களுக்குத்தான்."

"என்ன நிபந்தனை?"

சொன்னாள் அவள்.

விட்டலராயனின் முகம் கறுத்தது.

அவன் அதைச் சிறிதும் எதிர்பார்க்கவில்லை.

இப்படிக் கூட இவளது எண்ணம் இயங்குமா என்று நினைத்தான்.

இந்த நிபந்தனைக்கு உடன்படுவது மானக்கேடு என்று கருதினான்.

அவனது மௌனத்தைக் கண்ட அவள் "என்ன, மௌனமாகி விட்டீர்கள்? நான் சொன்ன நிபந்தனை இனிக்க வில்லையா? கசப்பாகவா இருக்கிறது?" என்று கேட்டாள்.

"இது இனிப்பாக இருக்கும் என்று வேறு நினைக்கிறாயா?" என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்ட விட்டலராயன் "என் மனைவியின் பெயர் சாந்தலா தேவி. என் மகளின் பெயர் தர்மதேவி. என் மகனின் பெயர் நரசிம்மன்" என்றான்.

"என் நிபந்தனைகளுக்கும் இந்தப் பெயர்களுக்கும் என்ன சம்பந்தம்? இவற்றை ஏன் என்னிடம் சொல்கிறீர்கள்?"

"நான் திருமணமானவன்."

"அதனால் என்ன?"

"என் மனைவி சாந்தலை எனக்குப் போதும்."

"ராணிகளின் எண்ணிக்கைகளுக்கு அளவில்லை! எங்கும் இல்லையே! எங்காவது இருந்திருந்தால் அதைப் பற்றிய கவலை இல்லையே! அச்சமும் கவலையும் நமக்கெதற்கு? ஆனந்தமாக வாழ விரும்புவர்களுக்கு ஆனந்தத்தைத் தவிர வேறு எண்ணமோ தயக்கமோ இருப்பதில்லை. உங்களுக்கு மட்டுமேன் தயக்கம்? தடுமாற்றம்?"

"பங்களா! உனது உதவி எனக்குத் தேவையில்லை. இந்தக் கோட்டையை வெற்றி கொள்ள எனக்குத் தெரியும்."

"விட்டலராயரே! விஜயானந்தர் ஆசிரமத்தருகே இருந்த அருவிக் கரையில் நாம் சந்தித்தோம். நினைவிருக்கிறதா?"

"அதற்கென்ன?"

"என்னைப் பற்றி விசாரித்தீர்கள். உண்மையைச் சொன்னேன். உங்களைப் பற்றிக் கேட்டேன். பொய்யைச் சொன்னீர்கள். அதாவது சேனாதிபதி என்று சொன்னீர்கள்."

"ஆம்."

"நான் என் கணவரின் திட்டத்தைப் பற்றி உண்மையைச் சொன்னேன். உடனே நீங்கள் என்னைப் பிடித்து பணயமாக

மாற்றி என் கணவரின் திட்டத்தை முறியடித்தீர்கள். என் மனதில் இடம் பிடித்தீர்கள்."

"சொல்."

"பிறகு மலையடிவாரப் போரில் தோல்வியடைவீர்கள் என்று நினைத்தேன். ஆனால் என் கணவர் தோற்றுப் போய் ஓடி வந்தார். கோட்டைக்குள் ஒளிந்தார். நீங்கள் அப்போது என் இதயத்தில் வந்து ஒளிந்து கொண்டீர்கள்."

"பங்களா! நீ நாகரிகமற்ற வார்த்தைகளை உதிர்க்கிறாய். பண்பற்ற பேச்சுகளைப் பேசுகிறாய். உன் மனநிலை மிகவும் தவறானது. நான் அவ்வாறெல்லாம் நினைக்கவில்லை."

"விட்டலராயரே! என் கணவர் மனைவியை மதிக்கத் தெரியாதவர். ரசனை என்றால் என்னவென்று அறியாதவர். அன்பு, பாசம், அரவணைப்பு என்ற வார்த்தைகள் எதுவும் அவரது அகராதியில் இல்லை. பெண்மனம் படும் பாடுகளை அறியாதவர். பிறரது உணர்வுகளைப் புரிந்து கொள்ளாதவர். அவரது பெயர் விக்கிரமன் என்று இருந்த போது என் பெற்றோர் மகிழ்ச்சியோடு அவருக்கு என்னைத் திருமணம் செய்து வைத்தனர். அவரோ அக்கிரமன் என்று பெயரை மாற்றிக் கொண்டு அக்கிரமங்களைச் செய்தார். என்னை அன்பு மனைவியாக வைத்துக் கொள்ளாமல் அடிமை மனைவியாக வைத்துக் கொண்டார்."

"நீ சொல்வது உண்மையென்றால் விஜயானந்தர் ஆசிரமத்தில் உன்னைப் பணயமாக நிறுத்திய போது அவர் கவலைப் படாமல் இருந்திருக்க வேண்டும்? ஒழியட்டும் என்று உன்னைக் கைவிடத் தயாராக இருந்திருக்க வேண்டும். ஏன் அப்படிச் செய்யவில்லை?"

"அது ராஜாங்க விஷயம். மான அவமான பிரச்சனை. ராணியை எதிரியிடம் விட்டு விட கௌரவம் இடம் தரவில்லை. ஆகவே பணிந்து போனார்."

"அதைவிடு. உனக்குத்தான் அவரைப் பிடிக்க வில்லையே! அன்பைக் காட்டாமல் அடிமையாய் நடத்தும் கணவன் வேண்டாமென்று விஜயானந்தர் ஆசிரமத்திலிருந்து ஓடியிருக்கலாமே?"

"அப்படி ஒரு எண்ணம் இருக்கத்தான் செய்தது. ஆனால் அங்கே தற்செயலாக உங்களைக் கண்டபின் என் மனம் மாறியது. உங்களைக் கணவனாகக் கொள்ள வேண்டும் என்று மனம் நினைத்தது. என் கணவரைக் காட்டிக் கொடுத்து உங்களுக்கு வெற்றியைத் தந்து உங்களை மணந்து கொள்ள வேண்டும் என்று நெஞ்சம் ஏங்கியது. ஆகவே தான் உங்களுக்கு

ஓலையை அனுப்பினேன். கெடுபிடிகளை மீறி நேரிலும் வந்தேன். கோட்டைக்குள் நான் போவதென்றால் உங்கள் மனைவியாகத்தான் போக வேண்டும் என்று உறுதியோடு வந்தேன்.''

“பங்களா! நீ மணமாகாத பெண்ணாக இருந்திருந்தால் உன்னை மனைவியாக ஏற்றுக் கொள்வதில் எந்தச் சிரமமும் இல்லை. நீ இப்போது ஆலுப நாட்டு மன்னனின் மனைவி. ராணி. உன்னை எப்படி நான் மணக்க முடியும்?''

“விட்டலராயரே! சீதை ராமனின் மனைவி என்பது ராவணனுக்குத் தெரியாதா? தெரிந்து தானே தூக்கிச் சென்றான்? பஞ்சபாண்டவரின் மனைவி என்று தெரிந்திருந்தும் திரௌபதியை அடைய கீசகன் முனையவில்லையா? பிறர் மனைவியை அடைய விரும்புவதென்பது இதிகாச காலத்திலிருந்து இருந்து வருகிறது. அதைவிடுங்கள். அக்காலத்திற்குப் பிறகாண்ட பல மன்னர்கள் ராஜ்யங்களை வென்று எதிரி மன்னர்களின் மன்னர்களைத் தூக்கிச் சென்றுச் சீரழிக்க வில்லையா? சிறையில் போட்டுச் சித்திரவதை செய்ய வில்லையா? நான் நல்ல முறையில் நானாகத் தானே கேட்கிறேன்?''

“எங்களுக்கு என்ன உதவி செய்யப் போகிறாய் நீ?'' என்று கேட்டான் விட்டலராயன்.

“இதோ பாருங்கள். இதுதான் மந்திர அஸ்திரம்'' என்று சொல்லி இடுப்பில் மறைத்து வைத்திருந்த அஸ்திரத்தை எடுத்தாள் பங்களா!





ஒருவன் செய்யும் தீவினைக் கான தண்டனை அவன் அந்த வினையைச் செய்யும் போதே அவனை அறியாமல் விட்டு விடுகிறது. அத் தண்டனை அவனை வந்து அடைய கால தாமதமாகலாமே தவிர அடையாமல் போகாது.



விட்டலராயன் வியந்தான்.

"இதைக் காணவில்லை என்றாயே! இப்போது எப்படி உன்னிடம் வந்தது?" என்று கேட்டான்.

"காணாமல் செய்தது நான். இங்கே கொண்டு வந்ததும் நான்" என்றாள் பங்களா.

"ஏன் அப்படி?"

"என் கணவர் கையில் இருப்பதை விட என் கையில் இருப்பது நல்லது என்று நினைத்தேன்."

"அது எப்படி? கணவர் இந்த நாட்டின் மன்னர். இந்த நாட்டை எதிரியிடமிருந்து காப்பாற்ற வேண்டியவர். அவரிடம் இது இருப்பது தானே நல்லது?"

"அப்படியானால் இதை அவர் பாதுகாத்திருக்க வேண்டு மல்லவா? எதிரியான உங்கள் மீது எய்து உங்களை அழித்திருக்க வேண்டுமல்லவா? பாதுகாக்கவும் முடியாமல் பயன்படுத்தவும் முடியாமல் இது அவரிடம் இருக்க வேண்டுமா?"

"இதோ பார் பங்களா. இங்கே எனது வீரர்கள் அனைவரும் இருக்கிறார்கள். இவர்கள் முன்னிலையில் சொல்கிறேன். உனது ஆசை தவறானது. தவறான விஷயங்கள் பலகால கட்டங்களில் பல இடங்களில் நடந்திருக்கலாம். அவற்றை உதாரணமாக வைத்துக் கொண்டு பண்பற்ற காரியங்களை நியாயப்படுத்தக் கூடாது. செய்யக் கூடாது. இந்தக் கோட்டையை வீழ்த்த என் படைகளால் முடியும். உன் உதவி தேவையில்லை. கோட்டைக்குள் செல்ல உனக்கு அனுமதியளிக்கிறேன். போய் விடு" என்றான் விட்டலராயன்.

"விட்டலராயரே! ஒரு பெண் வெட்கத்தை விட்டு மானத்தை விட்டு தன் ஆசையைத் தெரிவித்த பின் அது நிறைவேறாமல் போனால் அவள் உயிரோடு இருக்க மாட்டாள். என் நிலையும் அதுதான். மீண்டும் கடைசியாக ஒரு முறை கேட்கிறேன். இதை

நீங்கள் ஒப்புக் கொண்டால் நானும் கரை சேருவேன். நீங்களும் கோட்டையைப் பெறுவீர்கள்."

"நாம் பேசுவது வியாபார பேரமல்ல பங்களா. உன்னை ஏற்பதென்பது கனவிலும் நடக்காது."

"விட்டலராயா! பூவாக இருந்த என்னை பூதமாக்கி விட்டாய். என்னை மறுத்த பின் நீயும் உன் படையும் உயிரோடு இருக்க முடியாது. இந்த மந்திர அஸ்திரத்தை இப்போதே உங்கள் மீது எய்து அனைவரையும் அழிக்கிறேன்."

"கொஞ்சம் பொறுங்கள் ராணி" என்று சொல்லி குறுக்கிட்ட கங்கராஜன் மன்னனை சற்று தனியாக அழைத்துச் சென்று "மகாராஜா! மிகவும் நல்ல வாய்ப்பு கிடைத்திருக்கிறது. இது போன்ற நல்ல வாய்ப்பும் கிடைக்காது. நல்ல ராணியும் கிடைக்க மாட்டாள். ஆகவே அவளை ஏற்றுக் கொண்டு எதிரியை அழிக்க வழி செய்யுங்கள்" என்றான்.

விட்டலராயனுக்குக் கோபம் வந்தது.

"என்ன உளறுகிறாய் கங்கராஜா? இன்னொருவன் மனைவியையா மணக்கச் சொல்கிறாய்? இது நீ சொல்லக் கூடிய வார்த்தைகளா? ஆழ்ந்த சமணன் நீ. அதை மறந்து விட்டாயா? என் மகாராணி சாந்தலையை மறந்து விட்டாயா? இக்காரியம் பண்பற்றது என்பது எப்படித் தெரியாமல் போனது உனக்கு?" என்று கேட்டான்.

"மகாராஜா! சாம்ராஜ்ய லட்சியத்திற்கு முன்னால் இது போன்ற காரியங்கள் ஒரு பொருட்டே அல்ல. நாமிங்கே ஆயிரக்கணக்கானவர்கள் நின்று கொண்டிருக்கிறோம். நம் கால்களுக்குக் கீழே பல ஜீவராசிகள் மிதிபட்டுச் செத்துக் கொண்டிருக்கின்றன. அதனால் நாம் பறந்தா போகமுடியும்? ராணியை மணப்பதென்பது அப்படிப்பட்ட சிறு காரியம். அதை ஏன் நீங்கள் பெரிதாக எண்ணிக் கொள்கிறீர்கள்? ராணியிடம் மந்திர அஸ்திரம் இருப்பது நமது அதிருஷ்டம். அதை நழுவ விட்டு விடாதீர்கள்" என்றான் கங்கராஜன்.

"நீ பொருந்தாத உவமைகளைச் சொல்லி என்னை திசை திருப்பப் பார்க்கிறாய். ராணி உணர்ச்சி வசத்தில் இருக்கிறாள். தனது குலத்திற்கு அவமானம் நேரும் என்பதை அறியாமல் நடந்து கொள்கிறாள். தன் கணவனை மாற்றி அவனோடு வாழ்வது தான் முறையானது. சரியானது. அவள் தவறுகிறாள் என்று தெரியும் போது சறுக்கி விழாமல் காக்க வேண்டுமே தவிர நாமும் சேர்ந்து தவறி விடக் கூடாது. இவள் இப்படியொரு கோரிக்கையோடு

வருவாள் என்று தெரிந்திருந்தால் நேற்றிரவே கோட்டையைத் தாக்கிப் பிடித்திருக்கலாம். நான் தவறு செய்து விட்டேன். தாமதம் செய்து விட்டேன். அவை மீண்டும் தொடரக் கூடாது.''

''மகாராஜா! நீங்கள் ராணியை மணக்க வேண்டாம். மணப்பதாக ஒரு வார்த்தை சொல்லுங்கள் போதும். காரியங்கள் நடக்கும்'' என்றான் கங்கராஜன்.

அவனை வெறுப்போடு பார்த்த விட்டலராயன் ''போகலாம் வா'' என்றான்.

''என்ன முடிவெடுத்தீர்கள் விட்டலராயரே. அநேகமாக மனிதர்கள் முதலில் எடுக்கும் முடிவை விட அடுத்து எடுக்கும் முடிவு மகத்தானதாக இருக்கும்'' என்றாள் பங்களா.

''நான் முதல் முறையிலேயே சரியான முடிவை எடுத்து விடுவதால் மாற்றிக் கொள்வதில்லை பங்களா. உன் கோரிக்கையை ஏற்க இயலாது. மந்திர அஸ்திரத்தினால் நீ நிறைவேற்ற விரும்புவதை நிறைவேற்றிக் கொள்'' என்றான் விட்டலராயன்.

''பெண்ணின் மனமறியாத மூடனே! பெண்ணை மதிக்கத் தெரியாத ஈனனே! உனக்கும் என் கணவனுக்கும் ஒரு வித்தியாசமும் இல்லை. பெண்களை மதிக்காத ஆணினம் தான் காலம் காலமாகத் தழைத்து வருகிறது. இந்த அஸ்திரம் உங்களை மட்டுமல்ல எனது கோட்டையையும் சேர்த்து அழிக்கும்'' என்று சொல்லி அஸ்திரத்தை உயரே தூக்கினாள் பங்களா.

''வேண்டாம் ராணி. வேண்டாம். கோபத்தில் செயல் படாதீர்கள். கோபமும் வேகமும் நன்றன்று'' என்றான் கங்கராஜன்.

''யார் பேச்சையும் நான் கேட்கப் போவதில்லை. விட்டல ராயா! அனைவரும் அழிவதைப் பார்த்துக் கொண்டே நீயும் அழி. நானும் அழிகிறேன். சில கணங்களில் இங்கே பிணக் குவியல் மலைபோல இருக்கும்'' என்று சொல்லி வானத்தில் அஸ்திரத்தை எறிந்தாள் பங்களா.

''வாசந்திகா தேவி! காப்பாற்று'' என்று உரக்கக் கூறினான் கங்கராஜன்.

பங்களா எதிர்பார்த்த எந்த அழிவும் நிகழவில்லை. அவள் வீசியெறிந்த அஸ்திரமானது தூரத்தில் போய் விழுந்ததே தவிர ஒரு தூசு கூட அசையவில்லை.

ஏமாற்றத்துடன் மிரண்டு போய் நின்றாள் பங்களா.

விட்டலராயன் பேசமுற்பட்டு ''மந்திர அஸ்திரங்கள் மிகவும் சக்தி வாய்ந்தவை. அவற்றைச் சாதாரண மனிதர்களால் உருவாக்க

முடியாது. பாதுகாக்க முடியாது. பிரயோகிக்க முடியாது. அழிவை ஏற்படுத்தவும் முடியாது. அவை பெரும் தவசிகளால் தான் உருவாக்க முடியும். அதற்கு அவர்கள் பல ஜென்மங்களில் புண்ணியங்களைச் செய்திருக்க வேண்டும். அவை இறைவனின் அருட்பிரசாதங்கள். தர்மத்தை இக்கெட்டான நிலையிலிருந்து காப்பாற்றுவதற்கு எப்போதாவது பிரயோகிக்கக் கூடிய அரிய அஸ்திரங்கள் அவை. உன்னைப் போன்றவர்களாலோ, என்னைப் போன்றவர்களாலோ, அக்கிரமனைப் போன்றவர்களாலோ ஒரு போதும் உருவாக்க முடியாது. பயன்படுத்த முடியாது. இது போன்ற சர்வ சாதாரணமான போர்களுக்கெல்லாம் அதைப் பயன்படுத்த முடியாது. விஜயானந்தர் ஆசிரமத்தில் தன்னிடம் மந்திர அஸ்திரம் இருப்பதாக அக்கிரமன் கூறிய போது நான் நம்பவில்லை. ஏனென்றால் அவனைப் போன்ற அக்கிரமக் காரர்களிடம் மந்திர அஸ்திரங்கள் தங்காது. தங்கினாலும் தனது சக்தியை இழந்து விட்டிருக்கும். சாதாரண அம்பைப் போலத் தான் இருக்கும். அது தெரிந்ததால்தான் அது காணாமல் போய் விட்டது என்று சொன்ன போதும் அதை நீ கைப்பற்றி விட்டதாகச் சொன்ன போதும் அது மந்திர அஸ்திரமல்ல என்பது எனக்கு உறுதியாகி விட்டது. எங்களை அழிக்கப் பிரயோகிக்கப் போவதாகச் சொன்ன போது அது வெறும் அஸ்திரம் தான் என்பது சந்தேகமறப் புரிந்து விட்டதால் அதை எய்யும் படிச் சொன்னேன். மந்திராயுதங்கள் ஆணவத்திலும் ஆத்திரத்திலும் எய்தால் பயனிருக்காது. அவற்றை அளித்த தேவ தேவதைகளைப் பணிந்து பக்தியோடு பிரயோகிக்க வேண்டும்" என்றான்.

இங்கே பேச்சுக்கள் நடந்து கொண்டிருந்த போது இரவு நேரம் முடிந்து பொழுது விடிவதற்கான அறிகுறிகள் தோன்றியிருந்தன. கீழ்வானம் மெல்ல மெல்ல வெளுக்கத் தொடங்கியது.

அதே சமயம் கோட்டையின் வடக்கு வாசலில் பேரிகைகள் முழங்கின. மதில் மீது வெள்ளைக் கொடிகள் பறந்தன. ஐம்பது புரவி வீரர்கள் சூழ ஆலுப நாட்டு மன்னன் அக்கிரமன் விட்டலராயனை நோக்கி வந்தான்.

படைகள் விலகி அவனுக்கு வழிவிட்டன.

அருகில் வந்ததும் புரவியை விட்டு இறங்கிய அக்கிரமன் தனது வாளைக் கழற்றி விட்டலராயனின் முன் நீட்டி "நான் சரணடைகிறேன் விட்டலராயா. என் வாளைப் பெற்றுக் கொள்" என்றான்.

விட்டலராயன் அவசரப்படவில்லை.

"எதற்காக இந்த முடிவு? போரின் மூலமே முடிவைத் தீர்த்துக் கொள்ளலாமே?" என்று கேட்டான்.

"நானும் அப்படித்தான் நினைத்தேன். ஆனால் மாற்றிக் கொண்டேன்."

"ஏன்?"

"என்னால் கோட்டையைக் காப்பாற்ற முடியாது."

"ஏன் முடியாது?"

"இதோ என் மனைவி பங்களா. இவளையே காப்பாற்ற முடியாத நான் கோட்டையை எப்படிக் காப்பாற்றுவேன்?"

"உன் ராணிக்கு எதுவும் நிகழவில்லை அக்கிரமா. நீ அவளை அழைத்துச் செல்லலாம்."

"எப்போது என்னை மீறி அவள் உன்னிடம் வந்தாளோ அப்போதே அவள் ராணியும் இல்லை. என் மனைவியும் இல்லை. வரக் கூடாத அவள் உன்னிடம் வந்த பின் இந்தக் கோட்டையும் உன் வசம் வருவதில் தவறு ஒன்றுமில்லை. மானமிழந்த பின் நாடெதற்கு? வீணாக வீரர்கள் வெட்டிக் கொண்டு சாக வேண்டாம் என்பதற்காகத்தான் நானாக வந்து சரணடைந்தேன்."

அக்கிரமன் அவ்வாறு கூறிய போது பங்களா திடீரென தனது இடையில் இருந்த குறுவாளை எடுத்து தனது நெஞ்சிலே பாய்ச்சிக் கொண்டு கீழே விழுந்தாள். சிறிது நேரம் அவளது உடல் துடித்தது. பின் அடங்கியது.

அவளது முடிவு விட்டலராயனையும் அவனைச் சேர்ந்தவர் களையும் சற்றே அசைத்து விட்டது.

ஆனால் அக்கிரமன் அசையவில்லை.

"அவளது சடலம் இங்கேயே கிடக்கட்டும். அதை உண்ண நாய்கள் வரும். நரிகள் வரும். கழுகுகள் வரும். கோட்டான்கள் வரும்" என்றான்.

விட்டலராயன் அதற்கு ஒப்பவில்லை.

சடலத்தைக் கோட்டைக்குள் கொண்டு வரும்படி வீரர்களுக்கு உத்தரவிட்டான்.

அக்கிரமனிடமிருந்து வாளைப் பெற்றுக் கொண்டான். நிராயுதபாணியாகத் தொங்கிய தலையுடன் அவன் நடக்க, அவனோடு விட்டலராயனும் மற்றவர்களும் நடந்தனர்.

கோட்டைக்குள் சென்றதும் ராணியின் சடலம் ராஜமரியாதை களுடன் அடக்கம் செய்ய உத்தரவிட்டான் விட்டலராயன்.

அன்று முழுவதும் மௌன அஞ்சலி செலுத்தப்பட்டது.

மறுநாள் கோட்டை முழுவதும் ஹொய்சளர் கொடிகள் பறக்க விடப்பட்டன.

போர் எதுவும் நடைபெறாமல் கோட்டை கைப்பற்றப் பட்டதால் வெற்றி ஆரவாரங்கள் தவிர்க்கப்பட்டன.

கோட்டை அரியணையில் விட்டலராயன் அமர்ந்து ஆலுபர் நாடு ஹொய்சளர் ஆதிக்கத்திற்கு வந்து விட்டதாக அறிவித்தான்.

அந்தச் செய்தி ஊரெங்கும் பலநாட்களுக்கு அறிவிக்கப் பட்டது.

ஆலுபர் நாடு சாளுக்கியர் ஆதிக்கத்திலிருந்து ஹொய்சளர் ஆதிக்கத்திற்கு வந்து விட்ட படியால் சாளுக்கியர்களுக்கு ஆதரவாக யாரும் பேசவோ நடந்து கொள்ளவோ கூடாது என்றும் மீறி நடந்து கொண்டால் சிறையில் தள்ளப்படுவார்கள் என்றும் தெரிவிக்கப்பட்டது.

சாளுக்கிய நாணயமான வராகன்கள் ஹொய்சள முத்திரையுடன் கூடிய ஹொய்சள நாணயங்களாக மாற்றப் பட்டன.

இரண்டு மாதங்கள் அங்கேயே இருந்து ஆட்சி செய்து நிலைமைகளை அறிந்தான் விட்டலராயன்.

அந்த நிலையில் சேனாதிபதி வந்து அவனிடம் "ஐயா! இந்தக் கோட்டை போரின்றி எதிர்ப்புமின்றி தங்கள் வசம் வந்தது உங்களுக்கும் உயர்வல்ல. எங்களுக்கும் உயர்வல்ல. மக்களும் பலவிதமாகப் பேசுகிறார்கள். எனவே இது குறித்து அக்கிரமரிடம் பேசி ஒரு முடிவெடுத்தோம். அதற்குத் தாங்கள் ஒப்புதல் அளிக்க வேண்டும்" என்றான்.

"சொல்லுங்கள்"

"மகாராஜா! நீங்கள் மாவீரர் என்பதை நாங்கள் அறிவோம். அக்கிரமரும் மாவீரர். எனவே தாங்கள் இருவரும் தனிப்போர் புரிந்து கௌரவத்தை நிலை நாட்ட வேண்டும். அக்கிரமரும் சம்மதித்து விட்டார். மக்களும் அதை விரும்புகிறார்கள்."

"எல்லோரும் விரும்பும் போது நான் மட்டும் ஏன் மறுக்க வேண்டும். நான் தயார்" என்றான் விட்டலராயன்.

இந்த முடிவு கங்கராஜனுக்கும் பரதனுக்கும் பிடித்திருந்தது.

வாட்போருக்கான நாளும் அதற்கான அரங்கமும் குறிக்கப் பட்டது.

சேனாதிபதி அக்கிரமன் போரிடும் வாளுக்கு கடும் நஞ்சை ரகசியமாகத் தடவி பாதுகாத்து வந்தான்.

அந்த வாளினால் லேசாகக் கீறினாலும் விட்டலராயன் உயிரைத் துறந்து விண்ணுலகம் சென்று விடுவான் என்று எண்ணி அவ்வாறு செய்தான்.

சேனாதிபதிக்கு தன் மன்னன் அக்கிரமன் மீது அன்போ மரியாதையோ கிடையாது. தனது போர்த் திட்டங்களையும் இதர உபாயங்களையும் உதாசீனப்படுத்திய போதே சேனாதி பதிக்கு அவன் மீது வெறுப்பு உண்டாயிற்று. ஆயினும் மந்திர அஸ்திரம் காணாமல் போய் விட்டதாக மன்னன் புலம்பிய போது அவன் மீது சற்று அனுதாபம் ஏற்பட்டது.

அப்படியிருக்க திடீரென்று தன்னிடம் ஒரு வார்த்தை கூட சொல்லாமல் மன்னன் விட்டலராயனிடம் சரணடைந்தது அவனது கோபத்தைக் கிளறியது. அதோடு தான் அனுப்பிய ஒற்றர்களையெல்லாம் செயல்படவிடாமல் செய்து விட்டதால் விட்டலராயன் மீதும் அவனுக்குக் கோபமாய் இருந்தது. துளி ரத்தமும் சிந்தாமல் கோட்டையை ஒப்படைத்ததைச் சேனாதிபதியால் ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை. தனது கௌரவம் பாதிக்கப்பட்டதாகக் கருதி என்ன செய்யலாம் என்று யோசித்தே இப்படியொரு திட்டத்தைத் தீட்டினான்.

வாளில் விஷத்தைத் தடவி வைத்தால் வாட் போர் துவங்கிய சில நிமிடங்களிலேயே விட்டலராயன் விழுந்து விடுவான் என்றும், அவன் இறந்து விட்டால் அவனது படைகளைச் சித்திரவதை செய்தும் விரட்டியடித்தும் கோட்டையை மீட்கலாம் என்றும், கோட்டையை மீட்ட பின் ஓரிரு நாட்களில் அக்கிரமனைக் கொன்று அமரலோகத்திற்கு அனுப்பி விட்டுத் தானே அரியணையில் அமர்ந்து விடலாம் என்ற தீர்மானத்திற்கு வந்திருந்தான்.

குறிப்பிட்ட நாளன்று ஆலுப நாட்டின் கேளிக்கை அரங்கத்தில் இரண்டு மன்னர்களும் வாளேந்தி நிற்க, மக்களும் வீரர்களும் ஆரவாரம் செய்தார்கள்.

சேனாதிபதி பேச முற்பட்டு "வீராதி வீரர்களே! அன்பார்ந்த குடிமக்களே! இந்த நிகழ்வு வீர நிகழ்வு. பராக்கிரமத்திற்கான நிகழ்வு. நீங்கள் விரும்பிய நிகழ்வு. நியாயமான நிகழ்வு. மாமன்னர்களின் கௌரவத்தினை நிலை நாட்டும் நிகழ்வு. வீரத்தையே விளைநிலமாகக் கொண்ட பெருவேந்தர்கள் இருவரும் மனமொப்பி இந்த வாட்போரில் ஈடுபட

விருக்கிறார்கள். ஒருவருக்கொருவர் சளைத்தவர்களல்ல. ஒருவர் சிங்கம் என்றால் மற்றொருவர் புலி. ஒருவர் எரிமலை என்றால் மற்றொருவர் சூறாவளி. இவர்களில் யார் வெற்றி பெறுவார்கள் என்பது கணிக்க இயலாதது. ஆனால் ஒன்று மட்டும் உறுதி. இந்த அரும் பெரும் வாட்போரில் யார் வெல்கிறார்களோ அவர்களுக்கு இந்த நாடு சொந்தம். ஆட்சி சொந்தம். அரியணை சொந்தம். சகலமும் சொந்தம்'' என்றான்.

விட்டலராயன் சேனாதிபதி இருந்த மேடைக்கு வந்து ''குடிமக்களே! வீராதி வீரர்களே! இந்தக் கோட்டை அக்கிரமனால் தானாக வழங்கப்பட்டது. தானமாக நாங்கள் கோரவில்லை. ரத்தம் சிந்த வேண்டியதில்லை என்று அக்கிரமன் கோரியதாலேயே போர் செய்யாமல் கோட்டையை ஏற்றேன். அரியணையை ஏற்றேன். ஆட்சியையும் அதிகாரத்தையும் ஏற்றேன். அத்துடன் அலுவல் முடிந்து விட்டது. கோட்டை எங்கள் ஆதிக்கத்திற்கு வந்து இரண்டு மாதங்கள் ஓடிவிட்டன. இருப்பினும் கௌரவம் காரணமாக தனிப்போர் புரிய அக்கிரமன் விரும்புவதாகவும் மக்கள் விரும்புவதாகவும் சேனாதிபதி தெரிவித்தார். இப்போர் என்னைப் பொறுத்தவரை தேவையற்றது. இருப்பினும் இக் கோரிக்கை வீரத்திற்குச் சவாலிடுவதாக இருக்கவே ஏற்றுக் கொண்டேன். இதன் விளைவு ஒன்று மட்டும் தான். சேனாதிபதி கூறியது போல சகலமும் சொந்தமாகும் என்பது தவறு. போரில் நான் தோற்றால் நானும் என் படைகளும் வெளியேறி விடுவோம். போரில் அக்கிரமன் தோற்றால் இப்போதைய நிலைமை நீடிக்கும். அவ்வளவு தான். சரிதானா?'' என்று கேட்டான்.

''சம்மதம்! சம்மதம்'' என்றார்கள் மக்கள்.

சேனாதிபதிக்கு உள்ளூரக் கொதிப்பாக இருந்தது. தந்திரமான திட்டத்தைத் தீட்டி தந்திரமாக பேச்சையும் பேசி மக்களை வசீகரித்து மாயவலையில் சிக்க வைப்பது போல் நிலைமையை உண்டாக்க முற்பட்டது விட்டலராயன் குறுக்கிட்டுப் பேசி தெளிவான நிலையை சிருஷ்டித்து விட்டதால் அவனுக்கு மகாகோபமாக இருந்தது.

தன்னை மகாபுத்திசாலி என்று கருதிக் கொண்டு நம்பிக்கையோடு ஒருவன் முயற்சிக்கும் போது அவன் மகா முட்டாள் என்பதை நிரூபிப்பது போல் மறுபக்கத்தில் தானாகவே ஒரு காரியம் நடக்கும்.

அப்படித்தான் சேனாதிபதிக்கு நடந்தது.

ஒருவன் செய்யும் தீவினைக்கான தண்டனை அவன் வினையைச் செய்யும் போதே அவனை அறியாமல் முளை

விட்டு விடுகிறது. அத்தண்டனை அவனை வந்து அடைய கால தாமதமாகலாமே தவிர அடையாமல் போகாது.

சேனாதிபதி எதிர்பாராத மற்றொரு சம்பவமும் நடந்தது.

அக்கிரமனின் வாளில் அவன் கடும் நஞ்சைப் பூசியிருந்தான். அது அக்கிரமனுக்குத் தெரியாது. எனவே அவன் வாட்போர் துவங்கவிருந்த போது விட்டலராயனைப் பார்த்து "விட்டலராயரே! நீங்கள் வைத்திருக்கும் வாள் போரின் போது பயன்படுத்தும் பிரத்தியேக வாளா?" என்று கேட்டான்.

"ஆமாம்" என்றான் விட்டலராயன்.

"என் வாளை நீங்களும் உங்கள் வாளை நானும் மாற்றிக் கொண்டு ஏன் போரிடக் கூடாது?" என்று கேட்டான் அக்கிரமன்.

"நான் தயார்" என்றான் விட்டலராயன்.

"இது எதற்காக? அவரவர் வாட்களோடு அவரவர் போரிடுவது தான் சம்பிரதாயம்" என்று அவசரம் அவசரமாகக் குறுக்கிட்டுச் சொன்னான் சேனாதிபதி.

"இதில் என்ன சம்பிரதாயம் வாழ்கிறது? யார் கையில் இருந்தால் என்ன? வாள் வாள் தானே! நீ பேசாமலிரு சேனாதிபதி. விட்டலராயரே ஒப்புக் கொண்ட பிறகு நீ எதற்காகத் தடுக்கிறாய்?" என்று சொல்லி வாளை மாற்றிக் கொண்டான் அக்கிரமன்.

வாட்போர் துவங்கியது. வாட்கள் மோதின. அக்கிரமனை விட விட்டலராயன் வாட்போரில் சிறந்தவன் என்பது ஆரம்பத்திலேயே அனைவருக்கும் தெரிந்து போயிற்று.

"போதும்! போதும்! விட்டலராயர் சிறந்த வாள் வீரர் என்பதை நிரூபித்து விட்டார். போரை நிறுத்திக் கொள்ளுங்கள்" என்றான் சேனாதிபதி பதற்றத்துடன்.

ஆனால் அவன் பேச்சை இரு மன்னர்களும் கண்டு கொள்ளாமல் போரிட்டார்கள்.

இதே நேரத்தில் கங்கராஜனும் பரதனும் சேனாதிபதிக்கு இரு புறங்களில் அமர்ந்து கொண்டு "நீங்கள் ஏன் தேவையில்லாமல் குறுக்கிடுகிறீர்கள்?" என்று கேட்டார்கள்.

"அப்படியெல்லாம் ஒன்றுமில்லை. அப்படியெல்லாம் ஒன்றுமில்லை" என்றுத் தடுமாறினான் சேனாதிபதி.

"போரிடுபவர்கள் மன்னர்கள். போரை நிறுத்துவதையும் தொடர்வதையும் முடிவு செய்ய வேண்டியது மன்னர்கள். வெற்றி தோல்விகளைப் போரின் முடிவில்தான் சொல்ல முடியும்.

அப்படியிருக்க, போரை நிறுத்தும்படிச் சொல்ல நீங்கள் யார்?" என்று கேட்டான் கங்கராஜன்.

"நான் அப்படிச் சொல்லவில்லை. விட்டலராயர் பிரமாதமாகப் போரிடுகிறார் என்று தான் சொன்னேன்."

"நாங்கள் என்ன செவிடர்களா?"

"அப்படி நான் சொல்லவில்லை"

"உங்கள் பேச்சு ஏன் தடுமாறுகிறது?"

"இல்லையே."

சேனாதிபதி இப்படிக் கூறிய போது விட்டலராயனின் வாள் அக்கிரமனின் இடுப்பில் லேசாக உரசியது.

அக்கிரமன் அதிர்ந்தான். தள்ளாடினான். விழுந்தான். மரணமடைந்தான்.





குருவைப் புரிந்து கொண்ட சீடன் குருவின் அனுமதிக்காகக் காத்திருக்க மாட்டான். சீடனைப் புரிந்து கொண்ட குரு தன் அனுமதிக்காகச் சீடனைக் காத்திருக்க வைக்கமாட்டார் – விட்டலராயன்




அக்கிரமன் மாண்டு போனதை விட்டலராயனால் நம்ப முடியவில்லை.

மரணத்தை அளிக்கும் அளவிற்குத் தனது வாள் பிரயோகிக்கப் படவில்லை என்பது அவனுக்குத் தெரிந்திருந்ததால் அக்கிரமனின் உடலைச் சந்தேகத்துடன் பார்த்தான். உடல் நீலநிறமாகிக் கொண்டிருந்தது.

தான் போரிட்ட வாளையும் பார்த்தான்.

வாளில் நஞ்சு தடவப்பட்டிருந்ததை உணர முடிந்தது.

ஏதோ சதி நடந்திருக்கிறது என்பதையும் புரிந்து கொண்டு இதை யார் செய்திருப்பார்கள் என்று யோசித்தான்.

இந்தப் போருக்கு ஏற்பாடு செய்தது -

வாளை மாற்றும் போது தடுக்க முற்பட்டது -

போர் முடியும் முன்பே போதும் என்றது -

இவை எல்லாவற்றுக்கும் சேனாதிபதிக்கு மட்டுமே சம்பந்தம் இருந்ததைக் கண்டான்.

இதற்கிடையில் கங்கராஜனும் பரதனும் சேனாதிபதியை உலுக்கி எடுத்ததால் அவன் உண்மையை ஒப்புக் கொண்டான்.

விட்டலராயன் சேனாதிபதியின் சதியை அங்கு கூடியிருந்த மக்களுக்கு விவரித்து அந்த அரங்கத்திலேயே சேனாதிபதியைக் கழுவேற்றினான்.

அக்கிரமனின் உடலும் மக்களுக்கு முன்னால் அடக்கம் செய்யப்பட்டது.

ஆலுப நாட்டின் அடியும் முடியுமான மன்னன், ராணி, சேனாதிபதி ஆகிய மூவரும் அவரவர் வழியில் சென்று தத்தம் முடிவுகளைத் தேடிக் கொண்டதை அறிந்து வருந்தினான் விட்டலராயன்.

ஆலுபநாட்டின் ஆட்சியை நிறுவுவதற்காக மேலும் சில மாதங்கள் விட்டலராயன் அங்கே தங்க வேண்டிய தாயிற்று. அக்கிரமனின் படையைத் தனது படையோடு இணைத்தான்.

அக்கிரமனின் புதல்வன் சிறுவனாக இருந்தபடியால் அவனை வளர்ப்பதற்கு உரிய ஏற்பாடுகளைச் செய்தான்.

அந்த நிலையில் வேலாபுரத்திலிருந்து சேனாதிபதி பகாசூரர் செய்தியனுப்பியிருந்தார்.

வேலாபுரத்தில் போர் ஆர்வம் கொண்ட மேலும் பத்தாயிரம் இளைஞர்களைச் சேர்த்திருப்பதாகவும் அவர்களை விகர்ணன் தலைமையில் ஆலுப நாட்டிற்கு அனுப்பியிருப்பதாகவும் செய்தியனுப்பியிருந்தார்.

செய்தி இனிப்பாக இருந்தது விட்டலராயனுக்கு.

சேனாதிபதி செயல்படும் விதத்தைச் சொல்லி கங்க ராஜனிடமும் பரதனிடமும் பாராட்டிப் பேசினான்.

“தகுந்தவர்களிடம் பதவியானது இருந்தால் பதவியும் சிறப்படைகிறது. பதவியில் இருப்பவர்களும் சிறப்பாக இருக்கிறார்கள். தகுதியற்றவர்களிடம் பதவி இருந்தால் பதவி சீரழிகிறது. பதவியில் இருப்பவர்களும் சீரழிகிறார்கள். வேலாபுரத்துச் சேனாதிபதியும் ஆலுப நாட்டுச் சேனாதிபதியும் இதற்கு உதாரணங்கள்” என்றான்.

ஒரு வார காலத்தில் விகர்ணனின் தலைமையில் வேலா புரத்திலிருந்து பத்தாயிரம் வீரர்களும் ஐம்பது புரவிகளும் வந்து சேர்ந்தன.

மன்னனை வணங்கிய விகர்ணன் “மகாராஜா! ஐம்பது புரவிகளும் உயர்ஜாதிப் புரவிகள். சாமுத்ரிகா லட்ணங்களைப் பூரணமாகக் கொண்டவை.தனது எஜமானர்களுக்கு நன்மைகளை விளைவிப்பவை. மலைப்பிரதேங்களுக்கு ஏற்ற லாவகமான வாகனங்கள். தங்களுக்கென்று தேர்ந்தெடுத்து அனுப்பினார் சேனாதிபதி” என்றான்.

புரவிகளைக் கண்ட மன்னனுக்கு அக்காட்சியே ஓர் அற்புதமாய் இருந்தது. ஏதோ தேவலோகத்திலிருந்து பறந்து வந்த அரிய வகைப் புரவிகளைப் போல் அவை இருந்ததைக் கண்டு ஆனந்தப்பட்ட மன்னன் விகர்ணனைத் தட்டிக் கொடுத்து “நீ படையில் சேர்ந்தது எனக்கு மட்டற்ற மகிழ்ச்சியை அளிக்கிறது வீரனே! அதுவும் இந்த சமயத்தில் நீ வந்து சேர்ந்தது இறையருள் என்றே சொல்ல வேண்டும். சேனாதிபதி அவர்களை எப்படிப்

பாராட்டுவது என்றே தெரியவில்லை'' என்று பாராட்டி விட்டு "இந்தப் புரவிகளைச் சேனாதிபதி எங்கிருந்து பெற்றார்?'' என்று கேட்டான்.

"நுளம்பவாடியிலிருந்து மகாராஜா.''

"என்ன? நுளம்பவாடியிலிருந்தா? எப்படி? எப்போது?''

சொன்னான் விகர்ணன்.

விட்டலராயனுக்கு விண்ணில் பறப்பது போல் இருந்தது.

"இது உண்மையா விகர்ணா?''

"ஆம் மகாராஜா. ஒரு மாதத்திற்கு முன்னால் நடந்தது. திடீரென்று ஒருநாள் என்ன செய்தி வந்ததோ தெரியவில்லை. கிளம்புங்கள் என்றார். பத்தாயிரம் வீரர்கள் கொண்ட காலாட் படையையும் ஐநூறு புரவிப் படையையும் அழைத்துக் கொண்டு நுளம்பவாடிக்குச் சென்று திடீர் தாக்குதலை நடத்தினார். எதிர்பாராத அத்தாக்குதலை நுளம்பவாடி மன்னரால் எதிர்கொள்ள முடியவில்லை. அவரது படைகளை துவம்சம் செய்து வெற்றிக் கொடியை நாட்டிய சேனாதிபதி நுளம்பவாடி மன்னரை வேலாபுரத்துச் சிறையில் வைத்தார். நுளம்பவாடியைச் சேர்ந்தப் பகுதிகளை அலசி எதிர்ப்பு தோன்றிய இடங்களை வேரறுத்தார். அப்போது அங்கே புரவிகளைப் பயிற்று விக்கும் செண்டுவெளியில் ஆயிரம் புரவிகள் இருந்ததைக் கண்டார். அனைத்தையும் வேலாபுரத்திற்குக் கொண்டு வந்தார். அவற்றில் ஐம்பது உயர்சாதிப் புரவிகளைத் தேர்ந்தெடுத்தார். அவற்றையும் என்னையும் படைகளையும் தங்களிடம் அனுப்பி வைத்தார். நுளம்பாடி மண்டலம் ஹொய்சளர் ஆதிக்கத்திற்கு வந்து விட்டதாகத் தங்களிடம் சொல்லச் சொன்னார். தாங்கள் வேலாபுரம் திரும்புவதற்குள் பல அரசர்கள் வேலாபுரத்துச் சிறையில் இருப்பார்கள் என்றும் சொல்லச் சொன்னார். தங்களை மேன்மேலும் வெற்றிகளைக் குவிக்கும்படிச் சொன்னார்'' என்றான் விகர்ணன்.

பரவசப்பட்டான் விட்டலராயன்.

"பார்த்தாயா கங்கராஜா. எப்படிப்பட்ட சேனாதிபதி நமக்குக் கிடைத்திருக்கிறார் பார்த்தாயா? சேனாதிபதிகளால் மன்னர்களுக்குப் பெருமையா? மன்னர்களால் சேனாதி பதிகளுக்குப் பெருமையா என்று பார்த்தால் நீ என்ன சொல்வாய்? கண்டிப்பாக பகாசூரரைப் போன்றச் சேனாதி பதிகளால்தான் மன்னர்களுக்குப் பெருமை என்று நான் சொல்வேன்'' என்றான் விட்டலராயன்.

“மகாராஜா! தங்கள் அனுமதியில்லாமல் சேனாதிபதி எப்படி நுளம்பவாடி மீது படையெடுத்துச் சென்றார்?” என்று கேட்டான் கங்கராஜன்.

“குருவைப் புரிந்து கொண்ட சீடன் குருவின் அனுமதிக்காகக் காத்திருக்க மாட்டான். சீடனைப் புரிந்து கொண்ட குரு தன் அனுமதிக்காக சீடனைக் காத்திருக்க வைக்க மாட்டார். சேனாதிபதி பகாசூரரும் நானும் அப்படித்தான் புரிந்து கொண்டிருக்கிறோம். என் மனதில் உள்ளதை அவர் அறிந்து கொண்டிருக்கிறார். அதை நிறைவேற்றும் நம்பிக்கையும் துணிச்சலும் அவருக்கு இருக்கிறது. என் அனுமதியை அவர் எதிர்பார்க்கவில்லை. காரியத்தில் இறங்கினார். வெற்றியைப் பெற்றார். இதுதான் இங்கே முக்கியம். இதில் கௌரவப் பிரச்சனை இல்லை. சேனாதிபதி பகாசூரரிடம் கேட்டாலும் நான் சொல்வதைத்தான் சொல்வார். எனது சுமையில் பாதியை அவர் சுமந்து கொண்டார். எனக்கு ஆறுதலாக இருக்கிறது” என்றான் விட்டலராயன்.

அவனது பேச்சு கங்கராஜனுக்கும் பரதனுக்கும் வியப்பாக இருந்தது. பகாசூரரைப் போல தாங்களும் கடமையால் உயர வேண்டும் என்று எண்ணிக் கொண்டார்கள்.

விகர்ணனையும் அவனோடு வந்த வீரர்களையும் ஓய்வெடுக்கச் சொன்னான் மன்னன்.

“மகாராஜா! இது மகாராணி சாந்தலை தேவியார் தங்களுக்குச் சமர்ப்பித்த ஓலை” என்று கூறி ராணியின் ஓலையைக் கொடுத்தான் விகர்ணன்.

அந்த ஓலையை மிகவும் எதிர்பார்த்திருந்தான் மன்னன்.

“பிரபு! ஆச்சார்யர் ஜெயதேவர் தன்னால் இயன்ற உபாயங்களை எல்லாவற்றையும் செய்து வருகிறார். அவருக்கு உதவியாகத் துறவியார் நீலகேசியும் மாந்தரீகரும் இருந்து வருகிறார்கள். இருப்பினும் அருமைப் புதல்வியின் நிலையில் முன்னேற்றம் இல்லை. அவள் துரும்பாக இளைத்து விட்டாள். பார்ப்பதற்கே கஷ்டமாக இருக்கிறது. அவளது கனவில் சங்கு சக்கிரமுடன் தோன்றிய பயமுறுத்தும் உருவம் விஷ்ணு தான் என்கிறார் ஜெயதேவர். அதற்கான பரிகாரங்களைச் செய்து வருகிறார். தங்களது தந்தையார் வேலாபுரத்தில் கட்ட விரும்பிய விஷ்ணு கோயிலைத் தாங்கள் கட்டி வருகிறீர்கள். அதை ஜெயதேவர் வேண்டாம் என்கிறார். கோயில் கட்டுவதை உடனடியாக நிறுத்தும் படிச் சொல்கிறார். அந்த ஆலயத்தைக் கட்டக் கட்ட புதல்வியின் நிலைமை சீராகாது என்றும் சிக்கலாகத்தான் முடியும் என்கிறார். தங்கள் கட்டளை இல்லாமல் நான் எதையும் அசைக்க

மாட்டேன். அனுமதிக்க மாட்டேன். நமது குலதெய்வம் வாசந்திகா தேவியைத் தான் அனுதினமும் பிரார்த்தனை செய்து வருகிறேன். பிரார்த்தனைகள் பயனளிப்பதற்குத் தாமதமாகலாமே தவிரத் தவறிப் போகாது. அருமைப் புதல்வியின் அருகிலேயே இருந்து கவனித்துக் கொள்கிறேன். சேனாதிபதி பக்ரசூரர் வேலாபுரத்தின் நிர்வாகத்தைக் கட்டிக் காத்து வருகிறார். நுளம்பவாடி மீது படையெக்க வேண்டிய அவசியம் இருப்பதாகச் சொல்லி என்னிடம் அனுமதி கேட்டார். நான் வாசந்திகா தேவியிடம் துருப்புச் சீட்டுப் போட்டு அனுமதி பெறுங்கள் என்றேன். அவ்வாறே செய்து அனுமதி பெற்று படை நடத்திப் போய் வெற்றியும் ஈட்டி விட்டார். எல்லாம் குலதெய்வத்தின் கருணை. அவர் நம் அருமைப் புதல்வியை அடிக்கடி வந்து பார்க்கிறார். ஆறுதல் வார்த்தைகளைக் கூறுகிறார். நல்லது நடக்கும் என்ற நம்பிக்கை எங்களுக்கு இருக்கிறது. தாங்கள் கவலை கொள்ள வேண்டாம். லட்சியத்தை நோக்கி முன்னேறிக் கொண்டே இருங்கள்.''-

- என்று எழுதியிருந்தாள் ராணி.

விட்டலராயன் மெய்சிலிர்த்துப் போனான்.

எப்பேர்பட்டச் சேனாதிபதி!

எப்பேர்பட்ட ராணி! மனைவி!

இவர்கள் இருக்கும் போது எனக்கென்ன கவலை என்று நினைத்த அவன் ஒரு முடிவுக்கு வந்தவனாய் ராணிக்கு ஒரு ஓலையும் சேனாதிபதிக்கு ஒரு ஓலையுமாக எழுதி ஒற்றர்களிடம் கொடுத்தனுப்பினான்.

விகர்ணனை அழைத்து ''விகர்ணா! இந்தக் கோட்டை சாளுக்கியரது தெற்கு வாயிலைப் போன்றது. இது இப்போது நம் வசம் ஆனதால் நமக்கு தென்திசைக் கதவுகள் திறந்து விட்டன. இதன் வழியாக நான் தென் திசை படையெடுப்பைத் தொடங்கவிருக்கிறேன். அவ்வாறு நான் செல்லும் போது இக்கோட்டையைச் சாளுக்கியர்கள் தாக்கக் கூடும். அவர்களை எதிர்த்து புறங்காண வைப்பதற்கு இங்கே சரியான நபர் இருக்க வேண்டும். அது உன்னைத் தவிர வேறு யாரும் இருக்க முடியாது. உன்னையும் உன் படைகளையும் இங்கே விட்டுச் செல்கிறேன். இக்கோட்டையைக் காப்பதற்குச் சகலவிதமான அதிகாரங்களையும் உனக்கு வழங்குகிறேன்'' என்றான் மன்னன்.

''தங்கள் கட்டளை'' என்றான் விகர்ணன்.



இதற்குப் பிறகு ஓராண்டு காலம் வரை தெற்கு திசையில் மேற்குத் தொடர்ச்சி மலைகளிலும், மலைத் தொடர்களுக்கு இருபுறங்களிலும் ஹொய்சளப் படை சூறாவளியை உண்டாக்கியது என்று தான் சொல்ல வேண்டும். ஓராண்டு காலத்தில் கோடைக்காலங்களில் மட்டுமே போர் என்றில்லாமல் மழைக்காலத்திலும் அப்படை பேய்ப் படையாகச் செயல் பட்டது. எதிரிகள் ஹொய்சளப் படைக்குப் பேய்ப் படை என்றே பெயர் வைத்து கலங்கினார்கள். அந்தப் பேய்ப் படை நீலபர்வதத்தில்[1] நீலர்களையும், கொல்லிமலைப் பகுதியில் கொங்கர்களையும், கோசர்புத்தூர்[2] பகுதியில் கோசர்களையும் வென்று வாகை சூடியது. துளு நாட்டையும் கைப்பற்றியது. இப்படியாகத் தென்மேற்குப் பகுதியில் எட்டு நாடுகளை வென்ற போது கங்கராஜன் வியப்பு மேலிட்டவனாய் கேட்டான்.

"மகாராஜா! சாளுக்கியரது ஆதிக்கத்திற்கும் நட்பிற்கும் உட்பட்ட நாடுகளை ஒன்றன் பின் ஒன்றாக வீழ்த்திக் கொண்டே வருகிறோம். நடந்த இரண்டாண்டு காலமாக நாம் ரகசியமாகவும், பகிரங்கமாகவும், தந்திரமாகவும் படையெடுத்து வெற்றிகளை ஈட்டியிருக்கிறோம். இது கல்யாண புரத்தில் இருக்கும் சாளுக்கியர்களுக்குத் தெரியாமலா இருக்கும்? தெரிந்திருந்தால் நம்மை எப்படி விட்டு வைத்திருக்கிறார்கள். நாம் தாக்குதல் நடத்திய நாடுகளைக் காக்க அவர்கள் உதவ வரவில்லை. நமது ஹொய்சள நாடுகளான வேலாபுரம்[3] மற்றும் துவாரசமுத்திம்[4] ஆகியவற்றையும் தாக்கவில்லை. இது விசித்திரமாக இல்லையா? போர்க் குணத்திற்குப் பெயர் பெற்ற சாளுக்கியர்கள் அமைதியாக இருப்பது எப்படி?"

"எனக்கும் அது சற்று வியப்பாகத்தான் இருக்கிறது. அதே சமயம் எனக்குக் கிடைத்த செய்திகள் மற்றும் என் ஊகம் ஆகியவற்றின் அடிப்படையில் பார்த்தால் சாளுக்கியச் சக்கிரவர்த்தி உடல் நலம் இல்லாமல் படுக்கையில் இருக்கிறார். அவருக்குப் பின் அவரது அரியணையில் அமர வேண்டிய வினயாதித்தனுக்கு எதிர்ப்புகள் கிளம்பியுள்ளதால் சாளுக்கியத் தலைநகர் கல்யாணபுரத்தில் குழப்பம் நிலவுகிறது. அதோடு கல்யாண புரத்தின் வடக்கே இருக்கும் ராஷ்டிர கூடர்கள் பலம் பெற்று வருவதாகவும் அவர்க்ளைச் சமாளிக்க வேண்டிய நிலையில் சாளுக்கியர்கள் இருப்பதாகவும் தெரிகிறது. நாம் இதுவரை வெற்றி கொண்ட நாடுகள் சாளுக்கியரின் ஆதிக்கத்தில் இருக்கும் நாடுகள். சாளுக்கியரோடு நட்பு பாராட்டும் நாடுகள்.

* 1. நீலகிரி. 2. கோயம்புத்தூர் 3. பேலூர் 4. ஹளபீடு

அவை சாளுக்கியரது நாடுகள் இல்லை. எனவே தங்கள் நாட்டைக் காக்க வேண்டிய நிலையில் உள்ள சாளுக்கியர்கள் தங்கள் ஆதிக்கத்தில் இருக்கும் நாடுகளைப் பற்றிக் கவலைப்பட வேண்டிய நிலையில் இல்லை என்பது தெரிகிறது. இது நமது அதிருஷ்டம்தான். அது மட்டுமல்ல கல்யாணபுரத்தில் இருக்கும் மேலை சாளுக்கியர்களுக்கு வேங்கி நாட்டுடன் நீண்ட காலமாகவே மோதல் இருந்து வருகிறது. தற்போது சோழ நாட்டை ஆண்டு வரும் (முதல்) குலோத்துங்கன் வேங்கி நாட்டு இளவரசனாக இருந்தவன். எனவே அவன் மீதுள்ள பகையானது வேங்கி நாட்டின் மீதான பகையாக மாறியிருக்கிறது. வேங்கி நாட்டில் வினயாதித்தன் இருந்து கொண்டு சூழ்ச்சிகளைச் செய்து வருகிறான். ஆகவே சாளுக்கியர் நிலை சிறப்பான நிலையில் இல்லை. எனவே நமக்குத் தடை எதுவும் வரவில்லை" என்றான் விட்டலராயன்.

அரசியல் நிலைமைகள் சாதகமாக இருப்பதோடு அதிருஷ்டக் காற்றும் வீசுவதால் ஹொய்சளர் படையெடுப்பு வெற்றிகரமாகச் சென்று கொண்டிருப்பதாகவே எல்லோரும் கருதினார்கள்.

ஏறக்குறைய தென்மேற்குத் திசையைப் பொறுத்த வரை தான் பெற்ற வெற்றிகள் போதும் என்று நினைத்தான் விட்டலராயன். கோசர்கள் நாட்டையும் தாண்டி தெற்காக போவது சோழர்கள் என்னும் முதலையின் வாயில் காலை விடுவதற்குச் சமம் என்று தோன்றியது. ஏறக்குறைய கோசர்புதூருக்கு தெற்கே இருந்த பாண்டிய நாடும் சேர நாடும் சோழர்களின் ஆதிக்கத்தில் இருந்ததாலும் அங்கெல்லாம் சோழர்களின் நிலைப் படை கணிசமாக இருந்ததாலும் விட்டலராயன் அந்தப் பிராந்தியத்தில் இறங்குவது பேராசையாக இருக்குமே தவிர பயனுள்ளதாக இருக்காது என்று கருதினான். ஏற்கனவே தலைநகரான வேலாபுரத்தை விட்டு (பேலூர்) நீண்ட தூரம் வந்து தென் மேற்குப் பயணத்தை மேலும் நீட்டிக்காமல் முடித்துக் கொண்டான்.

தெற்குத் திசை நாடுகளில் எல்லாம் விட்டலராயன் போரை நடத்தி வெற்றி பெற்றிருந்தாலும் அங்கேயெல்லாம் தனது பிரதிநிதிகளை நியமிக்கவில்லை. இரண்டு நிபந்தனைகளை மட்டுமே விதித்தான்.

தோற்றுப் போன நாடு ஹொய்சளர் ஆதிக்கத்தை ஏற்க வேண்டும்.

ஹொய்சளருக்குத் திறை செலுத்த வேண்டும்.

இதற்குச் சம்மதித்தால் எந்த மாற்றமும் தேவையில்லை; போரில் தோல்வியடைந்து அரசர்களே தொடர்ந்து ஆட்சி புரியலாம் என்றான் விட்டலராயன்.

இது அரசர்களுக்கு ஏற்புடையதாக இருந்தது.

ஏற்கனவே அவர்கள் சாளுக்கிய நாட்டிற்குத் திறை செலுத்தி வந்தார்கள். தற்போது அந்த நாட்டிற்குப் பதிலாக ஹொய்சளருக்கு செலுத்த வேண்டும்.

அதே போல் சாளுக்கியர் ஆதிக்கத்திற்குப் பதில் ஹொய்சளர் ஆதிக்கம்.

இதில் லாபமோ நஷ்டமோ இல்லை என்பதால் அரசர்கள் ஒப்புக் கொண்டார்கள்.

கௌரவம் காரணமாகப் போருக்கு முன்னால் ஒப்புக் கொள்ளாமல் போர் நடந்து தோற்றபின் ஒப்புக் கொண் டார்கள்.

விட்டலராயனைப் பொறுத்தவரை சாளுக்கியர் ஆதிக்கத்தை நீக்கி ஹொய்சள சாம்ராஜ்யமாக மாற்ற நினைத்தானே தவிர மக்களுக்குத் தொல்லை தரவோ அவர்களது வாழ்க்கையில் இடையூறு செய்யவோ விரும்பவில்லை.

அரசர்கள் நிபந்தனைகளுக்கு ஒப்புக் கொண்ட பின் அவன் மக்களைக் கூடச் சந்திக்கவில்லை. அடுத்த கட்டப் போர் நடவடிக்கைக்கு ஆயத்தமானான்.

அவனைப் பொறுத்த வரை நாடுகள் எதிரிகளின் நாடுகளாக இருக்கலாம். அரசர்கள் எதிரிகளாக இருக்கலாம். ஆனால் மக்கள் ஒரு போதும் எதிரிகள் அல்லர் என்பதை உணர்ந்திருந்தான்.

மக்களும் அப்படிப்பட்ட நிலையில்தான் இருந்தார்கள். தங்களது அமைதியும் சுபிட்சமும்தான் அவர்களுக்கு முக்கியமாக இருந்ததே தவிர தன்னை யார் ஆள்கிறார்கள் என்பதைப் பற்றிக் கவலைப்படவில்லை.

ஆள்பவன் அமைதியை நிலைநாட்டினால் அவன் மீது நட்பு பாராட்டினார்கள். அன்பு காட்டினார்கள். ஆள்பவன் கொடுங்கோலனாக இருந்தால் வெறுத்தார்கள்; எதிர்த்தார்கள்.

அவர்களது அந்த நிலைதான் ஹொய்சளர்களுக்குச் சாதகமாக இருந்தது.

“தென்மேற்கு நாடுகளை வென்று முடித்தபின் நாம் இப்போது வடக்கே செல்வோம். நமது மலைத் தொடர் பயணத்தில்

குடகுநாடு மட்டும் நிற்கிறது. அதை வென்று விட்டால் நமது கவனத்தை உள்நாட்டிற்குத் திருப்பலாம்” என்றான் மன்னன்.

கங்கராஜனும் பரதனும் அதை ஆமோதித்தார்கள். அதையடுத்து மூன்று மாத காலம் பயணம் செய்து குடகு நாட்டை அடைந்தது படை.

“கங்கராஜா! கோட்டைத் தலைவனுக்குப் போர் வேண்டுமா? அமைதி வேண்டுமா என்று கேள். அமைதி வேண்டுமென்றால் உடனடியாகச் சரணடையச் சொல். செய்தியை அனுப்பு” என்றான் மன்னன்.

செய்தி அனுப்பப்பட்டது.

செய்தி வந்த ஓலையைப் படித்து விட்டு “சரணடைந்து விடலாம்” என்றான் கோட்டைத் தலைவன்.

உபதலைவர்கள் மௌனமாய் இருந்தார்கள்.

அப்போது சிங்கம் ஒன்று சீறும் சத்தம் கேட்டது.

அதையடுத்து கோட்டைத் தலைவனை நோக்கிச் சிங்கம் ஒன்று மெல்ல மெல்ல அடியெடுத்து வைத்தது.





காலம் காலமாக ஒரு நம்பிக் கையிலோ அல்லது கொள்கை யிலோ அல்லது மதத்திலோ ஊறிப் போனவர்களை கட்டாயத்தின் பேரில் மாற்றினால் அந்த மாற்றமானது வேரறுந்த மரத்தைப் போல விரைவிலேயே காய்ந்து விடும்.



விட்டலராயனிடமிருந்து சரணடைந்து விடும்படி ஓலை வந்ததைப் படித்ததுமே குடகு கோட்டைத் தலைவன் தனக்கு முன்னால் அமர்ந்திருந்த உபதலைவர்களைப் பார்த்துச் "சரணடைந்து விடலாமா?" என்று கேட்டு லேசாக ஒரு புன்னகையை வீசவும் செய்தான்.

உபதலைவர்களோ தங்களுக்கு வாய் என்ற ஒன்று இருப்ப தையே மறந்தவர்களைப் போல மௌனமாக இருந்தார்கள்.

அதைக் கண்ட கோட்டைத் தலைவன் "நீங்கள் எல்லாம் சிலையாக மாறிவிட்டீர்களா அல்லது சிலையாகப் பிறந்திருக் கிறீர்களா?" என்று கேட்டான்.

பிரதான உபதலைவனான பிருதாபத்திரன் எழுந்து "தலை வருக்கு என்ன உத்தேசமோ அதுதான் எங்கள் முடிவு" என்றான்.

"என் உத்தேசம் போதுமென்றால் நீங்கள் எல்லாம் எதற்கு? எழுந்து வந்துச் சாமரம் வீசுங்கள்" என்றான் கோட்டைத் தலைவன் சற்று கோபத்துடன்.

"வந்திருக்கும் எதிரி பல நாடுகளை வென்றிருப்பவன். அவன் கால் வைத்த நாடு எதுவும் அவனை வென்றதில்லை. அவன் தான் வென்றிருக்கிறான். தொடர் வெற்றி அவனைப் பலசாலியாக்கியிருக்கிறது. அதனால்" என்று இழுத்தான் உபதலைவனான பிருதாபத்திரன்.

"அதனால் என்ன? அவனிடம் சரணாகதி அடைந்து விடலாம் என்கிறாயா? உன்னைப் போன்ற உபதலைவர்கள் இருக்கும் வரை நான் சரணாகதியைத் தவிர வேறு எதையும் நினைக்க முடியாது. நான் யார் என்பதையே மறந்து விட்டீர்களா?" என்று கேட்டான் கோட்டைத் தலைவன்.

அவனது கேள்விக்கு உபதலைவர்கள் பதில் கூற வில்லை.

கோட்டைத் தலைவன் இஸ்லாமிய மதத்தைச் சேர்ந்தவன். அவன் பெயர் இஸ்மாயில். சாளுக்கியர் படையில் திறம்

பட பணியாற்றி குடகுநாட்டிற்குப் பிரதிநிதியாக நியமிக்கப் பட்டவன்.

குடகு நாட்டுக் கோட்டைக்குத் தலைவனாக வந்த இஸ்மாயில் வீரனாக மட்டுமின்றி வித்தியாசமாக நினைக்கவும் செய்தான். அவன் அராபிய நாட்டிலிருந்து வந்து வணிகனாக இருந்து சிறுகச் சிறுகத் தன் அடையாளத்தை வீர அடையாளமாக மாற்றிக் கொண்டும் சாளுக்கியர் படையில் சேர்ந்தான்.

அவனைப் போலவே அராபியர்கள் பலரும் படையில் சேர்ந்திருந்தார்கள். அவர்களையெல்லாம் குடகு நாட்டிற்கு வரவழைத்தான்.

அக்காலகட்டத்தில் சேரநாடு வழியாக வணிகர்களாக வந்த அராபியர்கள் சேரநாட்டில் மிகுதியாகவும் பிறபகுதியில் பரவலாகவும் பரவி வணிகமும் செய்தார்கள். இஸ்லாமிய மதப் பிரச்சாரங்களையும் செய்தார்கள்.

மக்களோ அவர்களது வணிகத்தை வரவேற்ற அளவிற்கு அவர் களது மதத்தை வரவேற்க வில்லை. வரவேற்பு பெறமுடியாத அளவிற்கு சமணம், பௌத்தம், சைவம், வைணவம் ஆகிய மதங்கள் தென்னாட்டில் மக்களால் கவரப்பட்டு முன்னணியில் இருந்தன.

அதோடு துருக்கியர்கள் ஆதிக்க வெறியோடு வடமேற்கு இந்தியா வழியாகப் படைகளோடு பிரவேசித்து வட இந்தியாவில் டில்லி முதலாக ஒரு சில இடங்களைக் கைப்பற்றி யிருந்தார்கள். வடமேற்கு இந்தியாவில் பல நகரங்களில் அவர்கள் பரவலாகப் பரவியிருந்தார்கள். அவர்களுக்கு மதப் பிரச்சாரமும் வணிகமும் இரண்டாவது இடத்தில் இருந்தது. ஆதிக்க ஆசையே முதலிடம் வகித்தது.

இந்தியாவில் தனது ஆதிக்கத்தைக் கொண்டு வந்த பின் மதத்தையும் வணிகத்தையும் கொண்டு வரலாம் என்பது அவர்களது அபிப்ராயமாக இருந்தது.

அவர்களுக்கும் இஸ்மாயிலுக்கும் தொடர்பு இல்லை யென்றாலும் இஸ்லாமிய மதம் அனைவருக்கும் அடிப்படையாக இருந்தது.

இஸ்மாயிலுக்கு குடகுநாட்டை இஸ்லாமிய நாடாக மாற்றுவதில் பெருவிருப்பம் இருந்தது. ஆனால் டில்லிக்கு வந்த துருக்கியர்களைப் போல அதை அவனால் அதிரடியாகச் செய்ய முடியவில்லை.

சாளுக்கியரின் பிரதிநிதியாக இருந்து கொண்டு அவ்வாறு செய்வதற்கு அவனால் முடியவில்லை. எனவே சாளுக்கியர்

படையில் இருந்த இஸ்லாமியர்களை குடகு நாட்டிற்கு வரவழைத்தான். தனது படையில் அவர்களைச் சேர்த்தான். சேர நாட்டிலிருந்தும் துளு நாட்டிலிருந்தும் இஸ்லாமிய வணிகர்களை ஈர்த்து குடகுநாட்டை மலை நாடுகளில் சிறந்த வணிகச் சந்தையாக மாற்றினான். மக்களை மதம் மாற அவன் செய்த முயற்சிகள் அவ்வளவாகப் பயனளிக்கவில்லை.

அதற்காக இஸ்மாயில் அவசரப்படவில்லை. காலம் காலமாக ஒரு நம்பிக்கையிலோ அல்லது கொள்கையிலோ அல்லது மதத்திலோ ஊறிப் போனவர்களை கட்டாயத்தின் பேரில் மாற்றினால் அந்த மாற்றமானது வேரறுந்த மரத்தைப் போல விரைவிலேயே காய்ந்து விடும். உதிர்ந்து விடும்.

மாறாக வேர்களுக்கு புத்துயிர் அளிப்பது போல் படிப்படியாக முயற்சித்தால் மக்களை மதம் மாறச் செய்யலாம் என்றும் அப்படிச் செய்யும் மாற்றமே நிலைத்து நிற்கும் என்றும் கருதினான்.

மக்களின் ஆதரவு பெருகும் போதும் மதமாற்றம் நிகழும் போதும் சாளுக்கியரது ஆதிக்கத்தை புறக்கணித்து விட்டு குடகு நாட்டை இஸ்லாமிய நாடாக அறிவிக்கலாம் என்று தீர்மானித்து தனது செயல்பாட்டைச் சீராகவும் சிறப்பாகவும் செய்து வந்தான்.

இந்த நிலையில் ஹொய்சளப் படை குடகு நாட்டை நோக்கி வருகிறது என்ற செய்தி அவனது தலையைக் குடைந்தது. கடைந்தது. அவனது மனம் அமைதியின்மையை அடைந்தது.

கோட்டையில் இருந்த வணிகர் தலைவர்களையெல்லாம் அழைத்தான்.

“வியாபாரம் எல்லாம் எப்படி நடக்கிறது?” என்று கேட்டான்.

“அபாரமாக நடக்கிறது. அமோகமாக நடக்கிறது. அரேபியாவில் கூட இப்படி விற்பனையானதில்லை. அராபியப் பொருட்களை இந்நாட்டு மக்கள் பெரிதும் விரும்பி வாங்கு கிறார்கள். வாசனைப் பொருட்களுக்கு போட்டா போட்டி நடக்கிறது. இது எங்களுக்குப் பொற்காலம்” என்றார்கள் அராபிய வணிகர்கள்.

“இதற்கெல்லாம் காரணம் யார்?” என்று கேட்டான் இஸ்மாயில்.

“தாங்கள் தான். தாங்களே தான்.”

“முட்டாள்களே! நானல்ல காரணம்.”

“தாங்கள் தானே எங்களை இங்கே கொண்டு வந்தீர்கள்?”

"வணிகர்களே! அராபியர் என்றால் கொள்ளைக்காரர்கள் என்ற பொருள் இருந்தது ஒரு காலம். கடல் என்றால் அரபுக் கடல் அராபியர் என்றால் கடல் கொள்ளையர் என்று இருந்த நிலையை மாற்றியது நபிகள் பெருமகனார். கடலைக் கொள்ளையடித்தவர்கள் மற்றும் தரையில் கொள்ளை யடித்தவர்கள் ஆகியோரது மனங்களை அவர் கொள்ளை யடித்தார். கொலை, கொள்ளை, குற்றம் என்று காட்டு மிராண்டிகளாக வாழ்ந்த அராபியர்களுக்கு இஸ்லாத்தைப் போதித்தார். கொள்ளையடிப்பது தவறு என்பதைச் சுட்டிக் காட்டி அவர்களை வணிகத்தில் ஈடுபடச் செய்தார். அதனால் தான் நீங்களெல்லாம் கடல் கடந்து வந்து இங்கே வியாபாரம் செய்கிறீர்கள். புரிகிறதா?" என்று கேட்டான் இஸ்மாயில்.

"உண்மை தலைவரே. உண்மை. பெருமானார் மட்டும் அவதரிக்காமல் இருந்திருந்தால் நாங்கள் இன்னமும் அல்லல் பட்டு அழுது கொண்டுதான் இருப்போம்."

"அது போகட்டும். நீங்கள் இங்கே வணிகம் செய்வதற்கு எனக்குத் தரும் வரி எவ்வளவு?"

"வாரத்திற்கு நூறு வராகன்."

"இனிமேல் வாரத்திற்கு ஆயிரம் வராகன் செலுத்த வேண்டும்."

"தலைவரே! இது மிக அதிகம். மிகமிக அதிகம். அநியாயம்."

"நீங்கள் வணிகம் அமோகமாக நடப்பதாகச் சொன்னது உண்மைதானே?"

"உண்மைதான். ஆனாலும் வாரத்திற்கு வரி ஆயிரம் வராகன் என்பது எங்கள் வியாபாரத்தையே நசுக்கி விடும். நாங்கள் குடகு நாட்டை விட்டுச்சென்று விடும்படி இருக்கும்."

"சென்று விடுங்கள். நான் கோரும் வரிப்பணத்தைத் தராதவர்கள் இங்கே எதற்காக இருக்க வேண்டும்?"

"தலைவரே! எங்களை இங்கே வரவழைத்த போது சொன்னதை மறந்து விட்டீர்களா? அராபியர் சுகமாக வாழ வேண்டும். அவர்கள் வாழும் இடம் சொர்க்கமாக இருக்க வேண்டும் என்று சொன்னீர்கள். அதற்காகவே வணிகச் சந்தையை உருவாக்குவதாகச் சொல்லி உருவாக்கவும் செய்தீர்கள். வணிகம் உங்கள் சொர்க்கத்திற்கான வாயில் என்றீர்கள்."

"இப்போதும் அதைத்தான் சொல்கிறேன்."

"ஆயிரம் வராகனை வரியாகக் கொடுத்தால் இந்த இடம் எங்களுக்குச் சொர்க்கமாக இருக்காது. நரகமாகி விடும்."

"நூறு வராகன் போதும் என்று நான் இருந்து விடலாம். ஆனால் பகைவன் அப்படி இருக்க மாட்டான்."

"ஐயா! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?"

"துன்பமானச் செய்தியைச் சொல்கிறேன் வணிகர்களே! குடகு நாட்டை நோக்கிப் பகைவன் படையெடுத்து வருகிறான்."

"பகைவனா? அவன் யார்?"

"இந்து மன்னன் விட்டலராயன். அவன் தலைமையில் பல்லாயிரம் வீரர்கள் பெரும் சமுத்திரம் போல் வருகிறார்கள். ஏற்கனவே அவர்கள் பதினைந்து நாடுகளுக்கு மேல் வென்றிருக்கிறார்கள். அவர்கள் வழியில் நாம் மட்டும் தனித்து நிற்கிறோம். அவர்களது படை வந்தால் நமது நிலை கடைநிலையாகி விடும். நமது கோட்டையைக் கடைந்து கலக்கி விடுவார்கள். அவர்களது ஆட்சி இங்கே வரும். இஸ்லாமியர்களான உங்களது அமோகமான வணிகத்தைக் காண்பார்கள். வாரத்திற்கு ஆயிரம் வராகன் வரியாக விதிப்பார்கள். உங்களால் வரி செலுத்த முடியாது. வாரி சுருட்டிக் கொண்டு வந்த வழியே ஓடும் படி இருக்கும். அதற்குக் கூட அவர்கள் அனுமதிப்பார்களா என்று தெரியாது."

"தலைவரே! அவர்களை வெல்லத் தங்களால் முடியாதா?"

"எனக்கு நம்பிக்கையில்லை. ஏனென்றால் இங்கே இருப்பவர்கள் இந்து வீரர்கள். நம்மீது இந்து மன்னன் போர் தொடுக்கும் போது இஸ்லாமியனான என்னோடு முழுமையாக ஒத்துழைக்க மாட்டார்கள். இனம் இனத்தோடு சேரும். குலம் குலத்தோடு சேரும். மதம் மதத்தோடு சேரும். மனம் மனத்தோடு சேரும். தோல்வி என்னை வந்து சேரும். துன்பம் உங்களை வந்து சேரும்!"

"தலைவரே! நிலைமை கடுமையாக இருக்கிறதே! என்ன செய்வது?"

"வணிகர்களே! உங்களில் மொத்தம் எவ்வளவு பேர் இருப்பீர்கள்?"

"நாங்களும் எங்கள் குடும்பமுமாகப் பத்தாயிரம் பேர் இருப்போம்;"

"குழந்தைகளையும் கிழவர்களையும் கழித்து விட்டால் எட்டாயிரம் பேர் தேறுவீர்கள் அல்லவா?"

"ஆமாம்."

"இஸ்லாமுக்கு இஸ்லாமியர்களே துணை. வணிகர்களே! இங்கே நாம் வாழ வேண்டும். வளர வேண்டும். நம்மோடு

இஸ்லாம் மதமும் வளர வேண்டும். நபிகள் பெருமானார் அவர்களால் உருவாக்கப்பட்ட ஒப்பற்ற இந்த மதத்தை வளர்க்க வேண்டியது நம் கடமை. அதற்கு வழி நீங்கள் எல்லோரும் போர் வீரர்களாக மாற வேண்டும். போரிட வேண்டும்."

"எங்களுக்குப் போரிடத் தெரியாதே!"

"டில்லியில் இருக்கும் இஸ்லாமியர்கள் உங்களைப் போல் இல்லை. வீரர்களாக இருக்கிறார்கள். போரிடுகிறார்கள். நீங்களும் அப்படி மாற வேண்டும். ஆண் பெண் என்ற வித்தியாசம் இல்லாமல் போர் வீரர்களாக வேண்டும். உங்களுக்குப் போர்க் கலையை அளிக்க ஏற்பாடு செய்கிறேன். என்ன சொல்கிறீர்கள்?"

"வேறு வழியில்லையா?"

"இருந்தால் சொல்லலாம்."

"பகைவர்கள் வருவதற்குள் போர்க்கலையைப் பயில முடியுமா?"

"முடியும். அது என் பொறுப்பு."

"சரி;"

"வியாபாரத்தையும் கவனியுங்கள். போருக்கும் இடம் கொடுங்கள்."

"சரி."

வணிகர்கள் சம்மதம் தெரிவித்த பிறகு சாளுக்கிய நாட்டிலிருந்து அழைத்து வந்த வீரர்களைக் கொண்டு அவர்களுக்குப் போர் பயிற்சியை அளித்தான் இஸ்மாயில்.

இதற்கிடையில் கோட்டையில் இருந்த இஸ்லாமியர் அல்லாதப் படைவீரர்களை அழைத்தான்.

"ஒற்றை முரசொலி அடிக்கடி கேட்கிறதே! ஏன் எதற்கு என்பது தெரியுமா?" என்று கேட்டான்.

"பகைவர்கள் படையெடுத்து வருகிறார்கள்."

"அவர்கள் யார் என்று தெரியுமா?"

"ஹொய்சளர்கள் என்று கேள்விப்பட்டோம்."

"யார் அவர்கள்?"

"வேலாபுரத்தில் இருக்கும் புதிய வம்சத்தவர்."

"அவர்கள் படையெடுத்து வந்தால் என்ன செய்வதாக உத்தேசம்?"

"இதில் உத்தேசம் என்ன இருக்கிறது கோட்டைத் தலைவரே? போரிடுவோம்."

"எனக்கு நம்பிக்கையில்லை."

"ஏன்?"

"நான் இஸ்லாமியன். நீங்கள் இந்துக்கள். வருபவனும் இந்து. அவனோடு சேர்ந்து கொண்டு எனக்குத் துரோகம் செய்வீர்கள்."

"எங்களுக்கு வீரம் தான் குணம். மதமல்ல. உங்களிடம் வேண்டுமானால் வித்தியாசம் இருக்கலாம்."

"மத வித்தியாசம் எப்படி மறைய முடியும்?"

"உன் மதமா? என் மதமா? ஆண்டவன் என்ன மதம் என்று கேட்டு ஊழியம் செய்கிறவர்கள் நாங்கள். படையில் சேரும் போது யாருடைய படையில் இருக்கிறோமோ அதற்கு விசுவாசமாக நடந்து கொள்வோம் என்று பிரமாணம் எடுத்துக் கொள்கிறவர்கள் நாங்கள்."

"உங்களை எப்படி நம்புவது? என்ன உத்திரவாதம்?"

"இவ்வளவு காலமாக உங்களுக்கு ஒத்துழைப்பு தருகிறோமே அது தான் உத்திரவாதம்."

"பகைவனை முழுமூச்சோடு தாக்குவீர்களா? எனக்கு வெற்றியை ஈட்டித் தருவீர்களா?"

"வெற்றியை ஈட்டுவதற்கான திட்டம் உங்களுடையது. உங்கள் திட்டப்படி போரிடுவது எங்களுடையது."

இவ்வாறு தன்னிடம் இருந்த இந்து வீரர்களையும் இஸ்லாமியர்களையும் சரிகட்டி போர் ஆயத்தங்களை இஸ்மாயில் செய்து வைத்திருந்த நேரத்தில்தான் விட்டலராயனின் படை கோட்டையை வளைத்துக் கொண்டது. சரணடையும்படி ஓலையை அனுப்பியது.

அந்த ஓலையைப் பற்றி உபதலைவர்களிடம் பேசிய போது அவர்கள் உருப்படியாக எதையும் கூறாமல் மழுப்பலாகவே பதில்களைச் சொல்லவே "நான் யார் என்பதை மறந்து விட்டீர்களா?" என்று கேட்டான் கோபத்துடன்.

அவன் இஸ்லாமியன் என்பதையும், இஸ்லாமிய நாடாகக் குடகு நாட்டை மாற்ற விரும்புவன் என்பதையும், அதை அதிரடி யாகச் செய்யாமல் அமைதியாகச் செய்பவன் என்பதையும் அறிந்திருந்த உபதலைவர்கள் "நீங்கள் யார் என்று தெரியாமலா இவ்வளவு காலமாக உங்களோடு இருந்து வருகிறோம்?" என்று கேட்டார்கள்.

அப்போது சிங்கம் ஒன்று சீறும் சப்தம் கேட்டது. அதையடுத்து சிங்கம் ஒன்று சர்வசகஜமாகப் பிரவேசித்து இஸ்மாயிலின் பக்கத்தில் அமர்ந்து கொண்டது.

அதைக் கண்டு யாரும் பதற்றப்படவில்லை.

"நான் சிங்கம். இதோ அமர்ந்திருக்கிறதே - இது வேறு நான் வேறு அல்ல. கொடிய வன விலங்கான இது இப்படிச் சாதுவாக என் பக்கத்தில் அமர்ந்திருக்கிறதே, இப்படியொரு காட்சியை நீங்கள் கண்டதுண்டா? மனிதனைக் கண்டால் சிங்கம் சும்மா விடுமா? பீய்த்துப் போட்டு உண்டு விடும். ஆனால் குடகு நாட்டில் சிங்கம் மட்டுமல்ல பல கொடிய விலங்குகளும் எனக்குக் கட்டுப்படுகின்றன. காட்டு விலங்குகள் வீட்டு விலங்குகள் போல் என்னிடம் நடந்து கொள்கின்றன. அவ்வாறு பழக்கி வைத்திருக்கிறேன். உங்களைக் காட்டிலும் அதிகமாகவும் உண்மையாகவும் அவற்றைத்தான் நம்புகிறேன். மனிதர்கள் எப்போதும் நம்பத் தகாதவர்கள். விலங்கு எப்போதும் நம்பத் தகுந்தவைகள்" என்றான் இஸ்மாயில்.

"அப்படியானால் இந்தச் சிங்கங்களையே உபதலைவர்களாக நியமித்திருக்கலாமே?" என்றான் பிருதாபத்திரன்.

"நியமிக்கலாம். ஆனால் பதவியைப் பற்றி அவற்றுக்குத் தெரியாது. இப்போது மட்டுமென்ன? என் உபதளபதிகளாகச் செயல்படப் போவது சிங்கங்கள்தான். ஒவ்வொரு கோட்டை வாசலுக்குள்ளும் நான்கு சிங்கங்கள் கூண்டில் வைக்கப் பட்டிருப்பது உங்களுக்கெல்லாம் தெரிந்தது தானே?"

"அவற்றை பகைவர் மீது ஏவப் போகிறீர்களா?"

"ஆமாம்."

"வேண்டாம் கோட்டைத் தலைவரே."

"ஏன்?"

"மனிதன் சிலநேரங்களில் முரண்படுவான். ஆனால் பெரும்பாலான நேரங்களில் ஒழுங்காக நடந்து கொள்வான். மிருகங்கள் அப்படியல்ல. அறிந்திருந்தும் யானை பாகனையே கொல்லும். பாலூட்டி வளர்த்தபாம்பு ஊட்டியவனைத் தீண்டும். சிங்கத்தைப் போன்ற மாமிசப் பட்சிணிகளும் அப்படித்தான். சில நேரங்களில் கட்டுப் பட்ட மாதிரி இருக்கும். பல நேரங்களில் அப்படி இருக்காது. கோட்டை வாயில்களில் இருக்கும் சிங்கங்களைக் கூண்டுகளிலிருந்து திறந்து விட்டீர்களானால் அது எதிரிகள் மீது மட்டும் பாயாது. நம் மீதும் பாயும்."

“அதனால்?”

“அவற்றைக் கூண்டுகளிலிருந்து விடுவிக்க வேண்டாம்.”

இஸ்மாயில் தன்னருகில் இருந்த சிங்கத்தைப் பார்த்து ஏதோ சொன்னான். அது எழுந்து சென்றது.

“எனக்குப் பயனளிக்கக் கூடிய சிங்கங்களைக் கூண்டில் வைத்து விட்டு எனக்குப் பயனளிக்காத உங்களை வைத்துக் கொண்டு போரை நடத்தச் சொல்கிறீர்களா? நன்றாகத் தான் இருக்கிறது. எதிரியிடம் எப்படி நடந்து கொள்ளலாம் என்று கலந்தாலோசித்து விட்டுச் சொல்லுங்கள். நான் போய் மானைப் பார்த்து விட்டு வருகிறேன்” என்று சொல்லி விட்டு வெளியேறிய இஸ்மாயில் இரவு நேரம் முகிழ்த்து விட்டதை அறிந்து, மகிழ்ந்து தனது பிரத்தியேக மாளிகைக்குச் சென்று கதவைத் தட்டினான்.

மான் கதவைத் திறந்தது.

அதே சமயம்-

கோட்டைக்கு வெளியே ஆங்காங்கே “ஐயோ ஐயோ” என்று அலறல் சத்தம் கேட்டது.





நாடு விட்டு நாடு வந்து அயல் நாட்டில் ஆட்சியை நிறுவ முயல் பவர்கள் அந்த நாட்டு மக்களை விரோதித்துக் கொள்வதை விட வினயமாக அன்பு காட்டுவதே சரியான அரசியல் – மாயா



பிரத்தியேக மாளிகையின் கதவை கோட்டைத் தலைவன் தட்டியதும் மான் போன்றத் துள்ளலுடன் மங்கையொருத்தி வந்து கதவைத் திறந்தாள்.

அவன் உள்ளே நுழைந்ததும் கதவைச் சாத்தித் தாழிட்டாள் அவள்.

கோட்டைத் தலைவன் கதவைத் திறந்த காரிகையின் அரைகுறை ஆடைகளுக்கு இடையே பெரிதாகக் குலுங்கிய அவளது தனங்களின் செழிப்பைக் கண்டு அசந்து போனான்.

இவற்றை மட்டும் அவள் பிரத்தியேகமாக வளர்க்கிறாளோ என்று கூடச் சந்தேகித்தான்.

அவற்றை நாசம் செய்ய வேண்டும் என்ற வெறி அவனுக்கு உண்டாயிற்று.

ஆனாலும் அடக்கிக் கொண்டான். பார்வை மட்டும் அடிக்கடி அந்த இடத்திலேயே வட்டமிட்டது.

அதோடு அவளது இளம் இதழ்களின் செவ்வண்ணம் பூசியிருந்ததால் அவனுக்குள் விகார எண்ணங்கள் எழுந்து அலைந்தன.

தன் பக்கத்தில் சிங்கம் அமர்ந்திருந்ததற்கு நேர் மாறாக மானொன்று வந்துத் துள்ளுவது போல் அந்த மங்கை இருந்ததால் சிங்க உணர்வுகள் அவனுக்குள் கிளர்ந்தெழுந்தன.

அதோடு அவளது பின்னெழில்கள் அமைந்த விதம் அவனுக்கு உன்மத்தத்தை ஊட்டி அவசரப்படுத்தியது.

அவளை மானைத் தூக்குவது போலவே தூக்கிச் சயன அறைக்குச் சென்றான். அங்கிருந்த கட்டிலில் அவளை வீசினான். அவளது ஆடைகள் கலைந்தன. அவனது மனமும் கலைந்தது. கட்டுப்பாடு குலைந்தது.

எந்தெந்த அங்கங்கள் அவனுக்குக் கிளர்ச்சியினை உண்டாக்கியதோ அவற்றையெல்லாம் மாறிமாறி தண்டித்தான்.

கோட்டைத் தலைவனின் தண்டனை வித்தியாசமாக இருந்தது. வேகமாக இருந்தது. அதே சமயம் ஆனந்தமாக இருந்தது அவளுக்கு.

ஏதாவது பேசினால் வேகம் குறைந்து விடும் என்று நினைத்த அவள் மௌனமாய் இருந்து அவன் காட்டிய ஜாலங்களை யெல்லாம் அள்ளி அள்ளிப் பருகினாள்.

அவனைப் பற்றிப் பல விஷயங்கள் அவளுக்குத் தெரியும். அவனது அரசியல் தெரியும். மதவெறி தெரியும். பேராசையும் துராசையும் தெரியும். அவன் இஸ்லாமியன் என்பதும் தெரியும். அதெல்லாம் அவளுக்கு அறவே பிடிக்கவில்லை.

ஆனால் அறைக்குள் வந்து ஆனந்த ஜாலங்களை விளைவித்த போது எல்லாவற்றையும் மறந்து அவன் ஆடவன் என்ற ஒன்றை மட்டும் நினைத்துக் கொண்டாள்.

அது போன்றசமயங்களில் பெண்ணிற்கு இருக்க வேண்டிய நினைப்பு அது மட்டுமாகத்தான் இருக்க வேண்டும்.

காமம் துய்க்கும் போதுகளில் எல்லாவற்றையும் மறந்து விட்டு காமத்தை மட்டுமே கருத்தில் கொள்ளும் ஆணும் பெண்ணும் காமத்தைப் பூரணமாக அனுபவிக்கிறார்கள். வேறு எண்ணங்களுக்கு இடமளித்தால் காம நுகர்ச்சி அரை குறையாகவே ஆரம்பித்து முடியும்.

அதைத் தனது அனுபவத்தில் கண்டிருந்ததால் அந்தப் பெண் மிகச் சரியாக நடந்து கொண்டாள்.

ஒரு கட்டத்தில் இஸ்மாயில் சிரித்தான்.

கிளர்ச்சியின் குதூகலத்தில் இருந்த அவள் “எதற்காகச் சிரிக்கிறீர்கள்?” என்று முனகினாள்.

“இங்கே வந்த போது நான் கண்ட்க் குதூகலங்கள் எல்லாம் இப்போது சின்னா பின்னமாகிக் கிடப்பதைப் பார்த்தேன். சிரித்தேன்” என்றான் இஸ்மாயில்.

“அதற்குப் போய் எதற்காகச் சிரிக்க வேண்டும்?” என்று போதைக் குரலில் கேட்டாள் அவள்.

“புத்தம் புதிய பழஇனங்கள் சக்கையாகி விட்டதே மாயா?” என்றான் இஸ்மாயில்.

"சிங்கமானது மான் மீது பாய்ந்தால் வேறு எப்படி ஆகும்? அதுவும் நீங்கள் மிகவும் மோசம். மிகவும் வேகம். மிகவும் வக்கிரம்" என்றாள் அவள்.

அவளது அசைந்த உதடுகளை அவன் உற்றுப் பார்த்தான்.

அதைக் கண்ட அவள் "இப்போது என் தண்டனையைப் பாருங்கள்" என்று முனகி விட்டு சாயம் தீட்டிய உதடுகளுக்கு வேலைகொடுத்து அவனைத் தண்டித்தாள்.

அவன் அவளது அந்த ஆனந்த தண்டனையைச் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. அதுவரை அந்த தண்டனையைப் பெற்றதில்லை. காமம் கடலைவிடப் பெரியது. வானத்தை விடப் பரந்தது என்ற எண்ணத்தைத் தந்தது அவளது தண்டனை.

"இப்படியே இருந்து விட்டால் என்ன? கோட்டையாவது! குட்டையாவது! பகைவன் வந்தாலென்ன! போனால் என்ன? இதுமாதிரி ஒன்று கிடைக்குமா?" என்றெல்லாம் எண்ணிக் கிறங்கிப் போனான்.

தான் அளித்த தண்டனை தனக்கும் ஆனந்தத்தை அள்ளி வழங்குவதை உணர்ந்த அவள் 'காமம் ஒன்றில்தான் தண்டனையும் ஆனந்தமானது' என்று நினைத்தாள்.

அவனுக்குக் கோட்டை நினைப்பு வந்து விடவே காம உணர்வுகள் அகன்றன. அவளையும் அகற்றினான். அவளுக்கு அவனது மாற்றம் புரிந்தாலும் அதை வெறுத்தாள். "அதற்குள் என்ன அவசரம் இவனுக்கு? என்ன மூழ்கி விட்டது என்று விலகி விட்டான்?" என்று நினைத்தாள்.

அவனிடம் அவள் விரும்பாத விஷயம் இதுதான்.

திடீரென்று வருவான். திடீரென்று ஆள்வான். திடீரென்று போய் விடுவான். ஏன் என்று கேட்க முடியாது.

எனவே நிராசையுடன் விலகிய அவள் ஆடைகளை அணிய முற்பட்ட போது "வேண்டாம்" என்றான் அவன்.

"ஏன் வேண்டாம்? நீங்கள்தான் விலகி விட்டீர்களே?" என்றாள் அவள்.

"அதனால் என்ன? நான் சொன்னபடி இரு. எழுந்து கொள்ள வேண்டாம்" என்று சொன்ன அவன் எழுந்து ஆடைகளை அணிந்து கொண்டு ஆசனத்தில் அமர்ந்தான்.

"இந்த இந்துக்களுக்கு என்ன வந்தது? நாய்கள், பீடைகள்" என்று எரிந்து விழுந்தான்.

அவனது கைகள் தனது உடம்பில் எங்கே இருந்ததோ அங்கிருந்து அகற்றிவிட்டு எழுந்து கொண்ட மாயா ஆடைகளை எடுத்து அணிந்து கொண்டாள்.

“நான் சொன்னது என்ன? நீ செய்தது என்ன?” என்று சீறினான் கோட்டைத் தலைவன்.

“ஆடையற்று வேலையற்று கிடப்பதற்கு நான் வெறும் சடலமல்ல கோட்டைத் தலைவரே. காமமென்றால் காலமெல்லாம் ஆடையற்று இருக்க நான் தயார். அது இல்லாத போது நான் நானாகவே இருக்க விரும்புகிறேன். அதோடு இந்த அறைக்கு வந்தபின் அரசியல் பேசாதீர்கள்” என்றாள் மாயா சற்று கோபத்துடன்.

ஆனந்தத்தைத் தந்தவளிடம் வறட்டு அதிகாரத்தைக் காட்ட அவன் விரும்பவில்லை.

“இந்துக்களைப் பற்றிப் பேசினால் உனக்குக் கோபம் வருமா?” என்று கேட்டான்.

“உங்களோடு உறவாடும் எனக்கு அந்த வித்தியாசம் எல்லாம் இல்லை. இங்கே எதுவும் பேசவேண்டாம் என்று தான் சொன்னேன். பேசுவதற்கு உங்களுக்கு ஆசையாக இருந்தால் எழுந்து சென்று விடுங்கள்” என்றாள் மாயா.

அவளுக்கு அவள் அரைகுறையாக விலகியது கோபத்தையும் தாபத்தையும் உண்டாக்கியது.

“கோபப்படாதே மாயா. நீ அழகின் ராணி. உன் அங்கங்கள் பேரழகின் அடையாளங்கள். நீ தரும் அனுபவம் இவ்வுலகில் எங்கும் இல்லை. உனது உதடுகள் எனக்களித்த ஆனந்தத்திற்கு ஈடு இணை எதுவும் இல்லை. நீ அடிமையில்லை. எனக்கு ராணி. நான் திருமணம் செய்து கொள்ளாமல் இருப்பதற்குக் காரணம் அதற்கேற்றவள் கிடைக்காமல் போனதுதான். இரு வாரங்களுக்கு முன் நீ கிடைத்த போது நீ தான் என் மனைவி என்றும் ராணி என்றும் தீர்மானித்து விட்டேன். திருமணத்திற்கு முன் ஏதேதோ சம்பிரதாயங்கள் இருப்பதால் உன்னை முதலில் அடைந்து விடுவது என்று முடிவு கட்டினேன். அடைந்தேன். ஆனந்தப்பட்டேன். இப்போதும் சொல்கிறேன். நீ தான் என் மனைவி. என் ராணி” என்றான் இஸ்மாயில்.

மாயா உள்ளுக்குள் சிரித்துக் கொண்டாள்.

“நீங்கள் என்னை மணக்கவும் முடியாது. நான் உங்கள் ராணியாகவும் முடியாது” என்றாள்.

"ஏன்? என்ன காரணம்?"

"மதம் காரணம். மத மாச்சர்யங்கள் காரணம். மத விரோதங்கள் காரணம்."

"நான் மதம் மாற இடமில்லை. நீ மாறலாம் அல்லவா? மாறினால் மனைவி. ராணி?"

"நான் மதம் மாற மாட்டேன்."

"இது என்ன நீ பேசுவது? நமக்குள் எல்லாம் நடந்து விட்ட பின் மதம் மாற மாட்டேன் என்று சொல்வது அர்த்தமற்றது."

"நீங்கள் சொன்ன விஷயங்களுக்கு மதம் தேவையில்லை. மனமும் தேவையில்லை. ஆனால் திருமணத்திற்கு அது அவசியம். அதோடு திருமணத்திற்கு முன்பே உங்களிடம் என்னை இழந்து விட்ட நான் மதம் மாற மாட்டேன். உங்களை மணக்க மாட்டேன். ராணியாக அமர மாட்டேன்."

பேச்சானது தேவையற்ற மார்க்கத்தில் போவதை உணர்ந்த கோட்டைத் தலைவன் "அந்தப் பேச்சை விடு. அதைப் பற்றிப் பேசுவதற்கு நிரம்ப அவகாசம் இருக்கிறது. நான் சொல்ல வந்தது உன்மீது எனக்குள்ள பிரியம் ஆழமானது என்பதை நீ புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகத்தான். உன்னோடு பேசுவதும் எனக்கு ஆனந்தம்தான் மாயா. அதைத் தடுக்காதே அதற்குக் கோபப்படாதே. என்னை விரட்டாதே" என்றான்.

அவளுக்குள் மூண்டிருந்த காமத்தணல் பேச்சுக்களால் அணைந்து போயிற்று. அன்றைய இரவின் ஆனந்தம் அவ்வளவு தான் என்பதும் புரிந்தது. எனவே அவனோடு பேசுவதற்கு இசைந்த நிலையில் "உங்கள் பிரச்சனை என்ன? பகைவர்கள் முற்றுகையிட்டிருக்கிறார்கள் என்பது தானே! அதற்கு ஏன் இந்துக்களைத் திட்டுகிறீர்கள். உங்களுக்கு முதல் விரோதி இந்த வசையும் வெறுப்பும்தான். நீங்கள் இருப்பது அரேபியாவில் அல்ல. இந்துக்களின் நாட்டில். இங்கே இஸ்லாமிய ராஜ்யத்தை அமைப்பது உங்கள் கனவு. அதற்காக நீங்கள் பல போர்களை நடத்தலாம். போர்கள் பல நடந்தாலும் மக்கள் மட்டும் ஒன்று தான். இந்தக் குடகு நாட்டில் அதிகம் இருப்பவர்கள் இந்துக்கள் தான். அவர்களுக்கிடையில் இஸ்லாமிய ராஜ்யத்தை உருவாக்க வேண்டுமென்றால் அவர்கள் மீதான வெறுப்பை விட வேண்டும். வசைமாரிகளை விட வேண்டும். வித்தியாசங்களை விட வேண்டும்" என்றாள்.

அசந்து போனான் இஸ்மாயில்.

அவளுடனான இரண்டு வார காலத்தில் அவள் ஒரு கவர்ச்சிக் கன்னி என்பதை அறிந்திருந்தான். காமத்தில் கரை கண்டவள் என்பதை அறிந்திருந்தான். எந்த நேரத்திலும் தயாராக இருந்து விருந்து படைக்கும் மருந்து என்பதை அறிந்திருந்தான். தான் ஒரு இஸ்லாமியனாக இருந்தாலும் இன்பத்தை அளிப்பதில் அவள் வித்தியாசம் பார்க்காத வினோதினி என்பதையும் அறிந்திருந்தான்.

ஆனால் அவள் அரசியலை அறிந்திருப்பாள் என்று நினைக்கவில்லை. தனது உள்ளக் கிடக்கையை அறிந்திருப்பாள் என்று நினைக்கவில்லை. அரசியலை நுட்பமாக விவாதிக்கக் கூடியவளாக இருப்பாள் என்று நினைக்கவில்லை.

தற்போது அவள் தன்னை விட அமைதியாகவும் ஆழமாகவும் பேசியதைக் கண்ட அவன் "நீ இப்படியொரு வித்தகியாக இருப்பாய் என்று நான் எதிர்பார்க்கவில்லை மாயா. உன்னிடம் இருப்பது காமம் என்ற கனி மட்டுமல்ல பற்பல கனிகளும் உள்ளன என்பதை இப்போதுதான் தெரிந்து கொண்டேன். அழகு இருக்கும் இடத்தில் அறிவும் இருக்கும் என்பதைத் தெரிந்து கொண்டேன். உன் அங்கங்களும் அழகு. அறிவும் அழகு. அமைதியும் அழகு" என்றான்.

அவனது வார்த்தைகளை அவள் பொருட்படுத்த வில்லை.

"நான் அரசியல் வித்தகி அல்ல கோட்டைத் தலைவரே. வித்தகம் எதையும் நான் பேசவில்லை. சாதாரணமானவர் களுக்குத் தெரிந்த விஷயத்தைத்தான் சொல்கிறேன். நாடு விட்டு நாடு வந்து அயல்நாட்டில் ஆட்சியை நிறுவ முயல்பவர்கள் அந்த நாட்டு மக்களை விரோதித்துக் கொள்வதை விட வினயமாக அன்பு காட்டுவதே சரியான அரசியல். அன்பு காட்டுவது போல் நடிக்கவாவது முயல வேண்டும். மக்களை பகைத்துக் கொண்டு எதையும் சாதிக்க முடியாது. பகைவரை ஏமாற்றலாம். மக்களை ஏமாற்ற முடியாது. அவர்கள் ஆயுதம் ஏந்தாத வீரர்கள். ஆரவாரம் இல்லாத அமைதிப் படை. அவர்களை எலி என்று நினைத்தால் எரிமலையாகி விடுவார்கள். உங்களுக்கு உண்மையிலேயே உங்கள் கனவு நிறைவேற வேண்டும் என்று விரும்பினால் மக்களை இங்கே இருக்கும் மக்களை நாய் பேய் என்றும் பீடை பிசாசு என்றும் ஏசாதீர்கள். நீங்கள் அவர்களுக்கு அந்நியன்தான். அந்த எண்ணத்தை மாற்ற வெறுப்பு உதவாது. அன்பு தான் உதவும். அரவணைப்புதான் உதவும்" என்றாள்.

"நீ சொல்வது உண்மைதான் மாயா. எனக்குத் தெரிந்த விஷயமானாலும் நீ விளக்கிய போது தான் விவரமாகப் புரிந்தது.

இந்துக்களை நான் இழிவாகச் சொன்னது தவறு. ஆனால் நான் இப்போது எதிர்கொள்ளப் போவது இங்கே இருக்கும் இந்துக்களையல்ல. கோட்டையை முற்றுகையிட்டிருக்கும் இந்துக்கள் படையை” என்றான் இஸ்மாயில்.

“யாராயிருந்தாலும் இகழ வேண்டியதில்லை கோட்டைத் தலைவரே. போர் செய்யுங்கள். திறமையைக் காட்டுங்கள். மனிதன் யாரையாவது இகழ வேண்டுமென்றால் அது தன்னைத் தான்” என்றாள் மாயா.

“அழகான சொற்களை அடுக்கடுக்காகச் சொல்கிறாய். புதுப்புது அர்த்தங்களைப் பூப்போல பூக்கிறாய். உன்னைத் தவறாகப் பயன்படுத்தி விட்டேனோ என்று தோன்றுகிறது. இதற்கு நான் பரிகாரம் செய்ய முடியாது அல்லவா!”

“அந்தப் பேச்செல்லாம் எதற்கு? என் விதி எனக்கு. உங்கள் விதி உங்களுக்கு.”

“நீ எனக்கொரு உதவி செய்வாயா கண்மணி?”

“சொல்லுங்கள்.”

“உனக்கு புரவியேற்றம் தெரியுமா?”

“தெரியும்.”

“நாளை காலை புரவி மீதேறி எதிரி மன்னனிடம் செல். கோட்டைக்குள் எதிரியை வரவேண்டாம் என்று சொல். போரைத் தவிர்த்து விட்டுத் திரும்பிச் செல்ல அவர்களிடம் சொல். போருக்கு முற்பட்டால் கோட்டைக்குள் இருக்கும் இந்துக்களை ஒருவர் விடாமல் கொன்று விடுவேன் என்று சொல்.”

“போர் புரிய நீங்கள் தயாராக இல்லையா?”

“தயாராகத்தான் இருக்கிறேன். இருப்பினும் போரைத் தவிர்ப்பது மேலானது அல்லவா?”

“எதிரி படையெடுத்து வந்திருப்பதற்கு என்ன காரணம் கோட்டைத் தலைவரே?”

“ஒரு காரணமும் இல்லை மாயா. வெறும் ஆசை. பேராசை. ஆதிக்க ஆசை.”

“அது உண்மையானால் போரிடத்தான் விரும்புவார்கள்.”

“எதற்கும் நீ சென்று வா. நீ ராசியானவள்.”



இஸ்மாயில் மாயாவுடன் பேசிக் கொண்டிருந்த அதே நேரத்தில் உபதலைவர்கள் தங்கள் படை வீரர்களுடன் உரையாடிக் கொண்டிருந்தார்கள்.

“எதிரியை முறியடிக்க என்ன திட்டம் தீட்டுவது என்று கேட்கிறார் கோட்டைத் தளபதி” என்றான் உபதலைவன் பிருதாபத்திரன்.

“எதிரி என்று யாரைச் சொல்கிறீர்கள்?” என்று கேட்டார்கள் வீரர்கள்.

“இதென்ன முட்டாள்தனமான கேள்வி? கோட்டைக்கு வெளியே இருக்கும் ஹொய்சளப் படைதான் எதிரி” என்றான் பிருதாபத்திரன்.

“கோட்டைத் தலைவருக்கு இப்போது நாம் தான் எதிரிகள். ஹொய்சளர்கள் அல்ல.”

“என்ன உளறுகிறீர்கள்?”

“உளறவில்லை ஐயா. உண்மை நிலைதான் அது. காலம் காலமாக இந்தக் கோட்டையின் பலமாக நாங்கள் இருந்து வருகிறோம். கோட்டைத் தலைவர்கள் மாறினாலும் நாம் மாறியதில்லை. நமது கடமைகளைப் பாரபட்சமின்றிச் செய்து வருகிறோம். ஆனால் கோட்டைத் தலைவர் எங்களைச் சந்தேகிக்கிறார். இந்து-இஸ்லாம் என்ற வித்தியாசத்தைப் பார்க்கிறார். நமது ஒத்துழைப்பிற்கு உத்திரவாதம் கேட்கிறார். அதாவது நம்மை எதிரிகளாகக் கருதுகிறார்.”

உப தலைவர்களிடம் கோட்டைத் தலைவன் பேசியதும் மானக் கேடான முறையில்தான் என்பதை அறிந்திருந்த பிருதாபத்திரன் “கோட்டைத் தலைவருக்கு ஏமாற்றம். கோபம். தோல்வி பயம். ஆகவே நிதானமிழந்து பேசி விட்டார். அதை நாம் பொருட்படுத்தக் கூடாது. நமது பணியைத் தட்டாமல் செய்ய வேண்டும்” என்றான்.

“அது எப்படி உபதலைவரே? நம்மை நம்பாதவர்களிடமும் மதிக்காதவர்களிடமும் நாம் எப்படி பணிபுரிய முடியும்?” என்றார்கள் வீரர்கள்.

“நாம் சிறப்பாகச் செயல்படுவோம். போரில் வெற்றியைச் சம்பாதித்துத் தருவோம். அப்போது நம்மை அவர் புரிந்து கொள்வார்.”

“போரில் தோற்று விட்டால்?”

“வீரர்களிடம் வார்த்தையில் கூட தோல்வி வரக் கூடாது.”

“உங்கள் பெருந்தன்மை என்ன? கோட்டைத் தலைவரின் சிறுமைதான் என்ன? ஐயா! இங்கே நடந்து வரும் விஷயங்கள்

உங்களுக்குத் தெரியாதா? இங்கே உள்ள இஸ்லாமியர்களை யெல்லாம் திரட்டி போர் பயிற்சி அளித்து இஸ்லாமியப் படையைத் தனியாக உருவாக்கி வருகிறார்."

"அது தவறு ஒன்றும் இல்லையே! அவரது மதத்தைச் சேர்ந்தவர்களை வீரர்களாக ஆக்குவதற்கு அவருக்கு உரிமையிருக்கிறது."

"இருக்கலாம். ஆனால் அவரது செய்கை நம் மீதான அவநம்பிக்கையான அடையாளம்" என்று சொன்ன வீரர்கள் மேலும் சில செய்திகளைச் சொல்லி விட்டு "சிங்கங்களை பகைவர் மீது ஏவி விடுவது முறையா? நியாயமா?" என்று கேட்டார்கள்.

"நாம் என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்?" என்று கேட்டான் பிருதாபத்திரன்.

சொன்னார்கள் வீரர்கள்.

அதே சமயத்தில் கோட்டைக்கு வெளியே "ஐயோ! ஐயோ!" என்று அலறும் சத்தம் கேட்டது.

கோட்டைக்குத் தெற்குப் புறத்தில் பாசறையில் இருந்த விட்டலராயன் "என்ன ஆயிற்று?" என்று கேட்டான்.

சிறிது நேரம் கழித்து அவனிடம் வந்த வீரர்கள் "மகாராஜா! நமது வீரர்கள் பலரைக் காட்டு மிருகங்கள் கடித்து விட்டன. தாக்கி விட்டன. அவர்கள் இறந்து விட்டார்கள்" என்றான்.

"நாம் இருப்பது காட்டுப் பகுதி. எச்சரிக்கையாக இருந்திருக்க வேண்டும். படையின் பின்புறத்தில் நிறைய பந்தங்களைக் கொளுத்துங்கள். பறைகளை அடியுங்கள். பொழுது விடியும் வரை விலங்குகள் மீண்டும் வராது" என்றான் விட்டலராயன்.

"இப்பகுதியில் வன விலங்குகள் இருப்பதாகத் தோன்றுகிறது மகாராஜா. சாதாரணமாகப் படைகள் இருக்கும் பக்கம் அவை வராது. இங்கே இயற்கைக்கு மாறாக அவை வந்ததும் தாக்கியதும் வியப்பாக இருக்கிறது."

"இருந்து விட்டுப் போகட்டும். கோட்டைத் தலைவனைச் சரணடையும் படி நாம் அனுப்பிய ஓலைக்குப் பதில் வரவில்லை. ஒருநாள் ஓடிவிட்டது. இனி காத்திருக்க வேண்டிய அவசியமில்லை. பொழுது விடிந்ததும் தாக்குதலைத் தொடங்க வேண்டியது தான்" என்றான் மன்னன்.

ஆனால் பொழுது விடிந்த போது கோட்டையிலிருந்து முரசுகள் ஒலித்தன. மதில் மீது வில்லும் அம்பும் ஏந்தியபடி தோன்றினார்கள் வீரர்கள்.

கோட்டையின் வடக்கு வாயிற்கதவு திறந்தது.

உள்ளேயிருந்து மாயா மட்டும் புரவி மீதேறி தனியாக வெளியே வந்தாள்.

விட்டலராயனின் பாசறையை நோக்கி வந்தாள்.

அவளது வரவு எல்லோருக்குமே புதிராக இருந்தாலும் பொறுமையாக இருந்தார்கள்.

மாயா பதற்றமடையாமல் நிதானமாக வந்து மன்னனின் பாசறைக்கு முன்னால் புரவியை நிறுத்தி கீழே இறங்கினாள்.

“மன்னன் யார்?” என்று கேட்டாள்.

“சொல்” என்றான் விட்டலராயன்.

“வணக்கம் மகாராஜா. கோட்டைத் தலைவர் தனது சார்பாக என்னை அனுப்பி வைத்தார். இந்தப் போர் தேவையற்றது என்று சொல்லச் சொன்னார். போரில் ஈடுபட்டால் கோட்டையில் உள்ள இந்துக்கள் ஒருவர் மீதியில்லாமல் கொல்லப்படுவார்கள் என்று கூறச் சொன்னார். இந்து மன்னராகிய தாங்கள் இந்துக்களை மதிப்பவராக இருந்தால் - இந்துக்களின் ரட்சகராக இருந்தால் - இந்துக்களின் மீது அன்பு கொண்டவராக இருந்தால் அவர்கள் உயிரைக் காக்க போரில் ஈடுபடாமல் திரும்பி விடும் படி வலியுறுத்தி அறிவிக்கச் சொன்னார்” என்றாள் அமைதியாக.

அவளது பிரவேசம் அமைதி தேவதை வந்தது போல் இருந்தது. அவளது பேச்சு அமிர்தவர்ஷங்களாக இருந்தது.

“நன்றி பெண்ணே! உன் வரவையும் வார்த்தைகளையும் கேட்டு உன்னைப் பாராட்டுகிறேன். கோட்டைத் தலைவருக்கு இந்துக்களின் மீது அபாரமான பாசமா?” என்று கேட்டான் விட்டலராயன்.

“மகாராஜா! நான் வெறும் அறிவிப்பாளி. தங்கள் கேள்வி களுக்குப் பதில் கூறுபவள் அல்ல. எனக்கு ஒப்படைக்கப்பட்ட பணி முடிந்து விட்டது. அதைத் தாண்டி எந்தப் பேச்சிலும் இறங்க மாட்டேன்” என்றாள் மாயா.

“நீ யார் என்பதையாவது சொல்வாயா?”

“அதைச் சொல்லும் அருகதையை இழந்து விட்டேன் மகாராஜா. நீங்கள் நீடூழி வாழ்க” என்று சொன்ன மாயா இமைக்கும் நேரத்தில் இடையில் இருந்த குறுவாளை எடுத்து நெஞ்சில் பாய்ச்சிக் கொண்டாள்.

கீழே விழுந்துச் சடலமானாள்.

விட்டலராயனுக்குப் பல விஷயங்கள் புரிந்தன. கோட்டைத் தலைவன் இந்துவல்ல என்பதைப் புரிந்து கொண்டான். உள்ளே இருக்கும் இந்துக்களைக் கொல்வதாக மிரட்டி தன்னை விரட்டப் பார்க்கிறான் என்பதைப் புரிந்து கொண்டான். இந்துக்களை அவன் விரும்ப வில்லை என்பதைப் புரிந்து கொண்டான். புரவிமீது வந்த பெண் அவனால் மிகவும் பாதிக்கப்பட்டிருக்க வேண்டும், மானபங்கப் பட்டிருக்க வேண்டும் என்றும், அதையெல்லாம் தன்னிடம் கூறுவதற்கு மனமில்லாமல் மிகவும் நொந்து போன நிலையில் தற்கொலை செய்து கொண்டாள் என்பதைப் புரிந்து கொண்டான். அவளைப் போல் பலர் பாதிக்கப்பட்டிருக்கலாம் என்றும் உள்ளே இந்துக்களும் இஸ்லாமியர்களும் இருக்க வேண்டும் என்றும், இஸ்லாமியர்களிடமிருந்து இந்துக்களைக் காக்க வேண்டியது தன் கடமை என்பதைப் புரிந்து கொண்டான். மொத்தத்தில் குடகுக் கோட்டை இஸ்லாமியர் கோட்டை என்பது தெளிவாகப் புரிந்தது.

“இந்தப் பெண்ணை இங்கேயே அடக்கம் செய்யுங்கள். இவள் இங்கே உள்ள இந்துக்களின் அடையாளம். இங்குள்ள இந்துக்கள் நிலைமைக்கு அடையாளம். தன் மானத்தின் அடையாளம். மரியாதைக்குரியவள்” என்றான் மன்னன்.

மாயாவின் சடலம் அங்கேயே அடக்கம் செய்யப்பட்டது.

அவள் கத்தியால் குத்திக் கொண்டு கீழே விழுந்ததைக் கண்டதும் மதில் மீதிருந்த வீரர்கள் முரசுகளை இருமுறை அடித்தார்கள். கோட்டைக் கதவு மூடப்பட்டது.

“என்ன செய்வது மகாராஜா? இந்தப் பெண் கூறியது உண்மை யாகத்தான் இருக்க வேண்டும். உள்ளே இருக்கும் இந்துக் களை கோட்டைத் தலைவன் கொல்லக் கூடிய குரூரமானவனாகத்தான் இருப்பான். நாம் போரிடுவதா? இந்துக்களைக் காப்பாற்றத் திரும்பி விடுவதா?” என்று கேட்டான் கங்கராஜன்.

“நாம் திரும்பி விட்டாலும் உள்ளே இருக்கும் கோட்டைத் தலைவன் இஸ்லாமியன் என்ற முறையில் இந்துக்களை படிப் படியாகக் கொல்லவே செய்வான். அவனையும் அவனது இஸ்லாமிய ஆட்சியையும் அகற்றினால்தான் இந்துக்கள் நிம்மதியாக இருக்க முடியும். முரசுகளைக் கொட்டித் தாக்குதலில் ஈடுபடுங்கள். தண்டுகளால் கோட்டைக் கதவைத் தாக்குங்கள்” என்றான்.

அதையடுத்து குடகுப் போர் தொடங்கியது.





குற்றங்கள் பல புரிந்திருந்தாலும் கடைசி காலத்தில் ஒருவனை அவனது தர்மமாவது காப்பாற்றும். தர்ம சிந்தனையே இல்லாதவனுக்கு மரணகாலத்தில் அவனது பலமும் திறமையும் அவனைக் கைவிட்டு விடும்.




கோட்டைத் தலைவனின் ஏற்பாடுகள் குறித்து வீரர்கள் தன்னிடம் விவரங்களைச் சொன்னதும் அதை உறுதி செய்து கொள்ள முற்பட்ட உபதலைவன் பிருதாபத்திரன் கோட்டைத் தலைவனிடமே விசாரித்தான்.

“ஆமாம். உண்மைதான். அதற்கென்ன இப்போது?” என்று முரட்டுத் தனமாகவே கேட்டான் கோட்டைத் தலைவன்.

“இது எதற்கு கோட்டைத் தலைவரே? இது உங்கள் பெயருக்கு இழுக்கு அல்லவா?” என்றான் பிருதாபத்திரன்.

“இழுக்காவது! அழுக்காவது! நமக்கு வெற்றி முக்கியம். வெற்றிக்கு எதெல்லாம் முக்கியமோ அதையெல்லாம் நான் செய்வேன். என்னைக் கேள்வி கேட்கும் அதிகப் பிரசங்கித் தனத்தை விட்டு விட்டு உங்கள் பணியைச் சிறப்பாகச் செய்யுங்கள். இந்தப் போரின் வெற்றி உங்களிடம் தான் இருக்கிறது. நான் தோல்வியைச் சந்திக்க நேர்ந்தால் உங்களை யெல்லாம் சும்மா விட மாட்டேன். அரபு நாட்டில் உள்ளச் சித்திரவதைகளைச் செய்து உங்களைக் கொல்வேன்” என்றான் கோட்டைத் தலைவன்.

அவனது பேச்சு அடாவடிப் பேச்சாக இருந்தது. அயோக்கியத் தனமாக இருந்தது. அநியாயமாக இருந்தது. அவமானமாகவும் இருந்தது. வீரர்கள் சொன்னது தான் சரி என்று முடிவு செய்து கொண்டான்.

மறுநாள் ஹொய்சளப் படைகள் மரத்தண்டுகளை வைத்து கோட்டைக் கதவுகளை இடித்தபோது பிருதாபத்திரனும் அவனது வீரர்களும் மதில் மீதிருந்தபடி அவர்கள் மீது அம்புகளைத் தொடுத்தார்கள். வேல்களை வீசினார்கள். ஈட்டிகளை வீசினார்கள். இஸ்மாயில் சொன்னபடி பெரும் கற்களை எறிந்தார்கள். கொதிக்கும் எண்ணெயை கவிழ்த்தார்கள். விற்பொறிகளும் இயங்கின. ஏறக்குறைய அம்பு மாரி பொழிந்தது ஹொய்சளப் படையை நோக்கி.

இந்தத் தாக்குதல் எதிர்பார்க்கக் கூடியதுதான் என்பதால் விட்டலராயன் அசரவில்லை. தனது படையின் முகப்பு வீரர்கள் பிருதாபத்திரனின் அம்பு மழையாலும், கல்மாரியினாலும், கொதிக்கும் எண்ணைத் தாக்குதலாலும் வீரமரணமடைய நேரிட்டாலும் கதவை உடைப்பதைத்தவிர வேறு வழியில்லை என்பதை உணர்ந்தவனாய் தாக்குதலை ஒரு புறம் தொடரவிட்டு மறுபுறம் மதில் மீதிருந்த வீரர்கள் மீது அம்புகளை எய்ய உத்தரவிட்டான்.

நாற்புறமும் இருதரப்பிலிருந்தும் அம்புமழைகள் தொடர்ந்தன. கோட்டை மீதான தாக்குதலை இஸ்மாயில் எதிர்பார்க்காத காரணத்தால் கதவுகளைப் புதுப்பிக்கவில்லை. எனவே ஹொய்சளர் தாக்குதலை அவை அதிக நேரத்திற்குத் தாக்குப் பிடிக்கவில்லை. கதவுகள் உடைந்தன நாற்புரத்திலும். ஹொய்சளப் படைகள் வாளை உயர்த்திக் கொண்டும் முழக்கம் செய்து கொண்டும் உள்ளே பிரவேசித்தன.

உள்ளே நுழைந்ததும் எதிர்பாராத தாக்குதலைக் கண்டார்கள். கோட்டை வாயில்களுக்கு உட்புறம் கூண்டுகளில் வைக்கப் பட்டிருந்த சிங்கங்கள் அவிழ்த்துவிடப்பட்டதால் அவை பெரிதாகச் சத்தமிட்ட படி வீரர்கள் மீது பாய்ந்தன. பலரைக் கடித்துக் குதறின. அவற்றின் தாக்குதல் எதிர்பாராததாக இருந்தாலும் வெள்ளம் போல் நுழைந்த படை வீரர்களில் சிலரை மட்டுமே அவைக் கடித்துக் குதறின.

“சிங்கங்களை வெட்டி வீழ்த்திவிட்டு முன்னேறுங்கள்” என்றான் விட்டலராயன்.

அதே சமயத்தில் மதில் மீதிருந்த பிருதாபத்திரனின் வீரர்கள் சிங்கங்களை நோக்கி அம்புகளை எய்ததால் அவை ஒவ்வொன்றாக அடிபட்டு விழலாயின. வீரர்கள் கீழே இறங்கி ஹொய்சளர் படையோடு மோதாமல் அவர்களுடன் சேர்ந்து கொண்டு விட்டலராயனை வாழ்த்தி கோஷமிட்டார்கள்.

இந்துப் படைகள் தனக்குத் துரோகம் செய்ய முற்பட்டு விட்டதை அறிந்தான் கோட்டைத் தலைவன். தனது அவ நம்பிக்கையும் அவதூறுகளும் தான் அவர்களின் மாற்றத்திற்குக் காரணம் என்பதை அவன் உணரவில்லை. இந்துக்கள் இந்துக்களோடு சேர்ந்து கொண்டதாகவே கருதினான்.

கோபாவேசத்திற்கு ஆளான அவன் இஸ்லாமியப் படையை ஆங்காங்கே தாக்கும்படி ஆணையிட்டான். அவ்வாறு ஆணையிடப்பட்ட இஸ்லாமியர்கள் அனைவரும் முகத்தை மறைக்கும் கறுப்புநிற பர்தாவை அணிந்திருந்தார்கள்.

உடம்பு தெரியாத அளவிற்கு முழுதுமாக பர்தா அணிவது இஸ்லாமியப் பெண்களின் வழக்கமாக இருந்த படியால் அவர்களை அந்த உடையில் கண்டதும் "அவர்கள் பெண்கள். தாக்காதீர்கள். பர்தா அணியாத வீரர்களை மட்டும் தாக்குங்கள்" என்றான் விட்டலராயன்.

அதன் காரணமாக ஹொய்சள வீரர்கள் ஒதுங்க முற்பட்ட போது பர்தா அணிந்த இஸ்லாமியர்கள் கண்ட படி தாக்கினார்கள். சிலர் விஷ திரவங்களை வீசினார்கள். முதுகுப் புறத்தில் வெட்டினார்கள். அவர்களது செய்கை சந்தேகத்தை அளித்தது விட்டலராயனுக்கு.

இதற்கிடையில் பிருதாபத்திரன் பர்தா அணிந்தவர்கள் எல்லோரும் பெண்கள் அல்ல என்றும் ஆடவர்களும் அந்த உடையணிந்து ஏமாற்றுகிறார்கள் என்று பெருங்குரல் எழுப்பவே கோபத்திற்கு ஆளான விட்டலராயன் "பர்தா அணிந்த எவரையும் விடாதீர்கள். ஆண் பெண் என்ற வித்தியாசம் இல்லாமல் வெட்டி வீழ்த்துங்கள்" என்று ஆணையிட்டான்.

அதையடுத்து ஹொய்சள வீரர்கள் புயலாக மாறினார்கள். அவர்களது வீரர்கள் அனைவரும் கோட்டைக்குள் நுழைந்து விட்டதாலும் அவர்களது எண்ணிக்கை அதிகமாக இருந்ததாலும் எதிர்பட்ட எதிரிகள் அனைவரும் வெட்டப் பட்டனர். பர்தாக்களை நீக்கி ஓட முற்பட்ட இஸ்லாமியப் பெண்களும் வெட்டப்பட்டார்கள்.

கோட்டைத் தலைவனுக்கு நிலைமை மோசமாவது தெரிந்தது. போரை நிறுத்தச் சொன்னால் ஒரு பயனும் இருக்க முடியாது என்பதை உணர்ந்த அவன் விட்டலராயனைத் தேடி வந்துப் போரிட்டான்.

கோட்டைத் தலைவனின் ஆர்ப்பாட்டமான வரவே அவனை அடையாளம் காட்டியது. தூதாக வந்த வந்த பெண் தற்கொலை செய்து கொண்டதிலிருந்து கோட்டைத் தலைவனைச் சந்திக்க முனைப்பாக இருந்தான் விட்டலராயன். போரில் வெற்றி பெற்றால் மட்டும் போதாது. கோட்டைத் தலைவனின் சிரத்தைக் கொய்ய வேண்டும் என்று தீர்மானித்த விட்டலராயன் சிங்கத்தைத் தேடி இரையே வருவது போல் இஸ்மாயில் வருவதாகக் கருதி அவன் மீது பாய்ந்து போரிடலானான்.

தூதுப் பெண் வந்ததிலிருந்து கோட்டைத்தலைவனைப் பற்றி விட்டலராயனிடம் எழுந்த ஊகங்கள் எல்லாம் அவனை அயோக்கியன் என்றே அடையாளம் காட்டியதால் அவன்

உயிரோடு இருப்பது எல்லோருக்கும் ஆபத்து என்று கருதி தனது வாளை வீசிப் போரிட்டான் மன்னன்.

மன்னனைக் கண்டபோது அசூயை பெருக்கெடுத்தது இஸ்மாயிலிடம். பிருதாபத்திரனின் படைகள் துரோகம் செய்யாமல் இருந்தாலும் கூட தனது தோல்வி நிச்சயம் என்பது தெரிந்திருந்தது அவனுக்கு. எதிரியின் படை எண்ணிக்கை அதிகம் என்பது ஒரு பக்கம். எதிரி கடந்த சில மாதங்களாகத் தொடர்ந்து எதிரிகளை வென்று வருகிறான் என்பது ஒரு பக்கம். எனவே அவனை எதிர்த்து வெற்றிபெற வாய்ப்பில்லை என்று கருதினாலும் இஸ்லாமியர் படையை உருவாக்கி அவர்களுக்கும் பர்தா அணிவித்து எதிரிகளை ஏமாற்ற முயன்றான். அவனது முயற்சிகளும் சூழ்ச்சிகளும் பயனளிக்க வில்லை என்று உணர்ந்த போது அவனது கோபம் முழுவதும் விட்டலராயன் மீது திரும்பின. தனது இஸ்லாமிய ஆட்சி என்னும் கனவைக் குலைக்க வந்த விட்டலராயனை மட்டுமாவது கொல்ல வேண்டும் என்று வெறியோடு அவனை எதிர்த்தான்.

இஸ்மாயில் நல்ல உடல்கட்டு கொண்டவன். அதோடு வாள் பயிற்சியில் சிறந்தவன். ஆனால் தற்போது அவை இரண்டுமே அவனுக்கு ஒத்துழைக்கவில்லை.

குற்றங்கள் பல புரிந்திருந்தாலும் கடைசி காலத்தில் ஒருவனை அவனது தர்மமாவது காப்பாற்றும். தர்ம சிந்தனையே இல்லாதவனுக்கு மரணகாலத்தில் அவனது பலமும் திறமையும் அவனைக் கைவிட்டு விடும்.

அதுதான் நேர்ந்தது கோட்டைத் தலைவனுக்கு. வாள் வீச்சில் வல்ல அவனால் தற்போது விட்டலராயனின் வாள் வீச்சைச் சந்திக்க முடியவில்லை. விட்டலராயனின் வாளேந்திய கையை வெட்டி வீசும் நோக்கில் சற்றே குனிந்து தனது பட்டையான வாளை வீசியபோது விட்டலராயனின் வலது கை சுண்டு விரல் வெட்டுப்பட்டது. இஸ்மாயிலின் நோக்கத்தை உணர்ந்து கொண்ட விட்டலராயன் தனது நீண்டவாளை மின்னலைப் போல் வீசியதால் கோட்டைத் தலைவனின் தலை அறுபட்டு பூமியில் விழுந்து துடித்தது.

வெற்றி முழக்கங்கள் எழுந்து கோட்டைச் சுவர்களையும் மலை உச்சிகளையும் அதிர வைத்தன.

விட்டலராயன் ஒரு வாரம் கோட்டையில் இருந்தான். மற்ற எல்லாப் போர்களை விட இப்போரில் மாண்டு போன வீரர்களின் எண்ணிக்கை அதிகமாக இருந்ததால் சடலங்களை

அகற்றி கோட்டைக்கு வெளியே கொண்டு போய் தகனம் செய்து விட்டு கோட்டையைச் சுத்தப்படுத்த ஒரு வார காலம் ஆயிற்று.

குடகு நாட்டு மக்கள் மன்னனைச் சந்தித்து கோட்டைத் தலைவனின் நடவடிக்கைகளைப் பற்றியெல்லாம் சொன்னார்கள். எல்லோரும் ஒரு வித பயத்துடனேயே அவனிடம் வாழ்ந்ததாகக் கூறினார்கள். அவன் மாண்ட பிறகு தான் தங்களுக்கு நிம்மதி வந்ததாகத் தெரிவித்த அவர்களுக்கு விட்டலராயனின் வெற்றி மகிழ்ச்சியளிப்பதாகக் கூறி அவனை வாழ்த்தினார்கள்.

உபதலைவன் பிருதாபத்திரன் வந்து தனது நிலைப்பாடு குறித்து விளக்கினான். கோட்டைத் தலைவன் தங்களை நம்பவில்லை என்றான். மதிக்கவில்லை என்றான். அவமானப் படுத்தினான் என்றான். அவனது சதிகளைப் பற்றி விவரித்தான். இந்துக்களைப் படிப்படியாக மதம் மாற்றம் செய்ய உத்தேசித்ததாகவும் சொன்னான்.

போரில் விட்டலராயனின் வலது கையில் சுண்டு விரலானது மூன்றில் ஒரு பங்கு வெட்டுப் பட்டிருந்தது.

"தங்களுக்கு திருஷ்டி கழிந்தது மகாராஜா" என்றான் கங்கராஜன்.

குடகு நாட்டை தன் சார்பிலும் த்ன் ஆதிக்கத்திலும் ஆட்சி செய்யக் கூடியவன் பிருதாபத்திரன்தான் என்பதை அறிந்த விட்டலராயன் அவனையே அங்கு தன் பிரதிநிதியாக நியமித்தான்.

கங்கராஜனை அழைத்து "கங்கராஜா! நாம் வேலாபுரத்திற்குத் திரும்பும் மார்க்கமாக பங்காபுரிக்குச் செல்கிறோம். அங்கே தளம் அமைத்து படையைச் சீர்படுத்துவோம். பிறகு அங்கிருந்து - அதாவது நுளம்பவாடிக்கும் பங்காபுரிக்கும் இடையே ஹலாஜிக் கோட்டை மட்டும் சாளுக்கியர் தரப்பு கோட்டையாகத் தனித்து நிற்கிறது. எனவே அங்கு சென்று அதை வென்று விட்டு வேலாபுரிக்குச் செல்வோம்" என்று சொல்லி விட்டு "இந்தக் குடகு நாட்டுப் போரில் நமது வீரர்கள் அதிகமாக வீரமரணமடைந்திருக்கிறார்கள். பிற போர்களில் மாண்டவர்களும் இருப்பார்கள். மொத்தத்தில் தற்போது நம்மிடம் உள்ள படை எண்ணிக்கை எவ்வளவு?" என்று கேட்டான்.

"மகாராஜா! அனைத்துப் போர்களிலுமாகச் சேர்த்து நமது வீரர்களில் எட்டாயிரம் பேர் வீரமரணமடைந்து விட்டார்கள். மற்றவர்களில் ஆயிரம் பேர் அங்கஹீனர்களாகி விட்டார்கள்.

அவர்கள் செயல்பட முடியாது. மற்றும் ஆயிரம் வீரர்களைக் காணவில்லை. ஆகவே நம்மிடம் தற்போது இருப்பது பத்தாயிரம் வீரர்கள் தான்" என்றான் கங்கராஜன்.

"வேலாபுரத்தில் நாம் பயிற்சி அளித்த இளைஞர்கள் பத்தாயிரம் பேர் இருக்கிறார்கள். சேனாதிபதி பகூசூரர் அனுப்பி வைத்த பத்தாயிரம் வீரர்கள் விகர்ணன் தலைமையில் ஆலுபர் கோட்டையில் இருக்கிறார்கள். என் மகன் நரசிம்மன் இருக்கும் துவார சமுத்திரத்தில் இருபதாயிரம் வீரர்கள் இருக்கிறார்கள். இந்தக் கணக்கு சரிதானா?" என்று கேட்டான் மன்னன்.

"சரிதான் மகாராஜா" என்றான் கங்கராஜன்.

அதையடுத்து ஒரு நாள் குடகுக் கோட்டையிலேயே மன்னன் தங்கியிருந்த போது வேலாபுரத்திலிருந்து சேனாதிபதி செய்தியனுப்பியிருந்தார்.

"மகாராஜா! நான் ஏற்கனவே கூறியிருந்த படி நுளம்பவாடி மண்டலத்தையடுத்து குவலாலபுரத்தையும் நங்கிலியையும் கைப்பற்றி ஹொய்சளர் ஆதிக்கத்திற்குக் கொண்டு வந்து விட்டேன். அவற்றை ஆண்ட அரசர்களின் மணி மகுடங்களைத் தங்கள் காலடியில் சமர்ப்பிக்கக் காத்திருக்கிறேன். தாங்கள் கூறியபடி ஹொய்சளரது தலைநகரை வேலாபுரத்திலிருந்து (பேளூர்) துவாரசமுத்திரத்திற்கு (ஹளபீடு) மாற்றிவிட்டேன். புதிய தலைநகர் கோட்டை பாதுகாப்புடன் புத்துயிர் பெற்று தங்கள் வருகைக்காக காத்திருக்கிறது.

மேற்கண்டச் செய்திகளால் தாங்கள் மகிழ முடியாத அளவிற்கு சோகமானச் சம்பவம் ஒன்று நிகழ்ந்திருக்கிறது. தாங்கள் திருப்புதல்வரும் இளவரசருமான நரசிம்மர் தற்போது சாளுக்கியர் தலைநகர் கல்யாணபுரத்தில் இருக்கிறார். தானாக அங்கு சென்றாரா அல்லது சாளுக்கியர்கள் அவரைக் கடத்தியிருக்கிறார்களா என்பது தெரியவில்லை. நிலைமையை அறியவும் இளவரசரை மீட்கவும் எனது அந்தரங்க ஊழியனை அனுப்பியிருக்கிறேன். இளவரசரைப் பாதுகாக்காமல் விட்டது என் குற்றம் தான். அருள் கூர்ந்து மன்னிக்க வேண்டும்" என்று எழுதியிருந்தார் சேனாதிபதி பகாசூரர்.

"நாம் இப்போது என்ன செய்வது மகாராஜா? படைகளுடன் கல்யாணபுரத்தை நோக்கிச் செல்லலாமா?" என்று கேட்டான் கங்கராஜன்.

"கங்கராஜா! எனது லட்சியம் என் மகனைப் பாதுகாத்து உயர்த்துவது அல்ல. ஹொய்சள சாம்ராஜ்யத்தை உருவாக்கும்

காரியமானது எனக்கு ஒரு தவத்தைப் போன்றது. அத்தவத்தைக் கலைத்து விட்டு அந்த வீணாய்ப் போன இளவரசனுக்காக நான் அலைய முடியாது. ஒரு விதத்தில் அவன் சாளுக்கிய நாட்டிற்குப் போய் விட்டது நல்லதுதான். அங்கேயே அவன் சமாதியாகட்டும்'' என்று சீறினான் மன்னன்.

“மகாராஜா! நீங்கள் அவ்வாறு பேசலாகாது. இளவரசர் நரசிம்மர் உங்களது ஒரே வாரிசு. அதை இழந்து விட்டு தாங்கள் சாம்ராஜ்யத்தை உருவாக்கி என்ன பயன்?''

“வாரிசு வாரிசு என்கிறாயே! இவனா வாரிசு? சிங்கத்தின் வாரிசு சிங்கமாக இருக்க வேண்டும். சிறுத்தையாக இருந்தாலும் பரவாயில்லை. குறைந்த பட்சம் சீறிக் கொண்டிருந்தால் குரலிலாவது கம்பீரம் இருக்கிறது என்று கருதலாம். நரசிம்மன் ஒரு எலி. சுண்டெலி. அவன் என் வாரிசே அல்லன். என் மகனுமல்லன். அவன் எனக்குப் பின் அரியணையில் ஏறத் தகுதியற்றவன். அரியணையின் மீது எலிகள் ஏறி அமர்வதை விடச் சாவதே மேல். கங்கராஜா! அவனைப் பற்றிய கவலையை விடு. சேனாதிபதி பகாசூரருக்கு ஓலை எழுது. அவர் மீது ஒரு தவறுமில்லை. குற்றவுணர்ச்சியோடு இருக்க வேண்டாம் என்று எழுது. நான் ஹலேகி போரை முடித்துக் கொண்டு துவார சமுத்திரத்திற்கு வருவதாக எழுது. அவரும் நரசிம்மனைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்று எழுது'' என்றான் மன்னன்.

அவனது குரலில் உறுதியிருந்தது. அறிவுரை எதையும் கேட்கும் நிலையில் இல்லை. கங்கராஜன் தன் மன்னனின் நிலையைக் கண்டு வருந்தினான். எற்கனவே மன்னன் மகள் தர்மதேவி மனநிலை சரியில்லாமல் ஓராண்டிற்கும் மேலாக அவதிப்பட்டுக் கொண்டிருக்கும் நிலையில் மன்னனின் மகனும் சிக்கி விட்டது மன்னனுக்கு எத்தனை வேதனையை உண்டாக்கியிருக்கும் என்று கண்ணிக் கவலைப்பட்டான்.

அதே சமயம் மன்னனின் கட்டளையை உடனடியாக நிறைவேற்றினான்.

ஹொய்சளப் படை பங்காபுரியை நோக்கிப் புறப்பட்டது.



கல்யாண புரம்.

சாளுக்கியர்களின் மகத்தான தலைநகரம்.

ஆதியில் சாளுக்கியர்கள் வாதாபியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டார்கள்.

அவர்களது வலிமை குறைந்த போது வடக்கே இருந்த ராஷ்டிர கூடர்கள் வலிமையைப் பெற்றதால் அவர்களது ராஜ்யம் மேகம் மூடிய நிலவைப் போல் தற்காலிகமாக மறைந்தது.

பல ஆண்டுகளுக்குப் பிறகு சக்கரம் சுழன்றது. ராஷ்டிர கூடர்கள் வலிமையை இழந்தார்கள். மேகத்தை விட்டு விலகியச் சந்திரனைப் போல் சாளுக்கியர்கள் மீண்டும் கிளர்ந்தெழுந்தார்கள்.

அவர்கள் தனது கல்யாணபுரத்தை புதுத் தலைநகரமாக அமைத்துக் கொண்டார்கள். அவர்கள் புத்துயிர் பெற்ற அதே நேரத்தில் தெற்கே சோழர்கள் என்றைக்கும் இல்லாத எழுச்சியைக் கண்டார்கள். ராஜ ராஜ சோழன் முதலாக அடுத்தடுத்து வந்தவர்களெல்லாம் மாமன்னர்களாக விளங்கி சாளுக்கியர்களுடன் இடைவிடாமல் போர்களை நடத்தினார்கள். சாளுக்கிய நாடுகள் பல சேதாரங்களைச் சந்தித்தன. சாளுக்கிய மன்னர்களும் அடுத்தடுத்து சோழர்களிடம் தோற்றார்கள். அவமானப்பட்டார்கள்.

ஆனால் கீழே விழுவது மீண்டும் மேலே எழுவதற்காகத்தான் என்பதை நிரூபிப்பது போல் சாளுக்கியர்கள் மீண்டும் மீண்டும் முளைத்துச் சோழர்களைப் போர்களில் சந்தித்தார்கள்.

இக்கதை நிகழ்ந்த காலத்தில் சோழ மன்னனான முதலாம் குலோத்துங்கன் சாளுக்கியர்களுடனான போர்களுக்குச் சற்று ஓய்வு கொடுத்தான் பிற நாடுகளுடன் போரிடுவதற்காக. சாளுக்கிய மன்னனான விக்கிரமாதித்தன் இடைவிடாத போர்களில் ஈடுபட்டு வெற்றிகளையும் தோல்விகளையும் மாறி மாறிச் சந்தித்து சோர்ந்து போனான்.

சீறும்வரைதான் சிங்கம். படுத்து விட்டால் வெறும் சின்னம். பாயும் வரை தான் புலி. ஓய்ந்து விட்டால் எலி. அந்த நிலைதான் சாளுக்கிய விக்கிரமாதித்தனுக்கு நேர்ந்தது.

சோர்ந்து போனதோடு நோயிலும் வீழ்ந்து விட்டதால் அவனால் சோழர்கள் மீதும் போர் தொடுக்க முடியவில்லை. தனது ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு தனி சாம்ராஜ்யம் அமைக்க முயன்ற ஹொய்சள மன்னன் மீதும் நடவடிக்கை எடுக்க முடியவில்லை. பெயருக்கென்று எடுத்த ஒரு சில நடவடிக்கைகள் விழலுக்கு இரைத்த நீராகிப் போயிற்று.

சாளுக்கிய மன்னனின் புதல்வனும் இளவரசனுமான சோமேஸ்வரன் வேங்கி நாட்டில் இருந்தான். அங்கே அவனது இருப்பு அத்தியாவசியமாக இருந்தது.

இதன் காரணமாக கல்யாணபுரம் கலகலத்துப் போனது.

அந்த நேரத்தில் போரமைச்சராக இருந்த புஷ்கலர் விக்கிரமாதித்தனுக்கு உதவும் கரமாக இருந்து நிர்வாகத்தை கவனித்து வந்தார்.

விக்கிரமாதித்தன் இனி எழுந்து நடமாடி ஆட்சியை நடத்த மாட்டான் என்பது திட்டவட்டமாக அறிந்த பின்பு போரமைச்சர் உதவும் கரம் என்ற நிலையிலிருந்து உயர்த்திக் கொண்டு தன்னை நிர்வாகத் தலைமையாக மாற்றிக் கொண்டார்.

அனைத்து விஷயங்களும் தனது ஆணை மூலமாக நடக்க வேண்டும் என்றும் அனைவரும் தனது ஆணைப்படியே நடக்க வேண்டும் என்றும் அதிரடியாக அறிவித்தார். அதற்கு விக்கிரமாதித்தனே அனுமதித்திருப்பதாக ஒரு பொய்யோலையைக் காட்டி அனைவரையும் அடக்கினார்.

அனைவரும் அடங்கியதால் அவரது அட்டகாசங்கள் அதிகரித்தன.

மன்னன் காட்டிய அதிகாரங்களை விட அதிக அதிகாரங் களைக் காட்டி அனைவரையும் அச்சப்பட வைத்தார். அவரைப் பற்றி அவதூறு பேச முற்படுபவர்களின் நாக்கை உடனடியாக அறுக்க முற்பட்டதால் அவரைப் பற்றிப் பேசுவதற்காக மக்கள் அஞ்சினார்கள்.

இந்த நிலையில் வேங்கி நாட்டிலிருந்து புயலைப் போல புறப்பட்டு வந்தான் இளவரசன் சோமேஸ்வரன்.

"எங்கே போரமைச்சர்?" என்று சீறவும் செய்தான்.





நேர்மைக்கு இருக்கும் துணிவு நேர்மையின்மைக்கு இல்லை. அது பிற தீயவைகளையும் அடா வடித்தனங்களையும் துணைக்கு அழைத்துக் கொண்டுதான் பயணம் செய்யும்.




கல்யாணபுரத்திற்கு இளவரசன் சோமேஸ்வரன் வந்தது நிறைய பேர்களுக்கு ஆறுதலாக இருந்தது.

வந்தவன் புயல் போல வந்ததால் போரமைச்சர் என்னும் பெருமரத்தை வீழ்த்தி விடுவான் என்று நினைத்தார்கள்.

போரமைச்சரைப் பார்த்து "இங்கே என்ன நடக்கிறது?" என்று தோரணையுடன் கேட்டான் சோமேஸ்வரன்.

"என்ன நடக்க வேண்டுமோ அது நடக்கிறது" என்றார் போரமைச்சர் அமைதியாக.

"அதிகாரம் கொடி கட்டிப் பறக்கிறதாமே?" என்று அஸ்திரம் தொடுப்பது போல் கேட்டான் சோமேஸ்வரன்.

"அதிகாரமானது கொடி கட்டித்தான் பறக்கும்! அடி அறுந்தா விழுந்து கிடக்கும்?" என்று கேட்டார் போரமைச்சர்.

"எல்லோரும் உங்களுக்குக் கட்டுப்பட வேண்டும் என்கிறீர்களாமே?"

"எனக்கல்ல. அரசாணைகளுக்குக் கட்டுப்பட வேண்டும் என்று சொல்கிறேன். நீங்கள் இருந்தாலும் அப்படித்தான் சொல்ல வேண்டியிருக்கும்."

"எனது தந்தை எப்படி இருக்கிறார்?"

"அவரை இன்னும் சந்திக்கவே இல்லையா? அதற்குள் என்னிடம் என்ன விசாரணை வேண்டியிருக்கிறது?

"வாருங்கள் போவோம். சக்கிரவர்த்தியைக் காண்போம்."

சாளுக்கிய சக்கிரவர்த்தியான வீர விக்கிரமாதித்தன் படுக்கையில் இருந்தாலும் வீரக்களையோடு இருந்தான்.

வீரமானது வயதால் அழிவதில்லை. வெற்றி கிடைக்காமல் போனால் அழிவதில்லை. மரணித்தால் கூட அதற்குப் பெயர் வீரமரணம். ஆகவே அது காலம் கடந்தும் அழியாமல் போகக் கூடியவதாகவே இருக்கும்.

தனது தந்தை ஆகவ மல்லனைப் போல தன் வாழ்நாள் முழுவதும் வீரப் போர்களிலேயே கழித்தவன் விக்கிரமாதித்தன். போரில்லாத நாள் அவனுக்கு வீணான நாள். வாளை எடுத்து வீசவில்லை என்றால் வாள் எதற்கு என்று கேட்கக் கூடியவன் அவன்.

அவன் வித்தகனும் கூட.

சோழ நாட்டில் வீரராஜேந்திரர் மரணமடைந்த போது அவரது மகன் அதிராஜேந்திரன் முடிசூட முடியாமல் குழப்பங்கள் ஏற்பட்டன. அப்போது விக்கிரமாதித்தன் சோழநாடு சென்று குழப்பங்களையும் எதிர்ப்புகளையும் அகற்றி அதிராஜேந்திரனை அரியணையில் அமர்த்தினான் என்று அவனது அவைக்களப் புலவரான பில்ஹணர் விக்கிரமாங்கதேவ சரிதத்தில் கூறியுள்ளார்.

அந்த வகையில் திறமைகளின் தொகுப்பாக விளங்கிய விக்கிரமாதித்தனின் ஆதிக்க ஆட்சி அவனது வயோதிகம் காரணமாக அடங்கியது, முடங்கியது.

நடந்தால்தான் சிங்கம். படுத்து விட்டால் மற்றதெல்லாம் சிங்கம்.

விக்கிரமாதித்தன் என்ற சிங்கம் காலத்தின் கட்டாயத்தில் ஓய்வெடுத்தது. ஓயாமல் உழைப்பவன் ஓய்ந்து போனால் அவனை நோயும் தாக்கும். நோயும் நொடியும் விக்கிரமாதித்தனை வந்தடைந்து மரண காலத்திற்கு வரவேற்புரை நல்கிக் கொண்டிருந்தன.

சோமேஸ்வரனைக் கண்டதும் படுக்கையிலிருந்து எழ முற்பட்டான் விக்கிரமாதித்தன். ஆனால் முடியவில்லை.

வயோதிகத்தின் கொடுமை இயலாமல் போவதுதான். நினைவுகளில் வீரியம் இருந்தாலும் சரீரத்தில் சேதாரமே மிஞ்சுவதால் காரியம் கைகூடுவதில்லை.

போரமைச்சர் பேச முற்பட்டு "சக்கிரவர்த்தி! தங்கள் புதல்வர் வந்து விட்டார். கல்யாண புரத்தைக் கட்டிக் காப்பார். நான் வேங்கி நாட்டிற்குச் செல்கிறேன்" என்றார்.

"நீங்கள் ஏன் போக வேண்டும்?" என்று கேட்டான் விக்கிரமாதித்தன்.

"பெருமானே! சோழர் படைகள் விக்கிரம சோழனின் தலைமையில் தென் கலிங்கத்தை நோக்கிப் புறப்பட்டு விட்டதாகச் செய்திகள் வந்துள்ளன. கலிங்கத்திற்குப் போக வேண்டுமென்றால் வேங்கியைத் தாண்ட வேண்டும். வேண்டாதவர்கள் வந்தால்

தாண்ட மாட்டார்கள். நோண்டி விடுவார்கள். வேங்கி நாடு நம் கையை விட்டுப் போய் விடும். அதைக் காப்பாற்ற நான் சென்றால் தான் உண்டு" என்றார் போரமைச்சர்.

"போரமைச்சரே! வேங்கி நாடு நம் கையை விட்டுப் போனாலும் பரவாயில்லை. கல்யாணபுரம் அப்படிப் போய் விடக் கூடாது. அதைக் காப்பாற்ற தங்களால் மட்டுமே முடியும். ஆகவே நீங்கள் இங்கே இருங்கள். சோமேஸ்வரன் வேங்கிற்குத் திரும்பட்டும். அங்கு அவன் நீண்ட காலமாக இருந்து வருவது நமக்குச் சாதகமான விஷயம்" என்றான் விக்கிரமாதித்தன்.

"தந்தையே! தாங்கள் இருக்கும் நிலையில் நான் இங்கே அல்லவா இருக்க வேண்டும்?" என்று கேட்டான் சோமேஸ்வரன்.

"நான் படுக்கையில்தான் இருக்கிறேன் சோமேஸ்வரா. போய்ச் சேர்ந்து விட வில்லை. உயிரோடு இருக்கும் வரை நான் சக்கிரவர்த்தி தான். கவலைப்படாதே. நீ வேங்கி நாட்டிற்கு செல். சோழர் படை வந்தால் போரிட வேண்டும் என்று அவசியமில்லை. சமாதானம் செய்து கொள். கலிங்கத்தில் போரை வைத்துக் கொண்டு அவர்கள் உன்னோடு போரிட மாட்டார்கள். சமாதானத்தையே விரும்புவார்கள்."

"சரி தந்தையே."

"தாயைச் சந்தித்து விட்டுச் செல்."

"ஆகட்டும் தந்தையே."

இரண்டு நாட்கள் கழித்து சோமேஸ்வரன் கல்யாண புரத்தை விட்டுப் புறப்பட்டான்.

மக்களுக்கு ஏமாற்றமாக இருந்தது.

கடலில் பயங்கரமாக உண்டான புயல் கரைக்கு வருவதற்கு முன்பே காணாமல் போய்விட்ட மாதிரி இருந்தது சோமேஸ்வரனின் வரவும் போக்கும்.

அவன் சென்று விட்டபின் தனது அந்தரங்கப் பணியாளர்களை அழைத்து "என்னைப் பற்றி சோமேஸ்வரனுக்குப் புகார் அனுப்பியது யார்?" என்று வினவினார்.

"அமாத்யர் தான் ஐயா!"

"அமாத்யர்! அமைச்சருக்கு இதெல்லாம் கூடத் தெரியுமா? எனக்கில்லாத அக்கறையா அவருக்கு இருக்கிறது? என்னை எதிர்த்து அரசியல் செய்யவோ ஆதிக்கம் புரியவோ ஒருவரும் இல்லை என்று நினைத்தால் இந்த அமாத்யன் எப்படி

முளைத்தான்? இந்த எதிர்ப்பு ஆபத்தானது. இதை உடனடியாகக் களையாவிட்டால் இதற்குக் கிளைகள் உருவாகும். பெரிய விருட்சமாகி விடும். வெட்ட முடியாமல் போகும். இந்த அமாத்யனுக்கு அளிக்கும் தண்டனை இனி ஒருவனுக்கும் புகார் செய்யும் தைரியத்தைத் தரக் கூடாது" என்று கருதிய போரமைச்சர் தன் பணியாளனிடம் ஏதோ ரகசியமாகக் கூறிவிட்டு அமாத்யரைச் சந்தித்தார்.

"வந்தனம் அமாத்யரே! உண்மை விரும்பி நீங்கள். பொய்யை விரும்பாதவர் நீங்கள். பொய்யை விளம்பாதவர் நீங்கள். இந்த நாட்டிற்காக நீங்கள் ஆற்றிய சேவைகளை அளக்க முடியாது. அழிக்க முடியாது. இந்த நாட்டின் மேன்மைக்காகவே வாழ்பவர் நீங்கள். நீ போய் விட்டால் உங்களைப் போல ஒருவர் பிறந்தால்தான் உண்டு. உங்களை நினைத்து இறும்பூது எய்துகிறேன். இமைக்க முடியாமல் வியக்கிறேன். அயர்ந்து நிற்கிறேன்" என்றார்.

"அனைத்தும் உங்களையே சேரும். நான் சாதாரணமானவன். ஊழியன்" என்றார் அமாத்யர்.

"அதனால்தான் சோமேஸ்வரனுக்குப் புகார் அனுப்பினீர்களா?"

"அனுப்பியது நான்தான்."

"ஏன்?"

"என்னிடம் பலர் புகார் சொல்லி குறைபட்டுக்கொண்டார்கள். சிலர் வேதனையைத் தெரிவித்தார்கள். சிலர் அழுதார்கள்."

"அப்புறம்?"

"நானே கூட சிலவற்றைக் கவனித்தேன்."

"என்ன கவனித்தீர்கள்?"

"நீங்கள் உங்கள் அதிகார வரம்பை மீறிச் சர்வாதிகாரம் புரிவதை."

"அப்படியே இருக்கட்டும். என்மீது பிழை என்றால் நீங்கள் புகார் செய்ய வேண்டியது சக்கிரவர்த்தியிடம்தான். சோமேஸ்வரனிடம் அல்ல."

"சக்கிரவர்த்தி புகார்களை கவனித்து விசாரிக்கும் நிலையில் இல்லை. பயனில்லாத இடங்களில் முயற்சிப்பதை விட முயற்சி செய்யாமல் இருந்து விடுவதே நல்லது. இருப்பினும் நாளைக்கு அரியணையில் அமரப் போகிற இளவரசனிடம் தெரிவிப்பதே உகந்தது என்று புகார் செய்தேன்."

"அமாத்யரே! நான் அதிகார வரம்பை மீறவில்லை. சர்வாதிகாரம் செய்யவில்லை. என் நடவடிக்கை அனைத்தும் ஆரசாணைப்படியே இருக்கின்றன. எனக்கு சக்கிரவர்த்தி வழங்கிய அதிகார ஓலையை உங்களுக்கும் மற்றவர்களுக்கும் காட்டினேனே மறந்து விட்டீர்களா?"

"அது பொய்யோலை என்பது தெரிந்து விட்டது."

"எந்த ஆதாரத்தில் இப்படி சொல்கிறீர்கள்?"

"பொய்யோலை எது மெய்யோலை எது என்பது எனக்குத் தெரியும்."

"நான் மெய்யான ஓலையைக் கொடுத்தால் அது பொய் யோலை என்று நீங்கள் கூறுவது உங்களுக்கு என் மீது இருக்கும் பொறாமையால் தான். உங்கள் இடத்தை நான் பிடித்து விட்டேன் என்ற ஆத்திரம். நீங்கள் காட்ட வேண்டிய அதிகாரத்தை நான் காட்டுகிறேன் என்ற காழ்ப்புணர்ச்சி. பதவி வெறி."

"எனக்கு வெறியும் இல்லை. விவகாரமும் இல்லை. பதவியை வேண்டாம் என்று தான் சொல்லி வருகிறேனே தவிர இல்லாத பதவிக்காகவும் அதிகாரத்திற்காகவும் நான் அலைந்து திரியவில்லை. நீங்கள் போரமைச்சர். போர்களுக்கான ஆலோசனைகளைக் கூறுவதுதான் உங்கள் அதிகார வரம்பு. அதை மீறி நிர்வாக அதிகாரங்களையும் பெற பேராசைப் பட்டீர்கள். பொய்யோலை தயாரித்து நினைத்தபடியே நிர்வாகத்தைக் கைப்பற்றி விட்டீர்கள். முறையற்றவற்றைச் செய்து விட்டு என்மீது குறை சொல்கிறீர்கள்."

"அமாத்யரே! கைப்பற்றி விட்டேன் கைப்பற்றி விட்டேன் என்கிறீர்களே! அதெல்லாம் எதற்கு? நாட்டிற்காகத்தானே?"

"இல்லை என்பது உங்கள் நடவடிக்கைகளில் புரிந்து விட்டது. உங்களுக்குள் உண்டாகியிருப்பது தீய எண்ணம். நாட்டின் மேன்மைக்காக நீங்கள் நிர்வாகத்தைக் கைப்பற்ற வில்லை. நாட்டைப் பற்றிய உண்மையான கவலை இருந்திருந்தால் இளவரசரை அழைத்து நிர்வாகத்தை அளித்து விட்டுப் போரமைச்சரான நீங்கள் வேங்கி நாட்டிற்குப் போய் போர்க் காரியங்களை மேற்கொண்டிருக்க வேண்டும்."

"அமாத்யரே! இதைத்தான் சோமேஸ்வரனை வைத்துக் கொண்டு சக்கிரவர்த்தியிடம் கூறினேன். அவர் ஏற்க வில்லை. சோமேஸ்வரன் வேங்கி நாட்டிற்கு அனுப்பி விட்டார். எனக்கு கல்யாணபுரத்தைக் காக்கும் பொறுப்பைக் கொடுத்து விட்டார்."

"உங்களைப் பால் என்று நினைத்து விட்டார். நீங்கள் பாலில்லை. விஷம். உங்களைப் பசுவென்று நினைத்து விட்டார். ஆனால் நீங்கள் புலி. உங்களைக் கயிறு என்று நினைத்து விட்டார். ஆனால் நீங்கள் பாம்பு. போரமைச்சரே! தவறு செய்வது இயல்பு. ஆசைப்படுவதும் இயல்பு. ஆனால் துரோகம் செய்வது இயல்பு அல்ல. அயல்பு. அதை நீங்கள் செய்ய வேண்டாம்."

"நான் என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்?"

"போரமைச்சராக இருங்கள். போதும்."

"நிர்வாகத்தை யார் கவனிப்பது? தாங்களா?"

"இல்லை. இளவரசரே அதற்கு ஏற்றவர்."

"அதுதான் இல்லை என்றாகி விட்டதே! இல்லாததை ஏன் தேடுகிறீர்கள்?"

"இல்லாததைத் தேடுவது நீங்கள்தான். நானல்ல. நான் வேண்டுமானால் சக்கிரவர்த்தியைச் சந்தித்துப் பேசுகிறேன்."

"அப்படியா? உங்களுக்குத்தான் எத்தனை ஆர்வம்? இன்னொருவனின் மகிழ்ச்சியைக் கெடுப்பதில் பரமானந்தம் கொள்வதில் உங்களுக்கு நிகர் நீங்கள்தான். உங்கள் ஆர்வத்தை நான் கெடுப்பானேன்? நாளைக்குச் சந்தித்துப் பேசுங்கள்" என்று கூறிவிட்டு வெளியேறினார் போரமைச்சர்.

சகல அதிகாரங்களையும் கைப்பற்றி மன்னனைப் போலவே செயல்பட்டு அதோடு சர்வாதிகார அடக்கு முறைகளை கையாண்ட போதும் அதற்கெல்லாம் அஞ்சாமல் தனது அதர்மங்களைத் துணிவோடு அமாத்யர் கூறியதும் தனக்கு அறிவுரை கூறியதும் போரமைச்சரை அசர வைத்தது. போர்க் காலங்களில் தான் கையாண்ட அநீதிகளின் போதெல்லாம் வராத அச்சம் சாதாரண அமைச்சரைக் கண்டு துளிர் விடுவதை உணர்ந்து வியந்தார்.

நேர்மைக்கு இருக்கும் துணிவு நேர்மையின்மைக்கு இல்லை. அது பிற தீயவைகளையும் அடாவடித்தனங்களையும் துணைக்கு அழைத்துக் கொண்டுதான் பயணம் செய்யும்.

அதை உணர்ந்த போரமைச்சர் தான் திட்டமிட்டிருந்த காரியத்தை நிறைவேற்ற ஆயத்தமானார். அதை நிறை வேற்றினால் அமாத்யரால் சக்கிரவர்த்தியிடம் சென்று பேசுவதற்குக் கூட இயலாமல் போய் விடும் என்று கருதினார்.

அதோடு அயோக்கியத்தனத்தை ஆரம்பித்த போதே ராஜ வைத்தியர்களை வளைத்துப் போட்டிருந்தார்

போரமைச்சர். தேவை வருமானால் அந்த வைத்தியர்கள் மூலம் விக்கிரமாதித்தனை பேசவிடாமல் தொண்டையை கெடுத்து விடவும் அவர் தயாராக இருந்தார். தப்பித் தவறி அமாத்யர் விக்கிரமாதித்தனை சந்திக்க முற்பட்டால் அந்த உபாயத்தைக் கையாளத் தீர்மானித்தார்.

அவருக்குச் சோமேஸ்வரனின் மீது நம்பிக்கையில்லை. பயமில்லை. மரியாதையில்லை. விக்கிரமாதித்தனைப் போல் அவன் வீரனோ வித்தகனோ இல்லை என்று கருதியதால் விக்கிரமாதித்தனின் மரணத்திற்குப் பின்னால் அவனை ஏமாற்றி விக்கிரமாதித்தனுக்குத் துணையாக யம லோகத்திற்கு அனுப்பி விடலாம் என்பது அவரது ஆசையாகவும் பேராசையாகவும் இருந்தது.

அப்படி நடந்து விட்டால் சாளுக்கிய அரியணையில் தானே அமர்ந்து விடலாம் என்று கனவு கண்டார். அக்கனவு அழகானது என்றும் நடக்கக்கூடியது என்றும் நினைத்தார்.

அமாத்யரால் அந்தக் கனவு எந்த விதத்திலும் கெட்டு விடக் கூடாது என்று கருதி தனது பிரத்தியேக மாளிகைக்குச் செல்லத் தயாரானார். அந்தரங்கப் பணியாளனும் வந்து "எல்லாம் தயார்" என்று கூறியதும் நீராடி, புத்தாடைகளை அணிந்து, ஒப்பனைகளைச் செய்து கொண்டார்.

"இதென்ன கூத்து? யாரைப் பார்ப்பதற்காக இந்த இரவில் இவ்வளவு அலங்காரங்களைச் செய்து கொள்கிறீர்கள்?" என்று கேட்டாள் அவரது மனைவி.

அவளை நாயே பேயே என்று கண்டபடி திட்டி விட்டு தேரில் ஏறி பிரத்தியேக மாளிகைக்குச் சென்றார் போரமைச்சர்.

அங்கே வாயிற்கதவு பூட்டப்பட்டிருந்தது.

போரமைச்சர் அக்கதவைத் திறந்து உள்ளே சென்று மூடினார். தாழிட்டார்.

உள்ளே மாளிகை பல்வேறு தீபங்களால் பிரகாசமாக இருந்தது.

நறுமணங்களும் வீசின.

மாளிகை முழுதும் பல்வேறு மலர்கள் இறைக்கப் பட்டிருந்ததால் மிகவும் ரம்மியமாக இருந்தது.

உள்ளே இருந்த சயன அறைக்குச் சென்றார்.

அங்கே அனைத்தும் இருந்தன.

அதோடு கட்டிலில் இளம் பெண்ணொருத்தி கிடத்தப்பட்டு பட்டுக் கயிற்றால் கட்டப்பட்டிருந்தாள்.

போரமைச்சர் அருகில் சென்று கட்டுக்களை அவிழ்த்ததும் அந்த இளம் பெண் மிரண்டு போய் எழுந்தாள்.

"எதற்காக எழுந்தாய்? எதற்காக மிரள்கிறாய்? எதற்காக அஞ்சுகிறாய்? நான் தான் போரமைச்சர். என்னிடம் உனக்கெதற்கு பயம்?" என்று வினவினார் போரமைச்சர்.

"ஐயா! உங்களைக் கண்டதும் தான் எனக்கு நிம்மதி வந்தது. யாரோ இருவர் என்னைப் பலவந்தமாக இங்கே கொண்டு வந்து கட்டிப் போட்டு விட்டு போய் விட்டார்கள். அவர்கள் யார்? எதற்காக இவ்வாறு செய்தார்கள்? இது என்ன இடம்?" என்று மிரட்சியோடு கேட்டாள் அவள்.

"நான் போரமைச்சர் என்பதாவது தெரியுமா உனக்கு?"

"கேள்விப்பட்டிருக்கிறேன் ஐயா. இதுவரை பார்த்ததில்லை. இப்போதுதான் பார்க்கிறேன்."

"உலகமறியாதப் பேதை நீ. அதே சமயம் இன்றைக்கு உலகத்தை அறிந்து கொள்வாய். உன் வயதென்ன?"

"பதினெட்டு."

"என்ன செய்து கொண்டிருக்கிறாய்?"

"புலவர் பெருமான் பில்ஹணரிடம் குருகுலவாசம் பயின்று வருகிறேன்."

"புலவர் பெருமான் உனக்கு போரமைச்சரைப் பற்றி எதுவும் கூறவில்லையா?"

"இல்லை."

"அவர் சொல்லிக் கொடுத்தது தான் என்ன?"

"இலக்கியங்களையும் இலக்கணங்களையும் கற்பித்து வருகிறார்."

"சொல்லாமல் அறியக் கூடிய ஒரு விஷயம் இருக்கிறது. அது உனக்குத் தெரியுமா?"

"தெரியாது."

"அதைச் சொல்லிக் கொடுக்கத்தான் இன்று உன்னை இங்கே வரவழைத்தேன்."

"இந்த இரவு நேரத்திலா கற்றுக் கொடுக்கப் போகிறீர்கள்? வேண்டாம் ஐயா. இன்னொரு நாள் நான் வருகிறேன்."

"இதைப் பகலில் கூடச் சொல்லிக் கொடுக்கலாம். ஆனால் இரவு நேரம்தான் சிறப்பானது. பண்டமும் முக்கியம். பாத்திரமும் முக்கியம். அப்படித்தான் இது."

“நீங்கள் கூறுவது விளங்கவில்லை.”

“விளக்குவதற்குத்தானே வந்திருக்கிறேன். அதை விடு. நான் அழகாக இருக்கிறேனா? என் அலங்காரங்கள் எப்படி இருக்கின்றன?”

“ஐயா! இதென்ன கேள்வி? இதற்கு நான் எப்படி பதில் கூற முடியும்?”

“வேண்டாம். நீ எப்படி இருக்கிறாய் என்பதை நான் சொல்லட்டுமா? உன் அழகு எப்படி இருக்கிறது, உன் அங்கங்கள் எப்படி இருக்கின்றன, உன் அலங்காரங்கள் எவ்வாறு உள்ளன என்பதைப் பற்றி நான் சொல்லட்டுமா?” என்று வினவிய போரமைச்சர் அந்தப் பதினெட்டு வயது இளம் பெண்ணின் அங்கங்களை வர்ணித்தார். வெளியே தெரிந்த அங்கங்களை மட்டுமின்றி வெளியில் தெரியாத அங்கங்களையும் வர்ணித்தப் போது விக்கித்துப் போன அவள் அவமானத்தால் செய்வதறியாமல் அழ ஆரம்பித்தாள்.

“அழுவதற்கு என்ன இருக்கிறது இது? ஆனந்தப்பட வேண்டிய விஷயமல்லவா இது? ஒரு பெண்ணைக் கண்டதுமே எனக்கு எல்லாம் விளங்கி விடும். விவரித்து விடுவேன். சந்தேகமிருந்தால் நீயே பார்த்துத் தெரிந்து கொள்” என்றார்.

“ஐயா, என் தந்தையைப் போல் இருக்கும் நீங்கள் இப்படியெல்லாம் பேசலாமா?” என்று கலைந்த குரலில் கலங்கியபடி கேட்டாள் அவள்.

அவரோ கோபப்பட்டுப் பளாரென்று அறைந்தார் அவளது கன்னத்தில்.

“எந்த நேரத்தில் என்ன பேசுகிறாய்? என்னைப் பற்றி உனக்கென்ன தெரியும்? என் பலத்தைப் பற்றி நீ அறிவாயா? யானை பலம் எனக்கு. இன்னும் எத்தனை ஆண்டுகள் வாழ்ந்தாலும் என் பலம் கூடுமே தவிர எள்ளளவும் குறையாது. என்னையா கிழவன் என்கிறாய்?” என்றுச் சீறினார்.

எதிர்பாராத விதமாக பலமான அறை விழுந்ததால் அப்பெண்ணிற்கு அரைகுறை நினைவே இருந்தது.

அவரிடம் பேசுவதற்கே பயமாக இருந்தது.

அப்போது அவர் ஓர் கட்டளையிட்டபோது அதிர்ந்து போன அவள் “இது சரியல்ல ஐயா. மகா பாவம். என்னை விட்டு விடுங்கள். நான் ஏதும் அறியாதவள். ஒரு குற்றமும் அறியாதவள்” என்றாள்.

"பாவம் என்று ஒன்று இல்லவே இல்லை பெண்ணே. பயப்படுபவர்களை அச்சுறுத்தப் பயன்படுத்தப்படும் சொல் அது. உலகத்தில் நிரந்தரமாக இருப்பது இன்பம் ஒன்று தான். அதை வேண்டாம் என்று சொல்லவோ தடை போடவோ ஒருவருக்கும் உரிமை கிடையாது. கட்டிலில் போய் படு."

அந்த இளம்பெண் அதிர்ச்சியில் மயங்கி விழுந்தாள்.

"நீ மயக்கமடைந்தால் என்ன? நான் தெளிவாகத்தானே இருக்கிறேன்?" என்று சொல்லிக் கொண்ட போரமைச்சர் மதுவை எடுத்து மடமடவெனக் குடித்து விட்டு வெறிக்கு ஆளானார்.

அவரது வெறிக்கு அந்த இளம்பெண் ஆளானாள்.

மதுவின் மயக்கம் தீரும் வரை அந்தப் பெண்ணை அவர் விடவில்லை.

போதும் என்று கருதி விலகிய அவர் அப்பெண்ணின் உருக்குலைந்த கோலத்தைப் பார்த்தார்.

"அமாத்யர் மகளே! இது உனக்கான தண்டனையல்ல. உன் தந்தைக்கான தண்டனை" என்று கூறி அலட்சியமாகப் பார்த்தார்.

அவருக்குள் இருந்த மிருகம் சிரித்தது!





மனிதனுக்குச் சந்தர்ப்பம்தான் மகத்தானது. அது நல்லதிற் காகக் கிடைத்தாலும் சரி கெட்டதற் காகக் கிடைத்தாலும் சரி அதை அவன் பயன்படுத்திக் கொள்ளும் போது தான் அறிவாளியாகிறான் – போரமைச்சர்



சேவகர்களை அழைத்தார் போரமைச்சர்.

"பொழுது விடியும் நேரத்திற்கு முன் இவளைக் கொண்டு போய் அமாத்யரின் மாளிகைக்கு முன்னால் வீதியில் கிடத்தி விட்டுச் செல்லுங்கள்" என்று கட்டளையிட்டார்.

"அறிவில் சிறந்த அமாத்யரே! தர்மத்தில் சிறந்த அமாத்யரே! நேர்மையில் சிறந்த அமாத்யரே! புகார்களின் நாயகரே! காலையில் நீங்கள் புரிந்து கொள்வீர்கள் நான் யார் என்பதை! என்னிடமா மோதுகிறீர்கள்? எனக்கா உபதேசம் செய்கிறீர்கள்? எனக்கு இடையூறு செய்பவர்களும் உபதேசம் செய்பவர்களும் ஒரே மாதிரி தான். அவர்களை நான் தண்டிக்கும் விதமும் இப்படித்தான். பொழுது விடியும் போது உங்கள் வாழ்வில் இருள் சூழும். இனி ஒருத்தன் கூட எனக்கு எதிராகக் கிளம்ப நினைக்க மாட்டான்" என்று சொல்லிக் கொண்டார்.

அவன் எதிர்பார்த்த மாதிரியே எல்லாம் நடந்தது.

மகளைக் காணவில்லை என்று இரவெல்லாம் அலைந்தார் அமாத்யர். போரமைச்சரின் இருப்பிடத்தைத் தவிர எங்கெல்லாமோ தேடினார். மகள் கிடைக்காமல் பரிதவித்தார். பொழுது விடிந்த போது தெருவில் அவள் முறிந்து போன மலர்ச் செடிபோலக் கிடந்ததைக் கண்டு அலறினார். உயிர் போவதற்கு முன் தனது நிலைமைக்குப் போரமைச்சரே காரணம் என்பதைச் சொல்லி விட்டு இறந்து போனாள் அவரது மகள்.

அமாத்யர் ஆர்ப்பாட்டம் செய்யவில்லை.

அமைதியாக இருந்து மகளின் உடலுக்குச் செய்ய வேண்டிய கிரியைகளைச் செய்ய முற்பட்டார்.

விக்கிரமாதித்தனுக்குச் செய்தியனுப்பவில்லை. அனுப்ப வேண்டாம் என்று எல்லோருக்கும் சொன்னார்.

விசாரித்தவர்களிடம் "ஊழ்வினைப் பயன் வேறொன்று மில்லை" என்று சொன்னாரே தவிர உண்மையைச் சொல்லவில்லை.

போரமைச்சர் வந்தார்.

"மிகவும் வருத்தமாக இருக்கிறது அமாத்யரே! நேற்று தான் நாம் சந்தித்தோம். இன்று இவ்வாறு நடந்திருக்க வேண்டாம். விதி வலியது. அதை வெற்றி கொள்ள வேதநாயகனாலேயே இயலாது. வானுலகிலாவது உங்கள் அருமை மகள் ஷேமமாக இருக்கட்டும். என் அனுதாபங்கள் ஏற்றுக் கொள்ளுங்கள்" என்று பெரிய மனிதரைப் போலப் பேசி விட்டு நடையைக் கட்டினார்.

அப்போதும் அமாத்யர் அமைதியை இழக்க வில்லை.

"எங்களுக்கு போரமைச்சர் மீதுதான் சந்தேகமாக இருக்கிறது" என்று கூறியவர்களிடம் "இது என் குடும்ப விஷயம். இது விஷயமாக யாரும் வீண் வார்த்தைகளைப் பேச வேண்டாம். இச் சம்பவத்தை எல்லோரும் மறந்து விடுங்கள்" என்றார்.

தனக்கு ஏற்பட்ட சோகத்தைக் கிளறிவிட்டு கல்யாணபுரத்தைக் கலங்கடிக்க முடியுமென்றாலும் அதை அவர் செய்யவில்லை. தனக்கு நேர்ந்தது தன்னோடு போகட்டும் என்று தன்னைச் சேர்ந்தவர்களும், சேராதவர்களும், பொதுமக்களும் மற்றவர்களும் எந்த விதத்திலும் பாதிக்கக் கூடாது என்பது அவரது தீர்மானமாக இருந்தது.

இரண்டு நாட்கள் கழித்து தனது இரண்டாவது மகளான மாளவிகாவை அழைத்தார். அவளிடம் ஒரு பேழையைக்கொடுத்து "மகளே! ஒருவாரம் கழித்து இந்தப் பேழையைத் திறந்து பார். அதில் ஒரு செய்தி இருக்கும். ஆத்திரமோ அவசரமோ கொள்ளாதே விவேகத்துடனும் நிதானத்துடனும் செயல்படு" என்றார்.

மறுநாள் தற்கொலை செய்து கொண்டார். மகள் மாளவிகா விக்கி விக்கி அழுதாள். காரியங்கள் நடந்தன.

அமாத்யர் தற்கொலை செய்து கொண்டதுமே தான் நினைத்த மாதிரி எல்லாம் நடந்து விட்டது என்ற மகிழ்ச்சியில் சக்கிரவர்த்தியைச் சந்தித்து விவரத்தை மிகவும் துயரத்தோடு தெரிவிப்பது போல் தெரிவித்தார்.

விக்கிரமாதித்தனின் கண்கள் கலங்கின.

"அமாத்யர் அப்படியெல்லாம் செய்து கொள்பவர் இல்லையே? வைர நெஞ்சம் படைத்தவராயிற்றே?" என்றான்.

"வைரத்தை வைரம் அறுக்கும் மகாராஜா. தன் மகள் ஊர் பேர் தெரியாதவனிடம் கற்பிழந்து மாண்டு விடும் போது எவரால் தான் தாங்கிக் கொள்ள முடியும்? பாசம் ஒருபுறம். அவமானம் ஒருபுறம். என்ன செய்வார் அவர்? எவ்வளவு உயரமான

கோபுரமாக இருந்தாலும் அதற்கு இடியைத் தாங்கும் சக்தி கிடையாது மகாராஜா. அமாத்யரும் அப்படித்தான்" என்றார் போரமைச்சர்.

"போரமைச்சரே! நீங்களும் அமாத்யரும் என்னுடன் நீண்டகாலம் பணியாற்றியவர்கள். என் இரு கண்களாக விளங்கியவர்கள். அவரது இழப்பு எனக்குப் பேரிழப்பு" என்றான் விக்கிரமாதித்தன்.

"உண்மைதான் சக்கிரவர்த்தி. இரண்டு தூண்களில் ஒன்று விழுந்து விட்டால் மறுதூண் தான் மொத்த பாரத்தையும் தாங்க வேண்டும். என்னோடு அவர் தூணாக இருந்து பாதிச் சுமையை ஏற்றார். இன்று எல்லாச் சுமையையும் என்மீது சுமத்தி விட்டுப் போய் விட்டார். என்னால் இயலுமா என்று தோன்றவில்லை. தாங்கள் விரைவில் குணமடைந்து வந்து பாரத்தைச் சுமக்க வேண்டும். அளகபாரத்தையே சுமக்க முடியாத என்னால் ஆட்சி பாரத்தை எப்படிச் சுமக்க இயலும்?"

"இயலும் போரமைச்சரே. உங்களால் இயலும். இடியைத் தாங்கும் இடிதாங்கி நீங்கள். உங்களால் கடலலைகளைத் தாங்க முடியும். கார்மேகப் பர்வதங்களைத் தாங்க முடியும். நீங்கள் தான் கல்யாணபுரத்தையும் தாங்க வேண்டும். என்னால் இனி எழுந்து நடக்க முடியும் என்று தோன்றவில்லை. நான் முறிந்து போன தேர். உடைந்து போன தூண். உதிர்ந்து போன முடி; உறைந்து விட்ட நீர். என் வயோதிகத்தை என்னால் தான் உணர முடியும். ஆகவே தான் சொல்கிறேன். எனக்கு மரணவாயில் தான் அருகில் இருக்கிறதே தவிர குணவாயில் அருகில் இல்லை."

"இளவரசரை வேண்டுமானால் அழைக்கட்டுமா?"

"அவனை நான் வேங்கி நாட்டில் வைத்திருப்பது பயிற்சியைப் பெறத்தான். நான் உயிரோடு இருக்கும் வரை அவனை அழைக்காதீர்கள். எப்படியும் எனக்குப் பின் அவன் தான் அரசாளப் போகிறான். போரமைச்சரே! அமாத்யரின் சடலத்திற்கு என் சார்பில் மலர் மாலையை அணிவித்து விடுங்கள்."

"கட்டாயம் செய்கிறேன் மகாராஜா. அதோடு தங்களிடம் ஒரு வேண்டுகோள்."

"சொல்லுங்கள்."

"அமாத்யர் தற்கொலை செய்து கொண்டது துரதிர்ஷ்ட வசமானதுதான். இருப்பினும் அரசியல் ஆதாயம் தேடும் உலுத்தவர்கள் சிலர் அதற்கு அரசியல் சாயம் பூசுவார்கள். தங்களிடம் வந்து புகார் சொன்னாலும் சொல்வார்கள். தாங்கள்

எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.''

விக்கிரமாதித்தன் லேசாகச் சிரித்தான்.

"அதெல்லாம் சகஜம்தான். நீங்கள் கவலைப்பட வேண்டாம். அசம்பாவிதம் ஏற்பட்டால் இரும்புக்கரம் கொண்டு அடக்குங்கள்'' என்றான்.

போரமைச்சருக்கு வானில் பறப்பது போலிருந்தது. தனக்கு மேலே யாரும் இல்லை என்று கருதினார். தனது கனவிற்கு இனி தடையில்லை என்று எண்ணிக் குதூகலித்தார்.

சக்கிரவர்த்தியின் மரியாதை வருவதாக அறிவிப்பை முன்னே அனுப்பி விட்டு பின்னே போரமைச்சர் பெரிய மாலையொன்றை அமாத்யரின் சடலத்திற்கு அணிவித்தார்.

"மூட அமாத்யனே! உன் கதி என்ன ஆயிற்று பார்த்தாயா? நான் யானை வடிவில் உள்ள நரி. பசு உருவத்தில் இருக்கும் பயங்கரமான புலி. நீயெல்லாம் எனக்கு எம்மாத்திரம்? உன் வேலையை மட்டும் நீ பார்த்துக் கொண்டு போயிருந்தால் உனக்கும் உன் மகளுக்கும் இந்த கதி நேர்ந்திருக்குமா? எமனையே ஏமாற்றக் கூடியவன் நான். புயலிடம் சரசமாடும் சக்தி நான். ஆழ்கடலின் அதிசயத்தை விட அதிசயமானவன் நான். சக்திமானிடம் புள்ளி மான் துள்ளினால் தூளாகத் தான் ஆக வேண்டும்'' என்று உள்ளூர உவகையோடு சொல்லிக் கொண்ட போரமைச்சர் "என்னைத் தனியாக விட்டுப் போய் விட்டீர்களே அமாத்யரே! இந்த நாடு என்ன பிழை செய்தது? தங்களைத் தழைக்க விட்டு என்னுயிரை யமன் எடுத்துச் சென்றிருக்கக் கூடாதா? சக்கிரவர்த்திகளுக்கு நான் என்ன சமாதானத்தைச் சொல்வேன்? நேர்மையின் அடையாளமான தாங்களே தற்கொலை புரிந்து கொண்டால் நேர்மையே தற்கொலை செய்து கொண்டதாக அல்லவா அர்த்தமாகி விடும்? தங்கள் மகளுக்கு நேர்ந்தது பெருங் கொடுமைதான். ஆனால் விதியை மாற்ற நம்மால் இயலுமா? உங்கள் ஆத்மா சாந்தியடையட்டும்'' என்று பொய்யான வார்த்தைகளை எல்லோருக்கும் கேட்கும் படிச் சொல்லி கண்களைக் கசக்கிக் கொண்டார்.

அமாத்யரின் இரண்டாவது மகள் மாளவிகாவைக் கட்டிப் பிடித்துக் கொண்டு ஆறுதல் சொல்வது போல் ஆனந்தப் பட்டார். "மாளவிகாவும் மிருதுவாகத்தான் இருக்கிறாள்'' என்று அவரது கள்ள மனம் களித்தது.

"கவலைப் படாதே மகளே! உனக்குத் தந்தையாக நான் இருக்கிறேன்'' என்று வார்த்தைகளால் அவளை மெழுகினார்.

அமாத்யரின் இறுதி யாத்திரையை தடபுடலாகச் செய்தார். அவருக்கும் அவள் மகளுக்குமான இறுதி கிரியைகளை அந்தணர்களை வைத்துக் குறைவில்லாமல் செய்தார்.

உள்ளே இருக்கும் புண்ணை அறியாமல் வெளியே தெரியும் கண்ணை மட்டும் கண்டவர்களைப் போல போரமைச்சரின் இழிந்த துரோகங்களை அறிய முடியாமலும், நம்ப முடியாமலும் அவரது நாடகங்களை மட்டும் கண்டு அவரைப் பலரும் மதித்தார்கள்.

தனது கனவானது கிட்டத்தட்ட நிறைவேறி விட்டதாகக் கருதிய போரமைச்சர் தன் மனைவியிடம் சென்று தன்னைப் பாராட்டிக் கொள்ளக் கருதி அந்தபுரத்திற்குச் சென்றபோது அங்கே மனைவியின் கோலத்தைக் கண்டு அதிர்ந்தார்.

"இதென்ன மந்தாகினி! நான் அரியணையில் அமர வில்லையே தவிர ஆட்சி செய்வது நான் தான். அதிகாரம் செய்வது நான் தான். நான் அசைந்தால் புவி அசைந்தாடும். வானும் மண்ணும் நீரும் காற்றும் ஆலாபனை செய்யும். எனது மாட்சிமையைச் சொல்லி உன்னை மகாராணியாக அமர்த்தலாம் என்று வந்தால் நீ துறவுக்கோலம் பூண்டிருக்கிறாயே இது என்ன வேண்டாத அலங்கோலம்? காலம் கனியும் போது தானா உன் கோலம் மாற வேண்டும்? வேலமும் இனிக்கும் வேளை வந்திருக்கும் போது ஆலகால விஷத்தை உண்டு விட்ட மாதிரி என் வயிற்றில் புளியைக் கரைத்திருக்கிறாயே? ஏன்? ஏன்? ஏன்?" என்று சூடாகக் கேட்டார்.

"ஐயா! எனக்கு உகந்த கோலத்தைத்தான் ஏற்றிருக்கிறேன்."

"அப்படியானால் துறவறம் பூண்டு வாழ்விலிருந்து விலகி ஓடப் போகிறாயா?"

"ஓடவில்லை. துறவறத்தை நாடிச் செல்கிறேன்."

"இதற்கு என் அனுமதி தேவையில்லை என்று எப்படி நினைத்தாய்,"

"துறவு மேற்கொள்வதற்கு யாருடைய அனுமதியும் தேவை யில்லை பிரபு. உறவுகளை அறுத்துக் கொள்வது தான் துறவு. அதை அனுமதி பெற்று ஏற்க முடியாது?"

"துறவு மேற்கொள்ளும் அளவிற்கு உனக்கென்ன பிரச்சனை?"

"நீங்கள் தான்."

"நானா?"

"ஆம் பிரபு. செடியாய் இருந்து மரமாய் வளர்ந்து நிழல் தரும் விருட்சமாய் விரிந்த நீங்கள் கல்லாகி விட்டீர்கள். கடந்து வந்த

பாதைகளையெல்லாம் மறந்து விட்டு, உதாசீனப்படுத்தி விட்டு காற்றில் பறக்க ஆரம்பித்து விட்டீர்கள்..."

"ஓ அதை நீ சொல்கிறாயா? அதெல்லாம் பெருமைப் படக் கூடிய மகோன்னதமான விஷயங்கள் அல்லவா? நீயும் மகிழ்ந்து கொண்டாட வேண்டிய விஷயமல்லவா? சாளுக்கிய நாட்டின் மகாராணியாக நீ அமர்வதென்பது உன்னால் கனவாகக் கூடக் காணமுடியாதது. ஆனால் நடக்கப் போவது. இதை அங்கீகரித்து ஆனந்தப்படாமல் அபசகுனமாக மொட்டை யடித்துக் கொண்டு காவியணிந்து துறவோடு உறவாட ஆயத்தமாகி விட்டாயே? முட்டாளா நீ?"

"ஐயா! வேரற்ற மரத்தின் உச்சியில் ஏறி நிற்பது அறிவுடைமையல்ல. அறியாமை. சிறு காற்று வந்தால் அந்த மரம் விழுந்து விடும்."

"இது என்ன வியாக்கியானம்?"

"உங்களுக்கு சாளுக்கிய அரண்மனைக்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது. அதைத்தான் வேரற்ற மரம் என்று சொன்னேன். சம்பந்தமும் இல்லாமல் உரிமையும் இல்லாமல் அந்த அரியணையைக் கைப்பற்ற நீங்கள் செய்யும் எல்லா முயற்சியும் அதர்மம். மகா பாவம். நிலையற்றது. கரையிலிருந்து விழுந்தால் கொஞ்சமாக அடிபடும். மலையிலிருந்து விழுந்தால் மரணமே மிஞ்சும். ஆகவே தான் சொல்கிறேன். நீங்கள் போரமைச்சராக மட்டுமே இருங்கள். வேறு ஆசைகள் வேண்டாம்."

"உலகம் தெரியாமல் பேசுகிறாய் மந்தாகினி. மனிதனுக்குச் சந்தர்ப்பம் தான் மகத்தானது. அது நல்லதற்காகக் கிடைத்தாலும் சரி கெட்டதற்காகக் கிடைத்தாலும் சரி அதை அவன் பயன்படுத்திக் கொள்ளும் போது தான் அறிவாளியாகிறான். பல்வேறு காரணங்களைச் சொல்லி வாய்ப்புகளை நழுவ விடுபவன் கடைசி வரை அழுது கொண்டுதான் இருக்க வேண்டும். இதைத் தெரிந்து கொள்."

"தவறாக வியாக்கியானம் செய்கிறீர்கள் பிரபு. உரிமையில்லாத விஷயங்களுக்கு வாய்ப்பு கிடைத்தால் அதைப் புறக்கணிப்பது தான் தர்மம். சம்பந்தம் இல்லாத விஷயங்களுக்கு வாய்ப்பு கிடைத்தால் அதை ஒதுக்குவது நியாயம். தர்ம நியாயங்களுக்குப் புறம்பான சந்தர்ப்பங்களைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்வது அதர்மம். அழிவுக்குத்தான் அது வழிவகுக்கும்."

"அழிவு என்று நீ சொல்வதுதான் என்ன? மரணம். அதைத் தானே சொல்கிறாய்? அது எல்லோருக்கும் தானே வருகிறது?

மரணத்தை எண்ணி எவனாவது செயல்படாமல் அழுது கொண்டிருப்பானா?"

"என்ன சொன்னாலும் நீங்கள் கேட்க மாட்டீர்கள் என்பதாலும் உங்கள் மனத்தை மாற்றிக் கொள்ள மாட்டீர்கள் என்பதாலும் தர்ம மார்க்கத்தை விட்டு வெகு தூரம் வந்து விட்டீர்கள் என்பதாலும் உங்களோடு வாழ்வது பாவம் என்று கருதினேன். உங்களை விட்டு விலகுவது என்று தீர்மானித்தேன். விலகிய பின் துறவறமே உகந்தது என்று முடிவு செய்தேன். அதை உங்களுக்குத் தெரிவிக்கவே காத்திருந்தேன். தெரிவித்து விட்டேன். நான் புறப்படுகிறேன்."

"மந்தாகினி! கண்களை மூடிக் கொண்டு இருட்டாய் இருக்கிறது என்று கூறும் முட்டாள் நீ. கண்களைத் திறந்து கொண்டு இருட்டிலும் ஒளியைத் தேடுபவன் நான். வரப் போகும் சிறப்பறியாமல் விலகிப் போகும் நீ வீணாகத்தான் போவாய். துறவறம் என்பது நல்லறத்தை மறுக்கும் வறட்டுப் பிடிவாதத்தின் வாயில். நீ போனால் எனக்கு இன்னொரு மந்தாகினி கிடைப்பாள். ஆனால் இப்போது கிடைத்திருக்கும் வாய்ப்பு இனி எப்போதும் கிடைக்காது. எனக்கு வாய்ப்பு முக்கியமே தவிர நீயல்ல" என்று நிர்தாட்சண்யமாகச் சொல்லி மனைவியை உதாசீனப்படுத்தி அனுப்பி வைத்த போரமைச்சர் இரண்டு நாட்கள் கழித்து இளம்பெண் ஒருத்தியை மணந்து கொண்டார்.

அவரை எதிர்க்க யாருமில்லை. ஏன் என்று கேட்க ஒருவரும் இல்லை. எனவே சர்வாதிகாரியாக அமர்ந்த போரமைச்சர் அனைவரையும் தன் கிடுக்குப்பிடியில் வைத்தார்.

ஒற்றர்கள் அனைவரும் அவரது கட்டுப்பாட்டிற்கு வந்தார்கள்.

அப்போது ஒற்றர்கள் தெரிவித்த செய்தி ஒன்று அவரைக் கொதிக்க வைத்தது.

உடனடியாகச் சேனாதிபதிகளையும், தளபதிகளையும், உபதலைவர்களையும் கூட்டினார்.

மொத்தம் எட்டு பேர் வந்தனர்.

"என் கணக்குப்படி மொத்தம் எண்பது பேர்கள். தற்போது வந்திருப்பதோ பத்தில் ஒரு பகுதி. மற்றவர்கள் எங்கே?" என்று கேட்டார் போரமைச்சர்.

"போரில்லாததால் ஓய்வில் இருக்கிறார்கள்" என்றார்கள்.

"போரில்லை என்று யார் சொன்னது?"

"சக்கிரவர்த்தி."

“அவர் கூறியிருந்தாலும் ஓய்வில் செல்வதற்குப் போரமைச்சரின் அனுமதி வேண்டாமா? நானிங்கே சிரைப்பதற்கா அமர்ந்து கொண்டிருக்கிறேன்? எல்லாச் சேனாதிபதிகளும் என் கட்டுப்பாட்டில் உள்ளவர்கள் என்பது உங்களுக்குத் தெரியாதா?”

“எங்களுக்குத் தெரியும். அவர்களுக்குத் தெரியவில்லையோ என்னவோ?”

“தெரியாமல் கூடப் போகுமோ? திமிர் பிடித்தவர்கள்” என்றுச் சீறிய போரமைச்சர் அனைவரையும் இரண்டு நாட்களுக்குள் கல்யாணபுரத்திற்கு வரும்படி ஆணையிட்டார்.

மூன்று நாட்கள் கழித்து முப்பது பேர் வந்தார்கள்.

நான்கு நாட்கள் கழித்து நான்கு பேர் வந்தார்கள்.

மொத்தத்தில் எழுபது பேர் வந்து சேருவதற்கு ஏழு நாட்களாயின.

வராத பத்து பேர்களைப் பதவி நீக்கம் செய்து ஆணை பிறப்பித்தார் போரமைச்சர்.

தாமதமாக வந்தவர்களுக்கு அபராதம் விதித்தார்.

பிறகு பேச முற்பட்டு “தென் பாரதத்தில் வடக்குச் சாம்ராஜ்யம் நம்முடையது. தெற்குச் சாம்ராஜ்யம் சோழர்களுடையது. நமது சாம்ராஜ்யத்தில் நமது ஆதிக்கத்தில் இருந்து கொண்டு நமக்குக் கப்பம் கட்டும் அரசர்கள் பலர். அதில் ஹொய்சளரும் ஒருவர். வேலாபுரத்தில் (பேலூர்) சாளுக்கியப் பிரதிநிதியாக இருந்து வரும் அவர்கள் நமது ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு விட்டார்களாம். வேலாபுரத்தில் சாளுக்கிய கொடிகள் அகற்றப் பட்டு அவர்களது கொடிகள் பறக்கிறதாம். அவர்களுக்கென்று நாணயமும் முத்திரையும் அடிக்கப்பட்டிருக்கிறதாம். இதையெல்லாம் ஏன் என்னிடம் தெரிவிக்கவில்லை?” என்று கேட்டார்.

“சக்கிரவர்த்திகளுக்குத் தெரிவிக்கப்பட்டது. அவர் உடனே தூதுவர் ஒருவரை வேலாபுரத்திற்கு அனுப்பி நிலவரத்தை அறிந்து வரும் படிச் சொன்னார். அத்தூதுவர் என்ன ஆனாரோ தெரியவில்லை. அவரும் திரும்ப வில்லை. தகவலும் வரவில்லை. எனவே மீண்டும் ஒரு தூதர் அனுப்பப்பட்டார். அவர் திரும்பி வந்து வேலாபுரம் நமது ஆதிக்கத்தில்தான் இருக்கிறது என்றும் கைவிட்டுப் போகவில்லை என்றும் தெரிவித்தார்” என்றான் ஒரு சேனாதிபதி.

“தூது அனுப்புவதென்பது மகாபாரத ராமாயண காலத்திலிருந்து நடந்து வருகிறது. இதுவரை எந்தத் தூதும்

வெற்றி பெற்றதாக வரலாறு இல்லை. அப்படி இருக்கும் போது எப்படி நம் சக்கிரவர்த்தி தூதனை அனுப்பினார். என்னிடம் சொல்லியிருந்தால் படைகளை அனுப்பி வேலாபுரத்தின் விலா எலும்பை முறித்து விட்டலராயனைக் கொண்டு வந்து வாட்டி வதக்கி இருப்பேனே! சக்கிரவர்த்திதான் சொல்லவில்லை. நீங்களாவது என்னிடம் சொல்லியிருந்தால் போர் தொடுக்க நான் சக்கிரவர்த்தியிடம் அனுமதி வாங்கியிருப்பேன். வெறும் தூது அனுப்பி சொதப்பியதால் இப்போது என்ன ஆகியிருக்கிறது தெரியுமா?''

"என்ன ஆகிவிட்டது?''

"விட்டலராயன் நம்மை நன்றாக ஏமாற்றி விட்டான். சாளுக்கியன் ஆதிக்கத்தில் இருந்த பதினெட்டு அரசர்களை வென்று தனது ஆதிக்கத்திற்குக் கொண்டு வந்து விட்டான். நமக்கு வரவேண்டிய கப்பம் அவனுக்குப் போய் விட்டது. சுண்டைக்காய் அளவிற்கு இருந்த ஹொய்சளர்கள் இன்று பெருத்து விட்டார்கள். சிற்றரசு பேரரசாகி விட்டது. அவனது படையெடுப்பு தொடர்கிறது. நமது ஆதிக்கப் பரப்பு சுருங்குகிறது. போகப் போக கல்யாணபுரத்திற்கு தெற்கிலும் கிழக்கிலும் உள்ள நாடுகள் எல்லாம் ஹொய்சளர் வசம் வந்துவிடும். வாள் வீரமும் தோள் வீரமும் படைத்த சாளுக்கிய நாட்டின் நிலையைப் பார்த்தீர்களா? இதையெல்லாம் அறியாமல் ஆளாளுக்கு ஓய்வில் போய் விட்டீர்களே! உங்களையெல்லாம் வெட்டிப் போட்டால்தான் என்ன? கிட்டியில் கூட்டிச் சிதைத்தால்தான் என்ன'' என்று சொல்லம்புகளை வீசிய போரமைச்சர் "என்ன செய்யலாம் இப்போது?'' என்று கேட்டார்.

"ஹொய்சளரை நோக்கிப் படையெடுக்கலாம்'' என்றார்கள் சேனாதிபதிகள்.

"ஓடும் புலியைத் துரத்திச் சென்று பிடிக்கமுடியாது. வலையை விரித்தால் வந்து விழும்'' என்றார் போரமைச்சர்.

"எப்படி?''

சொன்னார் போரமைச்சர்.

வியந்தார்கள் சேனாதிபதிகள்.





படிப்படியாகப் பதவியோ அதிகாரத்தையோ அடையாமல் திடீரென்று அடைய நேரிட்டால் அவன் ஆணவத்தின் உச்சிக்கே சென்று விடுவான்.




"நம்மிடம் சேனைகள் எவ்வளவு இருக்கின்றன?" என்று கேட்டார் போரமைச்சர்.

இந்தக் கணக்கெல்லாம் போரமைச்சரிடம்தான் இருக்க வேண்டும். அப்படியிருக்கும் போது அதைத் தங்களிடம் அவர் கேட்டது வினோதமாக இருந்தது.

உண்மையில் அவர் போரமைச்சர் என்ற பதவியில் இருந்து கொண்டு ஆர்ப்பாட்டம் செய்து வந்தாரே தவிர பதவிக்குரிய பொறுப்புகளைச் சரிவர நிறைவேற்ற வில்லை. போர்கள் நடக்கும் போது ஆலோசனை சொல்ல வேண்டிய அவர் ஆலோனை என்ற பெயரில் ஏதேதோ ஆலாபனை பாடுவதையே வழக்கமாகக் கொண்டிருந்தார்.

சாளுக்கியர்களுக்கும் சோழர்களுக்கும் நடந்த பல்வேறு போர்கள் சாளுக்கியர்களுக்குத் தோல்வியாக முடிந்ததற்குக் காரணம் அவரது தவறான அணுகுமுறைகளும் திட்டங்களும் தான். தவறான பாதையைக் காட்டி தோல்வியைச் சந்தித்த பிறகு சேனாதிபதிகளை குறை சொல்வது அவரது வழக்கம். அதனால் சேனாதிபதிகளுக்கு அவர் மீது உண்மையான மரியாதை இருக்கவில்லை. ஆகவே தான் போர் இல்லை என்ற ஒரு நிலைமை உண்டான போது அவரிடம் பெயருக்குக் கூடத் தெரிவிக்காமல் ஓய்வெடுக்கச் சென்றார்கள்.

அதே சமயம் அவர் நிர்வாகத்தைக் கைப்பற்றி இரும்புக் கரங்களால் ஒடுக்க முற்பட்ட போது அவர்களுக்கு மரியாதை வரவில்லை என்றாலும் அவர் மீது பயம் ஏற்பட்டது.

அவர் விக்கிரமாதித்தனை தன் கைக்குள் போட்டுக் கொண்டதால் அவரை எதிர்க்க முடியாமல் பணியலானார்கள்.

எதிர்க்க முற்பட்ட அமாத்யரின் நிலை அரசல் புரசல்களாக அவர்களுக்குத் தெரிந்திருந்தது. எனவே யாரும் எதிர்க்கத் தயாராக இல்லை. ஓய்வில் இருந்தச் சேனாதிபதிகளையெல்லாம்

வரச் சொல்லி போரமைச்சர் ஆணையிட்ட போது பயந்து கொண்டு வந்தார்கள் சேனாதிபதிகள்.

"நமது படையில் ஐம்பதாயிரம் பேர் சாளுக்கிய நாட்டின் வடக்கு எல்லையில் காவல் இருக்கிறார்கள். வடக்கிலிருந்து ஒரு துரும்பு கூட நுழைந்து விடக்கூடாது என்று தாங்கள் செய்த ஏற்பாடு இது. அங்கே பத்து சேனாதிபதிகள் இருக்கிறார்கள். புரவிப் படையும் யானைப்படையும் அங்கே இருக்கிறது. அவர்களுக்கு உணவுப் பொருட்களை நாம் அனுப்பிக் கொண்டிருக்கிறோம். நாமிருக்கும் கல்யாணபுரத்தில் பத்தாயிரம் வீரர்கள் காவலிருக்கிறார்கள். வேங்கி நாட்டில் இருபதாயிரம் படைகள் இருக்கின்றன" என்றார் ஒரு சேனாதிபதி.

"கல்யாணபுரத்தில் இருப்பவர்களின் படை எண்ணிக்கையே பத்தாயிரம்தான் என்கிற போது ஹொய்சளரை நோக்கிப் படையெடுக்கலாம் என்று எப்படிச் சொன்னாய்? இங்கே இருப்பவர்களையும் அழைத்துச் சென்று விட்டால் தலை நகரத்தின் கதி என்ன? தலைநகரை நிர்க்கதியாக விட்டு விட்டு எவனாவது போரிடப் போவானா? தீர்க்காலோசனையின்றி எப்படி வழி சொல்கிறீர்கள்? அதோடு ஹொய்சளப் படை ஓரிடத்தில் இல்லை. அது புலியைப் போல பாய்ந்து ஓடிக் கொண்டிருக்கிறது. அதைத் துரத்திச் சென்று பிடிக்க முடியாது" என்று சொன்ன போரமைச்சர் "நமது நாட்டு வடக்கு எல்லையில் ஐம்பதாயிரம் வீரர்கள் காவல் புரிவதும் அவர்களுக்குள்ள உணவுப் பொருட்களை கல்யாணபுரத்திலிருந்து அனுப்புவதும் முட்டாள் தனமான காரியங்கள் வடக்கு எல்லையில் இருபதாயிரம் வீரர்களும் நான்கு சேனாதிபதிகளும் போதும். அவர்களுக்கான உணவுகளை அவர்களே சம்பாதித்துக் கொள்ளட்டும். மீதமுள்ள வீரர்களும், புரவிப் படையும், யானைப் படையும் கல்யாண புரத்திற்குத் திரும்பட்டும்" என்று சொன்ன போரமைச்சர் அதற்கான உத்தரவுகளைப் பிறப்பித்தார்.

அடுத்து அவர் என்ன சொல்லப் போகிறார் என்று எல்லோரும் ஆவலாக எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

போரமைச்சரே பேசமுற்பட்டு "ஹொய்சள மன்னனையும் அவன் பிடித்திருக்கும் ராஜ்யங்களையும் நாம் பிடிக்க வேண்டுமென்றால் அவனிடம் போரிட முடியாது. போரிட முற்பட்டால் அவனோடு மற்றவர்களும் சேர்ந்து கொள்வார்கள். நாம் வெற்றி பெற முடியாது. மாறாக ஹொய்சள மன்னனைக் கல்யாணபுரத்திற்கு வரும்படி வலை விரிப்போம். அதற்குத்

தூண்டிலாக அவன் மகன் நரசிம்மனைப் பயன்படுத்துவோம். அவன் தன் தந்தையைப் போலச் சூழ்ச்சியும் திறமையும் பெற்றவனல்ல என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அவனை ஏமாற்றி இங்கே கொண்டு வந்து விட்டால் விட்டலராயனும் இங்கே வருவான். அவனைக் கொண்டே அவன் பிடித்த ராஜ்யங்களை விடுவிப்போம். முடிவில் தந்தையையும் மகனையும் கழுவில் ஏற்றுவோம். அதோடு ஹொய்சள சாம்ராஜ்யம் சமாதியாகி விடும். வம்சமே அழிந்தபின் துளிர்ப்பதற்கு எதுவும் இருக்காது" என்றார்.

"இதற்குச் சக்கிரவர்த்தி சம்மதிப்பாரா?" என்று கேட்டார்கள் சேனாதிபதிகள்.

"அவரிடம் ஏற்கனவே சம்மதம் வாங்கி விட்டேன்" என்று பெரும் பொய்யைச் சொன்ன அவர் "அந்தக் கவலை உங்களுக்கு வேண்டாம். இந்த என் திட்டத்தைக் கூட ஒன்றுக்கும் உதவாத உங்களிடம் சொல்ல வேண்டிய அவசியம் எனக்கில்லை. உங்களிடம் உருப்படியான திட்டம் ஏதாவது இருக்கும் என்று தான் உங்களைக் கூட்டினேன். உங்களுக்கோ ஒரு பூனைக்கு இருக்கும் அறிவு கூட இருப்பதாகத் தெரியவில்லை. போரெதுவும் செய்யாமல் வேளாவேளைக்கு உண்டு உறங்குகிறீர்களே தவிர இந்த நாட்டிற்கு உங்களால் ஒரு பயனுமில்லை. இப்படியே போனால் களஞ்சியங்கள் காலியாகி எல்லோரும் பிச்சை எடுக்க வேண்டியதுதான். எல்லோரும் எழுந்து செல்லுங்கள்" என்று சர்வ அலட்சியமாகப் பேசி அனைவரையும் அனுப்பி வைத்த போரமைச்சர் தனது அந்தரங்கமான ஒற்றர்கள் இருவரை அழைத்தார்.

"நீங்கள் ஒற்றர்கள் மட்டுமல்ல. என் அந்தரங்கத்தை அறிந்தவர்கள். எனது அசைவுகளை அறிந்தவர்கள். எனது ஆசையை அறிந்தவர்கள். ஆகவே தான் உங்களைத் தேர்ந்தெடுத்தேன். நீங்கள் அசந்து விடாமல் மிகவும் எச்சரிக்கையுடன் செயல்பட வேண்டும். நீங்கள் இருவரும் ஹொய்சளர்களைப் போல வேடமணிந்து துவார சமுத்திரத்திற்குச் (ஹளபீடு) செல்லுங்கள். அங்கே தான் ஹொய்சள இளவரசன் நரசிம்மன் இருக்கிறான். அவன் கோழை. தற்குறி. அச்சத்தை தவிர எதையும் அறியாதவன். அரச வம்சத்தில் தவறிப் பிறந்து விட்டத் தவளை. அவனிடம் சென்று விட்டலராயனை எதிரிகள் கடத்தி வைத்திருப்பதாகவும் அவரை மீட்க நீங்கள் வந்தால் தான் முடியும் என்றும் நயமாகப் பேசி நாடகமாடுங்கள். அவனை இங்கே கொண்டு வந்து விடுங்கள். மற்றதை நான் பார்த்துக் கொள்கிறேன்" என்றார்.

அமாத்யரை அழிக்க முற்பட்ட முயற்சி வெற்றி பெற்று விட்டதால் ஹொய்சள இளவரசனைக் கடத்தும் முயற்சியும் வெற்றி பெறும் என்று நினைத்தார் போரமைச்சர். அது நிறைவேறி விட்டால் ஹொய்சளரை அழித்து விடலாம். அது நிறைவேறி விட்டால் தன் மதிப்பு பலமடங்கு உயர்ந்து விடும். அது நிறைவேறி விட்டால் சாளுக்கிய சாம்ராஜ்யமே தன்னுடையது தான் என்று தனது கனவின் பரிமாணங்களை எண்ணிப் பூரித்தார்.

வெற்றி பெற்றபின் ஆட்டம் போடுபவர்கள் பலர். வெற்றி பெறுவதற்கு முன்பாகவே வெற்றி பெற்று விட்ட மாதிரி நினைத்து ஆட்டம் போடுபவர் சிலர். தனது கனவுகளைச் சுமக்க முடியாமல் திணறிப் போய் நிறைவேறி விட்டதாகவே எண்ணிக் கொண்டால் தான் அவர்களால் இயங்க முடியும். அப்படிப் பட்ட நிலையில் இருந்தார் போரமைச்சர்.

தனது இளம் மனைவியோடு காம விளையாட்டுக்களைக் கட்டுப்பாட்டின்றி நடத்தினார்.

தனக்குத் தான் சகல அதிகாரமும் உள்ளதே! நாம் எப்படி வாழ்ந்தால் தான் என்ன என்று நினைத்தார்.

ஆணவத்தின் உச்சி அது.

படிப்படியாகப் பதவியையோ அதிகாரத்தையோ அடையாமல் திடீரென்று அடைய நேரிட்டால் அவன் ஆணவத்தின் உச்சிக்கு உடனடியாகச் சென்று விடுவான்.

தனது கண்களில் அழகிய பெண்கள் தென்பட்டால் உடனடியாகத் தனது பிரத்தியேக மாளிகைக்கு வரவழைத்து காமக் கடலில் ஆழ்த்திச் சுகம் காணலானார். அப்பெண்கள் மணமானவர்களா மணமாகாதவர்களா என்றெல்லாம் விசாரிப்பதுமில்லை. கவலைப்படுவதுமில்லை. கவலைப் பட்டவர்கள் யாராவது வந்து விசாரித்தால் அவர்களை விசாரணையின்றி வெட்டுப் பாறைக்கு அனுப்பினார். சிலரைக் கட்டிப் போட்டு கொதிக்கும் நீரை ஊற்றச் செய்தார். சிலருக்கு நாக்கை அறுத்தார். மூக்கை அறுத்தார். கண்களை அகற்றினார்.

கல்யாணபுரம் தனது மங்கலங்களை இழந்தது. களையை இழந்தது. ஆரவாரங்களை இழந்தது. நரகலோகமாக மாறியது. வீதிகளில் நடக்க நாய்கள் கூடத் தயங்கின. இரவு நேரங்களில் வாத்தகத்தாலும் கலைகளாலும் கலகலப்பாகப் பூத்துக் குலுங்கும் தலைநகரம் இருளில் மூழ்கிப் பேயைப் போலக் காட்சியளித்தது.

சக்கிரவர்த்தி விக்கிரமாதித்தனை எதுவும் பேச முடியாமல் ராஜ வைத்தியர்களை வைத்து அவனது தொண்டையைக் கட்டிப்

போட்டு வைத்திருந்தார் போரமைச்சர். எனவே விரும்பியவர்கள் அவனோடு பேசமுடியவில்லை. சந்திக்கவும் முடியவில்லை.

இதற்கிடையில் அமாத்யரின் இரண்டாவது மகளான மாளவிகா போரமைச்சரைச் சந்தித்துப் புலம்பினாள். அழுதாள்.

அமாத்யரின் மரணத்தால் தானும் தன் தாயும் தத்தளிப்பதாகச் சொல்லி தங்களுக்கு உதவும்படி கோரினாள். அமைச்சர் தன் வாழ்நாளில் ஒரு மூன்று மணியைக் கூடச் சேர்த்து வைக்க வில்லையாதலால் தினசரி சோற்றுக்கே சிரமப்பட வேண்டியிருக்கிறது என்றாள்.

அந்தப் பெண்ணைப் பார்ப்பதற்குப் பரிதாபமாக இருந்ததால் அனுதாபப் பட்டார் போரமைச்சர். அந்த அனுதாபம் அவருக்கே ஆச்சரியமாக இருந்தது.

அந்தப் பெண்ணின் சகோதரியை ஈவிரக்கமின்றிச் சீரழித்த போது இருந்த வெறியும் வேகமும் தற்போது அவருக்கில்லை. அழகிகளைக் கண்டால் அழைத்து வரச் சொல்லி நுழைத்து ஆட்டம் போடும் அவருக்கு மாளவிகா அழகாக இருந்தும் அனுதாபமே வந்தது.

அமாத்யருக்கு தான் அளித்த தண்டனை மிகவும் அதிகம் என்று தற்போது கருதினார். அமாத்யர் நேர்மையாளர். வாய்மையாளர். அவரது இயல்பைத்தான் அவர் காட்டினார். அவரை வேறுமாதிரி அடக்கியிருக்கலாம். அதை விட்டு விட்டு அவரது மகளைச் சிதைத்ததும் அதனால் அவர் அவமானப் பட்டுத் தற்கொலை செய்து கொண்டதும் மிகையாகத் தோன்றியது போரமைச்சருக்கு.

அயோக்கியர்களுக்கு அபூர்வமாக எப்போதாவது மனச்சாட்சி உறுத்தும். அன்பு, அனுதாபம், அரவணைப்பு என்றெல்லாம் சிலகண நேரத்திற்குத் தோன்றும். மாளவிகாவைக் கண்ட போது அவருக்கு அப்படித்தான் இருந்தது. அவளது பரிதாப நிலைக்குக் காரணம் தான் தான் என்பதை உணர்ந்த அவர் "உனக்கு என்னம்மா வேண்டும்?" என்று பரிவோடு கேட்டார்.

"எனக்கு ஏதாவது வேலை கொடுங்கள் ஐயா. சம்பளம் கொடுங்கள் ஐயா. பிழைத்துக் கொள்வேன்" என்றாள் மாளவிகா.

"பேதைப் பெண்ணாக இருக்கிறாயே! உனக்குப் போய் என்ன அலுவலைத் தரமுடியும்?"

"நான் நன்றாகப் பாடுவேன் ஐயா."

"அப்படியா? ஏதோ பாடு."

மாளவிகா சில நிமிடங்கள் மௌனமாக இருந்து மனத்தைப் பக்குவப்படுத்திக் கொண்டு பாடினாள்.

மனநாட்டிய மேடையில் ஆடினேன்
கலை காட்டிய பாதையில் வாடுகிறேன்
உயிர் காதலிலே உடல் மேடையிலே
இந்த வாழ்க்கையின் முடிவெங்கே?

- மன

புவி வாழ்வினில் காதல் இன்பம்
அதில் ஏழையின் காதல் துன்பம்
திருநாளுமில்லை மண வாழ்வுமில்லை
இந்த வாழ்க்கையின் முடிவெங்கே?

- மன

வெறும் காவியக் காதல் போலே
எந்தன் காதலும் ஆனதாலே
உடல் வாழவில்லை உயிர் சாகவில்லை
இந்த வாழ்க்கையின் முடிவெங்கே?

- மன

வண்ணத் தாமரை பாவையின் தேகம்
கண்டு தழுவிடும் சூரியன் வேகம்
தினம் மாறி விடும் இருள் மூடி விடும்
இந்த வாழ்க்கையின் முடிவெங்கே?

- மன

"அழகானப் பாட்டு. அருமையாகப் பாடினாய். காதல் வலையில் சிக்கியிருக்கிறாயா?" என்று கேட்டார் போரமைச்சர்.

"இல்லை ஐயா. என் சகோதரி ஒருவரைக் காதலித்தாள். அதில் ஏதோ சிக்கல் வந்த போது இந்தப் பாடலைப் பாடினாள். அதைத்தான் இங்கே நான் பாடினேன்" - என்றாள் அவள்.

"உன் பெயர் என்ன?"

"மாளவிகா."

"மாளவிகா! இனி நீ சோகராகம் பாடக் கூடாது. இசையானது இன்பத்தைத் தரக் கூடியது. நீ பாடும் போது மற்றவர்கள் மகிழ வேண்டுமே தவிர அழக் கூடாது. ஆகவே நீ எப்போதும் சந்தோஷமாகப் பாடு. உனக்காக கல்யாணபுரத்தில் இசைச் சாலை ஒன்றை உருவாக்குகிறேன். நீ அங்கே பாடு. பலரும் பாட பாடுபடு. உனக்கு வாரத்திற்கு ஆயிரம் வராகன் சம்பளம். சம்மதம் தானே?"

* பாடலாசிரியருக்கு நன்றி.

"மிக்க நன்றி ஐயா. என் தந்தையார் இருந்திருந்தால் கூட இத்தகைய ஏற்பாட்டைச் செய்திருக்க மாட்டார்."

போரமைச்சர் கல்யாணபுரத்தில் இருந்த சமணர் குன்று ஒன்றின் விசாலமான குடைவரையை அழகுபடுத்தி இசைச் சாலையாக மாற்றி அங்கே மாளவிகாவை இசை வாணியாக நியமித்தார். அவள் தான் ஒரு இசைப் பேரரசி என்பதை நிரூபித்தாள்.

போரமைச்சர் என்னும் பெரும் பிசாசை மறந்து மக்கள் மாளவிகா என்னும் மகத்தான இசைத் தேனைப் பருகி மகிழ்ந்தார்கள்.



போரமைச்சர் அனுப்பிய இரு ஒற்றர்களும் துவார சமுத்திரத்தை (ஹளபீடு) அடைந்து இளவரசன் நரசிம்மனைச் சந்தித்தார்கள்.

விஷயத்தைத் தெரிவித்தார்கள்.

"உங்களோடு பெண் யாரும் வரவில்லையா?" என்று கேட்டான் நரசிம்மன்.

"இளவரசே! இதென்ன பேச்சு? தங்கள் தந்தையார் மிகவும் ஆபத்தான நிலையில் உள்ளார். உங்களால் மீட்கப்பட வேண்டிய நிலையில் இருக்கிறார். பதறிப் போய் நாங்கள் இங்கே ஓடி வருகிறோம். பெண்களை எப்படி அழைத்துக் கொண்டு வருவது?"

"அப்படியானால் என் தந்தை இருக்கும் இடத்திலாவது பெண்கள் இருப்பார்கள் அல்லவா?"

"நிறைய பேர் இருக்கிறார்கள்."

"அது தான் எனக்கு முக்கியம். தந்தை இப்போது எங்கே இருக்கிறார்?"

"அங்கே தான் நாம் போகப் போகிறோம்."

"ஆமாம். ஆமாம். நீங்கள் சொல்வது சரிதான். நான் வந்து தந்தையைப் பார்த்து வாருங்கள் என்றால் வந்து விடுவார்."

"அது தெரிந்து தான் இளவரசே உங்களை அழைத்துச் செல்ல வந்தோம்."

"உங்களை யார் அனுப்பியது?"

"தங்கள் தந்தையார் மாமன்னர் விட்டலராயர்தான். அவரது யோசனையின் பேரில் தான் நாங்கள் வந்தோம்."

சிறிது நேரம் மௌனமாக இருந்தான் இளவரசன்.

பிறகு பேச முற்பட்டு "தந்தையை நான் ஏன் மீட்க வேண்டும்? நான் பேசாமல் அரியணையில் அமர்ந்து அரசனாகி விடுகிறேனே?" என்றான்.

ஒற்றர்களுக்கு ஒரு மாதிரியாகி விட்டது.

"இப்படி உளறிக்கொட்டும் இவன் எப்படி இளவரசனானான்?" என்று தங்களுக்குள் சொல்லிக் கொண்ட அவர்கள் "தாங்கள் அப்படிப் பேசக் கூடாது இளவரசே. இந்த அரியணையும் ராஜ்யமும் உங்களுக்குத்தானே வரப் போகிறது? நீங்கள் தானே மகாராஜாவின் ஒரே வாரிசு! எதற்காக அவசரப்படுகிறீர்கள்? மகாராஜா அங்கே உயிருக்குப் போராடும் போது அவரைக் காப்பாற்றுவதுதான் உங்கள் கடமையே தவிர அவரைப் புறக்கணித்து விட்டு அரியணையில் அமருவது அல்ல. கடமையைப் புறக்கணித்து விட்டு நிற்கும் எவனும் எந்தப் பதவிக்கும் தகுதியானவனல்ல.பதவிக்கான தகுதி கடமையுணர்வும் பொறுப்புணர்வும் தானேயன்றி அவற்றின் புறக்கணிப்புகளல்ல என்பார் தந்தையார். ஆகவே புறப்படுங்கள்" என்றார்கள்.

"என் தந்தையை அங்கே செக்கில் போட்டு ஆட்டுகிறார்களா அல்லது கிட்டியில் கட்டி இறுக்குகிறார்களா?" என்று கேட்டான் இளவரசன்.

"இவன் முட்டாளல்ல. முட்டாள்களில் கடைந்தெடுத்த முட்டாள்" என்று முணுமுணுத்த ஒற்றர்கள் "நீங்கள் தாமதித்தால் அது நடக்கும்" என்றார்கள்.

"எனக்கொரு யோசனை. என்னை விட சேனாதிபதி பகாசூரர் அறிவாளி. பலசாலி. மகாவீரர். அவரை அழைத்துச் சென்றால் மிகவும் பயனுள்ளதாக இருக்கும். அவரிப்போது வேலாபுரத்தில் (பேலூர்) இருக்கிறார்."

"நீங்கள் கூறுவது சரியான யோசனைதான் இளவரசே! ஆனால் எதிரிகளிடம் சிக்கியிருக்கும் மகாராஜா நீங்கள் தான் வரவேண்டும் என்று கட்டாயமாகச் சொல்லியிருக்கிறார். ஆகவே நீங்கள் தான் வரவேண்டும்."

"சரி. நாம் வேலாபுரத்திற்குப் போவோம். சேனாதிபதியிடம் கூறிவிட்டுப் புறப்படுவோம்."

"வேறு வினையே வேண்டாம். அவரிடம் சொன்னால் உங்களை அங்கே இருக்கச் சொல்லிவிட்டு அவர் படையோடு கிளம்பி விடுவார். காரியம் கெட்டுவிடும்."

"உண்மைதான். உண்மைதான்" என்று கூறிய இளவரசன் சேவகன் ஒருவனை வரவழைத்து "நான் கல்யாணபுரத்திற்குச்

செல்கிறேன். இந்தச் செய்தியைச் சேனாதிபதியிடம் ஒரு வாரம் கழித்துச் சொல்'' என்று கூறிவிட்டு ஒற்றர்களோடு கிளம்பினான்.

“சேவகர்களிடம் கல்யாணபுரத்திற்குச் செல்வதாக எதற்காகச் சொன்னீர்கள்?'' என்று கேட்டார்கள் ஒற்றர்கள்.

“அப்போது தான் சேனாதிபதி என்னைப் பின் தொடர்ந்து வரமாட்டார். அவர் வந்தால் திட்டம் கெட்டு விடும் அல்லவா?'' என்று கேட்டான் நரசிம்மன்.

“கிறுக்கனுக்கும் சில நேரம் உருப்படியாகப் பேச வரும் போலிருக்கிறது'' என்றெண்ணிக் கொண்டார்கள் ஒற்றர்கள்.

இளவரசனைக் கல்யாணபுரத்திற்குக் கொண்டு செல்வதற்குள் ஒற்றர்களுக்குப் போதும் போதும் என்றாகி விட்டது.

திடீர் திடீரென்று “எனக்கு விருப்பமில்லை. துவார சமுத்திரத் திற்கே (ஹளபீடு) திரும்பி விடலாம்'' என்று இளவரசன் சொல் வதும் ஒற்றர்கள் சமாதானப் படுத்துவதுமாகப் பயணம் நடந்தது.

சில நேரங்களில் பகல் நேரத்தில் உறங்கினான். இரவு நேரத்தில் பயணம் செய்தான்.

“பெண்களை என் கண்களில் காட்டவே மாட்டேன் என்கிறீர்களே?'' என்று குறை சொல்வான்.

“காட்டில் பெண்கள் இருப்பார்களா? பேய்கள் தான் இருக்கும். கல்யாணபுரத்திற்குப் போய் விட்டால் பெண்கள். பெண்கள். பெண்கள்தான். புகுந்து விளையாடலாம்'' என்பார்கள் ஒற்றர்கள்.

இளவரசனை அழைத்துச் செல்வதை விட ஓநாயை அழைத்துச் செல்வது எளியது என்று கருதிய அவர்கள் “மகனே! நீ கல்யாணபுரத்திற்கு வா. ஆளுக்கு பத்து உதை தராமல் உன்னை விட மாட்டோம்'' என்று சொல்லிக் கொண்டார்கள்.

பயணம் ரகசியமாக இருக்க வேண்டி இருந்ததாலும் சுற்று வழியாகச் செல்ல வேண்டி இருந்ததாலும் கல்யாணபுரத்திற்குச் செல்ல பத்து நாட்கள் பிடித்தது அவர்களுக்கு.

கல்யாணபுரக் கோட்டையை நெருங்கியதுமே “இது கல்யாணபுரத்து கோட்டையைப் போல் அல்லவா இருக்கிறது? இங்கேயா என் தந்தை இருக்கிறார்? இருக்காது. நீங்கள் ஏதோ சதி செய்கிறீர்கள்?'' என்று கூறிய இளவரசன் நரசிம்மன் வாளை உருவினான்.





வாழ்க்கையில் மரணம் என்பது மனிதனின் கடைசி வாயில் என்பதை விட அதில் வேறு எந்தச் சிறப்பும் இல்லை – ஜெயந்திகா




இளவரசன் அவ்வாறு கூறியதும் ஒற்றர்கள் தங்கள் விரல்களை வாயில் வைத்து குரலெழுப்பினார்கள். அதையடுத்து சாளுக்கிய வீரர்கள் பலர் ஓடி வந்து சூழ்ந்து கொண்டார்கள்.

"இவனைக் கைது செய்து கொண்டு செல்லுங்கள்" என்றார்கள் ஒற்றர்கள்.

"இது அநீதி. அதர்மம். அபாண்டம்" என்று சத்தமிட்டான் இளவரசன்.

சாளுக்கிய வீரர்கள் அவனைப் புரவியிலிருந்து அகற்றி கண்ணையும் வாயையும் கட்டி கோட்டைக்குள் கொண்டு சென்றார்கள்.

கோட்டைக்குள் போரமைச்சர் இல்லாததால் இளவரசனை அரண்மனையிலேயே இருந்த ஓர் அறையில் அடைத்து பூட்டினார்கள்.

நான்கு நாட்கள் கழித்த பின்பே போரமைச்சர் வந்தார்.

"இளவரசனைக் கொண்டு வந்து விட்டீர்களா?" என்று கேட்டார்.

"கொண்டு வந்து விட்டோம் ஐயா. படாத பாடு பட்டு அழைத்து வந்தோம். சரியான கிறுக்கனாக இருக்கிறான். பெண் பெண் என்று அலைகிறான். மாறி மாறிப் பேசுகிறான். அவனிடம் நீங்கள் என்ன சாதிக்கப் போகிறீர்களோ தெரியவில்லை" என்றார்கள் ஒற்றர்கள்.

"அது கிடக்கட்டும். அவன் இப்போது எங்கிருக்கிறான்? என்ன செய்கிறான்?"

"வந்து நாட்களாகிறது. தண்ணீரைத் தவிர எதையும் உண்ணவில்லை. தியான நிலையில் அமர்ந்திருக்கிறான். தியானம் செய்கிறானா என்பது தெரியவில்லை."

"அவனை அரண்மனையில் வைக்க வேண்டாம். என் பிரத்தியேக மாளிகைக்குப் பக்கத்தில் இருக்கும் பாழடைந்த அறையில் அடையுங்கள்."

"அங்கே ஒரே எறும்புகளாக இருக்குமே?"

"அவனும் முடிவில் எறும்பாகத்தானே ஆகப் போகிறான். ஆகவே அவனுக்கு அந்த இடமே உகந்தது."

உத்தரவுகளை இவ்வாறு இட்டு விட்டு வெளியேறிய போரமைச்சர் இளவரசன் இடமாற்றம் செய்யப்பட்டதை அறிந்த பின் நான்கு பேர்களை அழைத்துக் கொண்டு அங்கே சென்றார்.

அறைக் கதவைத் திறக்கச் சொன்னார்.

உள்ளேயிருந்து துர்நாற்றம் குப்பென்று வெளியே வந்தது.

போரமைச்சர் சிறிது நேரம் மூக்கைப் பிடித்துக் கொண்டு நின்றார்.

உள்ளே இருந்த இளவரசனோ தியானநிலையில் அமர்ந்திருந்தான்.

"குடலைப் புரட்டும் இந்த நாற்றத்திற்கிடையில் எப்படி இவன் தியானம் செய்கிறான்?" என்று தனக்குள் கேட்டுக் கொண்ட போரமைச்சர் "டேய்! இந்த உணவைச் சாப்பிடு" என்றார்.

இளவரசன் அசைய வில்லை.

போரமைச்சர் தன்னோடு வந்தவர்களில் ஒருவனைப் பார்த்து "நீ இவனது கை விரல்களில் உள்ள நகங்களைப் பீய்த்து எறி" என்றார்.

அடுத்த நிமிடம் கண்களைத் திறந்த இளவரசன் போரமைச்சரைப் பார்த்து "மகாராஜா! வேண்டாம். வேண்டாம். அப்படியெல்லாம் செய்யாதீர்கள். என்னால் தாங்க முடியாது. உணவைத் தரச் சொல்லுங்கள். உண்கிறேன்" என்றான் எழுந்து நின்று கொண்டு.

தன்னை இளவரசன் மகாராஜாவாக எண்ணிக் கொண்ட மடமையை எண்ணி உள்ளுக்குள் சிரித்துக் கொண்ட போரமைச்சர் "நான்கு நாட்களாக ஏன் உணவை வேண்டாம் என்றாய்?" என்று கேட்டார்.

"பசியெடுக்கவில்லை. மகாராஜா. வேறொன்றும் இல்லை."

"இப்போது பசி வந்து விட்டதா?"

"ஆமாம். அகோரப் பசி. உணவைக் கொடுங்கள் மகாராஜா."

"இதோ பார் நரசிம்மா. ஒற்றர்களிடம் விளையாடியது போல் என்னிடம் விளையாடாதே யாரையும் ஏமாற்றுபவன் நான். எவரிடமும் ஏமாற மாட்டேன். பெற்ற தாய் முதல் பிறந்த குழந்தை வரை ஈவு இரக்கமின்றிச் சித்திரவதைச் செய்பவன் நான். நான் கலியுக கம்சன். கடவுளே அஞ்சும் காலன். உன் கபட நாடகங்களை மூட்டைக் கட்டி விட்டு ஒழுங்காகப் பதில் சொல். உன் நகங்களைப் பீய்த்து எறிய நான் கட்டளையிட்ட பின் தான் பயந்து போய் சாப்பிடுவதற்கு முன் வந்தாய். உண்மையா? இல்லையா?"

"அதுவும் உண்மை. எனக்குப் பசியெடுப்பதும் உண்மை."

"இன்னும் எத்தனை நாட்களுக்கு உணவில்லாமல் இருப்பாய்?"

"ஒரு நாள் கூட முடியாது மகாராஜா. பசியெடுக்காமல் எத்தனை நாள் இருக்க முடியும் என்று பார்த்தேன்."

"எதற்காக அந்த பரீட்சை?"

"பசியைக் கட்டுப்படுத்தப் பயின்றால் தான் இக்கெட்டுகளைச் சமாளிக்க முடியும் என்பார் என் குருநாதர்."

"யாரவன் குருநாதன்?"

"நீலகேசி. சமண மாமுனிவர். அவர் கூறியதைத்தான் இங்கே பயிற்சி செய்தேன். இன்று தாங்கள் வாராதிருந்தால் பசி பசி என்று கத்தியிருப்பேன். செத்திருப்பேன். நல்ல வேளை யாகத் தாங்கள் வந்து விட்டீர்கள். உணவைக் கொடுங்கள் மகாராஜா."

பணியாளனிடம் உணவைக் கொடுக்கச் சொன்னார் போரமைச்சர்.

இளவரசன் அதை வாங்கி ஒரே மூச்சாக உண்டு விட்டு "இன்னும் கொஞ்சம் கிடைக்குமா மகாராஜா?" என்று கேட்டான்.

"இந்தச் சகிக்க முடியாத நாற்றத்தில் இவனால் எப்படி உண்ண முடிகிறது? ஒரு வேளை இவன் முன் பிறவியில் பேயாக இருந்திருப்பானோ?" என்றெண்ணிக் கொண்ட போரமைச்சர் "நீ விருந்தாளியல்ல விருந்து வைப்பதற்கு. கைதி. இவ்வளவுதான் தர முடியும்" என்றார்.

"நான்கு நாட்களாக நான் உண்ணவில்லை மகாராஜா. அது மிச்சம் தானே? அதில் கொஞ்சம் தரக் கூடாதா?"

போரமைச்சருக்கு அவனைக் கண்டு உள்ளூரச் சிரிப்பாக இருந்தது. ஆனாலும் சிரிக்கவில்லை.

"பிறகு தருகிறேன். உணவைப் பற்றிய பேச்சை நிறுத்தி விட்டு நான் கேட்கும் கேள்விகளுக்கு ஒழுங்காக பதில் சொல். இல்லையென்றால் பற்களை அகற்றி பொக்கையாக்கி விடுவேன். நீ இங்கே எதற்காக அழைத்து வரப்பட்டிருக்கிறாய் தெரியுமா?" என்று கேட்டார்.

"அது எதுவானால் என்ன மகாராஜா? என் தந்தைக்கு என்னைப் பிடிக்காது. எனக்குத் தந்தையைப் பிடிக்காது. அவர் செத்தாலும் பரவாயில்லை. என்னை தயவு செய்து விட்டு விடுங்கள். உங்களை என்றைக்கும் போற்றியபடியே இருப்பேன். சாளுக்கியச் சக்கிரவர்த்தி விக்கிரமாதித்தர் வாழ்க வாழ்க. சாளுக்கிய சாம்ராஜ்யம் வாழ்க வாழ்க. ஹொய்சளர்கள் வீழ்க. விட்டலராயன் ஒழிக" என்றான் இளவரசன்.

போரமைச்சருக்கு அவன் பிடிபடவில்லை.

"இளவரசனுக்குப் பைத்தியம் பிடித்திருக்குமோ? வைத்தியம் செய்ய வேண்டியிருக்குமோ?" என்று தனக்குள் கேட்டுக்கொண்ட அவர் "டேய்! உளறுவதை நிறுத்து" என்று அதட்டினார்.

"நான் உளறவில்லை மகாராஜா. என்னைத் திருப்பி அனுப்பா விட்டாலும் பரவாயில்லை. துவார சமுத்திரத்தை (ஹளபீடு) உங்களுக்கு உரியது என்று எழுதிக் கொடுத்து விடுகிறேன். என்னைச் சித்திரவதை செய்யாமல் ஏதாவது ஒரு வேலையைக் கொடுங்கள் செய்கிறேன். பெண்கள் இருக்கும் இடமாக இருந்தால் நன்றாக இருக்கும்" என்றான் இளவரசன்.

"இவனிடம் பேசிக் கொண்டிருந்தால் முடியாது. சித்திரவதை செய்தால் தான் வழிக்கு வருவான்" என்று கருதிய போரமைச்சர் தன்னோடு வந்தவர்களைப் பார்த்து "இவனது பற்களை உடையுங்கள்" என்றார்.

இளவரசனோ அலறினான்.

"ஐயோ! என்னை அடிக்கிறார்கள். உதைக்கிறார்கள். ஐய்யய்யோ! வேண்டாம். வேண்டாம். வலிக்கிறது. ஐய்யய்யோ! சித்திரவதை! சித்திரவதை" என்று அலறிய படி தரையில் உருண்டு புரண்டான்.

போரமைச்சருக்கு அங்கே இன்னமும் இருந்தால் பைத்தியம் பிடித்து விடும் போலிருந்தது. அறைக் கதவைச் சாத்திப் பூட்டி விட்டு அரண்மனைக்குத் திரும்பினார்.

அமாத்யரை ஒரு வழியாக்கிய அவருக்கு ஒன்றுமில்லாத இளவரசன் நரசிம்மனை எப்படிக் கையாளுவது என்பது விளங்கவில்லை.

அவனைப் பணயப் பொருளாக வைத்து பெரிய திட்டத்தைத் தீட்டி யிருந்த அவருக்கு அவன் வெறும் குப்பை என்று தோன்றியது.

நாகப் பாம்பாக இருப்பான் என்று எதிர்பார்க்கப்பட்டவன் வெறும் எலி வாலாக இருந்ததால் என்ன செய்வதென்று புரியவில்லை.

அப்போது அந்தப்புரத் தாதி வந்தாள்.

"பிரபு! மகா அழகி ஒருத்தி. கவர்ச்சியாகவும் இருக்கிறாள். கலக்கலாகவும் இருக்கிறாள். உங்களை அடைந்தே தீர வேண்டும் என்கிறாள்" என்றாள்.

"பீடையே! போ. நேர காலம் தெரியாமல் பேச வந்து விட்டாய்" என்று எரிந்து விழுந்தார் அவர்.

"பிரபு! அவள் உங்களை ஏளனம் செய்கிறாள். கிழவர் என்கிறார். நொண்டி என்கிறாள். கையாலாகாதவர் என்கிறாள். தன்னை வெல்ல எந்த ஆடவனாலும் முடியாது என்கிறாள். சுற்றி நின்றிருந்தவர்கள் சிரிக்கிறார்கள்" என்றாள் தாதி.

"சிரித்தவர்களை மடக்கி மானபங்கம் படுத்து. அந்த நாயை என் பிரத்தியேக மாளிகைக்குக் கொண்டு வா, இப்போதே; இந்த நிமிடமே" என்று கூறிவிட்டு பிரத்தியேக மாளிகைக்குச் சென்றார்.

சில நிமிடங்களில் அவள் அங்கே வந்தாள்.

தாதி கூறியபடியே அப்பெண் கவர்ச்சிக் குன்றாகத்தான் இருந்தாள்.

அங்கங்கள் மேலும் கீழுமாக வெளிப்பட்டுக் கொண்டிருந் ததைக் கண்டு அவள் வெட்கப்பட்டதாகத் தோன்றவில்லை. கர்வப்பட்டுக் கொண்டதாகவே தோன்றியது.

அவளைப் பார்த்து "அந்த நாய் நீதானா?" என்று கேட்டார் போரமைச்சர்.

"ஆமாம்" என்றாள் அவள் இடுப்பில் தன் கைகளை ஊன்றியபடி.

"உனக்கு அத்தனை கர்வமா?"

"ஆமாம்."

"என்னை நிமிர்ந்து பார்த்தவர்களுக்கே சமாதியைக் கட்டியவன் நான். நீ எதிர்த்துப் பேசுகிறாய்."

"நீங்கள் இன்னமும் பேசிக் கொண்டுதான் இருக்கிறீர்கள். என் பேச்சு உண்மை என்பதை நிரூபிக்கிறீர்கள். சந்தேகமில்லாமல் நீங்கள் கிழவர்தான்."

“அதை எவ்வாறு முடிவுகட்டினாய்? இங்கே இருக்கும் பெண்களைக் கண்டாயா? அவர்களிடம் கேட்டாயா?”

“பயனில்லை.”

“ஏன்?”

“காம அனுபவத்தைப் பொறுத்தவரை பெண்கள் உண்மையைச் சொல்ல மாட்டார்கள். மறைத்து வைத்துக் கொள்வதுதான் அவர்களுக்குச் சுகம்.”

“பெண்ணே! இன்றைக்கு விதி உன்னோடு விளையாடுகிறது. அறிந்தோ அறியாமலோ வலையில் சிக்கும் ஜீவன்களை யாரும் விடுவிப்பதில்லை. உன் நிலையும் அதுதான். உலகத்தைக் கடைசியாகப் பார்த்து விடு.”

“நான் பார்க்க விரும்புவது சொர்க்கத்தை மட்டும்தான். அதைத் தர இயலாதவர்கள் தோல்வியை ஒப்புக் கொள்வதே சிறந்தது.”

“அழகான பெண்ணே! ஆச்சரியமாக இருக்கிறது எனக்கு. எதற்காக வீணாக வந்து என்னிடம் சாக முற்படுகிறாய்? அழகிருக்கும் உன்னிடம் அறிவில்லையே! கவர்ச்சி இருக்கும் உன்னிடம் கவனம் இல்லையே!”

“மரணம் எல்லோருக்கும் வரும். எப்போது வேண்டுமானாலும் வரும். ஆனால் எந்த உயிரினமும் மரணத்தை நினைத்துச் செயல்படுவதற்குத் தயங்குவதில்லை. வாழ்க்கையில் மரணம் என்பது மனிதனின் கடைசி வாயில் என்பதை விட அதில் வேறு எந்தச் சிறப்பும் இல்லை. உங்களைப் பற்றி நிறையக் கேள்விப்பட்டேன். அதுவும் இந்த விஷயத்தில் பலரும் சொன்னார்கள். நான் நம்பவில்லை. ஏனென்றால் இளைஞர்களையே கலங்கடித்தவள் நான். வேண்டாம் என்று பலர் பாதியிலேயே ஓடிப் போயிருக்கிறார்கள். இந்த நிலையில் அறுபது வயதான நீங்கள் அலட்டிக் கொள்வது எனக்கு மிகையாக இருந்தது. ஆகவே உங்களை முறியடித்து வெற்றி பெறவே வந்தேன். நான் தயார். நீங்கள் தயாரா?”

“பெண்ணே! நீ பெண்ணேயல்ல. பிசாசு.”

“உண்மை. நான் பிசாசு. நீங்களோ கொசு.”

போரமைச்சர் அதற்கு மேலும் பொறுமையோடு இருக்கவோ பேசிக் கொண்டிருக்கவோ தயாராக இல்லை.

“வா இப்போது. பார் இப்போது” என்று சொல்லி அவளைத் தூக்கிக் கட்டிலில் எரிந்து விட்டு தானும் படுத்தார்.

சில நிமிடங்கள்தான்.

அந்தப் பெண் அந்தக் காட்சியைக் கண்டு அலறாத குறையாக அசைந்து போனாள்.

மனம் திக்கென்றது.

இப்படியும் ஒன்று இருக்குமா என்று கதி கலங்கினாள்.

அவரோ "ம். ஆகட்டும்" என்றான்.

அவள் "வேண்டாம்" என்றாள்.

"நாயே! இனி உன் விருப்பத்திற்கோ என் விருப்பத்திற்கோ இடமில்லை. நான் வேண்டாமென்றாலும் காமமது கேட்காது" என்று சொல்லி அவளை இழுத்தார்.

இரண்டு நாழிகை நேரம்.

அந்தப் பெண் கதறினாள். துடித்தாள்.

"என்னையா கிழவன் என்றாய்? பேயே! நான் பேய்களையும் ஆள்பவன். புரிந்ததா? இனி வாயைத் திறந்து வீம்புகள் பேசுவாயா?" என்றார் அவர்.

"மாட்டேன்" என்றாள் அவள் கரையும் குரலில்.

"தோற்றது யார்?"

"நான் தான்."

"உன் வாயையும் கிழிக்கிறேன் பார்" என்று சொன்ன அவர் அவ்வாறே செய்தார்.

குற்றுயிரும் கொலையுயிருமாய் இருந்தாள் அப்பெண்.

"உன் பெயரென்ன?" என்று கேட்டார் அவர்.

"ஜெயந்திகா" என்று முனகினாள் அவள்.

"தோற்றுப் போன உனக்கு ஜெயந்தி என்ற பெயரா? எழுந்து ஓடு. முடிந்தால் உயிரைக் காப்பாற்றிக் கொள்" என்றார் போரமைச்சர்.

உடல் முழுதும் செருக்கு அவரை ஆட்கொண்டிருந்தது.

செருப்பைப் போல கழற்றிவிடப்பட்ட அப்பெண் முனகிய படியே எழுந்தாள். நிற்க முடியாமல் விழுந்தாள்.

போரமைச்சர் தன்னைச் சீர்படுத்திக் கொண்டு மணியை ஒலித்தார்.

தாதி வந்தாள்.

"மயங்கிக் கிடக்கிறாள் மதிகெட்டவள். தூக்கிச் செல். பிழைத்தால் பிழைக்கட்டும். செத்தால் சாகட்டும்" என்றார் அவர்.

தாதி, பணிப் பெண்களை அழைத்து ஜெயந்திகாவைத் தூக்கிச் சென்றனர்.

அறையை விட்டு வெளியே வந்த போரமைச்சர் வேட்டையாடி முடித்த சிங்கம் போல் சிலிர்த்துக் கொண்டு மாளிகையின் நிலாமுற்றத்திற்கு வந்தார்.

அப்போது இசையொன்று அவரைத் தழுவுவது போல வந்தது.

**"காற்றில் வரும் கீதமே - என்**
**கண்ணனை நீ அறிவாயா?"-**

அவரது மதி மயங்கியது.

உலகில் ஆயிரமாயிரம் விஷயங்கள் மயக்கத்தைத் தரக் கூடியனவாக இருக்கலாம். ஆனால் ஆரோக்கியமான மயக்கத்தைத் தரக் கூடியது இசை ஒன்றுதான்.

அது அவருக்குப் புரிந்தது.

"ஆகா! இந்த இசை அமாத்யர் மகள் மாளவிகாவின் இசையல்லவோ? அவள் தானே பாடுகிறாள்? அந்த இசையில் தான் எத்தனை இனிமை?" என்று முணுமுணுத்தார்.

அவருக்கு ஒரு யோசனை தோன்றியது.

மறுநாள் மாளவிகாவை அரண்மனைக்கு வரச் சொன்னார்.

வந்தாள்.

"வா. மாளவிகா. நேந்று நீ பாடிய பாடல் காற்றில் வந்து என்னை ஆற்றியது. அருமையான இசை. அப்படியொரு இசையை என் வாழ்நாளில் இதுவரை கேட்டதில்லை. உன்னோடு இசையும் சேர்ந்தே பிறந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. நீ ஒரு அபூர்வ சிருஷ்டி" என்றார் போரமைச்சர் மனம் திறந்து.

"இசை பெரும்பாலானவர்களுக்கு உள்ளுக்குள் இருக்கிறது ஐயா. அதை வெளியே வர வாய்ப்புகள் வரும் போது தான் அதன் இனிமையை இந்த உலகம் அறிந்து கொள்கிறது. உள்ளுக்குள் பாடிக் கொண்டிருந்த என்னை வாயைத் திறந்து பாட வைத்தது நீங்கள் தான். எல்லாப் பெருமையும் உங்களையே சேரும்" என்றாள் மாளவிகா.

"தவறு மாளவிகா. குயிலுக்கு யார் வாய்ப்பு தருகிறார்கள். அது எங்கே இருந்தாலும் பாடுகிறது. கேட்போரை மயக்குகிறது. அது போலத்தான் நீயும். இப்போது ஒரு பாடலைப் பாடுவாயா?"

---

* பாடலாசிரியருக்கு நன்றி.

–"பிருந்தா வனத்தில் கண்ணன் வளர்ந்த
அந்த நாளும் வந்திடாதோ?
நந்த குமாரன் விந்தை புரிந்த
அந்த நாளும் வந்திடாதோ?

- பிருந்தா

அனைவரும் கூடி அவன்புகழ் பாடி
நிர்மல யமுனா நதியினில் ஆடி
வலம் வலம் திரிந்து வரதனைத் தேடி
அனுதினம் அமுதனை தரிசனம் செய்த
அந்த நாளும் வந்திடாதோ?

- பிருந்தா

மாநிலம் நாடிடும் மங்கைய ரோடு
மாதவனோடும் மயங்கிடும் போது
தேனின் இனித்திடும் தீங்குழல் ஊதி
மானிடர் தேவரின் மேலெனச் செய்தான்
அந்த நாளும் வந்திடாதோ?

- பிருந்தா

கானனம் சென்று ஆநிரை கன்று
கருணைமாமுகில் மேய்த்திட கன்று
புனித மேனியில் புழுதியும் கண்டு
வானோர் பூமியை நினைத்தது உண்டு
அந்த நாளும் வந்திடாதோ?*

- பிருந்தா

- பாடினாள் மாளவிகா.

"பாட்டென்றால் இது பாட்டு. இசையென்றால் இது இசை. குரலென்றால் இது குரல். உன் குரலைக் கேட்டால் குயிலும் மயங்கும். குயிலென்ன! மயிலும் மான்களும் மயங்கும். வானவர் அனைவரும் மயங்குவர்" என்று பாராட்டிய போரமைச்சர்-

"உன்னால் எனக்கொரு காரியம் நடக்க வேண்டும்" என்றார்.

"சொல்லுங்கள் ஐயா"

"என்னால் முடியாதது. உன்னால் முடிய வேண்டும்."

"அப்படியொரு காரியம் இருக்க வேண்டாம். போரமைச்சர் பெருமானால் முடியாத காரியம் பேதைப் பெண்ணால் முடிவதை விட முடியாமல் போவதே கௌரவமானது."

* பாடலாசிரியருக்கு நன்றி.

"அப்படியல்ல மாளவிகா. மலையை உடைக்க வேண்டு மானால் வெடிகள் பயன்படலாம். ஆனால் அதில் சிலையை வடிக்க உளியினால் தான் முடியும். இப்போது எனக்கு உளியின் ஓசை தேவையாக இருக்கிறது."

"விவரத்தைச் சொல்லுங்கள் ஐயா"

"ஹொய்சள இளவரசன் நரசிம்மன் இங்கே வரவழிக்கப் பட்டுள்ளான். அவனை நான் கற்பனை செய்திருந்த நிலை வேறு. அவன் காணப்படும் நிலை வேறு. அவன் வெகுளியா? சோம்பேறியா? விவஸ்தையில்லாதவனா? பைத்தியக்காரனா என்று எதுவும் புரியவில்லை. அவன் எப்படி இளவரசனாக இருக்கிறான் என்றே தெரியவில்லை. அவனைச் செதுக்க நீதான் உளியாக மாற வேண்டும்."

"பைத்தியக்காரனை நான் என்ன செய்ய முடியும் ஐயா?"

"அவனிடம் ஒரு பலவீனம் இருக்கிறது. அதைப் பயன்படுத்தி காரியத்தை நிறைவேற்ற போரமைச்சரால் முடியாது. பெண்ணால் தான் முடியும்."

"என்ன பலவீனம் ஐயா?"

"அவன் பெண்பித்தன். அலைகிறான்."

"என்ன காரியம் என்று சொல்லுங்கள்."

சொன்னார் போரமைச்சர்.





சிலநேரங்களில் விதி என்ற சொல்லுக்கும் சதி என்ற சொல்லுக்கும் வித்தியாசம் இருப்பதாகத் தோன்றாது – நரசிம்மன்




மாளவிகா பேசாமல் மௌனமாக நின்றாள்.

அதைக் கண்ட போரமைச்சர் "என்ன யோசிக்கிறாய்? அவனால் ஏதாவது களங்கம் நடந்து விடும் என்று அஞ்சுகிறாயா? அப்படி எதுவும் நடக்காது. உண்மையில் நான் தான் அஞ்ச வேண்டும். ஏனென்றால் அவன் நிராயுதபாணி. நீயோ ஆயுதபாணி" என்றார்.

"என்ன சொல்கிறீர்கள்?"

"பெண்களுக்கு அவர்களது அங்கங்களே ஆயுதங்கள். அவற்றால் தாக்கப்படாத ஆண்கள் உண்டா? நீ கவலைப் படாதே மாளவிகா. அப்படி எதுவும் நிகழாது. அவன் ஒரு வேளை அத்துமீறினால் இதோ இந்தக் குறுவாளினால் குத்திக் கொன்று விடு" என்று சொல்லிக் குறுவாளை நீட்டினார் போரமைச்சர்.

"வேண்டாம் ஐயா. நீங்கள் விரும்பிய காரியத்தை வெற்றி கரமாக முடிக்கவே நான் முயல்வேன். வேறெந்தச் சம்பவமும் நடக்க வேண்டாம்" என்றாள் மாளவிகா.

மாளவிகா அங்கிருந்து கிளம்பிய பின் சேவகர்களை அழைத்த போரமைச்சர் ஹொய்சள இளவரசனை துர்நாற்றம் வீசும் அறையிலிருந்து அகற்றி, நல்ல உணவுகளை அளித்து மாளவிகா இருக்கும் மலைக்குகைப் பகுதியிலேயே உள்ள அறைக்கு மாற்றும்படிக் கட்டளையிட்டார். அறையானது சுத்தமாக இருக்க வேண்டும் என்றும் அங்கே கட்டில், மெத்தை போன்ற எதுவும் இருக்கக் கூடாது என்றும் அறிவுறுத்தினார்.

மாளவிகா அந்த அறைக்குச் செல்லும் போது அவர்களை யாரும் தொந்தரவு செய்ய வேண்டாம் என்றும் தூரத்திலிருந்து கவனித்தால் போதும் என்றும் கூறினார்.

இளவரசன் தனக்கு நடந்த உபசாரங்களைப் பற்றி பதற்ற மடையவில்லை. பரமானந்தப் படவுமில்லை.

சேவகர்களிடம் "இங்கே பெண்கள் வரமாட்டார்களா? எங்கேயும் எப்போதும் ஆண்கள் தானா? ஒருத்தி கூடக் கண்ணில் படவில்லையே?" என்று கேட்டான்.

"விரைவிலேயே வருவாள். பொறுமையாக இருங்கள்" என்றார்கள் சேவகர்கள்.

"என் தந்தையார் எங்கே இருக்கிறார்?"

"எங்களுக்குத் தெரியாது. தண்ணீரோ, உணவோ, வேறு ஏதாவதோ தேவையென்றால் மணியை அடியுங்கள். சேவகர்கள் வருவார்கள்."

இளவரசன் மேற்கொண்டு எதுவும் பேசவில்லை.

அறையிலேயே தரையில் படுத்துக் கொண்டான்.

இரண்டு நாழிகைகள் கழித்து கதவைத் திறந்து கொண்டு வந்தாள் மாளவிகா.

என்றைக்கும் இல்லாத அலங்காரங்களைச் செய்து கொண்ட மணப்பெண்ணைப் போல வந்தாள்.

"இளவரசருக்கு வணக்கம்" - என்றாள் அவனைப் பார்த்து விட்டு.

அவன் எழுந்து கொள்ளாமல் "நீ சக்கிரவர்த்தியின் திருமகளா?" என்று கேட்டான்.

"இல்லை. நான் சோலை மலர். யாருக்கும் உறவில்லை. யாருக்கும் சொந்தமில்லை" என்றாள் மாளவிகா சாதாரணமான குரலில்.

"உன் குரல் இனிமையாக இருக்கிறது. எல்லாமும் அப்படித் தான் இருக்கும் என்று நினைக்கிறேன்" என்றான் இளவரசன் எழுந்து அமர்ந்து கொண்டு.

"என் குரல் இனிமையானது என்பது எனக்குத் தெரியும். மற்ற விஷயங்களைப் பற்றி எனக்குத் தெரியாது. உங்களுக்குத் தெரிந்திருக்கலாம்."

"எப்படிச் சொல்கிறாய்?"

"சொன்னார்கள்."

"யார்?"

"அது எதற்கு? உங்களைப் பற்றிச் சொன்னார்கள்."

"என்ன சொன்னார்கள்?"

"இளவரசே! ஏதேதோ சொன்னார்கள். அதையெல்லாம் பட்டியல் போட்டுச் சொல்வது அநாகரிகமாகும். உங்களுக்குப் பெண்கள் என்றால் அலாதிப் பிரியமாமே?"

"உண்மைதான். அதற்கென்ன?"

"பெண்கள் இல்லாமல் ஒரு நாளும் கழியாதாமே?"

"இருக்கலாம்."

"அதென்ன உத்தேசமாகச் சொல்கிறீர்கள்?"

"உண்மையை ஒப்புக் கொள்வேன். பொய்களுக்குப் பதில் சொல்வதில்லை."

"நீங்கள் என்ன உளறுகிறீர்கள்?"

"துவார சமுத்திரத்தை (ஹளபீடு) விட்டுப் புறப்பட்டு பத்து நாட்களுக்கு மேலாகிறது. ஒருநாள் கூட பெண்ணைக் காணவில்லை. பேசவில்லை. ஆகவே ஒவ்வொரு நாளும் எனக்குப் பெண்ணோடுதான் கழிகிறது என்பது பொய்."

"எனக்குத் தெரியும். அது மிகையான வார்த்தைதான். பத்து நாட்களுக்குப் பிறகு நான் வந்திருக்கிறேன். நீங்கள் சந்தோஷத்தில் துள்ளி குதிப்பதாகத் தோன்றவில்லையே?"

"சந்தோஷமானது பலவகைகளில் வெளிப்படும். பிறர் எதிர்பார்க்கிற மாதிரி அது வெளிப்பட வேண்டிய அவசியமில்லை. ஞானிகள் மௌனத்திலேயே பேசுகிறார்கள். தங்களுக்குள்ளேயே ஆனந்தத்தை வெளிப்படுத்துகிறார்கள்."

"நீங்கள் நான் வந்ததால் சந்தோஷப்படுகிறீர்களா இல்லையா?"

"உன் பெயர் என்ன பெண்ணே?"

"மாளவிகா."

"உன் தொழில்?"

"ஏதுமில்லை."

"பொழுது போக்கு?"

"பாடுவேன்."

"ஆகவே தான் குரல் பேசும் போது கூட அழகாக இருக்கிறது. உன்னை இங்கே அனுப்பியது யார்?"

மாளவிகாவிற்கு ஒரு மாதிரியாக இருந்தது.

இளவரசனைப் பற்றிப் போரமைச்சர் சொன்னது எதுவும் பொருத்தமாக இல்லை.

ஒருவேளை இளவரசன் நடிக்கிறானோ என்றும் சந்தேகமகா இருந்தது.

எனவே அவனைப் பற்றி ஒரு முடிவுக்கு வராமல் "நேற்று உங்களைச் சந்தித்தவர்தான் அனுப்பினார்?"

"அவரா அனுப்பினார்?"

"ஆமாம்."

"அப்படியானால் நீ இங்கு எல்லாவற்றுக்கும் தயாராகத்தான் வந்திருக்கிறாயா?"

"இளவரசே! உங்கள் பேச்சு நாகரிகமாக இல்லை."

"தனிமையில் இருக்கும் ஆடவனிடம் தனியாக ஒரு பெண்ணை அனுப்புவது நாகரிகமான காரியமா? நீ இங்கே வந்தது எனக்குத் தவம் செய்யக் கற்றுக் கொடுக்கவா? நாகரிகம் என்பது பந்தைப் போன்றது. அதைச் சுவற்றில் எறிந்தால் எறிந்தவனிடமே வரும். சேற்றில் எறிந்தால் சேறுதான் தெறிக்கும்."

"நான் சென்று விடட்டுமா?"

"நான் அழைத்தா நீ வந்தாய்? நீ போவதற்கு நான் அனுமதியா தர வேண்டும்?"

மாளவிகா சற்றே தடுமாறினாள்.

அதைக் கவனித்த இளவரசன் "மாளவிகா! உனக்கென்ன பிரச்சனை?" என்று கேட்டான்.

மாளவிகாவிற்கு இளவரசன் நடிப்பதாகத் தோன்றவில்லை. அவன் பெண் பித்தனாக இருப்பான் என்றும் எண்ண முடியவில்லை. அவன் வெகுளியாகவும் இல்லை. தெளிவாக இருந்தான்.

அவனிடம் மற்றவர்கள்தான் ஏமாந்திருக்க வேண்டும் என்று தோன்றியது. போரமைச்சர் அவளை அனுப்பிய போது அவளிடம் ஒரு திட்டம் இருந்தது. இளவரசனை நேரில் கண்டு பேசிய போது வேறொரு திட்டத்தை அவள் வகுத்துக் கொண்டாள்.

"இளவரசே! எனக்குள் இருப்பதை இறைவன் மட்டுமே அறிவான். எனக்குப் பின்னால் இருப்பதை நான் அறிவேன். எனக்குப் பின்னால் இருப்பது அரசியல்" என்றாள் சற்றே அசதியோடு.

"பெண் முன்னால் இருக்கிறாளா பின்னால் இருக்கிறாளா என்பதில் வித்தியாசம் இருக்கலாம். ஆனால் பெண் சம்பந்தப்

படாத அரசியல் எந்த நாட்டிலும் இல்லை'' என்றான் இளவரசன் நரசிம்மன்.

“இளவரசே! நான் அரசியலுக்கு விரும்பி வரவில்லை. விதி வரவழைத்து விட்டது'' என்றாள் மாளவிகா.

“சில நேரங்களில் விதி என்ற சொல்லுக்கும் சதி என்ற சொல்லுக்கும் வித்தியாசம் இருப்பதாகத் தோன்றாது பெண்ணே. வாழ்க்கை வினோதமானது. நாம் எதிர்பார்ப்பதற்கு நேர்மாறான வாழ்க்கைதான் நம்மை நோக்கி வந்து கொண்டிருக்கும்.''

“இளவரசே! நீங்கள் இங்கே எதற்காக அழைத்து வரப் பட்டீர்கள் தெரியுமா?''

“என் தந்தை இங்கே இருப்பதாகவும் அவரை மீட்க நான் வர வேண்டும் என்றும் கூறப்பட்டது.''

“அதை நீங்கள் நம்பினீர்களா?''

“இல்லை.''

“ஏன்?''

“என் தந்தையைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். அவர் எங்கேயும் யாரிடமும் சிக்கிக் கொள்பவர் அல்ல. நிச்சயமாகக் கல்யாணபுரத்திற்கு வந்து அவர் சிக்கிக் கொள்ள மாட்டார். இங்கே என்னை அழைத்து வந்ததுமே எனக்கது புரிந்து விட்டது.''

“பிறகு ஏன் ஒற்றர்கள் அழைத்த போது ஒப்புக் கொண்டு வந்தீர்கள்?''

“என் தந்தை எதிரியிடம் சிக்கிக் கொண்டதாகவும் தன்னை மீட்க என்னை வரச் சொன்னார் என்றும் சொல்லப்பட்ட போது நான் அதை நம்பவில்லை. அவர் சிக்க மாட்டார் என்பது ஒன்று. சிக்கியிருந்தால் மீட்பதற்கு என்னை அழைக்க மாட்டார் என்பது இன்னொன்று. எனவே ஏதோ சதி நடக்கிறது என்று சந்தேகிக்கிறேன். அதை அறிந்து கொள்ளவே வந்தேன்.''

“உண்மைக் காரணம் என்ன என்பது உங்களுக்குத் தெரியுமா?''

“விரைவில் தெரிந்து கொள்வேன்.''

“நான் சொன்னால் தெரிந்து கொள்ள மாட்டீர்களா?''

“இதைச் சொல்லவா நீ வந்தாய்? இதைச் சொல்லவா உன்னை அனுப்பி வைத்தார்கள்? ஆரம்பத்தில் நீ இவ்வாறு சொல்ல வில்லையே?''

"உண்மைதான் இளவரசே! நான் ஆரம்பத்தில் என்னை அனுப்பியவர்களுக்காகத்தான் வந்தேன். இப்போது மாற்றிக் கொண்டு நானாகப் பேசுகிறேன்."

"ஏன் இந்த மாற்றம்?"

"உங்களைப் பெண் பித்தர் என்றார்கள். கோழை என்றார்கள். வெகுளி என்றார்கள். முட்டாள் என்றார்கள். ஆனால் நேரில் பார்த்தபின் அது தவறு என்பதை உணர்ந்து கொண்டேன்."

"எப்படி?"

"இளவரசே! வெளி சாட்சியங்களை உள்ளுணர்வு புரிந்து கொள்வது உண்மையாக இருக்கும். வேறு விளக்கத்தை என்னால் கூற இயலாது."

"நான் நடிப்பதாக இருக்கக் கூடாதா!"

"என் உள்ளுணர்வு நீங்கள் நடிப்பதாகச் சொல்லவில்லை."

"மாளவிகா! நான் பெண் பித்தனாக இருந்தால் என்ன? இல்லாமல் போனால் என்ன? நான் வெகுளியாக இருந்தால் என்ன? இல்லாமல் போனால் என்ன? நீ எதற்காக மாற வேண்டும்?"

"என்னைச் சுற்றிச் சுற்றி வருவதெல்லாம் பொய்கள். அதர்மங்கள். பித்தலாட்டங்கள். நான் பற்றுக் கோடு இல்லாதக் கொடியாய் தவிக்கிறேன். என்னைத் தாங்கியிருந்த ஒரு தர்மமும் என்னை விட்டுப் போய் விட்டது. எனக்கு முன்னால் கானல் நீர் தான் இருந்தது. நீங்கள் நிஜ நீராக வந்திருப்பதாகத் தெரிந்தது. நிஜத்தைக் கண்டால் நிழல்கள் எதற்கு? ஆகவே தான் மாறுகிறேன்."

"நீ கூறிய உள்ளுணர்வு என்னிடமும் இருக்கிறது. அது உன்னை நம்பு என்கிறது. சதிகாரர்களுக்கிடையில் நீ நம்பிக்கை நட்சத்திரமாய் சுடர் விடுவதாகக் கூறுகிறது. எதிரியின் கோட்டைக்குள் சாதகமான எதையும் எதிர்பார்க்காத நிலையில் நீ வந்திருப்பது சந்தோஷமாக இருக்கிறது. உன்னை நம்புகிறேன். இனி நீ உன் மனதை விட்டுப் பேசலாம்."

"உள்ளங்கள் இரண்டு புரிந்து கொண்டால் அதற்கு இந்த உலகம் கூட நிகராகாது இளவரசே. நீங்களும் என்னைப் புரிந்து கொண்டதில் எனக்கு மகிழ்ச்சி. உங்களை இங்கே கடத்தி வந்ததற்குக் காரணம் உங்களைப் பணயமாக வைத்து உங்கள் தந்தையாரைச் சரணடையச் செய்வதற்காகத்தான்."

"எதிரிகள் யாரும் எங்களைப் புரிந்து கொள்ளவில்லை. இனி புரிந்து கொள்ளப் போவதில்லை."

"என்ன சொல்கிறீர்கள்?"

"என்னை வைத்து என் தந்தையையோ, என் தந்தையை வைத்து என்னையோ எதிரிகளால் ஒரு போதும் பிடிக்க முடியாது. எங்களுக்கு நாடு முக்கியமேயன்றி நாங்கள் அல்ல. நாங்கள் போனால் நாடு இருக்கும். நாடு போய்விட்டால் நாங்கள் இருந்து பயனில்லை. இதை சாளுக்கியர்கள் கூட புரிந்து கொள்ளாதது வியப்பாக இருக்கிறது. வேடிக்கையாக இருக்கிறது."

"போரமைச்சர் மிகவும் கொதித்துப் போயிருக்கிறார். சாளுக்கியர் ஆதிக்கத்திலிருந்த பதினெட்டு நாடுகளை வென்று உங்கள் தந்தையார் தனது ஆதிக்கத்திற்குக் கொண்டு வந்து ஹொய்சள சாம்ராஜ்யத்தை உருவாக்கி வருவது அவரை ருத்திரனாக்கியிருக்கிறது. உங்கள் தந்தையாரை எதிர்த்து, வென்று, நாடுகளை மீட்க அவர் தயாராக இல்லை. அது அவரால் முடியாத காரியம். எனவே உங்கள் தந்தையாரைச் சரணடைய வைத்து அவரது ஆணையைப் பெற்று பதினெட்டு நாடுகளையும் மீட்க வேண்டும் என்பது அவரது திட்டம். தந்தையாரை இங்கே இழுக்க வேண்டும் என்றால் அதற்கு உங்களைத் தூண்டிலாகப் பயன்படுத்த வேண்டும் என்று முயன்று உங்களை இங்கே கடத்தி வந்து விட்டார். சித்திர வதைகளுக்கும் கொடுமைகளுக்கும் பெயர் பெற்ற போரமைச்சர் நேற்று வந்து உங்களை மிரட்டிப் பார்த்திருக்கிறார். நீங்கள் என்ன செய்தீர்களோ தெரியவில்லை. திரும்பி வந்து விட்டார். பிறகு என்னை அழைத்து "அந்தப் பெண் பித்தனை நீ தான் வழிக்கு கொண்டு வர வேண்டும் என்றார். ஒப்புக் கொண்டேன். வந்தேன்" என்றாள் மாளவிகா.

அவளுக்குச் சரியான பாதையில் பயணத்தைத் துவங்கி யிருப்பதாகத் தோன்றியது. நான் நினைத்த திட்டம் மாறி விட்டாலும் மாறி விட்ட திட்டம் ஆறுதலாக இருந்தது. விதி தனக்கு நல் வழி காட்டுவதாகவே கருதினாள்.

அவள் கூறிய விஷயத்தை இளவரசன் சந்தேகிக்க வில்லை.

தன் தந்தையின் எழுச்சியும் வளர்ச்சியும் அசுர வேகமானது என்பதையும் அதை அறியும் சாளுக்கியர்கள் இப்படி ஏதாவது குறுக்கு வழியில்தான் முயல்வார்கள் என்பதும் அவனுக்குத் தெரிந்தே தான் இருந்தது. எனவே மாளவிகா கூறியதைக் கேட்ட பிறகு அவனுக்கு வியப்பு எதுவும் வரவில்லை.

"சரி மாளவிகா. நான் அறிய வந்த சதியைப் பற்றி அறிந்து கொண்டேன். இது எதிர்பார்க்கப்பட்ட விஷயம்தான். உன்

உத்தேசம் என்ன என்பதைச் சொல். உன்னை அனுப்பிய போரமைச்சர் உன் வரவுக்காகக் காத்திருப்பார்" என்றான் இளவரசன்.

"போரமைச்சரை உங்களுக்கு இதற்கு முன்னால் தெரியுமா?"

"தெரியாது."

"அதனால்தான் அவரை மகாராஜா என்று நினைத்துக் கொண்டு பேசினீர்களா நேற்று?"

"அதெல்லாம் வெறும் நாடகம். அதை விடு. விக்கிரமாதித்தரை எனக்குத் தெரியும். அவர் துவாரசமுத்திரத்திற்கு வந்திருக்கிறார். அவர் இப்போது இங்கில்லையா?"

"இருக்கிறார். நோய்வாய்ப்பட்டிருக்கிறார். அவரால் எதுவும் செய்ய முடியாது. அவரது புதல்வர் சோமேஸ்வரர் வேங்கி நாட்டில் இருக்கிறாராம். ஆகவே கல்யாணபுரத்து நிர்வாகத்தை போரமைச்சர் கைப்பற்றி இருக்கிறார். மகாராஜாவும் அவர் பிடியில் இருக்கிறார்."

"நேற்று அவர் நடந்து கொண்ட முறையைப் பார்த்த போது சந்தேகம் வந்தது. அது இப்போது சரியாகி விட்டது."

"போரமைச்சர் நிர்வாகியாக நடந்து கொள்ள வில்லை. நிர்மூலமாக்கும் சக்தியாக நடந்து வருகிறார். நகராதிபதியின் பிரதிநிதியாக இருந்து வருகிறார். மகாராஜாவாகவே கருதிக் கொண்டு செயல்படுகிறார். அவரால் என் குடும்பம் என்னாயிற்று தெரியுமா?"

"முதலில் நீ யார் என்ற உண்மையைச் சொல். சோலை மலர் - சோலை மயில் என்றெல்லாம் சொல்ல வேண்டாம்."

"கல்யாண புரத்தில் இருந்து வந்த மகத்தான நேர்மையாளர். தர்மாதிகாரி. அமாத்யரின் இரண்டாவது மகள் நான்."

"அமாத்யரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். என் தந்தையார் கூட அவரைச் சிலாகித்துப் பேசுவார்."

"போரமைச்சரின் அத்து மீறலும் அடாவடித் தனமும் இங்கே இருக்கும் பெரும்பாலானவர்களால் சகித்துக் கொள்ள முடியவில்லை. தகித்துப் போனார்கள். தவித்துப் போனார்கள். அமாத்யரிடம் முறையிட்டார்கள். அவர் போரமைச்சருக்கு நல்லுபதேசம் செய்தார். போரமைச்சருக்கு அவரது உபதேசம் அறவே பிடிக்க வில்லை. அவர் மீண்டும் உபதேசம் செய்யாமல் இருக்கவும் தனக்குத் தடையாக அமையாமல் இருக்கவும் போரமைச்சர் ஒரு குரூரமான முறையைக் கையாண்டார். அது

போன்ற ஒரு முறையை இதுவரை யாராவது கையாண்டிருப்பார்களா என்று தெரியவில்லை" என்று சொன்ன மாளவிகா போரமைச்சர் தனது சகோதரியை ஈவிரக்கமின்றி கற்பழித்துக் கொன்றதையும் அந்த அவமானம் தாங்காமல் அமாத்யர் தற்கொலை செய்து கொண்டதையும் தெரிவித்தாள்.

அவளையும் மீறி கண்கள் கலங்கின. கண்ணீரும் வெளிப்பட்டது.

"குற்றவாளிகளுக்குக் கூட இப்படியொரு தண்டனை கிடைக்காது. போரமைச்சர் ஒரு நேர்மையாளரை இப்படிக் குரூரமாகத் தண்டித்திருக்கிறார். மகாராஜா பேசும் நிலையில் இல்லை. மற்றவர்களோ தட்டிக் கேட்க அஞ்சுகிறார்கள். தட்டிக் கேட்டாலோ, சுட்டிக் காட்டினாலோ அவர்களது நாக்கையோ மூக்கையோ அறுத்து விட கட்டளையிடுகிறார் போரமைச்சர். கலகலப்பான கல்யாணபுரம் நரகமாகியிருக்கிறது. பூத்துக் குலுங்கும் மக்கள் பீய்த்தெறியப் பட்டிருக்கிறார்கள். மொட்டுக்கள் கூட மலர்வதற்கு அஞ்சுகின்றன. பொழுது விடியும் போது சேவல்கள் கூவுவதில்லை. நாய்கள் அழுகின்றன. உண்மையான பொழுது எப்போது விடியும் என்று எல்லோரும் காத்திருக்கிறார்கள்" என்றாள்.

"எல்லோரும் அவரைக் கண்டு அஞ்சி நடுங்கும் போது நீ எப்படி போரமைச்சருக்குத் தூதுவனானாய்?

சொன்னாள் அவள்.

"உன் இசைக்கு நீ நன்றிக்கடன் பட்டிருக்கிறாய் மாளவிகா. ஏதோ, ஒரு பாட்டு பாடு."

பாடினாள் அவள்.

"உன் இசைக்கு யார்தான் மயங்க மாட்டார்கள்? நீ போரமைச்சரை அணுகியது உன் பிழைப்பிற்காக அல்ல அவரைப் பழிவாங்குவதற்காகத் தான். சரிதானா?"

"உண்மைதான் இளவரசே. அமாத்யர் தற்கொலை செய்து கொள்வதற்கு முன்னால் என்னிடம் ஒரு பேழையைக் கொடுத்தார். ஒரு வாரம் கழித்து அதைத் திறந்து பார்க்கும் படிச் சொன்னார். நானும் அவ்வாறே செய்தேன். பேழைக்குள் இருந்த ஓலையில் என் சகோதரிக்கு நேர்ந்த கொடுமை கூறப் பட்டிருந்தது. அவமானம் தாங்காமல் தான் தற்கொலை செய்து கொள்ளப் போவதாகவும் அதில் கூறியிருந்த என் தந்தை என் கடமை பற்றிக் குறிப்பிட்டிருந்தார். "மாளவிகா! இனி உன் வாழ்வின் ஒரே லட்சியம் போரமைச்சரைப் பழிவாங்குவதாக மட்டுமே

இருக்க வேண்டும். அவரை நீ பழிவாங்குவதைக் காண்பவர்கள் சந்தோஷப்பட வேண்டும். பூரண திருப்தியை அடைய வேண்டும். இந்த விஷயத்தில் நீ அவசரப்படக் கூடாது. உணர்ச்சிவசப்படக் கூடாது. விவேகமாகச் செயல்பட்டு சரியாக நிறைவேற்றி வெற்றியடைய வேண்டும். அப்போது தான் என் ஆத்மாவும் உன் சகோதரியின் ஆத்மாவும் சாந்தியடைந்து விண்ணுலகம் செல்லும்" என்று குறிப்பிட்டிருந்தார். போரமைச்சரைப் பழிவாங்குவதற்குச் சிறந்த வழி அவரது நிழலில் இருப்பதுதான் சரி என்று தீர்மானித்து அவரிடம் உதவி கேட்டேன். அவர் என் இசையில் மயங்கினார். இப்போது உங்களிடம் தூதாகவும் அனுப்பியிருக்கிறார்."

"நல்லது மாளவிகா. என்னைப் பற்றிய கவலை இல்லை. உன் கவலை தான் என் கவலை. போரமைச்சர் உன் குடும்பத்திற்குச் செய்த மகா கொடுமை உண்மைதான். அதே சமயம் அவரால் இனி எந்த குடும்பமும் பாதிக்கக் கூடாது. அதற்கு ஒரு வழி செய்து விட்டுத்தான் நான் கல்யாணபுரத்தை விட்டுச் செல்லுவேன். என் திட்டம் இதுதான்" என்று சொல்லி தன் திட்டத்தைக் கூறினான் இளவரசன் நரசிம்மன்.





வினைகள் என்பது நிழலைப் போன்றது. நிழல் கூட சில நேரங்களில் பின் தொடராமல் இருக்கலாம். கர்மவினைகள் அப்படியல்ல. பிறவிகளைக் கடந்தும் அது பின் தொடரும் – ராஜவைத்தியர்




"மாளவிகா! நீ இங்கே வந்ததை யாராவது கவனித்தீர்களா?" என்று கேட்டான் நரசிம்மன்.

"தெரியவில்லை. ஆனால் கட்டாயமாகக் கண்காணித்துக் கொண்டுதான் இருப்பார்கள். போரமைச்சருக்கு என் மீது பூரணமான நம்பிக்கை வந்து விட்டதாகச் சொல்ல முடியாது" என்றாள் மாளவிகா.

"அப்படியானால் நம் நாடகத்தை ஆரம்பித்து விட வேண்டியது தான். நீ உன் அலங்காரத்தைக் கலைத்துக் கொள். ஆடைகளைக் கொஞ்சம் கிழித்துக் கொள். அறையை விட்டு வெளியே செல். சுற்றும் முற்றும் பார். வெட்கப் பட்டவளைப் போலத் தயங்கித் தயங்கி நட. இருள் பொழுது வரும் நேரமாகி விட்டது. அறைக் கதவைப் பூட்டாதே" என்றான் நரசிம்மன்.

ஏதோ அறைக்குள் ரசாபாசம் நடந்து விட்டதாகக் கண் காணிப்பாளர்கள் கருத வேண்டும் என்பதற்காகவே அவ்வாறு செய்யச் சொன்னான் இளவரசன்.

மாளவிகாவும் அவ்வாறு நடந்து கொண்டு வெளியேறினாள்.

அதே சமயம் இளவரசன் அறையை விட்டு வெளியே வந்தான்.

அங்கே நடப்பவற்றை ரகசியமாகக் கண்காணித்துக் கொண்டிருந்த சேவகர்கள் இளவரசன் வெளியே வருவதைக் கண்டு அதிர்ந்து போய் அவனை நோக்கி வந்தார்கள்.

நரசிம்மன் அவர்களைக் கவனிக்கவில்லை.

மெதுவாகவும் பதற்றமில்லாமலும் நடந்தான்.

அவனது இருப்பிடத்திற்கு மேற்கே மாளவிகாவின் குடைவறை இருந்தது.

அந்த குடைவறைக்குப் பின்னாலும் குன்றின் சில பகுதிகளில் குடைவறைகளும் இருந்தன.

அவற்றை நோக்கி சாவகாசமாக நடந்த இளவரசன் அந்தக் குடவறைகள் ஒன்றிரண்டில் சென்று பார்த்தான்.

குடைவறைகளில் எந்தச் சிற்பமும் காணவில்லை.

ஒரு குடைவறைக்கு முன்னால் சுனை ஒன்றிருந்தது.

அதில் நீராடுவதற்காக இறங்கினான்.

அப்போது அவனை நெருங்கி விட்டச் சேவகர்கள் "ஐயா! இங்கே நீராடினால் மாற்றுடைகள் இல்லை. அதோடு இந்தச் சுனை ஆழமானது. உள்ளே முதலைகள் இருக்கின்றன. இதில் நீராட இறங்கியவர்கள் உயிரோடு மீண்டதில்லை. அவர்களை இழுத்து முதலைகள் அடித்துத் தின்று விடுகின்றன. நீங்கள் இருந்த அறைக்கே வாருங்கள். அங்கே எல்லா வசதிகளும் உள்ளன" என்றார்கள்.

நரசிம்மன் அவர்களுக்கு மறுப்பேதும் சொல்லவில்லை.

மாறாக-

"இங்கே பெண்களின் நடமாட்டமே இல்லையே!" என்றான்.

"இரவு தொடங்கும் நேரமாகி விட்டது. இது ஒதுக்குப் புறமான பகுதி. பெண்கள் வருவதில்லை" என்றார்கள் சேவகர்கள்.

"என் துவாரசமுத்திரம் அப்படியில்லை. நள்ளிரவில் கூட பெண்கள் நடமாடுவார்கள். எதற்கும் பயப்பட மாட்டார்கள். எல்லோரும் என்னை விரும்புவார்கள். என் அறைக்கு வந்த பெண் பரவாயில்லை. இங்கிதம் தெரிந்து நடந்து கொண்டாள். அவள் எப்படிப்பட்டவள்? உங்களுக்கு அவளைப் பற்றி ஏதாவது தெரியுமா? அவளை நான் திருமணம் செய்து கொள்ளலாம் என்று நினைக்கிறேன்" என்றான்.

"விசாரித்துச் சொல்கிறேன் ஐயா. இப்போது எங்களோடு வாருங்கள்" என்றார்கள் சேவகர்கள்.



இதே நேரத்தில் அரண்மனைக்குச் சென்றாள் மாளவிகா.

அங்கே கூட்டமாக இருந்தது. பதற்றமாக இருந்தது. அவளை உள்ளே விடவில்லை.

என்ன விஷயம் என்று விசாரித்தாள்.

இசையால் அவள் மக்களில் பலருக்கு அறிமுகமாயிருந்த படியால் அவளோடு பேசினார்கள்.

“போரமைச்சருக்கு உடல்நலம் சரியில்லையாம். வைத்தியர்கள் மேன்மேலும் வந்து கொண்டிருக்கிறார்களே தவிர அவரது உடல்நிலையில் முன்னேற்றமில்லையாம். பிரதான ராஜவைத்தியருக்காகக் காத்திருக்கிறார்கள்” என்று தெரிவித்த மக்கள் சுற்றும் முற்றும் பார்த்து விட்டு “அந்தப் பாவி செத்தால் தான் என்ன? எதற்காக ஊரிலிருக்கும் வைத்தியர்கள் எல்லாம் வரவேண்டும்? நம்மையெல்லாம் இம்சித்து வாழும் அந்தப் போரமைச்சருக்குச் சாவு வரவேண்டும் என்று தான் நாங்கள் தினமும் வேண்டி வருகிறோம்” என்றார்கள்.

மக்கள் எந்த அளவிற்குப் போரமைச்சரை வெறுக்கிறார்கள் என்பது புரிந்தது அவளுக்கு.

“நாம் பேசிக் கொண்டிருக்கிறோம். பயந்து பேசிக் கொண்டிருக்கிறோம். இறைவனை வேண்டிக் கொண்டிருக்கிறோம். இப்படி இருந்து விட்டால் போரமைச்சருக்குச் சாவு வந்து விடுமா? நாம் செயல்பட வேண்டும். செயல் பட வேண்டும். செயல் முக்கியம்” என்றாள் மாளவிகா.

தனது திட்டம் வேலை செய்கிறது என்பதைத் தெரிந்து கொண்ட மாளவிகா போரமைச்சரைத் தேடிப் போய்ச் சீரழிந்த ஜெயந்திகாவின் இல்லத்திற்குச் சென்றாள். ஜெயந்திகாவின் உடல்நிலை மிகவும் மோசமாக இருப்பதால் ஆதுர சாலையில் சேர்த்து வைத்தியம் பார்ப்பதாகச் சொன்னார்கள்.

ஆதுரச் சாலைக்குச் சென்றாள் மாளவிகா.

அங்கே குற்றுயிரும் கொலையுயிருமாய் இருந்தாள் ஜெயந்திகா. குரங்கினால் பீய்த்தெறியப்பட்ட மாலை போல் கிடந்தாள். வைத்தியர்கள் யாரும் சரிவர வந்து கவனிப்பதில்லை என்று அவளருகில் இருந்தவர்கள் சொன்னார்கள்.

“என்னை மன்னித்துவிடு ஜெயந்திகா” என்று அவளுக்காகக் குனிந்து மெல்லச் சொன்னாள் மாளவிகா.

ஜெயந்திகா அழவில்லை. லேசாகச் சிரித்தாள். தனது படுக்கையிலிருந்து ஓலையொன்றை எடுத்து அவளிடம் கொடுத்தாள்.

அப்போது இரண்டு வைத்தியர்கள் வந்து எல்லோரையும் விரட்டவே மாளவிகா அங்கிருந்து புறப்பட்டாள்.



இதற்கிடையில் ராஜ வைத்தியர் வந்து போரமைச்சரைச் சோதித்துப் பார்த்தார்.

சலிப்புக்கு அறிகுறியாகத் தலையை அசைத்தார்.

அங்கிருந்த எல்லா வைத்தியர்களையும் பணியாளர்களையும் வெளியே அனுப்பினார்.

போரமைச்சரின் பக்கத்தில் ஆசனத்தில் அமர்ந்து கொண்டு "ம். நடந்ததைச் சொல்லுங்கள்" என்றார்.

"நடந்ததையா? எதைச் சொல்லச் சொல்கிறீர்கள்?" என்று குழப்பத்துடன் கேட்டார் போரமைச்சர்.

"இதோ பாருங்கள். நான் வைத்தியன். உங்களைப் பரிசோதித்த போதே தெரிந்து கொண்டேன். இருப்பினும் நடந்ததைச் சொல்லுங்கள். வைத்தியனிடம் மறைத்தால் வைத்தியம் செய்ய முடியாது" என்றார் ராஜவைத்தியர்.

"எதைச் சொல்ல வேண்டும்? ஒன்றும் நடக்க வில்லையே?"

"நேற்றிரவு என்ன செய்தீர்கள்?"

"ஒன்றுமில்லையே!"

"பெண்ணோடு தொடர்பு கொண்டீர்களா?"

"ஓ! அதுவா? அதற்கும் என் உடல்நிலைக்கும் என்ன சம்பந்தம்?"

"உடல்நிலைக்கு அதுதான் காரணம். நடந்ததைச் சொல்லுங்கள்."

"இதையெல்லாம் எப்படிச் சொல்வது?"

"வைத்தியனிடம் தானே சொல்கிறீர்கள்? வைத்தியனிடம் சொல்லும் எதுவும் வெளியில் போகாது. சக்கிரவர்த்தி பெருமானிடம் நீங்கள் சொல்வது போலத்தான் நடந்து வருகிறேன். ஒரு வைத்தியன் செய்யக் கூடாததையெல்லாம் அவருக்குச் செய்கிறேன். அதையெல்லாம் சொல்கிறேனா?"

அதற்கு மேலும் தயங்கிக் கொண்டிருக்கக் கூடாது என்று போரமைச்சர் ஜெயந்திகா என்றப் பெண்ணிடம் சல்லாபித்ததைச் சொன்னார்.

"எதற்காக இந்தக் கொலை வெறி? வக்கிர வெறி?" - கேட்டார் ராஜவைத்தியர்.

"என்னைக் கிழவன் என்றாள். உன்னால் முடியுமா என்று கேட்டாள்."

"அதற்காக? உங்களுக்கு வேறு வேலையே இல்லையா? அமாத்யர் மகளைச் சீரழித்தீர்கள். இப்போது ஜெயந்திகா.

போரமைச்சரே! காமலதையை நீங்களென்ன ஆயுதமென்று நினைத்துக் கொண்டீர்களா? ஆயுதங்கள் கூட அளவுக்கு மீறி பிரயோகித்தால் உடைந்து விடும்."

"எனக்கென்ன ஆயிற்று வைத்தியரே?"

"முறுக்கேற்றும் நரம்பு செத்து விட்டது. இனிமேல் உங்களால் காமத்தில் ஈடுபட முடியாது. போரமைச்சரே! நமது உடலில் உள்ள அங்கங்களுக்குச் செயற்கையாக பலமூட்டச் செய்து வயோதிகத்தை வெல்ல முயல்வது பெரும் தோல்வியில் தான் முடியும். இயற்கையை மீறி செயல்படும் எந்த சக்தியும் தற்காலிகமாக வெற்றி பெறுவது போல் தோன்றினாலும் தோல்விதான் அதன் முடிவு. பக்க வாதங்கள் தான் அதன் எதிரி. உங்களுக்கு நேர்ந்தது அது தான். காமம் இல்லையென்றால் பரவாயில்லை. உங்கள் உயிருக்கே ஆபத்து வந்து சேர்ந்திருக்கிறது."

"என்ன சொல்கிறீர்கள் வைத்தியரே?"

"அந்தப் பெண்ணின் உடலில் விஷம் விரவியிருக்கிறது. ரத்தத்தில் கலந்திருக்கிறது. அவளுக்கு அந்த விஷம் எதுவும் செய்யாது. மூலிகைகளைத் தின்று தன் உடம்பை மாற்றிக் கொண்டிருக்கிறாள். உங்களுக்கு அப்படி இல்லை. தளர்ந்த உடல். சுருங்கி வரும் ரத்த ஓட்டம். இந்த நிலையில் இளைஞனாகவும், வெறியனாகவும், வக்கிரமான முறையிலும் அவனிடம் செயல்பட்டிருக்கிறீர்கள். அவளது விஷம் உங்கள் ரத்தத்தில் கலந்திருக்கின்றது."

"அப்படியானால் என்னைக் கொல்வதற்குச் சதித் திட்டம் தீட்டித்தான் என்னிடம் வந்தாளா? இப்போதே அவளைக் கொல்ல உத்திரவிடுகிறேன்."

"நீங்கள் போட்ட ஆட்டத்தில் அவள் இன்னேரம் இறந்திருப்பாள்."

"என் நிலை என்ன வைத்தியரே?" - கவலையோடு கேட்டார் போரமைச்சர்.

"தன் வினை தன்னைச் சுடும்" என்று கவலையில்லாமல் சொன்னார் ராஜவைத்தியர்.

"வைத்தியரே! அலட்சியமும் வந்து விட்டதா உங்களுக்கு? கேலியும் கிண்டலும் பேச்சில் வந்து விட்டதா? இதோ பாரும். இங்கேயே இப்போது உங்களுக்கு மரண தண்டனையைத் தர என்னால் முடியும். ஒழுங்காக பதிலைச் சொல்லுங்கள்" என்று கோபக் குரலில் சொன்னார் போரமைச்சர்.

“போரமைச்சரே! சக்கிரவர்த்தி அவர்களுக்கு எதிராக வைத்தியம் என்ற பெயரில் வியாதியை அதிகரிக்கச் செய்யும் படி நீங்கள் சொன்ன போதே நான் மரணத்தை எதிர்பார்த்துக் கொண்டு தான் இருக்கிறேன். சக்கிரவர்த்திக்கோ உங்களுக்கோ பயந்து நான் அப்படிச் சொல்லவில்லை. தர்மத்தின் பேரிலான நம்பிக்கையால் அப்படிச் சொல்கிறேன். பிறர் வாழ்வை கெடுக்கிற எவனும் தன் வாழ்வில் நிம்மதியாக இருக்க முடியாது. பிறருக்குத் துன்பத்தைத் திணிப்பவனுக்கு பின்னால் அவனைச் சாய்ப்பதற்கு துன்பமானது பயணம் செய்து கொண்டிருக்கிறது. வினைகள் என்பது நிழலைப் போன்றது. நிழல் கூட சில நேரங்களில் பின் தொடராமல் இருக்கலாம். கர்ம வினைகள் அப்படியில்லை. பிறவிகளைக் கடந்தும் அவை பின்தொடரும்.”

“எனக்குப் பிடிக்காத குப்பைகளை என்மீது குவியல் குவியலாகப் போட வேண்டாம் வைத்தியரே. அரசியலில் சந்தர்ப்பங்களுக்கு ஏற்ப நடந்து கொள்பவன் தான் நிலைப்பான். தயங்கிக் கொண்டிருப்பவன் காணாமல் போய் விடுவான். என் அரசியல் காரியங்களுக்கு நீங்கள் தத்துவ சாயங்களைப் பூச வேண்டியதில்லை. நான் சொல்வதைத் தான் செய்கிறீர்களே தவிர நீங்களாக எதையும் செய்யவில்லை. ஆகவே சக்கிரவர்த்தி விஷயத்தில் நான் தான் கர்த்தா. நான்தான் குற்றவாளி. நீங்கள் புலம்பவேண்டாம். எனக்குச் சிகிச்சை செய்ய முடியுமா? முடியாதா?” என்று உறுதியான குரலில் கேட்டார் போரமைச்சர்.

“நிச்சயமாகச் செய்வேன். ஆனால் விரைந்து வரும் மரணத்தைத் தள்ளிப் போடத்தான் முடியும். தடுக்க முடியாது” என்றார் ராஜ வைத்தியர்.

“மரணத்தைத் தடுக்கும் ஆற்றல் ஒருவருக்கும் கிடையாது என்பது எனக்குத் தெரியும். நீங்கள் செய்யப் போகும் சிகிச்சை என்ன?”

“அரிய வகை மூலிகையைத் தருகிறேன். அதை தினமும் அருந்தி வாருங்கள். உங்கள் ரத்தத்தில் விஷம் ஊடுருவும் வேகத்தை அது தடுக்கும்.”

“என் ஆயுள்? இன்னும் பத்து வருடங்களுக்கு வாழ்வேனா?

“அதற்கு மேலும் வாழலாம். நான் வைத்தியனே தவிர ஈஸ்வரன் அல்ல.”

“நல்லது ராஜ வைத்தியரே. நான் மரணத்தைக் கண்டு என்றைக்குமே அஞ்சியதில்லை. அரசியலில் அதர்மங்களையும் அநீதிகளையும் இடைவிடாமல் செய்பவனின் தோள்களிலேயே

...ணம் அமர்ந்திருக்கும் என்று சொல்வார்கள். விக்கிர ...தித்தனின் முதுகில் கிடக்கும் வேதாளத்தைப் போன்றது அது. ...ன் நிலை அப்படித்தான். நாம் அறிந்த வரை விக்கிரமாதித்தன் தான் வென்றானே தவிர வேதாளமல்ல."

"சாளுக்கிய சக்கிரவர்த்தியின் பெயரும் விக்கிரமாதித்தன் தான்" என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்ட ராஜ வைத்தியர் "நான் சென்று மூலிகை மருந்தோடு வருகிறேன் போரமைச்சரே" என்று கூறிவிட்டு அகன்றார்.

ராஜவைத்தியர் சென்றபிறகு சேவகர்களை அழைத்து ஜெயந்திகாவை உடனடியாகக் கொல்லும் படி உத்தரவிட்டார்.

அந்தப்பெண் சற்று நேரத்திற்கு முன் இறந்து விட்டதாகத் தெரிவித்தார்கள்.

"அவள் உடல் விஷஉடல். அதை அவளது உறவினர்களிடம் கூட ஒப்படைக்காதீர்கள். காட்டுப் பகுதியில் போய் எரித்து விடுங்கள்" என்று சொன்ன போரமைச்சர் "எங்கே அந்தத் தாதி? இழுத்து வாருங்கள்" என்றார்.

அழைத்து வந்தார்கள்.

"தாதி! ஜெயந்திகா யார்? எங்கே இருந்தவள்? என்ன செய்து கொண்டிருந்தவள்? உனக்கும் அவளுக்கும் என்ன பழக்கம்? எவ்வளவு காலம் பழக்கம்? அவளது பின்னணி என்ன?" என்று விசாரித்தார் போரமைச்சர்.

"கல்யாணபுரத்தைச் சேர்ந்தவள் தான். மற்றபடி வேறெதுவும் தெரியாது ஐயா. உங்களைப் பற்றி இழிவாகப் பேசி சவாலிட்டாள். ஆகவே தான் அவளை அனுப்பி வைத்தேன்" என்றாள் தாதி.

"பின்னணி தெரியாமல், இருப்பிடம் தெரியாமல் இயல்பு தெரியாமல் அழகாக மட்டும் இருந்து விட்டால் அவளை என்னிடம் அனுப்பி விடுவாயா? அவள் என்னை இகழ்ந்தால் அவளுக்கு நீ பதிலடி கொடுத்து விரட்டியடித்திருக்க வேண்டும். காளை மாட்டிடம் கொண்டு போய் விட்டிருக்க வேண்டும். இணைய வைத்திருக்க வேண்டும். அவள் செத்தபின் என்னிடம் சொல்லியிருக்க வேண்டும். நீ எதுவும் சொல்லவில்லை. அவளோடு சேர்ந்து நீயும் சதி செய்திருக்கிறாய். இன்னும் என்னவெல்லாம் சதி செய்ய நினைத்திருக்கிறாயோ தெரியாது. ஆகவே உன்னை உயிரோடு விட முடியாது" என்று சொன்ன போரமைச்சர் சேவகர்களை அழைத்து "இவளை இங்கேயே உள்ள ஆட்டில் சாலையில் கொதிக்கும் எண்ணெயில் போட்டு

புரட்டி எடுத்து விட்டு கழுகுகளுக்கு இரையாகப் போடுங்கள்" என்றார்.

தாதி அலறினாள். பதறினாள். கதறினாள். யாரும் அதைப் பொருட்படுத்தாமல் கட்டளையை நிறைவேற்றினார்கள்.

பிறகு ஜெயந்திகாவின் உறவினர்களை அழைத்து விசாரித்தார்.

"ஜெயந்திகாவின் உடம்பில் விஷம் எவ்வாறு வந்தது? விஷத்தோடு எப்படி வாழ்ந்தாள்?" என்று கேட்டார்.

எல்லோரும் அதைப் பற்றி எதுவும் தெரியாது என்று தெரிவித்தார்கள்.

சேவகர்களை அழைத்தார் போரமைச்சர்.

"பெரியதாகக் குழியை வெட்டி இந்த நாய்களை உயிரோடு புதையுங்கள்" என்றார்.

அதுவும் ஈவு இரக்கமின்றி நிறைவேற்றப்பட்டது.

"பிறகு வைத்தியர்களை அழைத்தார்.

கல்யாணபுரத்தில் இருக்கும் அழகிகளையெல்லாம் கொண்டு வந்து அவர்கள் உடலில் பாம்பு விஷம் இருக்கிறதா என்று பரிசோதனை செய்யுங்கள். அப்படி யாருக்காவது இருந்தால் அவர்களைக் கொண்டு வந்து சுடுகாட்டில் உயிரோடு எரித்துக் கொல்லுங்கள். கல்யாணபுரத்தில் ஒரு பாம்பு கூட இருக்கக் கூடாது. பிடித்துக் கொல்லுங்கள். புற்றுக்கள் இடித்துத் தள்ளுங்கள்" என்றார்.

"இது கடினமான வேலை" என்றார்கள் வைத்தியர்கள்.

"அது எனக்குத் தெரியாது. நடந்தாக வேண்டும். இல்லையென்றால் உங்கள் உடம்பில் தலை இருக்காது" என்றார் போரமைச்சர்.

அவரைச் சபித்தபடி அகன்றார்கள் வைத்தியர்கள்.

அவர் தனது அங்கங்களில் எதை ஆயுதம் என்று கருதி யிருந்தாரோ அங்கே மகா எரிச்சலாக இருந்ததால் அவஸ்தைப் பட்டார். அவ்வப்போது ரத்தப் போக்கும் ஏற்பட்டதால் நிலை குலைந்து போனார்.

நல்ல வேளையாக ராஜவைத்தியர் வந்து மூலிகைச் சாற்றைத் தேனில் கலந்து மூன்று முறை இடைவெளி விட்டு கொடுத்தாராதலால் எரிச்சல் நீங்கி ரத்தப் போக்கும் நின்றது.

அது மிகப்பெரிய ஆறுதலாக இருந்ததால் "மிகவும் நன்றி ராஜ வைத்தியரே. நீங்கள் கடவுள்" என்றார் போரமைச்சர்.

காலையில் தன்னை மரணத்திற்கு அனுப்புவேன் என்று மிரட்டிவிட்டு தற்போது போரமைச்சர் தன்னைக் கடவுள் என்று பாராட்டியதை எண்ணி உள்ளுக்குள் சிரித்துக் கொண்டார் ராஜவைத்தியர்.

மனிதர்கள் கேவலமானவர்கள். அவர்கள் விரும்பியதைச் செய்பவர்கள் கடவுளாகத் தெரிவார்கள். அவர்கள் விரும்பாததைக் கடவுளே வந்து செய்தாலும் தூஷிப்பார்கள் என்று கருதிக் கொண்ட அவர் -

"போரமைச்சரே! பெண் சுகத்தை இத்துடன் விட்டு விடுங்கள். எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்கும் என்பது தெரியாதது போலவே எந்தப் பெண்ணில் பாம்பின் விஷம் இருக்கும் என்பது தெரியாது. ஆகவே தான் சொல்கிறேன். நீங்கள் விரும்பினால் கூட அதை அனுபவிக்க முடியாது. தற்போது சிகிச்சையில் இருக்கிறீர்கள். ரத்தமானது சுத்தமாக நேரம் அதைக் கெடுக்கும் விதமாக நீங்கள் நடந்து கொள்ளக் கூடாது. மாமிச உணவையும் உண்ண வேண்டாம். பொறுமையாகவும் கட்டுப்பாடாகவும் இருங்கள். குணம் தெரியும்" என்று கூறிவிட்டுப் போனார் ராஜவைத்தியர்.

போரமைச்சருக்கு ஒரு மாதிரியாகத் தான் இருந்தது. ராஜ்யத்தை தன் வசப்படுத்தி சக்கிரவர்த்தியாக அமர்ந்து விதவிதமான பெண்களை வித்தியாசமான விதங்களில் அனுபவிக்க வேண்டும் என்று விரும்பிய அவருக்கு அது முடியாமல் போய் விட்டதே என்று கவலையாக இருந்தது.

அப்போது -

**- 'காற்றில் வரும் கீதமே என்**
**கண்ணனை அறிவாயா?'-**

என்ற இசை அவரது காதில் விழுந்தது.

"ஆகா! மாளவிகாவின் குரலல்லவா? தேவதை பாடுகிறது. இசை தெய்வம் பாடுகிறது" என்று சிலாகித்த அவருக்கு ஹொய்சள இளவரசனின் நினைவு வந்தது.

"மாளவிகாவை அனுப்பினோமே! என்ன ஆயிற்று?" என்று கேட்டுக் கொண்ட அவர் -

தேரில் ஏறி மாளவிகாவின் இருப்பிடத்தை நோக்கிச் சென்றார்.





மனிதர்களின் பிரச்சனைக்குக் காரணம் அவிழ்க்க முடியாத முடிச்சுக்களை அவர்களே போட்டுக் கொள்வது தான் – நரசிம்மன்




சிறிது நேரம் வரை குடைவறைக்கு வெளியிலேயே நின்றபடி மாளவிகாவின் மதுரமானப் பாடல்களைக் கேட்டார் போரமைச்சர்.

அதற்குப் பிறகே உள்ளே நுழைந்து மாளவிகாவையும் அவளிடம் பாட்டுக் கற்றுக் கொண்டிருந்த பெண்களையும் கண்டார்.

"குயில் தோப்புக்குள் வந்த விட்ட மாதிரி இருக்கிறது மாளவிகா! என்னமாகப் பாடுகிறாய்? இசைக்கு நிகரானது இறைவன் தான் என்று சொல்லத் தோன்றுகிறது" என்று மனம் திறந்து பாராட்டினார்.

"ஐயா! தாங்கள் இங்கே வரவேண்டுமா? வகுப்பு முடிந்ததும் நானே வரலாம் என்றிருந்தேன். முன்பே வந்தேன். அரண்மனையில் என்னை அனுமதிக்கவில்லை. ஆகவே திரும்பி விட்டேன்" என்றாள் மாளவிகா.

"வந்தாயா? உன்னை அனுமதிக்க மறுத்தார்களா? யாரவன்?" என்றார் போரமைச்சர் கோபத்துடன்.

"ஐயா! அரண்மனையில் இருப்பவர்களுக்கு என்னைத் தெரியாது. அதோடு அங்கே கூட்டமாக வேறு இருந்தது. உங்களுக்கு உடல் நலம் சரியில்லை என்று சொன்னார்கள். என்ன ஆயிற்று உங்களுக்கு?" என்று கேட்டாள் மாளவிகா.

"நாம் விரும்பாததும் நம் அனுமதியில்லாமலும் நமக்கு வரக் கூடியது நோய் மட்டும் தான். அதோடு வயோதிகத்தின் துணைவன் நோய்தான். அவை இரண்டும் பிரிந்திருப்பது அபூர்வம்" என்றார் போரமைச்சர்.

"தற்போது பரவாயில்லையா போரமைச்சர் பெருமானே?"

"மாளவிகா! நோயானது இயற்கை. சிகிச்சையானது செயற்கை. இயற்கையைச் செயற்கை நிரந்தரமாகத் தாங்கிக் கொண்டிருக்காது. இடையில் கைவிட்டு விடும். வைத்தியர்கள்

மருந்தைத்தான் வைத்திருக்கிறார்களே தவிர விதியானது அவர்கள் கைவசம் இல்லை. மருந்துகள் கவசமாக இருக்கலாம். கவசம் நிரந்தரமானதல்ல.''

போரமைச்சர் தத்துவத்தைப் பொழிந்தது மாளவிகாவுக்கு வினோதமாக இருந்தது. பதவியைப் பிடிப்பதிலும் மக்களை ஆள்வதிலும் கணக்கற்ற தத்துவங்கள் நீதி நெறிகளாக இருக்கின்றன. அவற்றையெல்லாம் சிறிதும் சீந்தாமல் கண்டபடி அநீதிகளை அலட்சியமாக இழைத்து விட்டு நோயைப் பற்றியும் சிகிச்சையைப் பற்றியும் மட்டும் அவர் தத்துவங்களை வாரி வழங்குவதைக் கண்டு உள்ளுக்குள் சிரித்துக் கொண்ட அவள் "என்னைப் போன்ற அபலைகளுக்கு ஆதரவு காட்டும் தங்களை இறைவன் ஆதரிக்காமல் இருக்க மாட்டான் ஐயா'' என்றாள்.

"ஆதரவாகப் பேசுவதற்கே அரண்மனையில் யாருமில்லை என்பது உனக்குத் தெரியுமா? என் மனைவியே என் மரணத்தைத் தான் விரும்புகிறாள். என் மரணத்திற்காக மறைமுக யாகங்களைச் செய்கிறாளாம்'' என்றார் போரமைச்சர்.

"நீ நடந்து கொள்ளும் லட்சணத்திற்கு ஒருவன் கூட அனுதாபப்பட மாட்டான். பேயைக் கண்டு கூட இரங்குபவர்கள் உண்டு. அந்தப் பேய் கூட உன்னைக் கண்டு இரங்காது துஷ்டனே! தாதியை கொதிக்கும் எண்ணெயில் வறுத்தெடுத்து ஜெயந்திகாவின் உறவினர்களை உயிரோடு புதைத்த உலுத்தனே! உன் சாவுக்கு உன் மனைவி மட்டுமல்ல மக்கள் எல்லோருமே மனத்திற்குள் மௌனயாகம் நடத்திக் கொண்டுதான் இருக்கிறார்கள்'' என்று தனக்குள் சொல்லிக் கொண்ட மாளவிகா "காலங்கள் மாறும். காட்சிகள் மாறும். கவலைப்படாதீர்கள் ஐயா'' என்றாள்.

"இசை வகுப்பு முடிந்து விட்டதா பெண்ணே?''

"முடிந்து விட்டது ஐயா'' என்று சொன்னதும் மாணவிகள் அங்கிருந்து புறப்பட்டார்கள்.

குடைவறையில் வந்து ஆசனத்தில் அமர்ந்து கொண்ட போரமைச்சர் "நரசிம்மனிடம் சென்றாயே என்ன ஆயிற்று?'' என்று கேட்டான்.

மாளவிகாவின் கண்கள் சற்றே கலங்கின.

அதைக் கவனித்த போரமைச்சர் "என்ன ஆயிற்று மாளவிகா? அந்த மூடன் உன்னிடம் தன் கைவரிசையைக் காட்டி விட்டானா?'' என்று கேட்டான்.

அவள் அழுதாள். இசையரசி அழுவது அவனுக்குக் கஷ்டமாக இருந்தது.

"என்ன ஆயிற்று சொல் மாளவிகா? என்ன செய்தான் அந்தக் கோழை பெண்பித்தன்?" என்று கேட்டார்.

"ஐயா! ஒன்றை இழந்தால் தான் இன்னொன்றைப் பெற முடியும்" என்றாள் மாளவிகா.

"அப்படியானால் அவன்..."

"ஐயா! அவன் வழிக்கு வரவேண்டுமானால் அவன் வழிக்கு நான் வரவேண்டும். வேறு வழியில்லை. நான் என்னை இழந்து விட்டேன்."

"அவசரப்பட்டு விட்டாயே மாளவிகா. அவனை மயக்கும் படித்தான் உனக்கு நான் சொன்னேன். இழந்து விடும் படிச் சொல்ல வில்லை. ஒரு குரல் கொடுத்திருந்தால் சேவகர்கள் வந்து அவனை அடித்துப் போட்டு விட்டு உன்னைக் காப்பாற்றி யிருப்பார்கள்."

"என்னைக் கண்காணிக்கிறீர்களா ஐயா? என்மீது உங்களுக்கு நம்பிக்கையில்லையா?"

"நான் சேவகர்களைக் கண்காணிக்கும் பணியில் ஈடுபடுத்தியது இளவரசன் தப்பி ஓடி விடாமல் இருப்பதற்காகத் தான். உன்னை வேவு பார்ப்பதற்காக இல்லை."

"என்னை யாரும் வேவு பார்க்க வேண்டாம் ஐயா. அவனையும் கண்காணிக்க வேண்டாம். என்னை இழந்து விட்டேன். இனி என் காரியத்தை முடிக்காமல் நான் அவனை விட மாட்டேன். தந்தையை வரச் சொல்லி ஓலை எழுத இளவரசன் சம்மதித்து விட்டான். ஓலை மற்றும் எழுத்தாணியைக் கொண்டு செல்ல வேண்டும். இன்றிரவு கொண்டு செல்வேன். ஓலையை வாங்கி வருவேன்."

"என்னை மன்னித்து விடு மாளவிகா."

"எதற்கு?"

"என்னால் உன் எதிர்காலம் பாழாகி விட்டது."

"என் தந்தையார் இறந்த போதே என் எதிர்காலம் கேள்விக் குறியாகி விட்டது ஐயா. இப்போது முற்றுப் புள்ளி வைத்து விட்டார் இளவரசர். எனக்கு எல்லாம் முடிந்து விட்டது. இசை தான் இனி எனக்குத் துணை. அது காட்டும் வழியில் தான் என் வாழ்க்கை செல்லும்."

“அப்படிச் சொல்லாதே மாளவிகா. நீ இழந்தது இழப்பு என்று எண்ணாதே. அது நடந்ததாகவே எண்ண வேண்டாம். உனக்கு வாழ்வு உண்டு. எனக்கு மகன் இருந்தால் அவனை உனக்கு மணம் செய்து வைத்திருப்பேன். இப்போதும் ஒன்றும் முழுகிப் போய் விட வில்லை. உனக்குத் திருமணம் செய்வித்து நல்வாழ்க்கையை அமைப்பதற்கு நான் தயாராகவே இருக்கிறேன்.”

“வேண்டாம் ஐயா. பெண்களுக்குப் புனிதமானது கற்பு ஒன்று தான். அதை அவள் இழந்து விட்டால் தன்னையே அவள் இழந்த மாதிரி தான். இழந்ததை மறைப்பது கொடிய பாவம். அதைச் செய்ய நான் தயாராக இல்லை. எனக்குள்ளேயே அது இருந்து மறையட்டும். நான் புறப்படுகிறேன்.”

“உன் விஷயத்தில் நீ முடிவு எடுத்து விடாதே. அவசரப்பட வேண்டாம். இன்றைக்குச் செல். இளவரசனிடம் ஓலையை வாங்கி விடு. அதற்குப் பிறகு அவனிடம் செல்ல வேண்டாம். பிறகு என்ன நடந்தாலும் நான் பார்த்துக் கொள்கிறேன்.”

“சரி ஐயா. தங்களை அரண்மனையில் வந்து சந்திக்க அனுமதி கொடுங்கள். அங்கே இருக்கும் சேவகர்கள் தடுக்கிறார்கள்.”

“இனி அது நடக்காது. இந்தா, இது என் முத்திரை மோதிரம். எப்போதும் நீ என்னைச் சந்திக்கலாம். உன்னை எவனும் தடுக்க முடியாது” என்று சொல்லி வைர மோதிரத்தை விரலிலிருந்து கழற்றிக் கொடுத்தார் போரமைச்சர்.

அதை வாங்கிக் கொண்டு இளவரசன் நரசிம்மனின் இருப்பிடத்திற்குச் சென்றாள்.

சேவகர்கள் கதவைத் திறந்து அவளை உள்ளே விட்டார்கள்.

உணவையும் கொண்டு வைத்தார்கள்.

நேரம் இரவாகி விட்டதால் உள்ளே பந்தங்கள் எரிந்தன.

“வா. மாளவிகா. உனக்கொன்றும் பிரச்சனை இல்லையே! போரமைச்சருக்கு உடல் நலம் சரியில்லையாமே; என்ன ஆயிற்று?” என்று கேட்டான் இளவரசன்.

“இந்த ஓலையைப் படியுங்கள். இது ஜெயந்திகா எனக்கு எழுதியது. இறப்பதற்கு முன் என்னிடம் கொடுத்தாள்” என்று கூறி ஓலையைக் கொடுத்தாள் மாளவிகா.

அதைப் படித்து விட்டு “இது என்ன? மகோகோரமாக இருக்கிறது! போரமைச்சர் பேரரக்கனாக இருப்பான் போலிருக்கிறதே! அவன் பிரயோகித்த ஆயுதத்தைப் பற்றி ஜெயந்திகா எழுதியிருப்பது அதிர்ச்சியாக இருக்கிறது” என்று

சொன்ன இளவரசன் "ஜெயந்திகாவை நீ அனுப்பியதாக ஓலையில் இருக்கிறதே! அது என்ன?" என்று கேட்டான்.

"ஜெயந்திகா என் தோழி. அவள் ஒரு நாககன்னி. நாகங்களோடு வாழ்ந்தவள். உடலெல்லாம் நாகவிஷம் பரவியிருக்கிறது. அவளால் எந்த ஆடவனுடனும் இணைய முடியாது. இணைந்தால் நாக விஷம் அந்த ஆடவனுக்குள் சென்று பரவும். ரத்தத்தில் கலக்கும். விரைவிலேயே சாவான். போரமைச்சரை வாளால் வீழ்த்த முடியாது. எனவே தான் ஜெயந்திகாவைப் பயன்படுத்த எண்ணி அவளிடம் சம்மதம் கேட்டேன். அவள் ஒப்புக் கொண்டாள். ஆனால் அந்தப் பாவி அவளைச் சாகடித்து விட்டான் தனது வக்கிரங்களால். தாதியை கொதிக்கும் எண்ணெயில் போட்டு வறுத்து விட்டான். உறவினர்களை உயிரோடு புதைத்து விட்டான். ஜெயந்திகாவின் குடும்பம் கொடூரமான முறையில் அழிக்கப்பட்டு விட்டது. அழகானப் பெண்களின் உடலில் விஷம் கலந்திருக்கிறதா என்று பரிசோதனை செய்யவும் உத்திரவிட்டிருக்கிறான். ஜெயந்திகா மூலம் அவனுடலில் விஷம் ஏறியிருக்கிறது. உடல் பாதித்திருக்கிறது. வைத்தியர்கள் சிகிச்சை செய்கிறார்கள். என்ன சிகிச்சை செய்தாலும் போரமைச்சரின் ஆயுள் சில மாதங்களில் முடிந்து விடும்" என்றாள் மாளவிகா.

மாளவிகாவின் பேச்சைக் கேட்ட போது இளவரசனுக்கு நெஞ்சு கொதித்தது. மாமன்னன் படுத்து விட்டால் மயிரும் பிசிறும் ஆட்டம் போடுமா? தகுதியற்றவர்கள் பதவியைப் பிடித்துக் கொண்டால் பதவிக்கான அர்த்தமே மாறிப் போய் விடுமா? இந்தப் போரமைச்சருக்குப் பதவி வெறி மட்டுமே. எல்லாவற்றிலுமே வெறியாகத்தான் இருக்கிறது. எதிலும் வெறி பிடித்து அலைவதுதான் அவருக்கு நெறியாக இருக்கிறது. பாரத நாட்டில் எந்தப் பகுதியிலும் காணமுடியாத கொடுங்கோல் இது. காட்டுவாசிகள் கூட இப்படி நடந்து கொள்ள மாட்டார்கள்.

இப்படியெல்லாம் இளவரசன் நினைத்த போது மற்றொரு ஓலையை அவனிடம் கொடுத்த மாளவிகா "இது என் தந்தையார் தற்கொலை செய்து கொள்வதற்கு முன்னால் எனக்கு எழுதிய ஓலை இது" என்றாள்.

படித்தான்.

"இதிலும் போரமைச்சரின் குரூரம்தான் இருக்கிறது. சாந்தஸ்ரூபியான உன் தந்தைக்கே வன்ம எண்ணம் தோன்றி யிருக்கிறது. உன் வாழ்வைப் பற்றிக் கூட அவர் கவலைப் படவில்லை. போரமைச்சரைப் பழிவாங்குவதுதான் உன்

வாழ்க்கையாக இருக்க வேண்டும் என்று கூறியிருக்கிறார். நேர்மையானவரின் வேதனை எப்படிப்பட்டது என்பது இதிலிருந்து தெரிகிறது. போரமைச்சருக்கு நீ ஜெயந்திகா மூலம் அளித்த தண்டனை போதாது மாளவிகா" என்று சொன்ன இளவரசன் "நான் எழுதுவதற்கு ஓலை கொண்டு வந்தாயா?" என்று கேட்டான்.

ஓலையும் எழுத்தாணியும் கொடுத்தாள் மாளவிகா.

"என் அன்பிற்குரிய தந்தையும் மரியாதைக்குரிய மாமன்னருமான விட்டலராயருக்குத் தங்கள் அன்பு மகன் இளவரசன் நரசிம்மன் விடுக்கும் அபய ஓலை. அபாய ஓலை என்றும் கருதலாம். என் முட்டாள் தனத்தால் சாளுக்கியரது வலையில் விழுந்து விட்டேன். கல்யாணபுரத்திற்குக் கொண்டு வரப்பட்டு சித்திரவதைக்கு ஆளாகி வருகிறேன். தினம் தினம் என்னைப் பயமுறுத்துகிறார்கள். நீங்கள் கல்யாண புரத்திற்கு வந்தால்தான் என்னை விடுவேன் என்கிறார்கள். நான் என்ன செய்வேன்? எனக்கு இன்னும் வயதாக வில்லை. நான் அனுபவிக்க வேண்டியது நிறைய இருக்கிறது. நீங்கள் அனுபவித்து முடித்தவர்கள். எனக்கு பதிலாக நீங்கள் இங்கு வந்து விட்டால் நான் ஊருக்குத் திரும்பி ஆட்சி செய்வேன். படைகளோடு வந்து உங்களை மீட்பேன். எனவே இந்த ஓலையைக் கண்டவுடன் உடனடியாகப் புறப்பட்டு கல்யாண புரத்திற்கு வரவும். வீராவேசத்திற்கு ஆளாகிப் படைகளை திரட்டி வரவேண்டாம். கல்யாணபுரத்தில் இரண்டு லட்சம் படை வீரர்கள் இருக்கிறார்கள். இரண்டாயிரம் யானைகளும் இருபதாயிரம் புரவிகளும் இருக்கின்றன. போரமைச்சர் யமதர்மராக இருக்கிறார். அவரை எதிர்க்கத் துணிந்து ஏமாற வேண்டாம். என் மீது பாசமில்லை என்று புறக்கணித்து விடாதீர்கள். இது உங்கள் கௌரவப் பிரச்சனை. நான் இறந்து விட்டால் ஹொய்சள வம்சம் உங்களைத் தூற்றும். எனவே நீங்கள் இருந்தாலும், என்ன காரியத்தில் இருந்தாலும் அவற்றையெல்லாம் விட்டுவிட்டு கல்யாணபுரத்திற்குக் கடுகி வரவும். என் தாயை நான் காணவேண்டும். தாய் முகத்தைக் காணாவிட்டால் நான் நோய்வாய்ப்படுவேன். பிடிவாதம் வேண்டாம். வந்து என்னைக் காப்பாற்றுங்கள்."

- என்று எழுதி கையெழுத்தைத் தலைகீழாகப் போட்டு மாளவிகாவிடம் கொடுத்தான் இளவரசன்.

"இதென்ன தலைகீழாக கையெழுத்தைப் போட்டிருக் கிறீர்கள்?" என்று கேட்டாள் மாளவிகா.

"எனக்கும் தந்தைக்குமான அடையாளம் இது. ஓலை என்னிடமிருந்து தான் வந்திருக்கிறது என்பதற்கான அத்தாட்சி இது" என்றான் இளவரசன்.

"இந்த ஓலையைத் தந்தையாரிடமா கொடுக்க வேண்டும்?"

"அவர் எங்கிருக்கிறார் என்பது உண்மையிலேயே எனக்குத் தெரியாது. அவர் இருப்பிடத்தைத் தேடி அலைய முடியாது. ஆகவே வேலாபுரத்திற்குச் சென்று சேனாதிபதியிடம் கொடுத்து விட்டு மகாராஜாவிடம் உடனடியாகச் சேர்த்து விடும் படிச் சொன்னால் போதும்."

"சேனாதிபதி ஓலை கொண்டு வருபவர்களைக் கொன்று விட மாட்டார்களா?"

"அவருக்கு வரும் ஓலைகளைப் பிரித்துப் படிக்கும் உரிமை அவருக்கு இருக்கிறது. ஓலையைப் படிப்பார். நான் எழுதிய ஓலை என்பதை அறிவார். அதிலுள்ள செய்திகளையும் படிப்பார். ஓலையை உடனே மகாராஜா இருக்கும் இடத்திற்கு அவர்கள் மூலமாகவே அனுப்பி வைப்பார்."

"கச்சிதமாக இருக்கிறது."

"இந்த ஓலையைக் கொண்டு போய் போரமைச்சருக்கும் காட்டு. நான் கூறிய செய்திகளையும் சொல். அவர் நம்புவார். ஓலையை எடுத்துக் கொண்டு தூதுவர்கள் செல்வார்கள்."

"ஓலையானது உங்கள் தந்தையாரை இங்கே கொண்டு வந்து விடுமா?"

"அதைப் பற்றி நான் எதுவும் சொல்லமுடியாது மாளவிகா."

"இதென்ன இப்படிச் சொல்கிறீர்கள்?"

"நான் உண்மையைத்தான் சொல்கிறேன். என் தந்தையாருக்கு நான் பெரிதல்ல. நாடே பெரியது. நாட்டிற்காக என்னை இழப்பார். எனக்காக நாட்டை இழக்கமாட்டார். ஆகவே கல்யாணபுரத்திற்கு அவர் வருவது பற்றி உறுதியாக எதையும் சொல்ல முடியாது."

"பிறகு எதற்காக ஓலையை எழுதுகிறீர்கள்?"

"உனக்காகத்தான்."

"எனக்காகவா?"

"இதற்காகத்தானே போரமைச்சர் உன்னை என்னிடம் அனுப்பினார்? அவரது நம்பிக்கை வீண் போகக் கூடாது அல்லவா? ஆகவேதான் ஓலை. இதைப் பார்த்ததும் அவர் நீ

வெற்றி பெற்று விட்டதாக நினைப்பார். தந்தையார் வரும் வரை என்னை எதுவும் செய்யமாட்டார்."

இளவரசனையே சற்று உற்றுப் பார்த்த மாளவிகா "உங்களை என்னால் புரிந்து கொள்ளவே முடியவில்லை. மற்றவர்களிடம் வெகுளியாக நடந்து கொள்கிறீர்கள். வெந்ததைத் தின்று வாயில் வந்ததைப் பேசுவது போல் பேசுகிறீர்கள். உங்களிடம் பேசியவர்கள் எல்லாம் உங்களைப் பற்றி ஒரு வார்த்தை கூட நல்லதாகப் பேசவில்லை. அனைவரும் பெண் பித்தன் என்று இகழ்கிறார்கள். நீங்களோ என்னைத் தொடவும் இல்லை. என்னிடம் மிகவும் தெளிவாகவும் அட்சர சுத்தமாகவும் பேசுகிறீர்கள். தந்தைக்கு எழுதியிருக்கும் ஓலையில் நீங்கள் எழுதியிருக்கும் விதம் ஓர் இளவரசர் எழுதக் கூடிய விதமாக இல்லை. எனக்கே வெறுப்பாக இருக்கிறது. உங்களை வரையறுக்க என்னால் முடியவில்லை. நீங்கள் எப்படிப் பட்டவர் இளவரசே?" என்று கேட்டாள்.

"என்னை மற்றவர்கள் புரிந்து கொள்ள வேண்டிய அவசியமில்லை. ஆனால் நான் எல்லோரையும் புரிந்து கொண்டிருக்கிறேன். என்னைப் பலரும் பலவிதமாகப் பேசுகிறார்கள். அவற்றைப் பற்றி நான் கவலைப்படுவதில்லை. மற்றவர்கள் எதிர்பார்ப்பது போல் நடந்து கொள்ள வேண்டிய அவசியம் எனக்கில்லை. அதே சமயம் நான் தெளிவாகத்தான் சிந்திக்கிறேன். நடந்து கொள்கிறேன்" என்றான் இளவரசன்.

"இப்போதும் எனக்கு குழப்பமாகத்தான் இருக்கிறது."

"என்னைப் பார்த்து மற்றவர்கள் குழம்புவது எனக்குச் சாதகமானதுதான்."

"நான் குழம்ப விரும்பவில்லை இளவரசே. தெளிவடையவே விரும்புகிறேன். உங்களைச் சந்திக்கும் வாய்ப்பு தற்செயலாக நடந்ததே தவிர இதைக் கனவிலும் நான் எதிர்பார்க்கவில்லை. சந்திப்பதற்கு முன்னர் உங்களைக் கேவலமானவராகச் சித்தரித்திருந்தார். சந்தித்த பிறகே உங்களைப் பற்றிய விவரங்கள் பொய்யானவை என்பது புரிந்தன. இறைவன் தான் நம்மைச் சந்திக்க வைத்திருக்கிறான் என்று கருதினேன். இந்த நிலையில் எனக்காக இந்த ஓலையை எழுதித் தந்ததாகச் சொல்கிறீர்கள். இதை நான் போரமைச்சருக்குக் காட்டினால் அவர் திருப்தியடைவார். எனக்குப் பிரச்சனை இருக்காது. ஆனால் உங்களுக்கு?"

"எனக்கென்ன பிரச்சனை?"

"ஓலையைப் பார்த்து விட்டு உங்கள் தந்தையார் வரமாட்டார் என்று சொல்கிறீர்கள். அவர் வராவிட்டால் போரமைச்சர்

உங்களை விடமாட்டார். தன் சுபாவத்தைக் காண்பிப்பார். சித்திரவதை செய்வார்.

"அதற்கு நான் என்ன செய்ய முடியும் மாளவிகா. என் தந்தையை என்னால் வரவழைக்க முடியாது. ஒரு வேளை வந்தால் போரமைச்சர் எங்கள் இருவரையுமே அழிப்பார். ஆகவே என் தந்தை இங்கே வரவே வேண்டாம். என்னை யார் வேண்டுமானாலும் சித்திரவதை செய்யட்டும். கவலையில்லை எனக்கு?"

"எனக்கு கவலையாக இருக்கிறது. மற்றவர்கள் கூறியது போல் நீங்கள் கீழ்த்தரமானவராக இருந்திருந்தால் உங்களை யார் சித்திரவதை செய்தாலும் கவலைப்பட மாட்டேன். ஆனால் இப்போது என்னால் கவலைப்படாமல் இருக்க முடியவில்லை."

"ஏன்?"

"தெரியவில்லை இளவரசே. என்னைக் காப்பாற்ற முயலும் நல்லவருக்கு நானும் நல்லது செய்ய வேண்டும்."

"உனது சக்திக்கு மீறி கவலைப்படாதே. செயல்படாதே. போரமைச்சருக்கு உன் மீது சந்தேகம் வந்தால் எதைப் பற்றியும் கவலைப்படாமல் உன்னைக் கொல்வதற்கு முயல்வார். இத்துடன் உன் காரியத்தை முடித்துக் கொண்டு எதிர்கால வாழ்வைப் பார்."

"உங்கள் இதயம் கல் என்பது உங்களது சொல் மூலம் விளங்குகிறது. எல்லோரையும் புரிந்து கொண்டதாகச் சொல்லும் நீங்கள் என்னைப் புரிந்து கொள்ளவில்லை. சொல்லம்புகளால் கொல்கிறீர்கள்."

மாளவிகாவை அனுதாபத்துடன் பார்த்தான் நரசிம்மன்.

"மனிதர்களின் பிரச்சனைக்குக் காரணம் அவிழ்க்க முடியாத முடிச்சுக்களை அவர்களே போட்டுக் கொள்வதுதான். நீயும் அந்தத் தவறைச் செய்யாதே. உன் தந்தையின் ஆசையை நிறைவேற்று. வேறு எதையும் சிந்திக்காதே" என்றான்.

"எனது சிந்தனைக்குத் தடை போட நீங்கள் யார்?" என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்ட மாளவிகா "போரமைச்சரைப் பழிவாங்க நீங்கள் உதவுவதாகச் சொன்னீர்கள். மறந்து விட்டீர்களா?" என்று கேட்டாள்.

"இதிலிருந்து என்ன புரிந்து கொண்டாய் நீ? போரமைச்சரைப் பழிவாங்க நான் உதவும் பட்சத்தில் அவரிடம் சிக்கிக் கொள்வேனா?" என்று கேட்டான் இளவரசன்.

மாளவிகாவின் முகம் மலர்ந்தது.

"மகிழ்ச்சி. நான் புறப்படட்டுமா?" என்று கேட்டாள்.

"இப்போதே போய்விட்டால் சந்தேகப்படுவார்கள். அப்புறமாகப் போகலாம். அப்போது தான் நீ சரசமாடிவிட்டுச் செல்வதாக நம்புவார்கள்."

"சரசமாடக் கூடாதா இவர்?" என்று கள்ளமாக நினைத்தாள் மாளவிகா.

மறுநாள் போரமைச்சரைச் சந்தித்து ஓலையைக் கொடுத்த போது அவர் இட்ட கட்டளை அவளை அதிரவைத்தது.





விரும்பாத வேலையை ஒருவனிடம் ஒப்படைப்பதென்பது தோல்வியை நோக்கித் தெரிந்தே பயணம் செய்வதைப் போன்றது – போரமைச்சர்




இளவரசன் நரசிம்மன் கொடுத்த ஓலை இருந்தப் பேழையைப் போரமைச்சரிடம் கொடுத்தாள் மாளவிகா.

பேழையிலிருந்து ஓலையை எடுத்துப் படித்த போரமைச்சர் "இதை நீ படித்தாயா?" என்று கேட்டாள்.

"இல்லை ஐயா. அவன் எனக்கதைக் காட்டவில்லை. அதை நான் படிக்க வேண்டிய அவசியமும் இல்லை" என்றாள் மாளவிகா.

"இது ஒன்றும் ரகசிய ஓலை இல்லை. படி" என்று சொல்லி ஓலையைக் கொடுத்தார் போரமைச்சர்.

ஓலையை வாங்கிப் படித்து விட்டுத் திருப்பிக் கொடுத்தாள் மாளவிகா.

"படித்தாயா? என்ன ஓலை இது? இவனெல்லாம் எப்படி இளவரசனானான்? இவன் மன்னனாக முடி சூடினால் ஆட்சி என்ன லட்சணத்தில் இருக்கும்? என்னைப் பார். நான் போரமைச்சர்தான். ஆனால் நிர்வாகம் செய்கிறேன். என்னைக் கண்டால் புல் நடுங்குகிறது. பூண்டு நடுங்குகிறது. மக்கள் நடுங்குகிறார்கள். பேய்கள் கூடப் பேந்தப் பேந்த விழிக்கின்றன. இருந்தால் இப்படி இருக்க வேண்டும் இங்கே இளவரசே நடுங்கிச் சாகிறான். மகா கேவலம்" என்றார் போரமைச்சர்.

மாளவிகா உள்ளுக்குள் சிரித்துக் கொண்டாள்.

"இதென்ன? இந்தக் கிறுக்கன் தலைகீழாகத் தன் கையெழுத்தைப் போட்டிருக்கிறானே?" என்று கேட்டார் போரமைச்சர்.

"உண்மையான ஓலை என்பதற்கு இதுதான் அடையாளமாம்."

"இல்லை மாளவிகா. இது சூழ்ச்சி. அவன் சொல்வது பொய். இப்படியொரு அடையாளம் எங்கேயும் இல்லை. நான் கேள்விப்பட்டதில்லை. நீ அவனிடம் சென்று வேறு ஓலையை எழுதச் சொல்லி ஒழுங்காகக் கையெழுத்தைப் போடச் சொல்லி வாங்கி வா. அது தான் சரியாக இருக்கும்."

"ஒரு முறை ஓலையை வாங்கவே படாதபாடு பட்டு விட்டேன் ஐயா. தினம் தினம் அவனிடம் கெட்டுப் போகிறேன். பட்டுப் போகிறேன். என்னைப் பேசாமல் வெட்டி விடுங்கள். விட்டுப் போய் விடுவேன் உலகைவிட்டு."

"உன்னைக் கெடுத்த அவனை லேசாக விட்டு விடுவேன் என்று நினைத்து விடாதே. அவனது தந்தையும் வரட்டும். இருவரையும் நிர்வாணமாக்கி நாய்களை விட்டுக் கடிக்கச் சொல்கிறேன். நீ கண்ணாரக் கண்டு சந்தோஷப் படு."

"அவனை என்ன செய்தால் என்ன ஐயா? என்னிடமிருந்து போனது போனது தானே?"

"உனக்குத் திருமணம் செய்து உருப்படியாக வாழச் செய்வது என் பொறுப்பு. நீ ராணி போல உலவுவாய். உனக்குப் பின்னால் பணிப் பெண்கள் படைபோல் வருவார்கள். இது நிச்சயம் நடக்கும். அந்த கேடுகெட்ட இளவரசனை - ஒன்றுக்கும் பயனளிக்காத இளவரசனை - மூளையும் முதுகெலும்பும் இல்லாத இளவரசனை - மூடர்களின் தலைவனை - கோழைகளில் கடைந்தெடுத்த கோழையை - காமக் கசடனை வழிக்குக் கொண்டு வர உன் ஒருத்தியால் மட்டுமே முடிந்திருக்கிறது. இந்த ஓலையை வாங்கி வந்தது உனக்கு வெற்றிதான். பொறுமையை இழந்து விடாதே. இன்றிரவு நான் சொன்ன மாதிரி ஓலையை வாங்கி விடு. பிறகு நான் பார்த்துக் கொள்கிறேன்."

போரமைச்சருக்காக இல்லையென்றாலும் தனக்காக இளவரசனை சந்திக்க ஆவலாக இருந்தாள் மாளவிகா. போரமைச்சர் அதற்கு வாய்ப்பு தந்ததற்கு அவருக்கு உள்ளுக்குள் நன்றி தெரிவித்துக் கொண்டு வெளியில் அலுத்துக் கொண்டாள்.

ஓலையை எங்கே எடுத்துச் செல்ல வேண்டும் என்ற விவரங்களை இளவரசன் கூறியபடியே போரமைச்சரிடம் சொன்னாள்.

"சரியாகத்தான் சொல்லியிருக்கிறான். எப்போதாவது அவனது மூளை வேலை செய்யும் போலிருக்கிறது" என்று சொன்ன போரமைச்சர் "அவன் தரும் ஓலையை வேலாபுரத்திற்குக் (பேலூர்) கொண்டு போவதற்குச் சரியான நபர் நீ தான்" என்றார்.

மாளவிகா திகைத்தாள்.

போரமைச்சரை வீழ்த்தத்தான் அவரிடம் அவள் வந்தாளே தவிர அவருக்கு உதவுவதற்காக அல்ல.

வேலாபுரத்திற்கு ஓலையைக் கொண்டு செல்லும் வேலையானது அவளைப் பொறுத்த வரை வேண்டாத

வேலை. அதில் ஈடுபடுவதென்பது ஆபத்தானது. வேண்டாத நேரமாக அமையக் கூடிய அந்த வேலையை போயும் போயும் போரமைச்சருக்காகச் செய்வதில் அவளுக்குத் துளி கூட விருப்பமில்லை.

அதோடு ஹொய்சள இளவரசனைச் சந்தித்ததிலிருந்து அவன் பால் அவள் ஈர்க்கப்பட்டிருந்தாள். போரமைச்சரின் அபிப்ராயங்களையெல்லாம் தூள்தூளாக்கி புடம் போட்டத் தங்கத்தைப் போல இளவரசன் விளங்கிய காரணத்தால் கல்யாண புரத்திலேயே அவன் தான் அனைத்து விஷயங்களிலும் தகுதியானவன் என்று கருதினாள். அனாதையாக விடப்பட்ட தனக்கு ஆதரவாக அமையக் கூடியவன் அவனாகத்தான் இருக்க முடியும் என்று நினைத்தாள்.

தனக்கு உதவிய இளவரசனை விட்டு விட்டு வேலாபுரத்திற்குச் செல்வது தனக்குச் சம்பந்தமில்லாத சம்மதமில்லாத காரிய மாகவும் தனக்கு அழிவைத் தரக் கூடிய காரியமாகவும் இருந்தது.

எனவே போரமைச்சரைப் பார்த்து "தாங்கள் என்னை அழித்து விட முடிவு கட்டிவிட்டீர்களா ஐயா? தங்களிடம் அபயம் கேட்டுத்தான் நான் வந்தேனே தவிர அபாயத்தை அணைத்துக் கொள்வதற்காக இல்லை. பெண்களால் முடியும் காரியம் எது என்று தேர்ந்தெடுத்து இளவரசனிடம் அனுப்பிய தாங்கள் தற்போது பெண்களால் இயலாத காரியத்தை ஒப்படைக்க முயல்வது சரியா?" என்று கேட்டாள்.

"பயப்படாதே மாளவிகா. உன் உயிருக்கு நான் உத்தரவாதம் தருகிறேன். உன்னோடு ஆயிரம் வீரர்களை அனுப்புகிறேன்" என்றான் போரமைச்சர்.

"ஐயா! மனிதனின் உயிருக்கான உத்திரவாதத்தை மனிதனால் தரமுடியும் என்றால் ஊழிக் காலத்திலிருந்து மனிதர்கள் கடவுளை எதற்காக நம்பி வருகிறார்கள்? தொழுது வருகிறார்கள்? என்னை உங்கள் வீரர்கள் காப்பாற்றக் கூடியவர்களாகவும் இருக்கலாம். ஆனாலும் இந்த காரியத்தை என்னால் செய்ய இயலாது. என்னை மன்னித்து விடுங்கள் ஐயா. என்னை இங்கேயே வெட்டிப் போட்டு விடுங்கள். நிம்மதியாகச் சாகிறேன்" என்றாள் மாளவிகா.

"சரி சரி. வேண்டாம் என்றால் விடு. விரும்பாத வேலையை ஒருவனிடம் ஒப்படைப்பதென்பது தோல்வியை நோக்கித் தெரிந்தே பயணம் செய்வதைப் போன்றது. நீ அந்த வேலையைச் செய்ய வேண்டாம். இன்றிரவு இளவரசனிடம் சென்று மாற்று ஓலையைப் பெற்று வந்து தந்து விடு. அது போதும்" என்று

சொல்லி பழைய ஓலையைப் பேழையில் வைத்துக் கொடுத்தார் போரமைச்சர்.

பெரும் ஆறுதலாக இருந்தது மாளவிகாவிற்கு.

அன்றிரவு அதிக அலங்காரம் செய்து கொண்டு தனது அலங்காரத்தால் ஆனந்தமடைந்தவளாய் துள்ளியபடிச் சென்றாள் இளவரசனிடம்.

"என்ன மாளவிகா வந்து விட்டாய்? உன் வேலை நேற்றே முடிந்து விட்டதே?" என்று கேட்டான் இளவரசன் நரசிம்மன்.

"வேண்டாம் போய் விடுகிறேன். போகட்டுமா?" என்று பொய்க் கோபம் காட்டினாள் மாளவிகா.

"என் பேச்சைக் கேட்கவில்லை என்பது நீ இப்போது இங்கு வந்ததிலிருந்து தெரிகிறது. ஆகவே நான் சொன்னால் இப்போது மட்டும் கேட்கவா போகிறாய்? இது உன் இடம். நீ வரலாம். போகலாம்" என்றான் நரசிம்மன்.

"உங்கள் இதயம் கல்லாகவா இருக்கிறது? அல்லது புல்லாகப் போய் விட்டதா? இப்படிப் பேசுகிறீர்களே! பெண்களிடம் உங்களுக்குப் பேசவே தெரியாதா?" என்று கோபித்தாள் அவள்.

"எல்லா விஷயமும் எனக்குத் தெரியும் என்று எப்போதும் நான் சொன்னதில்லை. சாதாரணமாக பல விஷயங்கள் எனக்குத் தெரியாது. நீ கூறியது அவற்றில் ஒன்றாக இருக்கலாம். கற்றுக் கொடுத்தால் தெரிந்து கொள்கிறேன்" என்று சொன்ன இளவரசன் "இன்றென்ன உன் அலங்காரம் அமர்க்களமாக இருக்கிறது?" என்று கேட்டான்.

"உங்களுக்கு ரசிக்கக் கூடத் தெரியுமா?"

"யார் ரசனைக்காகவும் அழகும் அலங்காரமும் அமைவதில்லை. மலை அழகு. சிலை அழகு. கடல் அழகு. கார் மேகம் அழகு. அவற்றை யார் ரசிக்கவில்லை என்றாலும் அழகாகத் தான் இருக்கும். உன் அழகும் அப்படித்தான். பிறர் ரசிப்பார்கள் என்றா உனக்கு அழகு வந்தது? இல்லை. இது இயற்கை தந்தது."

"அலங்காரம் செயற்கையானது அல்லவா?"

"ஆமாம். செயற்கையானது தான். அதனால் தான் கேட்டேன்."

"இந்த அலங்காரம் உங்களுக்குப் பிடிக்கவில்லையா?"

"உன் அழகே ஓர் அலங்காரம்தான். அதற்கு எதற்கு ஒப்பனை?"

"இப்போது நீங்கள் பேசுவதுதான் பேச்சு. என்ன மாதிரியான பேச்சு உங்கள் பேச்சு. இதைப் பேச உங்கள் உதடுகள் புண்ணியம்

செய்திருக்க வேண்டும்" என்று சொன்ன மாளவிகா "நீங்கள் கொடுத்த ஓலையைப் போரமைச்சர் நிராகரித்து விட்டார்" என்றாள்.

"முதலில் உட்கார்."

உட்கார்ந்த அவள் "உங்கள் கையெழுத்து முறையை அவர் சந்தேகிக்கிறார். அதில் சூது வாது ஏதாகிலும் இருக்கும் என்கிறார். ஆகவே வேறு ஓலையை எழுதி ஒழுங்கான முறையில் கையெழுத்து போட வேண்டுமாம்" என்றாள்.

இளவரசன் சிரித்தான்.

"எதற்காக இந்தச் சிரிப்பு?"

"போதாத காலம் வந்தால் உண்மையைச் சந்தேகிப்பார்கள். பொய்யை வரவேற்பார்கள். நான் கையெழுத்திட்டதற்கான காரணம் சொன்னது உண்மை. போரமைச்சருக்கோ பொய்தான் தேவையாக இருக்கிறது."

"நீங்கள் ஒழுங்காகக் கையெழுத்துப் போட்டால் என்ன ஆகும்?"

"நான் எப்படிப் போட்டாலும் முடிவு ஒன்று தான். அதாவது என் தந்தை இங்கே வரமாட்டார்."

"உங்களுக்கு ஒன்று தெரியுமா? உங்கள் ஓலையை வேலாபுரத்திற்கு என்னையே எடுத்துச் செல்லும்படிச் சொல்லி விட்டார் போரமைச்சர்."

"நன்றாய்ப் போய் விட்டது. நீ அக்காரியத்தைச் செய்யலாமே?"

"விளையாடுகிறீர்களா நீங்கள்? போரமைச்சருக்கு உதவுவதற் காகவா நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்? என் தந்தையின் லட்சியத்தை நிறைவேற்ற வேண்டும். போரமைச்சரைப் பழிவாங்க வேண்டும். ஒருவேளை நான் தனித்து விடப் பட்டாலும் லட்சியத்தைக் கைவிட மாட்டேன்."

"இது என்ன புது வைராக்கியம்? வேகம்?"

"நீங்கள் தான் நான் வந்ததையே பிடிக்காமல் பேசுகிறீர்களே?"

"நான் நன்றாகப் பேசுவதாக அல்லவா நீ சொன்னாய்?"

மாளவிகா தடுமாறினாள்.

"இதோ பார் மாளவிகா. நான் பேச வேண்டியதை நீ பேசி விட்டாய். லட்சியத்தை நிறைவேற்ற உன்னால் ஒருவேளை முடியாமல் போனால் நான் நிறைவேற்றுவேன். உனக்காக என்றில்லை. போரமைச்சரைப் போன்றவர்கள் எளிதில் விடுபட்டு

விடக் கூடாது. பிறருக்கு இழைத்த கொடுமைகளை அவருக்குத் திருப்பிக் கொடுக்க வேண்டும். அது தான் தர்மம்'' என்றான் இளவரசன்.

“இது போலவே எப்போதும் பேசுங்கள்'' என்று சொன்ன மாளவிகா “புது ஓலையை எழுதிக் கொடுங்கள்'' என்றாள்.

“இருக்கட்டும் அதற்கென்ன அவசரம்? பயனற்ற ஓலைதானே? நீ வெளியே செல். போரமைச்சரின் சேவகர்கள் யாராவது இருப்பார்கள். அவர்களிடம் நான் மது அருந்தி மயங்கிக் கிடப்பதாகவும், என்னிடம் ஓலை எழுதி வாங்க முடியவில்லை என்றும், நாளை எழுதி வாங்குவதாகவும் சொல்லி அத்தகவலைப் போரமைச்சருக்குத் தெரிவிக்கச் சொல்'' என்றான் இளவரசன்.

மாளவிகா ஆர்வத்தோடு எழுந்து வெளியே சென்றாள். சேவகர்களைத் தேடுவது போல் பாவனை செய்தாள். இரண்டு சேவகர்கள் வந்தார்கள். அவர்களிடம் விஷயத்தைச் சொன்னாள்.

“உணவை அனுப்பட்டுமா?'' என்று கேட்டார்கள்.

“எனக்கு மட்டும் அனுப்புங்கள். இளவரசனுக்கு வேண்டாம். அவன் விடிந்த பிறகுதான் விழிப்பான் போலிருக்கிறது'' என்றாள் மாளவிகா.

உள்ளே வந்தாள்.

அங்கே இளவரசன் கட்டையைப் போலக் கிடந்தான்.

“இது என்ன கோலம்?'' என்று கேட்டாள் அவள்.

“அலங்கோலம்.''

“எதற்கு இது?''

“மது அருந்தியவனின் கோலம் அலங்கோலம் தானே?''

“மிகவும் சரி''

“சேவகர்கள் இங்கு வரலாம். வரும் போது நான் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கக் கூடாதல்லவா?''

“ஆமாம். உணவு கொண்டு வரும்படிச் சொல்லியிருக்கிறேன். சேவகர்கள் வருவார்கள்.''

“அவர்கள் வரும் வரை நான் இப்படியே இருக்கலாம் அல்லவா?''

“நான் எனக்கு மட்டும் உணவு கொண்டு வரும்படி உளறி விட்டேன்.''

“சரியாகத்தான் சொல்லியிருக்கிறாய். மயங்கிக் கிடப்பவனுக்கு உணவு எதற்கு?”

“நீங்கள் தான் மயங்கவில்லையே! பசிக்காதா?”

“இங்கே நான் அழைத்து வரப்பட்டபோது மூன்று நாட்களுக்கு உண்ணாமல்தான் இருந்தேன். ஒரு வேளை உண்ணாமல் இருக்க முடியாதா?”

“சேவகர்கள் வருகிறார்கள் போலிருக்கிறது. மௌனமாய் இருங்கள்.”

சேவகர்கள் வந்து உணவை வைத்தார்கள்.

மாளவிகாவைப் பார்த்து “அம்மணீ! இரவில் நீங்கள்தான் இருக்கப் போகிறீர்களா?” என்று கேட்டார்கள்.

“இரண்டு நாட்களாக இங்கே தானே இருக்கிறேன். இன்றைக்கு மட்டும் என்ன? கவலைப்படாதீர்கள். சிறிது நேரத்தில் புறப்பட்டு விடுவேன்” என்றாள் மாளவிகா.

சேவகர்கள் அகன்றார்கள்.

“எழுந்து கொள்ளுங்கள். இந்த உணவைச் சாப்பிடுங்கள்” என்றாள் மாளவிகா.

எழுந்து அமர்ந்து கொண்ட இளவரசன் “நீ சாப்பிடு மாளவிகா. எனக்கு வேண்டாம்” என்றான்.

“அதெல்லாம் முடியாது.”

“சொல்வதைக் கேட்பது உன் குணமாக இருக்க வேண்டும். அடமும் பிடிவாதமும் உன் குணங்களாக இருக்கக் கூடாது. எனக்கு உணவு பிரச்சனையில்லை என்னும் போது என்னை வற்புறுத்தாதே. முதலில் நீ உண்டு முடி.”

அவள் அதற்குப் பிறகு பிடிவாதம் பிடிக்காமல் வேண்டா விருப்புடன் சிறிது மட்டுமே சாப்பிட்டாள்.

அவன் ஓலையை எழுதி அவளது கையில் கொடுத்து விட்டு “உன்னிடம் இசை பயிலும் மாணவிகள் நீ சொல்வதைக் கேட்பார்களா?” என்று கேட்டான்.

“கேட்பார்கள்.”

“அவர்கள் குடும்பத்தினர்?”

“அவர்களும் கேட்பார்கள்.”

“மிகவும் நல்லது மாளவிகா. அவர்களைத்தான் நாம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.”

"உங்கள் திட்டம் என்ன?"

"நீ ஒரு பாட்டு பாடேன்."

"இங்கேயா? இப்போதா?"

"இசைக்கு எல்லா நேரமும் இசைவான நேரம் தான்."

அவள் பாடினாள்.

**- நான் பேச நினைப்பதெல்லாம் நீ பேச வேண்டும்**
**நாளோடும் பொழுதோடும் உறவாட வேண்டும் -**

"இரு. இப்போது நான் பாடுகிறேன்" என்று சொல்லி இளவரசன் பாடினான்.

**- நான் காணும் உலகங்கள் நீ காண வேண்டும்**
**நீ காணும் பொருள் யாவும் நானாக வேண்டும் -**

"நன்றாகப் பாடுகிறீர்களே! என்னிடம் சொல்லவே இல்லையே! தொடர்ந்து பாடுங்கள்.

**- பாலோடு பழம்யாவும் உனக்காக வேண்டும்**
**பாவை உன்முகம் பார்த்து பசியாற வேண்டும்**
**மனதாலும் நினைவாலும்**
**தாயாக வேண்டும் நானாக வேண்டும்**
**மடிமீதில் விளையாடும்**
**சேயாக வேண்டும் நீயாக வேண்டும் -**

இளவரசன் பாடியதைத் தொடர்ந்து மாளவிகா பாடினாள்.

**- சொல்லென்றும் மொழியென்றும்**
**பொருள் ஒன்றும் இல்லை**
**சொல்லாத சொல்லுக்கு விலையேதும் இல்லை**
**ஒன்றோடு ஒன்றாக உயிர்சேர்ந்த பின்னே**
**உலகங்கள் நமையின்றி வேறேதும் இல்லை - ***

"நம் பாட்டில் எவ்வளவு பொருட்கள் இருப்பதை கவனித்தாயா மாளவிகா. இந்தப் பாட்டின் பொருளாக நாமிருவரும் இருக்கிறோம் என்று நினைக்கிறேன். என்ன சொல்கிறாய்?" என்று கேட்டான் இளவரசன்.

"நான் விரும்பியதும் எதிர்பார்த்ததும் இதுதான் இளவரசே. என் எதிர்காலமும் இதுதான். இது நடக்குமா?" என்று கேட்டாள் மாளவிகா.

---

* பாடலாசிரியருக்கு நன்றி.

அன்பு என்பது என்றைக்குமே தோற்காத ஒரு அம்சம். அன்பின் தோல்வி எது என்பதை அறியாதவர்கள்தான் அது தோற்றதாகச் சொல்லிக் கொள்வார்கள்."

"அன்பின் வெற்றி என்பது என்ன?"

"அன்போடு இருப்பதுதான். அன்புக்கு மீறிய ஒன்று இருக்கிறதா என்ன? இல்லை."

"என்னைப் பூரிப்படைய வைத்திருக்கிறீர்கள் இளவரசே. உங்களை நான் தொடலாமா?"

"ஆண்கள் மலர்களைத் தொடுவதை விட மலர்கள் ஆண்கள் மீது விழுவது ஆனந்தமானது."

மாளவிகா அவனது கைகளைப் பற்றிக் கொண்டு அழுத்தினாள்.

அவன் அவளை தன் மார்பில் அணைத்துக் கொண்டு "நான் தாயாகி விட்டேன். நீ சேயாகி விட்டாய். உனக்கும் ஆதரவு கிடைத்து விட்டது. எனக்கும் ஆதரவு கிடைத்து விட்டது" என்றான்.

"இளவரசே! உங்கள் போக்கு ஏன் இப்படி இருக்கிறது. அந்தப் புதிரை அவிழ்க்க மாட்டீர்களா!"

"மாளவிகா! இது குறித்து என் தந்தையிடம் கூட நான் சொன்னதில்லை. உன்னிடம் சொல்கிறேன். என் பாட்டனார் சொல்லுவார். முட்டாளைப் போலப் பேசு. அறிவாளியாக நடந்து கொள் என்பார். மற்றவர்கள் நம்மை முட்டாளாக நினைத்தால் அதை நமக்கு ஆதாயம் என்று கருது. கோபப் படாதே. அப்போதுதான் மற்றவர்கள் ஏமாறுவார்கள். நீ சரியான விதத்தில் செயல்படலாம் என்பார். அதைத் தான் நான் பின்பற்றுகிறேன். தந்தையாரிடம் கூட அப்படித்தான் நடந்து கொள்வேன். ஒரு முறை அவரிடம் "நான் ஒரு ஆசை நாயகியை வைத்துக் கொள்ளவா?" என்று கேட்டேன். எந்த மகனாவது தந்தையிடம் இப்படிக் கேட்பானா! நான் கேட்டேன். அதற்குப் பிறகு அவர் என்னிடம் பேசுவதே இல்லை."

"அவரிடம் கூட இப்படி நடந்து கொள்ள வேண்டுமா?"

"அவர் என்னைப் பற்றி என்ன நினைக்கிறார் என்பதை அறிந்து கொள்ளவே அப்படியெல்லாம் பேசுவேன். மகா அறிவாளியான அவர் என்னைப் புரிந்து கொள்ளவில்லை" என்று சொன்ன இளவரசன் "அது போகட்டும் மாளவிகா. இப்போது நீ புறப்படு. நாளை காலை போரமைச்சரிடம் ஓலையைக் கொடு.

ஓலை அனுப்பப் படுகிறதா என்று கவனி. அதற்கடுத்து நான் சொல்வது போல் செய்'' என்று சொல்லி தன் திட்டத்தைச் சொன்னான்.

மாளவிகா புறப்பட்டாள்.

இரண்டு நாட்கள் கழித்து இளவரசன் இருந்த அறைக்கு முன்னால் பெருங்கூட்டம் கூடியிருந்தது.

உள்ளே இளவரசன் மாளவிகாவின் கழுத்தை வளைத்துப் பிடித்துக் கொண்டு அவளைக் கொல்லப் போவதாக கர்ஜித்தான்.





தவறான கணக்குகளைப் போட்டு அதைச் சிம்மாசன மாக்கி அதன் மீது சந்தேகத்தை அமர்த்தினால் அது ஆட்டம் போடுமே தவிர அடங்காது – ராஜவைத்தியர்




சேவகர்கள் வந்தார்கள். உள்ளே இருந்த விபரீத காட்சியைக் கண்டார்கள். அறையானது அலங்கோலமாக இருந்தது. இளவரசன் மாளவிகாவைத் தன் மார்பில் சாய்த்துக் கொண்டு இடது கையால் அவளது கழுத்தை வளைத்துக் கொண்டு வலது கையில் குறுவாளை ஏந்தியபடி இருந்தான்.

அவனது கண்கள் சிவந்திருந்தன.

சேவகர்கள் அறைக்குள் நுழையமுடியவில்லை. அறை உட்புறமாகப் பூட்டப்பட்டிருந்தது.

அதிர்ந்து போன சேவகர்களில் ஒருவன் இளவரசனைப் பார்த்து "இளவரசே! எதற்காக இப்படி நடந்து கொள்கிறீர்கள்? அந்தப் பெண் என்ன தவறு செய்தாள்?" என்று கேட்டான்.

"உங்கள் போரமைச்சரைக் கூப்பிடுங்கள். அப்போது தான் சொல்வேன்" என்றான் இளவரசன்.

"என்ன உளறுகிறாய்? போரமைச்சராவது இங்கேவருவதாவது! உளராதீர்கள்" என்றான் சேவகன்.

"அவர் இங்கே உடனடியாக இங்கு வந்தாகவேண்டும். அவரது உயிர் காக்கப்பட வேண்டுமென்றால் அழைத்து வாருங்கள்" என்றான் இளவரசன்.

"நீங்கள் கூறுவது எங்களுக்கு விளங்கவில்லை."

"உங்கள் போரமைச்சரின் உயிர் பேராபத்தில் இருக்கிறது. ராஜ வைத்தியர்கள் வைத்தியம் என்ற பெயரில் சாகடித்துக் கொண்டிருக்கிறார்கள். போரமைச்சர் அவர்களை நம்பி மோசம் போகிறார். அவரைக் காப்பாற்றுவதற்கான மருந்தை இவளிடம் கொடுத்தேன் போரமைச்சருக்குத் தரும்படி. இவளோ அவரிடம் கொடுக்காமல் எங்கேயோ மறைத்து விட்டாள். ஆகவே தான் இவளை இந்த நிலையில் வைத்திருக்கிறேன். போரமைச்சரை உடனடியாக வரச் சொல்லுங்கள். தாமதித்தால் அவர் உயிர் போய் விடும்" என்றான் இளவரசன்.

"அது, சரி. மக்கள் இங்கே எதற்காகக் கூடியிருக்கிறார்கள்?" என்று கேட்டான் சேவகன்.

"அவர்கள் இருந்தால் என்ன? போனால் என்ன? முக்கியமான விஷயம் போரமைச்சரைக் காப்பாற்றுவதுதான்."

சேவகர்கள் வேறு வழியில்லாமல் போரமைச்சரிடம் சென்றார்கள்.

அவர்கள் அகன்றவுடன் மாளவிகாவை விடுவித்த இளவரசன் அறைக் கதவைத் திறந்தான். மாளவிகாவை அழைத்துக் கொண்டு அவளது இருப்பிடத்திற்குச் சென்றான். மக்கள் கூட்டம் அவர்கள் இருவரையும் கவசம் போல் பாதுகாத்துச் சென்றது.

இதே நேரத்தில் சேவகர்கள் போரமைச்சரைச் சந்திக்க அரண்மனைக்குச் சென்றார்கள்.

ஆனால் அவரைச் சந்திக்க முடியவில்லை.

காமசுகம் அனுபவிக்க முடியாது என்று வைத்தியர்கள் கூறிவிட்டதால் கலங்கிப் போன போரமைச்சர் பெண்களை வரவழைத்து ஆடைகளை நீக்கச் சொல்லிப் படுக்க வைத்து அந்த உடல்களின் மீது உருண்டார். கை காளால் என்ன செய்ய முடியுமோ அதையெல்லாம் செய்தார். வாய் ஒன்று இருப்பதை நினைவூட்டிக் கொண்டு அதற்கும் வேலை கொடுத்தார்.

திடீரென்று அவரது அங்கம் எரிச்சலுக்கு ஆளானது. ரத்தம் வடிந்தது. அலறினார்.

பெண்களில் ஒருத்தி ஆடையை அணிந்து கொண்டு வெளியே போய் ராஜ வைத்தியரை வரச் சொன்னாள்.

ராஜ வைத்தியர் சக்கிரவர்த்தியைக் கவனித்துக் கொண்டிருந்ததால் துணை வைத்தியர் ஓடோடி வந்தார்.

"அவன் எங்கே?" என்று கேட்டார் போரமைச்சர்.

நாடே போற்றும் ராஜவைத்தியர் போரமைச்சர் ஏக வசனத்தில் பேசியது துணை வைத்தியருக்குச் சிறிதும் பிடிக்கவில்லை.

தெரியாதவர்களுக்கு வழிகாட்டலாம். வழி தெரிந்து பாதை மாறிப் பயணம் செய்பவர்களுக்கு எதுவும் காட்ட முடியாது. வேடிக்கைதான் பார்க்க வேண்டும்.

எனவே துணை வைத்தியர் அதுபற்றிய பேச்சில் இறங்காமல் "ஐயா! தாங்கள் காலையில் அருந்த வேண்டிய மருந்தை அருந்தவில்லையா?" என்று கேட்டார்.

"மறந்து விட்டேன் போலிருக்கிறது."

“நினைவூட்டுவதற்குப் பணியாட்கள் இல்லையா?”

“அவர்களும் மறந்திருக்க வேண்டும். அவர்களின் தலைகள் இன்று சீவப்படும். இது உறுதி.”

“ஐயா! நான் வரும் போது இங்கே பெண்கள் இருந்தார்களே! என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?”

“இதைக் கேட்கவா இங்கே வந்தாய் மூடனே! என்னிடம் எதை வேண்டுமானாலும் கேட்கக் கூடிய தைரியம் உங்களுக் கெல்லாம் வந்து விட்டதா?”

“கோபப்படாதீர்கள் ஐயா. தாங்கள் பெண்களின் சகவாசமில்லாமல் இருக்க வேண்டும் என்று பிரதான ராஜ வைத்தியர் கூறியிருந்தார். தாங்கள்...”

“முட்டாளே! அவர் சொன்னது வேறு. பெண்களையே பார்க்க வேண்டாம் என்று சொல்லவில்லை.”

“இங்கே பெண்கள் இருந்தது நீங்கள் பார்ப்பதற்காகத் தானே? வேறொன்றுமில்லையே!”

“வைத்தியனே! பைத்தியக்காரனைப் போல உளராமல் வைத்தியத்தைச் செய்.”

“அதற்கில்லை. தவறு நடந்து விட்டதாகத் தெரிந்தால் அதற்கேற்ப மருந்தைக் கூறலாம். உங்களுக்குத் தற்போது என்னப் பிரச்சனை?”

“ரத்தப் போக்கு. ஒரே எரிச்சல். உயிர் போகிறது.”

“ராஜ வைத்தியர் கூறிய மருந்தை ஒரு வேளை நிறுத்தினாலும் இந்த நிலை உருவாகும். மறந்து விடாதீர்கள்” என்று சொல்லி மருந்தைக் கொடுத்தார் துணை வைத்தியர்.

ஒரு நாழிகைக்குப் பின் ரத்தப் போக்கு நின்றது. எரிச்சலும் அகன்றது.

வைத்தியர் அகன்றார்.

சேவகன் வந்தான்.

“போரமைச்சர் பெருமானே! அந்தப் பித்துக்குளி இளவரசன் பெரிதாக ஆட்டம் போடுகிறான். அந்தப் பாட்டுக்காரப் பெண்ணை வளைத்துப் பிடித்துக் கொண்டு மிரட்டுகிறான்” என்றான்.

“இது ஒரு விஷயமா? அந்த முட்டாளை அடித்துப் போட்டு விட்டுப் போக வேண்டியது தானே? என்னிடம் எதற்குச் சொல்கிறாய்?”

“அந்தப் பெண்ணை வாள்முனையில் வைத்திருக்கிறான். அவளுக்கு ஆபத்து நேரக் கூடாதல்லவா?”

“அவள் எப்படிப் போனால் என்ன? இருவரையும் சேர்த்து வெட்டிப் போட வேண்டியது தானே?”

“முடியவில்லை.”

“முடியவில்லையா?”

“ஆமாம் ஐயா. அறையை அவன் உட்புறம் பூட்டிக் கொண்டிருக்கிறான்.”

“கதவை உடைப்பதை விட்டு விட்டு கதையா சொல்கிறாய்?”

“அப்படித் தான் நினைத்தோம். ஆனால் அவன் உங்களை அங்கே வரச் சொல்கிறான்.”

“என்னையா? அவனா? வரச் சொல்கிறானா? அவனா? காலனே அழைத்தால் கூட வரமாட்டேன் என்று சொல்கிற என்னை கடுகளவே உள்ள கசடன் வரச் சொல்கிறானா? அவனையும் அவளையும் அறையில் வைத்துக் கொளுத்து. சாம்பலாகும் வரை கவனி. அந்தச் சாம்பலைக் கொண்டு வந்து காட்டு என்னிடம். கோழைகளுக்குத் தைரியம் வருமானால் தைரியத்திற்கும் பயம் வந்து விடும். சிங்கத்தைக் கண்டு நாய்கள் குரைக்கலாமே தவிர எதிரே வரவோ எதிர்க்கவோ முடியாது. இளவரசன் ஒரு நாய். போ.”

“ஐயா! இளவரசன் உங்களை அங்கே வரச் சொன்னதற்குக் காரணம் இருக்கிறது” என்று சொல்லி இளவரசன் போரமைச்சரின் உயிரைக் காக்க மருந்து தயாரித்து மாளவிகாவிடம் கொடுத்தது முதல் அனைத்தையும் சொன்னான் சேவகன்.

போரமைச்சருக்கு மின்னலைப் போல ஒரு குழப்பம்.

“அவன் என்ன சொன்னான்? ராஜ வைத்தியர்கள் என்னைச் சாகடித்துக் கொண்டிருக்கிறார்களா?” என்று கேட்டார் சந்தேகத்துடன்.

“ஆமாம் ஐயா. அவர்களது மருந்து உங்களை ஓரிரு நாட்களில் சாகடித்து விடும் என்றும் உங்களைக் காப்பாற்றும் மருந்தை அவன் தயாரித்திருக்கிறான் என்றும் அதை உங்களிடம் கொடுக்க மாளவிகாவிடம் கொடுக்க, அவள் அதை உங்களுக்குக் கொடுக்காமல் மறைத்து விட்டதாகவும் சொன்னான்.”

“கிறுக்கனான அவன் எப்படி மருத்துவனானான்?”

“மாளவிகா மூலம் ஏதோ மூலிகைகளை வாங்கியிருப்பான் போலிருக்கிறது.”

“அது நடந்திருக்கலாம். அவன் எப்படி வைத்தியனாக முடியும்? அவனுக்கு ஒரு மண்ணும் தெரியாது. அவனே களி மண். கபோதி. கழிசடை.”

“அலட்சியம் வேண்டாம் ஐயா. எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்கும் என்பது பிடாரனுக்குக் கூடத் தெரியாது. இளவரசனிடம் நிறைய குறைகள் இருக்கலாம். அதே சமயம் ஓரிரு சிறப்புகள் இருக்கலாம். தகுதிகள் இருக்கலாம்.”

போரமைச்சர் சற்று யோசித்து விட்டு “நீ போய் பிரதான ராஜவைத்தியரை எங்கே இருந்தாலும் என்ன நிலையில் இருந்தாலும் உடனே இங்கே இழுத்து வா” என்றான்.

ராஜ வைத்தியர் வந்தார்.

“ராஜ வைத்தியரே! உண்மையைச் சொல்லுங்கள். நீங்கள் எனக்குக் கொடுத்து வரும் மருந்து என்னை வாழ வைப்பதற்கா? சாகடிப்பதற்கா?” என்று கேட்டார் போரமைச்சர்.

“இதென்ன போரமைச்சரே! இப்படிக் கேட்கிறீர்கள்? சாவதற்குப் போய் யாராவது மருந்து கொடுப்பார்களா?”

“சக்கிரவர்த்தியின் ஆர்வம் கெடவும் பேச்சு நின்று போகவும் நீங்கள் சிகிச்சை செய்து வருகிறீர்கள் அல்லவா?”

“அது நீங்கள் சொன்னதால்தான் செய்கிறேன்.”

“அது போலவே எனக்கு நீங்களும் செய்யலாம் அல்லவா?”

“அப்படி உங்களுக்கு எதிராக உத்தரவிடும் நபர் எவரும் இல்லை. உங்களுக்கே தெரியும்.”

“நீங்களாகவே அப்படிச் செய்யலாமே?”

“கண்டபடி நீங்கள் சந்தேகிப்பதற்கெல்லாம் நான் பொறுப்பாக முடியாது.”

“ராஜ வைத்தியரே! நீங்கள் என்னைச் சாகடிப்பதற்கு மருந்தைத் தருவதாக நான் சொல்லவில்லை. நான் சிறையில் வைத்திருக்கும் இளவரசன் சொல்கிறான்.”

“அவன் ஒரு அனாதை. அகதி. தலையில்லாத முண்டம். உப்பில்லாத பிண்டம். உங்கள் கைதி. அவன் உளறியதை நம்புகிறீர்கள். நான் சொல்வதை நம்ப மறுக்கிறீர்கள்.”

“யார் சொல்கிறார்கள் என்பது முக்கியமல்ல. என்ன சொல்கிறார்கள் என்பதுதான் முக்கியம். யார் சொன்னாலும் செய்தி செய்திதான். அதை அலட்சியப்படுத்த வேண்டும் என்று நீங்கள் சொன்னால் உங்கள் மீதான சந்தேகம்தான் அதிகமாகிறது.”

“போரமைச்சரே! தவறான கணக்குகளைப் போட்டு அதைச் சிம்மாசனமாக்கி அதன் மீது சந்தேகத்தை அமர்த்தினால் அது ஆட்டம் போடுமே தவிர அடங்காது. நீங்கள் என்மீது தவறான கணக்கைப் போட்டு விட்டுச் சந்தேகிக்கிறீர்கள். கணக்கு மாறாத வரைச் சந்தேகம் நீங்காது. பாரம்பரிய வைத்தியனான என்னை உங்கள் சுயநலத்திற்காகச் சக்கிரவர்த்தியின் உடல்நிலை கெடுவதற்குப் பயன்படுத்திக் கொண்டாலும் உங்கள் விஷயத்தில் நான் உண்மையானதும் உகந்ததுமான சிகிச்சைகளைத்தான் செய்து வருகிறேன். அதைத்தான் நான் செய்ய முடியும். நம்ப வைக்க முடியாது. நம்பிக்கை என்பது செடியில் உருவாகும் மலரைப் போலத் தானாக வரவேண்டும். வேறு ஒருவர் அச்செடியில் மலரை முளைக்கச் செய்ய முடியாது.”

“வைத்தியரே! உமக்கு மகன் இருக்கிறான் அல்லவா?”

“இருக்கிறான்.”

“வரச் சொல்லுங்கள்.”

“எதற்கு?”

“வரச் சொல்லுங்கள் முதலில்.”

வரச் சொன்னார். மகன் வந்தான்.

“இவன் தலைமீது ஆணையிட்டுச் சொல்லுங்கள் நீங்கள் எனக்குச் செய்யும் சிகிச்சை உண்மையானது என்று.”

“அது முடியாது போரமைச்சரே. சத்தியப் பிரமாணம் என்பது புனிதமானது. கண்ட விஷயங்களுக்கெல்லாம் செய்யலாகாது.”

“எனது வாழ்க்கை உமக்கு அற்பமாகத் தெரிகிறதா? சந்தேகமே இல்லை. நீங்கள் எனக்குச் செய்யும் சிகிச்சை பொய்யானது. என்னைச் சாகடிக்கவே சிகிச்சை செய்கிறீர்கள்” என்று கோபாவேசமாகக் கூறிய போரமைச்சர் ஆசனத்தில் இருந்த வாளை எடுத்து ராஜ வைத்தியரது மகனது கழுத்தில் மின்னலைப் போல் பாய்ச்சினார். வைத்தியர் மகனின் தலை துண்டாகி விழுந்து துடித்தது. வைத்தியர் மயங்கி விழுந்தார்.

“செய்வது உண்மைதான் என்றால் சத்தியம் செய்ய வேண்டியது தானே? வியாக்கியானம் எதற்கு? கதை கேட்கவா உட்கார்ந்திருக்கிறேன். நமக்கு ஒருவர் மீது சந்தேகம் வந்தால் அதைத் தீர்க்க வேண்டியது அந்த ஒருவரின் கடமையே தவிர நமக்கொன்றுமல்ல. இது கூடப் புரியாமல் பேசுகிறார். பேசுகிறார். பேசிக் கொண்டே இருக்கிறார். இவருக்கு இது தான் சரியான தண்டனை” என்று தனக்குள் முணுமுணுத்தும்

கொண்ட அவர் வாளை வைத்தியன் மகனது உடல்மீது எரிந்து விட்டு 'இதையெல்லாம் அகற்றுங்கள். வைத்தியரைச் சிறையில் அடையுங்கள்' என்று உத்தரவிட்டார்.

வினாச காலம் வந்தால் புத்தி விபரீதமாக வேலை செய்யும். வினோதமாக வேலை செய்யும். விவஸ்தையற்று வேலை செய்யும். உண்மையாக இருந்த ராஜவைத்தியரைச் சந்தேகித்துச் சிறையிலடைத்த போரமைச்சர் சந்தேகப்பட வேண்டிய இளவரசன் நரசிம்மனை நம்பினார். உண்மையிலேயே தன் உயிரைக் காக்கும் மருந்து அவனிடம் இருக்குமோ என்று மருண்டார்.

மரணத்தைப் பற்றிய பயம் தனக்கில்லை என்று வெளியே கூறிக் கொள்பவர்களில் பெரும்பாலானவர்கள் உள்ளுக்குள் மரணத்தை எண்ணி அஞ்சுபவர்களாகவே இருப்பார்கள். அதுவும் நோயும் நொடியும் வயோதிகம் சேர்ந்து படுத்தும் போது மரணபயம் எல்லோருக்குமே இருக்கும் ஞானிகளைத் தவிர.

போரமைச்சர் ஞானியல்ல. அஞ்ஞானி. அக்கிரமக்காரர். அதர்மர். அயோக்கியர். ஆகவே அவருக்குள் மரண பயம் பரிபூரணமாக இருந்தது. எனவே சேவகர்களை அழைத்துக் கொண்டு இளவரசனின் இருப்பிடத்திற்குச் சென்றார்.

அவன் மாளவிகாவை அழைத்துக் கொண்டு அவள் வசித்த குடைவரைப் பகுதிக்கே சென்று விட்டான் என்பதை அறிந்த போது ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு மாளவிகாவின் இருப்பிடத்திற்குச் சென்றார்.

அங்கே பெருங்கூட்டமாக இருந்தது. பெண்கள் அதிகமாக இருந்தார்கள்.

"இவர்களெல்லாம் எதற்காகக் கூடி கூட்டம் போட்டிருக் கிறார்கள்.விரட்டியடியுங்கள் இவர்களை" என்றார் போரமைச்சர்.

அவரைக் கண்டதும் அவர்களில் பலர் ஓடி வந்து "இசையரசியைக் காப்பாற்றுங்கள் ஐயா. அவளைப் பிடித்து வைத்துக் கொண்டு மிரட்டுகிறான் இளவரசன்" என்று கூறிவிட்டு "இளவரசன் ஒழிக. இளவரசன் ஒழிக" என்று கோஷம் போட்டார்கள்.

அப்போது குடைவரை முகப்பில் மாளவிகாவின் கழுத்தில் குறுவாளை அழுத்தியபடி தோன்றினான் இளவரசன்.

ஒரு குப்பை கோபுரமாக மாறிவிட்ட மாதிரிக் கருதிக் குமைந்துப் போரமைச்சர் உயிர்காக்கும் மருந்து காரணமாக குமைச்சல்களையும் குடைச்சல்களையும் அடக்கிக் கொண்டு

“நரசிம்மா! என்ன இது கூத்து? என்ன நடக்கிறது இங்கே? எதற்காக இவ்வளவு ஆட்டம்?” என்று கேட்டார் தோரணையுடன்.

“சேவகர்கள் உங்களிடம் எதுவும் சொல்ல வில்லையா போரமைச்சரே?” என்று கேட்டான் இளவரசன்.

“சொன்னார்கள் சொன்னார்கள்.”

“இதோ துரோகி. உங்கள் உயிர்காக்கும் மருந்தை இவள் தான் மறைத்து வைத்திருக்கிறாள். இடத்தைச் சொல்ல மறுக்கிறாள். அந்த மருந்தை நீங்கள் அருந்தாது போனால் இரண்டு நாட்களுக்கு மேல் நீங்கள் உயிரோடு இருக்க மாட்டீர்கள்?”

“அதென்ன மருந்து! நீ எப்படிக் கண்டு பிடித்தாய்?”

“அது அபூர்வ மூலிகை. மரணமாலிகா என்று பெயர். மரணத்தைத் தடுக்கும் மருந்து. அந்த மூலிகை கல்யாண புரத்தில் இருப்பது எனக்குத் தெரியும். இவள் மூலம் அதைக் கொண்டு வரச் சொன்னது நான்தான்.”

“நீ வைத்தியனா?”

“ஏன்? வைத்தியனாக நான் இருக்கக் கூடாதா? வைத்தியனுக் கென்று அடையாளம் இருக்கிறதா? அது உங்களுக்குத் தெரியுமா? மூலிகை வேண்டாம் என்றால் விட்டு விடுங்கள். ஆனால் இரண்டு நாட்களில் உங்களுக்கு மரணம் நிச்சயம்.”

“என் மீது உனக்கேன் கரிசனம்?”

“கரிசனம் எதுவும் இல்லை. வைத்திய தர்மம் அது. வைத்தியனுக்கு விரோதிகள் கிடையாது. விரோதிகளுக்கும் நோய் வந்தால் சிகிச்சையளிப்பதுதான் வைத்திய தர்மம். கோட்டைகள் முற்றுகையில் இருக்கும் போது வைத்தியர்களுக்கு சிறப்பு அனுமதி வழங்கப்படுகிறது. ஏன்? அங்கே வைத்தியனின் சிகிச்சை தான் முக்கியம். யாருக்கு என்பதல்ல.”

“என்னால் நம்பமுடியவில்லை.”

“எதை?”

“உன் பேச்சை.”

“நம்பாவிட்டால் எனக்கொன்றும் கவலையில்லை.”

மரணபயத்தில் இருந்த போரமைச்சர் “இப்போது என்ன வேண்டும் உனக்கு?” என்று கேட்டார்.

“நீங்கள் மட்டும் உள்ளே வாருங்கள். இவளைக் கேட்கும் விதத்தில் கேட்டால் மருந்திருக்கும் இடத்தைச் சொல்வாள்.”

“அவள் போனால் போகிறாள். உரிய மூலிகையை நீ எடுக்கலாம் அல்லவா?”

“விஷயம் தெரியாமல் பேசி நேரத்தை வீணடிக்காதீர்கள் போரமைச்சரே. மரணத்தைத் தடுக்கும் மூலிகை புல்லைப் போன்றதல்ல எங்கேயும் எல்லா காலத்திலும் கிடைப்பதற்கு. அதை தேவசஞ்சீவி என்பார்கள். அது எப்போதும் விளையாது. விளைந்த பின் சில நாட்களுக்கு மட்டுமே கண்களுக்குத் தெரியும். பிறகு மறைந்து விடும். நான் சொன்ன மூலிகை நேற்றோடு மறைந்து விட்டது. இனி அது அடுத்த ஆண்டு இதே மாதத்தில் தான் கண்களுக்குத் தெரியும்.”

போரமைச்சர் அதற்குப் பிறகு சந்தேகிக்கவில்லை.

குடைவரைக்குள் சென்றார்.

உள்ளே சென்றதும் கதவு சாத்தப்பட்டது.

மாளவிகாவை விடுவித்து விட்டு போரமைச்சனின் கழுத்தை இறுக வளைத்தான் இளவரசன்.

உள்ளே இருந்து வாலிபர்கள் இருபது பேர் வந்தார்கள்.

“மாளவிகா! நீ வெளியே போய் ஜெயஸ்தம்பத்திற்கருகே நில். இந்தக் காட்சியைக் காண வேண்டாம்” என்று சொல்லி அவளை அனுப்பினான் இளவரசன்.

வெளியே இருந்த மக்கள் “போரமைச்சர் ஒழிக. கொடுங்கோலன் ஒழிக” என்று கோஷமிட்டார்கள்.

போரமைச்சர் ஏதோ விபரீதம் நடக்கப் போகிறது என்று நினைத்து கதிகலங்கினார்.

குடவறையின் மேலே தோன்றிய இளவரசன் போரமைச்சர் நிர்வாகத்தைக் கைப்பற்றி தினம் தினம் செய்த கொடுமைகளை விவரித்து விட்டு “இவரை என்ன செய்யலாம்?” என்று கேட்டான்.

“சித்திரவதை. சித்திரவதை” என்றார்கள் மக்கள்.

அடுத்த நிமிடம் குடைவரைக்கு மேலே கொண்டு வரப் பட்டார் போரமைச்சர். அவரது கைகள் இரண்டும் பின்புறமாகப் பிணைக்கப்பட்டிருந்தன. உடலில் துளி ஆடையும் இல்லை. பிறந்த மேனியில் காட்சியளித்தார். கொடுங்கோலனின் அலங்கோலக் காட்சியைக் கண்ட மக்கள் அவர் மீது கற்களை எரிந்தார்கள்.

இதற்கிடையில் நாய் ஒன்று மேலே கொண்டு வரப்பட்டதும் அது பாய்ந்து சென்று அவரைக் கடித்தது. எந்த உறுப்பைத் தனது ஆயுதமாகக் கருதி பெண்களைச் சீரழித்தாரோ அதை நாய்

கடித்துக் குதறியது. கல்யாணபுரமே அதிர்வது போல அலறினார் போரமைச்சர்.

இளவரசன் அவரை அங்கேயே விட்டு விட்டு கீழிறங்கினான்.

மக்கள் மேலே ஏறினார்கள்.

போரமைச்சரின் கன்னத்தில் அறைந்தார்கள். தடியால் அடித்தார்கள். சிலர் மூக்கை அறுத்தார்கள். சிலர் நாக்கை அறுத்தார்கள். சிலர் மண்டையை உடைத்தார்கள். உயிர் போகும் வரையிலும் தங்களது ஆத்திரம் தீரும் வரையிலும் துவைத்தார்கள்.

உயிரிழந்த சடலம் உதைத்துத் தள்ளப்பட்டது.

மக்கள் கலைந்தார்கள்.

ஜெயஸ்தம்பத்திற்குச் சென்ற இளவரசன் மாளவிகாவைப் பார்த்து "போதுமா?" என்று கேட்டான்.

"போதும். என் தந்தையின் ஆத்மா சாந்தியடையும்" என்றாள் மாளவிகா.

"கோட்டையை விட்டுப் போகலாம் வா"

இருவரும் போனார்கள்.

கோட்டை வாசலில் அவர்கள் எதிர்பார்க்காத மனிதர் நின்றிருந்தார்.

அவன் -

விக்கிரமாதித்தன்.





உயிரைக் காப்பாற்றக் கூடிய வைத்தியர்கள் அதைச் செய்வது தான் அவர்களது தர்மமாக இருக்க முடியும். அதிலிருந்து மாறுவதற்கு அவர்களுக்கு உரிமை யில்லை
— ராஜவைத்தியரின் துணைவி





படுத்த படுக்கையாக இருந்தவனும் பேசுவதற்கு இயலாத நிலையிலும் இருந்தவனுமான சாளுக்கியச் சக்கிரவர்த்தியான விக்கிரமாதித்தன் கோட்டை வாயிலில் வந்து நிற்பான் என்று இளவரசன் கனவில் கூட எதிர்பார்க்கவில்லை.

விக்கிரமாதித்தன் அரசனுக்குரிய பூரணமான ஆடை அலங்காரத்தோடு நின்றான். அவனுக்குப் பின்னால் ஐம்பது வீரர்கள் இருந்தார்கள். பக்கத்தில் சில சேனாதிபதிகளும் நின்றிருந்தார்கள்.

அவர்கள் அவ்வாறு அணிவகுத்து நின்றிருந்ததற்குக் காரணம் என்னவென்று தெரியாவிட்டாலும் நிச்சயமாக தன்னை வரவேற்பதற்காக இருக்காது என்பதில் மட்டும் உறுதியாக இருந்த இளவரசன் “சக்கிரவர்த்தி பெருமானுக்கு வணக்கம்” என்று சொல்லி கைகளைக் கூப்பினான்.

மாளவிகாவும் அவ்வாறே செய்தாள்.

“நரசிம்மா! நீ செய்திருக்கும் காரியம் மிகப் பெரிய குற்றம். சாளுக்கிய நாட்டின் போரமைச்சரைக் கேவலமாகவும் கொடூரமாகவும் தாக்குவதற்கு ஏற்பாடு செய்து அவரைக் கொன்றிருக்கிறாய்” என்றான் விக்கிரமாதித்தன்.

“நீங்கள் கண்களால் கண்டீர்களா சக்கிரவர்த்தி!”

“ஆமாம்.”

“நீங்கள் கண்களால் கண்ட இக்கொடுமையை விட பயங்கரமான கொடுமைகள் கல்யாணபுரத்தில் பலருக்கு நடந்திருக்கிறது. அது உங்களுக்குத் தெரியுமா?”

“கேள்விப்பட்டேன்.”

“அந்தக் கொடுமைகளைச் செய்ய நரகலோகத்திலிருந்து யாரும் வரவில்லை. நரகாசூரனைப் போல மாறி அனைத்தையும் உங்கள் போரமைச்சர்தான் செய்திருக்கிறார்.”

"கொடுமைக்கு கொடுமைதான் தண்டனை என்றால் நகரமானது நரகமாகிவிடும்."

"போரமைச்சரின் கொடுமைகளால் இந்நகரம் ஏற்கனவே நரகமாகி விட்டது. அந்த நிலை நீடிக்கக் கூடாது என்பதால் தான் நான் நடவடிக்கை எடுத்தேன்."

"இங்கே நடைபெறும் குற்றங்களுக்கு நடவடிக்கை எடுக்க நீ யார்?"

"மாமன்னரே! குற்றங்களையும் அநீதிகளையும் கண்டு கொதித்து எழ மக்களுக்கு உரிமையுண்டு."

"மக்களுக்கு உரிமையுண்டு. இங்கே வாழும் சாளுக்கிய மக்களுக்கு உரிமையுண்டு. நீ சாளுக்கியனல்ல. இந்த நாட்டைச் சேர்ந்தவனல்ல. சொல்லப் போனால் நீ எதிரி. வேறு நாட்டவன். சாளுக்கியரின் ஆதிக்கத்தில் இருக்கும் அடிமை."

"சக்கிரவர்த்தி! மக்களைக் காக்கும் விஷயத்தில் உறவுக்கும் உரிமைக்கும் இடம் இருக்கிறதா என்று பார்ப்பதை விட காப்பாற்றுகிற செயலில் ஈடுபடுவதுதான் மனிதனின் குணமாக இருக்க வேண்டும். அதோடு நான் ஓர் அரச வம்சத்தவன். ஹொய்சள இளவரசன். அரச வம்சத்தாருக்கு அநீதி எங்கே நடந்தாலும் தட்டிக் கேட்கவும் ஒடுக்கி அழிக்கவும் உரிமை உண்டு என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. தாங்கள் மட்டும் நோய்வாய்பட்டு கட்டிலில் கிடக்காமல் இருந்திருந்தால் இந்த நிலை வந்திருக்காது. அந்தக் கெடு மதி அடைந்த போரமைச்சர் மூலத்திலேயே முடிச்சு போட்டது போல் ராஜ வைத்தியர்களைக் கொண்டு முடக்கிப் போட்டார். பேச்சைத் தடுத்தார். இன்னும் விட்டிருந்தால் உங்கள் மூச்சையும் அகற்றியிருப்பார். தங்கள் இளவரசரையும் இங்கே வராமல் தடுத்து விட்டார்.

இப்படி வாயில்களை எல்லாம் மூடிவிட்டு இங்கே காட்டாட்சியைத் துவக்கி மக்களின் வாய்களையும் அவிழ்த்து விட்டுப் பேயாக நடந்து கொண்டார். உங்களோடு நிற்கும் சேனாதிபதி கூட அவரை எதிர்க்க அஞ்சினர். அமாத்யர் ஒருவர் மட்டுமே இக்கல்யாணபுரத்தின் மக்கள் குரலாக விளங்கினார். இங்கே வாய்மையாளர்களும் நேர்மையாளர்களும் நிறைய பேர் இருக்கலாம். ஆனால் அவர்கள் வாய் திறக்கவே பயந்தார்கள். வாய்மை நேர்மையும் செயல்பட வேண்டிய கூறுகளேயன்றி வெறும் அடையாளங்களாக விளங்கக் கூடியவையல்ல. அமாத்யர் செயல்பட்டார். போரமைச்சர் பல்லாயிரம் வீரர்களைப் போர்க்களத்தில் சந்திக்கக் கூடியவர்.

அவரால் ஒரு நேர்மையாளரான உங்கள் அமாத்யரைச் சந்திக்கவோ சமாளிக்கவோ முடியவில்லை. அயோக்கியர்கள் நேர்மையாளர்கள் முன்பு தைரியமானவர்களாக நடிக்கத் தான் முடியுமே தவிர உள்ளுக்குள் அஞ்சி அஞ்சிச் சாவார்கள். போரமைச்சர் தனது வழியில் மிகப்பெரிய தடையாக ஒரே ஒரு தடையாக இருந்த அமாத்யரை அழிக்க அவரது அருமை மகளைச் சிதைத்தார்.

இப்படிப்பட்ட கொடுமையை நீங்கள் கேள்விப்பட்டிருக் கிறீர்களா மாமன்னரே! எதிர்ப்பவர்கள் யாராக இருந்தாலும் இந்த கதிதான் நடக்கும் என்று மிரட்டி யிருக்கிறார். மக்களில் பலரது நாக்கையும் மூக்கையும் அறுத்திருக்கிறார். தாதியை கொதிக்கும் எண்ணெயில் வறுத்திருக்கிறார். ஜெயந்திகாவின் குடும்பத்தினரை உயிரோடு புதைத்திருக்கிறார். இதற்கெல்லாம் நீங்கள் விசாரணை செய்து நீதி நியாயங்களை அலசி தண்டிக்க முற்படுவது சரி என்றால் அது எப்போது நடக்கும்? மானத்தை ஆபரணமாக்கி மானாபரணனாக வாழ்ந்த அமாத்யர் தற்கொலை செய்து கொள்வதற்கு முன் தனது இரண்டாவது மகளான இந்த மாளவிகாவிற்கு ஓலை தந்திருக்கிறார்.

நேர்மைக்கும் வாய்மைக்கும் அடையாளமாக இருப்பவர்கள் சாகும் தருவாயில் வேண்டிக் கொள்ள முடியாத வேண்டுதலைச் செய்திருக்கிறார். போரமைச்சரைப் பழிவாங்க வேண்டியதுதான் இவளது கடமை என்று கூறியிருக்கிறார். அவரது வேதனை மகா வேதனை. உத்தமருக்கு வரக் கூடாத சோதனை. மாளவிகா என்ன செய்வாள் சக்கிரவர்த்தி! மனித குலத்திலேயே மிகவும் இழிவானப் பிறவியாய் கருதத் தகுந்த போரமைச்சரை - அவரது எல்லையற்ற கொடுமைகளுக்காகத் தண்டிப்பதற்கு உரிமை, உடமை, விசாரணை, சட்டம், நீதி ஆகியவைதான் முக்கியம் என்று நீங்கள் கருதினீர்களானால் அவற்றையெல்லாம் மீறி போரமைச்சரைத் தண்டித்ததற்காக என்னைத் தண்டிக்க முற்படுவீர்களானால் ஏற்பதற்கு நான் தாயராக இருக்கிறேன். நிறைவேற்றுங்கள்" என்றான் இளவரசன் நரசிம்மன்.

மாளவிகா விக்கிரமாதித்தனை வணங்கி "மகாராஜா! இளவரசர் குற்றவாளியல்ல. நான் தான் குற்றவாளி. இளவரசரை மயக்கி ஓலையை எழுதுவித்து அதன் மூலம் அவரது தந்தையாரை இங்கே வரவழைப்பதற்காக என்னைக் கருவியாக அனுப்பினார் போரமைச்சர். அவர் கொடுத்த பொறுப்பை நான் நிறைவேற்றவில்லை. மாறாக இளவரசரோடு சேர்ந்து

கொண்டேன். அவரை அழிக்க முற்பட்டேன். இளவரசர் உதவினார். அவர்மீது எந்தத் தவறும் இல்லை. கடமையைச் செய்யாமல் போரமைச்சருக்கு துரோகம் செய்த நான் குற்றவாளி. என்னைத் தண்டியுங்கள்'' என்றாள்.

விக்கிரமாதித்தன் எதுவும் பேசவில்லை.

இருவரையும் சிறை செய்யும் படி கட்டளையிட்டு விட்டு அகன்றான்.



சிறைப் பறவைகளான அவர்களுக்கு குறை எதுவும் வைக்கவில்லை. உணவு முதல் அனைத்தும் கிடைத்தன.

உபசரித்த பணியாளனைப் பார்த்த இளவரசன் நரசிம்மன் "சிறையில் அடைப்பவர்களுக்கு இப்படியெல்லாம் உபச்சாரம் நடைபெறுவதில்லையே!'' என்று கேட்டான்.

"எங்கள் சக்கிரவர்த்தியைத் தவறாக எடை போட்டு விடாதீர்கள். அவர் காய்களை எப்படி நகர்த்துகிறார் என்பதும் எதற்காக நகர்த்துகிறார் என்பதும் யாருக்கும் புரியாது. அதிகமாகக் கவனிக்கப்படும் கைதிகள் அதிகமான துன்பத்திற்கு ஆளாவார்கள் மிகவும் சந்தோஷப்பட்டு விடாதீர்கள்'' என்று கூறிவிட்டுச் சென்றான் பணியாளன்.

"நெருப்புக்குப் பயந்து தாண்டியதில் சேற்றில் விழுந்த மாதிரி அமைந்து விட்டதே இளவரசே! நான் தானே இதற்குக் காரணம்?'' என்று கேட்டாள் மாளவிகா.

இளவரசன் அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் "சக்கிரவர்த்தியிடம் பேசும் போது போரமைச்சர் ஒப்படைத்த பொறுப்பை நிறைவேற்றாமல் துரோகம் செய்து விட்டதாகச் சொன்னாயே! போரமைச்சரைப் பழிவாங்கும் எண்ணம் உனக்கில்லையா?'' என்று கேட்டான்.

"உங்களுக்கும் நடந்த பிரச்சனைக்கும் சம்பந்தம் இல்லை என்று சொல்லி உங்களைக் காப்பாற்ற நினைத்தேன். சக்கிரவர்த்தி எதையும் காதில் வாங்கிக் கொள்ளாமல் சென்று விட்டார். கவலையாக இருக்கிறது'' என்றாள் மாளவிகா.

"நமக்கென்ன தண்டனை கிடைக்கும் என்று நினைக்கிறாய் மாளவிகா?''

"நீங்கள் தான் இளவரசர். குற்றங்களைப் பற்றியும் தண்டனை களைப் பற்றியும் உங்களுக்குத்தான் சரியாகத் தெரியும்.''

"விக்கிரமாதித்தரிடம் நான் என் செயலைப் பற்றி விவரமாகச் சொன்னதை நீ கேட்டிருப்பாய். நீயும் நானும் அதர்மனை தண்டித்திருக்கிறோம். தர்மப்படி நாம் செய்தது தவறில்லை. எனவே தான் மக்கள் ஒத்துழைத்தார்கள். அவர்களாகவே அடித்து உதைத்தார்கள். ஆனால் கல்யாணபுரத்து நியதிப்படி நாம் செய்தது சட்டத்திற்குப் புறம்பானது என்று சக்கிரவர்த்தி கருதுகிறார். என்னைப் பொறுத்தவரை சட்டம் வேறு தர்மம் வேறு அல்ல. சட்டமும் தர்மமும் எதற்காக உள்ளன? குற்ற வாளிகளையும் அதர்மங்களையும் தண்டிப்பதற்காகத்தானே?"

"தண்டிக்கும் உரிமை நமக்கில்லை என்று சக்கிரவர்த்தி நினைக்கிறார்."

"மாளவிகா! உன்னையும், உன் மாணவிகளையும், அவரது குடும்பத்தாரையும், அவரைச் சார்ந்தவர்களையும் போரமைச்சரின் கொடுமைகளைப் பற்றிச் சொல்லி அவரைக் தண்டிக்க வேண்டும் என்று சொன்ன போது ஒருவர் கூட மறுக்கவில்லை. எல்லோரும் ஒத்துழைத்தார்கள். அணி திரண்டார்கள். உண்மையில் நீயோ நானோ போரமைச்சரை ஓர் அடி கூட அடிக்கவில்லை. எல்லா அடிகளையும் உதைகளையும் மக்கள் தான் கொடுத்தார்கள். நாம் அவர்களிடம் எழுச்சியை உண்டாக்கியது உண்மை. நாம் அவ்வாறு செய்யாமல் இருந்தாலும் மக்கள் ஒரு காலகட்டத்தில் அலைகளைப் போல எழுச்சி பெற்று தீய சக்தியான போரமைச்சரை அடித்து நொறுக்கியிருப்பார்கள். அப்போது மக்களைச் சக்கிரவர்த்தியால் தண்டிக்க முடியுமா? சட்டத்தை மீறி மக்கள் நடந்து கொண்டார்கள் என்று குற்றம் சாட்ட முடியுமா?"

"முடியாது."

"சொல்லப் போனால் இந்த நிலைமைக்குச் சக்கிரவர்த்தி தான் காரணம். ஒருவர் மீதான அந்த சந்தேகம் மட்டுமின்றி அதீத நம்பிக்கையும் ஆபத்தானது தான். தன்னை அதீதமாக நம்புபவர்களுக்குத் துரோகம் செய்பவர்களே அதிகமாக இருக்கிறார்கள். விக்கிரமாதித்தர் கொண்டிருந்த அதீத நம்பிக்கைதான் போரமைச்சரை துரோகியாக்கியிருக்கிறது. மகா புருஷர்களும் தவறு செய்வார்கள் போலிருக்கிறது."

"இளவரசே! நீங்கள் கல்யாண புரத்திற்கு வந்த போது சக்கிரவர்த்தி படுத்த படுக்கையாக இருந்தார். நோயிலிருந்து மீண்டு எழுவார் என்று யாருமே நினைக்கவில்லை. எனக்கு வந்தத் தகவலின் படி போரமைச்சர் பிரதான ராஜ வைத்தியரை மிரட்டி சக்கிரவர்த்தியின் உடல்நிலையை மேலும் மோசமாக்கியிருக்கிறார்.

அவரைப் பேச முடியாமல் செய்திருக்கிறார். அப்படியிருக்கும் போது எப்படி அவர் பூரண குணமடைந்தவராய் கோட்டை வாசலில் தோன்றினார்? நம்ப முடியவில்லையே?"

"எனக்கும் தான்" என்றான் இளவரசன்.

பிரதான ராஜ வைத்தியர் போரமைச்சரின் கட்டளைப் படி விக்கிரமாதித்தனின் உடல்நிலையை மோசமாக்கியது உண்மைதான். ஆனால் போரமைச்சர் அமாத்யரின் குடும்பத்தைச் சீரழித்த போது சற்று விழித்துக் கொண்டார் என்று தான் சொல்ல வேண்டும்.

பதிவிரதையும் பதிபக்தியும் கொண்ட அவரது மனைவியார் அவரை மிகவும் கடிந்து கொண்டார்.

"வைத்தியர்கள் செய்யும் துரோகமானது பரிகாரமற்ற பாவமாகும். அவர்களுக்கு தோஷம் தானே தவிர மோட்சம் கிடையாது. உயிரைக் காப்பாற்றக் கூடிய வைத்தியர்கள் அதைச் செய்வதுதான் அவர்களது தர்மம். அதிலிருந்து மாறுவதற்கு அவர்களுக்கு உரிமையில்லை. அதுவும் தனது வைத்தியத்தைக் கொண்டு நோயாளியின் நோயை அதிகரித்துச் சீரழிப்பது தன் குழந்தைக்கு நஞ்சைப் புகட்டுவதைப் போன்றது. அதோடு உங்கள் நோயாளி யார்? நமது சக்கிரவர்த்தி. நமது தெய்வம். நம்மை ரட்சிப்பவர். நம்மை ரசிப்பவர். அவருக்கா நீங்கள் தவறான சிகிச்சையை செய்கிறீர்கள்? இதற்கு ஈரேழு ஜென்மங்களிலும் பரிகாரமில்லை. இந்தப் போரமைச்சர் யார்? மகாராஜாவின் ஊழியர். அவரது வேலை போர் சம்பந்தப்பட்டது தவிர நிர்வாகச் சம்பந்தப்பட்டதல்ல. அவர் யார் நிர்வாகம் செய்வதற்கும் ஆணையிடுவதற்கும்? ஒருவர் தவறான பாதையில் செல்வது மட்டுமின்றி உங்களைப் போன்றவர்களையும் தவறானப் பாதையில் போகச் சொல்வதை எப்படி நீங்கள் ஏற்றுக் கொண்டீர்கள்? உங்கள் மகனுக்கு இப்படிச் செய்வீர்களா நீங்கள்?"

"அந்தக் காதகன்-சண்டாளன்-பேயன்-என்ன சொல்கிறான் தெரியுமா? நான் ஒத்துழைக்கா விட்டால் குடும்பத்தை தீயில் போட்டு கொளுத்தி விடுவேன் என்கிறான்" என்றார் ராஜவைத்தியர்.

"செய்யட்டுமே? துரோகம் பெரிதா? தியாகம் பெரிதா? மக்கள் துரோகியைப் பாராட்டுவார்களா? தியாகியைப் பாராட்டு வார்களா? மகாராஜாவை அழிப்பதை விட நாமெல்லோரும் சாகலாமே?" என்று கேட்டார் துணைவியார்.

ராஜ வைத்தியருக்கு கவலையாகவும் கலக்கமாகவும் இருந்தது. போரமைச்சரைப் போன்றக் கொடியவனுக்கு பயந்து கடவுளுக்கு இணையாகக் கருதத்தக்க கருணை மான் சக்கிரவர்த்திக்குத் துரோகம் செய்வது கேவலத்திலும் கேவலம் என்பதை உணர்ந்தார். வாழ வேண்டியவர் சக்கிரவர்த்தி தானே தவிர போரமைச்சரல்ல என்பதை உணர்ந்தார். சக்கிரவர்த்தியின் மாபெரும் போர்கள் அவருக்கு நினைவுக்கு வந்தன. அவரது ஆற்றல்கள் நினைவுக்கு வந்தன. போரமைச்சரும் நினைவுக்கு வந்தார். போரமைச்சர் என்று அவர் பெயரளவில் மட்டுமே போரமைச்சராக இருந்தாரே தவிர போர் விவகாரங்களில் அவர் தலை காட்டியதில்லை. தலையைக் காட்டினால் மலையைப் புரட்டிப் போடுவது போன்றத் திட்டங்களைப் போட்டுத் தருவாரே தவிர அவை வெற்றி பெற்றதில்லை. வாளை உயர்த்திச் சென்ற வீரர்கள் தலையில் துண்டை போட்டுக் கொண்டுத் திரும்புவார்கள். இவற்றையும் நினைத்துப் பார்த்தார் ராஜ வைத்தியர். போரமைச்சருக்கு ஏதோ ஒரு குருட்டு அதிர்ஷ்டம் இருந்தது. சக்கிரவர்த்திக் கலந்து கொள்ளாத ஒரே ஒரு போரில் போரமைச்சர் கலந்து கொண்டு வெற்றி பெற்று விட்டதால் அவரைத் தோளில் தூக்கி வைத்துக் கொண்டு கொண்டாடினார் சக்கிரவர்த்தி.

அன்று முதல் சக்கிரவர்த்திக்கு அடுத்தது தான் தான் என்று நினைத்துக் கொண்டு அதில் சுவை கண்டு விட்ட காரணத்தால் சக்கிரவர்த்தி நோய்வாய்பட்ட போது பேராசையில் வீழ்ந்து சக்கிரவர்த்தியாகவே நடந்து கொள்ள முயன்று சக்கிரவர்த்தியை நோயிலிருந்து விடுபடாமல் பார்த்துக் கொண்டார். அதற்கு ராஜவைத்தியரை மிரட்டி வைத்து சக்கிரவர்த்தியை முடக்கிப் போட்டார்.

இதையெல்லாம் தனது துணைவியார் கூறிய போதுதான் ராஜ வைத்தியருக்குத் தெளிவு பிறந்தது. இல்லாத ஊருக்கு இனியும் பயணம் செய்யக் கூடாது என்று முடிவு செய்து அன்று முதல் சக்கிரவர்த்திக்கு மாற்று மருந்துகளைப் புகட்டினார். சக்கிரவர்த்தி இனி எழ மாட்டார் என்றும் எழுச்சி பெற மாட்டார் என்றும் கருதி போரமைச்சர் அரண்மனைப் பகுதியிலேயே இருந்து விட்டது அவருக்கு தோதாக இருந்தது. மாற்று மூலிகைகளும் மாற்று வைத்தியமும் விக்கிரமாதித்தனை நோய்களிலிருந்து மீட்டன.

போரமைச்சர் மக்களால் சீரழிந்த அதே நேரத்தில் விக்கிரமாதித்தன் சீரடைந்தான். ராஜ வைத்தியரே போரமைச்சர் கொடுங்கோல் ஆட்சியை விவரித்தார். தனது மகனின்

தலையை வெட்டிய அகோரத்தையும் கூறினார். படுக்கையை விட்டும் படுக்கை அறையை விட்டும் அரண்மனைக்கு வந்து சேனாதிபதிகளைச் சந்தித்த போது எல்லா விவரங்களும் தெரியவந்தன அவனுக்கு. கல்யாணகரமாகத் துலங்கும் கல்யாணபுரத்திலோ இந்தக் கர்ண குரூரமானக் கொடுமைகள் என்று சினந்தான்.

“எங்கே அந்தப் போரமைச்சர்?” என்று கேட்டான்.

மக்களால் அவர் வாட்டி எடுக்கப்பட்டதையும் உயிர் வாங்கப் பட்டதையும் அவனிடம் சொன்னார்கள்.



“மாளவிகா! எப்படிப் பார்த்தாலும் என் மீது அத்துமீறல் என்ற குற்றம் இருக்கிறது. அதற்காக விக்கிரமாதித்தர் என்னைச் சிறையில் அடைப்பார் என்று தோன்றுகிறது” என்றான் இளவரசன்.

“அப்படியொரு நிலை வந்தால் சிறை வாசலில் நான் தவங்கிடப்பேன்” என்றாள் மாளவிகா.

“அதெல்லாம் பைத்தியக்காரத்தனம். நீயும் செய்யாதே! நானும் செய்யமாட்டேன்” என்றான் நரசிம்மன்.

மறுநாள் விசாரணை நடக்கும். தண்டனை அறிவிக்கப்படும் என்று நினைத்தான்.

ஆனால் ஒரு துரும்பு கூட அசையவில்லை.

அடுத்த நாளும் அதற்கடுத்த நாளும் எந்த நடவடிக்கையும் இல்லை. அதற்கும் அடுத்த நாள் நரசிம்மனும் மாளவிகாவும் வரவழைக்கப்பட்டார்கள் அரண்மனைக்கு.

அங்கே சக்கிரவர்த்தியாகப் பிரகாசத்துடன் அமர்ந்திருந்தான் விக்கிரமாதித்தன். அவனைச் சேர்ந்த சேனாதிபதிகளும் அமர்ந்திருந்தார்கள். அந்தக் கூடத்தின் நடுவே ஓர் ஆசனம் இருந்தது. அதிலே நரசிம்மனை அமரச் சொன்னார்கள். அவனுக்குப் பக்கத்தில் மாளவிகா நின்றாள்.

விக்கிரமாதித்தனுக்கு வணக்கம் செலுத்தினான் நரசிம்மன்.

விக்கிரமாதித்தன் போரமைச்சரைப் பற்றியோ அவர் தண்டிக்கப்பட்டது பற்றியோ ஒரு வார்த்தையும் பேசவில்லை.

மாறாக இளவரசனைப் பார்த்து “நரசிம்மா! அவரை வணங்கு” என்றார் ஆஜானுபாகுவாக இருந்த ஒருவரைச் சுட்டிக் காட்டி.

இளவரசன் ஏன் என்று கேட்கவில்லை.

எழுந்து நின்று வணங்கினான்.

ஆஜானுபாகரைப் பார்த்த விக்கிரமாதித்தன் "இளவரசனுக்கு உங்கள் மின்னலைக் காட்டுங்களேன்" என்றான்.

அவன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அந்த மனிதனிடமிருந்து குறுவாளொன்று வெளிப்பட்டு நரசிம்மன் கையை வைத்திருந்த ஆசனத்தில் கையைத் தொடாமல் வந்து தைத்தது.

நரசிம்மன் அதை வியப்போடு நோக்கித் திரும்பிய போது அவனது கழுத்திற்கு இருபுறங்களில் இருகுறுவாட்கள் வந்து ஆசனத்தில் தைத்து அவனை அசைய விடாமல் செய்தன.

"குறுவாளின் வீச்சைப் பார்த்தாயா நரசிம்மா? மூன்று குறுவாட்களையும் உன் மீதே வீசியிருக்க முடியும். ஆனால் நூலிழையில் உன்னைத் தொடாத வண்ணம் வீசப் பட்டிருக்கிறது. ஜெகதேவரின் வாள் வித்தை எப்படிப் பட்டது என்பதைப் புரிந்து கொண்டாயா?" என்று கேட்டான் விக்கிரமாதித்தன்.

"தெரிந்து கொண்டேன் மாமன்னா" என்றான் நரசிம்மன்.

"உனது தந்தை விட்டலராயன் பதினெட்டு குற்றங்களை இழைத்திருக்கிறார். அதாவது பதினெட்டு கோட்டைகளைக் கைப்பற்றியிருக்கிறார். பதினெட்டும் என் ஆதிக்கத்தில் இருந்தவை. அவரே கூட என் ஆதிக்கத்தில் இருந்தவர்தான். ஆனால் துரோகம் செய்து விட்டு படையெடுப்பு நடத்தி கைப்பற்றியிருக்கிறார். இது எவ்வளவு பெரிய துரோகம் தெரியுமா?"

"விக்கிரமாதித்தரே! இது துரோகமாகாது. ஆதிக்கத்தில் இருக்கும் எல்லோருமே சாம்ராஜ்யத்தை உருவாக்க முயன்றால் விண்ணுலகை நோக்கிப் படையெடுக்க முடியாது. மண்ணுலகத்தில் - அதுவும் தானிருக்கும் இடத்தைச் சுற்றித் தான் படையெடுக்க முடியும். அக்காலத்தில் செய்த அசுவமேத யாகத்தைப் போன்றது தான் இது" என்றான் நரசிம்மன்.

"உன் வாதத்தை ஏற்பதற்கில்லை. அதே சமயம் நான் ஒரு சவால் விடுகிறேன். அதில் உன் தந்தை வெற்றி பெற்றுக் காட்ட முடியுமா?" என்று கேட்டான் விக்கிரமாதித்தன்.





குற்றவாளிக்குச் சட்டம் தண்டனை வழங்குவதில் சிக்கலும் தாமதமும் உண்டாகும் போது சட்டத்திற்கு அப்பாற்பட்ட சக்திகள் மிகச்சரியான தண்டனையைத் தந்து விடும் – நரசிம்மன்





சாம்ராஜ்ய உருவாக்கத்திற்காகத் தனது தந்தை சாளுக்கிய ஆதிக்கத்தில் இருந்த ஊர்களைக் கைப்பற்றியது துரோகமாகாது என்று நரசிம்மன் கூறிய போது அதைத் தடுத்த விக்கிரமாதித்தன் "துரோகம் என்ற சொல் செயல்படுபவர்களுக்கு ஏற்ப வேறு வேறாகப் பொருள் கொள்ளக் கூடியது. எனக்குரிய நாடுகளை என் ஆதிக்கத்தில் இருந்த விட்டலராயர் கவர்ந்தது அவருக்கு வீரச் செயலாக இருக்கலாம். எங்களுக்கு அது துரோகச் செயல் தான். நான் நோய் வாய்ப் படாமல் இருந்திருந்தால் இது நடந்திருக்காது. துரோகம் புரிந்த விட்டலராயனின் மகனான நீ இங்கிருக்கிறாய். துரோகத்திற்கு தண்டனையாக உன்னை நான் கழுவேற்ற முடியும். அதை நான் செய்யவில்லை? நீ போரமைச்சரால் ஏமாற்றப்பட்டு கடத்தி வரப்பட்டிருக்கிறாய். அதை நான் ஏற்கவில்லை. ஆகவே தண்டிக்கவில்லை" என்றான்.

"உங்கள் அணுகுமுறையைப் பாராட்டுகிறேன் மாமன்னரே" என்றான் நரசிம்மன்.

"எனது இரண்டாவது அணுகுமுறையையும் சொல்லி விடுகிறேன். கேட்டு விட்டுப் பாராட்டு" என்று சொன்ன விக்கிரமாதித்தன் "என்னை விட்டுப் போன பதினெட்டு நாடுகளும் மீண்டும் என் வசம் வரவேண்டும். விட்டலராயனும் வேலாபுரமும் துவாரசமுத்திரமும் கூட பழையபடியே என் ஆதிக்கத்திற்கு வரவேண்டும். இதற்காக நான் அந்த நாட்டுடனெல்லாம் போர் தொடுக்க முடியாது. ஆனால் உன் தந்தை போர் தொடுத்திருக்கிறார். அவற்றின் பலனெல்லாம் அவரிடம் வந்திருக்கின்றன. ஆகவே ஒரு சவாலை முன் வைக்கிறேன். எனது நாடுகளையெல்லாம் கவர்ந்த விட்டலராயன் கன்னே காலில் இருக்கும் என் கோட்டையை வெற்றி கொள்ள முடியுமா என்று பார். அவர் வென்று விட்டால் அவரது படையெடுப்புகளை நான் அங்கீகரிக்கிறேன். ஹொய்சள சாம்ராஜ்யத்தை ஏற்கிறேன். மாறாக அக்கோட்டையைக் கைப்பற்றாமல் விட்டலராயர் தோற்றுப் போனால் அவர் வென்ற பதினெட்டு நாடுகளும்

அவரது வேலாபுரமும் துவாரசமுத்திரமும் பழைய படி சாளுக்கிய ஆதிக்கத்தின் கீழ் வந்து விடும். விட்டலராயன் என் அடிமையாவார். என்ன சொல்கிறாய்?'' என்று கேட்டான்.

“தங்களது இந்த அணுகுமுறையையும் நான் பாராட்டுகிறேன் சக்கிரவர்த்தி. வீரர்களுக்கேற்ற விவேகமான அணுகுமுறை. எனது தந்தையார் விட்டலராயர் மறைந்து ஓடும் எலியல்ல. எப்போதும் பாயக்கூடிய புலி. இந்தச் சவாலை அவர் நிச்சயமாக ஏற்பார். அவரது சார்பில் நான் ஏற்கிறேன்'' என்றான் நரசிம்மன்.

“மகிழ்ச்சி நரசிம்மா. என் சகவாசம் எப்போதும் வீரர்களோடு தான். வீரம் தான் என் சுவாசம். வீரம் தான் என் வாசம். அதனால் தான் இச்சவாலை முன் வைத்தேன்'' என்று சொன்ன விக்கிரமாதித்தன் “குறுவாட்களால் மின்னலைக் காட்டினாரே தெரியுமா? அவர் தான் கன்னேகால் கோட்டையின் தளபதி'' என்றான்.

அவரை நினைக்கும் போதே பிரமிப்பாக இருந்தது நரசிம்மனுக்கு. ஆயினும் எதுவும் பேசவில்லை.

“நீயும் உன்னை விரும்பும் மாளவிகாவும் வேலாபுரத்திற்குத் திரும்பலாம். உங்களது பாதுகாப்பிற்காக நூறு வீரர்களை அனுப்புகிறேன்'' என்றான் விக்கிரமாதித்தன்.

“மிக்க நன்றி சக்கிரவர்த்தி'' என்றான் நரசிம்மன்.



இருவரையும் தேரில் ஏற்றி நூறு வீரர்களுடன் அனுப்பி வைத்தான் விக்கிரமாதித்தன்.

தேர்ப் பயணம் சுகமாக இருந்தது.

மாளவிகாவிற்குச் சொர்க்கப் பயணமாக இருந்தது.

அவள் சிறிதும் எதிர்பார்க்காத சூழ்நிலை.

அதே சமயம் அவள் விரும்பத் தக்கதாக இருந்தது.

“சக்கிரவர்த்தி போரமைச்சரை நாம் தண்டித்தது குறித்து ஒரு வார்த்தை கூடப் பேசவில்லையே? ஏன்?'' என்று கேட்டாள் மாளவிகா.

“உங்கள் நாட்டுச் சக்கிரவர்த்தியை பற்றி உனக்குத் தானே தெரியும்?'' என்றான் நரசிம்மன்.

“எந்த நாடாக இருந்தால் என்ன? நீதி ஒன்று தானே? கொடுமை எங்கே நடந்தாலும் கொடுமை தானே?''

"ஆகவே தான் சக்கிரவர்த்தி நம் நடவடிக்கையை அங்கீகரித்திருக்க வேண்டும். போரமைச்சர் நடந்து கொண்ட செயல்களையெல்லாம் விவரமாக அறிந்து கொண்டிருப்பார். அவருக்கு வழங்கப்பட்ட தண்டனை சரியானது என்று கருதியிருப்பார்" என்று சொன்ன நரசிம்மன், "மாளவிகா! குற்றவாளிக்குச் சட்டம் தண்டனை வழங்குவதில் சிக்கலும் தாமதமும் உண்டாகும் போது சட்டத்திற்கு அப்பாற்பட்ட சக்திகள் மிகச் சரியான தண்டனையைத் தந்து விடும். மக்கள் சக்தி அப்படிப்பட்ட ஒரு சக்தி தான். குற்றவாளிகள் சட்டங்களில் உள்ள ஓட்டைகளைப் பயன்படுத்திக் கொண்டு தப்பித்து விடுவார்கள். சாட்சிகளைச் சரி கட்டி விடுபட்டு விடுவார்கள். மக்கள் சக்தியை அவர்களால் ஒன்றும் செய்ய முடியாது. மக்கள் சக்தி மகேசன் சக்தி. மகாசக்தி" என்றான்.

"உண்மைதான் இளவரசே" என்று ஒப்புக் கொண்ட மாளவிகா "சக்கிரவர்த்தி எதிர்பாராத சவாலை விட்டிருக்கிறாரே! கவலையாக இருக்கிறது!" என்றாள் மாளவிகா.

"தர்மவானும் மகாவீரனுமான சக்கிரவர்த்திக்கும் துராசைப் பிடித்த போரமைச்சருக்கும் இருக்கும் வித்தியாசத்தைப் பார் மாளவிகா. போரமைச்சர் உன்னையும் என்னையும் கருவியாகப் பயன்படுத்தி என் தந்தையாரை வரவழைத்துக் கோழைத்தனமாக அழிக்க நினைத்தார். அவரால் அது தான் முடியும். ஆனால் விக்கிரமாதித்தர் நேர்வழியைத் தேர்ந்தெடுத்திருக்கிறார். வறட்டு வீரம் காட்ட விரும்பாமல் ஒரு போரை மட்டுமே முன் நிறுத்தி தீர்வு காண விரும்புகிறார். இதை என் தந்தையாரும் ஏற்பார். நான் கவலைப்படுவது சக்கிரவர்த்தி அறிமுகப்படுத்திய சேனாதிபதி ஜெகதேவனைப் பற்றித்தான். குறுவாட்களை அவர் எப்படி எறிந்தார் பார்த்தாய் அல்லவா? மின்னலை விட வேகமாக எறிந்தார். அவரைப் போலவே வேகமாக வாளையும் வேலையும் எரியக் கூடியவர்கள் மேலும் பலர் இருக்கலாம் என்பது என் ஊகம். அதை மனதில் வைத்துத் தான் சக்கிரவர்த்தி இந்தச் சவாலை வைத்திருப்பார் என்று தோன்றுகிறது" என்றான் நரசிம்மன்.

"அப்படியானால் சேனாதிபதிக்கு நீங்கள் அஞ்சுகிறீர்களா?"

"அரச வம்சத்தவன் அஞ்ச ஆரம்பித்தால் அரசியல் அனர்த்தமாகிவிடும். ஆட்சி அஸ்தமித்து விடும். நான் யாரை எண்ணியும் அஞ்சவில்லை. சேனாதிபதி எனக்குள் எச்சரிக்கையைத் தந்திருக்கிறார். அவ்வளவுதான்."

"என்னைப் பற்றி நீங்கள் எதுவும் சொல்லவில்லையே?"

"என்ன சொல்ல வேண்டும் நான்?"

“என்ன பேச்சு, உங்கள் பேச்சு அர்த்தமற்ற பேச்சு? எல்லா விஷயங்களையும் பிசிறில்லாமல் பேசும் உங்களுக்கு என்னைப் பற்றி பேசும் போது மட்டும் தடை வந்து நின்று விடுகிறதா?”

“உன் கேள்வி தான் என்ன?”

“நான் உங்களை விரும்புகிறேன் என்று சக்கிரவர்த்தியே சபையில் சொன்னார். நீங்கள் இன்னமும் சொல்லவில்லையே.”

“சொல்லாததற்குக் காரணம் உன்னிடமிருந்து உரிய சொல் வராதது தான்.”

“என்ன சொல்கிறீர்கள்?”

“நான் பெண் பித்தனென்றும் காமாந்தகன் என்றும் சொல்கிறார்கள். நீ அதை மறுத்து ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை.”

“சொன்னால் தான் தலையாட்டுவீர்களா? உங்களை நம்பாமல் உங்களை விரும்புகிறேனா? உங்களோடு வருகிறேனா?”

“உனக்கொன்று புரியவில்லை.”

“என்ன?”

“அன்பு என்பது பேசப்படுவதல்ல. உணரப்படுவது.”

“மற்றவர்களுக்குத் தெரிய வேண்டுமானால் பேச வேண்டுமல்லவா?”

“பேச வேண்டியபோது பேசலாம்.”

“உங்கள் தந்தையார் உங்கள் மீது நல்ல அபிப்ராயம் கொண்டிருக்கிறாரா?”

“இல்லை.”

“இல்லையா?”

“ஆம் மாளவிகா. நான் உன்னிடம் ஏற்கனவே கூறியிருக்கிறேன். என் பாட்டனார் அறிவுரைப்படி நான் நடந்து கொள்கிறேன். முட்டாளைப் போலப் பேசுகிறேன். பெண்பித்தனைப் போலப் பேசுகிறேன். கோழையைப் போலப் பேசுகிறேன். பயனற்றவனைப் போலப் பேசுகிறேன். தந்தையாருக்கு என்மேல் எப்படி நல்ல அபிப்ராயம் வரும்?”

“பாட்டனாரது அறிவுரைகளை உங்கள் தந்தையிடமும் நீங்கள் காட்டவேண்டுமா?”

“இனி அந்த அவசியம் இருக்காது என்று நினைக்கிறேன். அவரோடு மட்டுமல்ல. யாரோடும் அப்படி நடந்து கொள்ளப் போவதில்லை.”

"தந்தையார் என்னை ஏற்றுக் கொள்வாரா?"

"உன்னை மறுப்பதற்கான காரணம் இருப்பதாகத் தெரிய வில்லை. என்னை ஏற்றுக் கொண்டு விட்டால் உன்னையும் ஏற்றுக் கொள்வார்."

"அவர் என்னை மறுத்தால் நான் சும்மா விட மாட்டேன்" என்று முணுமுணுத்துக் கொண்ட மாளவிகா "கொஞ்சமாவது காதல் மொழிகளைப் பேச மாட்டீர்களா?" என்று கேட்டாள்.

"சொல்லாத சொல்லுக்கு விலையேதும் இல்லை என்று நீ தானே பாடினாய்?" என்று கேட்ட இளவரசன் பிறகு நிறைய காதல் மொழிகளைப் பேசினான். அவள் திருப்தியடையும் வரைப் பேசினான்.

"நீங்கள் காதல் மொழிகளால் குவிக்கப்பட்ட காதல் மலை. காதல் நினைவுகளைக் கோடி கோடியாய்க் கொண்டிருக்கும் காதல் கடல். காதல் உணர்வுகளால் அலைக் கழிப்பை உண்டாக்கும் காதல் புயல். மண் போல் காட்சியளித்து விண் போல் அசர வைக்கிறீர்கள்" என்றாள் மாளவிகா.

வேலாபுரத்தை நெருங்க நெருங்க விட்டலராயனைப் பற்றிய செய்திகள் நரசிம்மனுக்கு வந்தன.

குடகு நாட்டை வென்ற விட்டலராயனுக்கு நரசிம்மன் சாளுக்கிய நாட்டிற்குக் கடத்தப்பட்ட செய்தி வந்ததாம். அவனோ மகன் எக்கேடு கெட்டாலும் கெடட்டும் என்று தனது படையெடுப்பைத் தொடர்ந்தானாம்.

குடகு நாட்டையடுத்து ஹவால்ஜி கோட்டையை வென்று படையெடுப்பை முடித்துக் கொண்டு வேலாபுரத்திற்குச் சென்று வெற்றி விழாவைக் கொண்டாடி விட்டு உடனடியாக துவாரசமுத்திரத்திற்குச் சென்று விட்டானாம். அங்கே கோட்டைச் சுவர் கட்டி முடிக்கப்பட்டு விட்டதால் தலைநகரம் வேலாபுரத்திலிருந்து துவாரசமுத்திரத்திற்கு மாற்றப்பட்டு விட்டதாம்.

விட்டலராயர் துவாரசமுத்திரத்திலும் சேனாதிபதி பகாசூரர் வேலாபுரத்திலும் இருக்கிறாராம்.

இவற்றையெல்லாம் அறிந்த நரசிம்மன் வேலாபுரத்திற்குச் சென்று சேனாதிபதியுடன் பேசிவிட்டு பிறகு துவார சமுத்திரத்திற்குச் செல்ல விரும்பினான்.

அக்காலத்தில் சாளுக்கிய நாட்டிலிருந்து காஞ்சிக்குச் செல்ல பெருவழி ஒன்று புலிகேசி மகாராஜா காலமானதிற்குப்

பிறகு அமைக்கப்பட்டிருந்தது. அப் பெருவழியி லிருந்து சிறு வழிகள் உண்டாக்கப்பட்டு வேலாபுரம், துவாரசமுத்திரம், சிரவணபெலகுலா, பாண்டவபுரம், முதலிய ஊர்கள் இணைக்கப்பட்டிருந்தன.

எனவே தேரில் பயணப்பட்ட இளவரசனும் மாளவிகாவும் ஆறே நாட்களில் வேலாபுரத்தை அடைந்தனர்.



வேலாபுரத்தில் வெற்றிவிழாவை நடத்தி விட்டு துவாரசமுத்திரத்திற்கு வந்து சேர்ந்த ஹொய்சள மன்ன விட்டலராயன் தன் மகளைப் பார்க்கச் சென்றான்.

மகளைப் பார்த்ததும் ஒரு கணம் அவனுக்குத் தலை சுற்றியது.

இரண்டு ஆண்டுகளாகப் பாடுபட்டு போர் நடத்திப் பெற்ற வெற்றிகள் எல்லாம் அர்த்தமற்றுப் போனது போல இருந்தது.

வெற்றிகளும் வெற்றி விழாக்களும் கலைந்து போய் வெற்றிடத்திற்கு வந்து நின்ற மாதிரி இருந்தது அவனுக்கு.

மகள் தர்மதேவி அடையாளம் தெரியாத அளவிற்கு மெலிந்து போயிருந்தாள். செழிப்பாக மலைச் சாரலில் பூத்துக் குலுங்கிய மலர்ச் செடியானது கத்தரி வெயிலில் காய்ந்து போனமாதிரி இருந்தது அவளது தோற்றம்.

என் மகளா இவள்? என்னால் வளர்க்கப்பட்ட மகளா இவள்? சமண மதத்தின் யட்சிணியே மகளாகப் பிறந்தாள் என்றல்லவா அந்த யட்சிணியின் பேரான தர்மதேவி என்ற பெயரை இவளுக்குச் சூட்டினேன். அந்த தர்ம தேவியா இவள்?

விட்டலராயனால் நம்பமுடியவில்லை.

ராஜ்யம் ராஜ்யம் என்றும் சாம்ராஜ்யம் என்று அலைந்த தெல்லாம் எதற்காக? வம்சம் வளரவேண்டும் என்றும் விழுது விட்டுப் பரவ வேண்டும் என்பதற்காகத்தானே? வம்ச விளக்கில் ஒன்றான மகள் இன்றைக்கு மூதேவி போல் முடங்கிக் கிடக்கிறாளே! ஒன்றுமறியாத இந்த அபலைப் பெண்ணை அமங்கலமாக்கி விட்டா நான் ராஜ்யங்களை வெல்ல வேண்டும்? அந்த வெற்றிகள் எல்லாம் எதற்கு?

விக்கித்து நின்றான் விட்டலராயன்.

எந்த மன்னனும் குடும்பத்தை மறந்துவிட்டு ராஜ்யத்தை மட்டும் கவனித்துக் கொண்டிருக்க மாட்டான். குடும்பத்தைக்

கவனிப்பதும் கடமைதான். அதை மறந்து ராஜ்யத்தைப் பற்றி மட்டும் கவனித்துக் கொண்டிருந்தால் அவன் கடமையை மறந்தவன்தான். மகளைப் பார்த்தால் குணமடைந்தவளாகவும் இல்லை. குணமடையக் கூடியவளாகவும் தோன்றவில்லை. உள்ளதும் போன்து போல மோசமான நிலையில் இருந்தாள் அவள்.

“சாந்தலை? என்ன இது?” என்று கேட்டான் விட்டலராயன், ராணியைப் பார்த்து.

அதுவரை அடங்கியிருந்த சோகம் வெளிப்பட்ட மாதிரி ராணியிடமிருந்து கண்ணீர் பெருக்கெடுத்தது.

“இவ்வளவு மோசமாக இருப்பதாக நீ சொல்லவே இல்லையே? உன் பேச்சிலும் எழுத்திலும் தானே நான் நம்பிக்கையோடு இருந்தேன்? என்னை ஏமாற்றி விட்டாயே ராணி. என் உண்மையான மகளை இனி நான் காண்பேனா? மகன் தான் மல்லாந்து விட்டான். மகளாவது நல்லபடியாக இருப்பாள் அவளிடம் ஆட்சியை ஒப்படைக்கலாம் என்றிருந்தேனே! நமக்குப் பூத்த இரு பூக்களும் பொய்த்து விட்டனவே ராணி! நான் செய்த பாவம் தான் என்ன?” என்று கேட்டான் மன்னன்.

கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள் ராணி. கணவன் மனமுடைந்திருக்கும் போது தானும் உடைந்து போய் அழுதால் அணை உடைந்தது போல் அவலமாகி விடும் என்று கருதிய அவள் “கவலைப்படாதீர்கள் பிரபு. நமது குலதெய்வம் வாசந்திகா தேவி நம்மைக் கைவிட மாட்டாள்” என்றாள்.

“குலதெய்வம் இருக்கட்டும். நமது ஆச்சார்யர் ஜெயதேவரும் நீலகேசியும் இவ்வளவு காலமாக என்ன செய்தார்கள்? நான் கடைசியாகப் பார்த்த போது கூட நமது மகள் தூசு படிந்த சிலைபோல இருந்தாளே? தூசு துடைக்கப்பட்டு மாசு மருவற்று மாறியிருப்பாள் என்றல்லவா நினைத்தேன்? பட்ட மரம் போலிருக்கிறாளே? குப்பை மேடு போல இருக்கிறாளே? கலைந்து போன மேகம் போலவும் குலைந்து போன குலையைப் போலவும் இருக்கிறாளே! கிரகணம் பிடித்தச் சந்திரனைப் போல முகம் இருண்டு, புயல் புரட்டிப் போட்டத் தோட்டத்தைப் போல உடல் குலைந்து, ஒளி வீசும் கண்களில் ஓட்டை விழுந்த மாதிரி இருக்கிறாளே! என்ன இது? நம் குலதெய்வம் போலவே இருந்தவள் கொள்ளிக்கு ஆளான சிதையைப் போலச் சிதைந்து கிடக்கிறாளே! இன்னும் சில காலம் கழித்து நான் வந்திருந்தால் என் மகளின் எலும்புக் கூட்டைத் தான் பார்த்திருப்பேனா?” என்றான் விட்டலராயன்.

அதைச் சொல்லும் போது அவனது முகம் ருத்திரனைப் போல் மாறிவிட்டதையும் கண்கள் சிவந்து விட்டதையும் கண்டு கலங்கினாள் ராணி.

"சாந்தமடையுங்கள் பிரபு. ஜெயதேவரும் நீலகேசியும் இரண்டு ஆண்டு காலமாக நம் மகள் இருக்கும் இடத்தில்தான் இருந்தார்கள். கவனித்து வந்தார்கள்" என்றாள்.

"என்ன சொல்கிறாய் நீ? இரண்டு ஆண்டு காலமாக மகளோடு இருந்தவர்கள் சாதித்தது தான் என்ன? மகள் எப்போது இறக்கப் போகிறாள் என்பதைக் காண்பதற்காகத்தான் இருக்கிறார்களா? சமண மதத்தின் பிரதானத் துறவி ஜெயதேவர். வட நாட்டில் இருந்த சமணம் தென்னாட்டிற்கு வந்த பின் அதை விருட்ச மாக்கியவர் ஜெயதேவர். அவரது சக்தி மகத்தானது. நீலகேசியும் அற்பமானவரல்ல. இருவரையும் என்னிரு கண்களாகவே பாவித்தவன் நான். ஜெயதேவரின் கண் பார்வை பட்டாலே போதும்.பேயும் பூதமும் கண்காணா பிரதேசங்களை நோக்கி ஓடும். மறையும். ஆனால் நடந்ததைப் பார்த்தால் எனக்கு வேதனையும் அவநம்பிக்கையுமே ஏற்படுகின்றன" என்றான் மன்னன்.

"மகளின் விதி மலை போல் இருந்தால் அலைகளால் என்ன செய்யமுடியும்? மகளைத்தான் நொந்து கொள்ள வேண்டுமே தவிரத் துறவிகளையல்ல."

"நீ தாயாகப் பேசு சாந்தலை. தாய்மைக்கும் பிறகு தான் துறவி துறவறம் எல்லாம். மகள் இறந்து போனால் கூட நீ கவலைப்பட மாட்டாய் போலிருக்கிறது."

"அப்படிச் சொல்லாதீர்கள் பிரபு. என் வேதனை சொல்ல முடியாத வேதனை. பாதி ஆற்றைக் கடந்த பிறகு முன்னோக்கிப் போவதா பின்நோக்கித் திரும்புவதா என்று தீர்மானிக்க முடியாத வேதனை."

"உன் வேதனை புரிந்து விட்டது ராணி. நாளை ஜெயதேவர் வரும் போது பேசிக் கொள்வோம்" என்றான் விட்டலராயன்.

மறுநாள் ஜெயதேவரும் நீலகேசியும் வந்தபோது தனது கோபத்தை மன்னன் முற்றிலுமாக மறைத்துக் கொண்டான்.

"நான் பெற்ற வெற்றிகளுக்கு ஆசி வழங்க வேண்டும் அடிகளே!" என்று பணிவோடு கேட்டான்.

"நடக்கும் போது ஜீவராசிகள் மிதிபட்டு மாண்டு விடக் கூடாது என்று தரையைத் துடைத்தபடி நடப்பவர்கள் நாங்கள். அஹிம்சைதான் சமணர்களின் மூச்சுக் காற்று. உயிர் மூச்சு. நீயோ ஆயிரக்கணக்கான மனிதர்களைப் போரின் பெயரால் கொன்று குவித்து விட்டு என்னிடம் ஆசி கோருகிறாய். நீ பாரத

நாட்டையே வென்று விட்டு வந்து நின்றாலும் நான் ஆசி வழங்க மாட்டேன். சமணர்களுக்கு கொள்கையே பெரிது. கோமான் அல்ல'' என்றார் ஜெய்தேவர் சற்றே கோபத்துடன்.

“அடிகளே! மௌரிய வம்சத்துப் பேரரசர் சந்திரகுப்தர் கலந்து கொண்ட போர்கள் கணக்கில் அடங்காது. அவரது வாள் பட்டு மரணத்தின் வாய்ப்பட்ட வீரர்கள் லட்சங்களைத் தாண்டும். அவரது ராஜ்ய எல்லை மகதத்திலிருந்து காந்தாரம்* வரைப் பரவியிருந்தது. அந்த மாமன்னருக்கு ஆச்சார்யராக இருந்து வழிகாட்டியவர் சமணரான பத்ரபாகு. மாமன்னருக்கு அவர் ஆசி வழங்கி வந்ததாகத்தான் கேள்விப்பட்டிருக்கிறேன்'' என்றான் விட்டலராயன்.

“அது ஆசியல்ல. தூசி. ஆசியின் பெயரால் தூசியைத்தான் பத்ரபாகு வழங்கினார். அந்த மன்னனை முடிவில் அவரே சரவண பெலகுலாவிற்கு அழைத்து வந்தார். மனிதர்களைக் கொன்ற பாவத்திற்காகச் சல்லேகனை இருக்கச் சொல்லி மரணத்தைக் கொடுத்தார்'' என்றார் ஜெயதேவர்.

“அடிகளே! நான் மன்னன். மன்னனுக்குரிய கடமைகளைத் தான் நான் செய்தேன்.''

“அப்படியே இருக்கட்டும். சமணனாகிய நான் என் கடமையைத் தான் செய்கிறேன். அஹிம்சை வழியில் நடக்கா தவர்கள் நாடாளும் மன்னனாக இருந்தாலும் ஆசி வழங்க மாட்டேன்.''

“அப்படியென்றால் என்னைச் சல்லேகனை புரியச் சொல்வீர்களா?''

“மரணத்தைத் தாண்டும் சல்லேகனை சிறப்பானதுதான். ஆயினும் நான் அதைத் தூண்ட விரும்பவில்லை.''

“உங்கள் கருணை மகத்தானது அடிகளே! எனக்கு ஆசி வழங்கா விட்டாலும் பரவாயில்லை. என் வெற்றிக்குப் பிறகு தங்களுக்கு என் அரண்மனையில் விருந்து வைக்க விரும்புகிறேன். அதற்காவது தாங்கள் இசைய வேண்டும்'' என்றான் விட்டலராயன்.

அதற்கு ஜெயதேவர் அளித்த பதில் விட்டலராயனை அதிர வைத்தது.

ஜெயதேவர் சொன்னார்.

“நான் மட்டுமல்ல. சமணர்கள் எவரும் விருந்திற்கு வரமாட்டார்கள் பிட்டிதேவா''-



* இன்றைய ஆப்கானிஸ்தான்.



மதம் என்பது நமது கண்களுக்கு ஒளியாகவும் வழியாகவும் இருக்க வேண்டுமே தவிர கண் களை மறைக்கும் திரையாகவும் கவலை களை வளர்க்கும் கருவியாகவும் இருக்கக் கூடாது – விட்டலராயன்




ஜெயதேவர் மன்னனை விட்டலராயன் அல்லது விட்டல தேவன் என்று தான் அழைப்பது வழக்கம்.

அதை விட்டு வட்டு பிட்டி தேவன் என்று அழைத்தது மன்னனுக்கு அதிர்ச்சியாக இருந்தது.

"இது என்ன அடிகளே! எனக்குப் புதிய திருநாமத்தைச் சூட்டியிருக்கிறீர்கள்?" என்று கேட்டான்.

"பிட்டியை* பிட்டிதேவன் என்று தானே அழைக்க வேண்டும்?"

"நான் எப்போது பிட்டியானேன்? நன்றாகத்தானே இருக்கிறேன்?"

"பொய் இங்கே உதவாது மன்னா. குடகு நாட்டுப் போரில் மிலேச்சனான கோட்டைத் தலைவன் உனது சுண்டு விரலை வெட்டியது உண்மை தானே! ஆகவே நீ அங்கஹீனன் தான்."

"சுண்டு விரல் போனால் கூட அங்கஹீனன் தானா?"

"நகம் போனாலும் அங்கஹீனம் தான்."

விட்டலராயன் சற்றே அசதியடைந்தான்.

"சரி அடிகளே. நான் பிட்டிதேவனாகவே இருக்கட்டும். அதற்கும் நீங்கள் என் விருந்தில் கலந்து கொள்ள மாட்டேன் என்று சொல்வதற்கும் என்ன சம்பந்தம்?" என்று கேட்டான்.

"அங்கஹீனர்கள் அளிக்கும் விருந்தில் சமணர்கள் கலந்து கொள்வதில்லை" என்றார் ஜெயதேவர்.

"நான் அவ்வாறு கேள்விப்பட்டதிலையே அடிகளே! இப்படியொரு கொள்கை சமணர்களுக்கு உண்டா?"

"உனக்குத் தெரியாத விஷயங்கள் ஆயிரம் இருக்கும். புரியாத விஷயங்கள் ஆயிரமாயிரம் இருக்கும். ஒருவனுக்குத்

* பிட்டி என்றால் கன்னட மொழியில் 'அங்கஹீனன்' என்று பொருள்.

தெரியவில்லை என்பதாலும் புரியவில்லை என்பதாலும் அது இல்லை என்று ஆகிவிடாது."

ஜெயதேவரின் பேச்சின் வீச்சு வித்தியாசமாகவும் அலட்சியமாகவும் இருந்ததைக் கண்டான் மன்னன். இருப்பினும் பொறுமையை இழக்கவில்லை.

"அடிகளே! உங்கள் கொள்கையை அறியாமல் விருந்திற்கு அழைத்தது தவறு என்பது தெரிகிறது. வருவதும் வராததும் உங்கள் இஷ்டம். அதை விட்டு விடுவோம். என் மகள் தர்ம தேவியின் நிலை என்ன? உங்கள் நேத்ர தீட்சை ஒன்றே சகல வியாதிகளுக்கும் நிவாரணமாக இருக்கும் போது இரண்டு வருடங்கள் ஆகியும் அவள் சீராக வில்லையே! முன்பிருந்த நிலையை விட இப்போதைய நிலை மோசமாக அல்லவா இருக்கிறது? உங்களிடம் ஒப்படைத்த போது பூஞ்செடியாக இருந்த தர்மதேவி தற்போது பூஞ்சையடைந்த குப்பை போல் இருக்கிறாளே! இங்கே என்ன நடக்கிறது?" என்று கேட்டான்.

"ஏதோ அவள் நிலைக்கு நான்தான் காரணம் என்பது போல சொல்கிறாயா? என்னைப் பொறுப்பாக்கும் சக்தி யாருக்கும் கிடையாது. உன் மகளின் நிலைக்கு நீயே காரணம்" என்றார் ஜெயதேவர்.

"மகளுடன் நான் இருக்கவில்லை என்பதைச் சொல்கிறீர்களா?"

"உனக்கு ஆணவம் அதிகரித்து விட்டது பிட்டிதேவா. நீ உடன் இருந்து விட்டால் உன் மகளின் நிலை சரியாகி விடுமா? நீ ஞானியா? மகானா? மகாதுறவியா? மாயாவியா?"

"என் மீது என்ன தவறு அடிகளே?"

"ஆரம்பத்திலேயே நான் சொன்னதுதான் முக்கிய காரணம்."

"எதைச் சொல்லுகிறீர்கள்?"

"போர் தொழிலை விடு. படையெடுப்பை நிறுத்து. உயிர்வதை வேண்டாம் என்று சொன்னேன். நீ கேட்கவில்லை."

"அடிகளே! இது விஷயமாக உங்களுக்கு மட்டுமல்ல பஞ்சப் பிரதானிகளுக்கும் சொல்லிவிட்டேன். படையெடுப்பதும் போர் தொடுப்பதும் ஷத்திரியனான எனது கடமை. அர்ஜீனனுக்குக் கூட இந்தக் கடமையைத்தான் போதித்தார் ஸ்ரீகிருஷ்ணன்."

"இதோ பார் மன்னா! மதவாதம் செய்ய முற்படாதே. அதற்கு உனக்குத் தகுதியிருக்கிறதா என்று பார். நான் கூறியதைச் சரியாக புரிந்து கொள்ள முயற்சி செய். ஒரு பக்கத்தை அழுத்தினால்

மறுபக்கம் உயரும். இதுதான் இயற்கை விதி. ஒரு பாவத்தைச் செய்தால் மறுபக்கம் அதற்கு தண்டனை கிடைக்கும். இரண்டு எதிரெதிர் வினைகள் உலகில் எப்போதும் நடந்து கொண்டு தான் இருக்கின்றன. இதை ஞானி அறிந்து கொள்கிறான். அறிவுரை சொல்கிறான். அஞ்ஞானி அறிந்து கொள்வதில்லை. வெறியனாக இருக்கிறான்.''

"நீங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள் அடிகளே? அதை வெளிப்படையாக பேசி விடுங்களேன்'' என்றான் மன்னன்.

ஜெயதேவரோ அவனுக்குப் பதில் சொல்ல விரும்பாமல் துண்டை எடுத்து வாயை மறைக்கும் விதமாக கட்டிக் கொண்டார். மன்னனோடு பேச விரும்பவில்லை என்பதை அறிவிப்பது போல் இருந்தது அவரது செயல்.

இந்த நிலையில் நீலகேசி குறுக்கிட்டு "ஆச்சார்யரை இன்று நீங்கள் அதிகமாகப் பேசவைத்து விட்டீர்கள் மகாராஜா. எனக்குத் தெரிந்து அவர் இவ்வளவு நேரம் பேசியதுமில்லை. இந்த அளவிற்குக் கோபப்பட்டதும் இல்லை. அவர் சொல்ல வந்த விஷயம் ஒன்றுதான். உங்களது போர்த்தொழில் வளர வளர உங்கள் மகளது உடல் முன்னேற்றம் குறைந்து கொண்டே போயிருக்கிறது'' என்றார்.

"என் போர்களுக்கும் மகளின் உடல்நிலைக்கும் என்ன சம்பந்தம்?'' என்று கேட்டான் மன்னன்.

"அதைத்தான் ஆச்சார்யர் விளக்கினார். உங்கள் மகளுக்கு அவர் சிகிச்சையைச் செய்து கொண்டிருக்கும் போது அது பலனளிக்காத விதத்தில் நீங்கள் போர் என்னும் பாவத்தைச் செய்து கொண்டு வந்தீர்கள். உங்கள் வெற்றிகள் அதிகரிக்க அதிகரிக்க ஆச்சார்யரின் சிகிச்சைகள் தோற்றுக் கொண்டே வந்தன. நீங்கள் செய்த பாவம் மகளுக்குத் தண்டனையாகச் சேர்ந்து விட்டது. எங்கள் சிகிச்சைகளை அர்த்தமற்றதாக்கி விட்டது உங்கள் போர்ச் செயல்கள். ஆகவே தான் உங்கள் மகள் பட்டுப் போன செடி போலாகி விட்டாள். அது மட்டுமல்ல, ஆச்சார்யார் கூறிய மிக முக்கியமான விஷயத்தை நீங்கள் கண்டு கொள்ளவே இல்லை'' என்றார் நீலகேசி.

"எதைச் சொல்கிறீர்கள்?''

"மகாராஜா! உங்கள் மகளின் கனவில் சங்கு சக்கரம் கொண்ட உருவம் வந்து மிரட்டுவதாக மகளின் வாய் மூலமாகவே வெளிவரச் செய்தார் எங்கள் மாந்தரீகர். அந்த விவரம் ஆச்சார்யருக்குத் தெரிவிக்கப்பட்டது. அவர் சூட்சும உலகிற்குச்

சென்று அந்த உருவம் எது என்பதைக் கண்டறிந்தார். அதற்கான பரிகாரத்தையும் யட்சிணி தெரிவித்தாள். அவள் தெரிவித்ததை ஆச்சார்யர் உங்கள் ராணிக்குச் சொல்லி அச் செய்தி உங்களுக்கும் தெரிவிக்கப்பட்டது..."

"அதாவது..."

"வேலாபுரத்தில் நீங்கள் கட்டிவரும் சென்ன கேசவப் பெருமாள் ஆலயத்தை உடனடியாக நிறுத்தும் படிச் சொன்னார். நீங்கள் அவ்வாறு செய்யவில்லை. ஆலயம் வளர்ந்து கொண்டே வருகிறது. உங்கள் மகளின் நோயும் வளர்ந்து கொண்டே போகிறது. ஆச்சார்யர் ஒரு பரிகாரம் சொல்கிறார் என்றால் அது மகாவீரரே வந்து கூறுவது போன்றது. சாதாரணமாக அவர் பரிகாரங்களைக் கூறுவதில்லை. நம் விஷயத்தில் யட்சிணியான வாசந்திகா தேவியே வந்து கூறியதால்தான் அதை உங்களுக்குத் தெரிவித்தார். பரிகாரம் செய்ய வேண்டிய நீங்கள் பரிகாசம் செய்து வருகிறீர்கள். உபகாரம் செய்ய வந்தவருக்கு நீங்கள் அபச்சாரம் செய்து வருகிறீர்கள். அருள் வந்து உங்களை அழைக்கும் போது நீங்கள் போர் என்ற பொருள் தேடிச் செல்கிறீர்கள். மகளுக்கு எப்படி பிரச்சனை தீரும்?"

"அடிகளே! என் மகளின் கனவில் வந்து பயமுறுத்தும் உருவம் சங்கும் சக்கரமும் ஏந்தியிருந்ததாகச் சொல்கிறீர்களே. அந்த உருவம் மகாவிஷ்ணுவாக இருக்கலாமா?"

"அப்படித்தான் நினைக்கிறேன்."

"நான் கட்டி வரும் ஆலயமும் மகாவிஷ்ணுவிற்குத் தான்."

"மிகவும் சரி."

"மகளின் கனவில் மகாவிஷ்ணு வந்து மிரட்டியதால் மகா விஷ்ணுவுக்குக் கட்டி வரும் கோயிலை மேற்கொண்டு கட்ட வேண்டாம் என்கிறீர்கள்."

"நான் சொல்லவில்லை. யட்சிணி சொல்லியிருக்கிறாள்."

"யட்சிணி ஓர் உபதேவதை. அது மகாவிஷ்ணுவிற்குக் கோயில் கட்டக் கூடாது என்று எப்படிச் சொல்லும்?"

"இதற்கு யட்சிணிதான் பதில் சொல்ல வேண்டும். தேவ ரகசியங்களை மனிதர்கள் ஆராயலாகாது."

"அடிகளே! மகாவிஷ்ணு என்பவர் காக்கும் கடவுள். தன்னை அண்டியவரை மட்டுமின்றி அனைவரையும் ரட்சிப்பவர். அவர் எப்படி மகளின் கனவில் வந்து அவளை மிரட்டுவார்?"

“இதற்கு மகாவிஷ்ணுதான் பதில் கூற வேண்டும். கடவுள் விஷயத்தில் நமக்குள் அறிவு கடுகளவு தான். மலையைப் புரட்ட எலியால் முடியாது.”

“ஒரு விஷயத்தில் நமக்குச் சொற்ப அறிவு மட்டுமே இருக்கும் போது அதில் பூரண அறிவைப் பெற்றுச் சந்தேகங்களின்றிப் புரிந்து கொண்ட பிறகு தான் அதைப் பற்றி மற்றவர்களிடம் பேச வேண்டும். சந்தேகம் எழும் போது யட்சிணியைக் கேள் விஷ்ணுவைக் கேள் என்றால் யாரால் கேட்டு அறிய முடியும்? உங்களால் முடியுமா? ஆச்சார்யரால் முடியுமா? அல்லது உங்கள் மாந்தரீகரால்தான் முடியுமா?” என்று கேட்ட மன்னன் “நான் கட்டி வரும் மகாவிஷ்ணுவின் ஆலயத்தை இடிப்பது எப்படி பரிகாரமாகும்? ஆலயத்தைக் கட்டுவதுதான் பரிகாரமாகும். நீங்கள் மாற்றிச் சொல்கிறீர்களே!”

“மன்னா! நாம் சமணர்கள். சமண கோட்பாட்டிற்கு கட்டுப் பட்டவர்கள். நாம் விஷ்ணு பக்தர்கள் அல்ல. அதன் கட்டுப் பாட்டிற்கு உரியவர்கள் அல்ல. சமணனான நீ விஷ்ணுவின் ஆலயத்தைக் கட்ட முற்படாமல், கட்டிக் கொண்டிருக்கும் ஆலயத்தை இடிப்பதுதான் சரி” என்று வாய்த் துணியை அகற்றி விட்டு வாயைத் திறந்து சொன்னார் ஜெயதேவர்.

“ஆலயத்தை இடிக்க வேண்டுமா? இது என்ன அநாகரிகமான செயல்?”

“நீ ஒன்றும் இதற்காக அலட்டிக் கொள்ள வேண்டாம் பிட்டிதேவா. பல்லவர்கள் காலத்தில் ஆலய இடிப்புகள் நடந்துள்ளன. அதையெல்லாம் பட்டியலிட்டுச் சொல்வது நாகரிகம் அல்ல.”

“அடிகளே! ஓர் ஆலயத்தை நிர்மாணிப்பதென்பது மகா காரியம். தெய்வ சங்கல்பம் இருந்தாலன்றி அது நடைபெறாது. நமது கலாச்சார அடையாளங்களே ஆலயங்கள். நாம் மறைந்தாலும் அது மறைந்து நிற்கும். நம்மைப் பற்றிப் பேசும்.”

“சமணனான நீ மகாவிஷ்ணுவிற்கு எதற்காகக் கோயில் கட்டுகிறாய்? இது மதத் துரோகம்.”

“நானும் நீங்களும் இன்னும் சிலரும் சமணர்களாக இருக்கலாம். ஆனால் பெரும்பாலானவர்கள் சமணர்கள் அல்லர். அவர்கள் பிற மதத்தினர். பிற தெய்வங்களை வணங்குபவர்கள். அவரவர் தங்கள் தெய்வங்களுக்கான ஆலயங்கள் வேண்டும் என்று விரும்புகிறவர்கள். அனைவரது விருப்பங்களையும் சீர்தூக்கிப் பார்க்க வேண்டியது மன்னனின் கடமை. அதோடு

சென்ன கேசவப் பெருமாள் ஆலயத்தைக் கட்ட வேண்டும் என்பது என தந்தையாரின் நீண்டநாள் விருப்பம்."

"உனக்கு இறந்து போன தந்தை முக்கியமா? பிரச்சனையில் சிக்கியிருக்கும் உன் மகள் முக்கியமா?"

"எனக்கு எல்லோரும் முக்கியம்தான்."

"அப்படியால் உனது முடிவு?"

"கேசவப் பெருமாள் ஆலயத்தைக் கட்டுவதிலிருந்து பின் வாங்கவோ, கட்டிக் கொண்டிருக்கும் ஆலயத்தை இடிக்கவோ மன்னன் என்ற முறையில் என்னால் முடியாது."

"மகளுக்கான பிரச்சனையைத் தந்தையாக இருந்து தான் நீ நீக்க வேண்டுமே தவிர மன்னனாக அல்ல."

"மன்னனுக்கு எல்லா மக்களும் பிள்ளைகள்தான்."

"பிட்டிதேவா! என்னிடம் சொல்விளையாட்டுகளைக் காட்டுவது உனக்குக் கௌரவமானது அல்ல. நேரடியான பதிலைச் சொல். உன் மகள் பூரணகுணமடைய கேசவப் பெருமாள் கோயிலை இடிக்க வேண்டும். மேற்கொண்டு நீ போர்களில் ஈடுபடக் கூடாது. முடியுமா? முடியாதா?"

"இரண்டுமே முடியாது அடிகளே. அவை எனக்குப் பரிகாரங்களாகத் தோன்றவில்லை."

"உனக்கேன் தோன்ற வேண்டும்? இந்தப் பரிகாரங்களைச் சொன்னது நானல்ல. சமணரது யட்சிணி வாசந்திகா தேவி."

"யார் சொல்லியிருந்தாலும் என் முடிவு இது தான்."

"அப்படியானால் உங்கள் மகள் குணமாக மாட்டாள். மரணம் நெருங்கும்."

"தலைவிதி அது தான் என்றால் யாராலும் மாற்ற முடியாது."

இந்நிலையில் நீலகேசி குறுக்கிட்டு "மகாராஜா! கோபப் படாதீர்கள். நேரடியானதும், சரியானதும், பயன் தரக் கூடியதுமான பரிகாரத்தைத்தான் ஆச்சாரியர் சொன்னார். தங்களுக்கு அதில் சம்மதம் இல்லையென்றால் விட்டு விடுங்கள். யட்சிணி அம்பிகா தேவி இது போன்ற காலங்களில் மாற்று பரிகாரங்களைச் சொல்லக் கூடியவள். தேவிக்கு முன்னால் தவமிருக்கிறேன். என் உயிரை ஈந்தாவது மாற்று பரிகாரத்தை அறிவிக்கிறேன். தங்கள் மகளை குணப்படுத்துவது நாங்கள் செய்யக் கூடிய உபகாரமோ காருண்யமோ அல்ல. லட்சியம். கவலை வேண்டாம்" என்றார்.

ஜெயதேவர் மன்னனைப் பார்த்து "இனி வாழ்நாள் முழுதும் உன்னிடம் பேசமாட்டேன். குருவை மதிக்காத சீடனிடம் பேசி விட்ட பாவத்திற்காகச் சாகும் வரை மௌனத்தை அனுஷ்டிப்பதே உகந்ததாகும்" என்று சொல்லித் துணியை எடுத்து வாயில் கட்டிக் கொண்டார். அவரும் நீலகேசியும் புறப்பட்டுச் சென்றார்கள்.

இருவரும் சென்றபின் இறுகிய முகத்துடன் சிறிது நேரம் மௌனமாக இருந்த மன்னன் ராணியைப் பார்த்து "என்ன சொல்கிறாய் சாந்தலை? இவர்கள் கூறிய பரிகாரத்தைக் கேட்டாயா? ஆலயத்தை இடிக்க வேண்டுமாம். நீ உன் குல தெய்வமாகக் கருதி வணங்கும் வாசந்திகாதேவிதான் இந்தப் பரிகாரத்தைச் சொன்னாளாம். இதை விடக் கேலிக்கூத்து ஏதாவது இருக்குமா?" என்று கேட்டான் சற்றே கோபத்துடன்.

ராணி மௌனமாக இருந்தாள்.

"மகாவிஷ்ணு பயத்தைப் போக்குபவர். பேய் பிடித்தவர்களை நரசிம்மப் பெருமானிடம் அழைத்து வருவதற்குக் காரணம் அவர் தீயசக்தியை அழித்து பயத்தைப் போக்கி நிம்மதியைத் தருபவர் என்பது தான். ஆனால் இவர்கள் என்ன சொல்கிறார்கள்? நம் மகளின் கனவில் வந்து அவர் மிரட்டினாராம். இப்படியொரு புரட்டினை எங்காவது கேட்டிருக்கிறாயா?" என்று கேட்டான் மன்னன்.

ராணி மௌனமாக இருந்தாள்.

"இரண்டு பேருமாகச் சேர்ந்து கொண்டு இரண்டு வருடங்களாக உன்னை ஏமாற்றி வந்திருக்கிறார்கள். மகளின் வாழ்வை இருண்டு போகச் செய்திருக்கிறார்கள்" என்றான் மன்னன்.

"அவசரப்பட்டு அப்படியொரு முடிவுக்கு வர வேண்டாம் பிரபு. ஜெயதேவரும் சரி நீலகேசியும் சரி நமது மகள் விஷயத்தில் குணப்படுத்த வில்லை என்பது உண்மையாக இருக்கலாம். அதைத் தவிர்த்து விட்டுப் பார்த்தால் அவ்விருவரும் எப்படிப் பட்ட மகா துறவிகள் என்பதை மறக்க முடியுமா நம்மால்?" என்று கேட்டாள் ராணி தனது உள் வேதனைகளைத் தாங்கிக் கொண்டு.

"மகா துறவிகள் என்பது உண்மைதான் என்றால் மகள் விஷயத்தில் குணப்படுத்தியிருக்க வேண்டும். மகள் விஷயத்தில் அவர்களால் எதுவும் செய்ய இயலாது என்றால் முதலிலேயே அதைத் தெரிவித்திருக்க வேண்டும். சக்தி படைத்த துறவிகளாக இருந்து கொண்டு தங்களது சக்தியால் மகளை குணப்படுத்த முடியும் என்று சொன்னவர்கள் இரண்டு ஆண்டுகளாகியும்

மகளை இருட்டிலேயே வைத்திருக்கிறார்கள் என்றால் கோபம் வராதா? மகளின் பின்னடைவிற்குப் பொருந்தாத பரிகாரங்களைச் சொன்னால் சந்தேகம் வருமா? சந்தோஷம் வருமா? ஆறுதல் வருமா? ஆத்திரம் வருமா?"

"பிரபு! மாற்றுப் பரிகாரம் சொல்வதாகச் சொல்லியிருக்கிறார்கள். நிச்சயமாகச் சொல்வார்கள். மகா புருஷர்களுக்கும் சோதனை வரும். இதிகாசங்களை நீங்கள் அறிவீர்கள் அல்லவா?"

"சாந்தலை! பதியைப் போற்றும் பத்தினி தெய்வமே! மாற்று பரிகாரம் என்று சொல்லிவிட்டுச் சென்றவர்கள் மாற்றுப் பரிகாரத்துடன் வரலாம். அதுவும் பலிக்கவில்லை என்றால் வேற்றுப் பரிகாரம் தேடுவார்களா? அவர்கள் மாற்றிக் கொண்டே போவார்கள். என் மகள் மரணத்தை நோக்கிப் போய்க் கொண்டிருப்பாளா? சமணர்கள் மீது உனக்கிருக்கும் ஈடுபாடு மேன்மையானது. இணையற்றது. இமயம் போன்றது. எனக்கது தெரியும். ஆனால் ஒன்று. கண்களை மூடிக் கொண்டு தொழலாம். கண்களை மூடிக் கொண்டு நடக்கவோ ஓடவோ முடியாது. நீ கண்மூடித்தனமாக சிந்தனையை வளர்ப்பதை இப்படித்தான் என்னால் கருத முடியும். அதோடு பரிகாரம் என்பது ஒரு விஷயத்திற்கு ஒன்றாகத்தான் இருக்க முடியும். அப்படி இருந்தால்தான் அதற்கு மகத்துவம் இருக்கும். ஆயிரமாயிரம் பரிகாரங்கள் இருந்தால் அதற்குப் பெயர் பரிகாரமல்ல. பகல்வேஷம்."

"எதற்கும் இந்த முறை காத்திருந்து பார்க்கலாமே! என் வாசந்திகா தேவி என்னைக் கைவிட மாட்டாள்" என்றாள் ராணி.

"தேவைக்கு அதிகமாகவே காத்திருந்து மகளின் வாழ்க்கையைக் கெடுத்து விட்டதாக என் மனம் என்னை வாட்டுகிறது ராணி. மேலும் காத்திருக்கச் சொல்கிறாயே! எந்த நம்பிக்கையில்? எந்த உத்தரவாதத்தில்? சாந்தலை! மதம் உன் கண்களை மறைக்கிறது. மதம் நமது கண்களுக்கு ஒளியாகவும் வழியாகவும் இருக்க வேண்டுமேயன்றி கண்களை மறைக்கும் திரையாகவும் கவலைகளை வளர்க்கும் கருவியாகவும் இருக்கக் கூடாது. உன்னை மதிக்கிறேன். உன் அன்பை மதிக்கிறேன். ஒரு வாரம் காத்திருக்கிறேன்" என்றான் மன்னன்.

ராணி கலங்கினாள். எதற்காகவோ கலங்கினாள்.

வெளியே சொல்ல முடியாமல் புழுங்கினாள்.

மன்னன் அரண்மனைக்கு வந்தான். அங்கே சேனாதிபதி பகாசூரர் அவனுக்காகக் காத்திருந்தார்.

“சேனாதிபதி! நீங்கள் எதற்காக இங்கே காத்திருக்க வேண்டும்? அங்கேயே வரலாமே? நீங்கள் வந்திருந்தால் மேலும் பல கேள்விகள் கேட்கப்பட்டிருக்கும். தெளிவுகள் பல ஏற்பட்டிருக்கும்” என்று சொன்ன மன்னன் “எனக்கு ஜெயதேவரின் மீதான நம்பிக்கை போய் விட்டது சேனாதிபதி. என் மகளுக்கு நானே எமனாகி விடுவேனோ என்று கவலையாக இருக்கிறது. மகளையும் இழந்து முட்டாளான மகனையும் இழந்து அனாதையாகத் திரியப் போகிறேனோ என்னவோ?” என்றான்.

“மகாராஜா! உங்களுக்கு ஓர் இன்ப அதிர்ச்சியை தருவதற்காகவே நான் காத்திருக்கிறேன்” என்றார் சேனாதிபதி.

“அது உங்களுக்கு வழக்கமாகி விட்ட ஒன்று. ஏற்கனவே நான் எதிர்பார்க்காத இன்ப அதிர்ச்சிகளைத் தந்திருக்கிறீர்கள். அதை விடவா பெரிய அதிர்ச்சி இருக்கிறது?”

“ஆம் மகாராஜா. அது உங்களுக்கு மட்டுமல்ல. மகாராணிக்கும் அவ்வாறே இருக்கும். எனக்கும் இந்த நாட்டு மக்களுக்கும் இன்ப அதிர்ச்சியாக இருக்கும்.”

“நாட்டு மக்களுக்குமா?”

“ஆம் மகாராஜா.”

“உடனே சொல்லுங்கள்.”

சொன்னார் சேனாதிபதி.

என்றைக்கும் அடைந்திராத ஆனந்தத்தை அடைந்தான் மன்னன் விட்டலராயன்.





மதத்தை நாம் விருப்பமில்லாதவர்களிடம் கட்டாயமாகத் திணிக்கும் போது அவர்களின் நிறம் தான் மாறுமே தவிர மனம் மாறாது
– விட்டலராயன்




இளவரசன் நரசிம்மனைப் பற்றிய விவரங்களைத்தான் சொன்னார் சேனாதிபதி.

அசந்து போனான் மன்னன்.

"இதை நான் எதிர்பார்க்கவில்லை சேனாதிபதி. மொட்டைப் பாறையில் விதை முளைக்கும் என்று யாராவது எதிர்பார்க்க முடியுமா?" என்று கேட்டான் மன்னன்.

சேனாதிபதி எதையும் பேசவில்லை.

"எதிரிகளை வெற்றி கொண்ட போது கூட அடையாத மகிழ்ச்சியை இப்போது நான் அடைகிறேன் சேனாதிபதி. நீங்களும் நானுமாகச் சேர்ந்து பெற்ற வெற்றிகள் எல்லாம் வெற்றிடம் போலாகி விட்டன" என்றான் மன்னன்.

சேனாதிபதி எதையும் பேசவில்லை.

"தந்தை சொல் மிக்க மந்திரமில்லை என்பார்கள். நரசிம்மனுக்குப் பாட்டனாரது சொற்கள் மந்திரமாகியிருக்கிறது. அவனுக்குச் சொன்ன அறிவுரையை எனக்கு என் தந்தை கூறியதில்லை. அவர்தான் எத்தகையவர்? அவனுக்குத்தான் எத்தனை பாக்கியம்?" என்றான் மன்னன்.

சேனாதிபதி எதையும் பேசவில்லை.

"இவனா என் மகன் என்று நினைத்திருந்தேன் வெறுப்பாய். இன்றைக்கு இவனா என் மகன் என்று நினைக்கிறேன் வியப்பாய். இது எப்படிச் சாத்தியம் சேனாதிபதி?" என்று கேட்டான் மன்னன்.

"மகாராஜா! தெய்வம் நினைத்தால் எதுதான் சாத்தியமில்லை? தங்களால் ஆகக் கூடிய செயல் எதுவுமில்லை என்று பெரியோர்கள் நினைத்தார்கள். நம்மை தெய்வத்திற்கு அர்ப்பணித்து விட்டால் அது நம்மைக் கவனித்துக் கொள்ளும் என்று நினைத்தார்கள். அது தான் எங்கேயும் எப்போதும்

நடக்கிறது. இதைப் புரிந்து கொண்டவர்கள் நிம்மதியாக இருக்கிறார்கள். புரிந்து கொள்ளாதவர்கள் அதை இழந்து கவலைப்படுகிறார்கள்" என்றார் சேனாதிபதி.

"சத்ய வார்த்தைகள் சேனாதிபதி" என்று பாராட்டிய மன்னன் சேனாதிபதியின் வார்த்தைகளையும் ஜெயதேவரின் வார்த்தைகளையும் ஒப்பிட்டுப் பார்த்தான். ஒன்று மலையாகவும் மற்றொன்று மடுவாகவும் காட்சியளித்தது அவனுக்கு.

"நான் கூடச் சிறிய நாடுகளைத் தான் வென்றேன். நரசிம்மனோ புலியின் இருப்பிடத்திற்கே சென்று திரும்பியிருக்கிறான். என்னை வெட்கப்பட வைத்திருக்கிறான்" என்றான்.

"புலியை வீழ்த்தியவர்கள் தானே ஹொய்சளர்கள்? இதில் ஆச்சரியம் எதுவும் இல்லை. அதோடு இளவரசர் இங்கே மீண்டு வர சாளுக்கிய மன்னர் விக்கிரமாதித்தரின் பெருந்தன்மையும் முக்கிய காரணம்" என்றார் சேனாதிபதி.

"நிச்சயமாக. அதில் மறுப்பதற்கு எதுவும் இல்லை. சேனாதிபதி! நான் சாளுக்கியர் ஆதிக்கத்திலிருந்து விடுபட விரும்பினேன். ஹொய்சள சாம்ராஜ்யத்தை உருவாக்க விழைந்தேன். ஆனால் விக்கிரமாதித்தர் மீதான மரியாதை எப்போதுமே குறைந்ததில்லை. அவர் மிகப் பெரிய வீரர். பராக்கிரம சாலி. சோழர்கள் என்னும் மாமலையோடு இடைவிடாமல் மல்யுத்தம் புரிந்த தீரர். வீரமும் வைராக்கியமும் நிறைந்த சீலர். இப்போது என்னால் ஏறெடுத்துப் பார்க்க முடியாத முகம் ஒன்று உண்டென்றால் அது விக்கிரமாதித்தரின் வீரத்திருமுகம்தான். அவருக்கு எதிராக நான் எடுத்திருக்கும் படையெடுப்பும் வெற்றிகளும் என்னைக் கடைசி வரை உறுத்திக் கொண்டே இருக்கும்" என்றான் மன்னன்.

"உறுத்தல் எதுவும் தேவையில்லை மகாராஜா. ஆதிக்கத்திலிருந்து விடுபடுவது என்பது ஊழிக்காலத்திலிருந்து இருந்து வருகிறது. ஆதிக்கக்காரர்கள் கடைசி வரை ஆதிக்கர்களாகவும் அடிமைகள் கடைசி வரை அடிமைகளாகவும் இருப்பதென்பது எந்த நாட்டிலும் இயலாத காரியம். இவ்விரண்டு பிரிவும் முரண்படுவது தான் எங்கேயும் வரலாறாக இருக்கிறது. அதை விடுங்கள் மகாராஜா. நாம் முக்கால் வாசி தூரத்திற்குப் பயணித்து விட்டோம். மீதமுள்ள கால்வாசி தூரத்தையும் கடப்பது தான் நமது இலட்சியமாக இருக்கப் போகிறது. வந்த வழியே திரும்பிப் போய் விடப்போவதில்லை" என்று சொன்ன சேனாதிபதி "இளவரசரின் முக்கிய விருப்பத்தை மறுக்காமல் நிறைவேற்ற வேண்டும். இந்த விஷயத்தில் உங்களிடம் பேசவே அவர் தயங்குகிறார். வெட்கப்படுகிறார்" என்றார்.

"திருமண விஷயம் தானே? சேனாதிபதி! அவனது போக்கு முட்டாள்தனமாக இருந்ததால் அவனது திருமணம் பற்றியெல்லாம் நான் யோசிக்க முற்படவில்லை. பட்டு போன மரத்திற்குக் காயெதற்கு கனியெதற்கு என்று இருந்து விட்டேன். இப்போது பட்டுப் போன மரமல்ல பத்தரை மாற்றுத் தங்கம் என்பது தெரிந்து விட்ட பிறகு திருமணத்தைப் பற்றிப் பேச வேண்டியதுதான். இதில் எனக்கொரு யோசனை இருக்கிறது."

"சொல்லுங்கள் மகாராஜா."

"நாம் ஹொய்சள சாம்ராஜ்யத்தை அமைப்பது திண்ணம். சாளுக்கியரின் பலம் வெகுவாகக் குறைந்து விட்டது என்பதும் உண்மை. ஆகவே எதிர்காலத்தில் ஹொய்சளர்களுக்குச் சவாலாக இருக்கப் போகிறவர்கள் சோழர்கள்தான். தென்னாடு என்றாலே சோழ நாடு என்று சொல்லத் தக்க அளவில் மகா சமுத்திரமாக வியாபித்திருப்பது அந்நாடு. சோழ சக்தி மகா சக்தி என்பதை மறுப்பதற்கில்லை. அவர்களை எதிர்ப்பது என்பதோ எதிர்த்து வந்தால் மதமதர்த்து நின்று வெற்றி பெறுவது என்பதோ கடினமான காரியம். சோழர்களோடு பகைமையை வளர்த்துக் கொள்வதை விட உறவை வளர்த்துக் கொள்வதே உகந்ததாக இருக்கும் என்பது என் கருத்து. அந்த உறவு நிலைக்க வேண்டுமானால் திருமணவினை தான் சரியாக இருக்கும். நரசிம்மனை சோழர்குல இளவரசிக்கு திருமணம் செய்து கொடுத்து விட்டால் நட்பும் உறவும் திடப்படும்."

"மகாராஜா! உங்களுக்குத் தெரியாததல்ல. நட்பு, உறவு என்பதெல்லாம் அரசியலில் நிரந்தரமானவை அல்ல. அரசியலுக்காகத்தான் உறவுகள் வருமே தவிர உறவுகளுக்காக அரசியல் இருப்பதில்லை. ஆதாயம் தேவைப்படும் போது உறவும் நட்பும் நிறம் மாறும். திசை மாறும். இன்றைய நிலையில் சோழர்கள் மகாசக்திதான். ஆனாலும் அந்நிலை நிரந்தரமல்ல. சோழர்கள் ஒரு காலத்தில் பல்லவர்களுக்கு அடங்கியச் சிற்றரசர்களாக இருந்தார்கள். நாமே கூட அப்படி இருந்து தானே இன்று உயர்ந்திருக்கிறோம். ஆகவே சோழர்களின் தற்போதைய நிலையை எண்ணித் தயங்க வேண்டாம். அதோடு திருமண வினைகளால் பிணைப்புண்ட உறவுகள் கூட பல சந்தர்ப்பங்களில் விரோதத்திற்கு வழி வகுத்திருக்கின்றன. இளவரசன் உங்கள் கண்களில் முட்டாளாகத் தெரிந்திருக்கிறாரே தவிர அறிவாளியாகத்தான் இருந்திருக்கிறார். ஆகவே அவரது விருப்பத்தை மீறி அரசியல் சதுரங்கத்தில் இழுத்து விட்டால் அவர் மிகவும் வேதனைப் படுவார். அதோடு அவர் விரும்பும் பெண்ணான மாளவிகா வாய்மையாளரும் நேர்மையாளருமான

அமாத்யரின் மகள். இளவரசர் கல்யாணபுரத்தில் இருந்த போது அவளது ஆதரவு தான் உதவியிருக்கிறது. அவளும் அவரைப் பூரணமாக விரும்புகிறாள். அவர்களைப் பிரிப்பது விவேகமானதாக இருக்காது. இளவரசர் இப்போது தான் வெளிப்படையாக மலர்ந்திருக்கிறார். ஹொய்சளரின் எதிர்காலம் அவர். அதை நிரூபிக்கவும் செய்திருக்கிறார். எனவே அவரது விருப்பத்தை நிறைவேற்றுங்கள்” என்றார் சேனாதிபதி.

“மகனின் விருப்பத்திற்கு தடை போடும் எண்ணம் எனக்கில்லை சேனாதிபதி. எனது எண்ணம் எப்படி ஓடியது என்பதைத்தான் சொன்னேன். மற்றபடி அவன் விரும்பும் மாளவிகாவையே அவன் மணந்து கொள்ளட்டும். எனக்கு இரண்டு நாட்கள் அவகாசம் கொடுங்கள். நரசிம்மன் திருமண விஷயம் மட்டுமல்ல. பல விஷயங்களை உங்களோடு பேசி முடிவெடுக்க வேண்டும்” என்றான் மன்னன்.

“அப்படியே ஆகட்டும்” என்றார் சேனாதிபதி.

தன் மகன் நரசிம்மன் நல்லவனாயும், வல்லவனாயும், நற்பெயரை நல்கக் கூடியவனாயும், விவேகியாயும், வீரனுமாய் வெளிப்பட்டது விட்டலராயனுக்குப் பெரும் ஆறுதலாக இருந்தது.

பிஞ்சியிலேயே வெந்து விழக் கூடியவனாய் கருதப்பட்ட புதல்வன் தன்னையும் விஞ்சி நிற்கக் கூடியவனாக விளங்கியது அவனுக்குப் பெருமிதமாக இருந்தது.

ஆதிக்கத்தை எதிர்த்துச் சாதிக்க முற்பட்ட போது எதைச் சாதித்தாலும் அந்த முட்டாள் தனமான மகன் இருக்கும் போது பயனற்றுத் தானே போகும் என்றும், விழலுக்கு இறைத்த நீராகத் தானே போகும் என்றும் கலங்கிக் கொண்டிருந்தான் மன்னன். தனது வெற்றிகள் தனது மகனால் காப்பாற்றப்படாமல் போனால் வெற்றி பெற்றதெல்லாம் வெற்றிடமாகி விடுமே என்று அசதியுற்றிருந்தான். அந்த கலக்கமும் அசதியும் தற்போது அகன்று விட்டதால் தனது மகனை உள்ளுக்குள்ளேயே பாராட்டிப் பரவசப்பட்டான்.

அதே சமயம் தனது கண்களில் ஒன்றான நரசிம்மன் ஒளி பெற்று விட்ட நிலையில் மறு கண்ணான மகள் தர்மதேவி இருளில் கிடந்தது அவனை வாட்டியது. இரண்டாண்டு காலமாக ஆற்றை ஆழப்படுத்துவதாகச் சொல்லி விட்டு இருந்த நீரையும் வறண்டு போகச் செய்தது மாதிரி தன் மகளைச் சீர்குலைத்திருந்த ஜெயதேவர் மீதும் நீலகேசியின் மீதும் அவனுக்குப் பெருங்கோபம் மூண்டது.

சமணசமயத்தின் மிக உயர்ந்த பதவியிலும் நிலையிலும் இருந்த அவ்விரு துறவிகளின் இரண்டாண்டு கால காரியங்களும் பரிகாரங்களும் வெளியே தெரிய ஆரம்பித்தால் அது சமண மதத்திற்கே ஒட்டு மொத்தமான கெட்ட பெயரைத் தந்து விடும் என்றும் அந்த மதத்தைச் சேர்ந்தவர்களே அந்த மதத்தை விட்டு விலகி விடுவார்கள் என்றும், அப்படியெல்லாம் நடந்தால் சமண மதத்தை ஆதரித்த மன்னன் என்ற முறையில் தனக்கும் அவப்பெயர் வந்து சேரும் என்று கருதினான்.

மகள் விஷயத்தில் ஒரு முடிவுக்கு வந்த அவன் மறுநாள் வேலாபுரத்திற்குச் சென்றான். அங்கு சென்றதும் அவனது கண்களில் ஜெயஸ்தம்பமே தென்பட்டது.

அதன் உச்சியில் முன்பு சாளுக்கியரின் வராகக் கொடி பறந்தது. தற்போது ஹொய்சளர் கொடி பறந்து கொண்டிருந்தது.

அதே சமயம் அந்த வெற்றித் தூணின் உச்சியில் சிவந்த தலையைக் கொண்ட ஆந்தையொன்று அமர்ந்து கொண்டிருந்தது.

அந்தப் பறவையின் வரவு தனக்குக் கேடு என்று மாந்தரீகரும் சமணத்துறவிகளும் கூறியது நினைவிற்கு வந்தது.

சிரித்துக் கொண்டே புரவியில் சென்ற அவனை மக்கள் ஆரவாரம் செய்து வரவேற்றார்கள். “மகாராஜா! மகாராஜா!” என்று குரல் கொடுத்தார்கள். சிலர் மலர்களை அவன் மீது வீசி கைகளைத் தட்டினார்கள். எல்லோரிடமும் குழந்தைக் குதூகலம் நிரம்பியிருந்ததைக் கண்டு மகிழ்ச்சியுற்ற மன்னன் அவர்களை நோக்கி கைகளை ஆட்டிய வண்ணம் சென்றான்.

மக்களின் மகிழ்ச்சிக்காகவே நகரின் பல தெருக்களில் வலம் வந்தான். ஊரின் மையப் பகுதியில் கட்டப்பட்டு வந்த பெருமாள் கோயிலைக் கண்டதும் கீழே இறங்கி சிற்பிகளிடம் பேசினான்.

“இந்த ஆலயம் இதுவரை யாரும் கண்டிராத ஆலயமாகத் திகழ வேண்டும். காஞ்சியில் பல்லவர்கள் கட்டிய ஆலயம் போல இது இருக்கக் கூடாது. தஞ்சையில் சோழர்கள் கட்டிய ஆலயத்தைப் போல இது இருக்கக் கூடாது. இந்த ஆலயத்தைக் காண்பவர்கள் இது அது போல இருக்கிறது. அது இது போல இருக்கிறது என்றெல்லாம் சொல்லக் கூடாது. இது போன்ற ஆலயம் எங்கும் இல்லை என்று எல்லோரும் சொல்ல வேண்டும். இது ஹொய்சளர்கள் நிர்மாணித்த ஆலயம் என்று புகழ வேண்டும். நான் இதுவரை பல்லவர்கள் ஆலயங்களையோ சோழர்கள் ஆலயங்களையோ பார்த்ததில்லை. ஒரு வேளை பார்த்திருந்தால் அவற்றைப் போல இந்த ஆலயமும் அமைய வேண்டும் என்று

சொல்லியிருப்பேன். பார்க்காத காரணத்தால் என் கற்பனையில் விரிந்த வடிவத்தையும் நுட்பங்களையும் கூறியிருக்கிறேன். அதில் குறையில்லாத விதத்தில் ஆலயத்தைத் அமைத்து தருவது உங்கள் பொறுப்பு” என்றான்.

“மகாராஜா! தாங்கள் பல்லவ மன்னர்கள் எழுப்பிய ஆலயங்களையும் சோழர்கள் எழுப்பிய ஆலயங்களையும் பார்க்காதவராக இருக்கலாம். ஆனால் சிற்பிகளாகிய நாங்கள் காஞ்சியிலும், மாமல்லபுரத்திலும், தஞ்சையிலும், கங்கை கொண்ட சோழபுரத்திலும் கட்டப்பட்ட ஆலயங்களையும் அவற்றின் நுட்பங்களையும் கண்டிருக்கிறோம். வடபாரதத்து ஆலயங்களையும் பார்த்திருக்கிறோம். ஆகவே அந்த ஆலயங்களின் சாயல்கள் சிறிதும் இல்லாதவாறும், ஹொய்சளர்களின் சிற்ப விசித்திரம் என்று பேசுகிறபடியும் இந்த ஆலயத்தை அமைப்பதற்கு எங்களை அர்ப்பணித்திருக்கிறோம். தங்கள் விருப்பப்படியே ஆலயம் அமையும்” என்றார் தலைமைச்சிற்பி.

“உங்கள் வார்த்தைகள் என்னைப் பரவசப்படுத்துகின்றன ஐயா. மன்னர்களாகிய நாங்கள் எங்கே ஆண்டாலும் சரி, எவ்வளவு காலம் ஆண்டாலும் சரி அவற்றில் எங்களுக்குத் திருப்தி வருவதில்லை. பல்லவ மாமன்னர்கள் வெகு சிறப்பாக ஆட்சி புரிந்தார்கள். ஆனால் அவர்களின் ஆட்சி முடிந்து விட்டது. ஆனால் அவர்கள் எழுப்பிய ஆலயங்களும் அருஞ் சிற்பங்களும் இன்றைக்கும் வாழ்ந்து கொண்டிருக்கின்றன. பக்தர்கள் மட்டுமின்றி பல நாட்டவர்களும் ஈர்க்கப் பட்டிருக்கிறார்கள். சோழர்கள் எங்கள் பகைவராக இருந்தாலும் ராஜ ராஜ சோழர் தஞ்சையில் எழுப்பிய ஆலயத்தையும் ராஜேந்திர சோழர் கங்காபுரியில் எழுப்பிய கற்றளியையும் எண்ணிப் பரவசப்படுகிறோம். அரசியலைக் கடந்து, பகையைக் கடந்து இவை ரசிக்கப்படுகின்றன. மதிக்கப்படுகின்றன. எனவே என் ஆட்சியைக் காட்டிலும் இந்த ஆலயத்தையே அதிகமாக மதிக்கிறேன். துதிக்கிறேன். இது போன்று வேறு சில ஆலயங்களையும் அமைக்க உத்தேசித்திருக்கிறேன். அவை என் ஆயுள் காலத்திற்குள் முடியாமல் போகலாம். ஆனால் நிச்சயமாக ஆரம்பித்து வைக்கப்படும். மகாபுருஷர்கள் வருவார்கள். சம்ப்ரோஷணம் செய்வார்கள். விக்ரகப் பிரதிஷ்டை செய்வார்கள். நான் போனாலும் என் மகன் நரசிம்மன் இருப்பான். அவனை நானாகவே கருதி என் லட்சியங்களை நீங்கள் நிறைவேற்றித் தரவேண்டும்” என்றான் மன்னன்.

“தங்களிடம் ஒரு சந்தேகத்தைக் கேட்கலாமா மகாராஜா?”

“தாராளமாகக் கேட்கலாம்”

"தாங்கள் சமணமதத்தைச் சேர்ந்தவர் என்று கேள்விப் பட்டிருக்கிறோம். தங்கள் பாட்டனார் காலத்தில் ஆரிய நந்தி மகாகுருவாய் இருந்தாரென்றும் வடநாடு சென்ற போது நிர்வாணம் எய்தி விட்டதால் ஜெயதேவர் மகாகுருவானார் என்றும் கேள்விப்பட்டிருக்கிறோம். ஜெயதேவர் மற்றும் நீலகேசி ஆகிய துறவியருக்குத் தாங்கள் சீடர் என்றும் சிரவணபெலகுலாவில் உள்ள கோமடீஸ்வரரை தாங்கள் அடிக்கடி ஆத்மார்த்தமாக வழிபட்டு வருவதாகவும் கேள்விப் பட்டிருக்கிறோம். தங்கள் ராணியாரின் குலதெய்வம் சமண தேவியான வாசந்திகா என்பதையும் அவர் துவார சமுத்திரத்தில் சமணரது பள்ளியினை நிர்மாணித்தார் என்றும் கேள்வி பட்டிருக்கிறோம். நிலைமை இவ்வாறு இருக்கும் போது தாங்கள் திருமாலுக்கு ஆலயங்களை எழுப்புவது வியப்பாக இருக்கிறது."

"உங்கள் வியப்பு சரியானது தான். என்னைப் பொறுத்தவரை என் மதத்தை என் நாட்டு மக்கள் மீது திணிக்க மாட்டேன். சமணமதத்தின் மீது சமண குருமார்கள் மீதும் பெரும் மதிப்பை வைத்திருப்பவன் நான். ஆயினும் கூட நான் ஆட்சிக்கு வந்ததிலிருந்து ஒருவரைக் கூடக் கட்டாயப்படுத்தி சமண மதத்தில் சேரும்படிச் செய்ததில்லை. கட்டாய மதமாற்றத்தைச் செய்யக் கூடாது என்று எல்லா மதத்தவர்களுக்கும் கட்டளை யிட்டிருக்கிறேன். மக்களுக்கு மதவிஷயத்தில் பூரண சுதந்திரத்தை வழங்கியிருக்கிறேன். மதத்தை நாம் விருப்பமில்லாதவர்களிடம் கட்டாயமாகத் திணிக்கும் போது அவர்களது நிறம் தான் மாறுமே தவிர மனம் மாறாது. மதத்தோடு சேர்ந்து மனமும் முழுமையாக மாறினால்தான் அது இதமாக இருக்கும். இன்பமாக இருக்கும். அதோடு என் நாடு சமணர்கள் மட்டுமே வாழும் நாடு அல்ல. பல மதத்தவர்கள் வாழ்கிறார்கள். எல்லோரையும் நான் நேசிக்கிறேன். அவர்கள் விரும்பும் தெய்வங்களுக்குரிய ஆலயங்களை நிர்மாணிக்கிறேன்" என்று சொன்ன மன்னன் "எனக்குள் ஏதோ ஒரு மாற்றம் உண்டாவதை உணர்கிறேன். அது ஏன் எதற்காக என்று எனக்கு விளங்கவில்லை. காலம் தான் பதில் சொல்ல வேண்டும்" என்று கூறிவிட்டு அங்கேயிருந்து புறப்பட்டான்.

மக்களையும் சிற்பிகளையும் சந்தித்து விட்டுப் புறப்படுவதற்கு இரவு நேரம் ஆகிவிட்டது.

நேராக தாசி துளசியின் வீட்டிற்குச் சென்றான். இரண்டு வருடங்களுக்கு முன் சென்றபோது எப்படி இருந்ததோ அப்படியே இருந்தது அவளது இல்லம். அதே சுடுகாட்டுப் பகுதி.

“தவசிகள் மாறினாலும் மாறலாம். இந்தத் துளசி மட்டும் மாறவே மாட்டாள். வேறு பகுதிக்கு வந்து விடு என்று பலமுறை சொல்லிவிட்டேன். முடியாது என்று பிடிவாதமாக இருக்கிறாள். தத்துவங்களை முத்துக்களைப் போல உதிர்க்கிறாள்” என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்டு இல்லத்தின் கதவைத் தட்டினான் மன்னன்.

துளசி கதவைத் திறந்தாள்.

மன்னனைக் கண்டதும் அவளது முகத்தில் பரவசம்.

“தெய்வமே வந்தது போல் வந்திருக்கிறீர்கள். மகாராஜா! இந்த இல்லத்தை இரண்டு ஆண்டுகளாக வாட்டி வைத்திருக்க தங்களுக்கு எப்படி மனம் வந்தது? தினம் தினம் இந்த வாசல் உங்களை எதிர்பார்த்து எதிர்பார்த்து ஏமாந்து போகிறது. வாருங்கள் மகாராஜா. இன்றைக்காவது மனது வைத்து வந்தீர்கள். இந்த இல்லத்தின் வாசல்களும் வாசல்களோடு வாழும் கதவுகளும் சுவர்களும் உங்களை வாழ்த்தும். வாருங்கள் மகாராஜா” என்றாள் துளசி.

உள்ளே மன்னன் நுழைந்தான் எதுவும் பேசாமல்.

“உள்ளே வந்து அமர்ந்து மன்னனை உற்றுப் பார்த்து விட்டு “மகாராஜா! வர்ணம் கலைந்து போன ஓவியம் போல் வாடியிருக்கிறீர்கள்? போர், அலைச்சல் என்று இரண்டாண்டு களைக் கழித்து விட்டீர்கள். ஏன் அப்படி? அவ்வப்போது இங்கே வந்திருக்கக் கூடாதா? கால்களையாவது பிடித்து விட்டிருப்பேனே?” என்று விசாரித்தாள் வினயமாக.

மன்னன் பேசவில்லை.

“களைப்பாக இருக்கிறீர்கள். நீராட வாருங்கள்” என்று கூறி கூட்டிச் சென்றாள்.

நீராடி தெம்பைப் பெற்று உணவையும் அருந்திய மன்னன் “துளசி! இங்கே நான் பெறும் ஆறுதலை-நிம்மதியை எங்கேயும் பெறமுடிவதில்லை. என் தேவி சாந்தலை மகாபதி விரதை. அவளிடம் கூட நான் அமைதியடைய முடியவில்லை. சொல்லப் போனால் அவளைத்தான் நான் தேற்ற வேண்டியிருக்கிறது” என்றான்.

“அதனால் தானே நான் உங்களை அடிக்கடி வந்து போகும் படிச் சொல்கிறேன். தொடர்ந்து இரண்டாண்டுகளாகப் போரிலேயே இருந்தால் உடல் என்னத்திற்காகும்? மனத்திற்குத் தான் அமைதி கிடைக்குமா?” என்றாள் துளசி.

"துளசி! பறவைகள் கூட முதலில் கட்டிய கூட்டில் மறுபடியும் வசிப்பதில்லை. நீ மட்டும் ஏன் வாசஸ்தலத்தை மாற்ற மறுக்கிறாய்?" என்று கேட்டான் மன்னன்.

"நான் பறவையில்லை மகாராஜா. அது தான் காரணம்" என்றாள் துளசி.

"நீ முடிவெடுத்து விட்டால் அதை உன் தத்துவ முத்துக்கள் காக்கின்றன" என்று கூறிய மன்னன் "இரண்டாண்டுகளுக்கு முன் வந்த போது சிவந்ததலை ஆந்தையைப் பற்றி உன்னிடம் சொன்னேன். மன்னனுக்குக் கேடு வரும் என்று பலரும் கூறுவதாகச் சொன்னேன். மன்னனுக்குக் கேடு என்றால் அது உங்களுக்கு என்று ஏன் எண்ண வேண்டும்? கேடு சாளுக்கிய மன்னனுக்கு இருக்கலாம் அல்லவா என்று கேட்டாய். நீ சொன்னது தான் நடந்திருக்கிறது. பதினெட்டு சாளுக்கிய நாடுகளை வென்று என் ஆதிக்கத்திற்குக் கொண்டு வந்திருக்கிறேன். நீ கூறியபடி கேடு எனக்கு வரவில்லை. சாளுக்கியருக்குத்தான் வந்திருக்கிறது" என்று சொன்னான்.

அவனே பேச்சைத் தொடர்ந்து "எனக்கு உன் யோசனைகள் தேவைப்படுகிறது துளசி. சொல்வாயா?" என்று கேட்டான்.

"இறைவனின் சங்கல்பம் அதுவாக இருக்குமானால் நிச்சயமாகச் சொல்கிறேன் மகாராஜா."

சொன்னான் மன்னன்.

யோசனைகளைச் சொன்னாள் துளசி.

மன்னன் மகிழ்ந்தான்.





உளகமானது நூறு சதவிகித உண்மை என்று உறுதியாகத் தெரிந்திருந்தாலும் சம்பந்தப் பட்டவர்களிடம் உறுதி செய்து கொள்வது தான் உறுத்தல் இல்லாத நடைமுறையாக இருக்கும் – விட்டலராயன்




“இப்போது கூட வேலாபுரத்தின் வெற்றித் தூணின் உச்சியில் சிவப்புத் தலை ஆந்தை அமர்ந்திருந்ததைப் பார்த்தேன்” என்றான் மன்னன் விட்டலராயன்.

“பறவைகளும் விலங்குகளும் மனிதர்களின் வழியில் குறுக்கிடுவதில்லை மகாராஜா. தத்தம் இயல்புகளுக்கேற்ப அவை வாழுகின்றன. மனிதன் தான் அவற்றின் வாழ்வில் குறுக்கிடுகிறான். அவற்றை வேட்டையாடி உண்கிறான். கூண்டுகளில் பிடித்து வைத்து ரசிக்கிறான். இது போதாதென்று தனது குணக்கேடுகளுக்கு அவற்றைக் காரணமாகச் சொல்லிக் கொள்கிறான். சிவந்த தலையைக் கொண்ட ஆந்தை ஒரு பறவை. ஆண்டவனால் படைக்கப்பட்ட பறவைகளில் அதுவும் ஒன்று. அவ்வளவுதான். அது வந்து தூணின் மீது அமர்வதற்கும் நாட்டின் சுபிட்சத்திற்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது. நாமாக எதையாவது சொல்லி பயமுறுத்துகிறோம்” என்றாள் துளசி.

“சரியாகத்தான் சொன்னாய் துளசி. நான் கேட்கும் விஷயத்திற்கும் பதில் சொல் பார்க்கலாம். ஒரு பேதைப் பெண்ணின் கனவில் தெய்வம் வந்து மிரட்டுகிறதாம். ஆகவே அந்த தெய்வத்திற்குக் கட்டுப்பட்டு வரும் ஆலயம் நிறுத்தப் பட்டு இடிக்கப்பட வேண்டுமாம். என்ன சொல்கிறாய்?”

“மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சு போட முயல்வது போல் இருக்கிறது மகாராஜா. கெட்ட கனவு கண்டு விழித்துக் கொள்பவர்கள் தெய்வத் திருவுருவை எண்ணிக் கொண்டு பயம் நீங்கப் பெறுவார்கள். அது தான் எங்கேயும் நடப்பது. தெய்வம் கனவில் தோன்றி யாரையும் மிரட்டுவதில்லை. ஒருவேளை அப்படி நடந்திருந்தால் தெய்வத்திற்கான ஆலயத்தை இடிப்பது பரிகாரமாகாது. பாவமாகத்தான் இருக்கும். இவ்வாறு சொன்னது யார் மகாராஜா?”

“நான் மிகவும் மதித்துப் போற்றும் ஆச்சார்யர் ஜெயதேவர்.”

“சமண ஆச்சார்யராக இருந்தாலும் அவ்வாறு சொல்லி யிருக்கக்கூடாது மகாராஜா. இதை அவர் எதற்காகச் சொன்னார்?”

“துளசி! என் மகளைப் பற்றி உனக்கு ஏற்கனவே சொல்லி யிருக்கிறேன். அவளது மனநிலையை சரிசெய்யும் பொறுப்பை ஜெயதேவரிடம் ஒப்படைத்து இரண்டு ஆண்டுகளாகி விட்டன. அவர் இப்போது சொல்லும் பரிகாரம்தான் இது. இங்கே வேலாபுரத்தில் நிர்மாணித்து வரும் கேசவப் பெருமாளுக்கான ஆலயத்தை இடித்துத் தள்ள வேண்டும் என்கிறார்.”

“அந்த ஆலயத்தை இடிக்க அவர் விரும்பலாம். நீங்கள் விரும்பலாம். சிற்பிகளும் மக்களும் விரும்புவார்களா? இடிப்பதற்கு அனுமதிப்பார்களா?”

“என் மகள் குணமாக வேண்டும் என்றால் இதுதான் வழி” என்கிறார்.

“மகாராஜா! ஆலயத்தை இடிக்கும்படி ஆச்சார்யர் கூறியதற்கு ஏதோ உள் நோக்கம் இருக்க வேண்டும். அதற்கும் உங்கள் மகளுக்கும் எந்தச் சம்பந்தமும் இருக்க முடியாது.”

“எனக்குப் புரிந்து விட்டது துளசி. மகளின் விஷயத்தை நான் பார்த்து கொள்கிறேன்” என்று சொன்ன மன்னன் “ஒரு புறம் செடி வாடுகிறது. மறுபுறம் கற்தரையில் விதை முளைத்திருக்கிறது” என்று சொல்லி நரசிம்மனைப் பற்றிய விவகாரத்தைச் சொன்னான்.

“இது முன்னேற்றம் தானே மகாராஜா? தங்கள் புதல்வர் மீதிருந்தச் சங்கடங்கள் விலகி சந்தோஷங்கள் வந்துள்ளனவே?”

“உண்மைதான் துளசி. இதைவிட பெரிய மகிழ்ச்சி எனக்கிருக்க முடியாது. அத்தி மரம் பூப்பது தெரியாமல் காய்ப்பது போல விவேகியாய் வெளிப்பட்டிருக்கிறான் நரசிம்மன். சாளுக்கிய நாட்டிலிருந்து ஒரு பெண்ணை அழைத்துக் கொண்டு வந்து அவளைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்கிறான்?”

“இதிலென்ன பிரச்சனை?”

“சாளுக்கிய நாடு நமது எதிரி நாடு. அங்கிருந்து வந்த பெண்ணை சாளுக்கிய மன்னனும் தடை செய்யாமல் என் மகனோடு அனுப்பி வைத்திருக்கிறான். எனக்குச் சந்தேகமாக இருக்கிறது.”

“எதற்குச் சந்தேகம்?”

“அந்தப் பெண் சாளுக்கிய உளவாளியாக இருப்பாளோ என்ற சந்தேகம் தான்.”

"வரவேண்டிய சந்தேகம்தான் மகாராஜா. கவலையை விடுங்கள். அந்தப் பெண்ணை நான் சோதித்துச் சொல்கிறேன்."

சிறிது நேரம் வரை மௌனமாக இருந்த மன்னன் "உன்னோடு பேசும் போது தான் எனக்குத் தெளிவு பிறக்கிறது. நீ ஒரு பிரச்சனைக்குத் தீர்வு சொன்னால் பல பிரச்சனைகளுக்குத் தீர்வு வருகின்றன" என்றான்.

"மாற்றிப் பேசுகிறீர்கள் மகாராஜா. நீங்கள் வரும் வரை நான் கல்லாகத்தான் இருக்கிறேன். நீங்கள் வந்து உரசுவதால் தீர்வு என்னும் தீ உண்டாகிறது. தாங்கள் இல்லாவிட்டால் என்னிடம் எதுவும் இருப்பதில்லை" என்றாள் துளசி.

"துளசி! திறமை இருக்கும் இடத்தில் ஆணவம் இருக்கும். அடக்கம் இருக்கும் இடத்தில் திறமை இருக்காது. இதெல்லாம் மாறி திறமையும் அடக்கமும் சேர்ந்திருக்கும் இடம் எங்கேயோ தான் இருக்கிறது. நீ அப்படிப்பட்ட ஓர் இடம். ஏற்கனவே கூறியது போல் நீ பெண்களில் ஒரு ஞானி. உன்னைப் பொறுத்த வரை நீ பெருமைப்பட்டுக் கொள்வதற்குத்தான் நிறைய விஷயங்கள் உள்ளனவே தவிர குறைபட்டுக் கொள்ளக் கூடிய விஷயங்கள் குறைவுதான்" என்று சொன்ன மன்னன் "துளசி! என் மகன் நரசிம்மனும் அவன் விரும்பும் பெண் மாளவிகாவும் வேலாபுரத்தில்தான் இருக்கிறார்கள். துவார சமுத்திரத்திற்கு இன்னும் வரவில்லை. திருமணத்திற்கு எனது ஒப்புதல் கிடைத்தால்தான் வருவார்கள் போலிருக்கிறது. இதற்கிடையில் நீ அவளைச் சந்தித்துச் சோதித்தால் சரியாக இருக்கும். நான் விடியற்காலையில் இங்கிருந்து புறப்படுகிறேன்" என்று சொல்லி படுக்கையில் படுத்தான் மன்னன்.

தாசி அவனருகில் அமர்ந்து கால்களைப் பிடித்து விட்டாள்.



மறுநாள் துவாரசமுத்திரத்தை அடைந்த மன்னன் முதல் வேலையாகத் தன் மகளுக்கு மாந்தரீகம் செய்த மாந்தரீகனை அழைத்து வரச் சொன்னான்.

பேயே அஞ்சும் தோற்றத்தில் வந்து நின்ற மாந்தரீகனைக் கண்ட மன்னனுக்கு "இவனை தன் மகளிடம் அண்ட விட்டிருக்கக் கூடாது. மகள் இவன் முகத்தைக் கண்டு கூட அஞ்சி உறைந்து போயிருப்பாள்" என்று நினைத்துக் கொண்டான்.

"உமது பெயரென்ன?" என்று கேட்டான்.

"சுடுகாட்டு வாசன்" என்றான் மாந்தரீகன்.

“பொறுத்தமான பெயர்தான்” என்று சொல்லிக் கொண்ட மன்னன் “என் மகளின் கனவில் சங்கு சக்கரம் ஏந்திய உருவம் வந்து மிரட்டுவதாகச் சொன்னது நீதானா?” என்று கேட்டான்.

“இல்லை.”

“இல்லையா?”

“உங்கள் மகளிடம் பேசினேன். அவர் சொன்ன தகவல் தான் அது மகாராஜா.”

“அந்த உருவம் யார் என்று உமக்குத் தெரியுமா?”

“மகாவிஷ்ணு தான்.”

“அதை நீ நம்பினாயா?”

“மகாராஜா! தங்கள் புதல்வியாரின் உள் மனதிலிருந்து வந்த வார்த்தைகள் அவை. ஆழ் மனதிலிருந்து வந்த வார்த்தைகள் பொய்யாக இருப்பதில்லை.”

“ஆழ் மனதைப் பற்றி நான் கேட்கவில்லை. நீ நம்பினாயா என்று தான் கேட்டேன்.”

“ஆம் மகாராஜா.”

“நீ என்ன மதம்?”

“மாந்தரீகர்கள் பைசாச மதத்தைச் சேர்ந்தவர்கள்.”

“சுடுகாட்டு வாசா! நான் கேட்கும் கேள்விகளுக்கு நேரடியான பதிலைச் சொல். நீ பேசுவது மன்னனிடம் என்பதையும் நினைவில் வைத்துக் கொள்.”

“என் மதம் பைசாச மதம் தான் மகாராஜா.”

“உன் தெய்வம் எது?”

“எல்லா தெய்வங்களையும் நாங்கள் வணங்குவோம். நானும் தான்.”

“மகாவிஷ்ணு யார்?”

“தெய்வம்.”

“தெய்வம் வந்து மிரட்டுமா?”

“மகாராஜா! தங்கள் புதல்வியார் கூறியதைத்தான் நான் சொன்னேன்.”

“முட்டாள். நான் கேட்ட கேள்விக்கு நேரான பதிலைச் சொல்லா விட்டால் விசாரணையின்றி உன்னைக் கழுவேற்றுவேன். சொல். தெய்வம் வந்து மிரட்டுமா?”

“மிரட்டாது.”

“தெய்வம் மிரட்டியதாக தர்மதேவி கூறியபோது நம்பியதாகச் சொன்னாய். அதற்கென்ன அர்த்தம்?”

விழித்தான் மாந்தரீகன்.

மன்னனே தொடர்ந்தான்.

“தர்மதேவி அவ்வாறு சொன்னதும் நீ என்ன செய்தாய்?”

“ஆச்சார்யர் ஜெயதேவ மகாப் பிரபுவிடம் சொன்னேன்.”

“அவரிடம் நீ எதற்காகச் சொல்ல வேண்டும்? மாந்தரீக முறையில் தர்ம தேவியின் பயத்திற்குச் சிகிச்சையளிக்க வேண்டியது தானே?”

“என்னை இங்கே வரவழைத்தவர்கள் ஜெயதேவரும் நீலகேசியும்தான். ஆகவே அவர்களிடம் சொன்னேன்.”

“உன் கடமை நோயாளிக்குச் சிகிச்சையளிப்பதுதான். அதை நீ செய்யவில்லை. இது முதல் குற்றம்” என்று சொன்ன மன்னன், “ஜெயதேவர் என்ன சொன்னார்?” என்று கேட்டான்.

“அவர் நீலகேசி அடிகளாருடன் ஆலோசனை செய்தார். வேலாபுரத்தில் மகாவிஷ்ணு ஆலயத்தைத் தாங்கள் கட்டி வருவதுதான் அனைத்திற்கும் காரணம் என்றார். அந்த ஆலயத்தை மேற்கொண்டு கட்டாமல் நிறுத்தி விட்டு கட்டியதை இடிப்பதுதான் சரியான பரிகாரம் என்று சொன்னார். அதைத்தான் நான் மகாராணியாரிடம் தெரிவித்தேன். ஜெயதேவரும் தெரிவித்தார்.”

“என் மகளின் கனவில் மகாவிஷ்ணு வந்து மிரட்டினார் என்பதற்காக மகாவிஷ்ணுவிற்குக் கட்டப்படும் ஆலயத்தை இடிப்பது எப்படிப் பரிகாரமாகும்?”

“ஜெயதேவர் சொன்ன பரிகாரம் அது மகாராஜா”

“நீ யோசிக்க வில்லையா? உன் மூளை வேலை செய்ய வில்லையா? அதோடு ஜெயதேவர் எதற்காகப் பரிகாரம் சொல்ல வேண்டும்? தர்மதேவியிடம் பேசியவன் நீ. மாந்தரீகம் செய்தவன் நீ. நீதானே பரிகாரம் சொல்ல வேண்டும்? செய்ய வேண்டும்?”

“மகாகுரு ஜெயதேவரை மீறி நான் பரிகாரம் செய்ய முடியாது மகாராஜா.”

“முடியாது என்றால் உனக்கிங்கே என்ன வேலை? சிகிச்சை முக்கியமா? ஜெயதேவர் முக்கியமா? அதுவும் மன்னன் மகளுக்குச் சிகிச்சை அளிக்கும் விஷயத்தில் நீ அக்கறை காட்டவில்லை. அலட்சியம் காட்டியிருக்கிறாய். பெயருக்கு சிகிச்சை

செய்திருக்கிறாய். மொத்தத்தில் இரண்டாண்டுகளாக நீ வீணாக இருந்து கொண்டு சகல வசதிகளையும் அனுபவித்திருக்கிறாய். இது இரண்டாவது குற்றம்'' என்று சொன்ன மன்னன் சேவகர்களைப் பார்த்து "இந்த மாந்தரீகனைச் சிறையில் அடையுங்கள்'' என்றான்.

சேவகர்கள் வந்து மாந்தரீகனைக் கைது செய்தார்கள்.

அருகில் அமர்ந்திருந்த சேனாதிபதி பகாசூரர் மன்னனைப் பார்த்து "இவனை நீங்கள் விசாரிக்காமலேயே சிறையில் தள்ளியிருக்கலாம் மகாராஜா. இல்லாத ஒன்றுக்குச் சிகிச்சை செய்வதும் பரிகாரம் செய்வதும் நம்மோடு இருந்தே கெடுக்கும் நண்பர்களைப் போன்றவை'' என்றார்.

"இந்த மாந்தரீகன் ஆரம்பத்திலிருந்தே சுயமாகச் செயல்படவில்லை என்பது தான் எனது ஊகமாக இருந்தது சேனாதிபதி. ஊகமானது நூறு சதவிகித உண்மை என்று உறுதியாகத் தெரிந்திருந்தாலும் சம்பந்தப்பட்டவர்களிடம் விசாரித்து உறுதி செய்து கொள்வதுதான் உறுத்தல் இல்லாத நடைமுறையாக இருக்கும். இவனைத் தட்டிப் பார்த்த போது கொட்டிய வார்த்தைகள் நமது ஊகத்தை உறுதி செய்து விட்டன. எனது கவலையெல்லாம் மன்னன் மகளுக்கே இந்த கதி என்றால் சாதாரண மக்களின் கதி என்னவாக இருக்கும்? இந்த மாதிரியான மந்திரவாதிகள் என்னதான் துணிய மாட்டார்கள்?'' என்றான் மன்னன்.

"தங்கள் மகளுக்குச் சாதாரணமான வைத்தியர்களைக் கொண்டே வைத்தியம் செய்ய முயற்சித்திருக்கலாம் என்பது என் அபிப்ராயம். மன்னரது அந்தஸ்திற்கு ஏற்ப வைத்தியத்தின் நிலையை உயர்த்தியது தவறாகி விட்டது. இவர்களெல்லாம் சேர்ந்து என் மகளின் உபாதைகளை அதிகமாக்கி விட்டார்கள்.''

மன்னன் தாசி சொன்னதை நினைவுபடுத்திக் கொண்டு கேட்டான்.

"சேனாதிபதி! மன்னனின் மகளை இந்த கதிக்கு இவர்கள் ஆளாக்கியிருக்கிறார்கள் என்றால் இதற்கு அறியாமை காரணமாக இருக்க முடியாது. ஜெயதேவர், நீலகேசி ஆகியவர்கள் உயர்ந்த நிலையில் உள்ளவர்கள். ஒருவர் என் குருநாதர். மற்றொருவர் என் வழிகாட்டி. இவர்கள் இப்படியொரு காரியத்தை அலட்சியம் காரணமாகக் கூடச் செய்திருக்க மாட்டார்கள். ஏதோ உள் நோக்கம் இருக்கிறது என்று சந்தேகமாக இருக்கிறது.''

"தங்கள் மகளுக்கு அதிகபட்சமாக இவர்கள் விளைவிக்கக் கூடியது மரணம் தான். தங்கள் மகளை மரணத்திற்கு அழைத்துச்

சென்றால் இவர்களுக்கு என்ன ஆதாயம் இருக்க முடியும்? சொல்லப் போனால் அப்படியொரு நிலை உண்டானால் அது இவர்களுக்குப் பாதகமாகத்தானே இருக்கும்?”

“சேனாதிபதி. மகளைக் கொல்வது அவர்களது நோக்கமாக இருக்காது. அப்படியிருந்திருந்தால் இரண்டு வருடங்களாகக் காத்திருக்க வேண்டியதில்லை. இடையிலேயே மாய்த்திருப்பார்கள். அதை விட்டு விடுங்கள். அவர்கள் சொன்ன பரிகாரத்தைக் கருத்தில் கொண்டு யோசித்துப் பாருங்கள். மகளுக்காக நான் வேலாபுரத்தில் எழுப்பிக் கொண்டிருக்கும் ஆலயத்தை இடித்திருந்தால் என்ன ஆகியிருக்கும்? மக்கள் கொதித்து எழுந்திருப்பார்கள். என் மீது புழுதிவாரி தூற்றி யிருப்பார்கள். ஏன்? என்னை வேலை தீர்த்து விடவும் முயல்வார்கள். இல்லையா?”

“ஆம் மகாராஜா.”

“மதப் பூசல் வரும். நாடு காடாகும். ஏற்கனவே எனக்கு வந்த ஒரு தகவல் சோழ நாட்டில் மதப் பூசல் வெடித்திருக்கிறது என்று அறிகிறேன். சோழ மன்னனான குலோத்துங்க சோழனுக்கும் திருவரங்கத்தில் இருக்கும் வைஷ்ணவ ஆச்சார்யர் ராமானுஜருக்கும் கருத்து வேறுபாடு ஏற்பட்டிருக்கிறதாம். சகோதரர்களைப் போல இருந்த சைவமும் வைணவமும் எதிரிகளைப் போல மாறிக் கிடக்கிறதாம். சோழ நாட்டில் என்ன நடக்குமோ என்று தெரியவில்லை. அது போன்ற நிலையை இச்சமணர்கள் உருவாக்க நினைக்கிறார்களா என்று சந்தேகமாக இருக்கிறது.”

“தாங்கள் சொல்வதை நானும் அங்கீகரிக்கிறேன். என் யோசனை ஒன்றைத் தெரிவிக்கலாமா?”

“சொல்லுங்கள் சேனாதிபதி.”

“தங்கள் மகள் தருமதேவிக்கு இவர்கள் செய்கிற சிகிச்சைகளும் வேண்டாம். பரிகாரங்களும் வேண்டாம். அவை அனைத்துமே தருமதேவிக்கு மட்டுமின்றி நமக்கும் நம் நாட்டிற்கும் எதிராகவே அமையும். அவளை இவர்கள் அணுகாமல் இருந்தாலே போதும் என்று தோன்றுகிறது. தர்மதேவி இங்கிருக்கவே வேண்டாம். அவளைத் தொண்டனூருக்கு அனுப்பி வைக்கலாம். சுதந்திரக் காற்றை அவள் சுவாசிக்கட்டும். சரியாகி விடுவாள்.”

“தொண்டனூரை எதற்காகத் தேர்ந்தெடுத்தீர்கள்?”

“காரணம் இருக்கிறது மகாராஜா. தாங்கள் பெற்ற வெற்றிகள் மூலம் நமது ராஜ்யம் மூன்று மூலைகளில்

பாதுகாப்பாக இருக்கிறது. வடமேற்கில் குடகு. வடகிழக்கில் வேலாபுரம். தென்கிழக்கில் கொங்கு நாடு. இவற்றையெல்லாம் வென்றதால் அந்த மூன்று மூலைகளும் நம்மைக் காக்கின்றன. ஆனால் தென்கிழக்கு மூலையான கங்கநாட்டை நாம் வெற்றி கொள்ளவில்லை. கங்கநாடு கங்கர்கள் வசம் இருந்து தற்போது சோழர்கள் வசம் போய்விட்டது. கங்கநாட்டிற்கு அருகில் தொண்டனூர் இருக்கிறது. அங்கே நமது மாகாணத் தலைநகரத்தை நிறுவினால் கங்க நாட்டைக் கண்காணிக்கவும் சமயம் பார்த்து தாக்கவும் முடியும். தொண்டனூர் மாகாணத் தலைநகராக இருக்க ஏற்றதுதான். அங்கே ஏற்கனவே அரண்மனை இருக்கிறது. அதைப் புதுப்பித்து விட்டால் அது தலைநகரமாக இயங்கும். அங்கே தொண்டுள்ளமே தனது வாழ்க்கையாகக் கொண்ட தொண்டனூர் நம்பி இருக்கிறார். அவர் நமக்கு வேண்டிய எல்லா உதவிகளையும் செய்வார். தங்கள் மகள் அந்த அரண்மனையில் கொஞ்ச காலம் சுதந்திரமாக இருந்தால் சரியாகி விடும்.''

''உங்கள் பேச்சைக் கேட்பதற்கு மகிழ்ச்சியாக இருக்கிறது சேனாதிபதி. சேற்றிலும் தீயிலும் சிக்கித் திணறியவன் நீர்வீழ்ச்சியில் குளித்தது போல் இருக்கிறது. உடனடியாக நிறைவேற்றலாம்'' என்றான் மன்னன்.

பிறகு அவனே பேசமுற்பட்டு ''சேனாதிபதி! நாம் அடுத்ததாகப் பேச வேண்டிய விஷயம் சாளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தன் விட்ட சவால் தான். அது பற்றி உங்கள் கருத்தென்ன?'' என்று கேட்டான்.

''மகாராஜா! நாம் இதுவரை சாளுக்கியர் ஆதிக்கத்தில் இருந்த நாடுகளில் இரண்டு கோட்டைகளைத் தவிர மற்றவற்றைக் கைப்பற்றி விட்டோம். அவை கானகலா கோட்டையும் ஹொசவீடு கோட்டையும்தான். எப்படியும் அவற்றை நாம் வெற்றி கொண்டாக வேண்டியது தான். அவற்றில் ஒன்றான கானகலா கோட்டை விஷயத்தில் சாளுக்கிய மன்னனே போருக்கு அழைத்திருக்கிறான். நாம் போர் புரியப் போகிறோம்'' என்றார் சேனாதிபதி.

''சேனாதிபதி! சாளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தன் இவ்வாறெல்லாம் சவால் விடுபவன் அல்லன். வாய்ச் சொல் வீரனாக அல்லாமல் நேரடியாகப் போரில் ஈடுபடுபவன். அப்படிப் பட்டவன் இளவரசன் நரசிம்மனிடம் போருக்குச் சவால் விடுகிறான் என்றால் அது அசாதாரணமானது. அதோடு அவன் விதித்துள்ள நிபந்தனை மிகவும் ஆபத்தானது. இந்தப்

போரில் நாம் தோற்று விட்டால் பதினெட்டு நாடுகளோடு வேலாபுரமும் போய் விடும். துவார சமுத்திரமும் போய்விடும். என் கனவு கரைந்து போய் விடும். இந்த ஹொய்சள சாம்ராஜ்யம் இல்லாமல் போய் விடும். நாம் குடும்பத்துடன் காட்டிற்குப் போக வேண்டியது தான்'' என்றான் மன்னன்.

“இளவரசர் அவசரப்பட்டு நிபந்தனையை ஒப்புக் கொண்டு விட்டார் என்று கருதுகிறீர்களா?''

“இல்லை. விக்கிரமாதித்தன் இந்தச் சவாலை அறிவித்ததும் நரசிம்மன் அதை ஒப்புக் கொண்டதுதான் கௌரவமானது. அதை நினைத்து நான் பெருமைப்படுகிறேன். நரசிம்மன் அந்தச் சவாலை ஏற்க மறுத்திருந்தால் நான் வேதனைப் பட்டிருப்பேன். அவனைக் கொன்றுமிருப்பேன். இத்தனைக்கும் விக்கிரமாதித்தன் நரசிம்மனைப் பணயமாக வைத்துக் கொண்டு இந்தச் சவாலை விடவில்லை. அவனை விடுவித்து விட்டுத் தான் இவ்வாறு சொல்லியிருக்கிறான். அவனது நிபந்தனை இணையற்ற ராஜதந்திரத்தைக் காட்டுகிறது. அந்த தந்திரத்தில் நான் தோற்று விட்டேன் சேனாதிபதி.''

“போரில் வெற்றி பெறுவோம் என்று ஏன் தாங்கள் எண்ணவில்லை? பதினெட்டு நாடுகளை வென்றிருக்கும் போது இந்தப் போருக்காக மட்டும் எதற்காக கவலைப்படுகிறீர்கள்?''

“வெற்றியைப் பற்றி மட்டுமே எண்ண முடியாது. தோல்வியைப் பற்றியும் எண்ணிப் பார்த்துச் செயல்பட வேண்டும். இந்தப் போர் பதினெட்டு போர்களுக்குச் சமமான தல்லவா? இரு விதமாகவும் சிந்திக்க வேண்டும்.''

“வேண்டாம் தந்தையே! வெற்றியைப் பற்றி மட்டுமே நினைப்போம்'' என்று கூறியபடி உள்ளே பிரவேசித்தான் இளவரசன் நரசிம்மன்.





பலகாரங்களை மாற்றுவது போல பரிகாரங்களை மாற்றுவது முறையானதாக இருக்காது. உண்மையான பரிகாரமானது ஒரு விஷயத்திற்கு ஒன்றே ஒன்றாகத் தான் இருக்கமுடியும் – விட்டலராயன்




இளவரசனின் வரவு உண்மையிலே ஆறுதலாக இருந்தது விட்டலராயனுக்கு.

அவனைப் பற்றிய விவரங்களைச் சேனாதிபதி கூறியதற்கு பிறகு முதன் முறையாக அவனைத் தற்போது தான் நேரில் பார்த்தான் விட்டலராயன்.

இரண்டாண்டுகளுக்கு முன் பார்க்கச் சகிக்காதவனாகக் கருதப்பட்ட இளவரசன் பார்த்துக் கொண்டே இருக்கலாம் என்று சொல்லத் தகுந்த விதத்தில் பளிச்சென்று இருந்தான்.

ஒருவேளை அது பிரமையாக இருக்குமோ என்று கூடத் தோன்றியது விட்டலராயனுக்கு.

"வா நரசிம்மா. வேலாபுரத்திலிருந்து துவார சமுத்திரத்திற்கு எப்போது வந்தாய்? ராஜ பேரிகைகள் முழங்கவில்லையே?" என்று இதமாகவும் இனிமையாகவும் கேட்டான் மன்னன்.

"ராஜப் பேரிகைகளை நான் தான் கொட்ட வேண்டாம் என்று கேட்டுக் கொண்டேன் தந்தையே" என்றான் நரசிம்மன்.

"ஏன்?"

"எனக்குத் தேவையானது தற்போது வெற்றிப் பேரிகைதான் தந்தையே! சாளுக்கிய மன்னரின் சவாலில் நாம் வெற்றி பெற வேண்டியது தான் முதன்மையானது என்று கருதுகிறேன். அதில் தாமதம் இருக்கக் கூடாது என்பதால் தான் தங்கள் வரவேற்புக்குக் காத்திராமல் வேலாபுரத்தை விட்டு வந்து விட்டேன். அதற்காகத் தாங்கள் என்னை மன்னிக்க வேண்டும்."

இளவரசனின் பேச்சு அமுதத் துளிகளாக செவிகளில் விழுந்தன மன்னனுக்கு.

"மகிழ்ச்சி மகனே. உனது உத்வேகத்தைப் பாராட்டுகிறேன். போருக்கான ஏற்பாடுகள் இரண்டு நாட்களில் தயாராகி விடும். நானும் சேனாதிபதி பகாசூரரும் போருக்குச் செல்ல

விருக்கிறோம். உனக்கு விடப்பட்டச் சவாலை நாங்கள் வெற்றியாக மாற்றுவோம்'' என்றான்.

“தந்தையே! நான் இங்கே விரைவாக வந்ததற்கு முக்கிய காரணம் உங்கள் அனுமதியைப் பெறத்தான்'' என்றான் நரசிம்மன்.

“எதற்கு என் அனுமதி?''

“கானகலா கோட்டைப் போரை நானே நடத்த விரும்பு கிறேன். அதற்கு உங்கள் அனுமதி தேவை.''

மன்னன் சேனாதிபதியைப் பார்த்தான்.

சேனாதிபதி மன்னனைப் பார்த்தார்.

நரசிம்மனே பேச முற்பட்டு “தந்தையே! இதை மகன் தந்தைக்கு ஆற்றும் உதவியாகத் தாங்கள் கருத வேண்டும். உங்கள் சார்பாகவும் உங்களுக்குப் பதிலாகவும் என்றைக்கோ நான் போரில் கலந்து கொண்டிருக்க வேண்டும். இறைவனின் சங்கல்பம் எனக்குக் கிடைக்காமல் போய்விட்டது. மகன் நானிருக்கத் தந்தையான தாங்கள் தாள்களும் தோள்களும் நோகப் பதினெட்டு நாடுகளை வென்றிருக்கிறீர்கள். எனக்கு வெட்கமாக இருக்கிறது. ஆகவே இந்த ஒரு போரையாவது நான் நடத்த விரும்புகிறேன். சாளுக்கிய மன்னர் என்னிடம் விட்டச் சவாலுக்கு நான் பதில் சொல்வதே முறை'' என்றான்.

“நீ தான் என் மகன். என் மகனென்றால் இப்படித் தான் இருக்க வேண்டும். உன்னைப் போய் கோழையாகக் கருதியிருந்தேனே! எத்துணைத் தவறு இது? இப்போது நீ பேசிய வார்த்தைகள் பொன்னில் பொறிக்கப்பட வேண்டிய வார்த்தைகள். பட்டயமாகத் தீட்டப்பட வேண்டிய வார்த்தைகள். வார்த்தைகள் இன்று உன்னால் பெருமையடைகின்றன'' என்று தனக்குள் பரவசப்பட்டுக் கொண்ட மன்னன் -

“நரசிம்மா! இளவரசனுக்கு உரிய வார்த்தைகளைத்தான் நீ பேசினாய். அதே சமயம் இந்தப் போர் மிகவும் ஆபத்தானது என்பதை நீ அறிவாயா? தோற்றால் அனைத்தும் போய் விடும்'' என்றான் மன்னன்.

“அதனால்தான் நான் போருக்குச் செல்ல விரும்புகிறேன் தந்தையே. உங்கள் தோள்களும் வாள்களும் சற்று ஓய்வெடுக்கக் கூடாதா?''

“உன் பேச்சு எனக்கு அர்ச்சுனனின் மகன் அபிமன்யுவை நினைவுபடுத்துகிறது. உன்னைப் பற்றி நான் தான் இதுநாள் வரை தவறாக எண்ணியிருந்தேனே தவிர நீ நீயாக தான்

இருந்திருக்கிறாய். உன் வீரத்தைப் பற்றி எனக்குத் துளியும் சந்தேகமில்லை. சாளுக்கிய மன்னரது ராஜதந்திர வலையானது ஏறக்குறைய குருக்ஷேத்திர சக்ர வியூகத்தைப் போன்றது. அதை உடைப்பது கடினம். எனது தீர்மானம் என்ன வென்றால் நீ விரும்பும் பெண்ணை உனக்குத் திருமணம் செய்து வைத்து உன் உள்ளத்தை குளிர்விப்பதுதான். வசந்த காலத்தில் நுழைய வேண்டிய நீ போர்க் களத்தில் நுழைய வேண்டாம்."

"உங்கள் தீர்மானம் தவறானது தந்தையே. தங்களை இரண்டாண்டுகளாகக் கோடைக் காலத்தில் தவிக்க விட்டு விட்டு குளிர் நிழலில் தூங்கிக் கொண்டிருந்தவன் நான். எனது வசந்த காலமானது இப்போரை நடத்தி வெற்றி பெறுவது தான். நான் விரும்பும் பெண் மாளவிகா, என் திருமணம் ஆகியவை எனது இந்தப் போருக்குப் பிறகு தான். எல்லோரும் என்னை வெகுளி என்றும், கோழை என்றும், கோமாளி என்றும் கருதுகிறார்கள். பெண்வாடை என் பேச்சில் இருந்ததே தவிர செயலில் துளி கூட இருந்ததில்லை. என்னைப் பெண் பித்தன் என்கிறார்கள் அதனால் தான் கல்யாணபுரத்தில் பெண்ணை வைத்து என்னை மயக்க முயன்றார்கள். இந்த அவப் பெயர்களை யெல்லாம் போக்குவதற்கு நான் இன்னும் எவ்வளவு காலம் காத்துக் கொண்டிருக்க வேண்டும் என்று கருதுகிறீர்கள்?"

நரசிம்மனின் ஆவேசப் பேச்சு மன்னனை மேன்மேலும் பரவசப்படுத்தியது. உள்ளம் குளிர்ந்து கரையத் தொடங்கியது.

"சாளுக்கிய மன்னரைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய் நரசிம்மா?" என்று கேட்டான்.

"நான் இந்தப் போரைத் தவிர எதைப் பற்றியும் நினைக்க விரும்பவில்லை தந்தையே" என்றான் நரசிம்மன்.

மன்னன் சேனாதிபதியைப் பார்த்தான்.

சேனாதிபதி மன்னனைப் பார்த்தார்.

"இளவரசே! இந்தப் போரைச் சாளுக்கியர் சார்பில் ஜெகதேவன் போரிடுவதாக அறிவித்திருக்கிறான் விக்கிரமாதித்தன். அந்த ஜெகதேவன் மின்னல் வேகத்தில் குறுவாட்களை எய்தக் கூடியவன் என்பதையும் உங்களுக்குக் காட்டியிருக்கிறான்" என்றார் சேனாதிபதி.

"அதனாலென்ன சேனாதிபதி? நான் பயந்து நடுங்கி விட வேண்டுமா? என் தந்தையின் தைரியமும் தங்களின் தைரியமும் என்னிடம் இல்லாமல் இருக்கலாம். ஆனால் அஞ்சி நடுங்கும் கோழையல்ல நான். அதோடு ஜெகதேவனை விட வேகமாகவும்

துல்லியமாகவும் குறுவாட்களை வீசக் கூடிய ஒருவன் என்னிடம் இருக்கிறான்'' என்றான் நரசிம்மன்.

“அது யார் நரசிம்மா?'' என்று கேட்டான் மன்னன்.

“என் நண்பன். பெயர் உதயணன். சாளுக்கிய மன்னரது சவாலை நான் சொன்னதும் குறுவாட்களைச் சேகரிக்கத் தொடங்கி விட்டான். நூறு பேரைக் கொண்ட குறுவாள் படையொன்றையும் உருவாக்கி விட்டான். எப்போது புறப்படுவது என்று கேட்டுக் கொண்டே இருக்கிறான்.''

“இப்படிப்பட்ட நண்பன் உனக்கு இருக்கிறான் என்றால் நான் யோசித்துக் கொண்டிருப்பது நியாயமல்ல. இந்தப் போரை நீயே நடத்து. நான் இவரோடும் கங்கராஜன், மற்றும் பரதன் ஆகியோருடன் ஆலோசித்து விட்டு படை நிலவரத்தை அறிந்த பின் உரிய அனுமதியையும் ஆணையையும் வழங்குகிறேன்'' என்றான் மன்னன்.

மன்னன் தாமதம் செய்யாமல் சேனாதிபதிகளைக் கூட்டி தற்போதைய படைபலம் குறித்து வினவினான்.

இரண்டாண்டுகளுக்கு முன்பாகத் திரட்டப் பட்ட படையானது பதினெட்டு போர்கள் காரணமாக மூன்றில் இரண்டு பங்கு குறைந்திருக்கிறது. சேனாதிபதி பகாசூரர் கொஞ்சம் படை திரட்டியிருந்தார். துவாரசமுத்திரத்தில் இளவரசன் வசம் இருந்த படை இருபதாயிரம் இருந்தது. மொத்தத்தில் ஹொய்சளரிடம் முப்பதாயிரம் காலாட்படை வீரர்கள் இருந்தார்கள்.

அவர்களில் பத்தாயிரம் வீரர்களை இளவரசன் நரசிம்மனோடு அனுப்புவது என்றும் அவனோடு தளபதியாக கங்கராஜனை அனுப்புவது என்றும் முடிவு செய்யப்பட்டது.

இரண்டு ஆண்டுகளாக இளவரசனின் உண்மையான முகம் மக்களுக்கும் தெரியாமல் படைவீரர்களுக்கும் தெரியாமல் இருந்த படியால் அவன் தலைமையில் நரசிம்மனைப் போரில் அனுப்புவது அவர்களுக்குள் அதிருப்தியையும் அவநம்பிக்கையையும் உண்டாக்கும் என்பதால் சேனாதிபதி பகாசூரர் இளவரசனை படைவீரர்களுக்கு அறிமுகம் செய்து வைத்தார். கல்யாணபுரத்தில் அவன் நடத்திய சாகசங்களை எடுத்துரைத்தார். அவனது வாள் வீச்சை வீரர்கள் அறிந்து கொள்ளும் விதத்தில் அவர்களுக்கு முன்னால் அவனைச் சாகசங்கள் செய்ய வைத்தார். நரசிம்மன் வாள் வீச்சில் ஆபத்தானவன் என்பதை உணர்ந்தார்கள்.

நரசிம்மனும் ஒருநாள் முழுவதும் வீரர்களோடு பழகி தான் வீரன் மட்டுமல்ல நல்ல நண்பனும் கூட என்பதை

உணர்த்தினான். அவனோடு அவனது நண்பன் உதயணனும் உதயணனின் குறுவாள் படையும் அறிமுகப்படுத்தப்பட்டதால் படைவீரர்கள் தெம்படைந்தார்கள். ஆரம்பம் முதலே கங்கராஜன் விட்டலராயனுடன் மட்டுமே தொடர்பு வைத்திருந்தான். அவனுக்குத் தற்போது நரசிம்மனோடு தளபதியாகப் பணிபுரிய தயக்கமாக இருந்தது. ஆனால் நரசிம்மன் அறிமுகப்படுத்தப் பட்டு அவனது சாகசங்களும் வெளிப்பட்டதால் கங்கராஜனின் தயக்கம் அகன்று இளவரசனின் மீது மரியாதையும் நம்பிக்கையும் ஏற்பட்டது.

மன்னனும் வீரர்களைக் கூட்டி உரை நிகழ்த்தினான்.

"வீரர்களே! இரண்டாண்டுகளாக என்னோடு இருந்து என்னோடு கலந்து போரில் ஈடுபட்டீர்கள். போர்களில் நான் பெற்ற வெற்றி நீங்கள் சம்பாதித்து தந்த வெற்றி. இதைத் தனி மனிதனாக நானோ, சேனாதிபதியோ சம்பாதித்து விட முடியாது. எங்களின் கரங்களாக நீங்கள் அமையும் போது தான் அது சாத்தியம். நாங்கள் வருவோம். போவோம். நீங்கள் எப்போதும் இருப்பீர்கள். மன்னன் தற்காலிகம். படை நிரந்தரம். நீங்கள் செய்யும் தியாகமும் சரி, காட்டும் வீரமும் சரி வரலாற்றில் வராமல் இருக்கலாம். ஆனால் எங்களுக்குப் பின்னால் இருப்பது நீங்கள் தான் என்பதை நான் மறக்க மாட்டேன். என் வெற்றி உங்கள் வெற்றி. உங்களால் வந்த வெற்றி. என் நினைவில் அது என்றும் இருக்கும். எனக்குப் பதினெட்டு நாடுகளைப் பெற்றுத் தந்த நீங்கள் இப்போது என்னிடத்தில் இருந்து கொண்டு படை நடத்தவிருக்கும் நரசிம்மனுக்கும் பெற்றுத் தர வேண்டும். அவன் இது வரை போரில் ஈடுபடாததற்குக் காரணம் அவனது திறமைக் குறைவல்ல. நான் அவனுக்கு வாய்ப்பளிக்காததுதான் காரணம். இப்போது அவனுக்கு வாய்ப்பை வழங்குகிறேன். அவனது வீரத்தை எதிரிகள் மட்டுமின்றி நீங்களும் காணப் போகிறீர்கள். வெற்றியை ஈட்டப் போகிறீர்கள்" என்றான்.

அவனது பேச்சு போர் வீரர்களிடம் எழுச்சியை உண்டாக்கியது.

நரசிம்மன் தனது நண்பனும் குறுவாள் படைத் தலைவனுமான உதயணனை மன்னனுக்கு அறிமுகப்படுத்தி வைத்தான்.

உதயணனும் நரசிம்மனைப் போலவே இளைஞனாகவும் சுறுசுறுப்பு மிகுந்தவனாகவும் இருந்தான்.

"வருக வீரனே வருக. உன்னைப் போன்றவர்கள் நரசிம்மனுக்கு நண்பர்களாக இருப்பது மகிழ்ச்சியளிக்கும் விஷயம். நண்பர்கள் என்றதும் துரியோதனன் - கர்ணன் ஆகியோரது நட்பு தான் எனக்கு நினைவிற்கு வரும். நட்பென்றால் இப்படித்தான்

இருக்க வேண்டும் என்பதற்கு அது அத்தாட்சி. நரசிம்மன் துரியோதனன் அல்ல. வீரஅபிமன்யுவைப் போன்றவன். உங்கள் இருவருக்குரிய நட்பு மட்டும் அந்த நட்பு போல் இருக்கட்டும்" என்றான் மன்னன்.

"மிக்க நன்றி மகாராஜா. எங்கள் குறுவாட்களுக்கு காவு கொடுக்காமல் அவை ஏங்கிக் கொண்டிருக்கின்றன. தற்போது கிடைத்ததற்காக அவை தங்களை நிச்சயமாக வாழ்த்தும்" என்றான் உதயணன்.

அதையடுத்து கானகலா கோட்டை மீது போர் தொடுப்பது குறித்து சாளுக்கிய மன்னனுக்கு முறையாக அறிவிப்பு செய்த விட்டலராயன் "நரசிம்மா! உன் தாயை வணங்கி ஆசி பெற்றுக் கொள்" என்றான்.

படைகள் புறப்படுவதற்கு முன்னால் துறவி நீலகேசி வந்தார்.

"மகாராஜா! ஆச்சார்யர் ஜெயதேவர் ஆழ்ந்த கவலையில் இருக்கிறார். தன்னை மகாராஜா புரிந்து கொள்ள வில்லையே என்று ஆழ்ந்த வேதனையில் இருக்கிறார். உண்மையைத்தான் சொல்ல முடியுமே தவிர மகாராஜா விரும்புகிற மாதிரி பொய்யைச் சொல்ல முடியாது என்கிறார். தங்கள் மகளின் மீது அவருக்குள்ள கருணையைத் தாங்கள் புரிந்து கொள்ளவில்லை என்ற வருத்தம் அவருக்கு. தான் தெரிவித்த பரிகாரங்கள் அனைத்தும் மகாவீரர் ஆணையாக உண்மையான பரிகாரங்கள் என்றும் அவற்றுக்குத் தாங்கள் களங்கம் கற்பிக்க வேண்டாம் என்றும் தங்களிடம் சொல்லச் சொன்னார். அவர் இப்படிப்பட்ட வேதனையை அடைந்து நான் பார்த்ததே இல்லை. சரவண பெலகுலாவில் உள்ள கோமடீஸ்வரர் வழிபாட்டிற்கும் செல்லவில்லை. உபன்யாசங்களுக்கும் வரவில்லை. சந்திரகிரியிலே ஒரு சமாதிப் பள்ளத்தைத் தோண்ட வைத்து அதில் அமர்ந்து தவமிருக்கிறார். இனி வாழ்நாள் முழுதும் தான் வாயைத் திறந்து பேசுவதில்லை என்று பிரதிக்ஞை செய்திருக்கிறார். நிர்வாணம் எய்தி விடுவாரோ என்று எனக்கு வருத்தமாக இருக்கிறது" என்றார் உருக்கமான குரலில்.

மன்னனோடு சேனாதிபதி பகாசூரரும் இருந்தார்.

மன்னன் நீலகேசியைப் பார்த்து "அடிகளே! நீங்கள் ஜெயதேவரைப் பார்த்து நீங்கள் தெரிவித்த கடுமையான முடிவுகளை உடனடியாகக் கைவிடச் சொல்லுங்கள். அதற்கான அவசியம் வரவில்லை என்று கூறுங்கள். ஆச்சார்யருக்கு என் மகள் மீது உள்ள கருணை எனக்குத் தெரியும். அதை போல அவர்மீது

எனக்கிருக்கும் மரியாதை குறைய வில்லை என்பதையும் அவரிடம் தெரிவியுங்கள். அவர் தனது முடிவுகளை மாற்றிக் கொண்டு சமண மதத்திற்குச் செய்து வரும் அருந் தொண்டுகளைச் செய்து வரும்படிக் கேட்டுக் கொள்ளுங்கள். இல்லையென்றால் விட்டலராயன் அவரோடு பேசுவதை நிறுத்திக் கொள்வான் என்று நான் கூறியதாகச் சொல்லுங்கள்'' என்றான்.

''ஆகா! மகாகுரு ஒரு பக்கம். மகாராஜா ஒரு பக்கம். இரண்டுமே இரு மாமலைகள். அவற்றுக்கிடையில் நான் நிற்பதே பெரும்பேறு. தாங்கள் கூறியதை ஆச்சார்யரிடம் அவசியம் சொல்கிறேன் மகாராஜா'' என்று சொன்ன நீலகேசி ''நாங்கள் இங்கிருந்து புறப்பட்ட போது தங்கள் மகள் குணமடைவதற்கு மாற்றுப் பரிகாரத்தைச் சொல்வதாகக் கூறிச் சென்றோம். ஆச்சார்யர் ஒரு நாள் முழுதும் அன்ன ஆகாரமின்றித் தன்னை நிஷ்டையில் ஆழ்த்திக் கொண்டு மாற்றுப் பரிகாரத்தை கண்டறிந்திருக்கிறார். அது என்ன வென்றால்..'' என்று ஆரம்பித்து முடிப்பதற்குள் மன்னனே குறுக்கிட்டுப் பேசினான்.

''அடிகளே! பல விஷயங்களில் என்னை வழி நடத்தி வருகிறவர் நீங்கள். உங்களுக்கோ ஆச்சார்யருக்கோ தெரியாத விஷயமல்ல. மாற்றுப் பரிகாரத்தை அவர் பரிசீலிப்பதாகச் சொன்ன போது நான் வியப்படைந்தேன். பலகாரங்களை மாற்றுவது போல் பரிகாரங்களை மாற்றுவது முறையானதாக இருக்காது. உண்மையான பரிகாரமானது ஒரு விஷயத்திற்கு ஒன்றே ஒன்றாகத்தான் இருக்க முடியும். ஒன்று மேல் இருந்தால் அவை பரிகாசங்களாக இருக்குமே தவிரப் பரிகாரங்களாக இருக்க முடியாது. இந்த விவகாரத்தில் ஆச்சார்யர் கூறிய பரிகாரத்தைப் பற்றிப் பலரோடு நான் விவாதித்து முடிவெடுத்து விட்டேன். அவரது பரிகாரத்தை ஏற்றுக் கொண்டு விட்டேன்'' என்றான் மன்னன்.

நீலகேசிக்கு நம்பமுடியவில்லை.

''தாங்கள் என்ன சொல்கிறீர்கள் மகாராஜா?'' என்று கேட்டார்.

''வேலாபுரத்தில் கட்டப்பட்டு வரும் மகாவிஷ்ணுவிற்கான ஆலயத்தை இடிப்பது என்று முடிவு கட்டிவிட்டேன்.''

''மகாராஜா! இது உண்மையா?''

''அடிகளே! உங்களிடம் நான் பொய் சொல்வேன் என்று நினைக்கிறீர்களா? இதோ இருக்கிறாரே சேனாதிபதி பகாசூரா! - அவர் சொன்ன ஒரு வார்த்தைதான் என் கண்களைத் திறந்து விட்டது.''

“சேனாதிபதியார் என்ன சொன்னார் மகாராஜா?”

“கோயிலை இடித்தால் தேவைப்படும் போது மீண்டும் கட்டிக் கொள்ளலாம். மகள் மரணித்து விட்டால் மீட்க முடியுமா என்று கேட்டார். அது சரிதானே?”

“சேனாதிபதியார் பெரிய அறிவாளி. அவரைப் போன்றவர்கள் எப்போதாவதுதான் தோன்றுவார்கள்.”

“அதோடு நானும் யோசித்தேன். மன்னனும் மக்களும் மகிழ்ச்சியாகவும் சுபிட்சமாகவும் இருக்கும் போதுதான் ஆலயங்கள் கட்டப்படுவது அர்த்தமுள்ளதாக இருக்கும். அதுவும் மன்னன் மகள் வாழ்வா சாவா என்று போராடிக் கொண்டிருக்கும் போது எந்த மன்னனும் ஆலயம் கட்டுவதில் முயலமாட்டான். அதோடு மகளின் வாழ்விற்கு ஆலயத்தை இடிப்பதுதான் பரிகாரம் என்று யட்சிணி கூறிவிட்ட பிறகு யோசிப்பதற்கு எதுவும் இல்லை. ஆச்சார்யார் கூறிய பரிகாரத்தைப் பற்றி மக்களுக்குப் பரவலாகத் தெரிந்திருக்கிறது. சொந்த மகளின் உயிரைக் காப்பாற்றாமல் மன்னன் ஆலயத்தைக் கட்டுவது சரியில்லை என்று அவர்கள் ஆங்காங்கே பேசிவருவது பற்றியும் தகவல் வந்தது. ஆகவே தான் முடிவுக்கு வந்தேன்.”

“மக்கள் எங்கே எதிர்ப்புகளைக் காட்டி மதக்கலவரத்திற்கு வித்திட்டு விடுவார்களோ என்று சிறு கவலை ஆச்சார்யருக்கு வந்தது. தாங்கள் கூறுவதைப் பார்த்தால் அக்கவலை தேவையில்லை என்று தெரிகிறது.”

“ஆச்சார்யர் ஜெயதேவர் தற்போது மகிழ்ச்சியடைவார் அல்லவா?”

“மகாராஜா! அவரைத் தங்களுக்குத் தெரியாதா? அவர் பற்றுக்களை விட்டவர். இன்ப துன்பங்களைக் கடந்தவர். பந்த பாசங்களிலிருந்து விடுபட்டவர். மகள் விஷயத்தில் அவர் தலையிட்டது கூட தாங்கள் அவரது உதவியைக் கோரியதால் தான். ஆகவே பரிகாரம் நிறைவேறினால் அவர் மகிழ்ச்சியடைய மாட்டார். மகள் குணமடைந்தால் மகிழ்ச்சியடைவார். அதுவும் தங்களுக்காக.” என்று சொன்ன நீலகேசி “ஆலயத்தை எப்போது இடிக்கப் போகிறீர்கள் மகாராஜா?” என்று கேட்டார்.

“அது பற்றித்தான் யோசித்துக் கொண்டிருந்தேன். ஆலயப் பகுதியில் ஏதாவது பங்கம் ஏற்பட்டது போல் காட்டி சில சிற்பிகளை காவு கொடுத்து விட்டால் சிற்பிகளும் மக்களும் அவ்வாலயத்தின் மீது வெறுப்படைவார்கள். ஆலயம் எழுவது உகந்ததல்ல என்று யோசிக்க ஆரம்பிப்பார்கள். அச் சமயத்தில்

ஆலயத்தை இடித்து வட்டால் பிரச்சனை வராது'' என்றான் மன்னன்.

“ஆகா! மகாராஜா! தாங்கள் தீட்சண்யமாக நினைத்து திட்டம் தீட்டுகிறீர்கள். தங்களுக்கு நான் வழி காட்ட வேண்டியதில்லை'' என்று கூறிய நீலகேசி “மகாராஜா! சிரவணபெலகுலாவில் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை நடக்கும் மகா அபிஷேகம் இரண்டாண்டுகளில் நடக்க விருக்கிறது. பாரத நாட்டிலேயே விசேஷமாக நடைபெறும் அபிஷேகம் அதுதான். அந்த அபிஷேகத்தைக் காண மகாவீர வர்த்தமானரே சூட்சும வடிவில் வருவதாக ஐதிகம். அந்த விழா பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை மட்டுமே நடப்பதால் நாடெங்கும் உள்ளச் சமணர்கள் திரளுவார்கள். அபிஷேக விழாவிற்கான நிதியை நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் திரட்டுகிறோம். ஆயினும் மன்னர் தரப்பிலிருந்து வரக்கூடிய நிதியே பிரதான நிதி. கருணா நிதியான தாங்கள் தான் அரசாங்க தரப்பு நிதியைத் தாராளமாக வழங்க ஏற்பாடு செய்ய வேண்டும்'' என்றார்.

“கவலையே வேண்டாம். ராணி சாந்தலை இதற்கான ஏற்பாடுகளைச் செய்து வருகிறாள். போதும் போதும் என்ற அளவிற்கு நிதி வந்து சேரும்.''

“தாங்கள் நேரில் வந்து மகா அபிஷேகத்தை நடத்தித் தர வேண்டும்.''

“அது என் பாக்கியமல்லவா? அடுத்த மகா அபிஷேகத்திற்கு நான் மன்னனாக இருப்பேனா? மரணத்தைத் தழுவாமல் இருப்பேனா? யாருக்குத் தெரியும்? மகா அபிஷேக விழா சமணர் விழா. நானில்லாமலா?''

“மட்டற்ற மகிழ்ச்சி மகாராஜா. தங்களது கருணையுள்ளம் உலகறிந்தது என்பதால் ஒரு கோரிக்கையை வைக்க விரும்புகிறேன்.''

“நீங்கள் துறவி. கோரிக்கை என்றெல்லாம் வைக்க வேண்டியதில்லை. சொன்னால் போதும்.''

சொன்னார் நீலகேசி.

மன்னன் சேனாதிபதியைப் பார்த்தான்.

சேனாதிபதி மன்னனைப் பார்த்தார்.





துறவு என்பது ஆசையினால் உண்டாகக் கூடியதல்ல. ஆசையைத் துறப்பதினால் வந்து அமைவதே துறவு – நீலகேசி




"மாந்தரீகர் சுடுகாட்டு வாசனை சிறையில் தள்ளி விட்டதாகக் கேள்விப்பட்டேன். அவரை தயை கூர்ந்து விடுவிக்க வேண்டும்" என்றார் நீலகேசி.

"அவருக்கும் உங்களுக்கும் என்ன சம்பந்தம்?" என்று கேட்டான் மன்னன்.

"தங்கள் மகளின் சிகிச்சைக்காக நான் தான் அவரை சிரவணபெலகுலாவிலிருந்து அழைத்து வந்தேன்."

"அவரை நான் ஏன் சிறையில் அடைத்தேன் என்பது உங்களுக்குத் தெரியுமா?"

"தெரியாது மகாராஜா."

"அது தெரியாமலேயே அவரை விடுவிக்கும்படிக் கோருகிறீர்களே, அது எப்படி?"

"சுடுகாட்டு வாசன் மிகவும் நல்லவர். பொல்லாங்கு செய்யாதவர். மாந்தரீகத்தில் அவருக்கு ஈடாக யாரும் இல்லை."

"அப்படியா? சரி. சில நாட்களில் அவரை விடுவித்து விடுகிறேன்."

"மிக்க மகிழ்ச்சி மகாராஜா. நீங்கள் நீடூழி வாழ வேண்டும்" என்று கூறிவிட்டுச் சென்றார் நீலகேசி.

மன்னன் சேனாதிபதியைப் பார்த்தான்.

"என் பேச்சு உங்களுக்குப் புரிந்திருக்கும் என்று நினைக்கிறேன்" என்றான்.

"துறவியை நீங்கள் ஆழம் பார்க்க முயன்றீர்கள்" என்றார் சேனாதிபதி.

"சரியாக ஆழம் பார்த்திருக்கிறேனா?"

"ஆம் மகாராஜா. துறவிகள் பூரண அறிவின் வடிவம் என்பார்கள். நீலகேசி முரண்பாடுகளின் உருவமாக இருக்கிறார்."

"சேனாதிபதி! எனக்குத் தெரிந்து நீலகேசி அவர்கள் நீங்கள் கூறியது போல பூரண அறிவின் வடிவமாகத்தான் இருந்தார். துறவிக்கான மேம்பாட்டுடன்தான் இருந்தார். எப்படி இந்த அளவிற்கு நிலை தாழ்ந்து மாறினார் என்பது எனக்கு விளங்கவில்லை."

"மனித இனத்தின் குறைபாடு இதுதான் மகாராஜா. ஆதாயத்திற்கான வாய்ப்பு வரும்போது அது உயர்வற்றதாக இருந்தாலும் பயன்படுத்திக் கொள்ளும் மனிதர்கள்தான் பெரும்பாலும் இருக்கிறார்கள். அவர்களுக்கு வழிகளை விட வரும் ஆதாயமே பெரிதாக இருக்கிறது" என்றார் சேனாதிபதி.

"நான் மிகவும் மதித்து, மிகவும் நம்பியிருந்த தலைவர்கள் நான் சிறிதும் நம்பமுடியாதவர்களாய் மாறி விட்டார்கள் என்றால் குற்றம் யார் மீது சேனாதிபதி?"

"யார் மீதும் இல்லை மகாராஜா. பெரும்பாலான மனிதர்கள் ஆதாயங்களுக்காகவும் சுயநலங்களுக்காகவும் தான் வாழ்கிறார்கள். தலைவர்களும் சரி அவர்களைப் பின்பற்றுபவர்களும் சரி பெரும்பாலும் அப்படித்தான் இருக்கிறார்கள். சூழ்நிலை எதுவானாலும் பண்பு மாறாதவர்கள் சிலர்தான். அவர்களில் ஒருசிலர் மகான்களாக அமைகிறார்கள்."

"சேனாதிபதி! நீங்களும் நானும் அப்படியிருக்கலாம். ஏனென்றால் நாம் துறந்தர்கள் அல்ல. ஆனால் எல்லாவற்றையும் துறந்தவர்களான துறவிகளும் அப்படி இருக்கலாமா?"

"மகாராஜா! துறவிகளும் மனிதர்கள்தான். துறவியாக யாரும் பிறப்பதில்லை. சூழ்நிலைகள் தான் அவர்களை மாற்றுகின்றன. சிலர் தாங்களாகவே துறவியாகிறார்கள். துறவானது அவர்களது ஆத்மாவாக இருக்கும் போது உத்தமர்களாக இருப்பார்கள். அது தோஷமாக மாறும் போது உத்தமகுணத்திலிருந்து உதிர்ந்து விடுகிறார்கள்."

அவ்வாறே இருவரும் சிறிது நேரம் இருவரும் பேசிய பின்னர் "சேனாதிபதி! நீங்கள் உடனடியாகத் தொண்டனூருக்குச் செல்லுங்கள். அதன் முகத்தை மாற்றுங்கள். அங்கே இருக்கும் தொண்டனூர் நம்பியை என்னை வந்து சந்திக்கச் சொல்லுங்கள். நான் படை புறப்பாட்டிற்கான ஆயத்தங்களை கவனிக்கிறேன்" என்றான் மன்னன்.



இதற்கிடையில் நீலகேசி மன்னனிடமிருந்து விலகி வந்திருந்தாரேயன்றி மன்னனின் நினைவுகளிலிருந்து மீளவில்லை.

மன்னன் ஜெயதேவரின் பரிகாரத்தை ஒப்புக் கொண்டது வாழ்வில் அதுவரை அவர் காணாத விந்தையாக இருந்தது.

துவாரசமுத்திரத்தில் ஆதிநாதர் ஆலயத்தை யொட்டி இருந்த சமணப் பள்ளிக்குச் சென்று கல்படுக்கையில் சயன நிலையில் சாய்ந்தது முதல் மன்னனின் வார்த்தைகளையே நினைவில் அசைப் போட்டுக் கொண்டிருந்தார்.

ஜெயதேவர் முன்னிலையில் பரிகாரத்தை நிராகரித்த மன்னன் தற்போது அதை ஏற்றுக் கொண்டது நம்ப முடியாததாக இருந்தாலும் தான் ஏற்றுக் கொண்டதற்கான காரணங்களை அவன் கூறியது சரியாகவும் பொறுத்தமாகவும் இருந்ததால் அவற்றை நம்பமுடியாமல் இருக்க இயலவில்லை.

வேலாபுரத்தில் மிகவும் நுட்பமான சிற்பங்களுடன் சிறப்பாகக் கட்டப்பட்டு வரும் ஆலயத்தை இடிப்பதென்பது எளிதான காரியமல்ல. மன்னனே நினைத்தாலும் கூட மிகவும் சிரமம்தான். ஆகவே நீலகேசிக்கும் அது கவலையாகத்தான் இருந்தது. ஆனால் அந்த ஆலயத்தை மக்களின் எதிர்ப்பில்லாமல் இடித்துத் தள்ளுவதற்கான வழியைச் சொன்ன போது அசந்து போன அவர் "மன்னன் லேசுப்பட்டவனல்ல. சரியான உபாயத்தைத்தான் சொல்லியிருக்கிறான். நம்மால் கூட அப்படிக் கற்பனை செய்யமுடியாது" என்று சொல்லிக் கொண்டார்.

ஜெயதேவர் சம்பந்தமாக மன்னன் கூறியதும் அவருக்கு இனிமையாகவே இருந்தது. அதோடு மாந்தரீகன் சுடுகாட்டு வாசனை சிறையிலிருந்து விடுவிப்பதாக மன்னன் கூறியது அவரது மகிழ்ச்சியை இரட்டிப்பாக்கியது. எல்லாமே தனக்குச் சாதகமாக அமைந்து வருவதில் அவருக்குத் திருப்தியாக இருந்தாலும் உள்ளுக்குள் ஒரு சந்தேகம் ஊடுருவிக் கொண்டே இருந்தது.

சாதாரணமாக பிரச்சனை என்று ஒன்று வந்தால் அது எளிதில் முடிவதில்லை. ஆரம்பத்தில் செடி போலத் தோன்றி முடிவில் மரமாக வளர்வது தான் பிரச்சனை. பிரச்சனை என்று ஒன்று எழுவதே எளிதில் தீர முடியாமல் போவது தான்.

ஆனால் ஆலய இடிப்பு, ஜெயதேவர் விஷயம், மாந்தரீகன் விடுதலை ஆகிய பிரச்சனைகள் எந்த இடர்ப்பாடுகளும் இன்றி சொற்ப நேரத்தில் தீர்ந்து விட்டதுதான் நீலகேசியின் சந்தேகத்திற்குக் காரணமாக இருந்தது.

விட்டலராயன் எந்த அளவிற்கு இலகுவானவனோ அந்த அளவிற்கு உறுதியானவன். கரும்பாகவும் இருப்பான்.

இரும்பாகவும் இருப்பான். தென்றலாக உலவும் அவன் புயலாகவும் வீசுவான். பரிகார விஷயத்தில் இரும்பாக இருந்து கரும்பாக மாறி விட்டதாகக் கருதிக் கொண்டாலும் கல்லை விழுங்கி விட்டு ஜீரணமாகி விடும் என்று நம்பும் நிலையில்தான் நீலகேசி இருந்தார்.

எதற்கும் பொறுத்திருந்து பார்ப்பதில் ஒன்றும் ஆகி விடப் போவதில்லை என்று தன்னைச் சாந்தப்படுத்திக் கொண்டார்.

அப்போது துறவி ஒருவர் வந்து "அடிகளே! தங்களிடம் உபதேசம் கேட்க ஒரு பெண்மணி வந்திருக்கிறார்" என்றான்.

நீலகேசி பல்வேறு பள்ளிகளுக்கு விஜயம் செய்யும் போது உபன்யாசம் செய்வதுண்டு. சில நேரங்களில் சிலர் வந்து உபதேசம் பெறுவதுண்டு.

"அசக்தமாக இருக்கிறது அப்பனே" என்று சொன்ன நீலகேசி "சரி. அவளை வரச் சொல்" என்று சொல்லி விட்டு கல் படுக்கையை விட்டு எழுந்து அமர்ந்தார்.

உபதேசம் பெற வந்த பெண் இளம் பெண்ணாக இருந்தாள்.

நீலகேசிக்கு வணக்கம் தெரிவித்தாள்.

"உட்கார் அம்மா" என்றார் நீலகேசி.

அவள் உட்கார்ந்து கொண்டு "எனக்கு மிகவும் வேதனையாக இருக்கிறது சுவாமி" என்றாள்.

"ஏன்?"

"எனக்கு தங்களைப் போலத் துறவியாக வேண்டும் என்று ஆசை. பிக்குணியாக இருந்து பணி செய்ய வேண்டும் என்று ஆர்வம். ஆனால் யாரும் அனுமதிக்கவில்லை. வேதனையாக இருக்கிறது."

"சமண மதக் கொள்கை அம்மா அது. இந்த மதத்தில் பெண்களுக்குத் துறவறம் அனுமதியில்லை. அவர்கள் இறந்து ஆணாகப் பிறந்துதான் துறவறம் ஏற்க முடியும். பிக்குணியாக முடியும்."

"பௌத்த மதத்தில் பெண்கள் பிக்குணியாக இருக்கிறார்களே சுவாமி?"

"அதற்கு அம்மதம் சம்மதம் தெரிவித்திருக்கிறது. சமண மதம் அனுமதியளிக்கவில்லை."

"துறவு தூய்மையானது தானே அடிகளே? அதில் ஆண் பெண் என்ற வித்தியாசம் என்ன?"

“பெண்ணே! நமது முன்னோர்களுக்கு இது தெரியாதா என்ன? அவர்கள் எல்லா அம்சங்களையும் ஆராய்ந்துதான் விதிகளை விதித்திருக்கிறார்கள். ஒன்றை நீ நினைவில் வைத்துக் கொள். துறவறம் பூணுவது எளிது. துறவியாய் இருப்பது சிரமம்.”

“நான் துறவைப் பரிபூரணமாக விரும்புகிறேன் சுவாமி.”

“அம்மா! இல்லாத வழியில் பயணம் செய்வேன் என்று பிடிவாதம் செய்வதை விட இருக்கும் வழியில் சுகமாகப் பயணம் செய். நீ பெண்ணாகப் பிறந்திருக்கிறாய். பெண்களுக்கு உரிய அனைத்து சுகங்களையும் அனுபவித்து சந்தோஷமாக இரு. இருக்கும் வழியில் இதமாகப் பயணம் செய்வதென்பது இதுதான். நீயும் சரி நானும் சரி இந்த பூதவுடலை ஒரு நாள் விட்டுத்தான் ஆகவேண்டும். மரணத்தோடு யாருடைய வாழ்வும் முடிந்து விடவில்லை. துறவியாக வேண்டும் என்ற வேட்கை மிகுந்த நீ மரணத்திற்குப் பிறகு ஆணாகப் பிறப்பாய். துறவியாக வாழ்வில் நிர்வாணம் எய்துவாய். இதுவே சமணர் தர்மம். சமணர்கள் அனைவரும் இதையே கடைப் பிடிக்கிறார்கள். இது தான் நான் உனக்கு உரைக்கக் கூடிய உபதேசம்.”

“நான் மதம் மாறினால் என் ஆசை நிறைவேறுமா சுவாமி?”

“மதம் என்பது தாயைப் போன்றது. தாயைக் கைவிட்டு வாழ முற்படுவது பாவம் பெண்ணே.”

“என் விருப்பத்தை நிறைவேற்றாத தாய் எனக்கெதற்கு சுவாமி?”

“தாய் எப்போதும் தன் மக்கள் மீது உண்மையான அன்பு வைத்திருப்பவள். உன் மதம் உனக்கு உண்மையைத்தான் போதித்திருக்கிறது. துறவு என்பது ஆசையினால் உண்டாகக் கூடியதல்ல. ஆசையைத் துறப்பதினால் வந்து அமைவதே துறவு. துறவிகளாக எல்லா மதத்திலும் இருக்கிறார்கள். ஆனால் எல்லாத் துறவிகளும் துறவிகளாக இருக்கிறார்கள் என்று நினைக்காதே. இக்கரைக்கு அக்கரை பச்சை என்பது பொய். அக்கரை பச்சையில்லை என்பதே உண்மை.”

அந்தப் பெண் இடிந்து போனவளைப் போல் மௌனமாக அமர்ந்திருந்தாள்.

நீலகேசி அவளைக் கழிவிறக்கத்துடன் பார்த்துப் பேசினார்.

“மனதை விட்டு விடாதே அம்மா. நீ சமண மதத்தினளாகப் பிறந்ததை எண்ணிப் பெருமைப்படு. இதில் உள்ள தியாகம் வேறு எந்த மதத்திலும் இல்லை. நீ இப்பிறவியில் துறவியாக முடியாது என்றால் இப்பிறவி உனக்கு தியாகம் செய்வதற்காக அமைந்தது என்று சமாதானப்படுத்திக் கொள். நீ துறவியாகாமலேயே

பிரகாசிக்கலாம். சமணப் பள்ளிகளில் பணிவிடைகளைச் செய். அதுவே உனக்கும் உன் பிறப்புக்கும் உகந்தது. மறுபிறவியில் நீ அர்ஹிந்த்* ஆவாய். கவலை வேண்டாம்."

இவ்வாறு சொன்ன அவர் "உன் பெயர் என்ன?" என்று கேட்டார்.

"சந்தன மாலா"

"வர்த்தமானர் உன்னை ஆசிர்வதிப்பார். சென்று வா"

சந்தனமாலா சென்றபின் துறவி வந்தார்.

"இன்றைக்கு வேறு யாரையும் பார்க்க விரும்பவில்லை. யாரேனும் வந்திருந்தால் திருப்பி அனுப்பி விடுங்கள்" என்றார் நீலகேசி.

"இளவரசர் நரசிம்மர் வந்து கொண்டிருக்கிறார் அடிகளே" என்றார் துறவி.

"அப்படியா? இளவரசர் என் மாணவர். உள்ளே வரச்சொல்."

நரசிம்மன் உள்ளே நுழைந்து நீலகேசியை வணங்கினான்.

"உங்களை இங்கே இந்த நேரத்தில் நான் எதிர்பார்க்கவே இல்லை குருநாதரே. இது என் பாக்கியம் தான்" என்றான்.

நீலகேசி துறவியைப் பார்த்து "இளவரசருக்கு ஓர் ஆசனத்தைக் கொண்டு வந்து போடு" என்றார்.

ஆசனம் வந்தது.

"நீங்கள் தரையில் அமர்ந்திருக்கிறீர்களே குருநாதரே! நான் எப்படி ஆசனத்தில் அமர முடியும்?" என்று கேட்டான் நரசிம்மன்.

"அவரவர் ஆசனங்களை அவரவர்களுக்கு உகந்தது நரசிம்மா. நீ இளவரசன். சிம்மாசனத்திலும் அமரலாம். தரையிலும் அமரலாம். துறவிக்குத் தரையே உகந்தது" என்றார் நீலகேசி.

நரசிம்மன் தரையிலேயே அமர்ந்து கொண்டு "தங்கள் ஆசியைப் பெறுவதற்காகத்தான் இங்கு வந்தேன் குருநாதரே" என்றான்.

"என் ஆசி உனக்கு எப்போதும் இருக்கிறது நரசிம்மா. இது தெரியாதா உனக்கு?"

"தெரியும் ஐயா. நான் எனது முயற்சியில் இறங்கப் போகிறேன். ஆகவே தான் மாதா, பிதா, குரு, தெய்வம் ஆகியோரிடம் ஆசி பெற விரும்பினேன்."

---

* சமண மதத்தில் உயர்நிலை அடைந்தவர்கள் 'அர்ஹிந்த்' என்று அழைக்கப்பட்டார்கள்.

“முதல் முயற்சியா? என்ன அது?”

“போர் தான் குருநாதரே. கானகலா கோட்டை மீது போர் தொடுக்கப் போகிறேன்.”

“நீயா? எதற்காக?”

“சாளுக்கிய மன்னன் எங்களுக்குச் சவால் விட்டிருக்கிறான் ஐயா. இந்தப் போரில் நாங்கள் வென்றால் இதுவரை நாங்கள் கைப்பற்றிய சாளுக்கிய நாடுகள் எங்களுக்குச் சொந்தம். தோற்று விட்டால் கைப்பற்றிய நாடுகளைச் சாளுக்கியர் தரப்பிற்கே திரும்பித் தந்து விட வேண்டும். இதுதான் நிபந்தனை.”

“இது என்ன அநியாயமான நிபந்தனையாக இருக்கிறது? இதற்கு நீ எப்படிச் சம்மதித்தாய்? உன் தந்தையாரான மகாராஜா விட்டலராயர் எங்கள் அறிவுரைகளை மீறி கஷ்டப்பட்டு ரத்த வெள்ளத்தில் நீந்தி அரும்பாடுபட்டு பெற்ற வெற்றிகளை ஒரு போர் எப்படி முடிவு செய்யும்? சாளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தனின் சூழ்ச்சி இது. இதில் சிக்கிக் கொள்ளாதே” என்று எச்சரித்தார் நீலகேசி.

“இதில் சூழ்ச்சி எதுவும் இல்லை குருநாதரே. வீரத்திற்கான அறைகூவல் இது. இதை இளவரசன் என்ற முறையில் அங்கீகரிக்க வேண்டியது என் கடமை.”

“நரசிம்மா! மகாராஜா சாளுக்கியர் மீதான படையெடுப்பைத் தொடங்க முற்பட்ட போது ஆச்சார்யரான ஜெயதேவர் அதை எதிர்த்தார். அஹிம்சை நடவடிக்கை வேண்டாம் என்றார். குருதி வெள்ளம் பெருகுவது நல்லதல்ல என்றார். மகாராஜா அதை ஏற்கவில்லை. போரிடுவது க்ஷத்திரியர் கடமை என்று வாதிட்டார். பஞ்சப் பிரதானிகள் கூறியதையும் மறுத்தார். போரைத் தொடங்கினார். நீயும் அதே வழியில் செல்கிறாய்.”

“ஐயா! தடைகள் பல இருந்தாலும் மகாராஜாவின் படையெடுப்பு வெற்றிகரமாகவே நடந்துள்ளது. சாளுக்கியர் ஆதிக்கத்தில் இருந்த பதினெட்டு நாடுகளைத் தொடர்ச்சியாக வென்றார். இது நல்லடையாளம் அல்லவா?”

“போரை நடத்தி பல்லாயிரம் பேர்களைக் கொன்று குருதியாற்றை ஓடச் செய்வதை வெற்றி என்றும் நல்லடையாளம் என்றும் கூறுவது அறியாமை. ஒரு உயிரையும் படைக்க முடியாதது நாம் பல்லாயிரம் உயிர்களை எப்படிக் கொல்லலாம்?”

“குருநாதரே! மன்னர்கள் எல்லோரும் அப்படி நினைத்து விட்டால் போர்கள் நடக்காது. உயிர்கள் பலியாகாது. ஆனால் யாரும் அப்படியில்லை. போர் வேண்டாம் என்று நாம்

ஒதுங்கியிருக்க விரும்பினாலும் மாற்றரசர்கள் போரை நம்மீது திணிப்பார்கள். நமது நாட்டு மக்களைத் துன்புறுத்துவார்கள். அப்போது நாம் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்க முடியுமா? பல்வேறு தேசங்களில் பல்வேறு அரசர்கள் ஆண்ட போது மகாவல்லமை பூண்ட மகான்களும் இருந்திருக்கிறார்கள். அவர்களால் போர்களைத் தடுக்க முடிந்ததா? அதற்கு முயற்சி செய்தார்களா? இல்லை குருநாதரே. அவரவர் கடமைகளை அவரவர் செய்வதற்காகத்தான் பிரிவுகள் இருக்கின்றன. மன்னர்கள் சிந்தனையும் மகான்கள் சிந்தனையும் ஒத்துப் போகலாம். ஆனால் அவர்களது செயல்கள் என்றைக்கும் ஒத்துப் போகாது."

"குருவை மிஞ்சி சீடனாகி விட்டாய். அதில் எனக்கு மகிழ்ச்சி தான். ஆனாலும் ஆச்சார்யர் ஜெயதேவரின் அறிவுரையை நான் புறக்கணிக்க முடியாது. அவரது எண்ணம்தான் என் எண்ணம். உனக்கென்ன தெரியுமா? பதினெட்டு நாடுகளை வென்ற மகாராஜா வெற்றி விழாவைக் கொண்டாட முற்பட்ட போது ஆச்சார்யர் ஜெயதேவரை ஆசி வழங்கும்படிக் கேட்டுக் கொண்டார். பல்லாயிரம் உயிர்களைக் கொன்ற செயலுக்கு ஆசி வழங்க முடியாது என்று மறுத்து விட்டார். மகாராஜா அளித்த விருந்தில் கூட கலந்து கொள்ளவில்லை. அப்படியிருக்க நீ செய்யப் போகும் போருக்கு நான் ஆசி வழங்க முடியுமா? முடியாது. என் ஆசி வேண்டுமானால் போரை நிறுத்து."

"இயலாத காரியம் ஐயா. துறவிகள் நாட்டு நடப்புகளிலிருந்து ஒதுங்கியிருந்து அறிவுரை வழங்கலாம். ஆனால் நாட்டு நடப்புகளில் இருந்து கொண்டு மக்களைக் காக்கும் பொறுப்பில் உள்ள மன்னர்கள் போர்களைப் புறக்கணிக்க முடியாது."

"நீ முடிவு கட்டி விட்டாய். நான் கூறுவதற்கு ஒன்றும் இல்லை" என்று சொன்ன நீலகேசி, "நரசிம்மா! உனது சகோதரி தர்மதேவி குணமடைய வேண்டும் என்பதற்காக வேலாபுரத்தில் கட்டிக் கொண்டிருக்கும் விஷ்ணு ஆலயத்தை இடிக்கப் போகிறாராமே! தெரியுமா உனக்கு?" என்று கேட்டாள் இளவரசன் ஆழம் காண்பது போல்.

"தெரியும். அதே சமயம் ஆலயத்தை இடிக்கும்படிச் சொன்னது ஆச்சார்யர் தானே?"

"ஆமாம். அது யட்சிணி தந்த பரிகாரம். அதை ஏற்க மகாராஜா மறுத்தார். பிறகு ஜெயதேவர் மாற்று பரிகாரம் கூறினார். மகாராஜா அதை ஏற்றுக் கொண்டிருக்கலாம். மாறாக அவர் ஆலயத்தை இடிப்பதே சரி என்று கூறிவிட்டார். எனது [illegible]

என்ன வென்றால் ஆலயத்தை இடிப்பதென்பது மக்களின் எதிர்ப்பைத் தூண்டக் கூடிய விஷயம். மக்கள் சக்தி என்பது மகா சக்தி. எனவே தான் ஜெயதேவர் பாவத்தைச் சுமந்து கொண்டு யட்சிணியின் கட்டளையை மாற்றினார். மகாராஜாவோ கேட்கவில்லை. மதக்கலவரம் வந்து விடுமோ என்று கவலையாக இருக்கிறது.''

''குருநாதரே! எனது தந்தையார் யோசிக்காமல் செயல்பட மாட்டார். உங்கள் கவலை அவருக்கும் தெரியும். சிக்கல் வந்தால் சிக்கலைத் தீர்க்கும் திட்டம் அவரிடம் இருக்கும்.''

''நரசிம்மா! உன்னிடம் ஒன்று கேட்கலாமா?''

''கேளுங்கள் குருநாதரே.''

''உன் சகோதரியைச் சிகிச்சையளிக்க வந்த எங்கள் மாந்தரீகரை மகாராஜா சிறையில் வைத்திருக்கிறார். தவறேதும் செய்யாதவரை சிறையில் வைப்பது சரியல்ல. அதோடு அவர் சிறையில் இருக்கும் ஒவ்வொரு நாளும் நூற்றுக்கு மேற்பட்ட நோயாளிகள் மாந்தரீகச் சிகிச்சை பெறாமல் அவதிப் படுவார்கள். கர்நாடகப் பகுதியிலேயே மகா மாந்தரீகராக விளங்குபவர் அவர். அவரை நீ தான் சிறையிலிருந்து விடுவிக்க வேண்டும்.''

''இந்த விஷயத்தில் நான் இளரவசனாகத்தான் பேசமுடியும் குருநாதரே.''

''எனக்குத் தேவையானதும் அதுதான்.''

''தந்தை சிறையில் அடைப்பவரை மகன் விடுவிப்பதும் மகன் சிறையில் அடைப்பவரை தந்தை விடுவிப்பதும் ஆட்சியல்ல. வீழ்ச்சி.''

''நல்லது நரசிம்மா. இளவரசன் என்றால் இப்படிதான் இருக்க வேண்டும். போய் வா'' என்றார் நீலகேசி.

நரசிம்மன் அன்றைக்கே வேலாபுரத்திற்குச் சென்றான்.

விடைபெற்றுக் கொள்வதற்காக மாளவிகாவைச் சந்தித்தான்.

''இளவரசே! தயவுசெய்து தாங்கள் போருக்குச் செல்ல வேண்டாம்'' என்றாள் மாளவிகா.

அதிர்ந்தான் நரசிம்மன்.





அரசாங்கம் செம்மையாகச் செயல்பட ஆலோசனை களைச் சொல்லும் குழுக்களும் அமைப்புகளும் காலப் போக்கில் அதிகார மையங்களாக மாறி அரசாங்கத்தை ஆட்டிப் படைக்க முயன் றால் அவற்றைக் கலைத்து விடுவது தான் உகந்தது – விட்டலராயன்



# 38

போருக்கு முன்னால் கடைசியாகச் சந்திக்க நரசிம்மன் விரும்பியது மாளவிகாவைத்தான்.

வேலாபுரத்து அரண்மனைப் பகுதியிலேயே அவளைத் தங்க வைத்திருந்தான் அவன். அவளைக் கவனித்துக் கொள்ள பணிப் பெண்களை அமர்த்தியிருந்ததால் அவளுக்கு ஒரு குறையும் இல்லாதிருந்தது.

அவளிடம் நரசிம்மன் வந்த போது "நேற்று என்னை வந்து சந்தித்தாள் ஒரு பெண். மகாராஜாவின் தாசியாம். பேர் துளசியாம். நாள் முழுதும் என்னோடு பேசிக் கொண்டிருந்தாள். நம் இருவரது சந்திப்பு பற்றிக் கேட்டாள். கல்யாணபுரத்துச் சம்பவங்களைப் பற்றியெல்லாம் கேட்டாள். எனக்குப் பொறுமை போய்க் கொண்டிருந்தது. நல்ல வேளையாக பேச்சை நிறுத்திக் கொண்டு "உனக்கும் இளவரசருக்கும் திருமணம் நிச்சயமாக நடக்கும் என்று கூறிவிட்டு அகன்றாள்" என்றாள்.

"அவரை எனக்குத் தெரியும். அவருக்கு என் வயது தான் இருக்கும். ஆனாலும் அவர் என் தாய். எனது இரண்டாவது தாய்" என்றான் நரசிம்மன்.

"தாயா? உங்களுக்கா?"

"மாளவிகா! தாசி என்றால் யார் என்பது உனக்குத் தெரியும். பணிவிடை செய்யும் ஆடவனை தாசன் என்று அழைப்பது போல் பெண்களை தாசி என்று அழைக்கிறார்கள். அவர்கள் வேசிகள் அல்லர். மகாராஜாவுக்குப் பணிவிடைகளைச் செய்வதில் தங்களை அர்ப்பணித்துக் கொண்டவர்கள். மகாராஜாவுக்காகத் தங்கள் வாழ்க்கையைத் தியாகம் செய்து கொண்டவர்கள். அத்தியாகிகள் இல்லையென்றால் மன்னர்கள் நன்னலமில்லாமல் போவார்கள்."

"அப்படியா? நான் மிகவும் சலித்து விட்டேன். சந்தேகப் பட்டு விட்டேன்."

“உண்மையிலேயே இது சந்தேகம் சம்பந்தப்பட்ட விஷயம் தான். என் தந்தையார் மகாராஜாவாக மட்டும் செயல்பட வில்லை. தந்தையாகவும் சிறப்பாகச் செயல்படுகிறார். தன் மகனுக்குத் திருமணம் செய்யும் போது மணமகளான நீ சாளுக்கிய நாட்டைச் சேர்ந்தவளாக இருந்தால் ஒருவேளை நீ சாளுக்கிய உளவாளியாக இருப்பாயோ என்றச் சந்தேகம் வந்திருக்கிறது. எனவே தாசியை அனுப்பி உன்னை விசாரிக்கச் சொல்லியிருக்கிறார். என் இரண்டாவது தாய் தன் பணியைச் சிறப்பாகச் செய்திருக்கிறார். நீ உளவாளியல்ல என்பதை உணர்ந்திருக்கிறார். உனக்கும் எனக்கும் திருமணம் நடக்கும் என்று வாழ்த்தியிருக்கிறார்.”

“இப்படியெல்லாம் நடக்கும் என்று நினைக்கவில்லை.”

“மாளவிகா! உன் தந்தை உயிரோடு இருந்திருந்தால் இப்படித் தான் நடந்து கொண்டிருப்பார். பொறுப்பான பெற்றோர்களின் செயல்பாடுகள் இப்படித்தான் இருக்கும்.”

“நான் உளவாளியல்ல என்று எப்படி முடிவு கட்டினார் உங்களது இரண்டாவது தாயார்?”

“அவர் மகாராஜாவுக்கு அறிவுரை சொல்பவர். அமைச்சர் என்ற பெயரிலும் ஆலோசகர் என்ற பெயரிலும் அலங்காரமாக அமரக் கூடியவர்களில் பலர் ஆலோசனை என்ற பெயரில் வாய்க்கு வந்ததைப் பேசுவார்கள். அதே சமயம் எந்த பட்டமும் இல்லாமல் பதவியும் இல்லாமல் சர்வ சாதாரணமாக இருப்பவர்கள் சகலமும் அறிந்த அறிவாளிகளாக இருப்பார்கள். எனது இரண்டாவது தாயார் ஓர் அபூர்வப் பிறவி. அதிசயமான அறிவாளி. அன்பிற்கும் அடக்கத்திற்கும் அடையாளமாகத் திகழ்பவர். தெய்வப் பெண்மணி. அவர் உன்னைப் பரிசோதித்தது நீ செய்த பாக்கியம் மாளவிகா.”

நரசிம்மன் இவ்வாறு கூறி நிறுத்தியதும் சிறிது நேரம் மௌனமாக இருந்த மாளவிகா பிறகு பேசமுற்பட்டு “இளவரசே! நீங்கள் இந்தப் போருக்குப் போக வேண்டாம்” என்றாள் அவனது கால்களைத் தொட்டு.

“இது என்ன விந்தை? சகலத்திற்கும் ஏற்பாடு செய்து விட்டேன். இப்போது வந்து போர் வேண்டாம் என்று சொல்கிறாய். பிதற்றுகிறாய்.”

“இளவரசே! நான் நேற்றிரவு பயங்கரமான கனவொன்று கண்டேன். சிவந்த தலையை உடைய ஆந்தை ஒன்று எனக்கு முன்னால் வந்தது. ‘உன் கணவனைப் போருக்குப் போக

வேண்டாம் என்று சொல். போரில் கலந்து கொண்டால் மரணம் நிச்சயம் என்று சொல்' என்றது. எனக்கு அச்சமாக இருக்கிறது இளவரசே. போருக்குப் போக வேண்டாம்.''

"என்ன பேச்சு உன் பேச்சு சாரமற்றப் பேச்சு? ஆந்தை என்பது ஒரு பறவை. அது கனவில் வந்து பேசியது என்பது வெறும் பிரமை. போர் வேண்டாம் என்று நேரில் வந்து சொன்னாலும் கூட போர் நிச்சயம் என்று சொல்ல வேண்டியவள் நீ. கல்யாண புரத்தில் சாளுக்கிய மன்னர் சவால் விட்ட போது நீயும் தானே உடனிருந்தாய்? அந்தச் சவாலை நானோ மகாராஜா அவர்களோ புறக்கணிக்க முடியுமா? அது வீரமாகுமா?

நீலகேசியிடம் ஆசி பெறச் சென்றால் போர்ச் செயலுக்கு ஆசி வழங்க முடியாது என்கிறார். நீயோ போருக்கே போகக் கூடாது என்கிறாய். நீங்களெல்லாம் என்ன வென்று நினைத்துக் கொண்டு இப்படியெல்லாம் பேசுகிறீர்கள்? போருக்குப் போகா விட்டால் மரணம் எனக்கு வராமல் போய்விடுமா? அது எப்போது வருமென்று சொல்ல முடியுமா? என் வாழ்வில் இந்தப் போர் எனக்கு முதல் போர். தாயும் தந்தையும் போ என்று தோள் தொட்டுக் கூறியிருக்கும் போது நீ தாள் தொட்டுப் போகாதே என்றால் அது நியாயமாகுமா?

உனது ஊக்கம்தான் எனக்கு ஆக்கம் தரும் ஆறுதல் தரும் என்றல்லவா உன்னிடம் வந்தேன். என்னை நீ ஏமாற்றி விட்டாய் மாளவிகா. இதை நான் எதிர்பார்க்கவில்லை'' என்று சொன்ன நரசிம்மன் வாளை எடுத்து மேலே உயர்த்தி "இதோ பார். இதை என் சபதமாகவே சொல்கிறேன். என்னைப் படைத்த தெய்வத்தைத் தவிர யார் தடுத்தாலும் இந்தப் போரிலிருந்து நான் பின் வாங்க மாட்டேன். இது சத்தியம்'' என்றான்.

அவனது ஆவேசத்தையும் பிரதிக்ஞையையும் கண்ட மாளவிகா சற்றே ஆறுதல் அடைந்தாள்.

"போய் வாருங்கள் இளவரசே. உங்களைத் தடுக்கும் ஆற்றல் எனக்கு இனி இல்லை. போரில் கவனமாக இருங்கள். உயிரைப் பாதுகாத்த படி போரிடுங்கள். நீங்கள் வீர மரணமடைந்தால் நான் உடன்கட்டை ஏறுவேன். இது உறுதி'' என்றாள்.

"என்னைச் சூழ்ந்தவர்கள் எல்லாம் என் நலம் விரும்பிகளாக இருக்கும் போது என் உயிருக்கு எதுவும் நேராது மாளவிகா. கவலையை விடு. இப்போது நீ ஒரு பாட்டைப் பாடினால் அது எனக்கு இதமாக இருக்கும்'' என்றான் நரசிம்மன்.

அவள் பாடினாள்.

நெஞ்சத்திலே நீ நேற்று வந்தாய்
நேற்று முதல் ஓர் நினைவு தந்தாய்
நினைவு தராமல் நீ இருந்தால்
கனவுலகில் நான் வாழ்ந்திருப்பேன்
- நெஞ்சத்திலே

நூலிடை மேலொரு மேகலையாட
மாலைக் கனிகள் ஆசையில் வாட
ஏலப் பூங்குழல் இன்னிசை பாட
எண்ணம் யாவும் எங்கோ ஓட
காலையில் உறங்கி மாலையில் எழுந்தால்
கண்களிரண்டில் நிம்மதி ஏது?
- நெஞ்சத்திலே

காவிரி ஆறென நீர் விளையாட
கன்னி மலர்கள் தேன் மழையாகப்
பாதி விழிகள் காதலில் மூட
பாலில் விழுந்து பழம் போல் ஆட
நீ தர வேண்டும். நான் பெறவேண்டும்
நிலவினில் ஆடும் நிம்மதி வேண்டும்*
- நெஞ்சத்திலே

“நன்று. நன்று. இதை, இதைத்தான் நான் எதிர்பார்த்தேன். போர் முடியட்டும். உன் ஏக்கங்களைத் தீர்க்கிறேன். எனக்கு மட்டும் ஏக்கங்கள் இல்லையா என்ன? தீர்த்துக் கொள்கிறேன். இப்போது விடைபெறுகிறேன்” என்று கூறி அவளுக்கு முத்தமிட்டு விட்டு அகன்றான் நரசிம்மன்.

மாளவிகாவை நரசிம்மன் சந்தித்த பிறகு இரண்டு நாட்கள் கழித்து கானகலா** கோட்டையை நோக்கி ஹொய்சளர் படை புறப்பட்டது.

அந்தப் படையில் பத்தாயிரம் காலாட்படைகளும் ஐம்பது யானைகளும் இருந்தன. படைக்குத் தளபதியாக கங்கராஜன் இருந்தான். உதயணன் நூறு பேர் கொண்ட குறுவாள் படையுடன் சென்றான். இளவரசன் நரசிம்மனின் பாதுகாப்பிற்காக ஐம்பது வீரர்கள் அடங்கிய கருடப்படை அவனுக்கு வளையம் கட்டியது போல் பாதுகாப்பாகச் சென்றது. மன்னன் விட்டலராயனும் சேனாதிபதி பகாசூரரும் அவர்களுக்கு விடை கொடுத்து

* பாடலாசிரியருக்கு நன்றி.

** இது பேலூரிலிருந்து தெற்கே தற்கால கணக்குப்படி 200 கி.மீட்டர் தொலைவிலும் ஹளபீடிலிருந்து 250 கி.மீட்டர் தொலைவிலும் உள்ளது.

.ழுழுப்பினர். ஹொய்சளர் கொடிகளைத் தாங்கி ஆரவாரத்துடன் புறப்பட்ட அந்தப் படையைப் பார்த்த மன்னன்-

"நாம் நடத்திய படையில் கூட இப்படியொரு எழுச்சி ஏற்பட்டதாக நான் கருதவில்லை. இந்தப் படை ஏதோ ஒரு சிறப்புப் படை போல எனக்குத் தோன்றுகிறது. நீங்கள் என்ன கருதுகிறீர்கள் சேனாதிபதி?" என்று கேட்டான்.

"நீங்கள் கூறுவது சரிதான். இந்த எழுச்சிக்குக் காரணம் இளவரசர் என்றே தோன்றுகிறது. அவரது இளமையும் ஆர்வமும் படைவீரர்களைப் பற்றிக் கொண்டிருக்கிறது. சாதனையைப் படைக்கப் பிரதிக்ஞை எடுத்தவர்களைப் போல உற்சாகமாகவும் உறுதியாகவும் வீரர்கள் செல்கிறார்கள்" என்றார் சேனாதிபதி.

அதை அங்கீகரித்த மன்னன், "சேனாதிபதி! நாம் அடுத்தடுத்து போர்களையே சந்தித்துக் கொண்டிருந்ததால் படை பெருக்கம் நின்று போய்விட்டது. நீங்கள் தான் இடையில் பத்தாயிரம் வீரர்களைத் திரட்டி விகர்ணன் தலைமையில் அனுப்பி வைத்தீர்கள். அதற்குப் பிறகு படை திரட்ட யாருக்கும் அவகாச மில்லை. நரசிம்மனோடு சென்றிருக்கும் எண்ணிக்கைக் கழித்து விட்டால் நம்மிடம் இருக்கும் படை வீரர்களின் எண்ணிக்கை இருபதாயிரம் தான். இதில் பத்தாயிரம் பேர் கோட்டையைக் காக்கும் நிலைப் படையாக இருந்து விடும் பட்சத்தில் நமது போர்ப் படையின் எண்ணிக்கை வெறும் பத்தாயிரம் தான். இது மிகவும் குறைவு. எனது கணக்கீட்டின் படி கானகலா கோட்டைப் போருடன் நமது போர் நடவடிக்கை முடிந்து விடும் என்று தோன்றவில்லை. கானகலாவுக்கு அருகிலேயே ஹொசவீடு இருக்கிறது. அதுவும் சாளுக்கியர் ஆதிக்கத்தில் இருக்கும் பகுதி தான். அடுத்ததாக நாம் வெற்றி கொள்ள வேண்டிய பகுதி அதுவாகத்தான் இருக்கும். ஆக மொத்தம் இருபது நாடுகள் நம் கைவசம் இருக்கும். அங்கே எல்லாம் சிறிது காலத்திற்கு நமது படைப் பிரிவுகள் இருக்க வேண்டும். அத்து மீறும் நாடுகளை அமைக்க அந்தப்படை மிகவும் அவசியம். அதோடு நமது மாபெரும் இலக்கு சோழநாடு. அதைக் கைப்பற்றுவது நமது வாழ்நாள் சாதனையாக இருக்கும்" என்றான்.

"சோழ நாட்டை வெல்ல வேண்டும் என்ற எண்ணம் உங்களுக்கு எப்படி வந்தது?" என்று கேட்டான் சேனாதிபதி.

"எனக்கென்னவோ சாளுக்கியர் சக்தி க்ஷீணித்து வருவதாகவே தோன்றுகிறது. அவர்களது மகத்துவம் அழிந்து ராஷ்டிர கூடர்கள் முன்னேற்றம் அடைவார்கள் என்று கருதுகிறேன். ராஷ்டிர மன்னர் கோவிந்தர் சாளுக்கியர்களை முறியடித்தில்

தீவிரமாக இருக்கிறார். ஆகவே சாளுக்கியர்கள் அவர்களைச் சமாளிப்பதில் கவனம் செலுத்த வேண்டியதாக இருக்கும். இந்த நிலை சோழர்களுக்கும் தெரிந்த விஷயம் தான். ஆகவே அவர்கள் நம்மீது படையெடுத்து நம்மை முளையிலேயே கிள்ளி எறிய விரும்பலாம். நமது நாட்டின் தென்கிழக்கில் இருந்த கங்கநாட்டை வென்று சோழர்களின் பிரதிநிதிகள் அந்நாட்டில் தலைநகரான தழைக்காட்டில் ஆட்சி புரிந்து வருகிறார்கள். நமக்கும் சோழப் பேரரசுக்கும் தழைக்காடுதான் பாலம் போல் அமைந்திருக்கிறது. சோழர்கள் அந்தப் பாலத்தின் மூலம் நம்மை எளிதில் அணுகலாம். அவர்கள் அணுகுவதற்கு முன் நாம் தழைக் காட்டைக் கைப்பற்றி விட்டால் நாம் சோழ நாட்டிற்குள் ஊடுருவலாம். அதற்கெல்லாம் நம்மிடம் படைபலம் இருக்க வேண்டும். குறைந்தது ஐம்பதாயிரம் வீரர்களாவது இருக்க வேண்டும். புரவிப் படையும் யானைப் படையும் கணிசமாகத் திரட்ட வேண்டும். அதற்குப் பொருள் வசதி அவசியம். வேலாபுரத்தில் எழுப்பப்பட்டு வரும் ஆலயத்திற்கு கணிசமான நிதி அரசாங்கத்திலிருந்து சென்று கொண்டிருக்கும் நிலையில் படை திரட்டுவதற்கு நிதி வசதி போதாது. என்ன செய்வதென்று புரியவில்லை.''

''மகாராஜா! இளவரசரின் நண்பன் உதயணனைச் சந்தித்து குறுவாள் படையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தேன். அப்போது அவன் ஒரு விஷயத்தைப் பற்றிக் கூறினான். அது நம்பும் படி இல்லை. நம்பாமல் இருக்கவும் முடியவில்லை. அதுமட்டும் உண்மையாக இருந்து அதில் அவன் வெற்றியும் பெற்று விட்டால் நிதிப் பிரச்சனை முழுதுமாக நீங்கி விடும்.''

''அவன் என்ன சொன்னான்?''

சொன்னார் சேனாதிபதி.

மன்னன் வியப்படைந்து சற்றே மௌனமாக இருந்து விட்டு ''இது பகற்கனவு போல இருக்கிறது. இந்த விஷயம் உண்மையாகவே இருந்தாலும் இதன் மூலம் நிதி கிடைப்பதற்கு காலதாமதம் ஆகும். அது வரையில் படை திரட்டுவதைத் தள்ளிப் போட முடியாது'' என்றான்.

''மகாராஜா! இங்கே நிதிப் பிரச்சனை எங்கே வருகிறதென்றால் படையைத் திரட்டும் போது அல்ல. நீங்கள் கூறியது போல ஐம்பதாயிரம் வீரர்களைத் திரட்டி விடலாம். திரட்டிய பின் அவர்களுக்குச் சம்பளம் வழங்கும் போதும் பராமரிக்கும் போதும் தான் நிதி அவசியமாகிறது. தேசத்திற்காகச் சேவை செய்ய வீரர்கள் முன் வந்து படையில் சேர்ந்து விடுவார்கள்.

ஆனால் இவர்களது குடும்பத்திற்கான செலவு முக்கியமானது. அது அவர்களுக்கு அளிக்கும் சம்பளத்தில்தான் செய்ய முடியும். அதுவும் போர்களுக்கு போகும் போது அவர்களுக்கு ஊக்கத்தொகை கொடுப்பதும் போர்களில் வெற்றி பெறும் போது பரிசுகளை வழங்குவதும் மரபு. அதற்கெல்லாம் நிதி அவசியம். தற்போது படை திரட்டும் முயற்சியை ஆரம்பிக்கலாம். படை திரண்டபின் உதயணனின் திட்டத்தின் மூலம் நிதி திரட்டலாம்" என்றார் சேனாதிபதி.

"சேனாதிபதி! உதயணனை மட்டுமே நம்பி இருப்பது ஆபத்தானது. வேறு விதங்களில் நிதி திரட்டுவது பற்றியும் யோசித்து முடிவு செய்ய வேண்டும்."

"அதற்குப் பஞ்சப் பிரதானிகள் வந்தால்தான் சரியாக இருக்கும். நீங்கள் அந்த அமைப்பைக் கலைத்து விட்டீர்கள்."

"சேனாதிபதி! அரசாங்கத்தில் இருக்கும் அமைப்புகளும் குழுக்களும் நிரந்தரமானவையல்ல. தேவையான போது அவற்றை வைத்துக் கொள்ளவும் தேவையில்லாத போது அவற்றை அகற்றி விடுவதும் எங்கேயும் நடக்கக் கூடியது தான். ஒன்றை நீங்கள் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். அரசாங்கம் செம்மையாகச் செயல்பட ஆலோசனைகளைச் சொல்லும் குழுக்களும் அமைப்புகளும் காலப் போக்கில் அதிகார மையங்களாக மாறி அரசாங்கத்தை ஆட்டிப் படைக்க முயன்றால் அவற்றைக் கலைத்து விடுவதுதான் உகந்தது. அதைத்தான் நான் செய்தேன். நீங்கள் ஒருவர் தான் நிலைமையை உணர்ந்து கொண்டு பரிபூரணமாக எனக்கு உதவி செய்தீர்கள். நீங்கள் பஞ்சப் பிரதானிகள் அமைப்பு அவசிய மானது தான் என்று கருதினால் அதை ஏற்றுக் கொள்ள நான் தயாராக இருக்கிறேன்."

"மகாராஜா! நீங்கள் பெற்ற வெற்றிகள் பஞ்சப் பிரதானிகளை முற்றிலுமாக மாற்றி விட்டன. தங்களது கருத்துகள் பொய்த்து விட்டதாக அவர்கள் உணர்கிறார்கள். சாம்ராஜ்ய எழுச்சிக்கு முன் சம்பிரதாயங்கள் காலாவதியாக வேண்டும் என்பதைப் புரிந்து கொண்டார்கள். பஞ்சப் பிரதானிகளாக அவர்கள் மீண்டும் செயல்படவும் உங்களுக்கு உறுதுணையாக இருக்கிறார்கள்."

"அரசியலில் எதிரிகளை நண்பர்களாகும் போது எனது மகத்தான அதிகாரிகளை நான் ஏன் எதிரிகளாகக் கருத வேண்டும்? அவர்கள் விருப்பம் அது தான் என்றால் நான் வரவேற்கிறேன். அந்த அமைப்பை மீண்டும் கொண்டு வர உடனடியாக ஆணை பிறப்பிக்கிறேன். இந்தப் படை திரட்டும் பெருங் காரியத்தை

நீங்கள்தான் செய்ய வேண்டும். உங்கள் அனுபவத்திற்கு அந்தப் பணி மிகவும் உகந்ததாக இருக்கும்."

"அப்படியே ஆகட்டும் மகாராஜா. பணி எதுவானாலும் அது ராஜசேவை தான். ஆகவே நான் அப்பணியை உடனடியாகத் துவக்குகிறேன்."

"மிகவும் மகிழ்ச்சி" என்று சொன்ன மன்னன் பிறகு கானகலா கோட்டையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தான்.



நரசிம்மன் நடத்திச் சென்ற ஹொய்சளர் படை கானகலா கோட்டையை அடைய ஒரு வாரம் பிடித்தது.

"நாம் வருகிறோம் என்று எதிரிக்குத் தெரியும். நாமே முறைப்படி அவனுக்கு அதை அறிவித்தோம். இருந்தும் வழியில் நம்மைத் தடுக்கவோ அழிக்கவோ எதிரி முற்படாதது எனக்கு வியப்பாக இருக்கிறது இளவரசே" என்றான் கங்கராஜன்.

"வேலாபுரத்திற்கும் கானகலா கோட்டைக்கும் இடையில் உள்ள பகுதி பாதுகாக்கப்படவில்லை என்றாலும் நமது ஆதிக்கத்தில் தான் உள்ளது. அந்தப் பகுதியில் எதிரி நம்மைத் தாக்க வேண்டும் என்றால் முகாம் அமைக்க வேண்டும். அது நடக்காத காரியம் என்பது அவர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். அதனால் தான் அவர்கள் அந்த முயற்சியில் ஈடுபடவில்லை. எனக்கென்னவோ அவர்கள் கானகலா கோட்டையை மட்டுமே பெரிதாக நினைக்கிறார்கள். "கங்கராஜரே! நீங்கள் அந்தக் கோட்டையைப் பார்த்திருக்கிறீர்களா?" என்று கேட்டான் நரசிம்மன்.

"இல்லை இளவரசே" என்று சொன்ன கங்கராஜன் "படை வீரர்களுக்குத் தெரிந்திருக்கும். விசாரிக்கலாம்" என்றான்.

அப்போது வீரன் ஒருவன் தானாக வந்து "கானகலா கோட்டையைப் பற்றி எனக்குத் தெரியும். நான் அதைப் பார்த்திருக்கிறேன்" என்றான்.

இளவரசன் அவனைப் பார்த்து "உன் பெயர் என்ன?" என்று கேட்டான்.

"உத்தமன்" என்றான் அந்த வீரன்.

"சரி! நீ போகலாம்" என்று இளவரசன் கூறியதும் அவன் அகன்றான்.

"இளவரசே! அவனை ஏன் போகச் சொல்லி விட்டீர்கள்? நம்மிருவருக்கும் கோட்டையைப் பற்றித் தெரியாது. தெரிந்தவன்

சொல்கிறேன் என்றான். கேட்டுக் கொண்டால் நல்லது தானே? கோட்டையை நெருங்குவதற்கு முன்பாகவே அதைப் பற்றித் தெரிந்து கொண்டால் அதைத் தாக்குவதற்கான திட்டத்தை வகுத்துக் கொள்ளலாமே?" என்றான் கங்கராஜன்.

நரசிம்மன் சிறிது யோசித்து விட்டு "உத்தமனை வரச் சொல்லுங்கள்" என்றான்.

உத்தமன் வந்து நின்றதும் "உத்தமா! கோட்டையைப் பற்றி வீரர்கள் ஏதாவது பேசினார்களா?" என்று கேட்டான் இளவரசன்.

"ஆம் ஐயா. படையில் பெரும்பாலானவர்களுக்குக் கோட்டையைப் பற்றித் தெரிந்திருக்க வில்லை. நான் தான் அவர்களுக்கு அதைப் பற்றிச் சொன்னேன். நான் சொன்ன தகவல்களைத் தங்களிடம் தெரிவிக்கும் படிச் சொன்னார்கள். ஆகவே சொல்லுவதற்காக வந்தேன்" என்றான் உத்தமன்.

"நல்லது வீரனே! இப்போது சொல் கானகலா கோட்டையைப் பற்றி" என்றான் இளவரசன்.

"இளவரசே! கானகலா கோட்டை பிரம்மாண்டமானது. அதற்குள் இரண்டு லட்சம் மக்கள் வசிக்கிறார்கள். கோட்டையின் மதில் நூறடி இருக்கும். பாறைக் கற்களால் ஆனது. கோட்டையைச் சுற்றியிருக்கும் அகழியின் அகலம் நூறடி. ஆழம் நூறடி. அதில் இரண்டாயிரத்திற்கு மேற்பட்ட முதலைகள் உள்ளன. கோட்டைக்கு எட்டு வாயில்கள். வாயில் கதவுகள் எஃகினால் ஆனவை. கதவுகளில் கூரான வேல்கள் செருகப்பட்டிருக்கும். யானைகள் மோதினால் வேல்கள் அவற்றின் முகத்தைக் கிழிக்கும். கோட்டைக்கு அருகில் பெரு மரங்கள் கிடையாது. ஆகவே கோட்டைக் கதவுகளை உடைக்க மரத்தண்டுகளை உருவாக்க வாய்ப்பில்லை. கோட்டைக்குள் இருக்கும் எல்லா கட்டிடங்களிலும் ஆயுதம் ஏந்திய வீரர்கள் இருப்பார்கள்" என்றான் உத்தமன்.

அவனைப் போகச் சொல்லி விட்டு கங்கராஜன் கானகலா கோட்டையைத் தாக்குவதற்கான உபாயங்களைச் சொன்னான்.

இளவரசனுக்குத் திருப்தியாக இருந்தது.

ஆனால் இரண்டு நாட்கள் கழித்து கானகலா கோட்டைக்குச் சென்ற போது நரசிம்மன் அதிர்ந்தான்.

கோட்டையானது உத்தமன் கூறியது போல் இல்லை.





பலம் இருப்பவனிடம் ஆணவம் இருக்கும். ஆணவம் இருப்ப வனிடம் திமிர் இருக்கும். திமிர் இருப்பவனிடம் வறட்டுப் பேச்சுக்கள் இருக்கும். பேச்சுக்கள் இருப்பவன் சும்மா யிருக்க மாட்டான். பேசுவான். எழுது வான். பாடுவான். சீண்டுவான் – நரசிம்மன்



போர் வீரரான உத்தமன் கோட்டையைப் பற்றிக் கூறிய விவரங்களின் பேரில் கோட்டைக்குப் போகும் வழியிலேயே கோட்டை வாயிற் கதவுகளை இடிப்பதற்கான மரத்தண்டுகளைத் தயார் செய்து தனது படைகளோடு வந்த ஐம்பது யானைகள் மூலம் மாறி மாறி இழுக்க வைத்தான் தளபதி கங்கராஜன்.

அகழியில் உள்ள முதலைகளைச் சாகடிக்கக் கூடிய மூலிகைகளையும் செல்லும் வழியில் சேகரித்தான். நூறடி உயர மதில் சுவரின் மீது கயிறுகளை வீசவும் அக்கயிறுகளைப் பற்றிக் கொள்ளவும் பயன்படக் கூடிய உடும்புகளையும் கொக்கிகளையும் வாங்கிக் கொண்டான். கோட்டை மதில் மீது நிற்கும் எதிரிகளை வீழ்த்த குத்தீட்டிகளையும் தயார் செய்து கொண்டான். அந்த ஏற்பாடுகளையும் செய்வதற்காகப் பயண நேரம் ஒரு நாள் கூடுதலாக ஆயிற்று.

“இப்போதுதான் எனக்குத் திருப்தியாக இருக்கிறது இளவரசே. கானகலா கோட்டையைக் கைப்பற்றி விட முடியும் என்ற நம்பிக்கையும் வந்திருக்கிறது” என்றான் கங்கராஜன்.

“தளபதி! கோட்டைக்குள் இரண்டு லட்சம் மக்கள் இருப்பதாகச் சொன்னான் உத்தமன். அவர்கள் அவ்வாறு அதிக எண்ணிக்கையில் இருப்பது கோட்டைக்குள் நாம் நுழைவதற்குத் தடையாக இருக்கும்” என்றான் இளவரசன்.

“உள்ளே இருப்பது வீரர்கள் என்றாலும் சரி மக்கள் என்றாலும் சரி எல்லோரையும் நாம் எதிரிகளாகவே கருத வேண்டும். போர்க் காலங்களில் வீரர்கள் என்றும் மக்கள் என்றும் பிரித்துப் பார்த்துப் போரிட முடியாது. கண்ணில் பட்டவர்களை வெட்டிச் சாய்த்துக் கொண்டு போக வேண்டும்” என்றான் கங்கராஜன்.

“அப்பாவி மக்களை எப்படிக் கொல்ல முடியும் தளபதி?”

“அப்படிப் பார்த்தால் வீரர்கள் கூட மக்கள் தானே தவிர வானத்திலிருந்து வந்த வானவர்கள் அல்ல. வானரர்களும்

அல்ல. பல அரசர்கள் போர் வரும் போது மக்களிடம் வாளைக் கொடுத்துப் போரிடச் செய்வார்கள். சில நேரங்களில் அவர்களை முன்னே அனுப்பி கவசத்தைப் போலப் பயன்படுத்திக் கொள்வார்கள். ஆகவே மக்களையும் நாம் எதிரிகளாகவே பார்க்க வேண்டும்."

"கங்கராஜரே! போர் என்று வரும் போது கோட்டையில் இருக்கும் பெண்கள், குழந்தைகள், முதியோர்கள், அங்கஹீனர்கள் ஆகியோரை அகற்றி விடுவார்கள் என்று கேள்விப் பட்டேன்."

"அது அந்தக் காலம் இளவரசே. இந்தக் காலத்தில் அத்தகைய மரபுகளை பெரும்பாலான மன்னர்கள் கடைப் பிடிப்பதில்லை. வடபாரதத்தில் துருக்கிய நாட்டவர்கள் பெரும் படைகளோடு யமுனையாற்றங்கரை நகரங்களைப் பிடித்திருக்கிறார்களாம். அவர்கள் கண்ணில் பட்டவர்களை வெட்டி வீழ்த்துகிறார் களாம். அரசன் முதல் ஆண்டி வரை அவர்கள் இரக்கமின்றி கொன்று குவிக்கிறார்களாம். நிலைமைகள் எப்படியெப்படியோ மாறிக் கொண்டு வருகின்றன இளவரசே. நாம் யோசித்துக் கொண்டு தயங்கிக் கொண்டிருக்கக் கூடாது."

"உத்தமன் விவரித்த கோட்டை அமைப்பு - நீங்கள் தெரிவித்த மரபு மீறல்கள் ஆகியவற்றையெல்லாம் பார்த்தால் கானகலா கோட்டைத் தளபதி ஜெகதேவன் பலமானவனாகத்தான் இருப்பான் போலிருக்கிறது" என்றான் இளவரசன்.

ஆனால் கானகலா கோட்டையை அடைந்த போது கங்கராஜனும் இளவரசனும் அதிர்ச்சியே அடைந்தார்கள். அதை ஏமாற்றம் என்றும் சொல்லலாம்.

போர் வீரன் உத்தமன் கூறியது போல கானகலா கோட்டை இல்லை. அவன் கூறிய ஒரு விஷயம் கூட அங்கில்லை. உத்தமன் பொய் சொல்லி ஏமாற்றி விட்டான் என்பது புரிந்தது.

"எங்கே அந்த அற்பப் பதர் உத்தமன்? கூப்பிடுங்கள்" என்று கர்ஜித்தான் கங்கராஜன்.

"அவன் இருக்க மாட்டான் தளபதி. எதற்காக அழைக்கிறீர்கள். உத்தமன் சாளுக்கிய உளவாளி. நம்மோடு இருந்து தவறான தகவல்களையும், பொய்களைச் சொல்வதுமே அவனது பணி. அதை அவன் நிறைவாகச் செய்திருக்கிறான்" என்றான் இளவரசன்.

"இவனுக்குப் பெயர் உத்தமன். அதர்மத் தனங்களைச் செய்பவனுக்குப் பெயர் உத்தமனா?"

“எதற்காகக் கோபப்படுகிறீர்கள்? அவனது பெயர் கூட வேறாக இருக்கலாம்” என்றான் இளவரசன்.

கங்கராஜன் அமைதியடைந்து கானகலா கோட்டையை நோக்கினான்.

சதுரமான பரப்பு இருந்தது.* அப்பரப்பைச் சுற்றி வெறும் பத்தடி உயரத்திற்குச் சுவர் எழுப்பப்பட்டிருந்தது. கற்சுவர் என்பதைத் தவிர வேறு சிறப்பு எதுவும் அதற்கு இருக்கவில்லை. அந்தப் பரப்பில் பாதியளவு இடத்தில் சாளுக்கிய வீரர்கள் ஆயிரம் பேர் ஆயுதங்களோடு குழுமியிருந்தார்கள். மீதிப் பாதிப் பரப்பில் இயற்கையாக இருந்தப் பாறைகளுக்கு மேலே கோட்டை கட்டப்பட்டிருந்தது.

கோட்டைச் சுவற்றின் உயரம் ஐம்பதடி இருக்கலாம். கோட்டையானது சீராக இல்லாமல் முன்னும் பின்னுமாய் விசாலமாக இருந்தது. சுவற்றுக்கு மேலே தளங்கள் இருந்தன. அங்கே வீரர்கள் இருந்தார்கள். கோட்டைச் சுவற்றில் பல இடங்களில் துளைகள் தெரிந்தன. சமதளத்திலிருந்து கோட்டையானது பாறைகளுக்கு மேலே கட்டப்பட்டிருந்ததால் அவற்றுக்குள் நுழைய படிக்கட்டுகள் இருந்தன. வெளியே தெரிந்தவை சில படிக்கட்டுகள்தான். அதைத் தவிர உள்பகுதியில் கோட்டைக்குள் செல்ல படிக் கட்டுகள் இருக்கும் என்பது ஊகிக்கக் கூடியதாக இருந்தது. பல இடங்களில் மரங்கள் வளர்ந்திருந்தன. கோட்டைக்குள்ளும் பல மரங்களின் உச்சிகள் தெரிந்தன. பற்பல ராட்சத பீப்பாய்களைப் போல கோட்டைப் பகுதிகள் நாற்புறமும் இருந்தன. அவை அனைத்திற்கும் செல்ல முன்புறம் மட்டும் வெளிப்படையான படிக்கட்டுகள் இருந்தன. மற்ற எல்லாப் பகுதிகளிலும் பாறைகளும் அவற்றுக்கு மேல் செங்குத்தான சுவர்களும் இருந்தன. சுவர்களை அணுக வேண்டுமென்றால் பாறைகளில் தொத்தி ஏறவேண்டும். அப்படி ஏற முற்பட்டால் கோட்டையின் மேல் தளத்திலிருந்து பலவிதமானத் தாக்குதல் நடைபெறும். ஆகவே அப்பகுதிகள் மூலமாகக் கோட்டைக்குள் புகுவது என்பது இயலாத காரியம்.

வீரன் உத்தமன் சொன்னது போல அகழி இல்லை. எட்டு வாயில்கள் இல்லை. எஃகுக் கதவுகள் இல்லை. மக்களோ கட்டிடங்களோ இல்லை.

“எல்லாவற்றையும் பார்த்து விட்டு “என்ன சொல்கிறீர்கள் தளபதி?” என்று கேட்டான் இளவரசன் நரசிம்மன்.

---

* இன்றைய கணக்குப்படி ஐந்து ஏக்கர் இருக்கலாம்.

"இது மக்கள் வாழும் கோட்டையல்ல இளவரசே. முழுக்க முழுக்கப் போர் வீரர்கள் இருக்கும் போர்க் கோட்டை. கோட்டையின் அமைப்பிலிருந்து பார்த்தால் இது பலம் மிகுந்த கோட்டைதான். உள்ளே என்ன ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன என்பதை உள்ளே சென்றாலொழிய அறியமுடியாது. காரணமில்லாமல் சாளுக்கிய மன்னன் சவாலிடவில்லை" என்றான் கங்கராஜன்.

"அதைப் பற்றி ஆராய வேண்டாம் தளபதி. போருக்கு வந்து விட்டோம். அதைப் பற்றிப் பேசுவோம்" என்றான் இளவரசன்.

பிறகு அவனே பேசமுற்பட்டு "கோட்டையின் விஸ்தீரணம் மற்றும் பரிமாணம் ஆகியவற்றைப் பார்க்கும் போது கோட்டைக்குள் எவ்வளவு வீரர்கள் இருக்கக்கூடும்!" என்று கேட்டான்.

"இளவரசே! இது போன்ற கோட்டைகள் படை முகாம்களைப் போன்றது. அருகில் போர் நடக்கும் போது உதவிக்குப் படைகளை அனுப்பி வைக்கும் பணியை இது போன்ற கோட்டைகள் செய்யும். ஆனால் சாளுக்கிய தளபதி இங்கிருக்கிறான் என்றால் இதைப் போர்க் கோட்டையாகவே மாற்றியிருக்க வேண்டும். எப்படியாவது நம்மை முறியடித்து இழந்த நாடுகளை மீட்க வேண்டும் என்ற சவால் காரணமாக இக்கோட்டை போர்க் கோலம் பூண்டிருக்கிறது. ஆகவே கோட்டைக்குள் பத்தாயிரம் வீரர்களுக்கு மேலாகக் கூட இருக்கலாம்" என்றான் கங்கராஜன்.

"தளபதி! கோட்டைக்கு வெளியே சாளுக்கிய வீரர்கள் இருக்கிறார்கள். அவர்களது எண்ணிக்கை ஆயிரம் இருக்கலாம். கோட்டைக்கு உள்ளே நீ கூறியது போல் பத்தாயிரம் வீரர்கள் இருப்பதாகவே வைத்துக் கொள்வோம். மிகவும் உயரமாக இருக்கும் கோட்டைக்குள் இருக்கும் பத்தாயிரம் வீரர்களுக்கு உணவு எப்படிப் போகும்?" என்று கேட்டான் இளவரசன்.

"இளவரசே! கல்யாணபுரத்தில் நீங்கள் சாளுக்கிய மன்னனது சவாலை ஏற்றுக் கொண்ட போதே இந்தக் கோட்டையைப் பலப்படுத்த ஆயத்தங்கள் தொடங்கியிருக்கும். அந்த வகையில் தேவையான அளவு உணவுப் பொருட்கள் சேமிக்கப்பட்டிருக்கும். அதோடு இந்த கோட்டையைப் பிற கோட்டைகளைப் போல முற்றுகையிட முடியாது. உள்ளே இருக்கும் தளபதி தன் படையுடன் வெளிப்பட்டால் ஒரே நாளில் போர் முடிந்து விடும். ஆகவே இங்கே உணவுப் பிரச்சனை இல்லை. இருந்தால் அது நமக்குத்தான்" என்றான் கங்கராஜன்.

அப்போது உதயணன் குறுக்கிட்டு "வேண்டுமனால் நான் எந்த விதத்திலாவது கோட்டைக்குள் சென்று நிலவரத்தை அறிந்து வரட்டுமா?" என்று கேட்டான்.

"அதெல்லாம் வேண்டியதில்லை உதயணா. கோட்டைக்குள் எது வேண்டுமானாலும் இருக்கட்டும். நிச்சயமாக இது மாயக் கோட்டையாக இருக்க முடியாது. என் திட்டம் என்னவென்றால் ..." என்று இளவரசன் பேசமுற்பட்டபோது-

கோட்டை உச்சியிலிருந்து பெரும் முரசு ஒன்று அடிக்கப் பட்டது.

அதையடுத்து கோட்டைக்குள்ளேயிருந்து புரவி வீரன் ஒருவன் வெளிப்பட்டு இளவரசனை நோக்கி வேகமாக வந்தான். உயரத்திலிருந்து தாழ்வாக அவன் வந்த விதமானது பறந்து வருவது போல இருந்தது.

அவனை யாரும் தடுக்கவில்லை.

ஹொய்சளப் படைக்கு முன் வந்து புரவியை நிறுத்தினான்.

"இளவரசர் அவர்களுக்கு எங்கள் தளபதி ஜெகதேவர் அனுப்பிய செய்தி" என்று கூறி கையில் இருந்த ஓலையை வீரன் ஒருவனிடம் கொடுத்து விட்டு வந்த வேகத்திலேயே திரும்பிச் சென்றான்.

ஓலை இளவரசனுக்கு அனுப்பப்பட்டது.

"இளவரசனே! இது விளையாட்டு மைதானமல்ல. போர்க்களம். வறட்டு வீரம் காட்ட வாளை உயர்த்துவதை விட்டு விட்டு ஆயுதங்களைத் தியாகம் செய்யது ஓடிவிடு. நான் ஈவிரக்கமற்றவன். என் கைகளில் சிக்கினால் துண்டு துண்டாக வெட்டுவேன். யாருக்கும் கருணை காட்ட மாட்டேன். வீடு போனால் வீடு வரும். கூடு போனால் கூடு வரும். காடு போனால் காடு வரும். நாடு போனால் நாடு வரும். உயிர் போனால் மீண்டும் வராது. எனக்கு உயிரை எடுக்கத்தான் தெரியும். கொடுக்கத் தெரியாது. ஆகவே அனைவரும் உயிரைக் காத்துக் கொள்ள இங்கிருந்து விலகி வந்த இடத்திற்கே சென்று விடுங்கள்." என்றிருந்தது ஓலையில்.

ஓலையைச் சாளுக்கியத் தளபதி ஜெகதேவன்தான் அனுப்பியிருந்தான்.

"இவனுக்கு ஏன் இந்த ஈனபுத்தி? போருக்காக வந்திருப்ப வர்கள் இவன் மிரட்டினால் ஆயுதங்களைப் போட்டு விட்டு ஓடி விடுவார்களா? ஒரு வேளை அவனது பழக்கம் இப்படித் தானா?" என்று எரிச்சலோடு கேட்டான் கங்கராஜன்.

"கங்கராஜரே! பலம் இருப்பவனிடம் ஆணவம் இருக்கும். ஆணவம் இருப்பவனிடம் திமிர் இருக்கும். திமிர் இருப்பவனிடம் பேச்சுக்கள் இருக்கும். பேச்சுக்கள் இருப்பவன் சும்மாயிருக்க மாட்டான். பேசுவான். எழுதுவான். பாடுவான். சீண்டுவான். சாளுக்கியத் தளபதிக்கு இது பிடிக்கும் போலிருக்கிறது. அதை வெளிப்படுத்திக் கொள்கிறான். அதை விடுங்கள். நமது திட்டத்தைச் சொல்கிறேன். நமது படையில் ஐயாயிரம் பேர் யானைகளை முன்னேயனுப்பி வெளிச் சுவர்களை உடைத்துச் சென்று வெளியில் இருக்கும் ஆயிரம் சாளுக்கிய வீரர்களை துவம்சம் செய்யட்டும். அவர்களை அகற்றாமல் கோட்டைக்குள் நுழைய முடியாது" என்று சொல்லிவிட்டு உதயணனைப் பார்த்து "உதயணா! நீ உன் நூறு வீரர்களுடன் கோட்டையைச் சுற்றிச் சென்று கோட்டை மதிலில் தெரியும் வீரர்கள் தலையின் மீது குறுவாட்களை எய்து கொள்ளுங்கள்" என்றான்.

"அப்படியானால் இங்கே இருக்கும் ஐயாயிரம் வீரர்களுடன் நீங்கள் இருங்கள் இளவரசே. நான் ஐயாயிரம் வீரர்களையும் யானைகளையும் அழைத்துக் கொண்டு உள்ளே செல்கிறேன்" என்றான் கங்கராஜன்.

"இல்லை தளபதி. நீங்கள் இங்கே இருங்கள். இது என் முதல் போர். நான் தான் போரை முதலில் துவங்க வேண்டும்."

"கருடப் படை உங்களைச் சூழ்ந்தபடி இருக்கட்டும். நீங்கள் இளவரசர் என்பது எதிரிகளுக்குத் தெரியக் கூடாது. ஏனென்றால் நீங்கள் அனைவருக்கும் முக்கியம்" என்றான் கங்கராஜன்.

அதையடுத்து போர் முரசுகள் ஒலித்தன. ஹொய்சளர் முரசுகள் ஒலித்ததும் அந்த ஒலி எழுச்சியை அடக்கும் விதமாகக் கோட்டைக்குள்ளிருந்து பெரும் டமாரங்கள் ஒலித்தன. கொம்புகள் முழங்கின.

"தாக்குங்கள். கொல்லுங்கள்" என்ற கோஷங்கள் இரு தரப்பிலும் எழுந்தன.

ஹொய்சளப் படைகள் வெளிச்சுவற்றை யானைகளால் பிளந்தன. பிரவேசித்தன. யானைகள் ஐம்பதாக இருந்ததால் அவை பிளிறியபடி முன்னேறி உள்ளேயிருந்த சாளுக்கிய வீரர்களை துவம்சம் செய்தன.

இளவரசன் நரசிம்மன் தனது ஐயாயிரம் வீரர்களை இரண்டாகப் பிரித்து பக்க வாட்டில் சாளுக்கியப் படைகளைத்

தாக்கியதால் சாளுக்கிய வீரர்கள் அறை பட்டார்கள். அதே சமயம் ஹொய்சள வீரர்கள் மீது கோட்டைச் சுவற்றில் இருந்தத் துளைகள் மூலம் அம்புகள் வந்து விழுந்தன.

போர் துவங்கிய அதே வேளையில் உதயணன் தனது வீரர்களை அழைத்துக் கொண்டு கோட்டையைச் சுற்றினான். அவனும், அவனது வீரர்களும், அவர்களது குறுவாட்களும் தயாராக இருந்தும் கோட்டை உச்சிகளிலும் தளங்களிலும் வீரர்கள் யாரும் தலைகாட்டவில்லை. எனவே உதயணன் பாறைகளுக்கு அருகே சென்று கயிற்றில் உடும்புகளோடு இணைத்துச் சுவற்றில் எரிந்தான். அவனது வீரர்கள் பலர் கோட்டைச் சுவற்றில் பல இடங்களில் அவ்வாறு செய்து கோட்டைக்கு மேல் பகுதிக்கு வந்து உட்பகுதியில் பல குறுவாட்களை புயல் வேகத்தில் எரிந்து விட்டு கீழே இறங்கினார்கள். எதிர்பாராத குறுவாட்கள் தாக்குதலால் கோட்டைக்குள் பலர் இறந்து விடவே சாளுக்கிய வீரர்கள் பலர் மதில் மீது வந்தார்கள்.

உதயணன் அதைத்தான் எதிர்பார்த்தான். குறுவாட்களை வீசி விட்டு கீழே இறங்கிய அவனும் அவனது வீரர்களும் பாறை மறைவுகளில் ஒதுங்கி மதில் மீது தலைகாட்டிய சாளுக்கிய வீரர்களைப் பார்த்து குறுவாட்களை வீசி அவர்களை வீழ்த்தினார்கள். அவர்கள் மறைவில் இருந்ததால் கோட்டை மதில்மீதிருந்த வீரர்களால் அவர்களை வீழ்த்த முடியவில்லை.

இந்த நிலையில் கோட்டைக்குள்ளிருந்து பெரிதாகச் சங்கொலி ஒன்றெழுந்தது. அதையடுத்து கோட்டைக்கு வெளியே ஐயாயிரம் வீரர்களோடு அணிவகுத்து நின்றிருந்த கங்கராஜனின் படையைப் பின்புறத்திலிருந்து சாளுக்கியர் படையொன்று திடீரெனத் தோன்றித் தாக்கியதால் கங்கராஜன் கொம்புகளை ஊதி அச்சாளுக்கியப் படையுடன் மோதச் சொன்னான்.

இந்த எதிர்பாராத தாக்குதலை பாறைகளின் மறைவிலிருந்து உதயணன் கவனித்ததும் மயில் கத்துவது போல கட்டையான குரலை எழுப்பியதும் அவனது வீரர்கள் ஒன்று சேர்ந்து போர் நடந்து கொண்டிருந்த பிராந்தியத்திற்குச் சென்று சாளுக்கியர் வீரர்கள் மீது குறுவாட்களை எய்தார்கள்.

அவர்களுக்கு வேண்டிய குறுவாட்கள் அவர்களுக்குப் பின்னாலேயே பாரவண்டி ஒன்றில் வந்து கொண்டிருந்தது. அதை யார் கவனித்தார்களோ சாளுக்கியர் தரப்பிலிருந்து வெளிப்பட்ட வாணம் ஒன்று அந்த வண்டியின் மீது விழுந்து தீயை உண்டாக்கி விடவே உதயணன் வீரர்கள் சிலர் அங்கு பாய்ந்து சென்று

வண்டியில் இருந்த குறுவாட்களை அகற்றினர். வெற்று வண்டி தீப்பிடித்து எரிந்தது.

இடிக்கப்பட்ட வெளிச்சுவற்றை உடைத்து உள்ளே சென்ற இளவரசன் நரசிம்மனின் படைகளும் யானைகளும் சாளுக்கிய வீரர்களை அதாஹதம் செய்தன. கோட்டைக்குள்ளிருந்து துளைகள் வழியாக வந்த சில அம்புகள் மட்டுமே ஹொய்சளப் படை மீது வந்து விழுந்தன. மற்றவை வீரர்கள் இல்லாத இடத்தில் விழுந்து பயனற்றுப் போயின. யானைகள் மீது அம்புகள் சில விழுந்தாலும் அவை அவற்றைப் பொருட் படுத்தாமல் முன்னேறிச் சென்று சாளுக்கிய வீரர்களை துவம்சம் செய்தன.

ஏறக்குறைய நண்பகலில் ஆரம்பித்த போர் மாலை நேரம் வரை நீடித்த போது கோட்டைக்குள்ளிருந்து போர் நிறுத்தத் தாரை ஒலித்தது. மாலை நேரத்திற்குப் பிறகு போரிடக் கூடாது என்ற விதி பலபோர்களில் புறக்கணிக்கப்பட்டாலும் கானகலா கோட்டைத்தளபதியான ஜெகதேவன் கடைப்பிடித்ததால் இளவரசன் நரசிம்மன் அதற்கு மதிப்பளித்து போர் நிறுத்தச் சங்கை ஒலித்தான். போர் தற்காலிகமாக நின்றது.



கோட்டையின் வெளிப்புறப் பகுதியில் இருந்தபடி போரிட்டச் சாளுக்கிய வீரர்களில் பெரும் பகுதியினர் வீரமரண மடைந்தார்கள். உயிர் பிழைத்தவர்கள் தப்பியோடினார்கள். எனவே கோட்டையின் வெளிப்புறம் ஹொய்சளப் படையால் கைப்பற்றப்பட்டிருந்தது. அதிலேயே இளவரசனும் கங்கராஜனும் அமர்ந்தார்கள். உதயணனும் அமர்ந்தான்.

“நமது தரப்பில் மரணம் எவ்வளவு இருக்கும் கங்கராஜரே?” என்று கேட்டான் இளவரசன்.

அவனுக்கு இது முதல் போராக இருந்தாலும் போரில் மும்முரமாக ஈடுபட்டதாலும் மார்பில் சில காயங்கள் உண்டாகியிருந்தன. எரிச்சலைத் தரக்கூடிய அக்காயங்கள் அவனுக்கு ஆனந்தத்தையே தந்தன.

“முதல் போர். முதல் புண்” என்று தனக்குள் சொல்லிக் கொண்டு பூரிப்படைந்திருந்தான்.

கங்கராஜன் பேசமுற்பட்டு “நமது தரப்பில் ஆயிரம் பேர் வீரமரணமடைந்திருப்பார்கள் இளவரசே. எதிரி தரப்பில் இரண்டாயிரம் பேர் இருக்கலாம். நமது படை எண்ணிக்கை பத்தாயிரமாக இருந்ததால் இது சாத்தியமாயிற்று” என்றான் கங்கராஜன்.

"இது நமது வெற்றி என்று கருத என்னால் முடியவில்லை. அதோடு எனக்கொரு விஷயம் புரியவில்லை" என்றான் இளவரசன்.

"எதைச் சொல்கிறீர்கள்?"

"நமது படை பத்தாயிரம் என்பது இங்கே இருக்கும் சாளுக்கிய தளபதிக்கு ஒற்றர்கள் மூலம் தெரிந்திருக்கும். நாம் இங்கு வந்து சேர்ந்த பின் தளபதி கோட்டையிலிருந்து பார்த்திருந்தால் கூட ஊகித்திருக்க முடியும். அப்படியிருக்கும் போது சாளுக்கிய தளபதி நமக்கு முன்பும் பின்புமாக வெறும் இரண்டாயிரம் வீரர்களை மட்டும் மோதவிட்டது எந்த விதத்தில் விவேகமானது என்பது புரியவில்லை. ஏறக்குறைய அவர் அனுப்பிய வீரர்கள் சாகடிக்கப்பட்டு விட்டார்கள். அழிக்கப்பட்டு விட்டார்கள். இது விசித்திரமாக இல்லையா?" என்று கேட்டான் இளவரசன்.

அவனது சந்தேகம் கோட்டைக்குள் இருந்த உபதளபதிகளிடம் இருந்தது.

தளபதியிடம் கேட்கவும் செய்தார்கள்.

தளபதி ஜெகதேவன் இடிஇடி என்று சிரித்தார்.

அதற்கான காரணத்தையும் சொன்னார்.

உபதளபதிகள் வியந்தார்கள்.

"இப்படியும் ஒரு தளபதி இருப்பாரா?" என்று இடிந்து போகவும் செய்தார்கள்.





சில சந்தேகங்களை உடனடியாகத் தீர்த்துக் கொண்டால்தான் மேற்கொண்டு நிம்மதியாகக் காரியமாற்ற முடியும். பொறுமையாக இருந்துவிட்டால் ஈமக் காரியங்களைத்தான் செய்ய முடியும் — உபதளபதி




ஹொய்சளர் படை வருவதாகச் செய்தி வந்த போதே கானகலா கோட்டையின் சாளுக்கியத் தளபதியான ஜெகதேவன் அப்படையைத் தாக்குவதற்கு இரண்டாயிரம் வீரர்களை அனுப்பச் சொன்னான். ஆயிரம் வீரர்களை கோட்டைக்கு முன்னாலிருந்த வெட்ட வெளியிலும் மற்ற ஆயிரம் வீரர்களை ஹொய்சளர் படை வந்த பின் அதற்கு பின்னாலும் வந்து தாக்கும்படிக் கூறினான்.

“தளபதியாரே! ஹொய்சளப் படையின் எண்ணிக்கை பத்தாயிரம் இருக்கும் என்று கேள்விப்பட்டோமே! அப்படையைத் தாக்க வெறும் இரண்டாயிரம் வீரர்களை மட்டும் அனுப்பச் சொல்கிறீர்களே!” என்று கேட்டார்கள் உபதளபதிகள்.

“சொல்வதைச் செய்யுங்கள்” என்று கறாராகச் சொன்னான் ஜெகதேவன்.

உபதளபதிகள் அவ்வாறே செய்தார்கள். போரும் நடந்தது. ஏறக்குறைய இரண்டாயிரம் பேரில் இரண்டொருவரைத் தவிர அனைவரும் வீரமரணம் அடைந்தார்கள்.

அதைச் சொல்ல வந்த உபதளபதிகள் “தங்களை எங்களால் புரிந்து கொள்ள முடியவில்லை தளபதியாரே! இது என்னப் போர்முறை என்பது விளங்கவில்லை” என்றார்கள்.

“சாளுக்கிய சிங்கம் - சளைக்காத சிறுத்தை - சீர் மல்கும் தளபதி - ஒரே தளபதி ஜெகதேவனின் போர்முறை” என்றான் ஜெகதேவன்.

ஜெகதேவனின் தற்புகழ்ச்சி உபதளபதிக்குக் கசப்பாக இருந்தது.

சொற்ப நேரத்தில் அர்த்தமில்லாமல் இரண்டாயிரம் வீரர்களை எதிரிக்குக் காவு கொடுத்ததைப் போய் தனது போர்முறை என்று ஜெகதேவன் கூறியதைக் கேட்ட அவர்களுக்கு அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லை.

ஜெகதேவனின் சாமர்த்தியம் சாளுக்கிய நாட்டில் பலராலும் பேசப்படும் அம்சம் என்றாலும் ஒரு பயனும் இல்லாமல் இரண்டாயிரம் வீரர்களை பலி கொடுத்தது சாமர்த்தியத்தின் அடையாளமாக நினைக்கத் தோன்றவில்லை.

அதை எப்படி அழைப்பது என்றும் அவர்களுக்குப் புரியவில்லை.

ஜெகதேவனின் சாமர்த்தியம் உண்மையாக இருக்குமானால் போரைத் தொடங்கிய சொற்ப நேரத்தில் ஹொய்சளர் தரப்பில் இரண்டாயிரம் வீரர்கள் அழிக்கப்பட்டிருக்க வேண்டும் என்பது அவர்களது கருத்தாக இருந்தது.

இப்படிச் சுளையாக இரண்டாயிரம் வீரர்களை எதிரிக்குப் படையலாகத் தந்து விட்ட இத்தளபதியை நம்பி சாளுக்கிய மன்னர் எப்படி அனுப்பி வைத்தார் என்று தங்களுக்குள் கேட்டுக் கொள்ளவும் செய்தார்கள்.

இதே போல் தொடர்ந்து தளபதி நடந்து கொண்டால் என்ன செய்வது என்று அச்சமும் அவர்களுக்கு லேசாக உண்டாயிற்று.

ஓர் உபதளபதி மட்டும் துணிச்சலடைந்து "இரண்டாயிரம் வீரர்களைத் தேவையில்லாமல் பலிகொடுப்பது தங்கள் போர்முறை என்று சிறப்பாக நீங்கள் கூறிக் கொள்வது எனக்கு வேதனையாக இருக்கிறது. இது போன்ற அழிவுப் போர் முறையை இந்த நாட்டில் மட்டுமல்ல எந்த நாட்டிலும் கண்டதில்லை. கேள்விப்பட்டதில்லை" என்றான்.

"நீ கேள்விப்பட்ட விஷயம் ஆயிரமாயிரம் இருக்கலாம். அதற்காக நான் உனக்கு வகுப்பெடுக்க முடியாது" என்றான் ஜெகதேவன் ஆணவத்துடன்.

"நான் பேசுவது வேறு. நீங்கள் பேசுவது வேறு. மகோன்னதமான மா சாளுக்கியப் படை வீரர்கள் காரண காரியமில்லாமல் பலியாவதை நாங்கள் எப்படி ஏற்கக் கூடும் தளபதி? உங்கள் நடவடிக்கை எங்களுக்குள் அச்சத்தை உண்டாக்குகிறது. இதில் உங்களுக்கு சம்மதம் தானா?"

இதைக் கேட்டு இடிஇடியெனச் சிரித்தான் ஜெகதேவன்.

"உபதளபதி! தலைவனின் மீது நம்பிக்கை வைத்து அவனது நடவடிக்கைகளை ஏற்க வேண்டும். தலைவனின் நடவடிக்கை மீது சந்தேகம் வந்தால் காத்திருந்து பார்க்கும் பொறுமை இருக்க வேண்டும். தலைவனாக ஏற்றவர்களுக்கு இது தான் அழகு.

குருவாக ஏற்றச் சீடர்களுக்கு இதுதான் சரி. தளபதியாக ஏற்ற வீரர்களுக்கு இது தான் வழி. உங்களுக்கு நம்பிக்கையும் இல்லை. பொறுமையும் இல்லை.”

“ஐயா! சில சந்தேகங்களை உடனடியாகத் தீர்த்துக் கொண்டால்தான் மேற்கொண்டு நிம்மதியாகக் காரிய மாற்ற முடியும். பொறுமையாக இருந்து விட்டால் ஈமக் காரியங்களைத்தான் செய்ய முடியும். இரண்டாயிரம் வீரர் களைப் பலிகொடுத்ததற்குச் சரியான காரணம் தெரிந்தால்தான் வீரர்கள் நிம்மதி அடைவார்கள்.”

“உன் பேச்சிலேயே பதில் இருக்கிறது உபதளபதி. நான் இரண்டாயிரம் வீரர்களை பலி தான் இட்டேன். இது உனக்கே வியப்பாகவும் புதிராகவும் இருக்கும் போது எதிரிக்கு எப்படி இருக்கும்! அவன் குழம்புவான். இரண்டாயிரம் வீரர்களை உதாசீனமாக தளபதி அனுப்பியிருக்கிறான் என்றால் கோட்டைக்குள் எவ்வளவு பேர் இருப்பார்கள் என்று கலங்குவான். அச்சப்படுவான். அவனது குழப்பமும் கலக்கமும் நமக்குப் பயனுள்ளதாக இருக்கும். புரிகிறதா?”

ஜெகதேவன் இவ்வாறு கூறியதைக் கேட்டதும் “இப்படியும் ஒரு தளபதியா?” என்று எல்லோரும் வியந்தார்கள்.

“ஆயினும் இரண்டாயிரம் அதிகம்” என்றார்கள் உபதளபதிகள்.

“உங்கள் அனுபவத்திற்கு இது அதிகம். என் அறிவிற்கும் அனுபவத்திற்கும் அற்பம். நாடு விட்டு நாடு வரும் படையில் காய்ச்சல் காரணமாக பல்லாயிரம் பேர் இறப்பார்கள். இயற் கையின் உக்கிரமான வெள்ளம், புயல் போன்றவற்றால் ஆயிர மாயிரம் பேர் இறப்பார்கள். கேள்விப்பட்டிருக்கிறாயா நீ?”

“தளபதி! தாங்கள் கூறிய பலி மேலும் தொடருமா?”

“பயப்படாதீர்கள். களப்பலி என்பது ஒருமுறைதான் நடக்கும்.”

“ஐயா! எதிரிப் படையில் தங்களைப் போலவே குறி தவறாமல் குறுவாள் வீசும் வீரர்கள் இருப்பது போல் தோன்றுகிறதே?”

“என்னைப் போல் என்று சொல்லாதே. என் வீச்சு மின்னல் வீச்சு. மின்னலை விட வேகமாக எனது குறுவாள் பாயும். நாளைக்கு என் குறுவாள் வீச்சில் ஹொய்சள இளவரசன் இறந்து போவான். அவன் இறந்து விட்டால் போரேது? படையேது? எல்லோரும் உணவுண்டு ஓய்வெடுங்கள். நாளைக்கு இந்தப் போர் முடியும். இளவரசன் என்னால் கொல்லப்படுவான். அவனது

தந்தையால் வெற்றிக் கொள்ளப் பட்ட சாளுக்கிய நாடுகள் நம்வசம் திரும்பும். ஜெகதேவன் யார் என்பதை ஜெகமே அறியும். ஜெகதீசனும் அறிவான். ஜெகதேவன் ஜெயதேவன் என்பதை விட்டலராயன் அறிந்து கொள்வான். அவமானத்தால் உயிரை விட்டாலும் விடுவான்."

"தளபதி! வெளியே சடலங்களாகக் கிடக்கும் நமது வீரர்களை நாம் அகற்ற வேண்டாமா?"

"வேண்டியதில்லை. வேண்டுமென்றால் அந்த காரியத்தை எதிரிகள் செய்யட்டும். சடலங்கள் அங்கே இருப்பது எதிரிக்குத் தடையாக இருக்கும்."

"நாற்றமடிக்காதா சடலங்கள்?"

"நாற்றம் எழுவதற்குள் நமது வெற்றிக் கொடி ஏற்றப்படும்."

ஜெகதேவன் உண்மையிலேயே ஜெகத்திற்காக தலைவன் என்பதைப் போலப் பேசிவிட்டுப் போனான்.

உபதளபதிகளோ அவன் அளவுக்கு அதிகமாகத் தன்னைக் கருதிக் கொண்டிருக்கிறானோ என்று நினைத்தார்கள். தற்புகழ்ச்சியும் அலட்சியமும் நல்லதல்ல என்பது தெரிந்ததால் போர் குறித்து அவர்களுக்குத் திருப்தி ஏற்படவில்லை.



இரண்டாயிரம் வீரர்கள் அழிவு மர்மம் சாளுக்கிய உபதளபதிகளுக்கே விளங்கி விட்டாலும் கங்கராஜனுக்கோ நரசிம்மனுக்கோ விளங்குவதாக இல்லை.

அது அசாதாரணம் என்றும் அதற்குப் பின்னால் ஏதோ சதி இருக்கிறது என்றும் நினைத்தார்கள்.

நேரமாகிக் கொண்டே சென்றது. இரவு முற்றிக் கொண்டு போனாலும் போர் வெளியில் சடலமாகிக் கிடந்த வீரர்களை அகற்ற சாளுக்கியர் தரப்பிலிருந்து யாரும் வரவில்லை.

"என்ன செய்யலாம்?" என்று கேட்டான் இளவரசன்.

"சடலங்களை அகற்றும் விஷயத்தில் இருதரப்பினரும் இணைந்து செயல்படுவது தான் இயற்கை நியதி. போர் நீதி. ஆனால் சாளுக்கியர் தரப்பில் தொடக்கம் முதலே இயற்கைக்கு மாறாக இருக்கிறது. ஆகவே சடலங்களை அகற்ற யாரும் வரமாட்டார்கள். சடலங்களை விட்டு வைப்பது நமக்குத் தடையாக அமையும் என்றும் நினைக்கலாம். ஆனால் நாம் அப்படி நினைக்க முடியாது. சடலங்களை உடனடியாக

அகற்றினால் தான் நாளைக்கு கோட்டைக்குள் நுழைவதற்கு ஏதுவாக இருக்கும். சடலங்கள் இருப்பது தெரிய வரும் போது நாளைக்குக் கழுகுகளும் நரிகளும் வந்து ரசாபாசம் செய்யும். நமக்கும் தொல்லை கொடுக்கும். சடலங்கள் இருப்பதை ஓரிரு நரிகள் பார்த்து விட்டதாகவே தோன்றுகிறது. சற்று முன்னர் அவை ஊளையிட்டதைக் கேட்டேன். அது இதர நரிகளை அழைப்பதற்கான அறிவிப்பு. அநேகமாக அவை பொழுது விடிவதற்குள்ளேயே இங்கு வந்தாலும் வரலாம். அவை வந்து வீரர்களின் சடலங்களைக் கிழித்துக் குதறுவதற்குள் நாம் செயல்படுவதே நல்லது'' என்றான் கங்கராஜன்.

அதையடுத்து ஹொய்சள வீரர்கள் சடலங்களை இழுத்துப் போட்டு தகனம் செய்வதிலும் புதைப்பதிலும் ஈடுபட்டார்கள்.

இளவரசனும் அப்பணியில் ஈடுபட முயன்ற போது கருடப் படை அவனைத் தடுத்தது.

“எதிரிகள் எந்த வடிவத்தில் வருவார்கள் என்ற சொல்ல முடியாது இளவரசே. தங்களைக் கண்காணித்துக் கொண்டே இருப்பார்கள். தங்களைத் தொடர்ந்து வந்து கொல்ல முயற்சிப்பார்கள். நமது படையில் சாளுக்கிய உளவாளி உத்தமன் இருந்ததை மறந்து விட்டீர்களா? அவனைப் போல எத்தனை பேர் இருக்கிறார்கள் என்று தெரியாது. எனவே நீங்கள் எங்கள் பாதுகாப்பை விட்டு அகலவே கூடாது. மகாராஜாவின் விருப்பமும் கட்டளையும் அது தான்'' என்றான் கருடப் படைத் தலைவன்.

இளவரசனுக்கு அவனது பேச்சு வெறுப்பையே தந்தது.

“பாதுகாப்பு அதிகமாகும் போது முதலில் பறிபோவது சுதந்திரமும் சந்தோஷமும் தான். மனிதன் எந்த இரண்டிற்காவது வாழ விரும்புகிறானோ அதை அழிக்கும் ஆயுதமாகத்தான் அதீத பாதுகாப்பு அமைகிறது.

அந்த நிலையில் இருந்த இளவரசன் எரிச்சலடைந்து “நான் இளவரசன் ஆணையிடுகிறேன். சற்று சுதந்திரமாகவும் பணியாளனாகவும் இருக்க விரும்புகிறேன். அனைவரும் விலகிச் செல்லுங்கள்'' என்றான்.

அவனுக்கு வீரர்களோடு இணைந்து சடலங்களை அடக்கம் செய்யும் பணியில் ஈடுபட ஆசையாக இருந்தது.

ஆனால் பாதுகாப்பு படைத்தலைவன் அதற்கு இடமளிக்க வில்லை.

“இளவரசே! நாங்கள் இருப்பது உங்களைக் கண்போல பாதுகாப்பதற்காகத்தான். அக்கடமையை நாங்கள் எப்படிக் கைவிட முடியும்?” என்று கேட்டான்.

“நான் ஆணையிடுகிறேன். விலகுங்கள்.”

“மன்னித்து விடுங்கள் இளவரசே. நாங்கள் மகாராஜாவின் கட்டளையை மீறமுடியாது.”

“அப்படியென்றால் நான் யார்? எனக்கு உரிமையில்லையா?”

“இது உரிமை பிரச்சனை இல்லை இளவரசே. பாதுகாப்பு பிரச்சனை.”

“கருடப் படைத் தலைவரே! கிளியை கூண்டில் அடைத்து பாதுகாப்பது போல் என்னைக் காக்கிறீர்கள்! கூண்டு கிளியைக் காப்பாற்றும் என்று நினைக்கிறீர்கள். அக்கிளியை அக் கூண்டு யமனிடமிருந்து காப்பாற்ற இயலுமா?”

“இளவரசே! தத்துவ விசாரணை செய்ய எங்களுக்குத் தகுதியில்லை. மகாராஜாவின் கட்டளையை நிறைவேற்றுவதைத் தவிர வேறு எதையும் நாங்கள் அறியமாட்டோம். தாங்கள் வேண்டிக் கொண்டாலும் சரி, கட்டளையிட்டாலும் சரி அதற்கு இணங்க வேண்டாம் என்று அறிவுறுத்தியிருக்கிறார். ஒரு வேளை நீங்கள் பாதுகாப்பை மறுத்தால் உங்களைக் கைது செய்து கொண்டு வந்து விடும் படி உத்தரவு.”

போரிடுவதற்காவது அனுமதியுண்டா? போரிலாவது நான் வாளைச் சுழற்ற முடியுமா? இல்லை. கைகளைக் கட்டி விட்டுப் போரிடச் சொல்வீர்களா?” என்று அலுத்துக் கொண்ட இளவரசன் “என் மூச்சாவது சுதந்திரமா வெளிவரட்டும். எல்லோரும் நூறடி தள்ளி நில்லுங்கள். உங்களைத் தாண்டி எதிரிகள் வந்து விட முடியாது அல்லவா?” என்று கேட்டான்.

கருடப் படைத் தலைவன் அதற்குச் சம்மதித்து தனது வீரர்களை இளவரசனைச் சுற்றி நூறடி தூரத்தில் வளையமாக நிற்கச் செய்தான்.

நரசிம்மனுக்கு அந்த நிலை நரகமாக இருந்தது.

“இளவரசனாக ஏன் பிறந்தேன்? சாதாரண வீரனாகப் பிறந்திருக்கக் கூடாதா? ஒரு வீரனுக்கு இருக்கும் மகிழ்ச்சியும் சுதந்திரமும் இல்லையே! இது என்ன பதவி? இதற்காகவா பலர் மண்டை உடைத்துக் கொள்கிறார்கள்? இருக்கட்டும். இருக்கட்டும். இந்தப் போரில் வெற்றி பெற்று வெற்றிப் பதாகையுடன் துவாரசமுத்திரத்திற்குச் சென்றதும் தந்தையாரிடம்

முதலில் கோரப் போவது சுதந்திரத்தைத் தான். அதை அவர் மறுத்தால் பதவியை விட்டே விலகப் போகிறேன். இளவரசன் என்ற பெயரில் நரக வாழ்க்கை வாழ எனக்கு விருப்பமில்லை" என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

அப்போது ஏதோ சச்சரவு உண்டாயிற்று.

கருடப் படை வீரர்கள் யாரிடமோ சண்டையிடுவது போல் பேசிக் கொண்டிருந்தார்.

"என்ன விஷயம்? எதற்காகச் சச்சரவு?" என்று வினவினான் இளவரசன்.

கருடப்படைத் தலைவன் வந்து "இளவரசே! பெண்மணி யொருத்தி மகாராஜாவிடமிருந்து வருகிறாளாம். அவசரமான செய்தியாம். தங்களை உடனடியாகச் சந்திக்க வேண்டுமாம். முத்திரை மோதிரத்தை வைத்திருக்கிறாள். ஆனாலும்...." என்று இழுத்தான்.

"ஆனாலும் என்ன?"

"முத்திரை மோதிரத்தைத் திருடி வந்திருக்கலாம். அவள் உளவாளியாக இருக்கலாம். போர்க் காலங்களில் யாரையும் நம்பி விட முடியாது."

"செய்தி என்ன என்பதை அறியலாம் அல்லவா? அதற்கென்ன தடை? தனிப் பெண் ஒருத்தி உங்களையெல்லாம் மீறி என்ன செய்து விடமுடியும்? அவளை அனுப்புங்கள்" என்றான் இளவரசன்.

கருடப் படைத்தலைவனுக்குத் திருப்தியில்லை. இருப்பினும் இளவரசன் கூறுவது சரி என்று நினைத்த அவன் அந்தப் பெண்ணைப் பூரணமாகச் சோதனை செய்து விட்டு இளவரசனிடம் அழைத்து வந்து கூடவே நின்றான்.

"நீங்கள் சற்று தள்ளியிருங்கள். இவள் ஒன்றும் என்னைக் கடித்துத் தின்று விட மாட்டாள்" என்றான் இளவரசன்.

வேறு வழியில்லாமல் கருடப் படைத்தலைவனும் சற்று தள்ளி நின்றான்.

வந்தவள் அழகான இளம்பெண்ணாக இருந்தாள்.

நீண்ட தூரப் பயணம் காரணமாகவும் கருடப் படை வீரர்களுடன் வாக்கு வாதம் செய்ததன் காரணமாகவும் சோர்வாக இருந்தாள்.

"வணக்கம் இளவரசே" என்று சொன்னபடியே கீழே சாய்ந்து மயக்கமடைந்தாள்.

இளவரசன் உடனே தண்ணீரைக் கொண்டு வரச் சொல்லி முகத்தில் தெளித்து மயக்கத்தைப் போக்கினான். தண்ணீரைப் பருகவும் செய்தாள்.

அவள் இயல்பு நிலைக்குத் திரும்பியதும் "நீ எப்படி இங்கு வந்தாய்?" என்று கேட்டான்.

"நான் மகாராஜாவின் பணிப்பெண் இளவரசே! என்னிடம் மகாராஜாவின் முத்திரை இருக்கிறது. நான் மகாராஜாவைச் சேர்ந்தவள் என்பதை மேலும் நிரூபிப்பதற்கு "புலி" என்ற இரகசிய வார்த்தையும் உள்ளது. அதையும் தெரிவித்தேன். யாரும் என்னைத் தடுக்கவில்லை" என்றாள் அப்பெண்.

"எல்லோரும் உன்னை அனுமதித்த போது கருடப் படை வீரர்கள் மட்டும் ஏன் தடுத்தார்கள்?"

"இதற்குப் பதிலை அவர்களிடம்தான் கேட்க வேண்டும் இளவரசே."

"அவர்கள் உன்னைச் சந்தேகிக்கிறார்கள். நீ எதிரியின் உளவாளியாக இருப்பாய் என்று நினைக்கிறார்கள்."

"இளவரசே! உண்மையின் இயல்பு உண்மையாக இருப்பது தானே தவிர தன்னை நிரூபிப்பது அல்ல. உண்மையின் மீது சந்தேகங்கள் மேகங்களைப் போல வந்து மறைக்கலாம். ஆனால் அவை தற்காலிகமானவை. வானம் என்ற உண்மைதான் நிரந்தரமே தவிர மேகங்கள் அல்ல. அதோடு இளவரசே! எனது பணி மகாராஜாவின் செய்தியைத் தெரிவிப்பது மட்டும்தான். நம்புவதும் நம்பாததும் தங்கள் விருப்பம்" என்றாள் அவள்.

"உன் பெயர் என்ன?"

"வாணிராணி"

"செய்தியைச் சொல்"

"இளவரசே! மகாராஜாவுக்குத் திடீரென உடல் நலத்தில் பின்னடைவு ஏற்பட்டு விட்டது. வைத்தியர்கள் அவருக்கு வந்திருப்பது விஷகாய்ச்சல் என்றும் அது குணமாவது கஷ்டம் என்றும் தெரிவித்திருக்கிறார்கள். மகாராஜாவின் நரம்பு மண்டலம் வலுவிழந்து விட்டதால் அவர் எந்த நேரத்திலும் மயக்க நோய்க்கு* ஆளாகலாம் என்று சொல்கிறார்கள். காஞ்சியிலிருக்கும் கொல்லி மலையிலிருந்தும் விசேஷமான சித்த வைத்தியர்களை வரவழைக்க ஏற்பாடாகியிருக்கிறது. மகாராஜாவின் குருநாதரான ஜெயதேவரும் வந்து பார்த்து

* தற்போது கூறப்படும் 'கோமா' நோய்.

விட்டு அதிர்ச்சியடைந்திருக்கிறார். மகாராஜாவுக்கு முன் தான் போய்விடும் என்று கருதி குருநாதர் சல்லேகனையில் அமர்ந்து விட்டார். அதை அறிந்த பிறகு தான் மகாராஜாவும் கலங்கி விட்டார். கானகலா போரை கங்கராஜரிடம் ஒப்படைத்து விட்டு தங்களை உடனடியாக துவாரசமுத்திரத்திற்கு திரும்பும் படி கட்டளையிட்டிருக்கிறார். மகாராணியும் அவ்வாறே கூறியிருக்கிறார். ஆயிரம் வீரர்களைத் துணையாக வைத்துக் கொண்டு உங்களைப் புறப்படச் சொல்லியிருக்கிறார். அவரது நினைவு தவறுவதற்குள் நீங்கள் அவரைக் காண வேண்டும் என்பது அனைவரது விருப்பம்'' என்றாள் வாணிராணி.

இளவரசனுக்கு அவளது செய்தி எதிர்பாராததாகவும் அதிர்ச்சி தரக் கூடியதாகவும் இருந்தது.

மிகவும் முக்கியமான போரில் ஈடுபட வேண்டிய நிலையில் இப்படியொரு பின்னடைவு வந்தது அவனுக்குச் சங்கடமாக இருந்தது.

“பெண்ணே! இங்கே நிகழப் போகும் போர் எவ்வளவு முக்கியமானது என்பது உனக்குத் தெரியாமல் இருக்கலாம். ஆனால் துவார சமுத்திரத்தில் இருக்கும் எல்லோருக்கும் தெரியும். இந்த நிலையில் நான் எப்படி போரைக் கைவிட்டு விட்டு அங்கே வர முடியும்?'' என்று கேட்டான்.

“ஐயா! ஒரு போர் தவறினால் இன்னொரு போரினால் ஈடுகட்டிக் கொள்ள முடியும். மகாராஜா தவறி விட்டால் எதைக் கொண்டும் அதை ஈடு கட்ட முடியாது. மகாராஜாவின் மனத்தில் உங்களிடம் தெரிவிக்க வேண்டிய பல விஷயங்கள் இருக்கும் என்று தோன்றுகிறது. அவை நமது ஹொய்சள வம்சத்தின் எதிர்காலத்தைப் பற்றியும் இருக்கலாம். அவர் மயக்கத்தில் வீழ்ந்து விட்டால் அவரது செய்தி என்ன வென்று தெரியாமல் போய் விடும். ஆகவே புறப்படுங்கள்'' என்றாள் வாணிராணி.

“சோதனையானது இப்படி வந்து என்னைச் சோதிக்கும் என்று எண்ணவில்லை. அதே சமயம் மனத்தில் ஏதோ ஓரிடத்தில் உன்னைப் பற்றியச் சந்தேகம் இருந்தபடி இருக்கிறது. நீ கூறிய விஷயங்களெல்லாம் உண்மைதான் என்று ஆணையிட முடியுமா உன்னால்?''

“யார் மீது ஆணையிட வேண்டும் இளவரசே?''

“மகாராஜாவின் மீது ஆணையாகச் சொல்ல முடியுமா?''

சொன்னாள் அவள்.

"நல்லது வாணிராணி. கங்கராஜருடன் ஆலோசித்து விட்டு ஆவன செய்கிறேன். நீ புறப்படு."

வாணிராணி புறப்பட்டாள்.

அவளை வீரர்கள் தடுக்கவில்லை தலைவணங்கி வழி விட்டார்கள். வழியனுப்பினார்கள்.

ஆனால்-

கானகலா கோட்டைப் பகுதியின் எல்லைப் பகுதியில் இருந்த ஊரணிக்கு வந்தபோது அவளைத் தடுத்தான் ஒருவன்.

"ஆடைகளையெல்லாம் கழற்று" என்றான்.

அதிர்ந்தாள் வாணிராணி.





கேள்விகள் கேட்கப்படும் போது ஒழுங்காகப் பதில் வந்து விட்டால் பிரச்சனைகள் வருவதில்லை. இதை உணராமல் பெரும்பாலானவர்கள் பதில் சொல்லும் விதத்திலேயே பிரச்சனையை உருவாக்கிக் கொள்கிறார்கள் – உதயணன்




இளவரசனோடு பேசி விட்டு வீரர்களால் வழியனுப்பப் பட்ட வாணிராணி கோட்டையின் எல்லைப் பகுதியில் இருந்த தடாகத்தருகே வந்ததும் புரவியை விட்டுக் கீழே இறங்கினாள்.

உடம்பெல்லாம் வியர்த்ததால் தடாகத்தில் இறங்கிப் படியில் அமர்ந்து கொண்டாள். ஆடைகளைச் சற்று மேலே ஏற்றிக் கொண்டு கால்களை நீரில் அணைய விட்டாள். நீரைக் கைகளால் அள்ளி முகத்தில் இரைத்துக் கொண்டிருந்தாள்.

நேரம் நடுநிசியைத் தாண்டியிருந்ததால் காற்று சற்றே குளிர்ந்து வீசியது. கணிசமான நேரம் வரை தண்ணீருடன் அவள் தொடர்பு கொண்டிருந்ததால் வியர்வை அகன்றது. உடலும் சற்று குளிர்ந்தது.

மாற்றுடைகளை அவள் மூட்டையாகக் கட்டிக் கொண்டு வந்திருந்தாலும் கருடப்படை அதைப் பறித்துக் கொண்டது. திருப்பித் தரவில்லை. அவளும் அதைக் கேட்க மறந்து போனாள்.

மூட்டை மட்டும் இருந்திருந்தால் தடாகத்தில் இறங்கி நீண்ட நேரம் நீராடி பயணக் களைப்பை நீக்கிக் கொண்டிருப்பாள். அது இல்லாததால் அவளது முகமும் கால்களும் மட்டும் நீரைத் தழுவும் பாக்கியத்தைப் பெற்றன.

அசதியும் சோர்வும் நீங்கியிருந்தாலும் நேரம் நடுநிசியைத் தாண்டி விட்டதால் மேற்கொண்டு தனியாகப் பயணம் செய்ய அவள் விரும்பவில்லை. வளர்பிறைச் சந்திரன் தண்ணொளியைப் பாய்ச்சியதால் அந்தப் பிராந்தியம் இன்பகரமாக இருந்தது.

காற்றும் இதமாக வீசியதால் தடாகத்தின் படிக்கட்டிலேயே படுத்திருந்து விட்டுப் பொழுது போனதும் புறப்படலாம் என்று தீர்மானித்துக் கொண்டு படுக்க முற்பட்ட போது "படுக்காதே எழுந்து போ" என்று எச்சரிப்பது போல பேய்ப்பறவை ஒன்று இரைந்தது.

அதோடு படிக்கட்டில் நீளமான பாம்பொன்று நெளிந்ததால் தனது எண்ணத்தை மாற்றிக் கொண்டு படிக்கட்டுகளில் ஏறி

தடாகக் கரைக்கு வந்தபோது "நில்" என்ற ஒரு குரல் அவளைத் தடுத்தது.

தனக்கு முன்னால் பந்தம் ஏந்தியபடி ஒருவன் நிற்பதைக் கண்டதும் திடுக்கிட்டு நின்றாள் வாணிராணி.

அவளை அருகில் கண்ட அவன் "யார் நீ?" என்று கேட்டான்.

அவள் பதிலைச் சொல்லாமல் "நீ யார்?" என்று கேட்டாள்.

"பெண்ணே! கேள்விகள் கேட்கப்படும் போது ஒழுங்காகப் பதில் வந்து விட்டால் பிரச்சனைகள் வருவதில்லை. இதை உணராமல் பெரும்பாலானவர்கள் பதில் சொல்லும் விதத்திலேயே பிரச்சனையை உருவாக்கிக் கொள்கிறார்கள். இங்கே கேள்வி கேட்டவன் நான். பதில் சொல்ல வேண்டிய நீ கேள்வி கேட்கிறாய். ஒழுங்காகப் பதிலை சொல்லி விட்டால் உனக்கு நல்லது. மாறாக நீ வாயாட விரும்பினால் மிகவும் சிரமப் படுவாய். நான் ஆபத்தானவன். ஆபத் தாண்டவனல்ல" என்றான் அந்த மனிதன்.

"வழியில் குறுக்கிடும் வழிப்போக்கர்களுக்கெல்லாம் என்னைப் பற்றிச் சொல்ல வேண்டிய அவசியமில்லை."

"பெண்ணே! உனது ஆடைகளையெல்லாம் கழற்று."

"என்ன? என்ன? என்ன சொல்கிறாய் நீ? ஆடைகளைக் கழற்ற வேண்டுமா? எதற்கு? நான் யார் தெரியுமா? ஹொய்சள மகாராஜாவின் பிரதான உளவாளி. என் மீது உன் கைப்பட்டால் சிரம் துண்டிக்கப்படும்" என்றாள் அவள் சினத்துடன்.

"இந்த விவரத்தை முதலிலேயே சொல்ல வேண்டியது தானே?"

"இப்போது சொல்லி விட்டேன் அல்லவா? விடு என்னை."

"நீ உண்மையைச் சொல்லிவிட்டால் உன்னை விட்டு விடுகிறேன்."

"அதைத்தான் சொல்லி விட்டேனே?"

"சொன்னது உண்மையில்லை என்பது எனக்குத் தெரியும்."

"நான் இளவரசரைச் சந்தித்துப் பேசிவிட்டு வருகிறேன். அவருக்குச் சொன்ன செய்திகளுக்குத் தாய் நாட்டின் மீதும் ஆணையிட்டிருக்கிறேன். நீ என்னை நம்பா விட்டால் எனக்கு நஷ்டமில்லை."

"நான் நம்பும் படியான பதிலை நீ கூறாவிட்டால் இங்கிருந்து போக அனுமதிக்க மாட்டேன்."

"நீயென்ன என்னை அனுமதிப்பது?" என்று சொல்லி அவனைத் தாண்ட முயன்றாள் அவள்.

அவன் அவளைப் பிடித்து இழுத்து "நீ உண்மையைச் சொல்கிறாயா? அல்லது ஆடைகளை அவிழ்த்து விட்டு நிற்கிறாயா?" என்று கேட்டான்.

அவள் ஒரு கணம் என்ன செய்வதென்று அறியாமல் அதிர்ந்தாள்.

அர்த்த ராத்திரியில் யாரும் நடமாடாத இடத்தில் ஆடவன் ஒருவன் முரட்டுத்தனமாக இழுத்து ஆடைகளை அவிழ்க்கும் படிச் சொன்னது அவளை திடுக்கிட வைத்தது. இப்படியொரு ஆபத்தை அவள் எதிர்பார்க்கவில்லை. முடியாது என்று மறுத்தால் அந்த ஆடவனே தனது ஆடைகளை அகற்றுவான் என்பதும், அகற்றுவதோடு நில்லாமல் அத்துமீறவும் செய்வான் என்பதும், தட்டிக் கேட்பதற்கோ தடுத்து விடுவதற்கோ ஒருவர் கூட அங்கே இல்லை என்பதும் தெரிந்ததால் அவள் தவித்தாள்.

படைவீரர்களுக்கு இடையில் சென்று இளவரசனைச் சந்திக்க அவளுக்கிருந்த துணிவு அவளுக்குத் தற்போது இல்லை. அதோடு கருடப்படை வீரர்கள் தன்னைப் பரிசோதித்த போது தன்னிடம் இருந்த குறுவாளையும் நீக்கி விட்டதால் அவள் நிராயுதபாணியாக இருந்தாள்.

தன்னை மிரட்டும் முரடனிடம் கைகளால் சண்டை போட முடியும் என்று அவளுக்குத் தோன்றவில்லை.

"இது என்ன அநாகரிகமானப் பேச்சு? தனியாக வந்திருக்கும் ஒரு பெண்ணிடம் இப்படிப் பேசுவதற்கு உனக்கு வெட்கமாக இல்லை? நீ ஒரு மனிதனா? அடாவடியடிக்கும் அயோக்கியனே! நீ சாளுக்கியனா? ஹொய்சளனா?" என்று வறட்டுத் துணிச்சலால் கேட்டாள் வாணிராணி.

"இரண்டுமில்லை. நான் சிங்களன்" என்று சொன்ன அந்த மனிதன் "நீ பெண்ணல்ல. உளவாளி. உளவாளியை விசாரிக்கும் முறையில் தான் விசாரிக்கிறேன். என்னைக் கேள்வி கேட்பதையும், கண்டிப்பதையும் விட்டு விட்டு உன்னைப் பற்றிய உண்மையைச் சொல்" என்றான் அந்த மனிதன் கண்டிப்பான குரலில்.

"நான் என்ன இதுவரை பொய்யா சொல்லிக் கொண்டிருக்கிறேன். இளவரசரிடம் செய்தியைச் சொல்லி விட்டேன். அவர் நம்புகிறார். இடையில் நீ யார் என்னைத் தடுத்து விசாரிப்பதற்கு?"

"பெண்ணே! உனக்கு ஐந்து நிமிடம் அவகாசம் அளிக்கிறேன். உண்மையைச் சொல். இல்லையென்றால் உன் ஆடைகளை அகற்றி நிர்வாணமாக்கி இந்த மரத்தில் கட்டி விடுவேன்.

அங்கங்களில் காயங்களை உண்டாக்குவேன். ரத்தம் சொட்டும். ரத்த வாடையை முகர்ந்ததும் இந்தப் பகுதியில் இருக்கும் ஓநாய்கள் பாய்ந்து வரும். என்ன செய்யும் என்பதை நான் சொல்ல வேண்டியதில்லை.''

''என்னை அவ்வாறு செய்தால் ஹொய்சள மகாராஜா உன்னை என்ன செய்வார் தெரியுமா?''

''என்னைப் பற்றிய பேச்சு எதற்கு? உன்னை நினைத்துக் கொண்டு உண்மையைச் சொல்.''

அவளுக்கு குழப்பமும் பயமுமாக இருந்தது.

இப்படியொரு சங்கடமான ஆபத்து வரும் என்று யாரும் சொல்லவில்லையே!

இந்த முரடன் தன்னை கற்பழித்தால் கூட சகித்துக் கொண்டு மறைத்து விடலாம். மறந்து விடலாம்.

ஆனால் அவன் சொன்ன சித்திரவதை அப்படிப் பட்டதில்லையே!

ஒரு நிமிடம் கூடச் சகிக்க முடியாதே!

நரக வேதனையை விட மோசமாக இருக்குமே!

செய்தி சொல்ல புறப்பட்ட போது இருந்தத் தெம்பும் துணிவும் எங்கே சென்றன?

இதற்குத்தான் பெண்கள் உளவாளிகளாக இருக்கக் கூடாது என்று சொல்கிறார்களா?

பெண்களைக் கண்டு ராஜாக்கள் - தேவர்கள் - முனிவர்கள் என்று எத்துணை பேர் மயங்கி வீழ்ந்திருக்கிறார்கள்?

பெண்களால் எத்தனை ராஜ்யங்கள் அழிந்திருக்கின்றன? எத்தனை உறவுகள் நாசமாகியிருக்கின்றன?

ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணாலே என்றெல் லாம் சொல்கிறார்களோ இவை எவற்றை உணர்த்துகின்றன?

பெண் ஒரு பெரிய சக்தி என்பதைத் தானே?

ஆனால் -

இங்கே நான் சகதியாக அல்லவா கிடக்கிறேன்? புலியிடம் சிக்கிய மானாக அல்லவா ஒடுங்கியிருக்கிறேன்?

என்ன செய்யமுடியும் நான்?

எண்ணுவதிலேயே அவள் ஐந்து நிமிடங்களை ஓட்டி விட்டதால் ஆத்திரமடைந்த அந்த மனிதன் ''இனியும் உன்னை

விட்டுவைப்பதில் அர்த்தமில்லை'' என்று கூறி அவளது ஆடையை அகற்ற முற்பட்ட போது "நில்லுங்கள்'' என்றாள் அவள்.

"நீ எதுவும் சொல்லவேண்டாம். உன்னைப் போன்றவர் களிடம் கதை பேசிக் கொண்டிருக்க நான் வரவில்லை'' என்று சொல்லி அவளை ஓங்கி அவன் அறைந்த போது "உண்மையைச் சொல்லி விடுகிறேன். என்னை எதுவும் செய்து விட வேண்டாம்'' என்றாள் உண்மையான பயத்துடன்.

அவளது மேலாடையைத் தன் கையில் பிடித்துக் கொண்டு "சொல்'' என்றான் அவன்.

சொன்னாள்.

அவளது ஆடையில் ஒரு பகுதியைக் கிழித்து வாயைக் கட்டிய அவன் கைகளையும் பின்புறத்தில் வைத்துக் கட்டினான். மூட்டையைத் தூக்குவது போலத் தூக்கிப் புரவியின் மீது அமர்த்தினான். தானும் ஏறிக் கொண்டான்.

புரவி நகர்ந்தது.

இதே நேரத்தில் கருடப் படைத் தலைவனை அழைத்த இளவரசன் "நான் இப்போதே துவார சமுத்திரத்திற்குப் புறப் படுகிறேன். என்னோடு ஆயிரம் வீரர்கள் வரட்டும்'' என்றான்.

அதிர்ந்து போன கருடப் படைத் தலைவன் "என்ன சொல்கிறீர்கள் இளவரசே? போர் முக்கியமான நிலையை அடைந்திருக்கிறது. இக்கெட்டான இந்நிலையில் துவார சமுத்திரத்திற்குச் செல்லப் போவதாகச் சொல்கிறீர்களே ஏன்?'' என்று வினவினான்.

"மகாராஜா அங்கே நோய் வாய்ப்பட்டு விட்டார். அவர் என்னைப் பார்க்க விரும்புகிறார்?''

"இச்செய்தியை அந்தப் பெண் சொன்னாளா?''

"ஆமாம்.''

"அதை நீங்கள் நம்புகிறீர்களா?''

"ஆமாம்.''

"எப்படி?''

"அவள் சத்தியம் செய்திருக்கிறாள்.''

"என்ன சத்தியம் இளவரசே?''

"மகாராஜாவின் மீது ஆணையிட்டுச் சொல்கிறாள்.''

"எந்த மகாராஜா என்று கேட்டீர்களா?''

“இதென்ன கேள்வி? நம் நாட்டுப் பெண். நம் மகாராஜாவின் பணிப் பெண் - நம் மகாராஜா மீது தான் சத்தியம் செய்வாள். தாமதம் செய்யாதீர்கள். கங்கராஜரை அழையுங்கள்.”

அழைத்தான்.

அவனிடம் தன் முடிவை இளவரசன் கூறிய போது “இதென்ன விபரீதம் இளவரசே! நாம் புறப்படும் போது நன்றாகத்தானே இருந்தார் மகாராஜா! பத்து நாட்களுக்குள் உடல்நிலை இப்படியா மோசமடையும்?” என்று கேட்டான் கங்கராஜன்.

“நாளைக்கு என்ன ஆகும் என்று தெரியாமல் இருப்பது தான் மனிதனின் விதி. அவனுக்கு நல்லதும் கெட்டதும் சொல்லாமல் வரும். சொல்லிக் கொள்ளாமல் போகும். இது வியப்பிற்குரிய விஷயமல்ல” என்றான் இளவரசன்.

“இளவரசே! மகாராஜாவுக்கு உடல்நலம் பாதிக்கப் பட்டிருந்தாலும் உங்களை வரச் சொல்லும் படி ஒருக்காலும் சொல்லமாட்டார். நம் அனைவரது எதிர்காலமும் இந்தப் போரில்தான் இருக்கிறது என்பது அவருக்கும் தெரியும். அனைவருக்கும் தெரியும். ஆகவே உங்களை துவார சமுத்திரத்திற்கு வரும்படிக் கட்டளையிட மாட்டார். விளைவுகளைப் பற்றி அவருக்கு நன்றாகத் தெரியும்.”

“இங்கிருந்து நான் போய் விட்டால் என்ன விளைவு ஏற்படும்?”

“வீரர்கள் முதலில் குழம்புவார்கள். வதந்திகள் பெருகும். பிறகு உண்மை தெரியும் போது கலங்குவார்கள். நீங்களும் இல்லை என்பதை உணரும் போது அவர்களுக்கு இருக்கும் தெம்பும் நம்பிக்கையும் அகலும். அது போரில் பிரதிபலிக்கும்.”

“கங்கராஜரே! படைகளுக்கு ஊக்கமளித்து நம்பிக்கையை வரவழைக்கவும் இந்தப் போரை வெற்றிகரமாக நடத்தவும் உங்களால் முடியாதா?”

“தங்கள் விருப்பமும் கட்டளையும் அதுதான் என்றால் ஏற்றுக் கொள்ள நான் தயார்.”

எல்லோருக்கும் தர்ம சங்கடமாக இருந்தது.

அந்நிலையில் புரவியில் அங்கு வந்து இறங்கினான் உதயணன்.

அவனோடு வாயும் கையும் கட்டப்பட்ட நிலையில் இறங்கினாள் வாணிராணி.

“உதயணா? இது என்ன இப்பெண்ணை இப்படிக் கட்டியிருக்கிறாய்?” என்று கேட்டான் நரசிம்மன். கேட்கும் போதே அவனுக்குத் தெளிவு பிறக்கலாயிற்று.

வாய்க்கட்டை அவிழ்த்த உதயணன் வாணிராணியைப் பார்த்து "இளவரசரிடம் உண்மையைச் சொல்" என்றான்.

"இளவரசே! நான் சாளுக்கிய நாட்டு உளவாளி. தளபதி ஜெகதேவரின் கையாள். அவர் கூறச் சொன்ன செய்திகளைத் தான் நான் சொன்னேன். எனக்குத் தங்கள் தந்தையாரைப் பற்றி ஏதுவும் தெரியாது. அவர் எப்படி இருப்பார் என்பதும் தெரியாது. அவருக்கும் எனக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை" என்றாள் அவள்.

"ஜெகதேவனின் திட்டம் புரிகிறதா இளவரசே! பொய்த் தகவலைச் சொல்லி உங்களைப் பிரித்துக் கொலை செய்வது. இங்கே குழம்பிக் கிடக்கும் வீரர்களை வதைப்பது. இது தான் அவன் திட்டம். வஞ்சகன். அயோக்கியன். பேடி. நேர்வழிப் போரை அறியாதக் கோழை" என்றான்.

"மகாராஜாவின் மீது சத்தியம் செய்தாய் பெண்ணே! அந்த மகாராஜா யார்?" என்று கேட்டான் இளவரசன்.

"தங்கள் தந்தையார்தான் இளவரசே. சாளுக்கியப் பெண்ணான நான் உங்கள் மகாராஜா மீது தானே சத்தியம் செய்ய முடியும்?" என்று சொன்ன அவள் "இளவரசே! பொய்ச் செய்தியை உங்களிடம் சொல்வதற்கு நான் மறுத்தேன். அதற்குத் தளபதி ஜெகதேவர் என்ன சொன்னார் தெரியுமா? 'உளவாளிகளுக்கு அவர்களது பணிதான் முக்கியம். உண்மை, வாய்மை, நீதி, நேர்மை, தர்மம், சத்தியம் ஆகியவற்றிலிருந்து ராஜநீதி அவர்களுக்கு விலக்கப்பட்டிருக்கிறது. உண்மையைத் தான் பேசுவேன். நேர்மையோடுதான் நடப்பேன் என்று உளவாளிகள் அடம்பிடித்தால் அவர்கள் அப்பணிக்கு லாயக்கற்வர்கள். உனக்கு உளவாளியாகப் பணிபுரிய இஷ்டமில்லை என்றால் விலகி விடு. உளவாளியாகப் பணிபுரிய வந்து விட்டால் ராஜநீதி சொல்வதைக் கடைப்பிடி. மாமிச வர்க்கங்களை வெட்டிப் பிழைப்பவன் அஹிம்சையைப் பற்றிப் பேசுவது எப்படி முரண்பாடானதோ அப்படித் தாள் உளவாளிகளின் நிலையும்' என்றார். அதனால் தான் எதைப் பற்றியும் கவலைப்படாமல் இங்கு வந்தேன்" என்றாள் வாணிராணி.

"சரியான நேரத்தில் என் சங்கடத்தைத் தீர்த்தாய் உதயணா" என்று உதயணனைப் பார்த்துச் சொன்ன நரசிம்மன் "பெண்ணே! எனக்கு நீ சரியான பாடத்தைக் கற்பித்திருக்கிறாய்" என்றான்.

கங்கராஜனைப் பார்த்து "இவளை என்ன செய்யலாம் தளபதி?" என்று கேட்டான்.

"இங்கேயே தலையை வாங்கிவிடலாம்" என்றான் கங்கராஜன்.

உதயணன் குறுக்கிட்டு "பெண் கொலை நமக்கு உகந்ததல்ல இளவரசே. இவளது செய்தி பொய் என்பது தெரிந்து விட்டது. நீங்கள் துவார சமுத்திரத்திற்குச் செல்ல வேண்டியதில்லை. அது போதும். இவள் வந்த இடத்திற்கே செல்லட்டும். விட்டு விடுங்கள்" என்றான்.

"ஆம். அது தான் சரி" என்று சொன்ன உதயணன் அவளது கைகட்டுகளை அவிழ்க்கச் சொல்லி விடுவித்தான். அவள் புரவி மீது ஏறிச் சென்றாள்.

பொழுது விடிவதற்கு சில மணித்துளிகளே இருந்தன.

தான் அனுப்பிய உளவாளி வாணிராணியும் திரும்பவில்லை. அவளிடமிருந்து செய்தியும் வரவில்லை.

எனவே அவளது பயணம் தோற்று விட்டது என்பதை அறிந்த தளபதி ஜெகதேவன் பத்து வீரர்களை அழைத்தான்.

"வாணி ராணியைத் தேடுங்கள். தேடிய பின் கொல்லுங்கள். கொன்றபின் தகனம் செய்யுங்கள். செய்த பின் சாம்பலை மண்ணோடு கலந்து விடுங்கள். அவளிடம் இருக்கும் முத்திரை மோதிரம் தங்கத்தால் ஆனது. அதை உங்கள் பரிசாக வைத்துக் கொள்ளுங்கள்" என்று கட்டளையிட்டான்.

மேற்கொண்டு நடக்க வேண்டியவற்றில் ஈடுபட்டான்.

இதே நேரத்தில் கோட்டைக்கு வெளியே இருந்த படை வீரர்கள் அனைவரும் புலிமுக முகமூடி அணிந்திருந்தனர். பாம்பு போல் அணிவகுத்து நின்ற அவர்கள் படிக்கட்டுகள் வழியாக கோட்டைக்குள் பிரவேசிப்பது என்றும் எதிர்பட்டவரை வெட்டி சாய்த்து முன்னேறுவது என்றும் தீர்மானித்திருந்தார்கள்.

அப்போது கோட்டைக்குள்ளேயிருந்து யாருமே எதிர்பாராத விதத்தில் நூற்றுக்கணக்கான பூனைகள் வேகமாக இறங்கி வந்தன. அவற்றின் வாயில் ஏதோ சிறு உருண்டை ஒன்றிருந்தது.

"இது என்ன கங்கராஜா?" என்று கேட்பதற்குள் அவை ஹொய்சளப் படைகளுக்குப் புகுந்து ஓடின. வாயில் இருந்த உருண்டைகளை கீழே போட்டன. அப்போது கோட்டைக் குள்ளிருந்து தீயுருண்டை வந்து விழுந்ததுமே பட்பட் என்று சிறிய உருண்டைகள் வெடித்துத் தீயைக் கக்கின.

சொற்பநேரத்தில் வெடியும் தீயுமாக உண்டானதால் ஹொய்சள வீரர்கள் பலர் படுகாயமடைந்தார்கள். உருண்டைகளைக் கவ்வி வந்து வெளியே போட்ட பூனைகள் பலவும் இறந்து விழுந்தன.

பூனைகள் வருவது நின்றது.

"இளவரசே! பூனைகள் கவ்விக் கொண்டு வந்தது கந்தகக் குண்டுகள். அவற்றை அவை வீசியதும் எதிரிகள் வீசிய தீக்கோளம் அவற்றை ஈர்த்ததால் வெடித்தன. தீ உண்டாகி விட்டது" என்றான் கங்கராஜன்.

"இப்படியுமா போர் புரிவார்கள்?" என்று கேட்டான் இளவரசன்.

"இல்லை. இல்லை. வேறு மாதிரி கூட போரிட எங்களுக்குத் தெரியும்" என்பதைச் சாளுக்கியர்கள் நிரூபிப்பது போல கோட்டையிலிருந்து குரங்குகள் சரமாரியாக வந்தன.

"அவற்றை அம்பெய்து கொல்லுங்கள்" என்றான் கங்கராஜன்.

குரங்குகளோ அம்புகளைப் பற்றிக் கவலைப்பட வில்லை. குதித்தும் தாவியுமாய் வந்து வீரர்களைக் கடித்தன. பிராண்டின. சில குரங்குகள் வீரர்கள் அணிந்திருந்த முகமூடிகளைக் கிழித்தன.

ஆயிரம் வீரர்கள் சுதாரித்துக் கொண்டு வாட்களை வீசி தாக்குதலில் ஈடுபட்டதால் பல குரங்குகள் வெட்டப்பட்டு மாண்டன. வாலிழந்த குரங்குகள், காலிழந்த குரங்குகள் என பல தப்பியோடி மறைந்தன.

குரங்குகளைத் தொடர்ந்து புரவிப் படை ஒன்று வேகமாக வந்து ஹொய்சளப் படையோடு மோதியது.

இளவரசன் அப்படையைத் தாக்கும் பொறுப்பை கங்கராஜனிடம் விட்டு விட்டு தன் படையை அழைத்துக் கொண்டு கோட்டைக்குள் பிரவேசித்தான்.

படிக்கட்டுகளில் எதிரி வீரர்கள் தாக்கினார்கள். உருளைகளைப் போலிருந்த கோட்டைப் பகுதியிலிருந்து இருபுறங்களிலும் துளைகளிலும் அம்புகளும் விற்களும் விடாமல் வந்த படியால் ஹொய்சளப் படை மிகவும் பாதிக்க பட்டது.

கோட்டை வளைந்து வளைந்து இருந்தால் படிக்கட்டுகளும் அதற்கு ஏற்றார் போல மாறி மாறி இருந்தது. படிகள் இருந்தப் பகுதியில் ஹொய்சள வீரர்கள் முன்னேறிய போது கோட்டையின் வளைப் பகுதியிலிருந்தும், மறைவுப் பகுதியிலிருந்தும் சுடுநீர் இரைக்கப்பட்டது. கற்கள் வீசப்பட்டன. அதோடு தீவாணங்கள் கோட்டையின் மேற் புறத்திலிருந்து ஹொய்சளர் படைமீது வீசப்பட்டதால் அவை வெடித்து வீரர்களைச் சுட்டன.

அந்நிலையில் வெளிப்புறத்தில் முரசொலிகள் எழுந்தன.





பதவிக் காலத்தில் எது வேண்டுமானாலும் நடக்கலாம். அதற்காகப் பதவியைத் துறப்பது பரிகாரமாகாது – கங்கராஜன்




முரசொலிகளை அடுத்து தூரத்திலிருந்து சாளுக்கியரது புரவிப் படையொன்று தூசியைக் கிளப்பிய படி போர்க் களத்திற்கு ஹொய்சளப் படையை பலபுறங்களிலிருந்தும் தாக்கியது.

ஏற்கனவே கோட்டைக்குள்ளிருந்து வெளிவந்த புரவிப் படை போதாதென்று மற்றொரு படையும் வந்து விட்டதால் கங்கராஜன் சற்றே கலங்கினான். பூனைகளாலும் குரங்குகளாலும் பல வீரர்கள் படுகாய மடைந்திருந்தார்கள். கோட்டைக்குள் சென்றிருந்த வீரர்களும் துளைமாடத் தாக்குதல் முதலாகப் பல தாக்குதல்களால் மாண்டு கொண்டிருந்ததால் ஹொய்சளப் படை பின்னடைவைச் சந்தித்து வருவதாகக் கருதினான் அவன்.

புரவிப் படைகள் கங்கராஜனின் படைகளுக்கும் இளவரசனின் படைகளுக்கும் இடையே வந்து விட்டதால் இருவரது படைகளும் துண்டிக்கப்பட்டன.

இதற்கிடையில் இளவரசனோடு கோட்டைப் படிகள் வழியாகப் படிகளில் ஏறி பல்வேறு வளைவுகள் வழியாக வந்து பலமான தாக்குதல்களுக்கு ஆளாகிக் கொண்டிருந்தது.

கோட்டை விதானங்கள் ஒன்றின் உச்சியில் பூரண கவசமணிந்து கொண்டிருந்த சாளுக்கியத் தளபதி ஜெகதேவனும் அவனைச் சேர்ந்தவர்களும் குறுவாட்களைச் சரமாரியாக எறிந்து ஹொய்சள வீரர்களை மாய்த்து வந்தார்கள். அவர்களுக்கு உதயணனின் படை தக்க பதிலடி கொடுத்தது. இளவரசனுக்குப் பாதுகாப்பாக வந்த கருடப்படை சாளுக்கியரின் குறுவாள் வீச்சுக்கு இரையாகினாலும் இளவரசனுக்குப் பக்கத்திலேயே உதயணன் இருந்தான்.

தனது படைகள் எல்லாமே சிறப்புடன் ஹொய்சளப் படையை அதாகதம் செய்து வந்ததில் தளபதி ஜெகதேவனுக்குப் பெரு மகிழ்ச்சியாக இருந்தாலும் வீரர்கள் எல்லோரும் ஒரே மாதிரியான முகமூடியை அணிந்திருந்ததால் இளவரசன்

நரசிம்மனை அவனால் அடையாளம் காணமுடியவில்லை. அவனை வீழ்த்தி விட்டால் வெற்றி முரசைக் கொட்டி விடலாம் என்பது அவனது எண்ணமாகவும் தீர்மானமாகவும் இருந்தது.

நரசிம்மனுக்கு நிலைமை புரிந்து விட்டது. ஜெகதேவன் கண்டபடி போரிடுகிறான் என்பதும் அதன் காரணமாக ஹொய்சள வீரர்கள் ஆயிரக் கணக்கில் மாண்டு வீழ்கிறார்கள் என்பதும் அவனுக்குப் புரிந்தது. இனி தன் வாள்வீச்சு தான் வெற்றியைத் தரும் என்று கருதியவனாய் சுழன்று சுழன்று போரிட்டதால் தன்னை எதிர்த்த எதிரிகளை எல்லாம் எமலோகத்திற்கு அனுப்பிக் கொண்டிருந்தான். பேய்க்கு மூர்க்கம் பிடித்தது போல் பெருவேகம் கொண்ட அவன் தன் வாளைச் சாட்டையைப் போல் வீசி பெருவாரியான வீரர்களை வெட்டி வீழ்த்தினான்.

அவனது அசாதாரணமான பெரு வேகமானப் போரையும் அவன் வாள் பட்டு நூற்றுக்கணக்கான சாளுக்கிய வீரர்கள் மாண்டு விழுவதையும் விதானத்திலிருந்து பார்த்த சாளுக்கிய சேனாதிபதி ஜெகதேவன் “இவன் தான் நரசிம்மனாக இருக்க வேண்டும். இவனை வீழ்த்தி விட்டால் போர் முடிந்து விடும்” என்று கருதி தன் குறுவாளை எடுத்து மின்னலைப் போல் நரசிம்மனை நோக்கி வீசியதும் அருகிலிருந்து வேட்டை நாயைப் போல கவனித்துக் கொண்டிருந்த உதயணனும் குறுவாளை வீச, அது ஜெகதேவனின் குறுவாளை வீழ்த்தியது.

“நண்பா! அந்தப் பக்கம் குதித்து விடு. சீக்கிரம்” என்றான் உதயணன்.

நரசிம்மன் எம்பி குதித்தான். அதே சமயம் ஜெகதேவனின் குறுவாட்கள் இரண்டு உதயணனின் மீது பாய்ந்தன. கீழே விழுந்து உருண்ட அவன் “எல்லோரும் இறங்கி ஓடுங்கள். போர் முடிந்தது” என்று குரல் கொடுத்தான்.

வீரர்களுக்கும் தங்கள் பின்னடைவு தெரிந்திருந்ததால் பின்வாங்கி ஓடினார்கள். இளவரசன் தப்பி விட்டதால் பெரிதும் ஆத்திரம் கொண்ட ஜெகதேவன் கீழே இறங்கி வந்து தப்பியோட முயன்ற ஹொய்சளர்களைத் தடுத்து வெட்டி வீழ்த்தினான். “யாரையும் தப்ப விடாதீர்கள். வெட்டுங்கள். கொல்லுங்கள்” என்று உரக்கச் சொல்லவும் செய்தான்.

ஆனால் ஹொய்சள வீரர்கள் கோட்டைச் சுவற்றை ஒட்டிப் பதுங்கிச் சென்று தப்பினார்கள்.

தனது ஆத்திரம் தீர ஹொய்சள வீரர்களை வெட்டிச் சாய்த்து திருப்தியடைந்த ஜெகதேவன் வெற்றிச் சங்கை ஊதினான்.

அதையடுத்து சாளுக்கிய வீரர்கள் ஆரவாரத்தோடு பேரிகைகளை முழக்கினார்கள்.



கானகலா கோட்டைப் போரில் ஹொய்சளப் படை படுதோல்வி அடைந்தது. பத்தாயிரம் வீரர்களில் எட்டாயிரம் பேர் எமலோகத்திற்குச் சென்றார்கள்.

உயிருக்குப் போராடி தப்பிய வீரர்கள் மற்றும் இளவரசன் நரசிம்மன், தளபதி கங்கராஜன் ஆகியோர் கோட்டைக்கு வடக்கே பத்து காதத் தொலைவில் இருந்த தொட்டப்பள்ளி என்னும் இடத்தில் கூடினார்கள்.

ஒருவரது முகத்திலும் ஈயாடவில்லை.

போரில் தோற்றதை விட அத்தோல்வியால் உண்டாகப் போகும் விளைவு எல்லோரையும் ஆட்டிப் படைத்தது.

இளவரசன் அடைந்த தோல்வி மன்னன் அடைந்த வெற்றிகளை அர்த்தமற்றதாக்கி விட்டது.

விட்டலராயன் தன் குடும்பத்தை மறந்து சாம்ராஜ்யக் கனவிலேயே தன்னை ஆழ்த்திக் கொண்டு, பல்வேறு சிக்கல் களுக்கும் வழுக்கல்களுக்கும் இடையே வென்ற நாடுகளை சாளுக்கிய மன்னருக்கு ஒப்படைக்க வேண்டும்.

ரத்தம் சிந்தி, உயிர் பலி கொடுத்து, குடும்பங்கள் பலவற்றை நிர்க்கதியில் தள்ளி பெற்ற நாடுகளைச் சீதனம் போல் தாம் பாளத்தில் வைத்து சாளுக்கிய மன்னனிடம் தந்தாக வேண்டும்.

அப்படி நடந்து விட்டால் ஹொய்சள சாம்ராஜ்யம் என்பது ஏறக்குறைய மறைந்து விட்ட மாதிரிதான்.

மறுபடியும் ஆரம்பத்திலிருந்து துவக்க வேண்டும். அது நடக்கக் கூடிய காரியமா? அப்படியே ஆரம்பிக்க முற்பட்டாலும் எத்துணை பேருக்கு தெம்பிருக்கும்? எத்தனை பேர் ஒத்துழைப்பார்கள்?

அது மட்டுமல்ல. முன்பு போல அத்தனை நாடுகளையும் வெல்ல முடியுமா?

சாளுக்கியர் குறுக்கிட்டால் என்ன செய்வது?

இப்படியெல்லாம் எண்ணிக் குமைந்தார்கள் அங்கே இருந்தவர்கள்.

"நமக்கு இந்தப் படுதோல்வி ஏற்பட்டது எப்படி கங்கராஜரே?" என்று கேட்டான் இளவரசன்.

“கானகலா கோட்டையின் அமைப்பு, ஜெகதேவன் ஆகியோர் தான் காரணம். அவனது அதர்மங்கள் தான் காரணம்” என்றான் கங்கராஜன்.

“நாமும் அதர்மத்தில் இறங்கியிருந்தால் வெற்றி பெற்றிருக்க முடியுமா?”

“நம் தரப்பில் அதர்மங்களைச் செய்ய வழி இல்லாமல் போயிற்று. சாளுக்கிய ஒற்றன் சொன்னது போல இக் கோட்டை இருந்திருந்தால் அதர்மங்களுக்கும் அட்டூழியங்களுக்கும் வாய்ப்புண்டு. அக்கோட்டை மக்கள் வசிக்கும் கோட்டையாக இருந்திருந்தால் மக்களைக் கொன்று எதிரியை வழிக்குக் கொண்டு வரலாம். முற்றுகையிட்டு கோட்டையில் உள்ளவர்களைப் பட்டினி போட்டு சரணடைய வைக்கலாம். கோட்டைக்குள் யாரையாவது அனுப்பி சதியோ சூழ்ச்சியோ செய்து கோட்டையைக் கைப்பற்றலாம். இங்கே எதற்கும் வழியில்லை. எல்லா வழியும் எதிரிக்குத்தான் இருந்திருக்கிறது.”

“இது தெரிந்துதான் இந்தக் கோட்டையை சாளுக்கிய மன்னர் தேர்ந்தெடுத்து எனக்குச் சவாலிட்டாரா?”

“அப்படித்தான் இருக்க வேண்டும்.”

“கங்கராஜரே! இக்கோட்டையைப் பற்றி நமக்குத் தெரியாது. ஆனால் என் தந்தையாருக்கும் மகா சேனாதிபதி பகாசூரருக்கும் தெரிந்திருக்கும் அல்லவா?”

“ஆம்”

“அப்படியானால் அதைப் பற்றி அவர்கள் ஒரு சிறு துப்பு கூடச் சொல்லவில்லையே? ஏன்?”

“மகாராஜா வித்தியாசமானவர் இளவரசே. உங்களிடம் தோன்றிய மாற்றத்தைக் கண்டவுடன் அவருக்கு உங்களைச் சோதித்து பார்க்கும் எண்ணம் வந்திருக்கும். அதோடு இப்போரை நீங்களே நடத்துவதாகச் சொல்லி விட்டதால் எந்த விவரத்தையும் உங்களிடம் சொல்லாமல் உங்கள் திறமை மற்றும் சாமர்த்தியத்தையும் சமயோசிதத்தையும் சோதித்திருக்கிறது.”

“எனக்கு வெட்கமாக இருக்கிறது கங்கராஜரே. சாளுக்கிய மன்னரும் என் தந்தையுமாகிய அவர் வைத்த அபாயமான சோதனையில் படுதோல்வி அடைந்து நிற்கிறேனே நான்? நான் இளவரசனாக இருப்பதற்குத் தகுதி படைத்தவன் தானா? பதவியைத் துறந்து விடலாம் என்று நினைக்கிறேன்.”

“இளவரசே! பதவியில் இருப்பவர்களுக்குச் சோதனைகள் வரும். தோல்விகள் வரும். அதே சமயம் சாதனைகளும் வரும்.

வெற்றிகளும் வரும். பதவிக் காலத்தில் எது வேண்டுமானாலும் நடக்கலாம். அதற்காகப் பதவியைத் துறப்பது ஒரு போதும் பரிகாரமாகாது. அரசாட்சியில் இவன் ஒருவனால்தான் எல்லாம் முடியும் என்றும் இவன் ஒருவனால் எதுவும் முடியாது என்றும் கிடையாது. நீங்கள் பதவியைத் துறந்து அந்தப் பதவியில் அமரும் மற்றொருவர் வெற்றிகளையும் சாதனை களையும் தொடர்ந்து நிகழ்த்துவார் என்று சொல்ல முடியுமா?"

"கங்கராஜரே! தோல்வி ஒரு பக்கம் இருக்கட்டும். வீரர்களின் மரணத்தை எண்ணிப் பார்த்தீர்களா? ஏறக்குறைய எட்டாயிரம் வீரர்கள் இறந்து விட்டார்கள். நான் ஏன் இறக்காமல் போனேன். சோகம் நெஞ்சைக் கசக்கிப் பிழிகிறது."

"ஐயா! மகாபாரதப் போர் - ராமாயணப் போர் - தேவாசுரப் போர் - கலிங்கப் போர் - இவற்றிலெல்லாம் மாண்டு போன வீரர்கள் எண்ணிக்கையைப் பார்த்தால் எட்டாயிரம் என்பது வெறும் தூசு. அர்ச்சுனனின் ஒரு மந்திர அஸ்திரம் ஒரே நேரத்தில் பல்லாயிரம் வீரர்களைக் கொன்றிருக்கிறது. மன்னனாகவும், இளவரசனாகவும், தளபதியாகவும் இருப்பவாகள் இதற்காக எல்லாம் மனம் ஒடியக் கூடாது."

"வீரமரணமடைந்தவர்களை அப்படியே விட்டு விட்டு வந்து விட்டோமே?"

"என்ன செய்வது? தோற்றுப் போய் ஓடி வருகிறவர்கள் அந்த வேலையை எப்படிச் செய்ய முடியும்?"

"வீரமரணமடைந்தவர்களின் குடும்பத்திற்கு என்ன பதில் சொல்வது?"

"இளவரசே! வீரர் பரம்பரை தியாகப் பரம்பரை. அவர்கள் வீரர்களாகவே பிறக்கிறார்கள். தியாகிகளாக இறக்கிறார்கள். வீர சொர்க்கம் அடைவதே அவர்களது லட்சியம். போருக்குப் போகும் போது ஒவ்வொரு வீரனின் குடும்பத்ினரும் ஈமச் சடங்கினை நடத்தி விடுவார்கள். போரிலிருந்துத் திரும்பி வந்தால் மறு ஜென்மமாகக் கருதி புதுப் பெயரைச் சூட்டுவார்கள். மகாராஜா அவர்களுக்கு வீரக்கல் நடுவார். குடும்பத்தினருக்கு ஈட்டுத் தொகை வழங்குவார். வீரர்கள் குடும்பம் என்றைக்குமே அழுவதில்லை. ஆதித் தமிழர்களைப் பற்றி நீங்கள் கேட்டதுண்டா? கண்வனைப் போருக்கு அனுப்புவாள் மனைவி. கணவன் போரில் இறந்து விட்டான் என்றச் செய்தி வரும். மனைவி போர்க்களத்திற்குச் சென்று கணவனின் சடலத்தைத் தேடுவாள். சடலத்தில் எதிரியின் வாள் மார்பில் பாய்ந்திருந்தால் 'என் கணவன் வீரன்' என்று சொல்லிக் கூத்தாடுவாள். மாறாக சடலத்தில் எதிரியின்

வாள் முதுகில் பாய்ந்திருந்தால் 'என் கணவன் கோழை' என்று இகழ்ந்து காறியுமிழ்ந்து விட்டுப் போவாள். தெரியுமா? இன்னொரு பெண் தன் கணவனைப் போருக்கு அனுப்பினாள். கணவன் வீர மரணமடைந்து விட்டான். அவள் பதறவில்லை. தனது ஒரே மகன் - பாலகன் - அவனை அழைத்து நீராட்டி ஆடைகளை அணிவித்து வாளைக் கொடுத்து அவனையும் போருக்கு அனுப்பினாள். அவனும் வீரமரணம் அடைந்தான். ஐயோ என்று ஒப்பாரி பாடவில்லை. 'என் குடும்பம் வீர குடும்பம். தேவைப்பட்டால் நானும் போவேன்' என்றாள். அக்காலத்தில் மன்னனின் அனுமதியின்றி பெண்கள் போருக்குப் போகக் கூடாது. ஆகவே தான் அவள் போகவில்லை."

"இந்த விவரங்களையெல்லாம் எப்படிச் சொல்கிறீர்கள்?"

"அனைத்துமே தமிழரது இலக்கியங்களில் இருக்கின்றன இளவரசே. அகமும் இருக்கிறது. புறமும் இருக்கிறது. அனைத்தும் அமுதம்."

சிறிது நேரம் வரை மௌனமாக இருந்தான் நரசிம்மன்.

அது வரை கங்கராஜனுடன் பேசிய விஷயங்களைத் தனக்குள் அசை போட்டுக் கொண்டான்.

கங்கராஜன் எவ்வளவு சொன்னாலும் தோல்வியை அவனால் ஏற்றுக் கொள்ளவோ ஜீரணிக்கவோ முடியவில்லை.

தோல்வியை விட தோல்விக்கான காரணங்களைச் சொல்வது மிகவும் வேதனையானது. அப்படியொரு நிலைமை தனக்கு வந்து விட்டதையும் அந்த நிலை தனது முதல் தோல்வியிலேயே நேர்ந்து விட்டதையும் எண்ணி எண்ணி அவன் நெஞ்சம் புண்ணாகியது.

போரில் பல புண்கள் உடம்பில் ஏற்பட்டு ரத்தம் கசிந்து கொண்டிருந்தாலும் தோல்வியால் உண்டான அகப்புண்தான் அவனை அலைக்கழித்தது.

தோற்றுப் போய் தொங்கிப் போன தலையுடன் மாளவிகாவிடம் எப்படிப் போய் நிற்பது?

அவள் மகத்தான எதிர்பார்ப்புகளில் அல்லவா மூழ்கியிருப்பாள்?

வெற்றி மாலையுடன் வருவேன் என்றல்லவா அதைச் சூடிக் கொள்ளும் இளம் தோள்களுடன் காத்திருப்பாள்.

என்னை அணைத்துக் கொண்டு பரவசப்படுவதற்கு அவளது அங்கம் துடித்துக் கொண்டிருக்கும் அல்லவா?

என்னைக் காதலித்தவள். என்னை மணக்கப் போகிறவள். என்னை விட்டுப் பிரிய விரும்பாதவள்.

அவளுக்கு முன் படுதோல்வியடைந்த பாவியாகப் போய் நின்றால் என்னாவாள்?

இடி விழுந்த கோபுரக் கலசம் போல் ஆகி விடுவாளா?

காதலைத் துறந்து விடுவாளா?

திருமணம் வேண்டாம் என்று கூறி விடுவாளா?

என்னை விட்டுப் பிரிந்து போய் விடுவாளா?

அவமானத்தில் துடிப்பாளே! எப்படி ஆறுதல் சொல்வது?

அவமானத்தில் கழுத்தை நெரித்துக் கொன்று விடுவாளா?

ஐயோ! அப்படியும் நடக்கலாமோ?

தந்தையிடம் எதற்காக அவசரப்பட்டுப் போருக்குச் செல்ல விரும்புவதைச் சொன்னேன்?

ஆழம் தெரியாமல் காலை விட்டு கழுத்து வரை மூழ்கி விட்ட கதையாக அல்லவா என் கதை இருக்கிறது?

சவாலான போருக்குத் தலைகொடுத்தது அதிகப் பிரசங்கித் தனமாக அல்லவா இருக்கிறது?

தந்தையோடு பல போர்களில் கலந்து கொண்டு அனுபவப் பட்ட பிறகு தான் இது போன்றச் சவாலான போருக்குப் போக வேண்டும்.

- இப்படியெல்லாம் எண்ணங்களால் தன்னை மாய்த்துக் கொண்ட நரசிம்மன் கங்கராஜனைப் பார்த்து "தளபதி! உன் உயிரைக் காத்த என் ஆருயிர் நண்பன் உதயணன் எங்கே?" என்று கேட்டான்.

"திரும்பி வந்தவர்களில் அவர் இல்லை. ஆகவே அவர் மரணமடைந்திருக்கலாம்."

"என்ன இப்படிச் சாதாரணமாகச் சொல்கிறீர்கள்? அவன் என் நண்பன். உயிரைக் காத்தவன்."

"அதற்கென்ன இளவரசே! தங்களை இணைபிரியாமல் கூடவே இருந்த கருடப்படை வீரர்கள் அனைவரும் மாண்டு விட்டார்கள். அவர்களுக்காகக் கவலைப்படாத நீங்கள் உதயணனுக்காக ஏன் கவலைப்பட வேண்டும்?"

கங்கராஜனின் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாத நரசிம்மன், "கங்கராஜரே! என்னை எனது தந்தையார் மிகவும் நம்பினார். மதித்தார். மகிழ்ந்தார். என் மகன் என்றால் அது நீதான் என்று பெருமிதப்பட்டார். எனது விருப்பங்களை யெல்லாம் ஏற்றுக் கொண்டார். அவருக்கு வெற்றியை நான் ஈட்டியிருக்க

வேண்டும். ஆனால் உள்ளதும் பறிகொடுத்த நிலையைத் தான் நான் உருவாக்கியிருக்கிறேன். அவர் முகத்தில் எப்படி விழிப்பது?" என்று கேட்டான்.

"போரில் நாம் போட்டுக் கொண்டிருந்த முகமூடியைப் போட்டுக் கொண்டு விழிக்கலாம்."

அசட்டையாகத்தான் இதைச் சொன்னான் கங்கராஜன்.

ஆனால் நரசிம்மனுக்கு அதுவே உகந்ததாக இருந்தது.

"முகத்தைக் காட்ட நமக்குத் தகுதியில்லை கங்கராஜரே. துவாரசமுத்திரத்தில் பிரவேசிக்கும் போது நாம் அனைவரும் இந்த முகமூடியுடன்தான் போக வேண்டும். எல்லோருக்கும் சொல்லி விடுங்கள்" என்றான்.

அதற்குப் பின் அவன் யாருடனும் பேசவில்லை.

துவாரசமுத்திரத்தில் பிரவேசிப்பதற்கு முன் தோல்வியைப் பற்றிய செய்திகளை விரிவாக மன்னருக்குத் தெரிவிப்பதற்காக இரண்டு வீரர்களை முன்னதாகவே அனுப்பி வைத்தான்.

தலைநகரை நெருங்கும் போது அனைவரும் முகமூடிகளை அணிந்து கொண்டார்கள்.

தலைநகர் சாதாரணமாக இருந்தாலும் ஏதோ அழுவது போன்ற பிரமையாக இருந்தது நரசிம்மனுக்கு.

கோட்டை வாசலில் உயரப் பறந்து கொண்டிருக்கும் ஹொய்சளக் கொடி இறக்கி வைக்கப்பட்டிருந்தது.

தன் தோல்விக்கு அடையாளமாக அப்படி செய்யப் பட்டிருக்கிறதா என்று எண்ணி அதிர்ந்தான் நரசிம்மன்.

அப்போது கோட்டை வாயிலில் தோன்றினான் விட்டலராயன். அவனோடு சேனாதிபதியும் இருந்தார்.

"எல்லோரும் முகமூடியை அகற்றுங்கள்" என்றான் மன்னன்.

முகமூடியை அகற்றினார்களே தவிர எல்லோரது தலைகளும் தொங்கிக் கிடந்தது.

மன்னன் நரசிம்மனைக் கட்டித் தழுவினான்.

"நீடூழி வாழ்வாயாக" என்று வாழ்த்தினான்.

கங்கராஜனைக் கட்டித் தழுவினான்.

"குறைவொன்றுமில்லை கங்கராஜா" என்றான்.

நரசிம்மனுக்கு எதுவும் புரியவில்லை.

"எல்லோரும் உள்ளே வாருங்கள்" என்றான்.

உள்ளே பிரவேசித்தவர்கள் மீது மக்கள் மலர்களைச் சொரிந்தார்கள்.

“தந்தையே! நான் வெற்றி பெறவில்லை. தோற்றுப் போய் வந்திருக்கிறேன்” என்றான் நரசிம்மன் அவசரம் அவசரமாக.

“வெற்றியைத் தோல்வி துரத்தும். தோல்வியை வெற்றி துரத்தும். இது சகஜம். வென்றவன் வானத்திற்குப் போய் விடுவதில்லை. தோற்றவன் மண்ணுக்குப் போய் விடுவதில்லை. இடப் புறம் தோல்வி இருந்தால் வடப்புறம் வெற்றி இருக்கும். வெற்றியும் தோல்வியும் நாணயத்தின் இருபக்கங்களைப் போன்றது. அது தான் ராஜ்யம். அது தான் அரசாங்கம். அது வான் வாழ்க்கை” என்றான் மன்னன்.

மகனின் கண்கள் பனித்தன.

இவரல்லவா என் தந்தை?

இவரல்லவா என் தெய்வம்?

- என்று நினைத்தான். அதுவரை அவனைக் கடைந்து கொண்டிருந்த வேதனைகள் அனைத்தும் அகன்றன.

“மகனே! உன் காயங்களுக்கு ஏன் மருந்திட வில்லை? அது தவறல்லவா?” என்று கேட்டான் மன்னன்.

“இது காயங்கள் அல்ல தந்தையே கறைகள்” என்றான் நரசிம்மன்.

“தோற்றாலும் வென்றாலும் உடலில் உண்டாகும் காயங்கள் ஒன்றுதான். உடனடியாகக் காயங்களைக் கழுவி மருந்திட வேண்டுமே தவிர கறை என்றும் குறை என்றும் கூறி அலட்சியப் படுத்தக் கூடாது. காயங்களுக்கு வெற்றி தோல்வியைப் பற்றித் தெரியாதல்லவா! எல்லோரும் சென்று காயங்களை ஆற்றிக் கொள்ளுங்கள். கவலையைப் போக்கிக் கொள்ளுங்கள். ஓய்வெடுங்கள். பிறகு நீ வா நரசிம்மா. முக்கியமான விஷயம் ஒன்று உன்னை வைத்துக் கொண்டு பேச வேண்டும்” என்றான் மன்னன்.

“தந்தையே! நமது கொடிகள் காணுமிடங்களில் எல்லாம் இறக்கி வைக்கப்பட்டிருக்கின்றனவே! ஏன்?” என்று கேட்டான் நரசிம்மன்.

சொன்னான் மன்னன்.

அதிர்ந்தான் நரசிம்மன்.





துறவு என்பது பொறுப்புக்களைத் தட்டிக் கழித்து விட்டு ஒதுங்கி வாழும் இடமல்ல – ஆனந்தநாதர்




"சாளுக்கியச் சக்கிரவர்த்தி விக்கிரமாதித்தர் காலமாகிவிட்டார் நரசிம்மா. அந்தத் துக்கத்தை நமது நாடும் அனுஷ்டிக்கிறது"-

இவ்வாறு மன்னன் விட்டலராயன் கூறியபோது மிகவும் அதிர்ந்து போனான் நரசிம்மன். அப்போதைக்கு மேற்கொண்டு எதுவும் பேசவில்லை.

அரண்மனைக்குச் சென்றான்.

அங்கே பணிமக்கள் நல்லமுறையில் நீராட்டினார்கள், காயங்களைக் கழுவினார்கள். பிறகு வைத்தியர்கள் வந்து காயங்களைப் பரிசோதித்து மூலிகை மருந்துகளை ஆங்காங்கே அழுத்தினார்கள். காற்றோட்டமான இடத்தில் படுக்க வைத்தார்கள்.

பல நாட்களுக்குப் பிறகு நல்ல உணவும் கிடைத்தது.

மூலிகை வைத்தியம் மிகவும் ஆறுதலாக இருந்தது.

அன்று மாலையிலேயே மருந்துகள் அகற்றப்பட்டு மீண்டும் சுடுநீரில் நீராட்டப் பெற்றான்.

அன்றிரவு தொல்லையற்ற உறக்கம் அவனை ஆட்கொண்டது.

மறுநாள் இயல்பு நிலைக்குத் திரும்பினான்.

அடுத்து நடக்கப் போகும் சந்திப்பும், நிகழ்ச்சியும் அவனை மிரட்டின.

கானகலா கோட்டைப் பற்றியும் சாளுக்கிய விக்கிர மாதித்தனின் சவால் பற்றியும் ஆன்றோர் அவையில் அலசப் படும்.

தனது தோல்வியை மன்னன் இயல்பாகவும் எளிதாகவும் எடுத்துக் கொண்டாலும் மற்றவர்கள் அவ்வாறு எடுத்துக் கொள்ள மாட்டார்கள்.

அதோடு மன்னன் பழையபடி பஞ்சப் பிரதானிகளைத் திரும்ப அழைத்து அந்த அமைப்பை மீண்டும் உருவாக்கி

யிருந்தான். அதில் உள்ளவர்கள் சகலகலா வல்லவர்கள், அனுபவ சாலிகள். அச்சமறியாதவர்கள். மன்னனை எதிர்த்து கருத்து கூறியவர்கள்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் மன்னன் மேற்கொண்ட படையெடுப்பை எதிர்த்தவர்கள். அதை அதர்மம் என்று சுட்டிக் காட்டியவர்கள். மன்னன் அந்த அமைப்பையே கலைத்து விட்டு படையெடுப்பை நடத்தினான்.

இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு பஞ்சப் பிரதானிகள் மன்னனை ஆதரித்தார்கள் என்றால் அதற்குக் காரணம் அவன் அடைந்த பெரு வெற்றிதான்.

ஆனால் இளவரசன் அடைந்ததோ படுதோல்வி. ஹொய்சளரின் எதிர்காலத்தைக் கேள்விக்குறியாக்கி விட்ட தோல்வி. ஆகவே பிரதானிகள் அவனைக் குற்றவாளியாக்கிக் கேள்விகளால் துளைத்தெடுப்பார்கள்.

போரில் பட்ட அவமானத்தை விட பிரதானிகள் அவையில் உண்டாக்கக் கூடிய அவமானம் பெரிதாக இருக்கும்.

இவற்றையெல்லாம் அசை போட்ட இளவரசனுக்கு கஷ்டமாக இருந்தது.

ஒரு முடிவுக்கு வந்தான்.

மன்னனின் அழைப்புக்காகக் காத்திருந்தான்.

அழைப்பு வந்ததும் அரச உடைகளைத் துறந்து விட்டுத் துறவிக்குரிய காவி உடைகளை அணிந்து கொண்டு இளம் துறவியாக அவைக்குப் புறப்பட்டான்.

அவையோர் அவனது கோலத்தைக் கண்டார்கள். எதுவும் வினவவில்லை.

தனக்காக ஒதுக்கப்பட்ட ஆசனத்தில் இளவரசன் அமர்ந்ததும் மன்னன் கேட்டான்.

"இதென்ன கோலம் நரசிம்மா?"

"இதுதான் என் எதிர்காலம் மகாராஜா" என்றான் நரசிம்மன்.

"இதைப் பற்றிக் கடைசியில் பேசுவோம். இப்போது நாம் பேச வேண்டியது சக்கிரவர்த்தியின் சவால் பற்றி" என்று கூறிவிட்டு எல்லோரையும் ஒருமுறை நோக்கினான்.

அனைவரது முகமும் இறுக்கமாக இருந்தது.

மன்னனே பேசினான்.

"நரசிம்மா! கானகலா கோட்டைப் போர் நமது தரப்பில் தோல்வியாக முடிந்து விட்டதால் சாளுக்கிய சக்கிரவர்த்தி அவர்களது சவால் சம்பந்தமாக உடனடியாக முடிவு எடுக்க வேண்டியுள்ளது. இது குறித்து மந்திரி பிரதானிகளிடம் நேற்றும் இன்றும் ஆலோசிக்கப்பட்டது. பலரும் தங்கள் உரிய கருத்துகளை வைத்து ஆழமான வாதங்களைப் புரிந்தார்கள். இந்த ஹொய்சளர்களுக்காகச் சாம்ராஜ்யம் ஒன்றை உருவாக்க நான் முனைந்தேன். மந்திரிப் பிரதானிகளின் அறிவுரைகளைப் புறக்கணித்தேன். கடந்த இரண்டு ஆண்டுகளாகப் போர் களத்திலேயே காலம் கடத்தி சாளுக்கியர் ஆதிக்கத்தில் இருந்த ஓரிரண்டு நாடுகளைத் தவிர இதர எல்லா நாடுகளையும் நான் வென்றேன். அந்த முயற்சியானது அற்ப சொற்பமானது அல்ல என்பது எல்லோருக்கும் தெரியும்.

இந்த நிலையில் கல்யாண புரத்திற்குக் கடத்தப்பட்டு சாளுக்கியர் வசம் சிக்கினாய். உன்னை ஒரே வெட்டில் சாய்க்கக் கூடிய சாளுக்கிய சக்கிரவர்த்தி அவ்வாறு செய்யாமல் உனக்கு ஒரு சவால் விட்டார். நீ அதை ஏற்றாய். நாங்களும் ஏற்றோம். கானகலா கோட்டையில் நாம் வெற்றி பெற்றால் இதுவரை நாம் பெற்ற நாடுகள் நமதாகும். தோல்வியடைந்தால் வென்ற நாடுகளைச் சாளுக்கியருக்கே திருப்பித் தர வேண்டும் என்பது உடன்படிக்கை. எதிர்பாராத விதமாகக் கானகலா கோட்டைப் போர் தோல்வியில் முடிந்து விட்டது. எனவே நாம் வென்ற நாடுகளோடு நாமிருக்கும் துவாரசமுத்திரத்தையும் வேலாபுரத்தையும் சாளுக்கியரிடம் ஒப்படைக்க வேண்டும்.

இதைப் பரிசீலித்து முடிவெடுக்க வேண்டிய இந்த நேரம் மிகவும் முக்கியமானது. கானகலா போர் நடந்து கொண்டிருந்த போது சாளுக்கிய சக்கிரவர்த்தி விக்கிரமாதித்தர் எதிர்பாராத விதமாக மரணமடைந்துவிட்டார். இது தான் விதி என்பது. சக்கிரவர்த்தி காலமாகி விட்டதால் அவரது சவாலும் காலாவதி ஆகிவிட்டது. ஆகவே கானகலா போரில் நாம் தோற்றாலும் நாம் வென்ற நாடுகளைச் சாளுக்கியர்களுக்குத் திருப்பித் தர வேண்டிய அவசியமில்லை என்று முடிவு கட்டியிருக்கிறேன்."

மன்னன் விட்டலராயன் இவ்வாறு பேசி முடித்ததும் யாரும் பேசவில்லை.

இளவரசன் நரசிம்மன் எழுந்து "மகாராஜா! இது என்ன பேச்சு? தாங்களா இப்படிப் பேசுகிறீர்கள்? வாக்கு தவறலாமா? மன்னர் வாக்கு தவறினால் மக்கள் எப்படி வாக்கைக்

காப்பாற்றுவார்கள்? விக்கிரமாதித்தரின் சவாலுக்கும் அவரது மரணத்திற்கும் என்ன சம்பந்தம்? உடன்படிக்கைகளுக்கு ஒருவரது மரணம் சம்பந்தப்படுமானால் அது குறித்து உடன்படிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும். அவ்வாறான நிபந்தனையோ குறிப்போ அதில் இல்லை. ஆகவே சக்கிரவர்த்தி காலமானதும் அவரது உடன்படிக்கை காலாவதி ஆகி விட்டதாகத் தாங்கள் அறிவித்திருப்பது சரியல்ல. வேலாபுரத்தில் பெருமாள் கோயிலைக் கட்ட வேண்டும் என்பது என் பாட்டனாரது கனவு. அதையொட்டியே தாங்கள் கோயிலைக் கட்டி வருகிறீர்கள். பாட்டனார் காலமாகி விட்டதால் அவரது கனவு காலமாகி விட்டது என்று கருதி ஆலயம் கட்டுவதை நிறுத்தி விடப் போகிறீர்களா? பாட்டனார் எனக்கு வாழும் கலையைக் கற்றுக் கொடுத்தார். அவர் காலமாகி விட்டதால் அவர் கற்றுக் கொடுத்ததை நான் புறக்கணித்து விட வேண்டும் என்று சொல்கிறீர்களா? கடன் கொடுத்தவர் இறந்து விட்டால் கடனும் இறந்து விடுமா? சூடிக் கொடுத்த மாலை சூடுபவர் இறந்து விட்டால் தூக்கிப் போட்டு விடப்படுமா? பாடிக் கொடுத்த புலவர் பொன்றி விட்டால் பாட்டுக்கள் இல்லையென்று ஆகிவிடுமா? இப்படியெல்லாம் எந்த நீதியில் குறிப்பிட்டுள்ளது? எந்த ஜாதியில் குறிப்பிடப்பட்டுள்ளது. அவ்வாறு சட்டத்திலும் இல்லை. தர்ம சாஸ்திரத்திலும் இல்லை. தாங்கள் கூறுவதை ஏற்க முடியாது தந்தையே! தாங்கள் வென்ற நாடுகளையும், வேலாபுரத்தையும் துவார சமுத்திரத்தையும் சாளுக்கிய நாட்டின் தற்போதைய மன்னன் சோமேஸ்வரரிடம் ஒப்படைப்பதே முறை" என்றான்.

மன்னன் அவையோர்களைப் பார்த்தான்.

அவையோர் மன்னனைப் பார்த்தனர்.

பஞ்சப் பிரதானியில் ஒருவரும் ராஜ சூத்ரதாரியுமான ஆனந்த நாதர் எழுந்து "இளவரசே! போரில் தோல்வியடைந்த நீங்கள் பொறுப்பில்லாமல் பேசுகிறீர்கள். மகாராஜா அடைந்த வெற்றிகள் பலபல. ஒவ்வொன்றையும் பெறுவதற்கு அவர் உயிரைப் பணயம் வைத்திருக்கிறார். அவற்றையெல்லாம் சாளுக்கியருக்குத் தந்து விட்டு மறுபடியும் சாம்ராஜ்யத்தை உருவாக்குவது என்பது இல்லாத ஊருக்குப் பயணம் செய்வது போன்றது. செல்லாத நாணயங்களை வைத்துக் கொண்டு வியாபாரம் செய்வதைப் போன்றது. கல்லிலிருந்து நாரை உரிக்கலாம். மணலிலிருந்து கயிறு திரிக்கலாம். இழந்த சாம் ராஜ்யத்தை மீண்டும் பெறவே முடியாது" என்றார்.

“மன்னரின் வெற்றிகளை நான் குறை சொல்ல வில்லை. அவை மகத்தானவை என்பதில் எனக்குச் சந்தேகம் கிடையாது. ஆனால் இழந்த சாம்ராஜ்யத்தை மீண்டும் உருவாக்க முடியாது என்று சொல்லாதீர்கள். தங்களது ராஜ்யத்தை முழுவதுமாக இழந்து வனவாசத்திற்குச் சென்ற பாண்டவர்கள் மீண்டு வந்த போது இருப்பதற்கு ஒரு வீடு கூடத் தரப்படவில்லை. அவர்கள் தங்களுக்கென்று சாம்ராஜ்யத்தை உருவாக்கவில்லையா?” என்று கேட்டான் நரசிம்மன்.

“இளவரசே! பாண்டவர்களை நம்மோடு ஒப்பிட வேண்டாம். பாண்டவர்களைப் போல இனி ஒரு வம்சம் பிறக்கப் போவதில்லை. நம்மைப் பற்றி மட்டும் நாம் பேசுவோம். வெற்றி பெற்ற ராஜ்யங்களைக் கொடுத்து விட்டு மீண்டும் திரும்பிப் பெறுவதென்பது விளையாட்டான விஷயமல்ல. எளிதான காரியமும் அல்ல. அரசியலில் சந்தர்ப்பங்களையும் ஓட்டைகளையும் பயன்படுத்துபவனே விவேகமானவனாகக் கருதப்படுவான். அரசியல் என்பது கடற் பயணத்தைப் போல நிச்சயமற்றது. கிடைக்கும் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி சந்தோஷமாக இருக்க வேண்டும். தாமதித்துக் கொண்டிருந்தால் சூறாவளிகள் வந்து கடலிலேயே கரைய வேண்டியதாகி விடும். விக்கிரமாதித்தன் இறந்து விட்டான் என்பதுதான் நமக்குக் கிடைத்திருக்கும் சந்தர்ப்பம். அதைச் சாதகமாகப் பயன்படுத்தி கொள்வதே சாமர்த்தியம்” என்றார் ஆனந்த நாதர்.

“சந்தர்ப்பங்களையும் தந்திரங்களையும் பயன்படுத்தி வெற்றி பெறுவதென்பது சாமர்த்தியமாக இருக்கலாம். சத்தியமாக இருக்காது. நிரந்தரமானதாக இருக்காது. கார் மேகங்கள் மழையைப் பொழிந்து விட்டுக் கலைந்து விடுவது போல விரைவிலேயே சிதைந்து போய் விடும். பாண்டவர்களைப் பற்றி நாம் பேச வேண்டாம். தர்ம நியாயங்களைப் பற்றிப் பேசலாம் அல்லவா? எனது தந்தையார் வெற்றி பெற்ற நாடுகளை விக்கிரமாதித்தர் போரின் மூலமே மீட்க முடியும். ஆனாலும் தேவையில்லாமல் போரிட வேண்டாம் என்று கருதி கானகலா போரை மட்டும் இலக் காக வைத்து சவாலிட்டார். மறுப்பு தெரிவித்திருந்தால் அப்போர் தொடங்குவதற்கு முன்பே தெரிவித்திருக்க வேண்டும். அப்போது ஒப்புக் கொண்டு போரில் தோற்றபிறகு விக்கிரமாதித்தர் இறந்து விட்டார் என்பதால் ஒப்புக் கொண்ட விஷயத்தை மறுப்பது நியாய மாகாது. தர்மமாகாது. வீரமாகாது” என்றான் நரசிம்மன்.

“இளவரசே! இந்தப் போரில் நீங்கள் பலி கொடுத்திருப்பது எட்டாயிரம் வீரர்களை. அது எவ்வளவு பெரிய இழப்பு

தெரியுமா? அதை ஈடுகட்டுவதற்கே பல ஆண்டுகளாகும். மேலும் படை பெருக்கி இந்த நாடுகளை எல்லாம் மீண்டும் வெற்றிபெற எவ்வளவு காலம் ஆகும் தெரியுமா?" என்று கேட்டார் சேனாதிபதி பகாசூரர்.

"போருக்குப் போகிறவர்கள் எல்லோரும் தோற்க வேண்டும் என்பதற்காகவோ வீரர்களைப் பலி கொடுக்க வேண்டும் என்பதற்காகவோ செல்வதில்லை சேனாதிபதியாரே! அதே சமயம் இந்தப் போரின் தோல்விக்கும் இழப்பிற்கும் முழு பொறுப்பை நான் ஏற்கிறேன். வெறும் ஆர்வத்தினால் போருக்குச் செல்லக் கூடாது என்பதையும் போர் குறித்த அறிவும் அனுபவமும் தேவை என்பதையும் உணர்ந்து கொண்டேன். இந்தப் போர் எனக்கொரு பாடம். இப்போரின் தோல்விக்கு எனக்கு நானே தண்டனை விதித்துக் கொள்ளும் விதமாக அரியணையை நான் துறக்கிறேன். துறவு மேற்கொள்கிறேன்" என்றான் நரசிம்மன்.

"நிறைய பொறுப்புகளும், கடமைகளும் இருக்கும் போதும், பிரச்சனைகள் எழும் போதும் உடன் இருந்து அவற்றைக் கையாளுபவன் தான் வீரனேயன்றி அவற்றையெல்லாம் விட்டு துறவு மேற்கொள்பவனல்ல. துறவு என்பது பொறுப்புக்களைத் தட்டிக் கழித்து விட்டு ஒதுங்கி வாழும் இடமல்ல. துறவில் தான் அதிகம் பொறுப்பிருக்கிறது. உண்மைத் துறவிகள் அனைவரும் பொறுப்பானவர்கள். அவர் தவமிருப்பது உலக நன்மைக்காக. நீங்கள் துறவறம் பூணுவதாகக் கூறுவது பொறுப்பற்ற காரியம். இப்போதைய நிலைமைக்கு அது பரிகாரமாகாது" என்றார் ராஜ சூத்ரதாரியான ஆனந்த நாதர்.

"ஆகா! போரிலேயே நான் வீரமரணமடைந்திருக்கக் கூடாதா? எதற்காக என் நண்பன் உதயணன் என் உயிரைக் காப்பாற்றினான்? இங்கே இந்தச் சான்றோர்களால் சொல் லம்புகளால் தாக்கப்படுவதற்காகவா? ராஜ சூத்ரதாரியான ஆனந்த நாதரே! நான் என்ன தான் செய்ய வேண்டும் என்று நினைக்கிறீர்கள்?" என்று அசதியுடன் கேட்டான்.

"மகாராஜா கூறிய விஷயத்திற்குச் சம்மதம் தெரிவிப்பது தான்."

"உயிர் இருக்கும் வரை நான் இதற்குச் சம்மதிக்க முடியாது பெரியோர்களே! நான் அடைந்த தோல்விக்குச் சாளுக்கிய மன்னரது சவாலின் படி நடந்து கொள்வதே பரிகாரமாகும். அது வேண்டாமென்றால் நான் என் உயிரை இங்கேயே மாய்த்துக் கொள்வேன்."

"அரச குமாரர்கள் இவ்வாறு மிரட்டுவது மிகவும் தவறு. பிறரது தவறுகளைச் சுட்டிக் காட்டும் இடத்தில் இருக்கும் நீங்கள் இப்படிப் பேசுவது தவறானதாகும்."

"நீங்கள் எல்லோரும் அதர்மம் பேசுவதும் செய்வதும் சரி என்றால் நான் சொல்வதும் சரிதான்."

இந்த நிலையில் கங்கராஜன் எழுந்து "இளவரசர் புடம் போட்டத் தங்கம் போன்றவர். அவர் மீது எள்ளளவும் தவறில்லை. அவரது பேச்சும் அட்சர சுத்தமானது. அவர் ஏதோ மாறுபட்டக் கருத்தைச் சொல்ல வேண்டும் என்பதற்காகச் சொல்லவில்லை. எது சரியோ - எது நியாயமோ - எது தர்மமோ - அதையே பேசினார். அதை நான் முற்றிலுமாக ஆதரிக்கிறேன். அவரும் நானுமாகச் சேர்ந்து ஹொய்சள சாம்ராஜ்யத்தை மீண்டும் உருவாக்கி மகாராஜாவின் காலடியில் சமர்ப்பிப்போம்" என்றான்.

"ஒரே ஒரு போர். அதில் வெற்றிபெற முடியாத இளவரசரா சாம்ராஜ்யம் படைக்கப் போகிறார்? எப்படி? மந்திரத்தாலா?" என்று கிண்டலாகக் கேட்டார் ஆனந்த நாதர்.

"ஐயா! இளவரசரின் உள்ளம் பஞ்சு போல் மென்மையானது. அதை உங்கள் சொல்லம்புகளால் சேதப்படுத்திப் புண்ணாக் காதீர்கள். இதுவரை தங்கள் அனைவரது வார்த்தைகளும் பால் போல் இருந்த நெஞ்சத்தை கலங்க வைத்திருக்கிறது. சந்தனக் காடு சேற்றுக் காடாகியிருக்கிறது. ஏதோ இளவரசர் ஒருவர் தான் உலகிலேயே தோல்வியைச் சந்தித்தவர் என்பது போல் நீங்களெல்லாம் எண்ணுவீர்களானால் அது தவறு. நம்மில் தோல்வியடையாதவர்கள் யாருமில்லை. எல்லோரும் ஏதோ சில நேரங்களில் - சில விதங்களில் தோற்றிருக்கிறோம்" என்றான் கங்கராஜன்.

அவையில் இருந்த எல்லோரும் சிரித்தார்கள்.

"நீங்கள் சொன்னது நூற்றுக்கு நூறு சரியாகி விட்டது" என்றார்கள் மன்னனைப் பார்த்து.

மன்னனைப் பார்த்து "நீங்கள் கொடுத்த வைத்தவர்" என்றார்கள்.

"இப்படியொரு புதல்வர் இருக்கும் போது உங்களுக்குக் குறைவில்லை. நிறைதான்" என்றார்கள் மன்னனைப் பார்த்து.

மன்னனைப் பார்த்து "எல்லோருக்கும் பெருமையாக இருக்கிறது. உங்களிடம் பணியாற்றுவதற்காகப் பெரு மகிழ்ச்சி யடைகிறோம்" என்றார்கள்.

பஞ்சப் பிரதானிகள் எழுந்து வந்து இளவரசனைக் கட்டித் தழுவினார்கள்.

“இளவரசே! உங்கள் முடிவைத்தான் மகாராஜா ஏற்றிருந்தார். நாங்களும் ஏற்றிருந்தோம். நீங்கள் என்ன முடிவை எடுக்கிறீர்கள் என்பதை அறியத்தான் நாங்கள் நாடகமாடினோம். கறந்த பால் மடிபுகுந்தாலும் புகலாம். மொட்டைப் பாறையில் நீரூற்று எழுந்தாலும் எழலாம். குதிரைக்குக் கொம்பு முளைத்தாலும் முளைக்கலாம். ஆனால் உங்களிடம் அறம் பிசகாது. தர்மம் குலையாது. வாக்கு பொய்க்காது. நீங்களும் மகாராஜாவும் பொக்கிஷங்கள்” என்றார்கள்.

நரசிம்மனுக்கு மெய் சிலிர்த்தது.

மூத்தவர்கள் எல்லாம் சேர்ந்து தனக்காக நாடகம் போட்டதாகச் சொன்னது மகிழ்ச்சியாக இருந்ததென்றால் -

அந்த நாடகத்தில் தான் உண்மையைப் பேசி அனைவரையும் அசரவைத்தது பெருமகிழ்ச்சியாக இருந்தது.

தானும் பொய்யாகப் பேசி அனைவரையும் சொல்லால் தாக்க வைத்து அமைதியாக இருந்த மன்னன் பேசத் தொடங்கி “நரசிம்மா! உனக்கு என் பாராட்டுகள். உண்மையிலேயே நாங்களெல்லாம் என்ன பேசினோமோ அதை நீ பேசுவாய் என்று கருதியிருந்தோம். எல்லோரையும் தோற்கடித்து விட்டாய். இது தான் மகத்தான வெற்றி. போர்கள் வரும். போகும். அரியணையில் இருப்பவனுக்கு அது இரண்டாம் பட்சம் தான். ராஜ நீதி தான் முதல் பட்சம். அதை நீ பேசியது எல்லோருக்கும் மகிழ்ச்சி. நான் ஏழுமுறை போரில் தோற்றிருக்கிறேன். சேனாதிபதி பகாசூரர் ஆறு முறை தோற்றிருக்கிறார். உன் பாட்டனார் மூன்று முறை தோற்றிருக்கிறார். நீ சொன்னது போல் எங்களில் தோற்காதவர் யாரும் இல்லை. அங்கே உன் தோல்வி இங்கே ஒரு பொருட்டாகவே கருதப்படவில்லை என்பதை நீ அறிந்து கொள்” என்று சொல்லிவிட்டு -

“இனி நடக்க வேண்டியதை பார்க்கலாம் நரசிம்மா! மகாராஜா விக்கிரமாதித்தனின் ஈமக்கிரியைகள் வரும் சோம வாரத்துடன் முடிவடைகின்றன. நீ நாளைக்குப் புறப்பட்டால் சரியாக இருக்கும். நான் வெற்றி பெற்ற நாடுகளோடு வேலாபுரத்தையும் நமது தலைநகர் துவாரசமுத்திரத்தையும் சாளுக்கியருக்கு ஒப்படைக்கும் ஓலை சாசனம் தயாராக இருக்கிறது. அதை நீயே எடுத்துச் சென்று சக்கிரவர்த்தியின் புதல்வரிடம் ஒப்படைத்து விடு. வேலாபுரத்தில் கட்டப்பட்டு வரும் பெருமாள் ஆலயத்தை

தொடர்ந்து கட்டுவதற்கு அனுமதி கேட்டிருக்கிறோம். நீயும் அதை நேரில் கேள். நாம் நமது இருப்பிடத்தைத் தொண்டனூருக்கு மாற்றிக் கொள்வதாக உத்தேசித்திருக்கிறேன். அதற்கான ஏற்பாடுகளை சேனாதிபதி செய்து வருகிறார்'' என்றான்.

“தந்தையே! தங்கள் எதிர்கால திட்டம் என்ன என்பது குறித்து தீர்மானித்து விட்டீர்களா?'' என்று கேட்டான் நரசிம்மன்.

“அதற்கு அவகாசம் இருக்கிறது நரசிம்மா. முதலில் நீ கல்யாணபுரத்திற்குச் சென்று வா. அதற்குப் பிறகு மற்றதை யோசிப்போம். பாதுகாப்பிற்காக உன்னோடு ஆயிரம் வீரர்கள் வருவார்கள்'' என்றான் மன்னன்.

அவை கலைந்தது.

பொறுப்பை நல்ல முறையில் முடித்திருந்தாலும் மன்னனின் இதயத்திற்குள் வாட்டம் இருந்து கொண்டிருந்தது.

ஆண்டவனை நினைத்தான்.

“இது என்ன சோதனை இறைவா? சின்னஞ்சிறு மனத்திற்குள் சாம்ராஜ்யப் பேராசையைத் தூண்டியவன் நீ. அதற்காக இரண்டு வருஷங்கள் அலைய விட்டு வெற்றிகளைத் தந்தவனும் நீ. முக்கால் வாசி பயணம் வந்து விட்டபின் பயணமே வீண் என்று சொல்லி, தொடங்கிய இடத்திற்கே திருப்பி அனுப்பியது போல கானகலா கோட்டைப் போரைத் தோல்வியாக மாற்றியதும் நீ. இதெல்லாம் எதற்காக? நீ நினைப்பதுதான் என்ன? முடிப்பது தான் என்ன? நான் சமணனாகப் பிறந்து சமணனாக வாழவில்லை. பற்றுகளைத் துறக்க வேண்டிய நான் பற்றுகளைத் தேடிப் பிடித்தேன். ஆசைகளைத் தேடிப் பிடித்தேன். பேராசைகளைத் தேடிப் பிடித்தேன். பேராசை பெருமோசம் என்பது சரியாகி விட்டது. தவறு எங்கே நுழைந்தது என்றே தெரியவில்லை'' என்று தனக்குள் கேட்டபடி தனித்திருந்தான்.

அப்போது வந்தார் நீலகேசி.

“மகாராஜா! இதெல்லாம் என்ன? தங்கள் சாம்ராஜ்யம் அடிக் கல்லோடு அகலப் போகிறதாமே? இது என்ன கொடுமை?'' என்று வினவினார்.

“துறவு எத்தனை மேன்மையானது என்பது இப்போது தான் புரிகிறது அடிகளே. தங்களைப் போன்றவர்கள் துறவை ஏன் விரும்புகிறார்கள் என்பதும் புரிந்து விட்டது. பற்றோடு இருப்பவனுக்குப் பகலிலும் தொல்லை. இரவிலும் தொல்லை. பற்றற்றவனுக்கு எப்போதும் அது இல்லை'' என்றான் மன்னன்.

மறுநாள் ஆயிரம் வீரர்களோடு கல்யாணபுரத்திற்குப் புறப்பட்டான் நரசிம்மன்.

கல்யாணபுரத்திற்குச் சென்றான்.

சாளுக்கிய நாட்டின் புது மன்னனான சோமேஸ்வரனைச் சந்தித்தான்.

ஓலையைக் கொடுத்தான்.

சோமேஸ்வரன் மிகவும் மகிழ்ந்து பதிலோலை தயாரித்து "இது அடிமை ஓலை நரசிம்மா. இனி ஹொய்சளர்கள் எங்கள் அடிமை என்பதற்கான ஆக்ஞா பத்திரம் இது. கொண்டு போய் விட்டலராயனிடம் கொடு" என்று சொல்லிக் கொடுத்தான்.

ஓலையை விட்டலராயன் படித்தான்.

"இது என்ன புது சோதனை?" என்று முணுமுணுத்தான்.





வாழ்க்கை என்பது நாளைய நினைப்பல்ல. இன்றைய நடப்பு. இன்று கிடைப்பனவற்றைத் தூய்க் காமல் விட்டு விட்டு நாளையைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தால் இன்றைய பொழுதும் வீணாகி விடும் – வாலிபன்




கல்யாணபுரத்திற்குச் செல்வதற்கு முன் தனது காதலியை ஒரு முறையாவது சந்திக்க வேண்டும் என்று விரும்பினான் நரசிம்மன்.

அவளது வார்த்தைகள்தான் ரணமாகி யிருக்கும் தன் நெஞ்சிற்கு ஆறுதலாக இருக்கும் என்று நினைத்தான்.

ஆடவர்கள் சூரியனைப் போன்றவர்கள். சூரிய ஒளி இல்லா விட்டால் புல் பூண்டுகள் கூட முளைக்காது. அது போல ஆண்கள் அத்தியாவசியமானவர்கள். சக்தி மிகுந்தவர்கள்.

ஆனால் பெண்கள் சந்திரனைப் போன்றவர்கள். சூரியனுக்கு உள்ள சக்தி சந்திரனுக்கு இல்லாமல் போகலாம். ஆனால் சந்திரன் தரும் குளிர்ச்சிக்கு இணை கிடையாது. சூரியனால் வறுத்தெடுக்கப்பட்டவன் சந்திரனின் குளிர் வீச்சில் மென்மையடைகிறான். அது போல ஆடவன் எத்துணை சக்தி மானாக இருந்தாலும் சக்கிரவர்த்தியாக இருந்தாலும் பெண்ணிடம்தான் அவனுக்கு ஆறுதல் கிடைக்கிறது. அன்பு கிடைக்கிறது. அரவணைப்பு கிடைக்கிறது.

தனக்கு அரசவையில் இருந்த ஆடவர்களும் ஆன்றோர்களும் பாராட்டிப் போற்றினாலும் நரசிம்மன் மாளவிகாவின் முகத்தைக் காணவும் அவளது பவள உதடுகளால் அமுதம் போன்றச் சொற்களைக் கேட்கவுமே விரும்பினான்.

அவளை துவாரசமுத்திரத்தில் எங்கும் காணவில்லை.

புயல் வேகத்தில் வேலாபுரத்திற்குச் சென்றான்.

அங்கேயும் காணவில்லை.

மன்னனின் தாசியும் தனது இரண்டாவது அன்னையுமான துளசியைச் சந்தித்தான்.

“அவளை நான் முதன் முதலில் சந்தித்துப் பேசியதோடு சரி. அதற்குப் பிறகு நாங்கள் சந்திக்கவில்லை. என்னோடு இருக்கும் படிச் சொன்னேன். அவள் மறுத்து விட்டாள். அதற்குப் பின் என் கண்களில் படவில்லை” என்றாள் துளசி.

அவளே தொடர்ந்து "அவளை நீ காண விரும்புவது இயல்பு தான் மகனே. ஆயினும் பெருந்தோல்வியின் நிழலில் அவளைச் சந்தித்தால் அவள் வேதனையடைவாள் இல்லையா? எந்தப் பெண்ணும் தன் அன்புக்கு ஆட்பட்ட ஆடவன் வெற்றி வீரனாக இருப்பதையே விரும்புவாள்" என்றாள்.

"என் மாளவிகா அப்படிப்பட்டவள் அல்ல தாயே. அவளது அன்பு ஆளப்படுகிற அன்பல்ல. ஆட்படுகின்ற அன்பு. ஆட்படுகின்ற அன்பில் அன்பு மட்டும்தான் இருக்குமே தவிர - அன்பு மட்டுமே எதிர்பார்க்கப்படும் அம்சமாக இருக்குமே தவிர வேறு எதுவும் இருக்காது. அவள் என் பதவிக்காக அன்பு செலுத்தவில்லை. போரின் வெற்றி தோல்விகள்அவளுக்கு ஒரு பொருட்டே அல்ல. அவளுக்குத் தேவையானது நெஞ்சு மட்டும் தான். அந்த நெஞ்சில் இருக்கும் அன்பு மட்டும் தான். அவளை ஒரு நிமிடம் பார்த்து விட்டால் போதும். கல்யாணபுரத்திற்குக் கல்யாணத்திற்குச் செல்கிறவனைப் போலச் செல்வேன்" என்றான் நரசிம்மன்.

"கல்யாணபுரத்திற்குச் சென்று விட்டு உண்மையான கல்யாணத்திற்கே வா மகனே! அவளை நான் மாலையோடு தயாராக வைத்திருக்கிறேன்" என்றாள் தாசி.

"தாங்கள் சொல்வதும் சரிதான் தாயே. அவளைச் சந்திக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பில் என் பயணம் இனிதாக இருக்கும். என்னை ஆசிர்வதியுங்கள்."

"நீடூழி வாழ்வாய் மகனே"-



நல்லவளிடம் நல்லாசி பெற்றவுடன் மறுநாள் ஆயிரம் வீரர்களுடன் புறப்பட்டான் இளவரசன் நரசிம்மன்.

ஒற்றை முரசு அடித்தபடி அவனது பயணம் காஞ்சி கல்யாணபுரம் ராஜபாட்டையில் தொடங்கியது.

ராஜ்ய சந்திப்பு என்ற அறிவிப்பு வழியில் தெரிவிக்கப் பட்டதால் இடையில் எங்கும் அவர்களுக்குத் தொல்லை வரவில்லை.

கல்யாணபுரத்தை அடைய நான்கு நாட்கள் ஆகுமாதலால் முதல் நாள் பயணமுடிவில் இரவுப் பயணத்தைத் தவிர்க்கும் பொருட்டு அனைவரும் தங்கினார்கள்.

வீரர்கள் இளவரசனுக்கு ஒரு கூடாரத்தை அமைத்துக் கொடுத்தார்கள். உணவையும் தயாரித்துக் கொடுத்தார்கள்.

சம்பிரதாயமாக அவற்றை நரசிம்மன் ஏற்றுக் கொண்டானே தவிர ஈடுபாட்டைக் காட்டவில்லை.

உணவை உண்டு விட்டு சற்றே உலவினான். அவர்கள் தங்கிய இடத்திற்கு அருகில் சிற்றாறு ஒன்றிருந்தது.

ஆற்றங்கரையில் மல்லிகைக் கொடிகள் படர்ந்து தனது இருப்பிடத்தை இப்படித்தான் உணர்த்த வேண்டும் என்பது போல் நறுமணத்தை அள்ளி வீசின.

மனத்தை மயக்கும் அந்தச் சூழ்நிலைக்கு வானம் வாழ்த்து கூற முற்பட்டது போல் சந்திரன் அங்கே தோன்றி வானமலர் போல காட்சியளித்தது.

கார்காலமாதலால் வானில் மேகங்கள் வானரங்களைப் போல வந்து வந்து சென்றதால் சந்திரன் அடிக்கடி மறைந்து எதுவும் நிரந்தரம் இல்லை என்று சொல்வது போல இருந்தது.

அத்தத்துவம் உண்மை என்று சாட்சி சொல்வது போல் குளிர்காற்று சில்லென்று வீசி அந்தப் பிராந்தியத்தையே ஆண்டு கொண்டிருந்தது.

அந்த ஆற்றங்கரையில் பெரிதாக இருந்த ஒரு பாறையில் ஓர் இளம் பெண்ணும் வாலிபனும் காணப்பட்டார்கள்.

வாலிபனின் மீது படுத்திருந்தாள் இளம் பெண்.

இது தான் இன்பம். இதுதான் ஆனந்தம். இது தான் சொர்க்கம் என்று கூறுவது போல் இருந்தது அவர்களது கோலம்.

ஆர்வமானது இளவரசன் நரசிம்மனை அவர்களுக்கு அருகில் செல்ல வைத்தது. மறைவிலிருந்த படி அவர்களது பேச்சைக் கேட்டான்.

"அதோ அந்த நிலவு - அதைப் பிடித்துத் தரமுடியுமா உங்களால்?" என்று கேட்டாள் அந்த இளம் பெண்.

"முடியும்" என்றான் அவன்.

"எப்படி?"

"உன்னையே பிடித்து விட்டேனே! நிலவைப் பிடிக்க முடியாதா?"

இளம் பெண் சிரித்தாள்.

"இதே கேள்வியை மீண்டும் கேட்பேன். வேறு மாதிரியான பதிலைக் கூறமுடியுமா?" என்று கேட்டாள்.

"கேள்."

"அதோ அந்த நிலவு - அதைப் பிடித்துத் தரமுடியுமா உங்களால்?" என்று கேட்டாள்.

"இரு நிலவுகள் எதற்கு? நீ மட்டும் போதும்."

இளம் பெண் சிரித்தாள்.

"இதே கேள்வியை மீண்டும் கேட்பேன். வேறு மாதிரியான பதிலைக் கூற முடியுமா?" என்று கேட்டாள்.

"அதோ அந்த நிலவு - அதைப் பிடித்துத் தரமுடியுமா உங்களால்?" என்று கேட்டாள்.

"தேவையற்றவைகளை எதற்காகப் பிடிக்க வேண்டும்? அந்த நிலவு இல்லாமல் நம்மிடம் ஆனந்தம் நிலவாதா?" என்று கேட்ட அவன் பாடினான்.

**உள்ளத்தில் கலந்திட்டு உயிரோடும்**
**இணைந்திட்ட மேகமே! - அன்புத்**
**தாகமே! - உன்**
**மோகமே! - எனக்குப்**
**போகமே!**

**கள்ளத்தை அறியாத கனிவுக்குப்**
**பொருளான தங்கமே! - பொன்**
**அங்கமே! - நலன்**
**எங்குமே! - உன்னால்**
**தங்குமே!**

நானும் பாடுவேன் என்றாள் அந்த இளம்பெண்.

"பாடேன்"

**சொல்லத்தான் மொழியேதும் தெரியாமல்**
**இருக்கின்ற சிங்கமே! - உன்**
**அங்கமே! - உன்னால்**
**பொங்குமே! - நலம்**
**எங்குமே!**

**வெல்லத்தான் வழிதேடி வருகின்ற**
**தலைவன்நீ அல்லவா? - புகழ்**
**சொல்லவா? - வாழ்வை**
**வெல்லவா? - என்**
**வல்லவா?**

வாலிபன் பாடினான்.

**இன்பத்தை தினம் சேர்த்து இசைபாடி**
**வருகின்ற தென்றலே! - மன**
**மன்றிலே! - தினம்**
**ஒன்றிலே! - வாழும்**
**அன்றிலே!**

**துன்பத்தைப் பகிர்ந்திட்டுச் சுகத்தையே**
**தருகின்ற மங்கையே! - ரதியின்**
**தங்கையே! - இன்பம்**
**பொங்கவே! - நாளும்**
**தங்கவே!**

*இளம்பெண் தொடர்ந்தாள்.*

**என்னுள்ளம் கலந்திட்டு இதயத்தில்**
**இயைந்திட்ட மன்னனே! - அன்புப்**
**பொன்னனே! - நான்**
**பின்னமே! - தேன்**
**கிண்ணமே!**

**பொன்னுள்ளம் இணைந்திட்டுப் பொழுதெல்லாம்**
**நலம் கொள்ளும் மன்னவா! - உயர்**
**விண்ணவா! - மதன்**
**பின்னவா! - இசைப்**
**பண்ணவா!***

*மறைவில் இருந்த இளவரசனுக்கு ஏக்கமாக இருந்தது.*

*"ஆகா! இந்த வாலிபன் என்னைப் போலல்லவா இருக்கிறான்! இவள் மாளவிகாவைப் போலல்லவா இருக்கிறாள்? அவளும் நானும் இப்படியல்லவா பேசிப் பாடியிருக்க வேண்டும்? எங்கே போனாள் மாளவிகா?" என்று தனக்குள் பேசிக் கொண்டான்.*

*இளம் பெண் கேட்டாள்.*

*"திடீரென்று ஆற்றில் வெள்ளம் வந்து நாம் இறந்து விட்டால்?"*

*"பெண்ணே! வாழ்க்கை என்பது நாளைய நினைவல்ல. இன்றைய நடப்பு. இன்று கிடைப்பதைத் தூய்ப்பதை விட்டு விட்டு நாளையைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தால் இன்றைய பொழுதும் வீணாகி விடும்."*

*இளம்பெண் சிரித்தாள்.*

*வாலிபனின் பேச்சு இளவரசனை மிகவும் கவர்ந்தது.*

---

* கவிதை ஆக்கம் : திரு. முத்து இராமமூர்த்தி

“இந்த அதிர்ஷ்டக்காரன் அழகாகவும் இருக்கிறான். அறிவாளியாகவும் இருக்கிறான். வாழ்க்கையை இவன் புரிந்து கொண்டிருக்கும் விதமும் அழகாக இருக்கிறது. அந்தப் பெண் கொடுத்து வைத்தவள்” என்று சொல்லிக் கொண்ட அவன் காதலர்களை மனதிற்குள்ளாகவே வாழ்த்திவிட்டு தன் கூடாரத்திற்கு வந்தான்.



குறித்த காலத்தில் கல்யாணபுரத்தை அடைந்தான்.

சாளுக்கிய சோமேஸ்வரன் நரசிம்மனை நல்ல முறையில் வரவேற்று ஒரு நாள் ஓய்வும் கொடுத்தான்.

மறுநாள் அரசவைக்கு வரும்படி அழைப்பு விடுத்தான்.

அவையில் சோமேஸ்வரன் உட்பட அனைவரும் இளைஞர் களாக இருந்தது புத்தம் புதிய சோலையைப் போல இருந்தது.

எல்லோரையும் அறிமுகம் செய்து வைத்த சோமேஸ்வரன் அச்சோலையில் பூத்த புது மலர் போல இருந்த பெண்ணைச் சுட்டிக்காட்டி “இவள் என் சகோதரி. பெயர் சௌமிய குமாரி. இவளைத்தான் வேலாபுரத்தையும் துவாரசமுத்திரத்தையும் கவனிக்கச் சொல்லியிருக்கிறேன்” என்றான்.

பிறகு அவனே தொடர்ந்து “உங்களைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். உங்கள் உடன்படிக்கையைப் பற்றித் தான் நேற்று பேசிக் கொண்டிருந்தோம். என்ன, ஓலையை கொண்டு வந்திருக்கிறீர்களா?” என்று கேட்டான்.

அப்போது கானகலா கோட்டையின் தளபதி ஜெகதேவன் வந்து அமர்ந்தான். அரசவையில் இருந்தவர்களில் அவன் தான் மூத்தவனாக இருந்தான்.

இதற்கிடையில் நரசிம்மனிடமிருந்து ஓலையைப் பெற்ற சோமேஸ்வரன் அதைப் படித்து விட்டு “விட்டலராயர் நேர்மையானவர். வாக்கு தவறாதவர். மிகவும் தெளிவாகவும் அதே சமயம் பணிவாகவும் எழுதியிருக்கிறார். அவரைப் போன்ற அரசர்கள் அரிதானவர்கள். எங்கள் தந்தையார் உங்களிடம் இப்படியொரு சவாலை எதற்காகப் போட்டார் என்பது தெரியுமா?” என்று கேட்டான்.

“தெரியாது மகாராஜா.”

“எங்கள் பிரதிநிதியாக இருந்து கொண்டு எங்களை மதிக்காமல் எங்களை எதிர்த்ததுதான் காரணம். படையெடுப்பு நடத்தாமல் விடுதலை வேண்டும் என்று கேட்டிருந்தால்

சக்கிரவர்த்தி நிச்சயமாகக் கொடுத்திருப்பார். விட்டலராயர் அவ்வாறு செய்யவில்லை. ஆகவே தான் விட்டலராயர் எத்தனை வெற்றிகளைப் பெறுகிறார் என்று பார்ப்போம். கடைசியில் எல்லா வெற்றிகளையும் ஒரே போரில் மீட்போம் என்றார். அதனால் கானகலா கோட்டைப் போரைச் சவாலாக அறிவித்தார்'' என்றான் சோமேஸ்வரன்.

தளபதி ஜெகதேவன் எழுந்து "இனிமேல் என்ன செய்வதாக உத்தேசம் நரசிம்மா? மகாராஜா விட்டலராய பிரபுவோடும் குடும்பத்தாரோடும் வேலாபுரத்து வீதியில் பிச்சையெடுக்கப் போகிறீர்களா?'' என்று ஆணவத்தோடு கேட்டான்.

நரசிம்மன் சீறவில்லை. "தளபதி! வண்டியும் ஒரு நாள் ஓடத்தில் ஏறும். ஓடமும் ஒரு நாள் வண்டியில் ஏறும் என்பது மூதுரை. வெற்றி பெற்று விட்டதால் நாங்கள் வானத்தில் ஏறி குதிப்பதில்லை. தோல்வி அடைந்து விட்டால் மண்ணுக்குள் அடங்கி விடுவதில்லை. முயற்சிகள் மட்டும் நம்முடையது. முடிவுகள் கடவுளினுடையது. எது நடக்குமோ அது நடக்கும்'' என்றான் நிதானமாக.

"பிழைப்பை இழந்தவர்களுக்குத் தத்துவம்தான் பேச்சாக இருக்கும். ஆனால் அது சோறு போடாது'' என்றான் ஜெகதேவன்.

"அவரவருக்கான உணவு ஆண்டவனால் அளக்கப்படுகிறது. அது அவரவர்களுக்குக் கண்டிப்பாகக் கிடைக்கும். நீங்கள் மலை உச்சியில் இருக்கலாம். ஆனால் அந்த மலை தரையில் தான் இருக்கிறது. அந்தத் தரை எல்லோருக்கும் பொதுவானது. அது இருக்கும் வரை - எங்கள் முயற்சி இருக்கும் வரை - இறைவனின் அருள் இருக்கும் வரை நாங்களும் மலை உச்சிக்கு வருவோம். ஏன்? மலையைக் கூட உருவாக்குவோம்'' என்றான் நரசிம்மன்.

"எல்லாமே உளறல்கள். என் காதுகள் இதுபோன்ற நாராசங்களைக் கேட்பதற்காகப் படைக்கப்படுவதில்லை. இதே நகரத்தில் விக்கிரமாதித்த மகாராஜா எனது திறமைகளைக் காட்டி விட்டு சவாலிட்ட போது தொடையைத் தட்டி ஏற்றுக் கொண்டாயே - அந்தத் தொடை இருக்கிறதா இப்போது?''

இந்த நேரத்தில் சோமேஸ்வரன் குறுக்கிட்டான்.

"தளபதி! தயவு செய்து நீங்கள் இங்கிருந்து எழுந்து சென்று விடுங்கள்.''

"என்னையா? என்னையா எழுந்து போகச் சொல்கிறாய்? கானகலா போரில் வெற்றியை ஈட்டித் தந்தவன் நான். இன்றைக்கு,

இருபது நாடுகள் அமுதக் குடங்களைப் போல ஒரு துளி ரத்தம் சிந்தாமல் உன் கைகளுக்குக் கிடைக்கச் செய்தவன் நான். என் கர்ஜனையைக் கண்டு இடியே நடுங்கும். கடலும் கலங்கும். நீ என்னை எழுந்து போகச் சொல்கிறாயா?" என்று முழங்கினார்.

"தளபதி! நீங்கள் நடத்திய போர் முடிந்துவிட்டது. வெற்றி உங்களுக்கே சொந்தமானதல்ல. எனது அருமைத் தந்தை யாருக்குப் பிறகு இளைஞர்களையே எல்லாப் பதவிகளிலும் நியமித்து இளம் அரசாங்கமாக மாற்றியிருக்கிறேன். முகம் முற்றிலுமாக மாறிவிட்ட பிறகு முதிர்ந்து விட்ட உங்களைப் போன்றவர்கள் எங்களைச் சோதிக்க வேண்டாம். விட்டலராயர் மாவீரர். நரசிம்மரும் அப்படியே. ஒரு போரில் தோற்றுப் போனதால் தோல்வியானது அவர்களது முகங்களாகி விட வில்லை. போர்களால் தான் எதையும் சாதிக்க முடியும் என்ற சித்தாந்தத்தை நான் மாற்ற முயல்கிறேன். நீங்கள் போர் வெறியை இங்கே காட்ட வேண்டாம். ஓய்வெடுங்கள். போர் வந்தால் - நீங்கள் தேவைப்பட்டால் - நீங்கள் விரும்பினால் அப்போது நான் உங்களை அழைக்கிறேன்" என்றான் சோமேஸ்வரன்.

"அருமை தெரியாத அரசனே! பெருமை அறியாத பிள்ளையே! என்னை அவமதித்த நீ நாசமாகப் போவாய். இனி உன் நிழல் கூட உன்னை அணுகாது. உனக்கு உதவாது" என்று கர்ஜித்து விட்டு வெளியேறினான் ஜெகதேவன்.

வயிற்றைக் குமட்டிக் கொண்டிருந்த பொருள் வாந்தியாக வெளியேறியது மாதிரி இருந்தது அவனது வெளியேற்றம்.

துர்நாற்றம் அகன்று நறுமணம் வீசியது போல் இருந்தது அங்கிருந்த அனைவருக்கும்.

அந்த நிலையில் சோமேஸ்வரனின் சகோதரி சௌமிய குமாரி பேசமுற்பட்டு "இளவரசர் அவர்களே! தந்தைக்குப் பிள்ளை ஆற்ற வேண்டிய பணி என்ன?" என்று கேட்டாள்.

"அதைத்தான் நானும் சோமேஸ்வரர் அவர்களும் இப்போது ஆற்றிக் கொண்டிருக்கிறோம்" என்றான் நரசிம்மன்.

எல்லோரிடமும் புன்னகைக் கீற்று வந்து போயிற்று.

அவளே தொடர்ந்து "நீங்கள் சோமேஸ்வரனாக இருந்தால் என்ன முடிவெடுத்திருப்பீர்கள்?" என்று கேட்டாள்.

"இல்லாத ஊருக்கு நான் வழி சொல்ல முடியாது அரசகுமாரி. நான் ஹொய்சள இளவரசனாக - விட்டலராயர் மகனாக - நரசிம்மனாகத்தான் நினைக்க முடியும். நடக்க முடியும்" என்றான் நரசிம்மன்.

சோமேஸ்வரன் குறுக்கிட்டு "சௌமியா! நீ சந்தேகங்களைக் கேட்பது போலத் தோன்றவில்லையே! இளவரசரது பேச்சுத் திறமையைச் சோதிப்பது போலல்லவா இருக்கிறது! அதற்கெல்லாம் நேரமில்லை" என்று சொல்லி விட்டு "நரசிம்மரே! இன்று ஒரு நாள் தங்கியிருங்கள். நாளைக்கு ஓலை தருகிறேன்" என்றான்.

மறுநாள் ஓலையைக் கொடுத்து சோமேஸ்வரன் "இது அடிமை ஓலை நரசிம்மா. இனி ஹொய்சளர்கள் எங்கள் அடிமை என்பதற்கான ஆக்ஞா பத்திரம் இது. இதில் உள்ள படி நடந்து கொள்வதே உங்கள் எல்லோருக்கும் உகந்தது போய் விட்டலராயரிடம் கொடு" என்றான்.

நரசிம்மன் எதுவும் பேசும் நிலையில் இல்லை.

கூனிக் குறுகிப் போன அவன், ஓலையை வாங்கிக் கொண்டு போய் தந்தையிடம் கொடுத்தான்.

அப்போது சேனாதிபதி பகாசூரரும் உடன் இருந்தார்.

ஓலையைப் படித்த மன்னன் "இது என்ன புது சோதனை?" என்று திகைத்தான்.

பிறகு சேனாதிபதியை நோக்கி "சேனாதிபதி! படைகளை உடனே சித்தம் செய்யுங்கள். நம்மை மிகவும் தவறாக நினைத்து விட்டான் சோமேஸ்வரன். கல்யாண புரத்தின் மீது படையெடுப்போம். சோமேஸ்வரனை வென்று அவன் தலை நகரையே பிடிப்போம்" என்று கர்ஜனை செய்தான்.

அவனது கண்கள் சிவந்தன.

சேனாதிபதிக்கும் நரசிம்மனுக்கும் எதுவும் புரியவில்லை.

"என்ன ஆயிற்று மகாராஜா? நாம் நாடுகளை ஒப்படைப்பதாகத் தானே ஓலை அனுப்பினோம்! அது போத வில்லையா சோமேஸ்வரனுக்கு? என்ன சொல்கிறான். தங்களுக்கு ஏன் இந்தப் பதற்றம்?" என்று கேட்டார் சேனாதிபதி.

"நாம் வென்ற நாடுகளை நமக்கே தருகிறானாம். நாம் சுதந்திரமாக இயங்கலாமாம். ஆனால் போர் என்று வரும் போது சாளுக்கியர்களுக்கு ஆதரவாகவும் சோழர்களுக்கு எதிராகவும் இருக்க வேண்டுமாம்" என்றான் மன்னன்.

"அது சரிதானே?"

"சோமேஸ்வரன் அதோடு நிற்கவில்லை. இது நடக்க வேண்டுமென்றால் நரசிம்மன் அவனது சகோதரி சௌமியா குமாரியைத் திருமணம் செய்து கொள்ள வேண்டுமாம்."

"இது எதிர்பாராதது மகாராஜா."

"அது மட்டுமல்ல. நரசிம்மன் சௌமிய குமாரியைத் தவிர வேறு யாரையும் மணக்கக் கூடாதாம்."

"இதற்கு இளவரசர்தான் பதிலளிக்க வேண்டும்" என்றார் சேனாதிபதி.

"தேவையில்லை. அவன் மனத்தில் மாளவிகா இருப்பதை நாமறிவோம். அவளுக்கு அநீதி இழைப்பது சரியல்ல. சோமேஸ்வரனின் நிபந்தனை நிராகரிக்கப்பட்டது. படையைத் திரட்டுங்கள்" என்றான் மன்னன்.

நரசிம்மன் குறுக்கிட்டு "வேண்டாம் தந்தையே. தாங்கள் தலையைக் கொடுத்து பெற்ற வெற்றிகள் எனது தோல்வியால் பறிபோகிறதே என்ற வேதனையில் இருந்தேன். இப்போது என் மூலமாகவே அந்த வெற்றிகள் தக்க வைக்கப்படும் என்றால் அதைவிடப் பேறு எனக்கு வேறென்ன வேண்டும்? இந்த நிபந்தனைகளைப் பற்றி சோமேஸ்வரர் என்னிடம் தெரிவிக்க வில்லை. தெரிவித்திருந்தால் அங்கேயே சம்மதம் தெரிவித்திருப்பேன். எனக்கு நாடு முக்கியம். நாடு தான் முக்கியம். திருமணத்திற்கு ஏற்பாடு செய்யுங்கள் தந்தையே!" என்றான்.

"யோசித்து பதில் சொல் மகனே."

"யோசிப்பதற்கு எதுவுமில்லை தந்தையே!"

"மாளவிகாவைத் துறக்க முடியுமா உன்னால்?"

"தியாகத்தில் தான் உயர்விருக்கிறது தந்தையே!"

திருமணம் வேலாபுரத்தில் விமரிசையாக நடந்தது.

விட்டலராயனுக்குச் சுயாட்சி உரிமையை அளித்தான் சோமேஸ்வரன்.

எல்லோருக்கும் மகிழ்ச்சி.

நரசிம்மனைத் தவிர.

ஆண்டுகள் நான்கு ஓடிவிட்டன.





எல்லோருக்கும் எல்லா வழிகளும் எப்போதும் தெரிந்து விடுவதில்லை. சில விஷயங்களில் மற்றவர்கள் தான் வழிகாட்ட வேண்டியிருக்கும்.




**பூமன்னு மாது பொருந்திய மார்பன் புகழ்மலிந்த**
**பாமன்னு மாறன் அடி பணிந்து உய்ந்தவன், பல்கலையோர் தாம்**
**மன்ன வந்த இராமாநுசன் சரணாரவிந்தம்**
**நாம் மன்னி வாழ, நெஞ்சே! சொல்லுவோம் அவன் நாமங்களே!**

தாமரை மலரை இருப்பிடமாக உடைய பெரிய பிராட்டியார் உறையும் திருமார்பை உடையவன் எம் பெருமான். அப்பெருமானுடைய திருக் கல்யாண குணங்கள் நிறைந்துள்ள திருவாய் மொழியை அருளிய புகழ் வாய்ந்தவர் நம்மாழ்வார். அவரது திருவடிகளில் படிந்து உய்ந்தவன் இராமாநுசன். பல சாஸ்திரங்களைக் கற்ற பெரியோர் இந்த இராமாநுசனது திருவடிகளே அடையத் தக்க பேறாகும் என்று பணிந்தனர். அப்படிப்பட்ட சிறப்புடைய எம் பெருமானாருடைய திருவடித் தாமரைகளில் நாம் படிந்து அவரது திருநாமங்களைச் சொல்வோம் நெஞ்சமே!*

திருவரங்கத்து அமுதனார் மேற்கண்டவாறு இராமானுஜரைப் போற்றிப் பாராட்டியது பின்னாளில் உண்மையாக அமைந்தது என்றாலும் இக்கதை நடைபெற்ற காலத்தில் அவரது நிலைமை மாறுபட்டதாகவே இருந்தது.

சொந்த நாடான தமிழகத்தில் இருக்க முடியாமல் கர்நாடகப் பிரதேசத்திற்கு வந்து தஞ்சம் புகவேண்டியிருந்தது.

இராமானுஜருக்கு அது சோதனைக் காலம் தான்.

இறைவன் அவரோடு திருவிளையாடல் புரிய தேர்ந்தெடுத்த காலங்களில் ஒன்றாகவும் இருக்கலாம்.

இராமானுஜர் அவ்வாறு தான் கருதினார்.

நடந்தச் சம்பவங்கள் அவருக்கு அத்தகைய நினைப்பைத் தான் தந்திருந்தது.

* இராமாநுச நூற்றந்தாதி. பாசுரம் எண் 1. உரை – முனைவர். இரா. கமலக் கண்ணன்.

இல்லையென்றால் சோழ மன்னனின் உபவாதங்களுக்கு அஞ்சி தமிழ்நாட்டை விட்டுத் தலைமறைவாகி கன்னட நாட்டிற்கு வந்திருக்க முடியுமா?*

காஞ்சியில் வரதராஜ பெருமாளுக்குக் கைங்கர்யம் செய்து கொண்டிருந்த இராமானுஜர் ஆளவந்தாரின் மறைவிற்குப் பிறகு திருவரங்கத்திற்கு வந்து சேர்ந்தார்.

அரங்கன் கோயில் நிர்வாகத்தை ஏற்றார். அதோடு ஆள வந்தாரின் விருப்பங்களை நிறைவேற்றும் விதமாக விசிட்டாத் வைதத்தை வளர்க்கும் பணியையும் மேற்கொண்டார்.

இருபுறமும் தீட்டப்பட்ட கத்தி மீது நடப்பது போன்ற இந்தத் திருப்பணிகள் இரண்டையும் செம்மையாகச் செய்து வெற்றியும் கண்டார்.

சோழ நாட்டில் வைணவம் பெரு விருட்சமாக வளர்ந்து தொண்டை நாட்டிலும், பாண்டிய நாட்டிலும், சேர நாட்டிலும் கிளைகளை விட்டது. வேர்களையும் பாய்ச்சியது.

ஒரு மதம் வளர்வது வியப்பிற்குரிய விஷயமல்ல. ஆனால் அது நாட்டை ஆளும் மன்னனுக்கு எதிரான மதமாக இருக்கும் போது அதன் வளர்ச்சி உகந்ததாக இருக்காது.

சோழராட்சியில் இது கண்கூடாக இருந்தது.

சோழராட்சி விஜயாலயர் முதற்கொண்டு மலர்ந்து மணம் வீசியது. பல்லவர்களிடம் சிற்றரசர்களாக இருந்த சோழர்கள் பல்லவர்களை வென்றார்கள். சேரர்களையும் பாண்டியர் களையும் வென்றார்கள். சாளுக்கியர்களையும் ராஷ்டிர கூடர்களையும் வென்றார்கள். சிங்களத்தையும் லட்சத் தீவுகளையும் வென்றார்கள். கடல் கடந்து போய் கடாரத்தையும் ஸ்ரீவிஜயத்தையும் வென்றார்கள். கங்கை வரை சென்று இடைப் பட்ட அரசர்களை வென்றார்கள்.

மண் மேடாக இருந்த சோழர் ஆட்சி இமயமாக உயர்ந்தது.

பராந்தக சோழன், சுந்தர சோழன், இராஜராஜ சோழன், கங்கை கொண்ட சோழன், வீர ராஜேந்திர சோழன் என்று மகத்தான மன்னர்கள் தோன்றி சோழ வம்சத்தை திக்கெலாம் பரவச் செய்தார்கள்.

---

*. பக்கம் 31. ஸ்ரீ ராமானுஜ விஜயம். By. பிரதிவாதி பயங்கரம் அண்ணங் கராச்சாரியார்.

இவரது கருத்திற்கு மாறாக இராமானுஜர் சோழமன்னனின் கொடுமைகளுக்கு அஞ்சி தமிழ்நாட்டை விட்டு கர்நாடகத்திற்கு வரவில்லை. தன்னைப் பற்றிச் சோழனுக்கு முழுமையாக உணர்த்தவே இப்பயணத்தை மேற்கொண்டார் என்று பல வைஷ்ணவ அறிஞர்கள் கூறுகிறார்கள்.

சோழர் என்ற வார்த்தையே எங்கேயும் கேட்டது. எதிரொலித்தது.

சோழர்கள் இயல்பாகவே சைவ சமயத்தினராகவே இருந்தார்கள். தில்லை ஆடவல்லான் அவர்களது குல தெய்வமாயிற்று. தஞ்சையிலும் கங்கை கொண்ட சோழ புரத்திலும் பிரம்மாண்டமான சிவாலயங்கள் தோன்றின. உலகின் பார்வை அவ்வாலயங்களை நோக்கித் திரும்பியது என்றால் அது மிகையல்ல.

கீழைநாடுகளும் மேலைநாடுகளும் சோழ நாட்டுடன் வாணிபத் தொடர்புகளை விஸ்தரித்தன.

சைவ சமய ஆதரவாளர்களாக இருந்த சோழ மன்னர்களுக்குச் சைவமே அரசாங்க மதமாக இருந்தது.

ஆயினும் விஜயாலயர் முதலான சோழமன்னர்கள் சைவ மத வெறியர்களாக இல்லை. இதர மதங்கள் வாழக் கூடாதென தடைகளை விதிக்கவில்லை. தமிழகம் என்ற சோலையில் பலவித மலர்ச்செடிகள் வளர்வது போல் பல மதங்கள் வளருவதாகக் கருதினார்கள்.

அக்காலத்தில் சைவ மதத்திற்கு நிகரான மதமாக வைணவம் இருந்தது.

சோழ மன்னர்கள் அந்த மதத்தையும் அரவணைத்தார்கள்.

வைணவ ஆலயங்களுக்குத் திருப்பணிகளைச் செய்தார்கள். நிவந்தங்களை வழங்கினார்கள்.

அனைவரும் மெச்சக் கூடியதாக இருந்த இந்தச் சிறப்பான நிலை கண்பட்டு விட்டதா? அல்லது புண்பட்டு விட்டதா என்று தெரியவில்லை.

முதலாம் குலோத்துங்கன் காலத்தில் மதங்களுக் கிடையில் விஷவித்து விழுந்தது. முளைத்தது.

மத அரவணைப்பு விலகி மதவெறி உருவாயிற்று.

சோழர்கள் ஆட்சியில் கறைபடிய வைத்தது.

ஸ்ரீரங்கத்தை மையமாகக் கொண்டு வளர்ந்த வைணவ மதத்தின் வளர்ச்சி சைவமதத்தவருக்கு உறுத்தியது.

மற்றவர்களின் வீழ்ச்சியில் தான் தனது எழுச்சியாக இருக்கும் என்று யார் முடிவெடுத்தார்களோ-

விதியோ அல்லது சதியோ-

ஒரு முடிவு எடுக்கப்பட்டுவிட்டது.

இராமானுஜரை சோழர் தலைநகருக்கு வரவழைத்து சிவனை விடப் பெரியது எதுவுமில்லை என்று எழுதி வாங்கி விட்டால் வைணவம் வீழ்ந்து விடும். சைவம் வீறு கொண்டு எழுந்து விடும் என்று யார் ஆலோசனை சொன்னார்களோ?

ஏற்கப்பட்டு விட்டது.

சேவகர்கள் திருவரங்கத்திற்குப் போய் அங்கே இருந்த இராமானுஜர் மடத்தை அடைந்தார்கள்.

"இராமானுஜரை கங்கை கொண்ட சோழபுரத்திற்கு உடனே வரும் படி சோழ மாமன்னரது உத்தரவு" என்றார்கள்.

சேவகர்களின் அறிவிப்பைக் கேட்டவர் இராமானுஜரல்ல. அவரது பிரதான சீடர் கூரத்தாழ்வான்.

சேவகர்களின் அறிவிப்பிற்குப் பின் ஏதோ சூதிருக்கிறது என்று கருதினார்.

இராமானுஜரை கங்கை கொண்ட சோழ புரத்திற்கு அனுப்பி வைப்பது நல்லதல்ல என்று அவருக்குத் தோன்றியது.

இலை போனால் இலை வரும். வேர் போனால் வேர் வராது என்பதை உணர்ந்தார்.

தனது வெள்ளாடையை அகற்றி காவியுடை அணிந்தார். இராமானுஜரின் த்ரிதண்டத்தை* ஏந்தினார். "நான் தான் இராமானுஜன். புறப்படுங்கள்" என்றார் "நானும் வருகிறேன்" என்று இராமானுஜரின் குருநாதரும் புறப்பட்டார்.**

நீராடி விட்டு வந்த இராமானுஜர் தனது த்ரிதண்டம் காணாததால் எங்கே என்று வினவுகிறார்.

கூரத்தாழ்வான் அதை எடுத்துச் சென்று விட்டதாக சொன்னார்கள் சீடர்கள்.

இராமானுஜர் மௌனமாக இருந்தார். அவருக்கு ஏதோ புரிகிறது. எம்பெருமான் ஏதோ செய்ய விருக்கிறான் என்று ஊகித்தார்.

சீடர்கள் அவரைத் திருவரங்கத்தில் இருக்க வேண்டாம் என்றும் அது ஆபத்து என்றும் நாட்டை விட்டு வெளியேறி

---

* த்ரிதண்டம் என்பது தமிழில் முக்கோல் என்று வழங்கப்படுகிறது. மூன்று கோல்கள் இணைந்தது. உடல், மனம், வாக்கு ஆகிய மூன்றையும் கட்டுப் படுத்துவதற்கு அறிகுறியாக வைணவத் துறவிகள் இதனை வைத்திருப்பார்கள். இவர்களை 'முக்கோல் பகவர்' என்று அழைப்பதுண்டு. பக்கம் 223. ஸ்ரீராமானுஜர் வாழ்க்கை வரலாறு – By. சுவாமி ராம கிருஷ்ணா னந்தா.

** இந்தச் சம்பவம் பற்றி விரிவான தகவல்கள் இந்த நூலாசிரியரின் இதர நாவல்களான பரிமேலழகர் மற்றும் வேங்கை வாசல் ஆகியவற்றில் விவரமாகக் கூறப்பட்டுள்ளன.

சிறிது காலம் தலைமறைவாக இருப்பதே நல்லது என்கிறார்கள். காஞ்சிக்கே போய் விடலாமா என்று இராமானுஜருக்குத் தோன்றுகிறது.

வடக்கில் சென்றால் சோழர்கள் பின் தொடர்ந்து வந்து கைது செய்ய வாய்ப்புண்டு என்றும், மேற்கில் சென்று விடலாம் என்று சொன்னார்கள் சீடர்கள்.

தலைவனாக இருப்பவன் தனக்குக் கீழே இருப்பவர்களுக்கு உபதேசித்துக் கொண்டிருப்பவன் மட்டுமல்ல. தனக்குக் கீழே இருப்பவர்கள் ஆலோசனை கூறுவதற்கு வாய்ப்பளிப்பவனும் கூட. அவர்களின் ஆலோசனைகள் சரியாக இருந்தால் அதை ஏற்பவனும் தான்.

இராமானுஜர் அப்படிப்பட்டத் தலைவர்களில் ஒருவனாக இருந்தபடியால் வெள்ளாடையைக் கொண்டு வரச் சொல்லி அணிந்து கொண்டதோடு கூரத்தாழ்வானின் பரிவட்டத்தை எடுத்து தலையில் சூட்டிக் கொண்டார்.

முதலியாண்டான் முதலான பிரதான சீடர்களோடு மொத்தம் நாற்பத்திரண்டு சீடர்களுடன் திருவரங்கத்தை விட்டுப் புறப்பட்டார்.

அவருக்குள் இருந்த இறைசக்தி அவரை கர்நாடக நாட்டிற்குச் செல்லும் படிச் சொல்லிக் கொண்டே இருந்தது.

இறைவனின் நாடகம் தொடங்கி விட்டது என்று கருதிக் கொண்டதால் இராமானுஜர் கடுமையான பயணத்தை மேற்கொண்டார்.*

திருவரங்கத்திலிருந்து கர்நாடக நாட்டிற்குச் செல்ல வேண்டுமென்றால் இப்பொழுது கூடச் சீரானப் பாதைகள் கிடையாது. இராமானுஜர் காலத்தில் பாதைகளே இல்லை. நதிகளும், மலைகளும், வனாந்திரங்களும்தான். அவருக்கு அப்போது வயது எண்பதிற்கு மேல்.

திருவரங்கத்திலிருந்து காவிரியைத் தாண்டி கொங்கு நாடு வழியாகவும் நீலகிரி மலைத் தொடர்கள் வழியாகவும் சென்றார்.

படைகள் கூடச் செல்ல முடியாத கரடுமுரடான பாதைகளில் பயணம் செய்தார். பல இடங்களில் வழி தெரியவில்லை. பல நேரங்களில் உணவு கிடைக்கவில்லை. அவர்கள் சாதாரண வைணவர்களாக இருந்திருந்தால் தடம் மாறி இடம் மாறி எங்கோ போய் எப்படியோ ஆகியிருப்பார்கள்.

---

* பக்கம் 30. இராமானுஜர் விஜயம் - By. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச் சாரியார்.

ஆனால் அவர்கள் வீரவைணவர்கள். கொள்கைகளில் அசைக்க முடியாத நம்பிக்கையும் ஈடுபாடும் கொண்டவர்கள். வைணவத்தை வளர்ப்பதை வாழ்நாள் குறிக்கோளாக வைத்திருந்தவர்கள். இடையூறு தங்களுக்கு வந்தாலும் வைணவத்திற்கு வரக்கூடாது என்று உறுதி பூண்டவர்கள். எனவே அவர்கள் சளைக்கவில்லை. எதையும் சகித்துக் கொண்டார்கள்.

திக்கற்றவர்களுக்கு இறைவன் வழிகாட்டுவான் என்பது எக்காலத்திலும் பொருந்தும் நம்பிக்கை.

கொங்கு நாட்டில் இராமானுஜரின் பக்தையான கொங்கு பிராட்டி உதவிகளைச் செய்தாள். நீலகிரி மலைப் பகுதிகளில் இராமானுஜரின் சீடரான நல்லான் சக்கிரவர்த்தியைச் சேர்ந்தவர்கள் உதவினார்கள். உணவளித்தார்கள். வழி காட்டினார்கள்.

வழிகாட்டும் தலைவனுக்கும் மற்றவர்கள் வழிகாட்டும் நிலைமை வருவது வியப்பிற்குரிய விஷயமல்ல. எல்லோருக்கும் எல்லா வழிகளும் எப்போதும் தெரிந்து விடுவதில்லை. சில வழிகளை சில விஷயங்களில் மற்றவர்கள்தான் காட்ட வேண்டியிருக்கும்.

ஏறக்குறைய ஒரு மாத கால சோதனைப் பயணத்திலிருந்து மீண்டு கர்நாடக நாட்டின் கொள்ளைக்களம்* பகுதி வழியாக மிதிலாபுரியை** இராமானுஜரும் அவரது சீடர்களும் அடைந்தார்கள்.

அனைவருமே மிகவும் சோர்ந்திருந்தார்கள்.

அதே சமயம் இராமானுஜரின் அணுக்கத் தொண்டரான வடுக நம்பி அவர்கள் முன்னே தோன்றியது பெரும் ஆறுதலாக இருந்தது.

மக்கள் இங்கொன்றும் அங்கொன்றுமாய் வாழும் மலைக் காட்டுப் பிரதேசங்களிலிருந்து விடுபட்டு ஓரளவு மக்கள் புழங்கும் கிராமமான மிதிலாபுரிக்கு வந்த வேளையில் உண்மைச் சீடனான வடுக நம்பி வந்து வரவேற்று உபசரித்த விதமானது சோர்வுகளுக்கும் உண்மையான விடுதலையைத் தந்த மாதிரி இருந்தது.

"உண்மையான சீடனின் உபசரிப்பானது வைகுண்டத்தில் கிடைக்கும் உபசரிப்பிற்கு ஒப்பானது வடுக நம்பி. உன்னைக் கண்டதும் கடந்த ஒரு மாத காலமாக நாங்கள் பட்ட பாடெல்லாம்

* இது தற்போது கொள்ளே கால் என்று அழைக்கப் படுகிறது.

** இது தற்போது சாளக்கிராமம் என்றும் கோவையூர் என்றும் அழைக்கப் படுகிறது.

பனியாக நீங்கி விட்டது போல் இருக்கிறது அப்பனே. நீ நீடூழி வாழ்வாயாக" என்று வாழ்த்தினார் இராமானுஜர்.

தற்போது தான் தன்னிடம் வார்த்தைகள் சரளமாக வருவதாக உணர்ந்தார் அவர்.

வடுக நம்பி அனைவரையும் அழைத்துச் சென்று நரசிம்மர் ஆலயத்திற்கு அருகே இருந்த சத்திரத்தில் தங்கச் செய்தார்.

அனைவரும் நீராடிய பின் இராமானுஜர் வெள்ளாடையுடனேயே நரசிம்மர் ஆலயத்திற்குச் சென்று பெருமாளை வணங்கினார்.

ஒரு மாத காலமாக அர்ச்சாவதாரப் பெருமாளைக் காணாதிருந்த இராமானுஜருக்கு யோக நரசிம்மரைக் கண்டதும் பனித்து விட்டது.

மலைப் பிரதேசங்களில் வழி தவறிய போது "எம்பெருமானே! உன்னை இனி எப்போது காண்பேன்? காண்பேனா அல்லது காணாமல் போய் விடுவேனா?" என்று கலங்கிய அவருக்கு நரசிம்மப் பெருமானின் தரிசனம் தவித்த புல்லுக்குக் கிடைத்த மழை போல இதமாகவும் இன்பமாகவும் இருந்தது.

கர்நாடகப் பகுதிக்கு வந்ததுமே இரணியனை வதைத்தச் சிங்கப் பெருமானின் தரிசனம் கிடைத்தது நல்ல சகுனமாகக் கருதினார் இராமானுஜர்.

இதற்கிடையில் வடுகநம்பி பொங்கல் தயாரித்து சுடச்சுட அனைவருக்கும் வழங்கினார்.

கைகளில் வாங்கிய போது பொங்கலிலிருந்து நறுந்நெய் முழங்கைகளில் வழிந்தோடியது.

"மூடநெய் பெய்து முழங்கை வழிவார" என்று சொன்னாளே கோதை நாச்சியார் அதை நான் திருவரங்கத்தில் கூடக் காணவில்லை. காஞ்சியில் காணவில்லை. இங்கே தான் உனது கைவண்ணத்தில் காண்கிறேன். சாப்பாட்டுப் பிரியனாக நான் இருந்திருந்தால் 'இச்சுவை தவிர நான் போய் இந்திரலோக மாளும் அச்சுவை பெறினும் வேண்டேன் மிதிலா புரி வடுகநம்பி' என்று சொல்லி பொங்கலும் கையுமாக இங்கேயே இருந்து விடுவேன்" என்றார் இராமானுஜர்.

இந்தப் பாராட்டைச் சிறிதும் எதிர்பார்க்காத வடுக நம்பி சற்றே நாணினார்.

"இங்கேயே சில நாட்கள் தங்கி ஓய்வெடுக்கலாம் என்று நினைக்கிறேன் நம்பி" என்றார் இராமானுஜர்.

"ஆகா. எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் இங்கேயே தேவரீர் இருக்கலாம் சுவாமி. தங்களையும் தங்கள் ஆருயிர்ச் சிஷ்யர் களையும் கண்போல் காத்து உபசரிப்பேன்" என்றார் வடுகநம்பி.

அனைவருக்குமே அந்த அழகிய கிராமத்தில் சில நாட்கள் கழிக்க வேண்டும் என்று தோன்றியது. எனவே இராமானுஜரின் பேச்சு அவர்களுக்கு ஆறுதலாக இருந்தது.

சத்திரம் விஸ்தாரமாகவும் சௌகரியமாகவும் இருந்தது. தேவையான அனைத்துப் பொருட்களும் கிடைத்தன. எனவே இராமானுஜரும் சீடர்களும் நிம்மதியாகத் தங்கினார்கள்.

சத்திரத்திற்கும் நரசிம்மர் ஆலயத்திற்கும் இடையே வடுக நம்பி கீற்றுப் பந்தல் ஒன்றை ஏற்பாடு செய்த படியால் இராமானுஜர் அங்கே அமர்ந்து உபன்யாசங்களை செய்து வந்தார்.

ஆனால் அந்த உபன்யாசங்களுக்குத் தனது சீடர்களைத் தவிர கிராமத்தைச் சேர்ந்தவர்களில் ஓரிருவரைத் தவிர பெரும் பாலானவர்கள் வரவில்லை.

"ஏன்?" என்று கேட்டார் இராமானுஜர்.

"சுவாமி! இந்த ஊரில் பெரும்பாலும் சைவர்களே வசிக்கிறார்கள்.* அவர்களும் வேதங் கற்றவர்களாக இருந்தும் கூட வேதநெறியைவிட்டு விலகி விலங்குகள் போல் நடமாடு கிறார்கள். பிழைப்பு நடத்துகிறார்கள். இந்தக் கோயில் பக்கமே வருவதில்லை. அவர்களிடம் நல்வார்த்தைகளைக் கூறலாம் என்று பேச்சு கொடுக்க முற்பட்டால் ஏசுகிறார்கள். கற்களை வீசுகிறார்கள். அடாதது பேசுகிறார்கள். வியப்பாகவும் வேதனையாகவும் இருக்கிறது" என்றார் வடுகநம்பி.

"அவ்வாறு அவர்களை விட்டுவிடக் கூடாது நம்பி" என்று சொன்ன இராமானுஜர் தனது பிரதான சீடனான முதலி யாண்டானை அழைத்து "ஆண்டான்! நீ பக்கத்தில் இருக்கும் திருக் குளத்தில் உனது கால்களை விட்டபடி அரை நாழிகை இரு. பிறகு வந்து விடு. யாரோடும் பேச வேண்டாம்" என்றார்.

முதலியாண்டானும் குளத்திற்குச் சென்று கரையில் அமர்ந்து, கால்களை நீரில் இறக்கி விட்டு, கண்களை மூடி இராமானுஜரை நினைத்து தியானம் செய்தான்.

திருமண் காப்பும், கட்டுக் குடுமியும், பஞ்சகச்ச வேஷ்டியும், சிவந்த உடலுமாக முதலியாண்டானை அந்த நிலையில் பலர் கண்டார்கள். வழக்கமாக அக்குளத்தில் குளிக்கும் வழக்கத்தைக் கொண்ட அவர்கள் தற்போது சற்றே தயங்கினார்கள்.

---

* பக்கம் 6 கர்நாடகத்தில் இராமானுஜர். கிஞ்சித்காரம் டிரஸ்ட். திருத்தலக் குறிப்பு.

இதற்கிடையில் அரைநாழிகை பொழுது கழிந்ததும் முதலியாண்டான் அங்கிருந்து எழுந்து சென்றான்.

அவர் சென்றபின் அங்கிருந்தவர்கள் குளத்தில் இறங்கிக் குளித்தார்கள். அதையடுத்து அனைவரும் சாரை சாரையாக வந்து நீராடினார்கள்.*

அவர்களுக்குள் ஏதோ ஒரு மாற்றம் ஏற்பட்டது போலத் தோன்றியது.

அன்று மாலை அவர்கள் வந்து இராமானுஜரின் உபன்யாசத்தைக் கேட்டார்கள்.

மறுநாளும் கேட்டார்கள்.

அடுத்த நாளும் கேட்டார்கள்.

"தங்கள் உபன்யாசம் செவிகளுக்கு ரம்மியமாக இருக்கிறது" என்றார்கள்.

"இது போன்ற வியாக்கியானங்களை நாங்கள் கேட்டு நீண்ட காலம் ஆகிறது" என்றார்கள்.

"நாங்கள் வேத வழியில் நடப்போம்" என்றார்கள்.

அது முதல் அக்கிராமத்தில் வேத கோஷங்கள் கேட்டன.

இராமானுஜரின் சீடர்கள் ஆழ்வார்களின் திவ்யப் பிரபந்தப் பாடல்களைப் பாராயணம் செய்தார்கள்.

அக்கிராமத்திலிருந்த சைவர்களும் மற்றவர்களும் வைணவத்தில் சேர விரும்புவதாகத் தெரிவித்தார்கள்.

"உங்களுக்குப் பூரணமான அதே சமயம் சுதந்திரமான விருப்பம் இருந்தால் சேருங்கள். நான் இங்கே வந்தது யாரையும் மதமாற்றம் செய்வதற்காக அல்ல" என்றார் இராமானுஜர்.

"தங்கள் உபன்யாசங்களால் ஈர்க்கப்பட்டோம். தத்துவ விளக்கங்களால் ஈர்க்கப்பட்டோம். தாய்மைப் பண்பால் ஈர்க்கப் பட்டோம். நாங்களாகவே விரும்பி வைணவத்தில் சேருகிறோம். எங்களை யாரும் கட்டாயப்படுத்தவில்லை" என்றார்கள் அவரிடம் வந்தவர்கள்.

"அப்படியானால் எம்பெருமானின் திருவுள்ளப்படி நடக்கட்டும்" என்றார் இராமானுஜர்.

சுமார் ஆயிரம் பேர் வைணவத்தில் சேர்ந்தார்கள். பூணூல் அணியாதவர்களுக்கு அணிவித்தார் இராமானுஜர். திருமண்

* தற்போது அந்தக் குளமானது பாத தீர்த்தம் என்ற பெயரில் கிணறு வடிவத்தில் சிறிதாகக் காணப்படுகிறது. அதற்கு அருகில் வடுக நம்பிக்குச் சிறுகோயில் கட்டப் பட்டதாகக் கூறப்பட்டது. அங்கு சென்று பார்த்த போது உள்ளே சிலை எதுவுமில்லை களவு போய் விட்டதாக அங்கிருந்தோர் தெரிவித்தார்கள்.

காப்பை அணியச் சொன்னார். பஞ்ச சமஸ்காரங்களைச் செய்து வைத்தார். அவர்கள் வைணவர்களானார்கள். நரசிம்மர் சன்னதிக்குச் சென்று தரிசனம் செய்தார்கள்.

கலைந்த குப்பை போலிருந்த மிதிலாபுரி என்னும் கோவையூர் கட்டுக் கோப்பான கோட்டையைப் போல் மாறியது. மக்கள் ஒழுக்கங்களைக் கடைப்பிடித்தார்கள். வேத கோஷங்களும் ஆழ்வார்கள் பாசுரங்களும் கிராமம் முழுதும் ஒலித்தன.

"இந்த ஊர் நான் விரும்பியபடி திருவூராக மாறிவிட்டது. தேவர்களும் தேவதைகளும் குடியிருக்க விரும்பும் நலமாக மாறிவிட்டது. மஹாலட்சுமி வாசம் செய்யும் திருநகராக மாறிவிட்டது. எனவே இந்த ஊருக்குச் சாளக்கிராமம் என்ற பெ்யரே உகந்தது. இனி அனைவரும் இவ்வூரை அப் பெயரிலேயே அழையுங்கள்" என்றார் இராமானுஜர்.



கோவையூருக்கு வந்து ஏறக்குறைய இருபது நாட்களாகியிருந்தன.

இரவு நேரம். உபன்யாசம் முடிந்து உணவும் உண்டு முடிந்த நிலையில் இராமானுஜரும் வடுக நம்பி உள்ளிட்ட சீடர்களும் கீற்றுப் பந்தலில் சுவாதீனமாக அமர்ந்திருந்தார்கள்.

இராமானுஜர் தமிழ்நாட்டை விட்டு கர்நாடகப் பிரதேசத்திற்கு வந்திருக்கிறார் என்ற செய்தியும் அதற்கான காரணமும் அரசல் புரசல்களாக கோவையூரில் உலவிக் கொண்டிருந்தன.

அவற்றையெல்லாம் ஓரளவிற்குக் கேட்டிருந்த வடுக நம்பி இராமானுஜரைப் பார்த்து "சுவாமி, தாங்கள் தமிழகத்தில் இருப்பதற்குப் பயந்து கொண்டு தலை மறைவாகி இங்கே வந்து விட்டதாகப் பேசிக் கொள்கிறார்கள். இது சரியா என்பதை தாங்கள் தான் விளக்க வேண்டும்" என்றார்.

"நாங்கள் யாரும் பயந்து கொண்டு ஓடிவரவில்லை நம்பி" என்று குறுக்கிட்டுச் சொன்னான் இராமானுஜரின் பிரதான சீடரான முதலியாண்டான்.

இராமானுஜர் குறுக்கிட்டு "மக்கள் பேசிக் கொள்வது சரிதான் நம்பி. நான் சோழநாட்டில் இருப்பதற்கு அஞ்சித்தான் தலைமறைவாகப் பயணம் செய்து இங்கு வந்தேன்" என்றார்.

"என்னால் இதை நம்பமுடியவில்லை சுவாமி!"

"நம்பினாலும் நம்பாவிட்டாலும் இதுதான் உண்மை நம்பி. என்னை நம்பி, என் தலைமையை நம்பி, என் கொள்கைகளை

நம்பி ஏராளமான வைணவர்கள் தமிழகத்தில் இருக்கிறார்கள். அவர்கள் என்னை மதிக்கிறார்கள். சோழ மன்னருக்கு என்ன காரணத்தாலோ வைஷ்ணவத்தின் மீதும் வைஷ்ணவர்கள் மீதும் கசப்பு உண்டாகி விட்டது. அக்கசப்பு நீங்க வேண்டு மானால் தமிழகத்தில் உள்ள வைஷ்ணவர்களையெல்லாம் பிடித்து தண்டிப்பதென்பது இயலாத காரியம். மாறாக வைஷ்ணவர்களின் தலைவனாக இருக்கும் என்னை அழைத்து தண்டித்தாலோ அல்லது கண்டித்தாலோ அல்லது கட்டாயப் படுத்தி எதையாவது செய்தாலோ வைஷ்ணவர்கள் தலையில்லாதவர்களாய் அடங்கி ஒடுங்கி விடுவார்கள். அதற்காகத்தான் சோழ மன்னன் கங்கை கொண்ட சோழ புரத்திற்கு என்னை அழைத்திருக்கிறான். நான் விரும்பியிருந்தால் வைஷ்ணவர்களை யெல்லாம் தூண்டி விட்டு சோழ நாட்டில் பெரும் வன்முறையை கட்டவிழ்த்திருக்கலாம். அப்படிச் செய்திருந்தால் வைஷ்ணவர்கள் உட்பட பலர் மாண்டிருப்பார்கள். நம்பி! தனது தொண்டர்களின் அழிவில் குளிர் காய்பவன் தலைவன் அல்ல. தன்னை நம்பியும் மதித்தும் நடக்கும் தொண்டர்களை தனது தலையைக் கொடுத்தாவது காப்பவன்தான் தலைவன். கூரத்தாழ்வான் மட்டும் குறுக்கிடாமல் இருந்திருந்தால் நான் கங்கை கொண்ட சோழ புரத்திற்குச் சென்றிருப்பேன். தலை போவதானாலும் அஞ்சியிருக்க மாட்டேன். எனக்கு பதிலாக ஆழ்வான் போய் விட்ட நிலையில் நான் திருவரங்கத்தில் இருப்பதை விட அதை விட்டு விலகுவதே என்னை நம்பும் வைஷ்ணவ மகாஜனங்களுக்கு அமைதியைத் தரும். நான் சோழநாட்டில் இல்லை ஓடிவிட்டேன் என்பது தெரிந்தால் சோழ மன்னரது கோபமும் குரோதமும் குறையும். கலையும். வைஷ்ண்வர்கள் மீது பாயவும் முற்பட மாட்டார்.

ஆகவே தான் - நானிங்கு இருந்தால் என் தொண்டர்களுக்கு ஆபத்து வருமே என்று அஞ்சித் தான் திருவரங்கத்தை விட்டு மட்டுமின்றித் தமிழகத்தை விட்டே வெளியேறச் சித்தமானேன். அவர்களது அசூயைக் கண்களுக்குப் பட வேண்டாம் என்று தான் மேற்கு நோக்கிப் பயணப்பட்டேன். என்னை வைத்து எம்பெருமான் ஏதோ நிகழ்த்த விரும்பு வதால்தான் மலைகளிலும் காடுகளிலும் மரணமடையாமல் மீண்டு உயிரோடு இங்கு வந்து சேர்ந்திருக்கிறேன். இது விஷயமாக யார் எப்படிப் பேசிக் கொண்டாலும் பேசிக் கொள்ளட்டும்'' என்றார் இராமானுஜர்.

அவரது பேச்சு அனைவரையும் நெகிழ்த்தியது.

“சுவாமி! தாங்கள் தற்போது காஷாயம் தரிக்கலாம் அல்லவா?'' என்று கேட்டார் வடுகநம்பி.

"வரதனின் ஆணை வரவில்லை நம்பி. சற்று பொறு. இப்போதைக்கு வெள்ளாடையே போதும்" என்றார் இராமானுஜர்.

"சுவாமி! கர்நாடகப் பிரதேசத்திற்கு வந்து விட்டீர்கள். இனி தங்கள் உத்தேசம் என்ன?"

"மிகவும் கடினமான கேள்வியைக் கேட்டிருக்கிறாய் நம்பி. இதற்கு என்னால் என்ன பதில் கூற இயலும்?" என்று சொன்ன இராமானுஜர் கண்களை மூடினார்.

மனக் கண்களில் காஞ்சி வரதராஜாப் பெருமான் காட்சி தந்தார்.

"வரதா! வடுகநம்பி கேட்டு விட்டான். அவனுக்கு நான் என்ன பதிலைச் சொல்வது? அவனுக்கான பதிலை நீயல்லவா சொல்ல வேண்டும்?" என்று வேண்டினார்.

வரதன் ஒரு சொல்லில் பதில் சொன்னான்.

"மேல் கோட்டை!"





கூட்டம் கூடுவது ஆர்வத்தின் அடையாளமாக இருக்கலாம். அது எழுச்சியின் அடையாளமாகவும் இருக்கலாம். ஆனால் அது ஆதரவின் அடையாளமாக இருக்கும் என்று சொல்ல முடியாது – நீலகேசி




ஆதியில் மகிஷாசுரன் ஆண்ட நாடு என்பதால் மகிஷ நாடு என்று வடமொழியிலும், எருமையூர் என்று தமிழிலும், மேற்கு மலைத் தொடர்களை ஒட்டிய நாடு என்ற காரணத்தால் மேற்கு நாடென்றும், ஆட்சி புரிந்த மன்னர் பெருமக்களின் புகழ் எல்லோரது காதுகளிலும் ரீங்காரம் செய்ததால் காதுக்கினிய நாடு கர்நாடகம் என்றும்,* பிற்காலத்தில் மைசூரு என்றும் அழைக்கப்பட்ட மேலைநாட்டில் தற்கால மைசூருக்கு நேர் வடக்கே எளிமையும் உயர்வும் ஒரே இடத்தில் தான் இருக்கும் என்ற உண்மையை உலகத்தோருக்கு எடுத்தியம்புவது போல அமைந்திருந்தது சிற்றூரான ச்ரவணபெலகுலா.

பெலகுலா என்றால் வெள்ளைக்குளம் என்று பொருள். ச்ரவண என்பது சமணத்தைக் குறிக்கும். சமண மதத்துச் சுவாமி சிலையும் வெள்ளைக் குளமும் இருந்த காரணத்தால் ச்ரவண பெலகுலா என்று அழைக்கப்பட்ட அச்சிற்றூரில் தலைகளைப் போல முளைத்திருந்த இந்திரகிரி, சந்திரகிரி என்று இரண்டு குன்றுகள்.

அதிலே இந்திர கிரியில் 'இங்கே இருந்து கொண்டு இந்த இகலோகத்தையே காணுகிறேன்' என்று கூறுவது போல் வானளாவும் விதமாக அமைந்திருந்தது கோமடீஸ்வரர் சிலை.

இன்றைக்கு ஆயிரம் ஆண்டு காலத்திற்கு முன்னால் சாமுண்டராயன் என்பவனால் நிறுவப்பட்ட சமணமுனிவரின் சிலை அது.

அதை அவன் தனது ஈஸ்வரனாகக் கருதி வந்ததாலும் தனது பெயரின் ஒரு பகுதியான 'கோமட' என்பதை இணைத்து அச்சிலைக்கு கோமடீஸ்வரன் என்ற பெயரைச் சூட்டியிருந்தான்.

எங்களிடம் ஒளிவு மறைவு இல்லை. எங்களை மறைத்துக் கொள்ள அவசியம் எதுவும் இல்லை என்ற கொள்கையைக்

* 'கர்ணேஷு அதிக்தி கர்நாடக' என்ற சுலோகத்தைக் கூறி அதற்கு இதுதான் பொருள் என்று விளக்கியவர் காஞ்சிப் பெரியவர் ஸ்ரீ சந்திரசேகர சரஸ்வதி சுவாமிகள்.

கொண்ட திகம்பரச் சமணர்களின் கோலத்தில் நிர்வாண கோலத்தில் அமைந்திருந்தது அச்சிலை.

அச்சிலை அமைந்திருந்த இந்திர கிரியிலும் அடுத்திருந்தச் சந்திர கிரியிலும், மலைகளின் அடிவாரத்திலும் நூற்றுக் கணக்கானச் சமணர்கள் கூடியிருந்தார்கள். அவர்களில் பலர் அமணர்களாயிருந்தார்கள். பலர் வெள்ளாடை அணிந்திருந்தார்கள். அவர்கள் பெண்கள் ஓரிருவர் மட்டுமே இருந்தார்கள். சமணர்களைத் தவிர பொது மக்களும் கணிசமாக வந்திருந்தார்கள்.

கோமடீஸ்வரருக்கு பன்னிரண்டாண்டுகளுக்கு ஒருமுறை மட்டுமே மகாபிஷேகம் நடைபெறுமாதலால் தற்போது நடைபெற விருந்த மகா அபிஷேகத்தைக் காணவே ஏராள மானோர் கூடியிருந்தார்கள்.

சமண மதத்தின் பிரதான ஆசார்யரான ஜெய தேவர் அச்சிலைக்கு அருகே உயர்மேடை ஒன்றில் அமர்ந்திருந்தார். அவர் அதிகம் பேச விரும்பாதவர் என்பதை உணர்த்துவது போல் வாயை மறைத்து சிறு துணியைக் கட்டியிருந்தார். அவரது கண்கள் பெரும்பாலும் மூடியே இருந்தன.

அவரைச் சுற்றி சமண சமயத்தின் கிளைகளான நந்திச் சங்கம், சேன சங்கம், வீர சங்கம் மற்றும் தேவ சங்கம் ஆகியவற்றின் பிரதான சங்கத் தலைவர்கள் அமர்ந்திருந்தார்கள்.

தமிழகத்தைச் சேர்ந்த சமண சங்கமான திரமிள சங்கத் திலிருந்தும் துறவிகள் வந்திருந்தார்கள்.

அனைத்து அலுவல்களையும் நேரில் இருந்து கவனித்துக் கொண்டிருந்தான் அச்சிற்றூரின் சமண மகா சங்கத் தலைவரும் துறவியுமான நீலகேசி.

கோமடீஸ்வரர் சிலைக்கு மேலேயிருந்து அபிஷேகம் செய்வதற்கு ஏதுவாகச் சிலையின் பின்புறம் பிரம்மாண்டமான சாரம் கட்டப்பட்டிருந்தது. அங்கே ஒவ்வொரு மரப் படிக்கட்டு களிலும் பூஜைகளை செய்வதற்கென்று வகுக்கப்பட்ட பிடாரிகள் பல்வேறு குடங்களை ஏந்தியபடி நின்றிருந்தார்கள்.

சமணமதத்தின் தலைசிறந்த தீர்த்தங்கரர்களின் எண்ணிக்கை இருபத்து நான்கு என்பதை உணர்த்துவது போல் வாத்திய வகைகள் ஒவ்வொன்றிலும் இருபத்து நான்கு கருவிகள் வரவழைக்கப்பட்டு இசைக்கப்பட்டதால் ச்ரவண பெலகுலா என்னும் அந்தச் சிற்றூர் அதிர்ந்தது.

அதோடு யானைகள் நூறு குன்றைச் சுற்றி நின்றுப் பிளிறிய காரணத்தால் பூமியே அதிர்ந்தது.

ஆகட்டும் என்பது போல் துறவி நீலகேசி கைகளை ஆட்டியதும் சிலைக்கு அபிஷேகம் தொடங்கியது.

பாலபிஷேகம், தயிர் அபிஷேகம், சந்தன அபிஷேகம் ஆகியவை அடுத்தடுத்து நடந்தன. கடைசியில் காவிரியிலிருந்து கொண்டு வந்த நீர் குடம் குடமாகக் கொட்டப்பட்டது.

சிலையின் பாதங்களில் செண்பகப் பூக்களும் சாமந்திப் பூக்களும், செங்கழுநீர் பூக்களும், செவ்வல்லிப் பூக்களுமாய் கொட்டப் பட்டதால் மலர் மலையொன்று இந்திர கிரியில் உருவாகிக் கொண்டிருந்தது.

வேதகோஷங்கள் முழங்கின.

அதையடுத்து பிரதான பிடாரி அர்ச்சனை செய்தார்.

**ஆதி வேதம் பயந்தோய் நீ!**
**அலர் பெய்ம்மாரி யமைந்தோய் நீ!**
**நீதி நெறியை உணர்ந்தோய் நீ!**
**நிகரில் காட்சிக் கிறையோய் நீ!**
**நாதன் எனப்படுவோய் நீ!**
**இன்னாப் பிறவி இகந்தோய் நீ!**
**இணையில் இன்பம் உடையோய் நீ!**
**மன்னா உலகம் அறுத்தோய் நீ!**
**வரம்பில் காட்சிக்கு இறையோய் நீ!**
**உலகம் மூன்றும் உடையோய் நீ!**
**ஒன்பொன் இஞ்சி எயிலோய் நீ!**
**திலகமாய திறவோய் நீ!***

இவ்வாறாகப் பூஜைகளும் அர்ச்சனைகளும் முறையாக நடந்தேறிய பின் சமணமதத்தின் ஆசார்யர் ஜெயதேவர் கண்களைத் திறந்தார். வாயை மறைத்திருந்தத் துணியை அகற்றினார். இருப்பிடத்தை விட்டு எழுந்தார். கோடீஸ்வரர் சிலைக்கு முன்பாக வந்து நின்றார்.

அவரைக் கண்டதும் சுற்றிலும் அங்கிருந்தவர்கள் மௌனமானார்கள். அனைவரையும் பார்த்து கைகளை அசைத்தார் ஜெயதேவர். பிறகு பேசினார்.

"சமண மகாமதத்தின் ஆசார்யர்களே! பல்வேறு சங்கத்தின் பிரதானத் தலைவர்களே! நாடெங்கிலுமிருந்து வந்திங்கே

* சீவக சிந்தாமணி அடிகள். பாடகர்கள் 1242, 1243, 1244.

கூடியிருக்கும் சமணத் துறவிகளே! மேல் நாட்டு மக்களே! உங்களையெல்லாம் ஒருங்கே காண்பதற்கு இந்த மகாபிஷேக நாளை விடச் சிறந்தது வேறு இருக்க முடியாது. எனக்கு மட்டுமல்ல. இந்த மாமுனிவர் பாகுபலியின் மகாபிஷேகத் திருவிழா ஒன்று தான் உங்களையெல்லாம் இங்கே திரளாக ஈர்த்திருக்கிறது. உங்களைப் புனிதர்களாக்குகிறது. இன்று இங்கே திரண்டிருக்கும் அனைவருக்கும் பாகுபலியின் அருள் கிடைக்கும். மோட்சம் கிடைக்கும்.

"மகாஜனங்களே! சமணம் என்ற வார்த்தைக்குத் துறவு என்றே பொருள். துறவைப் பிரதானமாகக் கொண்டதால் இது சமணமதம் ஆயிற்று. புலன்களையும் கர்மங்களையும் வென்றவர்கள் ஜினர்கள். அல்லது ஜைனர்கள். அவர்களால் உருவாக்கப்பட்டதால் இது ஜைன மதமாயிற்று. இதில் உள்ளவர்கள் அருகன் எனப்படும் மகாவீரரை வணங்குபவர்கள் ஆதலால் இது அருக மதம் ஆயிற்று. பற்றற்றவர்கள் நிகண்டர்கள். அந்த நிகண்டர்கள் நிறைந்திருப்பதால் நிகண்ட மதமாயிற்று. இதர மதங்கள் ஏகாந்த வாதம்* புரியக் கூடியது. ஆகவே இதற்கு அநேகாந்த வாத மதம் என்றும் பெயர்.

"பெயர் எத்தனை இருந்தாலும் பொருள் ஒன்றுதான். கொள்கை ஒன்றுதான். அஹிம்சையும் சமத்துவமும் தான் சமணத்தின் ஆணிவேர்கள். அதன் மீது தான் சமண விருட்சமானது காலம் காலமாக நின்று விழுதுகளை விட்டு விஸ்தாரமாக வளர்ந்திருக்கிறது. இந்த ஒப்பற்ற பதத்தினை பலயுகங்களுக்கு முன்னால் ஸ்தாபித்தவர் ஆதிதேவர் என்னும் ரிஷபதேவர். அவரே நமது மதத்தின் முதலாம் தீர்த்தங்கரர். தீர்த்தம் என்றால் மதம் என்று பொருள். தீர்த்தங்கரர் என்றால் மதத் தலைவர் என்று பெயர். அப்படி இந்த மதத் தலைவராக ஆதியில் அவதரித்தவரே ஆதிநாதர் என்னும் ரிஷபதேவர்.

"அந்த ரிஷபதேவருக்கு இரண்டு தர்ம பத்தினிகள். முதல் பத்தினிக்குப் பிறந்தவர் பரதன். இரண்டாவது பத்தினிக்குப் பிறந்தவர் பாகுபலி. ரிஷபதேவர் அயோத்தியை ஆண்டார். ஆண்டால் இப்படித்தான் ஆள வேண்டும் என்று ஆண்டவர் அவர். ஆட்சி என்றால் இப்படித்தான் இருக்க வேண்டும் என்பது போல் இருந்தது அவரது ஆட்சி. அந்த ஆட்சியில் மாட்சி இருந்ததே தவிர வீட்சி இருந்ததில்லை. சூது இல்லை. சூழ்ச்சி இல்லை. போட்டியில்லை. பொறாமை இல்லை. அதனால் போரில்லை. பட்டினியில்லை. சுபிட்சமே எப்போதும் சுரந்தது.

* கடவுள் ஒருவரே என்பது ஏகாந்த வாதம். பலர் என்பது அநேகாந்த வாதம்.

நிறைவான ஆட்சியைக் கொடுத்து ரிஷப தேவருக்கு மேன்மேலும் மன்னராய் காட்சி தர விருப்பமாயில்லை. தான் அவதரித்த நோக்கம் மன்னராய் மன்னியிருந்து மாண்டு போய் மண்ணுக்குள் போவதல்ல என்பதை உணர்ந்தார். தவவாழ்வு வாழ்ந்து நிர்வாணம் எய்த வேண்டிய நேரம் வந்து விட்டதாக உணர்ந்த அவர் அரசவாழ்வைத் துறந்து தவம் மேற்கொண்டார். புதல்வன் பரதனுக்கு அயோத்தியையும் மற்றொரு புதல்வன் பாகுபலிக்குப் போதனாபுரத்தையும் அளித்து விட்டுக் கானகம் சென்றார்.

"மூத்த புதல்வன் பரதனுக்கு பதவியானது பேராசையைத் தந்தது. தான் ஆளுவதற்கு அயோத்தி போதாது அகிலமே வேண்டும் என்று ஆசைப்பட்டான். அகிலத்தை வெல்வதற்கு ஆசை மட்டும் போதாது அரும் பெரும் ஆயுதங்கள் வேண்டும் என்று அவனருகில் இருந்தவர்கள் யோசனையைக் கூற, அவன் தவங்களையும் யாகங்களையும் செய்து அபூர்வ ஆயுதங்களைப் பெற்றான். அந்த அபூர்வ ஆயுதங்களைப் பிரயோகித்து பல நாடுகளை அடிமைப்படுத்தி ஆண்டான்.

"தனது சகோதரன் பாகுபலி ஆண்டு வந்த போதனா புரமும் அவனுக்குத் தேவையாக இருந்தது. அவனது ஆசை நிலையற்றது என்று பாகுபலி போதனை செய்தான். பேராசையில் மூழ்கியிருந்த பரதனுக்குப் போதனைகள் வேதனைகளாகவே தோன்றின. போருக்கே தயாராக இருந்தான். "அது தான் முடிவென்றால் படைகளை எதற்கு காவு கொடுக்க வேண்டும்? நாம் இருவரும் தனிப்போர் புரிவோம்" என்றான் பாகுபலி.

"பரதனுக்கு அது சம்மதமாக இருந்தது. இருவரும் போரிட்டார்கள். பாகுபலி தான் மகாபலசாலி என்பதை நிரூபித்தான். போரில் பரதனைத் தோற்கடித்தான். ஆனாலும் அதை வெற்றியாகக் கருதாமல் தன் ராஜ்ஜியத்தைப் பரதனுக்குக் கொடுத்து விட்டு துறவை மேற்கொண்டான். போதனா புரம் அவனுக்குத் துறவையே போதித்தது. அதுவரை வாழ்ந்த வாழ்க்கையை மறந்தான். ஆடைகளையும் ஆசைகளோடு சேர்த்துத் துறந்து திகம்பரனானான்.

"பாகுபலி மிக உயர்ந்த துறவி. துறவில் முன்னேறி அர்ஹிந் என்னும் நிலையை அடைந்தவர். பரிபூரண நிர்வாணத்தை எய்தியவர். அவரது அரும்பெரும் குணங்கள் காலம் காலமாக பலரால் பரப்பப்பட்டு வந்தன. அவரது தந்தை ஆதி நாதரை அடுத்து இருபத்து நான்கு தீர்த்தங்கரர்கள் தோன்றினாலும் பாகுபலி தனித்து நின்று சிறப்படைந்தார். மௌரியப் பேரரசர் சந்திரகுப்தரின் குருநாதரான பத்ர பாகு தனது கடைசி

காலத்தில் சந்திரகுப்தரையும் ஆயிரக் கணக்கான சமணத் துறவிகளையும் ச்ரவண பெலகுலாவுக்கு அழைத்து வந்தார். பாகுபலியின் மேன்மைகளை ஊரெங்கும் பிரச்சாரம் செய்தார். அம்மாமுனிவருக்கு இங்கே மாபெரும் சிலையை எழுப்ப வேண்டும் என்று விரும்பினார். ஆனால் அது அவரால் முடியக் கூடிய காரியமாக இல்லை. அதே சமயம் தனது விருப்பத்தை ஓலைச் சுவடிகளில் எழுதி வைத்து சிஷ்யர்களிடம் ஒப்படைத்தார்.

“அவர்கள் அதைப் பாதுகாத்தார்களே தவிர சிலை வடிக்க முன்வரவில்லை. அதற்கு அவர்களால் இயல வில்லை. ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகள் கடந்த நிலையில் அவரது ஆசை நிறைவேறியது. கங்கநாட்டுச் சேனாதிபதி சாமுண்ட ராயர் இங்கே விஜயம் செய்தபோது ஓலைச் சுவடிகளைப் பார்வையிட்டார். வியந்து போனார். ஏனென்றால் அச்சுவடி களில் பாகுபலி முனிவரின் உருவச் சிலை எவ்வாறு அமைக்கப்பட வேண்டும் என்ற விவரங்கள் இருந்தன. அதில் உள்ளபடி சிலையை நிறுவினால் அது உலக அதிசயமாக விளங்கும் என்று உணர்ந்த சாமுண்டராயர் இச்சிலையை நிறுவினார். இந்திரகிரி மலையைச் செதுக்கி இச்சிலையை உருவாக்கினார்.

“உண்மையிலேயே இந்த உருவாக்கமானது உலக அதிசயம் தான் என்பதை நீங்கள் ஒப்புக் கொள்வீர்கள். பொதுவாகப் “பிறப்பறுக்க லுற்றார்க்கு உடம்பும் மிகை” என்பது சமணரது கோட்பாடு. பிறப்பே வேண்டாம் என்று விழையும் சமணருக்கு இந்த உடம்பே மிகையானது ஆயினும் சமண தீர்த்தங்கரர்களின் உடல் உலகில் யாருக்குமே இருக்க முடியாத பேருடலாக இருந்திருக்கிறது. முதல் தீர்த்தங்கரரான ஆதி நாதராகிய ரிஷபத் தேவர் ஐந்நூறு வில்லளவு உயரமாக இருந்தார்.* அவரது திருமகனார் பாகுபலியும் பிரம்மாண்டமானவராகவே இருக்க வேண்டும். ஆகவே தான் அவரது திருமேனியை இத்துணை உயரமானதாக (52 அடி) அமைத்தார் சாமுண்டராயர். அம்மாமுனிவரது திருச்சிலையைக் காணாத நம் கண்கள் கண்களே அல்ல. அவருக்கு நடக்குமிந்த மகாபிஷேகத்திற்கு வராதவர்கள் மனிதர்களே அல்ல. நீங்களெல்லாம் பெரும் பாக்கிய சாலிகள். பாகுபலியின் பரிபூரண அருள் அனைவருக்கும் கிட்டட்டும்.”

- இவ்வாறு உரையாற்றிய பிரதம ஆசார்யரான ஜெயதேவர் வாயை மறைக்கும் துணியைப் பழைய படி கட்டிக் கொண்டு அந்த இடத்தை விட்டு அகன்றார்.

---

* பக்கம் 12 ‘சமணமும் தமிழும்’. By. மயிலை. சீனி. வேங்கடசாமி.

மகாபிஷேகத்தை அடுத்து பாகுபலியின் உலோக விக்கிரகம் பல்லக்கில் வைத்து வேட்டுக்களும் வாத்தியங்களும் முழங்க குன்றைச் சுற்றி ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டது. அதற்கு முன்பாக இருபத்து நான்கு பல்லக்குகள் வரிசையாகச் சென்றன. அவற்றுக்குள் விக்கிரகம் எதுவும் இல்லை. அதே சமயம் அவற்றிலெல்லாம் இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களும் அரூபமாக எழுந்தருளியிருப்பதாகக் நம்பப்பட்டது.

அன்று மாலை வரை ச்ரவணபெலகுலா அமர்க்களப் பட்டது. அபிஷேகத்திற்கு வந்திருந்தவர்களுக்கு அன்னதானம் அளிக்கப்பட்டு அனுப்பி வைக்கப்பட்டதால் உண்டு முடித்தவர்கள் சாரிசாரியாக விடைபெற்றுக் கொண்டார்கள்.

அனைத்து விழா ஏற்பாடுகளையும் சிறப்புச் செய்திருந்த ச்ரவண பெலகுலாவின் சமண மதத் தலைமைத் துறவியான நீலகேசி விழா நல்லபடி முடிந்ததை எண்ணி திருப்தியுடன் கோமடீஸ்வரரை நோக்கினார்.

சிலையின் தலைமீது சிவப்பு நிற ஆந்தை ஒன்று அமர்ந்திருந்தது.



மகா அபிஷேகம் நடந்து முடிந்து, மக்கள் கலைந்து அகன்று, இரைச்சல்கள் மறைந்து இரவுப் பொழுதானது அமைதியாகத் தொடங்கி நள்ளிரவை வரவழைத்த நேரத்தில் இந்திர கிரியின் பக்கத்தில் இருந்த சந்திரகிரியில் விசாலமாகக் கட்டப்பட்டிருந்த பந்தார பாசதி என்னும் சமணர் பள்ளியில் குன்றோரமாக அமைந்திருந்த அறையில் அமர்ந்திருந்தார் பிரதானத் துறவி நீலகேசி. அவரைச் சுற்றி இருபது துறவிகள் அமர்ந்திருந்தார்கள்.

“மகாபிஷேகம் மகத்தானதாக அமைந்து விட்டது அடிகளே. முந்தைய மகாபிஷேகம் கூட இத்துணை சிறப்பாக நடக்கவில்லை. இன்றைய விழா மகா விமரிசையாக நடந்து முடிந்ததற்கு நீங்களே காரணம். நீலகேசி மனது வைத்தால் நீலவானத்தையும் வளைப்பார் என்பது உண்மையாகி விட்டது. சமண மதத்திற்கு இது மகத்தான நாள். மறக்க முடியாத நாள். மாட்சிமை பொருந்திய நாள். நமது வளர்ச்சிக்கு இதுவே போதும்” என்றார்கள் துறவிகள்.

நீலகேசி அந்த வார்த்தைகளைக் கேட்டு களிப்படையவில்லை. கொண்டாடி மகிழவில்லை. குதூகலப்பட்டு கூத்தாடவில்லை.

“நீங்கள் கூறுவதெல்லாம் தவறு. இன்றைய நாள் சமண மதத்திற்கு கறுப்பு நாள். துக்க நாள். எதிர் காலச் சோதனைக்கான அறிவிப்பு நாள். அவல நாள்” என்றார்.

“இதென்ன இப்படிச் சொல்கிறீர்கள்?”

"இன்று மாலை பலரும் கவனித்திருக்க மாட்டீர்கள். எல்லோரும் கீழே பார்த்துக் கொண்டிருந்த போது நான் மேலே பார்த்தேன். பாகுபலி சிலையின் தலைமீது ஒரு ஆந்தை அமர்ந்திருந்தது. அதன் தலைமட்டும் சிவப்பு. தமிழகத்தில் ஓரிரு இடத்தில் மட்டுமே காணப்படும் அந்த பேய்ப் பறவை தற்போது இங்கே வந்திருக்கிறது. அதுவும் அது அமர்ந்திருந்த இடம் மரமாக இருந்திருந்தால் கவலையில்லை. மலையுச்சியாக இருந்திருந்தால் கவலையில்லை. மண்மேடாக இருந்திருந்தால் கவலையில்லை. ஆனால் பாகுபலி சிலை மீது அதுவும் தலை மீது அமர்ந்திருந்தது. அது நல்லதற்கில்லை. குறிப்பாகச் சமணர்களுக்கு கேடு விளைவிக்கக் கூடியது. கஷ்டம் விளைவிக்கக் கூடியது. கஷ்ட காலத்தை தரக் கூடியது. ஆகவே இந்நாள் நீங்கள் கூறுவது போல் திருநாளல்ல. பெருநாள் அல்ல. சிறப்பான நாளல்ல. கறுப்பான நாள்" என்றார் நீலகேசி. அவரது குரலில் வருத்தம் இருந்தது.

"எல்லா உயிரும் சமம் என்று கருதுபவர் சமணர். தாங்கள் இப் பறவையை எண்ணி கலக்கமடையலாமா?" என்று கேட்டார் ஒரு துறவி.

"சமத்துவ நெறி என்பது வேறு. அதைப் பற்றி இங்கே பேசாதீர்கள். பிறந்த உயிரினங்கள் எல்லாம் ஒரே மாதிரியானவை யல்ல. ஒரே மாதிரி நடப்பவையல்ல. புலியும் மானும் ஒரே உயிரினம் என்றாலும் செயல்பாட்டால் வேறு பட்டவை. இந்தப் பேய்ப் பறவை தீய பறவை. அதுவும் சிவந்த தலையைக் கொண்ட இப் பறவையின் வரவு நிச்சயமாகத் துர்ச்சகுனம் தான்" என்றார் நீலகேசி.

"பறவையை விடுங்கள் அடிகளே. இன்று கூடிய கூட்டத்தை எண்ணிப் பாருங்கள். அது சமணத்தின் எழுச்சியல்லவா?"

"துறவி! கூட்டம் கூடுவது ஆர்வத்தின் அடையாளமாக இருக்கலாம். அது எழுச்சியின் அடையாளமாகவும் இருக்கலாம். ஆனால் அது ஆதரவின் அடையாளமாக இருக்கும் என்று சொல்ல முடியாது. வளர்ச்சியின் எதிரொலியாகவும் கருத முடியாது. கூடிய கூட்டம் இப்போது எங்கே? விழா முடிந்த பின் போய் விட்டது. அதோடு அடுத்த மகாபிஷேகம் பன்னிரண்டு ஆண்டுகள் கழித்து மீண்டும் வருவார்கள். அவ்வளவு தான். அவர்களுக்கும் ஆடுகளுக்கும் அதிக வித்தியாசம் இல்லை."

"அடிகளே! நம் ஆச்சார்யர் ஜெயதேவர் என்ன சொல்கிறார்?"

"அவர் பேசினால் தானே தெரிந்து கொள்வதற்கு? அவர் மகத்தானவர். மாசு மறுவற்றவர். அவர் மௌனமாக இருப்பதே,

நமக்கு பலம் தருவதாகும். இன்றைக்குக் கூட நான் மிகவும் வேண்டி பிரார்த்தனை செய்ததால்தான் சிறிது நேரம் பேசினார். இல்லாவிட்டால் பேசியிருக்க மாட்டார். ஆயினும் அவரது மௌனம் ஆயிரம் அர்த்தங்களைக் கொண்டது. பேச வேண்டிய நேரம் வரும் போது பேசுவார்."

"அடிகளே! இங்கே சமண மத ஆச்சார்யராக இருந்த் ஆரிய நந்தி என்ன ஆனார்?"

"மகாவீர வர்த்தமானரது அவதாரஸ்தலமான குண்டின புரத்திற்கு ஸ்தலயாத்திரையாகச் சென்ற ஆரிய நந்தி அடிகள் அங்கேயே நிர்வாணமடைந்தார். ஆகவே அவரது பிரதம சீடரான ஜெயதேவரை அவரது விருப்பப்படியே ஆச்சார்யராக நியமித்தோம்" என்று சொன்ன நீலகேசி மேலும் பல விஷயங்களைப் பேசிய போது சமண மதத்திற்குச் சோதனைக் காலம்தான் வந்திருக்கிறது என்று கருதிய துறவிகள் கவலையுடன் அகன்றார்கள்.

நீலகேசியின் மனம் பாரமாக இருந்தது.

"சமணமதத்திற்குச் சோதனை வருமா? வந்தால் அது தீருமா? யட்சிணியைக் கேட்பது தான் சரி" என்று கருதியவராய் அங்கிருந்து எழுந்து பாகுபலி சிலையிருந்த இந்திர கிரிக்கே சென்றார்.

சமணர்கள் இரவு நேரங்களில் விளக்கேற்றும் வழக்கமில்லை யாதலால் குன்றுப் பகுதி முழுதும் இருளில் மூழ்கியிருந்தது. ஆயினும் அம்மலைப் பகுதியில் வசித்து பகலிரவு பாராமல் உலவும் வழக்கத்தைக் கொண்டிருந்த நீலகேசிக்குத் தடுமாற்றமாக இல்லை. சிலைக்குப் பின்புறம் இருந்த யட்சிணி அம்பிகாவின் கோயிலுக்குச் சென்றார். கோயிலுக்குள் இரவு நேரங்களில் யட்சிணியைத் தவிர யாரும் இருப்பதில்லை. இராப் பொழுதுகளில் அக்கோயிலுக்குள் யட்சிணி தேவதையான அம்பிகா நடமாடுவதும் நடனமாடுவதும் உண்டு என்று அங்கிருந்தச் சமணர்கள் நம்பி வந்த படியால் இரவில் அங்கு யாரும் செல்வதில்லை. சென்றவர்களில் இருவர் ஊமையாகவும் குருடாகவும் ஆகிவிட்டதாகப் பேசப்பட்டதால் மக்கள் பகலில் மட்டுமே அங்கு வந்தார்கள். சென்றார்கள்.

இந்த விவரங்கள் நீலகேசிக்குத் தெரிந்திருந்தாலும் அவர் அச்சமற்றவராதலால் அந்த விவரங்களைப் பற்றிக் கவலைப்பட வில்லை. அவற்றை விட சமண மதத்தின் எதிர்காலம் பற்றிய கவலையே அதிகமாக இருந்ததால் அந்த விசனத்துடனேயே உள்ளே சென்றார்.

யட்சிணியே அங்கு விளக்காக இருப்பாள் என்பது ஐதீகமாக இருந்தாலும் கோயிலுக்குள் இருட்டு தான் விரவியிருந்தது. அந்த இருட்டில் யாரோ நடமாடுவது போல் தான் நீலகேசிக்குத் தோன்றியது. நடமாட்டம் கலைந்து நடனமாடுவதை உணர்த்துவது போல் சலங்கை ஒலியும் விட்டு விட்டுக் கேட்டதே தவிர யாரையும் காணவில்லை.

இரவு நேரம் வந்து விட்டால் உறவாட வருபவர்கள் நாங்கள் தான் என்பதை உணர்த்துவது போல ஆந்தைகள் சில உள்ளேயும் வெளியேயும் இரைந்தன. ஓர் ஆந்தை அவருக்கு முன்னால் தூணில் வந்து அமர்ந்து விட்டுவிட்டு இரைந்த விதமானது 'உள்ளே போகாதே' என்று நீலகேசியை எச்சரிப்பது போல் இருந்தது.

நீலகேசி அங்கே பலமுறை பகலில் வந்திருந்தாரே தவிர இரவில் வரவில்லை. எனவே முதன் முறையாக இரவில் தனியே அங்கு வந்தபோது மக்கள் பேசிக் கொள்வதெல்லாம் உண்மைதானோ என்று எண்ண வைத்தது.

"எல்லாம் வெறும் பிரமை. யட்சிணியாவது! நடமாடுவதாவது!" என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டு, தன்னை தைரியப்படுத்திக் கொண்டு யட்சிணி சிலையருகே சென்றார் நீலகேசி.

"தாயே! யட்சிணி! அம்பிகே! எங்களையெல்லாம் ரட்சிக்கும் தேவதையே! என் கவலை உனக்குப் புரிந்ததா? எங்களுக்குப் புகலிடமாய் விளங்கும் சமணம் சிறப்பிழந்து சிறுத்து விடுமா? அல்லது சிலிர்த்துச் சீறி எழுமா? என்ன நடக்கும் தாயே?" - என்று வாய்விட்டுக் கேட்டு நின்றார்.

அப்போது ஏதோ ஓர் உருவம் வருவது போல் தெரிந்தது. சலங்கை ஒலியும் கேட்டது. அதையடுத்து அசரீரிர் ஒலித்தது.

"மேல் கோட்டை!"





தலைவன் என்பவன் தன்னைச் சார்ந்தவர்களின் கஷ்டங்களை விலக்கும் கருவியாக இருக்க வேண்டுமே தவிர கஷ்டங்களைக் கொடுக்கும் அதிகாரியாக இருக்கக் கூடாது – நீலகேசி




அசரீரி எழுந்ததும் ஒரு கணம் நடுங்கிய நீலகேசி மயிர்க் கூச்செரிந்தார்.

"யார் யட்சிணியா பேசுவது?" என்று கேடடார் பரவசத்துடன்.

"நீ பேச வந்தது யட்சிணியிடம் தானே?"

"ஆமாம்."

"பிறகு எதற்கு இந்தக் கேள்வி?"

"யட்சிணி இதுவரைப் பேசியதில்லை."

"இதுவரை எதுவரை என்றெல்லாம் நிர்ணயிப்பது யார்? போ. போ."

"தாயே! மேல் கோட்டை என்பதன் பொருள் என்ன?"

நீலகேசியின் இந்த கேள்விக்குப் பதில் வரவில்லை.

ஆந்தை மட்டுமே உள்ளே வந்து இரைந்தது.

நீலகேசிக்கு என்ன சொல்வதென்று விளங்கவில்லை.

"பேசியது யட்சிணி தானா? இல்லை மனப் பிரமையா?" என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டார்.

அதே சமயம் அசரீரி சொன்ன 'மேல் கோட்டை' என்ற சொல்லுக்குப் பொருள் விளங்கவில்லை.

சமணத்திற்கும் மேல் கோட்டைக்கும் என்ன சம்பந்தம் என்று கேட்டுக் கொண்டு அங்கிருந்து வெளியேறி சந்திரகிரி பள்ளிக்கு வந்தார்.



அவருக்கு இருப்பு கொள்ளவில்லை.

"புரவியையும் பல்லக்கையும் சித்தப்படுத்துங்கள். உடனே பயணப்பட வேண்டும்" என்றார்.

“நள்ளிரவாயிற்றே! இப்போதா பயணம்?” என்று வினவி னார்கள் சகதுறவிகள்.

“இரவும் பகலும் மாறி மாறி வரும். பயணம் அதையெல்லாம் பார்ப்பதில்லை. இந்த பூமி சூரியனைச் சுற்றிக் கொண்டே வருகிறது? அது எதை யோசிக்கிறது? அது தன்னைத் தானே சுற்றிக் கொள்கிறது? யோசிக்கிறதா? அது சற்று யோசிக்கத் தொடங்கி இயங்குவதற்குத் தயங்கினால் உலகம் என்னாகும்?” என்று கேட்டார் நீலகேசி.

ஒரு சாதாரணமான கேள்விக்குப் போய் இப்படி வியாக்கி யானம் செய்ததிலிருந்து அவர் ஒரு நிலையில் இல்லை என்று புரிந்து கொண்ட துறவிகள் “நாங்கள் உறங்க வேண்டாமா?” என்று கேட்டார்கள்.

“நாம் நன்றாக உறங்கிக் கொண்டுதான் இருக்கிறோம்” என்றார் நீலகேசி.

அவர் சொல்லுவதற்கான அர்த்தம் வேறு என்பது புரிந்தது துறவிகளுக்கு. அவர் வருத்தத்தில் பேசுகிறார் என்பதை உணர்ந்த அவர்கள் “எங்கே பயணம்?” என்று கேட்டார்.

“நமது எல்லோரது பயணமும் பரிபூரண நிர்வாணத்தை நோக்கி தான்” என்று சொன்ன நீலகேசி “துவார சமுத்திரத்திற்குச் செல்கிறேன் அன்பர்களே! அது இப்போது ஊராக இல்லை. சமுத்திரமாகவே இருக்கிறது. ஆழ்கடலில் உள்ள மர்மங்களைப் போலவே விட்டலராயர் ஆட்சியில் மர்மங்களும் புதிர்களும் அடங்கியிருக்கின்றன. ஆச்சார்யர் ஜெயதேவர் என் வசம் ஒப்படைத்துள்ள கேள்விகள் மிக அதிகம். அவற்றில் சிலவற்றுக்காவது துவார சமுத்திரத்தில் விடை கிடைக்குமா என்று தெரியவில்லை” என்று அலுத்துக் கொண்டார்.

“தாங்கள் இப்படி உடைந்து போகலாகாது அடிகளே.”

“உடைந்தது உடைந்ததுதான். உடைந்து போன தேர் பழுது செய்யப்படலாம். உடைந்து விட்ட பானையை ஒட்ட வைக்க முடியாது. உடைந்த பானையின் நிலைதான் என் நிலை. சல்லேகனை புரிந்து உயிரை விட்டு விடலாமா என்று கூட யோசித்தேன். மகாகுரு மகாவீரர் ஏதோ தடுத்துக் கொண்டிருக்கிறார்.”

“நாங்களும் உடன் வருகிறோம் அடிகளே.”

“நீங்களாவது ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். என் சிரமம் என்னோடு போகட்டும்.”

"தங்களோடு இருப்பது எங்களுக்குச் சிரமமல்ல; ஆசிரமம். தாங்கள் இருப்பதுதான் எங்களுக்கு வேண்டிய நிழலைத் தருகிறது. உங்களை விட்டு விட்டால் நாங்கள் தூங்கவும் வழியில்லை. ஒடுங்கவும் வழியில்லை."

"தவறு துறவிகளே! தலைவன் என்பவன் தங்களைச் சார்ந்தவர்களின் கஷ்டங்களை விலக்கும் கருவியாக இருக்க வேண்டுமே தவிர கஷ்டங்களைக் கொடுக்கும் அதிகாரியாக இருக்கக் கூடாது. அவர்களோடு அவன் பகிரவேண்டியது தனது சந்தோஷங்களைத் தானே தவிரச் சிரமங்களையும் சோதனைகளையுமல்ல" என்றார் நீலகேசி பரிவான குரலில்.

"தாங்கள் என்ன சொன்னாலும் சரி. நாங்கள் உங்களுடன் வரத்தான் செய்வோம்" என்றார்கள் துறவிகள்.

"வேண்டாம். கூட்டம் சேர்ந்தால் தொல்லைகளே அதிகம். இன்று என்னை விட்டு விடுங்கள். நான் திரும்பி வந்ததும் உங்களுக்கெல்லாம் நிறைய வேலைகள் இருக்கும்" என்று கூறிவிட்டு பல்லக்கில் ஏறி அமர அதை பத்து பேர் சுமந்து சென்றார்கள்.

பல்லக்கின் பின்னாலேயே புரவியில் பணியாளன் ஒருவன் வந்தான்.

பல்லக்கிலும் புரவியிலும் மாறி மாறிப் பயணம் செய்வது அவரது வழக்கம்.

தற்போது அவர் புழுக்கத்தில் இருந்தபடியால் பல்லக்கிலே பயணம் செய்தார்.

அவரது மனம் ஒருநிலையில் இல்லாமல் ஊசலாடிக் கொண்டிருந்தது.

சமணத்தின் எழுச்சிக்காகவும், வளர்ச்சிக்காகவும், உயர்வுக்காகவும், கனவுகண்டு அதற்காகத் தான் எடுத்த முயற்சிகளெல்லாம் கனவு போலவே ஒன்றுமில்லாமல் போய் விடுமோ என்ற கவலை அவரை வாட்டி வதைத்தது.

தனது கால்களுக்குக் கீழே மலைபோல் குவிந்திருந்த சிறப்புக்கள் எல்லாம் பெருமளவில் கரைந்து போய் விட்டது என்பதை அறிய அவருக்குச் சிரமம் ஏதுமில்லை.

விரைவிலேயே நான் பட்டமரம் போல் ஆகிவிடுவேனோ என்ற திகிலும் அவருக்கு உண்டாயிற்று.

இனி சற்று கடுமையான அணுகுமுறையைக் கடைப்பிடித்தால் தான் சீரழிவிற்கு முன்பு சிகிச்சை செய்த மாதிரி இருக்கும் என்று கருதிக் கொண்டார்.

சந்திரகிரியை விட்டு இரண்டு காத தூரம் பயணம் செய்திருந்த நிலையில் பெண்ணொருத்தியின் அலறல் கேட்டது.

"பல்லக்கை இறக்குங்கள்" என்றார் நீலகேசி.

பல்லக்கு இறக்கப்பட்டது.

தீப்பந்தத்தைப் பிடித்து வந்தச் சேவகர்கள் அலறல் வந்த இடத்தை நோக்கி ஓடினார்கள்.

நீலகேசி பல்லக்கை விட்டு இறங்கினார்.

சேவகர்கள் இளம் பெண் ஒருத்தியையும் முரட்டுக் காளை ஒன்றையும் இழுத்து வந்தார்கள்.

"என்ன நடந்தது?" என்று வினவினார் நீலகேசி.

"இந்த மனிதன் என்னைக் கெடுக்க முயன்றான் சுவாமி" என்றாள் இளம்பெண்.

"நடுராத்திரியில் தன்னந்தனியாக ஒரு இளம் பெண் காட்டிற்குள் வந்தால் பார்க்கிற ஆடவர்கள் தவமா செய்வார்கள்? இந்த நேரத்தில் இந்த இடத்தில் தனியாக வரும் நீ உண்மையிலேயே பெண்தானா? பேயே தனியாக வர அஞ்சும் காட்டுப் பகுதியில் நீ எதற்காக வந்தாய்?" என்று கேட்டார் நீலகேசி.

"சுவாமி! தினமும் நான் சென்னப் பட்டின பெருமாளுக்கு நெய் விளக்கேற்றி பிரார்த்தனை செய்து விட்டுத் தான் வருவேன். இன்று ஆலயத்தில் தாமதமாகி விட்டபடியால் நள்ளிரவாகி விட்டது."

"இப்போது எங்கே சென்று கொண்டிருந்தாய்?"

"மூன்று காத தூரத்தில் மலைக் கணவாய்க்கு அப்பால் என் குடிசை இருக்கிறது. அங்கே தான் செல்கிறேன்."

"உனக்கு லவலேசமாவது புத்தியிருக்கிறதா?. அந்த மலைக் காட்டுக் கணவாய் கொடிய பேய்களுக்குப் பெயர் பெற்றது. அங்கேயா இருக்கிறது உன் குடிசை? அங்கே யார் இருக்கிறார்கள்?"

"நான் மட்டும் தான் சுவாமி."

"இப்படியுமா ஒரு பெண் இருப்பாள்? பேதைப் பெண்ணே! இங்கே நீ காப்பாற்றப்பட்டு விட்டாய். மீதியுள்ள மூன்று காத தூரம் வரை உன்னை யார் காப்பாற்றுவார்கள்?" என்று வினவி...

நீலகேசி தனது பணியாளர்களைப் பார்த்து "அருகில் நமது சமணப் பள்ளி இருக்கிறதா?" என்று கேட்டார்.

"ஒன்றரை காத தூரத்தில் நமது வர்த்தமானீச்சுரம் என்னும் பள்ளி இருக்கிறது அடிகளே" என்றார்கள் பணியாட்கள்.

"நல்லதாகப் போயிற்று. இந்தப் பெண் இந்த இரவு நேரத்தில் பயணம் செய்ய வேண்டாம். அந்தப் பள்ளியிலே தங்கி காலையில் செல்லட்டும்" என்று சொன்ன அவர் அப்பெண்ணைப் பார்த்து "உன் பெயர் என்ன?" என்று கேட்டார்.

"திங்கள்" என்றாள் அப்பெண்.

அடுத்து அந்த முரட்டு வாலிபனைப் பார்த்து "இவள் கூறுவது உண்மையா?" என்று கேட்டார்.

"இனி இப்படி நடந்து கொள்ள மாட்டேன் ஐயா" என்றான் அவன்.

அப்போது யாரும் எதிர்பார்க்காத காரியத்தைச் செய்தார் துறவி.

பல்லக்கின் அருகே சென்று அங்கே தலையணையின் கீழே இருந்த உடைவாளை எடுத்து வாலிபனின் தலையை ஒரே வெட்டில் வீழ்த்தினார்.

இளம் பெண் அச்சத்தில் அலறினாள்.

துண்டிக்கப்பட்டத் தலை துடித்தது. அடங்கியது.

வெலவெலத்துப் போன திங்கள் "சுவாமி! தாங்களா இப்படி?" என்று கேட்டாள்.

"என்ன செய்யச் சொல்கிறாய்? அவனை விட்டு விடும்படிச் சொல்கிறாயா? பெண்ணே! தீயவர்களுக்கு மன்னிப்பு அளிப்பதானது அவர்களது தீமையைத் தொடரவே வழி வகுக்கும். மரத்தின் கிளையை வெட்டினால் அது துளிர்க்கும். வேரை அகற்றினால் ஒரேயடியாக அழியும். இவனைப் போன்றவர்கள் அழிக்கப்பட வேண்டியவர்கள். நீயொன்றும் விழித்துக் கொண்டு நிற்க வேண்டாம்" என்றார் நீலகேசி.

"துறவியார் இக்காரியத்தைச் செய்யலாமா?"

"துறவியை ஒரு புலி கொல்லப் பார்க்கிறது? அவர் என்ன செய்ய வேண்டும் என்று சொல்லுகிறாய்? பேச்சு வார்த்தை நடத்த வேண்டுமா? இல்லை பெண்ணே. கத்தியை எடுத்து வெட்ட வேண்டும். வீழ்த்த வேண்டும்" என்றார் நீலகேசி.

"துறவிகளுக்கு ஆயுதம் ஏந்த அனுமதி உண்டா சுவாமி?" என்று கேட்டாள் அவள்.

"உண்டு. ஆனால் பயன்படுத்துவதில்தான் கட்டுப் பாடுகள் உண்டு. தீயவைகளையும் தன்னைத் தாக்கும் மிருகங்களையும் அழிக்க ஆயுதங்களைப் பயன்படுத்தலாம். அதற்குக் காரணம் முற்காலத்தில் துறவிகள் அதிகமாகப் பயணப் பட மாட்டார்கள். அவசியம் காரணமாகப் பயணப் பட்டால் வேடர்கள் துணைக்குச் செல்வார்கள். ஆயுதங்களை அவர்களே கையாளுவார்கள். ஆபத்துக்களை அவர்கள் எதிர்கொள்வார்கள். ஆனால் இப்போது எல்லாமே மாறி விட்டது. காட்டில் வசித்து வந்தத் துறவிகள் நகரங்களுக்கு வந்து விட்டார்கள். அவர்களுக் கென்று விஹாரங்கள் கட்டப் பட்டன. அதோடு அவர்கள் ஆட்சிபுரியும் ராஜாக்களுக்கு குருநாதர்களாகச் செயல்பட்டார்கள். ஆன்மிக நிழலில் இருந்த அவர்கள் மீது அரசியல் நிழலும் விழுந்தது. அதை அவர்கள் அவசியம் என்று கருதினார்கள். துறவு என்பது அனைத்தையும் துறந்து விட்டுச் சும்மாயிருப்பது என்பதை மறுதலித்து துறவிகளாய் நகரில் உலவி, மக்களுடன் உசாவி, மக்களுக்கு உதவி, ராஜாக்களின் கைங்கரியங்களில் பங்கு கொண்டு மனித நேயத்தையும் அன்பையும் வளர்க்க முற்பட்டார்கள். காட்டில் மட்டும் பெய்யும் மழை காட்டிற்கு மட்டுமே பயன்படும். அதை நாட்டிற்கு இழுத்து வந்தால் நானாவித மக்களுக்கும் பயனளிக்கும். அப்படியாகத் தான் துறவிகள் ஆரண்ய வாசத்தை விட்டு விட்டு நாடு நகரம் எனப் பெயர்ந்தார்கள். அதற்கு அவர்கள் அடிக்கடி பயணம் மேற்கொள்ள வேண்டியிருந்தது. பயணம் மேற்கொள்ளும் போதெல்லாம் வேடர்களையும் பாது காவலர்களையும் அழைத்துச் செல்லத் துறவிகளுக்கு வசதி இல்லாமல் இருந்தது. ஆகவே அவர்கள் ஆயுதம் தரித்தபடி பயணம் செய்தார்கள். பகல் இரவு என்று பாராமல் பயணம் செய்ய வேண்டியதாயிற்று. வழியில் இதுபோன்றத் தீயவர்கள் எதிர்படும் போது அவர்களைக் களையெடுப்பதே உகந்ததாக இருக்கிறது" என்றார் நீலகேசி.

"தங்களைச் சந்திக்க நேர்ந்தது எனது பாக்கியம் தான் சுவாமி. நிறைய விஷயங்களை அறிந்து கொண்டேன்" என்றாள் திங்கள்.

"பெண்ணே! சமண மதத்தில் பெண்கள் பாவப்பட்டவர்கள். தூசுக்கு இருக்கும் மதிப்பு கூட அவர்களுக்குக் கிடையாது. அவர்களுக்குத் துறவறம் பூணுவதற்கு அனுமதி இல்லை. அவர்களுக்கு மோட்சமும் கிடையாது. அவர்கள் இறந்து ஆண்களாகப் பிறக்க வேண்டும். அப்போது தான் அவர்களுக்கு

எல்லாமே கிடைக்கும். உன் பெயரைக் கேட்டதிலிருந்து நீ சமணப் பெண் என்பதை அறிந்து கொண்டேன். அற்ப ஜந்து நீ. உன்னைப் போய் ஒருவன் கெடுக்க முற்பட்டது பாவகாரிய மாகும். ஆகவே தான் அவனது உயிரைப் போக்கினேன்" என்று சொன்ன நீலகேசி அவளைப் பல்லக்கில் ஏறிக் கொள்ளும் படிச் சொல்லி புரவியின் மீது ஏறிக் கொண்டார்.

உடைவாளைப் பணியாளனிடம் கொடுத்துச் சுத்தம் செய்யும் படிச் சொன்னார்.

"இந்த உடலை என்ன செய்வது?" என்று கேட்டார்கள் பணியாளர்கள்.

"நாமென்ன இவனுக்கு ஈமக் கிரியைகளா செய்ய முடியும்? அப்படியே விடுங்கள். இரண்டாந்தர மாமிசப் பட்சிணிகள் வந்து உணவாகக் கொள்ளட்டும்" என்றார் நீலகேசி.

பல்லக்கில் பயணம் செய்வது காற்றில் பறப்பது போல் பரமானந்தமாக இருந்தது அப் பெண்ணிற்கு. குப்பையானது காற்றடித்தால் கோபுர உச்சிக்குப் போய் விடக் கூடிய பாக்கியத்தைப் போலக் கருதினாள் அவள்.

விரைவிலேயே வர்த்தமானீச்சுர பள்ளி வந்ததும் பல்லக்கு இறக்கப்பட்டது.

அவளுக்கோ தொடர்ந்து பல்லக்கில் பவனியபடி செல்லக் கூடாதா என்று தோன்றியது. எதிர்பாராமல் வரும் எதுவும் குறுகிய காலத்திலேயே போய் விடும் என்பதை உணர்ந்தவளாய் பல்லக்கை விட்டு இறங்கினாள் திங்கள்.

"இந்தப் பெண்ணை நன்றாக கவனித்து விடியும் வரை இங்கே தங்கியிருக்க ஏற்பாடு செய்யுங்கள். பொழுது விடிந்த பின் அவள் எங்கு செல்கிறாளோ செல்லட்டும்" என்று சொன்ன நீலகேசி பல்லக்கைச் சுத்தம் செய்யச் சொன்னார்.

திங்களழகி என்ற அப்பெண்களைத் துறவிகள் கண்ணும் கருத்துமாகக் கவனித்துக் கொண்டார்கள். உணவு வகைகளைக் கொடுத்தார்கள். தனி இடத்தில் கல் படுக்கையில் உறங்கவும் வகை செய்தார்கள்.

கல்படுக்கை அவளுக்குச் சுகமாக இருந்தது. பலர் அங்கே படுத்த காரணத்தில் வழுவழுப்பாக இருந்தது. தலையணைப் பகுதியும் கல்லாகவே இருந்தது. மிகவும் சௌகரியமாக இருந்தது.

"ஆகா! நான் மட்டும் ராஜகுமாரியாகப் பிறந்திருக்கக் கூடாதா? அப்படிப் பிறந்திருந்தால் இஷ்டப்படி பல்லக்கில் செல்லலாம்

அல்லவா? இங்கே கூட வந்து கல் படுக்கையில் புரளலாம் அல்லவா? எனக்குப் பிடித்தவனோடு சந்தோஷத்தைத் துய்க்கலாம் அல்லவா? அதுவல்லவா சொர்க்கம்? என்ன பாவம் செய்து நான் பிறந்து அனாதையானேன்? அதோடு எதற்கும் பயனற்றச் சமண மதத்தில் பெண்ணாகப் பிறந்தேன்?'' என்றெல்லாம் ஏங்கினாள்.

ஏக்கத்தின் பலனாக இன்பக் கனவுகள் அவளை ஆனந்தப் படுத்தின.

பொழுது விடிந்து எழுந்த போது உடலெல்லாம் வலித்தது. கனவில் களியாட்டம் போட்டதை நினைத்துக் கொண்டாள். கனவில் இன்பம் அனுபவித்தால் நிஜத்தில் உடம்பு வலிக்காதே என்று கேட்டுக் கொண்ட அவள் ஏதோ சந்தேகத்துடன் உள்ளாடையைக் கவனித்தாள். அதில் ரத்தக் கறைகள் இருந்தன. உதடுகள் காயமாகியிருந்தன. முன்னேயிருந்த தனங்களில் கீறல்களும் சிராய்ப்புகளும் இருந்தன. பின்புறமும் யாரோ கடித்தது போன்ற வலி இருந்தது.

அவளுக்கு நன்றாகப் புரிந்து விட்டது தனது கற்பு பறிபோய் விட்டது என்று.

ஆனால் அதை நம்ப முடியவில்லை.

நடுக்காட்டில் முரடனால் பறிபோகாமல் காப்பாற்றப் பட்ட விஷயம் பவித்திரமானதும், பாதுகாப்பானதுமான சமண விஹாரத்தில் பறிபோனது அவளுக்கு அதிர்ச்சியாக இருந்தது.

துறவிகள் இந்த காரியத்தில் ஈடுபட்டிருக்க முடியாது. பணியாளர்கள்தான் ஈடுபட்டிருக்க வேண்டும் என்று கருதினாள்.

“ஆகா! பலாத்காரம் செய்ய முயன்றவனையே அடிகள் வெட்டி வீழ்த்தினாரே! என்னை இப்படி ஆக்கி விட்டவனைக் கண்டால் என்ன செய்வார்? ஐயோ அடிகளே! என் மீது கருணை காட்டி, அக்கறை காட்டி, பரிவையும் பாசத்தையும் காட்டி இங்கு கொண்டு வந்து பாதுகாப்பாக விட்டீர்களே! இங்கேயே இப்படி நடந்து விட்டதைத் தெரிந்தால் எவ்வளவு வேதனைப் படுவீர்கள்? உங்கள் பரிவிற்கும் பாதுகாப்பிற்கும் அர்த்தமில்லாமல் போய் விட்டதே ஐயா! இனி நான் எப்படி சந்தோஷமாக உலவுவேன்? இது தெரிந்தால் எவன் என்னைச் சீந்துவான்? என் வாழ்க்கை முடிந்து விட்டதா?'' என்றெல்லாம் புலம்பி அழுதாள் அவள்.

வழுவழுப்பான கல் படுக்கை அவளுக்குத் தற்போது வெறுப்பையே தந்தது.

விஹாரத்தில் அவளைத் தவிர வேறு பெண்கள் இருப்பதாகத் தெரியவில்லை.

ஒரு சிலத் துறவிகளே இருந்தார்கள்.

அவர்களை நெருங்கி "ஐயா! அடிகளார் எங்கே?" என்று வினவினார்.

"உன்னை இங்கே ஒப்படைத்து விட்டு அப்போதே சென்று விட்டாரே பெண்ணே! என்ன வேண்டும்?" என்று கேட்டார் துறவி.

தனக்கு நடந்த அவலத்தை யாரிடமும் சொல்ல அவள் விரும்பவில்லை.

"ஒன்றுமில்லை ஐயா. நன்றி தெரிவிப்பதற்காகத் தான் கேட்டேன். வேறொன்றுமில்லை. போய் வருகிறேன்."

"உணவு உண்டாயா?"

"வேண்டாம் ஐயா. செல்லும் வழியில் பார்த்துக் கொள்கிறேன்" என்று கூறி விட்டுப் புறப்பட்டாள் திங்களழகி.



துவார சமுத்திரத்தின் அரண்மனையில் ஹொய்சள மன்னன் விட்டலராயன் அமர்ந்திருந்தான்.

அவனுக்குப் பின்னால் கங்கராஜனும், பரதனும் விகர்ணனும் அமர்ந்திருந்தார்கள்.

படையெடுப்பு விஷயங்கள் ஓய்ந்து ஹொய்சள ராஜ்யம் சுவாதீனமாக சுயாட்சி பெற்று நான்கு வருடங்கள் ஓடியிருந்தன.

ராஜ்ய விஷயம் எங்கே பூஜ்யமாகப் போய்விடுமோ என்ற கவலை நரசிம்மன் - சௌமிய குமாரி ஆகியோரது திருமணத்தால் நீங்கியது.

விட்டலராயன் பேரரசனானான். ஹொய்சள ராஜ்யம் சாம்ராஜ்யமாகியது.

மன்னன் தொட்டது துலங்கும் என்றும் அவன் விட்டதை நரசிம்மன் துலங்க வைப்பான் என்றும் மக்கள் கூறத் தலைப் பட்டார்கள்.

ஆனால் ஆண்டுகள் ஆறு ஆன போதிலும் மன்னனின் மகள் தர்மதேவி மட்டும் குணமாகவில்லை.

நோயாளியாகவோ அல்லது பைத்தியக்காரியாகவோ அல்லது பேய்களால் பீடிக்கப்பட்டவளாகவோ இருப்பவர் களுக்கு என்னவென்ன முறையில் சிகிச்சை செய்ய வேண்டுமோ அத்தனையும் செய்தான் விட்டலராயன். பிரார்த்தனைகளை அவனும் செய்தான். ராணி சாந்தலையும் செய்தாள். ஆயினும் பலனேதும் இல்லை.

விட்டலராயனுக்கு சற்று அலுப்பாகக் கூட இருந்தது.

"ஆயிரம் தான் வென்றால் என்ன? வீட்டில் இருப்பவளுக்கு விடிவில்லாத வரையில்?" என்று தான் நினைத்தான் மன்னன்.

மகளைத் தொண்டனூருக்கு அனுப்பி வைக்கலாம் என்று செய்திருந்த அவன் என்ன காரணத்தாலோ அவ்வாறு செய்ய வில்லை.

துவார சமுத்திரத்திலேயே ஓர் மாளிகை கட்டி சுதர்சன ஹோமத்தை அந்தணர்களை விட்டுச் செய்யச் சொல்லி அங்கே மகளை குடியமர்த்தினான்.

அது முதற்கொண்டு மகள் அரை மயக்கத்திலேயே இருந்தாளே தவிர குணமடையவில்லை.

இந்த நிலயில் ராஜ்ய சூத்ர தாரியும் பெரும் ஜோதிடருமான ரங்கநாதரை வரவழைத்து மகள் விஷயமாக விவரித்தான்.

அவர் சாட்சாத் அரங்கநாதனை வேண்டி ஒருநாள் உபவாசம் இருந்து விட்டு கர்நாடக நாட்டின் வரைபடத்தை தரையில் எழுதினார்.

தனது கைகளில் இருந்த சோழிகளை மன்னனிடம் காட்டி "இவை ஒருவேளை தங்கள் மகளின் விடிவிற்கு வழிகாட்டலாம்" என்றார்.

சோழிகளை வரைபடத்தில் உருட்டினார்.

வெள்ளை நிறச் சோழி ஓரிடத்தில் போய் நின்றது.

இரண்டாவது முறை உருட்டினார்.

மீண்டும் வெள்ளைச் சோழி அதே இடத்தில் போய் நின்றது.

மூன்றாவது முறையாக உருட்டினார்.

அப்போதும் வெள்ளைச் சோழி அதே இடத்தில் போய் நின்றது.

"மகாராஜா! தங்கள் மகளின் பிரச்சனை எங்கே தீரும் என்று கேட்டுச் சோழியை உருட்டினேன். மூன்று முறையும் சோழி ஒரே இடத்தில் போய் நின்றது. இது மிகவும் அபூர்வம். பெரும்பாலும் இரண்டு முறைதான் அப்படி நிற்கும். ஆகவே இந்தச் சோழி ஆருடம் நிச்சயமாகப் பலிக்கும் என்றே தோன்றுகிறது. சோழி நின்ற இடம் எது தெரியுமா?"

"எது ரங்கநாதரே?"

"மேல்கோட்டை" என்றார் ராஜ சூத்ர தாரி.





ஒரே கருத்து ஊழிக்காலத்திலிருந்து உலகம் அழியும் காலம் வரை நிலவ முடியாது. காலத்திற்கு ஏற்பவும் வாழும் மக்களுக்கு ஏற்பவும் அது மாற்றமடைந்து கொண்டே இருக்கும் – விட்டலராயன்




ராஜ சூத்ர தாரி ரங்கநாதர் வெளியேறிய நிலையில் உள்ளே பிரவேசித்தார் சரவண பெலாகுலாவின் சமணத் தலைவரான நீலகேசி.

அவரது வரவு அங்கிருந்த ஒருவருக்கும் பிடிக்கவில்லைதான்.

அதே சமயம் மன்னன் விட்டலராயன் தனக்குள்ளே இருந்த வெறுப்புணர்வுகளை அடக்கிக் கொண்டு "வாருங்கள் அடிகளே!" என்று கூறி வரவேற்றான்.

அடிகள் சோர்வாக இருந்தார் இரவெல்லாம் பயணம் செய்ததால்.

"சோர்வாக இருக்கிறீர்களே சுவாமி! இரவில் பயணம் செய்தீர்களா? அப்படியென்ன அவசரம்? தாங்கள் துறவின் மூலம் ஏற்கனவே உடம்பை அழித்துக் கொண்டிருக்கிறீர்கள். அது போதாதா? சிரமபரிகாரம் செய்து கொண்டீர்களா? இல்லையென்றால் ஏற்பாடு செய்கிறேன். சற்று ஓய்வு எடுத்துக் கொண்டு பேசலாம் அல்லவா?" என்று வினவினான்.

அவனது சொற்கள் இதமாக இருந்தாலும் அவரது சோகம் பெரிதாக இருந்ததால் சொற்களால் சுகமடையாமல் "இனிமேல் இத்தகைய சோர்வு எனக்கு வராது மகாராஜா. ஏனென்றால் இதுவே எனது கடைசி பயணமாக இருக்கும். கடைசி சந்திப்பாகவும் இருக்கலாம்" என்றார்.

"ஏன் இத்தனை விரக்தி உங்களுக்கு? என்ன நடந்து விட்டது என்று இப்படிப் பேசுகிறீர்கள்?" என்று கேட்டான் மன்னன்.

"எதைச் சொல்வது மகாராஜா? தங்கள் போக்கைப் புரிந்து கொண்டு, தங்கள் எண்ண அலைகளைத் தெரிந்து கொண்டு நெஞ்சமெல்லாம் புண்களால் நிரம்பி அவற்றை ஆற்ற முடியாமல் தன்னையே தூற்றிக் கொண்டு சல்லேகனையில் இறங்கி விட்டார் ஜெயதேவர். விரைவிலேயே அவர் நிர்வாணமடைந்தச் செய்தி

தங்களுக்கு வந்து சேரும். விருப்பமிருந்தால் பூதவுடலைக் காண வாருங்கள்" என்றார் நீலகேசி.

"அடிகளே! தங்கள் சோர்வு வேண்டுமானால் புரியக் கூடியதாக இருக்கலாம். ஆனால் உங்கள் கவலையைப் புரிந்து கொள்ள முடியவில்லை. அதோடு ஜெயதேவர் சல்லேகனையில் அமரும் அளவிற்கு நான் செய்த தவறு என்ன என்பது தான் புரியவில்லை" என்றான் மன்னன்.

"மகாராஜா! நீங்கள் சரவணபெலகுலாவில் கூட பன்னிரண் டாண்டிற்கு ஒரு முறை நடைபெறும் மகாபிஷேகத்திற்கு ஏன் வரவில்லை. மன்னர்கள் முன்னிலையில்தான் மகாபிஷேகம் நடப்பது வழக்கம்.12 ஆண்டுகளுக்கு ஒருமுறை நடைபெறுவதால் ஒருமுறை வந்த மகாராஜா அடுத்த முறை வரமாட்டார். ஏனென்றால் 12 ஆண்டுகளுக்குள் மகாராஜாக்கள் மாறி விடுவார்கள். அந்த வகையில் இந்த மகாபிஷேகம் விசேஷமானது. அதோடு நீங்கள் சமணர். சமண மன்னராக இருந்து கொண்டு மகாபிஷேகத்தை நடத்தி வைக்க நீங்களே வரவில்லை என்றால் விழா எப்படிச் சிறப்பு பெறும்? மக்கள் என்ன நினைப்பார்கள். சமணர்களின் மகோன்னதமான இந்த அரிய விழாவுக்கு நீங்கள் வரவில்லையென்றால் வேறு யார் வருவார்கள்? தங்களால் வர இயலாதென்றால் சமண மகாதேவியாரான ராணியாரை அனுப்பியிருக்கலாம். அதுவும் இயலாதென்றால் இளவரசரையாவது அனுப்பியிருக்கலாம். நீங்கள் இந்த விழாவைப் பொருட்படுத்தவே இல்லை. உதாசீனப் படுத்தி விட்டீர்கள். சமண பெரு மக்களை அவமதித்து விட்டீர்கள் என்பது தான் ஜெயதேவரின் வேதனை" என்றார் நீலகேசி.

"மகாபிஷேகம் என்றைக்கு நடந்தது?" - கேட்டான் மன்னன்.

"நேற்று?"

"எனக்கு அழைப்பு விடுத்தீர்களா?"

"வந்து.... அதாவது..."

"அழைப்பு விடுத்தீர்கள். இப்போது அல்ல. நான்கு ஆண்டுகளுக்கு முன்பாக நினைவிருக்கிறது."

"ஆம். ஆம். நினைவிருக்கிறது. நான் தான் சொன்னேன்."

"இதுதான் நீங்கள் மன்னனுக்குக் காட்டும் மரியாதையா? நான்காண்டுகளுக்கு முன்னால் அழைத்து விட்டு விழாவுக்கு நான் வரவில்லை என்கிறீர்களே, யாரிடம் இருக்கிறது தவறு? சமண மன்னனைப் புறக்கணித்து விட்டு இன்றைக்குச் சமண மன்னன் சமணத்திற்கு அவமானமிழைத்து விட்டதாகச் சொல்கிறீர்களே!

இதுதான் சமண வாதமா? இதற்கா சல்லேகனை? விளங்கவில்லை அடிகளே!"

"ஆகா! ஜெயதேவர் தங்களை அழைத்திருப்பார் என்று நினைத்து விட்டேன்."

"ஜெயதேவர் நீங்கள் அழைத்திருப்பதாக நினைத்திருப்பார்."

"தவறு எங்கள் மீது தான் அடிகளே. ஜெயதேவரிடம் இதை அவசியம் தெரிவிக்கிறேன்" என்று சொன்ன அடிகள் "இந்த விஷயத்தில் தவறு எங்கள் மீது தான் என்றாலும் இதர விஷயங்களில் அப்படியில்லை" என்றார் அடிகள்.

"அதென்ன இதர விஷயங்கள்?"

"தாங்கள் சமணர். தங்கள் அரசாங்கம் சமணர் அரசாங்கம். தங்கள் ஆட்சி சமணர் ஆட்சி. ஆக வேதங்கள் நிர்வாகமும் சமண நிர்வாகமாக இருந்தது. அதுவே சரி. அதுவே முறை. ஆனால் சமீபகாலமாக நிர்வாகத்தில் இருந்த சமணர்களை நீக்கி விட்டுப் புதியவர்களை நியமித்திருக்கிறீர்கள். அதுவும் பஞ்சப் பிரதானிகளில் முக்கியமாக ராஜ சூத்ர தாரியாகப் பதவி வகித்த ஆனந்த நாதரை நீக்கி விட்டு ரங்கநாதரை நியமித்திருக்கிறீர்கள். ஆனந்த நாதர் அறிவில் ஆதவன்.

நிர்வாகத்தில் நிபுணர். அறிவுரையில் அகஸ்தியர். ஆலோசனையில் பிரகஸ்பதி. அவர் நிர்வாகத்தில் இருந்த விதம் ஒளிமயமாக இருந்தது. அவரிடம் குறை சொல்வதற்கு ஒருவரும் முன்வர மாட்டார்கள். அவர்மீது குறை சொன்னால் கதிரவன் கொதிப்பான். கறை இருப்பதாகக் கருதப்பட்டால் கங்கையே கலங்குவாள். காற்று வீச மறுத்து நிற்கும். கடலில் அலை இருக்காது. உடலில் உயிர் இருக்காது. எங்கும் சமணம். எதிலும் சமணம் என்பது நமது கொள்கை. அந்தக் கொள்கையே சமணத்தை வாழ்விக்கும். சிறப்பிக்கும். தங்களது செய்கை சமணத்திற்கு விரோதமானது என்கிறார் ஜெயதேவர். அது சரிதானே?" என்று கேட்டார் நீலகேசி.

"எங்கும் சமணம் என்பது சமணத் துறவியரது கனவாக இருக்கலாம். எதிலும் சமணம் என்பது நிர்வாகத்திற்கு உகந்தது அல்ல. எனது ராஜ்யத்தில் அனைவருமே சமணர்கள் என்றாலும் கூட நிர்வாகத்தை நான் சமணர்களால் நிரப்ப மாட்டேன். மத நிர்வாகம் வேறு. ஆட்சி நிர்வாகம் வேறு. அங்கே பலதரப் பட்டவர்கள் இருந்தால் தான் பல்வேறு விஷயங்களையும் அறிய முடியும். குறைகளைக் களைய முடியும். நான் சமணனே தவிர எனது ராஜ்யம் சமண ராஜ்யம் அல்ல" என்றான் மன்னன்.

“தாங்கள் பேசுவது வினோதமாக இருக்கிறது. இத்தனை வருடங்களாகச் சமணர்கள் தானே நிர்வாகத்தில் இருந்தார்கள்?”

“உண்மை. அப்போது எங்கள் அரசு சிற்றரசாக இருந்தது. வேலாபுரமும் துவாரசமுத்திரமும் மட்டும் தான் எங்களிடம் இருந்தது. தற்போதைய நிலை அதுவல்ல. குருநாதரின் விருப்பத்தை மீறி - பஞ்சப் பிரதானிகளின் அறிவுரைகளை மீறி படையெடுத்தேன். இரண்டு நாடுகள் மட்டுமே இருந்த நிலைமாறி இருபது நாடுகள் எங்கள் ஆதிக்கத்திற்கு வந்து சிற்றரசனாக பேரரசானது. சிற்றரசு பேரரசாகும் போது சிற்றறிவு மாறாமல் இருக்க வேண்டியதில்லை. பேரரசுக்கு ஏற்ப அறிவும் விரிய வேண்டும். விசாலப்பட வேண்டும். தற்போது ஹொய்சளப் பேரரசில் சமணர்களின் எண்ணிக்கை என்பது பத்தில் ஒரு பாகம் கூட இல்லை. அப்படியிருக்கும் போது நிர்வாகத்தில் சமணர்களே நிரம்பி வழிய முடியாது. ஒரு விஷயத்தை தாங்கள் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும். எனது ஆட்சியில் சமணர்கள் இருக்கிறார்கள். சமண மதம் இருக்கிறார்கள். ஆனால் இந்த ஆட்சி சமணர்களுக்கான ஆட்சியல்ல.”

“இப்படியொரு கருத்தை இதற்கு முன்பு நாங்கள் கூறியதில்லை.”

“ஒரே கருத்து ஊழிக்காலத்திலிருந்து உலகம் அழியும் காலம் வரை நிலவ முடியாது. காலத்திற்கு ஏற்பவும் வாழும் மக்களுக்கு ஏற்பவும் அது மாற்றமடைந்து கொண்டே இருக்கும். அது இயல்பு.”

“சமணரது கருத்துக்கள் ஒன்றாகத் தான் இருக்கிறது மகாராஜா. அது மாறவே இல்லை.”

“இன்றைய நிலை அப்படி இருக்கலாம். எப்போதும் அப்படி இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை.”

“மகாராஜாவின் இந்தக் கருத்து துரதிஷ்டமானது.”

“ஏன்?”

“சமண மத வளர்ச்சிக்குத் தங்களையே பெரிதும் நம்பி யிருந்தோம். மதங்கள் வளர மன்னர்களே அத்தியாவசிய மானவர்கள். அவர் கைசைத்தால் மதம் உளரும். கையைசப்பதை நிறுத்தினால் மதம் தளறும்.”

“அப்படித்தான் பெரும்பாலானவர்கள் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அது தவறு என்பதை நீங்கள் கூட அறியவில்லை என்பது வியப்பாக இருக்கிறது. மன்னன் மதத்தை, வளர்க்க முடியாது. திணிக்க முயன்றால் தோற்றுப் போவான்.

"உண்மையில் சிறப்பான மதமானது வளர்வதற்கு அதன் கொள்கைதான் அடிப்படையே தவிர வேறு யாருமல்ல. சிறப்பான மதம் தானாகவே வளரும்."

"அப்படியானால் சமணமதத்தைப் பற்றி தங்கள் கருத்தென்ன? அது சிறப்பான மதமில்லையா?"

"ஆயிரத்து ஐநூறு வருடங்களுக்கு முன்னால் தோன்றிய மதம் சமண மதம். அதனோடு புத்த மதமும் தோன்றியது. ஆசீவக மதமும் தோன்றியது. இம்மூன்றில் இன்றைக்கும் தழைத்து நிற்பது சமண மதம் தானே? இதை மன்னர்களா வளர்த்தார்கள்?"

"மிக்க மகிழ்ச்சி மகாராஜா. உங்கள் கருத்து மாற்றத்தை ஜெயதேவருக்குத் தெரிவிக்கிறேன். ஆனந்த நாதரை ராஜ சூத்ரதாரி பதவியிலிருந்து விலக்கியதற்கு காரணம் என்ன என்பதை நாம் அறியலாமா?"

"ஆனந்த நாதர் மட்டுமல்ல. நிர்வாகத்தில் இருந்த சமணர்கள் பலரையும் மாற்றியிருக்கிறோம். அதற்குக் காரணம் பலதரப் பட்டவரை நியமிக்க வேண்டும் என்பது தானே தவிர வேறல்ல."

"என்னையும் குருநாதரையும் எங்கள் பதவியிலிருந்து அகற்றி விடுவீர்களா?"

"அது எங்கள் ஆட்சி நிர்வாகத்தில் இருக்கும் பதவிகள் அல்ல. அது மதப் பதவிகள். துறவிகள் நிர்ணயம் செய்கிற பதவிகள்."

"மகாராஜா! எங்களை ஒரு விஷயத்தில் நன்றாக ஏமாற்றி நான்கு வருடங்களைக் கடத்தி விட்டீர்கள்? இது முறைதானா?"

"எதைக் குறிப்பிடுகிறீர்கள்?"

"வேலாபுரத்தில் கட்டி வரும் பெருமாள் கோயிலை இடிப்பதாகச் சொன்னீர்கள். இதுவரை இடிக்கவில்லை."

"சிற்பிகளைக் கேட்டேன். எந்த ஒரு ஆலயத்தையும் பாதியில் இடிப்பது பரிகாரமாகாது என்றும் முழுவதுமாகக் கட்டப்பட்ட பிறகு தான் இடிக்க வேண்டும் என்கிறார்கள்."

"இதை நான் நம்பவில்லை. ஜெயதேவரும் நம்பவில்லை."

"நம்பிக்கை விஷயத்தில் நான் கட்டாயப்படுத்த முடியாது அடிகளே!"

"மாந்தரீகர் சுடுகாட்டு வாசனை சிறையிலிருந்து விடுவிப்பதாகச் சொன்னீர்கள். விடுவிக்கவில்லை."

"நாளைக்கு விடுவித்து விடுகிறேன்."

"நன்றி மகாராஜா" என்று சொன்ன அவர் "மகாராஜா! மேல் கோட்டை எங்கே இருக்கிறது?" என்று கேட்டார்.

மன்னன் தளபதிகளைப் பார்த்தான்.

தளபதிகள் மன்னனைப் பார்த்தார்கள்.

மன்னன் தளபதிகளைப் பார்த்து "மேல்கோட்டை எங்கே இருக்கிறது?" என்று கேட்டான்.

கொஞ்ச நேரத்திற்கு முன் ராஜசூத்ர தாரியான ரங்கநாதர் மன்னனின் மகள் குணமடைவதற்குக் காரணமாக அமையக் கூடிய இடம் மேல்கோட்டை என்பதை நினைவில் கொண்ட தளபதி கங்கராஜன் "மகாராஜா! மேற்குத் தொடர்ச்சி மலையில் இங்கிருந்து நானூறு காததூரத்தில் வட மேற்கே இருப்பது தான் மேலைக் கோட்டை என்றும் மேற்குக் கோட்டை. அது கட்டப்பட்ட காலத்திலிருந்து மக்களால் அங்கே குடியிருக்க முடியவில்லை. மலைப்பிராந்தியத்தில் இறந்து போன மனிதர்களும் விலங்குகளும் பேய்களாக மாறி அதில் வசிப்பதாகச் சொல்லப்படுகிறது. அங்கே மனிதர்கள் அறவே செல்வதில்லை. விவரம் தெரியாமல் செல்லும் விலங்குகள் எலும்புக் கூடுகளாகி விடுகின்றன. ஒரு சமயம் முனிவர் ஒருவர் மட்டும் அங்கே சென்றார். அவருக்கு எதுவும் நேரவில்லை. அவருக்கு அங்கிருக்கும் பேய்கள் ஏவல் புரிகின்றன. அந்தப் பேய்ப் படைகளை வைத்துக் கொண்டு முனிவர் பல அமானுஷ்ய காரியங்களைச் செய்து வருகிறார் என்றான்.

"கேட்டுக் கொண்டீர்களா அடிகளே! இது தான் மேல் கோட்டையைப் பற்றிய விவரம்" என்றான் மன்னன்.

அடிகள் விடைபெற்றுக் கொண்டார்.

துவாரசமுத்திரத்தில் இருந்த சமண விஹாரத்திற்குச் சென்றார். அங்கிருந்தத் துறவிகள் அவரை வரவேற்று உபசரித்தார்கள்.

நாளை வரை அங்கே இருக்கப் போவதாக அறிவித்ததால் அவரது உபன்யாசத்திற்கு அன்று மாலை ஏற்பாடு செய்ய விஹாரத்து நிர்வாகிகள் ஈடுபட்டார்கள்.

நீலகேசி தனக்கு நெருக்கமான துறவியொருவரிடம் "நீ போய் நாளைக்குச் சிறையிலிருந்து விடுதலையாகும் மாந்தரீகனை இங்கே அழைத்து வா. விஷயம் யாருக்கும் தெரிய வேண்டாம்" என்றார்.

அவரது மனம் கொந்தளிப்பில் இருந்தது.

தனது வழியில் நடப்பதாகவும் அப்படி நடப்பதை பாக்கிய மாகவும் கருதி தன்னிடம் மரியாதை காட்டி வந்த மன்னன் தற்போது ஏறக்குறைய தன்னை எதிர்த்துப் பேசியதும், தனக்கே அறிவுரை கூறுவது போல நடந்து கொண்டதும் அவரை அவதிப்படுத்தியது.

மன்னன் அவரது கருத்துகளை மறுத்திருந்தாலும் உண்மையைத்தான் சொல்லியிருந்தான். அது அடிகளுக்கும் தெரிந்து தான் இருந்தது. ஆனால் அவன் அப்படிப் பேசுவான் என்று அவர் எதிர்பார்க்கவில்லை. அவ்வாறு அவன் பேசியது அவருக்குப் பின்னடைவு என்றே கருதினார்.

மதத்திற்கும் அரசியலுக்கும் சம்பந்தம் இருக்க வேண்டிய அவசியம் இல்லை. மதமானது தனது ஒப்பற்றத் துறவிகளாலும் மேன்மையான கொள்கைகளாலும் தானாகவே வளரும்.

ஆயினும் அரசியலையும் அரசாட்சியையும் சார்ந்திருக்கும் மதம் தான் விரைவில் மக்களிடம் செல்வாக்கை அடைகிறது. அரசியலின் பரிமாணங்கள் அதனுள் கலக்கும் போது தான் மதத்தின் பரிமாணமும் பெரிதாகிறது. மன்னனால் கவனிக்கப் படும் மதம் வளர்கிறது. மன்னனால் கைவிடப் படும் மதம் கைம் பெண்ணைப் போல ஆகிவிடுகிறது.

ஆகவே தான் சமணர்கள் நீண்டகாலமாக தங்கள் மதத்தினை வளர்க்க ஆட்சியாளர்களைச் சார்ந்திருந்தார்கள். அவர்கள் இவர்களுக்கு விழா எடுப்பதும் இவர்கள் அவர்களுக்கு விழா எடுப்பதுமாக இருதரப்பினரும் இணைபிரியாமல் இருந்தார்கள். துற்வியர்களுக்கு மன்னன் விளம்பர அடையாளமாக இருந்தான். மன்னர்களுக்குத் துறவிகள் ஆன்மீக அடையாளமாக இருந்தார்கள்.

ஹொய்சள மன்னர்களும் கர்நாடகச் சமண ஆச்சார்யர்களும் அப்படித்தான் இருந்தார்கள். மன்னர்களுக்கு அவர்கள் குரு நாதர்களாக இருந்தார்கள். நிர்வாகத்தில் சமணர்களையே நியமிக்கச் செய்தார்கள். அதன் காரணமாக அவர்களது விஹாரங்களுக்கு அரசாங்க நிதி பெருமளவு வந்து கொண்டிருந்தது. கர்நாடகத்தைப் பொறுத்த வரை சமணம் செழிப்பாக இருந்ததற்கு இதுதான் காரணம்.

சமணத் துறவிகள் எளிமையானவர்களாக இருந்தாலும் அவர்களது விஹாரங்களைப் பராமரிக்கவும், மேம்படுத்தவும், விழாக்களை நடத்தவும் நிதி தேவையாக இருந்தது. அதில் ஓரளவிற்குத்தான் அவர்களால் சம்பாதிக்க முடிந்தது.

பெரும்பாலும் அரசாங்க நிதிதான் அவர்களுக்குப் பேருதவியாக இருந்தது.

இந்த நீண்டநாள் நடைமுறை மன்னனின் பேச்சின் அடிப்படையில் பார்த்தால் தொடராது போய் விடுமோ என்ற அச்சம் நீலகேசிக்கு வந்தது.

ஆட்சி செய்யும் அரசாங்கத்தின் தொடர்பும் உதவியும் அகன்று விட்டால் சமணர்களின் நிலைமை கர்நாடகத்தில் மோசமாகி விடும் என்றும், சமணர்கள் நாடு பெயரும் நிலை உண்டாகி விடும் என்றும் கருதினார் அவர்.

உடனடியாக நிலைமையைச் சரி செய்யாவிட்டால் பிறகு எதுவும் செய்ய முடியாது என்று கருதிய அவர் யாரோடும் பேசாமல் நிஷ்டையில் அமர்ந்தார்.

அன்று மாலை விஹாரத்தின் முன் மண்டபத்தில் அவரது உபன்யாசம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்ததால் சற்று குழம்பிய மனநிலையிலேயே போனார் நீலகேசி.

மண்டபத்தில் வழக்கத்தை விட அதிகமான எண்ணிக்கையில் மக்களும் துறவிகளும் கூடியிருந்தார்கள்.

அவர்களைப் பார்த்து "நீங்களெல்லாம் சமணம் உயர வேண்டும் என்றும் வளர வேண்டும் என்றும் நினைக்கிறீர்களா? விரும்புகிறீர்களா?" என்று கேட்டார் நீலகேசி.

"ஆமாம். ஆமாம்" என்றார்கள் அங்கிருந்தவர்கள்.

"அதற்காக உங்களால் என்ன செய்ய முடியும் என்று கருதுகிறீர்கள்?" என்று கேட்டார் நீலகேசி.

யாரும் எதுவும் சொல்லவில்லை. மௌனமான இருந்தார்கள்.

"மௌனம் தான் நீங்கள் செய்யக் கூடிய உபகாரமா?" என்று கேட்டார் நீலகேசி.

கூட்டத்தில் சற்றே சலசலப்பு ஏற்பட்டது.

கைகளை உயர்த்தி சலசலப்பை அடக்கிய நீலகேசி "மௌனமானது துறவிகளின் வரம். வழிமுறை. விதி. ஆனால் உங்களுக்கெல்லாம் செயல்தான் வழிமுறை. ஊக்கமும் உழைப்பும்தான் விதிமுறை. ஆனால் மௌனம்தான் உங்கள் அடையாளம் என்பது போல இருக்கிறீர்கள். இந்த ஒப்புமையில்லாத சமணமதம் விரைவிலேயே விரைத்துப் போய்விட்டால் உயிர்ப்பிக்க உங்களால் என்ன செய்ய முடியும்?" என்று கேட்டார்.

“மகாராஜா இருக்கும் வரை எந்தக் குறைவும் வராது” என்றார்கள் மக்கள்.

உள்ளுக்குள் நொந்து கொண்ட நீலகேசி “நீங்கள் கூறுவது உண்மைதான். ஆனால் மகாராஜாவின் நிலை மாறும் பல மாற்றங்கள் வருவது இயற்கை. சிற்றரசராக இருந்த அவர் பேரரசராக ஆகி விட்டார்.

ஆட்சிப் பொறுப்பும் பெருத்து விட்டது. ஆட்சி பெருகும் போது மதங்கள் பேரிலான ஈடுபாடு சுருங்கும். அதுவும் இயற்கை. இது குறித்து நான் மகாராஜாவிடமும் பேசிவிட்டேன். அவர் ஆட்சி வேறு மதம் வேறு என்று சொல்கிறார்.

ஆட்சி தான் முதல் என்றும் மதம் இரண்டாவது என்றும் கூறுகிறார். சமணம் தன் கால்களில் தான் நிற்க வேண்டும் என்றும் அரசாங்கத்தின் தோள்களில் அமரக் கூடாது என்று இயம்புகிறார்.

சமணம் யாருடைய நிழலையும் அண்டி வாழ வேண்டிய அவசியம் இல்லாத மதம் என்பதும் சமணத்தின் நிழலில் தான் பலரும் வாழ்கிறார்கள் என்பதும் உங்களுக்குத் தெரியாததல்ல. மகாராஜாவுக்கும் இது தெரிந்த விஷயம் தான். என்ன காரணத்தினாலோ தன் கருத்தை மாற்றிக் கொண்டிருக்கிறார். தன் அணுகுமுறைகளை மாற்றிக் கொண்டிருக்கிறார். தன் செயல்பாடுகளை மாற்றிக் கொண்டிருக்கிறார்.

அதற்கெல்லாம் அவருக்குப் பரிபூரண உரிமை உண்டு. அதிகாரம் உண்டு. ஆனால் நமது சமணத்தை அழிக்க அவருக்கோ அல்லது அவரது ஆட்சிக்கோ எள்முனையளவு கூட உரிமையில்லை. அதிகாரம் இல்லை. மதத்திலிருந்து அரசைப் பிரித்துக் கொண்டதால் நமது மதம் அழிந்து விடும் என்று கருதுகிறார்.

அரசும் ஆட்சியும் மேகங்களைப் போல. மாறி மாறி வரும். நம் சமணம் என்பது வானத்தைப் போன்றது. என்றும் இருப்பது. யாராலும் அழிக்க முடியாதது. வானமானது நம்மைப் போல எப்போதும் மேலே இருக்கும்.

அரசுகளும் அரசர்களும் எப்போதும் மண்ணைப் போல கீழே தான் இருக்கும். அந்த மண்ணைக் கூடச் சமுத்திரங்கள் விழுங்கும். அழிக்கும். வானத்தை அழிக்க வல்லார் யார்? உலகமே அழிந்தாலும் வானம் அழியாது.

அப்படித்தான் நமது சமணம். அதற்கு உயர்வுண்டு. தாழ்வில்லை. சிறப்புண்டு. சிதைவில்லை. மகாராஜாவின் கருத்துச் சிதைவு நம்

ஆச்சார்யர் ஜெயதேவரை மிகவும் பாதித்து விட்டது. கணக்கற்ற கஷ்டங்களையும் நஷ்டங்களையும் அவரால் தாங்க முடியும். தாங்கியிருக்கிறார். ஆனால் நேர்ந்த அவமானத்தை அவரால் தாங்க இயலவில்லை. அதுவும் நமது மதத்திற்கு ஏற்பட்ட அவமானம் தாங்காமல் அனலில் இட்ட மெழுகு போல் உருகி முடிவில் சல்லேகனையில் அமர்ந்து விட்டார்" என்று கூறிச் சற்றே நிறுத்தினார்.

"ஐயோ! அப்படியெல்லாம் ஜெயதேவர் தியாகம் செய்யக் கூடாது" என்று மக்கள் கூட்டத்திலிருந்து பலர் குரல் கொடுத்தனர்.

"உணர்ச்சி வசப்படாதீர்கள். உணர்ச்சி வசப்படாதீர்கள். உணர்ச்சி வசப்பட்டால் நிதானம் தவறி விடும்" என்று சொல்லி அமைதி படுத்திய நீலகேசி "ஜெயதேவர் புண்ணியாத்மா. அவருக்கு ஒரு கெடுதலும் நடக்காது. அவர் தன் உயிரை விட்டுவிடும் அளவிற்கு வர்த்தமான மகாவீரர் அனுமதிக்க மாட்டார். மாமுனிவர் பாகுபலியும் விட்டு விட மாட்டார். அவர்களை மீறி மகாராஜாவோ அவரது நிர்வாகமோ, படைகளோ எதுவும் செய்ய முடியாது.

நான் இதுவரை தெரிவித்த செய்திகளெல்லாம் நீங்கள் மகாராஜாவின் பேரில் கோபமடைந்து ஆர்ப்பாட்டமோ வன்முறையோ செய்ய வேண்டும் என்பதற்காக அல்ல. நம்மை நாமே காத்துக் கொள்ள இயலும். ஆலமரத்திற்குப் பிறர் உதவி தேவையல்ல. அதன் விழுதுகளே அதைக் காப்பாற்றும்.

அதுபோல நம் மதம் நம்மைக் காப்பாற்றும். நீங்கள் எல்லோரும் இனி அரசாங்கத்தை நம்ப வேண்டாம். ஒவ்வொருவரும் தினமும் ஒரு காசு எடுத்து பானையில் போடத் தொடங்குங்கள். அதுதான் இனி சமணர் நிதி. சிறு துளி தான் பெருவெள்ளமாகும். செய்வீர்களா?" என்று கேட்டார்.

"கேட்போம். கேட்போம்" என்றார்கள் மக்கள்.

சிலர் அப்போதே அவருக்கு முன்னால் உவந்து வந்தது நாணயங்களைக் கொட்டினார்கள்.

"ஆகா! உங்கள் எல்லோரது பேரன்பை உணராமல் அரசர் என்றும் ஆட்சியென்றும் பெரிதாக நினைத்திருந்து விட்டோமே! எத்தனை மடமை? இனி நமக்குப் பயமில்லை. சமணம் சிறப்பாக வளரும். நாமே நமக்கென்று மகாவீரர் வர்த்தமானருக்கும் ஆதிதேவருக்கும் வானளாவிய விகாரத்தைப் படைப்போம்.

நாணயங்களை மிச்சப் படுத்திச் சேமியுங்கள். உங்களுக்கு என் ஆசிகள். இன்று உபன்யாசம் செய்ய முடியாமல் போய் விட்டது. அடுத்தவாரம் வருவேன். அவசியமாக உபன்யாசத்தைச் செய்வேன்'' என்றார் நீலகேசி.

இருள் சூழ ஆரம்பித்தது.

மக்கள் கலைந்தார்கள்.

விகாரத்துத் துறவிகள் மக்கள் அளித்த நாணயங்களை எண்ணி ஒரு காஷாயத்தில் வைத்துக் கட்டினார்கள்.

உள்ளே சென்றார்கள்.

நீலகேசி எழுந்தார்.

“சுவாமி'' என்ற குரல் கேட்டது.

“யாரது?'' என்றார் நீலகேசி.

“நான் தான் சுவாமி திங்களழகி'' என்றாள் அங்கே வந்தப் பெண்.





பரிகாரமில்லாத கஷ்டங்களை மறந்து விடுவது தான் ஒருவனுக்கு உகந்தது. பரிகாரம் இருக்கிறது என்று கருதிக் கொண்டால் அவனுக்கு அதைத் தேடுவதில் தான் வாழ்க்கை முழுவதும் கழியும் – நீலகேசி




"யாரம்மா நீ? எங்கே வந்தாய்?" என்று உண்மையிலேயே நினைவில்லாமல் கேட்டார் நீலகேசி.

"மறந்து விட்டீர்களா சுவாமி? நேற்றிரவு முரடனிடமிருந்து என்னைக் காப்பாற்றினீர்களே! அந்தப் பேதைப் பெண்ணான திங்களழகி நான் தான்" என்றாள் அவள்.

"ஆகா! நினைவிற்கு வந்து விட்டது. உன்னை சமண விஹாரத்தில் அல்லவா விட்டு விட்டு வந்தேன்? இங்கு எப்படி வந்தாய்? எதற்காக வந்தாய்?" என்று கேட்டார் நீலகேசி.

"சுவாமி! தங்களைப் போன்ற கருணைமான்கள் நிழலில் கொடுமை நிகழ்ந்து விட்டது."

"என்னம்மா சொல்கிறாய்?"

"எதிலிருந்து நீங்கள் என்னைக் காப்பாற்றினீர்களோ அது மதில் மீதிருந்து என் மீது குதித்து விட்டது சுவாமி."

"என்ன சொல்கிறாய்? அந்த முரடனைத்தான் நான் கொன்று விட்டேனே?"

"தங்களால் எல்லா அயோக்கியர்களையும் கொல்ல முடியுமா சுவாமி?"

"பீடிகை போடாமல் விஷயத்தைச் சொல்."

"பாதுகாப்பாக என்னைச் சேர்த்த விஹாரத்தில் நான் விகாரப்பட்டு விட்டேன் அடிகளே. எந்த மனித மிருகமோ என்னைச் சிதைத்து விட்டது சுவாமி."

"நன்றாக நினைவு படுத்திக் கொண்டு பேசு. உன்னை நான் சேர்த்தது சமண விஹாரம். அங்கேயா அவலம் நடந்தது? ஒருபோதும் நடக்காது. அது ஆலயமே தவிர கொடியவர்களின் கூடாரமல்ல."

"அப்படியானால் அந்த விஹாரம் விகாரமாகி விட்டது தங்களுக்கே தெரியாது என்று தான் தோன்றுகிறது."

“நீ பிதற்றுகிறாய் பெண்ணே. சமண விஹாரம் என்றைக்கும் சரச விஹாரமாக இருக்காது. நீ எங்கேயோ ஏமாந்து விட்டுப் பழியை விஹாரத்தின் மீது போடுகிறாய். அங்கே உள்ளத் துறவிகளைப் பற்றி எனக்குத் தெரியும். அவர்கள் தங்களை மறந்தும் இத்தகைய குற்றங்களைப் புரிய மாட்டார்கள்.”

“என்னைச் சிதைத்துப் போட்டது யாரென்று தெரிந்தால் சொல்லியிருக்க மாட்டேனா சுவாமி?”

“உனக்குத் தெரியாமலேயே விஷயம் நடந்து விட்டது என்கிறாயா?”

“ஆமாம் அடிகளே!”

“அது எப்படிச் சாத்தியம்?”

“நான் வணங்கும் மகாவீர தீர்த்தங்கரர் ஆணையாகச் சொல்கிறேன். நான் கூறியது உண்மை.”

“நீ கூறுவது உண்மையாகத்தான் இருக்க வேண்டும். அது சரி. எதற்காக அம்மா நீ இங்கே வந்தாய்?”

“நீங்கள் இங்கே இருப்பதாக அறிந்தேன். நியாயம் கேட்கவே வந்தேன்.”

“நியாயம் கேட்டு?”

“குற்றவாளியைத் தண்டிக்க வேண்டும்.”

“குற்றவாளியைத் தண்டித்து விட்டால் இழந்து விட்ட உன் தூய்மை உனக்கு மீண்டு விடுமா?”

“மீளாது சுவாமி. ஆனால் குற்றவாளி தண்டிக்கப்பட்டால் மனம் ஆறுதல் அடையும்.”

“நீ சொல்வது உண்மைதான். அதே சமயம் ஒன்றை நீ தெரிந்து கொள்ள வேண்டும் பெண்ணே. ஒரு குற்றவாளியைத் தண்டித்து விட்டால் குற்றங்கள் நின்று விடாது. குற்றவாளிகள் அழிந்து விட மாட்டார்கள்.”

“அனைத்து குற்றங்களை அழிக்கவும் அனைத்து குற்ற வாளிகளைத் தண்டிக்கவும் இறை சக்தியைத் தவிர வேறு எந்த சக்தியாலும் முடியாது சுவாமி. என்னை வஞ்சித்தவனை தண்டிப்பது முடியுமல்லவா?”

“நான் விசாரிக்கிறேன் பெண்ணே. விசாரணை நடத்துகிறேன். குற்றவாளி யாராக இருந்தாலும் தண்டிக்கிறேன். உன்னைக் கெடுக்க முயன்றவனையே கொன்றவன் நான். அப்படி இருக்கும் போது உன்னைக் கெடுத்தவனை எளிதில் விட மாட்டேன். கவலைப் படாதே.”

அவள் பதில் பேச முடியாமல் தயங்கி நின்றாள்.

"என்னம்மா? என்ன தயக்கம்? ஏன் நிற்கிறாய்?" என்று பரிவோடு கேட்டார் நீலகேசி.

"குற்றவாளி தண்டிக்கும் வரை எனக்கு உறக்கமே வராது போலிருக்கிறது சுவாமி" என்றாள் திங்களழகி.

லேசாகச் சிரித்த அவர் "குற்றவாளியை கையில் வைத்துக் கொண்டு தண்டிப்பதற்கா நான் தயங்கிக் கொண்டிருக்கிறேன்? அவனைக் கண்டு பிடிக்க வேண்டாமா பெண்ணே? இங்கே இருந்த படி இவன் தான் குற்றவாளி என்று சொல்லக் கூடிய சக்தி எனக்கு இருக்கிறதா சொல்" என்றார்.

அவரே பேசமுற்பட்டு "சகிப்புத் தன்மை எல்லோருக்கும் வேண்டும். அதிலும் சமணர்களுக்குக் கண்டிப்பாக இருக்க வேண்டும். உனக்கு நடந்திருப்பது பெரும் அநீதி என்றாலும் அதற்குப் பொறுப்பானவனைக் கண்டு பிடிக்கும் வரை பொறுமை என்னும் சகிப்புத் தன்மையை நீ கடைப்பிடித்தே ஆக வேண்டும். என் மீது நம்பிக்கை வை. நான் துவார சமுத்திரத்தை விட்டு இரண்டு நாட்களில் புறப்படுவேன். புறப்பட்டதும் சம்பந்தப்பட்ட விகாரத்திற்குச் செல்வேன். விசாரணை செய்து குற்றவாளியைக் கண்டு பிடிப்பேன். உனக்கு முன்பாகவே தண்டிப்பேன். போதுமா?" என்றார்.

"என் வாழ்க்கை இருண்டு விட்டதே சுவாமி?"

"சமண மதத்தில் பெண்கள் வாழ்க்கையே ஒரு இருள் தான். அதுபற்றி நேற்றே உனக்குச் சொன்னேன். அந்த இருளிலும் ஒரு அவலம் நேர்ந்து விட்டது உனக்கு. மனதை ஆற்றிக் கொள் மகளே. சில நஷ்டங்களுக்குப் பரிகாரங்கள் இல்லை என்பது தான் இன்றைய நிலை. அதே சமயம் உனது அவலத்தை நீ நினைத்துக் கொண்டே இருந்தால் அது பரிகாரமற்ற நஷ்டமாகவே இருக்கும். மறந்து விட்டால் எதுவுமே இல்லை. இந்தச் சம்பவத்தைக் கூட நீ என்னிடம் சொல்லவில்லை என்றால் எனக்குத் தெரியப் போவதில்லை. நீ அமைதியாக இருந்து விட்டால் உலகத்திற்குத் தெரியப் போவதில்லை. நீ எந்த வழியைக் கடைப்பிடிக்கப் போகிறாய்?"

"என்னால் இதைச் சகித்துக் கொள்ள முடியவில்லை சுவாமி."

"பரிகாரமில்லாத கஷ்டங்களை மறந்து விடுவது தான் ஒருவனுக்கு உகந்தது. பரிகாரம் இருக்கிறது என்று கருதினால் அவனுக்கு அதைத் தேடுவதில் தான் வாழ்க்கை கழியும். இனி உன் விருப்பம்" என்று சொன்ன நீலகேசி "இப்போது எங்கே

செல்வாய்? உனக்குத் தெரிந்தவர்கள் யாராவது இருந்தால் சொல். அங்கே கொண்டு போய் விட்டு விடச் சொல்கிறேன்" என்றார் நீலகேசி.

"எனக்கு ஒருவரையும் தெரியாது சுவாமி. உங்களைத்தான் தெரியும். நீங்கள் தான் எனக்கு தெய்வம்."

"இல்லையம்மா. நான் அவ்வளவு பெரியவன் அல்ல. உன்னை இந்த விஹாரத்தில் தங்க சொல்லலாம். ஆனால் உனது கசப்பான அனுபவம் விஹாரத்தில் ஏற்பட்டதை நீ சொல்வதால் உன்னை இங்கே தங்கவைப்பது உசிதமல்ல. நீயும் விரும்ப மாட்டாய். ஆகவே இந்த ஊரில் உள்ள பிரபலமான தர்மசாலாவில் உன்னைக் கொண்டு போய் விடச் சொல்கிறேன். காலையில் எழுந்து தர்மஸ்தாலாவிலிருந்து சரணவ பெலகுலாவிற்குச் செல்லும் மாட்டு வண்டிகளில் ஏறி உன் இருப்பிடத்திற்குச் செல்.

அதுவே உனக்கு உகந்த இடம். ஏதோ பெருமாள் கோயிலில் தினமும் தீபமிடுவதாகச் சொன்னாயே, அதையெல்லாம் கொஞ்ச காலத்திற்கு நிறுத்து. உன்னைச் சீரழித்தவனைக் கண்டு பிடித்து தண்டித்தபின் அந்தக் கோயிலுக்கு அருகிலேயே ஒரு குடில் அமைத்துத் தருகிறேன். நீண்ட தூரத்திற்குத் தனியாக அலைய வேண்டாம்" என்று சொன்ன நீலகேசி துறவிகளை அழைத்து "இவளுக்கு சில துணிமணிகளையும் கைசெலவுக்குக் காசுகளையும் கொடுங்கள். ராஜவீதியில் இருக்கும் தர்மஸ்தாலாவில் சேர்த்து இரவு தங்குவதற்கு ஏற்பாடு செய்யுங்கள்" என்றார்.

திங்களழகி அவரது கால்களில் விழுந்து வணங்கினாள்.



மறுநாள் சிறையிலிருந்து மாந்தரீகன் சுடுகாட்டு வாசன் விடுதலையாவான் என்பதால் அவன் வரவுக்காகக் காத்திருந்தார் நீலகேசி.

ஆனால் துறவி ஒருவர் அவரிடம் "அடிகளே! அந்த மாந்தரீகர் இருப்பது வேலாபுரம் சிறையில் அல்லவா?" என்று கேட்டார்.

"வேலாபுரத்தில்தான் இருந்தார். தலைநகரம் இங்கு மாறிவிட்ட பிறகு இங்கே வந்து விட்டார்" என்று சொன்ன துறவி "நீ சிறைச் சாலைக்குச் செல். அங்கே மாந்தரீகனை வரவேற்க நமது துறவி காத்திருப்பார். மாந்தரீகரை இங்கே அழைத்து வர வேண்டாம் என்றும் இந்த ஊரின் எல்லைப்புறச் சுடுகாட்டிற்கு அழைத்து வரச் சொல்" என்றார்.

சிறிது நேரத்தில் அவரும் துவார சமுத்திரத்தின் எல்லைப் புறச் சுடுகாட்டிற்குச் சென்றார்.

பகல் பொழுதாக இருந்தாலும் மாரிக் காலத்து மழை மேகங்கள் திரண்டு கொண்டிருந்ததால் பகல் நேரம் இருண்டு கிடந்தது.

அச்சுடுகாட்டில் சற்று முன் சிதையில் வைத்து எரிக்கப் பட்டதால் அதிலிருந்து எழும்பிய பெரும் தீச்சுவாலை கருமேகத்தைக் கிழிக்கப் புறப்பட்டது போல் இருந்தது. அந்த மெய்ச் சிலிர்க்கும் படியான காட்சியைக் கண்டபடி காட்டிற்குள் பிரவேசித்தார் நீலகேசி.

அவரைப் பார்த்து நாயொன்று பக்கத்திலிருந்தபடி குரைத்தது.

சடாரென்று குனிந்து அதன் கால்களைப் பற்றி இமைக்கும் நேரத்தில் சிதைத் தீயில் எரிந்தார் நீலகேசி. அந்த நாய் தீயில் விழுந்து உள்ளே அழுந்தி விட்டதால் வெளியேற முடியாமல் நெருப்புக்கு இரையாகியது.

சரியாகத் தண்டித்து விட்டதாக நினைத்த நீலகேசி தீயைப் பார்த்து ஏதோ சொன்னார்.

சிதைக்குப் பக்கத்தில் இருந்து ஊளையிட முயன்ற இரண்டு நரிகள் நீலகேசியின் பயங்கரச் செயலைக் கண்டதும் அதிர்ந்து போய் ஊளையிடும் எண்ணத்தைக் கைவிட்டு விட்டு வாயை மூடிக் கொண்டு அங்கிருந்து வெளியேறின.

இப்படி நாயும் நரியும் அவரைக் கண்டு அஞ்சியோடியதைக் கண்ட சுடுகாட்டுப் பேய்கள் பல அவரை வியப்புடன் பார்த்தன.

காட்டில் முளைத்து நீரைச் சந்திக்காமல் நெருப்பையும் புகையையும் மட்டுமே சந்தித்து காய்ந்து போன விளாமரமானது "எல்லோரது முடிவும் இப்படித்தான். இந்த நிலைதான்" என்று கூறுவது போல் இருந்தது.

பிணந்தின்னிக் கழுகுகள் நான்கு தங்களுக்குக் கிடைக்க விடாமல் பிணத்தை எரித்துச் சாம்பலாக்கிய மனிதர்களின் மீது சாபம் விடுவது போல் குரல் கொடுத்து விட்டு காய்ந்து போன விளாமரக்கிளைகளில் அமர்ந்திருந்த காட்சி பயங்கரமாக இருந்தது.

பிணத்தின் தீ மட்டும் இல்லாதிருந்தால் அங்கே எதையும் காண முடியாது.

அதை உணர்ந்த நீலகேசி தீச்சுவாலையை விட்டு சற்றே தூரத்தில் இருந்து ஈமக் கிரியைகள் செய்யும் மண்டபத்திற்குச் சென்றார். அங்கே தீயின் வெளிச்சம் அவ்வளவாகப் பரவியிருக்க வில்லை.

கார்மேகங்கள் மேற்கொண்டும் கனத்தைச் சுமக்க முடியாமல் உடைந்ததால் இடியும் மின்னலும் உண்டாகி மழை கொட்டியது.

மண்டபத்திற்குள் சென்றார் நீலகேசி. அது உட்காரக் கூடிய இடமாக இல்லை. உடைந்து போன பானை ஓடுகளும் எலும்புகளும் சிதறிக் கிடந்தன. முடை நாற்றம் வீசியது. மழையில் தலைகாட்ட முடியாததால் துர்நாற்றத்தைச் சகித்துக் கொண்டு மண்டபத்தில் நின்றார் நீலகேசி.

பெருமழை கொட்டியதால் தீச்சுவாலை அடங்கியது. அணைந்தது. பெரும் புகை அப்பிராந்தியத்தைச் சூழ்ந்தது.

மழையும், புகையும், துர்நாற்றமும் வயிற்றைக் குமட்டியது. இடமோ சுடுகாடு. அதுவும் தனிமை. நீலகேசியைத் தவிர வேறு யாரும் அந்த பயங்கரமானச் சூழ்நிலையில் அங்கே இருக்கத் துணிய மாட்டார்கள். அவரே கூட சாதாரண நிலையாக இருந்திருந்தால் அங்கே வந்திருக்க மாட்டார்.

சந்தர்ப்பம் அவரை வரவழைத்திருந்தது. சமணமும் சமணர்களும் கர்நாடகத்தை விட்டு வெளியேறி விடுமோ என்ற வேதனை அவரை அங்கே அழைத்து வந்திருந்தது.

மழை அதிகமாயிற்று. அதனால் புகை அழிந்தது. மண்டபத்தில் அடித்த சாரல் துர்நாற்றத்தை அகற்றியது. எலும்புகளும் பானையோடுகளும் தண்ணீரில் அடித்துச் செல்லப்பட்டதால் மண்டபம் சுத்தமானது. பொறுமையோடு இருந்தால் நல்லது நடக்கும் என்று சொல்வது போல அமைந்தது மாற்றம்.

மழை அதிகரித்ததால் சுடுகாடு சேற்றுக் காடாகியது. ஆங்காங்கே குவிந்து கிடந்த சாம்பல் மழை நீரில் கரைந்து காடு முழுவதும் பரவிச் சாம்பல் சேற்றை உண்டாக்கியது.

எரிந்து கொண்டிருந்தச் சிதை அணைந்து விட்டதாலும் அதிலிருந்த கட்டைகளும் குப்பைகளும் கலைந்து விட்டதாலும் எரிந்தும் எரியாமலும் விடப்பட்ட பிணத்தை நான்கு கழுகுகளும் மழையைப் பொருட்படுத்தாமல் கொத்தத் தொடங்கின. நிலைமை மாறி விட்டதை அறிந்து கொண்ட நரிகள் ஆறு அங்கே ஓடி வந்து தங்கள் வேட்டையை ஆரம்பித்தன.

இருட்டில் நடந்து கொண்டிருந்த கோரங்களை அறிய முடியாமலும், அறிய விரும்பாமலும், அறிய வேண்டிய அவசியம் இல்லாததாலும் மண்டபத்தில் நனைந்த உடம்புடன் சிலை போல் நின்றிருந்தார் நீலகேசி.

மாந்தரீகனை விஹாரத்திற்கே வரவழைத்திருக்கலாமோ என்று தோன்றியது அவருக்கு.

அதோடு கொட்டும் மழையில் மாந்தரீகன் சுடுகாட்டிற்கு வருவானோ என்றச் சந்தேகமும் எழுந்தது.

மேலும் ஒரு நாழிகை காத்திருப்பது என்றும், வராவிட்டால் விஹாரத்திற்குச் சென்று விடுவது என்றும் நினைத்தார்.

ஒரு நாழிகைக்குள் மழையானது முற்றிலுமாக நின்று விட்டதால் அவர் சற்று ஆறுதலடைந்தார்.

மழை நின்றாலும் கருமேகக் கூட்டங்கள் ஓட்டப் பந்தயத்தை நடத்திக் கொண்டிருந்ததால் இருள் விலகவில்லை.

நீலகேசி சற்றே சோர்வடைந்தார்.

அந்த நிலையில் மண்டபத்தின் பின்புறத்தில் பெரும் ஓசை கேட்டது.

அங்கே ஒரு எரிமேடை இருந்தது.

அது சுழன்று அகன்றது.

அங்கே உண்டான பள்ளத்தில் மழைநீர் கடகடவென நுழைந்தது.

அதே சமயம் அப்பள்ளத்திலிருந்து பயங்கர உருவம் ஒன்று எழுந்தது.

இருட்டில் இருட்டான ஒரு உருவம் சிலிர்த்துக் கொண்டே எழுந்ததைக் கண்ட நீலகேசிக்கு சற்றே அச்சம் உண்டாயிற்று.

இருட்டு பழகியிருந்ததால் பள்ளத்தில் இருந்த உருவத்தைக் காண முடிந்தது.

மிகவும் பயங்கரமானதொரு பேய் பூமியைப் பிளந்து கொண்டு வருவதாக நினைத்தார்.

மண்டபத்தை விட்டு ஓட முற்பட்டார்.

மண்டபத்தை விட்டு இறங்கியதும் சாம்பல் சேற்றில் அவரது கால்கள் சிக்கிக் கொண்டன.

கோர உருவம் மண்டபத்திற்கு வந்தது.

“ஐயோ” என்றார் நீலகேசி.

அப்படியே சேற்றில் விழுந்தார். மயக்கமானார்.



அவர் கண்விழித்த போது தரையில் படுத்திருப்பதையும் அருகே ஒரு பந்தம் ஏற்றப்பட்டிருந்ததையும் கண்டு “சுடுகாட்டை விட்டு எப்படி இங்கே வந்தோம்?” என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டார்.

தனது மண்டை மிகவும் லேசானதாக ஆகி விட்டது போல் இருந்தது அவருக்கு. மெல்ல எழுந்து அமர்ந்து மொட்டைத் தலையைத் தடவி விட்டுக் கொண்டார்.

தனக்கு முன்னால் ஒரு சட்டியும் நீர்க் குவளையும் இருந்ததைக் கண்டார்.

சட்டிக்குள் பழத்துண்டுகள் இருந்தன.

அது எப்படி சட்டிக்கு வந்தது? சட்டி எப்படி அங்கு வந்தது என்று அவர் யோசிக்க வில்லை.

பசி பயங்கரமாக இருந்ததால் பழத்துண்டுகளையெல்லாம் சாப்பிட்டு விட்டு குவளையில் இருந்த தண்ணீரைக் குடித்தார். ஏப்பம் வந்தது.

உடலில் தெம்பு வந்திருப்பதை உணர்ந்து எழுந்தார்.

சுடுகாட்டில் பயங்கரமான பேயைக் கண்டு சேற்றில் மயங்கி விழுந்தது அவருக்கு நினைவிற்கு வந்தது.

தனது உடையிலும் உடம்பிலும் சேறு இல்லாமல் கழுவி விடப்பட்டிருந்தது.

சற்றே குழம்பியவராய் “இங்கே இருப்பது யார்?” என்று குரல் கொடுத்தார்.

குரலில் தனக்குரிய கம்பீரம் இருந்ததை உணர்ந்து மகிழ்ச்சி யடைந்தவராய் மீண்டும் “இங்கே யாரும் இல்லையா?” என்று குரல் கொடுத்தார்.

பதிலில்லை.

தானிருப்பது பாழடைந்ததொரு மாளிகை என்பது அவருக்கு விளங்கியது.

தானிருந்த இடத்தில் இருந்த பந்தத்தை எடுத்துக் கொண்டு மாளிகையின் உட்பகுதியில் சென்றார்.

அங்கே குறட்டைச் சத்தம் கேட்டது.

உள்ளே தரையில் பெரும்பிசாசு ஒன்று படுத்திருப்பது தெரிந்தது.

“யார் அது படுத்திருப்பது? பூதமா? பிசாசா?” என்று வினவினார்.

குறட்டை விட்டுக் கொண்டிருந்த உருவம் அதிர்ந்து கண் விழித்தது. எழுந்து அமர்ந்தது.

கோரமான அந்த உருவத்தைக் கண்ட அவர் “யாரது?” என்று அதட்டினார்.

“என்னை அடையாளம் தெரியாமல் போய் விட்டதா அடிகளே? நான் தான் மாந்தரீகன்” என்றது உருவம்.

“சுடுகாட்டு வாசனா? இது என்ன கோரம்? நீ ஏன் இப்படி இருக்கிறாய்?” என்று கேட்டார் நீலகேசி.

“நான்கு ஆண்டுகள் சிறையில் இருந்து பாருங்கள். நீங்களும் இந்த அலங்கோலத்தைத்தான் அடைவீர்கள்” என்று சொன்ன மாந்தரீகன் “அமருங்கள்” என்றான்.

நீலகேசி அவனது கோலத்தைக் கண்டு நம்ப முடியாத அதிர்ச்சியுடன் உட்கார்ந்தவர் “எனக்கு எதுவும் புரியவில்லை மாந்தரீகா” என்றார்.

“உங்களுக்குப் புரியாமல் போனால் எங்கள் கதி என்னாகும் அடிகளே?” என்று கேட்டான் மாந்தரீகன்.

“முதலில் நீ எப்படி வந்தாய் என்பதைச் சொல்”

“அதில் வியப்படையவோ விரிவாகச் சொல்லவோ எதுவு மில்லை அடிகளே. இன்று காலை சிறையிலிருந்து நான் விடுவிக்கப்பட்டேன். சிறையிலிருந்து கல் தூரத்தில் இருந்த காட்டாற்றருகே வந்த போது துறவியொருவர் வந்து நீங்கள் சுடுகாட்டில் காத்திருப்பதாகவும் என்னை அங்கே வரும்படியும் சொன்னார். என்னோடு வரவிருந்த அவரைத் தடுத்து அனுப்பி விட்டேன்.

துவாரசமுத்திரம் எனது பூர்வீக ஊர். எல்லா பகுதிகளும் எனக்கு அத்துப்படி. சுடுகாட்டிற்கு வருவதற்கு ஒரு சுரங்கவழி இருப்பது எனக்குத் தெரியும். அங்கே வரும் மாந்தரீகர்கள் அந்த வழியைத்தான் பயன்படுத்துவார்கள். நானும் அந்த

வழியிலேயே வந்தேன். இருட்டில் நீங்கள் இருப்பதை தெரிந்து கொள்வதற்கு சிறிது நேரமாயிற்று. அதற்குள் நீங்கள் பயந்து மயக்கமடைந்து விட்டீர்கள். உங்களைத் தூக்கி மண்டபத்தில் போட்டு மயக்கத்தைத் தெளிவிக்க முயன்றேன். மயக்கம் தெளியவில்லை. உங்கள் உடம்பையும் உடைகளையும் மழை நீரில் கழுவி விட்டு தோளில் தூக்கிப் போட்டுக் கொண்டு எனக்குத் தெரிந்த இப்பாழடைந்த மாளிகைக்குக் கொண்டு வந்தேன். உங்கள் நாடி சீராக இருந்த படியால் மயக்கம் தெளியும் போது தெளியட்டும் என்று விட்டு விட்டு நீங்கள் உண்பதற்கு பழங்களை ஏற்பாடு செய்து விட்டு நான் இங்கு வந்தேன். நிம்மதியாக உறங்கி நான்காண்டுகள் ஆகி விட்டபடியால் இங்கே படுத்ததும் உறக்கம் வந்து விட்டது. நீங்கள் எழுப்பாதிருந்தால் நான்கு நாட்களுக்கு நான் உறங்கி யிருப்பேன்" என்றான் மாந்தரீகன்.

மாந்தரீகனின் பேச்சில் அவர் சுவாரசியப்படவில்லை.

"எல்லாம் இந்த மழையினால் வந்தது" என்று அலுத்துக் கொண்டார்.

"அடிகளே! இதற்கே நீங்கள் அலுத்துக் கொண்டால் என் அவஸ்தைகளுக்கு என்ன சொல்லப் போகிறீர்கள்?" என்று கேட்டான்.

"என்ன சொல்ல வருகிறாய் நீ?"

"நான்கு ஆண்டுகளாகச் சிறையில் படாத அவஸ்தைகளை எல்லாம் பட்டேன். ஒரு நாள் கூட நிம்மதியாக உறங்கியதில்லை. பல நாட்களுக்குத் தண்ணீர் மட்டுமே வழங்கப்பட்டது. என் உயிர் போகாதது எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது" என்று சொன்ன மாந்தரீகன் "அடிகளே! மகாராஜாவின் மகள் விஷயத்தில் நீங்கள் கூறியபடி தானே நான் செய்தேன். நீங்கள் கூறியதைத் தானே நான் செய்தேன்? எனக்கேன் தண்டனை வழங்கப்பட்டது?" என்று கேட்டான்.

"நீ செய்த காரியங்களுக்காக உனக்குச் சிறைத் தண்டனை கிடைக்கவில்லை. மகாராஜாவிடம் பேசத் தெரியாமல் பேசி சிக்கிக் கொண்டாய். உன் மீது அவருக்குச் சந்தேகம் வந்து விட்டது. ஆகவே தான் சிறை" என்றார் நீலகேசி.

"பேசத் தெரியாததால் நான் சிறைப்பட்டேன். சாமர்த்தி யமாகப் பேசியதால் நீங்கள் தப்பி விட்டீர்கள், இல்லையா?"

"முட்டாளைப் போல் பேசாதே மாந்தரீகா. ஒருவருக் கொருவர் கைகொடுப்பதுதான் நமது கூட்டணியே தவிர காலை வாரி விடுவதல்ல. நீ சிறைப்பட்ட மறுநாளே உன்னை விடுவிக்கும் படி

மகாராஜாவிடம் முறையிட்டேன். அவரும் ஒப்புக் கொண்டார். ஆனால் ஒப்புக் கொண்டபடிச் செய்யாமல் ஏமாற்றி விட்டார்.”

“அதற்குப் பிறகு கேட்டிருக்கலாமே? நான்கு ஆண்டுகள் சும்மா தானே இருந்தீர்கள்?”

“பலமுறை கேட்டு விட்டேன் மாந்தரீகா. மகாராஜா ஒவ்வொரு முறையும் என்னை ஏமாற்றி விட்டார். ஏன் என்று தெரியவில்லை. பழைய கதையை எதற்காகச் சொல்லி என்னைக் குதறுகிறாய்? இப்போது நீ விடுதலையானது யாரால்? என்னால் தான். அது தெரியுமா உனக்கு?”

நீலகேசி இவ்வாறு பேசியபோது அதிரடியாக அங்கே பிரவேசித்தார் விஹாரத்துத் துறவி.

அவர் தெரிவித்துச் செய்தியைக் கேட்டதும் பற்களை நறநறவெனக் கடித்தார் நீலகேசி.

அவரது முகம் சிவந்து போய் பந்த ஒளியில் பயங்கரமாகக் காட்சியளித்தது.





உண்மைத் துறவிகளுக்கு உண்மையாக இருப்பது தான் உயர்வு. ஆகாயத்தைப் பார்த்து வாழலாமே தவிர அவர்கள் ஆதாயத்தைப் பார்த்து வாழலாகாது
- நீலகேசி




துறவியைப் பார்த்து "நீ எப்படி இங்கே வந்தாய்? நான் இங்கே இருப்பது உனக்கு எப்படித் தெரிந்தது" என்று கேட்டார் நீலகேசி.

"பாதுகாப்பு கருதி உங்களைத் தொடர்ந்து உங்களுக்குத் தெரியாமல் நாங்கள் வந்து கொண்டிருக்கிறோம் அடிகளே. அதே சமயம் உங்கள் அனுமதியில்லாமல் உங்கள் விஷயத்தில் தலையிடக் கூடாது என்பதால் உங்களை சந்திக்க வில்லை. இந்த நேரத்திலிருந்து முக்கியச் செய்தி வந்ததால் உங்கள் அனுமதியில்லாமல் பிரவேசிக்கும் படி ஆகி விட்டது" என்றார் துறவி.

"சரி நீ போ" என்றார் நீலகேசி.

துறவி சென்றதும் -

"என்ன விஷயம் அடிகளே?" என்று வினவினான் மாந்தரீகன்.

"அதிர்ச்சி மேல் அதிர்ச்சியாக எனக்கு வந்து கொண் டிருக்கிறது. நீ என்னடாவென்றால் சிறை வாழ்வைப் பற்றிப் பேச்சில் செதுக்கிக் கொண்டிருக்கிறாய். சிறையில் இருப்பவர் களை விட வெளியே இருக்கும் என்னைப் போன்றப் பலர் எப்படியெல்லாம் வேதனைப்பட்டு வெந்து கொண் டிருக்கிறார்கள் என்பது உனக்குத் தெரியுமா?"

"என்ன ஐயா சொல்கிறீர்கள்?"

"புறச் சிறையை விட மனச்சிறை கொடுமையானது. புறச் சிறையிலிருந்து கூட எளிதில் வந்து விடலாம். மனச் சிறை யிலிருந்து அவ்வாறு வர இயலாது. மனச்சிறைக்கான விடுதலை மனத்தில் தான் இருக்கிறதே தவிர வெளியே இல்லை. உன்னைப் போன்றவர்கள் மாந்தரீகம் செய்து கொண்டு பிழைப்பை நடத்தி விடலாம். நம்புவதற்கு நான்கு பேர் இருந்தால் பிழைப்பு ஓடிவிடும். எங்கள் நிலைமை அப்படியல்ல. நாங்கள் நடத்துவது சமணம் என்னும் பேரியக்கம். அதற்கு இரண்டு நிலைகள் தான். உயர்ந்தால் ஒரேயடியாக உயரும். இல்லாவிட்டால் அதல பாதாளத்தில்

விழுந்து விடும். இடைப்பட்ட நிலை என்பதெல்லாம் இதில் இல்லை" என்றார் நீலகேசி.

மாந்தரீகன் ஏதோ பேச முற்பட்டான்.

அதைத் தடுத்த அவர் "உன்னைச் சிறையிலிருந்து விடுவிக்க அரசாங்கத்திற்கு இரண்டாயிரம் வராகன்கள் கொடுக்கப் பட்டிருக்கிறது என்பதை நினைவில் வைத்துக் கொள். இவ்வளவு விலை கொடுத்து வாங்கியதற்குக் காரணம் உன்னோடு உட்கார்ந்து புலம்பிக் கொண்டிருப்பதற்காக அல்ல. முக்கியமானதொரு காரியத்தை நீ நிறைவேற்ற வேண்டி யிருக்கிறது. நீ உடினடியாக மேல் கோட்டைக்குச் செல்ல வேண்டும்."

"மேல் கோட்டையா?" என்று வாயைப் பிளந்தான் மாந்தரீகன்.

"வாயை மூடு மாந்தரீகா. காதைத் திறந்து நான் கூறுவதை நன்றாகக் கேட்டுக் கொள். மேற்குமலைத் தொடரில் வடமேற்கே இங்கிருந்து நானூறு காத தூரத்தில் இருக்கிறது மேல்கோட்டை. மனித சஞ்சாரமற்ற அக்கோட்டையில் மாமுனிவர் ஒருவர் வாழ்கிறார். அங்கே இருக்கும் பேய்களை வசியப்படுத்தி படை ஒன்றை அமைத்திருக்கிறார். நீ போய் அவரை வசப்படுத்தி அப்பேய்ப் படையை இங்கு அழைத்துவா."

நீலகேசி கூறியதை மாந்தரீகனால் நம்ப முடியவில்லை. "அப்படியொரு கோட்டையைப் பற்றி நான் கேள்விப் பட்டதில்லையே அடிகளே!" என்றான்.

"உனக்குத் தெரியாத விஷயமே உலகில் இல்லை என்று நீ நினைத்துக் கொள்ளாதே சுடுகாட்டு வாசா. நீ மாந்தரீகன் மட்டும்தான். அதிலேயே கூட நீ அனைத்தையும் கற்றுக் கொண்டிருக்கிறாயா என்பது எனக்குத் தெரியாது. ஆகவே மலைக் கோட்டையைப் பற்றி நீ கேள்விப்படாவிட்டால் அதில் ஆச்சரியம் ஒன்றில்லை."

"அடிகளே! என்னிடமே பேய்கள் பல இருக்கின்றன. ஏவி விட்டால் எவரையும் கலங்கடிக்கும்."

"அப்படியிருந்தால் நீ சிறையிலிருந்து பேய்கள் மூலமாகவே தப்பியிருக்க வேண்டியது தானே? மாந்தரீகா! உன்னிடம் பேய் வாடை வீசுவது உண்மை. உனக்குப் பேய் ஜாடை இருப்பதும் உண்மை. ஆனால் உன்னிடம் பேய்கள் இல்லை. இருந்தால் சோடை போனதாகத்தான் இருக்கும். உன் கதை எனக்குத் தெரியும். நான் சொல்வதைச் செய். மலைக் கோட்டையில் இருக்கும் முனிவர் சக்தி பெற்றவர். அவர் வசம் உள்ள பேய்களும் அபாரமானவை. அவை உன் வசம் இருந்தால் எதையும்

சாதிக்கலாம். நீ உடனடியாக இந்த அகோரமான மயிர்களை நீக்கி மொட்டையடித்துக் கொள்."

"என்ன சொல்கிறீர்கள் அடிகளே? எல்லோரும் என்னைக் கண்டு அஞ்சுவது என் தோற்றத்தைப் பார்த்துதான்."

"அஞ்சியதெல்லாம் போதும். துஞ்சும் காலம் வரை கோரமாக வாழ வேண்டிய அவசியமில்லை. காரியம் முக்கியமே தவிர கோலம் முக்கியமல்ல."

"அப்படியானால் எதற்கு மொட்டை போட வேண்டும்?"

"மொட்டை போடுவது மட்டுமல்ல. காவி கட்டி துறவி போல் மாற வேண்டும். அதுதான் இப்போது உகந்தது. இது கோலமல்ல. வேஷம். இந்த வேஷத்தில் இருப்பவர்களை எல்லோரும் மதிப்பார்கள். ஒருவரும் சந்தேகிக்க மாட்டார்கள். உன்னைப் பின் தொடரவும் மாட்டார்கள்."

"அப்படியானால் நீங்களும் வேஷதாரி தானா?"

"மூடனே! மகாவீரர் வர்த்தமானர் சாட்சியாக நான் துறவி தான். அடிமடியிலேயே கை வைத்த கதையாக என்னையே சந்தேகித்தால் நீ நாசமாகப் போவாய். நாம் இப்போது வரலாற்றின் முக்கியமான கட்டத்தில் இருக்கிறோம். நாளைக்குச் சாதிக்கப் போகிற பாத்திரங்களாக இன்று நாம் இருக்கிறோம். மொட்டையடித்துக் கொள்வது போன்ற அற்ப விஷயங்களுக் கெல்லாம் அலட்டிக் கொள்ள வேண்டாம். மொட்டை அடித்துக் கொண்டால் முடி தான் வளருமே தவிர மூளை வளராது. அதாவது மயிர் நீக்கிக் கொண்டால் ஒன்றும் குடி முழுகி விடாது. மூளைக்கொன்றும் ஆபத்தில்லை. உன்னை விடுதலை செய்தவர்கள் உன்னைக் கண்காணிப்பார்கள். ஆகவே துறவிக் கோலம் உனக்கு ஏற்றது. நீ எந்த ரகசிய சுரங்கத்தின் வழியாக வந்தாயோ அதே வழியில் சென்று துறவி வடிவத்தில் விஹாரத்திற்கு வா."

"சுரங்கம் மழை நீரால் மூழ்கியிருக்கும் அடிகளே."

"மாந்தரீகா! துவார சமுத்திரம் உயர்வாக இருக்கிறது. இங்கே எந்தப் பகுதியிலும் மழை நீர் அதிகமாகத் தேங்காது. மழை விட்டு நீண்ட நேரமாகி விட்டது. இப்போது சுரங்கம் மழை நீர் வடிந்த நிலையில் இருக்கும்."

நீலகேசி இவ்வாறு கூறிய போது குலை நடுங்கும் அமானுஷ்ய குரலொன்று கேட்டது.

"ஒன்றுமில்லை கொள்ளிவாய் பிசாசொன்று என்னிடம் பேச அனுமதி கேட்கிறது" என்றான் மாந்தரீகன்.

"பேய்களிடம் பிறகு பேசிக் கொள்ளலாம். அதற்கு நிரம்ப நேரமிருக்கிறது. இப்போது நீ நான் கூறியதைச் செய். விஹாரத்திற்கு வா. வழிச் செலவுக்கான பணமும் உடைகளும் தருகிறேன்" என்று சொன்ன அடிகள் "நீ பேய்ப் படையுடன் வந்தால் உனக்கு இரண்டு ஊர்களை நிவந்தமாகத் தருகிறேன்" என்றார்.

அவனை விட்டு விட்டு வெளியே வந்த போது மழையில்லை. ஆனால் பகல் பொழுது கழிந்து இரவு நேரம் முகிழ்த்திருந்தது.

நீலகேசி விஹாரத்திற்குச் சென்றார்.



மாந்தரீகனோடு பேசிக் கொண்டிருந்த போது துறவி யொருவர் வந்து தெரிவித்த செய்தி அவருக்குப் பேரதிர்ச்சியாக இருந்தது.

அது மட்டும் உண்மையாக இருந்தால் மிகவும் அபாய கரமானதாக இருக்கும் என்று கருதினார்.

அது விஷயமாக மன்னனின் மனநிலை எப்படியிருக்கும் என்பதை அறிய விரும்பினார்.

மறுநாள் மன்னனைச் சந்தித்தார்.

மன்னனோடு கங்கராஜன் மட்டுமே இருந்தது அவருக்கு ஆறுதலாக இருந்தது.

"நேற்று நான் பேசியதெல்லாம் தங்கள் மனதைப் புண்படுத்தி விட்டதா மகாராஜா?" என்று பரிவோடு கேட்டார் நீலகேசி.

"அடிகளே! மகாராஜாவாக இருப்பவனுக்கும் இதோ தளபதியாக இருக்கும் கங்கராஜனைப் போன்றவர்களுக்கும் புண்படுவது என்பது எப்போதும் நடந்து கொண்டிருப்பவை. கடந்த இரண்டாண்டுகளாகக் கலந்து கொண்ட இருபது போர்களில் நான் இருநூறுக்கும் மேற்பட்டப் புண்களைப் பெற்றிருக்கிறேன்" என்றான் மன்னன்.

"தாங்கள் கூறுவது விழுப்புண்களைப் பற்றி. நான் கூறுவது அகப் புண்களைப் பற்றி" என்றார் நீலகேசி.

"எங்களைப் பொறுத்த வரை புண் புண்தான். அது உள்ளே இருந்தாலும் சரி. வெளியே இருந்தாலும் சரி" என்று சொன்ன மன்னன் "நேற்று நாம் சண்டை போட்டுக் கொள்ள வில்லையே! சரியாகத்தானே பேசினோம்? உண்மையைச் சொல்'

போனால் நான்தான் தங்களை விசாரிக்க வேண்டும் என்று நினைத்திருந்தேன். எனது குருநாதரும் வழிகாட்டியுமான தங்களிடம் நான் அத்துணை வேகமாகப் பேசியிருக்கக் கூடாது. அடக்கத்தை விட்டு விட்டு சற்று இடக்காகப் பேசிவிட்டேன். தங்கள் மனம் புண்ணாகியிருந்தால் என்னை தயை கூர்ந்து மன்னித்தருள வேண்டும்" என்றான்.

"மகாராஜா! நான் சமணத்தைத் தவிர எதுவும் அறியேன். என் ஜீவனுக்கு ஒரு பெயரைச் சூட்ட முடியுமானால் அதற்குச் சமணம் என்று தான் சூட்ட முடியும். நான் வேறு சமணம் வேறு இல்லை. எனது சுவாசம் நான் உயிரோடிருந்து சுகப் படுவதற்காக இல்லை. சமணத்தை உயர்த்துவதற்காகத் தான். எனது நடவடிக்கைகளில் எனக்கு ஆதாயம் என்பது எள் முனையளவும் இல்லை" என்றார் நீலகேசி தழுதழுத்த குரலில்.

"இதென்ன புதியவனிடம் பேசுவது போல் பேசுகிறீர்கள்? உங்களைப் பற்றி எனக்குத் தெரியாதா? உங்களைப் பற்றியும் ஜெயதேவரைப் பற்றியும் ஒன்றும் தெரியாமலா இருவரையும் நான் குருநாதர்களாகக் கொண்டேன்? என் விஷயத்தில் மட்டுமல்ல என் மகள் விஷயத்திலும் கூட உங்கள் இருவரது வழிப்படித் தானே நடந்தேன். உங்களிடம் நான் முரண்பட்டது படையெடுப்பு விஷயத்தில் மட்டும்தான்.

இப்போது நினைத்து பார்த்தால் உங்கள் இருவரது கருத்தை ஏற்று படை யெடுக்காமலேயே இருந்திருக்கலாம் என்றுதான் தோன்றுகிறது. படையெடுப்பும் வெற்றிகளும் என்னை மிகவும் பாதித்து விட்டது. அடக்கம் என் அடையாளமாக இருந்தது. தற்போதோ ஆணவத்தின் அடையாளமாக இருக்கிறேன் நான். அதனால் தான் நேற்று என் பேச்சில் அடக்கம் அகன்று ஆணவம் பிடித்துக் கொண்டது" என்றான் மன்னன்.

"ஆகா! இது என்ன பேச்சு மகாராஜா ஆணவமாவது! தங்களை நெருங்குவதாவது! உங்கள் போர் நடவடிக்கை அனைத்தும் நீங்கள் கூறியது போல் க்ஷத்திரிய தர்மங்கள். நீங்கள் போரிட்டால் தான் நாடு இருக்கும். நாம் இருப்போம். குருநாதர் ஜெயதேவர் இதை உணர்ந்து கொண்டார். அரசர்கள் இல்லாமல் போனால் துறவிகளால் அமைதியாக இருக்க முடியாது என்றார்.

இந்த நாடு மகான்கள் நிறைந்த நாடாக இருக்கிறதென்றால் அதற்குக் காரணம் மகாராஜாக்கள் தான் என்றார். மதமானது தனது கொள்கைகளை நம்பி வாழ வேண்டுமே தவிர ஆட்சியாளர்களை நம்பி வாழலாகாது. மக்களுக்குப் பயன்தரக் கூடிய கருவியாக மதம் இருந்தாலும் ஒருநாளும் மக்களிடமிருந்து

ஆதாயத்தை எதிர்பார்க்கக் கூடாது. அதோடு உண்மைத் துறவிகளுக்கு உண்மையாக இருப்பது தான் உயர்வு. ஆகாயத்தைப் பார்த்து வாழலாமே தவிர அவர்கள் ஆதாயத்தைப் பார்த்து வாழலாகாது என்றெல்லாம் சொல்வார் குருநாதர்" என்றார் நீலகேசி.

"தங்களைப் பற்றியும் ஜெயதேவரைப் பற்றியும் நீங்களே மிகச் சரியாகச் சொல்லி விட்டீர்கள். நான் சொல்வதற்கு என்ன இருக்கிறது? நமது உறவு மேன்மையானது. பங்கப் படாது. பாழ் படாது. பொன்றிப் போகாது" என்றான் மன்னன்.

"பங்கம் வந்துவிடும் போலிருக்கிறது மகாராஜா."

"என்ன சொல்கிறீர்கள் அடிகளே?"

"ஆமாம் மகாராஜா. அதற்கு என்னால் ஆகக் கூடியது எதுவுமில்லை. தாங்கள் தான் செய்ய முடியும்."

"விஷயமென்ன என்பதைச் சொல்லுங்கள்."

"தொண்டனூரில் இராமானுஜர் என்ற வைஷ்ணவ சன்யாசி வந்திருக்கிறாராம். சோழநாட்டில் பெரும் மதக் கலவரத்தை விளைவித்து விட்டு சோழ மகாராஜா கைது செய்ய முற்பட்ட போது இங்கே தப்பி ஓடி வந்து விட்டாராம். வந்ததிலிருந்து மக்களை மதமாற்றும் செயலில் ஈடுபடுகிறாராம். ஏராளமான சமணர்களைத் தன் மதத்திற்கு மாற்றியிருக்கிறாராம்."

"அப்படியா? அது தவறாயிற்றே! அந்த வைஷ்ணவரைக் கைது செய்ய ஆணையிடுகிறேன். நீங்கள் கவலையில்லாமல் செல்லுங்கள்."

"மிக்க நன்றி மகாராஜா."

நீலகேசி புறப்பட்ட பின் -

மன்னன் கங்கராஜனைப் பார்த்தான்.

கங்கராஜன் மன்னனைப் பார்த்தான்.

"கங்கராஜா! நமது சேனாதிபதி தொண்டனூரைத் துணைத் தலைநகரமாக மாற்றி பல ஆண்டுகளாகி விட்டன. நாம் தான் போகவில்லை. இப்போது போகலாம் என்று தோன்றுகிறது. என்ன சொல்கிறாய்?" என்று கேட்டான் மன்னன்.

"குடும்பத்தோடு செல்லலாம் மகாராஜா" என்றான் கங்கராஜன்.



கோவையூர் என்னும் சாளக்கிராமத்தில் தங்கியிருந்த இராமானுஜர் தனது சிஷ்யர்களோடும் மக்களில் சிலரோடும் தொண்டனூருக்கு* வந்தார்.

தொண்டர்களாய் நிரம்பிய ஊர் தொண்டனூர். தொண்டுகள் தொடர்ந்து நடந்து கொண்டிருந்த ஊர் தொண்டனூர். அந்தத் தொண்டுகளுக்கெல்லாம் தலைமை தாங்கி நடத்திக் கொண்டிருந்தவர் தொண்டனூர் நம்பி என்ற வைஷ்ணவர். அவரது அழைப்பின் பேரிலேயே அங்கு வந்திருந்தார் இராமானுஜர்.

அங்கே வந்ததும் நீராடி விட்டு வெள்ளாடையை நீக்கி காவியுடையும் த்ரிதண்டமும் ஏந்தினார்.

"தற்போது தான் எங்களுக்கெல்லாம் நிம்மதியாக இருக்கிறது சுவாமி. தேவரீருக்கு வெள்ளாடை அணிய வேண்டிய நிலை வரும் என்று நாங்கள் சிறிதும் எண்ணியதில்லை. பல நாட்களாக நீங்கள் வெள்ளாடை அணிந்திருந்ததை கண்ட எங்களுக்கு நாங்களெல்லாம் கறுப்பு ஆடையை அணிந்து கொண்டு துக்கத்தை அனுஷ்டித்த மாதிரி இருந்தது. தாங்கள் காவியைத் துறக்கும் நாள் இனி என்றைக்கும் வரக்கூடாது" என்றார்கள் உத்தமச் சீடர்கள்.

ஆடைகளில் எதுவுமில்லை சீடர்களே "எத்தனையோ மகான்கள் அழுக்கேறிய ஆடைகளை அணிந்தபடி வாழ்ந்தார்கள். காசியிலும் ரிஷி கேசத்திலும் பலர் ஆடைகளைத் தரிக்காமலேயே வாழ்கிறார்கள். சமண மதத்தில் திக்குகளையே ஆடையாக அணியும் திகம்பரர்கள் இருக்கிறார்கள். தமிழ் நாட்டிலேயே கூட சித்தர்கள் பலர் தேகாபிமானங்களைத் துறந்து வெறும் குப்பையைப் போல மலைகளிலும் காடுகளிலும் வசிக்கிறார்கள். எல்லோருக்குமே தேவையானது அகத் தூய்மைதான். அகத்தைத் தூய்மையாக வைத்துக் கொண்டு அதை சாட்சாத் பெருமாளிடம் சமர்ப்பித்து விட்டால் குறையொன்றும் இருக்காது" என்றார் இராமானுஜர்.

தொண்டனூரில் இருந்த நரசிம்மர் சன்னதிக்குச் சென்று தரிசனம் செய்தார்.

தொண்டனூருக்கு அவர் வந்திருக்கிறார் என்றதும் அவ்வூரிலிருந்த நிறைய பேர் அவரைத் தரிசனம் செய்ய வந்தார்கள். அவர்களெல்லாம் சாளக்கிராமத்தில் இருந்த ஒழுக்கமற்ற மக்கள், இராமானுஜர் வந்ததற்குப் பிறகு மனம் திருந்திச் செயலிலும் திருந்தியதைக் கேள்விப் பட்டவர்கள்.

* இது தொன்னூர் என்றும் அழைக்கப்படுகிறது. மைசூரிலிருந்து வடக்கே 15 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது.

தன்னை தரிசிக்க வந்தவர்களையெல்லாம் நரசிம்மப் பெருமாளைத் தரிசனம் செய்யும் படிக் கேட்டுக் கொண்டார் இராமானுஜர்.

"நான் வெறும் அடியவன். திருமாலடியான். என்னை வணங்கலாகாது. என்னையும் உங்களையும் காத்து ரட்சிக்கும் மாயனை, மன்னுவடமதுரை மைந்தனை, தூயபெருநீர் யமுனைத் துறைவனை, தாயை குடல் விளக்கம் செய்த தாமோதரனை, நரசிங்கமாக வந்து பிரகலாதனை ரட்சித்த எம்பெருமாளை வணங்குங்கள். அதுவே முறை" என்றார்.

"சுவாமி! நரசிம்மப் பெருமாளைத் தினமும் தான் தரிசிக்கிறோம். ஆனால் இராமானுஜ தரிசனம் இப்போது தானே கிடைத்தது?" என்றார்கள் மக்கள்.

இராமானுஜர் தொண்டனூர் நம்பியைப் பார்த்து "நம்பீ! நீ செய்து வரும் தொண்டுகளில் மக்களை என்பால் திருப்பியதும் ஒன்றா?" என்று கேட்டார்.

"அதற்கு அவசியமில்லை சுவாமி. சூரியனைக் கண்டால் சூரியகாந்தி தானே திரும்பும். தாமரை மலரும். யாரும் அவற்றுக்குக் கட்டளையிடுவதில்லை. தாமாக வரும் அன்பு வெள்ளம் இது" என்றார் தொண்டனூர் நம்பி.

"இது கிராமமாக இருந்துதான் நான் பார்த்திருக்கிறேன். தற்போது மாற்றம் தெரிகிறது. கிராமம் நகரமாக மாறுவதாகத் தோன்றுகிறது. சரிதானா?"

"சரிதான் சுவாமி. ஹொய்சள மன்னர் விட்டலராயர் இந்த ஊரை துணைத் தலைநகரமாக உருவாக்க ஆணையிட்டுள்ளார். பாழடைந்திருந்த அரண்மனை புதுப்பிக்கப்பட்டிருக்கிறது. துணைத் தலைநகரத்திற்குரிய விதத்தில் மாடங்களும் மாளிகைகளும் உருவாகியுள்ளன. காவல் துறை பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருக்கின்றன. விரைவிலேயே இது பெருநகரமாகி முரட்டு குதிரையைப் போல நிமிர்ந்து நிற்கும்."

"மன்னர்களுக்குத் தேவையானதை அவர்கள் உருவாக்கிக் கொள்வது பொதுவாகச் சரியானதுதான். ஆனால் பண்டைய நாடான பாரத நாட்டின் அடையாளம் பெருநகரங்கள் அல்ல. கிராமங்கள்தான். பசுமை கொஞ்சும் சிற்றூர்கள்தான். அரசர்கள் குடியிருக்கும் கோட்டைகளை தலைநகரங்களைத் தவிர பிற இடங்கள் எல்லாம் மக்கள் இயற்கையின் அனைத்து கொடைகளுடன் நிறைந்த கிராமங்களாகவும் சிற்றூர்களாகவும்

இருக்க வேண்டும்; அதுவே என்னாசை.* ஆனால் தற்போது நிலைமைகள் மாறி வருகின்றன. கிராமங்களும் சிற்றூர்களும் பெருநகரங்களாகி வருகின்றன. மரமிருந்த இடம் மாளிகை யாகிறது. நீர் இருந்த இடம் கட்டிடங்களாகிறது. மழையை வரவழைக்கும் பசுமை மறைந்து போய் வறட்சிக்கு வழி வகுக்கிறது. வருண பகவானை கைவிட்டு விட்டு சூரிய பகவானை எல்லோரும் போற்ற ஆரம்பித்து விட்டார்கள்."

சாளக் கிராமத்திற்கு வந்ததிலிருந்து தினமும் ஆழ்வார் பாசுரம் ஒன்றுக்கு பொருள் சொல்லி விளக்குவது இராமானுஜரின் வழக்கமாக இருந்தது.

தொண்டனூருக்கு வந்த தினத்திலும் மாலை நேரத்தில் நரசிம்மர் ஆலயத்தருகிலேயே வெட்ட வெளியில் உபன் யாசத்தைத் துவக்கினார் இராமானுஜர்.

"தொண்டை நாட்டிலே திருமழிசையிலேயே தோன்றி திருமாலின் பக்தியில் ஊறி தன்னை ஆட்படுத்திக் கொண்டவர் தான் பக்திசாரர் ஆகிய திருமழிசை ஆழ்வார். மறந்தும் புறந்தொழா வைராக்கியம் பூண்டவர். பரமஞானி. ஆதியான வானவர்க்கும் அண்டமாய அப்புறத்து ஆதியான வானவர்க்கும் ஆதியான ஆதி என்று திருமாலை உணர்ந்து அவனைப் பரம் பொருளாகக் கண்ட அருளாளர் அவர். அவரிடம் எண்கள் விளையாடி பாசுரங்களை விளைவித்தன. அவற்றில் ஒன்றை இங்கே காண்போம்.

**'ஐந்தும் ஐந்தும் ஐந்துமாகி அல்லலற்று ளாயுமாய்**
**ஐந்தும் மூன்றும் ஒன்றுமாகி நின்றவாதி தேவனே!**
**ஐந்தும் ஐந்தும் ஐந்துமாகி அந்தரத் தணைந்து நின்று**
**ஐந்தும் ஐந்துமாய நின்னை யாவர் காணவல்லீரே!' -****

பாசுரம் முழுவதும் வெறும் எண்களாக இருக்கிறது. இது இது என்று சொல்லாமல் எல்லாவற்றையும் எண்களாலேயே குறிப்பிட்டிருக்கிறார் திருமழிசை பிரான். பரம்பொருள் எல்லாவற்றிலும் இருக்கிறான். எல்லாமுமாக இருக்கிறான்.

ஐந்து - மண், நீர், நெருப்பு, வாயு, ஆகாயம் ஆகிய ஐந்து பருப் பொருட்கள்.

ஐந்து - மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐந்து ஞான இந்திரியங்கள்.

* Page 35. "Managerial Ability of Sri Ramanuja in Retrospective. By - A. Krishnamachari.

** திருச்சந்த விருத்தம். பாசுரம் 3 (நாலாயிரத் திவ்யப் பிரபந்தம்.)

ஐந்து - சொல்லல், நடத்தல், கொடுத்தல், விடுதல், மகிழ்தல் ஆகிய ஐந்து கர்ம இந்திரியங்கள்.

ஐந்து - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய ஐந்து தன் மாத்திரைகள்.

மூன்று - புத்தி, சித்தம், அகங்காரம்.

ஒன்று - மனம்.

ஆக ஐந்து, ஐந்து, ஐந்து, ஐந்து, மூன்று, ஒன்று என இருபத்து நான்கு தத்துவங்களாக இருப்பவன் ஆதிதேவனாகிய பரம் பொருள். அந்த இருபத்து நான்கு தத்துவங்கள் அல்லாத மற்ற வற்றுக்குள்ளும் அவனே இருக்கிறான்.

ஐந்து - மயிர், எலும்பு, தோல், நரம்பு, இறைச்சி ஆகிய பிருதிவியின் ஐந்து கூறுகள்.

ஐந்து - உவர்நீர், சிலோத்துமம், ரத்தம், சுக்கிலம், நிணம் ஆகிய அப்புவின் ஐந்து கூறுகள்.

ஐந்து - பசி, தாகம், உறக்கம், சோம்பல், மைதுனம் ஆகிய அக்கினியின் ஐந்து கூறுகள்.

ஐந்து - சிரிப்பு, அழுதல், நிற்றல், இருத்தல், போதல் ஆகிய வாயுவின் ஐந்து கூறுகள்.

ஐந்து - காமம், குரோதம், லோபம், சங்கற்பம், விகற்பம் ஆகிய ஆகாயத்தின் ஐந்து கூறுகள்.

ஆக புறநிலை பஞ்சதத்துவம் இருபத்து ஐந்திலும் கலந்து எங்குமாய் யாவுமாய் பரமபதத்தில் வீற்றிருக்கும் பரம் பொருளைக் கண்டுணர்ந்து ஆழ்வார் அவரை யாரால் காண இயலும் என்கிறார். கண்டவர் அவர். அதே சமயம் யாரால் காண முடியும் என்கிறார். அதுவே பக்தியின் உச்சநிலை. ஞானத்தின் உச்ச நிலை. அதனாலேயே அவர் ஆழ்வாராகிறார். நாம் அவரை வணங்கி நிற்கிறோம்" என்று கூறி நிறுத்தினார் இராமானுஜர்.

பக்தர் கூட்டம் அவரை வாழ்த்தியபடி அகன்றது.

மக்கள் கூட்டம் விலகி சீடர்கள் மட்டுமே இருந்த நிலையில் ஓர் இளைஞன் வந்து இராமானுஜரின் திருவடிகளில் விழுந்து வணங்கினான்.

"நீயா?" என்று வியந்தார் இராமானுஜர்.





உண்மை தூங்கிக் கொண்டிருக்கும் போது பொய் தான் விழிப்பாகவும், விறுவிறுப்பாகவும், வேகமாகவும், வெந்து பக்குவப் பட்டதாகவும் இருக்கும். உண்மை விழித்துக் கொள்வதற்குள் பொய் பற்பல வெற்றிகளைப் பெற்று விடும் – நீலகேசி




“அனந்தாழ்வான்! நீ எங்கே இங்கே வந்தாய்? உன்னை அருளாளப் பெருமாள் எம்பெருமானாருக்குச்* சிஷ்யனாக அல்லவா நியமித்திருந்தேன்?” என்று வினவினார் இராமானுஜர்.

“சுவாமி! தாங்கள் கட்டளையிட்டது உண்மைதான். தங்கள் கட்டளைப்படி அடியேன் அருளாளப் பெருமாள் எம்பெருமானாரிடம் சிஷ்யனாக ஏற்கும் படி வேண்டி நின்றேன். அவரோ மலைத்தார். குருவித் தலையில் பனங்காய் வைப்பது போல் அல்லவா இருக்கிறது? குருவாக இருக்க எனக்கேது தகுதி என்று கூறி மறுத்தார். பிறகு தங்கள் கட்டளையை மீற முடியாமல் குருவாக இருக்கச் சம்மதித்தார். ஆனால் அது அதிக நாள் நீடிக்கவில்லை; அவரது மனக்கிலேசம் அதிகமாயிற்று. “ஆழ்வான்! நான் குருவாக இருப்பது கல்லை விழுங்கி விட்டு விழிப்பது போல் இருக்கிறது. நீரில் மூழ்கி விட்டு தவிப்பது போல் இருக்கிறது. இல்லாத ஊருக்குப் புறப்பட்டு பாதி வழியில் திணறுவது போல் இருக்கிறது. இந்த நிலையில் உனக்கு குருவாக இருப்பதென்பது தெரிந்தே செய்யும் தவறாகத் தோன்றுகிறது. நமது எல்லோருக்கும் எம்பெருமானாராகிய இராமானுஜரே குரு. அவருக்குத் தான் அனைவரையும் வழி நடத்தும் ஆற்றலும் அறிவும் இருக்கிறது. ஆகவே நீயும் உன்னோடு வந்த மூவரும் அவரிடமே திரும்பிச் சென்று எனது நிலைமையை விளக்கிச் சொல்லி அவருக்கே ஆத்ம சிஷ்யர்களாக இருங்கள்” என்று கூறிவிட்டார். அதற்குப் பிறகு நான் என்ன செய்ய முடியும்? தேவரீர் இங்கே வந்திருப்பதாகக் கேள்விப்பட்டு உடனே இங்கு வந்து விட்டேன்” என்றான் அனந்தாழ்வான்.

“அனந்தப் பிள்ளையே! உனக்கு அந்தச் சம்பவம் நினைவிருக்கிறதா? ஒரு முறை உங்களையெல்லாம் பார்த்து திருமலைக்குச் சென்று பெருமாளுக்குக் கைங்கர்யம் செய்ய

* இவரது இயற்பெயர் யக்ஞமூர்த்தி. அத்வைதி. இராமானுஜரிடம் வாதப் போர் நடத்தி இறுதியில் தோற்று அத்வைதத்தைக் கைவிட்டு விசிட்டாத் வைதத்தை ஏற்று இராமானுஜரின் சீடரானார். இவரைப் பற்றிய விவரம் இந்நூலாசிரியரின் 'பரிமேலழகர்' நூலில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

யாராவது முன் வருகிறீர்களா என்று கேட்டேன். என்னை விட்டுச் செல்ல பலருக்கும் மனதில்லை. திருமலைக்குச் செல்ல முறையான பாதைகள் இல்லை. அங்கே குளிரும் அதிகம். ஆகவே யாரும் முன்வரவில்லை. நான் செல்கிறேன் என்று நீ முன் வந்தாய். நீயே என் பிள்ளை என்று உன்னை நான் பாராட்டினேன். அது முதற்கொண்டு எல்லோரும் உன்னை ஆனந்தப் பிள்ளை என்றே அழைக்கலானார்கள்"* என்று சொன்ன இராமானுஜர் "அனந்தா! திருவேங்கடமுடையான் உனக்காகக் காத்திருக்கிறான். அங்கே சென்று கைங்கர்யம் செய்வதற்கு உன்னைத் தயார் படுத்திக் கொள்" என்றார்.

கர்நாடக மாநிலத்தில் ஸ்ரீரங்கப் பட்டினத்தை யடுத்த கிரங்கூர் என்னும் இடத்தில் பிறந்த அனந்தாழ்வான் திருவரங்கத்திற்கு வந்து இராமானுஜரை அடைந்து அவரது பிரதான சீடர்களில் ஒருவரானார். பின்னாளில் திருமலையில் பூஞ்சோலை அமைத்து திருவேங்கடமுடையானுக்கு புஷ்பக் கைங்கர்யம் செய்து வந்தார். திருவேங்கடமுடையான் அவருக்குப் பல சோதனைகள் கொடுத்துப் பார்த்தான். அவரோ தனது குரு இராமானுஜரின் கட்டளையே தனக்கு அனைத்தும் என்று கூறி அங்கிருந்து அகலமறுத்தார். அவருக்கும் பெருமாளுக்குமான லீலைகளின் போது அனந்தாழ்வான் பெருமாளை கடப்பாரையால் தாக்கினார். அந்தக் கடப்பாரையை திருமலைக் கோயிலில் இன்றும் காணலாம். இவரைப் பற்றிய விவரங்கள் "அனந்தாழ்வான் வைபவம்" என்ற நூலில் உள்ளது.

இராமானுஜர் தொண்டனூருக்கு வந்த இரண்டு நாட்களில் அருவி ஒன்றைத் தொண்டனூர் நம்பிக்குச் சுட்டிக் காட்டினார்.

"நம்பீ! இந்த அருவியின் நீர் எங்கோ விழுந்து வீணாக அல்லவா போகிறது? அதோ பார். அருவிக்குப் முப்புறமும் குன்றுகள் இருக்கின்றன. அந்த நீரை இந்தக் குன்றுப் பகுதியில் வரவழைத்து இப்பக்கத்தில் ஒரு கரையைக் கட்டினால் ஏரி போல அமைந்து நீரானது சேமிக்கப்படுமல்லவா? மக்களுக்குப் பயன்படும் அல்லவா? இங்கே நீர் சேமிக்கப்பட்டால் நீர்வளம் அதிகமாகி யாதவகிரிக்கும் அங்குள்ள மக்களுக்கும் பயன்படும் அல்லவா?" என்று வினவினார்.

"மகான்கள் மகான்கள்தான். ஆன்றோர்கள் ஆன்றோர்கள் தான். இங்கே பலகாலமாக அருவி இருக்கிறது. குன்றுகள் இருக்கின்றன. நாங்களும் இருக்கிறோம். ஆனால் எங்களில்

* Page 310. 'Malkote through the ages'
By Academy of Sanskrit researches Edited by Prof. Prabakhar.

யாருக்கும் இந்த யோசனை தோன்றவில்லை. தேவரீருக்கு மட்டுமே தோன்றுகிறது. மகான்கள் பல்வேறு ஸ்தலங்களுக்கு விஜயம் செய்ய வேண்டும் என்று கூறப்படுவது இதனால் தான். அவர்கள் பாதம் படியும் போது பூமி புனிதமடைகிறது. பூமியில் உள்ள மரங்களும் மலைகளும் சிலிர்க்கின்றன. அவர்களது பார்வையில் புதியன தெரிகின்றன. சிந்தனையில் புதியன பூக்கின்றன. அப்படித் தான் இப்போதும் நடக்கிறது" என்றான் தொண்டனூர் நம்பி.

"நீ கூறியது சரியாகத் தோன்றவில்லை நம்பீ. சரியாக இருக்குமானால் நான் ஏன் திருவரங்கத்தை விட்டுத் தொண்டனூருக்கு வரப் போகிறேன்?" என்று கேட்டார் இராமானுஜர்.

"தொண்டனூருக்கு வராமல் தேவரீர் திருவரங்கத்திலேயே இருந்திருந்தால் ஏரி அமைக்கும் எண்ணம் யாருக்கும் வந்திருக்காதே சுவாமி? அதற்காகத்தான் திருவரங்கத்துப் பெருமான் தேவரீரை இங்கே அனுப்பியிருக்கிறான் என்றே தோன்றுகிறது."

"அரங்கன் நாடகமேயன்றி வேறில்லை நம்பி. நம் எண்ணங்கள் கூட அவன் தான். நம்மாழ்வார் அவர்களே பெருமான் தன்னைக் கருவியாக்கித் தன்னைப் பற்றி எழுதிக் கொண்டான் என்று பிரபந்தத்தில் கூறவில்லையா?* என்று கேட்ட இராமானுஜர் "என் யோசனைக்கு நீ பதில் கூறவில்லையே நம்பீ?" என்றார்.

"பதில் கூறுவதாவது? தேவரீர் கட்டளை என்றே ஏற்றுக் கொண்டேன். தொண்டுக்காகப் பிறந்தத் தொண்டனூர் மக்கள் தங்கள் தொண்டுக்காகக் காத்திருக்கிறார்கள் சுவாமி. நடத்தி விடலாம்."

"நம்பீ! நம்பிக்கைதான் மனிதனின் முதல் படி. ஆர்வம் இரண்டாவது படி. தொண்டுள்ளம் மூன்றாவது படி. இம்மூன்று படிகளில் ஏறாமல் முயற்சி நான்காவது படியில் ஏறமுடியாது. நான்கு படிகளிலும் முறையாக ஏறி விட்டால் மற்ற படிகளில் பரமனது அருள் அழைத்துச் செல்லும். நம் நாடு மனித உழைப்பில் இணையற்றது. இங்கே உள்ளவர்கள் தங்கள் அங்கங்களின் உழைப்பை நம்புகிறார்கள். நல்குகிறார்கள். எனினும் பொருளும் தேவை நம்பி. உழைக்கும் கரங்களுக்குக் கணையாழியை அணிவிக்க முடியாவிட்டாலும் கூலி நிச்சயமாகத் தர வேண்டும். நான் திருவரங்கத்தில் இருந்திருந்தால் நிலைமை

---

* 'இன்றென்னைப் பொருளாக்கித் தன்னையென்னுள் வைத்தான்
என்றன்றி செய்தேனோ என்நெஞ்சில் திகழ்வதுவே'-

நம்மாழ்வார் திருமொழி 6-8-9.

வேறாக இருந்திருக்கும். ஆனால் இப்போது நான் இங்கே ஒன்றுமே இல்லாத சன்யாசியாகத்தான் வந்திருக்கிறேன். இன்று தான் காவியும் அணிந்தேன். ஆகவே பொருளை நாம் யாசிக்க வேண்டிய நிலையில் இருக்கிறோம். நீ கொங்கு பிராட்டியின் இருப்பிடத்திற்குச் சென்று அவளது கணவன் ஸ்ரீரங்கதாசனிடம் ஆயிரம் பொன்னைக் கடனாக வாங்கி வா. பிறகு திருப்பி விடலாம்."

"சுவாமி! பெருமாளின் அருள் இங்கே பூரணமாக இருக்கிறது. தாங்கள் தொண்டனூருக்கு வரப் போவதை ஸ்ரீரங்கதாசன் எப்படியோ அறிந்திருக்கிறார். முந்தாநாள் அவரே வந்து ஆயிரம் பொன்னைத் தங்கள் செலவுக்காக அளித்து விட்டுச் சென்றார்.* கொங்கு பிராட்டிக்கு உடல் நலம் சரியில்லாததால் உடனே திரும்பி விட்டார்."

இராமானுஜரின் கண்கள் பனித்தன.



துவார சமுத்திரத்தில் இரண்டு நாட்கள் இருந்து நோட்டம் விட்டார் நீலகேசி.

மன்னனோ அவனைச் சேர்ந்தவர்களோ தொண்டனூருக்குச் செல்லவில்லை. இராமானுஜரைக் கைது செய்வதற்கான ஆணையும் பிறப்பிக்கப் படவில்லை.

இதையறிந்த நீலகேசி "வழக்கம் போல மன்னன் தந்திரமாகப் பேசி ஏமாற்றி விட்டான்" என்று கருதிக் கொண்டார்.

தனக்கும் தன் மதத்திற்கும் மன்னன் தரும் ஆதரவு சந்தேகத்திற்கு உரியதாகி விட்ட நிலையில் இராமானுஜர் என்றும் தமிழகத்து வைஷ்ணவர் தன் சீடர் படைகளோடு தொண்டனூருக்கு வந்திருப்பது நிச்சயமாக சமண மதத்திற்கு கெட்ட காலத்தையே சிருஷ்டிக்கக் கூடியது என்று நினைத்து நீலகேசி ஜெயதேவருடன் ஆலோசித்து உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் சரவண பெலகுலாவை நோக்கிப் புறப்பட்டார்.

பல்லக்கிலேயே புறப்பட்ட அவர் வழியில் இருந்த வர்த்தமானீச்சுரப் பள்ளியில் ஒருநாள் தங்க உத்தேசித்து அங்கே தங்கினார்.

"ஏதாவது விசேஷம் உண்டா?" என்று கேட்டார் விஹாரத்துத் துறவிகளிடம்.

---

* பக்கம் 264. 'ஸ்ரீ ராமானுஜ விஜயம்.'

By. சுப்ரமணிய சிவம்.

"சமண மதத்தவர் தாங்கள் விடுத்த கோரிக்கையின் படி நிதி அளித்து வருகிறார்கள்" என்றார்கள் துறவிகள்.

பிறகு அவர்களே பேசமுற்பட்டு "இன்று மாலை உபன் யாசத்திற்கு ஏற்பாடு செய்யலாமா?" என்று கேட்டார்கள்.

உபன்யாசத்திற்கெல்லாம் நீலகேசி தயாராக இல்லை.

"இந்த விஹாரத்தின் தலைமைத் துறவியைப் பேசச் சொல்லுங்கள்" என்றார்.

"சுவாமி! திங்கள் என்ற பெண்மணி துவாரசமுத்திரத்தில் இருந்து வந்து உங்களுக்காகக் காத்திருக்கிறாள். நீங்கள் ஏதோ விசாரணை செய்யப் போவதாகச் சொன்னீர்களாம். விசாரணை முடியும் வரை இங்கேயே இருப்பதாகச் சொல்லி அன்னதான கூடத்திலேயே கிடக்கிறாள்" என்றார்கள் துறவிகள்.

"எந்தப் பிரச்சனையைத் தீர்ப்பது என்று புரியவில்லை. அதே சமயம் அந்தப் பெண் பாவம். அனாதை. அவளுக்கு நல்ல உணவு, உடைகளைக் கொடுங்கள். அவள் வைராக்கியம் பிடித்தவள். விசாரணை செய்து குற்றவாளியைக் கண்டு பிடிக்காத வரை அவள் இந்த இடத்தை விட்டுப் போக மாட்டாள்" என்றார் நீலகேசி.

துறவிகள் உடனே சென்று அவளை நீராடும் படிச் சொல்லி புத்தாடைகளைக் கொடுத்து நல்ல உணவையும் கொடுத்தார்கள்.

"அடிகளார் வந்து விட்டாரா ஐயா?" என்று ஆவலோடு கேட்டாள்.

"வந்து விட்டார் பெண்ணே! நீ விரும்பிய படிச் சிறிது நேரத்தில் விசாரணையைத் துவக்க விருக்கிறார். அதற்காகவே எல்லா துறவிகளையும் பணியாளர்களையும் வரச் சொல்லியிருக்கிறார்" என்றார்கள் துறவிகள்.

"விசாரணையில் குற்றவாளி கிடைத்து விட்டால் என்ன தண்டனை வழங்குவார்கள்?"

"அதை அவர் தான் முடிவு செய்வார். விசாரணை முடியும் வரைக் காத்திரு" என்று கூறிவிட்டு அகன்றார்கள் துறவிகள்.

அவளுக்குப் பெறும் ஆறுதலாக இருந்தது.

அதோடு கற்பை இழந்த பெண்களுக்குப் பரிகாரம் இருக்கிறதா இல்லையோ - கற்பை அழித்தவன் தண்டிக்கப் பட்டால் மன ஆறுதல் கிடைக்கும்.

தான் காத்திருந்தது வீண் போகவில்லை என்று நினைத்தபடி காத்திருந்தாள் அவள்.

ஒரு நாழிகைக்குப் பிறகு விஹாரத்தின் உள்ளேயிருந்து சத்தம் வரவே அங்கு சென்றாள்.

அங்கே நீலகேசி விஹாரத்துத் துறவிகளையும் பணியாளர் களையும் நிற்க வைத்துச் சாடிக் கொண்டிருந்தார்.

“விஹாரம் என்பது மிகவும் தூய்மையான இடம். வழி பாட்டிற்குரிய இடம். மரியாதைக்குரிய இடம். நம்பிக்கைக்குரிய இடம். அதனால்தான் இங்கே சமணர்கள் மட்டுமின்றிப் பிற சமயத்தினரும் வேறுபாடு இன்றி வந்து தொழுது விட்டுப் போகிறார்கள். நம்பிக்கையோடு வந்து தொழுது விட்டுச் செல்கிற இடமானது ஒரு பெண்ணின் கற்புக்கு உலை வைக்கிற தென்றால் அது ஆலயம் என்றத் தகுதியை இழந்து பிணங்களைத் தாங்கும் சுடுகாடு ஆகிறது. அப்படித்தான் இந்த விஹாரத்தின் நிலை. வெட்கப் பட வேண்டிய நிலை. நம்மை யெல்லாம் தலைதூக்க முடியாமல் செய்திருக்கிறது அச் செயல். அந்தப் பெண்ணிற்குக் கற்பு போனது வேதனையானது என்றால் கற்பைச் சூறையாடியவன் யார் என்று தெரியாமல் போனது இரட்டிப்பு வேதனையானது. ஏற்கனவே இந்த மதத்தில் பெண்ணாய் பிறந்தவர்கள் அவ்வாறு பிறந்ததற்காக வெதும்பி எப்போது இறப்பு வரும் என்று காத்திருக்கிறார்கள். அப்படிப் பட்டவர்களுக்கு கற்பு பங்கமும் நேர்ந்தால் அவள் என்ன செய்வாள்? எப்படித் துடிதுடித்துப் போயிருப்பாள்? அவள் இறந்தே போயிருக்கலாம். ஆனாலும் உயிரோடு இருப்பதற்குக் காரணம் அற்ப வாழ்க்கையை வாழ வேண்டும் என்பதற்காக அல்ல. குற்றம் புரிந்தவன் தண்டிப்பதைக் காண வேண்டும் என்பதற்காகத் தான். நாடு வேறாக இருந்தாலும் குற்றவாளிகள் தண்டிக்கப் பட வேண்டும் என்ற விதி மட்டும் ஒன்றுதான். தண்டனை ஒன்றுதான் மக்களைக் குற்றங்களிலிருந்து தடுக்கும்.”

நீலகேசி இவ்வாறு பேசிய போது ஒவ்வொரு வார்த்தையும் அமுதத் துளிகளாக வந்து விழுந்தன அந்தப் பெண்ணிற்கு.

இவரைப் போன்றத் துறவிகள் இருக்கும் போது குற்றங்கள் மீண்டும் மீண்டும் நடக்காது. குற்றவாளிகள் தப்ப மாட்டார்கள் என்று நினைத்து மகிழ்ந்தாள்.

உள்ளே நிலகேசியின் பேச்சு முடிந்தது. வெளியே வந்த அவர் அப்பெண்ணைப் பார்த்து “வா. நீ எங்கே படுத்திருந்தாய் என்பதைக் காட்டு” என்றார்.

திங்களழகி அவரை அழைத்துச் சென்றாள். கல்படுக்கை இருந்த அறையைக் காட்டினாள்.

அந்த அறைக்குக் கதவு இல்லாததைக் கவனித்தார் நீலகேசி.

யார் வருவதானாலும் கதவு இல்லாத அந்த அறையின் வாயில் மூலமாகத்தான் வரவேண்டும் என்பதும் புரிந்தது.

"உனக்கு எங்கேயெல்லாம் காயம் ஏற்பட்டது திங்களழகி?" என்று கேட்டார் நீலகேசி பரிவுடன்.

"இப்போது காயங்கள் எதுவுமில்லை சுவாமி. ஆறி விட்டன" என்றாள் திங்களழகி.

"காயம் ஆறிவிட்டாலும் வடு இருக்கும் அல்லவா? அவற்றைக் காட்டு. குற்றவாளி சிக்கிவிட்டான். அவன் கூறிய சில விஷயங்களை உறுதிப் படுத்திக் கொள்வதற்காகத் தான் காட்டும் படி கூறுகிறேன். நான் பற்றுகளை அறவே விட்டொழித்த துறவி. இச்சைகளை ஆணி வேரோடு அழித்தவன். உனது உடலும் சருமமும் எனக்குத் தெரியாது. எலும்புகள் தான் தெரியும். வெட்கத்தை விட்டு விட்டுக் காட்டு. விசாரணைக்கு நீ ஒத்துழைக்கா விட்டால் குற்றவாளியைக் கண்டு பிடிக்கும் பொறுப்பை நான் விட்டு விடுவேன்" என்றார் நீலகேசி.

அவர் கூறுவது சரிதான் என்று உணர்ந்த அவள் "அந்தப் பாவி என் உதடுகளையும் கன்னங்களையும் கடித்திருக்கிறான்" என்றாள்.

அவர் அவளது உதடுகளையும் கன்னங்களையும் பார்த்து விட்டு "விடு எதுவும் இல்லை. அப்புறம்?" என்றார்.

"எனது தனங்களை...." என்று அவள் ஆரம்பித்து நிறுத்தினாள்.

"காட்டு பார்க்கலாம்" என்றார் நீலகேசி.

"அங்கே ஒன்றுமில்லை சுவாமி"

"அதை நான் சொல்ல வேண்டும். காட்டு" என்றார் நீலகேசி.

அவள் ஆடைகளை விலக்கி தனது தனங்களைக் காட்டினாள்.

இரண்டு தனங்களையும் கைகளில் தாங்கிய நீலகேசி "இரண்டும் அபாரமாக இருக்கின்றன திங்களழகி. தேவ அரசர்களின் மனைவிமார்கள் இருக்கிறார்களே அவர்களுக்கு வயதானாலும் தனங்கள் இளமையாக இருக்குமாம்"* என்றார்.

அவரது பேச்சைக் கேட்ட திங்களழகி அதிர்ந்தாள்.

---

* 'முலை முற்றா இளமையார்' பாடல் எண் 2059. சூளாமணி.

"சுவாமி! இதென்ன நீங்கள் இப்படிப் பேசுகிறீர்கள். விடுங்கள்" என்றாள்.

ஆனால் அவரது பிடியோ எமப் பிடியாக இருந்தது. வலிக்கவும் செய்தது.

"உனது பின் எழில்களைக் கடித்தானா அந்தக் காமாந்தகன்?" என்று சகஜமாகக் கேட்டார் நீலகேசி.

"சுவாமி! நீங்கள் கேட்பது" என்று திகிலோடு கேட்டாள் திங்களழகி.

அவரோ "அவற்றின் ஒவ்வொன்றிலும் பளிச்சென்ற மச்சங்கள் இருக்கும் போது யாராக இருந்தாலும் கடிக்கத் தான் தோன்றும். ஆகவேதான் கடித்தேன்" என்றார் சிரித்தபடி.

அவள் மேலும் அதிர்ந்து "நீங்களா என்னைச் சீரழித்தீர்கள்?" என்று கேட்டாள்.

"அது என்ன அர்த்தமில்லாத வார்த்தை? பெண்கள் பிறவி முட்டாள்கள் என்றும் அவர்களது பிறவி தேவையில்லாதது என்றும் சூளாமணி சொல்கிறது. மேரு மந்தார புராணம் சொல்கிறது. இதில் நீ கற்பு என்கிறாய். சீரழிவு என்கிறாய். இதற்கெல்லாம் அர்த்தமிருக்கிறதா?" என்று கேட்டு விட்டு அவளது தனங்களை மேலும் அழுத்தினார் நீலகேசி.

திங்களழகிக்கு அவரது பேச்சும் செயலும் அதிர்ச்சி மேல் அதிர்ச்சியாக இருந்தது. எதையும் நம்பமுடியவில்லை.

துறவியின் மேல் அவள் அபாரமான மரியாதையை வைத்திருந்தாள் அவரைத் தெய்வமாகவே கருதினாள். அவர் இவ்வளவு கீழ்த்தரமானவராக இருப்பார் என்று சிறிதும் எதிர்பார்க்க வில்லை.

ஏமாற்றத்தில் அவளது கண்கள் கலங்கின.

"சுவாமி! நீங்களே என்னைச் சீரழித்து விட்டு, நீங்களே விசாரணை அதிகாரியாகி, நீங்களே இப்போது தவறு செய்கிறீர்களே! இது நியாயமா? தர்மமா? முறையா? அடுக்குமா? ஓர் துறவி இப்படி நடந்து கொள்ளலாமா?" என்று பரிதாபமாகக் கேட்டாள்.

"மீண்டும் மீண்டும் அர்த்தமற்றச் சொற்களை அடுக்கி என்னைக் கோபப் படுத்தாதே. நான் அநுபவிக்கும் நூறாவது அழகி நீ. ஆனந்தம் துய்ப்பதை விட்டு விட்டு உளறிக் கொண்டு

நிற்காதே" என்று கூறி அவளைத் தூக்கிக் கல்படுக்கையில் படுக்க வைத்து கன்னங்களையும் உதடுகளையும் நெருங்கினார்.

"திங்கள் என்றால் சந்திரன். சந்திரனைப் போன்ற அழகி நீ. உன்முகம் கூட சந்திரனைப் போலப் பளிச்சென்று இருக்கிறது. உன் பெயர் பொறுத்தமானது. உன் பேச்சு தான் பொறுத்த மற்றது" என்று கூறி அத்துமீற முயன்றார்.

அவள் எழுந்து கொண்டு "வேண்டாம் சுவாமி. நடந்த அவலம் போதும். அதோடு விட்டு விடுங்கள். நான் போகிறேன்" என்றாள் வேதனையோடு.

"உன்னை நான் அழைக்கவில்லை அழகி. மீண்டும் மீண்டும் நீயாகத்தான் வந்தாய்."*

"உங்களைத் துறவியாக நம்பி வந்தேன். நீதிமானாக நம்பி வந்தேன். வர்த்தமான மகாவீரராக நம்பி வந்தேன்."

"இப்போது நான் யாரென்பது புரிந்து விட்டதல்லவா? இங்கு நிலவும் நிலவரம் என்ன என்பது தெரிந்து விட்டதல்லவா? அதற்கேற்ப நடந்து கொள். அதுதானே புத்திசாலித் தனம்."

"நான் முட்டாள். முட்டாள். புத்திசாலித் தனத்திற்கும் எனக்கும் வெகுதூரம். என்னை விட்டு விடுங்கள்."

"திங்களழகி! இந்தச் சந்தர்ப்பத்திற்கு நீ முட்டாளாக இருந்தாலென்ன? அறிவாளியாக இருந்தாலென்ன? நாமென்ன வாதப் போரா நடத்தப் போகிறோம்? இங்கே நான் ஆடவன். நீ பெண். இந்த நினைப்பு தான் வேண்டும். ஏனென்றால் இது தான் நிஜம்."

"ஐயா! கோலத்திற்குச் சிறிதும் சம்பந்தமில்லாமல் பேசுகிறீர்கள். நடந்து கொள்கிறீர்கள். உங்களைப் போய் உண்மையானத் துறவி என்று மக்கள் எப்படி நம்புகிறார்கள்?"

"உண்மை தூங்கிக் கொண்டிருக்கும் போது பொய் தான் விழிப்பாகவும், விறுவிறுப்பாகவும், வேகமாகவும், வெந்து பக்குவப் பட்டதாகவும் இருக்கும். உண்மை விழித்துக் கொள்வதற்குள் பொய் பற்பல வெற்றிகளைப் பெற்று விடும்."

"அடிகளே! இது சமணத்திற்கு நீங்கள் செய்யும் துரோகம் ஆகாதா?"

* Page 130.
'The Kalabrahs in the Pandya Country and thier impact on the Life and Letters there'
By. M. Arunachalas

"உன்னை அனுபவிப்பது வேறு. சமணத்தை வளர்ப்பது வேறு. நான் மதத்திற்கு உரிய அனைத்தையும் செய்து கொண்டிருக்கிறேன். அந்தப் பணிக்கு உன் போன்ற அழகிகள் ஒரு போதும் தடையாக இருக்க முடியாது" என்று கூறிய நீலகேசி "என்னை உனக்கு ஏன் பிடிக்கவில்லை? மொட்டைத் தலையும் காவி உடையும் கொண்டிருப்பதால் வெறுக்கிறாயா? கோலம் தான் இது. ஆனால் நான் ஐம்பது இளைஞர்களுக்குச் சமம்" என்று கூறி எதிர்பாராத காரியம் ஒன்றைச் செய்தார்.

திங்களழகி பேரதிர்ச்சியடைந்து கைகளால் கண்களை மூடிக் கொண்டாள்.

இதயத்துடிப்பு நின்று விடும் போலிருந்தது.





உபதேசம் என்பது ஊருக்குத்தான் என்பது நீண்ட காலமாகவே உபதேசிகளின் கொள்கையாக இருக்கிறது. கேட்பவர்களில் நான்கு பேர் கடைப்பிடிக்க முற்பட்டால் அதுவே போதும் தான் – நீலகேசி




தான் ஐம்பது இளைஞர்களுக்குச் சமம் என்று சொல்லி விட்டு அதற்கு அத்தாட்சியைக் காட்டுவது போல் ஆடையை இழுத்தெறிந்து விட்டுத் திகம்பரர் கோலத்தில் நீலகேசி நின்றதும் காணவொண்ணா காட்சியைக் கண்டு அலறிய திங்களழகி கைகளால் கண்களை மூடிக் கொண்டாள்.

அதுவரை அப்படியொரு பயங்கரக் காட்சியைக் கண்டதில்லை. ஐம்பது இளைஞர்களின் பலம் இப்படியாக இருக்கும் என்று எதிர்பார்க்கவில்லை. இதயத் துடிப்பு நின்று விடும் போலிருந்து.

அவரோ அசரவில்லை.

"எதற்காகப் பயப்படுகிறாய் அழகி? உண்மையில் நான் ஆடைகளற்ற திகம்பரனாகத்தான் இருந்தேன். விஹாரமே உலகம் என்றிருந்தேன். அரசியல் விவகாரங்களில் தலையிட ஆரம்பித்த பிறகுதான் காவியணிந்து சுவேதம்பரன் ஆனேன்" என்றார்.

"முதலில் ஆடையை அணியுங்கள். மயக்கம் வந்து விடும் போலிருக்கிறது" என்றாள் மூடிய கண்களை எடுக்காமலேயே.

அவர் காவியை எடுத்துச் சுற்றிக் கொண்டு "பார்த்ததற்கே இப்படி அலறுகிறாயே?" என்று கேட்டார்.

அவள் கைகளை அகற்றி கண்களைத் திறந்தாள். தற்போது தான் மூச்சே வந்தது போலிருந்தது.

நீலகேசி ஆடையை அணிந்து கொண்டாலும் அவளது கண்களிலிருந்து அந்தக் காட்சி மட்டும் அகலவில்லை. அவளைக் குமட்டியது.

"இப்படியா இருப்பார்கள் ஆடவர்கள்?" என்று நினைத்து அதிர்ந்தாள்.

ஜீரணிக்க முடியவில்லை.

நீலகேசியோ அவளது உணர்வுகளைப் பற்றிக் கவலைப் படாமல் "இதோ பார் பெண்ணே! நீ திகைப்பது புதியதாக இருக்கலாமே தவிர வியப்பானது ஒன்றுமில்லை. நான்

[illegible]யணை பெலகுலாவிற்குப் போக வேண்டும். வீணாகப் [illegible]ிக் கொண்டிருக்காமல் - வீணாக வியந்து வியர்த்துக் கொண்டிருக்காமல் ஆனந்தத்தைத் துய்ப்பதற்கு வா. ஆனந்தப்படும் போது இந்தத் திகைப்பு, வெறுப்பு எல்லாம் விலகிப் போய் ஆனந்தம் மட்டுமே ஆகா என்றிருக்கும். அதற்குப் பிறகு நீ என்னை விடமாட்டாய். அது மட்டுமல்ல. ஆடவர்களைக் கண்டால் பற்றிக் கொள்வாய். நாம் இருவரும் விரும்பி இணைந்தால் இருவருக்கும் பேரின்பம். நீ மறுத்தால் மயக்கமடைய வைத்து அன்று போல் இன்றும் இன்பம் துய்ப்பேன். எனக்கு மட்டுமே ஆனந்தமாக இருக்கும்" என்றார்.

"சுவாமி! சற்றுமுன் விஹாரத்தில் நிரம்ப நியாயங்களைப் பேசினீர்களே! அதெல்லாம் என்ன?" என்று கேட்டாள் திங்களழகி.

"குப்பை. வெறும் குப்பை. எனக்கவை குப்பை. ஊருக்கோ உபதேசங்கள்."

"நல்லவற்றை ஊருக்கு உபதேசித்து விட்டு நீங்கள் கீழ்த்தரமாக நடக்கலாமா?"

"எல்லோருமே அப்படித்தான். உபதேசம் என்பது ஊருக்குத்தான் என்பது நீண்டகாலமாகவே உபதேசிகளின் கொள்கையாக இருக்கிறது. கேட்பவர்களில் நான்கு பேர் கடைப்பிடிக்க முற்பட்டால் அதுவே போதும்தான்" என்று சொன்ன நீலகேசி "பெண்ணே! இந்த உடல் நிரந்தரமானதல்ல. ஞானியின் உடலும் அஞ்ஞானியின் உடலும் ஒரு நாள் அழியத் தான் போகிறது. அதற்கேன் கட்டுகள்? கட்டுப்பாடுகள்? உடல் இருக்கும் வரை உடலுக்குரிய இன்பங்களை அனுபவிப்பது தான் மனிதனின் நோக்கமாக இருக்க வேண்டுமே தவிர அதைக் கட்டுப்பாடுகளால் சிறைப்படுத்த நினைப்பது நமக்கு நாமே சவக்குழியை வெட்டிக் கொள்வதாகும்."

நீலகேசியின் இரட்டை நாக்கு எப்படியும் பேசும் என்பது திங்களழகிக்குப் புரிந்தது. அவர் மீதிருந்த மரியாதை முற்றிலுமாக விலகி வெறுப்பே உண்டாகியது.

"எனக்கு நீங்களும் வேண்டாம். உங்கள் உபதேசமும் வேண்டாம். என்னை விட்டு விடுங்கள். அதிலாவ்து புண்ணியத்தைக் கட்டிக் கொள்ளுங்கள்" என்றாள்.

"என் உபதேசத்தைக் கேட்க வேண்டாம். அதே சமயம் நீ எனக்கு உபதேசம் செய்யாதே ஏற்கனவே உன்னைக் கெடுத்தவன் நான். இப்போது என்ன தயக்கம்?"

“நான் திருமணம் செய்து கொண்டு வாழ விரும்புகிறேன். உங்களிடம் கெட்டுச் சீரழிய விரும்பவில்லை.”

“நீ என்ன வேண்டுமானாலும் செய்து கொள். இப்போதைக்கு என்னை உன்மதத்தம் கொள்ள வைத்து அந்த இரண்டு மச்சங்களைக் காட்டு.”

அவள் மறுத்தாள். கூச்சலிட்டாள்.

“நீ கதறினால் கூட யாரும் வரமாட்டார்கள். உன்னைக் கடித்து குதறினால் கூட ஒருவரும் உதவமாட்டார்கள். இங்கே உள்ளவர்கள்தான் எனக்குப் பாதுகாப்பு. இங்கே தான் இதுவரை தொண்ணூற்று ஒன்பது அழகிகளை அனுபவித்திருக் கிறேன்” என்றார் அவர்.

அவள் முடியாது என்றாள்.

அவளை விட அவர் தயாராக இல்லை.

அவளைத் தள்ளிப் புரட்டிப் போட்டு மச்சங்களைப் பார்த்த அவர் காமத்தின் உச்சங்களைத் தொட்டார்.

அவள் சக்கையாகிப் போனாள்.

சம்மதத்துடன் நடக்கும் காமம் சந்தோஷமானது. அது சிறியதாக இருந்தாலும் பெரியதாக இருக்கும்.

ஆனால் பெரியதாக நடத்தப்பட்ட காமத்தில் அவளது சம்மதம் இல்லாததால் அவளுக்குக் கசந்தது.

‘சீ’ என்றிருந்தது

அவரது வேகமும் வக்கிரமும் அவளுக்கு அருவருப்பாக இருந்தன.

மரமொன்றைச் சாய்த்து வீழ்த்திய யானையைப் போல பெருமிதத்தோடு நின்ற நீலகேசி “அவ்வளவுதான்” என்றார்.

அதற்கு அவள் என்ன பதிலைக் கூறமுடியும்?

“இப்போது கசக்கும். போகப் போக இனிக்கும். வேண்டும் வேண்டும் என்பாய் பார்” என்று சொல்லிவிட்டு அறைக்கு வெளியே வந்து நீலகேசி பணியாட்களைப் பார்த்து “இவளைத் தூக்கி நச்சுப் பொய்கையில் எரியுங்கள்” என்று கூறிவிட்டு அகன்றார்.

அங்கிருந்து அன்றிரவே சரவண பெலகொலாவிற்குச் சென்ற நீலகேசி ஜெயதேவருடன் நீண்ட நேரம் ஆலோசனை நடத்தினார்.

“எனக்குப் பிட்டி தேவனின் மீது சொட்டு கூட நம்பிக்கை இல்லை” என்றார் நீலகேசி தீர்மானமாக.

"அதோடு அவன் நமக்கு ஏமாற்றத்தையும் தருகிறான். நம்மைக் கிண்டலாகப் பார்க்கவும் செய்கிறான். அவனுக்கு நம்மீதான பயமும் மரியாதையும் போய்விட்டது. ஒருவர் தன் மீது வைத்திருக்கும் பயத்தையும் மரியாதையையும் விலக்கிக் கொள்கிறார் என்றால் நம்மைப் பின்பற்றுவதை விட்டுவிட்டு தன் வழியை உண்டாக்கிக் கொண்டு தடை போடுகிறார் என்று பொருள்" என்று மேலும் சொன்னார் நீலகேசி.

அவருடன் பேச வேண்டிய கட்டாயத்திற்காக வாய்த் துணியை அவிழ்த்திருந்த ஜெயதேவர் "இதெல்லாம் பழைய விஷயம் நீலகேசி. வேலாபுரத்தில் கட்டப்பட்டு வரும் ஆலயத்தை இடிப்பதற்கு பதிலாக என்றைக்குக் கட்டுமானத்தை மகாராஜா தொடர்ந்தாரோ அப்போதே நம்பிக்கை, மரியாதை எல்லாம் போய் விட்டது. இப்போது போவதற்குப் புதியதாக எதுவும் இல்லை" என்றார்.

"நான்கு ஆண்டுகளாகப் பொறுத்திருந்தோம். பற்பல சமயங்களில் சொல்லியும் பார்த்து விட்டோம். சாதாரணமாக தட்டினால் கொட்டி விடும் மனிதனாக இருந்த பிட்டிதேவன் இப்போது கொட்டினால் கூட அசராத சக்தியாக மாறி யிருக்கிறான். மரியாதைக்கு அடையாளமாக இருந்த அவன் அவமரியாதையை வெளிப்படையாகக் காட்டத் தொடங்கி விட்டான்" என்றார் நீலகேசி.

"பாகுபலியின் மகா அபிஷேகத்திற்கு எப்போது அவன் வரவில்லையோ அப்போதே இது தெரிந்து விட்டது" என்றார் ஜெயதேவர்.

"தங்களையாவது மன்னனிடம் பேச வைக்கலாம் என்று பார்த்தேன். அவன் தங்களையும் அவமதித்து விடுவான் என்று தோன்றவே அந்த முயற்சியை நான் கைவிட்டு விட்டேன். தாங்கள் மனம் வெறுத்து சல்லேகனையில் அமர்ந்து விட்டதாகச் சொல்லிப் பார்த்தேன். அவன் அதைப் பொருட் படுத்தவே இல்லை."

"அவன் சிற்றரசனாக இருந்தபோது நமக்குச் சீடனாக இருந்தான். பேரரசனாக ஆனபின்பு நம்மைத் தன் சீடர்களைப் போல் நினைக்கிறான்."

"மிகவும் சரியாகச் சொன்னீர்கள் ஆச்சார்யரே. இப்போ தெல்லாம் வார்த்தைகளை ரம்மியமாகக் கையாளுகிறான். செயல்களிலோ இரம்பத்தைப் போட்டு அறுக்கிறான். அவன் பேசும் போது யாராலும் குறை சொல்ல முடியாத அளவிற்கு நடிகர் திலகமாக இருக்கிறான். என்ன ஆணவம்? என்றா

சத்தாய்ப்பு? அவனுக்கு நாம் கற்றுக் கொடுத்த காலம் போய் அவனிடமிருந்து கற்றுக் கொள்ள வேண்டிய காலம் வந்து விட்டது. உண்மையாகவே நாமிருவரும் சல்லேகனை புரிந்து உயிரை விட்டு விடலாமா என்று தோன்றுகிறது."

"என்ன பேசுகிறாய் நீ? நம் காலின் கீழே இருந்தவர்கள் தோளுக்கு மேலே வந்து உட்கார்ந்து விட்டார்கள் என்றால் நாம் பயந்து விடுவதா? தேளான நாம் தோளுக்கும் வாளுக்கும் பயந்து சாவதற்கு முயல்வதா? நீ எப்படிக் கோழையானாய் நீலகேசி?"

"கோழையாகவில்லை ஆச்சார்யரே. வெறுப்பின் விளிம்பு வந்து வெதும்புகிறேன். வேதனையாகப் பேசுகிறேன். சாதனை புரிய வேண்டிய நேரத்தில் சோதனை வந்து விட்டதே என்று சோகப் படுகிறேன். பிட்டிதேவன் நம்மைப் புறக்கணிப்பது ஒருபுறமென்றால் தொண்டனூரில் இராமானுஜன் என்ற ஸ்ரீவைஷ்ணவ மடாதிபதி வந்திருக்கிறான். அந்த வரவு நல்ல வரவே இல்லை."

"ஏன்?"

"அவன் தமிழகத்தில் வைணவத்திற்குத் தலைவனாகவும் சைவத்தை வீழ்த்தக் கூடியச் சக்தியாகவும் இருந்திருக்கிறான். அபரிமிதமான வளர்ச்சி, எழுச்சி. அதைக் கண்டு பொறாதச் சோழ மன்னன் குலோத்துங்கன் இராமானுஜனைச் சிறை பிடிக்க வலையை வீசியிருக்கிறான். தந்திரத்தால் தப்பிய இராமானுஜன் தமிழ் நாட்டிலிருந்து இங்கு ஓடி வந்து விட்டான். அங்கு சென்று கொண்டிருந்த காரியத்தை இங்கே ஆரம்பித்து விட்டான்."

"என்ன காரியம்?"

"வைணத்தை வளர்க்கும் காரியம்தான். திருவரங்கத்தில் இருந்து கொண்டு பிற மதத்தவரை வைணவத்திற்கு மாற்றித் தகிடுதித்தம் செய்து கொண்டு வந்த அவன் இங்கேயும் மக்களை மாற்றி வைணவர்களாக்குகிறான். பல்வேறு சமணர்கள் மயங்கிப் போய் வைணவர்களாக ஆகிக் கொண்டிருக்கிறார்கள்."

"அப்படியா?"

"ஆமாம் ஆச்சார்யரே! மன்னன் ஒரு பக்கம் புறக்கணிக்கும் நிலை இந்த இராமானுஜன் வேறு செயல்பட்டால் சமணம் என்னாகும் என்று யோசித்து பாருங்கள். இராமானுஜன் ஒரு விஷக் காற்றைப் போன்றவன். மற்ற விஷயங்களை விட வேக மாகவும் விரைவாகவும் பரவி வீசக் கூடியது காற்று ஒன்று தான். அதில் வைணவம் என்னும் விஷம் கலந்து விட்டால் அது மக்களை மயக்கி விடும். ஒண்ட வந்தப் பிடாரி ஊர்ப் பிடாரியை

விரட்டியது போல் இந்த வைணவம் நமது சமணத்தை விரட்டி விடும்.”

“அதை எப்படித் தடுக்கப் போகிறாய்?”

“மன்னன் தடுப்பான் என்றும் எதிர்ப்பைத் தொடுப்பான் என்றும் வைணவத்திற்கு அடியைக் கொடுப்பான் என்று எதிர் பார்த்து ஏமாந்து விட்டாயிற்று. இனியும் அவனை நம்பிப் பயனில்லை. எனவே உடனடியாக நான் கங்கை கொண்ட சோழ புரத்திற்குப் புறப்படுகிறேன்.”

“அங்கெதற்கு?”

“இராமானுஜனைக் காட்டிக் கொடுப்பதற்காகத்தான்.”

“அதாவது....”

“அதாவது இராமானுஜன் இங்கே தலை மறைவாக இருக்கும் விஷயத்தைச் சோழ மன்னனிடம் சொன்னால் சோழ வீரர்கள் இங்கே வந்து இராமானுஜரைக் கைது செய்து கொண்டு போவார்கள். உண்மையில் இந்த விஷயத்தைச் செய்ய வேண்டியது ஹொய்சள மன்னன். அவன் செய்வான் என்று தோன்றவில்லை.”

“சோழ மன்னன் அவ்வாறு செய்ய முன் வருவானா?”

“நிச்சயம் செய்வான். அவன் தீவிர சைவன். வீர சைவன். திருநீற்றுச் சோழன் என்றே தன்னை அழைத்துக் கொள்பவன். தில்லை நடராஜர் அவனுக்குக் குலதெய்வம். சிதம்பரம் தீட்சிதர்கள் அவனுக்குக் குருமார்கள். அவர்கள் கூறியதினால் தான் இராமானுஜனைக் கைது செய்ய சோழ மன்னன் முற்பட்டான். இராமானுஜனோ சோழர்கள் எதிர்பார்க்காத மார்க்கத்தில் பயணம் செய்து இங்கே வந்து மறைந்திருக்கிறான். இந்த இடம் அவனுக்குத் தெரிந்து விட்டால் நிச்சயமாகக் கைது செய்ய உத்திரவிடுவான். அதோடு நமக்கு இன்னொரு அனுகூலமும் உள்ளது.”

“என்ன அது?”

“இராமானுஜனைக் கைது செய்ய ஹொய்சள மன்னன் மறுத்தால் சோழரது பெரும்படை கர்நாடகத்தின் மீது பாயும். ஹொய்சள மன்னன் தோற்பான் அல்லது மாள்வான். ஒரு கல்லில் இரண்டு மாங்காய்கள் விழும்.”

“நீலகேசி! நீ பேசுவதெல்லாம் ஊகத்தின் அடிப்படையிலேயே இருக்கிறது. ஆனால் ஊகம் வேறு. உண்மை வேறு.”

“உண்மையை அறிய வைப்பது ஊகம்தான். ஊகம் என்னும் வாகனத்தில் பயணம் செய்தால் தான் உண்மை என்ற ஊரை அடைய முடியும் ஆச்சார்யரே. நாம் செயல்படாமல் உட்கார்ந்திருக்க முடியாது. ஊகங்களையும், சந்தர்ப்பங்களையும் பயன்படுத்திக் கொண்டு செயல்பட வேண்டும். கங்கை கொண்ட சோழபுரத்தில் எனக்குத் தெரிந்தக் கணிகை சாருகேசி இருக்கிறாள். அவளைச் சந்தித்தால் சோழ மன்னனைச் சந்திக்க முடியும். சோழனைச் சந்தித்து விட்டால் அவனைக் கூழாக்கும் சாமர்த்தியம் என்னிடம் இருக்கிறது.”

“மிகவும் எச்சரிக்கையாகச் செயல்பட வேண்டும் நீலகேசி. உனது முயற்சி கத்தி மேல் நடப்பது போன்றது. சோழ நாட்டுப் பயணம் வெற்றிபெற்று விட்டால் இரட்டிப்பு சந்தோஷம். இரட்டிப்பு ஆதாயம். அதே சமயம் தோற்றுப் போய் விட்டால் உள்ளதும் போய்விடும். நம் தலையில் நாமே மண்ணை வாரிப் போட்டுக் கொண்டதாகி விடும்.”

“ஆச்சார்யரே! என்னைப் பற்றித் தங்களுக்குத் தெரியாதா? நான் கீழே விழ விழத் தான் மேலே வேகமாக எழுவேன். எதிர்ப்புகளும் தோல்விகளும் தான் எனக்குத் தெம்பைத் தரும். சிதையிலிருந்து சிலிர்த்து எழுபவன் தான். என்னைப் பற்றிக் கவலைப்படாதீர்கள்.”

ஜெயதேவர் சிறிது நேரம் யோசித்து விட்டு “நீலகேசி! நமது நடவடிக்கைகளைச் சற்று யோசித்துப் பார். மண்ணை எடுத்து வானத்தில் வீசினால் அது நம் மீதுதான் விழும். அது போல நடந்து கொண்டோம் நாம். பிட்டி தேவனின் மகளை நாம் குணப் படுத்தியிருந்தால் இந்த நிலை வந்திருக்காது. உயர்ந்திருப்போம். சிறந்திருப்போம். அதை நாம் செய்யவில்லை. மாறாக மன்னன் மகளைப் பிணையாக வைத்து விளையாடினோம். தற்போது மகளும் குணமடையவில்லை. நாமும் ஆதாயமடையவில்லை” என்றார்.

நீலகேசி அதற்குப் பதிலேதும் கூறவில்லை.

ஜெயதேவரைச் சந்தித்து அன்றைய தினத்திலேயே பத்து துறவிகளுடன் (அடியாட்களுடன்) புரவிகளில் ஏறி கங்கை கொண்ட சோழபுரத்திற்குச் சென்றார்.

அங்கு செல்வதற்கு ஒரு வார காலம் ஆனது. அதிகம் ஓய்வெடுக்காமல் விரைவாகப் பயணம் செய்ததாலேயே ஒரு வாரத்தில் அங்கே செல்ல முடிந்தது.

சோழர் தலைநகர் கங்கை கொண்ட சோழபுரத்திற்கு வெளியே புறஞ்சேரியில் தங்கினார் நீலகேசி. அங்கே இருந்தச்

சத்திரம் ஒன்றில் புரவிகளை விட்டு விட்டு தனது சகாக்களுடன் புறப்பட்டார்.

சகாக்களைப் பார்த்து "நீங்களெல்லாம் அடியாட்கள். அடிப்பவர்கள். உதைப்பவர்கள். வன்முறையாளர்கள். எனக்குப் பாதுகாப்பாக வருபவர்கள். ஆனால் நீங்கள் பூண்டுள்ள வேடமோ அவற்றுக்கெல்லாம் சம்பந்தமற்றது. இந்த கோலத்தில் இருக்கும் போது பொறுமையும் சகிப்புத் தன்மையும் அவசியம். சற்று கோபப்பட்டாலும் உங்கள் மீது சந்தேகம் வந்து விடும். மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். நம் எல்லோரையும் கோட்டைக்குள் அனுமதிப்பார்களா என்பது தெரிய வில்லை. கெடுபிடி அதிகமாக இருந்தால் நான் மட்டும் உள்ளே செல்கிறேன். நீங்கள் பொறுமையை இழக்காமல் இந்தப் புறஞ்சேரிக்கு வந்து எனக்காகக் காத்திருங்கள். கோட்டைக்குள் எனக்கெந்தப் பிரச்சனையும் இருக்காது" என்று கூறி "உங்களில் பழக்க தோஷமாக யாராவது ஆயுதங்களைத் தரித்திருந்தால் அவற்றை இங்கேயே வைத்து விடுங்கள் உங்களில் ஒருவர் இங்கேயே இருந்தபடி சத்திரக் காரர்களிடம் சகஜமாகப் பேசியபடி என்ன நடக்கிறது என்பதைக் கண்காணியுங்கள்" என்று சொல்லி விட்டு ஒன்பது சகாக்களுடன் புறப்பட்டார்.

கங்கை கொண்ட சோழபுரத்து கோட்டையை அணுகிய போது அதன் பிரம்மாண்டம் நீலகேசியைப் பரவசத்தில் ஆழ்த்தியது. கங்கை கொண்ட சோழனால் உருவாக்கப் பட்ட அந்தக் கோட்டை நகரம் குலோத்துங்கன் காலத்தில் முழுவதுமாக புதுப்பிக்கப்பட்டதால் புதுக் கோலத்தில் மயன் கோட்டையைப் போல மகோன்னதமாக விளங்கியது.

"ஆகா! இந்த ராஜாக்கள் ராஜாக்கள் தான்? எப்படிப்பட்ட கோட்டையைக் கட்டியிருக்கிறார்கள்? உள்ளே அவர்களது அரண்மனை எத்துணை விசாலமாகவும் விரிவாகவும் இருக்கும்! அந்த ராஜாக்கள் எவ்வளவு உல்லாசமாக இருப்பார்கள்! அந்தப் புரம் என்ன? அழகிகள் கூட்டம் என்ன! பூலோகத்திலேயே சொர்க்க லோகத்தைச் சிருஷ்டித்துக் கொள்பவர்களாயிற்றே! அவர்களை யாராவது கேள்வி கேட்க முடியுமா? நாமும் தான் துறவிகளாக இருக்கிறோமே என்ன பயன்? நமது இருப்பிடங்கள் மலைகளிலும் மலைக் குகைகளிலும் தானே உள்ளன? இந்தப் பிரம்மாண்டமும் பரமானந்தமும் அங்கே வருமா? நாங்கள் எல்லாவற்றையும் துறந்து விட்டு வறண்டு அல்லவா வாழ வேண்டும்? எதற்கு இந்தப் பைத்தியக்காரத்தனம்! துறவு, துறவறம் என்றெல்லாம் கண்டுபிடித்த மூடன் யார்? காணுமிடமெல்லாம்

சந்தோஷக் காட்சிகள் விரவியிருக்கும் போது அவற்றையெல்லாம் அனுபவிக்காமல் துறவாம்! துறவியாம்! நாம் காணும் சந்தோஷங்களை அனுபவிக்காமல் - ஆசைப்பட்டதை அடையாமல் - பற்றுகளை விட்டு விட்டு கற்பாறை மலைகள் மீதும் குகைகளுக்குள்ளும் கோட்டான்களைப் போல் எதற்காக வாழ வேண்டும்? பற்பல அழகுகள் உலகில் படைக்கப்பட்டது எதற்காக? துறப்பதற்காகவா? இல்லை. இல்லை. இருக்கவே முடியாது. வாலிப வயதில் வேண்டாமென்று விலக்கி விட்டால் வயதான பின் எந்த சந்தோஷம் வந்தாலென்ன? தூய்க்கவா முடியும்?" என்று தாறுமாறாகப் புலம்பியது நீலகேசியின் மனம்.

தன்னைத் துறவியாக்கியவரைக் கண்டபடிச் சபித்தார்.

"ம்! இனிமேல் துறவை விட்டு விட்டுச் சத்திரிய வாழ்வுக்கு வர முடியாது. அடுத்த பிறவியிலாவது அரச குமாரனாகப் பிறந்து அமோகமாக வாழ வேண்டும்" என்றெண்ணிக் கொண்டு வடக்கு வாயிலை அடைந்தார்.

"வடக்கு வாயில் எதிரிகள் வாயில். அங்கே நுழைவதற்கு அனுமதியில்லை" என்று அனுமதிக்க மறுத்து விட்டார்கள் காவலர்கள்.

கிழக்கு வாயிலுக்குப் போனார்.

"கிழக்கு வாயில் அரச வம்சத்தவர் வாயில். பிறர் நுழைவதற்கு அனுமதியில்லை" என்று தடுத்து விட்டார்கள் காவலர்கள்.

"நாங்கள் நுழைவதற்கு வாயில்களே இல்லையா? துறவிகள் வெளியிலேயே நிற்க வேண்டியது தானா?" என்று கோபத்துடன் கேட்க நினைத்த நீலகேசி, "ஐயா! நாங்கள் தூர தேசத்திலிருந்து வந்திருக்கிறோம். சோழ சக்கிரவர்த்தியை தரிசனம் செய்வதற்காக கால் கடுக்க வந்திருக்கிறோம். விரதமிருந்து தளர்ந்திருக்கிறோம். நாங்கள் பிரவேசிப்பதற்கான வாயிலைச் சொன்னீர்களானால் அலைக்கழிப்பு இல்லாமல் செல்வோம்" என்றார் கனிவான குரலில்.

"அடிகளே! தெற்கு வாசல் தான் பொது வாசல். அங்கே சென்றால் துறவியர்களை வரவேற்று உபசரிப்பார்கள். செல்லுங்கள்" என்றார்கள் காவலர்கள்.

"மிகவும் நன்றி ஐயா" என்று கூறிவிட்டுத் தன் சகாக்களோடு தெற்கு வாசலுக்குப் போனார் நீலகேசி.

தெற்கு வாயில் இதர வாயில்களை விட பெரிதாக இருந்தது.

அங்கே பலதரப்பட்ட மக்கள் உள்ளே வருவதும் போவதுமாக இருந்தார்கள்.

நீலகேசி மற்றும் அவரது சகாக்களையும் கண்ட காவலர் பதினைந்து பேர் விரைந்து வந்து வணங்கி வரவேற்று உள்ளே அழைத்துச் சென்றார்கள்.

“தமிழகம் தமிழகம்தான். இங்கு துறவிகளுக்கு இருக்கும் வரவேற்பும் மதிப்பும் வேறெங்கும் கிடையாது. விட்டலராயனும் இருக்கிறானே! பிட்டிதேவன்! பயனற்றவன். துறவிகளின் மகத்துவம் அறியாதவன். மடையன்” என்று தனக்குள் சொல்லிக் கொண்டார் நீலகேசி.

காவலர்கள் அவர்களை அழைத்துப் போய் அவர்களுக்குத் தேவையான உணவைக் கொடுத்து உபசரித்தார்கள்.

நீலகேசி பூரித்தார்.

ஆனால் காவலர்கள் அடுத்ததாகச் செய்த செயல் நீலகேசியை அதிரவைத்தது.

அவரையும் அவரது சகாக்களையும் சிறையில் அடைத்தார்கள் காவலர்கள்.





நல்லவையல்லாத விஷயங்கள் என்பது உடும்பைப் போல மனிதனைப் பிடித்துக் கொண்டு நல்லவற்றுக்குப் போகாமல் தடுத்துக் கொண்டிருக்கும். வைராக்கியமாக இருந்து விலகினால் தான் உண்மையின் பிடி கிடைக்கும் – சாருகேசி




துறவியருக்கு தமிழகம் தரும் வரவேற்பு இணையற்றது என்று நினைத்து பூரித்த நீலகேசிக்கு அடுத்த சில நிமிடங்களில் சிறைவாசம் கிடைத்து விடவே அதிர்ந்து போய் ‘இந்த உலகத்தில் யாரை நம்புவது?’ என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டார்.

இந்த அரசர்கள் எல்லாம் இப்படித்தான் இருப்பார்களா என்று வருந்தினாரே தவிர தன்னைப் பற்றி நினைக்கவில்லை.

தன்னையும் தன் சகாக்களையும் சிறையில் அடைத்த காவலர்களிடம் “இது தானா தமிழர்கள் பண்பு? இது தான் தமிழரசர்களது மாண்பு?” என்று வினவினார்.

காவலர்களிடம் எந்தப் பதிலும் எழவில்லை. கடமையை முடித்த கர்த்தாக்களைப் போல அவர்கள் பதிலேதும் கூறாமல் அகன்றார்கள்.

“அடிகளே! என்ன இது? எங்களுக்கு ஜாடை காட்டியிருக்கக் கூடாதா? இந்தக் காவலர்களின் கைகளை முறித்திருப்போமே?” என்று கேட்டார்கள் சகாக்கள்.

“அந்த வேலையை என்னாலேயே செய்ய முடியும். விளைவு? அதை யோசித்தீர்களா? நிரந்தரமாகச் சிறை வாசம் செய்யும் படி ஆகியிருக்கும். நானே சகித்துக் கொண்டிருக்கும் போது உங்களுக்கென்ன? இனிமேல் தான் நீங்கள் கவனமாகவும் பொறுமையாகவும் இருக்க வேண்டும். இவ்விரண்டும் சிறைக்குள் இருப்பவர்களுக்கு மிகவும் அவசியம்” என்றார் நீலகேசி கோபத்தையும் ஏமாற்றத்தையும் மறைத்துக் கொண்டு.

“எங்களுக்கெல்லாம் இப்படிச் சிறைக்குள் இருந்து பழக்க மில்லை” என்றார்கள் சகாக்கள்.

“முட்டாள்களே! சிறைக்குள் இருப்பதற்குப் பயிற்சியா எடுக்க முடியும்? பழக்கமில்லையென்றால் பழக்கிக் கொள்ளுங்கள். சிறை வாழ்வு யாருக்கு வரும் எப்படி வரும் எப்போது வரும் என்று யாராலும் சொல்லமுடியாது” என்றார் நீலகேசி.

"அடிகளே! உங்கள் உத்தேசம்தான் என்ன? இங்கேயே இருந்து கொண்டு உபதேசம் செய்யப் போகிறீர்களா?"

"ஊர் விட்டு ஊர் வந்து சிறைபட்டிருக்கும் நமக்கு காத்திருப்பதைத் தவிர வழியில்லை."

"காத்திருப்பது என்றால் எவ்வளவு காலத்திற்கு?"

"அது யாருக்குத் தெரியும்?"

"தாங்கள் துறவி ஆயிற்றே! முக்காலமும் தெரியுமே தங்களுக்கு!"

"நமக்குப் போதாத காலம் என்பது மட்டும் தெரியும். பேசாமல் படுத்துக் கொள்ளுங்கள். நமது பேச்சை யாராவது கேட்கக் கூடும். மௌனமாக இருப்பதே உத்தமம்."

"நாம் கன்னடத்தில் தானே பேசுகிறோம்?"

"ஒட்டுக் கேட்கும் உளவாளிகளுக்கு ஓராயிரம் மொழி தெரியும்."

வேறு வழியில்லாததால் சகாக்கள் இஷ்ட விரோதமாக அடக்கிக் கொண்டு படுத்தார்கள்.

அரை நாள் கழிந்தது.

"உங்களில் யார் தலைவர்?" என்று கேட்டார்கள் காவலர்கள்.

"எங்கள் எல்லோருக்கும் மகாவீரரே தலைவர்" என்றார் நீலகேசி.

"அடிகளே! இருக்கும் இடத்தைக் கவனித்து விட்டுப் பேசுங்கள்" என்றான் காவலன்.

"நரகமே ஆனாலும் நான் சொன்னதுதான் உண்மை" என்றார் நீலகேசி.

"நீங்கள் சிறையை விட்டு வெளியே வரவேண்டுமா வேண்டாமா?" என்று கேட்டான் காவலன்.

"வெளியே வருவதற்காக ஒரு பதில் உள்ளே இருப்பதற்காக ஒரு பதில் என்று இரண்டு விதமாகப் பேச முடியாது சேவகனே. எங்களுக்கு இந்த உடம்பு ஒரு சிறை. வாழ்க்கை ஒரு சிறை. உலகம் ஒரு சிறை. எல்லா இடமும் எங்களுக்கு ஒன்று. எங்களுக்குள் எந்த வேறுபாடும் கிடையாது" என்றார் நீலகேசி.

காவலர்கள் அகன்றார்கள்.

"அடிகளே! எதற்காக இவர்களிடம் குதர்க்க வாதம் புரிந்தீர்கள்? கேட்டதற்கு உரிய பதிலைச் சொல்லியிருக்கலாமே!

நீங்கள் ஒழுங்காகப் பேசாததால் அவர்கள் போய் விட்டார்கள்" என்றார்கள் சகாக்கள்.

"தலையிருக்க வாள் ஆடக்கூடாது. எனக்குத் தெரியும். மௌனமாக இருங்கள்" என்றார் நீலகேசி.

"இனியாவது வெளியே செல்வதற்கு உரிய பதில்களைச் சொல்லுங்கள்" என்றார்கள் சகாக்கள்.

இரண்டு நாழிகை கழிந்தது.

காவலர்கள் வந்தார்கள்.

"எதற்காக கங்கை கொண்ட சோழ புரத்திற்கு வந்தீர்கள் அடிகளே?" என்று கேட்டான் காவலன்.

"இந்தக் கேள்வியை எங்களைச் சிறையில் அடைத்து விட்டுத் தான் கேட்க வேண்டுமா அப்பனே?" என்று கேட்டார் நீலகேசி.

"உத்தரவு அப்படி ஐயா."

"என்ன உத்தரவு?"

"கோட்டைக்குள் வருபவர்களைச் சோதிக்கும்படி உத்தரவு."

"எங்களோடு ஏராளமானவர்கள் வந்தார்கள். அவர்களைச் சோதிக்க வில்லையே?"

"துறவிக் கோலத்தில் வருபவர்களை மட்டும் சிறையிலடைத்து சோதிக்க வேண்டும் என்பது உத்தரவு. பழங்களில் சுட்டது எது சுடாதது என்று கண்டு பிடித்து விடலாம். மொட்டைகளில் அப்படி கண்டுபிடிக்க முடியாது. சமீப காலங்களில் துறவியர் வேடத்தில் ஊடுருவிய உளவாளிகளே அதிகம். ஆகவே தான் கோட்டையில் பிரவேசிக்கும் துறவிக் கோலர்களை இவ்வாறு வரவேற்கவும் சோதிக்கவும் கட்டளையிட்டிருக்கிறார் எங்கள் மாமன்னர்."

"சேவகனே! உங்களது இந்த நடைமுறை துறவியர்கள் மனத்தைப் புண்படுத்தாதா?"

"உண்மையான துறவி எந்த சோதனையிலும் மனம் தளர மாட்டார் என்பது எங்கள் மாமன்னரின் கருத்து. மான அவமானங்களைக் கடந்தவர்கள் துறவிகள் என்பது மாமன்னரது அபிப்ராயம். தங்கத்திற்குப் புடம் போட்டால் கருகாது. பிரகாசிக்கும். உண்மைத் துறவிகளும் அப்படித் தான். சோதனைகளால் அவர்கள் உயர்வார்களே தவிர தாழ மாட்டார்கள் என்பார் மாமன்னர். அப்படி நடந்தச் சோதனை தான் இது. தயைக் கூர்ந்து மன்னிக்க வேண்டும்."

சேவகனின் பேச்சைக் கேட்டு அசந்து போனார் நீலகேசி. ஆயிரம் விட்டலராயர்களைச் சேர்த்தாலும் ஒரு குலோத்துங் கனுக்கு ஈடாக மாட்டார்கள் என்று நினைத்தார்.

"அப்பனே! உனது விளக்கத்திற்கு நன்றி. உங்கள் மா மன்னருக்கும் வணக்கங்கள். நாங்கள் கர்நாடகத்திலிருந்து வருகிறோம். மாமன்னரைச் சந்தித்து முக்கியமான விஷயத்தைத் தெரிவிக்க வேண்டும்" என்றார் நீலகேசி.

"ஐயா! உங்கள் பதின்மரையும் உடனடியாக சிறையிலிருந்து விடுவிக்கும்படிச் சொல்லி விட்டார் சிறை அதிகாரி. ஆனால் மாமன்னரைச் சந்திக்க வேண்டுமானால் குறைந்தது ஒரு மாத காலம் ஆகும். அவரைச் சந்திக்க வணிகப் பெருமக்களும், தூதர்களும், சிற்றரசர்களும், அயல் நாட்டினரும் காத்திருக் கிறார்கள். அதோடு இளவரசர் விக்கிரம சோழரை தென் கலிங்கத்தின் மீது படையெடுக்கும் படி மாமன்னர் உத்தர விட்டிருப்பதால் அது விஷயமாக ஆலோசனை அடிக்கடி நடந்து வருகிறது. ஆகவே உடனடியாக நீங்கள் சந்திக்க முடியாது" என்றான் காவலன்.

நீலகேசிக்கு திகைப்பாக இருந்தது.

"ஆகா! ஹொய்சள மன்னனும் தற்போது பேரரசன்தான். ஆனால் அவனை நம்மால் நினைத்த மாத்திரத்தில் சந்திக்க முடிகிறது. முன்னறிவிப்பின்றி பார்க்க முடிகிறது. யார் காத்திருந்தாலும் தன்னை வரவேற்றுப் பேசும் அவன் எங்கே? குலோத்துங்கன் எங்கே? இவனைச் சந்திக்க ஒரு மாதமாகும் என்றால் பயண நோக்கம் வெற்றி பெறாதே" என்று சொல்லிக் கொண்ட அவர் -

"அவசரமாகச் சந்திக்க வேண்டுமென்றால் கூடவா ஒரு மாத காலம் ஆகும்?" என்று கேட்டார்.

"தங்கள் கேள்விக்கு என்னால் பதில் சொல்ல முடியாது ஐயா. மிகவும் அவசரம் என்றால் என்ன விஷயம் என்பதை விவரமாக எழுதி அரண்மனை காரியஸ்தரிடம் கொடுத்தால் அவர் மாமன்னரிடம் கேட்டுச் சொல்வார்" என்று தெரிவித்த காவலன் -

"முடிந்தால் அதற்கு முயற்சி செய்து பாருங்கள். இப்போதைக்குச் சிறையிலிருந்து வெளியே செல்லுங்கள். தங்களைப் போன்ற துறவிகள் தங்குவதற்கு ஏராளமான சத்திரங்கள் கோட்டைக்குள் உள்ளன. சமண விஹாரம் ஒன்றும் உள்ளது. சௌகரியப்பட்டால் அதையும் அணுகலாம்" என்று கூறிய காவலன் நீலகேசியைப்

அவரது சகாக்களையும் சிறை யிலிருந்து வெளியே அழைத்துச் சென்று முடிகொண்டான் தெருவில் விட்டு விட்டுச் சென்றான்.

"சமண விஹாரம் இருக்கிறதாமே! அங்கே போனால் சௌகரியமாகத் தங்கலாம்" என்றார்கள் சகாக்கள்.

"சௌகரியமாகத் தங்கிக் கொண்டு ஊரைச் சுற்றிப் பார்ப்பதற்காக நாம் வரவில்லை. உங்களில் யாருக்காவது அந்த விருப்பம் இருந்தால் போகலாம். நமது நடவடிக்கைகளுக்குச் சமண விஹாரத்தில் தங்குவது உசிதமல்ல. அதோடு தமிழ் நாட்டில் இருக்கும் சமண விஹாரங்களில் காஞ்சியைத் தவிர இதர விஹாரங்களைப் பற்றியோ அங்கே இருப்பவர்களைப் பற்றியோ எனக்குத் தெரியாது. அங்கே ஒற்றர்களும் உளவாளிகளும் இருக்கலாம். சகாக்களே! உங்கள் துறவிகள் அல்லர். துறவறத்தைப் பற்றி அறிந்தவர்கள் அல்லர். எனக்குப் பாதுகாப்பிற்காக வந்த வெறும் அடியாட்கள். எனது ஏவலர்கள். அதை உணராமல் எனக்கு யோசனை கூறுகிறீர்கள். சுகத்தை எதிர்பார்க்கிறீர்கள். நீங்கள் எல்லோரும் எனக்கு யோசனை செய்து உங்கள் விருப்பப்படி நடந்து கொள்ள விரும்பினால் உடனடியாக என்னை விட்டுப் போய் விடுங்கள். என்னைக் காத்துக் கொள்ள எனக்குத் தெரியும்" என்று உறுதியான குரலில் சொன்னார் நீலகேசி.

அவர்களுக்கும் சோழநாடு புதியது. அவர்களுக்கு வன்முறை தான் தெரியுமே தவிர வார்த்தை ஜாலங்கள் தெரியாது. அடி, தடி ஆகியவற்றில் அடிகளுக்கு அவர் பாதுகாப்பு தர முடியுமே தவிர பிற விஷயங்களில் அவர்தான் அவர்களுக்குப் பாதுகாப்பு தர முடியும் என்பது புரிந்ததால் அவர்கள் அடங்கினார்கள்..

கோட்டையின் உட்பகுதிகள் நீலகேசிக்குத் தெரியும். எனவே சகாக்களை அழைத்துக் கொண்டு வணிகர் வீதிக்குச் சென்றார். ஆயிரம் பேர் தங்கக் கூடிய அந்த வணிகர் வீதிச் சத்திரத்தில் வணிகர்ளே அதிகமாக இருந்தார்கள். நீலகேசியைப் போன்ற துறவிகளும் இருந்தார்கள். தங்குவதற்கும் உளவு பார்ப்பதற்கும் அதுவே சரியான இடம் என்பதை அறிந்து அங்கு தங்கினார் நீலகேசி.

தனக்கு வேண்டிய பொருட்களையெல்லாம் வாங்கிக் கொண்டு தன் வேஷத்தையும் மாற்றிக் கொண்டார். வணிகரைப் போல தன்னை மாற்றிக் கொண்ட அவர் சகாக்களைப் பார்த்து "சத்திரத்தில் நான்கு பேர் இருங்கள். வெளியே ஐந்து பேர்

உலவுங்கள். என்னைப் பற்றி எதுவும் கவலைப்பட வேண்டாம். கணிகையர் வீதிக்கு இப்போது நான் செல்கிறேன். இங்கே ஏதாவது ஆபத்து என்றால் கணிகையர் வீதியில் இருக்கும் சாருகேசியிடமோ அந்த இல்லத்தில் இருப்பவர்களிடமோ செய்தியைத் தெரிவித்து விடுங்கள். எனக்கு வந்து சேர்ந்து விடும்" என்று கூறிவிட்டு இரவுப் பொழுது தொடங்கி இரண்டு நாழிகைகள் கழிந்த பின் சத்திரத்தை விட்டுப் புறப்பட்டு கணிகையர் வீதியை நோக்கி நடந்தார்.

எல்லா வீதிகளுமே மக்கள் கூட்டத்தால் நிரம்பியிருந்தது. வணிகர் வீதியில் வணிகர்கள் குழு வந்து தங்குவதும் சோழ மன்னனிடம் வணிகம் சம்பந்தமாகவும், வணிகர் குழு பாதுகாப்பு சம்பந்தமாகவும், கடல் தாண்டி நடத்தும் வணிகம் சம்பந்தமாகவும் பேசும் வழக்கம் அதிகமாக இருந்த படியால் பல்வேறு வணிகக் குழுக்களைச் சேர்ந்தவர்களே பெரும்பாலும் புழங்கினார்கள். மன்னனைச் சந்திக்கக் காலதாமதமாகும் நிலையில் சத்திரத்தில் தங்கி இரவு நேரங்களில் கணிகையர் வீதிக்கும் சென்று வந்தார்கள்.

தனவந்தர்களாக இருந்து வந்த வணிகர்களே கணிகையர் மீதான நாட்டம் கொண்டிருந்தார்கள்.

தலைநகரத்தில் இருந்த படியால் கணிகையர் தெருவில் இருந்த இளம் கணிகைகள் தங்களை நாடி வருபவர்களின் அந்தஸ்திற்கு ஏற்ப பொன்னையும் பொருளையும் பெற்று சகஜமாக வாழ்ந்து வந்தார்கள். அங்கே வருபவர்கள் வாயிலில் நுழைந்ததுமே தர வேண்டிய பொன்னைக் கொடுத்து விட வேண்டும். கொடுத்து விட்டால் அதற்கு அடையாளமாக உள் கதவில் ஒரு மணி மாட்டப்படும். பொன்னைக் கொடுத்தவர்கள் முன் கட்டில் காத்திருப்பார்கள். உள்ளே சென்றவர்கள் வெளியே வந்ததும் அவர் சார்பாக வைக்கப்பட்ட மணி அகற்றப்படும். ஓர் இரவுக்கு அதிகபட்சமாகப் பத்து மணிகள் மட்டுமே அனுமதிக்கப்படும்.

வணிகர் வேடத்தில் நீலகேசி அங்கே சென்ற போது சாருகேசியின் வீட்டு உட்கதவில் இருபதிற்கும் மேற்பட்ட மணிகள் தொங்கிக் கொண்டிருந்ததைக் கண்டதும் "இவளது தொழில் உச்சத்தில் இருக்கிறது போலிருக்கிறது" என்று சொல்லிக் கொண்டார்.

வீட்டின் வாயிலில் இருந்த அலி அடிகளைப் பார்த்தான்.

"என்ன வணிகம்?" என்று நீலகேசியிடம் கேட்டார்.

அவர் பதில் கூறவில்லை.

மோதிரம் ஒன்றைக் கொடுத்தார்.

அதைப் பார்த்ததும் "நீங்கள் உடனே செல்லுங்கள்" கூறி விட்டு கதவைத் திறந்ததோடு மட்டுமின்றி அதிலிருந்த மணிகளையெல்லாம் அகற்றினான் அலி.

நீலகேசி உள்ளே சென்றார்.

உள்ளே சாருகேசி பளிங்குச் சிலைபோல பொன் கட்டிலில் அமர்ந்து கொண்டு பழரசம் அருந்திக் கொண்டிருந்தாள்.

வணிகர் வேடத்தில் இருந்ததாலும் உள்ளே வெளிச்சம் குறைவாக இருந்ததாலும் அவரை அடையாளம் தெரியாமல் "எப்படி உள்ளே வந்தீர்கள்? யார் உங்களை அனுமதித்தது? வெளியே செல்லுங்கள். சென்று விடுங்கள். இல்லையானால் விசாரணையின்றி உங்களைக் கொல்வேன். அதற்கு எனக்கு உரிமையிருக்கிறது" என்றாள்.

நீலகேசி தனது தலைப்பாகையை அகற்றியதும் "சுவாமி! நீங்களா? இது என்ன கோலம்? அலங்கோலம்" என்றாள் சாருகேசி.

வேறு ஒரு சந்தர்ப்பமாக இருந்திருந்தால் அவளை தங்கக் கட்டிலிலேயே வைத்து அங்கங்களை வசப்படுத்தி விளையாடியிருப்பார்.

தற்போது அவரிடம் காமம் இல்லை.

"முட்டாள்தனமாகப் பேசுகிறாயே சாருகேசி. துறவியாக உன் வீட்டிற்கு நானெப்படி வரமுடியும்?" என்று கேட்டார்.

அவளோ "துறவிக்கும் காமம் உண்டு சுவாமி. உங்களுக்கும் உண்டு அல்லவா?" என்று கேட்டாள்.

"உண்மை. இங்கே துறவியாக நுழைந்தால் மற்றவர்கள் சிரிக்க மாட்டார்களா? சந்தேகப்பட மாட்டார்களா?" என்று கேட்ட நீலகேசி "கதவில் இருபத்திரண்டு மணிகள் இருந்ததே! ரொம்ப அதிகம் இல்லையா?" என்று கேட்டார்.

"மணிகளை வைத்திருப்பது ஊரை ஏமாற்றுவதற்காகத்தான் சுவாமி. நிறைய மணிகள் இருந்தால் யாரும் வரமாட்டார்கள். அதோடு நான் என் தொழிலை விட்டு விட்டேன். கங்கை கொண்ட சோழீச்சுரர் ஆலயத்தில் தேவரடியாளாகச் சேர்ந்து விட்டேன். எனது காம ஆட்டம் முடிந்து விட்டது. இப்போது என் ஆட்டமும் பாட்டமும் ஆண்டவனுக்காக மட்டும்தான்" என்றாள் சாருகேசி.

"நீ இளமையாகத் தானே இருக்கிறாய்? அதற்குள் எதற்காக இந்த முடிவு?" என்று கேட்டார் நீலகேசி.

"பக்தி மானாக மாறுவதற்கும் நல்லவளாக மாறுவதற்கும் நாளும் கோளும் பார்த்துக் கொண்டிருந்தால் மாற்றமே வராது. நல்லவையல்லாத விஷயங்கள் என்பது உடும்பைப் போல மனிதனைப் பிடித்துக் கொண்டு நல்லவற்றுப் போகாமல் தடுத்துக் கொண்டிருக்கும். வைராக்கியமாக இருந்து பிடியை அகற்றினால்தான் உண்மையின் பிடி கிடைக்கும்" என்றாள் சாருகேசி.

"காமாந்தகி தத்துவம் பேசுவது அழகாக இருக்கிறது சாருகேசி. துறவிகளே காமத்திற்காக அலைபாயும் போது காமுகிகள் காமத்தைக் கைவிட்டு விட்டால் எப்படி? கணிகையர் மட்டும் இல்லாது போனால் ஆடவர்கள் பலரும் அணைந்து போய் விடுவார்கள்."

"ஆண்களைப் பற்றிக் கவலைப்படுவதற்காகப் பெண்கள் பிறப்பதில்லை சுவாமி. கணிகையர்களும் அப்படித்தான். பல ஆடவர்களுக்கு நாங்கள் வடிகால்களாக இருந்தாலும் அவர்களது மனைவிமார்களுக்கு வேதனைகளாகத்தானே இருக்கிறோம்?"

"நீ பேசுவதும் சரி. மாறியதும் சரி. ஆனால் ஒன்றை நீ நினைவில் வைத்துக் கொள். சில விஷயங்களில் இருந்து மாறி விட்டாலும் அந்த வாசனையானது நீண்ட காலத்திற்கு இருந்து கொண்டு பின்னுக்கு இழுக்கப் பார்க்கும். அதற்குத் தாக்கு பிடிக்க முடியாமல் போனால் பழைய சேற்றிலேயே விழும்படி இருக்கும்" என்று சொன்ன நீலகேசி "நீ நீடூழி வாழ்வாயாக" என்று வாழ்த்தினார்.

"தங்களின் திடீர் வருகைக்குக் காரணம் என்ன சுவாமி? ஒரு வேளை..." என்று இழுத்தாள் சாருகேசி.

"உடல் சுகத்திற்காக உன்னைத் தேடி வந்தேன் என்றால் தரத் தயாராக இருக்கிறாயா?"

"சுவாமி."

"பயப்படாதே. அதற்காக நான் வரவில்லை. உன்னோடு ஒரே ஒரு முறை உறவு கொண்டது கூட சிற்றின்பம் என்றால் அறிந்து கொள்வதற்காகத்தான். அதற்குச் சிற்றின்பம் என்றுச் சரியாகத் தான் பெயர் வைத்திருக்கிறார்கள். எனது அனுபவப்படிப் பார்த்தால் அதில் ஒன்றுமில்லை. அது சிற்றின்பம் கூட இல்லை. வெறும் தூசு. பாவம் மனிதர்கள்! அதைப் போய் பேரின்பமாகக் கருதி அதற்காக ஆலாய்ப் பறக்கிறார்கள்."

"இது தெரிந்துமா என்னை இங்கே கணிகையாக இருக்கும் படிப் பணித்தீர்கள்?"

“சாருகேசி! நீ வேறு எந்த மாதிரி வந்தாலும் இங்கே நிலைக்க முடியாது. எல்லா நகரங்களிலும் தவறாமல் இருப்பது கணிகையர் வீதி ஒன்றுதான். அங்கே வசித்துக் கொண்டு பத்தினியாக வாழ முடியாது. காமத்தைச் செலவாக்கும் கணிகையாக இருந்தால்தான் காலத்தை ஓட்ட முடியும். உளவு வேலையும் செய்ய முடியும். அதோடு உனக்குத் தேவையான செல்வமும் கிடைக்கும். பெண்களை ஒரு சிலர் உயர்வாகப் பேசி வந்தாலும் பெரும்பாலானவர்கள் அவர்களை இன்பப் பொருளாகத்தான் கருதுகிறார்கள். சிற்றின்பத்தைப் பலர் கண்டித்தாலும் அதைப் பேரின்பமாகவே கருதி பெண்களை நோக்கிப் படையெடுக்கிறார்கள். நான் அப்படியல்ல சாருகேசி. உன்னை ஒரு முறை தொட்டதற்குப் பிறகு கைகளை மட்டுமின்றிக் காமத்தையும் கழுவிவிட்டேன். நானிங்கே வந்தது சோழ மன்னரை உடனடியாகச் சந்திப்பதற் காகத் தான்!”

“தற்போது கஷ்டமான காரியம் ஒன்று உண்டென்றால் அது சோழ மன்னரைச் சந்திப்பதுதான்.”

“ஏன் இந்த நிலை?”

“தொடர்ச்சியான போர்களில் ஈடுபட வேண்டிய நிர்பந்தம் ஒருபக்கம். சமீபத்தில் ஏற்பட்ட மதக்கலவரம் மறுபக்கம். அவ்விரண்டையும் சமாளிக்கத்தான் மாமன்னருக்கு நேரம் சரியாக இருக்கிறது. ஆகவே அவரைச் சந்திக்க வந்தவர்கள் ஒரு மாதத்திற்கு மேலாகக் காத்திருக்கிறார்கள்.”

“மதக் கலவரம் என்று சொன்னாயே அது என்ன?”

“சைவர்களுக்கும் வைணவர்களுக்கும் இடையே பூசல் உண்டாகி விட்டது. என்ன காரணத்தாலோ மன்னர் தவறான முடிவெடுத்து விட்டதால் வைணவ மதத்தின் ஆச்சார்யரான இராமானுஜர் தமிழகத்தை விட்டே மறைந்து விட்டார். அவரது பிரதான சீடர் கூரத்தாழ்வாரும் குருநாதர் பெரிய நம்பிகளும் இங்கே வரவழைக்கப்பட்டு அவமானப்படுத்தப் பட்டார்கள். கண்கள் பிடுங்கப்பட்ட கோரம் நடந்தது. பெரிய நம்பிகள் நூறு வயதைக் கடந்தவர். இறந்து போனார். வைணவம் தலைவர் இல்லாமல் இருக்கிறது. அனைத்துச் செயல்களுக்கும் சைவ தீட்சிதர்கள்தான் காரணம் என்பது வைணவர்களது கருத்து. ஆகவே அடிக்கடி அவர்கள் மோதிக் கொள்கிறார்கள். சில நேரங்களில் கங்கை கொண்ட சோழீச்சுரத்தில் பூசைகள் நடைபெறும் போது அவற்றைத் தடுக்கும் விதமாக வன்முறைகளில் இறங்குகிறார்கள். இராமானுஜர் சென்று விட்ட பிறகு திருவரங்கத்திலும் அரங்கன் ஆலயத்திலும் நிர்வாகப்

பொறுப்புகள் மாறிவிட்டன. ஆகவே இராமானுஜரைச் சேர்ந்த வைணவர்களும் சைவர்கள் மீதும் சோழ மன்னர் மீதும் கோபமடைந்திருக்கிறார்கள். அவர்களை இராமானுஜரின் பிரதான சீடர்களில் ஒருவரான அருளாளப் பெருமாள் எம்பெருமானார் என்பவர் தலைமறைவாக இருந்து கொண்டு தூண்டி வருகிறோராம்."

"சாருகேசி! இராமானுஜர் எங்கே இருக்கிறார் என்பது சோழ மன்னருக்குத் தெரியுமா?" என்று கேட்டார் நீலகேசி.





அமைதியை நிலைநாட்டுவதற்கும் மனிதனை உயர்த்துவதற்காகவும் தான் எல்லா இடங்களிலும் மதங்கள் தோன்றின. அந்த இரு கொள்கைகளும் சீர் கெட்ட போது மதங்களில் உயர்வானது கீழிறக்கப்பட்டு உயர்வு தாழ்வுகள் உயரத்திற்கு வந்து விட்டன—அமைச்சர்



"தெரியாது என்று தான் தோன்றுகிறது சுவாமி. காஞ்சிபுரம் வரையில் தேடிக் கொண்டு சென்றார்களாம். கண்டு பிடிக்க வில்லையாம்" என்றாள் சாருகேசி.

"இராமானுஜரை எதற்காகத் தேடிக் கொண்டு சென்றார்கள்?"

"சோழ மன்னரை அவர் ஏமாற்றி விட்டார் அல்லவா? அதற்காகத்தான்."

"அது என்ன கதை?"

"திருவரங்கத்தில் இருந்த இராமானுஜரை கங்கை கொண்ட சோழபுரத்திற்கு வரும்படி சோழ மன்னரது சார்பில் கட்டளை சென்றிருக்கிறது. அவரது சீடர்கள் அரசாங்கக் கட்டளைக்குப் பின்னால் ஏதோ சூது இருக்கலாம் என்று சந்தேகித்து இராமானுஜரைத் தலைமறைவாக இருக்கும்படிச் சொல்லி யனுப்பி விட்டார்கள். கூரத்தாழ்வார் என்னும் அவரது பிரதான சீடர் தன்னை இராமானுஜர் என்று சொல்லிக் கொண்டு கங்கை கொண்ட சோழ புரத்திற்கு வந்திருக்கிறார். ஆள் மாறாட்ட உண்மை தெரிந்ததும் இராமானுஜரைத் தேடிக் கண்டு பிடிக்கும் படி ஆணை பிறப்பிக்கப்பட்டது."

"அப்படியானால் இராமானுஜர் மீது சோழ மன்னருக்குக் கோபமாக இருக்கும் அல்லவா?"

"அப்படித் தோன்றவில்லை"

"அதெப்படிச் சொல்கிறாய் இராமானுஜர் செய்த ஆள் மாறாட்டம் ராஜத்துரோகம். அதோடு அவர் தலை மறைவான பிறகு இங்கே வைணவர்கள் வன்முறையில் இறங்குகிறார்கள். இராமானுஜரின் போரில் கோபம் வருவதற்குச் சோழ மன்னருக்கு இது போதாதா?"

"நீங்கள் சொல்வது உண்மையாகவும் இருக்கலாம் சுவாமி. என்னைப் பொறுத்தவரை - நான் அறிந்தவரை அப்படியேதும் இல்லை."

"சரி சாருகேசி. மன்னனை நான் சந்திக்க நீ தான் ஏற்பாடு செய்ய வேண்டும்."

சாருகேசி யோசித்தாள். பிறகு சொன்னாள்.

"நான் கங்கை கொண்ட சோழீச்சுரத்தில் தேவரடியாளாகக் கலை நிகழ்ச்சிகளை நடத்தியதால் சற்றே செல்வாக்கு பெற்றிருக்கிறேன். மன்னரைப் பலமுறை சந்தித்துள்ளேன். அவருக்கும் என்னை நன்றாகவே தெரியும். தஞ்சையில் பெருவுடையார் ஆலயத்தில் என்னை அழைத்துப் போய் ராஜ ராஜ சோழர் நாடகங்களை நடத்தியிருக்கிறார். மாமன்னர் தினமும் ஒரு வேளை கங்கை கொண்ட சோழீச்சுரத்திற்கு வருவார். வழிபாடு முடிந்தபின் சிங்கக்கிணறு பகுதியில் சிறிது நேரம் மக்களோடு அளாவளாவுவார். அந்த நேரத்தை விட்டு விட்டால் வேறு நேரம் கிடைக்காது. அரண்மனை காரியஸ்தன் எனது பழைய வாடிக்கையாளன். அவனிடம் கூறி வைத்தால் ஆலயத்தில் மன்னர் மக்களைச் சந்திக்கும் நேரத்தில் உங்களை அனுப்பி வைப்பார். நடைகறைகளின் படிச் சந்திப்பதென்றால் நிச்சயமாக ஒருமாதத்திற்கு மேலாகும்" என்று உறுதியாகச் சொன்னாள் சாருகேசி.

"ஒரு வாரகாலம் கூடக் காத்திருக்க முடியாது சாருகேசி. இன்று ஓரிரவு பொழுது போவதே எனக்கு ஒரு யுகமாக இருக்கும். ஆகவே நாளைக்கு நான் கங்கை கொண்ட சோழீச்சுரத்தில் மன்னனைச் சந்திக்க ஏற்பாடு செய்" என்று சொன்ன நீலகேசி "துறவிகளைச் சிறையிலடைத்து சோதிக்கும் நடைமுறை எப்போது வந்தது? நான் கேள்விப்பட்டதில்லையே" என்றார்.

"எல்லாமே இராமானுஜர் தமிழ் நாட்டை விட்டு மறைந்த பிறகு தான். வன்முறையில் கைதேர்ந்தவர்கள் இங்கே வன்முறை செய்வதற்காக அடியார்கள் வேடத்திலும், அடியவர்கள் வேடத்திலும், துறவிகள் வேடத்திலும் ஊடுருவுகிறார்கள். அப்படி ஊடுருவி இங்கே கலகங்களை விளைவிக்கிறார்கள். ஆகவே மன்னர் இம்மூன்று வகையினரைக் கண்டாலே கசந்து போகிறார். அதனால் தான் இந்த நடைமுறையைக் கொண்டு வந்துள்ளார்" என்றாள் சாருகேசி.

"துரதிர்ஷ்டமானது" என்று சொன்ன நீலகேசி "என்னைச் சந்திக்க மன்னர் ஒப்புக் கொள்வாரா?" என்று கேட்டார்.

"உங்களைப் பற்றிச் சிறை அதிகாரிகள் கூறியிருப்பார்கள். நானும் அரண்மனை காரியஸ்தரிடம் சொல்கிறேன். பிரச்சனை இருக்காது. அவர் துறவிகளைச் சோதனை செய்வது பாழு

காப்பிற்காகத் தானே தவிர அவருக்கு உண்மையான துறவிகள் மீதும் அடியார்கள் மீதும் மிகுந்த மதிப்பு உண்டு. இராமானுஜர் விவகாரம் வட அவருக்குத் தெரியாமல் நடந்து விட்டத் துர்ச் சம்பவம் என்றே பலர் கூறுகிறார்கள்.''

''சரி. நான் இப்போது சத்திரத்திற்குப் போகிறேன். நாளைக்கு எப்போது வரவேண்டும்?''

''ஆலயத்திற்கு மன்னர் வரும் நேரம் அதிகாலை நேரம். உதயசூரியன் எழும் போது அவர் ஆலயத்திற்கு எழுந்தருள்வார். நீங்கள் அங்கே கருக்கலில் வந்து விடுங்கள். வணிகர் வேடத்தில் வராமல் சமணத் துறவியாகவே வாருங்கள். மன்னரிடம் எச்சரிக்கையாகப் பேசுங்கள். அளவோடு பேசுங்கள்.''

''ஆகா! அது தெரியாதா எனக்கு? சிங்கத்திற்குச் சிங்கம் நான். மானுக்கு மான் நான். நரிக்கு நரி நான். சரியா?''

''சுவாமி! ஒரு சந்தேகத்தைக் கேட்கலாமா?''

''கேளேன்.''

''காமத்தில் திளைப்பது சரியா? தாண்டுவது சரியா?''

''இரண்டுமே தவறு. எந்த விஷயத்திலும் திளைப்பது என்பது அபரிமிதமானது. தாண்டிவிடுவதென்பது விபரீதமானது. எதிலும் மிதமாக இருப்பதே மகிழ்ச்சியான மருந்தாக இருக்கும்.''

''உங்கள் துறவும் அறிவும் அபாரமானது அடிகளே!''



சத்திரத்திற்கு வந்தார் நீலகேசி.

மன்னனைப் பற்றிய கெடுபிடிகளைக் கேள்விப்பட்ட அவருக்குத் தனது பயண நோக்கம் வெற்றி பெறுமா என்றக் கவலை வந்து விட்டது.

சத்திரத்தில் அவர்களது சகாக்கள் யாரும் இல்லை. ''அவரவர் புத்தி அவரவர்களுக்கு'' என்றெண்ணிக் கொண்டார் நீலகேசி.

பொழுது எப்போது விடியும் என்று காத்திருந்தார்.

பொழுது விடிவதற்கு முன்பே நீராடி விட்டு காவியுடையை அணிந்து கொண்ட வணிகர் வீதியை விட்டுப் புறப்பட்ட அவர் கங்கை கொண்ட சோழீச்சுரர் ஆலயத்தை அடைந்தார்.

ஆலயத்தில் இன்னும் கூட்டம் சேரவில்லை. அதோடு மன்னன் விஜயம் செய்யும் நேரமாதலால் மக்களின் வரவு கட்டுப்பட்டிருந்தது.

அதன் காரணமாகவே பலர் மன்னன் வந்து போகும் வரை ஆலயத்திற்குச் சென்று இடையூறு விளைவிக்க விரும்பாமல் இல்லங்களிலேயே இருந்தார்கள்.

நீலகேசி அங்கே போன போது ஐம்பது பேர்கள் மட்டுமே ஆலயத்திற்குள் இருந்தார்கள்.

உள்ளே சென்ற அவரை நந்தி மேடைக்கருகில் சாருகேசியும் அரண்மனை காரியஸ்தரும் வரவேற்றார்கள்.

"சமணத்துறவி இந்த ஆலயத்திற்குள் விஜயம் செய்திருப்பது அபூர்வமான விஷயம்" என்றார் அரண்மனை காரியஸ்தர்.

"ஒரு மதத்திற்குரியவர் இன்னொரு மதத்திற்குரியவரின் ஆலயத்திற்குச் செல்வது வியப்பிற்குரிய விஷயமல்ல. ஏனென்றால் ஒருவனது உண்மையான ஆலயம் அவனது மனம் தான். அந்த மனதில் என்ன கொள்கை குடியிருக்கிறதோ அது தான் நடக்கும். புற ஆலய விஜயங்கள் அவனைப் பாதிக்காது" என்றார் நீலகேசி.

"ஆகா! தங்களைப் போல எல்லா மதத்தினரும் நினைத்து விட்டால் பூசல்கள் இருக்காது. புழுக்கங்கள் இருக்காது. பொறாமை இருக்காது. போட்டியும் வன்முறையும் இருக்காது" என்றார் அரண்மனை காரியஸ்தர்.

அப்போது ஆலயத்தில் இருந்த கண்டாமணி ஒலித்தது.

"மாமன்னர் வந்து விட்டார். நீங்கள் சிங்கக் கிணற்றின் அருகில் இருங்கள். வழிபாட்டை முடித்துக் கொண்டு மாமன்னர் அங்கே வரும் போது அவரிடம் பேசலாம்" என்றார் காரியஸ்தர்.

நீலகேசியும் சாருகேசியும் அங்கிருந்து நகர்ந்தார்கள்.

அதையடுத்து முரசொலிகள் எழுந்தன. திருச்சன்னங்கள் ஒலித்தன.

சோழ மாமன்னன் பரிவாரங்களுடன் தேரில் வந்து இறங்கினான்.

அவனோடு அமைச்சர் மட்டுமே வந்தார். பரிவாரங்கள் நந்தி மேடைக்கு முன்பே நின்றன.

மன்னனும் அமைச்சரும் மட்டும் உள்ளே சென்றார்கள்.

ஆலயம் உயரமான இடத்தில் கட்டப்பட்டிருந்தது.

"அமைச்சரே! எனக்குத் தெரிந்து தரையில் கட்டப்பட்ட ஆலயங்களில் பெருவுடையார் கோயிலும் இக்கோயிலும் தான் உயரத்தில் கட்டப்பட்டிருக்கின்றன. அதற்குக் காரணம் அம்மாமன்னர்கள் இறைவனை உயர்வானவனாக நினைத்தார்கள்.

அவனது இருப்பிடம் உயர்வான இடத்தில் இருக்க வேண்டும் என்று நினைத்தார்கள். அவனைக் காண வருபவர்கள் உயர வேண்டும் உயர்ந்து வரவேண்டும் என்று நினைத்தார்கள். என்ன நினைக்கிறீர்கள் அமைச்சரே?" என்று கேட்டான் குலோத்துங்கன்.

"உண்மைதான் மன்னவா. அதோடு இறைவன் உயர்வான கடத்தில் இருப்பதற்குக் காரணம் தாழ்வான இடத்தில் இருக்கும் பக்தர்களை மேலே இழுப்பதற்குத்தான். ஆனால் பலர் அதை உணராமல் தாழ்வான இடத்திலேயே இருந்து கொண்டிருக்கிறார்கள்" என்றார் அமைச்சர்.

"மனிதன் கீழே இருக்கிறான். மகேசன் மேலே இருக்கிறான். மகேசன் இருக்கும் இடத்திற்கு அனுப்பவே மகான்கள் இருக்கிறார்கள்" என்றான் மன்னன்.

இருவரும் மேலே ஏறினார்கள்.

ஆலய வாசலில் இருபுறமும் இருந்த பிரம்மாண்டமான இரண்டு துவாரபாலகர்கள் சிலையைச் சுட்டிக் காட்டிய சோழ மன்னர் "இவ்விரண்டும் கங்கை கொண்ட சோழராகிய இராஜேந்திரர் சாளுக்கிய நாட்டை வென்று அங்கிருந்து கொண்டு வந்தவை. அவற்றின் பிரம்மாண்டத்தைக் கண்டு பிரமித்துப் போன அவர் அவற்றுக்கு ஏற்ப ஆலய வாசலும் கோபுரமும் அமைய வேண்டும் என்று ஆசைப்பட்டாராம். வீரராஜேந்திரர்* என்னிடம் சொல்லியிருக்கிறார்" என்றான்.

இருவரும் கருவறைக்குச் சென்று இறைவனைத் தொழுது அரை நாழிகை கழித்து வந்தார்கள்.

துவார பாலகர் சிலைக்கருகே வந்தபோது ஆலயத்திற்குள் தீட்சிதர்களும் சைவருமாக இருநூறுபேர் ஆண்டவனையும் ஆள்பவனையும் போற்றி கோஷமிட்டபடி பிரவேசித்தார்கள். அவர்களிடம் வேல், ஈட்டி போன்ற ஆயுதங்கள் இருந்தன.

மன்னன் தன்னோடு வந்த காவலர்களை அழைத்து "அவர்களை அங்கேயே நிற்கச் சொல்லுங்கள். நான் வருகிறேன்" என்று சொன்னான்.

காவலர்கள் போய் சொன்னதும் ஆயுத பாணிகளாக வந்தவர்கள் வெளிக் கோபுர வாசலிலேயே நின்றார்கள்.

அமைச்சரோடு அங்கு சென்ற மன்னன் குலோத்துங்கன் அவர்களுக்கு முன்னால் சென்று நின்று "பெண்களுக்கு

---

* கங்கை கொண்ட சோழர் இராஜேந்திரரின் புதல்வர்களில் ஒருவர்.

வஸ்திரம் பிரதானம். ஷத்திரியர்களுக்கு அஸ்திரம் பிரதானம். அடியார்களுக்கும் துறவிகளுக்கும் பக்தியும் ஞானமும் தான் பிரதானம். நீங்கள் யார்?'' என்று கேட்டான்.

“நாங்கள் வீர சைவர்கள். வைணவர்களால் இக்கோயிலுக்கு ஆபத்து வரக்கூடும் என்ற காரணத்தால் ஆயுதபாணிகளாக வந்திருக்கிறோம்'' என்று கூறியபடி வேல்களை உயர்த்தினார்கள் சைவர்கள்.

“இந்த ஆலயத்தைக் காக்க நீங்கள் ஆயுதங்களை ஏந்துகிறீர்கள் என்றால் நான் இருப்பது எதற்காக? வேடிக்கை பார்ப்பதற்காகவா?'' என்று கோபத்துடன் கேட்டான் மன்னன் குலோத்துங்கன்.

அவனது சொற்கள் விற்களை விட கூர்மையாகத் தைத்ததால் சைவர்கள் ஆயுதங்களை கீழே விட்டார்கள்.

“உரியவர்களைத் தவிர வேறு யாரானாலும் சரி - அவர்கள் எவ்வளவு பெரியவர்களானாலும் சரி ஆயுதம் ஏந்தி வன்முறையில் இறங்க நான் அனுமதிக்க மாட்டேன். ஆலயம் ஆயுத சாலையாக மாற ஒரு போதும் ஒப்புக் கொள்ளமாட்டேன். உண்மையான கெடுதல்களை விட கெடுதல்களைப் பற்றிய வதந்திகளும், பதற்றங்களும் கெடுதல்கள் பரவவே வழி வகுக்கும். உங்கள் முனைப்பும் அப்படித்தான். கலைந்து செல்லுங்கள். அந்த ஆடல் வல்லான் சிவனடியார்கள் பாடிப் பரவிய தேவாரங் களையும் திருவாசகங்களையும் பரவசத்தோடு பாடிப் போற்றுங்கள். உங்கள் வழி அதுதான்'' என்றான் மன்னன்.

தீட்சிதர்களும் சைவர்களும் ஒரு வார்த்தையும் பேசாமல் அமைதியாக வெளியேறினார்கள்.

காவலர்களை அழைத்த மன்னன் “இந்த ஆயுதங்களை யெல்லாம் கொண்டு போய் ஆயுதசாலையில் வையுங்கள்'' என்றான்.

பிறகு அமைச்சரைப் பார்த்து “அமைச்சர் பெருமானே! நமது முன்னோர்களான திருமாவளவன் போன்றவர்கள் காலத்திலும் செங்குட்டுவர் காலத்திலும் மதங்கள் இருந்தன. பேதங்கள் இருந்தன. ஆனால் மோதல்கள் இல்லை. வன்முறைகள் இல்லை. வெறித்தனங்கள் இல்லை. இப்போது மட்டும் அவை ஏன் வந்தன?'' என்று கேட்டான்.

“மன்னவா! அமைதியை நிலைநாட்டுவதற்காகவும் மனிதனை உயர்த்துவதற்காகவும் தான் எல்லா இடங்களிலும் மதங்கள் தோன்றின. அந்த இரு கொள்கைகளும் சீர் கெட்ட போது

மதங்களில் உயர்வானது கீழிறக்கப்பட்டு உயர்வு தாழ்வுகள் உயரத்திற்கு வந்து விட்டன. பேதங்களை வளர்த்து விட்டன. ஒரு இலை முளைத்தால் பல இலைகளும் கிளைகளும் வளர்வது போல் பற்பல அம்சங்களும் வளர்ந்து விட்டன. மதப் பூசல்களின் உச்சகட்டத்தில் நாமிருக்கிறோம்" என்றார் அமைச்சர்.

"இவை எப்போது அடங்கும்? அழியும்?"

"முரட்டுக் காளையைச் சீண்டினாலும் சரி - சீண்டி விடப் படும் காளையை அடக்க முற்பட்டாலும் சரி முரட்டுத் தனம் அதிகமாகுமே தவிர அடங்காது. நெருப்பைத் தூண்டி விட்டால் பெரிதாக எரியும். அப்படியே விட்டு விட்டால் சாம்பலாகி அடங்கும். அழியும்."

"நானும் அப்படித்தான் நினைக்கிறேன் அமைச்சரே! எனது ஆட்சிக் காலத்தில் யாருடைய கொம்பையும் நான் சீவி விட விரும்ப மாட்டேன். நடந்தது போதும். நடந்தது மீண்டும் மீண்டும் நடக்க வேண்டாம்" என்றான் மன்னன்.

இருவரும் ஆலயத்தை வலம் வந்து சிங்கக் கிணற்றருகே சென்ற போது சாருகேசி, நீலகேசி, அரண்மனை காரியஸ்தர், மற்றும் மக்கள் சிலர் இருப்பதைக் கண்டார்கள்.

"என்ன சாருகேசி? எங்கே வந்தாய்? இன்றைக்கு உன் நாட்டியம் இங்கே நடக்கிறதா?" என்று கேட்டான் குலோத்துங்கன்.

"இல்லை பிரபு. எனக்கு மிகவும் வேண்டியவர் துறவியர் பெருந்தகை இவர். நீலகேசி என்பது திருநாமம். சமணர் தலைவர். கர்நாடகத்திலிருந்து வந்துள்ளார். தங்களை அவசரமாக சந்திக்க வேண்டுமாம். ஆகவே தான் நான் என் பொறுப்பில் இவரை இங்கே அழைத்து வந்தேன். மன்னித்தருளுங்கள்" என்று கூறி மன்னனின் பாதங்களில் விழுந்து வணங்கினாள் சாருகேசி.

"எழுந்திரு சாருகேசி. என்னோடு இருப்பவர்கள் தவறு செய்ய மாட்டார்கள். செய்தால் திருத்திக் கொள்வார்கள். நாளைய ராஜ நர்த்தகியான நீ இப்படியெல்லாம் அடிக்கடி நமஸ்காரம் செய்து கால்களைக் கெடுத்துக் கொள்ளாதே" என்று நகைச் சுவையோடு கூறிவிட்டு "வாருங்கள் அடிகளே" அவரையும் அமைச்சரையும் அழைத்துக் கொண்டு துவார பாலகர் சிலைக்கருகே சென்றான் மன்னன்.

தானும் அமர்ந்து மற்ற இருவரையும் அமரச் சொல்லிவிட்டு "சமணத் துறவியான நீங்கள் சிவாலயத்திற்கு வந்திருப்பது மத நல்லிணக்கத்தை அறிவிப்பது போலவும் அறிவுறுத்துவது

போலவும் இருக்கிறது. நான் விரும்புவது இதைத்தான். மிக்க மகிழ்ச்சி" என்றான்.

"மகா மன்னவா! கோரிக்கை ஒன்று. தகவல் ஒன்று. இதுவே எனது பயண நோக்கம்" என்றார் நீலகேசி.

"கூறுங்கள்."

"பழையாற்றில் இருக்கும் குந்தவை நாச்சியார் எடுப்பித்தச் சமணப் பள்ளி மிகவும் சேதாரமாகி எறும்புக் கூடு போல் உள்ளது. அது தனது இருப்பை இழப்பதற்குள் தாங்கள் தான் புனருத்தாரணம் செய்ய வேண்டும்."

"அடிகளே! என்னைப் பொறுத்தவரை எந்த மதத்திற்குரிய ஆலயமாக இருந்தாலும் அவை ஒன்று தான். அவை நமது பக்தியின் எழுச்சிகள். பக்தியின் அடையாளங்கள். தஞ்சையில் ராஜராஜ சோழர் எழுப்பிய பெருவுடையார் கோயிலானாலும் சரி, கங்கை கொண்ட சோழர் இங்கே எழுப்பிய ஆலயமானாலும் சரி, இராஜ சிம்மப் பல்லவர் காஞ்சியில் உருவாக்கிய கைலாச நாதர் ஆலயமானாலும் சரி, சைலேந்திரர்கள் நாகப் பட்டினத்தில் உருவாக்கிய புத்த விஹாரமானாலும் சரி, உங்கள் கர்நாடகத்தில் சாமுண்டராயர் எழுப்பிய மாபெரும் பாகுபலி சிலையானாலும் சரி இன்று நினைத்து மறுநாள் கட்டி முடித்து விட்ட சின்னங்கள் அல்ல. எத்தனைக் கனவுகள்! எத்தனை காலங்கள்! எத்தனை மனிதர்கள்! எத்தனை உழைப்புகள்! எத்தனைப் பொருட் செலவுகள்! எண்ணிப் பாருங்கள் அடிகளே! இப்படிப்பட்ட பிரம்மாண்டங்களை நாங்கள் ஒரு போதும் அழிய விட மாட்டோம். மத மாச்சரியம் இன்றி எல்லா இடங்களிலும் திருப்பணிகளைச் செய்து வருகிறோம். அதுவும் மாதரசி குந்தவை பிராட்டியார் எம்மதமும் சம்மதம் என்ற உறுதியான கொள்கையோடு எழுப்பிய சமணப் பள்ளி பழையாற்றில் மட்டுமல்ல பல இடங்களிலும் திருப்பணிக்கு உட்படுத்தப் பட்டுச் சீர் செய்யப்படும்" என்றான் மன்னன்.

மன்னனின் பேச்சு அமுதமாக இருந்தது நீலகேசிக்கு. அடுத்து நான் தெரிவிக்கப் போகும் தகவலையடுத்து இராமானுஜரின் கதை முடிந்து விடும் என்று மகிழ்ச்சியடைந்தார்.

"மிக்க நன்றி சக்கிரவர்த்தி பெருமானே! நாடு விட்டு நாடு வந்து கோரிக்கை விடுத்தால் செவிமடுக்காமல் போய் விடுவீர்களோ என்று தயங்கி மயங்கிக் கொண்டிருந்தேன். தங்கள் தாராள மனத்தைக் காட்டி விட்டீர்கள்" என்றார்.

“தாங்கள் கர்நாடகத்தவர் அல்லவா? ஆகவே தான் தமிழகத்தின் மேன்மையை நீங்கள் அறிந்திருக்க வில்லை. எங்கள் முன்னோர்கள் ‘யாதும் ஊரே யாவரும் கேளிர்’ என்று அன்றைக்கே எழுதி வைத்திருக்கிறார்கள். எங்களுக்கு எல்லாமும் எங்கள் நாடு தான். எல்லோரும் எங்கள் உறவினர்கள் தான் ஆகவே நாடு விட்டு நாடு வந்தவர்கள் என்று நாங்கள் பார்ப்பதில்லை” என்றான் குலோத்துங்கன்.

“அடுத்தது தகவல். முக்கியமான தகவல்.”

“சொல்லுங்கள்.”

“திருவரங்கத்திலும் சோழநாட்டிலும் வைணவர்களைக் கொண்டு சதா சர்வகாலமும் தொல்லைகளைக் கொடுத்து அமைதியின் எல்லைகளை மீறி அனைவருக்கும் வேண்டப் படாதவராக இருந்து தங்களது கைது நடவடிக்கையிலிருந்து தப்பி தலைமறைவாகி எங்கள் கர்நாடகத்தில் தொண்டனூரில் கோழையைப் போல் ஒளிந்து கொண்டிருக்கிறார் இராமானுஜர்.”

மன்னன் அமைச்சரைப் பார்த்தான்.

அமைச்சர் மன்னனைப் பார்த்தார்.

“அப்படியா? இது எங்களுக்குத் தெரியாதே! அங்கே அவர் என்ன செய்து கொண்டிருக்கிறார்?”

“அநியாயம் செய்து கொண்டிருக்கிறார். அக்கிரமம் செய்து கொண்டிருக்கிறார். வைணவத்தை வளர்க்க கங்கணம் கட்டிக் கொண்டு அங்கேயுள்ள சமணர்களை மிரட்டி வைணவத்தில் இணையச் செய்து கொண்டிருக்கிறார். கட்டாய மதமாற்றத்தில் குரூரமாக இயங்கிக் கொண்டிருக்கிறார். நிலைமை இப்படியே போனால் கர்நாடகத்தில் சமணம் காணாமல் போய் விடும். ஆகவே வீரர்களை அனுப்பி தொண்டனூரில் இருக்கும் இராமானுஜரைக் கைது செய்ய உத்தரவு பிறப்பியுங்கள் மகாராஜா.”

மன்னன் அமைச்சரைப் பார்த்தான்.

அமைச்சர் மன்னனைப் பார்த்தார்.





ஒருவன் நடந்ததையே நினைத்துக் கொண்டிருந்தால் அவனுக்கு வேறு வேலை இல்லை என்று அர்த்தம். வேறு வேலையைச் செய்யத் தயாராக இல்லை என்று அர்த்தம் – இராமானுஜர்




மன்னனே பேசினான்.

"அடிகளே! சந்திரகுப்த மௌரியர் ராஜ்யத்தில் இருந்தச் சமணமானது அந்தப் பெருவேந்தர் கர்நாடகத்திற்கு வந்த போது கூடவே வந்தது என்றும் கர்நாடகத்திலிருந்துதான் தமிழ் நாட்டிற்குச் சமணம் வந்தது என்றும் கேள்விப் பட்டிருக்கிறேன். பல நூற்றாண்டுகளாகவும் மிகப் பரவலாகவும் கர்நாடகத்தில் வேரூன்றி வளர்ந்தது சமணம். அந்த மதத்தை ஒரு இராமானுஜர் அழித்து விட முடியுமா?"

"இராமானுஜர் ஒரு புயல்காற்று. வீசியடித்தால் சேதத்திற்கு அளவிட முடியாது. அவர் ஒரு விஷ விதை. அது முளைத்து விட்டால் நாடே விஷமாகி விடும். அவர் ஒரு விளம்பரப் பிரியர். தந்திரமாக விளம்பரம் செய்தால் எல்லோரும் விழுந்து விடுவார்கள்" என்றார் நீலகேசி.

"இராமானுஜரைப் பற்றி உங்களுக்கு இவ்வளவு அச்சம் இருந்தால் உங்கள் நாட்டு மன்னரிடமே சொல்லி நடவடிக்கை எடுக்கலாமே?" என்று கேட்டான் மன்னன்.

"விட்டலராயனைச் சொல்கிறீர்களா மகாராஜா! அவன் ஒரு மன்னனே அல்ல. வெறும் மண். அவனிடம் வீரமும் இல்லை. ஈரமும் இல்லை. அவன் செயல்படும் நேரங்களை விடச் செயல்படாத நேரங்களே அதிகம். அவனிடம் சொல்வதை விட விட்டில் பூச்சியிடம் சொல்லலாம். வெட்ட வெளியிடம் சொல்லலாம்" என்றார் நீலகேசி.

"மன்னர் விட்டலராயரிடம் நீங்கள் சொன்னீர்களா?"

"பாறையின் மீது பந்தை எரிந்தால் மீண்டும் வரும். நீரில் எரிந்தால் வராது. விட்டலராயன் நீரைப் போன்றவன். பந்தைப் பலமுறை எரிந்து விட்டேன். ஒரு பலனுமில்லை. மோதி மோதி தலைதான் காயமாயிற்று."

"அந்த இராமானுஜரை கர்நாடகச் சமணர்கள் ஒன்று திரண்டால் விரட்டி விடலாமே?"

“நேர்வழி தென்படும் போது சுற்றுவழி எதற்கு மகாராஜா? அவரைத் தாங்கள் கைது செய்து விட்டால் கர்நாடகம் பிழைக்கும்.”

“கர்நாடகம் பிழைக்கும். தமிழகம் தவிக்கும். இராமானுஜரை நாங்கள் தொடாத போதே இங்கே வன்முறைகள் தலை காட்டிக் கொண்டிருக்கின்றன. சற்று முன்பு கூட வீரச் சைவர்கள் வேல்களுடன் இங்கே வந்து விட்டார்கள். நான் தடுத்திரா விட்டால் ஆலயம் ஆயுத சாலையாகியிருக்கும். சற்றுமுன் தான் நான் அமைச்சரிடம் எந்த மதத்தையும் கொம்பு சீவி விட மாட்டேன் என்றேன். ஆனால் நீங்கள் என்னைக் கொம்பு சீவி விடப் பார்க்கிறீர்கள். இராமானுஜர் தற்போதைய நிலையில் சோழ நாட்டில் இல்லாமல் இருப்பது நல்லது என்ற அபிப்ராயமே எங்களுக்கெல்லாம் இருக்கிறது. நீங்களோ அவரைக் கைது செய்து சிறையில் அடைக்கச் சொல்கிறீர்கள். உங்கள் தினவுகளை என்னை வைத்துச் சொறிந்து கொள்ள பார்க்கிறீர்கள். தனது மதத்தை வளர்ப்பதற்கு மற்றொரு மதத்தை அழிப்பது தான் வழி என்று எந்த குரு உங்களுக்குச் சொல்லிக் கொடுத்தாரோ தெரியவில்லை. உங்கள் நாட்டு மன்னன் மீதே புழுதி வாரித் தூற்றும் உங்களுக்கு தேசபக்தியும் இல்லை. மதப் பற்றும் இல்லை. தனிப்பட்ட விரோதம் காண இராமானுஜரை பழி வாங்கவே முயற்சிக்கிறீர்கள். உங்களைக் கைது செய்து சிறையில் தள்ளியிருப்பேன் நீங்கள் மட்டும் துறவியாக இல்லாதிருந்தால். ஆகவே அந்த வேளை நல்ல வேளை என்று எண்ணி சொல்லிக் கொள்ளாமல் போய் விடுங்கள்” என்று சொன்ன குலோத்துங்கன் எழுந்து கொண்டு சிங்கக் கிணற்றருகில் காத்திருந்த மக்களை நோக்கிச் சென்றான்.

அங்கே சாருகேசியும் இல்லை. காரியஸ்தரும் இல்லை.



தொண்டனூருக்கு ஹொய்சள மன்னனும் அவனது குடும்பத்தினரும் வரவிருப்பதாக அறிவிப்பு வந்ததையொட்டி ஊரானது அமளிதுமளி பட்டது. தொண்டனூர் துணைத் தலைநகரமானது ஒருபுறம். விட்டலராயர் பெரு வெற்றிகளைப் பெற்றபின் முதன் முதலாகத் தொண்டனூருக்கு விஜயம் செய்வது மறுபுறம்.

எனவே மக்கள் துள்ளி குதித்தார்கள். கிராமமும் இல்லாமல் நகரமும் இல்லாமல் இரண்டும் கெட்ட ஊராகத் தூங்கி வழிந்து கொண்டிருந்த தொண்டனூர் இராமானுஜரின் வரவால் விழித்துக் கொண்டதென்றால் அது தலைநகரமாக

மாற்றப்பட்டு அதன் தலைமகன் வருகிறான் என்றவுடன் புதுமணப் பெண்ணைப் போலப் பூத்துக் குலுங்கியது. ஊர் முழுவதும் தென்னை, பனை, மா, வாழை, கமுகு ஆகியவற்றால் அலங்கரிக்கப்பட்டன. பாதைகள் சுத்தமாக்கப்பட்டு அவற்றைக் கண்காணிக்கப்படுவதுபோல விளக்குத் தூண்கள் இருபுறமும் நின்றன. புரவி வீரர்கள் பாரா வரும் விதமான வீதிகளில் வலம் வந்தார்கள். ஒவ்வொரு சாமம் முடியும் போது அரண்மனை விதானத்தில் இருந்த கண்டாமணி ஒலித்தது. இடியே இடித்தாலும் நாங்கள் அசரமாட்டோம் என்று சொல்வது போல யானைகள் கருங்குன்றுகளாகப் பல இடங்களில் நின்று கொண்டு சிற்சில சமயங்களில் பிளிறவும் செய்தன.

அரண்மனை வளாகம் பளிச்சென்று இருந்தது. அரண்மனை அலுவலர்கள் மன்னர் குடும்பத்தை எதிர்பார்த்தபடி பூர்ணகும்பங்களுடன் நின்றிருந்தார்கள். வேதியர்கள் குழுவாகத் திரண்டு வேத மந்திரங்களை ஸ்பஷ்டமாக உச்சரித்துக் கொண்டிருந்தார்கள். அந்த வேத நாதம் இனிமையாக இருந்தபடியால் அதை ஆசிர்வதிப்பது போல் மரங்களில் தங்கியிருந்த பல்வேறு பறவைகள் வானத்தில் தாழ்வாகப் பறந்து அரண்மனையைச் சுற்றிச் சுற்றி வந்தன. சில பறவைகள் அரண்மனையின் விதானத்திலும் காவல் கூடங்களின் மேலுமாக அமர்ந்த விதமானது அரச குடும்பத்தினரை பார்க்க ஆவலோடு காத்திருப்பது போல் இருந்தது.

அரண்மனையின் முன்னால் இருந்த ஜெயஸ்தம்பத்தில் உச்சிப் பகுதியில் சிவந்த தலையை உடைய பெரியதோர் பேய்ப்பறவை அமர்ந்து கொண்டு அவ்வப்போது வினோதமான குரலை எழுப்பிய விதமானது "என்னை யாரும் மறந்து விடாதீர்கள். நான் இருந்து கொண்டு தான் இருக்கிறேன்" என்று நினைவூட்டுவது போல இருந்தது.

இதற்கிடையில் இறக்கும் நிலையில் இழுத்துக் கொண்டிருந்த ஒரு எலியை காக்கைக் கூட்டம் ஒன்று சூழ்ந்து கொண்டு உயிர் போகும் வரை அதைக் குத்திக் கிழித்து விட்டு பங்கு போட்டுக் கொள்ள முற்பட்டு அது இயலாமல் சண்டையில் இறங்கி இரைந்தன. அது தான் சமயம் என்று காத்திருந்த நாயொன்று பாய்ந்து வந்து எலியைக் கவ்விக் கொண்டு ஓட, ஏமாந்து போன காக்கைகள் அவற்றைத் துரத்திப் பறந்தன.

அரண்மனையின் உப்பரிகைச் சுவற்றில் இரண்டு மயில்கள் அமர்ந்து கொண்டு அழகின் அடையாளம் நாங்கள் தான் என்று கூறுவது போல் ஒன்றையொன்று அலகினால் தழுவிக்

கொண்டன. அந்த அரண்மனை வளாகத்திற்குத் தொலைவில் இருந்த மாமரம் ஒன்றில் உயரமான கிளையில் அமர்ந்து கொண்டிருந்த பெருங் குரங்கொன்று இப்படியும் அப்படியுமாய் கண்களை உருட்டிய விதமானது அங்கே நடக்கும் அனைத்து நடவடிக்கைகளையும் கண்காணிப்பது போல் இருந்தது. அந்தக் குரங்கையும் சேர்த்து படம் பிடிப்பது போல் நாரைக் கூட்டமொன்று அர்த்த சந்திர வடிவத்தில் உயரே வானத்தில் பறந்து சென்றன.

விரைவிலேயே மன்னர் குடும்பத்து ரதங்கள் வந்து நின்ற போது வேட்டுக்களும், பறைகளும், முரசுகளும், மங்கல வாத்தியங்களும் முழங்கின. மன்னன் விட்டலராயன், ராணி சாந்தலை தேவி, இளவரசன் நரசிம்மன், மகா சேனாதிபதி பகாசூரர், தளபதிகளான கங்கராஜன், பரதன், மற்றும் ராஜ சூத்ர தாரி ரங்கநாதர் ஆகியோர் தேரிலிருந்து இறங்கினர். மூடு தேரில் பாதுகாப்பாக வந்திருந்த மன்னன் மகள் தருமதேவி அரை மயக்கத்தில் இருந்ததால் தேரை விட்டு இறங்கவில்லை. இளவரசன் நரசிம்மனின் மனைவி கைக்குழந்தையோடு வரவில்லை. துவார சமுத்திரத்திலேயே தங்கி விட்டாள்.

மகாராஜாவைத் தொண்டனூருக்கு வரச் சொல்லும் படி அழைத்த படியே இருந்த தொண்டனூர் நம்பி மகிழ்ந்து முன்னேயிருந்து அந்தணர்களை வரவழைத்து பூர்ணகும்ப மரியாதைகளைச் செய்து நிமித்தகன் குறித்த வேளையில் அரண்மனைக்குள் அழைத்துச் சென்றார்.

அரண்மனையின் உள் எழிலைக் கண்ட மன்னன் மகா சேனாதிபதியைப் பார்த்து “இதென்ன சேனாதிபதி! இந்த அரண்மனை துவாரசமுத்திர அரண்மனையை வெட்கித் தலை குனியும் படி செய்து விடும் படி இருக்கும் போலிருக்கிறதே! இதைப் பார்க்கும் போது பாண்டவர்கள் அமைத்த இந்திரப் பிரஸ்தம் தான் நினைவுக்கு வருகிறது. எப்படி இவ்வளவு சிறப்பாக அமைத்தீர்கள்?” என்று வினவினான்.

“இதில் என் பணி எறும்பளவு கூட இல்லை. அனைத்துமே தொண்டனூர் நம்பியின் படைப்பு. இந்த ஊர் தொண்டர்கள் நிறைந்தவூர். தொண்டுகளுக்காகப் பிறந்தவர்கள் வாழும் ஊர். இவர்கள் ஆற்றும் தொண்டிற்கும் பணிகளுக்கும் ஒரு நாணயத்தைக் கூடக் கூலியாகப் பெறுவதில்லை” என்றார் சேனாதிபதி.

மன்னன் தொண்டனூர் நம்பியைப் பார்த்து “அந்தண சிரேஷ்டரே! உங்களை வணங்குகிறேன். உங்களைப் போன்ற

வர்களால் நாங்கள் சிறப்படைகிறோம். நாடு சிறப்படைகிறது. அந்தணராக இருந்து கொண்டு எப்படி அந்த அரிய பணியைச் செய்தீர்கள்?" என்றான்.

"எல்லாம் ஆச்சார்யர் கிருபை. என்னால் ஆகக் கூடியது எதுவுமில்லை" என்றார் தொண்டனூர் நம்பி.

"தங்கள் ஆச்சார்யர் யார்?" என்று கேட்டான் மன்னர்.

"இராமானுஜர். அவரைப் பற்றி எவ்வளவு வேண்டுமானாலும் சொல்லலாம். அவர் அதைத் துரும்பளவு கூட விரும்பாததால் நாங்கள் அடங்கியிருக்கிறோம். அந்த எளிமையான அற்புதரை நீங்கள் வந்து தரிசிக்க வேண்டும். இது என் பணிவான வேண்டுகோள்" என்றார் தொண்டனூர் நம்பி.

நீலகேசி இராமானுஜரைப் பற்றிக் கூறியது மன்னனுக்கு நினைவுக்கு வந்தது.

"ஆச்சார்யரை அவசியம் காண வேண்டும் அந்தண உத்தமரே. நாளைக்கு எப்போது தரிசனம் செய்யலாம் என்று தெரிவித்து தாங்கள் அழைத்துச் செல்ல வேண்டும்" என்றான் மன்னன்.

"அப்படியே ஆகட்டும் மகாராஜா."



மறுநாள் அரசகுடும்பத்தினர் அனைவரும் எளிய உடைகளுடன் காத்திருந்தனர். தொண்டனூர் நம்பி அவர்களை நரசிம்மர் ஆலயத்திற்கருகே இருந்த கீற்று மண்டபத்திற்கு அழைத்துச் சென்று ஒவ்வொருவராய் அறிமுகப்படுத்தி வைத்தார்.

"மகாராஜா. இவர் சுவாமி முதலியாண்டான். ஆச்சார்யரின் முதலிரண்டு பிரதான சிஷ்யர்களில் ஒருவர்."

"இவர் பராசர பட்டர் சுவாமி. ஆச்சார்யரின் முதலிரண்டு பிரதான சிஷ்யர்களில் இரண்டாமவரான கூரத்தாழ்வார் சுவாமியின் திருப்புதல்வர்."

"இவர் எம்பார். ஆச்சார்ய சுவாமியின் அத்தை மகனார். ஆச்சார்யர் அவர்களால் இத்திருநாமத்தைப் பெற்றவர்."

"இவர் வடுக நம்பிகள். ஆச்சார்யரது பாரதரட்சைகளையே தொழும் பரம சிஷ்யர்."

இவ்வாறு தொண்டனூர் நம்பி அறிமுகம் செய்து வைத்த சிஷ்யர்களுக்கு விட்டலராயன் தன்னுடன் இருந்தவர்களை அறிமுகப்படுத்தினான்.

"இவர்களைப் பார்த்தால் ஒவ்வொருவரும் ஒரு மகானைப் போல் அல்லவா இருக்கிறார்கள்?" என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்டான் விட்டலராயன்.

தொண்டனூர் நம்பியைப் பார்த்து "இந்த மகா புருஷர்கள் ஏன் இந்தக் கீற்றுக் கொட்டகைகளுக்குள் இருக்கிறார்கள். நல்ல கட்டிடம் கிடைக்க வில்லையா?" என்று கேட்டான்.

"ஆச்சார்யரிடம் இதே கேள்வியை நானும் கேட்டேன் மகாராஜா. இருக்கும் இடமும் கிடைக்கும் சுகமும் மிகவும் கவனமானதாக இருக்க வேண்டும். அவற்றில் மாற்றம் வந்து விட்டால் மனநிலை மாறிவிடும். துறவிகளின் இடம் மடம் தானே மாளிகையல்ல. அந்த மடமும் கீற்றுப் பந்தலாக இருந்தால் பற்றுகள் வந்து ஒட்டாது என்று சொல்லி விட்டார். அவர் உறுதியான மனம் கொண்டவர். யோசிக்காமல் எதையும் சொல்ல மாட்டார். சொல்லி விட்ட பின் தவறு ஏதாவது புலப்பட்டால் உடனே மாற்றிக் கொள்வார்" என்றார் தொண்டனூர் நம்பி.

மன்னன் மௌனமாக நடந்தான்.

இராமானுஜர் அமர்ந்திருந்த இடத்தை எல்லோரும் அடைந்தார்கள்.

"மகாராஜா! இவர் தான் எங்கள் ஆச்சார்யர்" என்றார் தொண்டனூர் நம்பி.

மன்னன் ஒரு கணம் அசந்து போனான்.

காஷாயமும் த்ரிதண்டமும் தவிர எதுவும் இல்லாத இராமானுஜரைக் கண்டதும் அதுவரை காணாத ஒருவரைக் கண்டமாதிரி இருந்தது அவனுக்கு.

ஜெயதேவரிடமும் நீலகேசியிடமும் எதுவோ ஒன்று இல்லாததும் அதே சமயம் இராமானுஜரிடம் ஏதோ ஒன்று இருந்ததையும் கண்டான்.

அவரது திருமுகத்தில் நிலவிய களை இணையற்றதாக இருந்தது. முன்னே நிற்பவர்களை ஆடவொட்டாமல் செய்யக் கூடியதாக இருந்தது.

அவரது நெற்றியில் விளங்கிய திருமண் காப்பு அவருக்குப் பிரகாசத்தை வழங்குவது போல் இருந்தது.

உத்தரீயத்தை எடுத்து இடுப்பில் கட்டிக் கொண்டு கீழே விழுந்து வணங்கினான் மன்னன்.

எல்லோரும் அவ்வாறே வணங்கினார்கள்.

"அனைவரும் சௌகர்யமாக அமருங்கள்" என்றார் இராமானுஜர்.

எல்லோரும் அமர்ந்தவுடன் மன்னனைப் பார்த்து அவரே பேசினார்.

"மன்னா! உன் அனுமதியில்லாமல் உன் நாட்டில் பிரவேசித்து தங்கியிருக்கிறேன். உன் அனுமதியைக் கோருகிறேன்."

"சுவாமி! தங்களுக்கு இந்த பூவுலகமே சொந்தம். பூவுலகத்தை ரட்சிக்க வந்த மகான்களுக்கு வரவேற்பு நல்க வேண்டியது தான் எங்கள் பணி. அனுமதி வழங்குவது அல்ல" என்றான் மன்னன்.

"மன்னா! இங்கே நான் வந்ததும் இங்கே இருந்த அருவியையும் குன்றுகளையும் பார்த்தேன். இங்கும் உன் அனுமதியில்லாமல் ஏரி ஒன்றை அமைக்கத் தீர்மானித்து தொண்டனூர் தொண்டர்களை வைத்துக் கொண்டு வேலையைத் தொடங்கி விட்டேன். இது அத்துமீறல்தான்" என்றார் இராமானுஜர்.

"இப்படித் தாங்கள் பேசலாகுமா சுவாமி? நாட்டை ஆளும் அரசர்களுக்குத் தோன்ற வேண்டிய யோசனைகளை தங்களைப் போன்ற நாட்டாசையில்லாத மகான்களுக்குத் தோன்றியிருப்பது எங்கள் பாக்கியம் அல்லவா? இந்தப் பணியில் தொண்டனூர் தொண்டர்கள் மட்டுமல்ல அரசாங்கத் தரப்பில் தேவையான பணியாட்களையும் நிதியையும் வழங்குகிறேன். ஆறு மாதத்தில் ஏரி கட்டி முடிக்கப்படும். அந்த ஏரி தங்கள் பெயரால் இராமானுஜர் ஏரி என்றே வழங்கப்படும்"* என்றான் மன்னன்.

பேசிய இருவருக்குமே இதமாக இருந்தது.

ஆணவம் அகன்று அன்பு நிலவும் இடங்களிலும் கர்வம் கலைந்து கருணை நிலவும் இடங்களிலும், தன்னலம் தகர்ந்து பொதுநலம் நிலவும் இடங்களிலும் புரிதல் என்பது இயல்பாகவும் எளிதாகவும் இருக்கும்.

மன்னன் அந்த நிலையில் இருந்தான்.

"சுவாமி! தாங்கள் கர்நாடகம் வந்தது எங்கள் பாக்கியம். இங்கே தங்கள் பாதங்களைத் குத்துவதற்கு முட்கள் இருக்காது. மலர்களே இருக்கும். கர்நாடகத்தில் தாங்கள் சாதிக்க விரும்பும் எந்த காரியத்திற்கும் தடை இருக்காது" என்று சொன்ன மன்னன் "தங்களுக்குத் தமிழகத்தில் என்ன நேர்ந்தது?" என்று கேட்டான்.

"மன்னா! ஒருவன் நடந்தவற்றையே நினைத்து கொண்டிருந்தால் அவனுக்கு வேறு வேலை இல்லை என்று

* தொண்டனூரில் இந்த ஏரி இருப்பதைக் காணலாம். ஏரியை அமைப்பதற்கான இடத் தேர்வை இராமானுஜர் செய்தது நம்மை வியக்க வைக்கும். இது திருமலா சாகரம் என்று வழங்கப்படுகிறது.

அர்த்தம். வேறு வேலையைச் செய்ய அவன் தயாராக இல்லை என்று அர்த்தம். நாம் நடக்க வேண்டியவற்றைப் பார்ப்போம்" என்றார் இராமானுஜர்.

"அதுவும் சரிதான் சுவாமி. தாங்கள் தங்கள் சீஷ்ய கோடிகளுடன் எங்கள் அரண்மனையில் விருந்துக்கு வர வேண்டும். இது எங்கள் பணிவான வேண்டுகோள்" என்று சொல்லி விட்டு விடைபெற்றான் மன்னன்.



தொண்டனூரில் வடக்கில் ஓர் உபவனம் இருந்தது. தென்னை மரங்கள் திரளாய்ச் சூழ்ந்திருந்த அந்தப் பகுதியில் மான்கள் ஓடின. மயில்கள் நடந்தன. குயில்கள் பாடின. காக்கைகள் பறந்தன. கிளிகள் பேசின. காடைகள் கத்தின.

ஆனால் இவை எதையுமே கவனிக்காத நிலையில்-

தன்னையே கூட கவனிக்காத நிலையில் இலை போல் அமர்ந்திருந்தான் இளவரசன் நரசிம்மன்.

காட்டுக் கோழி வந்து அவனருகில் வந்து அவனை உற்றுப் பார்த்து விட்டு கீச்கீச் என்றது.

சிலை போலிருந்த நரசிம்மன் அசைந்தான்.

எழுந்து நடந்தான்.

நின்றான்.

நடந்தான்.

நின்றான்.

அமர்ந்தான்.

எதுவுமே அவனுக்குப் பிடிபடவில்லை.

கத்தினான்.

அணில்கள் அலறின.

பறவைகள் திகைத்தன.

அங்கிருந்த ஓடையில் ஓடிய நீரை எடுத்து முகத்தில் தெளித்துக் கொண்டான்.

இரண்டு தென்னை மரங்கள் வளைந்து பிணைந்து தாழ்ந்து கிடந்தன.

அது அமரத் தகுந்த ஆசனத்தைப் போல இருந்ததால் அதில் அமர்ந்தான்.

அவனுடைய உதடுகள் முணுமுணுத்தன.

"மாளவிகா!"

எங்கே இருக்கிறாய் மாளவிகா? என்ன செய்கிறாய் மாளவிகா?

அவனது மனம் கேட்டது.

வருடங்கள் நான்கிற்கும் மேலாக ஓடிவிட்டது. நரசிம்மனுக்கும் சாளுக்கிய இளவரசி சௌமிய குமாரிக்கும் திருமணம் நடந்து ஆறுமாதத்திற்கு முன் ஆண் குழந்தை பிறந்து விட்டது. வல்லாளன் என்ற பெயரும் சூட்டியாகி விட்டது.

அவனைப் பொறுத்தவரை வம்சாவளி உண்டாகி விட்டது. அரியணையைக் கவனித்துக் கொள்ள ஆக வேண்டியதெல்லாம் ஆகிவிட்டது.

ஆனால் மாளவிகாவின் நினைவு அவனை விட்டுப் போக வில்லையே ஏன்?

கானகலா கோட்டைக்குப் பிறகு அவளை அவன் சந்திக்க வில்லை.

ராஜ்யத்திற்காக மாளவிகாவைத் துறந்தானே தவிர அவளது நினைவைத் துறக்கவில்லை.

ராஜ்யத்தில் நடக்க வேண்டியவைகளை எல்லாம் சரியாகச் செய்தான். ஆனால் அவளது நினைவைத் துறக்க வில்லை.

தனது மனைவி சௌமிய குமாரியிடம் அன்பைப் பொழிந்தான்.

ஆதரவளித்தான். அரவணைத்தான். குழந்தையை எடுத்துக் கொஞ்சி மகிழ்ந்தான். ஆனால் அவளது நினைவைத் துறக்கவில்லை.

தாத்தா விட்டலராயன் பேரனைத் தலைமீது வைத்துக் கொண்டு "வானத்தைத் தொடு வல்லாளா. உனக்கு அதுவே எல்லையாக இருக்க வேண்டும்" என்பார்.

"அவனுக்கு வானமும் எல்லையாகாது தந்தையே" என்று கூறித் தந்தையைப் பரவசப்படுத்துவான். ஆனால் அவளது நினைவைத் துறக்கவில்லை.

அவள் இருக்கிறாளா என்பது தெரியாது. அவளுக்கு உயிர் இருக்கிறதா என்பது தெரியாது. தன்னை அவள் நினைக்கிறாளா என்பதும் தெரியாது. ஆனால் அவளை அவன் நினைத்துக் கொண்டே இருந்தான்.

அப்போது -

"ஐயோ! அம்மா" என்ற அலறல் கேட்டது.





தோல்வியைச் சந்திக்காதவன் வாழ்க்கையில் ஒருவனும் இல்லை. தோல்வியைச் சந்திக்காதவனின் வாழ்க்கை வாழ்க்கையே இல்லை – சோமேஸ்வரன்




மாளவிகா என்னும் நினைவுக்கு முன் நரசிம்மனுக்கு அலறல் சத்தம் உணரக் கூடியதாக இல்லை. செவியில் விழவில்லை.

காட்டு விலங்கிடம் யாரோ சிக்கியிருக்க வேண்டும் என்பதை உணர்த்தக் கூடியதாகத்தான் அந்த அலறல் அமைந்திருந்தது.

நரசிம்மனின் மனத்திலோ அதை விடப் பெரிய அலறல் ஒலித்துக் கொண்டிருந்தது.

“என்னை மறந்து விட்டீர்களே! என்னைப் பிரிந்து விட்டீர்களே?” என்று மாளவிகா கண்ணீரும் கம்பலையுமாக அழுவது போன்ற காட்சி அவனது மனக் கண்ணில் வந்து கொண்டே இருந்தது.

தனிமையில் இருக்கும் போது அவன் சிந்தித்ததுண்டு.

மாளவிகாவை வேண்டாம் என்று எப்படிச் சொன்னோம்? அத்துணை அவசரமாக அந்த முடிவை எவ்வாறு எடுத்தோம்? அரசியல் கெடுபிடி காரணங்களால் தான் காதலைத் துறந்தோம். அதே சமயம் பழைய வரலாறுகளில் காதலுக்காக அரசகுமாரர்கள் பலர் ராஜ்யங்களைத் துறந்திருக்கிறார்கள். ராஜ்யத்திற்காகக் காதலைத் துறந்தது நான் மட்டும்தான் போலிருக்கிறது.

ஏன் அப்படிச் செய்தேன்?

காதலை விட ராஜ்யம் பெரியதா?

காதல் ராஜ்யத்தை விட அரசியல் ராஜ்யம் உயர்ந்ததா?

மீண்டும் மீண்டும் யோசித்தான்.

அப்படியல்ல.

தனது விஷயம் மிகவும் அபூர்வமானது. தனது அரியணை மட்டுமே சம்பந்தப்பட்டிருந்தால் அதைத் துறந்து காதலை அரவணைத்திருக்கலாம்.

ஆனால் என் நிலைமை அப்படியல்ல. காதலைப் புறக்கணிக்க வில்லை என்றால் ஹொய்சள வம்சமே போய் விடும். தந்தை

பெற்ற இருபது வெற்றிகள் போய் விடும். பேரரசு என்ற பெருமை போய்விடும். எதிர்காலமே போய் விடும்.

இப்படி நான்கு மகத்தான விஷயங்களுக்கு எனது காதல் தான் தடை யென்றால் காதலை விடுவதைத் தவிர வேறு என்ன முடியும்?

காதலே முக்கியம் என்று ஒதுங்கியிருந்தால் தந்தை என்ன நினைப்பார்? பஞ்சப் பிரதானிகளும் அதிகாரிகளும் என்ன நினைப்பார்கள்? மக்கள் என்ன நினைப்பார்கள்? புழுதிவாரித் தூற்றுவார்கள் அல்லவா?

"இதோ போகிறானே! இவனுக்கு வீரமில்லை. போரில் தோற்றான். பெருந்தன்மை இல்லை. பேரரசை இழந்தான். வெற்றுக் காதலுக்குப் பரம்பரையின் எதிர்காலத்தையே அழித்தான். சுயநலக் கோழை. மனச்சாட்சியற்றக் குரூரன். அரச குலத்திற்கு வந்து சேர்ந்த அழிவு சக்தி. இவனும் இவன் காதலும். அந்த அனாதைப் பெண்ணிடம் அப்படியென்ன அதிசயம் இருக்கிறது? அவளென்ன கற்பக விருட்சமா? கந்தர்வ தேவதையா? சர்வ சாதாரணமான சதையும் ரத்தமும் கொண்டவள் தானே? அவளை விட அழகானவர்கள் இல்லையா? மெருகானவர்கள் இல்லையா? மகத்தானவர்கள் இல்லையா? என்றல்லவா இகழ்வார்கள்."

நரசிம்மனின் மனம் நரக வாழ்க்கையை அனுபவிப்பது போல வேதனைப் பட்டது.

தனது தரப்பை மட்டும் கருதி நியாயம் என்று முடிவு செய்து முடித்தும் விட்டோமே-

மாளவிகாவிடம் அது குறித்து ஒரு வார்த்தையாவது சொன்னோமா?

அவள் மனநிலை பற்றிக் கவலைப்பட்டோமா?

அவளது எதிர்காலம் என்னாகும் என்பதைப் பற்றி யோசித்துப் பார்த்தோமா?

இல்லை. இல்லை. இல்லவே இல்லை.

அவளைப் பற்றி அவன் தன் மனைவியிடம் கூட எதையும் சொல்லவில்லை.

சொன்னால் மனைவிக்குத் தன் மேல் நெருடல் உண்டாகும்.

இடைவெளி கூட உண்டாகும்.

அது ராஜ்யத்தையும் பாதிக்கும்.

ஆகவே தான் நரசிம்மன் தனது உணர்வுகளைத் தன்னோடு வைத்துக் கொண்டானே தவிர மனைவி சௌமிய குமாரியிடம் பேசவில்லை.

ஒருமுறை அவளிடம் பேசியபோது "சௌமியா! உனது அன்புச் சகோதரர் இராஜ்ய விஷயத்தில் உன்னை நான் மணந்து கொள்ள வேண்டும் என்ற நிபந்தனையை விதித்தாரே? அது சரியா?" என்று கேட்டான்.

"நீங்கள் கானகலா போரில் வெற்றியடைந்திருந்தால் இந்த நிபந்தனைகள் வந்திருக்காது அல்லவா?" என்றுத் திருப்பிக் கேட்டாள் சௌமிய குமாரி.

"நான் கேட்ட கேள்விக்கான பதில் இது இல்லை அரசகுமாரி. சோமேஸ்வரர் விதித்த நிபந்தனை சரிதானா என்பது என் கேள்வி" என்றான் நரசிம்மர்.

"நிபந்தனை எதுவும் விதிக்காமல் இருந்திருந்தால் என்ன செய்வதாக இருந்தீர்கள்?"

"முதலில் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்ல முற்படு சௌமியா? கேள்விக்கு கேள்வி பதிலாகாது. உங்கள் சகோதரர் நிபந்தனை எதுவும் விதிக்காமல் எங்கள் வெற்றிகளைப் பறித்துக் கொண்டிருந்தால் நாங்கள் மீண்டும் முதல் கட்டத்திலிருந்து ஆரம்பித்திருப்போம்."

"அது முடியக் கூடிய காரியமா?"

"முடியாது என்றால் முடியாது. முடியும் என்றால் முடியும்."

"புல் மேயப்பட்டு விட்டால் புல்லை வளர்க்கலாம். பயிர்கள் அழிக்கப்பட்டால் பயிர்களை வளர்க்கலாம். ஆனால் மரங்களை வெட்டி விட்டால் வளர்க்க முடியுமா? கன்றுகளை நட்டு மரமாக்க முயன்றால் அதற்கு எவ்வளவு காலமாகும்? மரங்களை விடுங்கள். இருபது நாடுகளை மீண்டும் வெல்வதற்கு எத்தனை பிரயத்தனங்கள் தேவை? எத்தனைப் படைகள் தேவை? எத்தனை ஆண்டுகள் தேவை? நினைத்த மாத்திரத்தில் நடந்துவிடக் கூடியதா? இல்லை. அதிலுள்ள சிரமங்களை உணர்ந்தார் சகோதரர் சோமேஸ்வரர். உங்கள் நிலையில் அவரே இருந்தால் கூட இப்படித்தான் நடந்திருக்கும். உங்கள் மீது அவர் காட்டியது பெருங்கருணை. விக்கிரமாதித்த சக்கிரவர்த்தி இருந்திருந்தால் கூட இப்படிச் செய்திருக்க மாட்டார். கரும்பைத் தின்பதற்குக் கூலி கொடுத்த மாதிரியான விஷயம். எப்படியும் நீங்கள் ஒருத்தியை மணந்து தான் ஆக வேண்டும். அது நானாக இருந்ததில் உங்களுக்கென்ன கவலை? குறை?"

நரசிம்மன் மௌனமாக இருக்கவே அவளே தொடர்ந்து ''உங்களுக்கு ஒரு விஷயம் தெரியுமா? உண்மையிலேயே நான் திருமணம் செய்து கொள்ள விரும்பியது சோழ மாமன்னர் குலோத்துங்கரின் புதல்வரான விக்கிரமச் சோழரைத்தான். அவரை நான் மணந்திருந்தால் சாளுக்கிய சாம்ராஜ்யத்திற்கும் சோழ சாம்ராஜ்யத்திற்கும் இருந்து வரும் நீண்ட காலப் பகைமை முடிவுக்கு வந்திருக்கும். என் ஆசையைச் சொல்லியிருந்தால் சகோதரர் சோமேஸ்வரர் நிச்சயமாக ஏற்றுக் கொண்டிருப்பார். ஆனால் என் ஆசையை அவரிடம் கூறவில்லை. அதற்குள் நீங்கள் குறுக்கிட்டு விட்டதால் உங்களைத் திருமணம் செய்து கொள்ளும் படிச் சொன்னார். பகைவராக இருந்தாலும் உங்கள் தந்தையார் பட்ட இன்னல்களையெல்லாம் சொன்னார். அவர் போர்களில் தன்னை இழந்தது போல் வேறு யாரும் இழந்ததில்லை என்று கூறி அவர் மீது கருணை காட்ட விரும்புவதாகச் சொன்னார். உங்களைத் திருமணம் செய்து கொள்ளும் படிக் கேட்டுக் கொண்டார்.

“நரசிம்மர் போரில் தோற்றவர். அவரையா நான் திருமணம் செய்து கொள்ள வேண்டும்?'' என்று கேட்டேன் நான். ''நம் தந்தையும் பாட்டனாரும் பெற்ற தோல்விகளும் அவமானங்களும் கணக்கில் அடங்காதவை என்றும் அதோடு ஒப்பிடும் போது நரசிம்மன் தோல்வி வெறும் தூசு என்றார். தோல்வியைச் சந்திக்காதவன் வாழ்க்கையில் ஒருவனும் இல்லை. தோல்வியைச் சந்திக்காதவனின் வாழ்க்கை வாழ்க்கையே இல்லை என்றார். விட்டலராயர் பெற்ற இருபது வெற்றிகளுக்கு முன் நரசிம்மனின் ஒரு தோல்வி பெரிய விஷயமில்லை என்றார். நான் என் கனவுகளைத் தியாகம் செய்து விட்டு உங்களை மணந்து கொள்ள இசைந்தேன்'' என்றாள்.

“அப்படியானால் என்னை இஷ்ட விரோதமாகத்தான் திருமணம் செய்து கொண்டாயா சௌமியா?''

“நானென்ன விக்கிரம சோழரைக் காதலிக்கவா செய்தேன்? இதில் இழப்பதற்கு எதுவுமில்லை. உங்களை விரும்பித்தான் திருமணம் செய்து கொண்டேன். எனக்கு விதியின் மீது அசாத்திய நம்பிக்கை. விதிப்படிதான் நடந்தது. நடக்கிறது. நடக்கும்.''

“திருமணமாகி பலமாதங்கள் ஆகிவிட்டன. விக்கிரம சோழரின் நினைப்பு எப்போதாவது வந்து துன்புறுத்துகிறதா?''

“என்ன பேச்சு உங்கள் பேச்சு நாகரிகமற்றப் பேச்சு? உங்களுடன் திருமணமான பின் அவரது நினைப்பு எனக்கு

எதற்காக வரவேண்டும்? திருமணம் என்பது பழைய நினைப்புகளையும் நடப்புகளையும் மறந்து விட்டுப் புதிய உறவாகத் தொடங்கப் பெற்றால் தான் அது மணக்கும், இல்லையென்றால் இறக்கும்.''



தனது மனைவியைத் தற்போது நினைத்துக் கொண்டான் நரசிம்மன்.

தான் திருமணம் செய்து கொள்ள விரும்பிய விக்கிரம சோழனை அவளால் மறந்து வாழ முடிகிற போது தான் விரும்பிய மாளவிகாவை நான்காண்டுகள் ஆகியும் தன்னால் ஏன் மறக்க முடியவில்லை என்று நினைத்துப் பார்த்தான்.

சௌமியாவின் விஷயம் வேறு தன் விஷயம் வேறு. அவள் விக்கிரம சோழனைப் பார்த்தது கூட இல்லை. நான் அப்படியா? மாளவிகாவை பார்த்துப் பழகி காதலித்துத் திருமணத்திற்குக் கூட ஒப்புதல் வாங்கி விட்டோம். சௌமியாவின் விஷயம் வெறும் ஆசை. மாளவிகாவின் விஷயமோ காதல்.

காதல் விசேஷமானது. எப்படித் தோன்றும் எப்போது தோன்றும் யாருக்கிடையே தோன்றும் என்று யாரால் சொல்ல முடியாது. அது தோற்றாலும் சரி வென்றாலும் சரி அந்த உறவு மறக்க இயலாத ஒன்று என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டான்.

திருமணத்திற்குப் பிறகு திருமண வாழ்க்கைக்குக் குந்தகம் விளைவிக்காத விதத்தில் நடந்து கொண்டு அதே சமயம் மாளவிகாவை அடிக்கடி நினைத்தபடி இருந்தான் நரசிம்மன். அவன் எவ்வளவு முயற்சி செய்தும் அந்த நினைவை அவனால் அகற்ற முடியவில்லை.

மறக்க வேண்டும் மறக்க வேண்டும் என்று முற்பட்ட போது மாளவிகாவை நினைக்கத்தான் முடிந்தது.

ஆண்டுகள் ஆக ஆக அந்த நினைப்பு அதிகமாயிற்றே தவிரக் குறையவில்லை.

அவள் என்ன ஆனாளோ என்ற கவலை வேறு உண்டாயிற்று.

தொண்டனூரின் உபவனத்தில் அந்தக் கவலையோடு அமர்ந்திருந்த நரசிம்மன் தன்னை இழந்து கொண்டு பாடினான்.

**பொன்னெழில் பூத்தது புதுவானில்**
**வெண்பனி தூவும் நிலவே நில்.**

என் மனத் தோட்டத்து வண்ணப்பறவை
சென்றது எங்கே சொல் சொல் சொல்

- பொன்னெழில்

தென்னை வனத்தினில் உன்னை முகம் தொட்டு
எண்ணத்தைச் சொன்னவன் வாடுகிறேன்
எண்ணத்தைச் சொன்னவன் வாடுகிறேன்
உன்னிரு கண்பட்டு புண்பட்ட நெஞ்சத்தில்
உன்பட்டு கைப்படப் பாடுகிறேன்

- பொன்னெழில்

முன்னம் ஒருமுறை முக்கனி சர்க்கரை
அள்ளிக் கொடுத்தப் பொன்மாடமெங்கே
அள்ளிக் கொடுத்தப் பொன்மாடமெங்கே
கிண்ணம் நிரம்பிடச் செங்கனிச் சாறுண்ண
முன்வந்தச் செவ்வந்தி மாலையெங்கே?

*நரசிம்மன் இவ்வாறு பாடிய போது மாளவிகாவின் பாடல் கேட்டது.*

பொன்னெழில் பூத்தது தலைவா வா
வெண்பனி தூவும் இறைவா வா
உன்மனத் தோட்டத்து வண்ணப்பறவை
வந்தது இங்கே வா வா வா.

*நரசிம்மனுக்கு மெய்ச் சிலிர்த்தது. மாளவிகாவா வந்து விட்டாள்? மாளவிகாவா பாடுகிறாள் என்று நினைத்துக் கொண்டு எழுந்து நடந்தான்.*

*மாளவிகாவின் பாட்டு கேட்டது.*

தென்னவன் வண்ணத்து செந்தமிழ் பண்கொண்டு
வந்தது பொன்வண்டு பாடிக் கொண்டு
வந்தது பொன் வண்டு பாடிக்கொண்டு
மன்னவன் உள்ளத்துச் சொந்தம் வந்தாளென்று
சென்றது பூந்தென்றல் ஆடிக் கொண்டு.

*"மாளவிகா! நீயா? நீதானா? நீயேதான் பாடுகிறாயா? என் கண்ணே! எங்கே இருக்கிறாய்?" என்று கேட்டபடி நடந்தான் நரசிம்மன்.*

*மாளவிகாவின் குரல் மீண்டும் கேட்டது.*

என்னுடல் என்பது உன்னுடன் என்றபின்
என்னிடம் கோபம் கொள்ளுவதோ

**என்னிடம் கோபம் கொள்ளுவதோ**
**ஒன்றில் ஒன்றானபின் தன்னைத் தந்தானபின்**
**உன்னிடம் நானென்ன சொல்லுவதோ**

பாடல் நின்றது. நரசிம்மனும் நின்றான். நின்ற இடத்தில் நிர்மலமானத் தடாகம் இருந்தது. தடாகத்தில் அல்லி மலர்கள் மலர்ந்திருந்தன. அந்த மலர்களையெல்லாம் ஆள்பவளைப் போல மாளவிகா தடாகக் கரையில் அமர்ந்திருந்தாள்.

நரசிம்மனுக்குத் தன் கண்களை நம்பமுடியவில்லை. மாளவிகா தானா என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்ட அவன் "மாளவிகா! மாளவிகா!" என்று குரலும் கொடுத்தான்.

கரையில் இருந்தபடி கால்களை நீரில் அலைந்து கொண்டிருந்த மாளவிகா "வாருங்கள் அரசகுமாரரே! வந்து அமருங்கள். தடாகக் கரையில் எல்லோரும் அமரலாம்" என்றாள்.

பிரமிப்பில் இருந்த நரசிம்மனோ "மாளவிகா! இங்கே எப்படி வந்தாய்?" என்று கேட்டான்.

"நான் இங்கே தான் இருக்கிறேன் அரசகுமாரரே. இங்கே வந்தது நீங்கள் தான்" என்றாள் மாளவிகா.

"நீ என்ன சொல்கிறாய்?"

"நான் நான்கு ஆண்டுகளாகத் தொண்டனூரில் தான் இருக்கிறேன். நீங்கள் தான் இப்போது இங்கே வந்திருக்கிறீர்கள் அரசகுமாரரே."

"தொண்டனூரில் என்ன செய்து கொண்டிருக்கிறாய்?"

"தொண்டுதான்."

"யாருக்கு?"

* பாடலாசிரியரலக்கு நன்றி

"இறைவனுக்குத்தான் அரசகுமாரரே. இங்குள்ள நரசிம்மப் பெருமாளுக்குப் புஷ்ப கைங்கர்யம் செய்து கொண்டிருக்கிறேன்."

"கஷ்டமாக இருக்கிறது மாளவிகா இதைக் கேட்பதற்கு."

"கஷ்டம் எதுவும் இல்லை அரசகுமாரரே. இளவரசர் நரசிம்மருக்குத் தொண்டு செய்யும் பாக்கியம் கிடைக்க வில்லை. இறைவன் நரசிம்மருக்காவது தொண்டு செய்யும் பாக்கியம் கிடைத்ததே! இதற்கு மகிழத் தானே வேண்டும்?"

"வார்த்தைக்கு வார்த்தை அரசகுமாரரே என்று திரும்பத் திரும்பச் சொல்கிறாயே ஏன்?"

“அரசகுமாரர் என்ற அந்தஸ்தும் பொறுப்பும் தானே நம்மைப் பிரித்தது? நீங்கள் அரசகுமாரராக இல்லா விட்டால் என்னை மணம் செய்து கொண்டிருப்பீர்கள் அல்லவா?”

“அப்படியானால் என்னைத் திருமணம் செய்து கொள்ளாமல் போனதற்கு உனக்குக் கவலையே இல்லையா?”

“ராஜ்யம் என்பது பெரிய விஷயம். காதல் என்பது சிறிய விஷயம். ராஜ்யமா காதலா என்றால் ராஜ்யம் தான் முக்கியம். நீங்கள் செய்தது சரியானது. ஆகவே எனக்கு வருத்தமில்லை.”

“எனக்கு வருத்தமாக இருக்கிறது மாளவிகா. காதலித்தவளைக் கைப்பிடிக்காமல் கைவிட்டு விட்டோமே என்று கவலையாக இருக்கிறது. என்னை நம்பியவளை நட்டாற்றில் விட்டு விட்டோமே என்று வேதனையாக இருக்கிறது. என்னிடம் மரியாதைக் காட்டியவளுக்கு அவமரியாதை செய்து விட்டோமே என்று கஷ்டமாக இருக்கிறது. அன்புக்கும் உண்டோ அடைக்கும் தாழ் என்பார்கள். உண்மையில் அன்புக்கும்தான் தாழ் இருக்கிறது.”

“இளவரசே! நாம் திருமணம் செய்து கொள்ள வில்லையே தவிர அன்பு இல்லாமல் போய் விட வில்லை. உங்களுக்கும் இருக்கிறது. எனக்கும் இருக்கிறது.”

“வெற்று அன்பும் வெற்று உடலும் ஒன்று. உடலென்றால் உயிர் இருக்க வேண்டும். அன்பிலும் ஜீவன் இருக்க வேண்டும். அன்பின் உயர்நிலை பிரிவது அல்ல; இணைவது.”

“உங்கள் கூற்று தவறு இளவரசே. காதல் என்பதும் அன்பு என்பதும் எப்போதும் வீசும் காற்றைப் போன்றது. எதனாலும் அது தடை படுவதில்லை. திருமணம் நடக்கும். நடக்காமல் போகும். அன்பு தடை படுவதில்லை. அது எப்போதும் நீடிக்கும். அன்பு செலுத்தியவர்கள் திருமணம் செய்து கொண்டபின் யாராவது ஒருவர் இறந்து விட்டால் அவர் மீதான அன்பும் இறந்து விடுமா?”

நரசிம்மன் சிறிது நேரம் வரை மௌனமாக இருந்தான்.

பிறகு கேட்டான்.

“நீ தொண்டனூருக்கு எப்போது வந்தாய்? ஏன் வந்தாய்?”

“உங்கள் திருமணம் முடிந்ததும் இங்கே வந்து விட்டேன். வேலாபுரத்திலும் துவாரசமுத்திரத்திலும் தொல்லையாக இருக்கக் கூடாது என்பதால்.”

“என்னை ஒரு முறை சந்திக்கக் கூடவா விரும்பவில்லை?”

"இதே கேள்வியைத்தான் நானும் கேட்க நினைத்தேன். ஆனால் அரசகுமாரர் என்னைச் சந்திக்க விரும்புவாரா என்றச் சந்தேகம் வந்து விட்டது. எனக்கு முன்பாகவே சாத்தப்பட்டக் கதவைத் தட்ட நான் விரும்பவில்லை. ஆனால்...."

"ஆனாலென்ன மாளவிகா?"

"உங்கள் தந்தையாரைச் சந்தித்தேன்."

"சந்தித்தாயா? என் தந்தையாரையா? ஏன்? என்ன கேட்டாய்?"

"என் கதி என்ன என்று கேட்டேன். விதி என்று சொன்னார் மகாராஜா."

"நீயும் வந்து விட்டாயா? வெந்துத் துடிக்கவில்லையா உன் நெஞ்சு?"

"என் நெஞ்சை விட மகாராஜாவின் நெஞ்சு துடித்தது இளவரசே! கால்களாகக் கருதி என் கைகளைப் பிடித்துக் கொண்டார். ராஜ்யங்களை ஸ்தாபிப்பது என்பது எப்போதாவது ஒரு முறை தான் நிகழும் மகளே. அதோடு யாரோ சிலரது தியாகங்களால் தான் ராஜ்யம் எழுகிறது. போரில் ஆயிரக் கணக்கான வீரர்கள் உயிர்த் தியாகம் செய்வதால் தான் வெற்றி உண்டாகிறது. அது போலவே அரியணையில் அமருவதற்கும் சிலரது தியாகங்கள் தேவைப்படுகின்றன. அதைத் தான் நீ செய்திருக்கிறாய். உன்னை இந்த ராஜ்யம் ஒரு போதும் மறக்காது என்றார். நான் நெகிழ்ந்து போனேன். இளவரசரால் என்னை மறக்க முடியாது மகாராஜா என்றேன். உண்மைதான் மகளே. நரசிம்மன் அப்பழுக்கற்றவன். உன்னைப் புறக்கணிக்கும் எண்ணம் அவனுக்குச் சிறிதும் இல்லை. நானும் உன்னைப் புறக்கணிக்கும் படிச் சொல்லவில்லை. ராஜ்ய நலம் என்றதுமே உன்னைத் தியாகம் செய்ய முன்வந்தான். உன்னை அவனால் மறக்க முடியாது. காலம் தான் உன்னை மறக்கும் பெருங் காரியத்தைச் செய்ய வேண்டும் என்றார். நான் பேசுவதற்கு எதுவும் இல்லை. வணங்கி விட்டு வந்து விட்டேன்."

பெருமூச்செறிந்தான் நரசிம்மன்.

"அரச குமாரனாகப் பிறப்பதை விட பெரிய துரதிர்ஷ்டமில்லை மாளவிகா" என்றான்.

"அப்படியெல்லாம் பேசாதீர்கள் இளவரசே. காதலி ஒருத்தியைத் திருமணம் செய்து கொள்ள முடியாமல் போனதால் அப்படிக் கூறுவது தவறு. அரச குமாரர்களும் அரசர்களும் தான் அவனியை ஆள்கிறார்கள். அவனியின் புகழை ஆகாயம் வரை பரப்புகிறார்கள். ராமர், கிருஷ்ணர் போன்ற

அரசகுமாரர்களால்தான் இந்த நாடே புண்ணிய நாடாக மாறியிருக்கிறது. இது யோக பூமியே தவிர போக பூமியல்ல. தங்களை மணந்த ராணியார் மகாலட்சுமிக்கு ஒப்பானவர். தங்கள் கரத்தைப் பிடித்ததோடு தங்கள் கரத்தில் தவழ்வதற்குக் குழந்தையொன்றையும் தந்திருக்கிறார். தங்கள் வம்சத்தின் வேர்கள் பலம் பெற்று விட்டன. வம்ச விருட்சமும் பூத்துக் குலுங்குகிறது. இது தான் முறையான வாழ்க்கை. போற்றத் தகுந்த வாழ்க்கை. அதை மதியுங்கள். தொண்டனூருக்கு வந்த நான் அடிக்கடி இந்த உபவனத்தில் உலா வருவதும் தடாகக் கரையில் பாடுவதும் வழக்கம். பாட்டு தானே எனக்குத் தாலாட்டு. தவம். இன்று நான் வந்த போது உங்கள் ராகம் கேட்டது. அதிலிருந்தச் சோகமும் கேட்டது. எனவே பதிலுக்குப் பாடினேன். மற்றபடி என்னிடம் சலனமில்லை. சஞ்சலமில்லை. சோகமும் இல்லை. என் பிரார்த்தனை தாங்களும் என்னை போல சலனமும் சஞ்சலமுமின்றி வாழ வேண்டும் என்பதுதான். உங்களுக்குப் பின்னால் உங்களை நம்பி உங்கள் குழந்தை இருக்கிறது. ராணி இருக்கிறார். மகாராஜா இருக்கிறார். மகாஜனங்கள் இருக்கிறார்கள் மகாராஜ்யம் இருக்கிறது" என்றாள் மாளவிகா.

"மகா மகா என்று எல்லாமும் என்னோடு இருக்கிறது. நீதான் என்னோடு இல்லை" என்று தனக்குள் சொல்லிக் கொண்டான் நரசிம்மன்.

பிறகு "தொண்டனூரில் நீ எங்கே தங்கியிருக்கிறாய்?" என்று கேட்டான்.

"நரசிம்மர் ஆலயத்திற்கு பின்னால் என் போன்றவர்களுக்குக் குடில்களைக் கட்டியிருக்கிறார்கள். அங்கே இருக்கிறேன்."

"உன் போன்றவர்களுக்கு என்றால்?"

"பெண்களுக்கு இளவரசே. இங்கு ஒரு குறைவும் இல்லை. இங்கே திருவரங்கத்திலிருந்து இராமானுஜர் என்ற மகான் வந்திருக்கிறார். ஒருபுறம் ஆண்டவன் தரிசனம். மறுபுறம் ஆச்சார்யர் தரிசனம். இது போதாதா? தினம் தினம் அவரது உபன்யாசங்களைக் கேட்கிறேன். அதுவே என் பிறவியின் பேறு."

"ஆகா! நன்றாகத்தான் பேசுகிறாய் மாளவிகா. அமாத்யரின் மகளான உனக்கு இது தகுந்தது தான். உன்னை இப்படியே விட்டால் சன்யாசம் வாங்கிக் கொள்வாய். உனக்குத் தக்கது செய்ய வேண்டும். இப்போது நீ குடிலுக்குப் போ" என்றான் நரசிம்மன்.

அவளும் பதில் பேசாமல் எழுந்து சென்றாள்.



வழக்கம் போல இராமானுஜர் தன் சீடர்களுக்கு முன்னால் உபன்யாசம் செய்தார்.

"எனது ஆச்சார்யர் பெரிய நம்பிகளைப் போன்ற குணக் குன்று வேறுயாரும் இலர். அவர் ஒருவரது பூதவுடலைப் பார்த்து மாறுபாடு பார்ப்பதில்லை. ஒருவரது ஜாதியைப் பார்த்து வேறுபாடு கொள்வதில்லை. உங்களுக்கெல்லாம் மாறனேர் நம்பியைத் தெரியும். ஆசார்யர் ஆளவந்தார் அவர்களுக்குக் கைங்கர்யம் செய்வதை தன் பாக்கியமாகக் கருதி வாழ்நாள் முழுவதும் கடைப்பிடித்தவர். சோற்றையும் மண்ணையும் கலந்து உண்பார். ஏனென்று கேட்டால் இரண்டுமே ஒன்றுதான் என்பார். நம்மாழ்வாரைப் போன்ற பிரம்மஞானி அவர். ஆளவந்தார் அவருக்குப் பஞ்ச சமஸ்காரங்களை செய்து தனது சீடனாக்கிக் கொண்டார். ஆளவந்தாருக்கு வந்த ராஜ பிளவை, நோயை மாறனேர் நம்பி வாங்கிக் கொண்டு சொல்லொணா வேதனையை அனுபவித்தார். அவரைப் போன்ற உத்தமச் சீடர் இனிமேல் தான் பிறக்க வேண்டும். ஆனால் அவரது உயிர் பிரிந்த போது திருவரங்கத்தில் இருந்த வைஷ்ணவர்கள் ஒருவரும் உத்தரக் கிரியைச் செய்ய முன்வரவில்லை. எனது ஆச்சார்யர் பெரிய நம்பிகள் முன் வந்தார். அனைவரது எதிர்ப்பையும் புறக்கணித்து மாறனேர் நம்பிக்கு உரிய கிரியைகளைச் செய்தார். தாழ்ந்த குலத்தவருக்கு அவர் காரியங்களைச் செய்ததால் ஸ்ரீரங்கத்து வைஷ்ணவ சமுதாயமே அவரைப் புறக்கணித்தது. ஒதுக்கி வைத்தது.

"இது குறித்துப் பெரிய நம்பிகளிடம் நான் வினவினேன். வெறும் பறவை இனமான ஜடாயுவிற்கு ராமபிரான் காரியங்களைச் செய்யவில்லையா? தாழ்ந்த குலத்தவரான விதுரருக்கு க்ஷத்திரிய குலத்து தர்ம புத்திரர் கிரியைச் செய்ய வில்லையா? அவர்களை விடவா மாறனேர் நம்பி தாழ்ந்து விட்டார்? ராமபிரானையோ தர்மபுத்திரரையோ நாடு தூற்றிக் கொண்டா இருக்கிறது?* ஜாதியைப் பார்க்காதீர்கள். உடலில் இருக்கும் அழுக்கைப் பார்க்காதீர்கள். உள்ளே இருக்கும் ஆத்மாவைப் பாருங்கள். அதைப் பார்த்து தான் ஆளவந்தார் சிஷ்யனாக்கிக் கொண்டார். மாறனேர் நம்பியை ஜாதியின் காரணத்தினால் புறக்கணித்தால் அது ஆளவந்தார் அவர்களைப் புறக்கணித்ததாக ஆகாதா என்று கேட்டார். அவரது உபதேசம் உலகத்திற்கான உபதேசம். அதைக் கேட்ட பிறகு தான் எனக்குள் இருந்த ஜாதி பேதம் என்ற சிறு கறையும் அழிந்தொழிந்தது. இதுவே உங்களுக்குப் பாடம். ஸ்ரீவைஷ்ணவனுக்கு ஜாதி பேதமில்லை. எந்த ஜாதியாக இருந்தாலும் - சண்டாளனாக இருந்தாலும் அவன் திருமாலின்

* பக்கம் 273. ஸ்ரீராமானுஜர் வாழ்க்கை வரலாறு. By. சுவாமி ராமகிருஷ்ணா நந்தா.

பக்தனாக இரந்தால் அவனை நான் வணங்குவேன் என்று நம்மாழ்வார் சொல்ல வில்லையா? அவருக்குத் தெரியாததா நமக்குத் தெரியப் போகிறது? ஆன்றோர் வாக்கு ஆண்டவனான எம்பெருமானின் வாக்கு. அது நமக்குக் கட்டளை. மறக்கவோ மீறவோ கூடாது" என்று முடித்தார் இராமானுஜர்.

அப்போது தொண்டனூர் நம்பி எழுந்து "சுவாமி! மகாராஜா நாளைக்கு நம் அனைவரையும் விருந்துண்ண அரண்மனைக்கு அழைத்திருக்கிறார். வரவேண்டும் என்று ரொம்பவும் கேட்டுக் கொண்டார். ஜைன மத ஆச்சார்யங்களை முன்பு விருந்துக்கு அழைத்த போது போரில் மகாராஜாவின் சுண்டு விரல் துண்டிக்கப்பட்டதால் அங்கஹீனனின் விருந்துக்கு வரமுடியாது வரமுடியாது என்று கூறியதுடன் மகாராஜா "பிட்டி தேவன்" என்று இகழ்ச்சியாகக் கூறிச் சென்றாராம். மகாராஜா அதைச் சொல்லிப் பெருமைப்பட்டார். ஆச்சார்ய பெருமக்களின் திருப்பாதங்கள் அரண்மனையில் படவேண்டும் என்பது தான் அவரது வேண்டுதல் என்றார். தொண்டனூர் அரண்மனை புதிதாக புனருத்தாரணம் செய்யப்பட்டதால் தங்கள் திருப்பாதம் அவசியம் பட வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். தேவரீர் மறுக்கலாகாது" என்றார்.

"அரண்மனைக்கு வருவதில் நமக்கு ஒரு ஆட்சேபணையும் இல்லை. அதே சமயம் நாம் சன்யாசிகள். கல்யாண விருந்து போல உண்ணலாகாது" என்றார் இராமானுஜர்.

"மகாராஜாவுக்குச் சொல்லி விட்டேன். எல்லாம் முறைப்படி நடக்கும்" என்றார் தொண்டனூர் நம்பி.

மறுநாள் இராமானுஜரும் சீடர்களும் அரண்மனைக்குச் சென்றார்கள்.

எளிய விருந்து நடந்தது.

விருந்து முடிந்து அரண்மனை வளாகத்தின் கூடத்தில் வந்து அமர்ந்த இராமானுஜர் மன்னனைப் பார்த்து "நீடூழி வாழ்வாயாக" என்று வாழ்த்தினார்.

மன்னன் நரசிம்மனை முன்னே வரவழைத்து "என் மகன் இவனையும் ஆச்சார்யர் ஆசீர்வதிக்க வேண்டும்" என்றான்.

"குறையொன்றுமில்லை. விஜயீபவ" என்றார் இராமானுஜர்.

அப்போது "ஹ்ஹ்ஹீஹீ..." என்று விபரீதமான குரலொன்று எழுந்தது.





மதம் எதுவாக இருந்தாலும் மதத் தலைவர்கள் தங்கள் மதம் தான் உயர்வானது என்று நினைக்கிறார்கள். அந்த நினைப்பு அவர்களை வெறியர்களாக்குகிறது
– துளசி




"என்ன சத்தம் இது?" என்று கேட்டார் இராமானுஜர்.

தொண்டனூர் நம்பி பேச முற்பட்டு "சுவாமி! மகாராஜாவின் திருப்புதல்வி தர்மதேவியின் அவலக் குரல் இது. அவளுக்குப் பிசாசகணங்களின் பீடிப்பு காரணமாக நான்காண்டுகளுக்கும் மேலாக தன்னிலை மறந்து இருக்கிறாள்" என்றாள்.

"அந்தக் குழந்தையை என்னிடம் அழைத்து வாருங்கள்" என்றார் இராமானுஜர்.

நரசிம்மன் சென்று தனது சகோதரியைத் தன் தாய் சாந்தலையுடன் அழைத்து வந்தான்.

மாணிக்கத்திற்குக் கரியைப் பூசியது போல் - சந்தனச் சிலைக்குச் சேற்றைப் பூசியது போல் - செழுமையான செடிக்குச் தீ வைத்தது போல் - உண்மையின் மீது பொய்யைப் பூசியது போல் உள்ளொன்றும் புறமொன்றுமாய்ப் பேதைப் பெண்ணாக வந்தாள் தர்மதேவி.

இராமானுஜர் அவளிடம் ஆத்மாவைக் கண்டார்.

"உட்காரம்மா குழந்தாய்" என்றார்.

தர்மதேவி சட்டென்று உட்கார்ந்து பற்களைக் காட்டிச் சிரித்தாள்.

இராமானுஜர் ஸ்ரீபாத தீர்த்தத்தை எடுத்து அவளது முகத்தில் பளிச்சென்று தெளித்தார்.

தர்மதேவியின் உடல் சிலிர்த்தது.

மயக்கத்திலிருந்து விழித்தவளைப் போல விழித்தாள்.

சுற்றிலும் பார்த்து விழித்தாள்.

தன்னையும் பார்த்து விழித்தாள்.

"அம்மா இது என்ன நான் இப்படி இருக்கிறேன்?" என்று கேட்டாள்.

“குழந்தையை அழைத்துச் சென்று நீராடச் செய்து புத்தாடையை அணிவித்து நரசிம்மப் பெருமானின் ஆலயத்திற்கு அழைத்து வந்து தரிசனம் செய்யச் செய்யுங்கள். மந்திர தண்டத்தைத் தலையில் வைப்பார்கள். அதற்குப் பின் எந்தத் துர்தேவதையும் நெருங்காது. நாங்கள் வருகிறோம்” என்று கூறிவிட்டு எழுந்தார் இராமானுஜர்.

சீடர்களோடு வெளியேறினார்.

மன்னனுக்குப் பிரமை பிடித்த மாதிரி இருந்தது.

தொண்டனூர் நம்பி அவனிடம் வந்து “மகாராஜா! உங்கள் மகள் குணமாகி விட்டாள். ஆச்சார்யர் சொன்னது போல் செய்யுங்கள்” என்று கூறிவிட்டு அகன்றார்.

மன்னன் மனம் தெளிவடைந்தவனாய் தன் மகளை இராமானுஜர் கூறியபடியே நரசிம்மர் ஆலயத்திற்கு அழைத்துச் சென்றான்.

மகள் சர்வ பயத்தையும் நீக்க வல்ல நரசிம்மப் பெருமாளை வணங்கினாள். அர்ச்சகர் அவளது தலையில் மந்திர தண்டத்தை* வைத்தார். அனைவரது தலையிலும் வைத்தார்.

மகள் பூரணகுணமாகி விட்டாள் என்பதை மன்னனால் நம்ப முடியவில்லை.

சன்னதியை விட்டு வெளியே வந்த தர்ம தேவி “எனக்கு என்ன நடந்தது அப்பா? என் உடல் மிகவும் கனத்திருந்தது. அந்த கனம் விலகி உடம்பு லேசாகி விட்டது போல் இருக்கிறது. மனம் தெளிவாக இருக்கிறது. எல்லோரையும் தெரிகிறது. பலகாலமாக உங்களையெல்லாம் நான் கஷ்டப் படுத்தியதாகத் தோன்றுகிறது. என்னை மன்னித்து ஆசிர்வதியுங்கள்” என்று கூறி மன்னனின் கால்களில் விழ முற்பட்டபோது-

“நில் அம்மா. முதலில் உன்னை ஒரே நொடியில் குணப் படுத்திய மகான் இராமானுஜர் இருக்கிறார். அவரது திருப் பாதங்களில் விழுந்து உன் நன்றியைத் தெரிவித்து ஆசிர்வாதங்களை கோருவாயாக மகளே” என்று கூறி ஆலயத்திற்கு அருகில் இருந்த கீற்றுப் பந்தலுக்கு அழைத்துச் சென்றார்.

மன்னனையும் அவனோடு வந்தவர்களையும் தொண்டனூர் நம்பி இராமானுஜரிடம் அழைத்துச் சென்றார்.

மன்னனும் மகளும் இராமானுஜரை மண்ணில் விழுந்து வணங்கினார்கள்.

---

* தொண்டனூரில் உள்ள நரசிம்மர் ஆலயத்தில் தற்போது கூட பக்தர்களுக்குத் தலையில் “சடாரி” வைப்பதில்லை. மந்திர தண்டத்தையே வைக்கிறார்கள்.

தர்மதேவி இராமானுஜரின் திருஉருவத்தைக் கண்டதும் தெய்வத்தைக் கண்டது போல் பரவசமடைந்து ஆனந்தக் கண்ணீர் விட்டு அழுதாள்.

"இனி எந்தக் குறைவும் உனக்கில்லை குழந்தாய். எம் பெருமானின் அருளால் நீ பூரணமாகக் குணமடைந்து விட்டாய். ஐந்து ஆண்டுகளாக நீ இழந்து விட்ட வாழ்க்கை போய் விட்டாலும் இனி வரும் வாழ்க்கையில் உனக்கு இரட்டிப்பு மகிழ்ச்சியே வரும். உன்னைக் காப்பவன் எம்பெருமான் அரங்கன்தான். அத்திகிரி வரதன் தான். அலர்மேல் மங்கை மார்பனான திருவேங்கடவன் தான் என்பதை ஒரு போதும் மறவாதே மகளே! அவனைச் சரணடைந்தால் அவன் காப்பாற்றாமல் போவதே இல்லை. கஜேந்திரனை முதலையிடமிருந்து காப்பாற்றியது அந்த கஜேந்திரனின் சரணாகதி தான். சரணாகதியை விட உயர்ந்த ஒன்று உலகில் இல்லை" என்றார் இராமானுஜர்.

"எனக்குத் தாயும் தாங்கள். தந்தையும் தாங்கள். குருவும் தாங்கள். தெய்வமும் தாங்கள். நான் மிகவும் பாக்கியசாலி சுவாமி. தங்களுக்கு நன்றி சொல்ல வார்த்தைகளை உபயோகித்தால் அதில் குறைவு வந்து விடுமோ என்று அஞ்சுகிறேன். ஆகவே தங்கள் திருவடிகளைச் சரணடைகிறேன்" என்று சொல்லி மீண்டும் விழுந்து வணங்கினாள் தர்மதேவி.

மன்னன் ஏதோ பேசநினைத்து பேசாமல் விட்டான்.

தர்மதேவி மன்னனைப் பார்த்து "தந்தையே! இந்த மனித தெய்வத்தை நாம் கீற்றுப் பந்தலில் வாட விடலாமா? ஒரு மடத்தையாவது தாங்கள் கட்டலாம் அல்லவா?" என்றாள்.

"சரியான யோசனைதான்" என்று சொன்ன மன்னன் இராமானுஜரைப் பார்த்து "சுவாமி! தங்கள் விருப்பத்திற்கு மாறாக நான் பேசுவதாக எண்ணலாகாது. இந்தக் கீற்று பந்தல் வெய்யிலுக்குத் தாக்குப் பிடிக்குமே தவிர மழைக்குத் தாக்குப் பிடிக்காது. நடப்பது மாரிக்காலம். ஆகவே தாங்களும் சீடகோடிகளும் தங்குவதற்கு இங்கே ஒரு மடத்தைக் கட்டுவதற்கு அனுமதிக்க வேண்டும்" என்றார்.

"இடம் கொடுத்தால் மடம் பிடுங்குவான் என்கிறார்கள். நீ மடத்தைக் கட்டுவதாகச் சொல்கிறாய். இந்த ஏரி கட்டி முடிக்கப் படும் வரை நானிங்கே தங்க வேண்டும் என்று நினைக்கிறேன். அரங்கனின் திருவுள்ளம் எப்படி உள்ளது என்பது தெரியாது. அவனது சங்கல்பம் எப்படியோ அப்படியே நடக்கட்டும்" என்றார் இராமானுஜர்.

நரசிம்மன் தொண்டனூரை விட்டுப் புறப்படுவதற்கு முன்னால் மாளவிகாவையும் தனியாக துவார சமுத்திரத்திற்கு வர ஏற்பாடுகளை ரகசியமாகச் செய்தான். பேச வேண்டிய விஷயங்கள் எதுவாக இருந்தாலும் அதையெல்லாம் துவார சமுத்திரத்தில் பேசிக் கொள்ளலாம் என்று கண்டிப்பாக அவன் கூறிவிட்டதால் மாளவிகா பல்லக்கில் துவாரசமுத்திரத்திற்குப் புறப்பட்டாள். வீரர்கள் அவளுக்குப் பாதுகாப்பாகச் சென்றார்கள்.

விட்டலராயன் தொண்டனூரிலேயே தங்கி இராமானுஜருக்கு மடம் அமைக்கவும் அவர் விரும்பிய ஏரியைக் கட்டவும் ஏற்பாடுகளை முடுக்கி விட்டான். மகா சேனாதிபதி பகாசூரர் கூட இருந்தது அவனுக்கு யானை பலத்தைக் கொடுத்தது. பல்வேறு கிராமங்களிலிருந்து பணியாட்கள் வரவழைக்கப்பட்டு அவர்களை வேலை வாங்கினார் மகாசேனாதிபதி.

கர்நாடக நாடு மலைநாடு. தொண்டனூர் பகுதியிலேயே பாறை மலைகள் பல இருந்தன. எனவே கட்டிட வேலைக்கு அவை பெயர்த்தெடுக்கப்பட்டன. மழைக் காலத்து மழைநீர் வீணாகி விடக் கூடாது என்று கருதிய மன்னன் ஏரிக்கான சுவர்களை அமைப்பதற்கு அவசரம் காட்டினான்.

தொண்டனூர் அரண்மனையை நிர்மாணிப்பதில் தொண்டனூர் நம்பி கைதேர்ந்தவராக இருந்ததால் அவரது வழிகாட்டுதலும் கிடைத்தது.

"நம்பீ! அரசாங்கம் உதவுகிறது என்பதால் நாம் வாளாயிருந்து விடக் கூடாது. நமக்குத் தொண்டுதான் லட்சியம். தொண்டு தான் வாழ்க்கை. தொண்டுதான் வரம். அதை கைவிட்டு விடக் கூடாது. தொண்டில் நாம் தான் முன்னிற்க வேண்டும்" என்று இராமானுஜர் சொல்லிய படியால் தொண்டனூர் நம்பி தொண்டர்களைப் பெருமளவில் குவித்து பணிகளில் ஈடுபட்டான்.

வேலைகள் மும்முரமாக நடந்து கொண்டிருந்த போது ஒருநாள் வேலாபுரத்திற்குச் சென்று தாசி துளசியைச் சந்தித்தான் விட்டலராயன்.

"தங்கள் மகள் குணமாகி விட்டாளாமே! எப்படி அந்த அதிசயம் நடந்தது?" என்று கேட்டாள் துளசி.

"என் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை துளசி. நான்கு வருடங்களுக்கு மேலாக அவள் பட்ட பாட்டைக் கண்ட போது அவள் அவ்வளவுதான் என்று நினைத்தேன். எனது பாவம் அவளைப் பலிவாங்கி விட்டது என்று நினைத்தேன். எனது வெற்றிகளுக்கு திருஷ்டி வந்து விட்டது என்று நினைத்தேன்.

ஆனால் இராமானுஜர் என்ற மகான் ஒரு நொடியில் அவளைக் குணப்படுத்தி விட்டார். ஜெயதேவர், நீலகேசி, மாந்தரீகர்கள் என்று பலரும் பல ஆண்டுகளாக முயற்சித்து குணமாக்க முடியாத தர்ம தேவியை ஒரே நொடியில் மகான் இராமானுஜர் தீர்த்தது என்னால் நம்ப முடியவில்லை" என்றான் மன்னன்.

அவனுக்கு வேண்டிய உபசாரங்களைச் செய்து ஆசுவாசப் படுத்திய தாசி "பிரபு! ஜெயதேவர் முதலானவர்கள் தங்கள் மகளை குணப்படுத்த முயலவில்லை. நோயை அதிகப்படுத்தவே முயன்றிருக்கிறார்கள்" என்றாள்.

"நானும் அப்படித்தான் சந்தேகப்பட்டேன். அதனால் கடைசியில் அவர்களை தர்ம தேவியின் பக்கமே வரவேண்டாம் என்று சொன்னேன்" என்று சொன்ன மன்னன் "துளசி! இவர்கள் மீதெல்லாம் நான் எவ்வளவு நம்பிக்கையும் மரியாதையும் வைத்திருந்தேன் தெரியுமா? ஜெயதேவரும் நீலகேசியும் சமண மதத்தில் உயர்நிலையில் இருந்தவர்கள். ஆச்சார்ய பெருமக்கள். சமணனாகிய நான் இயற்கையாகவே அவர்களைத்தான் என் ஆச்சார்யர்களாகக் கொண்டேன். அவர்கள் காட்டிய வழியில் நடந்தேன். அவர்கள் கேட்ட உதவிகளைச் செய்தேன். அவர்களது சமண விஹாரங்களுக்கு கணக்கற்ற நிதி உதவிகளைச் செய்து அவை சீரும் சிறப்புமாக விளங்க வழி செய்தேன். அவர்கள் எனக்குத் துரோகம் செய்யலாமா?" என்று கேட்டான் மன்னன்.

"நெருங்கிப் பழகியவர்களும்" நிறைய ஆதாயம் பெற்றவர்களும், வேகமாக வளர்ச்சியடைந்தவர்களும் தான் துரோகிகள் ஆகிறார்கள் பிரபு. இதற்கு ஜெயதேவரும் நீலகேசியும் விதிவிலக்கல்ல" என்றாள் தாசி.

"என் மகளுக்கு நோயை அதிகரித்து என்னையும் என்னைச் சேர்ந்தவர்களையும் வேதனையில் ஆழ்த்திய அந்த துரோகத்தை அவர்கள் செய்ய வேண்டிய அவசியம் என்ன? அவர்களுக்கும் சமண மதத்திற்கும் நான் எந்தக் குறையும் வைக்கவில்லையே! அவர்கள் கேட்க முடியாது என்று சொல்லாமல் எல்லா வற்றையும் கொடுத்தேனே! எது வேண்டுமானாலும் என்னிடம் கேட்டிருக்கலாமே! அவர்கள் கேட்டு நான் மறுத்ததில்லையே!"

"பிரபு! அவர்கள் தங்களிடம் கேட்டுப் பெற முடியாத விஷயம் ஏதாவது இருக்க வேண்டும். அதைப் பெறுவதற்காகத் தங்கள் மகளைக் கருவியாகப் பயன்படுத்தியிருக்க வேண்டும். மகளின் மனநிலை மற்றும் உடல்நிலை ஆகியவற்றைக் காட்டி பயமுறுத்தி தங்கள் ஆசையை நிறைவேற்றிக் கொள்ள முயன் றிருக்கிறார்கள்."

"அப்படி என்ன ஆசை இருக்கமுடியும் துளசி?"

“உண்மை தெரியாது. ஊகமாகச் சொல்கிறேன். மதம் எதுவாக இருந்தாலும் மதத் தலைவர்கள் தங்கள் மதம் தான் உயர்வானது என்று நினைக்கிறார்கள். அந்த நினைப்பு அவர்களை வெறியர்களாக்குகிறது. மக்களுக்காக மதம் என்பதை மறந்து தங்களுக்காக மதம் என்று கருதி அதை வளர்க்க எதைச் செய்யவும் தயாராக இருக்கிறார்கள். ஜெயதேவரும் நீலகேசியும் கர்நாடகத்தை முழுக்க முழுக்கச் சமண நாடாக ஆக்குவதற்கு ஆசைப்பட்டிருக்கிறார்கள். இங்கே உள்ள பிற மதத்தினரை விரட்டி கர்நாடகம் முழுவதும் சமணர்களே வாழ வேண்டும் என்பது அவர்களது லட்சியமாக இருக்க வேண்டும். அந்த லட்சியத்தை நீங்கள் நிச்சயமாக நிறைவேற்ற மாட்டீர்கள் என்பது அவர்களுக்குத் தெரியும். ஆகவே உங்கள் மகளின் மூலம் பயமுறுத்தி அதைச் சாதிக்க முயன்றிருக்கிறார்கள்.”

“அது எப்படி முடியும்? அவர்களது ஆசை துராசை அல்லவா? இந்தப் பாரத நாட்டில் பல்வேறு மதங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு நாட்டிலும் ஒன்றுக்கு மேற்பட்ட மதங்கள் இருக்கின்றனவே தவிர எந்த ஒரு நாட்டிலும் ஒரே மதம் இருக்கவில்லை. இருக்கவும் முடியாது. சமணம் தோன்றிப் பரவிய நாடுகளில்தான் புத்தமதம் பிறந்து வளர்ந்தது. ஆசிவக மதம் பிறந்து வளர்ந்தது. வைதீக மதங்கள் வளர்ந்தன. இன்றைக்குச் சைவம், வைணவம், சாக்தம், பாசுபதம், கபாலிகம், என்றெல்லாம் கிளை விட்டு மதமானது மகாவிருட்சமாக உருவாகி இருக்கிறது. ஒரு கிளை மட்டும் மரத்திற்குச் சொந்தமாக முடியுமா? சமணத் தலைவர்களான இவர்களின் தலைகளைப் போலவா லட்சியம் இருக்கும்? துளசி! தொண்டனூரில் வந்திருக்கும் இராமானுஜரும் ஒரு மதத்தின் தலைவர்தான். வைணவ மதத்தின் தலைவர். ஆனால் மத வெறியரல்ல. நான் வாழும் நாடு வைணவ நாடாக இருக்க வேண்டும் என்று கருதியவரல்ல. தொண்டனூர் நம்பியவர்களால் நான் ஒரு சமணன் என்பதை அறிந்திருந்தும் என்னை அவர் புறக்கணிக்கவில்லை. ஜெயதேவரைப் போல் என் விருந்தைப் புறக்கணிக்க வில்லை. பிட்டி தேவன் என்று இகழவில்லை. என் மகளுக்கு என்ன ஆயிற்று என்று கேள்விப் பட்டதும் அவளை வரச் சொன்னார். அவரை நான் பார்த்து ஒருவாரம் தான் ஆயிற்று. அவரைப் பற்றி எனக்கோ என்னைப் பற்றி அவருக்கோ விரிவாக எதுவும் தெரியாது. அவர் அதைப் பொருட்படுத்தவில்லை. கவலைப்படவும் இல்லை. ஸ்ரீபாத தீர்த்தத்தை எடுத்து மகளின் மீது தெளித்து ஒரே நொடியில் குணப்படுத்தினார். என்னிடம் நிபந்தனை போடவில்லை. எதையும் எதிர்பார்க்கவில்லை. குணப்படுத்தினார். உண்மை யான மதத்தலைவர் யார் துளசி?”

மன்னன் வழக்கத்திற்கு மாறாக மிகவும் உணர்ச்சி வசப்பட்டான்.

அவனுக்குக் காய்ச்சிய பாலைக் கொண்டு வந்து கொடுத்து மார்பை இதமாகத் தடவிக் கொடுத்தாள். பிறகு கீழே அமர்ந்து அவனது கால்களை எடுத்து மடியில் வைத்துக் கொண்டாள். அவற்றைப் பிடித்து விட்டு "உணர்ச்சி வசப்படாதீர்கள் பிரபு. சாந்தப் படுங்கள்" என்றான்.

மன்னன் பேசமுற்பட்டு "துளசி! எனக்குத் தீங்கு இழைத்தவர் களை என்னால் மன்னித்துவிட முடியும். ஒன்று மறியா குழந்தையான என் மகளுக்குத் தீங்கிழைத்தவர்களை நான் ஒருபோதும் மன்னிக்க மாட்டேன். தண்டிப்பேன். கொடுமையாகத் தண்டிப்பேன்" என்றான் சற்றே கோபத்துடன்.

"மகள் குணமடைந்து விட்டாள். அதோடு விட்டு விடுங்கள் மகாராஜா" என்றாள் துளசி.

"என்ன சொல்கிறாய் நீ? சற்று முன்பு வரை நன்றாகத் தானே பேசிக் கொண்டிருந்தாய்? ஜெயதேவர் மற்றும் நீலகேசியின் துராசைப் பற்றித் தெளிவாகப் பேசிய நீ கடும் குற்றவாளிகளைத் தண்டிக்க வேண்டாம் என்ற ரீதியில் பேசுகிறாயே எப்படி?"

"அவர்களை என்ன சித்திரவதை செய்யப் போகிறீர்களா?"

"ஏன்? செய்தால் தான் என்ன? அதற்கு அவர்கள் தகுந்தவர்கள் தான்."

"அதைக் காட்டிலும் சிறந்த தண்டனை ஒன்று இருக்கிறது மகாராஜா? சொல்லட்டுமா?"

"சொல்லேன்."

"தங்கள் மகளுக்குத் தீங்கு செய்தவர்கள். ஜெயதேவர், நீலகேசி. தங்கள் மகளை குணப்படுத்தியவர் இராமானுஜர். அவர் தங்களிடம் எதிர்பார்க்கவில்லை என்றீர்கள். மகான்கள் - உண்மையான மகான்கள் எதையும் பிரதிஉபகாரமாக எதிர்ப் பார்க்க மாட்டார்கள். அவர்களது இயல்பு கொடுப்பது தானே தவிர கேட்பது இல்லை."

"நீ என்ன சொல்ல வருகிறாய் துளசி?"

"இராமானுஜரின் மதம் வைணவம். நீங்கள் வைணவத்தில் சேர்ந்து விடுங்களேன்."

துளசி கூறியதைக் கேட்டுப் பேச்சற்றுப் போனான் மன்னன்.

"தாங்கள் வைணவத்தில் சேருவது அந்த மகானுக்குச் செய்யும் மகா நன்றியாக இருக்கும். அதே சமயம் சமணத்தை தாங்கள்

துறப்பது ஜெயதேவருக்கும் நீலகேசிக்கும் அதிர்ச்சி தண்டனையாக இருக்கும். தாங்கள் வைணவராகி விட்டால் அவர்களால் தங்களை நெருங்க முடியாது. அவர்களது துராசையும் துர்லட்சியமும் நிறைவேறாது. எதையும் எதிர் பார்க்காமல் தங்களுக்கு நல்லது செய்த இராமானுஜரின் மதத்தில் சேர்ந்து வைணவராகுங்கள். தங்களுக்குத் தீங்கு செய்த ஜெயதேவரின் மதத்தை விட்டு விலகுங்கள். பாதகம் செய்த சமணம் இங்கு ஏன் இருக்க வேண்டும்? சாதகம் செய்த வைணவம் இங்கு ஏன் தழைக்கக் கூடாது?"

"அபாரமாகச் சொன்னாய் துளசி. சரியான யோசனைதான். ஆனாலும் அவசரப் படக் கூடாது. நாடாளும் மன்னன் மதம் மாறுவது பெரிய விஷயம். பல்லவ மாமன்னர் மகேந்திர வர்மர் சமணராய் இருந்து சைவ மதத்திற்கு மாறினார். அவரை அடுத்து மக்களும் பெருமளவில் மாறினார்கள். அதே சமயம் சைவராக மாறிய மகேந்திர வர்மர் சமணர்களை வதைத்தார். சமணப் பள்ளிகளை இடித்தார். சிவஸ்தலங்களாக மாற்றினார். அது ஒரு தவறான முன்னு தாரணம். நானும் அப்படி நடந்து கொண்டு விடக்கூடாது."

"அவ்வாறு நான் சொல்லவில்லையே மகாராஜா. தாங்கள் ஜெயதேவரையும் நீலகேசியையும் சித்திரவதை செய்தால் இங்கே கலவரம் மூளும். தண்டனையை ஏற்காத சமணர்கள் மற்றவர்களை வதைப்பார்கள். தண்டனையை ஏற்காத மக்கள் சமணர்களை வதைப்பார்கள். நீங்கள் சாத்வீகமான முறையில் மதம் மாறினால் நடப்புகளும் சாத்வீகமாக இருக்கும்."

"பரிசீலிக்கிறேன் துளசி. பரிசீலிக்கிறேன். முடிவெடுக்க வேண்டிய நேரம் தான்" என்றான் மன்னன்.

அவள் மடியிலிருந்து கால்களை எடுத்துக் கொண்டான்.

அவள் எழுந்து நின்று "மகாராஜா, தங்கள் செல்வ மகள் குணமடைந்து விட்டாள். அவளுக்கு ஒரு நல்ல வரனாகப் பார்த்துத் திருமணம் செய்து விடலாம் அல்லவா?" என்றாள்.

"துளசி! அவள் குணமடைந்து விட்டாலும் நான்கு ஆண்டுகளுக்கு மேலாக தனது இளம் வாழ்க்கையை இழந்து துன்பப்பட்டு விட்டாள். அவளது உடல் கூட்டிலிருந்து பேய்க் கணங்கள் வெளியேறிய நிலையில் அவளைப் பிடித்துப் பொன் கூண்டில் அடைப்பது சரியல்ல. கொஞ்ச காலத்திற்கு அவள் துள்ளி விளையாடட்டும். மான்களோடு போட்டி போடட்டும். மயில்களோடு சேர்ந்து விளையாடட்டும். இந்த உலகம் அவளுக்கு விளையாட்டு மைதானமாக இருக்கட்டும்."

மன்னர் கூறியது சரியென்றே தோன்றியது துளசிக்கு.

“கொஞ்ச காலமாக எனக்கு உடல் நலம் சரியாக இல்லை மகாராஜா. என் இருப்பிடம் இங்கிருந்து அங்கே மாறிவிடும் போலிருக்கிறது” என்றாள் சுடுகாட்டைச் சுட்டிக் காட்டி.

“துளசி இருக்க வேண்டிய இடம் தூமணி மாடமே தவிரச் சுடுகாடு அல்ல துளசி. என்னாகி விட்டது உனக்கு? இங்கென்ன வைத்தியர்களா இல்லாமல் போய் விட்டார்கள்?”

“என் உடல்நலம் பற்றி வைத்தியர்களுக்குத் தெரியாது மகா ராஜா. எனக்குத்தான் தெரியும். எனது இறுதி காலம் நெருங்கி விட்டது.”

“இது என்ன அபசகுனமான பேச்சு? உனக்கு நானிருக்கும் போது கவலை எதுக்கு?”

“எனக்கோர் அற்ப ஆசை. நிறைவேற்றுவீர்களா?”

“அற்ப ஆசை எதற்கு? நல்ல ஆசையாக இருக்கட்டுமே!”

“என்னுடல் அற்பமாக ஆசைப்படுகிறது. அந்த இடுகாட்டில் மண்ணுக்குள் போவதற்குள் தங்களை .....”

“புரிந்தது தாசி. இதற்கேன் தயக்கம்? உனக்கு அந்தக் குறை இருக்கக் கூடாது. குறையைத் தீர்ப்பேன். இப்போதே தீர்ப்பேன்” என்று சொன்ன மன்னன் குறையைத் தீர்த்தான்.

துளசிக்கு நிறைவாக இருந்தது.

மறுநாள் மன்னன் பெருமாள் கோயில் கட்டப்பட்டுக் கொண்டிருந்த இடத்திற்குச் சென்று கட்டுமான முன்னேற்றத்தைப் பற்றி தலைமைச் சிற்பியிடம் விசாரித்து விட்டு “நமது கர்நாடக நாட்டிற்குத் தமிழகத்திலிருந்து இராமானுஜர் என்னும் ஸ்ரீவைஷ்ணவ மகான் வந்திருக்கிறார். அவர் எவ்வளவு காலம் இங்கே இருப்பார் என்று சொல்ல முடியாது. என் ஆசை என்னவென்றால் அவரை வைத்து இந்த ஆலயத்திற்கு சம்ப்ரோட்ஷணம் செய்ய வேண்டும் என்பது தான். நிறைவேறுமா?” என்று கேட்டான்.

தலைமை சிற்பி “மகாராஜா! இன்று காலை நூறு சமணர்கள் வந்திருந்தார்கள். இந்த ஆலயத்தை நீங்கள் இடிக்கப் போகி றீர்களா? நாங்கள் இடிக்கட்டுமா? என்று கேட்டார்கள்” என்றார்.

அவர் இவ்வாறு சொன்ன அதே சமயத்தில் துவார சமுத்திரத்தில் ஆதிநாதர் ஆலயத்தில் வழிபாடு செய்து கொண்டிருந்த மகாராணி சாந்தலை தேவியை நோக்கி வேகமாக வந்து கொண்டிருந்தார் நீலகேசி.





மன்னனின் ஆயிரம் ஆர்ப்பாட்டங்கள் தராத நல்வாழ்வை துறவிகளின் மௌனமானது தரும். மன்னர்களின் ஆர்ப்பாட்டம் என்பது உடல்சக்தி. துறவிகளின் மௌனமானது ஆத்மசக்தி – நீலகேசி




தனது மகள் குணமடைந்ததுமே தான் செய்து கொண்ட வேண்டுதலின் படி துவாரசமுத்திரத்தில் இருந்த ஆதிநாதர் ஆலயத்தில் ஒரு மண்டல காலத்திற்கு தினமும் ஆயிரம் விளக்குகளை ஏற்றி ஆயிரம் பேருக்கு அன்ன தானம் அளிக்கத் தொடங்கினார் மகாராணியான சாந்தலை.

அது மட்டுமில்லாமல் தினமும் பத்து சமணத் துறவிகளுக்குப் பாத பூஜையும் செய்தாள்.

அந்த வேண்டுதலில் கடைசி நாள் விமரிசையாக நடந்தது. ஆதிதேவருக்கு ஆயிரம் குடம் பாலபிஷேகமும் தேனபிஷேகமும் நடந்தது. ஆதிதேவரின் வீதிவுலா நடந்தது.

ராணியே நேரில் இருந்து அனைத்தையும் நடத்தினாள். அவளோடு அவள் மகன் நரசிம்மன், மனைவி சௌமிய குமாரி, மகள் தர்மதேவி, தளபதி கங்கராஜன் ஆகியோர் உடன் இருந்தனர்.

மன்னன் விட்டலராயன் ஓரிருமுறை அந்தப் பூஜையில் கலந்து கொண்டானே தவிர மீதி நாட்களில் தொண்டனூரிலேயே தங்கி இராமானுஜருக்கான மடத்தைக் கட்டும் பணியிலும் ஏரியைக் கட்டும் பணியிலும் ஈடுபட்டான்.

அங்கே இருந்த போது ஒரு நாள் வேலாபுரத்திற்கு வந்து தாசியைச் சந்தித்தான். இரண்டு நாட்கள் தங்கியிருந்து அங்கே பெருமாள் கோயிலை நிர்மாணிக்கும் தலைமைச் சிற்பியைச் சந்தித்துப் பேசினான்.

அதே நேரத்தில் ஹொய்சளர் தலைநகரமான துவார சமுத்திரத்தில் ஆதிநாதர் கோயிலுக்கு வழிபாட்டிற்காக வந்து வழிபாட்டை முடித்துக் கொண்ட ஆலய வளாகத்தில் இருந்த மேடையில் வந்து அமர்ந்தாள்.

ஆலயத்திற்கு வந்த மக்களில் பலர் அவளைச் சந்தித்தனர். பரஸ்பர நலங்களை விசாரித்துக் கொண்டார்கள்.

“என்னால் நிவர்த்தி செய்யக் கூடிய குறைகள் ஏதாவது உண்டா?” என்று வினவினாள் ராணி.

“தாங்கள் இருக்கும் வரை எங்களுக்கு எந்தக் குறைவுமில்லை மகாராணி” என்றார்கள் மக்கள்.

குறை சொல்ல யாரும் இல்லை. யாரும் சொல்வதற்கு குறை ஏதுமில்லை என்று மகாராணி மகிழ்ச்சியடைந்த நேரத்தில் அவளை நோக்கி வேகமாக வந்தார் நீலகேசி.

காவியுடை புயல் வேகத்தில் பறந்து வந்தது போலிருந்தது அக்காட்சி.

அங்கே இருந்த மக்களைப் பார்த்து “செல்லுங்கள் எல்லோரும். இங்கே யாரும் வரவேண்டாம். நிற்க வேண்டாம்” என்று கட்டளையிட்டார்.

அவரது கோலத்தையும் கோபத்தையும் கண்ட மக்கள் உடனடியாக அகன்றார்கள்.

ஆலயத்திற்குள்ளேயிருந்து துறவிகள் “என்னவோ ஏதோ” என்று ஓடிவர அவர்களைப் பார்த்த நீலகேசி “யாரையும் இங்கே வரவிடாதீர்கள். நான் ராணியுடன் பேசவேண்டும்” என்றார்.

“ஆலயத்தை மூடிவிடவா?” என்று கேட்டார்கள் துறவிகள்.

“என் பேச்சிற்கு அதுதான் அர்த்தம்” என்றார் நீலகேசி.

மக்கள் அப்புறப்படுத்தப்பட்டுக் கொண்டிருக்க, மேடையை நோக்கி வந்த நீலகேசியை எழுந்து வணங்கிய ராணி அவரை மேடையில் அமரவைத்து “சற்றுமுன்தான் மக்கள் வந்து குறையொன்றுமில்லை என்று சொல்லிவிட்டுச் சென்றார்கள். மனதிற்கு நிறைவாக இருந்தது” என்றாள்.

“அந்தச் சோற்றுப் பிண்டங்கள் அப்படித்தான் சொல்லும். தலை பற்றி எரிந்து கொண்டிருக்கும் போது கூட வயிற்றுக்குப் பண்டங்களை அனுப்பிக் கொண்டிருக்கும் அந்த முண்டங்களை நம்பி மோசம் போகாதே ராணி” என்று எரிந்து விழுந்தார் நீலகேசி.

“சுவாமி! தங்களுக்கேன் இத்தனை கோபம்? இப்படி தாங்கள் கோபப்பட்டு நான் பார்த்ததில்லை! மக்களைப் போய் சோற்றுப் பிண்டங்கள் என்றும் முண்டங்கள் என்றும் கோபிக்கும் அளவிற்கு என்னாகி விட்டது?” என்று கேட்டாள் ராணி.

“இந்த மக்கள் கூட்டத்திற்குச் சோறு கிடைத்தால் போதும். அவர்களுக்கு வேறு பிரச்சனை இல்லை. நீ இலவசமாகச் சோறு

தானம் செய்யும் வரை அவர்களுக்கு மூளை வேலை செய்யாது. வேறு எதையும் சிந்திக்க முயலாது. தலைக்கு மேல் வெள்ளம் போனால் கூட வயிறு நிரம்பியிருந்தால் போதும் என்று நிம்மதியடையும் மந்தைகளே மக்கள். சந்தை மாடுகள் அவர்களை விட மேலானவை" என்று பொரிந்தார் நீலகேசி.

"மக்கள் சக்தியே மகத்தான சக்தி அடிகளே. மக்கள் இருப்பதால் தான் இது நாடாக இருக்கிறது. இல்லையென்றால் இது காடாகிப் போயிருக்கும். மக்கள் இருந்தால் தான் ராஜா. ராணி எல்லோரும்" என்றாள் ராணி.

"நாங்கள் துறவிகள். எங்களுக்கு நாடு வேண்டியதில்லை. மக்கள் வேண்டியதில்லை. காடு போதும். காற்றை உண்டு கடுகளவு உணவும் இல்லாமல் வாழ எங்களால் முடியும். காடு விட்டு நாங்கள் நாட்டிற்கு வந்தது நாங்கள் களியாட்டம் புரிவதற்கல்ல. நாட்டில் உள்ள வீட்டில் இருக்கும் ஒவ்வொருவரும் நல்வாழ்வு வாழ்வதற்காகத்தான். மன்னனின் ஆயிரம் ஆர்ப்பாட்டங்கள் தராத நல்வாழ்வை துறவிகளின் மௌனமானது தரும். மன்னர்களின் ஆர்ப்பாட்டம் என்பது உடல்சக்தி. துறவிகளின் மௌனமானது ஆத்ம சக்தி. அது உலகைக் காக்கும் வல்லமை கொண்டது."

"என்னை மன்னியுங்கள் சுவாமி. சாந்தமடையுங்கள்"

"உன்னை மன்னிக்கிறேன். மக்களை மன்னிக்கிறேன். ஆடு மாடுகளை மன்னிக்கிறேன். சகல ஜீவராசிகளையும் மன்னிக்கிறேன். ஆனால் பயனென்ன ராணி? என் ஆத்மா அழுகிறது. துறவிகளின் ஆத்மா அழுதால் உலகம் உருப்படாது."

"அவ்வாறு பேசாதீர்கள். துறவிகள் கோப தாபங்களுக்கு அப்பாற்பட்டவர்கள். தாங்கள் கோபமடையலாகாது."

"அதனால் தான் ஆத்மா அழுகிறது என்றேன்."

"விஷயத்தைச் சொல்லுங்கள் அடிகளே."

"இந்த நாட்டில் சமணம் வாழ வேண்டுமா? சாக வேண்டுமா?"

"சமணம் சாய்ந்து விடவும் செத்து விடவுமா தினமும் ராணியான நான் இங்கே வந்து வழிபடுகிறேன்? சமணம் வாழக் கூடாது என்பதற்காகவா தினமும் ஒரு சமண முனிவருக்குப் பாத பூஜை செய்கிறேன்? சமணம் சோர்ந்து போகவா வாரம் தோறும் சமணப் பள்ளிகளில் விளக்கு பூஜைகளையும் துறவிகளின் உபன்யாசங்களையும் ஏற்பாடு செய்திருக்கிறேன்? சமணம் சேதாரமடைந்து சீர்கெட்டு போக வேண்டும் என்றா

அரசாங்கத்தில் சமணர் நிதியை உருவாக்கி கர்நாடகத்திற்கு அப்பாலும் அந்த மதத்தை வளர்த்து வருகிறேன்.''

“உன்னை நினைத்து சிரிப்பதா அழுவதா என்று தெரியவில்லை. நீ கர்நாடகத்தில் இருக்கிறாயா அல்லது காஷ்மீரத்தில் இருக்கிறாயா என்பதும் தெரியவில்லை.''

“நீங்கள் என்ன சொல்கிறீர்கள் அடிகளே?''

“சாந்தலா தேவி! ராணி என்பதால் உன்னை நினைத்து நீ பெருமைப் பட்டுக் கொள்கிறாயா?''

“இல்லை அடிகளே. நேற்றும் இல்லை. இன்றும் இல்லை. நாளையும் இருக்காது.''

“ராணி என்பவள் வெறும் கொசு. அது தும்பினால் தூசு கூட நகராது. நீ என்னடாவென்றால் சாதனைப் பட்டியல் வாசிக்கிறாய். உனது பட்டியல் முழுதும் நடக்கின்றனவா என்பது உனக்குத் தெரியுமா? அவை சமணத்தை விரித்து விஸ்தாரமாக்குகிறது என்பது தான் உனது நினைப்பா? நீ ஆயிரம் விஷயங்களைத் திட்டமிடலாம். மகாராஜா ஒத்துழைத்தாலன்றி ஒன்றும் நிறைவேறாது. நீ ஒருத்தி ஆதி தேவர் ஆலயத்திற்கு வந்து போய்க் கொண்டிருந்தால் சமணம் இமயமாக வளர்ந்து விடுமா? உண்மையில் சமண மத வளர்ச்சியில் ராணி என்ற முறையில் உன் பங்கு வெறும் பூஜ்யம்தான். உன் தனிப்பட்ட சமண பக்தி வேண்டுமானால் சிறப்பானதாக இருக்கலாம். உன்னால் சமண மதத்தை வளர்க்க ஒரு போதும் முடியாது.''

ராணி அதிர்ந்தாள்.

“தங்கள் பேச்சு என் இதயத்தைப் புண்ணாக்குகிறது அடிகளே'' என்றாள்.

“ராணி! தொண்டனூரில் நடந்து கொண்டிருக்கும் கூத்துகள் எதுவும் உனக்கு தெரியாதா? அல்லது தெரியாத மாதிரி நடிக்கிறாயா?''

“நடிக்க வேண்டிய அவசியம் எனக்கில்லை அடிகளே.''

“நான் மாயக் கண்ணாடியில் பார்த்து விட்டுப் பேசவில்லை ராணி. தொண்டனூரில் தங்கி அனைத்தையும் பார்த்து விட்டு தீர விசாரித்து விட்டுதான் சொல்கிறேன். நீ சமணம் வளர்கிறது என்கிறாய். தொண்டனூரிலோ உன் கணவர் ஒரு வைஷ்ணவ சன்யாசிக்கு அடிமையாக இருந்து ஏவல் புரிகிறார். அந்த கபட சன்யாசிக்கு மடம் கட்டுகிறார். ஏரி வெட்டுகிறார். இதெல்லாம் என்ன?''

"அடிகளே! மகாராஜா யாருக்கும் எப்போதும் அடிமையாக மாட்டார். நீங்கள் குறிப்பிடும் வைஷ்ணவ சன்யாசியின் பெயர் இராமானுஜர். என் மகள் தர்ம தேவியின் தீராத நோயை ஒரு நொடியில் தீர்த்து வைத்தவர். அந்த இன்ப அதிர்ச்சியில் அவருக்குச் சில உதவிகளை மகாராஜா செய்கிறார்."

"குண்டு சட்டியில் இருந்து கொண்டு குதிரையை ஓட்டுகிறாய். அந்த இராமானுஜர் ஒரு கபட சன்யாசி. சந்தேகமே வேண்டாம். நான் கங்கை கொண்ட சோழ புரத்திற்குச் சென்று விலாவாரியாக விசாரித்து விட்டுத்தான் வருகிறேன். அவன் கபடன் மட்டுமல்ல. கலகக்காரன். அவனிடம் ஒரு சக்தியும் இல்லை. சோழ நாட்டில் மதக் கலவரத்தைச் செய்து விட்டு சோழ மன்னர் கைது செய்ய முற்பட்ட போது தனது சிஷ்யனையும் குருநாதனையும் பலி கொடுத்து விட்டு கர்நாடகத்திற்குத் தப்பி வந்த கோழை சன்யாசி அவன். உன் மகளை குணப்படுத்தியதாகக் கூறப் படுவது வெறும் மாயை!"

"அந்த மாயையைக் கூட தாங்களும் ஆச்சார்யர் ஜெயதேவரும் செய்ய வில்லையே அடிகளே! நான்கு வருடங்களாக மகள் கஷ்டம் தானே பட்டாள்?"

நீலகேசிக்குத் தலையில் குட்டு விழுந்த மாதிரி இருந்தது.

சமாளித்துக் கொண்டார்.

"மாயை என்பது பொய். தற்காலிகமான தோற்றம். சாரமற்ற சக்கை. அதைக் கைக் கொள்ள உண்மைத் துறவிகள் ஈடுபட மாட்டார்கள். உன் மகளுக்கு அப்படியொரு அற்பமான, அபத்தமான, பொய்யான, தற்காலிகமான நிவாரணத்தைத் தர என்னால் முடியும். ஜெயதேவரால் முடியும். மாந்தரீகரால் முடியும். ஒரு அரைகுறை வைத்தியன் கூடச் செய்து விட முடியும். அது இகழ்ச்சி. அது ஏமாற்று வேலை. அது அதர்மம். அது அநீதி. உண்மைத் துறவிகளுக்கும் வைத்தியர்களுக்கும் அழகல்ல."

"அடிகளே! தாங்கள் சற்று யோசித்துப் பாருங்கள். நான்கு வருடங்களாக அவதிப் பட்ட மகள் ஒரு நொடியில் குணமாக்கப் பட்டால் அதை மாயை என்று யார் தான் சொல்வார்கள். கள்ளிச் செடியில் சிக்கி கிழிந்து போன பட்டுத் துணி போலிருந்த மகள் மானைப் போலத் துள்ளியோடும் போது அதை யார் பொய் என்று சொல்வார்கள்? மகள் குணமாகவே மாட்டாள் என்று கருதப்பட்ட நிலையில் தற்காலிகமாவது குணப்பட்டாள் என்றாலும் அது மகிழ்ச்சி தானே? குணமாகி இரண்டு மாதங்களாகின்றன. மகள் மலரைப் போல் மணம் வீசிக் கொண்டிருக்கிறாள்."

“ராணி! உன்னைப் போல பைத்தியக்காரியை நான் பார்த்த தில்லை. மகள் மீண்டும் நோயால் பீடித்தால்தான் என் வார்த்தையை நம்புவாயா? அந்த அற்ப சுகத்தைத் தந்ததற்காக உன் கணவர் அந்த இராமானுஜரின் கால்களில் சரணாகதி யடைந்து விடுவதா?”

“அது மகாராஜாவின் சரணாகதியல்ல அடிகளே. ஒரு தந்தையின் சரணாகதி.”

“நீ பெற்ற தாய் தானே? நீ ஏன் சரணாகதி அடையவில்லை.”

“அவசியமில்லை அடிகளே. அவர் இராமானுஜரிடம் நன்றி பாராட்டுவது போதுமானது.”

“என் கருத்து என்னவென்றால் மகாராஜா கூட இராமானுஜனிடம் தந்தையென்ற முறையில் சரணடைய வேண்டியதில்லை. தீவிரமான சமணரான மகாராஜா ஒரு வைஷ்ணவ சன்யாசியின் கால்களில் கிடந்து அவனுக்கு மடம் கட்டிக் கொடுக்க முற்படுவது விபரீதமானது என்று உனக்குத் தோன்றவில்லையா? இடம் கொடுத்தால் மடம் பிடுங்குவான் அந்தக் கபட சன்யாசி. அவன் பின்னால் சென்றால் மகாராஜா சமணத்தை வளர்க்க முடியாது. சறுக்கி விழ வேண்டியது தான்.”

“என் கணவர் தவறு எதுவும் செய்யமாட்டார் என்பது என் அசைக்க முடியாத நம்பிக்கை.”

“அப்படியானால் ஒரு விஷயத்தை உறுதிப்படுத்தி விடு. நீ உன் கணவரை ஆதரிக்கிறாயா? சமணத்தை ஆதரிக்கிறாயா?”

“என் கணவர்தான் என் முதல் தெய்வம். அவர் பாதங்கள் தான் நான் தொழும் முதல் திருவடிகள். அவரது சொல் தான் எனக்கு முதல் வேதம்” என்று உறுதியானக் குரலில் சொன்ன அவள் “சமண மதத்திற்கு ஒரு அபாயம் வந்து விடவில்லை அடிகளே. நீங்கள் அபாயக் குரலையும் எழுப்ப வேண்டாம். அபயக் குரலையும் எழுப்ப வேண்டாம்” என்றாள்.

“எனக்குப் புரிந்து விட்டது ராணி. நீ சமணம் சமணம் என்று கூறிக் கொண்டிருப்பது பொய். நீ நடிக்கிறாய். மகாராஜா நேராகவே அடிக்கிறார். ராஜகுலத்தவர்களுக்கு அரசியல் தான் பிரதானம். மதமும் மகான்களும் வெறும் ஊறுகாய்கள் என்பதை நீ உணர்த்தி விட்டாய். இதன் விளைவுகள் விபரீதமானதாக இருக்கும்” என்று சீறினார் நீலகேசி.

“என்ன விபரீதம் நடக்கும் அடிகளே?”

“யானைக்கு மதம் பிடித்தால் என்ன நடக்குமோ அது நடக்கும். சூறைக் காற்று சுழன்று அடித்தால் என்ன நடக்குமோ அது

நடக்கும். அலைகடல்கள் பொங்கி எழுந்தால் என்ன நடக்குமோ அது நடக்கும். பத்தினிப் பெண்ணும் உத்தமத் துறவியும் ஒன்று. இவர்களில் யார் சாபமிட்டாலும் ஊர் அழியும். உலகம் அழியும். கோள்களும் வானக் கோலங்களும் அழியும்."

"சுவாமி! சமண ஆச்சார்யரான தாங்கள் இப்படிப் பேசலாமா? பழி வாங்கும் சுபாவம் நமக்கு வரலாகாதே! தங்களுக்கு எப்படி வந்தது?"

"வெள்ளம் தலைக்கு மேலே போகும் போது உயிரைக் காக்க நினைப்பது உலகில் உள்ள எல்லா ஜீவராசிகளுக்கும் உரியது. எல்லாம் போன பின் எதை வைத்து மதத்தை உயிர்ப்பிப்பது? ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாகத் தழைத்து வரும் சமணம் என் காலத்தில் அழிந்து போவதற்கு நான் இடம் கொடுக்க மாட்டேன். சமணம் பிழைப்பதற்கு எதையும் செய்வதற்கு மகாவீரர் எனக்கு அனுமதி வழங்கியிருக்கிறார்."

"சுவாமி! நீங்களும் ஜெயதேவரும் என் மகளுக்கு சிகிச்சையளித்து வந்தீர்கள். ஒரு நாள் என்ன நடந்தது தெரியுமா?"

"என்ன நடந்தது?"

"நீங்கள் அப்போது இல்லை. மாந்தரீகரும் இல்லை. அப்போது ஜெயதேவர் என்னைக் கூசும் வார்த்தைகளால் திட்டினார். கணவனைத் தன் பிடியில் வைத்திராத நீ எல்லாம் என்ன மனைவி? ஆச்சார்யனுக்குத்தான் உலக மதங்கள் எல்லாவற்றிலும் மூன்றாம் இடத்தைத் தந்திருக்கிறது. கணவன், மனைவி, பிள்ளைகளுக்கெல்லாம் துளி இடமும் இல்லை. நீங்களோ ஆச்சார்ய பெருமக்களை மதிப்பதில்லை. மதிப்பது போல் நடிக்கிறீர்கள். எங்கள் கோபத்தைக் கிளறுகிறீர்கள். முனிவர்களைச் சீண்டினால் கோபாக்கினி மூண்டு சாபங்களாக வெளிவரும் என்பதை மறந்து விட்டீர்கள். துறவி உணர்ச்சிகளைத் துறந்து வாழ்வது பிறரால் ஏமாளியாக நடத்துவதற்கல்ல. பிறர்களை ஏமாளிகளாக ஆகி விடாமல் தடுப்பதற்குத்தான். நீங்கள் என்னை அவ்வாறு கருதி விட்டது உங்களது மிகப் பெரிய துரதிர்ஷ்டம். இதோ பார் ராணி. இப்போது சொல்வதைக் கவனமாகக் கேட்டுக் கொள். உன் கணவனிடம் சொல்லி அவனது ஹொய்சள சாம்ராஜ்யத்தைச் சமண நாடாகவும் சமண சாம்ராஜ்யமாகவும் அறிவிக்கச் சொல். சமணர்களைத் தவிர மற்றவர்களை அண்டை நாடுகளுக்கும் காடுகளுக்கும் அனுப்பச் சொல். பிற நாடுகளிலிருக்கும் சமணர்களை இங்கே வந்து வசிக்கச் சொல். இதர மதம் இங்கே இருப்பில் இருக்கக் கூடாது. அவர்களது அடையாளங்களான கோயில்கள் எதுவும் இருக்கக்

கூடாது. இதைச் செய்யா விட்டால் உனது மகளைச் சாகும் வரை நிரந்தரமான நோயாளியாக இருக்கும் படிச் செய்வேன். அந்த நோய் உனக்கு, உன் பிள்ளைக்கு - உன் கணவனுக்குத் தொற்றும் படிச் செய்வேன். உங்கள் வம்சமே பிச்சைக்காரர்களாகவும் பைத்தியக் காரர்களாகவும் திரிவார்கள் என்றார்.

அடிகளே! வேறொருவராக இருந்திருந்தால் என்ன நடந்திருக்கும் என்று நினைத்துப் பாருங்கள். என் கணவரிடம் ஒரு வார்த்தை கூறியிருந்தால் உங்கள் நிலை என்னாகியிருக்கும் என்று நினைத்துப் பாருங்கள். நான் அமைதி காத்தேன். பெரும் அமைதியைக் காத்தேன். அபாயகரமான அமைதியைக் காத்தேன். நான்கு ஆண்டுகளாகக் காத்தேன். ஒருவரிடமும் ஒரு வார்த்தையும் சொல்வில்லை. ஏன்? நான் உண்மையான சமணி. ஆதிதேவரையும் வாசந்திகா தேவியையும் எனது குல தெய்வங்களாக - சூரிய சந்திரர்களாக - எனதிரு கண்களாகக் கருதி போற்றி வருவதால்தான். பழிவாங்குவது சமணத்தில் கிடையாது. அஹிம்சையும் சகிப்புத் தன்மையும்தான் அதன் ஆணிவேர்கள். ஆகவேதான் அமைதி காத்தேன். தற்போது நீங்களும் மிரட்டுகிறீர்கள். சாபம் விடுகிறீர்கள். அதனால் தான் ஜெயதேவரைப் பற்றி இவ்வளவு காலமாகக் கட்டிக் காத்த ரகசியத்தை மற்றவர்களுக்குச் சொல்லாமல் உங்களிடமே சொன்னேன்.''

ராணி கூறியதைக் கேட்டு உண்மையிலேயே அதிர்ச்சி அடைந்தார் நீலகேசி.

ராணியிடம் ஜெயதேவர் வெளிப்படையாகவே விஷயத்தை தெரிவித்து அதிபயங்கரமாக மிரட்டியதாகக் கேட்டதும் பெரிதும் அதிர்ந்தார்.

இது குறித்து ஜெயதேவர் தன்னிடம் ஒரு வார்த்தை கூடக் கூறாதது அவருக்கு அதிசயமாக இருந்தது.

எதுவானாலும் தன்னிடம் ஆலோசிக்காமல் இருக்க மாட்டார். தன்னிச்சையாக எதுவும் செய்ய மாட்டார். எப்போ தாவது அப்படிச் செய்ய நேர்ந்தால் தன்னிடம் உடனடியாகச் சொல்லிவிடுவார்.

''நான் வாக்கு. நீ காயம்'' என்பது தான் அவரது தாரக மந்திரம்.

தன் மூலமாகவே சகலத்தையும் செய்யும் ஜெயதேவர் இந்த விஷயத்தை அவராகவே செய்தது பேராச்சிரியமாக இருந்தது.

தங்கள் இலட்சியத்தை மன்னனிடம் எப்படித் தெரிவிப்ப தென்று நீலகேசியே தயங்கிக் கொண்டிருந்த போது ஜெயதேவர்

தேங்காயை உடைப்பது போல் சட்டென்று கூறிவிட்டது என்னவோ போலிருந்தது நீலகேசிக்கு.

ராணி மட்டும் இதை மன்னனிடம் கூறியிருந்தால் தன்னையும் ஜெயதேவரையும் விசாரணையின்றிக் கொலைக் களத்திற்குக் கொண்டு போய் கழுவில் ஏற்றி விடுவார்கள் என்பது தெரிந்திருந்ததால் ராணியிடம் தானும் மிரட்டியது பெரும் தவறு என்பதை உணர்ந்தார்.

அவரது பேச்சின் தொனி மாறியது.

"ஆச்சார்யர் ஜெயதேவர் அவ்வாறு பேசியது தவறு என்பதை உணர்ந்து விட்டு அதற்குப் பரிகாரம் சல்லேகனை புரிவது தான் என்று அவர் முயன்ற போதெல்லாம் தடுத்து வந்தேன் நான். ஆயிரம் முறை தடுத்திருப்பேன் நான். தற்போதோ அவர் வாரணமாயிரமாய் உறுதியாக நின்று எனது தடைகளையெல்லாம் தகர்த்து சல்லேகனையில் அமர்ந்து விட்டார். எத்தனை காலம் உயிரோடு இருப்பார் என்பது தெரியவில்லை. அந்த வேதனையில் தான் நானும் கடுமையாகப் பேசி விட்டேன் ராணி. இனி உன்னிடம் சாதாரணமாகப் பேசுவதற்குக் கூட வரமாட்டேன். இராமானுஜன் இந்த நாட்டை வைணவ மடமாக மாற்றி விடாமல் பார்த்துக் கொள்ளும் படி மகாராஜா விடம் சொல். நீடூழி வாழ்வாயாக" என்று கூறிவிட்டு, விட்டால் போதும் என்ற நிலையில் ஆலயத்தை விட்டு வெளியேறினார்.

துவார சமுத்திரத்திலிருந்து சரவண பெலகுலாவிற்குப் புறப்பட்டார்.

இரண்டிற்கும் இடையே இருந்த வர்த்தமானப் பள்ளிக்கு வந்தார்.

சிரமபரிகாரங்களைச் செய்து கொண்டார்.

"உபன்யாசம் செய்ய வேண்டும்" என்றார்கள் துறவிகள்.

என்ன காரணத்தினாலோ உபன்யாசம் செய்ய வேண்டும் என்று தோன்றியது.

உபன்யாசத்தைக் கேட்பதற்கு இருநூறு பேர் வந்தார்கள்.

அவர்களில் ஒரு பெண் எடுப்பாகவும் அழகியாகவும் இருந்தாள்.





மனிதனை வளர்ப்பதும் ஆசை தான். அழிப்பதும் ஆசை தான் – நீலகேசி




நீலகேசி உபன்யாசத்தைத் துவக்கினார்.

"மகாவீரர் வர்த்தமானர் மட்டுமல்ல அவருக்கு முன்னே வந்த இருபத்து மூன்று தீர்த்தங்கரர்களும் சரி அவருக்குப் பின்னே வந்த அனைத்து மகான்களும் ஆசையை விடும்படித்தான் ஒருமித்து சொல்லியிருக்கிறார்கள். ஈசனோடு ஆயினும் ஆசை அறுமின் என்றும் கூறியிருக்கிறார்கள் என்றால் அது மகத்துவம் வாய்ந்ததல்லவா? ஆசை என்பது ஆரம்பத்தில் முளைவிட்டச் செடி போல இருக்கும். வளரவளர அது பெரிதாகிக் கொண்டே வந்து பேராசை என்னும் விருட்சமாகி விடும். விருட்சத்தின் கிளைகளை வெட்டினால் அவை துளிர்க்கின்றன. மரத்தையே வெட்டினால் கூட வேர்கள் இருக்கும் வரை மீண்டும் முளைக்கும். ஆசை அப்படித் தான். முளையிலேயே கிள்ளி எறியப்படாவிட்டால் வேறு எப்போதும் அதை அகற்ற முடியாது.

"விந்தை என்ன வென்றால் ஆசையானது மனிதனின் குணமாக இருந்து இரத்தமாகவே மாறி விட்டது. மனிதனை வளர்ப்பதும் ஆசைதான். அழிப்பதும் ஆசைதான். எனவே தான் துறவிகளும் மகான்களும் அதைக் கண்டித்தார்கள். ஆசையில்லாமல் வாழ முடியாதா? நல்ல விஷயங்களுக்கு ஆசைப்பட கூடாதா? என்று நீங்கள் கேட்கலாம். நெல்லைப் போன்ற ஆசைகள் வளர்க்கப்பட வேண்டியவை. கள்ளிச் செடியைப் போன்ற ஆசைகள் அழிக்கப்பட வேண்டியவை. இந்த வித்தியாசத்தை நாம் புரிந்து கொண்டால் நாம் வாழ்க்கையில் எச்சரிக்கையாக இருக்க முடியும்" என்று சொன்ன நீலகேசி உபன்யாசம் கேட்க வந்தவர்களில் எடுப்பாகவும் அழகாகவும் இருந்த பெண்ணைப் பார்த்து "இங்கே வா அம்மா. இங்கே வந்து உட்கார்" என்றார்.

அந்தப் பெண் அலங்காரச் சிலையொன்று அலங்காரம் கலையாமல் அசைவது போல் அசைந்து வந்தாள். அமர்ந்தாள்.

"உன் பெயரென்ன மகளே?" என்று கேட்டார் நீலகேசி.

"சந்தனமாலா"

"சந்தனம் பூசிக் கொண்டு வந்திருக்கிறாயா?"

"இல்லை"

"மணக்கிறதே!"

"இயற்கையிலேயே அந்த மணம் என்னிடம் இருக்கிறது"

"அபூர்வம். அபூர்வம். ஆனால் மகளே, சந்தன வாசம் வீசும் உடலானாலும் கடைசியில் சாம்பலாகத் தான் போகும். அறிவாயா?"

"அறிவேன் சுவாமி."

"உனது வயது என்ன?"

"துலாம் மாதம் வந்தால் பதினேழு முடிகிறது"

"நீ கடந்து வந்த பாதையில் முள் இருந்ததா? மலர் இருந்ததா?"

"மண் இருந்தது."

"பதினேழு ஆண்டுகளைக் கழித்து விட்டாய். மீதமுள்ள காலத்தை எப்படிக் கழிப்பாய்?"

"அது விதியின் கைகளில் இருக்கிறது சுவாமி. நான் எப்படிச் சொல்ல முடியும்?"

"உனக்கு ஆசைகள் இருக்கின்றனவா?"

"ஆசையை அறுக்கும்படித் தாங்கள் சொன்னீர்களே சுவாமி?"

"நல்ல ஆசையை - நம்மை உயர்த்தும் ஆசையை நிறை வேற்றிக் கொள்ளலாம் என்று சொன்னேனே. கவனிக்க வில்லையா?"

"எனது பெற்றோர் அதற்கு வழி செய்வார்கள் சுவாமி?"

"ஆகா! பள்ளம் இருப்பது தெரியாமல் மான்கள் ஓடிச் செல்கின்றனவே! பெண்ணே உனக்குச் சோகம் வரப் போகிறது பெண்ணே! அதை நீ எப்படித் தாங்கிக் கொள்ளப் போகிறாய் என்று எனக்குத் தெரியவில்லை. போ. அம்மா. போய் மகாவீர வர்த்தமானர் சிலைமுன் உட்கார்ந்து தியானம் செய். உன் சோகத்தை அவனால் தான் போக்க முடியும். விதியை எழுதியவன் தான் விதியை மாற்றமுடியும். மதியும் சதியும் எதுவும் செய்யமுடியாது" என்று நீலகேசி கூறியதும் சந்தனமாலா என்னும் அந்தப் பெண் சற்றே கலக்கமடைந்து விஹாரத்திற்குள் இருந்த மகாவீரர் சிலைமுன்பு தியானத்தில் அமர்ந்தாள்.

பிறகு தன் உபன்யாசத்தை மேலும் ஒரு நாழிகை வரை செய்தார். "எனது உயிரினும் மேலானவர்களே! இந்த நாட்டிற்குப் பெரும்

உற்பாதம் நடக்கவிருக்கிறது. சமணத்திற்கு என்றுமில்லாதச் சோதனை வந்திருக்கிறது. அது என்ன வடிவத்தில் எந்த வேகத்தில் வருமோ என்று தெரியவில்லை. இந்த நாட்டையும் சீர்மல்கும் இந்தச் சமணத்தையும் வர்த்தமான மகாவீரர்தான் காப்பாற்ற வேண்டும். அவரை வேண்டிக் கொண்டு புறப்படுங்கள்" என்றார் நீலகேசி.

மக்கள் எழுந்து சென்றார்கள்.

நீலகேசி உள்ளே சென்றார். தியானத்தில் அமர்ந்திருந்த சந்தனமாலாவைப் பார்த்தார்.

விஹாரத்துத் துறவி ஒருவரைப் பார்த்து ஏதோ சைகை செய்தார்.

துறவி சிறிது நேரத்தில் குவளையொன்றில் பாலைக் கொண்டு வந்தார்.

"தியானத்திலிருந்து எழுந்திரு சந்தனமாலா" என்றார் நீலகேசி.

அவள் எழுந்ததும் "இந்த அபிஷேகப் பாலை அருந்து" என்றார்.

குவளையில் இருந்த பாலை அவள் அருந்தியதும் "என்னோடு வா" என்று சொல்லி கல்படுக்கைக்குக் கூட்டிச் சென்றார் நீலகேசி.

கல்படுக்கைக்குச் செல்வதற்கும் அவள் மயக்கமடைந்து சாய்வதற்கும் சரியாக இருந்தது.

கீழே விழாமல் அவளை அப்படியே தாங்கிக் கொண்டு கல்படுக்கையில் படுக்க வைத்து கதவைத் சாத்தினார். அறைக்குள் ஒன்றுக்கு இரண்டாகப் பந்தங்களை ஏற்றினார்.

பந்த ஒளியில் பொன்னோவியம் போலிருந்த அவளைக் கண்டு பரவசமடைந்தார் நீலகேசி. அவளது செவ்வல்லி உதடுகளில் முரட்டுத் தனமாக ஓவியங்களை வரைந்தார். பிறகு கன்னங்களிலும் வரைந்தார்.

இந்தத் தங்கச் சிலைக்கு ஆடை என்னும் தடை எதற்கு என்று யோசித்த அவர் பரபரவென்று அவற்றை நீக்கினார்.

"அவளுக்கு மிகவும் பெரியது. இவளுக்கு அளவாக இருக்கிறது. எவ்வளவு கெட்டியாக இருக்கிறது. கல்லைக் கனியாக்க வேண்டும்" என்று சொல்லிக் கொண்டு தனது இரும்புக் கைகளால் கனியாக்க முற்பட்டார்.

கெட்டிப்பட்டுக் கிடந்த அவளது தனங்கள் கனியாவதற்குள் அவளுக்கு மயக்கம் தெளிந்து விடவே தெளிந்தாள். தப்பு நடக்கிறது

என்பதை உணர்ந்து எழ முற்பட்ட போது "எழ வேண்டாம். அப்படியே இரு. இன்னும் முடியவில்லை" என்றார் நீலகேசி.

அவள் அதிர்ச்சி அடைந்து "சுவாமி! நீங்களா? நீங்களா இப்படி?" என்று கேட்டு விட்டுத் தற்செயலாக அவரைக் கண்ட போது அவரது திகம்பரக் கோலம் மீண்டும் அதிர்ச்சியைத் தரவோ "ஐயோ! இது என்ன?" என்று சொல்லி கைகளால் கண்களை மூடிக் கொண்டாள்.

"முட்டாள் பெண்ணே! மூட வேண்டியவற்றைத் திறந்து போட்டு விட்டு கண்களைப் போய் மூடிக் கொண்டிருக்கிறாயே?" என்று கேட்டார் நீலகேசி.

அப்போது தான் அவரைப் போன்ற நிலையிலேயே தானும் இருப்பது தெரிந்தது. பதறிப் போய் எழுந்த அவள் ஆடைகளைத் தேடினாள்.

"அவற்றைத் தேடாதே சந்தனமாலா. காரியம் முடியட்டும். அவற்றை எடுத்து நானே அணிவிக்கிறேன்" என்றார் நீலகேசி.

அவள் சடாரெனக் குனிந்து அவரது காவியை எடுத்துத் தன்னை மறைத்துக் கொண்டாள்.

ஆனால் காவியுடை அவளுக்கு அருவருப்பைத் தந்தது.

நீலகேசி அந்தக் காவியுடையை இழுத்து எறிந்தார்.

"சந்தனமாலா! நாம் பிறக்கும் போதும் ஆடையில்லாமல் தான் பிறக்கிறோம். இறக்கும் போதும் ஆடையில்லாமல் தான் போகிறோம். இடையே நாம் உடுத்தும் ஆடை நிரந்தரமல்ல. ஆகவே இந்த இரவு வரை அவை இல்லாமல் போனால் தான் என்ன? குடிமுழுகியா போய் விடும். உன் பிர்மாதமான அழகு அங்கங்களை ஆடைகள் எதற்காக மறைக்க வேண்டும்.? அந்த அமுத அழகினை நானும் இந்தப் பந்தங்களும் கண்டால் தான் என்ன? காண்பதற்குத் தானே கண்கள்! அதே போல சந்தோஷப் படுவதற்குத் தானே இந்த உடல்கள்? சாம்பலாகப் போகும் உடல்கள் சந்தோஷத்தை அனுபவித்தால் என்ன? நாம் பிறப்பதே சந்தோஷங்களை அடையத் தானே தவிர அழுதும் அழுகியும் வீணாய் போவதற்கு அல்ல. நீ சொன்ன மாதிரி உன் உடலில் இயற்கையாகவே சந்தன மணம் வீசுகிறது. என்னை ஈர்க்கிறது. என்னைக் கண்டு தயங்காதே. என்னைப் பார்த்து அஞ்சாதே. ஒரே நேரத்தில் பத்து பெண்களை அடுத்தடுத்து காமத்தால் வீழ்த்தும் காமச்சூரன் நான். என்னிடம் இருக்கும் காமக் கலைகளும் நுட்பங்களும் வேறு எவனிடமும் இல்லை. நேரத்தை வீணாக்காமல் வா" என்றார்.

அவரது கோலத்தைக் காண முடியாமல் திரும்பி நின்று கொண்டிருந்தச் சந்தனமாலா "ஐயா! துறவியாக இருந்து கொண்டு துர்த்தனாகப் பேசுகிறீர்களே! இது உங்களுக்கு அடுக்குமா?" என்று கேட்டாள்.

"சந்தனமாலா! ஒன்றுமில்லாத விஷயத்திற்காக ஏதேதோ பேசுகிறாய். என்றைக்காவது ஒரு நாள் உன் கற்பு போகத் தான் போகிறது. அது இங்கே போனால் என்ன?"

"உன்னைப் போன்ற இழிபிறவியிடம் கற்பை இழப்பதற்காக நானில்லை."

"பெண்களான நீங்கள்தான் இழி பிறவிகள். நீங்கள் எங்களுக்குச் சந்தோஷங்களை வழங்குவதற்காக மட்டுமே பிறந்திருக்கிறீர்கள். ஆண்கள் இல்லா விட்டால் உங்களால் ஒரு நிமிடம் கூட வாழ முடியாது."

"இருக்கலாம். நான் ஆண்களை வெறுக்கவில்லை. உங்களைப் போன்ற கபடத் துறவிகளைத்தான் வெறுக்கிறேன்."

"பெண்ணே! ஆடவன் யாராக இருந்தாலும் அவர்களுக்கு இருப்பது என்னவோ ஒரே மாதிரியானவைதான். ஒரே மாதிரி நடந்து கொள்ளக் கூடியவைதான்."

"என்னை மணக்க ஒருவர் காத்திருக்கிறார். என்னைத் தொடும் உரிமை அவருக்கு மட்டுமே உண்டு."

"நான் உன்னைத் தொட்டு விட்டேன். அங்கங்களைப் பார்த்து விட்டேன். பிறகு எதற்கு பேச்சு உனக்கு? அந்த மகானுபாவன் உன்னையே திருமணம் செய்து கொள்ளட்டும். நான் என்ன உன்னை என் வாழ்நாள் முழுவதும் என்னுடனா வைத்துக் கொண்டிருக்கப் போகிறேன்? இன்று மட்டும் தானே? இதற்குப் போய் நீ அலட்டிக் கொள்ளலாமா? இதோ பார் சந்தனமாலா. என் மகத்துவம் தெரியாமல் பேசுகிறாய். இதுவரை நான் தொட்ட பெண்கள் என்னை விட்டுப் போக மனமில்லாமல் என் கிட்டவே வருகிறார்கள். எனது இன்பக் குட்டுகளைப் பெறுகிறார்கள். அவர்களுக்கு நான் லட்டு மாதிரி. நீயும் இன்று நடவடிக்கைகளைப் பார். நான் நூறு மன்மதன்களுக்கு இணை என்பதை உணர்வாய்."

சந்தனமாலாவுக்கு அருவருப்பாகத் தான் இருந்தது.

மானத்தை விட்டுத் திரும்பிய அவள் "பாவியே! பாதகனே! களங்கத்தின் மொத்த உருவமே! மகான் மகாவீரர் திருப்பெயரைச் சொல்லிக் கொண்டு அவருக்கும் சமண மதத்திற்கும் இழுக்கைத்

தேடித் தரும் மானங் கெட்டவனே! ஒரு இளம் பெண்ணிடம் பேசுகிற பேச்சா இது? நாகரிகம், பண்பு, விவேகம், கருணை என்று துறவிக்கு உரிய ஒன்றும் இல்லாத உருப்படாதவனே! ஆசையைப் பற்றியெல்லாம் பேசி விட்டு அற்ப ஆசையில் உழல முனையும் உதவாக்கரையே! தூ" என்று சொல்லி அவர் மீது காறியுமிழ்ந்தாள் அவள்.

"அவர் அவளை ஓங்கி அறைந்தார். திடீரென்று விழுந்த அடியைத் தாங்க முடியாமல் மயங்கி விழுந்தாள்.

நீலகேசிக்கு கோபம் கிளர்ந்தெழுந்தது.

"நாயே! உனக்கேன் இத்தனைக் கொழுப்பு? துறவி துறவி என்று வெறுத்துப் பேசுகிறீர்களே! அவர்கள் வெள்ளாடை உடுத்து வெண்பட்டு வட்டாவைத் தலையில் அணிந்து கொண்டால் கண்டு பிடிக்க முடியுமா உங்களால்? ஏதோ காலமெல்லாம் கட்டிக் காக்கப் போகும் விஷயத்தைப் போல கற்பு விஷயத்தில் அலட்டிக் கொள்கிறீர்களே! அது ஒரு அற்ப விஷயம் தானே! என்னிடம் பகிர்ந்து கொண்டால் என்ன ஆகி விடப் போகிறது?" உள்ளுக்குள் குமுறிக் கொண்டார் நீலகேசி.

தீயவர்களுக்குத் தீயவைகள் தான் தூய அறிவுரைகளாகவும் செயல்களாகவும் இருக்கும். அவர்களுக்கு நன்னெறிகள்தான் பகை.

அந்த வகையில் உத்தமநிலையில் இருக்க வேண்டிய நீலகேசி உளுத்த நிலைக்கு வந்து விட்டதால் தர்மம் எது, தர்மநெறி எது என்பது விளங்கவில்லை. கண்டபடி நினைத்தார். கண்டபடி செயல்படவும் தயாராக இருந்தார்.

மயக்கமடைந்து போன சந்தனமாலையை ஒரு வழியாக்கினார்.

மிருகவெறியில் இருந்த அவரைக் கோபமும் காமக்கினியும் உசுப்பி விட்டதால் வக்கிரமான காமங்களையெல்லாம் அந்த இளம் உடலில் காட்டினார். அவளை மனித உடலாகக் கருதாமல் வேங்கை மானைக் குதறுவது போல எண்ணி அவளது அங்கமெல்லாம் கடித்து ரத்தக் களறியாக்கினார்.

அவர் தந்த அதிர்வுகளும் ஆர்ப்பாட்டங்களும் அந்த அப்பாவிப் பெண்ணின் உயிரைப் பறித்திருந்தன. அதைக் கூட அறியாமல் காட்டுத் தனமாக நடந்து கொண்டு தனது விபரீத இச்சைகளைத் தீர்த்துக் கொண்டு பொழுது விடியும் நேரத்திலேயே அவளை விடுவித்தார்.

அப்போது தான் அவள் இறந்து விட்டது தெரிந்தது அவருக்கு.

பணியாட்களை அழைத்தார்.

“இந்த பீடை செத்து விட்டது. உடலைக் கொண்டு போய் நச்சுப் பொய்கையில் எறியுங்கள்” என்று கூறி விட்டு நீராடச் சென்றார்.

நன்றாக நீராடி உடம்பைச் சுத்தமாக்கிக் கொண்டு உணவை அருந்தி தூயத் துறவி போல் மாறி வெளியேற முற்பட்ட போது விஹாரத்தின் வாயிலில் நின்றிருந்த திங்களழகி “நலமா சுவாமி?” என்று கேட்டாள்.

அவருக்கு அதிர்ச்சி.

“இவளை நச்சுப் பொய்கையில் எறியச் சொல்லிப் பலநாட்கள் ஆகிவிட்டனவே! எப்படி உயிரோடு வந்தாள்?” என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்ட அவர் “நீயா? எப்படி வந்தாய்? எதற்காக வந்தாய்?” என்று கோபமாகக் கேட்டார்.

“உங்கள் திகம்பரர் கோலத்தைப் பார்க்கலாம் என்று வந்தேன். காட்டுகிறீர்களா?” என்று கேட்டாள் திங்களழகி.

அவருக்கு மீண்டும் அதிர்ச்சி.

“என்ன துணிச்சல் இருந்தால் இவ்வளவு ஆபாசமாகக் கேட்பாள்?” என்று உள்ளுக்குள்ளேயே சொல்லிக் கொண்ட அவர் “திங்களழகி! என்னிடம் விளையாடுவது ஆபத்து” என்றார்.

“அது தான் நாம் விளையாடி விட்டோமே! ஆபத்து எனக்கு வந்து விட்டது. இன்னும் என்ன வரப் போகிறது? நான் சாக மாட்டேன் நீலகேசி. சாவதற்கு நீண்டகாலம் இருக்கிறது. நீ செத்த பிறகு தான் நான் சாவேன். உனக்கு எதிரிகள் இருக்கிறார்களா என்பது எனக்குத் தெரியாது. இன்று முதல் நீ என் எதிரி. பிரதானமான எதிரி. உன் மரணம் என் கைகளில்” என்று கூறிய திங்களழகி தனது காலணியைக் கழற்றி அவர் மீது வீசிவிட்டு வேகமாக அங்கிருந்து அகன்றாள்.

நீலகேசி புலிகேசியாக மாறி விஹாரத்திற்குள் சென்று துறவி களையெல்லாம் அழைத்து வார்த்தைகளைத் தீயம்பு போல பிரயோகித்தார். கடுமையாகத் திட்டினார். நாய்கள் பேய்கள் என்றார்.

“அந்தப் பாழாய்ப் போனத் திங்களழகியை நச்சுப் பொய்கையில் வீசும் படி நான் உத்தரவிட்டேன். அதை நீங்கள் நிறைவேற்ற வில்லை. ஏன்?” என்று இடி இடிப்பது போல் கேட்டார்.

அந்த விஹாரத்தின் தலைமைத் துறவியாக இருந்த ரிஷப தேவர் “எங்களுக்குப் பிடிக்கவில்லை. நிறைவேற்ற வில்லை” என்றார்.

"பிடிக்க வில்லையா? மூடனே! என் கட்டளைக்கு முன்னால் உங்கள் விருப்பம் எங்கிருந்து வந்தது? என் கட்டளைக்குக் கீழ்ப்படிவது தான் உங்கள் கடமை. மறுத்தது மடமை" என்றார் நீலகேசி.

"தங்களது கட்டளைகள் உத்தமமானதாக இருந்த போது அவற்றை நிறைவேற்றுவது எங்கள் தலையாயக் கடமை என்று நினைத்தோம். நிறைவேற்றி வந்தோம். ஆனால் போகப் போக உங்கள் செய்கைகளும் உத்தரவுகளும் சகிக்க முடியாதவை களாக இருந்தன. அதர்மங்களாகவும் அயோக்கியத் தனமாகவும் இருந்தன. விஹாரம் மகா தூய்மையான இடம். இங்கே பிரதிஷ்டை செய்யப்பட்ட தீர்த்தங்கரர்களின் விக்கிரங்கள் வெறும் சிலைகள் அல்ல. அவர்களின் பிரதிபிம்பங்கள். சிலை வடிவமாக இருந்து அனைவரையும் வாழ வைப்பதாகவே நம்புகிறோம். அந்தப் புனிதமான இடத்தை நீங்கள் பாழ்படுத்தத் தொடங்கினீர்கள். மகா ரத்தினத்தின் மீது மண்ணை வாரி கொட்டுவது போல் இருந்தது உங்கள் செயல்கள். தெளிந்தத் தண்ணீரில் விஷம் கலப்பது போல் இருந்தது. வீசும் காற்றில் மாசு கலப்பது போல் இருந்தது. இந்த விஹாரத்திற்கு இளம் பெண்களைக் கொண்டு வந்தீர்கள். பாசமலர்கள் என்று சொல்லிக் கொண்டு நாசம் செய்தீர்கள். பாவம் புரிந்தவர் விமோசனம் பெற வருகிற இடம் பாவங்களை விளைவிக்கும் இடமாக மாறினால் அந்த இடம் நரகத்தை விடக் கொடியது. சாக்கடையை விடக் கீழ்மையானது. பரிகாரம் தேடி வரும் பரிசுத்தமான விஹாரத்தை நரிகள் வாசம் செய்யும் சுடுகாடு போல் ஆக்கினீர்கள். துறவியாக இருந்துத் தூய்மையோடும் வாய்மையோடும் இருக்க வேண்டிய நீங்கள் தாய்மையைக் காட்ட வேண்டிய பெண்களிடம் தரம் கெட்டு நடந்து கொண்டு கெடுத்தீர்கள். கள்ளச் சுகத்தை அநுபவித்து கள்ளத் துறவியாக மாறி எல்லோரையும் ஏமாற்றினீர்கள். நீங்கள் கெடுத்த பெண்களையெல்லாம் அன்றைக்கு அன்றே விடுவித்தீர்கள். அவர்கள் காலில் பட்டச் சேற்றைக் கழுவிவிட்டுப் போவது போல் விலகிச் சென்றார்கள். ஆனால் நீங்கள் திங்களழகியை நச்சுப் பொய்கையில் எறிந்து கொன்று விடும் படிச் சொன்ன போது நாங்கள் கொலைகாரர்களாக மாற விரும்பவில்லை. அவளை நச்சுப் பொய்கையில் எறிய வில்லை. விட்டு விட்டோம்."

"திங்களழகியின் மீது உங்களுக்கென்ன கரிசனம்?" என்று கேட்டார் நீலகேசி.

"அவள் மீது மட்டுமல்ல. எல்லோர் மீதும் எங்களுக்கு உண்டு. உங்களுக்கும் இருக்க வேண்டும். அது உங்களுக்கு இல்லாமல்

போய் விட்டது. இந்தக் கருணாலயத்தை நீங்கள் கொலைக் களமாக மாற்றக் கட்டளையிட்டபோது தான் விழித்துக் கொண்டோம். கொலைப் பழி வராமல் பார்த்துக் கொண்டோம்."

"நான் கட்டளையிட்ட போது இதைச் சொல்லியிருக்க வேண்டியது தானே?"

"சொல்லியிருந்தால் அன்றைக்கு நீங்களே அவளது கழுத்தை நெரித்துக் கொன்றிருப்பீர்கள். அதை நாங்கள் விரும்பவில்லை."

"நேற்றைய பெண் சந்தனமாலாவை மட்டும் நச்சுப் பொய்கையில் எறிந்தீர்களே. அது ஏன்?"

"உங்களோடு இருந்த போதே அவள் இறந்து விட்டாள். இறந்து விட்டவளை நச்சுப் பொய்கையில் போட்டாலென்ன? மச்சுப் படியில் எறிந்தால் என்ன?"

"துறவி! நீங்கள் விழிப்படைந்து விட்டதாயும் உத்தமர்களாகி விட்டதாயும் கூறுகிறீர்கள். ஆனால் அதற்கு முன்னால் வரை எனக்கு உடந்தையாக இருந்து உதவிதானே செய்தீர்கள்? அப்போது உறுத்த வில்லையா? பெண்கள் என்னால் கற்பழிக்கப் பட்டால் தவறில்லை மகத்தானது என்று நினைத்தீர்களா?"

"அப்படி நினைக்கவில்லை. எங்களுக்கு உறுத்தல்கள் இருக்கத்தான் செய்தன."

"நான் தொண்ணூற்று ஒன்பது பெண்களைக் கெடுத்த போதெல்லாம் உறுதியாக இருந்து உதவி செய்து விட்டு நூறாவது பெண்ணைக் கெடுத்த போது மட்டும் விழித்துக் கொண்டதாகக் கூறுவது விநோதமாக இல்லையா? ஆயிரமாயிரம் ஆடுகளை அறுப்பவன் திடீரென்று கருணை காட்ட முயல்வது ஏமாற்று வேலையில்லையா? துணை போவதற்கும் விடுபடுவதற்கும் கணக்கு இருக்கிறதா?"

"அடிகளே! வாழ்க்கையில் தொடர்ந்து கெடுதலைச் செய்பவன் ஒருமுறையாவது விழித்துக் கொண்டு மனம் திருந்துவது தான் மனத்திற்குத் தரப்பட்ட வரப்பிரசாதம். அறிவு அதற்காகத் தான் இருக்கிறது. தொடர்ந்து நல்லது மட்டுமே செய்பவர்கள் இருக்கிறார்கள். ஆனால் தொடர்ந்து கெடுதல் களையே செய்பவர்கள் யாரும் கிடையாது."

இகழ்ச்சியான சிரிப்பு ஒன்றை உதிர்த்த நீலகேசி "இந்த நச்சுப் பொய்கையின் கதை உங்களுக்கெல்லாம் தெரியுமா?" என்று கேட்டார்.

விஹா[illegible]த்து துறவி ரிஷபதேவர் விழித்தார்.





ரகசியம் என்ற ஒரு வார்த்தை உருவாக்கப் பட்டதற்குக் காரணமே வெளிப்படை என்ற வார்த்தையைப் பின்னுக்குத் தள்ளுவதற்காகத் தான் –




"சிலபல ஆண்டுகளுக்கு முன்னால் இந்த விஹாரத்தின் தலைவராகவும் தலைமை பிட்சுவாகவும் பத்ரபாகு என்பவர் இருந்தார். இங்கே விஹாரம் வருவதற்கு முன்பாகவே பொய்கையொன்று இருந்தது. பத்ரபாகு அதில் நீராடப் போன போது அதில் நாகம் ஒன்று வெளிப்பட்டது. துறவி நீராடாமல் வந்து விட்டார். துறவிகளை அழைத்து விசாரித்தார். அவர்கள் அந்தப் பொய்கையில் பாம்புகள் வாழ்வதாகவும், அந்த நீரில் மட்டுமே வாழும் அவை அபூர்வமானதென்றும், அவை யாரையும் தீண்டாது என்றும் சொன்னார்கள்.

"பத்ரபாகு நாகங்கள் நம்பிக்கைக்குரியவை அல்ல. நல்ல பாம்பு என்ற பெயரைப் பெற்றிருந்தாலும் அவை நல்லவையல்ல. வளர்க்கும் பிடாரனையே அது தீண்டும். பொய்கையானது மனிதர்கள் நீராடும் இடம். நீர் அருந்தும் இடம். அதில் பாம்புகள் வாழ்ந்தால் மக்கள் எப்படி வருவார்கள்? பாம்புகள் வாழ இடமா இல்லை? எல்லா பாம்புகளையும் பொய்கையிலிருந்து அகற்றுங்கள்" என்றார்.

"அகற்றுங்கள் என்ற வார்த்தையைத் தவறாகப் புரிந்து கொண்ட பாம்பாட்டிகள் பாம்புகளைப் பிடித்துக் கொன்றார்கள். தப்பி வந்த ஒரு பாம்பு மட்டும் பத்ரபாகுவிடம் வந்து "யாரையும் தீண்டாமல் வாழ்ந்த எங்களை நீங்கள் அழித்து எங்கள் வம்சத்தை இல்லாமல் செய்து விட்டீர்கள். எங்கள் சாபம் உங்களை விடாது. இந்தப் பொய்கை இனி நச்சுப் பொய்கையாக மாறும். இதில் தினமும் ஒரு துறவி விழுந்து இறப்பார்" என்று கூறி விட்டு மறைந்தது.

"அது முதல் தினமும் ஒரு துறவி பொய்கையால் ஈர்க்கப் பட்டார். பொய்கையின் நச்சு அவரை ஒரே வினாடியில் சடலமாக்கியது. பத்ரபாகு செய்வதறியாமல் திகைத்தார். துறவிகளின் இழப்பு நூறைத் தாண்டிய போது அவர் பக்கத்து மலையடிவாரத்தில் உறைந்த நாகர்களை அழைத்து வழி கேட்டார். அவர்கள் நாகக் கோயில் ஒன்றை அமைத்து நாகத்தை

பிரதிஷ்டை செய்யச் சொன்னார்கள். பத்ரபாகுவும் அவ்வாறே செய்தார். நாகர்கள் பூஜைகளை செய்தார்கள். ஒரு நாள் நாக விக்கிரகம் மறைந்து நாகர் தோன்றியது. பத்ர பாகுவிடம் பேசிய அதே நாகம் தான்.

“துறவியே! உங்களது எண்ணத்தையும் முயற்சியையும் கண்டு எனது சாபத்தை நீக்கிக் கொள்கிறேன். ஆனாலும் ஒன்று. இந்த நச்சுப் பொய்கையை யாரும் அழிக்கக் கூடாது. ஆனால் முப்பது ஆண்டுகளுக்கு ஒரு முறை யாரையாவது ஒருவரை நச்சுப் பொய்கைக்கு காவு கொடுக்க வேண்டும் என்றது.* பத்ரபாகு ஒப்புக் கொண்டார். இந்த ரகசியத்தை இறக்கும் தருவாயில் என்னிடம் சொன்ன அவர் முப்பதாண்டிற்கு ஒரு முறை யாராவது ஒருவரை நச்சுப் பொய்கையில் எறியும் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்தார்.

பத்ரபாகு என்னிடம் பொறுப்பை ஒப்படைத்து விட்டு சல்லேகனையில் அமர்ந்து சதுர்மாதத்தில் நிர்வாணமடைந்தார். அவர் மறைந்துச் சரியாக முப்பது ஆண்டுகள் கழிந்த நிலையில் திங்களழகி வந்தாள். அவள் சமணப் பெண். அநாதை அவளுக்கு எதிர்காலமில்லை. அவள் பெண்ணாய் வாழ்வதால் ஒரு லாபமும் இல்லை. அதுவும் என்னோடு இணைந்த பின் வேறு யாரோடும் வாழ முடியாது என்று சொல்லிவிட்டாள். அவளை நான் மணக்க முடியாது. அவளை நச்சுப் பொய்கையில் எறிந்து இறந்து விட்டால் அவளுக்கு மோட்சம் கிடைக்கும். நமக்குக் கூட எளிதில் கிடைக்காத மோட்சத்தை அவளுக்கு அளிக்க விரும்பியே நச்சுப் பொய்கையில் எறியும் படி உங்களிடம் கேட்டுக் கொண்டேன். அதைச் செய்யாமல் நீங்களெல்லாம் அவளது மோட்சத்தைத் தடுத்து விட்டீர்கள். குருநாதன் கட்டளையிட்டால் அதில் பொருளிருக்கும் என்று நம்பி அதை நிறைவேற்றுபவனே சீடன். நான் உங்கள் குருநாதனே தான். நீங்கள் ஒப்புக் கொள்ள மறுத்தாலும் நான் குருநாதன் தான். குருவின் கட்டளையை மீறிச் சுயமாக முடிவெடுக்கும் சீடர்களுக்கு இவ்வுலகிலேயே நரகம் கிடைக்கும்” என்று கூறி நிறுத்தினார் நீலகேசி.

துறவிகளால் அவருக்குப் பதில் கூற முடியவில்லை.

சிறிது நேரம் கழித்து ஒரு துறவி பேசமுற்பட்டு “திங்களழகி விஷயத்தை விட்டு விடுங்கள். அவளுக்கு முன்னால் தொண்ணூற்று ஒன்பது பெண்களை நூற்று நாற்பத்து எட்டு முறை மொத்தமாகக் கெடுத்தீர்களே- அதற்கு நாகம் தான் வந்து கட்டளையிட்டதா?” என்று கேட்டார் கிண்டலாக.

---

* அப்படி காவு கொடுக்கப் படுபவருக்கு மோட்சம் நிச்சயம் என்றது.

“உன் கணக்கு தவறானது. சரியாக நீ எண்ணவில்லை. திங்களழகிக்கு முன்னால் நான் தொண்ணூற்று ஒன்பது அழகிகளை நூற்று எண்பத்து நான்கு முறை மொத்தமாகக் கெடுத்திருக்கிறேன். உங்கள் ஆதரவோடும் உங்கள் உதவியோடும் செய்திருக்கிறேன். அதற்கு நீங்கள் ஆதரவு கொடுத்து உதவி செய்தது ஏன் என்று சொல்வீர்களானால் கெடுத்ததற்கான காரணத்தை நான் சொல்கிறேன். உங்களில் ஒருவருக்கும் மூளை வேலை செய்யவில்லை. நீங்களெல்லாம் மொட்டையடித்திருக்கிறீர்களே தவிர மூளையைக் கூர்மை படுத்திக் கொள்ளவில்லை. கொலையாளிக்கு உதவுபவன் கூடக் கொலைகாரன்தான். பல குற்றங்களைச் செய்தவன் குற்றங்களை நிறுத்தி விட்டுத் திருந்தி வாழலாம். ஆனால் திருந்துவதற்கு முன் செய்த குற்றங்கள் குற்றங்களாகத்தான் இருக்குமே தவிர புண்ணிய காரியங்களாக மாறிவிடாது. எனக்கு இந்த விஷயத்தில் உதவி செய்த உங்களுக்கு ஏராளமான வராகன்களை அள்ளித் தந்திருக்கிறேன். வேண்டாம் என்று ஒருவரும் சொல்லவில்லை. துறவிக்கு எதற்குப் பொன் நாணயங்கள் என்று கேட்கவில்லை. நீங்கள் அத்தனை பேரும் உத்தமர்கள் தானா என்றும் சொல்ல முடியாது. இந்த நிலையில் நீங்களெல்லாம் என்னைக் குற்றவாளி என்கிறீர்கள். என் கட்டளையை மீறியிருக்கிறீர்கள். பரவாயில்லை. நீர் மோதி நீர் அழிந்து விடாது. உங்களது அறியாமைக்கு என் அனுதாபங்கள். உங்களை அந்த வர்த்தமானர் காப்பாற்றட்டும். திங்களழகி என் கைகளில் தான் என் மரணம் என்று சொல்லிவிட்டுப் போகிறாள். நான் காலனுடன் போர் தொடுப்பவன் என்பது அவளுக்குத் தெரியாது” என்று கூறிவிட்டு பதிலை எதிர் பார்க்காமல் விஹாரத்தை விட்டு வெளியேறி புரவியில் ஏறி ச்ரவண பெலகுலாவுக்குப் புறப்பட்டார்.

துறவிகள் பேச்சற்றுப் போனார்கள்.

பேச முடிந்த போது நீலகேசி மீது அவர்களுக்கு அனுதாபமே உண்டாயிற்று.

அவருக்குப் பெண்கள் விஷயத்தில் சபலம் ஏற்பட்ட போது ஒட்டு மொத்தமாக நின்று அவரைத் தடுத்திருக்க வேண்டுமே தவிர பொன் நாணயங்களை வாங்கிக் கொண்டு அவருக்கு உதவியிருக்கக் கூடாது என்பதும், பணம் பெற்று உதவியபின் அவர் மீது மட்டும் குற்றம் சாட்டுவது நியாயமல்ல என்பதும் புரிந்தது.

அவசரப்பட்டு அவரது கட்டளையை மீறியதாய் அவருடனான தொடர்பு அறுந்து போய் அவரிடமிருந்து வரக் கூடிய

பணமும் நின்று விடும் ஆதலால் சோலையில் சஞ்சாரம் செய்து கொண்டிருந்தவர்கள் பாலைவனத்தில் வந்து விழுந்தது போல் இருந்தது துறவிகளுக்கு.

"இதற்கெல்லாம் நீங்கள் தான் காரணம்" என்று தலைமைத் துறவியைப் பார்த்துச் சொன்னார்கள் துறவிகள்.

சச்சரவு உண்டாயிற்று.



வேலாபுரத்தில் பெருமாள் கோயில் கட்டப்பட்டு வருவதை மன்னன் விட்டலராயன் பார்வையிட்ட போது தலைமை சிற்பியானவர் சமணர்கள் நூறு பேர் திரண்டு வந்து "கோயிலை நீங்கள் இடிக்கிறீர்களா? நாங்கள் இடிக்கட்டுமா?" என்று கேட்டு விட்டுப் போனதாகச் சொன்னதும் "நான் பார்த்துக் கொள்கிறேன்" என்று கூறி விட்டுச் சென்றான் மன்னன்.

மறுநாளே வேலாபுரத்தில் பல இடங்களிலும் அறிவிப்புப் பலகைகள் வைக்கச் சொன்னான் மன்னன்.

அதில் -

"எனதருமைச் சமண தீரர்களே! உங்களில் யாரும் வேலா புரத்தில் கட்டப்பட்டு வரும் பெருமாள் கோயிலை இடிக்க வேண்டாம். இது சம்பந்தமாக எனக்கும் மகாராஜாவுக்கும் இருந்து வந்த கருத்து வேறுபாடு நீங்கி விட்டது. எனவே எல்லோரும் அமைதியாக இருங்கள்."

- நீலகேசி

என்றிருந்தது.

வேலாபுரத்தில் இருந்த எல்லாச் சமணர்களும் அந்த அறிவிப்புப் பலகைகளை கண்டதும் நீலகேசியின் அறிவிப்பாகவே கருதி அமைதி காத்தார்கள்.

வேலாபுரத்தில் இரண்டு நாட்கள் இருந்து விட்டு துவார சமுத்திரத்திற்குச் சென்ற மன்னன் அங்கே இருந்த நிலைகளை ஆராய்ந்தான். நிதிநிலைமைகளைப் பற்றி பஞ்சப் பிரதானிகளுடன் ஆலோசனை நடத்தினான். நிதி நிலைமைகளைச் சீராக்கும் பொறுப்பை இளவரசன் நரசிம்மனிடம் ஒப்படைத்து விட்டு தொண்டனூருக்குச் சென்றான்.

தொண்டனூரில் பணிகள் வேகமாக நடந்து கொண்டிருந்தன. ஏரிக்கரையில் வைக்கப்படுவதற்கான பாறைகள் குன்று களிலிருந்து வெட்டியெடுக்கப் பட்டு அடுக்குவதற்கு ஏற்ப சமன்

செய்யப் பட்டுக் கொண்டிருந்தன. சுமார் நூறு பேர் இந்தப் பணியில் ஈடுபட்டிருந்தார்கள். கற்களைச் சமன் செய்வதற்காகக் கீற்றுக் கொட்டைகள் சில அமைக்கப் பட்டிருந்தன. கற்களை அடுக்கிப் பூசுவதற்காகச் சுண்ணாம்புக் கலவைகள் பல இடங்களில் தயாரிக்கப்பட்டுக் கொண்டிருந்தன. அருவியிலிருந்து விழும் நீரே அவர்களுக்கும் அவர்களது பணிகளுக்கும் போதுமானதாக இருந்தது. இராமானுஜர் மடக் கட்டுமானமும் தொடங்கி அடிக்கல் நாட்டப்பட்டிருந்தன.

தொண்டனூருக்கு இராமானுஜர் வந்து ஏரி அமைப்பதில் ஈடுபட்டதையும் மன்னன் மகளை குணப்படுத்தியதையும் மக்கள் பெருமையாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். அந்தச் செய்தி அண்டை கிராமங்களுக்கும் ஊர்களுக்கும் பரவியதால் அங்கிருந்தவர்களுக்கு இராமானுஜரின் மீது பக்தியும் மரியாதையும் உண்டாயிற்று. மக்கள் சாரிசாரியாக வந்து அவரை வணங்கி ஆசிபெற்றுச் சென்றார்கள்.

தொண்டனூருக்குச் சற்று தொலைவில் நாகமங்கலம் என்ற ஊர் ஒன்று இருந்தது. அங்கு சென்ன கேசவப் பெருமாள் கோயிலொன்று விட்டலராயனின் மூதாதையர்களால் அமைக்கப்பட்டுச் சிறப்பாக இருந்தது. அக்கோயிலுக்கு முன்பு ஒரே கல்லினால் ஆன அறுபதடி உயரமுள்ள தீபஸ்தம்பம் சிற்பிகளால் உருவாக்கப்பட்டிருந்தது. பெருமாள் கோயிலுக்கு உரிய அந்த தீபத் தூணை இராமானுஜர் பிரதிஷ்டை செய்தால் சிறப்பாக இருக்கும் என்று ஊர் மக்கள் கருதினார்கள். இராமானுஜர் அதற்குச் சம்மதித்தாலும் பிரதிஷ்டையின் போது மன்னன் விட்டலராயனும் நேரில் வருவது தான் முறை என்று சொல்லியிருந்தார்.

விட்டலராயன் தொண்டனூருக்கு தற்போது வந்ததும் நாக மங்கலத்து மக்களும் பிரமுகர்களும் வந்து கேட்டுக் கொண்டார்கள்.

"அது என் பாக்கியமல்லவா?" என்றான் மன்னன்.

இராமானுஜர் மன்னனின் முன்னிலையில் நல்ல முகூர்த்த நாளன்று நாகமங்கலத்தில் சென்ன கேசவப் பெருமாள் ஆலயத்தில் அறுபதடி உயரத் தீபத்தூணை பிரதிஷ்டை செய்தார்.

"சுவாமி! இதுகாறும் கர்நாடகத்தில் சாய்ந்து கிடந்தவற்றைத் தூக்கி எழுப்பியது போல் இருக்கிறது தங்கள் பிரதிஷ்டை. தங்கள் கரங்களால் பிரதிஷ்டையாக வேண்டிய சின்னங்கள் நிறைய உருவாகப் போகின்றன" என்றான் மன்னன்.

இராமானுஜர் கொஞ்ச நாட்களுக்கு நாகமங்கலத்தில் தங்கியிருக்க விரும்பினார்.

ஆகவே மன்னன் மட்டும் தொண்டனூருக்குத் திரும்பினான்.

திரும்பியதும் சேனாதிபதியிடம் ஆலோசனையை நடத்தினான்.

"சேனாதிபதி! நான் இங்கே தற்போதைக்கு இருந்து கவனித்துக் கொள்கிறேன். நீங்கள் துவாரசமுத்திரத்திற்குச் சென்று படைதிரட்டும் பெரும்பணியை மேற்கொள்ளுங்கள். சோழ நாட்டை வெற்றி கொள்வது என் கனவு. அது சீறும் வேங்கையாக இருக்கும் போதே வெற்றிகொள்ள நினைக்கிறேன். சாளுக்கியர்களைப் போலச் சிறுத்துவிட்ட பின் பெருமையைக் காட்டவும் நிலைநாட்டவும் விரும்பவில்லை. குலோத்துங்கனின் காலத்திலேயே இது நடக்க வேண்டும் என்பது என் விருப்பம்" என்றான் விட்டலராயன்.

"மகாராஜா! சோழர்கள் மிகவும் பலமான நிலையில் தாங்கள் கூறுவது போலச் சீறும் சிங்கங்களாகத்தான் இருக்கிறார்கள் சோழர்களது படை கலிங்கத்தின் மீது படையெடுத்துச் சென்றிருக்கிறது. அங்கே வெற்றி பெற்று விட்டால் சோழர் சக்தி மகத்தான சக்தியாகி விடும். நாம் கலிங்கத்துடன் சேர்ந்து கொண்டு சோழர்களை எதிர்த்தால் என்ன?" என்று கேட்டார் சேனாதிபதி.

"கலிங்கத்தின் மீது சோழர் படைகள் போர் தொடுப்பது கலிங்கம் சோழ நாட்டை மதிக்காதது ஒரு காரணம். கப்பம் கட்டாதது ஒரு காரணம். ஆணவம் ஒரு காரணம். இந்த மூன்றுமே கலிங்கத்தின் அடையாளங்கள். அதனோடு சேர்வது என்பது முதலையின் மீது பயணம் செய்வது போன்றது. அதோடு அந்தப் போரில் கலந்து கொண்டு நாம் தோற்று விட்டால் சோழர் படை ஹொய்சளர் ராஜ்யத்தின் மீது பாயும். தற்போது படாத பாடு பட்டு உருவாக்கிய ராஜ்யத்தை நாமே அழிக்கும் முயற்சி அது. காடு மார்க்கமாய் செல்லும் வேங்கையை கைகளைத் தட்டி நாடு மார்க்கமாய் வரவழைக்கும் வேலை அது. எதுவானாலும் நமக்குப் படை பலம் முக்கியம். ஒரு லட்சம் படை இருந்தாலன்றிச் சோழர்கள் மீது படையெடுப்பதென்பது பயனற்றது. ஆபத்தானது. ஆகவே படை திரட்டும் மகத்தான பணியை நீங்கள் செய்யுங்கள். அதோடு நீலகேசி நம்மோடு வெளிப்படையாகவே பகைத்துக் கொள்ள உத்தேசித்திருப்பதாகத் தெரிகிறது. வேலாபுரத்தில் கட்டப்பட்டு வரும் பெருமாள் கோயிலைத் தகர்க்க வெளிப் படையாக சமணர்கள் அனுப்பப்படுகிறார்கள். தற்போது அவர்களது முயற்சியைத் தடுத்திருக்கிறேன். அவர்கள்

மறுபடியும் முயலலாம். அப்படி முயன்றால் அவர்களைச் சந்திக்க உங்களால் தான் முடியும்'' என்றான் மன்னன்.

சேனாதிபதி சம்மதம் தெரிவித்து தலைநகர் துவார சமுத்திரத்திற்குப் புறப்பட்டுச் சென்றார்.

தளபதி கங்கராஜனை மகாராணி சாந்தலைக்குப் பாதுகாப்பாக இருக்கும் படி பணித்த மன்னன் தளபதி பரதனை தொண்டனூரில் நிறுத்திக் கொண்டான்.

சேனாதிபதி பகாசூரனால் உருவாக்கப்பட்ட விகர்ணனை இளவரசன் நரசிம்மனின் மெய்க்காப்பாளனாக நியமித்தான்.

தனது கருடப்படை கானகலா கோட்டைப் போரில் முழுவதுமாக அழிந்து விட்டதால் விசுவாசமான வீரர்களைக் கொண்டு புதிய கருடப் படையை நிறுவி தொண்டனூர் அரண்மனையில் காவலுக்கு வைத்தான்.



தொண்டனூரில் தனது காதலி மாளவிகாவை எதிர்பாராத விதமாகச் சந்தித்த இளவரசன் நரசிம்மன் ஒரு வித முடிவிற்கு வந்து அவளை துவாரசமுத்திரத்திற்கு வரச்சொல்லி அவளை ஓரிடத்தில் ரகசியமாகத் தங்கவைத்து ரகசியமாகப் போய் பார்த்து விட்டு வந்து கொண்டிருந்தான்.

அது மாளவிகாவிற்குப் பிடிக்கவில்லை.

“உண்மையான காதலர்கள் ரகசியமாகச் சந்திப்பதை விட பிரிந்து விடுவதே சரியாக இருக்கும்'' என்றாள்.

“ரகசியம் என்ற ஒரு வார்த்தை உருவாக்கப்பட்டதற்குக் காரணமே வெளிப்படை என்ற வார்த்தையைப் பின்னுக்கு தள்ளுவதற்காகத் தான். ரகசியம் என்பது வாழ்க்கையில் எல்லாத் துறையிலும் இருக்கிறது. சில நேரங்களில் சில விஷயங்களில் அது அவசியமாகவும் இருக்கிறது. அதைப் புரிந்து கொள் மாளவிகா. ரகசியம் தேவையில்லை என்றால் தொண்டனூரிலேயே உன்னைப் பகிரங்கப் படுத்தி என் எண்ணத்தை முடித்துக் கொண்டிருப்பேன். உன்னிடம் கள்ள உறவு வைத்துக் கொண்டு வாழ்வதற்கு நான் தயாராக இல்லை. அந்தப் புரத்தில் வெளிப்படையாக வைத்துக் கொண்டு தூய்த்து மகிழவும் விரும்பவில்லை. உன்னை மணக்க வேண்டும். உனது உரிமையை உனக்களிக்க வேண்டும். அது தான் என் எண்ணம்'' என்றான் நரசிம்மன்.

“நடக்க முடியாத விஷயங்களைப் பற்றிச் சிந்திக்கிறீர்கள். இது வீண் வேலை.''

“நடக்க முடியாத விஷயம் போலத்தான் இருக்கும். ஆனால் அதை நடக்கக் கூடிய விஷயமாக மாற்றுவதற்கு முயற்சி செய்து கொண்டிருக்கிறேன். அதற்காகத்தான் ரகசியம். அதற்காகத் தான் பொறுமை.”

“இது எனக்குப் பிடிக்கவில்லை அரசே. தொண்டனூரில் தான் நீங்கள் இல்லாது போனாலும் சுகமான நினைவுகளில் சுவர்க்கத்தில் இருப்பது போல் சந்தோஷமாகவும் சுதந்திர மாகவும் இருந்தேன். இப்போது என்னைக் கூண்டில் அடைத்து விட்டு தத்துவம் பேசுகிறீர்கள். காதல் மீதே எனக்கு வெறுப்பாக இருக்கிறது.”

“உன்னைப் போன்ற மனஉறுதி என்னிடம் இல்லாத காரணத்தால்தான் நான் தவிக்கிறேன். இல்லையென்றால் உன்னை நினைத்திருக்க மாட்டேன்.”

மாளவிகா அவன் பேச்சைக் கேட்டுக் கலங்கினாள்.

“இன்னும் பத்து நாட்களுக்குள் முடிவுக்கு வாருங்கள் இளவரசே!” என்றாள்.

“தாமதத்திற்குக் காரணம் மனைவி சௌமிய குமாரிக்குக் கடந்த ஒரு மாத காலமாக உடல் நலம் சரியில்லாததுதான். வைத்தியர் அனேகமாக இன்று அவளது நிலையைப் பற்றி முடிவாகச் சொல்லி விடுவார். சொல்லி விட்டால் நாளைக்கே நமக்குள் முடிவு வந்து விடும்” என்றான் நரசிம்மன்.

வைத்தியரும் சௌமியகுமாரி பூரணகுணம் அடைந்து விட்டதாகவும், வைத்தியமோ மருந்தோ தேவையில்லை என்றும் தெரிவித்தார்.

அவர் சென்றபிறகு “நலமாக இருக்கிறாயா சௌமியா?” என்று கேட்டான் நரசிம்மன்.

“வைத்தியர் தான் சொல்லிவிட்டாரே?”

“அவர் சொல்லுவார். உன் நிலையின் உண்மை நிலை உனக்கு மட்டும் தான் தெரியும்.”

“அரசகுமாரரே! கடந்த ஒரு மாத காலமாக அரசாங்கப் பொறுப்புகளை எல்லாம் தவிர்த்து என் அருகிலேயே இருந்து கண்ணும் கருத்துமாகக் கவனித்து வந்தீர்கள். என் நலத்திற்காக வைத்தியர்களிடம் இறைஞ்சினீர்கள். அடிக்கடி என் நெஞ்சைத் தொட்டுத் தொட்டு என் நாடியைப் பார்த்துப் பார்த்து எனது உடல் நிலையைக் கண்காணித்தீர்கள். என் பெற்றோர்கள் கூட என்னை இவ்வாறு கவனித்துக் கொண்டதில்லை. கண்ணை இமை காப்பது போல் - உடலை உயிர் காப்பது போல் காத்தீர்கள்.

நான் குணமாகி விட்டது உங்களுக்குத் தெரிய வில்லையா?" என்று கேட்டாள் சௌமிய குமாரி.

"நான் மிகவும் பேதலித்து விட்டேன் சௌமிய குமாரி. எனக்கு எதுவும் புரியவில்லை. உன்னைத் தவிர எனக்கு முக்கியமானதாக வேறு எதுவும் தோன்றவில்லை. இப்படியொரு காய்ச்சல் வரும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. என்னை விட்டு நீ போய் விடுவாயோ என்று கூட கலங்கிவிட்டேன். குழப்பமாகவே இருந்தது;இருக்கிறது. ஆகவே தான் உன் உடல்நிலையைப் பற்றி உன்னிடமே கேட்டேன்."

"நான் பூரணகுணமடைந்து விட்டேன் அரசகுமாரரே. கவலை வேண்டாம். குழப்பமும் வேண்டாம்" என்று சொன்ன அவள் நான் குணமடைந்தால் தழைக்காட்டில் கீர்த்தி நாராயணருக்கு ஒரு பெருங்கோயில் கட்டுவதாகப்* பிரமாணம் செய்தீர்களே அது எப்படி? தழைக்காடு சோழர் வசமல்லவா இருக்கிறது?" என்று கேட்டாள்.

"அதனாலென்ன சௌமியா? சாளுக்கியர் வசம் இருந்த நாடுகள் ஹொய்சளர் வசம் வரவில்லையா? அது போல சோழர் வசம் இருக்கும் தலைக்காட்டை நான் வெல்வேன். வேண்டிக் கொண்டது போல கீர்த்தி நாராயணர் கோயிலை அங்கே கட்டுவேன்" என்றான் நரசிம்மன்.

"உங்களை நினைத்தால் எனக்குப் பெருமையாக இருக்கிறது பிரபு. சோழ இளவரசரை மணந்திருந்தால் கூட இந்தப் பரவசமும் கௌரவமும் எனக்குக் கிடைத்திருக்காது. நான் கொடுத்து வைத்தவள்."

"ஆனால் நான் கொடுத்து வைக்காதவன். அழகிய கூட்டைக் கட்டி விட்டு காட்டில் விட்டு விட்டு வந்தவன். மொட்டாக இருந்த மலரை மலரவைத்து சூடிக் கொள்ளாமல் வாட வைத்த அரக்கன். என்னைத் தொட்டால் தோஷம். எனக்கு இல்லை மோட்சம்."

"என்ன சொல்கிறீர்கள் நீங்கள்?"

சொன்னான் நரசிம்மன்.

சௌமியகுமாரியின் கண்கள் சிவந்தன.

கோபாக்கினி அவளைச் சூழ்ந்தது.



* தழைக்காட்டில் பேலூர் ஆலயத்தைப் போலவே ஓர் ஆலயம் கட்டப்பட்டு அதில் பிரதிஷ்டை செய்யப்பட்ட பெருமாளுக்கு கீர்த்தி நாராயணர் என்ற பட்டம் சூட்டப்பட்டது. இவ்வாலயம் பின்னாளில் காவிரி நதி திசை மாறியதால் வறண்டு போன மணற்படுகை புயலாக எழுந்து ஆலயத்தை மூழ்கடித்து விட்டது. தற்போது அந்த ஆலயத்தை (2014) அகழ்ந்து எடுத்து வருகிறார்கள்.



உண்மையான காதலுக்கு அக்காதல் தான் பெரியது. அதை விடப் பெரியது உண்டென்றால் அது உண்மையான காதலல்ல – சௌமியகுமாரி




"நான் கல்யாணபுரத்தில் இருந்த போது போரமைச்சர் அவர்களால் நிர்மூலமான அமாத்யர் குடும்பத்து செல்வி மாளவிகா என்னை மயக்கி சதி செய்வதற்காகப் போரமைச்ச ராலேயே அனுப்பப்பட்டாள். ஆனால் மாளவிகா என்னை மயக்க வில்லை. உண்மைகள் பேசிக் கொள்ளப்பட்டன. நாங்கள் இருவருமாகச் சேர்ந்து கொடுங்கோலன் போரமைச்சரை வீழ்த்தினோம். நாங்கள் இருவரும் காதலில் வீழ்ந்தோம். சக்கிரவர்த்தி விக்கிரமாதித்தர் இட்டச் சவாலில் நான் தோற்றேன். ஹொய்சள சாம்ராஜ்யம் வானவில் போல் மறைந்து விட்டதோ என்று வேதனைப்பட்ட போது சோமேஸ்வரர் நான் உன்னை மணந்து கொண்டால் ஹொய்சள சாம்ராஜ்யம் நிலைக்கும் என்றார். நான் உன்னை மணந்து ராஜ்யத்தைக் காப்பாற்றினேன். உன் கணவனாகவும் ராஜ்யத்தின் இளவரச னாகவும் பொறுப்பாக நடந்து கொண்டேன். நமக்குள் பிணக்குகள் என்னும் கணக்குகள் வரவில்லை. மாறாக வல்லாளன் என்ற மகன் பிறந்தான். நான்காண்டுகளுக்கு மேலும் ஓடி விட்டன.

"மாளவிகா என்ன ஆனாள் என்று தெரியவில்லை. அவளுக்கு அநீதி இழைத்து விட்டதாக என் மனம் என்னை வாட்டியது. தூற்றியது. அவளை மறைக்க என்னால் முடியவில்லை. ஆனால் மறக்க முடியவில்லை என்பதை எல்லோரிடமும் மறைத்தேன். சமீபத்தில் அவளை எதிர்பாராத விதமாகத் தொண்டனூ ரில் சந்தித்து இங்கு கொண்டு வந்தேன். ரகசியமாகச் சந்திக்க முடிகிறதே தவிர வேறு ஃதுவும் செய்யவில்லை. நானா கொடுத்து வைத்தவன்?" என்றான் நரசிம்மன்.

அதைக் கேட்டதும் சௌமிய குமாரியின் கண்கள் சிவந்தன.

கோபாக்கினி அவளைச் சூழ்ந்தது.

"இதை ஏன் என்னிடம் முன்னமே சொல்லவில்லை?" என்று கேட்டாள்.

“சொல்ல முடியாத விஷயமாதலால் சொல்லவில்லை சௌமியா?”

“மாளவிகாவின் வாழ்க்கைப் பிரச்சனையானது, சொல்ல முடியாத விஷயம் என்ற முடிவுக்கு எப்படி வந்தீர்கள்?”

“மாளவிகா முக்கியம் என்றால் ராஜ்யம் போய் விடும். ராஜ்யம் முக்கியம் என்றதால் மாளவிகாவை இழந்தேன். உன்னை ஏற்றுக் கொண்டேன். நானே மாளவிகாவைப் புறக்கணித்து விட்டு நானே அவளைப் பற்றி உன்னிடம் எப்படிப் பேச முடியும்? உன்னிடம் குறை என்று ஒரு துளியும் இல்லாத போது உனக்கெப்படி துரோகம் செய்ய முடியும்?”

“மாளவிகாவிற்கு மட்டும் எப்படி துரோகம் செய்யலாம்?”

“வழி தெரியவில்லை அரசகுமாரி. உங்கள் இருவரையும் மாசு மறுவற்றத் தங்கங்களாகத்தான் என்னால் கருத முடிந்தது. ஆனால் நீயும் அப்படி நினைப்பாய் என்று எதிர்பார்க்க முடியாததால் திணறிப் போனேன். அவள் என் கண்களுக்குத் தெரியாமல் போயிருந்தால் நான் வெறும் நினைவுகளோடு கடைசி வரை வாழ்ந்திருப்பேன். கண்ணில் கண்டபின் வெறும் கண்ணீரோடு காலத்தைக் கழிக்க விரும்பவில்லை. ஆகவே தான் இன்றைக்கு உன்னிடம் சொல்லி விட்டேன்.”

“இப்போது எதற்காக என்னிடம் சொன்னீர்கள்?”

“உன் மூலம் தான் இதற்குத் தீர்வு வரவேண்டும். அதனால் தான் உன்னிடம் இவ்வளவு காலமாகக்ச் சொல்ல முடியாமல் தவித்து இன்று சொல்லி விட்டேன்.”

“நீங்கள் இரண்டு தவறுகளைச் செய்து விட்டீர்கள் அரசகுமாரரே” என்றாள் சௌமியகுமாரி.

அவளது சீற்றம் வெகுவாகக் குறைந்திருந்தது.

நரசிம்மனோ வேதனைகளின் இழைகளில்தான் இருந்தான்.

எனவே “எவற்றைச் சொல்கிறாய் சௌமியா?” என்று கேட்டான்.

“மாளவிகாவைப் பற்றி முதலிலேயே என்னிடம் சொல்லி யிருக்க வேண்டும். கூறாதது உங்கள் முதல் தவறு. என்னை மணந்து இத்தனை காலமாக நீங்கள் அவளைப் பற்றி உங்களுக் குள்ளேயே புழுங்கிக் கொண்டிருந்தது இரண்டாவது தவறு. அவளைத் தேடிக் கண்டுபிடித்து என் முன் நிறுத்தியிருக்க வேண்டும்.”

“நிறுத்தியிருந்தால்?”

“அவளை நீங்கள் மணக்கும் படிச் செய்திருப்பேன்.”

“சௌமியா! அவளை மணக்க வேண்டுமென்றால் அது என்னால் முடியக் கூடிய காரியம் தான். ஆனால் அது மட்டும் அவளுக்கு நீதி செய்ததாக ஆகி விடாது?”

“வேறென்ன செய்ய வேண்டும்?”

“அவளை மணந்து அந்தரப்புர ராணியாக்குவது நீதியல்ல. அநீதி.”

“வேறு?”

“அவளை அரியணையில் அமர்த்த வேண்டும்.”

“செய்யலாமே! என்ன தடை?”

“உன்னை எப்படி இழக்க முடியும்? அதுவும் அநீதி அல்லவா? அரசியல் பிரச்சனையல்லவா? முதலில் மணந்தவள் தானே அரியணையில் அமரமுடியும்?”

“நான் விட்டுக் கொடுத்தால்?”

“ராஜ நீதி விட்டுக் கொடுக்காது. அரசியல் விட்டுக் கொடுக்க முடியாது. உன் சகோதரர் விட்டுக் கொடுக்க மாட்டார். என் தந்தை சம்மதிக்க மாட்டார். பஞ்சப்பிரதானிகள் சம்மதிக்க மாட்டார்கள். அரசியல் ரீதியான பகைமை வரும். எதற்காக உன்னை மணந்தேனோ அது அர்த்தமற்றதாகி விடும். விபரீதம் விளையும்.”

“என்னை மணப்பதற்கு முன்னே சொல்லியிருந்தால் நான் விலகியிருப்பேன். என் சகோதரரின் மனதையும் மாற்றி யிருப்பேன்.”

“அன்று நடந்தது பெரும் அரசியல் சதுரங்கம். நீயே விரும்பி யிருந்தால் கூட மாறி நகர்ந்திருக்க முடியாது.”

“காதலை எப்படித் துறந்தீர்கள்? அதன் மீது நீங்கள் வைத்த மதிப்பு அவ்வளவு தானா? உண்மையான காதலுக்கு அக்காதல் தான் பெரியது. அதை விடப் பெரியது உண்டென்றால் அது உண்மையான காதலல்ல.”

“தவறு சௌமியா. நீ சொல்வது சாதாரண காதலர்களுக்குத் தான் பொருந்தும். அரச குமாரர்களுக்கும் அரச குமாரிகளுக்கும் பொருந்தாது.”

“பொருந்தாது என்றால் அரசகுமாரர்களும் அரசகுமாரி களும் காதலிக்காமல் இருக்கிறார்களா? அவர்களும் மனிதர்கள் தான். அவர்களது காதலும் காதல் தான். நீங்கள் மாளவிகாவை

உண்மையாகவே காதலித்திருந்தால் அவள் பக்கம் தான் நின்றிருக்க வேண்டும். ராஜ்யத்தின் நிலையைப் பற்றிக் கவலைப் பட்டிருக்கக் கூடாது."

"அன்றைய அரசியல் நெருக்கடிக்கு நானே காரணம். கானகலா கோட்டைப் போரில் நான் தோற்றது தான் காரணம். நான் தான் நெருக்கடியைத் தீர்க்க வேண்டியவன். உன்னைத் திருமணம் செய்து கொண்டது சரியானது தான்."

"அப்படியென்றால் மாளவிகாவை மறந்திருக்க வேண்டும்."

"முடியாததால் தான் உன்னிடம் யாசிக்கிறேன் சௌமியா."

சௌமியகுமாரி சற்று அதிர்ந்தாள்.

"இது என்ன பேச்சு? நீங்கள் இளவரசர். என் கணவர். வல்லாளனின் தந்தை. நீங்கள் கட்டளையிட வேண்டியவரே தவிர யாசிக்க வேண்டியவரல்ல. என்ன செய்ய வேண்டும் நான்? உத்திரவிடுங்கள்" என்றாள்.

நரசிம்மனுக்குக் கசப்பாகவும் சங்கடமாகவும் இருந்தது.

"இந்தப் பாழாய்ப் போனக் காதலுக்கு முன் யோசனையும் கிடையாது. பின்விளைவுகளைப் பற்றிய கவலைகளும் கிடையாது. உலகம் முழுவதும் அக்காலத்திலிருந்து இன்று வரை இப்படித் தான் காதல்கள் வருகின்றன" என்றான்.

"அது தான் காதல் அரசகுமாரரே. முன் யோசனை பின் விளைவுகள் ஆகியவற்றோடு நடப்பது திருமணம்" என்று சொன்ன சௌமியகுமாரி "தங்களது சங்கடத்தையும் வேதனையையும் தீர்க்க வேண்டியது தான் மனைவியாகிய என் கடமை. தாங்கள் எதன் பொருட்டும் வேதனைகளைச் சுமக்கக் கூடாது. ராணிகள் அரியணையில் அமர்வதும் வெறும் அலங்காரத்திற்காகத்தான். ராஜாவை மீறி ராணி ராஜ்யத்தை ஆள முடியாது. ஆணை பிறப்பிக்க முடியாது. ஆகவே அந்தப் பதவி எனக்கு முக்கியமானதல்ல. அரியண்ணயை உங்கள் மாளவிகாவிற்காக இப்பொழுதே சம்மதிக்கிறேன். யார் எதிர்த்தாலும் எதிர்க்கட்டும். நான் பதில் சொல்கிறேன். என் விருப்பத்திற்கு என்னை அரியணையில் அமர்த்தும் உரிமை யாருக்கும் கிடையாது. தேவைப்பட்டால் ராஜநீதியை மாற்றி எழுதச் சொல்லுங்கள்" என்றாள்.

நரசிம்மனின் சங்கடம் அதிகமாயிற்றே தவிரக் குறையவில்லை.

"என்ன யோசிக்கிறீர்கள் அரசகுமாரரே.? உடனே மாள விகாவை அழைத்து வாருங்கள். நானே உங்கள் திருமணத்தை,

நடத்தி வைக்கிறேன். நானே அவளை அரியணையில் அமரவைக்கிறேன்" என்றாள் சௌமியகுமாரி.

நரசிம்மன் மாளவிகாவின் இருப்பிடத்திற்குப் புறப்பட்டான்.

சௌமிய குமாரியின் பேச்சுக்கள் அவனைப் பரவசப் படுத்தின. மாளவிகாவைப் பற்றிப் பேசினால் அவளிடமிருந்து புயல் புறப்படும் என்று தான் எதிர்பார்த்தான். ஆனால் புயலுக்குப் பதிலாகத் தென்றல் வந்து தாலாட்டியது போல் இயல்பாகவும் இனிமையாகவும் அவள் பேசிய போது "இவள் தான் எத்தனைச் சிறந்தவள்? இவளைப் போய் தவறாக எண்ணி விட்டோமே?" என்றெண்ணி நெகிழ்ந்தான்.

அவள் தன் அரியணையை விட்டுக் கொடுக்கலாம். பிடிவாதமாக இருந்து அதில் மாளவிகாவை அமர வைக்கலாம். ஆனால் அப்படி ஒரு காரியம் நடந்து விட்டால் அது தவறான முன்னுதாரணமாக அல்லவா ஆகிவிடும்?

என் சுயநலத்திற்காகவும் காதலுக்காகவும் ராஜநீதி மாற்றப் படுவது நியாயமா?

அவன் உண்மையிலேயே கவலைப்பட்டுக் கொண்டிருந்தது அரியணை விஷயம் தான்.

அது குறித்து சௌமியகுமாரியிடம் பேசுவதற்காகத் தான் அவள் குணமடையும் வரை காத்திருந்தான்.

அரியணை விஷயமாக அவளிடம் பேசியபோது அவன் எதிர்பார்த்தது ஒன்று. நடந்தது வேறு.

அரியணையை விட்டுக் கொடுக்க அவள் தயார் என்று சொல்லி விட்ட பிறகு அவனுக்கு என்ன செய்வது என்று விளங்கவில்லை.

இத்தனைக்கும் மாளவிகா அவனைத் திருமணம் செய்து கொள்ளும் படி கட்டாயப் படுத்தவில்லை. அரியணையில் அமருவது பற்றி கருத்தும் தெரிவிக்க வில்லை.

நரசிம்மன் அவனாகவே எண்ணங்களை வளர்த்துக் கொண்டு பிரச்சனையாக்கி அதை எப்படித் தீர்ப்பது என்று தவித்தான்.

சிறிய விஷயத்தை பெரிதாக்கி விட்ட மாதிரி இருந்தது.

முடிவு எடுக்க வேண்டிய பொறுப்பு தன்னிடமே சுமத்தப் பட்டு விட்டதையும் உணர்ந்தான்.

சஞ்சலத்தோடு மாளவிகாவின் இருப்பிடத்தை அடைந்த போது அங்கே அவள் இல்லை.

அவள் எழுதி வைத்து விட்டுப் போன ஓலை தான் இருந்தது.



"இளவரசர் அவர்களுக்கு -

அடியாள் மாளவிகா வணக்கத்துடன் எழுதும் ஓலை.

தாங்கள் தொண்டனூரில் என்னைச் சந்தித்ததிலிருந்து ஏதோ ஒன்றை இழந்து விட்டதை நான் உணர்ந்தேன்.

ராணியாரைச் சந்தித்து பேச விருப்பதாக என்னிடம் கூறிய போது அது எதற்காக என்பது புரிந்து விட்டது.

அது எதுவாக இருந்தாலும் எனக்கு வேண்டியதில்லை.

நான் இதை ஆணவத்தில் சொல்லவில்லை. வெறுப்பில் சொல்லவில்லை.

நன்றாக யோசித்து விட்டு அடக்கத்துடன் சொல்கிறேன். விருப்பத்தோடு சொல்கிறேன்.

நான் எந்த அடையாளத்துடன் அரண்மனையில் நுழைந்தாலும் அது உங்களுக்கு கௌரவத்தைத் தராது.

அதோடு அமைதியாக ஓடிக் கொண்டிருக்கும் உங்கள் வாழ்க்கைப் படகு ஆட்டம் கண்டுவிடும்.

உங்கள் தர்மபத்தினி சங்கடத்துடன் காலத்தைக் கழிக்கும் படி இருக்கும்.

என்னை விரும்பாதவர்களின் எண்ணிக்கை அதிகமாகும்.

ஒரு கட்டத்தில் அந்தப் பட்டியலுக்கு நீங்களே கூட வரலாம்.

அது வந்தால் நரகமே மேல் என்றாகி விடும்.

ஆண்கள் எத்தனை பெண்களை வேண்டுமானாலும் விரும்பலாம். மணக்கலாம். அரசகுமாரர்களுக்கு அது சகஜம்.

பெண்களுக்கு தான் விரும்பிய ஆடவனைத் தவிர மற்றவர்களை ஏற்கப் பிடிக்காது.

உங்களுக்கும் ராணியாருக்கும் எப்படிப் பார்த்தாலும் இடையில் நான் சங்கடமான பொருளாகவும் சஞ்சலமானப் பொருளாகவும் தான் இருப்பேன்.

ஆகவே நான் அரண்மனைக்குள் வந்து அந்தஸ்து பெறுவதை விட அரண்மனைக்கு வராமல் இருந்து இருக்கும் அந்தஸ்தை நிலைத்திருக்கச் செய்வதே விவேகமானது.

அந்தஸ்து என்று நான் குறிப்பிட்டது காதலி என்ற நிலையைத்தான்.

உங்களைக் காதலித்தவள் என்ற பெருமையே எனக்குப் போதும்.

உங்கள் மீது குறையில்லை. களங்கமில்லை.

அரசகுமாரராக நீங்கள் கண்ணியமாகச் செயல் பட்டிருக்கிறீர்கள். கடமையுணர்ச்சியோடும் நடந்து கொண் டிருக்கிறீர்கள்.

பெரிய ராஜ்யத்தைக் காப்பாற்றியிருக்கிறீர்கள்.

கடமையிலிருந்து விலகி காதலுக்கு முக்கியத்துவம் தருவது பெருமை தரக்கூடியது அல்ல.

நாம் காதல் நினைவுகளோடு வாழ்வது தான் உகந்தது. சிறப்பானது.

காலம் நம்மை மாற்றும் வரை நினைவுகளைச் சுமப்போம். பிறகு காலமே நம்மைச் சுமக்கும்.

வணக்கத்துடன் பிரிகிறேன்.'

- மாளவிகா.

மாளவிகாவின் ஓலை நரசிம்மனின் அனைத்து குழப்பங் களையும், சஞ்சலங்களையும், சலனங்களையும் அகற்றியது.

அவளைத் தேட நினைக்கவில்லை.

அவளைப் பற்றி நினைக்கவும் முயலவில்லை.

அரண்மனைக்குச் சென்றான்.

அங்கே சேனாதிபதி பகாசூரருடன் தனது நண்பன் உதயணன் பேசிக் கொண்டிருந்ததைக் கண்டதும் மகிழ்ந்தான்.

புதிய அத்தியாயம் துவங்குவதாகவும் உணர்ந்தான்.



"இது என்ன மாயம்? நீ போய் சேர்ந்து விட்டாய் என்றல்லவா நினைத்து விட்டேன்! இப்படி வந்து கல்போல் அமர்ந்திருக் கிறாயே?" என்று கேட்டான் நரசிம்மன்.

"நண்பா! நான் செத்துப் பிழைத்தவன். எமனைப் பார்த்துச் சிரிப்பவன். என் முடிவுப்படிதான் எனது மரணம் வரை. நான் சீக்கிரமாகச் சாகத் தயாராக இல்லை. நான் இந்த நாட்டிற்காகச் செய்ய வேண்டிய முக்கியமான பணி ஒன்றிருக்கிறது. அதை முடிக்காமல் எமப்ப ட்டினத்திற்குப் போக மாட்டேன்" என்றான் உதயணன்.

"எப்படி உயிர்பிழைத்தாய் என்பதைச் சொல்."

உன்மீது எறியப்பட்ட வாளை என் குறுவாளால் தடுத்து உன்னை விலகச் செய்தேன். அப்போது நானும் முகமூடியைத் தான் அணிந்திருந்தேன். உன்னைக் காப்பாற்றி விட்டதைக் கண்டு கோபமடைந்த கானகலா கோட்டைத் தலைவன் ஜெகதேவன் என் மீது அடுத்தடுத்து இரண்டு குறுவாட்களை வீசிவிட்டான். வேகமாக வீசியதால் அவை என் தோள் பகுதியில் கிழித்து விட்டன. நான் கீழே விழுந்தேன். உருண்ட படி ஓரமாகச் சென்று செத்தவனைப் போல நடித்தேன். கொஞ்ச நேரத்தில் போர் முடிந்து சாளுக்கியர்களை வாழ்த்தும் கோஷம் கேட்டது. சிறிது நேரத்தில் சாளுக்கிய வீரர்கள் செத்துப் போனவர்களையும் செத்துக் கொண்டிருந்தவர்களையும் தூக்கி கோட்டையின் பின்புறம் இருந்த பிரம்மாண்டமான மரணக் கிணற்றில் தூக்கிப் போட்டார்கள். அங்கே இருந்து பிரம்ம பிரயத்தனம் செய்து கிணற்றை விட்டு வெளியேறி மயக்க மடைந்தேன். யாரோ ஒரு பெண், பெயர் ராணி வாணியாம். எதற்காகவோ அங்கு வந்தாள். எதற்காகவோ என்னைத் தூக்கிச் சென்று சிகிச்சைகளைச் செய்து காப்பாற்றினாள்."

"ராணி வாணி! அவள் சாளுக்கிய உளவாளியாயிற்றே! என்னை ஏமாற்ற வந்த அவளை நீதானே மடக்கிக் கொண்டு வந்தாய்?"

"ஆமாம். இப்போது எனக்கு நினைவுக்கு வருகிறது. அவள் தான்."

"அவள் ஏன் உன்னைக் காப்பாற்ற வேண்டும்?"

"உலகத்தில் சில அதிசயங்கள் எப்போதாவது நடக்கும். அவற்றை ஆராய வேண்டியதில்லை."

"ஒரு வேளை உனக்கும் அவளுக்கும் காதலா?"

"நரசிம்மா. என்னைப் பொறுத்த வரை காதல் என்பது வீணான வேலை. எனக்கும் அதற்கும் தூரம் அதிகம்."

"இப்போது அவள் எங்கே?"

"யாருக்குத் தெரியும்? குணமடைந்ததும் ஓடிவந்து விட்டேன்."

"அவளுக்கு நன்றியாவது தெரிவித்தாயா?"

"இல்லை."

"இல்லையா! அது தான் பண்பா?"

"நாம் நடக்கும் போது பல ஜீவராசிகள் மடிகின்றன. தாவரங்கள் சிதைகின்றன. அதற்கெல்லாம் இரங்கல் தெரிவித்து ஈமச் சடங்குகளையா செய்கிறோம்? சகஜமாக பயணத்தைத் தொடர்கிறோம் அல்லவா? அப்படித்தான் இதுவும். சிறுசிறு விஷயங்களைப் போய் பண்பு, புண்ணியம் என்றெல்லாம் பெரிய பெயர்களைக் கொடுத்து அவற்றை நாமே பெரிதாக்க வேண்டியதில்லை."

"அந்தப் பெண் உன்னைக் காதலிக்கும் எண்ணத்தில் இருந்தால்?"

"என்னைத் தேடி வரட்டும்"

"உதயணா! நீ எப்படி இரும்பு நெஞ்சனானாய்?"

"இரும்பு நெஞ்சமல்ல. வைர நெஞ்சம். அது எனக்குப் பிறவியிலேயே உண்டு. கண்டதற்கெல்லாம் இளகுவதும் உருகுவதும், நெகிழ்வதும் என் வழக்கமல்ல. ஆடவனுக்கு வைரநெஞ்சம் தான் கௌரவம். அடையாளம்."

"போகட்டும். சேனாதிபதியிடம் என்ன பேசிக் கொண்டிருந்தாய்?"

"எனக்காகக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தவர் அவர் தான். நான் இறந்து விட்டதாகவே நினைத்து விட்டார். என்னைப் பார்த்ததும் அவருக்கு மகிழ்ச்சி. உன்னைத்தான் முதலில் தேடினேன். நீ இல்லை. அவரைப் பார்த்தேன்."

"ஏதாவது விசேஷமா?"

“விசேஷம் தான். நானும் அவருமாக ஒரு திட்டம் பற்றி முடிவு கட்டி வைத்திருந்தோம். அதற்கிடையே கான கலா கோட்டைப் போர் வந்துவிட்டது. அது முடிந்தபின் வைத்துக் கொள்ளலாம் என்றார். போர் முடிந்ததும் தான் திரும்பாதலால் மிகவும் சோர்ந்திருந்தார். நான் திரும்பிய பிறகுதான் அவருக்கு மூச்சே வந்தது.”

“என்ன திட்டம்? நான் அறியலாமா?”

“நீ என் நண்பன். நீ அறியாத ரகசியம் எனக்குக் கிடையாது. ஆனால் இது மகாராஜாவுக்குத் தெரியக் கூடாது. தெரிந்தால் ஒப்புக் கொள்ள மாட்டார். அவர் அறியாமல் தான் இந்தத் திட்டத்தைச் செயல்படுத்த வேண்டும் என்று சொல்லி விட்டார் சேனாதிபதி.”

“என்ன திட்டம் அது?”

சொன்னான் உதயணன்.

அதிர்ந்தான் நரசிம்மன்.





தொல்லை என்றும் துன்பம் என்றும் உறுதியாகத் தெரிந்த பின்பு அதை வலுவில் போய் வரவேற்பதும் தூக்கிச் சுமப்பதும் இருக்கின்ற நிம்மதியை தொலைப்பதற்கான முயற்சியாகவே அமையும் – நரசிம்மன்




உதயணன் கூறிய திட்டத்தைக் கேட்டதும் அதிர்ந்து போன நரசிம்மன் "இது நான் கேள்விப்படாத விஷயமாக இருக்கிறது. நம்ப முடியவில்லை" என்றான்.

"உனக்கு வேண்டுமானால் வியப்பாக இருக்கலாம். ஆனால் குவலாலபுரத்தில்* தங்கம் இருப்பதை ஆயிரம் வருடத்திற்கு முன்பே பலர் அறிந்து வைத்திருந்தார்கள். ரோமநாட்டு மாமன்னனான ஜூலியஸ் சீசர் எகிப்து நாட்டு வெற்றிக்குப் பிறகு குவலாலபுரத்திற்கு வந்து அங்கிருந்த தங்கத்தைக் கைப்பற்ற நினைத்தான். எதிர்பாராத விதமாக அவன் கொலை செய்யப் பட்டதால் அவனது நோக்கம் நிறை வேற வில்லை"** என்றான் உதயணன்.

"ரோமாபுரி மன்னனால் கைப்பற்ற முடியாமல் போயிருக்கலாம். நமது இந்திய நாட்டு மன்னர்களால் கூடவா முடியாமல் போய்விட்டது?"

"தங்கம் இருக்கும் இடம் தெரிந்தால் தானே அதை எடுக்க முடியும்?"

"என்ன சொல்கிறாய் உதயணா நீ? இருக்கும் இடம் தெரியாமலா ஜூலியஸ் சீசர் இங்கே வரவிரும்பினார்?"

"நரசிம்மா! வேலால புரத்தில் தங்கம் இருப்பது நிச்சயம். அது பரிசோதித்துப் பார்க்கப்பட்டு விட்டது. ஆனால் அந்தத் தங்கம் பூமிக்குக் கீழே எங்கே இருக்கிறது என்பதை அறிய முடியவில்லை. பல இடங்களில் தோண்டிப் பார்த்திருக் கிறார்கள். கண்டு பிடிக்க முடியவில்லை."

"உன்னால் மட்டும் எப்படிக் கண்டு பிடிக்க முடியும்?"

"அதற்கொரு விசித்திரமான வழியைக் கண்டு பிடித்திருக்கிறேன். அது வெற்றி பெற்றால் என் முயற்சி வெற்றி பெறும். அதற்குப் பல சவால்கள் இருக்கின்றன. குவலால

---

* இன்றைய கோலார் (கர்நாடக மாவட்டம்).

** பக்கம் 103 கோலார் தங்க வயல் வரலாறு By. K. S. சீதாராமன்.

புரத்தில் இருக்கும் தங்கத்தைக் கவருவதற்கு பலரும் முயற்சி செய்கிறார்கள். நந்தி துர்க்கத்தில் மூர்க்கமான ஒரு கொள்ளைக் கூட்டமே இதற்காகக் காத்திருக்கிறது. அவர்களது கண்களுக்கு மண்ணைத் தூவி விட்டுத் தங்கத்தை எடுப்பதென்பது பிரம்மப் பிரயத்தனமாகத்தான் இருக்கும்."

"அப்படியிருக்கும் போது இதில் ஏன் ஈடுபட வேண்டும்?"

"நமக்கு நிதி வேண்டும் நண்பா. நிறைய நிதி வேண்டும். மகாராஜா பலமுனைகளில் செயல்படுகிறார். வேலாபுரத்தில் பிரம்மாண்டமான பெருமாள் கோயில் கட்டுகிறார். அதைப் போலவே பெருங்கோயில் குடகு நாட்டிலும் விஜயநாராயண புரத்திலும் கட்டவிருக்கிறார். தொண்டனூரில் ஏரியும் இராமானுஜர் மடமும் கட்டப்படுகின்றன. எல்லாவற்றையும் விட ஒரு லட்சம் படை வீரர்களையும் இருபதாயிரம் புரவிகளையும் தனது எதிர்காலத் திட்டத்திற்காகத் திரட்ட விருக்கிறார். தற்போது அவரது ஆதிக்கத்தில் உள்ள நாடுகள் கப்பம் கட்டி வருவதால் நிலைமை சமாளிக்கப்படுகிறது. ஆனால் அதன் மூ லமாக வரும் நிதி மட்டும் போதாது. நிறைய நிதி தேவை. அது குவலாலபுரத்துத் தங்கம் மூலமாகத்தான் கிடைக்கும். ஆகவே அந்த விஷயத்தில் நானும் சேனாதிபதியும் ஒரு கை பார்த்து விடுவது என்று இருக்கிறோம்."

"உனது முயற்சியில் நானும் கலந்து கொள்ளலாமா உதயணா?"

"அது இளவரசர் கலந்து கொள்ளக் கூடிய காரியமல்ல. அவருக்கு கௌரவமானதும் அல்ல."

"அரசாங்கத்திற்கு நிதி திரட்டும் பணி எனக்குரியது தானே? நிதி விஷயமாக உரியவற்றைச் செய்வதற்கு மகாராஜா என்னை நியமித்திருப்பது உனக்குத் தெரியாதா?"

"மகாராஜா உன்னை நியமித்திருப்பது பஞ்சப் பிரதானி களுடன் ஆலோசனை செய்து வரிகள் விதிப்பது போன்றச் செயல்பாடுகளில் இறங்கி நிதி திரட்டுவதற்காகத்தான். திருட்டுத்தனமாக இறங்கி நிதி திரட்டுவதற்காக அல்ல."

"தங்கத்தை எடுக்க நாம் முற்படுவது அன்னிய நாட்டில் அல்ல. நமது ஆதிக்கத்தில் இருக்கும் நாட்டில்தான். அது எப்படி திருட்டுத்தனமாகும்?"

"நண்பா! சொல்வதைக் கேள். இந்த முயற்சியில் இருக்கும் உள் வயணங்கள் உனக்குத் தெரியாது. இந்த முயற்சியில் நீ இளவரசனாக நடந்து கொள்ள முடியாது. திருடனாகவும் கொள்ளைக்காரனாகவும் நடந்து கொள்ள வேண்டி வரும்."

"திருநங்கை மன்னன் தனது நல்ல நோக்கத்திற்காக ஆறலைக் கள்வராக நடந்து கொள்ள வில்லையா?"

"இங்கே உன் பணி தேவையில்லை. செய்து முடிப்பதற்கு நாங்கள் இருக்கிறோம். சொல்வதைக் கேள்"

"முடியாது"

"நண்பா! இது விஷயமாக நீ சேனாதிபதியிடம் அனுமதி வாங்கி விடு. என் கையில் எதுவுமில்லை."

"அதற்கென்ன? அவரிடம் அனுமதி வாங்கி வருகிறேன்" என்றான் இளவரசன்.

உடனடியாக அவரைச் சந்திக்காமல் இரண்டு நாட்களுக்கு மௌனமாய் இருந்தான்.

இதற்கிடையில் அவனது மனைவி சௌமிய குமாரி "மாளவிகாவை அழைத்து வரவில்லையா?" என்று கேட்டாள்.

"தொல்லைகளை அழைத்து வர விரும்பவில்லை" என்றான் நரசிம்மன்.

"இதென்ன இப்படிப் பேசுகிறீர்கள்? உங்களிடமிருந்து இப்படிப்பட்ட பேச்சை எதிர்பார்க்கவில்லையே? என்றாள் சௌமியகுமாரி.

"தொல்லை என்றும் துன்பம் என்றும் உறுதியாகத் தெரிந்த பின்பு அதை வலுவில் போய் வரவேற்பதும் தூக்கிச் சுமப்பதும் இருக்கின்ற நிம்மதியை தொலைப்பதற்கு முயல்வதாகவே இருக்கும். அவளிடம் பேசி விட்டேன். அவளும் பேசி விட்டாள். நமக்கிடையே வரவிரும்பவில்லையாம். நானென்ன செய்ய முடியும்?"

"அவள் எதைச் சொன்னாலும் பரவாயில்லை. நீங்கள் போய் அழைத்து வாருங்கள்."

"அவள் ஓலையை எழுதி வைத்து விட்டு என்னைச் சந்திக்காமலேயே போய் விட்டாள் சௌமியா. இதோ பார் அவளது ஓலையை" என்று சொல்லி ஓலையைக் கொடுத்தான் நரசிம்மன்.

சௌமியகுமாரி படித்தாள்.

"மாளவிகா நல்லவள். கண்ணியமானவள்" என்றாள்.

"நான் மறந்து விட்டேன் சௌமியா. இனி எப்போதும் அவளை ஞாபகப்படுத்தாதே" என்றான் நரசிம்மன்.

இரண்டு நாட்கள் கழித்து சேனாதிபதியைச் சந்தித்த நரசிம்மன் உதயணன் கூறிய விஷயத்தைக் கூறி "எனக்கு அனுமதி கொடுங்கள்" என்றான்.

“மகாராஜா இல்லாத வேளையில் உங்கள் இருப்பு இங்கே அவசியம். உங்கள் ஆணை இல்லாமல் என்னால் எதுவும் செய்ய முடியாது” என்றார் சேனாதிபதி.

“மகாராஜா எங்கே இருந்தாலும் அவரது கண்களும் கவனமும் இங்கே தான் இருக்கும். எதைச் செய்ய வேண்டுமோ அதை அங்கிருந்தே அவரால் செய்ய முடியும். என் இருப்பு அவசியமில்லை” என்றான் நரசிம்மன்.

“எதற்காக நீங்கள் இந்த காரியத்திற்காகத் துடிக்கிறீர்கள்? இதெல்லாம் உதயணனின் விஷயங்கள். அவனிடம் விட்டு விடுவதே சிலாக்கியமானது.”

“சேனாதிபதியாரே! கானகலா கோட்டைப் போரின் தோல்வி என்னை மிகவும் பாதித்து விட்டது. இந்த முயற்சி யிலாவது வெற்றி பெற்றால் மனம் ஆறுதல் அடையும்.”

“இளவரசே! கானகலா போரில் அடைந்த தோல்வி ஒரு பொருட்டே அல்ல. அதை நீங்கள் நினைவிலேயே வைத்துக் கொள்ள வேண்டாம். நானும் மகாராஜா அவர்களும் பல போர்களில் தோற்றிருக்கிறோம். அவற்றை நினைவில் வைத்துக் கொண்டிருந்தால் ஹொய்சள சாம்ராஜ்யத்தை உருவாக்கி யிருக்கவே முடியாது.”

“அது உண்மையாகவே இருக்கட்டும். குவலாலபுர காரியத்திற்கு என்னை ஏன் தடுக்கிறீர்கள்?”

“நீங்கள் ஒரே ஒரு போரில் கலந்து கொண்டு தோல்வி அடைந்தீர்கள். அதற்கு நீங்கள் மட்டுமே பொறுப்பில்லை. அந்தத் தோல்வி உங்களுக்கு உறுத்தலாக இருக்குமானால் அதைப் போக்கிக் கொள்ள பல்வேறு போர்கள் காத்திருக்கின்றன. அதில் கலந்து கொண்டு வெற்றி பெறுவது தான் இளவரசருக்கு உகந்தது.”

“நீங்கள் கூறும் போர் நடைபெறுவதற்கும் பல மாமாங்கங்கள் ஆகும். இப்போது தான் படை திரட்டவே தொடங்குகிறீர்கள். அவை முழுமை பெற்று போர் நடப்பதற்கு நீண்ட காலமாகும். அப்போரில் நான் கலந்து கொள்வேன் என்று சொல்ல முடியாது. அதுவரை என்னால் காத்திருக்க முடியாது. தங்கம் தேடும் முயற்சியிலாவது வெற்றி பெற்று படை திரட்டுவதற்குப் பொருள் திரட்ட எனக்கு வாய்ப்பு கொடுங்கள். எனக்கு இழந்த கௌரவத்தைத் திரும்பப் பெறுவதற்கு வழி விடுங்கள். இதற்கு மேலும் மறுத்தால் இளவரசன் என்ற பதவியை விட்டு உதயணனைப் போல சுதந்திரவாதியாக இருந்து இந்த முயற்சியில் வெற்றியை மீட்டுத் தருகிறேன்.”

நரசிம்மனின் உணர்ச்சிப் பூர்வமான இந்தப் பேச்சைக் கேட்டு மெல்லச் சிரித்த சேனாதிபதி “இதற்கு மேல் உங்களைத் தடுக்க என்னால் முடியாது. அதே சமயம் இது உங்கள் தந்தையாருக்குத் தெரியாமல் நடக்க வேண்டும். இந்தத் தங்கத் திட்டத்திற்கு எவ்வளவு காலமாகும் என்று தெரியாது. சில மாதங்கள் ஆகலாம். நீங்கள் இங்கே இல்லாவிட்டால் பலரும் எங்கே எங்கே என்று கேட்பார்கள். ஆகவே ஒரு யோசனை சொல்கிறேன். துவார சமுத்திரத்தில் ஒரு சாக்கடை ஆறு ஓடுகிறது. அதைச் சுத்தப்படுத்த இளவரசரும் பஞ்சப் பிரதானிகளும் கலந்தாலோசனை நடத்தினார்கள். சாக்கடை ஆற்றை எப்படிச் சுத்தம் செய்வது என்பதைக் கண்டறிய இளவரசர் மகத நாட்டிற்கும் மரகத நாட்டிற்கும் சுற்றுப் பயணம் மேற்கொள்ளுவதாக முடிவு எடுக்கப்பட்டு நீங்கள் புறப்பட்டுப் போய் விட்டதாகச் சொல்லி விடலாம்” என்றார்.

“இது என்ன பைத்தியக்காரத்தனமான யோசனையாக இருக்கிறது? இங்கிருக்கும் சாக்கடை ஆற்றைச் சுத்தப்படுத்த நான் ஏன் மகத நாட்டிற்கும் மரகத நாட்டிற்கும் செல்ல வேண்டும்? இங்கேயே இது குறித்து யோசனை சொல்ல ஒருவரும் இல்லையா?” என்று கேட்டான் நரசிம்மன்.

“இளவரசே! அரசியலில் அறிவாளித்தனம் மட்டும் போதாது. பைத்தியக்காரத் தனமும் தேவைதான். நீங்கள் அயல் நாடுகளுக்கு எதற்காகவும் செல்லவேண்டிய அவசியமில்லை. ஆனால் நம் நாட்டுப் பிரச்சனைக்காக அயல் நாடு சென்று வருவது போல் காட்டினால் மக்களுக்கு நம்மீது மதிப்பு ஏற்படும். இளவரசர் அயல் நாடுகளுக்குச் சென்று திட்டங்களைத் தீட்டுகிறார் என்று நினைப்பார்கள். அதோடு இது நாடகம் தானே? நீங்கள் ஒன்றும் மகத நாட்டிற்கும் மரகத நாட்டிற்கும் போகப் போவதில்லையே! குவலாலபுரத்திற்குத் தானே செல்லப் போகிறீர்கள்?”

“இது இன்னமும் மோசம். மக்களை ஏமாற்றுவது மகா அதர்மம்.”

“இதில் ஏமாற்று வேலை எதுவும் இல்லை. மக்களை நீங்கள் வஞ்சிக்கப் போவதில்லை. உங்கள் ஆர்வ காரியம் நிறைவேறு வதற்காக ஒரு பொய் சொல்லி விட்டுப் போகப் போகிறீர்கள். உங்களுக்காக நீங்கள் ஒரு பொய் சொல்வதற்குக் கூடத் தயங்கினால் நான் தான் என்ன செய்வது?”

நரசிம்மன் சிரித்தான்.

“நான் உரிய ஏற்பாடுகளைச் செய்து விட்டு உங்களிடம் சொன்ன பிறகு புறப்படுங்கள். அதுவரை மக்களைச் சந்தித்து

சாக்கடை ஆற்றைப் பற்றி ஏதாவது பேசுங்கள். நான் பஞ்சப் பிரதானிகளிடம் பேசுகிறேன்" என்றார் சேனாதிபதி.

வர்த்தமானீஸ்வர விஹாரத்தில் துறவிகளிடம் ஆக்ரோஷமாகப் பேசிவிட்டு மறுநாள் ச்ரவண பெலகுலாவிற்குச் சென்றார் நீலகேசி.

ஆச்சார்யர் ஜெயதேவர் இந்திரகிரியின் மேலே பாகுபலி சிலையைத் தரிசிக்கச் சென்றிருப்பதாகத் துறவிகள் சொன்னார்கள்.

நீலகேசி சந்திரகிரியில் இருந்த அம்பிகா யட்சிணியின் ஆலயத்தை அடைந்தார்.

அங்கே இருந்தவர்கள் அவர்களைக் கண்டதும் வெளியேறினார்கள்.

ஆலயக் கதவுகள் சாத்தப்பட்டன.

நீலகேசி யட்சிணி விக்கிரகம் இருந்த அறைக்குச் சென்று அமர்ந்தார்.

நீண்ட நேரமாக இருட்டில் ஒளிர்ந்த மின்னல் போல் காட்சி யளித்த யட்சிணியையே உற்று நோக்கிக் கொண்டிருந்தார்.

தீர்க்க முடியாத சிக்கல் அவருக்குள் இறங்கி ஆட்டுவது போல் இருந்தது அவருக்கு.

ஒரு கதவை உடைக்க முற்படும் போது கட்டிடம் முழுவதும் விரிசல் விட்டு அதிர்ந்த மாதிரியான உணர்வு அவருக்கு ஏற்பட்டிருந்தது.

சமணமானது வானுயர வளரும் என்று முழுமையாக நம்பியிருந்த அவருக்கு அந்த வளர்ச்சியானது சந்திரகிரி குன்றின் அளவிலேயே இருந்தது புரிந்தது.

மேலும் இப்படியே சென்றால் அந்த வளர்ச்சியும் மறைந்து போய் சமணம் பாதாளத்திற்குப் போய் விடும் என்று நினைத்தார்.

- குன்றின் மீது கம்பீரமாக நின்று "நான் மிகவும் உயர்ந்து உயரத்தின் உயரமாக நிற்கிறேன்" என்று கூறுவது போல் காட்சியளித்த பாகுபலி "நான் பாதாளத்திற்குப் போய்க் கொண்டிருக்கிறேன்" என்று புலம்புவது போல் இருந்தது.

யட்சிணியைப் பார்த்து "பேசு! தாயே! பேசு" என்றார்.

"இங்கு வேறு யாராவது உள்ளார்களா?" என்ற குரல் கேட்டது.

"யட்சிணி! பேசுவது நீதானா?"

"நான் கேட்டதற்குப் பதில் சொல். இங்கு வேறு யாராவ்து உள்ளார்களா?"

"நான் மட்டும் தான் இருக்கிறேன்."

“நான் இல்லையா? முட்டாள்”

“ஆகா! உண்மை. உண்மை. நீ இருக்கிறாய். எப்போதும் இருக்கிறாய். இப்போது நீயும் நானும் தான் இருக்கிறோம்.”

“உன் பிரச்சனை என்ன?”

“என் பிரச்சனை இல்லை. சமணர் பிரச்சனை.”

“அவர்களுக்கென்ன?”

“அன்றைக்கே சொன்னேன். கேட்டேன். நீ மேல் கோட்டை என்றாய்.”

“மேல்கோட்டைக்குத் தான் மாந்தரீகனை அனுப்பி யிருக்கிறாயே! பிறகென்ன?”

“எனக்கு நம்பிக்கையில்லை.”

“என் மீதா?”

“ஆகா! இது என்ன கேள்வி? உன்னை நம்பாமலா நான் வாழ்கிறேன்? நான் சொன்னது மாந்தரீகனை”

“அனுப்பியவன் நீ. நீயே நம்ப மறுக்கிறாயா?”

“எனக்கென்னவோ உள்ளங்கையை கவனிக்க ஊர்க்காரனை வரவழைப்பது போல் இருக்கிறது. மாந்தரீகன் விஷயம் தான் இப்படியென்றால் ஆச்சார்யர் விஷயம் விபரீதமாக இருக்கிறது. அவர் ராணியிடம் அவசரப்பட்டு விட்டார்.”

“யார் அவசரப்பட்டாலும் சரி அவசரப்படாவிட்டாலும் சரி. மேல்கோட்டையில் பலருக்கு விடிவு வரும். முடிவு வரும்.”

“மேல் கோட்டை எங்கிருக்கிறது தேவி?”

“மேலே இருக்கிறது.”

“எதன் மேலே இருக்கிறது?”

“அர்த்தமற்ற கேள்விகளுக்கு யட்சிணி பதில் சொல்ல மாட்டாள்.”

நீலகேசி மேற்கொண்டு கேட்க முடியாமல் வெளியே வந்து பரிவேணைக்குச் சென்றார்.

இரவில் ஓய்வெடுத்துக் கொண்டு உறங்கினார்.

பொழுது புலர்ந்த போது “ஆச்சார்யர் வந்து விட்டாரா?” என்று கேட்டார்.

“இந்திரகிரியிலேயே தங்கி விட்டார். தாங்கள் அங்கே போக வேண்டுமா? ஆள் தூக்கிப் பல்லக்கைத் தயார் செய்யட்டுமா?” என்று கேட்டார்கள் துறவிகள்.

“வேண்டாம். நடந்தே போகிறேன்” என்று கூறிவிட்டு பிரம்மாண்டமான மொட்டைப் பாறைக்கு வந்தார். செங்குத்தான சிறிய படிக்கட்டுகள் ஆயிரத்தையும் அனாயாசமாக ஏறிக் கடந்தார்.

மேலே ஏறியதும் மண்டபத்தில் ஒரு நாழிகை நேரம் வரை உட்கார்ந்தார். வேர்வையானது முழுவதுமாக வெளிப்பட்டு வழிந்தது. பின் மறைந்தது.

துறவிகள் கொடுத்த குவளை நீரை முழுவதுமாகக் குடித்தார். தலை குறுகுறுத்தது. தடவிக் கொண்டார்.

அங்கிருந்து எழுந்து சென்று பாகுபலியின் திருவடிகளில் தலையை வைத்து வணங்கினார்.

அங்கிருந்தத் துறவிகளும் மற்றவர்களும் அவரை வாழ்த்தி கோஷமிட்டார்கள்.

அவருக்கோ எல்லோருமாகச் சேர்ந்து சங்கை ஊதுவது போல இருக்கவே “போதும்” என்றார்.

“ஆச்சார்யர் இருக்கிறாரா?” என்று வினவினார்.

“இப்போதுதான் பல்லக்கில் இறங்கினார். இந்நேரம் அடிவாரத்தை அடைந்திருப்பார்” என்றார்கள் துறவிகள்.

நீலகேசி ஒரு கணம் யோசித்தார்.

அவருக்குள் இடி இடிப்பது போல இருந்தது.

“நீங்கள் போய் ஆச்சார்யரை இங்கே அழைத்து வாருங்கள்” என்றார்.

“இப்போது தானே இறங்கினார்?” என்று கேட்டார்கள் துறவிகள்.

“பரவாயில்லை. பல்லக்கிலேயே அழைத்து வாருங்கள்” என்றார் நீலகேசி.

“தாங்கள் பல்லக்கில் கீழே இறங்கலாமே?” என்றார்கள் துறவிகள்.

“சொன்னதைச் செய்யுங்கள். ச்ரவண பெலகுலாவின் தலைவன் சொல்கிறேன்” என்றார் நீலகேசி.

துறவிகள் ஓடினார்கள்.

நீலகேசி முதலில் அமர்ந்த மண்டபத்திற்கே வந்து தன்னை யாரும் தொல்லைப்படுத்தக் கூடாது என்பதற்காக நிஷ்டையில் அமர்ந்தார்.

ஆனால் அவருக்கு நிஷ்டை கைகூட வில்லை. கண்களை மூடியதும் திங்களழகியின் பின்னெழில்களும் அவற்றில் இருந்த மச்சங்களும் நினைவிற்கு வந்தன. மனக் கண்களில் உறுத்தின.

“சீ! இதென்ன பீடை” என்று அந்த நினைவுகளை அகற்றி மீண்டும் நிஷ்டையில் கூடிய போது சந்தன மாலாவின் சந்தன அங்கங்களும் நறுமணமும் அவரை அலைக்கழித்தன.

“ஆகா! இந்தப் பெண்களுக்குத்தான் என்ன சக்தி! அவர்களது அங்கங்களுக்குத்தான் என்ன ஈர்ப்பு! தூரத்திற்கு வந்து விட்டாலும் அவை துரத்தி வந்து மருட்டுகின்றனவே! பெண்களைப் படைத்தவன் யாராக இருந்தாலும் அவனது வல்லமையே வல்லமை! அவனது கைவண்ணமே கைவண்ணம். நான் அவனாக இருந்திருக்கக் கூடாதா? என் விருப்பப்படி அழகிகளைப் படைத்து சதா சர்வகாலமும் அனுபவித்தபடி இருப்பேனே! இந்தத் துறவறம் பாழாய்ப் போனது. இதைக் கண்டுபிடித்தவன் வீணன்” என்றெல்லாம் அவரது எண்ணங்க்ள் விவஸ்தையற்று விரிந்தன.

ஆறுநாழிகைகள் கழித்தே பல்லக்கில் வந்து இறங்கினார் ஜெயதேவர்.

அப்போது நண்பகல் நேரம்.

குன்றின் மீது ஏறுபவர்கள் எண்ணிக்கை ஒன்று இரண்டு என்ற அளவிலேயே இருந்தது.

மேலே இருந்தவர்கள் எல்லோரையும் கீழே அனுப்பினார் நீலகேசி. இரண்டு பணியாட்களைத் தவிர துறவிகளைக் கூட கீழே அனுப்பினார். குன்றேறி வருபவர்களைத் தடுத்து வழி மண்டபத்திலேயே இருக்கும் படி பணியாட்களுக்கு உத்தர விட்டார்.

அடுத்து அவர் மேற்கொண்ட நடவடிக்கை....





அரசியலும் காமமும் ஒன்று. அது நல்லவர்களை ஈர்க்கும். பொல்லாதவர்களாக்கும். தன் பிடியிலிருந்து எளிதில் விடுவிக்காது
– நீலகேசி




ம்லை மண்டபத்தில் நிஷ்டையில் அமர முடியாமல் காம உணர்வுகளால் அலைக்கழிக்கப்பட்டதால் கண்களைத் திறந்து கொண்ட நீலகேசி துறவிகளிடமும் மக்களிடமும் சில வார்த்தைகளைப் பேசி ஆசிர்வதித்தார்.

"பாகுபலியை கடைசியாகப் பார்த்துக் கொள்ளுங்கள். பிரார்த்தனை செய்து கொள்ளுங்கள்" என்ற வெடியைத் தூக்கிப் போட்டார்.

"ஏன் சுவாமி? என்ன ஆயிற்று? எதற்காக அவ்வாறு பேசுகிறீர்கள்?" என்று ஆர்வத்தோடு கேட்டார்கள் துறவிகள்.

"எல்லோரும் எந்த நேரமானாலும் கர்நாடகத்தை விட்டு வெளியேறத் தயாராக இருங்கள்" என்று அடுத்த வெடியையும் வெடித்தார் நீலகேசி.

"துறவிகள் தற்போது சற்றே அதிர்ந்து போய் விவரத்தைச் சொல்லுங்கள் சுவாமி. கலவரமாக இருக்கிறது" என்றார்கள் துறவிகள்.

"சமணம் இருந்தால் தானே நீங்கள் இருக்க முடியும்? இங்கே வந்து வழிபடமுடியும். சமணம் அழியுமானால் நீங்கள் வெளியேறத் தானே வேண்டும்?"

"நாங்கள் எதற்காகச் சுவாமி வெளியேற வேண்டும்?"

"மகாராஜாவின் விருப்பம் அதுவாக இருந்தால் நாம் மறுக்க முடியுமா?"

"மகாராஜா ஏன் அவ்வாறு விரும்ப வேண்டும்? அவர் அப்படிப்பட்டவரல்லவே?"

"அவர் நல்லவர் தான். அரசியல் அவரைப் போல இல்லையே?"

"என்ன சொல்கிறீர்கள் சுவாமி?"

"அரசியலும் காமமும் ஒன்று. அது நல்லவர்களையும் ஈர்க்கும்; பொல்லாதவர்களாக்கும். தன் பிடியிலிருந்து எளிதில் விடுவிக்காது."

"இப்போது என்னாகிவிட்டது சுவாமி?"

"என்னென்னவோ ஆகிவிட்டது" என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்ட அவர் "எதைச் சொல்வேன்? எப்படிச் சொல்வேன். அதிர்ச்சி திடீரென வந்து விட்டால் தாங்க மாட்டார்களே என்று தான் எச்சரிக்கை செய்தேன். மற்றபடி நானிருக்கும் வரை தூணாக இருப்பேன். தடையாக இருப்பேன். என் உயிர் இருக்கும் வரை எதுவும் நடவாது. ஒருவேளை சதி செய்து என்னைக் கொன்று விட்டால் இக்குன்றின் அடிவாரத்தில் எங்காவது ஒரு மூலையில் எனக்குச் சிறுஞ்சிலை வைத்து 'சமணத்திற்காகவே சமர்புரிந்து உயிரை விட்டான் நீலகேசி' என்று எழுதி வையுங்கள். அது போதும்" என்று மிகவும் உருக்கமாகப் பேசிய நீலகேசி "எல்லோரும் கீழே செல்லுங்கள். ஆச்சார்யர் ஜெயதேவர் வருகிறார். அவரோடு முக்கியமான ஆலோசனை செய்ய வேண்டியிருக்கிறது" என்றார்.

துறவிகளும் மற்றவர்களும் அவரை வாழ்த்திக் கொண்டு கீழே இறங்கினார்கள்.

ஆறு நாழிகைகள் கழித்து ஜெயதேவர் பல்லக்கில் வந்து இறங்கினார்.

நீலகேசி பல்லக்கை கீழே கொண்டு செல்லும்படி உத்தர விட்டார்.

குன்றின் மீது இரண்டு பணியாளர்கள் மட்டும் இருந்தார்கள்.

அவர்களை மண்டபத்தில் இருந்து கொண்டு ஒருவரும் மேலே வராதபடி பார்த்துக் கொள்ளும்படிச் சொன்னார்.

நீலகேசியும் ஜெயதேவரும் பாகுபலி சிலைக்குப் பின்னால் இருந்த சிறிய மாடங்கள் ஒன்றுக்குச் சென்று அமர்ந்தார்கள்.

"ஆச்சார்யர் மன்னிக்க வேண்டும். முக்கிய விஷயத்தைப் பேச வேண்டியிருந்ததால் தான் உங்களை இங்கேயே வரச் சொன்னேன். அபச்சாரம் இருந்தால் சமணத்திற்காகச் சற்று பொறுத்துக் கொள்ளுங்கள்" என்றார் நீலகேசி.

"என்ன விஷயம் நீலகேசி?" என்று கேட்டார் ஜெயதேவர்.

"நமது லட்சியம் கர்நாடகத்தில் சமணம் மட்டுமே இருக்க வேண்டும். இதர மதத்தவர் கர்நாடகத்தை விட்டு வெளியே வேண்டும். வெளிநாட்டுச் சமணர்கள் கர்நாடகத்திற்கு வந்து குடியேற வேண்டும் என்பது தான்."

"தெரிந்த விஷயம் தானே?"

“இந்த லட்சியத்தை நேர் வழியில் நிறைவேற்ற முடியாது. மகாராஜாவை வசப்படுத்தி கையில் போட்டுக் கொண்டு தான் செய்ய முடியும். அதற்கேற்ப மகாராஜாவின் மகள் தர்ம தேவி நம்மிடம் சிக்கினாள். நாமும் மாந்தரீகனும் சேர்ந்து கொண்டு சிகிச்சை என்ற பெயரில் அவளது மனநோயை அதிகரித்தோம். மகாராஜாவை மிரட்ட வேண்டிய நேரத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். தாங்கள் அவசரப்பட்டு மகாராணியிடம் நமது லட்சியத்தைப் பற்றிச் சொல்லி மிரட்டியிருக்கிறீர்கள். எதற்காக இப்படிச் செய்தீர்கள் ஜெயதேவரே?” என்று நிதானமாகக் கேட்டார் நீலகேசி.

“மாந்தரீகன் மேல் கோட்டைக்குப் போய் விட்டான். நீங்கள் சோழ நாட்டிற்குப் போய் விட்டீர்கள். ஒரு முன்னேற்றமும் இல்லை. ஆகவே தான் நான் செயலில் இறங்கத் தீர்மானித்து ராணியை மிரட்டினேன். எந்த விஷயமாக இருந்தாலும் வீட்டுப் பெண்கள் மூலமாக விஷயம் சென்றால் போக வேண்டிய இடத்திற்கும் போய்ச் சேரும். பயனுள்ளதாகவும் இருக்கும். ஆகவே தான் சொன்னேன்” என்று ஜெயதேவர் கூறியதும் எரிமலையாக மாறிய நீலகேசி அவரது கன்னத்தில் பளாரென்று அறைந்தார்.

ஜெயதேவர் இதை முற்றிலுமாக எதிர்பாராததால் நிலை குலைந்தார்.

நீலகேசியோ பெருங்கோபத்துடன் “முட்டாளே! ராஜ்ய விஷயங்கள் உனக்குத் தெரியுமோ? மகாராணி சாந்தலை, பதியே தெய்வம் என்று போற்றி நடக்கும் பதி விரதை. தன் கணவனுக்கு எதிராகச் சுண்டு விரலைக் கூட அசைக்க மாட்டாள். அவளிடம் போய் சொன்னாயே! இது மகாராஜாவிடம் விட வேண்டிய மிரட்டல். மகளை நம் வசம் வைத்துக் கொண்டு விட வேண்டிய மிரட்டல். அவன் நமது லட்சியத்தை நிறைவேற்றுவதாகச் சத்தியம் செய்யும் வரை விட வேண்டிய மிரட்டல். எதையும் அறியாமல் விதையைப் பாறையில் விதைத்து விட்டாய்” என்று சொல்லி ஜெயதேவரை மீண்டும் அடித்தார்.

“விடுங்கள் நீலகேசி. அடிகளை என்னால் பொறுக்க முடியவில்லை” என்று அலறினார் ஜெயதேவர்.

“குப்பைகளைப் பொறுக்க வேண்டியவன் நீ. பரதேசி. பயனற்றவன். படுமூடன். நீ சமணன் கூட அல்ல. உனக்குச் சமணத்தை போதித்து ஆச்சார்யனாக நடிக்கச் சொன்னேன். அதற்காகத்தான் நெறிகெட்ட நியமனம் செய்து உன்னை இக்குன்றின் மீது அமரவைத்தேன். மகாராஜா முதல் அனைவரும்

உன்னைத் தொழ வைத்தேன். நீ இரண்டாம் பாகுபலி என்று கூறி மகாராஜாவுக்கு ஆச்சார்யனாக்கினேன். அதிகமாக நீ வாயைத் திறந்து உளறி விடக் கூடாது என்று வாயை மூடும் துணியையே பெரும்பாலான நேரங்களில் அணிய வைத்தேன். மகாராஜாவையோ அரச குடும்பத்தினரையோ நீ தனியாகச் சந்திக்கக் கூடாது என்று உனக்கு நிபந்தனை விதித்தேன். சந்திப்பதாக இருந்தால் என்னோடு சேர்ந்திருந்து தான் பேச வேண்டும் என்று கட்டளையிட்டிருந்தேன். எல்லா வற்றையும் மறந்து விட்டு உப்புக்கும் உதவாத மகாராணியிடம் லட்சியத்தைப் பற்றிப் பேசி மிரட்டியிருக்கிறாய். இதற்கு உனக்கு அனுமதி கொடுத்தது யார்?" என்று சீறினார் நீலகேசி.

ஜெயதேவர் பேசும் நிலையில் இல்லை. நீலகேசி அடித்த அடியில் அவருக்குப் பல இடங்கள் வலித்தன. சில இடங்களில் ரத்தம் வந்தது. அவற்றைத் துடைத்தபடி அதிர்ந்து போய் நின்றிருந்தார் அவர்.

நீலகேசியின் உக்கிரம் தொடர்ந்தது.

"ஒரு நாளைக்கு நான்கு முறை உண்டு கொழுக்கும் உன்னைப் பட்டினி கிடப்பதாகவும், சல்லேகனையில் இருப்பதாகவும் எல்லாம் அதிகார வர்க்கத்தினரிடம் கூறி உன்னைப் பற்றிய உயர்வான எண்ணத்தை உருவாக்கி வந்தேன் நான். வெண்ணை திரளவிருந்த போது பானையை உடைந்த கதையாக மடத்தனமாக நடந்து கொண்டிருக்கிறாய். சோழ நாட்டிலிருந்து வந்த வைஷ்ணவ சன்னியாசி இராமானுஜன் மகாராஜாவின் மகளை இமைக்கும் நேரத்தில் குணப்படுத்தி விட்டு அரண்மனை வட்டாரத்தில் செல்வாக்கு பெற்று விட்டான். அவனுக்காகத் தொண்டனூரில் மடம் ஒன்றையும் கட்டுகிறான். நமக்கு வர வேண்டிய பெயர் போய் விட்டது. நமக்கிருந்த செல்வாக்கும் போய் விட்டது. உயர்நிலையில் இருந்த நாம் உதாசீனப்படுத்தப்படுகிறோம். இதற்காகவா குப்பையான உன்னைக் கோபுரத்தின் உச்சிக்குக் கொண்டு போனேன்? முட்டாள். முட்டாள்."

நீலகேசிக்கு இவ்வளவு திட்டியும் ஆத்திரம் தீரவில்லை.

இப்படியும் அப்படியுமாக உலவி விட்டு நின்றார். பிறகு பேசினார்.

"ஜெயதேவா! நாம் இப்போது ஆபத்தான நிலையில் இருக்கிறோம். சற்று கவனம் பிசகினாலும் அழிந்து விடுவோம். உனது முட்டாள் தனத்தினால் எனது திட்டம் குலைந்த நிலையில்

வைஷ்ணவ இராமானுஜன் வேறு வந்து சேர்ந்திருக்கிறான். நாய் கடித்தவனுக்குப் பேயும் பிடித்தமாதிரியான நிலை. இராமானுஜன் வருவதற்கு முன்பே காரியத்தைச் சாதித்திருக்க வேண்டும். இப்போது அவன் புயலாகப் பிரவேசித்திருப்பதால் நாம் திணறுகிறோம். மக்கள் கூட்டம் கூட்டமாக தினமும் போய் அவனை தரிசிக்கிறார்கள். உபன்யாசங்களைக் கேட்கிறார்கள். அவர்களில் பலர் வைணவத்தில் வெளிப்படையாகவே சேருகிறார்கள். சமணர்களும் அவ்வாறு சேருவதாகக் கேள்விப் பட்டேன். இது தொடர்ந்தால் சமணமானது கர்நாடகத்தில் காலிப் பெருங்காயப் பெட்டியாகி விடும். வெறும் பெட்டியில் மணம் இருக்குமே தவிர பயன் இருக்க முடியாது. ஆகவே நாம் அதிரடி வேலைகளைச் செய்ய வேண்டிய நிலையில் இருக்கிறோம்.

நீ செய்த அபத்தமான காரியத்தைச் செய்த உன்னை இங்கேயே கழுத்தை நெரித்து என்னால் கொன்று விட முடியும். அப்படிச் செய்து நீயும் செத்து விட்டால் எனக்கு மகிழ்ச்சி தான். ஆனால் விட்டலராயனுக்குச் சந்தேகம் வந்து விடும். ஆகவே உன்னை உயிரோடு விடுகிறேன். எனது லட்சியம் நிறைவேறும் வரை நீ வாயைத் திறந்து ஒரு வார்த்தை கூடப் பேசக் கூடாது. நீ இந்திர கிரியிலேயே இரு. வேறு எங்கும் போக வேண்டாம். உன் குடும்பம் என் கையில் இருப்பதை மறந்து விடாதே. ஏதாவது குழப்பம் விளைவித்தால் உன் மனைவி மற்றும் ஆறு பெண்களையும் நானே கற்பழித்துக் கொல்வேன். உன் ஒரே மகனைச் சித்திரவதை செய்து சாகடிப்பேன். நினைவிருக்கட்டும்" என்று சொன்ன நீலகேசி ஜெயதேவரின் காவித் துணியையே கிழித்து அவரது கைகளையும் வாயையும் கட்டினார். அரை நிர்வாண நிலையில் அவரை அந்த இடத்திலேயே சிறை வைத்து அறையைப் பூட்டினார்.

பணியாளர்களைக் கூப்பிட்டு "ஆச்சார்யர் மகா விரதத்தில் இருக்கிறார். இரண்டு நாட்களுக்கு யாரும் எந்தத் தொல்லையும் தரவேண்டாம்" என்றார்.

"உணவு இருக்கிறதா?" என்று கேட்டார்.

"இருக்கிறது ஐயா"

"கொண்டு வாருங்கள்" என்று கூறி மண்டபத்திலேயே உண்டு விட்டு கீழே இறங்கி நேராகச் சந்திர கிரிக்குச் சென்றார்.

அவரிடம் அம்பிகா யட்சிணியின் ஆலய நிர்வாகஸ்தர் சுவேதம்பரர் வந்தார்.

"அடிகளே! நீங்கள் நேற்றிரவு யட்சிணி கோயிலுக்கு வந்தீர்களா?" என்று கேட்டார்.

"ஆமாம்."

"யட்சிணியிடம் பேசினீர்களா?"

"ஆமாம்."

"உங்களோடு பேசியது யட்சிணி இல்லை. ஜெயதேவர்தான் யட்சிணியின் பின்னால் அமர்ந்து கொண்டு குரல் மாற்றிப் பேசினார்."

நீலகேசியின் இரத்தம் கொதித்தது.

"அவ்வளவு துணிச்சல் வந்து விட்டதா அவனுக்கு? சுவேதம்பரா! அவனை இந்திரகிரிக் குன்றில் அறையில் பூட்டி வைத்திருக்கிறேன். இரண்டு நாட்களுக்கு வாடட்டும். பிறகு நீயே அவனை விடுவித்து உனது கண்காணிப்பிலேயே வைத்துக் கொள். இந்திரகிரியை விட்டு எங்கும் போகக் கூடாது என்றும் எதுவும் பேசக்கூடாது என்றும் உத்திரவிட்டிருக்கிறேன். அதன்படி நடந்து கொள்கிறானா என்று கவனி. அவன் பேச முற்பட்டாலோ அல்லது இந்திரகிரியை விட்டு இறங்க முற்பட்டாலோ லாவகமாக அவனைக் கடத்திக் கொண்டு போய் வயநாட்டில் வனாந்திரத்தில் இருக்கும் ஜீனாயலத்தில் அடைத்து விடு. இங்குள்ள துறவிகளுக்கும் மக்களுக்கும் அவன் விஷயத்தில் பதற்றம் உண்டாகாமல் பார்த்துக் கொள்" என்றார்.

துவாரசமுத்திரத்திற்குக் கிளம்பினார்.



அங்கே செல்வதற்கு முன் அவர் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தார்.

அதை நிறைவேற்றாமல் அங்கிருந்து அகலக் கூடாது என்று தீர்மானமும் செய்து கொண்டார்.

துவாரசமுத்திரத்தை அடைந்த போது பல இடங்களிலும் வைக்கப் பட்டிருந்த அறிவிப்புப் பலகைகள் அவரது கவனத்தைக் கவர்ந்தது.

வேலாபுரத்தில் கட்டப்படும் பெருமாள் கோயிலைச் சமணர்கள் யாரும் இடிக்க வேண்டியதில்லை என்றும் மன்னனுக்கும் தனக்கும் நல்லதொரு முடிவு வரவிருப்பதாகவும் எழுதி அதற்குக் கீழே தன் பெயர் எழுதப்பட்டிருந்தது. அதைக் கண்டு ஆத்திரமடைந்த அவர் அரண்மனைக்குச் சென்றார்.

மன்னன் அங்கில்லை என்று சொல்லப்பட்டது.

“இளவரசரைச் சந்திக்க வேண்டும்” என்றார் நீலகேசி.

“இளவரசர் யாரையும் சந்திப்பதில்லை” என்றார்கள் காவலர்கள்.

“என்னைக் கூடவா சந்திக்க மாட்டார்?”

“காலனைக் கூட சந்திக்க அவர் விரும்பவில்லை.”

“அப்படியானால் நான் யாரைச் சந்திக்க முடியும்.”

“சேனாதிபதியார் பகாசூரர் இருக்கிறார். அவரைச் சந்திக்கலாம், சந்திக்கிறீர்களா?”

“ஆமாம்.”

“பார்த்துச் செல்லுங்கள். அவர் மகா கோபத்தில் இருக்கிறார்.

“என் கோபம் உலகை எரிக்கும். அதற்கு முன் எவன் கோபமும் எனக்கு தூசு தான்” என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்ட நீலகேசி காவலாளியை ஒரு முறை முறைத்து விட்டு உள்ளே சென்றார்.

சேனாதிபதியோ கோபக்காரராக இல்லை.

அவரைக் கண்டதுமே “தாங்களா? வாருங்கள் சுவாமி. வாருங்கள். இந்த அரண்மனைக்கு வந்து நீண்ட காலமாகி விட்டது. பாதபூஜைக்கு ஏற்பாடு செய்யவா?” என்று கேட்டார்.

“அது ஒன்று தான் இப்போது குறைவு” என்று சொல்லிக் கொண்ட அவர் “அதெல்லாம் ஒன்றுமில்லை. நான் கேட்க வந்தது அறிவிப்புப் பலகைகளைப் பற்றி. துவாரசமுத்திரம் முழுவதும் அறிவிப்பு பலகைகள் இருப்பதைப் பார்த்தேன். என்ன அது?” என்று கேட்டார்.

“இதென்ன அடிகளே. பலகைகளை வைத்தது நீங்கள். அதற்கு அடையாளமாக உங்கள் பெயரும் இருக்கிறது. ஆகவே அவற்றை வைத்தற்கு நீங்கள் தான் பதில் சொல்ல வேண்டும்” என்றார் சேனாதிபதி.

“அவற்றை நான் வைக்கவில்லை.”

“அப்படியென்றால் உங்கள் பெயரில் நாங்கள் வைத்திருக்கிறோம் என்கிறீர்களா?”

“வேறு யார் வைத்தது?”

உங்கள் பெயர் இருந்ததால் நாங்கள் விட்டு விட்டோம். பெயர் மட்டும் இல்லாதிருந்தால் இங்கிருக்கும் சமணர்களை ஓர் உலுக்கு உலுக்கியிருப்போம்.”

“இது அநியாயம். வீண் பழி. அவற்றுக்கும் எங்களுக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை.”

“இல்லை என்றால் மிகவும் நல்லது”

“என்ன சொல்கிறீர்கள்?”

“வேலாபுரத்தில் கட்டப்பட்டு வரும் பெருமாள் கோயிலை இடிப்பதை நிறுத்தி வைக்கும்படி அதில் கூறப்பட்டிருக்கிறது. அக்கோயிலை இடிப்பதற்கு இனிமேல் தான் ஒருவன் பிறக்க வேண்டும். இந்த அறிவிப்புப் பலகைகளைப் பார்த்து மகாராஜா கோபமடைந்துள்ளார். இது போன்றப் பலகைகள் வேலாபுரத்திலும் இருக்கின்றனவாம். யாராவது அக்கோயிலை இடிக்க முற்பட்டால் விசாரணையின்றிக் கழுவில் ஏற்றும் படி எனக்கு உத்தரவிட்டுள்ளார்.”

நீலகேசிக்குத் தலைசுற்றியது.

வேலாபுரத்தில் நோட்டம் பார்ப்பதற்காக கோயில் கட்டப்படும் இடத்திற்கு நூறு சமணர்களை அனுப்பி வைத்தது அவர்தான்.

மற்றபடி எதையும் அவர் செய்யவில்லை.

அப்படி இருக்கும் போது அறிவிப்புப் பலகைகளை வைத்தது யாராக இருக்கும் என்று யோசித்தார்.

மன்னனின் சூழ்ச்சியாக இருக்கும் என்று கருதினார்.

சேனாதிபதியைப் பார்த்து “சேனாதிபதி! இந்த அறிவிப்புப் பலகைகளுக்கும் எனக்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. வேலாபுரம் கோயிலை இடிக்கும் முயற்சியில் நாங்கள் ஈடுபடவில்லை. அப்படியொரு எண்ணமும் இல்லை. சமணர்கள் சாத்வீகமானவர்கள். சத்தியம் தவறாதவர்கள். பிழையான காரியங்களைச் செய்ய மாட்டார்கள். எங்களுக்கும் மகாராஜாவுக்கும் இடையே உள்ள அன்பும் மதிப்பும் ஆழமானவை. அகலமானவை. எல்லையற்றவை. அவர் ஓர் ஆலயம் எழுப்புகிறார் என்றால் அதில் அர்த்தமிருக்கும் என்று நம்புகிறவர்கள் நாங்கள். எங்களால் என்ன உதவி வேண்டுமானாலும் செய்வதற்கும் தயாராக உள்ளோம். கேட்பதற்குத் தான் யாருமில்லை” என்றார்.

“ஏன் இல்லை? நானிருக்கிறேன் அடிகளே. வேலாபுரத்தில் அமைக்கப்பட்டு வரும் ஆலயம் உலகத்தவரை வியக்க வைக்கும். இது போன்ற ஆலயம் இது வரை அமைந்ததில்லை என்று பார்ப்பவர்கள் கூறுவார்கள். அந்த ஆலயத்தை அமைக்கப்

பெருமளவு நிதி தேவைப்படுகிறது. தாங்கள் தான் கொடுத்து உதவ வேண்டும்" என்றார் சேனாதிபதி.

"நன்றாகக் கேட்டீர்கள். நாங்கள் துறவிகள் சேனாதிபதி. துறவிகள். எங்களிடம் இருக்கும் செல்வம் அன்பு, அஹிம்சை, சகிப்புத் தன்மை, கருணை ஆகியவை தான். மயிர்கள் கூட எங்களுக்குச் சொந்தமாக இருக்கக் கூடாது என்று தான் அவற்றைப் பிடுங்கி எறிந்து மொட்டைகளாக இருக்கிறோம். அரசாங்கத்தின் நிதியுதவியை எதிர்நோக்குகிறவர்கள் நாங்கள். எங்களிடம் ஒரு நாணயம் கூட இல்லை. நா நயமே எங்கள் சொத்து."

சேனாதிபதி சிரித்துக் கொண்டார்.

"தெரியும் அடிகளே. தங்களது தார்மீக ஆதரவு இருந்தால் போதும். நாங்கள் மார்தட்டி நிற்போம். எதற்கும் சமணர்களிடம் சொல்லி வையுங்கள். ஆலயத்தை இடிப்பது பற்றி யாராவது பேசினால் அவர்களைக் கொண்டு வந்து துவாரசமுத்திரத்தின் பிரதான வீதிகளில் வைத்து கழுவேற்றுவேன்" என்றார்.

"ஆஹா!" என்ற நீலகேசி விட்டால் போதும் என்று அகன்றார்.

சேனாதிபதியை ஏன் சந்தித்தோம் என்று இருந்தது அவருக்கு.

அவரைச் சந்தித்ததில் தனக்கிருந்த கொஞ்ச நஞ்ச மரியாதையும் போய் விட்ட மாதிரி இருந்தது.

நேராக ஆதிநாதர் விஹாரத்திற்குச் சென்று அங்கிருந்தப் பரிவேணையில் தங்கினார்.

"இன்று உபன்யாசம் உண்டா?" என்று கேட்டார்கள் துறவிகள்.

"எல்லோரும் தற்கொலை செய்து கொள்ளுங்கள். இது தான் என் உபதேசம்" என்று எரிச்சலோடு சொன்னார் நீலகேசி.

மறுநாள் துவார சமுத்திரத்தில் அறிவிப்பு பலகைகள் அகற்றப் பட்டு புதிய பலகைகள் வைக்கப்பட்டிருந்தன.

"வேலாபுரம் பெருமாள் கோயில் ஓர் அற்புதம். அஃது ஒரு சரித்திரமாகக் கட்டப்பட்டு வருகிறது. யாரேனும் அதற்குச் சேதம் விளைவிக்க முயன்றால் சிரச்சேதம் செய்யப்படுவார்கள். இது அரச கட்டளை" என்றிருந்தது.

அவற்றைக் கண்டு பற்களைக் கடித்தார் நீலகேசி.

"விடக் கூடாது. சூலபாணியையும் சூளாமணியையும் அழைக்க வேண்டியது தான்" என்று சொல்லிக் கொண்டார்.



தொண்டனூரில் பணிகள் வேகமாக நடந்தன. மன்னனே நேரில் இருந்து பணிகளைக் கவனித்ததால் இராமானுஜருக்கான மடம் முடியும் தருவாயிலிருந்தது.

நெகிழ்ந்து போன இராமானுஜர் "மன்னா! நீயே இங்கிருந்து கவனிக்க வேண்டுமா? உன் அரசாங்க அலுவல் என்னாவது?" என்று கேட்டார்.

"இதுவும் அரசாங்க அலுவல் தான் சுவாமி. எனது நாட்டில் நடக்கும் காரியங்கள் அனைத்தும் அரசாங்க காரியங்கள் தான். அதுவும் தங்களுக்குத் தங்குவதற்கு மடம் கட்டித் தருவது என் தலையாயப் பணி" என்றான் விட்டலராயன்.

ஊரானது கலகலப்பாகவும் குதூகலமாகவும் இருந்தது.

இராமானுஜரின் உபன்யாசங்கள் அனைவரையும் ஈர்த்தது. இராமானுஜரின் கருணை அனைவரையும் கொள்ளை கொண்டது. தினமும் நூறு பேர் வைணவ மதத்தில் சேர்ந்தார்கள். தாமாக வந்து சேர்ந்தவர்களை அவர் தடுக்க வில்லை.

"மகாராஜா! இது சரிதானா?" என்று கேட்டான் பரதன்.

"கட்டாய மதமாற்றம் தான் தவறானது" என்றான் மன்னன்.

மடம் கட்டி முடிக்கப்பட்டு மங்கல காரியங்கள் நடந்து அதில் இராமானுஜரும் சீடர்களும் குடியேறினார்கள்.

குடியேறிய இரண்டாவது மாதம் விசித்திரமான பிரச்சனை ஒன்று உண்டாயிற்று இராமானுஜருக்கு!





மனித வாழ்க்கையில் உள்ள விசித்திரம் என்னவென்றால் மலை போல் முன்ன வரும் பிரச்சனைகள் சில நிமிடங்களில் பனிபோல் விலகிவிடும். கடுகாகக் கருதும் பிரச்சனைகள் மலைபோல் மாறி மருட்டும் – இராமானுஜர்



இராமானுஜரிடம் வந்த தொண்டனூர் நம்பி "சுவாமி! நாமெல்லோரது திருமண் காப்பிற்காக இருக்குட் திருமண் இரண்டு நாட்களுக்கு வரும்" என்றார்.

"அதனால் என்ன? தொண்டனூரில் திருமண் கிடைக்காதா என்ன?" என்று கேட்டார் இராமானுஜர்.

"தொண்டனூரில் திருமண் கிடைத்துக் கொண்ட இடத்தில் நீர் புகுந்து விட்டது. திருமண் படிவங்கள் தீர்ந்து விட்டன என்பதே அதற்கு அர்த்தம். நரசிம்மசுவாமி ஆலய பட்டரிடம் கேட்டுப் பெற்றத் திருமண் தான் நம்மிடம் உள்ளது. அது இரண்டு நாட்களுக்குத்தான் வரும்" என்றார் தொண்டனூர் நம்பி.

"இதென்ன விசித்திரமான பிரச்சனை? இதை நாம் எதிர்பார்க்க வில்லையே! எனக்கு இரவில் பாலைக் காய்ச்சித் தரும் அற்ப காரியத்திற்கு வடுக நம்பியை நியமித்த நான் திருமண்ணிற்கு யாரையும் நியமிக்காதது தவறாகப் போய் விட்டது. அவ்வாறு நியமித்திருந்தால் அந்த சிஷ்யர் அதன் மீது கவனமாக இருந்திருப்பார். திருமண் எங்கெங்கே கிடைக்கிறது என்பதை யெல்லாம் விசாரித்து அதைச் சேகரித்திருப்பார். தமிழ் நாடாக இருந்தால் திருமண் கிடைக்கும் இடம் பலவுண்டு. திருவரங்கத்திலேயே கூட காவிரிக் கரையில் ஏராளமாகத் திருமண் கிடைக்கும். கர்நாடக நாட்டில் எங்கென்று தேடுவது? கோயில் பட்டரை விசாரித்தாயா?" என்று கேட்டார் இராமானுஜர்.

"அவருக்கு தெரியவில்லை சுவாமி. தொண்டனூரில் தான் திருமண் காலம் காலமாகக் கிடைத்து வந்ததாம். அதனால் அது கிடைக்கக் கூடிய வேறு இடங்களைப் பற்றி அவர்கள் ஆராய வில்லை. ஊர் மக்களிடம் கூடக் கேட்டுப் பார்த்து விட்டேன். யாருக்கும் அதன் இருப்பிடம் தெரியவில்லை. இந்த ஊர்க் காரனான எனக்கும் தெரியும். திருமண் எல்லா இடத்திலும் கிடைத்து விடாது. திருமண் படிவங்கள் குறிப்பிட்ட சில

இடங்களில்தான் இருக்கும். இன்ன இடம் என்று தெரியாமல் பூமியைத் தோண்ட முடியாது."

"ஆகா! பார்ப்பதற்குச் சாதாரணமான சிறிய பிரச்சனையைப் போலத் தோன்றினாலும் இது நம்மளவில் பெரிய விஷய மல்லவா? இரண்டு நாட்களுக்குப் பிறகு திருமண் இல்லா விட்டால் வெற்று நெற்றியோடு எப்படி இருக்க முடியும்? திருமண் காப்பு தரிக்காமல் எந்த காரியத்திலும் இறங்க முடியாதே! அது கிடைக்குமிடம் எது என்று கண்டு பிடித்து எடுக்கும் வரை நாம் பாழும் நெற்றியோடுதான் திரிய வேண்டுமா? ஒரு நாள் கூடத் திருமண் தரிக்காமல் நாம் இருந்ததும் இல்லை. இருக்கவும் முடியாது. வெற்று நெற்றியோடு மக்களைச் சந்திக்கவும் அவர்களுக்கு உபன்யாசம் செய்யவும் முடியாதே! நீ போய் மருதூர் நம்பியை அழைத்து வா."

தொண்டனூர் நம்பி சென்று இராமானுஜரின் மற்றொரு சீடரான மருதூர் நம்பியை அழைத்து வந்தார்.

"நம்பீ! உனக்குத் திருமண் சேகரித்துப் பாதுகாப்பைத் தருகிறேன். இந்தப் பொறுப்பை இந்த இக்கெட்டான நேரத்தில் உன்னிடம் ஒப்படைப்பது நியாயமாகாது. இருந்தாலும் இப்போதாகிலும் ஒருவரை நியமிப்பது தான் சரி. நம்மிடம் இருக்கும் திருமண் கையிருப்பு இரண்டு நாட்களுக்குத் தான் வரும் என்கிறான் தொண்டனூர் நம்பி. இந்த ஊரில் அது எங்கும் கிடைக்காதாம். ஆகவே நீ சுற்று வட்டாரங்களுக்குச் சென்று திருமண் கிடைக்கும் இடத்தைப் பற்றி விசாரி. வேறு வழி இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை" என்றார் இராமானுஜர்.

"காஞ்சியில் கிடைக்கும். நாமிருக்கும் இடத்திற்கு அது தான் ஓரளவிற்கு அருகில் இருக்கிறது. ஆனால் அங்கு செல்வதற்கே ஒரு வாரம் பிடிக்கும். எதற்கும் காஞ்சிக்கு அனுப்பி விட்டு நானும் தேட ஆரம்பிக்கிறேன் சுவாமி" என்றார் மருதூர் நம்பி.

மனித வாழ்க்கையில் உள்ள விசித்திரம் என்ன வென்றால் மலை போல் முன்னே வரும் பிரச்சனைகள் சில நிமிடங்களில் பனிபோல் மறைந்து விடும். கடுகாகக் கருதிய பிரச்சனைகள் மலைபோல் மாறி மருட்டும்.

திருமண் பிரச்சனை அப்படித்தான்.

மருதூர் நம்பி மட்டுமல்ல எல்லா சிஷ்யர்களுமே திருமண் கிடைக்கும் இடம் பற்றி விசாரித்தார்கள். பயன் கிடைக்க வில்லை.

எங்கும் இருப்பதாகக் கருதப்படும் இறைவனைத் தூணிலும் காணலாம் துரும்பிலும் காணலாம்.

பரம்பொருளின் காட்சி எளிதானது.

ஆனால் திருமண் எங்கே இருக்கும் என்று கண்டறிவது எளிதானது இல்லை.

ஊர் இருந்தால் பாதை இருக்கும். பாதை இல்லாது போனால் போட்டுக் கொள்ளலாம்.

ஊரே இல்லாத போது பாதையும் இருக்காது. பாதையைப் போடவும் முடியாது.

இதை அன்றைய உபன்யாசத்தில் கூறி வருத்தத்தோடு படுத்தார் இராமானுஜர்.

தனது இஷ்ட தெய்வமான காஞ்சி வரதராஜப் பெருமாளிடம் முறையிட்டார்.

"வரதா! எம்பெருமானே! எனக்கு நினைவு தெரிந்த காலம் தொட்டு எனக்கு வழிகாட்டியருளும் பெருமானே! பரம்பொருளே! உன் உத்தரவு இன்றி நான் எந்தப் பணியையும் செய்ததில்லை. கங்கை கொண்ட சோழ புரத்திலிருந்து இங்கு வந்த போது கூட உன் உத்தரவு கேட்டு விட்டுத் தான் புறப் பட்டேன். எனக்குள் நீ இருப்பதாலும் நீயே என்னை இயக்கு வதாலும் உன் உத்தரவு ஒன்று தான் என்னை இயக்கும். ஆட்கொள்ளும். கர்நாடகப் பயணம் மலை போலிருந்து என்னை மருட்டிய போது மடுவாக்கியது நீ. இப்போது திருமண் பிரச்சனை கடுகாக இருந்து மலைபோல முன் நிற்கிறது. இடம் தெரிந்தாலன்றி திருமண்ணை எங்கே தேடுவேன்? என் ஊனக் கண்களுக்கு ஒரு சக்தியும் கிடையாது என்பது உனக்குத் தெரியாதா? தேவாதி தேவா! தேவ ராஜா! திருமண் காப்பு தரிக்காமல் உன் அடியவர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் எவ்வாறு உய்ய முடியும்? வெற்று நெற்றியுடன் இருப்பது இழிவல்லவா? திருமண் காப்பானது சாட்சாத் உனது திருவடிகள் தானே? அவற்றை நெற்றியிலே காப்பாக இடுவது தானே எங்களுக்குக் காப்பு? அதை விட்டால் வேறு ஏது பாதுகாப்பு? வங்கக் கடல் கடைந்த மாதவனே! கேசவனே! நீங்கள் திருமுகமாய் திகழ வேண்டிய உன் அடியவர் நெற்றி பங்கப் படலாமா? அதை நீ அனுமதிக்கலாமா? மனித முயற்சிகள் தோற்று விட்டன மாயவா! தூயவா! எங்களது முயற்சிகளை விட்டு விட்டோம். உன் செவ்விய திருவடிகளைச் சரணடைந்து விட்டோம். இனி உன் பொறுப்பு."

இவ்வாறு வேண்டிக் கொண்டு கண்களை மூடினார் இராமானுஜர். அரைத் தூக்கம் அவர் தாலாட்டிய போது

கலியுக வரதனான காஞ்சி எம்பெருமாள் அவரது கனவிலே தோன்றினார்.

"அன்பனே! இராமானுஜா! கவலை வேண்டாம். என்னைச் சரணடைந்தவரைக் காப்பது என் கடமை. நாளைக்கே உனது சிஷ்யர்களுடன் மேல்கோட்டைக்குப் போ. அங்கே கல்யாணி புஷ்கரணிக்கு தென்மேற்கு மூலையில் செண்பக வனத்தில் துளசிச் சோலைக்குள் உள்ள பாம்புப் புற்றுக்கு கீழே பார். உனக்கு வேண்டிய திருமண் கிடைக்கும்" என்று அருள்வாக்கு கூறிவிட்டு மறைந்தார்.

அந்த நிமிடத்திலேயே உறக்கத்திலிருந்து மீண்ட இராமானுஜர் காஞ்சி வரதர் ஆலயம் இருந்த தென்கிழக்கு திசையை நோக்கி விழுந்து வணங்கினார்.

"வரதா! உன் கருணையே கருணை" என்று நெகிழ்ந்தார்.

பொழுது விடிந்ததும் சீடர்களைப் பார்த்து "எல்லோரும் நீராடி விட்டு வாருங்கள். மேல்கோட்டைக்குப் போக வேண்டும்" என்றார் இராமானுஜர்.

சீடர்களுக்குப் புரியவில்லை.

"மேல் கோட்டை எங்கே இருக்கிறது சுவாமி?" என்று வினவினார்கள்.

"மேதாவிகள் கூடச் சில நேரங்களில் உரிய பொருளை உள்ளங் கையில் வைத்துக் கொண்டு வெளியில் தேடுவார்கள். அப்படித்தான் இருக்கிறது இது. நாம் தமிழகத்திலிருந்து கர்நாடகத்திற்கு வந்த போது நான் மிகவும் குழம்பியிருந்தேன். இவ்வளவு தூரம் எதற்காக வரவேண்டும் எனக்கு நானே கேட்டுக் கொண்டேன். திருவரங்கத்திலும் சோழ நாட்டிலும் என்னென்ன பிரச்சனைகள் உண்டாகியிருக்குமோ என்று கவலைப்பட்டேன். இந்தப் பிரச்சனையும் எப்படித் தீரும் என்று எம்பெருமானிடம் கேட்டேன். அவன் மேல் கோட்டை என்ற ஒரு வார்த்தையை மட்டும் கூறினார். நான் எதுவும் கேட்கவில்லை. அதற்குப் பிறகு மேல்கோட்டையைப் பற்றிய நினைப்பு வரும் போதெல்லாம் "அது என்ன கோட்டை? எங்கே இருக்கிறது?" என்று எனக்கு நானே கேட்டுக் கொண்டேன். நேற்றிரவு திருமண்ணிற்காகப் பிரார்த்தனை செய்து கொண்டு படுத்த போது சொப்பனத்தில் வந்த சோத்தம்பிரான் மேல் கோட்டைக்கு வா என்றான். அப்போதே எனக்கு விளங்கி விட்டது. மேல்கோட்டைக்குப் பக்கத்திலேயே இருந்து கொண்டு அதை அறியாமல் இருந்திருக்கிறோம். அது தொண்டனூரின்

பகுதிதான். இங்கிருந்து ஒரு நாள் பயணத்தில் இருக்கிறது.* அங்கே திருமண் கிடைக்குமாம். உடனே புறப் பட்டால் தான் நாளைக்குத் திருமண் எடுக்கலாம்" என்றார் இராமானுஜர்.

தொண்டனூர் நம்பியை அழைத்து "நம்பி! மகாராஜா இங்கே இல்லை என்று தெரிகிறது. ஆகவே நீ அரண்மனைக்குச் சென்று நாம் மேல்கோட்டைக்குச் செல்வது பற்றித் தகவல் கொடுத்து விடு. ஸ்வாதி** மழை பெய்து கொண்டிருப்பதால் நமது பயணம் தொல்லைகள் நிறைந்ததாக இருக்கும். எல்லோரும் தலையில் போர்த்திக் கொள்ள ஏதாவது வஸ்திரம் கிடைக்குமா என்று பார்த்துக் கொள்" என்றார் இராமானுஜர்.

தகவல் தெரிந்ததும் அரண்மனை காரியஸ்தன் வந்து "சுவாமி! தாங்களும் தங்களைச் சேர்ந்தவர்களும் இந்த ஸ்வாதி மழையில் சிரமமான பயணத்தைச் செய்ய வேண்டுமா? திருமண் இருக்கும் இடம் எது என்று சொன்னால் எங்கள் பணியாட்களை அனுப்பி கொண்டு வருகிறோம்" என்றான்.

"இல்லை அப்பனே. இது பகவானின் கட்டளை. நாங்கள் தான் போக வேண்டும். நீ மகாராஜாவுக்குத் தகவல் அனுப்பினால் போதும்" என்றார் இராமானுஜர்.

"பயணம் செய்ய மாட்டு வண்டிகளையும் பல்லக்குகளையும் ஏற்பாடு செய்யலாமா சுவாமி?"

"வேண்டாமப்பா. நடைப் பயணத்தில் பயிற்சி பெற்றவர்கள் நாங்கள். முடிந்த வரை நடந்து செல்வது தான் எங்களுக்கு உகந்தது. அதோடு மேல் கோட்டை வெகு தூரத்தில் இல்லை. எங்களுக்கு இந்த மழையிலிருந்து பாதுகாத்துக் கொள்ள குடைகளை ஏற்பாடு செய்து கொடுத்தால் போதும்" என்றார் இராமானுஜர்.

மேல்கோட்டைக்குப் புறப்பட்ட சுமார் நூறு பேருக்கும் மூங்கிலால் வேயப்பட்ட விரிகுடைகளை ஏற்பாடு செய்தான் காரியஸ்தன். உணவுப் பாண்டங்கள் மற்றும் பண்டங்களைக் கொண்டு செல்வதற்கு மட்டும் பாரவண்டி ஏற்பாடு செய்யப்பட்டது.

இராமானுஜர் தன் சீடர்களுடன் புறப்பட்டார். மழை இடையே வந்தாலும் குடை இருந்ததால் சௌகரியமாகப் பயணம் செய்தார்கள். யாதவகிரி என்று காசி மகாத்யமும், நாராயண கிரி என்று பத்மபுராணமும், வைகுண்ட வர்த்தமான ஷேத்திரம் என்று மத்ஸய புராணமும், பூலோக வைகுண்டம், புவனகோசம், நாராயணாத்ரி, வேதாத்ரி, தட்சிண பத்ரிகாசிரமம் என்று

---

* தொண்டனூருக்கு வடக்கே 20 கிலோமீட்டர் தூரத்தில் இருக்கிறது மேல்கோட்டை.

** விட்டு விட்டுப் பெய்யும் மழைக்கு ஸ்வாதி மழை என்று பெயர்.

சத்வத சம்ஹிதையும் பலவகையாகக் குறிப்பிடப் பெற்றதும், உயர்ந்த இடத்தில் பல்லாண்டுகளுக்கு முன்னால் இருந்ததாலும் தட்சிணத்தின் மேற்குப் பகுதியில் அமைந்திருந்ததாலும் மேல்கோட்டை என்று அழைக்கப் பட்ட புண்ணிய க்ஷேத்திரத்தை அவர்கள் அடைந்தார்கள். மேல் கோட்டை அடிவாரத்திற்குச் சென்ற போது இருட்டி விட்டது.

ஆகவே அங்கிருந்த எழிலார்ந்த கல்யாணி புஷ்கரணியைச் சுற்றியிருந்த மாடங்களில் எல்லோரும் தங்கினார்கள். மழை பெய்து கொண்டிருந்தபடியால் யாரும் நீராட வில்லை.

மாறாக அடுப்பை மூட்டி உணவு தயாரிக்க முற்பட்டார்கள் சீடர்கள். பொங்கலும் தயிர் சாதமும் தயாரிக்கப்பட்டது. எல்லோரும் உண்டு மாடங்களில் அடக்கமாகத் தங்கினார்கள்.

இரவில் கனமழை பெய்தாலும் பொழுது விடிந்த நேரத்தில் முற்றிலுமாக நின்றது. அனைவரும் கல்யாணி தீர்த்தத்தில் நீராடி வேற்றுடை அணிந்தார்கள். கையில் இருந்த திருமண்ணைக் கொண்டு நெற்றியிலும் இதர பகுதியிலுமாகப் பன்னிரண்டு திருமண் காப்புகளை அணிந்து கொண்டார்கள். பிறகு உரிய ஆயுதங்களுடன் அக்குளத்தின் தென்மேற்கில் சென்று செண்பக வனத்தை அடைந்தார்கள்.

அங்கே துளசிச் செடிகள் நிரம்ப இருந்தன. அவற்றைத் தொட்டு கண்ணில் ஒற்றிக் கொண்டார் இராமானுஜர். சிஷ்யர்கள் பாம்புப் புற்றைத் தேடினர்.

“சுவாமி! இதோ இருக்கிறது பாம்புப் புற்று” என்றான் தொண்டனூர் நம்பி.

புற்று ஆறடி உயரம் இருந்தது.

“புற்றை இடிக்காதீர்கள். உள்ளே இருக்கும் நாகர்களுக்குத் தீங்கு வரலாம். நாகராஜனை வேண்டிக் கொண்டு புற்றின் அடிப் பாகத்தில் கடப்பாரை விட்டு அப்படியே நகர்த்துங்கள். வெகுவாக நகர்த்தமுடியும்” என்றார் இராமானுஜர்.

“புற்று மழையில் நனைந்திருக்கிறதே! இடிந்து விட்டால் என்ன செய்வது சுவாமி?” என்று கேட்டார் தொண்டனூர் நம்பி.

“பாம்புப் புற்று தானாக அமைவது. உறுதியானது. மழையில் நனைந்தாலும் பலமாகவே இருக்கும்” என்றார் இராமானுஜர்.

அப்போது திமுதிமு வென காட்டுவாசிகள் பலர் பறைகளைக் கொட்டியபடி அங்கே வந்தார்கள்.

“இங்கே என்ன செய்கிறீர்கள்?” என்று கேட்டார்கள்.

“ஐயா! இங்கே நாங்கள் நெற்றியில் தரித்துக் கொள்ளும் திருமண் இருக்கிறது. அதை எடுக்கிறோம்” என்றார் தொண்டனூர் நம்பி.

“இந்தப் புற்றை என்ன செய்கிறீர்கள்?” என்று கேட்டார்கள் காட்டு வாசிகள்.

“இதற்குக் கீழேதான் திருமண் இருக்கிறது. ஆகவே புற்றை அகற்றியாக வேண்டும். அதை இடிக்காமல் நகர்த்துகிறோம்” என்றார் தொண்டனூர் நம்பி.

“இந்தச் செண்பகவனம் எங்களுக்குச் சொந்தம். இங்கே உங்களை அனுமதிக்க முடியாது” என்றார்கள் காட்டுவாசிகள்.

“ஐயா! நாங்கள் இந்த மண்ணிற்குச் சொந்தம் கொண்டாட வரவில்லை. எங்களுக்கு வேண்டிய மண்ணை மட்டுமே கொஞ்சம் எடுத்துச் செல்ல விரும்புகிறோம். தடை செய்யாதீர்கள்” என்றார் மருதூர் நம்பி.

“நீங்கள் வேறு எங்காவது தேடுங்கள் இந்தப் பாம்புப் புற்றை அகற்ற நாங்கள் அனுமதிக்க முடியாது. இது எங்கள் கோயில். இதிலுள்ள நாகங்கள் எங்கள் தெய்வம். காலம் காலமாக அவற்றை நாங்கள் வழிபட்டு வருகிறோம். இந்தப் புற்று ஆயிரம் வருடங்களாக இங்கே இருந்து வருகிறது. இதை அகற்றவோ நகர்த்தவோ நாங்கள் ஒப்புக் கொள்ள மாட்டோம்” என்றார்கள் காட்டுவாசிகள்.

“ஐயா! உங்கள் நாகக் கோயிலுக்குச் சேதம் வராமல் நாங்கள் அகற்றுகிறோம். அதன் அடியில் தான் திருமண் இருக்கிறது” என்றார் முதலியாண்டான்.

காட்டுவாசிகள் மசியவில்லை. புற்றைச் சுற்றி நின்று கொண்டார்கள்.

“எல்லோரும் சென்று விடுங்கள். இல்லாவிட்டால் நாங்கள் உங்கள் மீது தாக்குதல் தொடுப்போம்” என்றார்கள்.

“நாம் இவர்கள் அனுமதி பெறாமல் ஒன்றும் செய்ய முடியாது. நாம் தள்ளி நிற்போம். நீ போய் ஊர் மக்களை அழைத்து வா. அவர்களால் தான் இவர்களோடு பேசமுடியும்” என்று தொண்டனூர் நம்பியிடம் சொன்னார் இராமானுஜர்.

எல்லோரும் அந்த இடத்தை விட்டு நீங்கி கல்யாணி தீர்த்தக் கரைக்குச் சென்றார்கள்.

விரைவிலேயே அந்த இடம் பரபரப்பிற்குள்ளாகியது.

மலை மேலிருந்தும் சுற்றுப்புரத்திலிருந்தும் நூற்றுக் கணக்கான மக்கள் அப்பகுதிக்கு வந்தார்கள்.

தொண்டனூரில் இருந்த போது இராமானுஜரைப் பற்றிக் கேள்விப் பட்டு அவரைப் பார்த்தார்கள் பலர். பார்க்க நினைத்தவர்கள் பலர்.

அவர்கள் அனைவரும் இராமானுஜரைக் கண்டதும் பரவசப்பட்டு வணங்கினார்கள்.

ஊர்த்தலைவன் வந்து அவரை வணங்கி "சுவாமி! தொண்டனூர் நம்பிகள் எல்லா விவரத்தையும் சொன்னார். நாம் போய் காட்டு வாசிகளையும் பாம்புப் புற்றையும் அகற்றி விடலாம் வாருங்கள்" என்றான்.

"அப்பனே! காட்டுவாசிகளின் கோரிக்கை நியாயமானது. அவர்கள் புற்றைக் கோயிலாகவும் பாம்புகளைத் தெய்வங் களாகவும் கருதும் போது அதை நாம் புறக்கணிக்கலாகாது. புற்றைச் சேதமாகாமல் அகற்றுவதாகச் சொல்லி அவர்களைச் சமாதானப்படுத்த ஊர்மக்களாகிய உங்களால் தான் முடியும். அதை நீங்கள் செய்தால் போதுமானது" என்றார் இராமானுஜர்.

"சுவாமி! அவர்கள் காட்டுவாசிகள் அல்லர். வழிப்பறி திருடர்கள். அவர்களுக்கும் அந்தப் புற்றுக்கும் எந்த விதமான சம்பந்தமும் இல்லை. அந்தப் புற்றில் பாம்புகளும் இல்லை" என்றான் ஊர்த்தலைவன்.

"எதற்கும் அவசரப்பட்டு செயலில் இறங்க வேண்டாம். எல்லோரும் வனத்திற்குள் சென்றால் அங்கே இருக்கும் துளசி செடிகள் பாழாகி விடும். ஆகவே கொஞ்ச பேர்கள் மட்டும் செல்லலாம்" என்றார் இராமானுஜர்.

இராமானுஜரும், சீடர்களும், ஊர்த்தலைவனும், நான்கைந்து ஊர்மக்களும் செண்பக வனத்திற்குச் சென்றார்கள்.

அங்கே காட்டுவாசிகளைக் காணவில்லை.

"பார்த்தீர்களா சுவாமி? திருடர்கள் நாம் வருவதைக் கண்டதும் ஓடி விட்டார்கள்" என்று சொன்ன ஊர்த்தலைவன் புற்றை இடிக்க முற்பட்ட போது "புற்றை இடிக்க வேண்டாம் அப்பனே. இப்போது பாம்புகள் இல்லையென்றாலும் எப்போதாவது வந்து வசிக்கும். ஆகவே அதை அப்படியே நகர்த்த முயற்சி செய்யுங்கள்" என்றார் இராமானுஜர்.

அவர் அப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, புற்றுக்குள்ளே யிருந்து பாம்பொன்று தலை காட்டியது. புற்றை விட்டு வெளியே வந்து கீழே இறங்கி படம் பிடித்து நின்றது.

அதைக் கண்ட இராமானுஜர், "நாகராஜா! உனக்குத் தொல்லை கொடுக்கவோ, உன் புற்றை அழிக்கவோ நாங்கள் வரவில்லை. எம்பெருமாளின் கட்டளையின் படியே வந்திருக்கிறோம். திருமண்ணை எடுத்துக் கொள்ள எங்களுக்கு அனுமதியைக் கொடு" என்றார்.

புற்றுக்குள் இருந்து நான்கு பாம்புகள் வெளி வந்தன. அனைத்தும் அந்த இடத்தை விட்டு அகன்றன.

பிறகு ஊர்க்காரர்கள் இலகுவாகப் புற்றை இடம் பெயர்த்தார்கள்.

கீழே திருமண் இருக்க வேண்டும் என்ற பிரார்த்தனையைச் சீடர்கள் செய்து கொள்ள ஊர்க்காரர்கள் மண்ணைத் தோண்டினார்கள்.

நான்கடி தோண்டியதுமே திருமண் படிவம் இருந்ததைக் கண்டதும் சீடர்கள் "அரங்கா! அரங்கா" என்றார்கள்.

தொண்டனூர் நம்பி கடப்பாரையை வாங்கி திருமண் படிவத்தைப் பெயர்த்துப் பெயர்த்து மேலே தர அதை முதலியாண்டானும் எம்பாரும் வாங்கி உத்தரீயத்தில் போட்டுக் கொண்டார். திருமண் படிவம் அகன்றிருந்ததால் மேலே இருந்த மண் சீவப்பட்டது.

"நம்பீ! இந்த இடம் திருமண் சுரங்கம். நமக்கு மட்டுமல்ல எதிர் காலத்தில் வரக்கூடிய வைஷ்ணவர்களுக்கும் திருமண்ணைத் தரக் கூடியது. ஆகவே இந்த இடத்தைப் பாதுகாப்பாக வைத்தால் காலம் காலமாகப் பலருக்கும் பயன்படும். இதைச் சுற்றிவேலி அமைத்து விடலாம். திருமண் படிவத்தின் ஆழம் எவ்வளவு இருக்கும் என்பதைச் சோதித்துப் பார்" என்றார் இராமானுஜர்.

தொண்டனூர் நம்பி கடப்பாரையை கீழே இறக்கிக் கிளறிய போது ஏதோ கல்லின் மீது படுவது போன்ற ஒலி எழவே கடப்பாரையை வைத்து விட்டுக் கைகளாலேயே அளைந்தார்.

கீழே கிடந்திருந்தது ஆச்சரியம்.

"சுவாமி! கீழே ஏதோ சிலை இருப்பதாகத் தெரிகிறது" என்றார் தொண்டனூர் நம்பி.

சீடர்கள் அனைவருமாக முழுவதும் தோண்டினார்கள்.

கற்சிலையானது முழுவதுமாகத் தென்பட்டதும் அனைவரும் அசந்து போனார்கள்.





தெய்வம் எப்படி வேண்டுமானாலும் பிரசன்னமாகும் அது எங்கும் இருப்பதால். ஆனாலும் பாமர மக்களுக்கு அது விக்கிரகமாக பிரசன்னமாகும் போதுதான் அதிக மகிழ்ச்சியை அளிக்கிறது –




திருமண் படிவத்தின் கீழே தென்பட்ட கற்சிலையைப் பெயர்த்து நிமிர்த்தியதும் அது திருமாலின் சிலை என்பதைக் கண்டதும் இராமானுஜர் குழிக்குள்ளே இறங்கி அச்சிலையைக் கட்டித் தழுவி “எம்பெருமானே! எம்பெருமானே!” என்று பரவசப்பட்டு ஆனந்த தாரையைப் பொழிந்தார்.

“பகவானே! மண்ணிலே கிடந்த உன்னை மண்ணுக்கு மேலே விண்ணவர் காணும் படி கொண்டு வரத்தான் என்னைத் திருவரங்கத்திலிருந்து இங்கே வரவழைத்தாயா? என்னதெனப் புரியாமல் தவித்தேனே! எம்பெருமானே! வாழ்நாளில் மறக்க முடியாத காரியத்தைச் செய்ய வைத்து பரவசப் படுத்தி விட்டாயே! உன்னையன்றி வேறு யாரால் இதைச் செய்ய முடியும்? எவ்வளவு காலமாக நீ மண்ணில் கிடந்தாயோ? இன்றைக்குத் திருமண்ணையும் தந்து உன்னையும் தந்த பெருமானே! நாராயணா! இனி நீ உலகத்தோர் போற்றி வணங்கும் விதமாக உரிய இடத்தில் பிரதிஷ்டை செய்வேன். இதுவே என் பிரதிக்ஞை” என்று தழுதழுத்த குரலில் சொன்னார்.

சீடர்களும் ஆனந்தக் கண்ணீர் வடித்தார்கள்.

மக்களும் அங்கே கூடி சிலையைப் பார்த்து “நாராயணா! நாராயணா” என்று ஓங்கி குரல் கொடுத்தார்கள்.

எல்லோருமாகச் சேர்ந்து கயிற்றால் கட்டி அச்சிலையை மேலே கொண்டு வந்தார்கள்.

“விக்கிரகத்தை கல்யாணி புஷ்கரணி கரைக்குக் கொண்டு போய் விடலாம்” என்றார் இராமானுஜர்.

ஊர் தலைவன் அதற்கு ஏற்பாடு செய்தான்.

காட்டு மரங்களை வெட்டி கட்டுமரம் போல அமைத்து அதில் பெருமாள் சிலையை படுக்க வாட்டில் வைத்து கயிற்றால் பிணைக்கச் செய்தான்.

கட்டுமரத்தைக் கயிற்றால் கட்டித் தேரை இழுப்பதைப் போல மக்களை விட்டு இழுக்கச் செய்தான். கட்டுமரம் பின்னாலிருந்தும் தள்ளப்பட்டது.

ஆனால் இரவு முழுவதும் மழை பெய்து தரையானது ஈரமாக இருந்தபடியால் கட்டுமரம் இழுப்பிற்கு இசையவில்லை.

எனவே கட்டுமரத்தை வாகனத்தைப் போல பாவித்து அதற்கு தண்டுகளைப் பிணைத்து தூக்கிச் செல்வதற்கு வழி செய்தான்.

சிஷ்யர்களும் மக்களுமாக இருநூறு பேர் கட்டு மரத்தைத் தூக்கிச் சென்று கல்யாண தீர்த்தக் கரையில் வைத்தார்கள்.

கட்டுக்களை அவிழ்த்து பெருமாளை தீர்த்தக் கரை மாடத்தில் கொண்டு போய் நிறுத்தினார்கள்.

குளத்திலிருந்து சிஷ்யர்கள் மூலம் நீரைக் கொண்டு வந்து திருமஞ்சனம் செய்தார் இராமானுஜர். புதிய வஸ்திரத்தால் துடைத்தார். அங்கே கிடைத்த திருமண்ணைக் குழைத்து பெருமாளுக்குத் திருமண்காப்பு இட்டார். செண்பக வனத்தில் இருந்த துளசிகளைக் கொண்டு சிஷ்யர் முதலியாண்டான் மாலையாகத் தொடுத்துக் கொடுக்க அதை பெருமாளுக்குச் சூட்டினார்.

தற்போது பெருமாளுக்கு உரிய தெய்வீகக் களை உண்டானதைக் கண்டு இராமானுஜரும், சிஷ்யர்களும், மக்களும் பேரானந்தம் அடைந்தார்கள்.

பெருமாள் சிலை கண்டெடுக்கப்பட்ட செய்தி ஆழிப் பேரலையைப் போல பரவியதால் மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து தரிசிக்கலானார்கள்.

திருமண் கிடைத்த இடம் சுத்தம் செய்யப்பட்டு பாது காப்பிற்காக மூங்கில் வேலி அமைக்கப்பட்டது.

மூன்று நாட்களுக்கு பெருமாளை மக்கள் தரிசனம் செய்தார்கள்.

நான்காம் நாள் மன்னன் விட்டலராயன் குடும்பத்தோடு வந்து பெருமாளை தரிசித்து பரவசப்பட்டான்.

இராமானுஜரைப் பார்த்து "சுவாமி! தாங்கள் கர்நாடகத்தில் கால் பதித்ததிலிருந்து நல்ல காரியங்களாகவே நடந்து வருகின்றன. இது நான் செய்த பாக்கியம். என் முன்னோர்கள் செய்த பாக்கியம். இந்த நாடு செய்த பாக்கியம். என் மகளும் மக்களும் செய்த மகா பாக்கியம். என் மகள் மனநோயால் தவித்த போது ராஜ சூத்ர தாரியிடம் ஆருடம் கேட்டேன். அவர்

சோழிகளை உருட்டி விட்டு மகளின் பிரச்சனை தீருமிடம் மேல்கோட்டை என்றார். அப்போது எனக்கு விளங்கவில்லை இப்போது தான் விளங்குகிறது. இந்த மேல்கோட்டையின் பகுதி தான் தொண்டனூர். அங்கே தான் தாங்கள் எங்கள் மகளைக் குணப்படுத்தினீர்கள். இந்த நாள் எங்களுக்குப் பெருநாள். திருநாள். என் பரவசத்தை என்னால் விவரிக்க முடியவில்லை. தங்கள் பாதார விந்தங்களை மீண்டும் மீண்டும் வணங்குகிறோம்" என்று கூறிவிட்டு -

"சுவாமி! வேலாபுரத்தில் பெருமாளுக்கென்று ஓர் ஆலயத்தை நிர்மாணித்து வருகிறேன். அங்கே பெருமாளை பிரதிஷ்டை செய்து விடலாமா?" என்று கேட்டான்.

"மன்னா! நீ நிர்மாணித்து வரும் கோயில் படி முடிவு பெற பல மாதங்கள் ஆகலாம். அது வரை பெருமாளை இங்கே வைத்திருப்பது தகாது. இந்த மலையானது கிருதயுகத்தில் நாராயணத்ரி என்றும் திரேதாயுகத்தில் வேதாத்ரி என்றும், துவாபரயுகத்தில் யாதவகிரி என்றும் வழங்கப்பட்டது.* வெகுகாலத்திற்கு முன் இங்கே கோட்டையிருந்தது. கோயில் இருந்தது. மன்னர்கள் ஆண்டார்கள். மக்கள் நல்ல நிலையில் வாழ்ந்தார்கள். இது மேல் கோட்டை என்று அழைக்கப்பட்டது. பின்னாளில் அயலாரின் படையெடுப்பில் அனைத்தும் நாசப்படுத்தப் பட்டன. கேட்பாரில்லாமல் போன மேல் கோட்டை சீரழிந்து அடையாளத்தையே இழந்தது.** அப்போதிருந்தப் பெருமானாகத்தான் இந்தத் திருவிக்கிரகமும் இருக்க வேண்டும். எனவே இவரை மேல்கோட்டையில் எழுந்தருளப் பண்ணுவதே உகந்தது."

"அப்படியே செய்கிறேன் சுவாமி" என்று சொன்ன விட்டலராயன் தொண்டனூரிலிருந்து வீரர்களையும் பணி யாளர்களையும் அழைத்து மலைக் கோட்டையின் மேலே செல்வதற்கு உறுதியான பாதையை அமைக்கும்படிக் கட்டளை யிட்டான்.

"நீங்கள் அமைக்கப் போகும் பாதை வெறும் மலை உச்சிக்குச் செல்லும் பாதையல்ல. நமக்கெல்லாம் பாதையை நிர்ணயிக்கும் பெருமாளை இங்கிருந்து மேலே எழுந்தருளச் செய்வதற்கான பாதை. காலம் காலமாக பக்தர்கள் மேலே வந்து பெருமாளைத் தரிசிப்பதற்காக உருவாக்கும் பாதை. இதை உருவாக்குவதில் ஏனோ தானோ என்ற முனைப்பு இருக்கக் கூடாது. உண்மையான ஆர்வமும் அர்ப்பணிப்பும் இருக்க வேண்டும். நம்மைப் படைத்த

* Page 3. The Narayanaswami Temple at Mel kote by - Dr. R. Vasantha.

** P 107. 'Mel kote through the ages' Academy of Sanskrit Research. By. Prabakar.

இறைவன் நம்மிடம் எதையும் எதிர்பார்ப்பதில்லை. அந்தத் தனிப் பெரும் குணத்திற்கு நாம் செய்யக் கூடியது அவனுக்கு நம்மை அர்ப்பணித்துக் கொள்வது தான்" என்றார் இராமானுஜர்.

அவரது பேச்சு அனைவருக்கும் தெம்பைக் கொடுத்தது. பக்தியைக் கொடுத்தது.

இரண்டு வாரங்களில் பாதை தயாரானது.

பாதை போட்டவர்களைப் பாராட்டிய மன்னன் எதிர்பார்ப்பு இன்றி ஆவலோடும் அர்ப்பணிப்புடனும் செய்யும் காரியமானது வெற்றியை விரைவில் தரும். தராவிட்டால் அந்த காரியம் நிறைவேற்றப்பட்டதில் மன நிம்மதியைத் தரும்" என்றான்.

இதற்கிடையில் உறுதியான மரங்களைக் கொண்டு தேர் ஒன்று தயார் செய்யப்பட்டு அதற்குச் சக்கரங்கள் அமைக்கப் பட்டன. அத்தேரில் பெருமாள் விக்கிரகம் வைக்கப்பட்டு சரியாமல் இருக்கும் விதமாகக் கயிற்றால் நன்றாகக் கட்டப்பட்டது.

இராமானுஜர் நாளும் கோளும் பார்த்து வரையறுத்த சுபதினத்தில் அத்தேரை கயிறுகளைக் கட்டி மேலே இழுத்தார்கள் மக்கள். பின்புறத்தில் யானைகள் இருந்து முட்டித் தள்ளின. சரியாமல் தாங்கின. ஆயிரம் வீரர்கள் பக்கங்களில் நிற்க, அனைவரும் "நாராயணா! நாராயணா" என்று முழங்க தேரானது மெல்ல மெல்ல மலைப் பாதையில் முன்னேறியது.

அதிகாலையில் துவங்கிய அந்தப் புனிதப் பயணம் விக்னம் எதுவுமின்றி நண்பகலில் மலைக் கோட்டையை அடைந்த போது மக்களின் மகிழ்ச்சியும் பரவசமும் எல்லைகளைத் தாண்டியது. "நாராயணா! நாராயணா!" என்றும் "பகவானே! பகவானே!" என்றும் குரல் கொடுத்துக் கூத்தாடினார்கள்.

மன்னனுக்கு அந்தக் காட்சி மகிழ்ச்சியாக இருந்தது.

மகளின் உடல்நிலை சரியில்லாமல் போனதால் வேதனை யோடு கழித்த நாட்கள் -

போர் போர் இரண்டு ஆண்டுகளாக ரத்த ஆற்றை ஓட வைத்து வெற்றியென்னும் வெறியோடு கழித்த நாட்கள் -

என கண்ணுக்கும் நெஞ்சிற்கும் உறுத்தல்களையும் உளைச்சல் களையும் தந்து வந்த காட்சிகள் மறைந்து -

மக்கள் கீழே இருந்த பெருமாள் சிலையை மிகுந்த ஆர்வத்தோடும், ஆரவாரத்தோடும், முனைப்போடும் மேலே கொண்டு வந்து சேர்த்து திருப்தியோடு ஆடிப்பாடிக் களித்தது மன்னனை நெகிழ வைத்தது.

சமணனான தனக்கு ஜெயதேவர், நீலகேசி என்று ஆச்சார்யர்கள் இருந்தும், சமண விஹாரங்கள் பற்பல இருந்தும் அங்கெல்லாம் காணாத பரவசத்தை மேல்கோட்டையில் மக்களிடம் கண்ட போது அவனுக்கு இதமாக இருந்தது.

"இதுதான் உண்மையோ! இதுதான் உண்மையான தெய்வமோ! இதுதான் உண்மையானப் பரவசமோ! இது தான் உண்மையான பக்தியோ! இதுதான் கர்நாடகத்திற்குத் தேவையோ! இது தான் இந்நாட்டின் எதிர்காலமாக இருக்குமோ?" என்று பலவாறு எண்ணி மருண்டான்.

இதற்கிடையில் பக்தர் ஒருபர் பரமானந்தப்பட்டு பாட லொன்றைப் பாடலானார்.

**புல்லாங்குழல் கொடுத்த மூங்கில்களே! - எங்கள்**
**புருஷோத்தமன் புகழ் பாடுங்களேன்**
**வண்டாடும் கங்கை மலர்த் தோட்டங்களே! - எங்கள்**
**மதுசூதனன் புகழ் பாடுங்களேன்**

**- புல்லாங்குழல்**

**பன்னீர்மலர்ச் சொரியும் மேகங்களே - எங்கள்**
**பரந்தாமன் மெய்யழகைப் பாடுங்களேன் - தென்கோடித்**
**தென்றல் தரும் ராகங்களே - எங்கள்**
**ஸ்ரீகிருஷ்ண மூர்த்தி புகழ் பாடுங்களேன்**

**- புல்லாங்குழல்**

**குருவாயூர் தன்னில் தவழ் கின்றவன் - ஒரு**
**கொடியோடு மதுராவை ஆள்கின்றவன்**
**திருவேங்கடத்துள் அருள்புரிகின்றவன் - அந்த**
**ஸ்ரீரங்கத்தில் பள்ளி கொள்கின்றவன்**

**- புல்லாங்குழல்**

**பாஞ்சாலி புகழ் காக்க தன்கை கொடுத்தான் - அந்தப்**
**பாரதப் போர் முடிய சங்கை எடுத்தான்**
**பாண்டவர்க்கு உரிய ஒரு பங்கைக் கொடுத்தான் - நாம்**
**படிப்பதற்குக் கீதை எனும் பாடம் கொடுத்தான்.***

சரியான நேரத்தில் சரியாகப் பாடிய பக்தரை இராமானுஜரும் விட்டலராயனும் ஆசிர்வதித்தார்கள்.

பிறகு தேரிலிருந்து பெருமாள் விக்கிரகத்தை எடுத்து வைத்தார்கள்.

அப்பகுதிக்குத் தெற்கே இருந்த திருக்குளங்களிலிருந்து நீரைக் கொண்டு வந்து இராமானுஜர் தன் கைகளாலேயே

* பாடலாசிரியருக்கு நன்றி.

திருமஞ்சனம் செய்தார். துளசி மாலைகளும் மலர் மாலைகளும் தயாரிக்கப்பட்டுச் சாத்தப் பட்டன. விக்கிரகத்திற்கு வெய்யிலும் மழையும் படாவண்ணம் மூங்கில் கூரை ஒன்று அமைக்கப்பட்டு குத்து விளக்குகள் இரண்டு வைக்கப்பட்டன. அவற்றை ஏற்றி வைக்கும் படி மன்னனிடம் சொன்னார் இராமானுஜர்.

அதனை மிகவும் பாக்கியமாகக் கருதி விளக்கை ஏற்றினான் மன்னன்.

"கீழே இருந்த பெருமாளை நாமெல்லோரும் நாராயணா! நாராயணா! என்று கூவி ஆனந்தப்பட்டதால் சுவாமிக்குத் திருநாராயணன் என்றுத் திருநாமமே விளங்கட்டும். அவர் தற்போது எழுந்தருளியுள்ள இந்த ஸ்தலம் திருநாராயண புரம் என்று அழைக்கப்படும்" என்றார் இராமானுஜர்.

அவர் கூறியது மன்னன் உட்பட அனைவருக்கும் ஏற்புடையதாக இருந்ததால் "ஆகா! அதுவே சரி. திருநாராயணா திருநாராயணா" என்று மக்கள் அங்கீகாரக் குரல் கொடுத்தார்கள்.

இராமானுஜர் பெருமாளுக்கு முன் அமர்ந்து உரிய பூஜைகளை ஆத்மார்த்தமாகச் செய்து விட்டு மக்களைப் பார்த்து உபன்யாசம் செய்தார்.

"இந்த மலையில் பக்தி சாரரான திருமழிசை ஆழ்வார் பன்னிரண்டு ஆண்டுகள் தங்கி தவம் புரிந்தார்.* அதன் காரணமாக இந்த இடம் ஞானமண்டபம் என்று அழைக்கப் பட்டது. இங்கே சற்று உயரத்தில் எழுந்தருளியிருக்கும் நரசிம்ம மூர்த்தியை பிரஹலாதன் பிரதிஷ்டை செய்து வழிபட்டான். கிருதயுகத்தில் சனத்குமார முனிவர் திருநாராயணரைக் கொண்டு வந்து இங்கே வழிபட்டதால் இது நாராயணாத்ரி என்று அழைக்கப்பட்டது. திரேதாயுகத்தில் தத்தாத்ரேயர் தனது சீடர்களுக்கு வேதங்களைப் பயிலச் செய்ததால் இது வேதாத்ரி என்று அழைக்கப்பட்டது. துவாபரயுகத்தில் கிருஷ்ணரும் பலராமரும் இப்பெருமாளை வழிபட்டு வந்ததால் இது யாதவகிரி என்று அழைக்கப்பட்டது. இந்த மலையும் பெருமாளும் யுகங்களைக் கடந்த புராதனச் சிறப்பு வாய்ந்தவை. அப்படிப்பட்ட புராதன புண்ணிய நகரமும் ஆலயமும் அதன் அருமை தெரியாத எதிரிகளால் பிற்காலத்தில் பாழ்படுத்தப் பட்டன. மேல்கோட்டை என்ற பெயரே அழியும் வண்ணம் சிதைக்கபட்டன. மறைக்கப் பட்டன. அந்த காலத்தில் அந்த அயலவர்களிடமிருந்து காப்பாற்றவே நமது புண்ணியவான்கள்

* Page 221. 'Melkote through the Ages' By Prabakar. Published by Academy of Sanskrit Research, Melkote.

பெருமாளை பத்திரமாகக் கீழே கொண்டு வந்து கல்யாணி தீர்த்தத்தின் தென் மேற்கே இருந்தச் செண்பக வனத்தில் புதைத்து வைத்தனர். அந்தப் புண்ணியவான்களுக்கு நாம் நன்றிக் கடன் பட்டவர்கள். எல்லோரும் அவரை வாழ்த்துங்கள்'' என்றார்.

“இராமானுஜரை தொடர்ந்து “புண்ணியவான்கள் நமது வழிபாட்டிற்காக மண்ணிலே புதைத்து காத்து பெருமாளை இந்த மேல்கோட்டைக்குக் கொண்டு வந்தார் மன்னர் விட்டலராயர். அவரையின்றி வேறு யாராலும் இந்த அரிய சேவையைச் செய்திருக்க முடியாது. அவரவர் தத்தமது சேவைகளைச் செய்வதுதான் எக்காலத்திலும் ஏற்றது. அதைப் புரிந்து கொள்ளாமல் மாறுபடும் போதுதான் சிக்கல்கள் தோன்றுகின்றன. அந்த வகையில் அரசருக்குரிய வகையில் சிறப்பாகச் செயல்பட்டு பெருமாளை மேலே கொணர்ந்த மகாராஜாவுக்கும் உங்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அதே சமயம் ஒன்றை இங்கே தெரிவிப்பது சன்யாசி என்ற முறையில் கடமையாகிறது.

“உலகம் முழுவதையும் ஒரு குடையின் கீழ் ஆளும் மன்னர்கள் உண்டு. அவர்களில் பலர் என்றேனும் ஒரு நாள் அனைத்தையும் இழந்து மண்சட்டியை ஏந்திப் பிச்சையெடுக்க வேண்டி வரும். அப்படி பிச்சையெடுக்க முயலும் வேளையில் நாயானது அச்சட்டியில் சோறு இருப்பதாகக் கருதி அதைக் கவர முற்படுகையில் அச்சட்டி கீழே விழுந்து உடையும். பிச்சையெடுக்கப் பாண்டமும் இல்லாமல் அவன் வேதனையுறுவான். புலம்புவான். இந்த நிலை வரும் வரை காத்திராமல் மாமன்னனாய் இருக்கும் போது ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடியைப் பற்றலாம் அல்லவா? அப்பற்றினால் இந்த நிலை வராதல்லவா? இதை நான் கூற வில்லை. நம்மாழ்வார் காத்தருள்கிறார்.

**- ‘ஒரு நாயகமாய் ஓட உலகுஉடன் ஆண்டவர்**
**கரு நாய் கவர்ந்த காலர் சிதைகிய மானையர்**
**பெருநாடு காண இம்மையிலே பிச்சைதாம் கொள்வர்**
**திருநாரணன் தாள் காலம்பெறச் சிந்தித்து**
**உய்ம்மினோ’-***

“இது நம்மாழ்வாரது திருமொழி. இப்பாசுரத்திற்குப் பின்னுள்ள பாசுரங்களிலும் மன்னரது உயர் நிலை பற்றியும்

---

* நம்மாழ்வாரின் திருவாய் மொழி. நாலாயிர திவ்யப் பரிபந்தப் பாசுரம் எண் 3007.

இந்தப் பாசுரத்தைப் பாடிப் பேசியது மேல்கோட்டை சம்பந்தப்பட்ட இராமானுஜரின் எல்லா நூல்களிலும் இடம் பெற்றுள்ளன. இது ஒரு சரித்திரப் பூர்வமானச் சம்பவம்.

தாழ்நிலை பற்றியும் தெரித்துள்ளார். இது மன்னர்களுக்கான அறிவுரை என்று யாரும் கருதி விட வேண்டாம். மனிதனாகப் பிறந்த எல்லோருக்குமான அறிவுரை இது. சோதனை வந்தபின் - தீராத வேதனை வந்தபின் - இழி நிலை நாராயணனை நினைப்பதாலும் தொழுவதாலும் என்ன பயன்? வருவதற்கு முன்பே அவனைச் சரணடைந்து விட்டால் அவற்றிலிருந்து காத்துக் கொள்ளலாம் அல்லவா?

"ஒருவனது ஆயுட்காலம் நூறு வருடங்கள் என்று வைத்துக் கொண்டால் அதில் ஐம்பது ஆண்டுகள் அவன் உறங்கியே கழித்து விடுகிறான். பதினைந்து ஆண்டுகளாக ஒன்று மறியாத பாலகனாகக் கழிக்கிறான். மீதியுள்ள ஆண்டுகளில் பசி, பிணி, மூப்பு, துன்பம் ஆகியவை இடம் பெற்றுக் கழிகின்றன. இந்தக் கணக்குப்படி பார்த்தால் அவன் பயனுடையதாகக் கழித்தது எத்தனை ஆண்டுகள் என்று பார்த்தால் எதுவுமில்லை. ஆகவே அந்தப் பயனற்ற வாழ்வை உடைய பிறவி தமக்கு வேண்டாம் என்கிறார் தொண்டரடிப் பொடி ஆழ்வார்.

**- 'வேத நூற்பிராயம் நூறு**
**மனிசர் தாம் புருவரேலும்**
**பாதியும் உறங்கிப் போகும்**
**நின்றதில் பதினை யாண்டு**
**பேதை பாலகன தாகும்**
**பிணிபசி மூப்புத் துன்பம்**
**ஆதலால் பிறவி வேண்டேன்**
**அரங்கமா நகரு ளானே-'***

"அப்படித்தான் நமது பிறவி கழிய வேண்டுமா? அப்படிப்பட்ட பிறவி நமக்குத் தேவைதானா? நமக்குத் தரப்பட்ட கண்கள் பகவானின் அர்ச்சாவதாரத்தைக்** காண்பதற்கு. செவிகள் பகவானின் அருட்செயல்களைக் கேட்பதற்கு. வாய் அவனைப் பாராயணம் செய்வதற்கு. கைகள் அவனை துதிப்பதற்கு. அவ்வாறு நமது புலன்களை எம்பெருமாளின்பால் திருப்புவதற்காகவே திருநாராயணர் தற்போது பூமியை விட்டு மேலே வந்து மேல் கோட்டையில் திருநின்றார் போலும். மகாராஜா கூறியது போல இது திருநாள். பெருநாள். நாம் பாக்கியமடைந்த நாள். பக்தகோடிகளே! உங்களால் முடிந்த பால், தயிர் போன்றவற்றைக் கொண்டு வாருங்கள். நம்மைப் படைத்துக்

* தொண்டரடிப் பொடி ஆழ்வாரின் பாசுரம்.
நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் பாசுர எண் 874.

** சிலை வடிவில் உள்ள பெருமாள்.

காக்கும் கருணாமூர்த்திக்குத் தினமும் திருமஞ்சனம் செய்வோம்" என்று சொல்லி முடித்தார் இராமானுஜர்.

மக்களுக்குப் பேரானந்தம். தமிழ்நாட்டிலிருந்து ஒரு மகான் வந்து அவரது கரங்களால் கண்டெடுக்கப் பட்டு அவராலேயே பூஜிக்கப்பட்டது தங்களது பாக்கியம் தான் என்று கருதினார்கள்.

தெய்வம் எப்படி வேண்டுமானாலும் பிரசன்னமாகும் அது எங்கும் இருப்பதால். ஆனாலும் பாமர மக்களுக்கு அது விக்கிரகமாக பிரசன்னமாகும் போது அதிக மகிழ்ச்சியை அளிக்கிறது.

எனவே அந்த வகையில் மகிழ்ச்சியடைந்த மக்கள் தினந்தோறும் பாலும் தயிருமாக இச்சையுடன் கொண்டு வந்து கொடுத்ததால் அர்ச்சாவதார மூர்த்திக்கு தினமும் திருமஞ்சனம் நடந்தது. இராமானுஜரே அதைச் செய்தார்.

சிஷ்யர்கள் வேத கோஷங்களை எழுப்பினார்கள். ஆழ்வார் பாசுரங்களை இசைத்தார்கள்.

பலகாலமாக நிலைகுலைந்து நாதியற்றுக் கிடந்த மேல் கோட்டை தேவ கோட்டை போல் மாறியது.பக்தர் வெள்ளத்தால் அதிர்ந்து குலுங்கியது. ஆன்மிக மலர்கள் மலை முழுவதும் பூத்தது.

இந்த நிலையில் இராமானுஜர் மன்னனை அழைத்து மன்னா! ரொம்ப காலத்திற்கு பெருமாள் இந்தக் கொட்டகையில் திருவாசம் செய்வது தகாது. ஏற்கனவே பெருமாள் இங்கே நல்ல நிலையில் திருவாலயத்தில் எழுந்தருளி இருந்தார். அதன் எச்சங்கள் ஆங்காங்கே இருப்பதை நாம் பார்க்கிறோம். ஆகவே அவருக்கு இங்கே முறையாக ஓர் ஆலயம் அமைத்து வழிபடுவது தான் சிறந்தது" என்றார்.

அதே சமயம் மேல்கோட்டையின் கீழ்ப் பகுதியில் இடிந்து போன மண்டபம் ஒன்றில் உடைந்து போன மனத்தோடு அமர்ந்திருந்தார் நீலகேசி.

அவருக்கு முன்னால் ஒரு ஆணும் ஒரு பெண்ணும் அமர்ந்திருந்தார்கள்.

ஆணின் பெயர் சூளாமணி.

பெண்ணின் பெயர் சூடாமணி.





ஒரு சம்பவம் ஒரு பாடமாக அமையுமானால் அந்தச் சம்பவம் மீண்டும் நடைபெறாமல் கவனித்துக் கொள்பவனே விவேகமானவன் ஆவான் – இராமானுஜர்




இராமானுஜர் கூறியதைக் கேட்டதும் "தங்கள் விருப்ப மட்டுமல்ல சுவாமி. என் விருப்பமும் அதுதான். மக்களும் அவ்வாறு தான் விரும்புவார்கள் என்பதில் சந்தேகமும் இல்லை. இதை எனது கடமையாகவே நிறைவேற்றுவேன்" என்றான் மன்னன் விட்டலராயன்.

இராமானுஜர் சற்றே தயங்கியதைக் கவனித்த மன்னன் "என்ன தயக்கம் சுவாமி? என் மீது நம்பிக்கையில்லையா?" என்று வினவினான்.

"தொண்டனூரில் ஆரம்பித்து இந்த நேரம் வரை நீ செய்து வரும் சேவை உன்மீது எனக்கு அபாரமான நம்பிக்கையை உண்டாக்கியிருப்பது சத்யம். ஆனால் உன் மீது பாரத்தைச் சுமத்துவதற்குத்தான் தயங்குகிறேன்."

"எதற்காகச் சுவாமி தயக்கம்?"

"நீ சமணன் என்பது நாடறியும். நானும் நன்றாகவே அறிவேன். சமண மன்னனிடம் பெருமாளுக்கு ஆலயம் கட்டும் படி கோரிக்கை விடுவது தயக்கமாக இருக்கிறது."

"சுவாமி! வேலாபுரத்தில் பெருமாளுக்கு உலகமே வியக்கும் ஆலயத்தைக் கட்டி வருகிறேன். அது போலவே விஜய நாராயண புரத்திலும், தொண்டனூரிலும், குடகிலும், மலைக் காட்டிலும் பெருமாள் ஆலயங்களைக் கட்டுவதற்கு உத்தேசித்திருக்கிறேன். அப்படியிருக்கும் போது இந்த மேல்கோட்டையில் கட்ட மாட்டேனா? அங்கே எல்லாம் இன்னும் பெருமாள் மூர்த்தம் இல்லை. இங்கே மூர்த்தம் இருக்கிறது. ஆலயம் இல்லை. அதைக் கட்ட வேண்டியது ஓர் அரசன் அல்லவா? நான் சமணன் என்றாலும் இந்நாட்டில் சமணர்கள் மட்டும் இல்லையே?"

"மன்னா! நான் சோழநாட்டுச் சம்பவங்களால் அசதியடைந்திருக்கிறேன். அங்கு உண்டான அதிருப்தியும் அசம்பாவிதமும் இங்கே நடந்து விடக் கூடாது என்பதில் எச்சரிக்கையாய் இருக்கிறேன். தொண்டனூரில் எனக்காக நியமித்த மடம்

விஷயத்திலும் எனக்கு உறுத்தல் இருக்கிறது. ஏரி கட்டும் விஷயம் எல்லோருக்கும் நீர் அளிக்கும் பொதுவான விஷயம். அந்த ஏரி அமையுமானால் சமணர் உட்பட அனைவரும் பயன்படுத்துவார்கள். இங்கே பெருமாள் கோயில் கட்டினால் அவர்கள் வரமாட்டார்கள். எதிர்க்கவும் முற்படுவார்கள்."

"சுவாமி! சமணர்களுக்கு கர்நாடகத்தில் நிரம்ப விஹாரங்கள் இருக்கின்றன. பிற மதத்தவருக்கு உரிய ஆலயங்களை மன்னன் என்ற முறையில் அமைக்க முற்பட்டால் அதைத் தடுக்கும் உரிமை சமணருக்கு இல்லை."

"மன்னா! நான் கர்நாடகத்திற்கு வந்த பிறகு பல விஷயங்களைக் கேள்விப்பட்டேன். வேலாபுரத்தில் நீ எழுப்பும் பெருமாள் கோயிலைச் சமணர்கள் விரும்பவில்லை என்பது அதில் ஒன்று."

"சமண மன்னனான நானே கட்டும் போது அவர்கள் எதிர்த்தாலும் நான் பொருட்படுத்த வில்லை. மன்னனாக இருப்பவன் எல்லாருக்கும் பொதுவானவன். அதைத்தான் நிரூபித்து வருகிறேன்."

"விட்டலராயா! சோழநாட்டில் தில்லையம்பதியில் நடராஜர் கோயில் இருக்கிறது. அக்கோயிலுக்குள் பல்லவ மன்னர் நந்திவர்மர் ஸ்தாபித்த பெருமாள் கோயிலும் இருக்கிறது. சைவர்களும் தீட்சிதர்களும் சேர்ந்து பெருமாள் கோயிலை இடித்துத் தள்ளும்படி நீண்டகாலமாகக் கோரி வருகிறார்கள். வைஷ்ணவர் வளர்வது அவர்களுக்கு உறுத்துகிறது. இது சம்பந்தமாக மதப்பூசல்கள் அடிக்கடி நடந்து வருகின்றன. அதுபோல் இங்கு நடந்து விடக் கூடாது. அதற்கு நான் காரணமாகி விடக்கூடாது."

"சுவாமி! தாங்கள் எதற்காகத் தமிழகத்தில் நடக்கும் விஷயங் களையே கருத்தில் வைத்திருக்கிறீர்கள்?"

"ஒரு சம்பவம் ஒரு பாடமாக அமையுமானால் அந்தச் சம்பவம் மீண்டும் நடைபெறாமல் கவனித்துக் கொள்பவனே விவேகமானவன். நாங்கள் வேறு வேறு என்றாலும் பேதங்கள் பொதுவானவை. அவை எங்கும் நடக்கும். ஆகவே தான் தமிழகத்தின் நிலவரத்தை அடிப்படையாக வைத்து நடந்து கொள்கிறேன்."

"சுவாமி! கர்நாடகம் தமிழகம் அல்ல என்பதைத் தாங்கள் போகப் போக உணர்ந்து கொள்வீர்கள். இங்கே மதக் கலவரம் நடவாது. நடந்தால் ஒடுக்குவேன். தாங்கள் கவலைப்படவே வேண்டாம். நான் சமணனாக இருந்து இங்கு கோயில் கட்டுவது

சங்கடமாக இருந்தால் நான் வைணவனாகவே மதம் மாறி கோயிலைக் கட்டி முடிப்பேன்.''

"என்ன சொல்கிறாய் மன்னா! கோயிலைக் கட்டுவதற்காக மதம் மாறுவதா? தவறு. தவறு.''

"சுவாமி! தங்களுக்குத் தெரியாததல்ல. காஞ்சியை ஆண்ட பல்லவ மாமன்னர் மகேந்திர வர்மர் சமணராக இருந்தவர். சைவ மதத்திற்கு மாறினார். சைவ மதத்தை வளர்த்தார். நான் வைணவ மதத்திற்கு மாறக் கூடாதா? என்னாகி விடும்?''

"நாம் மறுபடியும் பேசலாம் மன்னா'' என்று கூறி பேச்சை நிறுத்திக் கொண்டார் இராமானுஜர்.



இதே நேரத்தில் மேல்கோட்டையின் கீழே செண்பக வனத்திலிருந்து காததூரத்தில் இருந்த கானகத்தில் இடிந்து போன மண்டபம் ஒன்றில் உடைந்து போன மனத்துடன் அமர்ந்திருந்தார் நீலகேசி.

தலைக்குடைச்சல் அதிகமாய் இருந்தது.

"இந்த மண்டபத்தின் நிலையும் நமது நிலையும் ஒன்று'' என்று முனகினார் நீலகேசி.

"என்ன சொல்கிறீர்கள் ஐயா?'' என்று கேட்டான் சூளாமணி.

"எனது பெரும் துரதிர்ஷ்டம் என்னவென்றால் உன்னைப் போன்ற முட்டாளுக்கு ஒன்றுமில்லாத வார்த்தைகளுக்கு விளக்கம் சொல்வது தான். சூளாமணி! இந்த மண்டபம் உடைந்துச் சேதமடைந்தது போல நமது சமணமும் உடைந்து விட்டது என்கிறேன். இது கூடவா உனக்குப் புரிய வில்லை?'' என்று கோபப்பட்டார் நீலகேசி.

"ஐயா! மண்டபங்கள் உடையலாம். மாளிகைகள் சிதையலாம். கோபுரங்கள் கூட இடிந்து விழலாம். ஆனால் சமணத்திற்கு அந்த நிலை ஒரு போதும் வராது'' ஏனென்றால் சமணம் புராதமானது. உறுதியான அடித்தளத்தைக் கொண்டது என்றான் சூளாமணி.

"வயதான மரங்கள் புயல் காற்றில் விழுந்து விடும். கடும் வெய்யிலில் பட்டுப் போய் விடும். காட்டு வாசிகள் வெட்டிப் போட்டு விடுவார்கள். காட்டுத்தீயும் பழம் மரங்களைப் பொசுக்கும். வெறும் பழமையும் புராதனமும் மதத்தைக் காப்பாற்றாது. நாமிருக்கும் இந்த மண்டபமும் புராதனமான

தாகத்தான் இருக்க வேண்டும். ஆனால் இடிந்து விட்டது. ஏன்? அதைச் சரியானபடி யாரும் பராமரிக்க வில்லை. சமணமும் அப்படித்தான் இருக்கிறது" என்றார் நீலகேசி.

"நீங்கள் இப்படிச் சொல்வது? தற்போது சமணத்தின் ரட்சகராக இருப்பது நீங்கள் தானே? காப்பது நீங்கள் தானே? உயர்த்துவதும் நீங்கள் தானே? பிறகெப்படி அது உடைந்து போகும்?" என்று கேட்டான் சூளாமணி.

"வண்டியோட இரண்டு சக்கரங்கள் வேண்டும். அதில் ஒன்று பெரியதாகவும் மற்றொன்று சிறியதாகவும் இருந்தால் வண்டி ஓடாது. இதுநாள் வரை சக்கரங்கள் சரியாக இருந்தன. வண்டியும் சரியாக ஓடியது. தற்போது ஒன்று சிறியதாகி விட்டது. ஆகவே வண்டி ஓட வில்லை. நிலை குலைந்து விட்டது" என்றார் நீலகேசி.

"சிறியதாகி விட்டச் சக்கரம் என்று யாரைக் குறிப்பிடுகிறீர்கள்?"

"அது உனக்கு வேண்டாம் சூளாமணி. அது இப்போதைக்கு ரகசியமாகவே இருக்கட்டும். அந்தச் சக்கரத்தை விடு. என்னை எடுத்துக் கொள். நான் வண்டிக்கான ஒழுங்கான சக்கரமாகத்தான் இருந்தேன். என்னையும் பழுதாக்கி விட்டார்கள்."

"நீங்கள் எஃகு சக்கரமாயிற்றே! அதை எப்படி பழுதாக்க முடியும்?"

"இராமானுஜன் என்ற வைஷ்ணவ சன்யாசி திருவரங்கத் திலிருந்து வந்திருக்கிறான். ஒரு வித சக்தியும் இல்லாத அவனை மகாராஜா முதல் அனைவரும் திருவோடும் சிறப்போடும் வந்திருப்பதாகச் சொல்லிச் சொல்லி மாய்கிறார்கள். அவனது வரவு என்னைப் பழுதாக்கி விட்டது."

"அவன் ஒரு விதச் சக்தியும் இல்லாதவன் என்கிறீர்கள். அப்படி இருக்கும் போது அவனது வரவு உங்களை எப்படிப் பழுதாக்கும்?"

"சூளாமணி! மக்கள் ஆட்டு மந்தையாக மாறும் போது அவர்களுக்கு ஆடு எது மாடு எது என்று தெரிவதில்லை. களிமண் பொம்மையைக் கொண்டு வைத்து அதுதான் கடவுள் என்று கூறினால் எல்லோரும் ஒருசேரத் தலையை ஆட்டி குரலெழுப்புவார்கள். மந்த புத்தி படைத்த மனிதர்களை மாறுபட்ட ஒரு சூழ்நிலை எளிதில் மாற்றி விடும். சுயஅறிவை வீழ்த்தி விடும். இராமானுஜன் என்னும் களிமண்ணை எவனோ ஒருத்தன் உயர்த்திப் பிடித்தான். எல்லோரும் வாழ்க வாழ்க என்று கோஷம் போட ஆரம்பித்து விட்டார்கள். அதில் ஒருவனாக நமது மன்னனும் சேர்ந்து விட்டான்.

“அதனால் என்ன ஆகிவிட்டது?”

“நம்மையும் நம் மதத்தையும் ஆதரித்தவன் மன்னன். ஆராதித்தவன் மன்னன். அரவணைத்தவன் மன்னன். அவன் அந்த இராமானுஜனுடன் சுற்றித் திரிகிறான். மேல் கோட்டையில் நடக்கிற கூத்தைப் பார்க்கிறாய் அல்லவா? மலர்மிசை ஏகிய மகாவீர வர்த்தமானரின் பரம பக்தனும் மகா சமணனுமான மன்னன் இப்படி ஒரு வைஷ்ணவ சன்னியாசி யோடு சுற்றிக் கொண்டிருந்தால் சமணத்தின் மீது அவனது கவனம் திரும்புமா? ஆச்சார்யனான என் மீது தான் திரும்புமா? என்னை மன்னன் சந்தித்து பல மாதங்களாகி விட்டன. குருநாதனைச் சந்திக்க வில்லை. உருப்படாத இராமானுஜனைத் சுற்றித் திரிகிறான். இத்தனைக்கும் இராமானுஜன் சோழ மன்னனால் தேசப் பிரதிஷ்டம் செய்யப்பட்டவன். சோழ நாட்டில் மதக் கலவரத்தைத் தூண்டி விட்டவன். இந்த உண்மை நமது மகாராஜா - அங்கஹீனன் - துரோகி - பிட்டி தேவனுக்குத் தெரியும். ஆனாலும் அவனே கதி என்றிருக்கிறான். ச்ரவண பெலகுலாவில் நாம் நடத்திய மகாபிஷேகத்திற்கு வர அவனுக்கு நேரமில்லை. ஆனால் நேரகாலம் என்றில்லாமல் இராமானுஜனுடன் சுற்றிக் கொண்டிருக்கிறான். கீழே கல்யாணி தீர்த்தக் கரையில் கிடைத்த பெருமாள் சிலையை மேலே கொண்டு போய்ச் சேர்த்திருக்கிறான். அங்கே பூஜைகள் நடக்கின்றன. அபிஷேகங்கள் நடைபெறுகின்றன. மக்கள் கூட்டம் கூட்டமாய் கூடுகிறார்கள். மேல்கோட்டை முழுவதும் வைஷ்ணவ அலை வீசுகிறது. இதெல்லாம் எதைக் காட்டுகிறது? என் தோல்வியைக் காட்டுகிறது. என் வீழ்ச்சியைக் காட்டுகிறது. நான் பழுதாகி விட்டதைக் காட்டுகிறது” என்று சொல்லி நிறுத்தினார் நீலகேசி.

சூளாமணி எதுவும் பேசமுடியாமல் அவரையே பார்த்தபடி இருந்தான்.

நீலகேசியே பேச்சைத் தொடர்ந்து “போகிற போக்கைப் பார்த்தால் மகாராஜா பிட்டிதேவன் சமணத்தைத் துறந்து வைணவத்தில் சங்கமமாகப் போகிறான். மேல்கோட்டை சம்பவங்கள் அதைத்தான் எனக்கு உணர்த்துகின்றன. நமது சமணப் பிரச்சனைக்குத் தீர்வு என்ன என்று யட்சிணி அம்பிகா தேவியிடம் கேட்ட போது “மேல் கோட்டை” என்று மட்டும் சொன்னாள். இப்போது தான் அதன் அர்த்தம் விளங்குகிறது. மேல்கோட்டையில் மன்னன் மதம் மாறப் போவதால் மக்களும் மாறுவார்கள். சமணர்களும் மாறுவார்கள். அதைத்தான் குறிப்பால் எச்சரிக்கையாக விடுத்திருக்கிறாள் யட்சிணி” என்றார்.

“நிலைமை மோசமாகத்தான் இருக்கிறது அடிகளே. என்ன செய்யப் போகிறீர்கள்?” என்று கேட்டான் சூளாமணி.

“இந்த நீலகேசி நீலவானத்தைப் போன்றவன். அவனுக்கு வீழ்ச்சி என்பது என்றைக்கும் கிடையாது. நான் கல்லறையிலிருந்து உயிர்த்தெழக் கூடியவன். வெட்ட வெட்டத் துளிர்பவன். எனக்கு மரணமும் இல்லை. கூற்றுவன் என் அனுமதியைப் பெறாமல் என் உயிரைக் கொண்டு போக முடியாது. உண்மையைச் சொல்லப் போனால் உண்மையிலேயே காலன் நான் தான். பலரது காலங்களை நான் தான் முடித்து வைப்பேன். நான் வீழ்ந்து விடுவேன் என்று நினைப்பவர்கள் எழுந்து கொள்ள முடியாத பள்ளத்தில் வீழ்வார்கள். என்னை வெட்ட நினைப்பவர்களின் கைகள் பலமிழந்து விடும். என் உடல் எஃகு உடல். இடி கூட அசைக்க முடியாது. ஆட்ட முடியாது. ஜெயதேவர் மட்டும் அவசரப்படாமல் இருந்திருதால் இன்னேரம் நான் வெற்றியலைகளில் நீந்திக் கொண்டிருப்பேன். அவர் விஷயத்தில் சற்றே பிழை வந்து விட்டது. ஆனாலும் குடி முழுகிப் போய் விடவில்லை. எந்த இராமானுஜன் மதக் கலவரத்தைத் தூண்டி விட்டு தப்பி ஓடி வந்தானோ அதைவிடப் பயங்கரமான கலவரத்தை நான் உண்டாக்குவேன். கர்நாடகம் பற்றி எரியும். அதில் பிட்டிதேவனும் இராமானுஜனும் பொசுங்குவார்கள்.”

“எங்களுக்கான பணி என்ன அடிகளே?” என்று கேட்டான் சூளாமணி.

“நீ வைஷ்ணவனாக மாற வேண்டும். இராமானுஜனின் பக்த கோடிகளில் ஒருவனாகச் சேர வேண்டும். அவனது நம்பிக்கைக்குப் பாத்திரமாகி அவனைப் பற்றியச் செய்திகளை எனக்கு அனுப்ப வேண்டும். அதற்கு ஓர் உதவியாளனை உனக்கு நியமிக்கிறேன். நான் கூறும் போது அந்த இராமானுஜனை வீழ்த்த வேண்டும். இது தான் உன் பணி. புறப்படு” என்றான் நீலகேசி.

“இவள்?” என்றான் சூளாமணி.

“இவளுக்கு உன்னை விட ஆபத்தான பணியைத் தரப் போகிறேன். அதற்குச் சில பயிற்சிகளை அளிக்க வேண்டும். அவளுக்கும் உனக்கும் தொடர்பு இல்லை. இருவருமே இரு உளவாளிகள். உங்கள் எல்லைகள் வேறு வேறு” என்றார் நீலகேசி.

“ஐயா! சூடாமணி என் அன்பிற்குரியவள். அவளை விட்டு என்னால் பிரிந்திருக்க முடியாது.”

“சூளாமணி! நமது லட்சியம் மலையைப் போன்றது. இந்தக் காதலோ எலியைப் போன்றது. நமக்கு மலைதான் முக்கியம். எலி முக்கியமல்ல. நீ காதலிப்பது பற்றியோ காமத்தில் மூழ்குவது பற்றியோ எனக்குக் கவலையில்லை. ஆனால் நமது மகாலட்சியம் நிறைவேறும் வரை நீங்கள் இருவரும் பிரிந்திருக்க வேண்டும். இது என் கட்டளை. புறப்படு” என்றார் நீலகேசி.

சூளாமணி புறப்பட்டான்.

சூடாமணியை ஏற இறங்கப் பார்த்தார் நீலகேசி.

“முன்பு பார்த்ததை விட இப்போது நீ சீரும் சிறப்புமாக இருக்கிறாய். கன்னங்கள் பழம் போல உப்பியிருக்கின்றன. கண்களில் வசீகரம் கூடியிருக்கிறது. ஊமத்தம் பூ போன்று நீண்டு விரிந்த நாசி எடுப்பாக இருக்கின்றது. செவ்விய உதடுகள் செழிப்பாக இருக்கின்றன. தனங்கள் கொழுத்துக் கொண்டாடிக் கொண்டிருக்கின்றன” என்று சொன்ன நீலகேசி “எழுந்து நில்” என்றார்.

அவள் எழுந்து நின்றதும் “ஆகா! பாதங்கள் எத்தனை அழகாகவும் சுத்தமாகவும் சிறிதாகவும் உள்ளன.! முத்தமிடக் கூடிய பாதங்கள்” என்று சொன்ன அவர் “திரும்பு” என்றார்.

அவள் திரும்பியதும் “பின்பக்கம் இருக்கும் பயங்கரம். உன் அல்குலும் அட்டகாசமானதாகத்தான் இருக்கும்” என்று சொன்ன அவர் “உனக்கு இடையே இல்லை” என்றார்.

பிறகு “உன் உடலில் மச்சம் எங்கே இருக்கிறது?” என்று வினவினார்.

“இல்லை” என்றாள் சூடாமணி.

“மாசு மறுவற்ற உடல். தூசு, தும்பு படாத உடல். உன் அங்கங்கள் பேசும் தங்கங்கள். தங்கச் சுரங்கங்கள். உறங்கும் சிங்கங்கள்” என்றார்.

“சுவாமி! இதென்ன இப்படியெல்லாம் பார்க்கிறீர்கள்? பேசுகிறீர்கள்?” என்று கேட்டாள் சூடாமணி.

“கண்கள் இருப்பதால் பார்க்கிறேன். வாய் இருப்பதால் பேசுகிறேன்” என்றார் நீலகேசி.

“ஆனால் நீங்கள் துறவியல்லவா?”

“துறவிக்கும் கண்கள் உண்டு. நாக்கு உண்டு”

“புலன்களைக் கட்டுப்படுத்தியவர்கள் தானே துறவிகள்?”

“தவறாக நினைத்துக் கொண்டிருக்கிறாய். துறவிகள் புலன்களைக் கட்டுப்படுத்த வேண்டியதில்லை. புலன்களைக்

கொண்டு இன்பம் தூய்க்கலாம். ஆனால் அதை இன்பமாகக் கருதாமல் உதாசீனமாகக் கருதரவேண்டும்."

"இப்படிப்பட்ட கருத்தை நான் கேள்விப்பட்டதே இல்லை சுவாமி?"

"எல்லாம் தெரிந்தவனும் இல்லை. ஒன்றும் தெரியாதவனும் இல்லை. அவரவர் தங்களுக்குத் தெரிந்ததைக் கொண்டு காலத்தை ஓட்டுவது தான் வாழ்க்கை."

"எனக்குரிய பணி என்ன அடிகளே!"

"சூடாமணி! நீங்களெல்லாம் சமணத்தைக் காப்பாற்றுவதற்காக என்னிடம் சூளுரை எடுத்தவர்கள். எனது ஆணைக்குப் கட்டுப்பட்டவர்கள். என் ஆணையைத் தவிர வேறு எதையும் ஆணையாகக் கருதாதவர்கள். உங்களுக்கெல்லாம் சூள் சமணர் என்றே பெயர். மறந்து விட்டாயா?"

"இல்லை சுவாமி"

"பிறகேன் தேவையில்லாத கேள்விகளைக் கேட்கிறாய்? நீ ஆற்ற விருக்கும் பணிக்குப் பரிசோதனை தேவை. பயிற்சி தேவை. அதைத்தான் நான் செய்து கொண்டிருக்கிறேன்."

"நான் ஆற்ற வேண்டிய பணியைப் பற்றிச் சொல்லுங்கள் சுவாமி."

"ஹொய்சள இளவரசன் நரசிம்மனிடம் போக வேண்டும். அவனை வசப்படுத்த வேண்டும். வலையில் சிக்க வைக்க வேண்டும். நீ சொல்வதை அவன் தட்டாமல் செய்ய வேண்டும்."

"இளவரசர் பெண்பித்தர் என்று கேள்விப்பட்டேனே?"

"சந்தேகமே இல்லை. அவன் அபார பெண் பித்தன்தான். அதனால் தான் உன்னை அனுப்புகிறேன்."

"அவரை வசப்படுத்த முயலும் போது அவர் என்னைச் சேதப் படுத்தி விட்டால்?"

"பெண் பித்தன் பெண்ணை வைத்துக் கொண்டு பூஜையா செய்வான்? அதோடு பெண்களான நீங்கள் பிறந்தது எதற்காக? ஆண்களிடம் சேதப்படுவதற்காகத்தானே? அதுவும் நீ சேதப்படுவது பிச்சைக்காரனிடமல்ல இளவரசனிடம். அது உனக்குக் கசப்பாக இருக்கிறதா? தனக்கு இன்பத்தைத் தரும் பெண்களை அவன் இமயமாகக் கருதிப் போற்றுவான். தங்க நாணயங்களை வாரி வீசுவான். அதோடு உன் அங்கங்கள் புதுப் புது மலர்களாகவும், காய்களாகவும், கனிகளாகவும் [illegible].

உன்னை இச்சிப்பதற்கு அவன் பெரிதும் விரும்புவான். அவனது அரவணைப்பு கிடைப்பது நீ செய்த பாக்கியம்."

"சுவாமி! நான் சூளாமணியின் காதலி என்பதை மறந்து விட்டீர்களா?"

"நான் மறக்கவில்லை. ஆனால் நம் லட்சியம் என்பது மலை. காதல் என்பது எலி என்று நான் சொன்னதைத்தான் நீ மறந்து விட்டாய். சூளாமணி இலட்சியவாதி. சொன்னதுமே புரிந்து கொண்டு புறப்பட்டு விட்டான். உனக்கு இலட்சிய உணர்வு இல்லை. காதல் உணர்வே இருக்கிறது. சூள் சமணர்களுக்குச் சூளுரை தான் வாழ்க்கை. அதைத் தவிர வேறு எதுவும் அவர்களுக்கு எதுவுமில்லை. சூளுரையை நீ மீறப் போகிறாயா?" என்று கேட்டு விட்டு எதிர்பாராத காரியம் ஒன்றைச் செய்தார் நீலகேசி.

சூடாமணி அதிர்ந்து போனாள்.





வாழ்க்கைப் பயணத்தில் நாம் எதிர் பார்த்ததும் வரும். எதிர்பாராததும் வரும். மறக்கக் கூடியவைகள் வரும். மறக்க முடியாதவைகளும் வரும். எப்படி யானாலும் நமது பயணம் தொடர வேண்டு மேயன்றி நின்று விடக் கூடாது – சூளாமணி




பேசிக் கொண்டே இருந்த நீலகேசி திடீரென சூடாமணியைக் கட்டிப் பிடித்ததால் அதிர்ச்சி அடைந்தாள் சூடாமணி.

அவரது பிடி யமப்பிடி போல முரட்டுப் பிடியாக இருந்ததால் அவள் திணறினாள்.

சூளாமணி அவளை ஒரு முறையும் தீண்டியதில்லை.

ஆகவே நீலகேசியின் பிடியும், இறுக்கமும், வேகமும் அவள் அனுபவித்தறியாத விஷயமாக இருந்ததால் தவித்துப் போன சூடாமணி "என்னை விடுங்கள் அடிகளே! இது தகாது" என்றாள்.

அவளால் சீராக மூச்சைக் கூட விட முடியவில்லை.

"பதறாதே சூடாமணி. இளவரசரிடம் செல்லப் போகிறவள் நீ. உனக்கு நான் பயிற்சிதான் அளிக்கிறேன். ரோமாபுரியில் பெண்களைப் பக்குவப்படுத்திதான் மேலிடத்திற்கு அனுப்பு வார்கள். அப்படித்தான் இது" என்று சொல்லி கைகளால் விஷமம் செய்தார்.

"முதலில் பிடியை விடுங்கள் அடிகளே. மூச்சு நின்று விடும் போலிருக்கிறது" என்று அலறாத குறையாகக் கேட்டாள் சூடாமணி.

நீலகேசி பிடியைத் தளர்த்தினார்.

உயிர் வந்தது போல் இருந்தது அவளுக்கு. ஒரு துறவிக்கு இவ்வளவு பலம் இருக்கும் என்று அவள் எதிர்பார்க்கவில்லை.

அவருக்கு இருக்கும் பலத்தில் தன்னை இறுக்கியே கொன்று விட முடியும் என்று தோன்றியது அவளுக்கு.

அவர் பிடியைத் தளர்த்தினாரே தவிர விடுவிக்க வில்லை. மாறாக உதடுகளைக் கடித்தார்.

"சுவாமி! வேண்டாம். என்னை விட்டு விடுங்கள்" என்று கெஞ்சினாள் சூடாமணி.

“இளவரசனிடம் இப்படியெல்லாம் விலக முயன்றால் நன்றாக அடித்துச் சிறையில் அடைத்து விடுவான். அப்படியெல்லாம் நீ நடந்து கொள்ளக் கூடாது என்று தான் உனக்குப் பயிற்சியை அளிக்கிறேன். நான் இப்போது ஆசிரியன். நீ மாணவி. அதை மறந்து விடாதே” என்றார் துறவி.

“அதெல்லாம் வேண்டாம் சுவாமி. எனக்குத் தெரியும். நான் பக்குவமாக நடந்து கொள்வேன்” என்றாள் சூடாமணி.

“அந்தப் பக்குவத்தை ஆசிரியனாக என்னிடம் முதலில் காட்டு” என்றார் நீலகேசி.

“எனக்குப் பிடிக்கவில்லை. என்னை விடுங்கள்” என்றாள் சூடாமணி.

“கொய்யாத் தோப்பை குரங்கு விடாது. வாழைத் தோப்பை யானை விடாது. மான் கூட்டத்தை வேங்கை விடாது. முதலை தன் பிடியை விடாது. துறவியான நானும் என் பிடியை விட மாட்டேன் வினை முடியும் வரை. பேசாமலிருந்து இணங்கிவிடு. நான் தரும் காமக் கலைகளைக் கற்றுக் கொள். இளவரசனிடம் காட்டு. உன் வலையில் வீழ்வான்” என்றார் நீலகேசி.

வெறுப்பு தாளாமல் அவள் ஏதோ சில வார்த்தைகளை உதிர்த்ததும் கோபத்திற்கு ஆளான அவர் அவரை ஓங்கி அறைந்தார்.

அடியைத் தாள முடியாமல் அவள் மயக்கமடைந்து விழுந்தாள்.

“எனக்கு இதுதான் ராசி. என்னிடம் சிக்கும் பெண்கள் ஒத்துழைப்பதில்லை. மயக்கமடைந்து விடுகிறார்கள். பாவம்” என்று சொல்லிக் கொண்ட அவர் அதுவரை அவர் வர்ணித்த அவளது அங்கங்களை ஆசையுடன் பருகினார். கழுகு ஒன்று கிளியை பட்சிப்பது போல அவளை நசுக்கினார். அவளுக்கு லேசாக மயக்கம் தெளிந்தாலும் எதுவும் செய்ய முடியவில்லை. நாசமாகிக் கொண்டிருக்கிறோம் என்பது மட்டும் புரிந்தது. உள்ளுக்குள் தவித்துக் கொண்டு இயலாமையில் தன்னை இழந்து கொண்டிருந்தாள்.

இதற்கு மேல் இச்சிக்கவும் இம்சிக்கவும் இவளிடம் எதுவுமில்லை என்ற எண்ணம் வந்த பிறகே அவளை விட்டு விலகினார் நீலகேசி.

சூடாமணி வலியாலும் வெறுப்பாலும் துடித்தாள்.

“காமம் என்பது இளமையானது. இனிமையானது. இலகுவானது. அதை வகை தெரிந்து சுவைத்தால் சுவர்க்கம்

என்பது மேலே இல்லை என்பது புரியும்" என்று சூளாமணி அவளிடம் கூறுவான்.

ஆனால் காமம் என்பது கொடுமையானது. வெறுப்புக்கு உரியது. இழிவானது என்று நீலகேசியின் காமத்திலிருந்து தெரிந்து கொண்டாள் சூடாமணி.

நீலகேசியைப் போலத்தான் ஆடவர்கள் இருப்பார்கள் என்றால் அவர்கள் அரக்கர்கள். அயோக்கியர்கள் என்று நினைத்தாள்.

நீலகேசி துறவியும் அல்ல. மனிதனுமல்ல. மிருகம் இல்லை. மிருகத்தை விட மோசமான - இழிவான ஜந்து.

மாணவி என்று சொல்லிக் கொண்ட இளம் பெண்ணிடமே இப்படி நடந்து கொண்ட இப்பாவி துறவி என்று சொல்லிக் கொண்டு உலவுவதை விட துயரம் இந்த உலகிற்கு இருக்க முடியாது என்று கருதினாள்.

வெளகீகனும் வாலிபனுமான சூளாமணி காமக்கடையை விரிக்க முயலாமல் உண்மையானச் சூள் சமணனாக நடந்து கொள்ளும் போது துறவியும் முற்றியவருமான நீலகேசிக்கு எதற்கு இந்த விபரீதம்?

சமணம் அழிந்து விடுமோ என்று கவலைப்படும் சமணன் இப்படியா நடந்து கொள்வான்?

அதுவும் சமணத் தலைவனான இவனே இப்படி நடந்து கொண்டால் சமணம் எப்படி வாழும்?

பாவி! என்னைப் போல் இன்னும் எத்தனைப் பெண்களைச் சீரழித்திருக்கிறானோ தெரியவில்லை.

இவன் இருக்கும் வரை சமணமும் வாழாது பெண்களும் வாழ முடியாது.

தலைவனாகவும் குருவாகவும் இருப்பவன் மற்றவர்களின் கஷ்டங்களை வாங்கிக் கொண்டாவது தங்களுக்குக் கீழே இருப்பவர்களை வாழ்விக்க வேண்டுமே தவிர அவர்களின் வாழ்க்கையைக் கெடுத்து தங்களுக்கு வாழ்வு வருவதற்காகச் செயல்படக் கூடாது.

அப்படிப் பார்த்தால் நீலகேசி தலைவனாகவும் குருவாகவும் இருப்பதற்கு தகுதியற்றவன் என்று கருதிய சூடாமணி தனது உள்ளுணர்வுகளைக் காட்டிக் கொள்ளாமல் மெல்ல எழுந்து உட்கார்ந்து கொண்டு "உங்கள் பயிற்சிக்கு மிகவும் நன்றி சுவாமி" என்றாள்.

“எப்படி இருந்தது பயிற்சி? இதைச் சூளாமணி கூடத் தரமாட்டான். திருப்தியாக இருக்கிறதா? இளவரசனை வீழ்த்துவாயா?” என்று சகஜமாகக் கேட்டார் நீலகேசி.

“இளவரசரை வீழ்த்துவேன். மகாராஜாவை வீழ்த்து வேன். அதோடு துறவிகளையும் வீழ்த்துவேன்” என்றாள் சூடாமணி.

“அது தான் சரி. அது தான் சிறப்பு.”

“சுவாமி! எது எப்படியானாலும் நான் இழந்தது இழந்தது தானே?”

“தகனத்தில் சாம்பலாகப் போகும் இந்த உடம்பு பெற்றுக் கொள்வதற்கு எதுவுமில்லை. இழப்பதற்கும் எதுவும் இல்லை.”

“பிறகு எதற்காக என் மீது உங்களுக்கு இத்தனை ஆவேசம்?”

“சாம்பலாகப் போகும் உடம்பில் சந்தோஷமும் இருக்கிற தல்லவா? அதை எதற்காக விட வேண்டும்?”

“அப்படியானால் துறவிகள் எதை விடுகிறார்கள்? மற்றவர் களிடமிருந்து எப்படி மாறுபடுகிறார்கள்?”

“சூடாமணி! உன்னைப் போன்றவர்கள் மற்றவர்களைச் சதையும் நகமுமாகப் பார்ப்பார்கள். நாங்களோ சதையும் நகமுமாக இருப்பவர்களை எலும்பும் நரம்புமாகத்தான் காண்கிறோம். நாங்கள் இணைவதால் உங்களுக்குத்தான் சுகமும் சந்தோஷமும். எங்களுக்கில்லை.”

“அட! அயோக்கியனே! எல்லாவற்றையும் ஆசை தீர அனுபவித்து விட்டு மோசடிப் பேச்சையா பேசுகிறாய்? நாசமாகப் போவாய் நீ” என்று உள்ளூரச் சபித்துக் கொண்ட சூடாமணி “உங்களுக்கு நிறையத் தெரிந்திருக்கிறது. ஆகவே தான் துறவியாக இருக்கிறீர்கள். எங்களுக்கு எதுவும் தெரிவதில்லை. ஆகவே தான் துறவிகளுக்கு இரையாக இருக்கிறோம். நான் புறப்படலாமா?” என்று கேட்டாள்.

“நீ செல்ல வேண்டியது இளவரசன் இருக்கும் இடமான துவார சமுத்திரம். என்னுடைய பல்லக்கும் புரவியும் பக்கத்தில் தான் உள்ளன. நீயும் என்னோடு வா. துவார சமுத்திரத்தில் விட்டு விடுகிறேன்” என்றார் நீலகேசி.

“வேண்டாம் சுவாமி. நான் தொண்டனூருக்குப் போய் அங்கிருந்து துவார சமுத்திரத்திற்குச் செல்கிறேன்” என்று கூறிவிட்டு நடந்தாள் சூடாமணி.

"நான் அனுபவித்த அங்கங்கள் அசைந்து அசைந்து செல்கின்றன" என்று வக்கிரமாகத் தனக்குள் சொல்லிக் கொண்டார் நீலகேசி.

அவரை விட்டு அகன்ற சூடாமணி கல்யாணி தீர்த்தக் கரையிலேயே நீண்ட நேரமாக அமர்ந்திருந்தாள்.

தனது எதிர்காலம் இருண்டு போய் விட்டதாக எண்ணி நொந்து கொண்டாள்.

சூளாமணி அனேகமாக மேல் கோட்டையில் தான் இருப்பான் என்று நினைத்த அவள் அங்கு போய் அவனைச் சந்தித்து தனக்கு நேர்ந்த பங்கத்தைச் சொல்வது என்று தீர்மானித்தாள்.

கல்யாணி தீர்த்தத்திலேயே நீராடி விட்டு ஈர உடையோடு மேல் கோட்டையை நோக்கி நடந்தாள்.

அதை நோக்கி மக்கள் கூட்டம் நிறையச் சென்று கொண்டிருந்தது.

அவர்களில் சிலர் ஈர உடையுடன் வந்த சூடாமணியிடம் இரக்கம் கொண்டு மாற்றுடையை கொடுத்தனர்.

சாதாரண ஒரு பெண்மணிக்கு இருக்கும் கருணை கூட துறவியான நீலகேசிக்கு இல்லையே என்று எண்ணிக் கொண்டு உடையை மாற்றிக் கொண்டு நடந்தாள்.

மேலே பெரும் கூட்டமாக இருந்தது.

இராமானுஜரின் சீடர்கள் எழுப்பிய வேத கோஷமும், திவ்யப் பிரபந்த கோஷமும் தெய்வீகமாக இருந்ததால் சூடாமணிக்கும் இதமாக இருந்தது.

சமணப் பெண்ணாக இருந்தாலும் தெய்வீக ராகம் அவளை ஈர்த்தது.

கூட்டத்தில் புகுந்து சென்று அங்கே கொட்டகையில் வைக்கப்பட்டிருந்த பெருமாளையும் இராமானுஜரையும் கண்டாள்.

இராமானுஜரைப் பற்றி நீலகேசி தன்னிடமும் சூளாமணியிடமும் அவதூறாக நிறையச் சொல்லியிருந்தார். ஆனால் அவரை நேரில் பார்த்த போது அவையெல்லாம் உண்மையாக இருக்க முடியாது என்று தோன்றியது.

தனது மதத் தலைவர் என்றும் ஆச்சார்யர் என்றும் சொல்லித் திரியும் துறவி நீலகேசியிடம் இல்லாத ஒன்று இராமானுஜரிடம் அவள் கண்டாள். பொன்னிறத்தில் தேஜஸீடன் ஒரு மகான்

வானிலிருந்து இறங்கி பூமிக்கு வந்தால் எப்படி இருககும் என்று கற்பனை செய்தாள். தான் செய்த கற்பனை நிஜமானது போல இராமானுஜர் அவளுக்குக் காட்சியளித்தாள். அவளையும் அறியாமல் அவளது கைகள் அவரைத் தொழுதன.

பிறகு அவள் கூட்டத்தில் சூளாமணியைத் தேடினாள். எங்கும் இல்லை.

ஒரு வேளை அவன் மேல்கோட்டைக்கு வராமல் தொண்டனூருக்குப் போய் விட்டானோ என்று எண்ண முற்பட்ட போது சூளாமணி அவளை நோக்கி வந்தான்.

"என்ன சூடாமணி இங்கே வந்திருக்கிறாய்? உனக்கும் இங்கே பணியைக் கொடுத்து விட்டாரா குருநாதர்?" என்று வினவினான்.

அவனது கோலம் முழுமையாக மாறியிருந்தது. அடர்ந்த காகபட்ச குழலோடு அழகாக இருப்பான் சூடாமணி. அவனை இராமானுஜரைச் சுற்றி இருப்போர் கூட்டத்துடன் சேர்ந்து கொள்ளும் படி நீலகேசி கூறியதும் அதற்குத் தன் தோற்றத்தை வைஷ்ணவனுக்குரிய தோற்றமாக மாற்றிக் கொள்வது தான் சரி என்று தீர்மானித்தான்.

தலையில் குடுமியாக இருக்கப் போதுமான முடியை மட்டும் வைத்துக் கொண்டு மற்றவற்றைச் சிரைத்து நீக்கினான். குடுமி மயிர் கணிசமான நீளத்துடன் இருந்ததால் அதை முடிந்து கொண்டான். நெற்றியில் திருமண் காப்பு அணிந்து கொண்டு உண்மையான வைஷ்ணவனாகவே மாறினான்.

அவனது கோலத்தைக் கண்டதும் நெகிழ்ந்து போனாள் சூடாமணி.

"இவனல்லவா இலட்சியவாதி? தனது அழகான கூந்தலை உதாசீனப்படுத்தி இடத்திற்கேற்ப மாற்றிக் கொண்டு அழகையும் கம்பீரத்தையும் இழந்தானே! வாலிபப் பருவத்தில் இருந்து கொண்டு அந்தப் பருவத்திற்குரிய ஆசைகளை அடைவதில் நாட்டமில்லாமல் சமணத்திற்காக சூள் சமணனாக முற்றிலுமாகத் தன்னை மாற்றிக் கொண்ட இவன் எப்பேர் பட்டவன்?

ஆனால் தனக்குக் கட்டளையிட்ட துறவி நீலகேசி நீசமானவன் என்பதையும் தன்னைக் கெடுத்துச் சீரழித்தவன் என்பதையும் அறிந்தால் சூள் சமணனாகத் தொடர்வானா? நீலகேசியைத் தேடிப் போய் கொல்வானா?" என்றெல்லாம் எண்ணிய அவளுக்கு நீலகேசியைப் பற்றி அவனிடம் சொல்லலாமா வேண்டாமா என்று யோசித்தாள்.

அவள் பதில் கூறாததைக் கண்ட சூளாமணி "என்ன மௌனமாக இருக்கிறாய்? என் தோற்றத்தைப் பார்த்து மௌனமாகி விட்டாயா? சூடாமணி! நீ என் தோற்றத்தை மட்டும் தான் விரும்புகிறாயா? என்னைப் பொறுத்தவரை தோற்றம் எப்படி மாறினாலும் உள்ளம் உன்னிடம்தான் இருக்கும்" என்றான்.

அவள் உள்ளுக்குள் கலங்கினாள்.

"நீ இப்படி உயர்வானவனாக இருக்கிறாய். ஆனால் குருநாதனான நீலகேசியோ புனிதமான துறவிக்குரிய தோற்றத்துடன் இருந்து கொண்டு புல்லுருவியாக நடந்து கொள்கிறான். தெரியுமா?" என்று உள்ளுக்குள் கேட்டுக் கொண்ட அவள் "நீ எதிர்பாராத செய்தி ஒன்றைச் சொல்லட்டுமா?" என்று கேட்டாள்.

"நான் எள்ளளவில் எதிர்பார்ப்பதை விட்டு விட்டேன். குருநாதரின் எதிர்பார்ப்புதான் எதிர்பார்ப்பு! இருந்தாலும் நீ சொல்ல வந்ததைச் சொல்."

"நான் சொன்னால் உன் பேச்சின் போக்கே மாறி விடும். என்ன செய்வாயோ தெரியாது."

"புதிர் போடாமல் பேசு சூடாமணி."

"நீ குருநாதர் என்று மதித்துக் கொண்டிருக்கும் நீலகேசி மதிக்கத் தகுந்தவரல்ல. மிதிக்கத் தகுந்தவர்."

"என்ன நீ இப்படிப் பேசுகிறாய்?"

"அவன் மனிதனே அல்ல. சமண மதத்தில் தோன்றிய சாத்தான் அவன். சேறு அவன். சேறு கூடப் பரவாயில்லை. சேற்றில் உழலும் பன்றி கூட அவனை விட மேலானது."

"நீ இவ்வாறு பேசலாகாது சூடாமணி. குருநாதர் நீலகேசி துருவ நட்சத்திரத்தைப் போன்றவர். அரியவரை நீ அறியாமல் பேசுகிறாய்."

"எல்லாம் அறிந்து அனுபவித்து விட்டு, ஜீவனை இழந்து விட்டு வெறும் சக்கையாகவும் குப்பையாகவும் தான் பேசுகிறேன் சூளாமணி. நேற்று வரை சந்தனமாக இருந்த நான் இன்றுச் சேறாகி விட்டேன். சேதாரமாகி விட்டேன். எது பெண்ணிற்கு ஆதாரமோ அது சேதாரமாகி விட்டது. பூதாகரமான இழப்பிற்கு நான் ஆளாகி விட்டேன். நான் புளித்துப் போன பண்டம். உடைந்து போன பானை. காய்ந்து போன கனிமரம். வீழ்ந்து விட்ட கோபுரம். இந்த உலகில் எது எது பயன்படாதோ அதெல்லாம் நான் தான்.

உனக்குக் கூட நான் பயன்பட மாட்டேன். உத்தமனான உனக்கு ஏமாற்றத்தைத் தருவதை விட நான் இறந்து விடுவது உத்தமம்."

"நீ என்ன சொல்கிறாய்?"

சொன்னாள் அவள்.

சூளாமணி அதை எதிர்பார்க்கவில்லை. சிறிது நேரம் வரை அந்தச் சம்பவத்திற்கு மௌன அஞ்சலி செலுத்துவது போல மௌனமாய் இருந்தான்.

பிறகு பேச முற்பட்டு "உனக்கு ஏற்பட்டச் சோதனைக்கும் வேதனைக்கும் என் அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன் சூடாமணி. முதலில் அதை ஏற்றுக் கொள்" என்றான்.

அவள் அழுதாள்.

"அழாதே சூடாமணி. அழுகை ஆறுதலாக இருக்குமேயன்றி தீர்வாக இருக்காது. குருநாதர் அவ்வாறு நடந்து கொண்டிருக்கக் கூடாது தான். நடந்து கொண்டு விட்டார். அதையே நீ நினைத்துக் கொண்டிருக்கக் கூடாது. உனக்கிடப்பட்ட பணியை நீ செய்."

"என்ன சொல்கிறாய் சூளாமணி. அறிவோடுதான் பேசு கிறாயா? அந்த நீலகேசி செய்திருப்பது கடைந்தெடுத்த துரோகம். மன்னிக்க முடியாத குற்றம்" என்றாள் சற்று கோபத்துடன்.

"அதை அப்படி எடுத்துக் கொள்ளக் கூடாது சூடாமணி. நமது குருநாதரின் ஆணைகளை ஏற்பதுதான் சூள்சமணர் களுக்கு உரியதே தவிர அவரது குற்றங்களைக் குறை கூறுவதல்ல. அவரது உடல்ரீதியான செய்கைகள் எதுவாக இருந்தாலும் அவற்றை உதாசீனப்படுத்திவிட்டு குருவின் கட்டளைகளை நிறைவேற்ற வேண்டும். சாஸ்திர நூல்கள் அப்படித்தான் கூறுகின்றன. சமணமும் அப்படித்தான். காலில் முள் குத்தி விட்டால் அதை எடுத்துப் போட்டு விட்டு நடக்க வேண்டுமே தவிர முள்ளை வைத்துக் கொண்டு முத்தமிடுவதா தண்டிப்பதா என்று மூளையைக் கசக்கிக் கொண்டிருக்கக் கூடாது."

"சூளாமணி! நீலகேசியின் பிற நடவடிக்கைகளைப் பற்றி நான் கூறவில்லை. என்னைக் கெடுத்ததைப் பற்றித்தான் நான் கூறுகிறேன். அதை எப்படி விட்டு விட முடியும்?"

"அவரது பிற நடவடிக்கைகளைப் பற்றி நீ கவலைப் படாத போது இந்த நடவடிக்கையையும் ஏன் புறக்கணிக்க மறுக்கிறாய்?"

"இதில் நானே நேரடியாகப் பாதிக்கப் பட்டேன்."

"குருநாதருக்குப் பதிலாக எவனோ ஒருவன் உன்னைக் கெடுத்திருந்தால் என்ன செய்திருப்பாய்? இலட்சியத்தையும் சூளுரையையும் போட்டு விட்டு ஓடியிருப்பாயா?"

"அப்படியானால் எனக்கு ஏற்பட்ட இழப்பு ஒன்றுமே இல்லை என்பதுதான் உன் அபிப்ராயமா?"

"அப்படிச் சொல்ல வில்லை சூடாமணி. அது இழப்புதான். சாதாரணமான மனிதர்களுக்குத்தான் அது இழப்பு. லட்சிய வாதிகளுக்கு ஒரு முள். அவ்வளவு தான்."

"நான் உன் காதலி என்பதை மறந்து விட்டாயா?"

"மறக்கவில்லை. அதனால்தான் உன் மனதை மாற்ற முயல்கிறேன். வாழ்க்கைப் பயணத்தில் நாம் எதிர்பார்த்ததும் வரும். எதிர்பாராததும் வரும். மறக்கக் கூடியவைகள் வரும். மறக்க முடியாதவைகளும் வரும். எப்படியானாலும் நமது பயணம் தொடர வேண்டுமேயன்றி நின்று போய் விடக் கூடாது."

"நீ இப்படிப் பேசுவாய் என்று நான் எதிர்பார்க்கவில்லை."

"பயணம் தொடரவேண்டும் என்று நான் சொன்னதைத் தான் மீண்டும் சொல்கிறேன்."

"நீங்கள் நீலகேசி சொன்னதை செய்யத்தான் போகிறீர்களா?"

"நான் சூள் சமணன். பின்வாங்க மாட்டேன்."

"உனக்குச் சேதாரம் வரவில்லை என்பதால் இப்படிப் பேசுகிறாயா?"

"இல்லை. நான் எந்த நஷ்டத்தைச் சந்திக்க நேர்ந்தாலும் உண்மையான சமணனாகவும் சூளுரைத்தச் சமணனாகவும் தான் இருப்பேன்."

"சூளாமணி! உன் காதலியான என்னை ஆச்சார்யன் என்றும் பெருந்துறவி என்றும் கருதப்பட்ட நீலகேசி என்னைக் கெடுத்தான். இங்கே நிர்மலமாக விளங்கும் இராமானுஜரைப் பார். அவரது தேஜஸைப் பார். அவரையா உளவறியப் போகிறாய்? அவரையா கொல்லப் போகிறாய்?"

"இலட்சியவாதி அப்படியெல்லாம் மயங்கக் கூடாது. உனக்கு இடப்பட்ட பணி என்ன?"

"இளவரசரிடம் செல்ல வேண்டுமாம். அவரை மயக்க வேண்டுமாம். என் வலையில் வீழ்த்த வேண்டுமாம். நான் சொல்வதை மட்டும் கேட்கக் கூடிய பொம்மையாக மாற்ற வேண்டுமாம்."

“அதோ பார் இடிந்து போன கட்டிடப் பகுதி. அங்கே அமர்ந்திருக்கிற இளைஞர்தான் இளவரசர் நரசிம்மன். அவரிடம் போ. உன் பணியை இங்கிருந்தே தொடங்கு” என்று கூறிவிட்டு அகன்றான் சூளாமணி.

பிரமை பிடித்தவள் போல் இருந்தாள் சூடாமணி.



சூடாமணி புறப்பட்டுச் சென்ற சிறிது நேரத்தில் உடைந்த மண்டபத்திலிருந்து நீலகேசி புறப்பட முனைந்த போது நெஞ்சை உலுக்கும் அமானுஷ்ய குரல் ஒன்று எழவே திடுக்கிட்டார்.

மண்டபத்தில் உட்புற இடிபாடுகளில் பத்து ஆந்தைகள் வரிசையாக அமர்ந்து அவரை உற்றுப் பார்த்தன.

“என்னை எதற்காகப் பார்க்கிறீர்கள்?” என்று வினவினார் நீலகேசி.

அப்போது அவரது முதுகில் ‘தொம்’ மென்று விழுந்தது ஒரு முத்து.

திடுக்கிட்டுத் திரும்பினார் நீலகேசி.





பல விஷயங்கள் உள்ளன. அவற்றை ஆலோசிக்காமல் நிறைவேற்றக் கூடாது. சில விஷயங்கள் உள்ளன. அவற்றை ஆலோசித்தால் நிறைவேற்ற முடியாது – விட்டலராயன்




"ஐயோ!" என்று அலறினார் நீலகேசி.

அவருக்கு முன்னால் பேய் போன்ற ஒன்று நின்றிருந்தது.

"யார் நீ?" என்று அச்சத்துடன் கேட்டார் அது பேசாததால்.

"நான் தான் மாந்தரீகன். சுடுகாட்டு வாசன்" என்றது அது.

"நீயா? மாந்தரீகனா? வந்து விட்டாயா? பேய்ப் படையைக் கொண்டு வந்து விட்டாயா?" என்று கேட்டார் நீலகேசி.

அந்த உருவம் பற்களைக் கடித்தது.

"அடிகளே! என்னிடம் நீங்கள் அளவுக்கு மீறி விளையாடி விட்டீர்கள்" என்றான் மாந்தரீகன்.

அப்படிச் சொல்லி விட்டு இடிந்த தூணின் மீது அமர்ந்து கொண்டு தன் கழுத்தில் தொங்கிய மூட்டையை எடுத்து அவிழ்த்தான்.

துர்நாற்றம் வீசியது.

மூக்கைப் பிடித்துக் கொண்டார் நீலகேசி.

மாந்தரீகனோ மூட்டையிலிருந்து எதையோ எடுத்து வாயில் போட்டு 'கடுக்கடுக்' கென்று கடித்துச் சாப்பிடலானான்.

"என்ன சாப்பிடுகிறாய்?" என்று கேட்டார் நீலகேசி.

"எலும்புகளைச் சாப்பிடுகிறேன்."

"எலும்புகளையா?"

"ஆமாம். எருமையின் எலும்புகள். குரங்குகளின் எலும்புகள். காட்டெருமை எலும்புகள். இவைதான் எனது ஆகாரம். நன்றாகச் சுட்ட எலும்புகள் மாவு போல இருக்கும். இப்போது நான் உண்பது சரியாகச் சுடாத எலும்பு."

நீலகேசிக்கு வாந்தி வரும் போல இருந்தது.

அவர் இளம்பெண் சூடாமணியிடம் இடக்கு மடக்காக நடந்து கொண்ட படியால் வலியாகவும் சோர்வாகவும் இருந்தது.

துவார சமுத்திரத்திற்குப் போய் ஓய்வெடுக்க நினைத்தார்.

மாந்தரீகனை எதிர்பார்க்கவில்லை.

அதோடு அவன் பேயே அஞ்சும் படியான கொடுந் தோற்றத்தில் வந்து எலும்புகளைக் கடித்துத் தின்றதால் அவருக்கு அருவருப்பாக இருந்தது.

இவன் இப்போது எதற்காக வந்தான் என்று தனக்குள் கேட்டுக் கொண்ட அவர் "நான் கேட்டதற்கு பதில் சொல்ல வில்லையே நீ?" என்று கேட்டார்.

ஒருவாறு எலும்புகளைத் தின்று தீர்த்த மாந்தரீகன் "நான் பதில் சொல்லி விட்டேனே! காதில் விழ வில்லையா?" என்றான்.

"என்ன சொன்னாய்?"

"என்னிடம் அளவுக்கு மீறி விளையாடி விட்டீர்கள் என்றேனே!"

"உன்னிடம் விளையாட நானொன்றும் பேயல்ல"

"பேயை இங்கே இழுக்க வேண்டாம். அவை பயங்கரமாக இருந்தாலும் நாங்கள் சொன்னதைக் கேட்கும். விசுவாசம் மிகுந்தவை. நீங்கள் அப்படியல்ல. பேயிடம் இருக்கும் விசுவாசம் உங்களுக்கு இல்லை. அதோடு என்னிடமே உங்கள் வேலையைக் காட்டி விட்டீர்களே! அது தான் வேடிக்கையானது. அதே சமயம் ஆபத்தானது."

"என்ன சொல்கிறாய் நீ? ஒன்றும் புரியவில்லை"

"எப்படிப் புரியும்? நல்ல குணங்கள் அறவே இல்லாத மோசமான துறவி நீங்கள். உங்களுக்கு எதுவும் புரியாது தான். மேல் கோட்டை பக்கத்திலேயே இருக்கும் போது அது வடமேற்கே 250 காததூரத்தில் இருப்பதாகச் சொல்லி என்னை அனுப்பினீர்களே அதற்கு என்ன பெயர்? 250 காதம் என்பது எத்துணை நெடிய தூரம் தெரியுமா? இங்கே இருந்து அரபுநாடு இருக்கும் தூரம் அது"

"மாந்தரீகா! உண்மையான மேல்கோட்டை எது என்பது எனக்கு இப்போதுதான் தெரியும்."

"இப்போது தான் தெரியும் என்றால் அப்போது எப்படி என்னை அனுப்பினீர்கள்?"

"அது கங்கராஜன் சொன்ன மேல்கோட்டை. ஆகவே தான் அனுப்பினேன்."

"நீங்கள் குழந்தையும் அல்ல. பைத்தியக்காரனும் அல்ல. எவனாவது எதையாவது சொன்னால் நம்பி விடுவீர்களா? யோசிக்க மாட்டீர்களா? துவாரசமுத்திரத்திலிருந்து வடமேற்கே 250 காத தூரம் என்றால் அது அராபிய சமுத்திரத்திற்கு வருகிறது. இதை ஏன் யோசிக்க வில்லை?"

"நீ யோசித்திருக்க வேண்டியது தானே?"

"அடிகளே! உங்கள் சாமர்த்தியத்தை என்னிடம் காட்ட வேண்டாம். நான் - நீங்கள் - ஜெயதேவர் ஆகிய மூன்று பேரும் கூட்டுக் களவாணிகள். நமக்குள் ஒருவருக்கொருவர் ஏமாற்ற நினைப்பது அயோக்கியத்தனமானது. என்னை உங்களோடு வைத்துக் கொள்ள விரும்பாமலேயே 250 காத தூரத்திற்குத் திட்டமிட்டு அனுப்பினீர்கள். உண்டா? இல்லையா?"

"நீயாகக் கற்பனை செய்து கொள்ளாதே மாந்தரீகா. நீயும் என் குருநாதர் ஜெயதேவரும் என்னிரு கண்கள். என் கண்களை நான் குத்திக் கொள்வேனா?"

"பொய். எங்களை நீங்கள் கண்களாகக் கருதவில்லை. புண்களாகக் கருதினீர்கள். அதை அகற்ற நினைத்தீர்கள். என்னை 250 காததூரத்திற்கு அனுப்பினீர்கள்."

"இல்லை. இல்லை. இல்லவே இல்லை."

"இல்லை என்று நீங்கள் எத்தனை முறை சொன்னாலும் பொய் என்பதுதான் அதன் அர்த்தம் அடிகளே! நான் உதவுகிற வரை உண்மையானவன். உதாசீனப் படுத்தினால் ஆபத்தானவன். குளம் என்று நீங்கள் நினைக்கலாம். நானோ கடல். எலி என்று நீங்கள் நினைக்கலாம். நானோ புலி. மடு என்று நீங்கள் நினைக்கலாம். நானோ மலை. என் பரிமாணங்கள் பயங்கரமானவை. ஜெயதேவர் யார் என்பதை மன்னனிடம் சொன்னால் உங்களுக்கு என்ன நடக்கும் தெரியுமா? மன்னன் நரகத்தை நகரத்தில் சிருஷ்டிப்பான். என்னைப் பற்றிக் கவலையில்லை. நான் பேயாகவும் வாழ்வேன்."

"மாந்தரீகா! எனக்கு உன்னை அகற்ற வேண்டும் என்ற எண்ணமோ அழிக்க வேண்டும் என்ற எண்ணமோ என்றைக்கும் கிடையாது. மேல் கோட்டை எங்கிருக்கிறது என்று மன்னனிடம் கேட்டேன். அவன் கங்கராஜனிடம் கேட்டான். கங்கராஜன் சொன்னான். அதை நான் நம்பினேன். உன்னிடம் சொன்னேன். மேல் கோட்டைக்கு உன்னை அனுப்பியதற்குக் காரணம் இல்லாமல் இல்லை. சமண மதத்திற்குச் சோதனை வருவது போலக் கருதிய நான் யட்சிணி அம்பிகா தேவியிடம் அருள்

வாக்கு கேட்டேன். அவள் தான் மேல் கோட்டை என்ற வார்த்தையைச் சொன்னாள். அது எங்கிருக்கிறது என்பது தெரியாமல் தவித்த போது தான் கங்கராஜன் சொன்னான். அங்கே ஒரு முனிவர் இருப்பதாகவும் அவரிடம் பேய்ப்படை ஒன்று இருப்பதாகவும் சொன்னான். அப்பேய்ப் படை நம்வசம் இருந்தால் ராஜகுடும்பத்தை அடியோடு அழிக்கலாம் என்று நினைத்தேன். அப்பேய்ப் படையைக் கவர உன்னால்தான் முடியும் என்பதால் உன்னை அனுப்பினேன்."

"அடிகளே! உண்மையோ! பொய்யோ! நடந்து விட்டது. இப்போது தான் மேல்கோட்டை எது என்பது தெரிந்து விட்டதே! பிரச்சனையைத் தீர்ப்பது எப்படி என்பது விலங்கி விட்டதா?" என்று கேட்டான் மாந்தரீகன்.

அப்போது பத்து ஆந்தைகள் 'கிறீச்' சென்று இரைந்து விட்டு அவனுக்குப் பக்கத்தில் வந்து அமர்ந்தன. ஒன்று அவன் தோளில் வந்து அமர்ந்தது.

"இங்கே பேய் இருக்கிறது. ஆந்தைகள் பார்த்து விட்டன" என்றான் மாந்தரீகன்.

"வேறு எங்காவது போய் விடலாமா?" என்று கேட்டார் நீலகேசி.

"எங்கே போவது? கார் மேகங்கள் தழைத்து வருகின்றன. அடர்ந்த மழை வரப் போகிறது. பேயைப் பற்றிய பயம் வேண்டாம். நான் பார்த்துக் கொள்கிறேன். நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லுங்கள்" என்றான் மாந்தரீகன்.

"என்ன சொல்வது? என்னவென்று சொல்வது? எப்படிச் சொல்வது? குப்புறத் தள்ளி முதுகின் மீதும் அமர்ந்து விட்ட நிலையாகி விட்டது என் நிலை. மேல் கோட்டைக்குத் தமிழகத்திலிருந்து இராமானுஜன் என்ற வைஷ்ணவ சன்யாசி வந்திருக்கிறான். மன்னனின் மகளை குணப்படுத்தி விட்டான். அது மாயை என்றும் பொய் என்றும் தற்காலிகமானது என்றும் அறியாத மக்கள் அவனை மகான் என்று கருதிப் போற்றிப் பாராட்டுகிறார்கள். மக்கள் தான் மந்தையாக இருக்கிறார்கள் என்றால் மன்னனும் மண்டாக இருக்கிறான். அந்த சன்னியாசிக்குப் பின்னாலேயே சுற்றுகிறான். அவன் சொன்னதை யெல்லாம் செய்கிறான். விரைவில் வைணவத்தில் சேர்ந்து விட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. நமது நிலை இன்னும் மோசமாகி விட்டது. கர்நாடகத்தில் நம்மால் இருக்க முடியுமா என்பதே கேள்விக்குறியாகி விட்டது."

“நீங்கள் சொல்வதைப் பார்த்தால் நீங்கள் அடியற்றுப் போய் விடுவீர்கள் என்று தான் தோன்றுகிறது. மண் குதிரையை நம்பி இன்னமும் ஆற்றில் பயணம் செய்ய நான் தயாராக இல்லை. ஏற முடியாத மலைக்கு எம்பி குதிப்பது முட்டாள் தனம். உங்கள் கூட்டணியில் இருக்க நான் தயாராக இல்லை. நான் பிரிகிறேன். உங்களோடு சேர்ந்து நான் ஆற்றிய சேவைக்கு நீங்கள் ஏற்கனவே கூறியபடி தரவேண்டியதைத் தந்து விடுங்கள் போதும்.”

“உனக்கென்று சில ஊர்களைத் தருவதாகச் சொன்னது உண்மைதான். ஆனால் நான் நிற்பதற்காக நாலடி மண் கூட கிடைக்காது போலிருக்கிறதே! நான் எதைக் கொடுப்பது?”

“அது தெரிகிறது. நான் செய்த சேவைக்கு என்னதான் ஊதியம்?”

“இப்போது என்னிடம் ஒரு வராகன் கூட இல்லை.”

“ஒரு வராகன் இல்லைதான். ஒரு லட்சம் - ஒரு கோடி வராகன் இருக்கிறது.”

“என்ன உளறுகிறாய்?”

“உன்னைப் போன்றவர்களுக்கு உண்மையைச் சொன்னால் உளறலாகத்தான் இருக்கும். எனக்கு ஒன்றுமே தெரியாது என்று எண்ண வேண்டாம். மலைக் காட்டு குகையில் நீங்கள் குவித்து வைத்திருக்கும் செல்வம் எனக்குத் தெரியும்.”

“அப்படி எதுவும் இல்லை. துறவிகளிடம் செல்வம் எப்படிக் குவியும்?”

“துறவிகளிடம்தான் தற்போது எல்லாமே சேர்கின்றன. வர்த்தமான மகாவீரரைப் பலரும் சிலையாகவே கருதுகிறார்கள். உங்களைப் போன்ற துறவிகளைக் கடவுளாகக் கருதி கொண்டு வந்து கொட்டுகிறார்கள். சமணம் தழைப்பதற்காக அவர்கள் வழங்கிய செல்வத்தையெல்லாம் நீங்கள் தழைப்பதற்காக ஒதுக்கிக் கொண்டீர்கள். மலைக் காட்டுக் குகையில் கொண்டு போய் குவித்திருக்கிறீர்கள். அது எனக்கும் உங்களுக்கும் அந்த அப்பாவி ஜெயதேவருக்கும் சமபங்காகச் சேர வேண்டும்?”

“மாந்தரீகா! நீ பேய்க்கும் பிசாசுக்கும் பரிச்சயமானவனாக இருக்கலாம். மந்திரமும் மாந்தரீகமும் உனது பலமாக இருக்கலாம். ஆனால் என்னை மிரட்டி காரியத்தை நடத்திக் கொள்ளலாம் என்று மட்டும் கனவு காணாதே.”

மாந்தரீகன் அவரைப் பார்த்து “உங்கள் வலது கையைக் காட்டுங்கள்” என்றான்.

"என்ன செய்து விடுவாய்? கடித்து விடுவாயா?" என்று கேட்டப்படி கையை நீட்டினார்.

மாந்தரீகன் அவரது கையைப் பிடித்து இமைக்கும் நேரத்தில் சுண்டு விரலைக் கடித்துத் துப்பினான்.

அவர் அலறினார்.

"என்னை ஏமாற்ற முடியாது. மழை வருகிறது. உனது பல்லக்குத் தூக்கிகள் வந்து விடுவார்கள். இப்போது நான் போகிறேன். மீண்டும் வருவேன். செல்வங்களைப் பிரித்துத் தர மறுத்தால் ஒவ்வொரு உறுப்பாகக் கடித்துத் துப்புவேன். ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள்" என்று கூறிவிட்டு அகன்றான் மாந்தரீகன்.

நீலகேசியின் கையில் ரத்தம் கொட்டியது.

வெளியே மழை கொட்டியது.



மேல்கோட்டையில் இராமானுஜர் மற்றும் சீடர்களுக்கும் தங்குவதற்கு கூடாரங்களையும் வழிபடுவதற்கு வரும் மக்களுக்குப் பந்தல்களையும் அமைத்தான் மன்னன் விட்டலராயன். அனைவருக்கும் உணவு கிடைப்பதற்கும் வழி செய்தான். பெருமாள் வழிபாட்டிற்காக வேண்டிய நிவேதப் பொருட்கள் தினமும் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்தான்.

எல்லாவற்றையும் செய்து விட்டு தலைநகர் துவார சமுத்திரத்திற்குச் சென்றான். பஞ்சப் பிரதானிகளையும் இதர அதிகாரிகளையும் சந்தித்து தலைநகரைப் பற்றியும் இதர விஷயங்களைப் பற்றியும் கேட்டறிந்தான். சிற்றரசர் களிடமிருந்து மாதா மாதம் திறை வருகிறதா என்றும் கேட்டறிந்தான். அதில் ஒரு பிரச்சனையும் இல்லாததால் திருப்தியடைந்தான்.

தன்னை யாரும் சந்திக்க வேண்டாம் என்று சொல்லி விட்டு நிலா மாடத்திற்குச் சென்றான். பௌர்ணமிக்கு ஒரு நாளே இருந்ததால் சற்றே சீவி விடப்பட்ட வட்ட வடிவமாகக் காணப்பட்ட சந்திரன் அவனை வரவேற்பது போல் இருந்தது. வரவேற்பவர்கள் தனித்து நின்று வரவேற்பது சிறப்பல்ல கூட்டமாக இருந்து வரவேற்பது தான் முறை என்பதை விளக்குவது போல் வானத்தில் சந்திரன் மட்டுமின்றி நட்சத்திரங்கள் பலவும் கூட்டமாகவும் சிதறியும் காணப்பட்டன. வற்றில் சிமிட்டிக் கொண்டிருந்த நட்சத்திரங்கள் மன்னனைப் பார்த்துச் சிரிப்பது போல் இருந்தது. வானத்தில் இயற்கையும்

பூமியில் செயற்கையுமாக இருந்து ஒன்றையொன்று பார்த்து கொண்டு 'நீங்கள் வேறு. நாங்கள் வேறு' என்று பேசாமல் பேசியதைக் கண்ட காற்று வானத்திற்கும் பூமிக்கும் தூது செல்வது போல் வீசியது. மாரிக்காலமாதலால் காற்றில் அதிக ஈரப்பதம் இருந்தது. மன்னனுக்கு இதமாக இருந்தது.

வானத்தில் விதைக்கப்பட்ட இயற்கை அழகுகளை ரசித்த மன்னன் தனது பார்வையை துவாரசமுத்திர நகரின் மீது திருப்பினான். வானத்து நட்சத்திரங்கள் மண்ணுக்கு இடம் பெயர்ந்து பூத்து விட்டதோ என்று எண்ணத் தகுந்த அளவிற்கு எண்ணை விளக்குகளின் ஒளி நகர் முழுவதும் பொருட்டு களாகத் தெரிந்தன. அந்த விளக்குகள் வாசனை எண்ணையினால் ஏற்றப்பட்டிருந்ததால் அதன் சுகந்தம் காற்றில் கலந்து எல்லா மூலைகளிலும் பிரவேசித்ததோடு அரண்மனையிலும் அலாதியாகப் பரவியதால் அம் மணத்தை ஆனந்தமாக நுகர்ந்தான் மன்னன். நாழிகைக்கு ஒரு முறை ஒலிக்கும் கண்டாமணிகள் அரண்மனையிலும் நகரத்தின் ஐந்து பகுதியிலும் அமைக்கப்பட்டிருந்தன. ஆகவே ஐம்பதாவது நாழிகை முடிவடைந்து விட்டதை அறிவிக்க கண்டாமணி ஒலித்த போது மன்னனுக்கு இனிமையாக இருந்தது.

நகரத்தின் மையப் பகுதியில் அமைந்திருந்த நாளங்காடி மற்றும் அல்லங்காடிப் பகுதிகளில் வாணிபம் வெகு சிறப்பாக நடந்து கொண்டிருந்ததை அறிவிப்பது போல் வாங்குவோரின் கூச்சலும் விற்போரின் கூச்சலும் பாதுகாப்பு வீரர்கள் கூச்சலுமாகச் சேர்ந்து எழுந்ததைக் கேட்ட மன்னன் 'நகரங்களின் விழிப்புத் தன்மைக்கு வணிக ஸ்தலங்களே காரணம்' என்பதை உணர்ந்தவனாய் சந்துஷ்டி அடைந்தான். அரண்மனைப் பகுதியில் கலா அரங்கத்தில் ஏதோ நாட்டிய நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது போலும். நாட்டிய மாடும் நாரீமணியின் காற்சிலம்புகளின் ஓசையானது அனைத்து சப்தங்களும் இடையில் தனி ஆவர்த்தனத்தைப் போல மெல்ல ஒலித்தது மன்னனை மயங்க வைத்தது.

"என்ன ரொம்ப நேரமாக இங்கே இருக்கிறீர்கள்? நகரத்தின் அழகைக் களிக்கிறீர்களா? எல்லாம் நீங்கள் உருவாக்கியது தானே?" என்று கேட்டபடி மேலே வந்தாள் ராணி சாந்தலை தேவி.

"நம்மால் சுயமாக எதையும் உருவாக்க முடியாது தேவி. இறைவன் படைத்த இயற்கைகளைப் பார்த்துப் பார்த்துத் தான் செயற்கையாகப் பலவற்றைப் படைக்கிறோம். சில நேரங்களில்

அந்த செயற்கை அழகைக் கண்டு ரசிக்கவும் செய்கிறோம்" என்றான் மன்னன்.

"நிலா மாடத்திற்கு வந்தால் ஏதோ ஆழ்ந்த சிந்தனை ஓடுவதாகத்தானே பொருள்? தற்போது எதைப் பற்றிய சிந்தனை?" என்று கேட்டாள் ராணி.

"மகள் தர்மதேவி எப்படி இருக்கிறாள் சாந்தலை?" என்று வினவினான் மன்னன்.

"மானாகப் பிறக்க வில்லையே தவிரத் துள்ளித் திரிவதில் மானாகத்தான் இருக்கிறாள்."

"பட்டுப் போனச் செடி துளிர்ப்பதை நீ பார்த்திருக்கிறாயா? கெட்டுப்போன பண்டம் பயன்பட்டு நீ பார்த்திருக்கிறாயா? கழிந்து போன காலமும் நேரமும் திரும்பி வந்து பார்த்திருக்கிறாயா?"

"இல்லை. எதற்காகக் கேட்கிறீர்கள்?"

"கலங்கிப் போன தண்ணீர் தெளிந்து விடும். கலைந்து போன கோலம் புதுப்பித்து விடும். வீச மறந்த காற்றும் மீண்டு வந்து வீசும். ஆனால் நான் மேலே சொன்ன விஷயங்கள் நடக்குமா? நடக்காது. ஆனால் நடக்கும் என்று உணர்த்தியிருக்கிறார் வைஷ்ணவ மகான் இராமானுஜர். நான்கு வருட காலமாக மனநோயில் சிக்கி நாராகிப் போன நமது புதல்வி மாலையாக மலர்ந்திருக்கிறாளே அது அதிசயம் அல்லவா? மகானின் கருணையல்லவா" அதற்கு நாம் என்ன கைம்மாறு செய்யப் போகிறோம்?"

"செய்து தானே வருகிறீர்கள்?"

"எதைச் சொல்கிறாய்?"

"தொண்டனூர் ஏரியைக் கட்டுகிறீர்கள்."

"அதனால் நமக்குத்தான் பயனே தவிர இராமானுஜருக்கு அல்ல."

"அவருக்கு மடம் கட்டிக் கொடுத்திருக்கிறீர்கள்."

"அதில் அவர் தற்போது இல்லை. அதில் மற்றவர்களும் தங்கலாம். மடம் கட்டியது மகத்தான விஷயமல்ல."

"மேல் கோட்டையில் அவர் விரும்பிய வண்ணம் திரு நாராயணருக்குக் கோயில் கட்டப் போவதாகக் கேள்விப்பட்டேன்."

"கோயிலைக் கட்டினால் அது மக்களுக்குத்தான் பயன்படப் போகிறது. இராமானுஜருக்குப் பயன்படப் போவதில்லை."

"இராமானுஜருக்கு ஏதாவது செய்ய நினைக்கிறீர்களா?"

"ஆமாம்."

“தாராளமாகச் செய்யுங்களேன்.”

“அவ்வாறு செய்ய முடியாது. யோசனையாக இருக்கிறது.”

“என்ன யோசனை?”

“தேவி! நான் வைணவ மதத்திற்கு மாறலாம் என்று நினைக்கிறேன். அது ஒன்றே இராமானுஜருக்கு நான் செய்யும் கைம்மாறாக இருக்க முடியும்.”

“ஊரில் உள்ளவர்கள் அவ்வாறு பேசிக் கொள்ள நான் கேட்டேன். அப்போது நம்பவில்லை இப்போது தாங்களே சொல்கிறீர்கள்.”

“நீ என்ன சொல்கிறாய்?”

“நான் என்ன சொல்வது? பஞ்சப் பிரதானிகள் இருக்கிறார்கள். சமண ஆச்சார்யர்கள் இருக்கிறார்கள். மக்கள் இருக்கிறார்கள். அவர் களை யெல்லாம் கலந்து ஆலோசித்து தக்க முடிவை எடுங்கள்.”

“இல்லை தேவி. இந்த விஷயத்தில் யாருடைய ஆலோசனையும் கேட்கப் போவதில்லை.”

“ஏன் அப்படி? எதையும் ஆலோசிப்பது தானே முறை?”

“பல விஷயங்கள் உள்ளன. அவற்றை ஆலோசிக்காமல் நிறை வேற்றக் கூடாது. சில விஷயங்கள் உள்ளன. அவற்றை ஆலோ சித்தால் நிறைவேற்ற முடியாது. இந்த விஷயம் அப்படித்தான். இதற்கு ஆலோசனை, கருத்தரங்கம் என்று ஆரம்பித்தால் அவரவர்களும் ஒவ்வொரு கருத்தைச் சொல்லிக் கொண் டிருப்பார்களே தவிர ஒரு போதும் முடிவுக்கு வர மாட்டார்கள்.”

“என்னிடம் மட்டும் ஏன் கேட்கிறீர்கள்?”

“நீ என்னில் பாதி. என்னை முழுமையாகப் புரிந்து கொண்டவள். பல விஷயங்களை நான் பலரிடம் ஆலோசிக்காமல் இருந்திருக்கலாம். ஆனால் ஒரு விஷயத்தையும் உன்னிடம் ஆலோசிக்காமல் இருந்ததில்லை.”

“பிரபு! தாங்கள் மதம் மாறினால் சமணர்கள் வேதனைப் படுவார்கள்.”

“நான் யார்? நீ யார்? சமணர்கள் தானே! நீ சொல். நான் மதம் மாறுவது உனக்கு வருத்தமாக இருக்கிறதா?”

“ஆமாம். வருத்தமாகத்தான் இருக்கிறது.”

மன்னன் யோசித்து விட்டு ஒரு கேள்வியைக் கேட்டான்.

ராணி அதிர்ந்தாள்.





மதம் என்பது மகான்களின் கொள்கை. ஒவ்வொரு மகானும் புதுப் புதுக் கொள் கைகளைக் கூறும் போது புதுப்புது மதங்கள் தோன்று கின்றன. மதம் மாறுவதென்பது வெறும் கொள்கை மாற்றம் தான். சம்பிரதாய மாற்றம் தான் – விட்டலராயன்




"தேவி! நான் மதம் மாறுவது உனக்கு வருத்தமாக இருக்கிறது என்றாயே, நமது சமண மதத்தின் ஆச்சார்யர்களான ஜெயதேவரும் நீலகேசியும் உன் மகள் விஷயத்தில் நடந்து கொண்டது உனக்கு வருத்தத்தைத் தரவில்லையா?" என்று கேட்டான் மன்னன்.

ராணி சற்றே அதிர்ந்தாள்.

மன்னனே தொடர்ந்து பேசமுற்பட்டு "அவர்கள் மகளை குணப்படுத்த முடியாமல் போனாலும் பரவாயில்லை. மகளின் உடன்நலத்தை மோசமடையச் செய்திருக்கிறார்கள். அவளது உடல்நிலையைப் பணயமாக வைத்து நம்மை ஏமாற்றி யிருக்கிறார்கள். பெரும் துரோகம் இழைத்திருக்கிறார்கள். இது உனக்கு வருத்தத்தைத் தரவில்லையா?" என்று கேட்டான்.

ஜெயதேவர் தன்னை மிரட்டியதை நினைவுபடுத்திக் கொண்டாள் ராணி.

ஆனாலும் வருத்தங்களை அடக்கிக் கொண்டு "பிரபு! குற்றமிழைத்தவர்கள் அந்த இருவர்தான். அவர்களுக்குத் தண்டனை கொடுங்கள். அவர்களைத் தவிர மற்ற சமணர்கள் அப்பாவிகள் தானே! அவர்கள் வருந்தும்படி தாங்கள் மதம் மாறலாமா?" என்று கேட்டாள்.

"நான் மதம் மாறுவதே ஜெயதேவரையும் நீலகேசியையும் தண்டித்த மாதிரி தான்" என்றான் மன்னன்.

"எப்படிச் சொல்கிறீர்கள்?"

"சமணத்தின் தலைமைப் பீடத்தில் இருக்கும் அவர்களைச் சிறையில் தள்ளிச் சித்திரவதை செய்தால் அவர்கள் உயிரை விடுவார்கள். அப்படிச் செய்வதை விட அவர்கள் உயிராகக் கருதும் சமணத்தை நான் விட்டு விட்டால் அவர்கள் அனாதையாகி விடுவார்கள். மன்னனின் ஆதரவு இன்றித் தவிப்பார்கள். மக்களுக்கு உண்மை தெரியும் போது அவர்களை உதாசீனம் செய்வார்கள். அவர்கள் மீதிருந்த நம்பிக்கை அழியும்.

மரியாதை அழியும். செல்வாக்கு அழியும். அவர்கள் ஒரு சக்தியாக இருந்த நிலைமாறி சகதியாகி விட்ட நிலை வரும். அவர்களால் கர்நாடகத்தில் காலம் தள்ள முடியாது. கடல் கடந்து சென்று தான் பிழைக்க வேண்டியிருக்கும். ஆகவே இது தானே சரியான தண்டனையாக இருக்கும்?"

"அவர்களுக்குச் சரி. இதர சமணர்களுக்கு? அவர்கள் தங்களையே நம்பி வாழ்ந்து வருபவர்கள். நீங்கள் மதம் மாறினால் தங்களை நட்டாற்றில் விட்டு விட்ட மாதிரி கருத மாட்டார்களா?"

"சாந்தலை! நான் மதம் மாறுவதால் சமணர்களுக்கு ஒரு இன்னலும் வரப் போவதில்லை. நான் எந்த மதத்தில் இருந்தாலும் மக்களைப் பொறுத்த மட்டில் மன்னனாகவும் பொதுவானவனாகவுமே இருப்பேன்."

"மன்னர் மதம் மாறினால் அவர் பிற மதங்களில் மீது வேஷம் பாராட்டுவார். அதனால் மதக் கலவரம் வெடிக்கும். அதன் அடையாளமாகத் தானே இராமானுஜர் தமிழ் நாட்டில் இருக்க முடியாமல் இங்கே வந்திருக்கிறார்?"

"நீ சோழ மன்னன் நடந்து கொண்டதைக் கருத்தில் கொண்டு பேசுகிறாய். அது தவறு. நான் இங்கே மதக் கலவரம் வருவதற்கு ஒரு போதும் அனுமதிக்க மாட்டேன். கலவரம் எழுந்தால் இரும்புக் கரம் கொண்டு அடக்குவேன். கலவரப்பட்டு இங்கிருந்து யாரும் ஓட வேண்டிய நிலை வராது."

"நமது ஆச்சார்யர்களின் துரோகம்தான் தங்கள் மத மாற்றத்திற்குக் காரணமா?"

"உனக்குப் புரியவில்லையா தேவி? நமது மகளைப் பணயமாக வைத்து சமண ஆச்சார்யர்கள் துரோகம் இழைக்கிறார்கள். அதாவது நமக்கு உதவவேண்டிய குருமார்கள் நமக்குத் துரோகம் செய்கிறார்கள். ஆனால் நம்மோடு எந்தப் பிணைப்பும் இல்லாத இராமானுஜர் ஒரு நொடியில் மகளை குணப்படுத்துகிறார். தனக்குத் தேவையில்லை என்றாலும் மக்களுக்காக அவரே தொண்டனூரில் ஏரியைக் கட்ட முற்படுகிறார். நமது நாட்டின் புராதனமான பெருமாள் சிலை அவரது கைகளில் கிடைக்கிறது. அதை அதற்கு உரிய மேல்கோட்டைக்குக் கொண்டு செல்கிறார். அப் பெருமாளுக்குக் கோயில் கட்ட விரும்புகிறார். இதெல்லாம் அவரது அருட்குணங்களாகத் தெரிய வில்லையா? அவரது தாராள மனத்தைக் காட்டவில்லையா? நமது குருமார்கள் இருளாகவும் இராமானுஜர் ஒளியாகவும் இருப்பது உனக்குப் புரியவில்லையா? ஒளியாக விளங்குபவரது மதத்தில் சேர்வதே,

உகந்தது என்று தோன்றவில்லையா? நாம் செய்யக் கூடிய கைம்மாறு இதுதான் என்றும் இது தான் சிறந்தது என்றும் உனக்கு விளங்க வில்லையா?"

"இராமானுஜர் தங்களை வைணவத்தில் சேரும்படிக் கேட்டுக் கொண்டாரா?"

"இல்லை சாந்தலை. மேல் கோட்டையில் பெருமாள் கோயிலை நான் கட்டித் தருகிறேன் என்று சொன்ன போது அவர் தயங்கினார். சமணனாக இருந்து கொண்டு நான் அவரை ஆதரிப்பதும் பெருமாளுக்குக் கோயில் கட்டுவதும் சமணர்களிடையே அதிருப்தியை உண்டாக்கும் என்று கருதினார். தமிழ் நாட்டில் மத விஷயங்களில் தான் பாடம் கற்றதாகவும் ஆகவே தான் எச்சரிக்கையாக இருக்க விரும்புவதாகவும் சொன்னார். அப்படியானால் நான் வைஷ்ணனாக மாறி விடுவதாகச் சொன்னேன். அவர் அதற்கு உடன்படவில்லை. மதமாற்றமென்பது புனிதமானது என்றும் அது உணர்ச்சி வசப்பட்டு அவசரத்தில் செய்து முடிக்கும் காரியமல்ல என்றார். நன்றாக யோசிக்கும் படிச் சொன்னார். இது அவரை மதவெறியராகக் காட்டுகிறதா? பெருந்தன்மையாளராகக் காட்டுகிறதா?"

"பிரபு! மதம் என்பது தாயைப் போன்றது. மதம் மாறுவதென்பது தாயை மாற்றுவது போன்றது. தாய்க்குத் துரோகம் செய்வதைப் போன்றது என்று பெரியவர்கள் சொன்னார்கள்."

"தவறு தேவி தவறு. மதம் வேறு. தாய் வேறு. மதம் என்பது மகான்களின் கொள்கை. ஒவ்வொரு மகானும் புதுப்புது கொள்கைகளைக் கூறும் போது புதுப் புது மதங்கள் தோன்றுகின்றன. மதம் மாறுவதென்பது வெறும் கொள்கை மாற்றம் தான். சம்பிரதாய மாற்றம் தான். கட்டாயம் தான் கூடாதே தவிர மாறுவது தவறானதல்ல!"

"மகாராஜா! என்னைக் காட்டிலும் விஷயங்களை அறிந்தவர் தாங்கள். பிறரிடம் ஆலோசிக்கா விட்டாலும் யோசிக்காமல் எதுவும் செய்ய மாட்டீர்கள். எது செய்தாலும் சரியாகவும் சிறப்பாகவும் செய்வீர்கள். மக்களின் நன்மைக்காகவே செய்வீர்கள். ஆயினும் எனது கோரிக்கை ஒன்றுதான்."

"சொல்"

"நான் ஜெயதேவரிடமும் நீலகேசியிடமும் ஏமாந்திருக்கலாம். ஆனால் மகாவீரர் வர்த்தமானரிடம் கொண்டுள்ள பக்தியில் ஒரு துளியும் மாற்றமில்லை. அவரே என் தெய்வம். ஆகவே என்னால் மதம் மாற இயலாது. மாறும்படி கேட்டுக் கொள்ளாதீர்கள்."

"நான் ஏற்கனவே கூறியபடி மதமாற்றத்தில் கட்டாயத்திற்கு அனுமதிக்க மாட்டேன். உன்னையும் உன் மகனையும், உன் மகளையும் நான் மதம் மாறும் படிக் கோர மாட்டேன். உங்கள் நம்பிக்கைகளுக்கு குறுக்கே எப்போதும் நான் நிற்க மாட்டேன். சமண விஹாரங்களுக்கும் சமணர்களுக்கும் அரசாங்கம் செய்து வரும் உதவிகளும் தானங்களும் என்றும் போலத் தொடரும். நீ கவலைப்பட வேண்டியதில்லை."

ராணியிடம் மதமாற்றம் சம்பந்தமாகப் பேசியதில் திருப்தியாக இருந்தது மன்னனுக்கு.

அந்தரங்கமான ஜீவனான அவளிடம் பேசி இணக்கமான பதிலைப் பெற்றது அவனுக்கு மகிழ்ச்சியைத் தந்தது.

மறுநாள் இளவரசன் நரசிம்மனை அழைத்து தான் வைணவத்தில் சேரப் போவதை அறிவித்தான் மன்னன்.

"தாங்கள் எது செய்தாலும் நல்லதாகவே இருக்கும். நானும் தங்களைப் போலவே மதம் மாறி விடலாம் அல்லவா?" என்று கேட்டான் நரசிம்மன்.

"அவசரப்பட வேண்டாம் நரசிம்மா. நீ நன்றாக யோசிக்கலாம். தந்தையைத் தனயன் பின்பற்றலாம் தான். ஆனால் அவசரப்பட வேண்டியதில்லை" என்று சொன்ன மன்னன் துவார சமுத்திரத்தின் அரண்மனையிலும், நகரின் பல்வேறு பகுதியிலும், வேலாபுரத்திலும் அறிவிப்பு பலகைகளை வைக்கச் செய்தான்.

அதில் நான் இராமானுஜர் தலைமையிலான வைணவ மதத்தில் மிகுந்த பற்றும் நம்பிக்கையும் வைத்து முழு விருப்பத்துடன் சேர்ந்து விட்டதாகவும் அதனால் கர்நாடகத்தில் வாழும் சமண மதத்தினருக்கும் இதர மதத்தினருக்கும் எந்தவிதமான இன்னலும் வராது என்று குறிப்பிட்டான். அதோடு இந்த மதமாற்றம் சாதாரண விஷயம் என்றும் அது விஷயமாக மக்கள் யாரும் பிரஸ்தாபிக்க வேண்டாம் என்றும் அது குறித்து கருத்து தெரிவிக்க யாருக்கும் அனுமதி தரப்படவில்லை என்றும், அனுமதியின்றி கருத்து தெரிவிக்க முற்பட்டால் கடுமையான தண்டனை வழங்கப்படும் என்றும் அறிவித்தான்.

அறிவிப்பு வந்ததும் பஞ்சப் பிரதானிகள் மன்னனிடம் வந்து "மகாராஜா! இது என்ன திடும்மென்று மதமாற்றம்?" என்று வினவினார்கள்.

"உங்களுக்கான பதில் அறிவிப்பிலேயே இருக்கிறது. என்னை மன்னியுங்கள்" என்றான் மன்னன்.



மேல்கோட்டையில் மகா உற்சவம் நடைபெறுவது போல் மக்கள் கூடி பரவசப்பட்டு, வழிபட்டு நாராயணா! நாராயணா! என்று முழக்கமிட்டு மேல்கோட்டையை மக்கள் கோட்டையாக மாற்றியிருந்தார்கள். ஸ்வாதி மழையைப் பொருட்படுத்தாமல் மக்கள் வந்து போய்க் கொண்டிருந்தது இராமானுஜருக்கு மகிழ்ச்சியாக இருந்தது. 'எல்லாம் எம்பெருமான் செயல்' என்றே கருதினார்.

பெருமாளுக்கு அவரும் அவரது சிஷ்யர்களும் நல்ல முறையில் பூஜைகளைச் செய்து வந்தாலும் அது சரியான நடைமுறையில்லை என்றும் அப்பெருமாளுக்கு மண்ணின் மைந்தர்கள் பூஜை செய்வதே உகந்தது என்று கருதி மேல் கோட்டையைச் சேர்ந்த வைஷ்ணவர்களான திருநாராயண புர பட்டரையும், யோகானந்த பட்டரையும் வரவழைத்து தினசரி பூஜைகளைச் செய்யும்படி ஏற்பாடு செய்தார்.*

அவரது அணுகுமுறை அனைவருக்கும் பிடித்திருந்ததால் மக்கள் அவரைப் பெரிதும் மதித்தார்கள். "இவரே மகான்" என்றார்கள். சமணர் உட்பட பலரும் வைணவ மதத்தில் சேர்ந்தார்கள்.

இதற்கிடையில் ஹொய்சள மன்ன விட்டலராயன் மேல் கோட்டைக்கு வந்து இராமானுஜரை வணங்கி "சுவாமி! நான் இன்று முதல் வைணவ மதத்தில் சேர்ந்து வைஷ்ணவனாகும் பாக்கியத்தைக் கொடுங்கள்" என்றான்.

"உனக்கு முன்னாலேயே உன்னைப் பற்றிய செய்தி இங்கே வந்து விட்டது மன்னா. வைணவத்தில் சேர்ந்து விட்டதாகத் தலைநகரத்திலும் வேலாபுரத்திலும் அறிவிப்புப் பலகைகளை வைத்து விட்டேயாமே! இது என்ன வினோதம்?" என்று கேட்டார் இராமானுஜர்.

"தங்கள் திருநாட்டில் நடந்தது போல கசப்பான விஷயங்கள் கர்நாடகத்திலும் நடந்து விடக் கூடாது என்பதில் நான் கவனமாக இருக்கிறேன் சுவாமி. மதம் மாறிவிட்டு எதிர்ப்புகளையும் கலவரங்களையும் சந்திப்பதை விட எதிர்ப்புகளையும் கலவரங்களையும் எழாமல் செய்து விட்டு மதம் மாறுவதே உகந்தது என்று கருதியே அவ்வாறு செய்தேன் சுவாமி. என் நாட்டு மக்கள் என் வயிற்றில் பிறக்கவில்லையே தவிர அவர்களுக்கு நான் தந்தையாகவே இருக்கிறேன். நான் தவறு செய்ய மாட்டேன் என்று திடமாக நம்புகிறவர்கள் அவர்கள்" என்றான் மன்னன்.

* Page 223. Melkote through the ages. By Prabakar. Published by Academy of Sanskrit Research, Melkote.

"சமணர்கள் கூடவா?" என்று கேட்டார் இராமானுஜர்.

"ஆமாம் சுவாமி. என்னைச் சமணனாக அவர்கள் பார்ப்பதில்லை. மன்னனாகத்தான் பார்க்கிறார்கள்."

"நீ மதம் மாறுவதற்கு என்ன காரணம்?"

"நாங்கள் எப்படிச் சமணர்கள் ஆனோம் என்து தான் விசித்திரமாக இருக்கிறது. நாங்கள் ஆதியில் துவாரகையில் குடியேறிய ஸ்ரீகிருஷ்ணரின் யாதவ குலத்தைச் சேர்ந்தவர்கள்.* ஸ்ரீகிருஷ்ணரே எங்கள் தெய்வம். அந்த அடிப்படையில் நான் இருக்க வேண்டியது வைஷ்ணவத்தின்தான்."

"இது காரணமல்ல என்று நினைக்கிறேன்."

"சுவாமி! தங்களுக்குத் தெரிந்திருக்கும். சமண மத ஆச்சார் யர்கள் எனக்குத் துரோகமிழைத்து குற்றம் புரிந்தார்கள். தங்கள் குற்றத்திற்கு மதத்தையே பயன்படுத்தினார்கள். முன்பின் அறியாத தாங்களோ என் மகளை ஷண நேரத்தில் குணப் படுத்தினீர்கள். என் மன நிலை எப்படியிருக்கும் என்று யோசித்துப் பாருங்கள். நான் சமணனாக இருந்து கொண்டு துவார சமுத்திரத்தில் ஹொய்சளனேஸ்வரருக்கு சிவலாயம் எழுப்பி வருகிறேன். அதற்கு எதிர்ப்புகள் வரும் போது உடனுக்குடன் தகர்த்து விடுகிறேன். அந்த வகையில் தான் இந்தப் பெருமாளுக்கும் இங்கே கோயில் கட்ட இசைந்தேன். சமணனாக இருந்து கொண்டு பெருமாள் கோயிலை நான் கட்டுவது குறித்துத் தங்களுக்கு சங்கடமாக இருந்தது. அதை நீக்கும் விதமாகவும், பெருமாள் ஆலயங்களை வைஷ்ணவனாக இருந்து நிர்மாணிப்பது அதிக ஈடுபாட்டை உருவாக்கும் என்றும் வைணவ மதத்திற்கு மாற முடிவு செய்தேன் சுவாமி. எனக்கதில் பூரண சம்மதம்."

இராமானுஜர் அதற்குப் பிறகு மன்னனை கேள்வி கேட்க விரும்பவில்லை.

அவனை கல்யாணி புஷ்கரணியில் நீராடி வரச் செய்தார். சம்பிர தாயப்படி அவனது உடலில் பன்னிரண்டு திருமண் காப்பு களை அணியச் செய்தார். மந்திரங்களை ஓதி அவனுக்குப் பூணூல் அணி வித்தார். பஞ்ச சமஸ்காரங்களைச் செய்து வைஷ்ணவனாக்கினார்.

"மன்னவா! முறைப்படி வைஷ்ண மதத்தில் சேர்ந்து வைஷ்ணவனாக உனக்கு விஷ்ணு வர்த்தனன் என்ற தாச நாமத்தைச் சூட்டுகிறேன். இனி நீ விஷ்ணு வர்த்தனன் என்றே அழைக்கப்படுவாய். விஜயீபவ" என்றார் இராமானுஜர்.

* பக்கம் 10 வேளிர் வரலாறு. By. மு. ராகவையங்கார்.

மிகவும் எளிமையான முறையில் நடைபெற்ற இந்த மதமாற்றம் அங்கே இருந்த மக்களுக்கு அறிவிக்கப்பட்டது.

அவர்கள் "விஷ்ணு வர்த்தன மாமன்னர் வாழ்க வாழ்க" என்று வாழ்த்து கோஷங்களை எழுப்பினார்களே தவிர எதிர்ப்பு கோஷங்களை எழுப்பவில்லை.

பிறகு சிற்பிகள் வரவழைக்கப்பட்டு திருநாராயணப் பெருமாளுக்கு அமைய வேண்டிய திருக்கோயிலைப் பற்றிய ஆலோசனை நடந்தது. ஆலய நிர்மாணம் குறித்து இராமானுஜரும் சில யோசனைகளைச் சொன்னார்.

கால் கோளுக்கான நாள் குறிக்கப்பட்டு விழா விமரிசையாக நடந்தது. அடிக்கல்லை இராமானுஜரே நாட்டினார்.

ஆலயம் அமைக்கும் பொறுப்பை வகிக்க மன்னன் மடம் ஒன்றையும் அமைத்தான்.

இராமானுஜரும் சீடர்களும் தொண்டனூருக்குத் திரும்பி அங்கே இருந்த மடத்தில் வசித்தார்கள்.

மாதம் ஒரு முறை மேல்கோட்டைக்குச் சென்று தரிசனம் செய்தும் ஆலய நிர்மாணத்தைப் பார்வையிட்டும் வந்தார் இராமானுஜர்.

அவர் திருவரங்கத்திலிருந்து கர்நாடகத்திற்குப் புறப்பட்ட நேரத்தில் அவரது பிரதான சீடராகிய கூரத்தாழ்வார் தன்னை இராமானுஜர் என்று கூறிக் கொண்டு, காவியை அணிந்து, த்ரிதண்டம் என்னும் முக்கோலை அணிந்து சோழ மன்னனைச் சந்திக்க கங்கை கோண்ட சோழபுரத்திற்குப் புறப்பட்டார். அவரோடு இராமானுஜரின் குருநாதரான பெரிய நம்பிகளும் சென்றிருந்தார்.

இராமானுஜர் கர்நாடகத்திற்கு வந்த பின்பு அவர்களது நிலை என்னாயிற்று என்பது அவருக்குத் தெரியவில்லை. அதைத் தெரிந்து கொள்ள விரும்பினார். எனவே தனது சீடர்களில் ஒருவரான மாருதி சிறியாண்டான் என்பவரை அழைத்து சோழ நாட்டிற்குச் சென்று கூரத்தாழ்வார் மற்றும் பெரிய நம்பியைப் பற்றி அறிந்து வரும்படிச் சொன்னார்.*



துவார சமுத்திரத்தில் கட்டப்பட்டுக் கொண்டிருந்த சிவாலயத்திற்கு முன்னால் இருந்த திடலில் குழுமியிருந்த மக்களுக்கு முன்னால் சிவனடியார் ஒருவர் உபன்யாசம் செய்து கொண்டிருந்தார்.

* பக்கம் 30 ராமானுஜ வைபவம் By. P. B. அண்ணங்கராச்சாரியார்.

"சிவபெருமான் எந்த வடிவத்தில் இருந்தாலும் சூட்சுமத்தில் அர்த்த நாரீஸ்வரராக இருக்கிறார். சிவசக்தி சொரூபமே சிவபெருமானின் சொரூபம். நர்த்தமாடும் சிவ பெருமானே கூட அர்த்த நாரீஸ்வரர் சொரூபத்தில் தான் நர்த்தனமிடுகிறார் என்பது பலருக்குத் தெரியாது. அந்தத் திருவுருவத்தை நன்றாக கவனித்தால் ஒரு திருவடியில் சலங்கை இருப்பது தெரியும். அது சக்தியின் திருவடி. பெருமான் ஒரு திருவடியைத் தூக்கி யிருக்கிறார். ஒரு திருவடியை பூமியிலே அழுத்த நிறுத்தி யிருக்கிறார். அதற்கென்ன காரணம். எப்போதுமே ஒரு திருவடியைத் தூக்கினால் மறுதிருவடி பூமியில் தான் ஊன்றியிருக்க வேண்டும். இரண்டுமே தூக்கப்படுவது இயலாது. அப்படித் தூக்கப்பட்டால் அவர் கீழே விழ வேண்டியது தான். அதாவது சிவன் காலை ஊன்றினால் சக்தி காலைத் தூக்கலாம். சக்தி காலை ஊன்றினால் சிவன் காலைத் தூக்கலாம். இரண்டும் தனை உணர்ந்து இயங்குவதே உலகம். இது நமது வாழ்க்கைக்கும் பொருந்தும். சிவனும் சக்தியும் புரிதலோடு இயங்குவது போல் கணவனும் மனைவியும் இயங்கினால் பிரச்சனை வராது. எம்பெருமான் எப்போதும் நல்ல விஷயங்களுக்கு தாமே காட்சியாகவும் சாட்சியாகவும் இருந்து மக்களை வழிநடத்தவே இருக்கிறார். நாம் தான் கண்டதே காட்சி கொண்டே கோலமாய் இருந்து கொண்டு நமது வழியை நாமே வகுக்க முற்பட்டுத் தோல்வியடைகிறோம். இது தான் நாம் இன்று கற்க வேண்டிய பாடம்" என்று சொன்ன சிவனடியார் "இப்போது நான் கூறும் சுலோகத்தை எல்லோரும் சொல்லுங்கள்" என்று கூறி சுலோகத்தை உச்சரிக்கலானார்.

பிரம்ம முராரி ஸீரார்ச்சித லிங்கம்
நிர்மல பாஸித சோபித லிங்கம்
ஜன்மஜ தக்க வினாசன லிங்கம்
தத்பிரணமாமி சதாசிவ லிங்கம்! 1

தேவமுனி ப்ரவராச்சித லிங்கம்
காமதஹீம் கருணாகர லிங்கம்
ராவணதர்ப வினாசன லிங்கம்
தத்பிரணமாமி சதாசிவ லிங்கம்! 2

ஸர்வஸீகந்தி ஸீபித லிங்கம்
புத்திவிவர்தன காரண லிங்கம்
ஸித்தஸீராஸீர வந்தித லிங்கம்
தத்பிரணமாமி சதாசிவ லிங்கம்* 3

* லிங்காஷ்டகம். (ஒரு பகுதி)

இவ்வாறு சிவபெருமானைப் போற்றும் பாடல்களை சிவனடியாரும் பக்தர்களுமாக உச்சாடனம் செய்து முடித்த பின் "எல்லோருக்கும் சிவபெருமானின் அருள் சித்திக்கட்டும்" என்றார் சிவனடியார்.

பக்தர்கள் அவரை வணங்கி விடைபெற்றுக் கொண்டார்கள்.

ஒருவர் மட்டும் விடைபெற்றுக் கொள்ளவில்லை.

அவரைக் கண்டதும் ஓடோடி வந்த சிவனடியார் "சுவாமி! நீங்களா? நீங்கள் இங்கே அமரலாமா? நான் இங்கேயும் நீங்கள் மேடையிலும் அமரவேண்டும்" என்றதும் "உட்காருங்கள்" என்றார் நீலகேசி.

"தங்கள் உபன்யாசத்தைக் கேட்பதற்கு மக்கள் ஆயிர மாயிரமாய் காத்திருக்கிறார்கள். தாங்கள் போய் எனது பேச்சைக் கேட்கலாமா? நான் சைவ மதத்தினன் ஆயிற்றே?" என்றார் சிவனடியார்.

"எந்த மதமானால் என்ன ஐயா? எல்லாவற்றுக்கும் உட்பொருள் ஒன்று தானே? எல்லா மதங்களும் மக்களைக் கடைத் தேற்றுவதற்காகத் தானே?" என்றார் நீலகேசி.

"ஆகா! ஒன்று சொன்னாலும் நன்றே சொன்னீர்கள். இந்தத் தத்துவத்தை மக்கள் உணர்ந்து கொண்டால் அவர்களும் சிறப்பார்கள். மதங்களும் சிறக்கும்."

"நீங்கள் கூறுவதெல்லாம் ஏட்டில் மட்டுமே இருக்கும் ஏற்றமான கருத்துக்கள். நாட்டிற்குள் இல்லை."

"நாட்டிற்குள் இல்லையா? என்ன சொல்கிறீர்கள்?"

"உங்களுக்கு விஷயம் தெரியாதா? நமது மன்னர் மதம் மாறி விட்டார். சமணத்தை விட்டு விட்டு வைணவத்திற்குப் போய் விட்டார்."

"அதனால் என்ன?"

"சிவனடியாரே! நீங்களும் மதம் மாறினால் ஒன்றும் ஆகி விடாது. மன்னன் மதம் மாறினால் மக்களின் மனம் மாறும். மக்களும் மதம் மாறுவார்கள். ஏற்கனவே அது தொடங்கி விட்டது" என்றார் நீலகேசி.

அப்போது ஆலயத்திற்குள் மன்னன் விஷ்ணு வர்த்தனனும் சேனாதிபதியும் பிரவேசித்துக் கொண்டிருந்தார்கள்.





ஒரு விஷயத்திற்கு இருவிதமான தீர்வுகள் தான் உண்டு. ஒன்று ஒப்புக் கொண்டு கடைப்பிடிப்பது. மற்றொன்று எதிர்த்துப் போராடுவது. இதற் கிடையில் ஏதாவது வழி இருக்குமானால் அது நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வது – நீலகேசி




மன்னன் வருவதைப் பார்த்ததும் அங்கே இருக்க விரும்பாத நீலகேசி "சிவனடியாரே! நாம் இங்கே நின்று பேசுவது சரியல்ல. பின்பக்கமாகச் சென்று வெளியேறி விடுவோம்" என்றார்.

"மகாராஜாவைப் பார்த்து விட்டு அவ்வாறு செய்வது தவறு அடிகளே. அவரிடம் நாலு வார்த்தை பேசி விட்டுச் செல்வது சரி" என்றார் சிவனடியார்.

"நீங்கள் வேண்டுமானால் பேசிக் கொள்ளுங்கள். என்னால் முடியாது" என்று கூறி விட்டு அருகில் பருத்து வளர்ந்திருந்த குரவ மரத்திற்குப் பின்னால் மறைந்து கொண்டார் நீலகேசி.

அதே சமயம் மன்னன் விஷ்ணு வர்த்தனனும் சேனாதிபதியும் சிவனடியாரின் பக்கமே திரும்பவில்லை. நேராக ஆலய நிர்மாண கட்டடத்திற்குச் சென்று விட்டனர்.

மரத்திற்குப் பின்னால் ஒளிந்திருந்த நீலகேசி வந்தார்.

"என்ன பேசினீர்களா?" என்று கேட்டார்.

"மகாராஜா என்னைக் கவனிக்க வில்லை. அப்படியே சென்று விட்டார்" என்றார் சிவனடியார்.

"அவர் வைஷ்ணவராகி விட்டாரல்லவா? சைவராகிய உங்களையும் சமணனாகிய என்னையும் கவனிக்க மாட்டார். நாம் அவருக்கு வேண்டாதப் பொருள்கள்" என்றார் நீலகேசி.

"அப்படிச் சொல்லாதீர்கள் அடிகளே! சைவர்களை அவர் கவனிக்க மாட்டார் என்றால் இங்கே சிவாலயத்தை எதற்காகக் கட்டுகிறார்?" என்று கேட்டார் சிவனடியார்.

"அதெல்லாம் விளம்பரத்திற்காகச் செய்வது. சைவர்கள் தனக்கு எதிர்ப்பைக் காட்டக் கூடாது என்பதற்காகச் செய்வது. அவர் இங்கே வந்திருப்பது கூட கட்டப்பட்டு வரும் சிவாலயத்தை அப்படியே விட்டு விடும் படி ஆணையிடுவதற்காக இருக்கலாம். நீங்கள் என்ன இத்துணை வெள்ளந்தியாக இருக்கிறீர்கள்?

உங்களோடு நிறைய பேச வேண்டும். இங்கே பேசமுடியாது. ஆதிநாதர் கோயிலையடுத்து தோப்பிற்குப் போகலாம் வாருங்கள். அங்கே யாரும் வரமாட்டார்கள்" என்றார் நீலகேசி.

சிவனடியாரும் அதை ஆதரித்து அவருடன் தோப்பிற்குச் சென்றார்.

அங்கே குரவை மரங்களும், கொங்கை மரங்களும், மகிழ மரங்களும் அடர்த்தியாக வளர்ந்திருந்தன. அதற்குள் அழைத்து சென்ற நீலகேசி உள்ளே விழுந்து கிடந்த பெரிய மரம் ஒன்றின் மீது அமர்ந்து கொண்டு சிவனடியாரையும் அமரச் சொன்னார்.

"நான் வைஷ்ணவனாக மாறலாம் என்று முடிவு செய்து விட்டேன் சிவனடியாரே" என்று ஒரு குண்டைத் தூக்கிப் போட்டார் நீலகேசி.

"ஏன் அடிகளே! என்ன ஆயிற்று உங்களுக்கு? நீங்கள் ஏன் மதம் மாற வேண்டும்?" என்று கேட்டார் சிவனடியார்.

"மகாராஜா மதம் மாறி விட்டபின் நான் என்னைச் சேர்ந்த சமணர்களும் மதம் மாறாவிட்டால் மகாராஜா எங்களுக்கு நெருக்கடியைக் கொடுப்பார். தேவையென்றால் சவுக்கடியும் கொடுப்பார். என்னால் சித்திர வதைகளைத் தாங்க முடியாது."

"உயிருக்கு பயந்து மதம் மாறுவது பெருமையல்ல சிறுமை. பல்லவராஜ்யத்தில் பல்லவ மன்னன் மகேந்திர வர்மன் திருநாவுக்கரர் என்ற சைவப் பேரடியாரைச் சித்திரவதை செய்தான். சுண்ணாம்பு காளவாயில் போட்டு அரைத்தான். அவர் எல்லா கொடுமைகளையும் சகித்துக் கொண்டு சைவராக இருந்தாரே தவிர மதம் மாற வில்லை."

"அதெல்லாம் கட்டுக்கதை சிவனடியாரே. ஒருவேளை உண்மை என்று வைத்துக் கொண்டாலும் என்னால் திருநாவுக் கரசரைப் போல தாங்கிக் கொள்ள முடியாது. மதம் முக்கியமா உயிர் முக்கியமா என்று பார்த்தால் உயிர் தான் முக்கியம். மதத்தைப் புதுப்பித்துக் கொள்ள முடியும். உயிரைப் புதுப்பித்துக் கொள்ள முடியாது."

"அடிகளே! மகாராஜாவைப் பற்றி நீங்கள் புரிந்து கொள்ள வில்லை என்றே தோன்றுகிறது. அவர் சமண மன்னராக இருந்த போது இதர மதங்களைப் புறக்கணிக்க வில்லை. இதர மதத்தினரைச் சமணத்தில் சேரும்படிக் கட்டாயப் படுத்தவில்லை. வைஷ்ணவர்களுக்கும் சைவர்களுக்கும் உரிய ஆலயங்களைக் கட்டி வருகிறார். அவரைப் பொறுத்தவரை மத இணக்கம் என்பது இன்றியமையாதது."

“நீங்கள் பழைய கதையைப் பேசுகிறீர்கள் சிவனடியாரே. இப்போது காட்சிகள் மாறி விட்டன. தமிழகத்திலிருந்து இராமானுஜன் என்ற வைஷ்ணவ மத வெறியன் வந்திருக்கிறான். அவனிடம் ஏராளமான செல்வம் உள்ளது. திருவரங்கன் ஆலயத்திலிருந்து ஏகப்பட்டச் செல்வங்களைக் கொண்டு வந்திருக்கிறான். அவன் இங்கு வந்ததே இங்குள்ள மக்களை வைஷ்ணவத்திற்கு மாற்றுவதற்காகத் தான். கர்நாடகத்தை வைணவ நாடாக மாற்றுவதே அவனது லட்சியம். ஏராளமான செல்வங்களை மக்களுக்கும் மன்னனுக்கும் வாரி இறைக்கிறான். மக்கள் ஆட்டு மந்தைகளாக மாறி அவன் தூக்கி எறியும் செல்வங்களைப் பொறுக்கிக் கொண்டு வைணவ மதத்திற்கு மாறி வருகிறார்கள். மகாராஜாவும் மாறி விட்டார். அவரது பெயர் பிட்டி தேவனோ விட்டல ராயனோ அல்ல. விஷ்ணு வர்த்தனன். போதுமா?”

“கட்டாய மத மாற்றத்தை மகாராஜா ஒரு போதும் ஆதரிக்க மாட்டார். ஆகவே நீங்கள் அஞ்சவும் வேண்டாம். மதம் மாறவும் வேண்டாம்.”

“நான் இவ்வளவு சொல்லியும் உங்களுக்குப் புரியவில்லை என்றால் நான் என்ன சொல்வது? மகாராஜா மட்டும் இருந்தால் பிரச்சனையில்லை. சமணத்தை விட்டு விலகியிருக்க மாட்டார். ஆனால் அவரை இயக்குவது இராமானுஜன். அவனை அற்பமாக எண்ணி விடாதீர்கள். சோழ நாட்டை வைணவ நாடாக மாற்ற மதக் கலவரங்களைத் தோற்றுவித்தவன் அவன். ஆனால் சோழ மன்னன் நம் மன்னனைப் போன்றவன் அல்ல. வீரன். தீரன். இராமானுஜனைக் கைது செய்ய ஆணையிட்டான். ஆனால் இராமானுஜன் அவர்களையெல்லாம் ஏமாற்றிவிட்டு இங்கே வந்து விட்டு அங்கே கைவிட்டுப் போன விவகாரத்தை இங்கே கையில் எடுத்துக் கொண்டான். சோழ மன்னனைப் போல தீரமாகச் செயல்படாமல் நம் மன்னரோ அவனுக்கு ஊழியம் புரிகிறார். அவனது வார்த்தைகளை தாரக மந்திரமாக எண்ணி பின்பற்றுகிறார். எத்துணை இழிவு? இந்த இராமானுஜன் நாளைக்கு இங்கே கட்டப்பட்டு வரும் சிவாலயத்தைப் பாதியிலேயே விட்டு விடும் படிக் கூறினாலும் கூறலாம். அப்படிக் கூறினால் மகாராஜா தட்ட மாட்டார்.”

சிவனடியார் சற்றே அசதியடைந்தார்.

“என்ன செய்யலாம் என்கிறீர்கள்?” என்று கேட்டார்.

“என்னைப் போல நீங்களும் வைணவத்திற்கு மாறி விடுங்கள். நமக்கு அது தான் பாதுகாப்பு.”

"என்ன சொல்கிறீர்கள் அடிகளே! சைவனான நான் வைணவத்திற்கு மாறவேண்டுமா?"

"சமணனான நானே விரும்பும் போது நீங்கள் மாறுவதற்கென்ன?"

"விளையாட்டிற்காகவும் அந்த எண்ணம் நமக்கு வேண்டாம். மதம் என்பது மனமல்ல மாறுவதற்கு. அது உயிர். அதை விட்டுப் பிரிந்து விட்டால் பிணம் தான் மிஞ்சும். ஆகவே மதம் மாறுவதும் உயிரை விடுவதும் ஒன்று. நாங்கள் சைவ மதத்தில் சேர்ந்த போது உயிருள்ள வரை அந்த மதத்திலேயே இருந்து சிவபெருமானைப் போற்றியே வாழ்வோம் என்று சத்தியப் பிரமாணம் எடுத்துக் கொண்டிருக்கிறோம்."

"நாங்களும் தான் எடுத்துக் கொண்டிருக்கிறோம்! பௌத்தர் களும் எடுத்துக் கொண்டிருக்கிறோம்."

"பிறகெப்படி சத்தியப் பிரமாணங்களை மீறி மதம் மாறுவது?"

"நாட்டை ஆள்பவன் சத்திய சீலனாக இருந்தால் தான் சத்தியவான்களும் சத்தியமும் வாழ முடியும். பேயானது ஆட்சி செய்தால் அசத்தியவான்களும் அசத்தியமும்தான் வாழ முடியும். தற்போதைய நிலை அது தான். அதோடு...."

"அதோடு என்ன?"

"விஷ்ணுவர்த்தனன் பேரரசன் ஆனதும் பேராசை உண்டாகி விட்டது. பிறரை மதிக்க மறந்தான். அந்தப் பேராசைப் பிசாசை ஆண்டு விக்க இராமானுஜன் என்றப் பொய் சன்யாசியும் வந்து விட்டான். எனவே மன்னன் இங்கே உள்ள அனைவரையும் கட்டாயமாக மதமாற்றம் செய்யச் சொல்லுவான். அதற்குள் நாமாக மாறி விட்டால் சேதாரம் இருக்காது."

"நீங்கள் நம் மகாராஜா மீது அவதூறு பேசுகிறீர்கள். அவர் அவ்வாறு நடந்து கொள்பவரல்ல."

"உமக்கு என்ன நடக்கிறதென்றே தெரியவில்லை. இராமானுஜரின் பேச்சைக் கொண்டு மன்னன் தன் குடும்பத்தினரையும் அதிகாரிகளையும் மதமாற்றம் செய்யும் காரியங்களில் முடுக்கி விட்டிருக்கிறான். அந்த வேலையில் இளவரசன் நரசிம்மன் நுணுக்கமாகச் செயல் படுகிறான். மதம் மாற மறுப்பவர்களை அவன் மிரட்டுவதில்லை. அவர்களது வரிகளை நான்கு மடங்கு ஏற்றி விடுகிறான். அதற்கு பயந்தே பல மதத்தவர்களும் மாதம் மாறச் சம்மதித்து விடுகின்றனர்."

"இது கேள்விப்படாத விஷயமாக இருக்கிறதே?"

"நமது பாரத நாட்டின் வடப்பகுதியை ஆக்கிரமித்து ஆண்டு வரும் துருக்கியர் என்னும் மிலேச்சர் இனம் மக்களை வதைக்கிறது. இந்து மக்களை இஸ்லாம் மதத்திற்கு மாற்ற கட்டாயப் படுத்துகிறது. மாற மறுப்பவர் மீது ஜெசியா என்னும் வரி விதிக்கப்படுகிறது. அதைப் போலத்தான் இளவரசனும் நடந்து கொள்கிறான். புது வரியை விதிக்காமல் இருக்கிற வரியை உயர்த்துகிறான். நீங்களும் உங்களைச் சேர்ந்த சைவர்களும் மதம் மாற மறுப்பு தெரிவித்தால் நான்கு மடங்கு வரி கட்ட வேண்டியதாக இருக்கும். சம்மதமா?"

"இது மகா கேவலம் அடிகளே. இதை நான் சிறிதும் எதிர் பார்க்கவில்லை."

"நீங்கள் குண்டு சட்டிக்குள்ளேயே குதிரையை ஓட்டிக் கொண்டிருந்தால் உலக விஷயமும் அரசியல் சதியும் எப்படித் தெரியும்? லிங்காஷ்டகத்தை ஓதுவதை விட்டு கிருஷ்ணாஷ்டகத்தை ஓதத் துவங்குங்கள்" என்று சொன்ன நீலகேசி கிருஷ்ணாஷ்டகத்தை உச்சரிக்கலானார்.

**வஸீதேவ ஸீதம் தேவம்**
**கம்ச சாணூர மர்த்தனம்**
**தேவகீ பரமானந்தம்**
**கிருஷ்ணம் வந்தே ஜகத்குரும்!** 1
**அதஸீ புஷ்ப ஸங்காசம்**
**ஹார நூபுர சோபிதம்**
**ரத்ன கங்கண கேயூரம்**
**கிருஷ்ணம் வந்தே ஜகத்குரும்!** 2
**குடிலாலக ஸம்யுக்தம்**
**பூர்ண சந்திர நிபானனம்**
**விவஸத் குண்டல தரம் தேவம்**
**கிருஷ்ணம் வந்தே ஜகத்குரும்!** 3

சிவனடியார் குறுக்கிட்டார்.

"போதும்! போதும்! சமணராக இருந்து கொண்டு கிருஷ்ண பாராயணம் செய்கிறீர்களே! அபச்சாரம் அடிகளே" என்றான்.

"கிருஷ்ண பாராயணம் செய்ய எனக்கென்ன ஆசையா சிவனடியாரே? இல்லை. இல்லை. இல்லவே இல்லை. ஆனாலும் பதார்த்தம் கைக் கூட வேண்டுமென்றால் யதார்த்தம் தான் சரியான வழி. நாம் பயணப்படும் பாதை மூடப்பட்டு விட்டால் வேறு பாதையை நோக்கிச் செல்ல வேண்டுமே தவிர மூடப் பட்ட இடத்தையே மோதிக் கொண்டிருக்கக் கூடாது. பாதை மாறி

பயணம் செய்வதென்பது இலக்கை விட்டு விட்டு தூரத்திற்குச் சென்று விட்ட மாதிரி இருக்கும். ஆனால் உண்மை அதுவல்ல. பாதை மாறியாவது இலக்கை அடைந்து விடவேண்டும். எது முடியுமோ அதைச் செய்து கொண்டு முன்னேற வேண்டுமே தவிர முடியாத விஷயத்தில் முட்டிக் கொண்டிருப்பது மூடத்தனமானது. பயனற்றது" என்றார் நீலகேசி.

"நீங்கள் என்னதான் சொன்னாலும் வைணவ மதத்திற்கு மாறுவதென்பது எனக்கு இயலாத விஷயம். சிவனை மறந்து வாழ்ந்தாலும் வாழ்வேனே தவிர மதம் மாறி திருமாலை ஒரு நாளும் தொழ மாட்டேன்" என்றார் சிவனடியார்.

"அப்படியானால் நான்கு மடங்கு வரியைச் செலுத்தத் தயாராக இருக்கிறீர்களா?" என்று கேட்டார் நீலகேசி.

"அடிகளே! என்னைப் பற்றி உமக்குத் தெரியாது. நான் சிவத் தொண்டு புரிந்து வருகிறேனே தவிர சிவன் சொத்தில் கை வைத்ததில்லை. யாரிடமும் இரந்தது கிடையாது. சொற்பமான பணத்தில் சிக்கனமாக வாழ்ந்து வருகிறேன். இறைவன் அளித்த உயிரை எடுக்கும் உரிமை நமக்கில்லை என்பதால் தான் தற்கொலை செய்து கொள்ளாமல் உயிர் வாழ்ந்து வருகிறேன். என்னால் நான்கு மடங்கு வரியைக் கட்ட முடியாது. அப்படிப்பட்ட நிர்ப்பந்தம் வந்தால் இறைவனின் கட்டளையை மீறி உயிரை மாய்த்துக் கொள்வேன்."

"நீங்கள் மட்டுமல்ல. இங்கே உள்ள சைவர்கள் எல்லோருமே இறைப் பணியில் பழுத்தவர்களே தவிர செல்வச் சிறப்பில் கொழுத் தவர்கள் அல்ல. அவர்களும் உங்களைப் போலவே உயிரைப் போக்கிக் கொள்வார்கள். அது உங்களுக்குச் சம்மதம் தானா?"

"நான் என்ன செய்ய முடியும்?"

"ஒரு விஷயத்திற்கு இரு தீர்வுகள்தான் உண்டு. ஒன்று ஒப்புக் கொண்டு கடைப் பிடிப்பது. மற்றொன்று எதிர்த்துப் போராடுவது. இதற்கிடையில் வேறு ஏதாவது வழி இருக்குமானால் அது நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வது? உங்களால் ஒப்புக் கொண்டு மதம் மாறுவது இயலாதென்றால் மதமாற்றத்தை எதிர்த்துப் போராட வேண்டும். அதைச் செய்யலாம் அல்லவா?"

"நான் ஒருவன் எதிர்த்தால் தலையைச் சீவி விடுவார்கள்."

"எதிர்ப்பது, போராடுவது என்றால் ஒருவரால் செய்யக் கூடியது அல்ல. பலரால் செய்ய வேண்டியது. சைவர்களை நீங்கள் திரட்டிப் போராட வேண்டும்."

"நான் சைவர்களின் தலைவன் அல்ல."

"தலைவனாக இருந்து போராடுவதை விட போராட்டத்தில் இறங்கித் தலைவனாவதுதான் சிறந்தது. அது தான் அவனை உயர்ந்த தலைவனாக்கும். சைவர்களை எல்லாம் அழையுங்கள். நிலைமையைச் சொல்லுங்கள். மதமாற்றத்தைக் கண்டியுங்கள். உங்கள் எதிர்ப்பை தெரிவிக்கும் விதமாக இந்த ஹொய்சளேஸ்வரர் ஆலயத்திலிருந்து நகரம் முழுவதும் தகவல் பலகைகளை வையுங்கள். பேரணி நடத்தி மன்னனுக்கும் மதமாற்றத்திற்கும் எதிரான கோஷங்களை தினமும் போடுங்கள். மதமாற்றம் கைவிடப்பட்டாலொழிய வரிகளைக் கட்ட மாட்டோம் என்று முழக்கமிடுங்கள். வைணவ ஆலயங்கள் மற்றும் வைணவ மடங்கள் ஆகியவற்றை திடீரெனத் தாக்கிச் சேதப் படுத்துங்கள். வைணவர்கள் ஓரிருவரைப் பிடித்துக் கொடூரமாகக் கொலை செய்யுங்கள். வைணவர்கள் கொதித் தெழுவார்கள். மதக்கலவரம் நடக்கும். கலவரமும் கொலைகளும் நடந்தால் மன்னன் மதமாற்றத்தைக் கைவிடுவான்."

"அடிகளே! ஒரு சைவன் செய்யக் கூடிய காரியமா இது?"

"நீங்களென்ன விஷயம் தெரியாமல் பேசுகிறீர்கள்? உங்களுக்கு நாங்கள் ஒன்றும் குறைந்தவர்கள் அல்லர். நீங்கள் இல்லற வாசிகள். நாங்களோ துறவிகள். நீங்கள் தலையிலேயே அழகாக முடி வளர்த்திருக்கிறீர்கள். நாங்களோ அவற்றைப் பிடுங்கி மொட்டையாக்கி இருக்கிறோம். எங்களது அடிப்படை கொள்கை அஹிம்சையும் சமரசமும்தான். அவற்றை விட்டு விட்டு நாங்களே ஆயுதங்களை ஏந்தி போராட்டத்தில் குதிக்கும் போது உங்களுக்கென்ன?"

"மத விஷயம் சம்பந்தமாக யாராவது கருத்து சொல்ல முற்பட்டால் கைது செய்யப்படுவார்கள் என்று அரசாணை வெளியிடப்பட்டிருக்கிறதாமே? நாம் எப்படி போராட முடியும்?"

"உங்களை விட்டால் கேள்விகளை அடுக்கிக் கொண்டே போவீர்கள் போலிருக்கிறதே! அரசாணைகளை வெளி யிடுவது நடைமுறைச் சம்பிரதாயம் தானே! நாம் எதிர்க்கப் போவது அதையும் சேர்த்து தான். நாம் ஆயிரக் கணக்கில் திரண்டால் அரசாங்கம் எல்லோரையும் கைது செய்ய முடியாது. அப்படிச் செய்தால் மக்கள் எழுந்து கிளர்ச்சிச் செய்வார்கள். மன்னனால் ஒன்றும் செய்ய முடியாது. அடங்கித்தான் போக வேண்டும்."

"நீங்கள் சொல்வது சரிதான். சைவர்களைத் திரட்ட முயற்சிக்கிறேன். நீங்கள் உங்களைச் சேர்ந்த சமணர்களைத் திரட்டுவீர்கள் அல்லவா?"

"ஆகா! அவர்களைத் திரட்டாமலா? நாங்கள் இமயப் பர்வதம். நீங்கள் விந்தியப் பர்வதம். நாமிருவர் சேர்ந்தால் நாசம் நிச்சயம். இரண்டு நாட்களே நமக்கு அவகாசம். நான் புறப்படுகிறேன்" என்று சொல்லி விட்டுப் புறப்பட்டார் நீலகேசி.

நீலகேசிக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது. சிவனடியாரை வைத்து சைவர்களைத் தூண்டி விட்டு நோட்டம் பார்க்க முயன்று அதில் வெற்றி பெற்று விட்டதாகக் கருதிய அவர் சைவர்களின் கை ஓங்கி கலவரம் வெடிக்கும்; போது அதில் சமணர்களும் கைகோர்த்துக் கொண்டால் துவார சமுத்திரம் கலவரச் சமுத்திரமாகிக் கொந்தளிக்கும் அது மன்னனைக் கங்கடிக்கும் என்றும், அவ்வாறு கலக்கம் நேரும் போது மன்னன் இராமானுஜரை கர்நாடகத்தில் வைத்திருக்க விரும்பாமல் வெளியேற்றி விடுவார் என்றும் கணக்கு போட்டுக் கொண்டார்.

"பிட்டிதேவா! உன் அகங்காரத்தை நான் அடக்குகிறேன். உன் அதிகாரங்களை நான் அடக்குகிறேன். உன் கனவுகளை நான் சிதைக்கிறேன். என்னை யாரென்று எண்ணிக் கொண்டாய்? நான் துறவிக்கு துறவி. அருவிக்கு அருவி. நான் துறவியாகவும் இருப்பேன். அருவியாகவும் இருப்பேன். என் கைகளில் மலர்களையும் ஏந்துவேன். மாய்க்கும் ஆயுதங்களையும் ஏந்துவேன். எனக்கு நான்தான் விரோதி. எனக்கு நான் தான் எமன். நான் நினைத்ததுதான் நினைக்கும். என்னை விரோதிகள் வெல்ல முடியாது. நண்பர்கள் வெல்ல முடியாது. பெண்மணிகள் வெல்ல முடியாது. காட்டு விலங்குகளும் எனக்கு முன்னால் ஓட்டம் போடுமே தவிர ஆர்ப்பரிக்காது. என்னை வெல்லக் கூடியவன் நான் மட்டுமே தான்" என்று செருக்கோடு தனக்குத் தானே பேசிக் கொண்டு ஆதிநாதர் ஆலயத்திற்குச் சென்று "இன்றைக்கு உபன்யாசத்திற்கு ஏற்பாடுகள் செய்யுங்கள்" என்றார் ஆர்வத்துடன்.

உபன்யாசத்தைக் கேட்க கணிசமானவர்கள் வந்தார்கள். வழிபாட்டிற்கு வந்திருந்த மகாராணியும் மேடை மண்டபத்தில் அமர்ந்து உபன்யாசத்தைக் கேட்டாள்.

மனநிறைவும் ஆர்வமும் இருந்ததாலோ என்னவோ நீலகேசி அன்று மிகவும் சிறப்பான முறையில் உபன்யாசத்தை நிகழ்த்தினார்.

"நமக்கெல்லாம் மகாவீரர் வர்த்தமானரே துணை. அவரது கட்டளைகளே நமது வாழ்க்கைக்கான பாதை. அவரது கட்டளைப்படி நடப்பதைத் தவிர நமக்கு வேறு உய்வில்லை. நாம் வாழும் மண்ணில்தான் பூச்சிகளும் புழுக்களும்

வாழ்கின்றன. மான்களும் மயில்களும் வாழ்கின்றன. சிங்கங்களும் சிறுத்தைகளும் வாழ்கின்றன. இந்த மண்ணில் தான் மருத மரங்கள் வளர்கின்றன. மாமரங்கள் வளர்கின்றன. அவற்றுக்குள் நான் எத்துணை வேறுபாடு? மாறுபாடு? முரண்பாடு? அவை எப்படி நடந்து கொண்டாலும் நாம் வாழ்கிறோம். அதாவது மனிதர்கள் வாழ்கிறார்கள். சமணர்களும் அப்படித் தான். மேலே சொன்ன முரண்பாடுகள் தூசுகள் போலே நம்மைச் சுற்றிச் சுழன்றாலும், மேகங்கள் போலே திரண்டு பொழிந்தாலும் நமது நிலையிலிருந்து நாம் மாறக் கூடாது. நமது நிலை என்பது என்ன? அஹிம்சை. சமரசம். அஹிம்சை என்றால் சமணம். சமரசம் என்றால் சமணம். அதுவே நமக்குச் சுகம். சுபம்" என்று முடித்த போது மகாராணியே வந்து பாராட்டினார்.

"தாங்களே பாராட்டுகிறீர்கள் என்றால் வாசந்திகா தேவியே வந்து பாராட்டுவதாகத்தான் பொருள்" என்று சொல்லிக் கொண்ட அவர் "மகாராஜா வைணவத்திற்கு மாறி விட்டார் என்று கேள்விப் பட்டேன். அவருக்கும் எனக்குமான இடைவெளி அதிகமாகி விட்டது. அவரை அணுகும் தகுதி எனக்கில்லை. அவருக்கு என் வாழ்த்துக்களை என் சார்பில் மகாராணிதான் தெரிவிக்க வேண்டும். அவர் எந்த மதம் மாறினாலும் அவரது வழி நேர் வழியாகத்தான் இருக்கும். மக்களை வாழ்விக்கும் வழியாகத்தான் இருக்கும்" என்றார்.

"யார் எப்படி மாறினாலும் நான் மாற மாட்டேன் அடிகளே. மலர்மிசை ஏகினான் மகாவீரரையன்றி வேறு யாரது திருவடியையும் எனது திருமுடி தாங்காது" என்றாள் மகாராணி.

"பதியே தெய்வம். பதியின் வழியே கதி என்றிருக்க வேண்டிய வர்கள் மனைவிமார்கள். ராணி மார்களுக்கும் அது பொருந்தும். அந்த வழியில் மகாராஜாவின் வழியில் தாங்களும் வைஷ்ணவி ஆகலாம். தவறொன்றுமில்லை" என்றார் நீலகேசி.

"அது நடக்கப் போவதில்லை அடிகளே. கிழக்கில் உதிக்கும் சூரியன் மேற்கில் உதிக்கலாம். கடலில் தவழும் பேரலைகள் ஓய்ந்து போகலாம். மலையிருந்த இடத்தில் மடுவும் மடு இருந்த இடத்தில் மலையும் இடம் பெயரலாம். நான் தடம் மாற மாட்டேன். தவறிழைக்க மாட்டேன். என் பதி பேரரசின் சக்கிரவர்த்தி. அவரது அறிவும் பார்வையும் விசாலமானது. ஆகவே அவர் எடுக்கும் முடிவுகள் தீர்க்கமானவைகளாகத்தான் இருக்கும். ஆகவே அவரது முடிவுகளில் நான் தலையிடுவதில்லை. எனது தீர்மானங்களில் அவர் தடை போடுவதில்லை."

"ஆகா! அது தெரியாதா எனக்கு? ஆயினும் ஒன்று அந்த வைஷ்ணவன் இராமானுஜனை மட்டும் நம்பாதீர்கள்."

மகாராணி எதுவும் பேசாமல் வெளியே நடந்தார்.

"போ ராணி போ. வரவிருக்கும் நாட்கள் நீயும் உன் கணவனும் உறக்கத்தைத் துறக்கப் போகும் நாட்கள். கலக்கத்தைச் சுமக்கப் போகும் நாட்கள். கனவுகள் கலைந்து போய் கவலைப்பட விருக்கும் நாட்கள். எனக்கோ சந்தோஷம் தரும் இன்ப மயமான நாட்கள். நன்றாகப் படுத்து உறங்கப் போகும் நாட்கள்" என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்டார்.

அங்கிருந்த சமணத் தலைவர்கள் தங்குமிடமான பாசதிக்குச் சென்று உணவுண்டு விட்டு மகிழ்ச்சியோடு படுத்தார்.

தூக்கம் அவரது கண்களைத் தழுவ முற்பட்ட போது கதவு லேசாகத் தட்டப்பட்டது.

நாயொன்று குலைத்தது.

ஆந்தைகள் இரண்டு இரைந்தன.

"நள்ளிரவில் கதவைத் தட்டுவது யார்?" என்று கேட்டுக் கொண்ட நீலகேசி அறையின் மூலையில் எரிந்து கொண்டிருந்த பெரிய அகல் விளக்கின் திரியைத் தூண்டி விட்டு கதவைத் திறந்தார்.

உள்ளே நுழைந்தாள் திங்களழகி.

"நீயா? எதற்காக வந்தாய்?" என்று சீறினார் நீலகேசி.

"உங்களைத் திகம்பரராக தரிசிக்க வந்தேன்" என்றாள் திங்களழகி.





கெடுதல்களைச் செய்பவனை விட கெடுதல்களைச் செய்து விட்டு நல்லவனைப் போல வாழ்பவன் மகா அயோக்கியன் – திங்களழகி




தன்னால் சீரழிக்கப்பட்டு அலட்சியப்படுத்தப்பட்ட பெண்ணான திங்களழகி தான் தங்கியிருந்த இடத்திற்கு நள்ளிரவில் வந்தது நிலகேசிக்குப் பெரிய விஷயமாக இல்லை. வியப்பான விஷயமாகவும் இல்லை.

ஆனால் -

தன்னை திகம்பரர் கோலத்தில் காண வந்ததாகச் சொன்னது தான் அவரை அசர வைத்தது. கோபப்பட வைத்தது.

சிவனடியாருடன் பேசிவிட்டு, உபன்யாசம் செய்து விட்டு, மகாராணியிடம் பவ்யமாகப் பேசிவிட்டு பரம சந்தோஷத்துடன் வந்திருந்த அவருக்குத் திங்களழகியின் வரவு அறவே பிடிக்கவில்லை.

சுவைக்கும் வரை பெண்களைக் கனியாகக் கருதுவதும் சுவைத்துச் சக்கையாக்கிய பின் கவைக்கும் உதவாதக் குப்பயையாகக் கருதுவதும் ஆண்களின் குணம்.

திங்களழகியின் அழகால் மயங்கி இருமுறைப் பருகியிருந்த நீலகேசி பழைய சோறு புளிக்கும் என்ற கதையாக அவளையும் நினைத்து வெறுப்பே அடைந்தார்.

பெண்கள் விஷயத்தில் அவருக்கு புதுசும் புதுமையும்தான் பிடிக்குமே தவிர பழசும், பழகிய வித்தைகளும் பிடிக்காது.

அதோடு நச்சுப் பொய்கையில் வீசப்பட்டு சாக வேண்டிய திங்களழகி பிழைத்ததோடு மட்டுமின்றி அவரைப் பழிவாங்கப் போவதாகவும் கூறியிருந்தாளாதலால் தற்போது அவளைப் பெண்ணாகக் கருதாமல் பாம்பாகவே கருதி கசந்தார்.

“என்ன உளறுகிறாய்?” என்று தடித்த குரலில் கேட்டார்.

அவளோ பதற்றமடையாமல் கதவைச் சாத்தித் தாழிட்டு விட்டு “உளறவில்லை அடிகளே. ஏற்கனவே நீங்கள் எனக்குத் தந்த தரிசனம் தானே அது? அதைத்தான் கேட்கிறேன். காட்டுங்களேன்” என்றார் சகஜமாக.

"திங்களழகி! நீ என்னிடம் அளவுக்கு மீறி விளையாடுகிறாய்" என்று மிரட்டினார்.

"நீங்கள்தான் என்னிடம் அளவுக்கு மீறி விளையாடி விட்டீர்கள். மறந்து விட்டீர்களா?" என்று கேட்டாள் திங்களழகி.

"உன்னிடம் விளையாடியது விதி. நானல்ல" என்றார் நீலகேசி.

"நான் வந்திருப்பதையும் விதி என்றே நினைத்துக் கொண்டு விதி கேட்ட காட்சியை காட்டுங்கள் அடிகளே" என்று சொன்ன திங்களழகி "இப்போது நான் சுகமாக இருக்கிறேன். என்னிடம் வரும் இளைஞர்கள் திகம்பரர் கோலத்தில் வரவேண்டும் என்று நிபந்தனை விதித்து விட்டேன். அவர்களும் சந்தோஷமாக அந்த கோலத்தில் வருகிறார்கள். எல்லாம் உங்கள் புண்ணியம்தான்" என்றாள்.

அவளுக்கு என்ன பதில் சொல்வது என்பது புரியாமல் சற்றே விழித்த நீலகேசி அவளை மிரட்டுவதால் பயனில்லை என்று கருதி "இதோ பார் திங்களழகி. உனக்கு என்னால் நேர்ந்த கொடுமைக்கு நான் மிகவும் வருந்துகிறேன். நடக்கக் கூடாதது நடந்து விட்டது. நடந்ததையே நினைப்பது வேதனையைத் தான் தரும். நடக்க வேண்டியதை யோசிப்போம். உன் குரோதத்தை நீக்கிக் கொள்" என்றார்.

"என்னிடம் குரோதமும் இல்லை. விரோதமும் இல்லை. நீங்களும் அந்தச் சம்பவத்திற்காக வருத்தமோ வேதனையோ அடைய வேண்டியதில்லை. எது நடக்க வேண்டும் என்று இருந்ததோ அதுதான் நடந்தது" என்றாள் திங்களழகி.

"அன்றைக்கு என்னைக் கொல்லப் போவதாகச் சபதமிட்டாயே அது?"

"அதுவும் விதிதான். அன்றைக்கு அப்படி நான் பேச வேண்டும் என்று விதி இருந்தால் அதை யாரால் மாற்ற முடியும்? அதோடு அன்றைக்கு நான் அப்படிப் பேசினேனே தவிர அன்றைக்கே அப்படி ஏன் பேசினேன் என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன். அதோடு உங்களைக் கொன்று எனக்கு ஆகப் போவது எதுவுமில்லை. போய் விட்ட கற்பு மீண்டும் வரப் போவதில்லை. வீழ்ந்து விட்ட கனி மீண்டும் மரத்திற்குப் போகாது. கறந்து விட்ட பால் மீண்டும் மடிக்குப் போகாது. இழந்து போன கற்பும் அப்படித்தான்."

"இவ்வளவு தெளிவாகப் பேசும் நீ சற்று முன் என்னைத் திகம்பர கோலத்தில் காண வேண்டும் என்றாயே அது ஏன்?"

"நான் தவறாக எதையும் பேசிவிட வில்லை அடிகளே. நீங்கள் தான் அன்றைக்கு ஆடைகளைக் களைந்து விட்டு 'இரவில் நான் திகம்பரன் பகலில்தான் சுவேதம்பரன்' என்றீர்கள்? திகம்பர கோலத்தில் நீங்கள் நின்றதும் உண்மை தானே? அந்தக் காட்சி என் மனக் கண் முன் அப்படியே இருக்கிறது? ஆகவே தான் என்னிடம் வருகிற ஆடவர்களை அந்தக் கோலத்தில் நிற்க வைத்து அழகு பார்க்கிறேன். ஆனாலும் உங்கள் கோலம் அபாரம். திகட்டவே இல்லை. அதனால் தான் கேட்டேன்."

திங்களழகி உண்மையாகவே அப்படிக் கேட்கிறாளா அல்லது கேட்பது போல கேலி செய்கிறாளா என்பது அவருக்குத் தெரியவில்லை.

"திங்களழகி! நீ பரத்தையாகி விட்டாயா?" என்று கேட்டார்.

"வேறு? கற்புக்கரசியாகவா நடமாடி நடனமாட முடியும்? என்னைச் சக்கையாக்கி விட்டது நீங்கள். அது பலருக்கும் தெரிந்து விட்டது. நான் சிதைந்து போனது கண்டு வர்த்தமான விஹாரத்துத் துறவிகள் என் மீது அனுதாபம் காட்டி அந்த ஊரிலேயே எனக்கொரு குடிலைக் கட்டிக் கொடுத்தார்கள். நான் எண்ணியிருந்தால் நடந்ததையெல்லாம் மறந்து விட்டு எவனையாவது மணந்து புது வாழ்க்கையைத் துவங்கி யிருக்கலாம். நான் அப்படிச் செய்யவில்லை. கெட்டுப் போன உடலைப் புனருத்தாரணம் செய்யவில்லை. மாறாக அதை வியாபாரப் பொருளாக்கி நான் பரத்தையானேன். வாலிபர்கள் வந்து குவிந்தார்கள். என்னிடம் செல்வம் குவிந்தது. குடிலுக்கு பதிலாக மாளிகையொன்றை வாங்கினேன். இப்போது நான் சௌகரியமாகவும் சந்தோஷமாகவும் இருக்கிறேன். அதற்காக நான் தான் உனக்கு நன்றி சொல்ல வேண்டும்."

"திங்களழகி! நீ எனக்கு நன்றி தெரிவிக்க வேண்டியதில்லை. என்னை விட்டால் போதும். நான் பெண்களின் மீதான மோகத்தை விட்டு விட்டேன்" என்று கெஞ்சினார் நீலகேசி.

"அன்றைக்கு என்னை விட்டுவிடும்படிக் கதறினேன் அடிகளே. விட்டீர்களா? என்னை மயக்கமடைய வைத்து கெடுத்துக் குட்டிச் சுவராக்கி விட்டு களித்தீர்கள். இப்போது உங்களை விட்டு விடும்படிக் கேட்கிறீர்கள். நான் விட முடியாது?"

"நீ பேசுவது தவறு பெண்ணே. நான் திருந்தி விட்டேன். மீண்டும் நான் பாழாகும் படிச் செய்யாதே."

"அடிகளே! நீங்கள் திருந்தவில்லை. உங்களை நிழல் போல் தொடரும் எனக்கது தெரியும். என்னை ஏமாற்ற உங்களால்

முடியாது. நான் பழைய திங்களழகியல்ல. பேதையல்ல. உங்கள் கழுத்தை நெரிக்கவும் என்னால் முடியும். நான் கேட்ட கோலத்தைக் காட்டாமல் நீங்கள் காலம் கடத்தலாம். ஆனால் உயிரோடு இருக்க முடியாது" என்று சொல்லி விட்டு ஆடைக் குள்ளேயிருந்து குறுவாளை எடுத்து அவருக்கு முன்னால் காட்டி "சொன்னதைச் செய்யுங்கள்" என்றாள்.

"இதோ பார் திங்களழகி. நான் பேசிக் கொண்டிருப்பதால் எதுவும் செய்து விட மாட்டேன் என்று நினைக்கிறாய். புலி பதுங்குவது பாய்வதற்காகத்தான்" என்றார் மிரட்டலான குரலில்.

அவள் சரேலென குறுவாளை அவரது தோளில் சற்றே குத்தி எடுத்தாள்.

நீலகேசி அலறினார்.

தோளிலிருந்து ரத்தம் எழுந்தது.

"அடிகளே! மீண்டும் தாக்குவதற்கு முன் சொன்னதைச் செய்யுங்கள்" என்று மிரட்டினாள் திங்களழகி.

அவர் எதுவும் செய்ய முடியாதவராய் ஆடைகளை நீக்கி விட்டு நின்றார். வலியால் துடித்தார்.

அவளோ அவரது துடிப்பையோ வலியையோ பொருட் படுத்தவில்லை.

அவரது கோலத்தை முழுமையாகப் பார்த்து விட்டு "இதை அறுத்தெறியட்டுமா?" என்று கேட்டாள்.

"வேண்டாம். வேண்டாம். என்னை விட்டு விடு" என்று அலறினார் அவர்.

"நானும் இப்படித்தான் அலறினேன். நீங்களோ ஈவு இரக்கமின்றி நடந்து கொண்டதோடு மட்டுமில்லாமல் என்னை நச்சுப் பொய்கையில் வீசும்படிச் சொன்னீர்கள். இங்கு நச்சுப் பொய்கை இல்லை. ஆக அதை மட்டும் அறுத்து வீசுகிறேன். பார்ப்பவர்கள் சிரிப்பார்கள். திட்டுவார்கள். உதைப்பார்கள்" என்றாள் அவள்.

"உன் நிலைமை என்ன என்பதையும் சற்று யோசித்துப் பார்."

"எனக்கு ஆகவேண்டியது எதுவும் இல்லை. எல்லாம் தான் போய் விட்டது. எனக்கு மரணத்தைப் பற்றிப் பயமில்லை. உங்கள் நிலை அப்படியில்லை. நீங்கள் ஆச்சார்யர். சமண மதத் தலைவர். உமக்கு அவமானம் ஏற்படுமானால் அது மதத்தையே பாதிக்கும்."

"இப்போது நான் என்ன செய்ய வேண்டும்? நீ விரும்பிய காட்சி தான் கிடைத்து விட்டதே?"

“தோள் காயத்தை அடைத்து கட்டுப் போட்டுக் கொள்ளுங்கள்.”

அவர் ஆடையை அணிந்து கொள்ள முற்பட்டார்.

“அது அப்படியே இருக்கட்டும். நான் சொன்னதை இக்கோலத்தில் இருந்த படியே செய்யுங்கள்.”

அடிகள் தவித்தார். தடுமாறினார்.

அங்கேயே இருந்த துண்டைக் கிழித்து தோளில் சுற்றிக் கொண்டார். கீழே சிந்திய ரத்தத் துளிகளைத் துடைத்தார்.

“பாவி! என்னை மயக்கமாக்கி விட்டு இப்படியெல்லாம் தானே என்னை ரசித்திருப்பாய்? பெண் என்றால் பேயும் இரங்கும் என்பார்களே! நீ பேயை விடக் கொடியவன். அதனால் தான் இரக்கம் பிறக்கவில்லை. நீ எப்படித் துறவியானாய்? துறவிகளின் தலைவனானாய்? உன்னை எப்படிச் சமணர்கள் நம்புகிறார்கள்? மதிக்கிறார்கள்? அயோக்கியனே! கெடுதல்களைச் செய்பவனை விட கெடுதல்களைச் செய்து விட்டு நல்லவனைப் போல் வாழ்பவன் மகா அயோக்கியன். புனிதமான போர்வைக்குள் இருந்து கொண்டு கீழ்த்தரமான காரியங்களைச் செய்பவன் மகா கயவன். நீ சமண மதத்திற்கும் களங்கம். இந்த நாட்டிற்கும் களங்கம். உன்னைக் கொல்வதை விட உனது சொரூபத்தை மக்களுக்குத் தோலுரித்து காட்டுவதே உனக்கேற்ற தண்டனை. சமண மதத்திற்குச் செய்யும் பரிகாரம்” என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்ட அவள் “உங்கள் ஆடை முதலாக இங்கே இருக்கும் துணிகளை மூட்டையாகக் கட்டுங்கள்” என்றாள்.

“எதற்கு?”

“நீங்கள் இனி திகம்பரர் கோலத்திலேயே இருங்கள். அது தான் சரி.”

“வேண்டாம் திங்களழகி. நீ விரும்பிய காட்சியைக் கண்டு விட்டாய். அதோடு நிறுத்திக் கொள்.”

“நான் சொன்னதைச் செய்யுங்கள். தாமதித்தால் குறுவாளால் அறுப்பேன்.”

நீலகேசி அவளுக்குப் பணிந்து அவள் கூறியபடி எல்லா துணிகளையும் தனது ஆடையில் வைத்து கட்டி விட்டு “இது உனக்குத் தகாது பெண்ணே. என்னை அவமானப்படுத்துவது சமண மதத்தையே அவமானப்படுத்துவது போன்றது” என்றார்.

“என்னைச் சீரழிக்கும் போது இந்த உண்மை தெரிய வில்லையா? அதற்கும் சமணத்திற்கும் சம்பந்தமில்லை என்று

நினைத்துத் தானே அக்கிரமத்தைச் செய்தீர்கள்? பழைய கதை வேண்டாம். புதுப்பிக்க முடியாத விஷய விவாதம் செய்ய வேண்டாம். நான் இங்கே ஏன் வந்தேன் தெரியுமா?"

"ஏன்?"

"உங்கள் மானத்தை வாங்க"

"என்ன சொல்கிறாய்?"

"அடுத்த ஜாமத்தின் முடிவில் கண்டாமணி ஒலிக்கும். அப்போது நான் வரச் சொல்லியிருக்கும் மக்கள் அறைக்கு முன்னால் திரள்வார்கள். நீங்கள் எனக்கிழைத்த கொடுமையை அவர்களுக்குச் சொல்லியிருக்கிறேன். கதவைத் திறந்ததும் உங்கள் நிலையை அவர்கள் காண்பார்கள். பரிகசிப்பார்கள். புழுதி வாரித் தூற்றுவார்கள். இதே கோலத்தில் உங்களை இழுத்துக் கொண்டு ஊர் முழுவதும் ஊர்வலம் வருவார்கள். உமது பெயரும் அந்தஸ்தும் நாறும். அதற்குப் பிறகு நீங்கள் தலைவராக இருக்க முடியாது. சமணராக இருக்க முடியாது. ஏன்? உயிரோடே இருக்க முடியாது. அதனால் தான் நான் உங்களைக் கொல்ல வில்லை. உங்களுக்குத் தகுந்த தண்டனையைத்தான் தரப் போகிறேன்."

அவள் இவ்வாறு கூறியதும் அவர் அப்படியே கட்டிலில் உட்கார்ந்தார்.

"அப்படியே செய் திங்களழகி. இன்றில்லை என்றாலும் என்றாவது ஒரு நாள் நான் தண்டனையை ஏற்றுத்தான் ஆக வேண்டும். அது இன்றைக்கே நடக்கட்டுமே! அதுவும் பாதிக்கப்பட்ட நீ தண்டனையை நிறைவேற்றுவது பொருத்தமானது" என்றார் சலனமில்லாமல்.

"வேறு வழியில்லாத நிலையில் உத்தமனைப் போலப் பேசுகிறீர்கள். இதற்கெல்லாம் அசந்து போகிறவள் நானல்ல" என்று சொல்லி துணி மூட்டையை எடுத்துக் கொண்டாள் திங்களழகி.

இரண்டு நிமிடங்கள் கழிந்த போது கண்டாமணி ஒலித்தது.

"அடிகளே! இன்றோடு உங்கள் கதை முடிந்தது. உங்களுக்கு என் அனுதாபங்கள்" என்று கூறிவிட்டுக் கதவைத் திறந்தாள்.

ஆனால் வெளியே ஒரு ஈ காக்கை கூட இல்லை.

அதிர்ந்தாள் திங்களழகி.

அதே நேரத்தில் சட்டெனப் பாய்ந்த நீலகேசி அவளை உள்ளே வேகமாக இழுத்து மூலையில் தள்ளி விடவே எதிர் பாராத

விதமாக நிலைகுலைந்து போன அவள் தலையில் அடிபட்டு மயக்கமானாள்.

கதவைத் சாத்திய அவர் அவளைத் தூக்கிக் கட்டிலில் போட்டார்.

“முட்டாள் பெண்ணே! இந்த விஹாரத்தின் சட்டங்களைத் தெரிந்து கொள்ளாமல் பலவீனமான திட்டத்தைத் தீட்டி விட்டாய். இங்கே இரவு நேரத்தில் விஹாரத்து துறவிகளைத் தவிர வேறு யாரும் நுழைவதற்கு அனுமதியில்லை. உன்னைச் சேர்ந்தவர்கள் எத்தனை பேர் வந்தாலும் வளாகத்திற்கு வெளியிலேயே தடுத்து நிறுத்தப்படுவார்கள். பாதுகாவலர்களைக் கொண்டு கலைத்து விடப்படுவார்கள். அதெல்லாம் தெரியாமல் வந்து விட்டு இங்கே தோற்றுப் போய் படுத்துக் கிடக்கிறாய். இந்த நீலகேசியை மகாவீரர் முதற்கொண்டு ஒருவரும் புரிந்து கொண்டதில்லை. அதற்கு ஒருவன் பிறக்க வேண்டும். அவன் பிறந்து வளர்ந்த பின்பு எனக்கு நிர்வாணம் கிடைத்து ச்ரவண பெலகுலாவில் ஆயிரம் அடி உயரச் சிலை நிர்மாணப்பட்டிருக்கும். ஆயிரமாயிரம் பேர் என்னைத் தொழுது கொண்டிருப்பார்கள். கர்நாடகத்தின் நிர்மாணத் தெய்வமாக நான் ஆக்கப்பட்டிருப்பேன்” என்று சர்வகர்வத்துடன் சொல்லிக் கொண்டு நீலகேசி கட்டிலில் கிடந்த திங்களழகியைப் புரட்டி இரண்டு மச்சங்களைக் கண்டார்.

அவரது உடல் சூடேறியது.

அச்சூட்டை வழக்கப்படி மிருகத்தனமாகத் தீர்த்துக் கொண்டார்.

அவள் முனகினாள்.

“என்ன வேண்டும் திங்களழகி? வெற்றியா? அது என் சொத்து. என்னைத் தவிர அது வேறு யாருக்கும் கிடைக்காது. அதுவும் உனக்கது இந்த ஜென்மத்தில் கிடைக்காது. உன்னைக் கொன்று விடட்டுமா?” என்று கேட்டார் நீலகேசி.

அவள் முனகினாள்.

“நீ ஒரு கொசு. உன்னைக் கொலை செய்வது எனது பேராண்மைக்கு இழுக்கு. எழுந்திரு நாயே. எழுந்திரு. இங்கிருந்து ஓடிவிடு. துறவிகளின் கண்களுக்குப் படாமல் ஓடி விடு. என்னை நினைத்துக் கொண்டிருந்தால் துன்பமே உன்னைத் துரத்தும். ஆகவே என்னை மறந்து விடு” என்று சொல்லி அவளை இழுத்து அறைக்கு வெளியே போட்டு விட்டு கதவைச் சாத்திக் கொண்டார்.

மறுநாள் வைத்தியரை அழைத்து தோள் காயத்திற்கு மருந்திட்டுக் கொண்டபின் தெம்படைந்தார் நீலகேசி.

திங்களழகியைப் பற்றித் துறவிகள் யாரும் பிரஸ்தாபிக்க வில்லை. ஆகவே நீலகேசியும் அது குறித்து வாயைத் திறக்கவில்லை.

அந்தத் தரித்திரம் பிடித்த அழகி எங்கேயாவது ஓடிப் போயிருப்பாள் என்று நினைத்த அவர், அவள் தன்னிடம் தோற்றுப் போனதை நினைத்து மகிழ்ச்சி அடைந்தார்.

அதே சமயம் அவள் துணிந்த காரியம் மட்டும் அவரைச் சற்றே கலக்கியது.

தன்னைக் கொல்லாமல் அவமானப்படுத்திச் செல்லாக் காசாக ஆக்குவதே அவளது திட்டம் என்பதைப் புரிந்து கொண்ட அவர் அது மிகவும் ஆபத்தான திட்டம் என்பதையும் புரிந்து கொண்டார்.

அவள் மட்டும் வேறு எங்காவது சிக்கியிருந்தால் கொன்று போட்டிருப்பார். ஆனால் தலைநகரத்தின் பிரதான விஹார மாதலால் அங்கு கொலை செய்தால் பெரும் பிரச்சனையாகி விடும் என்றே அவளை உயிரோடு விட்டார்.

அவள் மீண்டும் செயல்படுவாள் என்று அவருக்குத் தோன்றியது. ஆனால் எந்தச் சந்தர்ப்பத்தில் எப்படித் தோன்றுவாள் என்பது புரியவில்லை.

எனவே துறவிகளை அழைத்து "நீங்களெல்லாம் இரவில் என்ன செய்கிறீர்கள்? தூக்கமே சுகம் என்று கும்பகர்ணனோடு போட்டி போடுகிறீர்களா? இங்கே என்ன நடந்தாலும் உறங்கிக் கொண்டு தான் இருப்பீர்களா? நேற்றிரவு இராமானுஜனின் வைஷ்ணவ உளவாளியொருத்தி வந்து என்னைத் தாக்கி விட்டுப் போயிருக்கிறாள்? நீங்களெல்லாம் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?" என்று சத்தமிட்டார்.

"தங்கள் அறைக்கு யாரும் வந்து தொந்தரவு செய்ய வேண்டாம் என்று தாங்கள் கேட்டுக் கொண்டதால் தான் யாரும் அப்பக்கம் வரவில்லை" என்றார் துறவி.

"நல்லவேளை" என்று தனக்குள்ளே சொல்லிக் கொண்ட நீலகேசி "அதற்காக இப்படியா கவனக் குறைவாக இருப்பீர்கள்?" என்று கேட்டுவிட்டு "நேற்றிரவு மக்கள் கூட்டம் இங்கே வந்து கூச்சல் போட்டதா?" என்று வினவினார்.

"ஒரு நூறு பேர் வந்தார்கள். இங்கே ஒரு பெண் வந்ததாகவும் அவளைத் தேடி வந்ததாகவும் சொன்னார்கள். யாரும் வரவில்லை என்றும் இரவு நேரத்தில் விஹாரத்தின் உள்ளும் புறமும் யாரும்

வருவதற்கில்லை என்று கூறித் திருப்பி அனுப்பி விட்டோம்" என்றார் ஒரு துறவி.

"இனிமேலாவது கவனமாக இருங்கள்" என்று கூறிய நீலகேசி உணவை உண்டார். இரவு தூங்காததால் அவருக்கு மயக்கமாக இருந்தது. போய் படுத்துக் கொண்டார்.

துறவிகளில் இருவர் பேசிக் கொண்டார்கள்.

"அடிகளே! நீலகேசியின் போக்கு பிற்போக்காகப் போய்க் கொண்டிருக்கிறது. நாமும் கண்டும் காணாதது போல் நடந்து கொள்கிறோம். இது இன்னும் எத்துணை காலத்திற்கு?"

"நாம் நாசம் போகும் காலம் வரை"

"இதென்ன இப்படி விரக்தியாகப் பேசுகிறீர்கள்?"

"வேறு எப்படிப் பேசுவது? நேற்று மாலை நீலகேசி உபன்யாசம் செய்த போது நீரும் தானே இருந்தீர்கள்? இவர் இப்படி நடந்து கொள்வார் என்று கற்பனை செய்ய முடிந்ததா உங்களால்? என்ன திறமை! என்ன சாதுர்யம்! அழகானப் பேச்சு. அயோக்கியத் தனமான செயல். வழிகாட்ட வேண்டிய தலைவனே வழுக்கி விழுந்து கொண்டிருந்தால் வழியில் செல்ல வேண்டிய நாம் என்ன செய்ய முடியும்? அவரைப் பற்றி யாரிடம் புகார் சொல்வது? அப்படியே சொன்னாலும் இழுக்கு அவருக்கு மட்டுமல்ல. ஒட்டு மொத்தச் சமணத்திற்கும்தான். ஒன்று மட்டும் உறுதி அடிகளே."

"என்ன அது?"

"நீலகேசியின் காலத்திலேயே கர்நாடகத்தில் சமணம் நிர்மூலமாகி தடயங்களை இழந்து விடும்."



அன்று மாலை உறக்கத்திலிருந்து எழுந்து, நீராடி, தூய்மை படுத்திக் கொண்டு விஹாரத்திற்குச் சென்று ஆதிதேவரை வணங்குவது போல பாவனை செய்து விட்டு துறவிகளைப் பார்த்து "ஆதிதேவரின் பாதங்களைப் பற்றிக் கொள்ளுங்கள். பாதி பாவமாவது விலகும்" என்றார் நீலகேசி.

துறவிகள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

நீலகேசி விஹாரத்தை விட்டு வெளியே வந்த போது சிவனடியார் பதற்றத்துடன் வந்தார்.

அவர் தெரிவித்த செய்தியோ நீலகேசிக்கு மகா அதிர்ச்சியாக இருந்தது.





அரசியல்வாதிகளும் ஆட்சியாளர்களும் எப்போதும் தங்கள் குடும்பத்திற்கு ஒரு சட்டமும் ஊர் மக்களுக்கு ஒரு சட்டமுமாக வைத்துக் கொண்டு ஏமாற்றுவார்கள்
– நீலகேசி



எல்லாம் நல்லபடியாக நடந்து கொண்டிருக்கிறது என்று திருப்தியோடும் திங்களழகியை வெற்றி கொண்டு விட்ட மதமதர்ப்போடும் விஹாரத்தை விட்டு வந்த நீலகேசிக்கு சிவனடியார் பதற்றத்துடன் வந்து கொண்டிருந்ததைக் கண்டதும் ஒரு மாதிரியாகி விட்டது.

தான் போட்ட திட்டத்தில் ஏதாவது மாற்றம் வந்திருக்குமோ என்றெண்ணிக் கொண்டு எதிரே வந்து கொண்டிருந்தச் சிவனடியாரை மேடை மண்டபத்திற்கு வரும்படிச் சைகைகாட்டினார்.

இருவரும் மேடை மண்டபத்திற்கு வந்ததும் "சிவனடியாரே! உமக்கேன் பதற்றம்? எதற்காக இப்படி வேகமாக வந்தீர்கள்?" என்று கேட்டார் நீலகேசி.

"நான் ஆரம்பத்திலேயே தயங்கினேன். எதிர்ப்பு, போராட்டம் என்றெல்லாம் வேண்டாம் என்றுச் சொல்லாமல் சொன்னேன். நான் நினைத்த மாதிரியே விபரீதமாகி விட்டது" என்றார் சிவனடியார்.

"இப்போது என்னாகி விட்டது?"

"நீங்கள் அதிரடி திட்டத்தை அறிவித்து விட்டு நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருக்கிறீர்கள். வெளியே நடப்பனவற்றை அறிந்து கொள்ளவில்லை."

"பதற்றப்படாமல் விஷயத்தைச் சொல்லுங்கள் ஐயா"

"அரசாங்கம் புதியதாக அறிவிப்புப் பலகை வைத்திருக்கிறது. மதம் விஷயமாக கருத்து தெரிவிப்பதே குற்றம் என்று அறிவித்துள்ள நிலையில் சில மதத்தினர் பரஸ்பரம் சந்தித்து சதியாலோசனையில் ஈடுபட்டு வருவதாகத் தகவல் வந்திருக்கிறது. அது நிரூபணம் ஆனால் சம்பந்தப்பட்டவர்கள் விசாரணை ஏதுமின்றி நகரத்தின் மையப் பகுதியில் கழுவேற்றப் படுவார்கள் என்று அறிவிக்கப்பட்டிருக்கிறது."

"அதைப் பற்றி நமக்கென்ன? இது மாதிரியான பயமுறுத்தும் அறிவிப்புகள் அடிக்கடி வந்து கொண்டு தானே இருக்கின்றன?"

"இன்னும் கேளுங்கள் அடிகளே. எல்லா மதத்துத் தலைவர்களும் மகாராஜாவுக்கு உறுதி மொழி எழுதித் தர வேண்டுமாம். என்ன உறுதி மொழி தெரியுமா? நான் எந்த சமயத்திலும் மதக் கலவரத்தைத் தூண்ட மாட்டேன் மதப் பூசல்களுக்குத் தலைமை தாங்க மாட்டேன் என்று எழுதித் தர வேண்டுமாம். அப்படி எழுதிக் கொடுத்து விட்டு மதக் கலவரத்தைச் செய்தால் அந்த மதம் தடை செய்யப்படுமாம்."

"அதற்கென்ன? எழுதிக் கொடுத்தால் போகிறது! எழுதிக் கொடுத்து விட்டு நம் வேலையை காட்ட நமக்குத் தெரியாதா?"

"இதென்ன இப்படிச் சொல்கிறீர்கள்? மூன்றாவது அறிவிப்பும் ஒன்றிருக்கிறது. அது என்ன தெரியுமா?"

"என்ன?"

"நாம் சந்தித்தோமே தோப்புப் பகுதி. அது இனி தடை செய்யப்பட்டப் பகுதியாம். அங்கே இனி யாரும் செல்லக் கூடாதாம்."

இதைக் கேட்ட நீலகேசிக்குச் சற்று அதிர்ச்சியாகத்தான் இருந்தது.

ஆனால் அதைக் காட்டிக் கொள்ளாமல் "நீங்களென்ன எல்லாவற்றுக்கும் பயப்படுகிறீர்கள்?" என்று கேட்டார்.

"நாம் இருவர் தான் தோப்பில் சந்தித்தோம். அதுவும் நேற்று. இன்றைக்கு அறிவிப்பு வருகிறது அந்தத் தோப்பில் எவரும் பிரவேசிக்கக் கூடாது என்று. இது உங்களுக்கு எதை உணர்த்துகிறது? நாம் சந்தித்ததைப் பார்த்து விட்டு அரசாங்கத்திற்குத் தெரிவித்திருக்கிறார்கள். அதையடுத்துதான் இந்த அறிவிப்பு வந்திருக்கிறது. நாம் இருவரும் சிக்கிக் கொண்டு விட்டோம்."

"அப்படி ஏன் நினைக்கிறீர்கள்? வேறு யாராவது தோப்பில் சந்தித்ததைக் கண்டு விட்டுக் கூட இந்த அறிவிப்பு வந்திருக்கலாம் அல்லவா? எங்கோ உலக்கையை இடித்ததற்கு இங்கே கைவலிக்கிறது என்று சொன்ன மாதிரியல்லவா இருக்கிறது பேச்சு? எதற்காக அறிவிப்புகளுக்கெல்லாம் நம்மைச் சம்பந்தப் படுத்திக் கொள்கிறீர்கள்?"

உள்ளங்கை புண்ணை அறிந்து கொள்வதற்கு இன்னொரு வரின் உதவி தேவையில்லை. நாமே தெரிந்து கொள்ளலாம்.

தோப்பு சந்திப்பும் அறிவிப்பு பலகையும் நம்மைப் பார்த்து விட்டதின் விளைவே என்பதைப் புரிந்து கொள்வதற்கு நமக்கு புத்தியே போதும். நாம் இருவரும் இரு மதத்தைச் சேர்ந்தவர்கள். நமது சந்திப்பு சாதாரணமானதல்ல. ஆகவே நம்மைப் பார்த்து விட்டு நம்மை ஒடுக்கவே இந்த அறிவிப்பை வெளியிட்டிருக்கிறார்கள்.''

''நாம் இருவரும் தானே தோப்பில் இருந்தோம்? யாரும் இல்லையே! பிறகெப்படி நம்மைப் பார்த்ததாகச் சொல்கிறீர்கள்?''

''அது மிகவும் அடர்த்தியான தோப்பு அடிகளே. நமக்குப் பின்னால் யாராவது மறைந்திருந்தால் நமக்குத் தெரியாது.''

''அப்படியே இருக்கட்டும். நீங்கள் இப்போது சொல்ல விரும்புவது என்ன?''

''அரசாங்கத்தை எதிர்ப்பதும் போராடுவதும் உகந்தது அல்ல. அதுவும் சாத்வீக மதத்தைச் சேர்ந்தவர்கள் அவ்வாறு செய்வது அம்மதத்தின் பேரிலான மகத்துவத்தை அழித்து விடும். அமைதி மற்றும் அஹிம்சை அன்பு ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்ட மதங்கள் போராட்டத்திலும் வன்முறையிலும் ஈடுபடுவதானது பசு புலித்தோலைப் போர்த்துக் கொள்வதைப் போன்றது. பொருத்தமற்றது. கண்டனத்திற்குரியது. ஆகவே...''

''ஆகவே?''

''உங்கள் திட்டத்தை நான் ஏற்க விரும்பவில்லை. அரசாங்கத்தை எதிர்த்துப் போராடும் காரியத்தைக் கைவிட்டு விட்டேன்.''

''அப்படியானால் நீங்கள் வைணவத்தில் சேரத் தயாராகி விட்டீர்களா?''

''மதம் மாற மாட்டேன்.''

''மகாராஜா மாற்றி விடுவார்.''

''மாற்ற மாட்டார் அடிகளே. அவர் வைஷ்ணவராக மாறினாலும் மகாராணி சமணத்தில்தான் இருக்கிறார். இளவரசரும் மதம் மாறவில்லை. இளவரசியும் மாற்றமில்லாமல் தான் இருக்கிறாள். இப்படி அவரது குடும்பத்தில் இருக்கும் எல்லோரும் சுதந்திரமாக இருக்கச் சம்மதித்திருக்கும் மகாராஜா நம்மைக் கட்டாயப்படுத்த மாட்டார்.''

''அரசியல் வாதிகளைப் பற்றி, உங்களுக்குச் சரியாகத் தெரியவில்லை சிவனடியாரே! அரசியல் வாதிகளும், ஆட்சியாளர்களும் எப்போதும் தங்கள் குடும்பத்திற்கு ஒரு சட்டமும் ஊர் மக்களுக்கு ஒரு சட்டமுமாக வைத்துக் கொண்டு

ஏமாற்றுவார்கள். நீங்கள் அந்த வலையில் விழுந்து ஏமாந்து விடாதீர்கள்."

"நீங்கள் கூறுவது நம் மகாராஜாவுக்குப் பொருந்தாது. அவர் நியாயமானவர். நல்லவர். நாணயமானவர். வித்தியாசமானவர். யாரையும் கட்டாயமாக மதமாற்றத்திற்கு உட்படுத்தமாட்டார்."

"கட்டாய மதமாற்றம் ஒரு முறை. அதுவே முடிவானதல்ல. கட்டாயம் பயனளிக்காத போது சலுகைகளைத் தந்தும் மதம் மாற்றுவார்கள்."

"அப்படியும் நடக்காது என்பதுதான் என் கருத்து."

"சிவனடியாரே! ஒரு சில மனிதர்கள் மதம் மாறினால் அது ஒரு பொருட்டு அல்ல. மரத்தில் இருக்கும் ஒரு சில இலைகள் உதிர்வதைப் போன்றது அது. ஆனால் ஒரு மன்னன் மதம் மாறுவதென்பது மரமே வீழ்வது போன்றது. மன்னன் மதம் மாறுவதன் உட்பொருள் மக்களும் மாற வேண்டும் என்பது தான். அது தான் பல்லவ நாட்டில் நடந்தது. இங்கே நடக்கப் போகிறது. நமது பாரம்பரியமானது மகத்தானது. எந்த ஒரு கட்டத்திலும் நம்மால் மதம் மாற முடியாது. கட்டாயப் படுத்தினாலும் சரி, சலுகைகளைக் காட்டினாலும் சரி நாம் மனம் மாற மாட்டோம். மதம் மாற மாட்டோம். உயிரை விட்டாலும் விடுவோமே தவிர கொள்கைகளை விடமாட்டோம். ஆகவே நமக்குள்ள ஒரே வழி நம்மவரைக் கூட்டி அரசாங்கத்தை எதிர்த்துப் போராட வேண்டியதுதான். தற்போது உங்களுக்குத் தயக்கமாகவும் பயமாகவும் இருந்தால் திட்டத்தைக் கொஞ்ச காலத்திற்குத் தள்ளிப் போடுவோம். அதோடு உமக்கொரு விஷயம் தெரியுமா?"

"என்ன?"

'இளவரசன் நரசிம்மன் இருக்கிறானே அவனுக்கு தன் தந்தை சமண மதத்தில் சேர்ந்தது கட்டோடு பிடிக்க வில்லை. இருவருக்கும் இடையே பனிப்போர் நடந்து வருகிறது. அது விரைவிலேயே முற்றிப் பகையாக மாறும். அப்போது நாம் அவரோடு சேர்ந்து கொண்டால் நம் கை பலமாகும். மகாராஜாவையும் அவரது மதவெறியையும் வீழ்த்தலாம்."

"நீங்கள் சொல்வது உண்மையானால் நல்லது தான்."

"உண்மை. சத்தியமான உண்மை" என்று சொன்ன நீலகேசி "சிவனடியாரே! நீங்கள் துவார சமுத்திரத்திலேயே நீந்திக் கொண்டிருக்காதீர்கள். வேலாபுரத்திற்கும் போய் வாருங்கள். நானும் அடிக்கடி சென்று வருகிறேன். எதற்குத் தெரியுமா? அங்கே கட்டப்பட்டு வரும் பெருமாள் கோயிலை எந்த

வகையிலாவது தகர்க்க வேண்டும் என்பதற்காகத்தான். நீங்களும் ஏதாவது திட்டம் தீட்டுங்கள். அந்தக் கோயில் தகர்க்கப்பட்டால் மகாராஜாவும் இராமானுஜன் என்னும் வைஷ்ணவ சன்யாசியும் தளர்ந்து போய் விடுவார்கள். உலர்ந்து போய் விடுவார்கள். அச் சன்யாசி நாட்டை விட்டுப் போய் விடுவார். வைணவம் உளுத்துப் போய் விடும். நன்றாக யோசியுங்கள். நீங்கள் மன உறுதியோடு இருக்க வேண்டும். தளர்ந்து போய் விடக் கூடாது. ‘நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்’ என்று நெஞ்சை நிமிர்த்திச் சொன்னவர்கள் சைவப் பெரியோர்கள். நீங்களும் அவர்களைப் போல அச்சமின்றிச் செயல்படுங்கள். இப்போது செல்லுங்கள்” என்று கூறிச் சிவனடியாரை அனுப்பி வைத்தார் நீலகேசி.

சிவனடியாரை வழிக்குக் கொண்டு வந்து விட்ட திருப்தி நீலகேசிக்கு இருந்தாலும் அவரோடு சந்தித்த மறுநாளே துவார சமுத்திரத்தில் அறிவிப்புப் பலகைகள் தோன்றிய விதம் அவருக்கு அதிருப்தியை அளித்தது. தானும் சிவனடியாரும் சந்தித்ததை யாரோ ஒருவர் நன்றாகக் கேட்டு விட்டு அரசாங்கத்திற்கு உளவு சொல்லியிருக்க வேண்டும் என்று நம்பினார். அதோடு அரசாங்க ஒற்றன் எவனோ ஒருவன் தன்னை இடை விடாமல் பின் தொடர்கிறான் என்றும் கருதினார். எனவே இப்போதைக்கு வெளிப்படையாக எதிர்ப்பைக் காட்டிப் போராடுவதைத் தள்ளிப் போடவும் தீர்மானித்து துவார சமுத்திரத்திலிருந்து ச்ரவண பெலகுலாவிற்குப் போன போது அங்கே அவருக்கு அதிர்ச்சி தகவல் காத்திருந்தது.

அங்கே இருந்தத் துறவிகள் ஆச்சாரியர் ஜெயதேவர் ஒரு வாரமாகக் காணவில்லை என்று தெரிவித்தார்கள்.

தன்னால் சிறை வைக்கப்பட்ட ஜெயதேவர் தப்பி விட்டார் என்ற விஷயம் அவரால் ஜீரணிக்க முடியாததாக இருந்தது. அவரை தான் அளவுக்கு அதிகமாகக் கொடுமைப் படுத்தியதே அவர் தப்புவதற்குக் காரணம் என்பது ஊகிக்கக் கூடியதாக இருந்தாலும் சாமர்த்தியங்கள் நிறைந்த திகம்பரரின் காவலிலிருந்து எப்படித் தப்பியிருக்க முடியும் என்று தனக்குத் தானே கேட்டுக் கொள்ளவும் செய்தார்.

அவர் உண்மையான ஆச்சார்யராக இல்லாத பட்சத்திலும், சமணரே அல்ல என்ற நிலையிலும் அவர் தப்பியது ஆபத்தானது என்பதை உணர்ந்தார். மன்னனிடம் சென்று தன்னைக் காட்டிக் கொடுத்து விட்டால் தன் தலை தப்புவது குதிரைக் கொம்பு என்று கருதிய அவர் தனது கோபத்தைத் துறவிகளிடம் காட்டினார்.

"நீங்களெல்லாம் இங்கே எதற்காக இருக்கிறீர்கள்? உண்டு உறங்கவா? கண்டு மகிழவா? வெட்கமாக இல்லை? இங்கே உள்ள புழு பூச்சிகள் காணாமல் போனால் கூட வேதனைப்பட்டு வெந்து போகிறவன் நான்? அப்படியிருக்கும் போது நீங்கள் ஆச்சார்யர் ஜெயதேவரையே காணவில்லை என்கிறீர்கள். உங்களோடு புழங்கும் ஒழுக்கமான உத்தம சீலர் அவர். உங்களுக்குத் தெரியாமல் எப்படிக் காணாமல் போனார்? எங்கே போவதென்றாலும் ஒரு வார்த்தை சொல்லாமல் போக மாட்டார். அதோடு அவர் எங்கேயும் போக வேண்டியதில்லை. அப்படியிருக்கும் போது அவர் காணாமல் போய் விட்டார் என்பது மிகவும் கேவலம். தேடுங்கள். ச்ரவணபெலகுலா முழுவதும் தேடுங்கள். இரண்டு நாட்களுக்குள் அவர் கிடைத்தாக வேண்டும். மகாராஜாவுக்கு இந்தச் செய்தி சென்றால் நம்மில் எத்துணை பேருக்குத் தலைபோகும் என்று சொல்லமுடியாது. ஏனென்றால் ஜெயதேவர் நமக்கு மட்டுமல்ல. மகாராஜாவுக்கும் குருநாதர். நினைவிருக்கட்டும்" என்று கடுப்பாகப் பேசினார்.

ஜெயதேவரைக் காணாமல் போன அதே சமயம் தனது ஒற்றன் திகம்பரனையும் காணவில்லையாதலால் இருவரும் எங்காவது ஒன்றாகத்தான் இருக்க வேண்டும் என்று கருதினார் நீலகேசி.

இரண்டு நாட்கள் ஆகியும் ஜெயதேவர் கண்டு பிடிக்க முடியாததால் துறவிகளையெல்லாம் அழைத்து ஆலோசனை நடத்தினார்.

"உங்களது தேடுதல் தொடரட்டும். அதோடு நமது ஒற்றர்களும் அவரைத் தேடட்டும். அவர் கண்டுபிடிக்கப் படுவார் என்ற நம்பிக்கை எனக்கிருக்கிறது. அதே சமயம் ஜெயதேவர் காணாமல் போன விஷயம் மகாராஜாவுக்கு இப்போதைக்குத் தெரிய வேண்டாம். ஜெயதேவர் வயநாட்டிற்குச் சென்றிருக்கிறார் என்பதே செய்தியாக இருக்கட்டும். அச்செய்தியையே எல்லோருக்கும் சொல்லுங்கள். பதற்றமடைந்தது மாதிரி காட்டிக் கொள்ளாமல் எல்லோரும் சகஜமாக இருங்கள்" என்றார் நீலகேசி.



நீலகேசியால் கெடுக்கப்பட்டு இளவரசன் நரசிம்மனை மயக்குவதற்காக அனுப்பப்பட்ட இளம் பெண் சூடாமணி தொண்டனூரில் நரசிம்மன் இருக்கும் போதே அவனுடன் பழகி நெருக்கத்தை உண்டாக்கிக் கொண்டாள்.

"தங்களுக்குப் பணி புரியும் பாக்கியத்தை எனக்குத் தாருங்கள். அது ஒன்றே எனக்கு உய்யும் வழி" என்று ஆரம்பித்து

உருக்கமாகப் பேசியபடியால் தொண்டனூரிலிருந்து துவார சமுத்திரத்திற்குப் புறப்பட்ட போது அவளையும் அழைத்துச் சென்றான் இளவரசன்.

அங்கே அரண்மனையில் தனது இருப்பிடப் பகுதியில் அவளைப் பணிப் பெண்ணாக அமர்த்திக் கொண்டான்.

அவளும் தன் பணியை நல்ல விதமாகவே துவக்கினாள்.

பணிப்பெண்ணாகச் சேர்ந்ததில் வெற்றி பெற்ற அவளுக்கு இளவரசனை மயக்குவதற்கு என்ன வழி என்பது தெரியவில்லை. பணிப்பெண்ணாக இருந்து கொண்டு அந்த காரியத்தில் ஈடுபடுவது இல்லாத ஊருக்கு பயணம் செய்வது போன்றது என்பது அவளுக்குப் புரிந்தது.

யோசித்தாள்.

இளவரசனின் ஆசை நாயகிகளில் ஒருத்தியாய் இருந்தாலன்றி அவனை மயக்குவது இயலாத காரியம் என்று தோன்றிற்று. இளவரசனைப் பற்றி அரண்மனை வட்டாரங்களில் விசாரித்துப் பார்த்தாள். அப்படி விசாரித்ததில் இளவரசனுக்கு மனைவி மட்டுமே உண்டு என்பதும் ஆசை நாயகி என்ற வகையறா இல்லை என்பதும் தெரிந்தது.

சூடாமணிக்கு வியப்பாகவும் இருந்தது. வெறுப்பாகவும் இருந்தது.

"இவர்களெல்லாம் என்ன இளவரசர்கள்? இஷ்டப்படி பெண்களைத் தூய்க்க வாய்ப்பிருந்தும் இவர்களெல்லாம் ஆசை நாயகிகளை வைத்துக் கொண்டு எதற்காக வாழ்நாளை வீணடிக்கிறார்கள்? காலமும் பருவமும் போனால் போனது தானே? திரும்பி வரவா போகிறது? அந்தப் பாவி நீலகேசிக்குப் பெண்களை இச்சிக்கும் சலுகை இல்லாத போதும் எவ்வளவு கொண்டாட்டமாகப் பெண்களை அனுபவிக்கிறான்? அரசு குமாரர்களை விட அதிகமாக அல்லவா ஆட்டம் போடுகிறான்? தான் ஒரு துறவி என்பதையும் துறந்தவன் என்பதையும் அறவே மறந்து விட்டு அவன் உறவாடும் விஷயங்கள் தான் எத்தனை? எத்தனை? துறவிக்கு உரிய கருணை கூட இல்லாதவனாக இருந்து கொண்டு என்னைப் போன்ற இளம் பெண்களை எப்படியெல்லாம் மயக்கியும் மிரட்டியும் சுகபோகங்களைத் தூய்க்கிறான்?

இந்த இளவரசர்களுக்கு என்ன கேடு? ராஜநீதியே அனுமதிக்கும் போது இவர்களுக்கு எதற்காகத் தயக்கம்? எத்தனைப் பெண்கள் இவர்களுக்கு ஆசை நாயகிகளாக இருக்க ஏங்கிக் கொண்டிருப்பார்கள் என்னைப் போல. அதைப் பற்றியெல்லாம்

கவலைப்படாமல் இந்த இளவரசன் ஏகபத்தினி விரதனாக இருக்க எதற்கு ஆசைப்படுகிறான்? இதில் என்ன பயன் இவனுக்கு? நூறு ஆசை நாயகிகளை வைத்துக் கொண்டிருந்தவர்களை வரலாறு தூற்றவா செய்கிறது? தசரதனுக்கு அறுபதாயிரம் மனைவிகள் இருந்தார்களாமே! அவன் புகழ் குறைந்தா போய்விட்டது?" என்றெல்லாம் தாறுமாறாக யோசித்துத் தவித்தாள்.

நேர் வழியில் இளவரசனை நெருங்க முடியாது என்று தோன்றியது. அரண்மனை வட்டாரத்தை விட்டு நகரத்தில் இருந்த இதர பகுதிகளுக்குச் சென்றாள். பரத்தையர் வீதிக்குச் சென்று பல்வேறு பரத்தையரிடம் பேசினாள். தான் பரத்தையாக மாறினால் கூட இளவரசனை அடைய முடியாது என்பதைப் புரிந்து கொண்ட அவள் பரத்தை ஒருத்தி சொன்ன குறுக்கு வழியை ஏற்றாள்.

மறுநாள் தன் கோலத்தை அலங்கோலமாக்கிக் கொண்டு அழுத கண்ணீருடன் அரண்மனை காரியஸ்தனிடம் புலம்பினாள்.

பணிப்பெண்ணான தன்னை இளவரசன் பலாத்காரம் செய்து கெடுத்து விட்டதாகவும் தன் வாழ்க்கை கேள்விக் குறியாகி விட்டது என்றும் சொல்லி அரற்றினாள்.

"இந்த அவலம் எப்போது நேர்ந்தது?" என்று கேட்டான் அரண்மனை காரியஸ்தன்.

"நேற்று இரவு தான் ஐயா" என்று பரிதாபமாகச் சொன்னாள் சூடாமணி.

"நேற்று இளவரசர் ஊரில் இல்லையே! வேலாபுரத்தில் தானே இருந்தார்? இன்னமும் வேலா புரத்தில் தானே இருக்கிறார்?" என்று தனக்குள் சொல்லிக் கொண்ட அரண்மனை காரியஸ்தன் "இப்போது உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டான்.

"இது என்ன ஐயா கேள்வி? கற்பை பறிகொடுத்தவளுக்குப் பரிகாரம் ஏது? என்னை யார் ஏற்பார்கள்? இளவரசர்தான் என்னை ஏற்க வேண்டும்" என்றாள் சூடாமணி.

"அப்படியா?" என்று வினவிய காரியஸ்தன் நான்கு சேவகர்களை அழைத்து "இவள் பரிதாபத்திற்குரியவள் பரிகார ஸ்தலத்திற்கு இன்றே அழைத்துச் செல்லுங்கள்" என்றான்.

அவர்களோடு சென்ற சூடாமணி அரண்மனை காரியஸ்தனிடம் சொன்ன விவரங்களைச் சொல்லி போலிக் கண்ணீர் வடித்து "ஐயா! இளவரசர் என்னை மணந்து கொள்வார் அல்லவா?" என்று கேட்டாள்.

"ஆகா" என்றார்கள் சேவகர்கள்.

தனது குறுக்குவழி பலிக்கப் போவதை எண்ணி கனவில் மிதந்து கொண்டே நடந்தாள் சூடாமணி.

கணிசமான தூரம் கடந்ததும் ஓரிடத்தில் அவளைப் பல்லக்கில் ஏறிக் கொள்ளும்படிச் சொல்லி அவள் ஏறிக் கொண்டதும் தூக்கிச் சென்றார்கள்.

சூடாமணிக்கு வானில் பறப்பது போல் இருந்தது. இளவரசனை மணந்து கொண்டால் தினமும் அதிகாரமாகப் பல்லக்கில் உலா வரலாம் என்று எண்ணி சந்தோஷத்தில் மிதந்தாள்.

பயணம் நீண்ட தூரத்திற்கு நீடிக்கவே "நாம் இப்போது எங்கே செல்கிறோம்?" என்று கேட்டாள் சற்றே தெம்புடன்.

"உரிய ஏற்பாடுகளைச் செய்யத்தான்" என்றார்கள் பல்லக்கு தூக்கிகள்.

"என்ன ஏற்பாடு?" என்று கேட்டாள் சூடாமணி.

"அது போனதும் தெரிந்து விடும். பேசாமல் வாருங்கள்."

சூடாமணி பேசவில்லை.

விரைவிலேயே ஒரு மாளிகைக்கு முன்னால் பல்லக்கு இறக்கப்பட்டது.

பக்கத்திலிருந்து சங்கொலிகள் விட்டு விட்டுக் கேட்டன.

"இது என்ன சங்கொலி?" - கேட்டாள் சூடாமணி.

"யாராவது இறந்திருப்பார்கள்" என்று சொன்ன சேவகர்கள் "நீங்கள் உள்ளே போய் நீராடி விட்டு உள்ளே இருக்கும் புத்தாடைகளை அணிந்து கொள்ளுங்கள். நாங்கள் போய் தயார் செய்து விட்டு வருகிறோம்" என்று சொல்லி விட்டுச் சென்றார்கள்.

அவர்கள் திரும்பி வந்த போது தேவதை போல் நின்றிருந்தாள் சூடாமணி.

"நடவுங்கள்"

நடந்தாள்.

சற்று தூரத்தில் ஆழமான குழி ஒன்றுக்கு முன்னால் சென்று நின்றார்கள்.

"இது என்ன குழி?" என்று கேட்டாள் சூடாமணி.

"உன்னை உயிரோடு புதைப்பதற்கு" என்று சொன்னபடி அங்கே வந்தான் அரண்மனை காரியஸ்தன்.





அன்பென்னும் பூவைவிட மென்மையான ஒன்றை அடைய நினைக்கும் போது உத்தமமான அணுகுமுறைகள் தான் கைகொடுக்கும் – சௌமியகுமாரி




குலை நடுங்கியது சூடாமணிக்கு.

சொர்க்கலோகத்தை நோக்கிப் புறப்பட்டு விட்ட மாதிரி அழகு தேவதையாக - அலங்கரிக்கப்பட்ட முத்து ரதம் அசைந்து வருவது போல் நடைபோட்டு வந்த அவளுக்கு தன்னை உயிரோடு புதைப்பதற்குத்தான் குழி தோண்டப் பட்டிருக்கிறது என்று காரியஸ்தன் சொன்ன போது யமனே நேரில் வந்து சொல்வது போல் இருக்கவே நடுநடுங்கிப் போன அவள் "ஐயா! இதென்ன இப்படிச் சொல்கிறீர்கள்? கற்பை இழந்த அபலைப் பெண்ணிற்கு இதுதான் முடிவா?" என்று கேட்டாள் அச்சத்துடன்.

"பொய் சொல்பவர்களைக் கொன்று விட்டு புதைப்போம். இளவரசர் மீது பொய் சொல்பவர்களை உயிரோடு புதைப்போம். இது தான் விதி" என்றான் காரியஸ்தன்.

தனது நாடகம் பொய் என்பது தெரிந்து விட்டது என்பதை உணர்ந்த அவள் சற்றே தடுமாற்றத்துடன் "நான் பொய் சொல்ல வில்லை. நான் சொன்னது உண்மை" என்றாள்.

"உனக்கு எப்போது அவலம் நேர்ந்தது என்று சொன்னாய்?"

"நேற்று இரவு"

"இளவரசர் வேலாபுரத்திற்குப் போய் இரண்டு நாட்களாகி விட்டன. இன்னும் அவர் துவார சமுத்திரத்திற்குத் திரும்ப வில்லை. போதுமா? நீ கூறியது பொய். அந்தப் பொய்யில் இளவரசர் மீது அவதூறு சொன்னது மகாபொய். அது மட்டுமல்ல-"

சூடாமணி பேசும் நிலையில் இல்லாததால் காரியஸ்தனே சொன்னான்.

"இளவரசருக்கு தான் விரும்பும் பெண்ணை மணக்கவும் ஆசை நாயகியாக்கிக் கொள்ளவும் உரிமையுண்டு. அவர் சர்வாதிகாரி. அவர் மீது குற்றம் சுமத்தும் உரிமை பெண்களுக்கு இல்லை. அது தெரியாமல் என்னிடம் வந்து அவர்மீது குற்றம் கூறியது முதல் குற்றம். அது மட்டுமல்ல."

சூடாமணி பேசும் நிலையில் இல்லாததால் காரியஸ்தனே சொன்னான்.

"நீ இங்கே பணிமகளாக வந்து சேர்ந்தவள். இளவரசர் கூறும் பணியைச் செய்வதே உன் பணி. அதைத் தவிர உனக்கு வேறு உரிமையோ பொறுப்போ கிடையாது. சாதாரணமான பணிப் பெண்ணாக இருந்து கொண்டு அடாத பழியை இளவரசர் மீது சுமத்தியிருக்கிறாய். இது கீழ்த்தரமான இரண்டாவது குற்றம்."

சூடாமணி தவித்தாள். காரியஸ்தனிடம் வகையாக மாட்டிக் கொண்டதை நினைத்துத் தடுமாறினாள். அவனிடம் மறுத்துப் பேசுவதால் பயனில்லை என்பதை உணர்ந்தாள்.

"தவறு செய்து விட்டேன் ஐயா. மகா தவறு செய்து விட்டேன். மன்னித்தருளுங்கள்" என்றாள் கெஞ்சும் குரலில்.

"நீ செய்தது மன்னிக்கக் கூடிய தவறு அல்ல. தண்டிக்க வேண்டிய குற்றம். அதற்கான தண்டனை இதுதான்."

"ஐயா! தவறானவர்கள் பேச்சைக் கேட்டுக் கொண்டு இப்படி நடந்து கொண்டு விட்டேன். மன்னியுங்கள்."

"மூடப்பெண்ணே. உனக்குச் சுயபுத்தி இல்லையா? இளவரசர் மீது இவ்வளவு இழிவான பழியைப் போடுவதற்கு எப்படித் துணிந்தாய்? இது கூடவா உன் புத்திக்கு எட்டவில்லை? இளவரசர் துருவ நட்சத்திரம். அவரைப் பார்த்து நாய் குரைக்கலாமா?"

"தவறு தான் ஐயா. ஒப்புக் கொள்கிறேன்."

"நீ என்ன ஒப்புக் கொள்வது? உன் குற்றம் தான் நிரூபணமாகி விட்டதே! குழியில் நீயாக இறங்குகிறாயா? நாங்கள் இறக்கட்டுமா?"

"இரக்கமில்லாமல் பேசுகிறீர்களே ஐயா! என் பேச்சைக் கவனிக்க மாட்டீர்களா? வேண்டிக் கொள்கிறேனே செவி சாய்க்க மாட்டீர்களா?"

"குற்றவாளிகளை தண்டிப்பதே முறை. மன்னிப்பது இல்லை. குற்றவாளிகளை மன்னித்துக் கொண்டிருந்தால் குற்றங்கள் அதிகரிக்கும். குற்றவாளிகள் அதிகரிப்பர். திருந்துவதற்கு ஒருவரும் முன்வரமாட்டார்கள்."

"ஐயா! நீங்கள் உங்கள் தரப்பாகவே பேசுகிறீர்களே தவிர என்னைப் பற்றி நினைத்து பார்க்க மறுக்கிறீர்கள். உங்களிடம் பேசிப் பயனில்லை. மகா ராஜாவை சந்தித்து நீதி கேட்கிறேன். என்னை அனுமதியுங்கள்."

"உன்னைத் தண்டிக்க எனக்கே அதிகாரம் இருக்கும் போது மகாராஜாவிடம் போக வேண்டியதில்லை. இறங்கு குழியில்."

திக்கு தெரியாத காட்டில் சிக்கித் தவிப்பது போலத் தத்தளித்தாள் சூடாமணி.

இந்தக் காரியஸ்தன் தன்னை உயிரோடு புதைக்காமல் விடமாட்டான் என்பது அவளுக்குச் சந்தேகமில்லாமல் தெரிந்தது.

யமனிடம் கூட கருணையிருக்கும் என்று தோன்றியது அவளுக்கு காரியஸ்தனின் இரக்கமற்ற அணுகுமுறையைக் கண்டபோது.

அந்நிலையில் அவளது கோபம் நீலகேசியின் மீது திரும்பியது.

"அடப்பாவி! சண்டாளா! என்னைப் பெண்டாளம் புரிந்துச் சிதைத்த அயோக்கியனே! ஹொய்சள இளவரசனை மயக்கி கைப்பொம்மையாக்கிக் கொள் என்று எவ்வளவு எளிதாகச் சொல்லிவிட்டாய்! அக்கிரமத் துறவியே! இன்றைக்கு என் நிலையைப் பார்த்தாயா? என்னை உயிரோடு புதைக்க வேண்டுமாம். கீழ்த்தரமானவனே! உனக்கல்லவா இந்தத் தண்டனை கிடைக்க வேண்டும்? சுகத்தை அனுபவித்து விட்டு சுகமாய் அமர்ந்து கொண்டு எங்களையெல்லாம் உயிருக்கு ஆபத்தான காரியங்களில் இறக்கும் நீயா சமணன்? நீயா துறவி? நீ மனிதனுமல்ல. மிருகமும் அல்ல. அதை விட இழிவான பிறவி. நீ நாசமாகப் போவாய்" என்று சபித்துக் கொண்டாள்.

"அந்தத் துறவிதான் அயோக்கியன் என்று தெரிந்து விட்டதே! அவனைப் புறக்கணிக்க வேண்டியது தானே? எதற்காக அவனிட்ட காரியத்தைச் செய்கிறாய்?" என்று கேட்டது அவள் மனச்சாட்சி.

"எனக்கு விருப்பமில்லை தான். ஆனால் சூளாமணியிடம் சொன்ன போது அவன் என்ன சொன்னான்? எனக்காக அவன் இரங்காமல் லட்சிய பயணத்தை மேற்கொள்வதாகச் சொன்னான். என்னையும் அவ்வாறு பயணப்படச் சொன்னான். சூள் சமணர்கள் தாம் செய்த பிரதிக்ஞையிலிருந்து தவறக் கூடாது என்று சொன்னான். எனக்கு நடந்த அவலத்தைக் காலில் குத்திய முள்ளாகக் கருதச் சொன்னான். அந்த லட்சியவாதியை மதித்துத்தான் இந்த காரியத்தில் இறங்கினேன்" என்றாள் சூடாமணி.

"அப்படியானால் எதற்காகக் கவலைப்படுகிறாய்?" என்று கேட்டது மன சாட்சி.

"உயிர் போகப் போகிறது. கவலைப்படாமல் என்ன செய்வது?" என்று கேட்டாள் சூடாமணி.

“லட்சிய வாதிகளின் பயணத்தில் மரணம் ஒரு தியாகமாகும். மரணத்திற்கு அஞ்சாதே” என்றது மன சாட்சி.

“ஓர் அற்ப நீலகேசிக்காக நான் சாக முடியாது” என்றாள் சூடாமணி.

“நீலகேசிக்காக அல்ல உன் பயணம். சமணத்திற்காக. சமணம் காப்பாற்றப்படுவதற்காக” என்றது மன சாட்சி.

சூடாமணியோ யாருக்காகவும் உயிரை இழக்கத் தயாராக இல்லை.

எவராலும் மீட்க முடியாத உயிரை யாருக்காகவும் இழக்க வேண்டியதில்லை என்பது அவளது தீர்மானமாக இருந்தது.

வழி தெரியாமல் அவள் திண்டாடிய போது அப்பகுதியின் அருகே டமாரங்களும் திருச்சன்னமும் ஒலிக்கும் சப்தம் கேட்டது.

அந்த வாத்திய ஒலிகள் இளைய ராணி சௌமியக் குமாரிக்கு உரியவை என்பதை உணர்ந்த காரியஸ்தன் ஒலி வந்த திசை நோக்கிச் சென்றான்.

அதற்குள் பரிவாரங்களும் வாத்தியங்களும் சூழ தேரில் பவனி வந்த இளையராணி தேரைச் சற்றே நிறுத்தி காரியஸ்தனை விசாரித்தாள்.

காரியஸ்தன் விவரத்தைச் சொன்னான்.

சூடாமணி இளையராணியைப் பார்த்திருந்தாளாதலால் அவளை நோக்கி ஓடி வந்து “என்னை காப்பாற்றுங்கள் ராணி” என்று அலறினாள்.

“அவளை என் அந்தப்புரத்துக்கு அனுப்புங்கள்” என்று கூறி விட்டு பரிகார ஸ்தலத்தில் இருந்த மாகாளி ஆலயத்தை நோக்கி பரிவாரங்களோடு புறப்பட்டாள் இளையராணி சௌமியகுமாரி.

இளையராணி அகன்றதும் சூடாமணியை ஒரு புழுவைப் போல் பார்த்த காரியஸ்தன் “எனது தண்டனையிலிருந்து - அதுவும் மரண தண்டனையிலிருந்து தப்பியது நீ ஒருத்தி மட்டும் தான். உன்னிடம் இருக்கும் ஒரு சதவிகித அதிர்ஷ்டம் தான் உன்னைக் காப்பாற்றியிருக்கிறது. ஆனாலும் நீ முற்பட்ட காரியத்தைப் பார்க்கும் போது உன்னிடம் துர்புத்தி மலிந்து கிடப்பதாகத் தெரிகிறது. அதை நீ மறுபடியும் வேறெங்காவது காட்டுவாய். இதே தண்டனையை வேறெங்காவது பெற்றே தீருவாய்” என்று கூறி “நீ இனி அந்தப் புரத்திற்குச் செல்லலாம். பல்லக்கில் தூக்கிச் செல்ல முடியாது. அந்தப் பாக்கியம் பரலோகம் செல்வதற்குத்தான்” என்றான்.

அவள் விட்டால் போதும் என்று நினைத்து அங்கிருந்து அகன்றாள்.

சேவகர்களைப் பார்த்த காரியஸ்தன் "வெட்டப்பட்டக் குழி சடலமில்லாமல் மூடப்படலாகாது. ஆட்டையோ மாட்டையோ வெட்டி உள்ளே போட்டு விட்டு மூடுங்கள்" என்று கட்டளையிட்டு விட்டுச் சென்றான்.

காரியஸ்தனிடமிருந்து விடுபட்டுவிட்டாலும் சூடாமணி குழப்பத்திலிருந்து விடுபடவில்லை.

சமயத்தில் வந்து இளையராணி காப்பாற்றி விட்டாலும் தன்னை அந்தப் புரத்திற்கு வரச் சொன்னது ஏன் என்று தனக்குள் கேட்டுக் கொண்டாள்.

ஒரு வேளை அந்தப்புரத்திற்கு வரச்சொல்லி இளைய ராணி தன் அதிகாரங்களுக்கேற்ப வேறு மாதிரியான தண்டனையைக் கொடுக்க முற்பட்டால் என்ன செய்வது என்று நினைத்தாள்.

"சூடாமணி! நீ செய்த புண்ணியமோ அல்லது உன் முன்னோர்கள் செய்த புண்ணியமோ, மரணத்திலிருந்து தப்பி விட்டாய். இது போலவே ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் உன்னால் உன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள முடியாது. உயிரைப் பெரிதாக நினைக்கும் நீ இது தான் சரியான நேரம் என்று கருதி துவார சமுத்திரத்தை விட்டு விட்டு ஓடிவிடு; உயிரைக் காப்பாற்றிக் கொள். அதுதான் உகந்தது" என்றது அவளது மனம்.

காரியஸ்தனிடம் வகையாகச் சிக்கிக் கொண்ட போது அவள் அப்படித்தான் நினைத்தாள்.

ஆனால் உயிர் தப்பிய பின் அவளது எண்ணத்தில் மாற்றம் ஏற்பட்டது.

தனது உயிருக்கு இனி பிரச்சனை வராது என்று கருதிக் கொண்டாள்.

உயிருக்கு ஆபத்து வராத வண்ணம் சாமர்த்தியமாக நடந்து கொள்ள வேண்டும் என்று நினைத்தாள்.

இளையராணியிடமிருந்து பயம் சற்றே அகன்றது.

காரியஸ்தனிடமிருந்து தன்னைக் காப்பாற்றிய இளையராணி தன்னை தண்டிப்பதற்காக அரண்மனைக்கு அழைத்திருக்க மாட்டாள் என்று எண்ணினாள்.

அவளைச் சந்திப்பது என்று தீர்மானித்துக் கொண்டு அந்தப் புரத்தை நோக்கி நடந்தாள்.

பரிகார ஸ்தலத்திற்கு வரும் போது பல்லக்கில் வந்ததால் கஷ்டம் தெரியவில்லை.

பரிகார ஸ்தலத்திலிருந்து அந்தப்புரத்திற்கு நெடுந்தூரம் செல்ல வேண்டியிருந்ததால் சிரமத்தோடு நடந்தாள்.

அவள் அங்கு சென்று சேர்வதற்கு முன்பாகவே அந்தப் புரத்திற்கு வந்து விட்ட இளையராணி சூடாமணியின் வரவைப் பற்றி அந்தப்புர அணங்குகளிடம் தெரிவித்திருந்த படியால் சூடாமணி அங்கு சென்ற போது நன்றாக விசாரித்து உறுதி செய்து கொண்டு இளையராணியிடம் தெரிவித்தார்கள். அவள் அனுமதியை வழங்கியபின் சூடாமணி அந்தப் புரத்தின் ஆடல் அரங்கிற்கு அழைத்துச் செல்லப்பட்டு அங்கே கூடியிருந்த கூட்டத்தினரோடு அமர்த்தப்பட்டாள்.

அங்கே நாட்டிய நிகழ்ச்சி நடந்து கொண்டிருந்தது.

"காலை தூக்கி நின்றாடும் தெய்வமே-" என்ற பாட்டிற்கு ஏற்ப நடனமங்கை அபிநயம் பிடித்து நடனமாடிய விதமும் இசைக் கருவிகள் ஒலித்த விதம் தான் கந்தர்வ உலகிற்கு வந்து விட்டோமோ என்ற பிரமையை உண்டாக்கியது சூடாமணிக்கு.

ஆடல் அரங்கமானது பளிங்கு கற்களால் கட்டப்பட்டு அதில் அமைந்திருந்த சிற்பங்களோ அழகுக்கு அழகு செய்யும் அற்புதமாக அமைந்திருந்தன.

நடனமங்கை அடுத்ததாக வேறொரு பாடலுக்கு நடன அபினயங்களைப் பிடித்தாள்.

பாட்டு தேவார்தமாக இருந்தது.

**அழகுக்கு அழகுசெய்யும் ஆரமுதே - நீ**
**அன்புக்கு அன்பு மட்டும் அளிக்காதது ஏன்?**

**- பல்லவி**

**ஆசை என்ற ஒன்று இருப்பதும் ஏனோ?**
**அச்சம் என்பது பின் வருவதும் ஏனோ?**

**- அனுபல்லவி**

**பகுத்து பகுத்து நான் கதைகளைச் சொன்னேன்**
**பக்குவம் நிறைந்த உன் மனதிற்குச் சொன்னேன்**
**கேட்டுக் கேட்டுத் தெளிந்த பின்பும் நீ**
**கேளாதது போல் மறைவதும் ஏனோ?**

**- சரணம்**

**சொன்னவுடன் நீ தலையையும் ஆட்டி**
**சொல்கிறேன் பிறகென்று பாவனையும் காட்டி**

தேன்சுவை வாயினால் சொன்னவை எல்லாமும்
தென்னை நிழலாய் ஆனதும் ஏனோ?

- சரணம்

ஓடி வந்தேன் தேடி வந்தேன்
ஆடச் சொன்னாய் பாடச் சொன்னாய்
தேடிய எனக்குத் தேனும் தந்தாய்
தனியாய் அதை உண்ணச் சொன்னதும் ஏனோ?

- சரணம்

நல்ல பாடலும் நன்னடனமும் சூழ்நிலையை மாற்றி அங்கிருந்த எல்லோருக்கும் இதத்தைத் தந்திருந்தது.

நிகழ்ச்சி முடிந்ததும் கலைஞர்களுக்குப் பரிசளித்து ஆசிர்வதித்தாள் இளையராணி.

"பாடலும் ஆடலும் மனிதர்களைப் பண்படுத்தக் கூடிய தெய்வீகச் சக்திகள். இந்தக் கலை காலம் கடந்து நிற்க வேண்டுமானால் உங்களைப் போன்ற கலைஞர்கள் அர்ப்பணிப்புடன் இக்கலையில் தொடர்ந்து ஈடுபட வேண்டும்" என்று சொல்லி அவர்களை அனுப்பி வைத்தாள் இளைய ராணி.

எல்லோரும் அகன்று விட்ட நிலையில் அவளுக்கு முன்னால் சென்று நின்று வணங்கினாள் சூடாமணி.

அவளை யார் என்று நினைத்துப் பார்த்துக் கொண்ட இளையராணி "உன் பெயர் என்ன?" என்று கேட்டாள்.

"சூடாமணி"

"பெயரிலேயே அதிர்ஷ்டம் இல்லை. உன் ஊர் எது?"

"தொண்டனூர்"

"குடும்பம்?"

"இல்லை ராணியாரே. நான் அனாதை"

"தொண்டனூரில் என்ன செய்து கொண்டிருந்தாய்?"

"பெருமாளுக்குப் புஷ்பக் கைங்கரியம் செய்து கொண்டிருந்தேன்."

"உன்னை வளர்த்தது யார்?"

"குறிப்பிட்டு யாரையும் சொல்லமுடியாது"

"உன்னைப் படைத்த இறைவனைச் சொல்ல முடியும் அல்லவா?"

"ஆம் மகாராணி. அது தான் சரியாக இருக்கும். அந்த இறைவன் தான் என்னைப் புஷ்ப கைங்கர்யத்தில் ஆழ்த்தியிருக்கிறான்."

“பூத்துக் குலுங்கும் செடியைப் போல இருக்கும் நீ அனாதை என்கிறாய்? எதிர்காலத்தை பற்றி என்ன நினைத்து வாழ்ந்தாய்?”

“இளவரசர் பெருமானைக் காணும் வரை எனக்கு எந்த எண்ணமும் வரவில்லை மகாராணி. அவரைக் கண்ட பிறகு தான் ஆசை என்ற ஒரு வார்த்தை இருப்பதே தெரிந்தது. அவர் மீது ஆசை வந்து விட்டது.”

“அனாதையான நீ இளவரசன் மீது ஆசைப்படலாமா?”

“தவறு என்று தெரியவில்லை. தவறாக இருக்கலாம் என்று நினைத்த போது ஆசையை விட முடியவில்லை.”

“உன் ஆசையை அவரிடம் எப்படித் தெரிவித்தாய்?”

“தெரிவிக்க பயமாக இருந்தது மகாராணி. அவரை நெருங்குவதற்கே அதிகப் பிரயத்தனம் செய்தேன். அவரது பணிமக்களில் ஒருத்தியாய் சேர்ந்ததே எனது பாக்கியம் தான். அதை நான் சிறிதும் எதிர்பார்க்கவில்லை.”

“உன் தீர்மானம் என்ன?”

“இளவரசரை மணந்து அவரது மனைவியாக வேண்டும் என்பது தான்.”

“பணிப்பெண்ணாக இருந்து கொண்டு அவரை எப்படி மணக்க முடியும்?”

“முடியாது என்பது தெரிந்து விட்டதால் தான் முரண்பட்டு விட்டேன். கீழ்த்தரமாக நடந்து கொண்டு விட்டேன்.”

“இப்படிச் செயல்பட்டால் இளவரசரின் அன்பைப் பெற முடியுமா? வெறுப்பைப் பெறமுடியுமா?”

பதில் சொல்ல முடியாமல் அழுதாள் சூடாமணி.

“அன்பென்னும் பூவைவிட மென்மையான ஒன்றை அடைய நினைக்கும் போது உத்தமமான அணுகுமுறைகள் தான் கைகொடுக்கும். கீழ்த்தரமான செயல்பாடுகள் அன்பை அணுகவே விடாது. தெரியுமா?”

மௌனமாய் இருந்தாள் சூடாமணி.

இளையராணியே பேச்சைத் தொடர்ந்து “இளவரசர் ஏக பத்தினி விரதர் என்பது உனக்குத் தெரியுமா?” என்று கேட்டாள்.

“கேள்விப்பட்டிருக்கிறேன் மகாராணி.”

“அவருக்கு ஒரு மகனும் இருக்கிறான். தெரியுமா?”

“தெரியும்.”

“பிறகெப்படி அவரை மணந்து கொள்ள வேண்டும் என்று விரும்பினாய்?”

“பொல்லாத ஆசையை விட முடியவில்லை மகாராணி.”

“உன்னைப் போலவே பல பெண்களும் ஆசைப்பட்டால் என்னாகும்? அவர் என்னாவார்?”

பேச முடியாததால் மௌனமானாள் சூடாமணி.

“எல்லாம் போகட்டும். இளவரசர் உன்னை வேண்டாம் என்றால் என்ன செய்வாய்?”

“தெரியவில்லை மகாராணி.”

“தெரிய வேண்டும். ஒரு காரியத்தில் இறங்கும் போது அதற்குரிய எல்லா அம்சங்களையும் தெரிந்து வைத்திருக்க வேண்டும். உன்னிடம் ஆசை இருக்கிறதே தவிர தீர்க்க தரிசனம் இல்லை. ஆசையை நிறைவேற்றிக் கொள்ள உனக்குக் கீழ்த்தரமான அணுகுமுறைதான் வந்திருக்கிறது. நீ நம்பத் தகுந்தவனல்ல. நீ சதிகாரியாக இருக்கக் கூடும் என்பது என் ஊகம். காரியஸ்தர் உனக்கு வழங்கவிருந்த தண்டனை மிகவும் சரி. உன்னை இங்கே அழைத்து வரச் சொன்னது தண்டனையை மாற்றியமைக்கத் தானே தவிர உனக்கும் இளவரசருக்கும் திருமணம் செய்து வைப்பதற்காக அல்ல. நீ வெளியில் உலாவுவது ஆபத்தானது. ஆகவே மரணம் நிகழும் வரை உன்னைச் சிறையில் வைக்கும் படி உத்தரவிடுகிறேன்” என்று சொன்ன இளையராணி கைகளைத் தட்டிப் பணிப்பெண்களை அழைத்து ஏதோ ஒரு இடத்தின் பெயரைக் குறிப்பிட்டுச் சொல்லி “இவளைக் கொண்டுபோய் அங்கே அடையுங்கள்” என்று உத்தரவிட்டாள்.

பணிப்பெண்கள் அவளை அவ்வாறே செய்தார்கள்.

சூடாமணிக்குத் திகைப்பாக இருந்தது.

இளையராணி இவ்வாறு நடந்து கொள்வாள் என்று அவள் சிறிதும் எதிர்பார்க்கவில்லை.

“நான் சொன்னேனே கேட்டாயா? அப்போதே ஓடிப் போயிருக்கலாம் அல்லவா? இப்போது பார். இளையராணி உனக்கு ஆயுள் தண்டனை விதித்து விட்டாள்! மரண தண்டனையை விட ஆயுள் தண்டனை கொடியது. ஒரு சுதந்திரமும் இல்லாமல் வாழ்நாள் முழுதும் ஒரே இடத்தில் இருக்க வேண்டியதுதான். இதுவும் ஒரு நரகம்” என்றது மன சாட்சி.

சூடாமணி மயங்கி விழுந்தாள்.





பொய், மெய் என்று தங்களுக்குரிய அனைத்தையும் சுதந்திரமாகவும், சந்தோஷமாகவும், சந்தேகமில்லாமலும் தியாகம் செய்து சுயநலம் பேணாதிருப்பது அர்ப்பணமாகும் – நீலகேசி



மயக்கம் தெளிந்து கண் விழித்த போது கட்டிலில் கிடந்தாள் சூடாமணி.

மயக்கம் அடைவதற்கு முன் நடந்த நிகழ்ச்சிகளை நினைவூட்டிக் கொண்டாள்.

கட்டிலை விட்டு எழுந்து தானிருந்த அறையை விட்டு வெளியே வந்தாள்.

தான் இருந்த இடம் சிறியதோர் இல்லம் என்பது புரிந்தது.

அங்கிருந்து வெளியே வர முடியாமல் கதவுகள் வெளிப் பக்கம் பூட்டப்பட்டிருந்தன.

இளையராணி கருணை காட்டுவாள் என்று எதிர்பார்த்தேனே! கடைசியில் ஆயுள் தண்டனை தானா? உயிர் போகும் வரை இந்த இல்லத்திலேயே கழிக்க வேண்டுமா?

சூடாமணியின் மனம் நொந்தது.

தான் நீலகேசியின் குழுவில் பல சமணர்களோடு இரண் டாண்டுகளுக்கு முன்னால் வந்து சேர்ந்ததை நினைத்துப் பார்த்தாள்.

இளம் பருவமும், துடிப்பும், ஆவேசமும் வைராக்கியமும் சேர்ந்து அவளை நீலகேசியின் முன்னால் சூளுரைக்க வைத்தது.

அவளோடு சேர்ந்து ஐம்பது பேர் சூள் எடுத்தார்கள். அதில் சூளாமணியும் இருந்தான்.

எல்லோரையும் பார்த்து நீலகேசி கூறினார்.

"அன்பவர்களே! சூள் சமணர்களாய் பிரதிக்ஞை எடுத்த நீங்கள் அனைவரும் உங்களைச் சமணத்திற்காக அர்ப்பணித்துக் கொள்கிறீர்கள். அர்ப்பணம் என்றால் என் பேச்சைக் கேட்டுக் கொண்டு தலையாட்டுவது அல்ல. பொய் மெய் என்று தங்களுக்குரிய அனைத்தையும் சுதந்திரமாகவும், சந்தோஷமாகவும், சந்தேகமில்லாமலும் தியாகம் செய்து சுயநலம்

பேணாதிருப்பது அர்ப்பணமாகும். உங்கள் வாழ்க்கையில் இருக்கும் ஒரே அம்சம் சமணம் தான். அதை உயர்த்துவதற்கே உங்கள் சிந்தனையும் செயல்களும் இருக்க வேண்டும். உங்கள் சொந்த விருப்பங்கள் என்று எதுவும் கிடையாது. நானும் ஆச்சார்யர் ஜெயதேவரும் சொல்லும் வார்த்தைகளே உங்களுக்கெல்லாம் சமண வேதங்களாகவும். எங்கள் சொற்படி நடப்பதே சமணத்திற்கான உயர்வாகும். உங்களில் யாருக்கும் இந்தப் பிரதிக்ஞையிலிருந்து விலகுவதற்கு உரிமையில்லை. அப்படி யாரேனும் விலக நினைத்தால் இந்த ச்ரவண பெலகுலா குன்றிலிருந்து குதித்து உயிரை மாய்த்துக் கொள்ள வேண்டும். அதுதான் விலகல். அதுவே மோட்சம்."

நீலகேசி இவ்வாறு கூறிய போது இளைஞர்களாக இருந்த படியால் ஒருவருக்கும் இதன் கடுமை புரியவில்லை. உணர்ச்சி வசப்பட்டு சூளுரைத்தார்கள். சூளுரைத்து ஆண்டு ஒன்றாகியும் சிக்கலான பணி எதுவும் சூடாமணிக்கும் சூளாமணிக்கும் வரவில்லை. அக்கால கட்டத்தில்தான் அவர்கள் இருவருக்கும் காதல் மலர்ந்தது.

காதல் வளர்ந்தது.

இருவரும் சந்தோஷமாக இருந்தார்கள்.

"நாம் திருமணம் செய்து கொண்டால் என்ன?" என்று கேட்டாள் சூடாமணி.

"நாம் காதலிப்பதற்கு முன் வறண்ட பூமி போல் இருந்தோம். காதலித்ததற்குப் பின் மலைச்சாரலைப் போல் ஆனோம். அந்த மகிழ்ச்சி நிறைவானதாக இருக்கிறது. அதை வேண்டாம் என்று சொல்கிறாயா?" என்று கேட்டான் சூளாமணி.

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?"

"சூடாமணி. எனக்கென்னவோ கல்யாணம் என்பது காதலின் முடிவுரை என்று தான் தோன்றுகிறது."

"இது என்ன கூத்து? கல்யாணம் செய்து கொள்வதற்காகத் தானே எல்லோரும் காதலிக்கிறார்கள்?"

"இருக்கலாம். ஆனால் காதலர்கள் கல்யாணம் செய்து கொண்ட பின் காதலை இழந்து விடுகிறார்கள்."

"எப்படிச் சொல்கிறீர்கள்?"

"கல்யாணம் என்பது ஒரு சுமை. கல்யாணம் செய்து கொண்டவர்களை பொறுப்பு என்னும் சுமை அழுத்துகிறது. ஆகவே காதல் இரண்டாம் பட்சமாகி போகப் போக இழந்து விடுகிறது."

“அப்படி நினைத்து அவரவர்களும் கல்யாணம் செய்து கொள்ளாமலா இருக்கிறார்கள்? பொறுப்புகளோடு இணைந்து வாழ்வது தானே வாழ்க்கை?”

“மற்றவர்களுக்கு அப்படி இருக்கட்டும். நாம் அப்படி இருக்க வேண்டாம்.”

“கடைசி வரை காதலித்துக் கொண்டே இருக்கலாம் என்கிறீர்களா?”

“நீ கொஞ்சம் நினைத்துப் பார் சூடாமணி. நமக்குள் காதல் வந்ததும் நாம் பறவைகளாகி வானத்தில் உயரே பறந்தோம். அனைத்தும் நமக்கு சிறுத்துப் போயின. அது எவ்வளவு சந்தோஷமாக இருந்தது! சுதந்திரமாக இருந்தது! அந்த மகிழ்ச்சிக்கு இணையானது உண்டா? நாம் கல்யாணம் செய்து கொண்டால் வானில் பறக்க முடியாது. மண்ணில் தான் உலவ வேண்டும். அது நமக்குத் தேவையா?”

சூடாமணி அவனை விந்தையுடன் பார்த்தாள்.

சூளாமணியே தொடர்ந்து பேசி “நாம் சூள் சமணர்கள். சமணத்திற்காகவே வாழ்கிறவர்கள். நாம் கல்யாணம் செய்து கொள்ள முடியும் என்று தோன்றவில்லை. அதற்கு நீலகேசி அடிகள் அனுமதி தர வேண்டும். சூள் சமணராகி விட்ட நமக்கு அவர் அனுமதி தரமாட்டார். ஆகவே நாம் காதலர்களாக வாழ்வது தான் உகந்தது” என்றான்.

அவளுக்கும் அது சரியாகவே தோன்றியது.

ஒருமுறை இருவருமே தங்கள் காதலைப் பற்றி கூறி கல்யாணம் செய்து கொள்ளலாமா என்று கேட்ட போது -

“சூள் சமணர்கள் என்பவர்கள் துறவிகளைப் போன்றவர்கள். துறவிகள் பற்றுகளையும் பந்தங்களையும் துறந்தவர்கள். நீங்களும் அப்படித்தான் இருந்திருக்க வேண்டும். ஆனால் நீங்கள் எனது அனுமதியில்லாமல் காதல் என்ற பந்தத்தை உண்டாக்கிக் கொண்டதோடு மட்டுமின்றி மீளவே முடியாத பந்தமான திருமணத்திற்கு அனுமதி கேட்கிறீர்கள். உடனடியாக உங்கள் காதலை அகற்றிக் கொள்ளுங்கள். அது மாய விலங்கு. மயங்கும் விலங்கு. அது பிணித்து விட்டால் விலகாது” என்று கூறியிருந்தார் நீலகேசி.

இதே விவரத்தை அவர்கள் ஜெயதேவரிடம் தெரிவித்த போது “சூள் சமணர்களாகிய நீங்கள் ஒருமுறையாவது சமணத்தின் உயர்வுக் காகத் தியாகம் செய்யுங்கள். அதற்குப் பிறகு நீங்கள் விரும்பும் வாழ்க்கையை மேற்கொள்ளலாம்” என்று சொல்லியிருந்தார்.

இவரது வார்த்தைகள் அவர்களுக்கு ஆறுதலாக இருந்தது. ஜெயதேவர் ஒரு போலி என்பதும், சமணரே அல்ல என்பதும், நீலகேசியின் கையாள் என்பதும் அவர்களுக்குத் தெரியாது.

இதர சூள் சமணர்களிடம் பேசிப் பார்த்தார்கள். அவர்களில் சிலர் சூளாமணி - சூடாமணி மாதிரி சங்கடமான நிலையில் இருப்பதாகச் சொன்னார்கள். சிலர் நீலகேசிக்குத் தெரியாமல் திருமணம் செய்து கொண்டு வாழ்ந்து வருவதாகச் சொன்னார்கள். மற்றவர்கள் திட நெஞ்சத்துடன் சூள் சமணர்களாகவே இருந்து வருவதாகச் சொன்னார்கள்.

இந்த நிலையில் தான் நீலகேசி சூடாமணியை மிரட்டி மயக்கமாக்கி கெடுத்து அது ஒன்றும் பெரிய விஷயமல்ல என்று அலட்சியமாகச் சொன்னபின் சூடாமணி இனியும் தான் சூள் சமணனாகத் தொடர வேண்டியதில்லை என்ற தீர்மானத்துடன் சூளாமணியைச் சந்தித்த போது சொல்ல அவன் தனது பிரதிக்ஞையே முக்கியம் என்று சொல்லி அதன் படி நடக்கும் படிக் கூறியதால் ஏமாந்து போனாலும் சூளாமணியின் மீதான காதல் காரணமாக நீலகேசி கூறியபடி இளவரசன் நரசிம்மனை மயக்கும் காரியத்தில் ஈடுபட்டாள். அது தனக்கு அதிர்வலைகளை ஏற்படுத்தும் என்றோ ஆயுள் தண்டனையில் கொண்டு வந்து நிறுத்தும் என்றோ சிறிதும் எதிர்பார்க்கவில்லை.

தான் சமண மதத்தில் இருப்பதற்கே அவளுக்கு வெறுப்பாக இருந்தது.

தன் காதலன் சூளாமணி மீதும் கோபமாக வந்தது.

“அன்பனே! உன் காதலியைக் காப்பாற்றுவதை விட்டு இந்தக் கொடிய தண்டனைக்கு ஆளாக்கி விட்டாயே எல்லாம் யாருக்காக? நீலகேசியைப் போன்ற நச்சுப் பாம்புகள் நிறைந்திருக்கும் சமணத்திற்காக. நீலகேசி போன்ற அயோக்கியர்கள் நிறைந்திருக்கும் ஒரு மதத்தை நாம் ஏன் மதிக்க வேண்டும்? அதை மதிப்பதும் அதற்கு உதவுவதும் அயோக்கியர் களுக்கு உதவுவதாக ஆகாதா? நமக்கு இது எதுவும் வேண்டாம். பேசாமல் கர்நாடகத்தை விட்டுத் தமிழகத்திற்குப் போய் விடலாம். தமிழகம் காதலர்களுக்கான மலர்ச்சோலை. மகிழ்ச்சி பிரவாகத்திற்கான மகோன்னத தேசம். வாழ்க்கையை வாழ்க்கையாக மகிழ்ச்சியாக அனுபவிக்கக் கூடிய ஆனந்த இடம்” என்றெல்லாம் நினைத்தாள்.

அவளது நினைப்புகளை அறிந்து கொள்ள அவளையன்றி யாரும் இல்லை.

இரவு நேரம் வந்த போது கதவு திறக்கப்பட்டு ஒரு தட்டில் புளிச் சோறும் ஒரு குவளையில் தண்ணீரும் வைக்கப்பட்டது.

அவற்றை வைத்தப் பெண்மணி ஒரு வார்த்தையும் பேசவில்லை.

வேறு வழியில்லாமல் அந்த உணவை உண்டு கட்டிலில் படுத்தாள்.

உறக்கம் அவளை ஆட்கொண்டது.

மறுநாள் காலை உணவு வழங்கப்பட்டுச் சிறிது நேரத்திற்குப் பின் ஏதேதோ உபகரணங்கள் கொண்டு வந்து வைக்கப் பட்டன.

அவற்றைத் தொடாமல் இருக்கும் வண்ணம் அவளது கைகளும் கால்களும் கட்டப்பட்டன.

"எதற்கு இவையெல்லாம்?" என்று கேட்டாள் சூடாமணி.

"சித்திரவதை நிபுணரின் உபயோகத்திற்கு" என்றாள் பணிப்பெண்.

"யாருக்குச் சித்திரவதை?" என்று கேட்டாள் சூடாமணி.

"உனக்குத்தான்."

"எனக்கா? எதற்காக?"

"நீ பேசுவதை நிறுத்திக் கொள். இல்லையென்றால் வாயைக் கட்டும் படி இருக்கும்."

சூடாமணி பயந்து போய் பேச்சை நிறுத்திக் கொண்டாள்.

ஒரு நாழிகை கழித்து மணி ஒன்று ஒலித்தது.

அதையடுத்து சித்திரவதை நிபுணர்* நான்கு பணியாளர்களுடன் வந்தார்.

அவரைப் பார்த்தால் சித்திரவதை செய்பவரைப் போல இல்லை. கருணை தெய்வம் போல் இருந்தார்.

சூடாமணியைப் பார்த்த அவர் "இவள் கழுத்தில் வளையத்தை மாட்டி அதில் சங்கிலியைப் பூட்டி அதை மேலே இருக்கும் வளைத்தில் பிணைத்து விடு" என்றார்.

கொடுமையான விஷயத்தை அவர் சர்வ் சாதாரணமாகக் கூறியது சூடாமணிக்கு அதிர்ச்சியாக இருந்தது.

"அதெல்லாம் வேண்டாம்" என்று கெஞ்சினாள்.

"ஆயுள் தண்டனை தானே? சித்திரவதை எதற்கு?" என்று கேட்டாள்.

* Torture specialist.

அங்கிருந்தவர்களோ அவள் பேசியதை கவனிக்கவில்லை.

பணியாளர்கள் அவளது கழுத்தில் தோல் வளையத்தை மாட்டி சித்திரவதை நிபுணர் கூறியது போல் செய்தார்கள்.

நிபுணர் அங்கிருந்த உபகரணங்களைப் பார்த்து அதிருப்தியுடன் தலையை அசைத்தார்.

பிறகு இரண்டு இரும்புக் கம்பிகளைப் பார்த்து "இதன் முனைகளைப் பழுக்கக் காய்ச்சிக் கொண்டு வா" என்றார் ஒருவனிடம்.

ஒரு பணியாளன் அவரிடம் பேச முற்பட்டு "இந்தப் பெண்மணியின் ஆடைகளை அகற்றி விடவா?" என்று கேட்டான்.

"இப்போது வேண்டாம். இவள் பிடிவாதம் பிடித்தால் அப்போது பார்த்துக் கொள்ளலாம்" என்றார் நிபுணர்.

சூடாமணிக்கு அவர்களது பேச்சு விநோதமாக இருந்தது. எதற்காக தன்னைச் சித்திரவதை செய்ய வேண்டும் என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டாள். நரகத்திற்கே வந்து விட்ட மாதிரி இருந்தது அவளுக்கு.

இதற்கிடையில் இரும்புக் கம்பிகளைக் காய்ச்சிக் கொண்டு வந்தார்கள் பணியாளர்கள். அவற்றை வைத்து விட்டு அனைவரையும் வெளியே போகச் சொன்னார் சித்திரவதை நிபுணர்.

சூடாமணியைப் பார்த்து "இப்போது சொல் பெண்ணே! நீ யார்? நீ ஈடுபட்டிருக்கும் சதி என்ன? எல்லாவற்றையும் சொல். ஐந்து நிமிடங்களுக்கு மேல் தாமதித்தால் காய்ச்சிய இரும்புக் கம்பிகள் காதுகளில் இறங்கும். காது போய் விடும். பத்து நிமிடங்களுக்கு மேல் தாமதித்தால் உனது அழகிய கன்னங்களின் மீதும் உதடுகளின் மீதும் வைத்து அழுத்தப் படும். உன் அழகு போய்விடும். பதினைந்து நிமிடங்களுக்கு மேல் தாமதித்தால் கண்களில் செருகப்படும். அதற்கு மேலும் தாமதித்தால் ஆடைகள் அகற்றப்படும். காய்ச்சப்பட்ட இரும்புக் கம்பிகள் எங்கே செருகப் படும் என்பதை நான் சொல்ல வேண்டியதில்லை. நீயே ஊகித்துக் கொள்ளலாம்" என்றார்.

"மகானைப் போல இருக்கும் தாங்கள் இப்படிப் பேசலாமா ஐயா?" என்று கேட்டாள் சூடாமணி.

அனாவசியமாகப் பேசினால் ஒவ்வொரு பேச்சிற்கும் சாட்டையடி கிடைக்கும். ரத்தம் சொட்டும்" என்றார் நிபுணர்.

"ஐயா! என்னைச் சாதாரணமாகக் கேட்டிருந்தாலே சொல்லி யிருப்பேனே! எதற்காக இந்த பயங்கரம்?"

"உன்னை மரணக் குழி முன்பு நிறுத்தினான் காரியஸ்தன். நீ சதியைப் பற்றிக் கூறவில்லை. இளைய ராணி உன்னைத் தண்டனையிலிருந்து விடுவித்து நல்ல விதமாக விசாரித்தார். அப்போதும் நீ சதியைப் பற்றிக் கூறவில்லை. அதைப் பற்றி நீ கூற வேண்டுமானால் உனக்குச் சித்திரவதைகள்தான் ஏற்றது."

"இல்லை ஐயா. நான் சித்திரவதைப்படவோ உயிரை இழக்கவோ விரும்பவில்லை. உண்மையைச் சொல்லி விடுகிறேன்."

"சொல்"

சூளாமணியைப் பற்றி மட்டும் மறைத்து விட்டு மற்றெல்லா விஷயத்தையும் சொன்னாள் சூடாமணி.

"நீ கூறுவது உண்மை என்று எப்படி நம்புவது?"

"ஐயா! நான் உயிர் மேல் ஆசை கொண்டவள். அந்த உயிர்மீது ஆணையாகச் சொல்கிறேன். நான் கூறியது முற்றிலும் உண்மை."

சித்திரவதை நிபுணர் பணியாட்களை அழைத்தார்.

"எனது சித்திரவதை எதுவும் இல்லாமல் உண்மையைச் சொன்னவள் இவள் தான். எனக்கு அதிர்ஷ்டம் இல்லை. இவளை தயார் செய்து கொண்டு செல்லுங்கள்" என்று கூறிவிட்டு அகன்றார் நிபுணர்.

சிறிது நேரத்தில் அனைத்தும் அகற்றப்பட்டன. அவள் நீராடவும் புத்தாடை அணியவும் ஏற்பாடு செய்யப்பட்டது. மதிய உணவு வழங்கப்பட்டது.

ஒவ்வொரு முறையும் தனக்கு உபச்சாரமும் உபத்திரமும் மாறி மாறி நடந்து வந்ததால் தற்போதைய உபச்சாரத்தைக் கண்டபோது அவளுக்குத் திகிலாகவே இருந்தது.

மீண்டுமொரு பயங்கரத்தைச் சந்திக்க வேண்டி வருமோ என்று பயந்தாள்.

அன்று மாலை அரண்மனைக்கு அழைத்துச் செல்லப் பட்டாள்.

மகாராஜாவின் இருப்பிடம் அது என்பதை அறிந்த போது அவளது அச்சம் அதிகரித்தது.

அவரைக் காண்பதற்கு நிறைய பேர் காத்திருந்தார்கள்.

பிறகு ஒரு கட்டத்தில் மகாராஜா இருந்த அறைக்கு அனுப்பப் பட்டாள்.

உள்ளே போய் நடுங்கிய படி நின்றாள் சூடாமணி.

மன்னனின் கம்பீரமான தோற்றத்தைக் கண்ட போது பரவசமாக இருந்தது.

"பெண்ணே! உன்னைச் சந்திக்க வேண்டிய அவசியம் மன்னனாகிய எனக்கு அவசியமில்லை. வில்லாக ஒருவன் இருக்கும் போது அம்புகளாக இருக்கும் உங்களிடம் பேசுவதாலோ உங்களைத் தண்டிப்பதாலோ ஒரு நன்மையும் கிட்டப் போவதில்லை. இருப்பினும் உன்னை நான் பார்க்க விரும்பியது ஒரே ஒரு அறிவுரையைக் கூறத்தான். உங்களைப் போன்றவர்கள் புத்தி தடுமாறும் பருவத்தில் உள்ளவர்கள். எளிதில் உணர்ச்சிவசப்படுபவர்கள். இப்படிப்பட்ட உங்களுக்கு நல்வழி காட்டுபவனே தலைவன், தந்தை. உங்கள் உணர்ச்சிகளைப் பயன்படுத்திக் கொண்டு சுயநலத்திற்காகத் தீயவழிகளில் பயன்படுத்துபவன் கோழை. கருணையற்றவன். இதை உன் போன்றவர்கள் உணர வேண்டும். இளமைக் காலம் சாதிப்பதற்கு உரியதே தவிர சீரழிவதற்காக அல்ல. இதை உணர்ந்து தீயசக்திகளுக்கு இரையாகாமல் நற்பண்புகளை வளர்த்துக் கொண்டு நல்ல விஷயங்களில் சாதனை படைக்க முயலுங்கள்" என்றான் மன்னன்.

"அப்படியே மகாராஜா" என்று; கூறி அவனது கால்களில் விழுந்து வணங்கினாள் சூடாமணி.

"நீ இளவரசனை விரும்புவதாக இருந்தால் அதற்கு அவன் தான் பதில் சொல்ல வேண்டும். அவனைச் சந்தித்துப் பேசு. நீ போகலாம்" என்றான் மன்னன்.

வியர்க்க விறுவிறுத்து வெளியே வந்த அவளுக்கு விடுதலை கிடைத்த மாதிரி இருந்தது. கண்களில் ஆனந்தக் கண்ணீர் பாய்ந்தது.

மாபாவியான நீலகேசி எங்கே? மகாராஜா எங்கே என்று இருவரையும் ஒப்பிட்டுப் பார்த்தது அவள் மனம்.

"எத்தனைப் பெருந்தன்மையானவராக இருக்கிறார் மகாராஜா? சதி செய்து கவிழ்க்க தான் வந்திருப்பது தெரிந்தும் நல்வழி படுத்த அறிவுரை கூறுகிறாரே! இவரல்லவா மகாராஜா? இவரல்லவா மக்களின் ரட்சகர்? இவரல்லவா மக்கள் திலகம்? அந்த நீலகேசியும் இருக்கிறாரே! துறவி வேடத்தில் உலவும் அந்தப் பேய் எங்கே? தெய்வம் போல் ஏற்றிருக்கும் மகாராஜா எங்கே? பாம்புக்கும் கயிற்றுக்கும் வித்தியாசம் தெரியாமல் வழுக்கி விட்டேனே! மகாராஜாவை மட்டும் காணாதிருந்தால் சேற்றில்

அல்லவா வீழ்ந்திருப்பேன்?" என்றெல்லாம் தனக்குள் விசாரணை செய்து கொண்ட சூடாமணி மறுநாள் இளவரசன் நரசிம்மனைச் சந்தித்தாள்.

அச்சந்திப்பிற்கு பணியாட்களே வழிகாட்டி உதவினார்கள்.

மன்னன் கதிரவனைப் போல ஜொலித்தான் என்றால் இளவரசனோ சந்திரனைப் போல குளிர்ந்திருந்தான்.

அவளைப் பார்த்ததும் "என்னை மணந்து கொள்ளும் தகுதி ஒரு பெண்ணிற்கு இல்லை என்று என்றைக்கும் நான் கூறமாட்டேன். ஆகவே தகுதியில்லை என்று உன்னை நான் ஒதுக்க வில்லை. உன்னை ஏற்றுக் கொள்ள தனக்கு எந்தத் தடையும் இல்லை என்று தான் சொன்னாள் என் மனைவி சௌமிய குமாரி. இருப்பினும் என் இதயத்தில் என் மனைவியைத் தவிர யாருக்கும் இடமில்லை என்பதில் தீர்மானமாக இருக்கிறேன். அதை மாற்றிக் கொள்ளத் தயாராக இல்லை. சூள் - சமணன் என்ற பிரதிக்ஞையிலிருந்து விடுவித்துக் கொண்டு நல்லவனைப் பார்த்து மணந்து கொண்டு சுகமாக இரு. போய் வா. உனக்கு என் நல்வாழ்த்துக்கள்" என்று சொல்லி அனுப்பி வைத்தான் இளவரசன்.

உள்ளே இருந்த தீய எண்ணங்களும், ஏக்கங்களும், தாபங்களும் அகன்ற நிலையில் அங்கிருந்து சென்றாள் சூடாமணி. விடுதலை யடைந்த ஆனந்தம், அவளுக்கு இந்த உலகமே ஆனந்த மயமாகி விட்டது போல் எண்ண வைத்தது.

அடுத்த சில நாட்களில் இளவரசனை அழைத்த மன்னன் "நரசிம்மா! இந்த நீலகேசி எப்படியெல்லாம் நடந்து கொள்வார் என்பது உனக்குப் பூரணமாக இப்போது தெரிந்திருக்கும். ஆகவே நீ துவார சமுத்திரத்திலே இரு. உதயணனோடு குவலாலபுரத்திற்குச் செல்ல வேண்டாம். உனக்கு உகந்த காரியம் ஒன்று உள்ளது. அதற்கு உன்னைத் தயார் படுத்திக் கொள்" என்றான்.

அதே சமயம் உதயணன் தளபதி விகர்ணனுடன் குவலால புரத்திற்குப் புறப்பட்டான்.

அவனுக்கு அங்கே பல சவால்கள் காத்திருந்தன.





ஆணும் பெண்ணும் காமத்தைப் புரிந்து கொண்டு காமத்தில் ஈடுபடுவது காமத்திற்குச் சிறப்பு சேர்ப்பது போல் சுகமான அனுபவமாக இருக்கும் –




குவலால புரத்தை* யொட்டி எழும்பியிருந்த மலையின் உச்சியில் இருந்த கோட்டையின் மையப் பகுதியில் காவல் தூணில் எரிந்து கொண்டிருந்த சிவப்பு விளக்கானது "இங்கே பயங்கரமானவர்கள் இருக்கிறார்கள். யாரும் வரவேண்டாம்" என்று எச்சரிப்பது போல இருந்தது.

கோட்டையானது பல இடங்களில் இடிந்து கிடந்தாலும் கெட்டாலும் மேன்மக்கள் மேன் மக்களே என்று நிரூபிப்பது போல் கம்பீரமாகவே காட்சியளித்தது.

கர்நாடக மாநிலங்களின் பகுதிகளையும், ஆந்திர நாட்டின் சில பகுதிகளையும், கடைசியாக பல்ல நாட்டின் பல பகுதிகளையும் நீர்வளத்தால் செழிக்கச் செய்து வந்த பாலாறு நந்தி துர்க்கத்தில் நீரூற்றாகத் தோன்றிய படியால் அம்மலையை நீர்மலை என்றும் உள்ளூர்வாசிகள் உச்சரித்து வந்தார்கள்.

நந்தித் துர்க்கத்தில் உருவாகி ஆறாக வடிவெடுத்து நந்தி மலைகளுக்கும் ஆவணிக் குன்றுகளுக்கும் இடையே பாய்ந்து குவலால புரத்தில் புகுந்து விஜயாதித்தன் ஏரியில் பாய்ந்து நாமசாகரம் என்னும் கடலனைய ஏரியின் வழியாகத் தமிழகத்திற்குப் பாய்ந்த பாலாறு ஆட்டமெல்லாம் ஆடி ஓய்ந்த பெண்மணி அமைதியடைந்தது போல பல்லவ நாட்டின் மாமல்ல புரத்திற்கு அருகே கடலில் கலந்து கொண்டிருந்தது.

நீண்ட நெடிய பயணம் செய்யும் பாலாறு என்னும் அந்த நதிப் பெண்ணின் இருப்பிடம் நந்தி வர்க்கம் இருந்த படியால் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் அப்பகுதியை ஆண்டு கொண்டிருந்த கங்க நாட்டு மன்னன் அங்கே கோட்டையைக் கட்டி வாழ்ந்தான்.

அக்கோட்டையை அடுத்த குவலால புரத்தில் தங்கம் கிடைப்பதாக அக்காலத்திலேயே பேசப்பட்டு வந்தாலும் யாருக்கும் கிடைக்கவில்லை. பலரும் முயன்று தோற்றுப்

* கர்நாடக மாநிலத்தில் தற்போது உள்ள கோலார்.

போயிருந்தார்கள். கங்க மன்னர்கள் தங்கள் இருப்பிடத்தை குவலால புரத்திற்கு மாற்றிக் கொண்ட போது கோட்டையானது மதிப்பை இழந்தது. பொலிவை இழந்தது. பாதுகாப்பை இழந்தது. மக்கள் அங்கே புழங்குவதும் நின்றது.

அதோடு கங்கர்கள் தங்கள் தலை நகரைக் குவலால புரத்திலிருந்து தழைக் காட்டிற்கு மாற்றிக் கொண்டதால் நந்தி துர்க்கக் கோட்டை கேட்பாரற்றுப் போயிற்று.

மக்கள் நடமாடுவதும் அறவே நின்று போனதால் அங்கே அரவங்களும் வனவிலங்குகளும் குடியேறின. பேய்ப் பறவைகள் கூட்டம் கூட்டமாக மரங்களில் கூடு கட்டி வாழ்ந்தன. காணுமிடமெல்லாம் பாம்புப் புற்றுகள் முளைத்தெழுந்தன.

எனவே மக்கள் மறந்தும் கூட நந்தி துர்க்கத்திற்குப் போவதில்லை.

இக்கதை நடந்த காலத்தில் அங்கே பலர் வந்து சேர்ந்தார்கள். பாம்புகளை விடவும் சிறுத்தைகளை விடவும் அவர்கள் கொடூரமானவர்களாக இருந்ததால் அவர்களால் பாம்புகள் அழிந்தன. புற்றுக்கள் அழிந்தன. வனவிலங்குகள் பல மடிந்தன. சில ஓடி மறைந்தன.

இப்படி விலங்குகளை விரட்டி விட்டு குடிவந்த நூற்றுச் சொச்சம் பேர்கள் அந்த இடிந்த கோட்டையைத் தங்கள் வாழ்விடமாக மாற்றிக் கொண்டார்கள். அதற்கு ஏற்ற வசதிகளைச் செய்து கொண்டார்கள். கோட்டையில் பாதுகாப்பு ஏற்பாடுகளை அமைத்துக் கொண்டார்கள். அயலார் ஒருவரையும் மேலே அனுமதிக்காமல் மிரட்டி விரட்டினார்கள்.

அவர்கள் அமைத்திருந்த சிவப்பு விளக்குதான் தற்போது வெளிப்புறங்களை எச்சரித்துக் கொண்டிருந்தது.

இரவு நேரம் முகிழ்த்து இரண்டு நாழிகைகள் கழிந்திருந்த நிலையில் நந்தித் துர்க்கத்து நபர்கள் கோட்டைக்கு வடப் பகுதியில் இருந்த நந்திச் சிலை முன்பு கூடினார்கள். துர்க்கம் சிறப்பாக இருந்த காலத்தில் சிவன் கோயிலாக இருந்த இடத்தில் நந்தி மட்டும் விஞ்சியிருந்ததால் அந்த நபர்கள் அந்த நந்தியையே தங்கள் வழிபாட்டுத் தெய்வமாகக் கருதி இரவு காலங்களில் வழிபட்டு வந்தார்கள். ஒரே கல்லினால் ஆன நந்தி மலைபோல இருந்ததால் அதன் பொருட்டே கோட்டைக்கு நந்தி துர்க்கம் என்ற பெயர் வந்திருக்க வேண்டும் என்று கருதிய அவர்கள் தங்கள் வழிபாட்டிற்காகவே அது மிஞ்சியிருப்பதாகச் சந்தோஷப்பட்டு தினமும் பூக்களால் பூஜை செய்து பறைகளைக் கொட்டித் தொழுதார்கள்.

அயோக்கியர்களுக்கும் தீயவர்களுக்கும் எக்காலத்திலும் ஒரு தெய்வம் தேவையானதாக இருந்து வந்திருக்கிறது. செய்யும் தொழில் தீயவையானாலும் அவை வெற்றிபெற தெய்வத்திடம் முறையிடுவது வழக்கம்தான். அந்த வகையில் அவர்கள் நந்தியை வழிபட்டு கோட்டைக்குள் இருந்தச் சிதிலமான தர்பார் மண்டபத்திற்கு வந்தார்கள்.

தேவ சபை போல் ஒரு காலத்தில் இருந்த தர்பார் மண்டபம் உடைந்து போன கூரையுடன் - சிதைந்து போன சிற்பங்களுடன் - கலைந்து போன ஓவியங்களுடன் - பிளவு பட்ட தூண்களுடன் வாழ்ந்து கெட்ட குடும்பங்கள் போல் காட்சியளித்தது.

ஆசனங்களுக்குப் பதிலாக பாறைகள் நன்றாக வடிவமைக்கப் பட்டு மண்டபத்தில் வைக்கப்பட்டிருந்ததால் தொழுது முடித்தவர்கள் விழுதுகளைப் போல வந்து கல்லாசனங்களில் அமர்ந்தார்கள்.

அவர்களில் ஒருவர் கூட பார்க்கும் படியாக இல்லை. ஒட்டடைகளைப் போல இருந்தார்கள். ஒடிந்து போன சிற்பங்களைப் போல இருந்தார்கள். அரக்கர்களின் வடிவமாக இருந்தார்கள். அவர்கள் அணிந்திருந்த ஆடைகள் பொருத்த மில்லாமல் அலங்கோலமாக இருந்தன. முகங்கள் தெரியாத அளவிற்குப் பெருமீசைகளும் புருவ மயிர்களும் மறைத்திருந்தன. ஓரிருவருக்கு இரண்டொரு பற்கள் உதடுகளுக்கு வெளியே நீண்டு பேய்களைப் போல எண்ண வைத்தன.

அவர்களெல்லாம் ஒன்று கூடி தலைவனாகத் தேர்ந்தெடுக்கப் பட்டவனான மூர்க்கன் மண்டபத்திற்கு வர வில்லை. நந்தி பூஜைக்கும் வரவில்லை. தனது காரியம் வெற்றி பெறும் வரை நந்தி தேவரை கைலாயத்திலிருந்து வந்தாலும் தொழுவதில்லை என்று பிரதிக்ஞை எடுத்திருந்தான்.

அதே சமயம் மற்றவர்கள் வழிபாட்டில் ஈடுபட்டுக் கொண்டிருந்த போது மூர்க்கன் பெண்ணொருத்தியிடம் மூர்க்கமான காமத்தில் ஈடுபட்டுக் கொண்டிருந்தான்.

அவன் பல விஷயங்களிலும் சூரனாக இருந்தது போலவே காமத்திலும் சூரனாக இருந்தான்.

பல விஷயங்களில் கொடூரமானவனாக இருந்தது போலவே காமத்திலும் கொடூரமானவனாக இருந்தான்.

அவன் சிங்கத்தைப் போன்றவன். சிங்கம் பசிக்கும் போது தான் வேட்டையாடும். மூர்க்கனும் ஆசை வரும் போது வகையான ஒரு பெண்ணைக் கொண்டு வந்து காமத்தில் தூய்ப்பான்.

நந்தி துர்க்கத்திற்கு முதலில் வந்தவன் அவன். கோட்டையைச் சீர்திருத்தியவன் அவன். பின்னால் பலர் வந்த போது அவர்களைக் கொண்டு கோட்டையை வாழ்விடமாக்கியவன் அவன்.

எனவே அவனே அங்கிருந்தவர்களுக்குத் தலைவனானான்.

அவனது குரூரம் பயங்கரமானது. கோபம் பயங்கரமானது. எச்சரிக்கை பயங்கரமானது. தண்டனையும் பயங்கரமானது.

எனவே சகாக்கள் அவனது சொந்த விஷயங்களில் தலையிடுவதில்லை.

அதனால்தான் அவனது காம சேட்டைகளைப் பற்றியும் கவலைப்படாமல் இருந்தார்கள்.

தடையோ தலையீடோ இல்லாத காரணத்தால் தான் கொண்டு வந்திருந்தப் பெண்ணை தன் இஷ்டப்படி ஆண்டு கொண்டிருந்தான் மூர்க்கன்.

அவனால் கொண்டு வரப்பட்ட பெண் காமம் என்றால் இன்னதென அறியாதவள்.

எனவே மூர்க்கன் மூர்க்காவேசமாகப் பாய்ந்த போது அலறினாள். இது என்ன இப்படியெல்லாம் என்றெண்ணி பயந்தாள்.

அதனாலெல்லாம் அவள் புதுமலர் என்பதைப் புரிந்து கொண்ட மூர்க்கன் மகிழ்ச்சியே அடைந்தான்.

மூர்க்கத்தனத்தைக் குறைத்து மிருதுவாகக் கையாண்ட போது அப்பெண்ணிற்கு இதமாக இருந்தது. இன்பமாக இருந்தது.

இதுதான் காமச் சுகமா என்று தனக்குத் தானே கேட்டுக் கொண்டு புரிந்தும் கொண்ட அவள் மிருதுவான அணுகுமுறைக்குப் பதிலாக முரட்டுத்தனத்தையே ஊக்கப் படுத்தினாள்.

காமச் சுவையை அவள் உணர்ந்து கொண்டு விட்டதால் அவன் சுதந்திரமாகச் செயல்பட்டான்.

ஆணும் பெண்ணும் காமத்தைப் புரிந்து கொண்டு காமத்தில் ஈடுபடுவது காமத்திற்குச் சிறப்பு சேர்ப்பது போல் சுகமான அனுபவமாக இருக்கும்.

அந்தச் சுகானுபவத்தில் இருவரும் திளைத்தார்கள்.

"உனது அங்கங்கள் என்னை மிகவும் அசத்துகின்றன. உன்னைப் போன்ற ஒருத்தியை நான் இதுவரையில் கண்டறியவில்லை" என்றான் மூர்க்கன் திளைப்பில் மூழ்கியபடி.

அவளுக்குப் பேச விருப்பமில்லை பிரவாகம் வேகமாக இருந்ததால்.

சிறிது நேரம் கழித்து "நீங்கள் இது வரை எத்தனைப் பெண்கள்...." என்று ஏதோ கேட்டாள் அவள்.

"அதற்கு ஏது கணக்கு? நூற்றுக்கு மேல் இருக்கும்" என்றான் மூர்க்கன்.

"அப்படியானால் நீங்கள் ராட்சஷனா?"

"அப்படியும் சொல்லலாம். ராட்சஷனின் தன்மை எனக்கு உண்டு. நான் உண்மையில் கொள்ளைக்காரன்."

"ஐயோ."

"பயப்படாதே. கொள்ளையடிப்பதும் ஒரு தொழில்தான்."

"நான் அப்படிக் கேள்விப்பட்டதில்லையே?"

"நீ சிறு பெண். உனக்குக் கடலைக் கூடத் தெரியாது. கடல் கொள்ளைக்காரர்களை எப்படித் தெரியும்?"

"நீங்கள் கடலிலா கொள்ளையடிப்பீர்கள்?"

"ஆமாம்."

"எப்படி?"

"எப்படியென்றால்? கடலில் சரக்குகளை ஏற்றிய கப்பல்கள் வரும். அவற்றை நடுக்கடலில் மடக்கி, தாக்கி, கொள்ளை யடிப்போம்."

"உங்களை யாரும் கேட்கமாட்டார்களா?"

"கடல் எங்களுக்கு மைதானம். எங்கள் சாம்ராஜ்யம். எங்களுக்கு சொந்தமான இடம். சுதந்திரமான இடம். எங்களை யாரும் எதுவும் செய்ய முடியாது. நாங்கள் எரிமலைக்கு ஒப்பானவர்கள். எங்களை அண்டினால் சீறுவோம்."

"எங்கேயெல்லாம் கொள்ளையடிப்பீர்கள்?"

"கடல் இருக்கும் இடத்திலெல்லாம் அடிப்போம்."

"நந்தி துர்க்கத்தில் என்ன செய்கிறீர்கள்?"

அவள் இப்படிக் கேட்டதுமே அவளை உதறினான் மூர்க்கன். தனது கழுத்தில் இருந்த முத்து மாலை ஒன்றைக் கழற்றி அவளுக்குக் கொடுத்து விட்டு "நீ போ" என்று சொல்லி விட்டு தர்பார் மண்டபத்திற்குச் சென்றான்.

மண்டபத்திற்கு வந்து சேர்ந்த தலைவனைக் கண்டதும் எல்லோரும் எழுந்து நின்றார்கள்.

தலைவனான மூர்க்கன் நாகரிகமற்றவனாதலால் படுக்கையறையிலிருந்து அரைகுறையாகவும் அலங்கோலமாகவும் வந்திருந்தான். அதைப் பற்றி அவனும் கவலைப்படவில்லை. அங்கிருந்தவர்களும் கவலைப்படவில்லை.

மூர்க்கன் ஒரு முறை எதிரிகளோடு சண்டையிட்ட போது ஒரு கண்ணை இழந்து விட்டிருந்ததால் அந்தப் பகுதி மூளியாக இருந்தது அவனைக் கோரமாகக் காட்டியது.

ஆசனத்தில் வந்து அமர்ந்ததும் இரு பணிப்பெண்கள் கவரி வீசினர்.

ஒருத்தி கலயத்தில் மதுவைக் கொண்டு கொடுத்தாள்.

அதை ஒரே மூச்சில் குடித்து விட்டு கலயத்தைக் கீழே வீசியெறிந்தான் மூர்க்கன்.

பிறகு அவன் பேசிய முதல் வார்த்தையே பயங்கரமாக இருந்தது.

“நாளை முதல் உங்களில் ஒவ்வொருவராகக் கொல்லப் போகிறேன்” என்றான் மூர்க்கன்.

சொன்னபடி செய்கிறவன் மூர்க்கன் என்பதால் சற்றே சங்கடப்பட்ட சகாக்கள் “நாங்கள் எந்தத் தவறையும் செய்யவில்லையே தலைவரே!” என்றார்கள்.

“நாமெல்லாம் யார்?” என்று கேட்டான் மூர்க்கன் மூர்க்கத் தனமாக.

“கடல் கொள்ளைக்காரர்கள்.”

“கடல் கொள்ளை செழிப்பானது. அதை விட்டு விட்டு நந்தி துர்க்கத்திற்கு எதற்காக வந்தோம்?”

“இங்கே ஏராளமான தங்கம் இருக்கிறது என்று கேள்விப் பட்டு வந்தோம்.”

“வந்து எவ்வளவு காலமாகிறது?”

“ஆறு மாத காலம்.”

“தங்கத்தைக் கண்டு பிடித்து விட்டோமா?”

“இல்லை.”

“ஏன்?”

“அதன் இருப்பிடம் தெரியவில்லை.”

“அதைக் கண்டுபிடிப்பதற்காகத் தான் வந்தோம். ஆறுமாத காலமாகியும் கண்டு பிடிக்கவில்லை.”

"தலைவரே! தங்கமானது அரண்மனையில் இருந்தால் கண்டு பிடித்து விடலாம். பெட்டகத்தில் இருந்தால் கண்டுபிடித்து விடலாம். எங்கேயாவது மறைக்கப்பட்டிருந்தால் கண்டு பிடித்து விடலாம். ஆனால் தங்கம் பூமிக்குள் இருக்கிறது என்பது தான் தெரிகிறதே தவிர எங்கே இருக்கிறது என்பது தெரியவில்லையே."

"அதைக் கண்டு பிடிப்பதற்காகத் தான் வந்தோம். ஆனால் யாரும் கண்டுபிடிக்கவில்லையே"

"நாங்கள் ஆங்காங்கே மண்ணைத் தோண்டிப் பார்த்துத் தான் வருகிறோம். கிடைக்கவில்லை அதோடு..."

"அதோடு என்ன?"

"நமது காரியம் ரகசியமாக நடைபெற வேண்டிய தொன்று. ஆகவே தயங்கியும் பதுங்கியும் செய்கிறோம். ஆகவே தான் கால தாமதமாகிறது."

"கால தாமதத்திற்கு வரையறை கிடையாதா? தேடிக் கொண்டே இருக்க வேண்டியது தானா? ஆறுமாத காலம் நாம் கடலிலேயே இருந்திருந்தால் கணிசமான தொகையைக் கொள்ளையடித்திருப்போம். இப்போது அதுவுமில்லை. இதுவும் இல்லை. என்ன செய்வதாக உத்தேசம்? காலதாமதம் தொடர்ந்தால் பிச்சையெடுக்க வேண்டியதுதான்."

"தங்கம் கிடைக்கும் வரைச் சிற்றூர்களில் கொள்ளை யடிக்கலாம்."

"சிற்றூரைக் கொள்ளையடித்துச் சிக்கிக் கொள்வதை விட கடலுக்கே போய் விடலாம். நாம் இங்கே எதற்காக வந்தோமோ அதில் தான் முழுமையாக ஈடுபட வேண்டும். நீங்களெல்லாம் ஒரே கடல் பிராந்தியத்தைச் சேர்ந்தவர்களல்ல. அரபுக் கடல் பகுதியினர் சிலர். செங்கடல் பகுதியினர் சிலர். வங்கக் கடல் பகுதியினர் சிலர். சீனக்கடல் பகுதியினர் சிலர். ஆனால் உங்களில் யாருக்கும் தங்கம் இருக்கும் இடத்தைக் கண்டுபிடிக்கத் துப்பு இல்லை. ஏதோ மண்ணைத் தோண்டினோம் மண்ணாங் கட்டியைத் தோண்டினோம் என்று ஒப்புக்குச் சொல்லிக் கொண்டு காலத்தை ஓட்டுகிறீர்கள். உங்களில் ஒருவருக்கும் திறமை இல்லை. அறிவு இல்லை. பெருங் கொள்ளைக் காரர்களான நாம் மாதக் கணக்கில் சும்மா இருப்பது அவமானகரமானது. இது நீடித்தால் நமக்கிங்கு ஆபத்து வந்து விடும். எனவே எல்லோரும் யோசனை செய்யுங்கள். உபாயத்தைச் சொல்லுங்கள். இல்லா விட்டால் நாளை முதல் ஒவ்வொருவராக வெட்டுவேன்" என்று கூறிவிட்டு அகன்றான் மூர்க்கன்.

மறுநாள் மூர்க்கனின் துணைத் தலைவனான மூக்கன் ஒருவரை அழைத்து வந்து "தலைவரே! இவர் மந்திரவாதியைப் போன்றவர். சோழிகளை உருட்டி பிரசன்னம் சொல்வாராம். ஊரில் பல இடங்களில் பல பேருக்கு பிரசன்னம் சொல்லி காணாது போன நகைகளையும் விக்கிரகங்களையும் கண்டு பிடித்துக் கொடுத்தாராம். இவரிடம் பிரசன்னம் கேட்டால் தங்கம் இருக்கும் இடம் தெரிந்து விடும்" என்றான்.

மூர்க்கனுக்கு நம்பிக்கை வரவில்லை. இருப்பினும் பிரசன்னம் பார்க்கச் சொன்னான்.

வந்தவர் ஒற்றை நாடியுடன் கூடிய அந்தணராக இருந்தார்.

சோழிகளை உருட்டிப் போட்டு ஏதேதோ முணுமுணுத்தார். கணக்குகளைப் போட்டார்.

"ஆகா! ஆகா! தங்கம்! தங்கம்! பாளம் பாளமாக இருக்கின்றன" என்றார்.

"எங்கே இருக்கின்றன?" என்று கேட்டான் மூர்க்கன்.

"அது சரியாகத் தெரியவில்லை."

"நன்றாகப் பாரும்."

"பார்த்து விட்டேன். கண்கள் கட்டுகின்றன. எதுவும் தெரியவில்லை."

"எதுவும் தெரியவில்லை என்பதுதான் உமது பிரசன்னமா? முட்டாளே" என்று எரிந்து விழுந்தான் மூர்க்கன்.

"சரியாகப் பார்த்துச் சொல்லுங்கள் ஐயா" என்றான் உபதலைவன் மூக்கன்.

"தெரிந்தால் சொல்ல மாட்டேனா? காணாமல் போகும் நகைகள் விஷயமாகப் பிரசன்னம் பார்த்தால் இருப்பிடம் தெரிந்து விடும். கண்கள் கட்டாது. ஆனால் இதில் கண்கள் கட்டுகிறது."

"ஏன்?" என்று கேட்டான் தலைவன்.

"உறுதியாகத் தெரியவில்லை என்றாலும் ஊகமாகச் சொல்ல முடியும்."

"சொல்லுங்கள்."

"சில விஷயங்கள் யாரால் பார்க்க வேண்டும் என்று இருக்கிறதோ அவர் களால் தான் பார்க்க இயலும். அதனால் தான் கண்கள் கட்டி பார்க்கவிடாமல் செய்கின்றன."

"இந்தத் தங்கத்தை யார் பார்க்க வேண்டும்?"

"அது எனக்குத் தெரியாது ஐயா."

"இதோ பார். எங்களுக்குத் தெரியாமல் நீயே கவருவதற்குத் திட்டம் போட்டிருந்தால் சொல்லி விடு. என்னை ஏமாற்ற நினைத்தால் உயிரோடு திரும்ப மாட்டாய்."

"நான் இருக்கும் நிலையில் மரணமானது எந்த நொடியிலும் வரக்கூடும். என் மரணத்தைக் குறித்து அஞ்சவில்லை. நான் சொல்வது உண்மை."

"இதற்கு முன் இது விஷயமாக யாராவது உன்னிடம் பிரசன்னம் கேட்டிருக்கிறார்களா?"

"இல்லை"

"இந்தப் பிரச்சனைக்கு என்னதான் வழி?"

"ஐயா! பரிகாரங்களைச் செய்தால் உங்களுக்கு வழி கிடைக்கும். அவற்றைச் செய்து விட்டு என்னிடம் பிரசன்னம் கேட்டால் தங்கத்தின் இருப்பிடத்தை அறியலாம்."

"என்ன பரிகாரம்?"

"எனக்கது தெரியாது. குவலால புரத்தில் பிடாரி கோயில் ஒன்றுள்ளது. அக்கோயிலில் பிடாரி ஒருவர் இருக்கிறார். அவர் கண்களைத் திறக்க மாட்டார். வெளி இடங்களுக்கும் வரமாட்டார். உங்களுக்குள் ஒருவர்தான் அங்கே போக வேண்டும். ஒருவன் மட்டுமே போக வேண்டும். போய் உங்கள் கோரிக்கையைச் சொன்னால் பரிகாரம் சொல்வார். அதை உடனடியாகச் செய்து விடுங்கள்" என்றார் பிரசன்ன அந்தணர்.

மூர்க்கன் யோசனையில் ஆழ்ந்தான்.

அப்போது பணியாட்கள் இருவர் வந்து "ஐயா! இரண்டு பேர் நந்தி துர்க்கத்திற்கு வந்திருக்கிறார்கள். உங்களைச் சந்திக்க வேண்டுமாம்" என்றான்.

"அவர்களைக் கொன்று விட்டுக் கையைக் கழுவு" என்றான் மூர்க்கன்.

"அவர்கள் தங்கம் இருக்கும் இடம் எது என்று தெரியும் என்று சொல்கிறார்கள்."

"இவர்களுக்கு வேலை இல்லை. இருவரையும் மலைக் குகையில் அடைத்து வை. பிறகு விசாரிக்கிறேன்" என்றான் மூர்க்கன்.

இருவரும் குகையில் அடைக்கப்பட்டார்கள்.

அவர்கள்?

உதயணன், விகர்ணன்.





புதிய முயற்சியில் இறங்கும் போது அதற்கு உதவுபவர் களை அதிகமாக நம்புவதும் தவறு. அதிகமாகச் சந்தேகப் படுவதும் தவறு – மூர்க்கன்




மலைக் குகையில் அடைக்கப்பட்டதும் சற்றே அசதியுற்ற விகர்ணன் "இதை நான் எதிர்பார்க்கவில்லை" என்றான்.

உதயணனோ அசதியோ அதிர்ச்சியோ அடையாமல் "நாம் இங்கு வந்தது இக்கொள்ளைக் கூட்டத்துடன் சேர்ந்து கொள்வதற்காகத்தான். அநேகமாக அது நடந்து விடும்" என்றான்.

"என்ன சொல்கிறீர்கள் நீங்கள்? என்னிடம் அப்படிச் சொல்ல வில்லையே?"

"விகர்ணரே! சில விஷயங்களைச் சொல்ல வேண்டிய நேரத்தில் சொன்னால் போதும். நாம் இங்கே வந்தது தங்கம் இருக்கும் இடத்தைக் கண்டு பிடித்து கைப்பற்றுவதற்காக. அதே வேலைக்காக கொள்ளைக்கார கும்பலொன்று இங்கே பல மாதங்களாக முகாமிட்டிருப்பது தெரியும். அவர்கள் அறியாமல் நாம் இந்த வேலையில் இறங்க முடியாது. அவர்களோடு சேர்ந்தால் தான் நம்மால் எதுவும் செய்ய முடியும். அவர்களோடு சேர்ந்து காரியத்தில் இறங்கும் தீர்மானத்துடன் தான் துவார சமுத்திரத்திலிருந்து புறப்பட்டேன். இதை நான் சேனாதிபதியார் பகாசூரரிடம் கூடச் சொல்லவில்லை."

"சொல்லாதது சரி. இந்தக் கொள்ளைக்காரர்களோடு சேர்ந்து கொண்டால் தங்கத்தை நாம் எப்படிக் கவரமுடியும்? அவர்கள் அல்லவா கவர்ந்து சென்று விடுவார்கள்?"

"ஏமாறுவதற்காக நாமிங்கு வரவில்லை. அவர்களோடு சேருவது நம் முதல் படி. மற்றவற்றைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம்."

"கொள்ளையர்கள் நம்மை இங்கே அடைத்து விட்டார்களே! என்ன செய்வது?"

"நம்மை வரவேற்று உபசரிப்பதற்கு நாம் அவர்களின் கூட்டாளிகளோ உறவினர்களோ அல்ல. நான் எதிர்பார்த்தபடி தான் நடந்திருக்கிறது" என்றான் உதயணன்.

விகர்ணன் எதுவும் பேசவில்லை.



இதே நேரத்தில் பரிகாரம் செய்யும் படிச் சொன்ன பிரசன்ன அந்தணரை ஏதேதோ கேட்டு மிரட்டிப் பார்த்தான் மூர்க்கன்.

அவர் எல்லாவற்றையும் தெரிந்து கொண்டு எதையும் சொல்லாமல் மறைக்கிறார் என்பது அவனது சந்தேகம்.

அந்தணரோ ஏற்கனவே சொன்னபடி "நான் மரணத்திற்காகப் பயந்தவனல்ல. உண்மையைத்தான் சொல்கிறேன். உனக்குச் சந்தேகமிருந்தால் என்னைக் கொன்று விடு. அவ்வளவுதான் என்னால் சொல்ல முடியும்" என்றார்.

"தலைவரே! நமக்குத் திசை தெரியாமல் தவித்துக் கொண் டிருக்கும் போது வழி சொல்பவர்களை நம்ப வேண்டுமே தவிர சந்தேகப்படக் கூடாது. இக்கெட்டான சமயங்களில் நம்பிக்கைதான் கை கொடுக்குமே தவிர சந்தேகம் கைகொடுக்காது" என்றான் உபதலைவன் மூக்கன்.

"பரிகாரம் என்ன என்பதை அறிந்து கொள்ளலாம். அதுவரை இந்தக் கிழவனை மறைவிடத்தில் அடைத்து வை."

"அப்படியெல்லாம் செய்யாதே. அது பாவம். அந்தணனை நம்பு. வம்பை விலைக்கு வாங்காதே. பரிகாரம் செய்ய முயல் பவர்கள் பாவங்களை விலக்கி வைக்க வேண்டும்" என்றார் அந்தணர்.

கொள்ளைக்காரனான மூர்க்கனுக்கோ பாவ புண்ணியங்களைப் பற்றிய கவலையில்லாததால் அவரை ஓரிடத்தில் அடைத்து வைக்க உத்தரவிட்டான்.

அதற்குப் பிறகு மூக்கனிடம் "பிடாரி கோயிலுக்கு யாரை அனுப்பலாம்?" என்று கேட்டான் மூர்க்கன்.

"குரங்கனை அனுப்பலாம்."

"வேண்டாம். செயலை விட சேட்டைகளே அவனுக்கு அதிகம். கோட்டானை அனுப்பலாம்" என்றான் மூர்க்கன்.

"நான் வேண்டாம் ஐயா. என்னை விட்டு விடுங்கள். வேறு யாரையாவது அனுப்புங்கள்" என்றான் கோட்டான்.

அவனைப் பளாரென்று அறைந்த தலைவன் எனக்கு யோசனை சொல்கிறாயா நீ? மூடனே! நீ தான் போக வேண்டும். அந்தணனைப் போல ஒப்பனை செய்து கொள். பற்களையெல்லாம் நன்றாகத் துலக்கு" என்று ஆணையிட்டான்.

பிடாரி கோயிலில் யாரைச் சந்திக்க வேண்டும் என்ன பேச வேண்டும் என்ற விவரம் கூறப்பட்டு அவன் அனுப்பி வைக்கப் பட்டான்.

அந்தணன் வேடம் கோட்டானுக்கு ஓரளவிற்குப் பொருத்தமாக இருந்தது. அவனது தோல் சற்று வெளுப்பாக இருந்ததால் அந்த வேடத்தைப் போடச் சொல்லியிருந்தான் தலைவன். அக் கோலத்தில் போனால் யாரும் சந்தேகிக்க மாட்டார்கள் என்பதும் அவனது தீர்மானமாக இருந்தது.

கொள்ளைக்காரனான கோட்டான் நந்தி துர்க்கத்திலிருந்து மாலை நேரத்தில் குவலால புரத்திற்குச் சென்றான். நடந்தே சென்றதால் பிடாரி கோயிலுக்குச் செல்லும் போது நன்றாக இருட்டியிருந்தது.

பிடாரி கோயில் தனித்திருந்ததாலும் இடிந்து போயிருந்த தாலும் இரவு நேரத்தில் அது கரிய பூதம் போல் காட்சியளித்தது. மனித நடமாட்டம் அறவே இல்லை. கொள்ளைக்காரனுக்கு இருட்டு பழகியிருந்தபடியால் பார்வையைக் கூராக்கிக் கொண்டு பிடாரி கோயிலுக்குச் சென்றான்.

வரக் கூடாதவன் வந்ததாலோ அல்லது வரக் கூடியவர்கள் நீண்ட காலமாக வராமல் இருந்ததாலோ என்னவோ அவன் உள்ளே நுழைந்த போது அவன் மீது நரியொன்று பாய்ந்து விழுந்து ஓடியது. வராதே என்று எச்சரிப்பது போல் ஆந்தைகள் இரண்டு ‘கிறீச்’ சென்று கத்தி விட்டு அவனது நடமாட்டத்தைத் தீவிரமாக கவனித்தன.

“பிடாரி! பிடாரி!” என்று குரல் கொடுத்தான் கோட்டான்.

ஆந்தைகள்தான் அவனுக்குப் பதில் சொல்வது போல இரைந்து அடங்கின.

கோயிலுக்குள் பிடாரி இருப்பதாகத் தெரியவில்லை. கோயிலுக்கு உரிய பிடாரியம்மன் சிலையும் இருப்பதாகத் தெரியவில்லை.

கைவசம் இருந்தச் சிக்கி முக்கிக் கற்களை உரசி கீழே கிடந்த குச்சிகளைப் பற்ற வைத்தான் கோட்டான்.

பிறகு அந்த நெருப்பில் பெரியதோர் கட்டையைக் கொளுத்திக் கொண்டு கருவறைக்குச் சென்றான்.

பக்கத்தில் எங்கோ இருந்த நரியொன்று ஊளையிட்டது.

ஆந்தையொன்று அவனது தலையை உரசியது.

உள்ளே கருவறையில் கற்சிலையொன்று விழுந்து கிடந்தது. அதன் மேலே பாம்பு ஒன்று சுற்றிக் கொண்டிருந்தது. அவனைப் பார்த்ததும் சீறி விட்டுச் சிலையை விட்டு நகர்ந்தது.

பாம்பிருந்த இடத்தில் ஆந்தை சென்று அமர்ந்து அவனை முறைத்தது.

"பிடாரி! பிடாரி!" என்று மீண்டும் குரல் கொடுத்தான் கோட்டான்.

அச்சமயத்தில் கட்டையில் இருந்த நெருப்பு அணைந்து போய் புகைந்தது.

"ம். ம். ம்" என்று பெருமூச்செறிவது போன்ற சத்தம் ஒன்று அவனுக்குப் பின்னால் கேட்டது.

ஏதோ ஆவி பேசுவது போல இருந்தது கோட்டானுக்கு.

சற்றே பயந்து போன அவன் திரும்பினான்.

அங்கே ஏதோ ஓர் உருவம் கலைந்தாற் போல் காணப்பட்டது.

"ஐயோ" அலறினான் கோட்டான்.

அவன் வாயிலிருந்து ரத்தம் கொட்டியது.

கீழே விழுந்தான்.

உடைந்து கிடந்த தூணின் கூரான பகுதி மீது விழுந்ததால் மண்டை பிளந்தது.

இறந்து போனான்.

கோட்டான் இறந்து போனதை இரண்டாம் நாள் காலை அங்கே வந்த மூக்கன் அறிந்தான்.

அதற்குள் நரிகள் அவனது உடலில் பாதியைக் கடித்துக் குதறியிருந்தன.

ஏராளமான நண்டுகள் அவனது உடல் மீது ஊர்ந்து கொண்டிருந்தன.

கோயிலில் பிடாரி என்று யாரும் இல்லாததையும் உறுதி செய்து கொண்டு நந்தி துர்க்கத்திற்குத் திரும்பினான் மூக்கன்.

"கோட்டான் செத்தது பற்றி எனக்குக் கவலையில்லை. ஆனால் பிடாரிக் கோயிலில் பரிகாரம் சொல்பவன் இல்லாததுதான் கவலையாக இருக்கிறது. நம்மையெல்லாம் ஏமாற்றி விட்டான் பிரசன்னம் சொன்ன அந்தணன். அந்தக் கிழவனை இழுத்து வாருங்கள்" என்று உறுமினான் தலைவனான மூர்க்கன்.

பணியாளர்கள் சென்று பார்த்தபோது அந்தணர் இறந்து கிடந்தார்.

“தலைவரே! தன்னை அடைத்திருக்க வேண்டாம் என்று சொன்னார் அந்தணர். நீங்கள் கேட்கவில்லை. அதன் விளைவு தான் அவரும் இறந்து விட்டார். கோட்டானும் இறந்து விட்டான்” என்றான் மூக்கன்.

மூர்க்கனோ அதை ஒப்புக் கொள்ளவில்லை.

“நம் போன்ற கொள்ளைக்காரர்களுக்கு மூடநம்பிக்கை உதவாது. நெறிகளையும், சட்டங்களையும், கட்டுப்பாடுகளையும் காலால் மிதித்து விட்டுக் கொடூரமான காரியங்களைச் செய்யும் கொள்ளைக்காரர்களுக்கும் கொலைகாரர்களுக்கும் சகுனங்களோ மூடநம்பிக்கைகளோ கிடையாது. அந்தணன் நம்மை ஏமாற்றி விட்டது தான் உண்மை” என்று உறுதியான குரலில் சொன்ன மூர்க்கன் “கோட்டான் எப்படி இறந்தான்?” என்று கேட்டான்.

“இருட்டில் கால் தடுமாறி விழுந்திருக்கிறான். கூரான கருங்கல் முனையில் விழுந்ததால் மண்டை உடைந்து விட்டது. இறந்து விட்டான்” என்றான் மூக்கன்.

“இருட்டில் வெளிச்சத்தை உண்டாக்கிக் கொண்டு செல்ல அவனுக்குத் தெரியாதா என்ன? எனக்கென்னவோ சந்தேகமாக இருக்கிறது. பிடாரி கோயிலில் இருந்து கொண்டு யாரோ அவனைத் தாக்கி வீழ்த்தியிருக்க வேண்டும். அந்தக் கோயிலை நம்மில் நால்வர் நான்கு நாட்களுக்கு கண்காணிக்கட்டும்” என்று உத்தரவிட்ட மூர்க்கன் “அந்த இரண்டு அயலவர்களை மலைக் குகையில் அடைத்து வைக்கச் சொன்னேனே, அந்த மடையர்களை இழுத்து வாருங்கள்” என்றான்.

பணியாளர்கள் போனபோது மலைக்குகையில் உதயணனும் விகர்ணனும் காணப்படவில்லை.

“என்ன, காணவில்லையா? மறைவதற்கு அவர்களென்ன மாயாவிகளா? தேடுங்கள்” என்று கடுகடுத்தான் கொள்ளையர் தலைவன்.

பணியாளர்கள் அதிகமாகச் சிரமப்படாத விதத்தில் அவ்விருவரும் நந்தி துர்க்கத்திலேயே பாலாறு உற்பத்தியாகும் ஆதித்துறையில் காணப்பட்டார்கள்.

பணியாளர்களைக் கண்டதும் “என்ன? தலைவன் தேடுகிறானா எங்களை?” என்று கேட்ட உதயணன் “நீங்கள் செல்லுங்கள். நாங்கள் இன்னும் ஒரு நாழிகைக்குள் வருகிறோம்” என்றார்கள்.

பணியாளர்கள் சென்று இதைச் சொன்னதும் கோபத்திற்கு ஆளான மூர்க்கன் “அவர்களை ஏன் விட்டீர்கள்? கைகால்களைக் கட்டிக் கொண்டு வருவதற்கென்ன?” என்று கேட்டான்.

இதற்கிடையில் உதயணனும் விகர்ணனும் அங்கு வந்து சேர்ந்தார்கள்.

அவர்கள் இடையில் பட்டாக்கத்தி ஒன்று பளபளப்பாகத் தொங்கியது. அதோடு குறுவாட்களையும் செருகியிருந்தார்கள். கழுத்தில் குறுவாள் மாலை ஒன்றும் இருந்தது.

அவர்களைக் கண்டதும் மூர்க்கன் தனது வாளைத் தொட்டான். அந்த கணத்திலேயே உதயணனின் குறுவாள் அவனது கையை உரசிக் கொண்டு விழுந்ததது.

உதயணன் குறுவாளை எப்போது எடுத்தான் எவ்வாறு வீசினான் என்பதை யாரும் பார்க்கவில்லை.

மூர்க்கன் அசந்து போனான். இமைக்கும் நேரத்திற்குள் குறு வாளை எய்யக் கூடிய மனிதனை அவன் கண்டதில்லை. வாளை நோக்கிச் சென்ற தன் கையை விலக்கிக் கொண்டு “இரண்டு பேரும் மலைக்குகையிலிருந்து எப்படித் தப்பினீர்கள்?” என்று கேட்டான்.

“சிறைப்பட்ட இடத்திலிருந்து தப்புவது கொள்ளையர் இயல்பு. அதோடு இஷ்ட விரோதமாக எங்களை யாரும் சிறை வைக்க முடியாது. எங்களை எதற்காகச் சிறைப்படுத்தினாய்?” என்று கேட்டான் உதயணன்.

“நீ கொள்ளையனா? பார்த்தால் தெரியவில்லை?” என்றான் மூர்க்கன்.

“அதனால்தான் எங்களால் எளிதில் கொள்ளையடிக்க முடிகிறது. உங்களைப் போல பயங்கரத் தோற்றத்துடன் இருந்தால் ஊரில் நடமாட முடியாது. அது கிடக்கட்டும். எங்களை எதற்காகச் சிறை செய்தாய்?”

“உன்னிடம் அதைச் சொல்ல வேண்டியதில்லை.”

“நீ சொல்ல வேண்டாம். நானே சொல்கிறேன். நீ நந்தி துர்க்கத்திற்கு வந்திருப்பதே குவலால புரத்தில் இருக்கும் தங்கத்தைக் கவர்வதற்காகத்தான். அது இருக்கும் இடம் உங்களுக்குத் தெரியாது. இருக்கும் இடத்தைக் காட்டுவதாகச் சொல்லி இங்கே வரும் பலரும் பொய்களையே சொல்கிறார்கள். எங்களையும் பொய்யர்களாக நினைத்துச் சிறையில் அடைத்தாய்.”

“அப்படியானால் தங்கம் இருக்கும் இடத்தைச் சொல்வதற் காகத்தான் நீங்களும் வந்தீர்களா?”

"அந்த எண்ணத்தில்தான் வந்தேன். ஆனால் நீ கொடுத்த வரவேற்பை பார்த்தபின் எண்ணத்தை மாற்றிக் கொண்டேன்."

"அதாவது தங்கம் இருக்கும் இடத்தை நீ சொல்ல மாட்டாய். இல்லையா? நீ அதைச் சொல்லாவிட்டால் இங்கிருந்து தப்ப முடியாது."

"மலைக் குகையிலிருந்து நாங்கள் தப்பியிருக்கிறோம். எப்படி என்று கேட்கவில்லையே நீ?"

"ஆமாம். ஆமாம். எப்படித் தப்பினாய்?"

"மூர்க்கா! இந்த நந்தி துர்க்கத்திற்கு நீ புதியவன். உங்களைச் சேர்ந்த எல்லோரும் புதியவர்கள். ஆனால் நான் அப்படியல்ல. எங்களுக்கு நந்தி துர்க்கமும் குவலாலபுரமும் அத்துப்படி. இங்கே எங்களுக்குத் தெரியாத இடம் எதுவும் இல்லை. மலைக் குகையின் இருப்பிடம் பற்றி எங்களுக்குத் தெரியும். அதில் உள்ள பாறைகளில் எதை நகர்த்தினால் வழி தெரியும் என்பது தெரியும். நகர்த்த வேண்டிய பாறையை நகர்த்தினோம். தப்பினோம். நான் குறுவாள் எரிந்ததையும் கண்டிருப்பாய். எங்களை ஏமாளிகள் என்று நினைத்திருந்தால் அந்த நினைப்பை உடனடியாக விட்டு விடு. இங்கிருந்து எங்களால் தப்ப முடியாது என்ற தவறான கணக்கையும் போடாதே. முறையாக நடந்து கொண்டு சரியாகப் பேசினால் நாம் இருவருமாகத் தங்கத்தை எடுப்போம். இல்லையென்றால் இந்த ஜென்மத்தில் உங்களால் தங்கத்தை எடுக்க முடியாது" என்றான் உதயணன்.

உதயணன் பேச்சைக் கேட்ட பிறகு அதை முழுமையாக நம்ப முடியாவிட்டாலும் மூடர்க்களால் ஒதுக்கித் தள்ள முடியவில்லை.

"உங்கள் பெயர் என்ன?" என்று கேட்டான்.

"நான் உதயணன். இவர் விகர்ணன்."

"உங்கள் ஊர்?"

"கொள்ளைக்காரர்களுக்குச் சொந்த ஊர் கிடையாது"

"தங்கம் இருப்பிடம் உங்களுக்குத் தெரியுமா?"

"கண்டு பிடித்து விடலாம்."

"அப்படியானால் தெரியாதா?"

"கண்டு பிடித்து விடலாம் என்றேன்."

"எப்படி?"

"அதற்கு உபகரணங்கள் இருக்கின்றன. அவற்றைக் கொண்டு கண்டு பிடித்து விடலாம்."

“என்ன உபகரணங்கள்?”

“அதைத் தெரிந்து கொள்வதற்கு முன் நாம் நண்பர்களா விரோதிகளா என்பது தெரிய வேண்டும். அது உறுதி செய்து கொள்ளப்பட வேண்டும். நமக்குள் பரஸ்பர நம்பிக்கை வர வேண்டும். நமக்குள் உள் குத்து இருக்கக் கூடாது. கிடைக்கும் தங்கத்தில் நாம் சரி பாதியாகப் பங்கிட்டுக் கொள்ள வேண்டும்.”

மூர்க்கன் சற்று யோசித்தான்.

பிறகு “நாளை நாம் சந்திப்போம். நல்ல முடிவுக்கு வருவோம். அது வரை நீங்கள் என் விருந்தாளிகளாகத் தங்குங்கள்” என்றான்.

“நமக்குள்ளான உறவு உறுதிச் செய்யும் வரை நாங்கள் உன் இருப்பிடத்தில் தங்க முடியாது. நந்தி துர்க்கத்திலேயே இருக்கிறோம். நாளைக்கு இதே நேரத்தில் வருகிறோம்” என்று கூறி விட்டு யாரையும் பொருட்படுத்தாமல் விகர்ணனுடன் வெளியேறினான் உதயணன்.

விகர்ணனிடம் சில விவரங்களைச் சொல்லி அனுப்பி வைக்க முற்பட்ட போது -

“கொள்ளையர்களுக்கு இடையில் நீங்கள் தனியாக இருப்பது ஆபத்தல்லவா?” என்று கேட்டான் விகர்ணன்.

“அவர்களுக்கு ஆசை மூட்டியிருக்கிறேன். இப்போதைக்கு எனக்கு ஆபத்தில்லை. நீங்கள் கவலைப்படாமல் போய் வாருங்கள்” என்றான் உதயணன்.



மூர்க்கன் தனது சக கொள்ளையர்களிடம் ஆலோசனை செய்தான்.

“பிடாரி கோயில் துர்ச்சம்பவத்திற்கு பிறகு யாரை நம்புவது என்று தெரியவில்லை. அவர்கள் இருவரும் நம்மைச் சேர்ந்த வர்களாக இருப்பார்கள் போலிருக்கிறது. அவர்களை நம்பி ஏமாற வேண்டாம்” என்றார்கள் சிலர்.

“நாம் இங்கே வந்து ஆறு மாதங்கள் ஆகியும் தங்கம் எங்கே கிடைக்கும் என்பது தெரியவில்லை. நீங்கள் வேறு எங்களில் தினமும் ஒருவரைக் கொல்லப் போவதாகச் சொல்கிறீர்கள். இப்படிப்பட்டச் சூழ்நிலையில் தங்கம் இருக்கும் இடத்தைக் கண்டு பிடித்து விடலாம் என்கிறான் உதயணன். பார்த்தால் துடிப்புள்ளவனாகவும் தெரிகிறான். இது நமக்கு நல்ல சந்தர்[illegible] பயன்படுத்திக் கொள்வது நல்லது” என்றார்கள் சிலர்.

ஒரு சிலர் விரக்தியடைந்து "தங்கத்திற்காக அலைந்து திரிந்து வீணாவதை விட கடலுக்கே திரும்பிவிடலாம்" என்றார்கள்.

"கடலில் சோழர்களின் ஆதிக்கம் மிகுந்து விட்டது. முன்பு போல கடல் கொள்ளைகளை எளிதாக நடத்த முடியாது" என்றார்கள் சிலர்.

உபதலைவன் மூக்கனைத் தவிர மற்றவர்களை அனுப்பி வைத்த கொள்ளையர் தலைவன் "நீ என்ன சொல்கிறாய் மூக்கா?" என்று கேட்டான்.

"நாங்களெல்லாம் என்ன சொன்னாலும் பயனில்லை தலைவரே. யார் எது சொன்னாலும் நீங்கள் உங்கள் ஆசை நாயகியின் யோசனையைத்தான் கேட்பீர்கள். அவளையே கேட்டு முடிவு செய்யுங்கள்" என்றான் மூக்கன்.

"உன் கருத்தைத்தான் சொல்லேன்" என்றான் மூர்க்கன்.

"திடீரென முளைத்த இருவரை நம்புவது எனக்குச் சரியானதாகப் படவில்லை தலைவரே."

"புதிய முயற்சியில் இறங்கும் போது அதற்கு உதவுபவர்களை அதிகமாக நம்புவதும் தவறு. அதிகமாகச் சந்தேகிப்பதும் தவறு. எந்த அளவிற்கு நம்ப வேண்டுமோ அந்த அளவிற்கு நம்பி எந்த அளவிற்குச் சந்தேகிக்க வேண்டுமோ அந்த அளவிற்குச் சந்தேகித்து காரியம் ஆற்றுவதுதான் சரி" என்றான் மூர்க்கன்.

"நீங்கள் தான் முடிவு செய்ய வேண்டும்" என்றான் மூக்கன்.

அதற்குப் பிறகு வழக்கம் போல ஆசை நாயகியிடம் யோசனையைக் கேட்டான் தலைவன்.

"கரையிலேயே நின்று கொண்டிருந்தால் கடலைத் தாண்ட முடியாது. கடலில் பயணம் செய்ய வேண்டும். தயங்கிக் கொண்டும், தாமதித்துக் கொண்டும், சந்தேகித்துக் கொண்டும் இருந்தால் ஒரு காரியமும் ஆகாது. என்னை எப்படி வளைத்தீர்கள்? அப்படித்தான் இதுவும்" என்றாள் ஆசை நாயகி.

மறுநாள் உதயணனிடம் "நாம் நண்பர்கள்" என்றான் கொள்ளையர் தலைவன்.

அதையடுத்து உதயணன் தெரிவித்த தகவல்கள் தலைவனை அசர வைத்து விட்டன.

உதயணனைக் கட்டித் தழுவவும் செய்தான்.





நாம் கேள்விப்படாத விஷயங் களும் காணப்படாத விஷயங் களும் நேரில் பிரத்யட்சமாகக் காணும் போது விசித்திரமாகவே இருக்கும். எதுவாக இருந்தாலும் அது உண்மையானது என்பது தான் உண்மை – உதயணன்




தன் யோசனையை ஆசைநாயகி கூறிய போது சற்று தயங்கினான் கொள்ளையர் தலைவனான மூர்க்கன்.

"என்ன? எதற்குத் தயங்குகிறீர்கள்?" என்று கேட்டாள் ஆசை நாயகி.

"ஒன்றுமில்லை" என்று மழுப்பினான் தலைவன்.

"என்னிடம் தயங்காமல் சொல்லுங்கள். என்னிடம் சொல்லாமல் யாரிடம் சொல்லப் போகிறீர்கள்?" என்றாள் ஆசைநாயகி.

நான் இருப்பது உன் அறை. கீழே விழுந்தால் அடிபடாது. உதயணனின் திட்டம் என்பது மலை. அதிலிருந்து விழுந்தால் சாவு தான்" என்றான் மூர்க்கன்.

"இது வெறும் நினைப்பு. வெறும் பிரமை. நமக்குத் தேவை தங்கம் எங்கே கிடைக்கிறது என்பது தான். அதற்கு உதயணன் தேவை. கிடைக்குமிடம் தெரிந்து விட்ட பின் அவனை உயிரோடு விட வேண்டாம். கொன்று விடுங்கள்" என்றாள் ஆசைநாயகி.

"ஆம். அது தான் சரி" என்று சொன்ன மூர்க்கன் மறுநாள் உதயணன் வந்த போது மகிழ்ச்சியோடு வரவேற்று விட்டு "விகர்ணன் எங்கே?" என்று கேட்டான்.

"உபகரணங்களைத் தயாரிக்கப் போயிருக்கிறார்" என்றான் உதயணன்.

"நாங்கள் ஆலோசித்து விட்டோம். இன்று முதல் நாம் நண்பர்கள்" என்றான் மூர்க்கன்.

"நான் இங்கே வந்ததற்குக் காரணம் நாம் செய்யப் போவது மகத்தான பணி. ஆபத்தான பணி. அதை எங்கள் இருவரால் செய்ய முடியாது. உங்கள் உதவியும் இருந்தால்தான் சிறப்பாகச் செய்ய முடியும். எங்கள் உதவியில்லாமல் நீங்களும் உங்கள்

உதவியில்லாமல் நானும் தங்கத்தைக் கவர முடியாது. அதனால் தான் இந்த கூட்டணி. அதனால் தான் சமபங்கு. இதற்கு நாம் நம்பிக்கைக்குரிய நண்பர்களாக இருந்தால்தான் வெற்றி பெறமுடியும்'' என்றான் உதயணன்.

"தங்கம் இருக்கும் இடம் மட்டும் தெரியட்டும். உன் அங்கங்கள் ஒவ்வொன்றையும் தனித்தனியாக வெட்டி நந்தி துர்க்கம் முழுவதும் தூவுகிறேன்'' என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்ட மூர்க்கன் "ஆமாம் ஆமாம். நீங்கள் சொல்வது சரி'' என்றான் மரியாதையுடன்.

உதயணன் சாதாரணமாகவே பேச்சைத் தொடர்ந்து "என்னிடமுள்ள உபகரணங்கள் மூலம் தங்கம் இருக்கும் இடம் தெரியும். அதாவது தங்கத் துகள்கள் கண்ணில் படும். அது தான் அடையாளம். அதே சமயம் அங்கே அரையடித் தோண்டி விட்டுத் தங்கம் கிடைக்கவில்லையே என்று கூறிவிடக் கூடாது. தங்கப் படிமங்கள் மிகவும் ஆழத்தில் பாளம் பாளமாக இருக்கும். இருபது அடியிலிருந்து இருநூறு அடிவரைக் கூடத் தோண்டும் படியிருக்கும். குழியானது சவக்குழி போல இருக்கக் கூடாது. குளத்திற்கு உரிய குழியாக இருக்க வேண்டும். அவ்வாறு தோண்டினால்தான் தங்கப் படிமங்களைக் காணலாம்'' என்றான்.

"அவ்வளவு பெரிய குழியை ரகசியமாக எப்படித் தோண்டுவது?'' என்று கேட்டான் மூர்க்கன்.

"ரகசியமாக நாம் தோண்ட வேண்டியதில்லை. பகிரங்கமாகவே தோண்டலாம்.''

"அது எப்படி?''

"நந்தி துர்க்கத்திலிருந்து புறப்படும் பாலாறு விஜயாதித்த ஏரியில் வந்து சேர்ந்து அங்கிருந்து நாமசாகரம் ஏரி வழியாக தமிழகத்தை நோக்கிச் செல்கின்றன. அவை இரண்டும் பழமையானவை. பலமில்லாதவை. மலையில் அளவுக்கு அதிகமாக மழை பெய்து வெள்ளம் வந்தால் அந்த ஏரிகளில் வெடிப்பு ஏற்படக் கூடும். ஆகவே புதிய ஏரி ஒன்றை நிர்மாணிப்பதாகச் சொல்லி ஏரி அளவிற்கு நிலத்தை வெட்டி நாடகமாடுவோம். அந்தப் பரப்பில் தங்கம் இருக்கும் பகுதியில் மறைவை அமைத்துக் கொண்டு அதற்குள் நாம் தங்குவது போல் சொல்லிக் கொள்வோம். சொல்லிக் கொண்டு நாம் தோண்டுவோம்.''

உதயணன் இவ்வாறு சொன்னதும் சற்று யோசித்த மூர்க்கன் "இது மிகவும் ஆபத்தான திட்டமாக இருக்கிறது. வேறு திட்டம் இருந்தால் சொல்லுங்கள்'' என்றான்.

"நாம் இறங்கப் போகும் செயலானது நகரத்திற்குள் புகுந்து கண்மூடித் தனமாக கொள்ளையடிப்பதைப் போன்றது அல்ல. பூமிக்குள் இருந்து தோண்டி எடுக்க வேண்டும். அதற்கு இந்த திட்டம் தான் ஏற்றது" என்றான் உதயணன்.

"நீங்கள் தங்கும் இருக்கும் இடத்தைக் காட்டுங்கள். தோண்டும் வேலையை நாங்கள் பார்த்துக் கொள்கிறோம்" என்றான் உபதலைவன்.

"என்னை என்ன முட்டாள் என்று நினைத்துக் கொண்டிருக் கிறீர்களா? தங்கம் இருக்கும் இடத்தைக் காட்டி விட்டுச் செல்வதென்றால் உங்களிடம் எதற்காக வரவேண்டும்? கூட்டு முயற்சியும் சாமர்த்தியமும் இருந்தால் தான் இக்காரியத்தைச் செய்ய முடியும். தற்போது இப்பகுதியில் தீவிர மழை ஆரம்பிக்க வில்லை. ஆகவே ஏரி அமைப்பதற்கு இது ஏற்புடைய காலம்" என்றான் உதயணன்.

"குளம் வெட்டுவதும், ஏரி வெட்டுவதும் அரசாங்கத்தின் காரியம். நாம் எப்படிச் செய்ய முடியும்?" என்றான் மூக்கன்.

"அரசாங்கத்தின் வேலை தான் என்றாலும் அரசாங்கத்திற்கு வருவாய் குறைவு என்றால் இது போன்ற காரியங்களைச் செய்ய முடியாது. அதோடு இந்தப் பகுதி ஹொய்சளர் ஆதிக்கத்திற்கு வந்து கொஞ்சகாலமே ஆகிறது. அவர்களால் இந்தப் பணிகளைச் செய்ய முடியாது. மக்களும் தனவந்தர்களுமாகச் சேர்ந்துதான் இப்பணியைச் செய்ய முடியும். இப்பகுதியை ஆளும் ஹொய்சளப் பிரதிநிதி பணத்தாசை பிடித்தவன். அவனுக்குக் கணிசமான கையூட்டு கொடுத்து விட்டால் கண்டு கொள்ளமாட்டான். நாம் நம் காரியத்தைச் செய்யலாம்."

"என் முடிவை நாளைக்குச் சொல்கிறேன் என்றான் மூர்க்கன்.

"மூர்க்கா! நாம் நண்பர்களாகி விட்டதாகச் சொல்லி விட்டு உங்களுக்குள் ஆலோசனை செய்வது சரியல்ல. எந்த ஆலோசனையானாலும் நாம் இருவருமாகச் சேர்ந்து தான் செய்ய வேண்டும்" என்றான் உதயணன் சற்று கோபத்துடன்.

"நான் ஆலோசனை கேட்பதற்காக தள்ளிப் போடவில்லை. நானாக யோசிப்பதற்காகத்தான் ஒரு நாள் அவகாசம் கேட்டேன்" என்றான் மூர்க்கன்.

"ஏற்கனவே அளவுக்கு அதிகமாகத் தாமதித்து விட்டீர்கள். மீண்டும் மீண்டும் தாமதம் செய்வதென்றால் நான் விலகிக் கொள்ள வேண்டி வரும். நாளை நாம் ஒரு முடிவுக்கு வந்தாக வேண்டும்."

“ஆகட்டும்” என்றான் மூர்க்கன்.



“அவனை நம்பவே நம்பாதீர்கள் தலைவரே. அவன் நம்மைக் காட்டிக் கொடுக்கவே முயல்கிறான். அதோடு...” என்று இழுத்தான் மூக்கன்.

“போதும்” என்று சொல்லி அவனோடு பேசுவதை நிறுத்திக் கொண்ட கொள்ளையர் தலைவன் தன் ஆசை நாயகியைச் சந்தித்தான்.

“நாளைக்கு அவனோடு பேசும் போது என்னையும் வைத்துக் கொள்ளுங்கள்” என்றாள் ஆசை நாயகி.

“சரி” என்றான் மூர்க்கன்.



மறுநாள் கொள்ளையர் தலைவனுக்குப் பக்கத்தில் அழகான பெண்ணொருத்தி அமைந்திருப்பதைக் கண்ட உதயணன் அமாவாசையும் பௌர்ணமியும் ஒரு சேர அமர்ந்து கொண்டிருப்பதாக நினைத்தான்.

ஒரு கண்ணை இழந்து பேயைப் போலக் காட்சியளிக்கும் மூர்க்கனை எப்படி இந்தப் பெண் விரும்பமுடியும் என்று தனக்குள் கேட்டுக் கொண்ட உதயணன் “அதைப் பற்றி நமக்கென்ன?” என்று நினைத்துக் கொண்டு “மூர்க்கா! இந்தப் பெண்மணி யார்?” என்று கேட்டான்.

“யாராயிருந்தால் உங்களுக்கென்ன?” என்று கேட்டான் மூர்க்கன்.

“நாம் பேசப் போவது ரகசியமான திட்டம். அதைப் புதியவர்கள் மத்தியில் பேச முடியாது. அதனால் தான் கேட்கிறேன்.”

“இவள் எங்கள் தலைவி” என்றான் மூக்கன்.

“நேற்று வரை இங்கே வரவில்லையே!”

“எப்போது வரவேண்டும் என்பதை தலைவிதான் முடிவு செய்வார்.”

“முடிவு செய்யட்டும். ஆனால் தலைவி ஒருத்தி இருப்பதை இதுவரை நீங்கள் யாரும் சொல்லவில்லையே!”

“சொல்ல வேண்டிய அவசியம் இல்லை”

“தலைவியைத் தவிர வேறு யாராவது இருக்கிறார்களா?”

"சொல்ல முடியாது"

"அப்படியென்றால் நானும் உங்களுடன் பேசமுடியாது" என்று சொல்லி குறுவாட்களின் மீது கையை வைத்தான் உதயணன்.

ஆசை நாயகி குறுக்கிட்டு "இங்கே என்னைத் தவிர வேறு தலைவியோ ஆலோசகியோ இல்லை. நான் வரவிரும்பியதால் இன்றைக்கு வந்தேன். மற்றபடி ஆலோசனைகளில் கலந்து கொள்வதில்லை" என்று உதயணனைப் பார்த்துச் சொன்னவள் "மூக்கா! நீ அனாவசியமாகப் பேசுகிறாய். தேவையில்லாத வற்றைப் பேசுகிறாய். சண்டைக்காரனைப் போலப் பேசுகிறாய். தலைவரே மௌனமாக இருக்கும் போது நீ எதற்காக அலட்டிக் கொள்கிறாய்?" என்று கேட்டாள்.

மூக்கன் கோபமடைந்து "என்னைக் கண்டிக்கும் உரிமை உனக்கில்லை. நீ ஒரு ..." என்று பேசியபோது கொள்ளையர் தலைவன் குறுக்கிட்டு "முட்டாளே! என்ன பேசுகிறாய்? உபதலைவன் என்பதால் உயிரோடு விடுகிறேன். இனி நீ வாயைத் திறந்தால் என் வாள் புகுந்து விடும்" என்று எச்சரித்தான்.

இந்தச் சண்டையின் மூலம் அந்தப் பெண்மணி தலைவி அல்ல என்பதைப் புரிந்து கொண்டான் உதயணன்.

"என்ன முடிவு எடுத்தாய் மூர்க்கா?" என்று கேட்டான்.

"அடிக்கடி ஆலோசனை செய்தாலும் உருப்படியான விதத்தில்தான் முடிவெடுக்கிறோம். நாங்கள் ஏற்கனவே சொன்னபடி நண்பர்கள்தான். உங்கள் யோசனையை ஒப்புக் கொள்கிறோம்" என்றான் மூர்க்கன்.

"இந்தப் பகுதியின் ஹொய்சள பிரதிநிதியை பேச்சு வார்த்தைக்கு நீங்கள் தான் அழைத்து வரவேண்டும்" என்றாள் ஆசை நாயகி.

"உங்களையெல்லோரையும் போல நானும் ஒரு கொள்ளைக் காரன் தான். என்னால் எப்படி அணுக முடியும்? அழைத்து வர முடியும்?" என்று கேட்டான் உதயணன்.

"நாங்கள் இந்தப் பகுதிக்குப் புதியவர்கள். நந்தி துர்க்கத்தை விட்டு வெளியே வராதவர்கள். யாரோடும் பழகாதவர்கள். நீங்கள் அப்படியல்ல. எல்லோரையும் தெரிந்தவர். இந்தப் பகுதியை ஆளும் பிரதிநிதி பணத்தாசை பிடித்தவர் என்பதை அறிந்தவர். ஆகவே நீங்கள்தான் அழைத்து வரவண்டேும்" என்றாள் ஆசை நாயகி.

“முயன்று பார்க்கிறேன். நானும் கொள்ளைக்காரன் என்பதால் சந்திப்பது என்பது கஷ்டமாகவே இருக்கும். முயல்கிறேன். எனக்கு இரண்டு நாட்கள் அவகாசம் வேண்டும்” என்றான் உதயணன்.

“இரண்டு நாட்கள் என்பது மிகவும் குறைவு. எவ்வளவு நாட்கள் வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள். பிரதிநிதியை அழைத்து வந்தால் போதும்” என்றாள் ஆசை நாயகி.

மேலும் அவளே தொடர்ந்து “நீங்கள் வைத்திருக்கும் உபகரணங்களைப் பார்க்க நாங்கள் ஆவலாக இருக்கிறோம். எங்களுக்குக் காட்டுங்கள்” என்றாள்.

“ஒரு விஷயத்தை இப்போதே சொல்லி விடுகிறேன். உபகரணங்களைப் பார்வையிடுவது போல் பார்த்துக் கொண்டு நானில்லாத சமயத்தில் களவாட நினைக்க வேண்டாம். நானில்லாமல் உபகரணங்களை இயக்க முடியாது. அதோடு களவாடினீர்கள் என்றால் உங்களைக் காட்டிக் கொடுப்பதோடு அனைவரையும் சுவடு தெரியாமல் அழித்து விடுவேன்” என்றான் உதயணன்.

“அப்படியெல்லாம் இல்லை. நடக்காது. நாம் நண்பர்கள்” என்றாள் ஆசைநாயகி.

எல்லா கேள்விகளுக்கும் அவளே பதில் சொல்லிக் கொண் டிருந்ததையும் மற்றவர்கள் வாயைத் திறக்காமல் இருந்ததையும் கவனித்த உதயணனுக்கு ஒரு மாதிரியாக இருந்தது. இருப்பினும் அது விஷயமாக ஆராய்ச்சியில் இறங்காமல் “எல்லோரும் வரவேண்டாம். உங்களில் இருவர் மட்டும் வந்தால் போதும்” என்றான்.

“நானும் தலைவரும் வருகிறோம். உபகரணங்கள் எங்கே இருக்கின்றன?” என்று கேட்டாள் ஆசைநாயகி.

“பூதக் கோட்டையில்” என்றான் உதயணன்.

அன்றிரவு உதயணன் கொள்ளையர் தலைவனையும் அவனது ஆசை நாயகி கள்ளழகியையும் அழைத்துக் கொண்டு பூதக் கோட்டைக்குச் சென்றான்.

ஒரு காலத்தில் புத்தர்களின் கோட்டையாக இருந்து புத்தர் கோட்டையாக வழங்கப்பட்டு வந்த இடமானது பின்னொரு காலத்தில் அங்கிருந்த பௌத்தர்கள் எல்லோரும் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்ட கூழாங்கற்களைப் போல அகன்று விடவே அந்த இடத்தின் பெயரும் திரிந்து போய் பூதக்கோட்டை ஆகியது.

பூதம் ஒன்று அங்கே ஆட்சி செய்ததாகவும் அங்கே வருகிற மனிதர்களை அது கொன்று உண்டு விடுவதாகவும் பிற்காலத்தில் கதையொன்று கட்டி விடப்பட்டதால் பூதக் கோட்டை என்ற பெயரே நீடித்தது. மக்கள் அங்கே செல்வது நின்று போனது.

இந்த உலகில் விசித்திரமான மனித குணங்களில் நம்பிக்கையும் உண்டு. அதை உண்டாக்கும் மனிதன் தான் பின்னால் அதை மூட நம்பிக்கை என்றும் இகழ்கிறான்.

பூதக் கோட்டையைப் பற்றிய ஒரு பொய்யை சிலர் உருவாக்கிய போது பலர் நம்பினார்கள். பிறகு அவர்களில் சிலர் அதை நம்ப மறுத்தார்கள். எது எப்படியாயினும் அங்கே செல்வதற்கு மட்டும் யாரும் தயாராக இல்லை.

ஏறக்குறைய மயானத்தைப் போல ஆகி விட்ட பூதக் கோட்டையில் சிறப்பான காலத்தில் இருந்த நிர்மாணங்கள் சிதைந்து போய் சிதறிக் கிடந்தன. பௌத்த விஹாரமொன்று நன்றாக இடிந்து விழுந்த விதமானது புத்த மதத்தின் நிலையை எடுத்துச் சொல்வது போல் இருந்தது. புத்தரின் பெரிய சிலையொன்று இரண்டாக உடைந்து கிடந்தது.

உதயணன் அங்கே சென்ற போது பாறைகள் குவியலுக்குப் பக்கத்தில் இரண்டு விளக்குகள் தெரிந்தன. அதைக் கண்டதும் உதயணன் சற்றே நின்று விரல்களை வாயில் வைத்து வினோதக் குரலெழுப்பினான். அதையடுத்து அந்த இரண்டு விளக்குகளும் ஆட்டப் பட்டன.

"சமிக்ஞை கிடைத்து விட்டது. வாருங்கள் போவோம்" என்று கூறியபடி உதயணன் மூர்க்கனையும் கள்ளழகியையும் விளக்குகளை நோக்கி அழைத்துச் சென்றான்.

அங்கே பந்தங்களை நட்டு வைத்து விட்டு விகர்ணனும் இதர நான்கு பேர்களும் அமர்ந்திருந்தார்கள்.

உதயணன் அங்கே இருந்த பாறைகளில் தன்னோடு வந்தவர்களை அமரச் செய்து விட்டு "விகர்ணா! அந்த உபகரணத்தைக் கொண்டு வா" என்றான்.

அதையடுத்து மரக்கூண்டு ஒன்று கொண்டு வரப்பட்டது.

"இதிலென்ன உபகரணம் இருக்க முடியும்?" என்று தனக்குள்ளேயே வியந்து கொண்டு இருந்தான் மூர்க்கன்.

மரக்கூண்டை அவனுக்குப் பக்கத்தில் வைத்து விட்டு பந்தத்தை அதன் மீது பிடித்து "உள்ளே பாருங்கள்" என்றான் உதயணன்.

கூண்டிற்குள்ளே இரண்டு ஜீவராசிகள் இருந்தன.

“இது என்ன? இதுவா உபகரணம்?” என்று கேட்டான் மூர்க்கன்.

“ஆமாம் இது உபகரணம்தான். உள்ளே இருப்பவை எறும்புகள்” என்றான் உதயணன்.

“எறும்புகளா? ஆட்டுக்குட்டி அளவிற்கு உள்ளனவே!”

“அளவில் பெரிதாக இருந்தாலும் எறும்பு வடிவத்தில் இருப்பதால் இவை எறும்புகள் என்றே அழைக்கப்படுகின்றன.”

“இவற்றை வைத்து பொன்னை எப்படிக் கண்டு பிடிப்பது? புரியவில்லையே.”

“மூர்க்கா! இவற்றுக்குப் பொன் அகழும் எறும்புகள் என்று பெயர். இவற்றைக் கூண்டிலிருந்து விடுவித்தால் பொன் இருக்கும் இடத்தில் அகழச் செய்யும். பொன் துகள்களைக் காணலாம். அந்த இடம் தான் பொன் இருக்கும் இடம். அந்த இடத்தில்தான் நான் முன்பு சொன்ன மாதிரி தோண்டிப் பார்க்க வேண்டும். நிச்சயமாக அந்த இடத்தில் தங்கப் படிமங்கள் இருக்கும்.”

“அதெப்படிச் சொல்கிறீர்கள்,”

“இந்த எறும்புகள் மகத நாட்டைச் சேர்ந்தவை. இவற்றை வைத்துத்தான் அந்நாட்டில் தங்கச் சுரங்கம் இருப்பது கண்டு பிடிக்கப்பட்டது. அதை அறிந்துதான் இந்தப் பொன் அகழும் எறும்புகளை நான் கொண்டு வந்தேன்.”

“இந்த எறும்புகளை வெளியே விட்டு பின்னாலேயே நாம் ஓட வேண்டுமா?”

“ஆமாம். ஆனால் நான் இங்கே வந்த பிறகு இந்த எறும்புகளை விட்டுப் பொன் இருக்கும் இடத்தைக் கண்டுபிடித்தேன். அதை மீண்டும் உறுதி செய்து கொண்டு நமது காரியத்தை ஆரம்பிக்கலாம்.”

உதயணன் கூறியதை கொள்ளைத் தலைவனால் நம்பவும் முடியவில்லை. நம்பாமல் இருக்கவும் முடியவில்லை.

பொன் அகழும் எறும்புகளை அவன் அதுவரை கண்டதுமில்லை. கேள்விப் பட்டதுமில்லை.

அதே சமயம் நேரில் கண்டபிறகு வியக்காமல் இருக்க முடியவில்லை.

“நீங்கள் கூறுவது விசித்திரமாக இருக்கிறது” என்றான்.

“நாம் கேள்விப்படாத விஷயங்களும் காணப்படாத விஷயங்களும் நேரில் பிரத்யட்சமாகக் காணும் போது

விசித்திரமாகவே இருக்கும். எதுவாக இருந்தாலும் அது உண்மையானது என்பது தான் உண்மை" என்றான் உதயணன்.

"அப்படியானால் இப்போதே இந்த எறும்புகளை அந்த இடத்திற்குக் கொண்டு செல்லலாமா?"

"அவசரப்படாதீர்கள். ராஜப் பிரதிநிதியைச் சரிகட்டாமல் காரியத்தில் இறங்கக் கூடாது."

"சரி. நீங்கள் அந்தப் பிரதிநிதியை நந்தி துர்க்கத்திற்கு அழைத்து வாருங்கள். நாங்கள் போகிறோம்" என்று கூறிவிட்டு கொள்ளையர் தலைவன் தனது ஆசை நாயகியுடன் புறப்பட்டான்.

ஒரு வாரத்திற்குப் பின் ராஜ பிரதிநிதியுடன் நந்தி துர்க்கத்திற்கு வந்தான் உதயணன்.

அவனைப் பார்த்து கொள்ளையர்கள் சிரித்தார்கள்.

"உதயணா! உன் சாயம் வெளுத்து விட்டது. உன் சாவை நீயே வரவேற்றுக் கொண்டாய். மூர்க்கனிடம் விளையாடுவது எமனோடு விளையாடுவது போன்றது" என்று சொல்லி இடிஇடிப்பது போல் சிரித்தான் கொள்ளையர் தலைவன்.





வீரம் என்பது ஓர் ஆற்றல். அது வாள் போலவே எப்போதும் இருக்க வேண்டியதில்லை. நாணலைப் போலவும் வளையலாம்
– உதயணன்



கொள்ளையர் தலைவன் சென்ற போது உதயணன் அமர்ந்து கொண்டான். சிறிது நேரம் களைப்பு நீங்க கால்களை நீட்டிப் படுத்தான்.

பிறகு பேசமுற்பட்டு "விகர்ணா! நமது வீரர்கள் பத்திரமாக இருக்கிறார்களா?" என்று கேட்டான்.

"பத்திரமாகவும் இருக்கிறார்கள். உபத்திரமாகவும் இருக்கிறார்கள்" என்றான் விகர்ணன்.

"ஏன்?"

"வீரர்களாக இருந்து கொண்டு சும்மா இருக்க முடியுமா வேலை கொடுங்கள் என்று தொல்லை செய்கிறார்கள்."

"நாம் போருக்கு வரவில்லை விகர்ணரே. வேருக்கு நீர் பாய்ச்சும் வேலைக்கு வந்திருக்கிறோம். நம் அரசாங்கத்தின் நிதி என்னும் மரத்தின் வேருக்கு நீர்ப்பாய்ச்சி பலமூட்டுவதே நமது பணி. கொள்ளைக்காரர்களோடு போரிட முடியாது."

"சேனாதிபதி பகாசூரர் என்னையும் வீரர்களையும் போருக்காகவே பயிற்சியளித்தார். நாங்களும் மகாராஜாவின் படையில் சேர்ந்து போரைத்தான் செய்திருக்கிறோம். போர் வீரம்தான் எங்களின் தினவாக இருக்கிறது."

"வீரம் என்பது ஓர் ஆற்றல். அது வாள் போலவே எப்போதும் இருக்க வேண்டியதில்லை. நாணலாகவும் வளையலாம். நாம் தங்கத்தைப் பெற வந்திருக்கிறோமே தவிரச் சிங்கத்தை வீழ்த்த வரவில்லை. வாட்கள் எப்போதும் உரசிக் கொண்டிருக்க வேண்டும் என்று நினைக்காதீர்கள். வாட்கள் உறைக்குள் உறங்கும் நேரமும் உண்டு."

"பழக்க தோஷம் என்னைப் பேசவைத்து விட்டது. வேறொன்றுமில்லை."

"விகர்ணரே! தந்திரமும் சூழ்ச்சியும்தான் என் வேலைகளா? அவற்றைத்தான் நான் காலம் காலமாகச் செய்து

கொண்டிருந்தேனா? இல்லை. நானும் கானகலா கோட்டைப் போரில் ஈடுபட்டவன்தான். என்ன செய்வது? போருக்கு இப்போது வேலை இல்லை. பதுங்கியிருந்து காரியமாற்ற வேண்டிய நேரம் நமக்கு. உங்களுக்குத் தெரியுமா? இளவரசர் நரசிம்மர் இந்தப் பணியில் என்னோடு இணைந்து செயல்பட பிடிவாதம் பிடித்தார். உங்கள் இடத்தில் அவர் தான் வருவதாக இருந்தது. மகாராஜா வேறு உத்தரவு போட்டு விட்டதால் தான் அவர் வரவில்லை. இளவரசர் விரும்பிய பணியைச் செய்ய உங்களுக்கு கசப்பாக இருக்கிறதா?"

"என்னை மன்னித்து விடுங்கள் ஐயா."

"விகர்ணரே! போரின் போது மட்டுமல்ல. இது போன்ற சமயங்களிலும் வீரர்களுக்குள் ஒற்றுமையும் ஒத்த மனமும் இருக்க வேண்டும். நீங்கள் பிடிப்போடு இருந்தால்தான் கொள்ளையர்களைச் சமாளிக்க முடியும்" என்று சொன்ன உதயணன் கொள்ளையனோடு நடத்திய பேச்சு வார்த்தையைப் பற்றிச் சொன்னான்.

"வீரர்களில் ஒருவனை ராஜபிரதிநிதியாக வேடமிட்டுக் கொள்ள வேண்டும். அவனோடு நூறு வீரர்கள் பரிவாரமாக வரவேண்டும். எல்லோரையும் நான் அழைத்துச் செல்கிறேன்" என்று மேலும் சொல்லி விட்டு அதற்கான முயற்சியிலும் ஈடுபடலானான்.



பூதக் கோட்டையிலிருந்து நந்தி துர்க்கத்திற்கு வந்த கொள்ளையர் தலைவன் என்ன காரணத்தினாலோ மகிழ்ச்சியாக இருந்தான். ஏதோ தங்கம் தன் கைகளுக்குக் கிடைத்த விட்டது போன்ற பிரமை ஏற்பட்டிருந்தது.

எனவே ஆசை நாயகியைப் புரட்டி எடுத்து காமத்தைத் தூய்த்தான். கள்ளைக் குடித்தான். கள்ளும் கள்ளழகியும் நிகரற்றவை என்று உளறிக் கழித்தான்.

"நீ வேண்டுமானால் உதயணனுக்கு உன் அங்கங்களைக் காட்டி மயக்கினால்தான் என்ன?" என்று ஆசை நாயகியிடம் அவன் கூறிய போது -

"இரண்டொரு நாட்களில் சாகப் போகிறவனை எதற்காக மயக்க வேண்டும்?" என்று கேட்டாள்.

"அதற்காகத்தான் சொல்கிறேன். சாகப் போகிறவன் தானே! கொஞ்சம் சந்தோஷப்படுத்தலாம் அல்லவா?"

“உங்களைத் தவிர வேறு யாரையும் ஏறெடுத்துப் பார்க்க மாட்டேன்” என்றாள் ஆசைநாயகி பத்தினியைப் போல.

கொள்ளையர் தலைவன் தனக்குள் சிரித்துக் கொண்டான். “இந்த நாய் பத்தினி வேஷம் போடுகிறது. எனக்குத் தெரியாதா இந்த நாயின் லட்சணம்? காரியம் வெற்றிகரமாக முடியட்டும். சகாக்களோடு இவளையும் சேர்த்து கொன்று விட்டு விந்தியமலைக் காடுகளுக்கு ஓடி விடுவோம்” என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

ஆசை நாயகியைத் தவிர்த்து தனது விருப்பப்படி கிராமப் பகுதியிலிருந்து அழகான பெண்களைக் கவர்ந்து கொண்டு வரச் சொல்லி அவர்களையும் தனது காமத்திற்குப் பலியாக்கிக் கொண்டான்.



இதற்கிடையில் உபதலைவன் மூக்கன் மிகவும் நொந்து போயிருந்தான்.

தன் தலைமையை ஏற்று இருபது கொள்ளையர்களை வரவழைத்து “இந்தக் கள்ளழகி யார்? கள்ளத்தனம் செய்யும் சிறுக்கி. தலைவர் பொறுக்கிக் கொண்டு வந்த கிறுக்கி. சர்வ சாதாரணமாக ஆசைநாயகியான அவளுக்குத் தான் எத்துணை கொழுப்பு? தலைவரே சும்மா இருக்கும் போது இவள் என்னை அதட்டுகிறாளே! இவளுக்கு இந்த அதிகாரத்தைக் கொடுத்தது யார்? படுக்கையறை பன்றிக்கு என்னை அதட்டவும் எனக்கு உத்தரவிடவும் ஏது உரிமை? அவள் தான் அதிகாரம் செய்கிறாள் என்றால் தலைவராவது குறுக்கிட்டு அவளது பேச்சிற்குத் தடை விதித்திருக்க வேண்டுமல்லவா? அதை ஏன் அவர் செய்ய வில்லை? என் நெஞ்சு கொதிக்கிறது” என்று புலம்பினான்.

“இது மிகவும் சாதாரணமான விஷயம். இதற்குப் போய் கவலையும் கோபமும் அடைவது சரியல்ல உபதலைவரே” என்றான் ஒருவன்.

“உனக்கு இந்த அவமானம் நடந்திருந்தால் தெரிந்திருக்கும். மனம் உடைந்திருக்கும். நாம் கொள்ளையர்கள் என்றாலும் மானங் கெட்டவர்கள் அல்ல. தலைவரது ஆணைகளுக்குக் கட்டுப்படுவது தான் கௌரவம். கடமை. தலைவரது மானங்கெட்ட ஆசை நாயகிகளுக்கெல்லாம் கட்டுப் படுவதெல்லாம் கௌரவம் அல்ல. அவமானம்” என்றான் மூக்கன்.

“நமக்கு இப்போது தங்கம்தான் முக்கியம். கள்ளழகி ஒரு தகரம். அது முக்கியமல்ல” என்றான் ஒருவன்.

"தலைவர் நம்மிடம் ஆலோசனை கேட்டாலும் கடைசியில் அந்தத் தகரத்தின் ஆலோசனையைத்தான் கேட்கிறார்? அப்போதெல்லாம் வராத கோபம் உங்களுக்கு இப்போது எதற்கு வருகிறது?" என்று கேட்டான் மற்றொருவன்.

"திரைக்குப் பின்னால் எது வேண்டுமானாலும் நடந்து கொள்ளட்டும். அது யாரையும் பாதிப்பதில்லை. திரைக்கு முன்னால் எது நடப்பதானாலும் முறையாகத்தான் நடக்க வேண்டும். அந்தத் தகர டப்பாவான கள்ளழகி தலைவருக்குப் பக்கத்தில் அமர்ந்து கொண்டு ஆலோசனை செய்ய முற்பட்டது மகாதவறு" என்றான் மூக்கன்.

"இதையெல்லாம் எங்களிடம் சொல்கிறீர்களே உப தலைவரே? தலைவரிடமே கேட்க வேண்டியது தானே?"

"தலைவன் முன்பு போல் இல்லை. இந்தக் குள்ளநரியான கள்ளழகி வந்தபின் தலைவர் அவள் பக்கம்தான் அதிகம் சாய்கிறார். அவளுக்குத்தான் முக்கியத்துவம் தருகிறார். நம்மையெல்லாம் கொன்று விடுவதாக மிரட்டுகிறார். அது அந்தக் கள்ளிச் செடி கொடுத்த யோசனையாகத்தான் இருக்கும்."

"எல்லாம் சரி உபதலைவரே. இப்போது நாம் என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்?"

"உதயணன் பொன்னைக் கண்டுபிடிக்கும் உபகரணங்களை காட்டுவதற்கு முற்பட்ட போது தலைவர் உபதலைவனான என்னை அழைத்து சென்றிருக்க வேண்டும்? அது தானே முறை? அதை விட்டு விட்டு ஆசைநாயகியை அழைத்துச் சென்றது நமக்கு அவமானம் மட்டுமல்ல. ஏதோ உட்காரணம் இருப்பதாகத் தோன்றுகிறது. தலைவரும் மோச நாயகியுமாகச் சேர்ந்து தங்கத்தை அபகரித்துக் கொள்ள முடிவு கட்டியிருக்க வேண்டும். ஆகவே தான் என்னைப் புறக்கணித்ததோடு மட்டுமின்றி பூதக்கோட்டையிலிருந்து வந்த பிறகு கூட உபகரணங்களைப் பற்றி என்னிடம் எதுவும் சொல்லவில்லை. நான் உபதலைவனா உபயோகமற்றவனா என்பது புரியவில்லை. சகாக்களே! செய்யும் தொழில் எதுவாக இருந்தாலும் தன்மானத்தை ஒதுக்கி வைத்து விட்டு செயல்படுவோமானால் நமக்கது துயரத்தையே கொடுக்கும். மானமற்ற தொழில் தொழிலே அல்ல. ஆகவே நான் ஒரு முடிவுக்கு வந்துள்ளேன்."

"சொல்லுங்கள்."

"எந்த கட்டத்திலும் நாம் ஏமாறக் கூடாது. ஏமாறுவதற்காக நாமிங்கு வந்து கூட்டணி அமைக்க வில்லை. நமது உழைப்பைய[illegible]

உதவியையும் உறிஞ்சிக் கொண்டு தலைவனும் அந்தக் கேடு கெட்டக் கள்ளழகியும் அறுவடை செய்து கொண்டு போகக் கூடாது. அவர்களுக்கு உதவுவது போல் உதவ வேண்டும். தங்கம் கண்ணில் பட்ட பிறகு அவர்களது அங்கங்களை வெட்டித் துண்டாக்கி விட்டு தங்கத்தை அள்ளிக் கொண்டு செல்ல வேண்டும்.”

“எனக்கொரு யோசனை தோன்றுகிறது உபதலைவரே!”

“உதயணன் வைத்திருக்கும் உபகரணத்தை நாம் திருடிக் கொண்டு வந்து விட்டால் என்ன? நாம் மறைத்து வைத்துக் கொள்ளலாம். தலைவர் உதயணன் மீது கோபப்பட்டுச் சண்டையிடுவார். உபகரணம் இல்லாமல் தங்கத்தைக் கண்டு பிடிக்க முடியாது என்பதால் தலைவர் உதயணனைக் கொன்று விட்டு நந்தி துர்க்கத்தை விட்டு அகன்று விடுவார். நாமும் அவரோடு செல்வது போல் சென்று மீண்டும் இங்கு வருவோம். உபகரணங்களைக் கொண்டு தங்கத்தைக் கண்டு பிடித்துக் கைப்பற்றுவோம்” என்றான் குரங்கன் என்ற கொள்ளையன்.

“இது நல்ல யோசனை. குரங்கா! நீயும் பேயனும் சேர்ந்து இன்றிரவு சென்று பூதக் கோட்டையில் இருக்கும் உபகரணத்தைக் கொண்டு வந்து விடுங்கள்” என்றான் உபதலைவனான மூக்கன்.

குரங்கனும் பேயனும் அன்றிரவே பூதக் கோட்டைக்குச் சென்றார்கள். அங்கே யாரும் இல்லை. பந்தங்களும் ஏற்றியிருக்க வில்லை. இருவருக்கும் ஏமாற்றமாக இருந்தது. வெளிச்சம் இல்லாத காரணத்தால் அவர்கள் தடவியும் தடுமாறவும் வேண்டியிருந்தது. அவர்களது தடுமாற்றத்தைக் கண்டு நகைப்பது போல் ஆந்தைகள் பல சத்தமிட்டன.

பூதக் கோட்டையைப் பற்றி அறியாத அவர்கள் அந்த இடத்தில் பூதங்கள் மற்றும் பிசாசுகள் இருக்கும் என்ற நினைப்பிலேயே பயத்தோடு தேடினார்கள். அவ்வப்போது கேட்ட சில அமானுஷ்ய குரல்கள் “வரக்கூடாத இடத்திற்கு வந்து விட்டோமோ?” என்று எண்ண வைத்தன.

நல்ல வேளையாகப் பெட்டி ஒன்று தட்டுப் பட்டது. அது பூட்டியிருந்ததை உணர்ந்தவர்கள் அப்பெட்டியில்தான் உபகரணங்கள் இருக்கும் என்று நினைத்தவர்களாய் அதைத் தூக்கிச் சென்றார்கள்.

நந்தி துர்க்கத்தில் பூட்டை உடைத்து பெட்டியைத் திறந்து பார்த்தான் உபதலைவன்.

உள்ளே துருப்பிடித்த ஆயுதங்கள் இருந்தன.

"இவற்றை வைத்துக் கொண்டு தங்கம் இருக்கும் இடத்தை எப்படி அறிவது?" என்று தனக்குள் கேட்டுக் கொண்ட உபதலைவன் "எதையும் அலட்சியப்படுத்தக் கூடாது. இந்த ஆயுதங்களுக்கு மந்திர சக்தி இருந்தாலும் இருக்கலாம். கொண்டு போய் பத்திரமாக வையுங்கள். யாருக்கும் தெரிய வேண்டாம்" என்றான்.

இது நடந்த மறுநாள் ஆசைநாயகி கொள்ளையர் தலைவனிடம் "எனக்கொரு யோசனை தோன்றுகிறது" என்றாள்.

"என்ன சொல்?"

"இரண்டொரு நாட்களில் உதயணன் ராஜப் பிரதிநிதியோடு வருவான். அவனை நாம் கொல்லப் போகிறோம். எனவே நம்மில் யாராவது போய் பூதக் கோட்டையில் இருக்கும் பொன்னழகும் எறும்புகளை கவர்ந்து கொண்டு வந்து விடலாம். உதயணனைக் கொன்று விட்டு இந்த எறும்புகளைக் கொண்டு பொன்னிருக்கும் இடத்தை அடையலாம். பொன்னை அள்ளலாம்" என்றாள்.

"நல்ல யோசனை" என்று சொன்ன மூர்க்கன் கொள்ளையர்களில் ஒருவனான சொக்கனை பூதக் கோட்டைக்கு அனுப்பினான்.

சொக்கன் முன்னேற்பாட்டுடன் பந்தம் ஒன்றைத் தயார் செய்து கொண்டு பூதக் கோட்டைக்குச் சென்றான். தடுமாற்றமில்லாமல் தேடினான். பொன் அகழும் கூண்டு ஒன்று பாறைகளுக்கு இடையில் இருந்தது. அதைத் தூக்கிக் கொண்டு நந்தி துர்க்கத்திற்கு வந்தான்.

கூண்டைத் திறந்து பார்த்தான் கொள்ளையர் தலைவன்.

உள்ளே இருந்த இரண்டு எறும்புகளில் ஒன்று இறந்து கிடந்தது.

"ஒன்று உயிரோடு இருக்கிறதல்லவா? அது போதும். செத்துப் போன எறும்பைப் புதைத்து விடுவோம்" என்றாள் ஆசை நாயகி.

அவ்வாறே செய்து விட்டு உயிரோடு இருந்த எறும்பை அதே கூண்டில் பத்திரமாக வைத்து மறைத்து வைத்த கொள்ளையர் தலைவன் என்றுமில்லாத ஆனந்தத்துடன் ஆசை நாயகியுடன் இணைந்தான்.



சரியாக ஒரு வாரம் கழிந்தபின் நந்தி துர்க்கத்தில் முரசுகள் ஒலித்தன.

அதையடுத்து நூறு வீரர்கள் சூழ ராஜபிரதிநிதி வந்தார்.

அவருடன் வந்த உதயணன் கொள்ளையர் தலைவனைப் பார்த்து "மூர்க்கா! பிரதிநிதி வந்து விட்டார். அவர் அமர்வதற்கு ஆசனம் போடு. நான் அமரும் ஆசனம் எங்கே?" என்று கேட்டான்.

ராஜபிரதிநிதி உதயணனைக் கோபத்துடன் பார்த்து "ஆசனங்களைக் கூடத் தயார் செய்யாமல் எப்படி என்னை நீ அழைக்கலாம்?" என்று விறைப்பாகக் கேட்டார்.

அப்போது மூர்க்கன் உட்பட எல்லோரும் இகழ்ச்சியாகச் சிரித்தார்கள்.

"எதற்காகச் சிரிக்கிறீர்கள்?" என்று கேட்டான் உதயணன் சற்றே குழம்பி.

"அடே உதயணா! உன் சாயம் வெளுத்து விட்டது. என்னிடமே விளையாடி விட்டாய். குலதெய்வம் இருந்தால் வேண்டிக் கொள். இன்றோடு உன் ஆயுள் முடிந்து விட்டது" என்றான் கொள்ளையர் தலைவன்.

குழப்பம் அதிகரித்த நிலையில் "மூர்க்கா! என்ன உளறுகிறாய்? என்னை மரியாதையில்லாமல் வேறு அழைக்கிறாய். என்னை விட எனது குறுவாட்கள் ஆபத்தானது. உன்னை எச்சரிக்கிறேன்" என்றான் உதயணன்.

கொள்ளையர் தலைவன் அசரவில்லை.

"உன்னோடு வந்திருப்பவர் ராஜபிரதிதானா? முகத்தைப் பார்த்தால் அப்படித் தெரியவில்லையே!" என்றான்.

"முகத்தைப் பார்த்துத் தெரிந்து கொள்ள அவர் உன்னைப் போன்ற கொள்ளைக்காரர் அல்ல. என்னையே கூட நினைத்துக் கொள். என்னை யாராவது கொள்ளைக்காரன் என்று சொல்வார்களா?" என்று கேட்டான் உதயணன்.

"நீ அழைத்து வந்தது ராஜபிரதிநிதியல்ல என்பதற்கு என்னிடம் ருசு இருக்கிறது?"

"என்ன ருசு அது?"

"இந்த வட்டாரத்தின் பிரதிநிதியை நான் எப்போதோ கடத்தி சிறையில் வைத்து விட்டேன். பார்க்கிறாயா?" என்று சொல்லி தன் சகாக்களுக்கு சைகை செய்தான் கொள்ளையர் தலைவன்.

அதையடுத்து கொள்ளைக்காரர்கள் நாற்பது வயது மதிக்கத் தக்க மனிதனைக் கொண்டு வந்து நிறுத்தினார்கள். அவருக்குச் சரிவர உணவு வழங்கப்படவில்லை என்பதை அவரது தோற்றமே புலப்படுத்தியது.

உதயணன் உண்மையாகவே அதிர்ந்து போனான்.

என்ன செய்வதென்று விளங்கவில்லை.

பிறகு சுதாரித்துக் கொண்டு "மூர்க்கா! உனக்கு உடம்பு வளர்ந்திருக்கிற அளவுக்கு மூளை வளரவில்லை" என்றான் அலட்சியமாக.

"என்ன சொல்கிறாய்? சாட்சியை நான் நேரில் காட்டி யிருக்கிறேன்."

"உன் சாட்சியை நீ காட்டியிருக்கிறாய்? என் சாட்சியை நான் காட்டியிருக்கிறேன்."

"நீ சொல்வது விளங்கவில்லை."

"மூளை இருந்தால் அல்லவா விளங்கும்! அது தான் உனக்கு இல்லையே!" என்று கூறிய படி குறுவாளை இடையிலிருந்து எடுத்து வீசினான் உதயணன். அது மூர்க்கன் இருந்த ஆசனத்தில் போய் தைத்தது.

"சைகை காட்டும் வேலையெல்லாம் வேண்டாம் மூர்க்கா. நீ என்னிடமிருந்து தப்பலாம். என் குறுவாளிடமிருந்து தப்ப முடியாது. முதலில் எங்களுக்கு ஆசனங்களைப் போடு" என்றான்.

தற்போது கொள்ளையர் தலைவனுக்குக் குழப்பமாக இருந்ததால் ஆசனங்களைக் கொண்டு வந்து போட உத்தரவு போட்டான். ராஜபிரதிநிதியை அதில் அமர வைத்த உதயணன் கொள்ளையர் தலைவனைப் பார்த்து "இப்போது சொல்" என்றான்.

குழம்பிக் கிடந்த கொள்ளையனோ "என்ன சொல்ல வேண்டும்?" என்றான்.

"ராஜப் பிரதிநிதியை எப்போது கடத்தினாய்?"

"ஐந்து மாதங்களுக்கு முன்பாகவே கடத்தி விட்டோம்."

"மூடனே! ஐந்து மாதங்களாக அந்தப் பதவியை நிரப்பாமல் வைத்திருப்பார்களா? நீ கடத்திய ராஜ பிரதிநிதி காணாமல் போன மறு வாரமே இவர் அந்தப் பதவியில் நியமிக்கப்பட்டு விட்டார். இது தெரியாதா உனக்கு?"

உதயணனின் பேச்சைக் கேட்ட மூர்க்கன் ஏமாந்து போனான். கடத்தப்பட்ட ராஜபிரதிநிதியைக் காட்டி உதயணனின் சாயத்தை வெளுக்கச் செய்து கொன்று விடலாம் என்று திட்டமிட்டிருந்த அவன் அந்த முயற்சி தோற்றுப் போய் தனது சாயம் வெளுத்து விடவே தடுமாற்றமடைந்தான்.

உதயணனே பேச முற்பட்டு "உனக்குக் கொள்ளை கொலையைத் தவிர வேறு எதுவும் தெரியாது என்பது தெரிகிறது.

மூர்க்கா! நீ கடத்தி வந்த ராஜபிரதிநிதியை அரசாங்கம் தேடிக் கொண்டிருக்கிறது. உன் மீது தான் அரசுக்குச் சந்தேகமாக இருக்கிறது. நீ முந்திக் கொள்ளா விட்டால் அரசுப்படை இங்கே வந்து விடும்'' என்றான்.

“என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்?''

“அவரைச் சிறையிலேயே வைத்துக் கொண்டு சாகாமல் பார்த்துக் கொள். நமது காரியம் முடியும் வரை அவருக்கு எதுவும் நேராமல் பார்த்துக் கொள்.''

“சரி''

“ராஜ பிரதிநிதியிடம் பேசி விட்டேன். ஒப்புக் கொண்டு விட்டார். ஆறு மாதங்களுக்குள் வேலைகள் முடிந்து விட வேண்டும் என்கிறார். அவர் அதற்காக எதிர்பார்க்கும் தொகையை அவரே தெரிவிப்பார்.''

ராஜபிரதிநிதி தொகையைத் தெரிவித்தார்.

“எங்களிடம் கொள்ளைப் பணம் எதுவும் இல்லை'' என்றான் மூர்க்கன்.

“மூர்க்கா! வெறும் கையால் முழம் போடப் பார்க்கிறாயா? கொள்ளையடித்த செல்வம் இல்லாவிட்டால் என்ன? நீங்கள் எல்லோரும் கொள்ளையடித்த நகைகளைத் தானே அணிந்திருக்கிறீர்கள்? அவற்றைக் கழற்றிக் கொடுங்கள். என் பங்கிற்கு நான் அணிந்திருக்கும் பொன்மாலையைக் கழற்றித் தருகிறேன்'' என்ற உதயணன் அவ்வாறே செய்தான்.

கொள்ளைக்காரர்கள் தாங்கள் அணிந்திருந்த தங்க நகைகளைக் கழற்றிக் கொடுத்தார்கள்.

எல்லாவற்றையும் சேர்த்து வைத்துப் பார்த்தப் பிரதிநிதி கொஞ்சம் நகைகளைத் திருப்பிக் கொடுத்து விட்டு “என் கணக்கிற்கு இது சரி'' என்று சொல்லி அவற்றை மூட்டையாகக் கட்டி வீரர்களிடம் கொடுத்தார்.

முரசுகள் முழங்கின.

அவரும் வீரர்களும் அகன்றார்கள்.

அப்போது ஒருவன் உதயணனின் காதில் ஏதோ சொன்னான்.

உதயணனின் முகம் சிவந்தது.

“இது உண்மையா?'' என்று பெருங்குரலில் கேட்கவும் செய்தான்.





கூட்டு முயற்சியில் பரஸ்பர நம்பிக்கை வெற்றிக்கு வழி வகுக்கும். தன்னலமான துரோகமோ தோல்விக்குத் தான் வழி வகுக்கும் – உதயணன்




பெரும் ஏமாற்றத்தில் இருந்தான் கொள்ளையர் தலைவன்.

தனது திட்டம் தோற்றுப் போனது ஒரு புறம் -

கொள்ளையர்களின் நகைகளையெல்லாம் ராஜபிரதிநிதியிடம் கொடுத்து விட்டது மறுபுறம் -

அவனை வாட்டியெடுத்தன.

அதே சமயம் உதயணனின் மீது குறை சொல்ல முடியாத வகையில் அனைத்துமே நடந்திருந்தன.

உதயணன் தன் பங்கிற்காக தனது பொன்மாலையை அளித்தது -

ராஜபிரதிநிதி பெற்றது கையூட்டு என்றாலும் கொடுத்ததையெல்லாம் வாரி எடுத்துக் கொள்ளாமல் கணக்கு பார்த்து அதிகமாக இருந்ததைத் திருப்பிக் கொடுத்தது -

ஆகிய எல்லாமே சரியாக நடந்து விட்டிருந்ததால் செய்வதறியாமல் திகைத்தான்.

இந்த நிலையில் வீரனொருவன் காதில் ஏதோ சொன்னதும் சிவந்த முகத்தோடும் பெருங் கோபத்தோடும் உதயணன் "இது உண்மையா?" என்று சத்தமிட்ட போது கொள்ளையர் தலைவன் அதிர்ந்தான்.

"ஏன்? என்ன ஆயிற்று?" என்று எதுவும் புரியாமல் கேட்டான்.

"மூர்க்கா! உன் புத்தியைக் காட்டி விட்டாய். கொள்ளையனான நான் முறையோடு நடந்து கொண்டிருக்கும் போது நீ உன் துரோக புத்தியைக் காட்டி விட்டாய்" என்றான் உதயணன்.

"நீங்கள் சொல்வது விளங்கவில்லை."

"மூர்க்கா! உங்களுக்குள் கோஷ்டிகள் உண்டா?"

"கோஷ்டிகளா? இல்லவே இல்லை. கோஷ்டிகளாக இருந்தவர்கள்தான் ஒன்று சேர்ந்திருக்கிறோம்."

"உங்களுக்குள் எதிரிகள் உண்டா?"

“கிடையாது”

“அப்படியென்றால் என்னிடமிருந்தது உபகரணங்களைத் திருடியது யார்?”

அதிர்ந்து போனான் கொள்ளையர் தலைவன்.

“என்ன? உபகரணம் திருடு போய் விட்டதா? என்ன சொல்கிறீர்கள்?”

“என்னிடம் நாடகம் ஆடாதே மூர்க்கா. உனது ஆட்களில் இருவர் பூத கோட்டைக்கு வந்து எனது உபகரணத்தைத் திருடிச் சென்றிருக்கிறார்கள்.”

“நான் அனுப்பியது ஒருவனைத்தானே! இரண்டு பேர் என்கிறானே உதயணன்! அப்படியானால் அந்த இருவர் யார்? எறும்புகளை நாம் கவர்ந்திருக்கும் போது அந்த இருவர் எதை கொண்டு வந்திருப்பார்கள்? ஒரு வேளை வேறு இரண்டு எறும்புகளாக இருக்குமோ? ஒன்றும் புரியவில்லையே!” என்றுக் குழம்பிய கொள்ளையர் தலைவன் எல்லோரையும் பார்த்து “உங்கள் எல்லோருக்கும் சொல்கிறேன். தங்கம் இருக்கும் இடத்தைக் கண்டுபிடிக்கும் உபகரணத்தைத் திருடியது யார்? ஒப்புக் கொண்டு விட்டால் நல்லது. இல்லையென்றால் ஒவ்வொருவரையும் சித்திரவதை செய்து கண்டு பிடிப்பேன்” என்றான்.

“உங்கள் உபதலைவராகத்தான் இருக்கும்” என்று அவன் காதில் கிசுகிசுத்தாள் ஆசைநாயகி.

“நானும் அப்படித்தான் நினைக்கிறேன்” என்று சொன்ன கொள்ளையர் தலைவன் மூக்கனைப் பார்த்து “உன் மீது தான் எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. உண்மையைச் சொல்லிவிடு. உபகரணத்தை எங்கே மறைத்து வைத்திருக்கிறாய்?” என்று கேட்டான்.

“தலைவரே! இது அபாண்டம். இங்கே வந்தது முதற் கொண்டு உங்கள் வலது கரமாகவும் இடது கரமாகவும் உதவி வருகிறேன். இங்கிருக்கும் நூறு பேர்களில் எண்பது பேர்களைக் கொண்டு வந்து சேர்த்தவன் நான். வேறு வேறு நாட்டவர்களை மாறுபட்டச் சூழ்நிலைகளில் சந்தித்து இசைவு தெரிவிக்க வைத்து இங்கே அழைத்து வந்து இங்குள்ள மொழியைக் கற்று கொடுத்து ஆயத்தப்படுத்தியவன் நான். என் மீதா சந்தேகம்?” என்று கேட்டான் உபதலைவன்.

“பிடாரி கோயிலுக்கு நம்மவன் கோட்டானை அனுப்பி காவு கொடுத்தவன் நீ. எல்லாம் தெரிந்தே அவனை அனுப்பி வைத்து

இறக்க வைத்தாய். அப்போதே உன் மீது சந்தேகம் வந்து விட்டது. நீ தான் உபகரணங்களைத் திருடியிருக்க வேண்டும்" என்றான் கொள்ளையர் தலைவன்.

"உங்களுக்குச் சந்தேகம் வருவதற்கு உரிமையிருக்குமானால் அதை மறுக்கும் உரிமை எனக்கு இருக்கிறது. எதிர்ப்பும் மறுப்பும் இல்லாதச் சந்தேகம் எங்கேயும் இல்லை. ஏனென்றால் சந்தேகம் என்பது பொறாமையாலும் வெறுப்பாலும் உண்டாகும் பொய்."

"உன்னிடம் தத்துவங்களைக் கேட்கவில்லை. திருடிய உபகரணங்கள் எங்கே என்று தான் கேட்டேன்."

"திருடவில்லை என்று நான் சொல்லிவிட்டேன்."

"உன்னை இப்படியெல்லாம் கேட்டால் உண்மையைச் சொல்ல மாட்டாய்" என்று சொன்ன கொள்ளையர் தலைவன் "இவனை இங்கே இருக்கும் தளைகளில் தலைகீழாகக் கட்டித் தொங்க விட்டு சாட்டையால் அடியுங்கள்" என்று உத்தரவிட்டான்.

கொள்ளையைத் தவிர வேறு எதுவும் அறியாத கொள்ளை யர்கள் மூக்கனைத் தலைகீழாகக் கட்டித் தொங்க விட்டு சாட்டையால் அடிக்க முற்பட்டபோது-

குரங்கனும் பேயனும் முன் வந்து "தலைவரே! நாங்கள் இருவரும் தான் உபகரணங்களைத் திருடியவர்கள். உபதலைவர் கூறித்தான் செய்தோம்" என்றார்கள்.

"எங்கே வைத்திருக்கிறீர்கள்? கொண்டு வாருங்கள்" என்றான் தலைவன்.

இருவரும் சென்று பெட்டியைக் கொண்டு வந்து திறந்து காட்டினார்கள்.

அதில் இருந்த துருப்பிடித்த ஆயுதங்களைக் கண்ட கொள்ளையர் தலைவன் "இவற்றைத்தான் திருடிக் கொண்டு வந்தீர்களா?" என்று வினவி விட்டு உதயணனைப் பார்த்து "வந்து பாருங்கள் உதயணரே. இதெல்லாம் உங்களுடையது தான். இது தான் உபகரணமா!" என்று கேட்டான்.

"என்னைக் கேட்கிறாயே! உனக்குத் தெரியாதா?" என்று கேட்டான் உதயணன்.

ஆசைநாயகி குறுக்கிட்டு "இவை உபகரணங்கள் இல்லை என்றாலும் உபகரணங்கள் என்று எண்ணித்தான் இவர்கள் திருடியிருக்கிறார்கள். நிச்சயமாக இது சதிதான். உங்களை ஏமாற்ற எடுக்கப்பட்ட முயற்சிதான்" என்று கொம்பு சீவி விட்டாள்.

கொள்ளையர் தலைவனுக்கு கண்கள் சிவந்தன.

"இந்த மூவரையும் தூக்கிக் கொண்டு போய் மரத்தில் கட்டிச் சாகும் வரை அடியுங்கள். பிணத்தைக் கொண்டு வந்து போடுங்கள்" என்று கர்ஜித்தான்.

"மூர்க்கா! இவர்கள் உபகரணங்களைத் திருட வில்லை. மன்னித்து விடுங்கள்" என்றான் உதயணன்.

"முடியாது. இவர்கள் செய்தது சதி. இதற்கு சாவு மணி தான் அடிக்க வேண்டும்" என்றான் மூர்க்கன் மூர்க்கமாக.

மனிதாபிமானமில்லாத கொள்ளையர்கள் தங்கள் கொடூரமான செயல்பாட்டைக் காட்டி மூக்கன், குரங்கன், பேயன் ஆகிய மூவரையும் கொன்று உயிரற்ற சடலங்களைத் தலைவனுக்கு முன்னால் கொண்டு வந்து போட்டார்கள்.

"மகிழ்ச்சி. உடல்களைக் கொண்டு போய் கழுகுகள் வாழும் கழுகு மலையில் எரியுங்கள். கழுகுகள் உண்ணட்டும்" என்றான் தலைவன்.

பிறகு எல்லோரையும் அனுப்பி விட்டு ஆசனத்தை விட்டு ஆசை நாயகியோடு எழுந்து உதயணனின் அருகில் வந்து மண்டியிட்டு அமர்ந்து "உதயணரே! எங்களை மன்னிக்க வேண்டும்" என்று முறையிட்டார்கள்.

"என்ன விஷயம்?" என்று கேட்டான் உதயணன்.

"தவறு செய்து விட்டோம்."

"என்ன தவறு?"

"உபதலைவன் உபகரணங்களைத் திருட நினைத்ததோ பூதக் கோட்டைக்கு சென்று ஆயுதப் பெட்டியைத் திருடிக் கொண்டு வந்ததோ எங்களுக்குத் தெரியாது."

"அது தான் எல்லாம் முடிந்து விட்டதே!"

"அவர்களை அறியாமல் நான் சொக்கனை அனுப்பி பொன் அகழும் எறும்புகளை எடுத்து வந்து விட்டேன்."

உதயணன் கோபப்படவில்லை.

"எதற்கு?" என்று கேட்டான்.

"உங்களைக் கொன்று விட்டு எறும்புகளைக் கொண்டு தங்கத்தைக் கைப்பற்ற நினைத்தோம்."

உதயணன் கோபப்படவில்லை.

"என்னிடம் கேட்டிருந்தால் நானே கொடுத்திருப்பேனே! எதற்காகத் திருட வேண்டும். வெறும் எறும்புகளை வைத்து தங்கம் இருக்கும் இடத்தை உங்களால் கண்டு பிடிக்க முடியாது. எனக்குத் தெரிந்த உத்தேசமான இடங்களில் அவற்றை விட்டால்

தான் கண்டு பிடிக்க முடியும். அதோடு அவற்றுக்கு என்ன உணவு வழங்க வேண்டும் என்பது உங்களுக்கெல்லாம் தெரியாது. ஆகவே தான் அவற்றை நானே வைத்திருந்தேன்" என்றான்.

"உதயணரே! ஓர் எறும்பு இறந்து விட்டது."

"இன்னொன்றாவது உயிரோடு இருக்கிறதா?"

"இருக்கிறது. இருக்கிறது. கவனமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்."

"ஒன்று இறந்து விட்டதால் ஒன்றை மட்டுமே வைத்துக் கொண்டு தங்கம் இருக்கும் இடத்தைக் கண்டுபிடிப்பதற்குத் தாமதமாகும்."

"ஆகட்டும் உதயணரே. எங்களை நீங்கள் மன்னிக்க வேண்டும்."

"மூர்க்கா! நீயும் நானும் ஒரே இனம். கொள்ளையர் இனம். ஆரம்பம் முதல் நான் சொன்னபடி நடந்து வருகிறேன். நீ தான் ஆரம்பம் முதல் துரோகம் செய்து வருகிறாய். கூட்டு முயற்சியில் பரஸ்பர நம்பிக்கை வெற்றிக்கு வழிவகுக்கும். தன்னலமான துரோகமோ தோல்விக்குத்தான் வழிவகுக்கும். இதை நீ இப்போதாவது உணர்ந்து கொள். சொல்வது ஒன்று செய்வது ஒன்று என்று நீ நடந்து கொண்டால் உன்னை வெட்டிப் போட்டு விட்டுத்தான் மறுகாரியம் பார்ப்பேன். இப்போதும் சொல்கிறேன். பொன் அகழும் எறும்பு உன் வசம் உள்ளது. அதைக் கொண்டு பொன்னைக் கண்டு பிடித்து கவர்ந்து கொள்வதென்றால் செய். நான் விலகிக் கொள்கிறேன்" என்றான் உதயணன் உறுதியான குரலில்.

"இல்லை உதயணரே. இல்லை. நீங்கள் தான் உதவ வேண்டும். உங்கள் மூலம் தான் தங்கம் கிடைக்க வேண்டும்."

"உங்கள் வசம் எத்துணை பேர் இருக்கிறார்கள்?"

"நூறு கொள்ளையர் இருந்தார்கள். நான்கு பேர் இறந்து விட்டார்கள். பத்து பணியாளர்கள் இருக்கிறார்கள். எப்படிப் பார்த்தாலும் நூறு பேர் தேறும்."

"என்னிடம் பத்து பேர் இருக்கிறார்கள். மொத்தம் நுற்றுப் பத்து பேர். இவர்களை வைத்துக் கொண்டு ஏரியை வெட்டும் பணியை மேற்கொள்ள முடியாது. மேற்கொண்டால் நம்ப மாட்டார்கள். இன்னும் இருநூறு பேர் தேவை. முன்னூறு பேருக்குக் குறைவில்லாமல் இப்பணியில் ஈடுபட்டால் தான் நாம் ஏரியை வெட்டுகிறோம் என்பதை நம்புவார்கள். சந்தேகப் பட மாட்டார்கள். இன்னும் இருநூறு பேர் வேண்டுமென்றால் தரகர்கள மூலம் பெறலாம். ஆனால் அவர்களுக்குக் கூலி கொடுக்க வேண்டும். என்ன செய்வது?"

“எங்களிடம் இருந்தவற்றையெல்லாம் ஏறக்குறைய ராஜபிரதிநிதியிடம் கொடுத்து விட்டோம். எஞ்சியுள்ள நகைகளை விற்றுத் தான் நூறு பேர் உணவு உண்ண வேண்டும். வேண்டுமானால் அதைத் தருகிறோம்.”

“வேண்டாம். சோற்றுக்கு வழியில்லாமல் சேற்றில் கால் வைக்க முடியாது. ஆகவே உங்களிடம் உள்ள நகைகளை விற்று பொருட்களாக வாங்கி வைத்துக் கொள்ளுங்கள். நான் வேறு ஒரு வழி செய்கிறேன்.”

“என்ன செய்வீர்கள்?”

“தரகனிடமே வட்டிக்குக் கடன் வாங்கி அதையே அவனுக்குச் சம்பளமாகக் கொடுக்கலாம். பொன் கிடைத்த பின் கடனை அடைத்து விடலாம்.”

“உதயணரே! நீங்கள் மட்டும் இல்லாதிருந்தால் எங்கள் நிலை கந்தல் நிலையாகியிருக்கும். நாங்கள் செய்த அதிர்ஷ்டம் தான் உங்களை என்னிடம் சேர்த்திருக்கிறது” என்று சொல்லி உதயணனைக் கட்டிக் கொண்டான் கொள்ளையர் தலைவன்.

“சரி மூர்க்கா. நாளை விடியற்காலை நேரத்தில் நீயும் உன் ஆட்களும் உபகரணத்தை எடுத்துக் கொண்டு பூதக் கோட்டைக்கு வந்து விடுங்கள். நான் சென்று தரகனைப் பார்க்கிறேன். வரும் போது பெட்டியில் இருக்கும் ஆயுதங்களையும் கொண்டு வந்து விடுங்கள்” என்றான் உதயணன்.

அவ்வாறு பேசி விட்டு பூதக் கோட்டைக்கு வந்த போது “நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்பது எனக்கு விளங்கவில்லை. குழப்பமாக இருக்கிறது” என்றான் விகர்ணன்.

“உண்மைதான் விகர்ணரே. சொல்லப் போனால் நான் என்ன செய்கிறேன் என்பது எனக்கே சற்று குழப்பமாகத்தான் இருக்கிறது. அநேகமாக இரண்டு நாட்களில் எல்லாம் புரிந்து விடும். உங்களுக்கான வேலையும் தொடங்கிவிடும்” என்று சொன்ன உதயணன் “கொள்ளையர்களிடமிருந்து பெற்ற நகைகளையெல்லாம் சேனாதிபதி பகாசூரருக்கு அனுப்பி விட்டீர்கள் அல்லவா?” என்று கேட்டான்.

“நேற்றே அனுப்பி விட்டோம்” என்றான் விகர்ணன்.



மறுநாள் சொன்னபடி தனது சகாக்களோடும் பொன் அகழும் எறும்பு இருந்த கூண்டோடும் வந்து சேர்ந்தான் கொள்ளையர் தலைவன். அவனோடு ஆசை நாயகி கள்ளழகி வரவில்லை.

உதயணன் அவர்களை குறிப்பிட்டதோர் இடத்திற்கு வரச் சொல்லி அங்கே கூண்டிலிருந்த ராட்சத எறும்பை எடுத்து பூமியில் விட்டான். அது இப்படியும் அப்படியுமாக இரண்டடி நகர்ந்து நின்று விட்டது.

“இங்கே தங்கம் இல்லை. அடுத்த இடத்திற்குப் போகலாம்” என்றான் உதயணன்.

அங்கிருந்து ஒரு கல் தொலைவுக்குச் சென்றார்கள். அங்கே மீண்டும் எறும்பு விடப்பட்டது. அது விடுவிடுவென்று வேகமாக நடந்தது. நூறடி தூரம் வரை நகர்ந்து குரல் கொடுத்தது.

அங்கே குறிப்பிட்ட தூரம் வரை தங்கத்துகள்கள் அங்குமிங்குமாய் தெரிந்தன.

உதயணன் அந்த எறும்பைக் கொண்டு போய் சற்றே தூரத்தில் விட்டான்.

அது மீண்டும் பழைய இடத்திற்கே வந்து நின்றது.

“சந்தேகமில்லை. இது தான் தங்கம் கிடைக்கும் இடம். கண்களில் தென்படும் பொன் துகள்களை மண்ணோடு சேர்த்து எடுத்து வையுங்கள். பின்னால் சலித்துக் கொள்ளலாம்: இந்த எறும்பையும் கூண்டில் வையுங்கள்” என்று பொதுவாகச் சொன்ன உதயணன் கொள்ளையர் தலைவனைப் பார்த்து “இங்கே நூறடிக்கு நூறடி சதுரத்தில் தடுப்பு தட்டிகளைக் கட்டி நாம் தங்கும் இடம் போல ஒதுக்கிக் கொள். உடனடியாக இங்கே தோண்ட வேண்டாம். இந்த இடத்தை ஒட்டியுள்ள இடம் ஏரிக்கான இடமாக இருக்கட்டும். அந்த இடத்தில் இரண்டாயிரம் முழம் நீளத்திற்குக் கம்புகளை நட்டு அதைத் தோண்ட ஆரம்பியுங்கள். தரகர் அனுப்பும் இருநூறு ஆட்கள் நாளையாவது நாளை மறுநாளாவது வருவார்கள். அவர்கள் வந்ததும் ஏரி வெட்டும் பணி வேகமடையும். இங்கே வந்து பார்ப்பவர்கள் இங்கே ஏரி தான் வெட்டப்படுகிறது என்று உறுதி செய்து கொண்டு விட்டால் பொன் அகழும் நமது பகுதி மீது அவர்களது கவனம் வராது. நாம் இரவில் இங்கே தோண்டுவோம். பகலில் இங்கு யாரும் வராமல் பார்த்துக் கொள்வோம்” என்றான்.

கொள்ளையர் தலைவனுக்குப் பரமதிருப்தியாக இருந்தது. உதயணன் மட்டும் இல்லையென்றால் ஒன்றுமே நடந்திருக்காது என்று சந்தேகமறத் தெரிந்து கொண்ட அவன் உதயணன் கூறியபடி ஏற்பாடுகளைச் செய்தான். வரம்புகள் அழிக்கப்பட்டு ஆயத்தப் படுத்தப் பட்டன. மறுநாளே தரகன் அனுப்பிய ஆட்களும் வந்து சேர்ந்ததால் வேலை சுறுசுறுப்படைந்தது.

அண்டைப் பகுதியில் இருந்த மக்கள் அங்கு வந்து ஏரி வெட்டும் பணியைக் கண்டார்கள். அவர்களுக்கு மகிழ்ச்சியாக இருந்தது. அவர்களில் பலரும் ஏரி வெட்டும் பணியில் இணைந்தார்கள். உதயணன் அவர்களை ஆதரித்ததோடு மண்ணைத் தோண்டும் பணியிலும் ஈடுபட்டான். தினமும் பகலில் ஏரி வெட்டும் பணி நடந்தது. இரவில் கொள்ளையர்கள் பணி மட்டும் நடந்தது. இரவில் கொள்ளையர்கள் மட்டும் நூறடி சதுரத்தில் தங்கத்திற்காகச் சுரண்ட ஆரம்பித்தார்கள்.

“மெதுவாக அகழுங்கள். எவ்வளவு ஆழத்திற்குப் போக வேண்டும் என்பது தெரியாது. அதோடு கீழே இறங்கவும் மேலே ஏறவும் வசதியாக மண் படிக்கட்டுகளை இருபுறமும் அமைத்துக் கொள்ளுங்கள். தங்கப் படிமங்கள் இருக்கும் இடம் நெருங்கும் போது நறுமணம் வீசும்” என்றான் உதயணன்.

எல்லாம் செவ்வனே நடந்ததால் கொள்ளையர் தலைவன் பரம சந்துஷ்டி அடைந்தான். ஆசை நாயகியை அங்கேயே வரவழைத்து மறைவிடத்தில் வைத்துச் சாறு பிழிந்தான்.

கொள்ளையர் தலைவனுக்குத் தன் மீது பூரண நம்பிக்கை வந்து விட்ட நிலையில் ஒரு நாள் பூதக் கோட்டைக்கு வந்த உதயணன் விகர்ணனைப் பார்த்து “அந்தச் சிலைக்கு பக்கத்தில் இருக்கும் மரப் பொந்திலிருந்து இரண்டு எறும்புகளையும் கூண்டில் அடைத்துக் கொண்டு புறப்படுங்கள்” என்றான்.

“ஐயா! ஏற்கனவே நம்மிடம் இரண்டு எறும்புகள் இருந்தன. அவற்றைக் கொள்ளையரிடம் கொடுத்தீர்கள். அவர்கள் எறும்பு காட்டிய இடத்தில் தோண்டவும் முற்பட்டு விட்டார்கள். நீங்களும் அவர்களோடு பணி செய்கிறீர்கள். அப்படியிருக்கும் போது இந்த எறும்புகள் எதற்கு?” என்று கேட்டான் விகர்ணன்.

“விகர்ணரே! அங்கே நடப்பது பொய். இங்கே நாம் நடத்தப் போவது தான் மெய்” என்றான் உதயணன்.

“என்ன சொல்கிறீர்கள்?”

கொள்ளையர்களிடம் காட்டப்பட்ட எறும்புகள் பொன்னை அகழும் எறும்புகள் அல்ல. அவற்றைப் போலவே இருக்கும் போலி எறும்புகள். நம்மிடம் இப்போது இருக்கும் எறும்புகளே உண்மையான பொன் அகழும் எறும்புகள்.* பாடலிபுரத்தில் இருந்து கொண்டு வரப்பட்டவை. பொன்னிறத்திலேயே இருப்பவை. இவற்றைக் கொண்டு பூதக்கோட்டைக்கருகே உள்ள காட்டில் பொன்னிருக்கும் இடத்தை அறிந்து கொண்டேன்.

* பக்கம் 12 'மெகஸ்தனிஸ்' தமிழில் வி. எஸ். வி. ராகவன்.

நாம் அங்கே தோண்டும் போது கொள்ளையர்கள் குறுக்கிடக் கூடாது என்பதற்காகத்தான் அவர்களோடு சேரும் நாடகத்தை ஆரம்பித்தேன். பொன் கிடைக்காத இடத்தை அவர்களுக்குக் காட்டி அவர்கள் நம்பும் விதமாக பொய்யான இடத்தில் பொன் துகள்களைத் தூவி வைத்தேன். அவர்கள் அங்கே தோண்டிக் கொண்டிருக்கிறார்கள். மக்களால் தொல்லை வரக் கூடாது என்பதால் தான் ஏரி கட்டும் பணியை அவர்கள் மூலமாகவே தொடங்கச் செய்தேன். இப்போது நம்மீது யாருடைய கவனமும் இருக்காது. இந்தப் பொன் நிற எறும்புகளைக் காட்டிற்குக் கொண்டு போய் விட்டால் பொன்னிருக்கும் இடங்களை அவைகளே அகழும். ஓரளவிற்கான ஆழம் வரை அகழ்ந்து பின் நாம் தோண்ட ஆரம்பிக்கலாம். பொன்னிருக்கும் இடம் தான் என்றால் அவை சிறு ஒலியை எழுப்பிய படி இருக்கும். பொன்னில்லை என்றால் மௌனமாகி விடும். இனி நீயும் உன்னோடு வந்த வீரர்களும் அந்தப் பணியைத் தொடங்க வேண்டும். அதோடு காட்டுப் பகுதிக்குள் யாரும் வராத வண்ணம் வீரர்கள் கண்காணிப்பும் செய்ய வேண்டும்" என்றான் உதயணன்.

பிறகு அனைவருமாகக் காட்டுப் பகுதிக்குச் சென்றார்கள். அங்கே அடையாளம் தெரிவதற்காக ஆறு மரங்கள் வெட்டப் பட்டிருந்தன. அவற்றுக்கிடையில் பத்தடிக்குப் பத்தடி சதுரத்தில் தரைப் பகுதி வீசிவிடப்பட்டது. அப்பகுதியில் எறும்புகள் விடப்பட்டதும் அவை வேகவேகமாகப் பூமியை அகழ்ந்தன.

ஓரடி வரை அவை பூமியை அகழ்ந்து விட்டு நின்றன. வீரர்கள் தோண்ட ஆரம்பித்தார்கள். ஐந்தடி ஆழம் தோண்டியதும் "இப்போதைக்கு இது போதும் விகர்ணா. இரவில் மறுபடியும் தோண்டுவோம். நான் வந்தாலும் வராவிட்டாலும் நீங்கள் ஆரம்பித்து விடுங்கள். இரவில் யாரும் வரமாட்டார்கள். நான் கொள்ளையர்கள் அகழும் இடத்திற்குப் போகிறேன்" என்று கூறி விட்டு அகன்றான் உதயணன்.

இரவில் விகர்ணனின் மேற்பார்வையில் வீரர்கள் தோண்டினார்கள்.

விகர்ணன் தன் கையில் வைத்திருந்தப் பந்தத்தை மண்ணில் புதைத்து விட்டு தனியே சென்றான்.

பந்த ஒளி படாமலிருந்த இடத்திற்குச் சென்ற போது யாரோ பின் தொடர்வது போலத் தோன்றியது.

"ம். ம். ம்" என்று மூச்சு விடும் ஒலியும் கேட்டது.





நாம் விரும்பியபடி நடக்குமானால் நாம் மனிதர்களாகப் பிறந்திருக்க மாட்டோம். மனிதர்களைப் படைப்பவர்களாகப் பிறந்திருப்போம் – உதயணன்




எந்த காரியத்தைச் செய்தாலும் அதைப் பற்றிய விவரங்களைச் சரியாகத் தெரிந்து கொண்டுச் சிறப்பாகச் செய்பவன் விகர்ணன்.

தங்கத்திற்கான பள்ளம் தோண்டும் போது என்னென்ன இடையூறுகள் வரும் என்பதை உதயணன் கூறியிருந்தான். அதில் மண் சரிவு முக்கியமானதென்பதை அறிந்து கொண்டிருந்த உதயணன் பள்ளத்தைத் தோண்டும் போதே மரத் தண்டுகளை இருபுறங்களிலும் புதைக்கச் செய்து அவற்றையே கைப் பிடிகளாகவும் படிக்கட்டுகளாகவும் இருக்கும்படிச் செய்தான். பள்ளம் தோண்டும் இடத்திற்கு மேலே இருந்த மரக் கிளைகளில் கயிறுகளைக் கட்டித் தொங்க விட்டான். பள்ளத்தில் இருப்பவர்கள் ஆபத்தான நேரங்களில் அக்கயிற்றைப் பிடித்துக் கொண்டு மேலே வருவதற்காக அந்த ஏற்பாட்டைச் செய்தான்.

பொன்னகழும் எறும்புகள் உதயணன் கூறியபடி மெதுவாகச் சத்தமிட்டுக் கொண்டிருந்ததால் பத்தடி ஆழம் வரைத் தோண்டச் செய்தான் விகர்ணன். பணிபுரிபவர்களுக்குப் பருகுவதற்கு நீர் தேவைப்பட்டதால் பள்ளத்திற்கு மேலே வைக்கப்பட்டிருந்த மரஅண்டாவில் நீரை நிரப்பியிருந்தான். அதன் அளவு மிகவும் குறைந்து விடவே அண்டாவை நிரப்புவதற்காக குவளையை எடுத்துக் கொண்டு அருகில் இருந்த தடாகத்திற்குச் சென்றான்.

கணிசமான தூரம் சென்ற போது யாரோ அவனைத் தொடர்ந்து வருவது போன்ற பிரமை ஏற்பட்டது. இருப்பினும் அவன் திரும்பிப் பார்ப்பதில்லை. கானகல் கோட்டை போருக்கு முதன்முறையாக சேனாதிபதி பகாசூரர்களால் அனுப்பப் பட்ட போது இடையில் குறுக்கிடும் காடுகளில் என்னென்ன தடைகள் மற்றும் உபத்திரங்கள் வரக் கூடும் என்பதையெல்லாம் கூறியிருந்தார். அவை மட்டுமின்றி காட்டில் இருக்கக் கூடிய அமானுஷ்ய விஷயங்களைப் பற்றியும் விளக்கியிருந்தார்.

“விகர்ணா! நமது பாரத நாடு உலகிலேயே சிறந்த நாடு. இது புண்ணிய பூமி. ஏராளமான முனிவர்களும் மகான்களும்

காடுகளில் காலம் காலமாகத் தவங்களைச் செய்து முக்தியடைந்திருக்கிறார்கள். அவர்களது புண்யாத்மாக்கள் மலைக் காடுகளில் வாசம் செய்யும். அவற்றோடு பிசாச கணங்களும் அருவமாகத் திரியும். அவை எழுப்பும் குரல்கள் விநோதமாகவும் அமானுஷ்யமாகவும் இருக்கும். அந்த அருவங்கள் சில நேரங்களில் ஒளி வடிவமாகவும் பல நேரங்களில் புகை வடிவமாகவும் உலவும். புண்ணிய ஆத்மாக்களாக இருந்தால் அவை பக்கத்தில் வரும் போது நறுமணம் வரும். இதர அருவங்கள் வந்தால் துர்நாற்றம் வீசும். இவற்றைக் கொண்டு நீ அருவங்களின் வித்தியாசத்தை அறியலாம். அவை அருவங்களாகத் திரிவதால் உன்னால் காண முடியாது. தாக்கவும் முடியாது. உனக்கு அவை உன்னருகில் வருவது போல் தோன்றினால் பயப்படாதே. நான் கூறும் மந்திரச் சொற்களை மட்டும் சொல். அவை விலகிச் சென்று விடும்" என்றுச் சொல்லியிருந்தார்.

விகர்ணனுக்குத் தனக்குப் பின்னால் யாரோ வருவது போல உணர்வு வந்த போது சேனாதிபதி கூறியது போல நறுமணமோ துர்நாற்றமோ வீசவில்லை. எனவே பிரமையாக இருக்குமோ என்று நினைத்தான்.

ஆனால் 'ம். ம். ம்' என்று மூச்சு விடுவது போன்றச் சத்தம் மெதுவாக உண்டாகவே இடையில் இருந்த வாளை எடுத்து வீசமுற்பட்ட போது அமானுஷ்ய குரலொன்று எழுந்தது. கிளைகள் அசைந்தன. இருட்டாக இருந்ததால் யாரையும் காணவில்லை. அதற்கு மேல் அதைப் பொருட்படுத்தாத அவன் குவளையில் தடாக நீரை நிரப்பிக் கொண்டு வந்து பள்ளம் தோண்டும் இடத்திற்குச் சென்று அண்டாவில் ஊற்றினான்.

மறுதடவை தடாகத்திற்குச் சென்ற போது பந்தம் ஒன்றை விகர்ணன் எடுத்துச் சென்றதால் அவனை யாரும் பின் தொடரவோ அச்சுறுத்தவோ முயலவில்லை. அண்டாவை நிரப்பினான்.

பள்ளம் தோண்டும் பணி தொடங்கி மூன்று நாட்கள் ஆகியிருந்தன.

அந்த மூன்று நாட்களும் உதயணன் அங்கு வரவில்லை.

நான்காம் நாள் இரவு உதயணன் வந்தான். வீரர்கள் அனைவரும் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தார்கள். விகர்ணன் மட்டும் உறங்காமல் பாறை ஒன்றில் அமர்ந்திருந்தான்.

உதயணனும் அங்கு வந்து அமர்ந்தான்.

"நீங்கள் உறங்கவில்லையா விகர்ணரே?" என்று கேட்டான்.

"நான் பகல் நேரங்களில் சிறிது நேரம் தூங்கிக் கொள்கிறேன். இரவில் தூங்குவதில்லை. வீரர்களை உறங்கச் சொல்லி காவல் புரிகிறேன்" என்றான் விகர்ணன்.

"கொள்ளையர்கள் பணி எப்படி இருக்கிறது?" என்று விகர்ணனே கேட்டான்.

"இந்த நிமிடம் வரை பிரச்சனையில்லாமல் காரியங்கள் நடந்து கொண்டிருக்கின்றன" என்றான் உதயணன்.

"அவர்களை நாம் ஏமாற்றுவது சரிதானா?" என்று கேட்டான் விகர்ணன்.

"இது என்ன இப்படியொரு திடீர் கேள்வி?" என்று கேட்டான் உதயணன்.

"உண்மையைத் தான் கேட்கிறேன். தெரிந்து கொள்வதற்காகத் தான் கேட்கிறேன்."

"விகர்ணரே! எதற்காக ஏமாற்றுகிறோம் என்பதை விட யாரை ஏமாற்றுகிறோம் என்பது தான் முக்கியமானது. நாம் அப்பாவிகளையும் தர்மசீலர்களையும் ஏமாற்றவில்லை. கொள்ளைக்காரர்களை ஏமாற்றுகிறோம். அவர்கள் அப்பாவிகளோ தர்ம சீலர்களோ அல்ல. அவர்கள்ளெல்லாம் ஏமாற்றியும், மிரட்டியும், கொன்றும் கொள்ளைகளை மேற்க் கொள்ளும் கொடுமைக்காரர்கள். தேசம் பற்றிய நேசமில்லாத நாசக்காரர்கள். நாசக் கருவிகள். இவர்களை ஏமாற்றுவதில் எந்தத் தவறும் இல்லை. அதோடு இங்கே வந்து இவர்கள் ஆறுமாதங்களாகத் தங்கியிருக்கிறார்கள். தங்கத்தைக் கைப்பற்ற வழி தெரியாமல் காத்திருக்கிறார்கள். வழி செய்திருந்தால் தங்கத்தைக் கைப்பற்றியிருப்பார்கள். நாம் தங்கத்தைக் கைப்பற்ற முயன்றால் அந்த முயற்சியை நடை பெறவிடாமல் தடுப்பார்கள். இவர்களிடம் பேச்சு வார்த்தை நடத்தி அகற்ற முடியாது. கூட இருந்து - கூடியிருந்து குடியைக் கெடுக்க வேண்டும்."

"இந்தத் தங்கத்தைக் கைப்பற்றுவதில் நமக்கும் கொள்ளைக் காரர்களுக்கும் என்ன வித்தியாசம்?"

"இது கூடவா உங்களுக்குத் தெரியவில்லை? கொள்ளையர்கள் தங்கத்தைக் கைப்பற்றினால் தங்கள் சொந்த உபயோகத்திற்காகப் பயன்படுத்திக் கொள்வார்கள். நாம் கைப்பற்றினால் அது நம் நாட்டிற்காகப் பயன்படும்" என்று சொன்ன உதயணன் "விகர்ணரே! ஏமாற்றுவது என்பது சில நேரங்களில் வாழ்க்கையின் நிர்பந்தமாக இருக்கிறது. நடை முறையாகவும் இருக்கிறது. போர்களிலேயே கூட இது நடக்கிறது என்பது

உங்களுக்குத் தெரியாதா? எதிரிகள் நம்மை ஏமாற்றும் போது நாமும் ஏமாற்றுவதில் இறங்க வேண்டும். அங்கே தர்ம நியாயங்களைப் பேசிக் கொண்டிருக்க முடியாது. ஏமாற்றுவது என்பது ஒரு சாமர்த்தியம். சந்தர்ப்பங்களுக்கு ஏற்பவும் எதிரிகளுக்கு ஏற்பவும் கைக்கொள்ளப்படும் கலை" என்றான் உதயணன்.

"ஏமாற்றுவதைக் காட்டிலும் அதைப் பற்றிய நியாயத்தை அழகாகவே சொல்கிறீர்கள். சொல்லப் போனால் ஒரு செயலில் இறங்குவதற்கு முன்பும் இறங்கியதற்குப் பின்பும் அதைப் பற்றிய பேச்சு சாமர்த்தியம்தான் நமக்குப் பெரிதும் துணையாக இருக்கின்றன."

"அதை விடுங்கள் விகர்ணரே. எத்தனை அடிக்குப் பள்ளம் தோண்டப்பட்டிருக்கிறது?"

"பதினைந்தடி தோண்டியுள்ளோம்."

"எத்தனை அடிகள் தோண்ட வேண்டும் என்பதை நாம் முடிவு செய்ய வேண்டியதில்லை. எறும்புகள் முடிவு செய்யும்" என்ற உதயணன் அன்றிரவு அங்கேயே தங்கி உறங்கினான்.

மறுநாள் அவன் ஏரி தோண்டும் இடத்திற்குப் போன போது "இரவெல்லாம் உங்களைக் காண வில்லையே! எங்கு போய் விட்டீர்கள்?" என்று கேட்டான் மூர்க்கன். அவனது குரலில் கேலி இருந்தது.

அதைக் கவனித்த உதயணன் "தங்கத்தைத் தோண்டி எடுப்பதற்காக நான் தனியாகத் தோண்டியிருக்கிறேன். அதைப் பார்த்து விட்டு வருவதற்காகத் தான் சென்றேன்" என்றான் சாதாரணமாக.

பிறகு அவனே பேச முற்பட்டு "மூர்க்கா! உங்களுக்கே உரிய கீழ்மைத் தனங்களை என்னிடம் காட்ட முயற்சிக்காதே. உன் சந்தேகத்தையும் கேலிப் பேச்சுக்களையும் உங்களவர்களிடம் வைத்துக் கொள். என்னிடம் வேண்டாம். மீண்டும் இது போல் நடந்து கொள்ள முற்பட்டால் இந்தப் பள்ளமே உனக்கும் சமாதியாகி விடும். தெரிந்து கொள்" என்றான்.

"நான் கேலியாகக் கேட்கவில்லை உதயணரே. எங்களோடு தங்கவில்லையே எங்கே சென்று விட்டீர்கள் என்பதற்காகக் கேட்டேன்" என்றான் மூர்க்கன்.

"நான் எங்கே இருக்கிறேன். எங்கே சென்றேன் என்பது முக்கியமல்ல. என்ன செய்தேன் என்பதுதான் முக்கியம். இதுவரை எவ்வளவு வேலை நடந்திருக்கிறது என்பது தெரியுமா?

ஏரிக்கான பரப்பளவில் ஒன்பதாயிரத்து பத்து அடி நீளமும் எண்ணூற்று இருபதடி அகலமும் தோண்டப்பட்டுள்ளன. தோண்டப்பட்ட ஆழம் சராசரியாக ஒன்றரையடி. நேற்று பணி புரிந்தவர்கள் 286. நேற்றுக்கு முன்தினம் பணிபுரிந்தவர்கள் 270. இன்றைக்குப் பணிபுரிந்தவர்கள் 265. மூன்று நாட்களிலும் ஏரிப்பணி செய்த 188 நபர்களுக்கு வழங்க வேண்டிய சம்பளம் 990 வராகன். ஏரிப் பரப்பில் இருக்கும் விளா மரங்கள் 14. கமுகு மரங்கள் ஏழு. கோமுக மரங்கள் 26. முள் மூங்கில் மரங்கள் 46. மூன்று நாட்களில் காயமடைந்தவர்கள் 9 பேர். உடல் நலம் சரியில்லாதவர்கள் 6 பேர். நீங்கள் உங்கள் ஆசைநாயகியை அழைத்துக் கொண்டு மறை விடத்திற்குச் சென்றது 14 முறை. உங்கள் கொள்ளையர்களில் சோமன் என்பவன் காணவில்லை. போதுமா? இவ்வளவு விவரங்களை அறிந்து வைத்திருக்கிறேன். உங்களுக்கு என்னென்ன தெரியும்? சொல்லுங்கள் பார்க்கலாம்" என்றான் உதயணன்.

கொள்ளையர் தலைவன் அசந்து போனான்.

உதயணனின் கைகளைப் பிடித்துக் கொண்டு "உங்கள் அறிவே அறிவு. உங்கள் திறமையே திறமை. நீங்கள் ஞான சூரியன். நான் ஞான சூன்யன். நீங்கள் இருக்க வேண்டிய இடமே வேறு. அரசாங்கத்தில் இருந்திருந்தால் உங்களுக்கு அமைச்சர் பதவி கிடைத்திருக்கும். நீங்கள் எப்படி கொள்ளைக்காரன் ஆனீர்கள்?" என்று கேட்டான்.

"மூர்க்கா! நாம் விரும்பியபடி நடக்குமானால் நாம் மனிதர்களாகப் பிறந்திருக்க மாட்டோம். மனிதர்களைப் படைப் பவர்களாகப் பிறந்திருப்போம். ஆனால் துரதிர்ஷ்டவசமாக நாம் எதற்காகப் படைக்கப் பட்டோமோ அவ்வாறு வாழ்வதற்காகவே உயிர் வாழ்கிறோம். நான் அரசாங்கத்தில் உயர் பதவியில் இருந்தவன்தான். என்னோடு பலரும் பல பதவிகளில் உயர்ந்திருந்தார்கள். அவர்களுக்கு எனது திறமையின் மீது பொறாமைதான் வந்ததே தவிர பெரிய மனம் வரவில்லை. எனது திறமை அவர்களது திறமையின்மையை வெளிப்படுத்தி விடும் என்று பயந்தார்கள். என்னைப் பற்றித் தவறுதலாகப் பேசினார்கள். கோள் மூட்டினார்கள். குறை சொன்னவர்களின் எண்ணிக்கையும் கோள் சொல்பவர்களின் எண்ணிக்கையும் அதிகமாக இருந்ததால் மகாராஜா அவர்களின் கூற்றையே நம்பினார். ஏற்றார். எல்லோரும் என்னை குற்றவாளி என்றார்கள். உற்றவர்கள் மட்டுமின்றிக் கொற்றவனும் அவ்வாறே சொல்லி எனக்குச் சிறை வாசத்தை அளித்தார்கள். செய்யாத குற்றத்திற்காகச் சிறையில் இருக்க எனக்குப் பிடிக்கவில்லை.

அங்கே அறையில் கிடந்த ஒவ்வொரு நொடியும் யாரோ என்னை அறைவது போலவே நினைக்க வைத்தது. குற்றம் செய்யாதவனை குற்றவாளி என்றால் அதற்கு அர்த்தம் குற்றங்களைச் செய் என்பது தான் என்று கருதினேன். குறையோடும் கறையோடும் சிறையில் இருக்க விரும்பாத நான் அங்கிருந்து தப்பினேன். இனிமேல் நியாயமான வாழ்க்கை வாழ்வது முட்டாள் தனம் என்று முடிவு கட்டினேன். கொள்ளைக்காரனாகி கர்நாடக நாட்டிற்கு வந்தேன். திறமை யானவனாக இருந்த போது மதிக்கத் தவறினார்கள் பதவியில் இருந்தவர்கள். கொள்ளைக்காரனாகி விட்ட பின் மன்னன் உட்பட எல்லோரும் என்னைக் கண்டு அஞ்சுகிறார்கள். இப்போது தான் திருப்தியாக இருக்கிறது" என்றான் உதயணன்.

"நீங்கள் எடுத்த முடிவு சரியான முடிவு. சிறப்பான முடிவு. தன்னை மதிக்க மறுத்தவர்களை மிதிப்பதே சரியானது. நம்மைக் கண்டு மதிக்கிறவர்களை விட நம்மைக் கண்டு மற்றவர்கள் அஞ்சும் போது நமக்குத் திருப்தியான மரியாதை கிடைக்கிறது. பெரும்பாலான கொள்ளைக்காரர்களுக்கு இதுதான் உகந்ததாக இருக்கிறது" என்று சொன்ன கொள்ளையர் தலைவன் "உங்கள் மகத்துவம் தெரியாமல் கேலி பேசி விட்டேன். என்னை மன்னித்து விடுங்கள்" என்றான்.

"என்ன எந்தக் காரணத்திற்காகவும் கட்டுப்படுத்தி வைக்கவோ கேள்வி கேட்கவோ முயலாதே. நான் சுதந்திரமானவன். என்னைச் சுதந்திரமாக விட்டாயானால் உங்களுக்கெல்லாம் சுகமாக இருக்கும். என் மீது சந்தேகப்பட்டு கேள்வி கேட்கவோ கட்டுப்படுத்தவோ முயன்றால் சோகம்தான் முடிவாக இருக்கும். இதை நீ நினைவில் வைத்துக் கொண்டால் போதும்" என்று உறுதியான குரலில் சொன்ன உதயணன் தங்கத்திற்காகத் தோண்டப்படும் இடத்திற்குச் சென்று பள்ளத்திற்குள் இறங்கினான்.

கொள்ளையர்களிடம் பேசினான்.

ஓரிடத்தில் மண் படிக்கட்டு உடைந்து கிடந்தது.

அங்கே மரத்துண்டு ஒன்றை அழுத்தும் படிச் சொன்னான்.

"இன்னும் எவ்வளவு ஆழம் தோண்ட வேண்டும்?" என்று கேட்டார்கள் கொள்ளையர்கள்.

"நீங்கள் இப்போதைக்கு இருபதடிதான் தோண்டி இருக்கிறீர்கள். இது மிகவும் சொற்பம். இருநூறு அடி வரைத் தோண்டினால்தான் ஏதாவது தடயம் கிடைக்கும்" என்று

சொன்ன உதயணன் பொன் அகழும் எறும்பைக் கொண்டு வரும்படிச் சொன்னான்.

எறும்பு கொண்டு வரப்பட்டதும் அதைப் பள்ளத்தில் வைத்தான் உதயணன்.

அது அமைதியாக இருந்தது.

“நன்றாக கவனியுங்கள். இந்த எறும்பு அமைதியாக இருக்கிறது. இது அமைதியாக இல்லாமல் மெல்லிய குரலெழுப்பினால் தங்கம் இருக்கும் இடத்திற்கு அருகில் வந்ததாகக் கருதலாம். ஆகவே அவ்வப்போது இந்த எறும்பைக் கொண்டு வந்து நிலைமையை அறிந்து கொள்ளுங்கள்” என்று சொன்ன உதயணன் “நீங்கள் எல்லோரும் எப்போதுமே இங்கே வேலை செய்து கொண்டிருந்தால் சந்தேகம் வரும். அடுத்த இரண்டு நாட்களுக்கு இங்கே வரவேண்டாம். ஏரியை வெட்டும் பணியாளர்களோடு சேர்ந்து கொள்ளுங்கள். ஏரி வெட்டும் பணி வேகமாக நடக்க வேண்டும். ஏனென்றால் அது வெளிப் படையான பணி. மக்களையும் அரசாங்கத்தையும் திருப்தி படுத்தும் பணி. இங்கே செய்யும் பணியோ ரகசியமானது. மக்களுக்கும் அரசாங்கத்திற்கும் தெரியாமல் நடக்கும் பணி. இது கவனமாகவும் நிதானமாகவும் சந்தேகத்திற்கு இடமில்லாமலும் செய்ய வேண்டும்” என்று சொன்ன உதயணன் “உங்களில் ஒருவனான சோமன் எங்கே?” என்று கேட்டான்.

“இங்கே பணியில் இருக்கிறான் என்று தான் நினைத்தோம். ஏன் என்ன ஆயிற்று?”

“அவனைக் காணவில்லை. உங்களில் ஒருவன் காணாமல் போனால் தேடிக் கண்டு பிடிக்கப்பட வேண்டும். இது போன்ற நிலைமையில் ஒருவன் காணாமல் போவது நல்லதல்ல. உங்கள் தலைவனிடம் சொல்லுங்கள்.”

“தாங்கள் சொல்லவில்லையா?”

“சொன்னேன். கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. அது மட்டுமல்ல. அவர் என்னைச் சந்தேகிக்கிறார். இச்சந்தேகம் தொடர்ந்தால் தான் விலகிக் கொள்வேன். ராஜபிரதிநிதி யிடமும் சொல்லி விடுவேன்” என்று கூறிவிட்டு மேலே வந்தான் உதயணன்.

அன்றைக்கு பகல் உணவு நேரத்தில் போது தலைவனிடம் சோமனைப் பற்றி விசாரித்தார்கள்.

“என்ன ஆயிற்று சோமனுக்கு?” என்று கேட்டான் தலைவன்.

"நாங்கள் கேட்ட கேள்வியையே நீங்கள் கேட்கிறீர்கள் தலைவரே. அவன் காணவில்லை என்பதை காலையில் உதயணர் உங்களிடம் சொன்னாராமே! என்ன செய்தீர்கள்?" என்று கேட்டார்கள் கொள்ளையர்கள்.

"சோமன் காணவில்லை என்றால் நான் தேடிக் கொண்டு போக வேண்டுமா? உங்களில் பத்து பேர் போய் அவனைத் தேடி கண்டு பிடியுங்கள்" என்றான் கொள்ளையர் தலைவன்.

கொள்ளையர்கள் சற்றே விழித்தார்கள்.

பிறகு அவர்களே பேச முற்பட்டு "உதயணரை நீங்கள் மீண்டும் மீண்டும் சந்தேகிக்கிறீர்கள். எங்களிடம் சொல்லி அவர் வருத்தப்பட்டார்" என்றார்கள்.

"சந்தேகப்பட வேண்டும் என்பது என் விருப்பமல்ல. சந்தேகம் வரும் போது கேட்டுத் தீர்த்துக் கொள்கிறேன்."

காலையில் உதயணன் பேசியதையும் ஆலோசனைகள் சொன்னதையும் கூறிய கொள்ளையர்கள் "அவர் நமக்கு மிகவும் உபகாரமாக இருக்கிறார். அவரைச் சந்தேகிப்பது ஆபத்தானது. பகைமைக்கு வழிவகுத்து விடும். உபகாரம் செய்பவர்களைச் சந்தேகிப்பது தன் தலையில் தானே தீயை வைத்துக் கொள்வதைப் போன்றது. உங்கள் செயல்பாடுகளை நாங்கள் கண்டிக்கிறோம். நீங்கள் அவரை நம்ப வில்லை என்றால் வெண்ணை திரண்டு வரும் வேளையில் தாழி உடைந்த மாதிரி ஆகிவிடும். இதை அவரே சொன்னார். இப்போது நாங்களும் சொல்கிறோம்" என்றார்கள்.

"என்னிடமும் வருத்தப்பட்டார். நீங்கள் கூறுவது உண்மை. உதயணன் நான் சந்தேகப்பட மாட்டேன். நீங்கள் உற்சாகமாகப் பணியைச் செய்யுங்கள்" என்றான் கொள்ளையர் தலைவன்.

காலையில் உதயணன் வந்து பேசியதிலிருந்து கூடவே இருந்து பார்த்துக் கொண்டிருந்தாள் ஆசைநாயகி கள்ளழகி.

அன்றிரவு உதயணன் எங்கும் போகவில்லை.

அங்கேயே படுத்தான்.

கொள்ளையனுக்குத் திருப்தியாக இருந்தது.

நள்ளிரவு நேரம் தாண்டியது.

அப்பகுதி முழுவதும் மனித அரவங்கள் எதுவும் இல்லாததால் மயான அமைதி நிலவியது.

பகலெல்லாம் கடுமையாக வேலை செய்து கொள்ளையர்கள் அயர்ந்து தூங்கினார்கள்.

ஒரு வேலையும் செய்யாமல் ஓய்வாகப் படுத்திருந்த ஆசை நாயகிக்கு உறக்கம் வரவில்லை.

எழுந்து உதயணனின் அருகில் வந்து அவனையே சிறிது நேரம் வரை உற்றுப் பார்த்தாள்.

"ஆகா! எத்தனை அழகானவன்! உறங்கும் போது கூட கம்பீரமாக இருக்கிறானே! இவனல்லவோ சுந்தர புருஷன். மூர்க்கனும் இருக்கிறானே! ஒரு கண்ணை இழந்த ஒட்டை முகம். பாறையைப் போன்ற உடம்பு. மரத் தண்டைப் போன்ற கால் கைகள். மதுவாசனை வீசும் முரட்டு வாய். கறை படிந்த பற்கள். தடித்த புருவங்கள். சீச்சீ! மனிதனா அவன்! புருஷா மிருகம். மனிதக் கரடி. அவனிடம் போய் சரசமும் விரசமும் புரிந்தேனே! நினைத்தாலே குமட்டிக் கொண்டல்லவா வருகிறது? இந்த உதயணன் தேவ குமாரனைப் போல் இருக்கிறான். கம்பீரமும் இருக்கிறது. அழகும் இருக்கிறது. அறிவும் திறமையும் இருக்கின்றன. இவனை நினைத்தாலே இனிக்கின்றதே! இணைந்தால்?" என்று தனக்குள் கேட்டுக் கொண்ட அவள் உதயணனைத் தொட்டு எழுப்பினாள்.

கண்களைத் திறந்த அவன் "என்ன?" என்றான்.

"என்னோடு வாருங்கள்."

"எதற்கு?"

"முக்கியமான விஷயம்."

"மூர்க்கன் எங்கே?"

"மூர்ச்சையாகி விட்டார். இப்போதைக்கு விழிக்க மாட்டார். எழுந்திருங்கள். சற்றுத் தள்ளிப் போய் பேசுவோம்."

பக்கத்தில் இருந்த புற்று ஒன்றிலிருந்து பாம்பு வெளியேறி சென்றது.

அன்றைய தினம் பௌர்ணமி தினமாக இருந்ததால் அந்த வெட்ட வெளிப்பகுதி மிதமான ஒளியில் விகசித்தது.

கட்டாந்தரையில் கொள்ளையர்கள் வெட்டிப் போடப் பட்ட மரக்கிளைகளைப் போல படுத்துக் கிடந்தார்கள்.

அவர்களது தலைவனோ அடியறுந்த மரம் போல மயங்கிக் கிடந்தான்.

அவனுக்கு அளவுக்கு அதிகமாக மதுவைக் கொடுத்து மயங்கி விழும் நிலைக்கு ஆளாக்கியிருந்த கள்ளழகி உதயணனை அழைத்துக் கொண்டு சிறிது தூரத்தில் இருந்த பாறைக்

கூட்டத்தில் போய் உட்கார்ந்து கொண்டு "அமருங்கள் மகாவீரரே" என்றாள்.

அவன் எதுவும் சொல்லாமல் அமர்ந்தான்.

"உங்களைப் போல திறமையும், சாமர்த்தியமும் கொண்ட மாவீரரை நான் கண்டதில்லை" என்றாள்.

"நான் மூர்க்கனைப் போல ஒரு கொள்ளைக்காரன். மாவீரனோ மகாராஜாவோ இல்லை" என்றான் உதயணன்.

"அவன் பெயரை எதற்காக இங்கே உச்சரிக்கிறீர்கள்? அந்த காண்டா மிருகத்தின் பெயரை உச்சரித்தாலே அழுகிய முட்டையின் நாற்றம் வருகிறது" என்றாள் கள்ளழகி வெறுப்புடன்.

"தலைவரைப் போய் காண்டாமிருகம் என்று சொல்கிறாயே?"

"வேறு வார்த்தை இருந்தால் சொல்லுங்கள். அப்படியே அழைக்கிறேன். மூடன். நிர்மூடன். அவனோடு எப்படி கூட்டு சேர்ந்தீர்கள் நீங்கள்?"

"நீ சேர வில்லையா? அப்படித்தான்."

"நான் ஒன்றும் அந்தக் காட்டுக்குரங்கை நாடி வரவில்லை. அந்தக் கபோதி தான் என்னைக் கட்டிப் போட்டுத் தூக்கி வந்து விட்டான்."

"எல்லாம் ஆகிவிட்டது. இப்போது போய் வெறுப்பாகப் பேசுகிறாயே, ஏன்?"

"அவனை வெட்டியே போட்டு விடலாம் என்று கூடத் தோன்றுகிறது. காரியம் கெட்டு விடுமே என்று தான் மௌனமாக இருக்கிறேன்."

"எதற்காக இந்த திடீர் வெறுப்பு?"

"காலிப் பெருங்காயப் பேழை என்று தெரிந்துவிட்ட பின் வெறுப்பு வராமல் வேறு என்ன வரும்?"

"மூர்க்கன் காலிப் பெருங்காயப் பேழை என்பதை எப்படிக் கண்டுபிடித்தாய்?"

"உள்ளங்கைப் புண்ணைத் தெரிந்து கொள்வதற்கு ஆராய்ச்சியா வேண்டும்? நம் கண்கள் போதாதா? நந்தி துர்க்கத்திற்கு வந்ததிலிருந்து ஒரு துறும்பை அசைப்பதற்குக் கூட அவனுக்குத் துப்பு இல்லை. நீங்கள் வந்த பிறகு தான் தும்முகிறான். அவன் சோம்பேறி. சுய அறிவு சுத்தமாகக் கிடையாது. அவனோடு சேர்ந்து நீங்கள் மோசம் போய் விடக் கூடாது என்பது என் விருப்பம்."

"என்னை யாரும் ஏமாற்ற முடியாது."

"அது உங்கள் விருப்பமாக இருக்கலாம். ஆனால் அவன் உங்களை ஏமாற்றிக் கொண்டிருக்கிறான்."

"எப்படிச் சொல்கிறாய்?"

"ஒரு விஷயத்தைச் சொல்லட்டுமா?"

"சொல்"

"சோமன் காணாமல் போகவில்லை. உங்களைக் கண்காணிப்பதற்காக மூர்க்கன் அவனை நியமித்திருக்கிறான்" என்றாள் கள்ளழகி.

உதயணன் சற்றே அதிர்ந்தான்.





மிரட்டுவதற்கும் தண்டிப்பதற்கும் தலைவனுக்கு உரிமை இருந்தாலும் அவ்விரண்டையும் தவிர்த்து அன்பையும் அரவணைப் பையும் காட்டுபவன் தான் சிறந்தத் தலைவனாக இருக்க முடியும் – உதயணன்



உதயணனுக்கு கள்ளழகி கூறியது சற்றே அதிர்ச்சியாக இருந்தாலும் அதைக் காட்டிக் கொள்ளாமல் “அது எனக்குத் தெரியும். நான் ஏமாறவில்லை” என்றான்.

அதைக் கேட்ட அவளுக்கு அதிர்ச்சியாக இருந்தது.

“என்ன? உங்களுக்குத் தெரியுமா?” என்று கேட்டாள்.

“ஆரம்பத்திலிருந்த மூர்க்கன் தன்னை அறிவாளி என்று நினைத்துக் கொண்டு முட்டாள் தனங்களையே செய்து வருகிறான். சோமனை அனுப்பியதும் அந்த ரகம் தான். என்னைக் கண்காணிக்க அனுப்பி விட்டு எனக்குத் தெரியாது என்று நினைப்பது அவனது அறிவீனம். நான் தூங்குவது போல் நடிப்பேன். தூங்க மாட்டேன். விஷயம் தெரியாதது போல நடிப்பேன். தெரிந்து கொண்டிருப்பேன். நானும் அவனும் கொள்ளைக்காரஜாதி என்றாலும் எனக்கும் அவனுக்கும் ஏராளமான வித்தியாசங்கள் உள்ளன. அவனில்லாமல் தங்கத்தைப் பெற என்னால் முடியும். நானில்லாமல் அவனால் தங்கத்தைக் கைப்பற்ற முடியாது. சோமன் காணப்படவில்லை என்று நானே அவனுக்குத் தகவல் சொன்னேன். இது உனக்கு எதை உணர்த்துகிறது? கொள்ளையர்கள் ஒவ்வொருவரும் என் கண்காணிப்பில் இருக்கிறார்கள். யார் கண்காணிப்பிலும் நான் இல்லை” என்றான் உதயணன்.

அவள் கூறியது உண்மையாக இருக்கக் கூடும் என்று நம்பிய அவள் “நீங்கள் கூறுவது சரியாக இருக்கலாம். நான் கூறுவது என்னவென்றால் மூர்க்கன் உங்களை நம்புவது மாதிரி நடிக்கிறானே தவிர நம்பவில்லை” என்றாள்.

“அதுவும் எனக்குத் தெரியும்.”

“பிறகு எதற்காகக் கூட்டு வைத்திருக்கிறீர்கள்?”

“மூர்க்கன் அயோக்கியனாக இருக்கலாம். ஆனால் அவனைச் சேர்ந்த கொள்ளையர்கள் நல்லவர்கள். அவர்களுக்காகத்தான் கூட்டு முயற்சியை கைவிடாமல் இருக்கிறேன்.”

"அதெல்லாம் வேண்டாம். நானொரு திட்டத்தைச் சொல்கிறேன். கேட்பீர்களா?"

"சொல்"

சொன்னாள் அவள்.

"இது பற்றி மீண்டும் பேசுவோம். நீ உன்னிடத்திற்குப் போ. நான் இங்கேயே படுக்கிறேன்" என்றான் உதயணன்.

"நானும் படுக்கிறேனே இங்கு?"

"படுத்தால் எழ முடியாது. பிணமாகி விடுவோம். சொன்னதைச் செய்."

எழுந்து நடந்தாள் கள்ளழகி.

அவள் பேசியதிலிருந்து கொள்ளைக்காரர்களுக்குள் விசுவாசம் என்பது என்றைக்கும் கிடையாது என்பதும் அவர்களது பிரதான குணம் பேராசை என்பதும், அவர்களது செயல்பாடு பெரும்பாலும் பரஸ்பர துரோகம் தான் என்பதும் தெளிவாகப் புரிந்தது உதயணனுக்கு.

கொள்ளையர் தரப்பில் அவன் இவ்வாறு நடக்கும் என்று எதிர்பார்த்தான். ஆனால் அந்த நடவடிக்கையில் கள்ளழகி ஈடுபடுவாள் என்பதை அவன் எதிர்பார்க்கவில்லை.

இந்தச் செயல்பாடு கள்ளழகியோடு நிற்காது என்றும் தோன்றியது.

கொள்ளையர்களுக்குள் பிரிவு உண்டானாலும் அதனால் தனக்கு எந்த நன்மையும் உண்டாகாது என்பதால் அதைப் பற்றிக் கவலைப்படாமல் மறுநாள் விகர்ணனைச் சந்தித்து தன்னை கண்காணிக்கச் சோமன் என்பவன் நியமிக்கப் பட்டிருப்பதைச் சொன்னான்.

"அவனைக் கண்காணிக்க வேண்டும் விகர்ணரே. அவன் கண்ணில் பட்டால் கொன்று விட வேண்டும். சிறை பிடிக்கும் நடவடிக்கையெல்லாம் வேண்டாம்" என்று கூறிவிட்டுச் சென்றான்.

அங்கிருந்து வந்த உதயணன் ஏரி வெட்டும் பகுதிக்குச் சென்று அங்கிருந்தோர்களிடம் பேச்சு கொடுத்தான். அவர்களைப் பாராட்டினான். "உங்களால் அமைக்கப்படும் இந்த ஏரி காலத்தை வென்று நின்று உங்கள் புகழ் பாடும்" என்றான். "இந்த ஏரிக்கு மக்கள் ஏரி என்று மகாராஜா பெயர் சூட்டுவார்" என்றான். மக்களோடு அவனும் ஏரிவெட்டும் பணிகளில் ஈடுபட்டான்.

மூன்று நாட்களுக்கு அவன் பூதக்கோட்டைப் பகுதிக்கு செல்லவில்லை. ஏரிப் பகுதியிலேயே பணி புரிந்தான். மூர்க்கனைச் சந்திக்கவில்லை. அவனைப் பற்றிப் பேசவுமில்லை.

இந்த நிலையில் ஆசைநாயகி அவனைத் தேடி வந்தாள்.

"இரவு நேரம் வந்தபின் பாறைப் பகுதியில் சந்திக்கலாம்" என்று கூறி அவளை அனுப்பி வைத்தான்.

அதே சமயம் காணாமல் போன சோமன் மூர்க்கனிடம் வந்தான்.

"போன காரியம் என்னவாயிற்று?" என்று கேட்டான் மூர்க்கன்.

சோமன் வாயைத் திறந்தானே தவிர பேசமுடியவில்லை.

"என்னாயிற்று சொல்" என்று கேட்டான் மூர்க்கன்.

அப்போது அங்கே வந்த உதயணன் "என்ன மூர்க்கா, நீ அனுப்பியிருந்த சோமன் வந்து விட்டானா? என்ன சொல்கிறான்?" என்று கேட்டான்.

"என்ன சொல்கிறீர்கள் உதயணரே? சோமனை நான் அனுப்பினேனா? எங்கே? எதற்கு?" என்று கேட்டான் மூர்க்கன். உதயணனுக்கு உண்மை தெரிந்து விட்டதா என்ற சந்தேகம் அவனுக்கு உண்டாகியிருந்தது.

"மூர்க்கா! அடுத்தடுத்து நீ பொய் சொல்லிக் கொண்டே இருக்கிறாய். சொல்வது ஒன்றும் செய்வது ஒன்றுமாய் இருக்கிறாய். உனக்கு உன் தொழிலை விட என் மீதான சந்தேகமே அதிகமாக இருக்கிறது. என்னை முட்டாள் என்று நினைக்காதே. இருந்த இடத்திலிருந்தே யார் யார் என்ன செய்கிறார்கள் என்பது என்னால் தெரிந்து கொள்ள முடியும். ஆனால் உன்னிடம் அவனால் எதுவும் சொல்ல முடியாது. ஏனென்றால் அவனது நாக்கு துண்டிக்கப்பட்டிருக்கிறது" என்றான் உதயணன்.

அதிர்ந்து போன மூர்க்கன் சோமனை வாயைத் திறக்கும் படிச் சொல்லிப் பார்த்தான்.

சோமனின் நாக்கு அறுபட்டிருந்தது.

"மூர்க்கா! நந்தி துர்க்கத்திற்கு வடக்கே பான் இனத்தைச் சேர்ந்த ஒரு முரட்டுக் கூட்டம் தங்கமிருக்கும் தகவல் தெரிந்து வந்துள்ளது. அதில் போய் சோமன் சிக்கியிருப்பான். அவர்கள் இவனிடம் தங்கம் இருக்கும் இடம் பற்றிக் கேட்டிருப்பார்கள். மிரட்டியிருப்பார்கள். இவனும் பயந்து போய் ஏதாவது உளறியிருப்பான். தங்களைப் பார்த்து விட்டதை வெளியே

யாரிடமும் சொல்லாமல் இருப்பதற்காக இவனது நாக்கைத் துண்டித்திருப்பார்கள்" என்றான் உதயணன்.

அதை மறுத்துச் சொல்வது போல் சோமன் பேச முற்பட்ட போது பேச்சு வரவில்லை.

மூர்க்கன் விழித்தான்.

"மூர்க்கா! வேலியில் இருந்த ஓணானை எடுத்து மடியில் கட்டிக் கொண்ட கதையாக ஆகி விட்டது உன் கதை. சும்மா யிருந்தச் சோமனை அழைத்து என்னைக் கண்காணிப்பதற்காக அனுப்பினாய். அவனோ போகக் கூடாத இடத்திற்குச் சென்று நாமிருக்கும் இடத்தைக் காட்டிக் கொடுத்து விட்டதால் பான் இனத்துக் கொள்ளையர்கள் இங்கே வரப் போகிறார்கள். நமது காரியம் கெடப் போகிறது. நம்மை அழித்து விட்டு தங்கத்தை அவர்கள் கவர்ந்து செல்லப் போகிறார்கள்" என்றான் உதயணன்.

மூர்க்கனின் ஆத்திரமெல்லாம் சோமனின் பக்கம் மீது திரும்பியது. கீழே கிடந்த கடப்பாரையை எடுத்து அவனது தலைமீது ஓங்கி அடித்தான். நிலைகுலைந்து கீழே விழுந்தவனை அதே கடப்பாரையால் குத்திக் கிழித்தான்.

இதர கொள்ளையர்கள் வந்து இந்தக் கோரக் காட்சியைக் கண்டார்கள்.

"தலைவரே! இது என்ன? நம்மவனையே இப்படிக் கொடூரமாகக் கொன்றிருக்கிறீர்களே! இவன் செய்த குற்றம் என்ன?" என்று கேட்டார்கள்.

"போய் அவரவர் வேலைகளைப் பாருங்கள்" என்றான் கொள்ளையர் தலைவன்.

"நாளைக்கு எங்களையும் இப்படித்தான் கொன்று விட்டு இதே போல் பேசுவீர்களா?" என்று கேட்டார்கள் கொள்ளையர்கள்.

"குற்றம் புரிந்தவனைத் தண்டித்திருக்கிறேன். ஏற்கனவே மூக்கனையும், குரங்கனையும், பேயனையும் தண்டித்திருப்பது உங்களுக்குத் தெரியும்."

"சோமனை எதற்காகத் தண்டித்தீர்கள் என்று தான் கேட்கிறோம்" என்றார்கள் கொள்ளையர்கள்.

"அதை உங்களிடம் சொல்ல வேண்டிய அவசியம் எனக்கில்லை. ஒழுங்காக இங்கிருந்து போய் விடுங்கள்."

"காரணத்தைச் சொல்லுங்கள். இல்லாவிட்டால் நாங்கள் பணிக்குச் செல்லமாட்டோம்."

உதயணன் குறுக்கிட்டு "சோமன் நமக்கெல்லாம் ஆபத்தை விளைவிக்கக் கூடிய காரியத்தைச் செய்து விட்டான். அதைப் பற்றி விவரமாக நான் பிறகு கூறுகிறேன். இப்போது நீங்கள் பணிக்குச் செல்லுங்கள்" என்று கூறி விட்டு கொள்ளையர் தலைவனைப் பார்த்து "மூர்க்கா! இவர்கள் நமக்காக உழைக்கிறார்கள். தங்கத்திற்காக உழைக்கிறார்கள். அவர்களிடம் நீ காட்ட வேண்டியது அன்பு தானே தவிர அடாவடி அல்ல. மிரட்டுவதற்கும் தண்டிப்பதற்கும் தலைவனுக்கு உரிமை இருந்தாலும் அவ்விரண்டையும் தவிர்த்து அன்பையும் அரவணைப்பையும் காட்டுபவன் தான் சிறந்த தலைவனாக இருக்க முடியும். உன்னால் அன்பு காட்ட முடியவில்லை என்றால் குறைந்த பட்சம் நியாயமாக இருக்கவாவது முயற்சி செய்" என்றான்.

கொள்ளையர்கள் பணிக்குத் திரும்பினார்கள்.

தன் பேச்சைக் கேட்டுப் பணிய வேண்டிய கொள்ளையர்கள் உதயணனின் பேச்சைக் கேட்டுப் பணிந்தது மூர்க்கனுக்குப் பிடிக்கவில்லை என்றாலும் அவர்கள் அங்கிருந்து அகன்றது நிம்மதியைத் தந்தது.

அதே சமயம் உதயணனிடம் பேச முடியாமல் நெளிந்தான்.

"மூர்க்கா! சோமனை நீ கண்காணிக்க அனுப்பியதும் தவறு. இப்படிக் குரூரமாகக் கொன்றதும் தவறு. இப்படி உனது ஆட்களையே நீ கொலை செய்து கொண்டிருந்தால் மற்றவர்களுக்கு உன் மீதான பிடிப்பு போய்விடும். உனக்காக உழைப்பதில் அவர்கள் பின் தங்குவார்கள். இனிமேலும் கூட அவர்கள் தொடர்ந்து பணி செய்கிறார்கள் என்றால் அது தங்கத்திற்காகத் தானே தவிர உனக்காக அல்ல. இந்த நிலை கசப்பானது. வந்திருக்கக் கூடாதது" என்றான் உதயணன்.

உதயணன் கூறுவது உண்மை என்பது மூர்க்கனுக்குத் தெரியாமலில்லை. இருப்பினும் உணர்ச்சி வசப்படுவது அவனுக்கு வழக்கமாக இருந்தபடியால் இப்படியெல்லாம் செய்து வந்தான். கொல்லுவதற்கு அவனிடம் இருந்த ஆயத்தமும் முனைப்பும் உதயணனோடு பேசுவதில் இல்லை.

உதயணனே பேச முற்பட்டு "இதோ பார் மூர்க்கா. தினந்தோறும் உன்னிடம் முரண்பாடுகளைக் காண்பதும் அதை நிறுத்துவதுமே எனக்கு வேலையாகி விட்டது. அலுத்து விட்டது. நான் என்ன சொன்னாலும் ஏற்றுக் கொள்வது போல் பதிலைச் சொல்லி விட்டு அதற்கு மாறான காரியங்களையே நீ செய்கிறாய். காலை மாடு கன்று போடாது. சூரியன் மேற்கில் உதிக்காது. வான் கோழி

நடனமாடாது. நீயும் அப்படித்தான். உன்னை மாற்ற முடியாது. உனக்கு உன் முட்டாள் தனம் தான் பெரிதாக இருக்கிறது. உன்னோடு வைத்திருக்க உறவை - கூட்டணியை இன்றுடன் அறுத்துக் கொள்கிறேன். நீயே தங்கத்தைக் கண்டுபிடித்து எடுத்துக் கொள்" என்று சொல்லி விட்டுப் புறப்பட்டான்.

கொள்ளையர் தலைவனோ செய்வதறியாமல் தவித்தான்.

அன்றிரவு பாறைகள் குவியலில் காத்திருந்தாள் ஆசை நாயகியான கள்ளழகி.

நள்ளிரவுக்குப் பிறகே அங்கு சென்றான் உதயணன்.

"என்னை நீண்ட நேரமாகக் காத்திருக்க வைத்து விட்டீர்கள்" என்றாள் கள்ளழகி.

"எனக்காக யாரும் காத்திருக்க வேண்டியதில்லை. அதோடு நீ காத்திருக்க வேண்டியது மூர்க்கனுக்காகத்தான்" என்றான் உதயணன்.

"அந்த முட்டாளின் பெயரைச் சொல்லி என் மகிழ்ச்சியை குறைக்காதீர்கள். அவன் ஒரு பூதம். அவன் ஒரு பிசாசு. அவன் ஒரு கோரம். அவன் ஒரு அசிங்கம். எங்கேயோ பிறந்து பிச்சையெடுத்துக் கொண்டிருக்க வேண்டியவன். இங்கே வந்து கசந்து கொண்டிருக்கிறான். அவன் பக்கத்தில் இருந்தால் தேன் கசக்கும். பால் புளிக்கும். மலர் வாடும். பலரும் வாடுவார்கள்."

"உன் பேச்சில் பொருளில்லை. உண்மையில்லை. உங்கள் உறவையே அறுத்துக் கொண்டு விட்டதாக மூர்க்கனிடம் சொல்லி விட்டு வந்து விட்டேன். நீயும் அறுந்த மாதிரி தான்" என்று சொல்லி விட்டு எழுந்து சென்றான் உதயணன்.

கள்ளழகிக்குப் பெரும் ஏமாற்றமாக இருந்தது. உதயணன் இப்படியொரு அதிரடியான முடிவை எடுப்பான் என்று அவள் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. தனது திட்டத்தை அவனிடம் கூறியிருந்த அவள் அது வெற்றி பெற்று விடும் என்று கனவு கண்டு கொண்டிருந்த நிலையில் உள்ளதும் போய் விட்ட மாதிரி ஆகி விடவே மூர்க்கனை உள்ளுக்குள்ளேயே கண்டபடி திட்டினாள் சபித்தாள். 'ஒன்றும் உதவாத உனக்கு உதவ வந்த ஒருவரையும் விட்டு விட்டாயே! உன்னை இனி நாய் கூடச் சீந்தாது' என்று சொல்லிக் கொண்ட அவள் மறுநாள் கொள்ளையர் சகாக்களைத் திரட்டிக் கொண்டு தலைவனிடம் போனாள்.

"தலைவரே! நான் கேள்விப்பட்டது உண்மைதானா? உதயணர் நம் கூட்டணியை அறுத்துக் கொண்டு போய் விட்டாராமே" என்று கேட்டாள்.

"நான் அறுத்து விடவில்லை. அவர்தான் அறுத்துக் கொண்டு போய் விட்டார்" என்றான் மூர்க்கன்.

"அறுத்தது யார் என்பது பிரச்சனையல்ல. நம் உறவு அறுந்து விட்டது என்றால் தங்கம் நம் கையை விட்டுப் போய் விட்டது என்று அர்த்தம். புரிந்ததா?" என்று கோபத்துடன் கேட்டாள் கள்ளழகி.

"தங்கத்தைக் கண்டு பிடிக்கும் வழி நமக்குத் தெரிந்து விட்டது. யாருடைய உதவியும் நமக்குத் தேவையில்லை" என்றான் மூர்க்கன் மூர்க்கமாக.

"முட்டாள் தனமாகப் பேசுகிறீர்கள் தலைவரே. தங்கத்தைக் கண்டு பிடிக்கும் முறை தெரிந்து விட்டது உண்மையாக இருக்கலாம். ஆனால் இதிலுள்ள இதர பிரச்சனைகளை கவனித்தீர்களா?"

"இதர பிரச்சனைகளா?"

"ஆமாம். ராஜப்பிரதிநிதி ஒரு பிரச்சனை. தரகன் மற்றொரு பிரச்சனை. இவ்விரண்டையும் தன் கையில் பத்திரமாக வைத்திருப்பது நீங்களல்ல, உதயணர். கூட்டணி உறவு போய் விட்டால் அவர் அந்த இரண்டு பிரச்சனைகளையும் கழற்றி விடுவார். ராஜப் பிரதிநிதியும் தரகரும் குறுக்கிட்டால் நம்மால் தங்கத்தை அள்ள முடியாது. சிறைக் கம்பிகளைத்தான் எண்ண முடியும்."

"மூன்றாவது பிரச்சனை ஒன்றிருக்கிறது" என்றான் ஒரு கொள்ளையன்.

"அதென்ன பிரச்சனை?" என்று கேட்டாள் கள்ளழகி.

"சோமனால் உண்டான பிரச்சனை."

"அது தான் என்ன?"

"நந்தி துர்க்கத்திற்கு வடக்கே பான் இனத்தைச் சேர்ந்த கொள்ளைக்காரர்கள் முகாமிட்டிருக்கிறார்களாம். சோமன் அவர்களிடம் சிக்கிக் கொண்டு நாம் தங்கம் அகழ்வது பற்றி உளறியிருக்கிறான். அவர்கள் எப்போது வேண்டுமானாலும் இங்கே வரலாம்."

அதிர்ந்து போன கள்ளழகி கொள்ளையர் தலைவனைப் பார்த்து "இது உண்மையா?" என்று கேட்டாள் சீற்றத்துடன்.

மூர்க்கன் தலையை ஆட்டினான்.

"உங்களுக்கு லவலேசமாவது அறிவிருக்கிறதா? பான் இனத்தவர் இங்கே வந்தால் நம் கதி அதோகதியாகி விடும்

என்று தெரியாதா? எந்த தைரியத்தில் உதயணரை விலகுவதற்கு அனுமதித்தீர்கள்? உடனடியாக அவரை அழைத்து வந்து மன்னிப்பு கேளுங்கள். கூட்டணியை விட்டு விலக வேண்டாம் என்று மன்றாடுங்கள்" என்றாள்.

கொள்ளையர்களும் "ஆமாம். ஆமாம். அது தான் சரி" என்று குரல் கொடுத்தார்கள்.

வேறு வழியில்லாமல் ஒப்புக் கொண்ட மூர்க்கன் உதயணனைத் தேட முற்பட்டான்.

ஒருநாள் முழுவதும் அவன் கிடைக்கவில்லை.

மறுநாள் அவன் நந்தி துர்க்கத்தில் இருப்பதை அறிந்து எல்லோரும் அங்கு சென்றார்கள்.

அங்கே உதயணன் பாலாற்று உற்பத்தி ஸ்தானத்திற்கு அருகில் வனாந்திரப் பகுதியில் எலும்புக் கூடு ஒன்றைத் தலையில் வைத்தபடி படுத்திருந்தான்.

அவனது கோலத்தைக் கண்டு அனைவரும் அதிர்ந்தார்கள்.

கள்ளழகியும் தான். அதே சமயம் அவள் "இவர் என் மடியின் மீது படுத்துக் கொண்டிருக்கக் கூடாதா?" என்று நினைத்துக் கொண்டாள்.

மூர்க்கன் தனது செயலுக்காக மன்னிப்பு கேட்டுக் கொண்டு கூட்டணியை விட்டு விலக வேண்டாம் என்று கேட்டுக் கொண்ட போது கோபங் கொண்ட உதயணன் "அது முடியாது" என்றான்.

"நீ உபயோகமற்றவன். உடைந்து போனவன். உன் மத்தம் பிடித்தவன். உணர்ச்சிகளை அடக்கத் தெரியாத விலங்கு. உனக்கு உதவுவதை விட உலோபிக்கு உதவலாம். உலோகத்திற்கு உதவலாம். அருவ உலகத்திற்கு உதவலாம்" என்றுச் சீறினான்.

"தாங்கள் அப்படிச் சொல்லக் கூடாது. நாங்கள் ஆபத்தான நிலையில் இருக்கிறோம். நீங்கள்தான் காப்பாற்ற வேண்டும்" என்றாள் கள்ளழகி.

"வாயால் சொன்ன வார்த்தைகளைக் காப்பாற்றத் தெரியாதவனுக்கு உதவுவதென்பது சேற்றில் இறங்கி விளையாடுவதைப் போன்றது. என்னால் முடியாது. அதோடு மூர்க்கன் என்னையே வேவு பார்க்கும் வஞ்சகன். என்னிடம் நம்பிக்கையில்லாத போது என் உதவி எதற்கு? இவனுக்கு ஆபத்து என்றால் நான் உதவ வேண்டும். உதவும் என்னை இவன் வேவு பார்ப்பான். இது கூட்டணியல்ல கள்ளழகி. பிணி. எனக்கு வேண்டாம்."

கள்ளழகி மூர்க்கனைப் பார்த்து "கேட்டீர்களா? நீங்கள் எந்த அளவிற்கு நடந்து கொண்டிருந்தால் இவர் இந்த அளவிற்குக் கோபப்படுவார்? அவரை என்னவென்று நினைத்துக் கொண்டு ஈனத்தனமாக நடந்து கொண்டீர்கள்? அவரைப் போலவே ஒவ்வொருவரும் விலகி விட்டால் உங்கள் நிலை என்னாகும் என்று யோசித்தீர்களா? அவர் வைத்திருந்த உபகரணமான எறும்புகளை நாம் திருடினோம். இன்னொருவராக இருந்திருந்தால் அன்றைக்கே உங்களுக்கு இறப்பைத் தந்திருப்பார்கள். இவர் பெருந்தன்மையோடு நடந்து கொண்டு பல வழிகளிலும் உதவுகிறார். அவர் கூறியதைப் போல வேறு யாருக்கு வேண்டுமானாலும் உதவலாம். உங்களுக்கு ஒருவரும் உதவமாட்டார்கள்" என்று சொல்லி சாடிவிட்டு உதயணனைப் பார்த்து "ஐயா! தலைவர் செய்த குளறுபடியால் எங்களுக்குப் புதிய சிக்கல் வந்துள்ளது. நாம் பொன் அகழும் இடம் பான் இனத்தவர்களுக்குத் தெரிந்து விட்டது. அவர்கள் வந்தால் எல்லாம் மோசம் போய் விடும். இந்த நிலையில் நீங்கள் விலகுவது பேராபத்தானது. அதை எல்லோரும் உணர்ந்து விட்டோம். தலைவரும் தவறு செய்து விட்டதாகச் சொல்லி அழுது கொண்டிருந்தார். நாங்கள் தான் தேற்றி அழைத்து வந்தோம். உங்கள் முகத்தில் விழிக்கவே வெட்கப்பட்டு வேதனையில் புழுங்கி வந்தார். எங்களை மன்னியுங்கள். பழைய படி கூட்டணியில் சேர்ந்து உதவுங்கள்" என்றாள்.

"என் நம்பிக்கையை பூரணமாக இழந்து விட்டான் மூர்க்கன். எதை நம்பி இவனோடு சேரமுடியும்?"

"நாங்கள் இருக்கிறோம். எங்களை நம்புங்கள். அவரும் உங்கள் மீது சந்தேகப்பட மாட்டார். உளவு பார்க்க மாட்டார்."

"சரி. இப்போது உங்களுக்கு என்ன வேண்டும்?"

"பான் இனத்தவரால் உண்டாகக் கூடிய ஆபத்தை அழிக்க வேண்டும்" என்றான் கொள்ளையர் தலைவன்.

"உபாயத்தைச் சொன்னால் மறுக்காமல் ஏற்பாயா?"

"ஏற்போம்."

"நாம் தோண்டிக் கொண்டிருக்கும் சுரங்கத்தை மூடி விடு. பான் இனத்தவருக்குத் தெரிந்து விட்ட இடம் ஆபத்தானது. வேறு இடத்தில் நாம் தோண்டிக் கொள்வோம்."

உதயணனின் இந்த யோசனை யாருக்குமே பிடிக்க வில்லை.

முணுமுணுத்தார்கள்.

“மிகவும் கஷ்டப்பட்டு தோண்டி வருகிறோம். அதைப் போய் மூடினால் எல்லோரும் சோர்ந்து போய் விடுவாம்” என்றார்கள் கொள்ளையர்கள்.

“நாம் எல்லோருமாகச் சென்று அவர்களை அழித்து விடலாம்” என்றான் மூர்க்கன்.

“அது அபாயகரமானது. அவர்கள் எவ்வளவு பேர் என்பதும் அவர்களிடம் எந்த விதமான ஆயுதங்கள் உள்ளன என்பதும் தெரியாத நிலையில் அவர்களின் இருப்பிடத்திற்குச் செல்வது ஆபத்தானது. அது வேண்டாம். நம்மிடத்திற்கு அவர்கள் வரட்டும். இங்கிருந்து கொண்டே தாக்குவோம். ஏரியைத் தோண்டும் மக்களிடமும் நான் சொல்லி வைக்கிறேன். எல்லோரும் சேர்ந்தால் அவர்களை முறியடிப்பது எளிது.”

உதயணனின் இந்த யோசனை எல்லோருக்கும் பிடித்திருந்தது.

உதயணனை வாழ்த்தியபடி அனைவரும் அகன்றார்கள்.

கள்ளழகி மட்டும் அவர்களோடு போகாமல் நின்றாள்.

“போய்க் கொண்டே இருங்கள். வந்து கொண்டே இருக்கிறேன்” என்றாள்.

எல்லோரும் போனபின் “உங்களிடம் ஏதோ காந்த சக்தி இருக்கிறது உதயணரே. எல்லோரும் உங்களிடம் கட்டுப் படுகிறார்கள்” என்றாள் அவனை மயக்கும் விதமாக.

“தப்பாகச் சொல்கிறாய் பெண்ணே. உங்கள் எல்லோருக்கும் கட்டுப்பட்டு நான்தான் மனம் மாறியிருக்கிறேன்” என்றான் உதயணன்.

அவன் மிகவும் சரியாகச் சொல்லி விட்டதால் மயக்கும் வேலையைத் தொடர முடியாமல் “உங்களைப் பேச்சில் வெல்ல யாராலும் முடியாது” என்று மழுப்பி விட்டுப் போனாள்.

உதயணனைப் பொறுத்த வரை கொள்ளையர்களை பயமுறுத்தவே பான் இனம் பற்றி பொய்யாகச் சொல்லி யிருந்தான். எனவே அவன் தற்போது கவலையில்லாதவனாக இருந்தான்.

பத்து நாட்கள் அமைதியாகச் சென்றன.

உதயணனை வேவு பார்க்கும் எண்ணத்தை முற்றிலுமாகக் கைவிட்டான் மூர்க்கன்.

உதயணனும் அதற்காகக் கண்டபடி திரியாமல் அவர்கள் இருந்த பகுதியிலேயே அதிகநேரம் இருந்தான்.

ஒருநாள் கொள்ளையர்கள் அவனிடம் வந்து “எறும்பு குரல் கொடுக்கிறது” என்றான்.

உதயணன் அவர்களோடு சென்று கவனித்தான்.

எறும்பு அமைதியாக இருந்தது.

“இது குரல் கொடுத்ததை நாங்கள் கேட்டோம்” என்றார்கள் கொள்ளையர்கள்.

“குரல் கொடுத்திருந்தால் தொடர்ந்து கொண்டே இருக்கும். ஆனால் அப்படி இல்லை. நீங்கள் தவறுதலாக அதன் மீது மண்ணோ கல்லோ விழும் படிச் செய்திருப்பீர்கள். அது வலி தாங்காமல் கத்தியிருக்கும். அதைப் பொருட் படுத்தவேண்டாம். அது தொடர்ந்து குரல் கொடுத்தால் என்னைக் கூப்பிடுங்கள்” என்றான் உதயணன்.

இரண்டு நாட்கள் கழித்து அங்கு வந்த விகர்ணன் “நம்மில் ஒருவன் இறந்து விட்டான்” என்றான்.

“எப்படி?” என்று கேட்டான் உதயணன்.

“புரியவில்லை”





மனிதனுக்குத் தன் சக்திக்கும் தகுதிக்கும் மீறிய சக்திகளும் ஆற்றல் களும் கைக்கூடும் போது அவற்றை உலக நன்மைக்காகப் பயன் படுத்தினால் நிலைக்கும். சுயநலத்திற்காகப் பயன் படுத்தினால் கலைந்து விடும் – மாந்தரீகன்




“என்ன சொல்கிறீர்கள் விகர்ணரே? வீரன் இறந்தது எப்படி என்று புரியவில்லையா? ஏன் அப்படி?” என்று கேட்டான் உதயணன்.

“உடலில் காயங்கள் இல்லை. தாக்குதல் நடந்ததற்கான அடையாளங்கள் இல்லை. நோய் வாய்ப்பட்டிருக்கவும் இல்லை. ஆரோக்கியமாகவே இருந்தான். அதனால் தான் சொல்கிறேன் எப்படி இறந்தான் என்பது புரியவில்லை என்று” என்றான் விகர்ணன்.

“எங்கே இறந்தான்? எப்போது இறந்தான்?”

“சுரங்கம் தோண்டும் பணியில் இருந்தவன் இருட்டு நேரத்தில் இயற்கை உபாதையைக் கழித்து விட்டு வருவதாகச் சொன்னான். நீண்ட நேரமாகியும் வராததால் நாங்கள் சென்று பார்த்தோம். காட்டில் இறந்து கிடந்தான். கண்கள் திறந்த நிலையில் இருந்தன.”

“இதயக் கோளாறு - மாரடைப்பு ஆகியவற்றால் இறந்திருக்கலாமோ?”

“எனக்கு ஓர் ஊகம் இருக்கிறது. உண்மையாக இருக்குமோ என்று தெரியவில்லை. சில நாட்களுக்கு முன்னால் தண்ணீர் கொண்டு வருவதற்காகக் காட்டில் இருந்தத் தடாகத்திற்குச் சென்றேன். எனக்குப் பின்னால் யாரோ வருவது போல் உணர்ந்தேன். வாளை கையில் எடுத்துக் கொண்டு வீசுவதற்காகத் திரும்பினேன். ஏதோ ஒன்று அமானுஷ்ய குரலை எழுப்பிக் கொண்டு ஓடுவதை உணர்ந்து கொள்ள முடிந்தது. ஒரு வேளை ஏதேனும் வினோத ஜந்துவைக் கண்டு அதிர்ச்சியில் வீரன் இறந்திருப்பானோ என்று தோன்றுகிறது.”

“இருக்கலாம் விகர்ணரே. இன்றிரவு நானங்கே வருகிறேன்” என்றான் உதயணன்.

அன்றிரவு உதயணன் அங்கு சென்றான். நள்ளிரவு தாண்டிய நிலையில் விகர்ணனை அழைத்துக் கொண்டு சென்றான்.

விகர்ணனை முன்னே அனுப்பி விட்டுப் பின்னால் சற்று தள்ளியே சென்றான்.

விகர்ணன் தடாகத்தருகே சென்று நீரை எடுத்தான். மேலே வந்து சுரங்கம் தோண்டும் இடத்திற்கு வந்தான். அவனுக்குப் பின்னால் மறைவாகவே சென்றான் உதயணன்.

"ஒன்றும் நிகழ வில்லையே!" என்றான் விகர்ணன்.

"மறுபடியும் செல்வோம்" என்றான் உதயணன்.

சென்றார்கள்.

அப்போதும் எதுவும் நிகழவில்லை.

இரண்டு நாட்கள் கழித்து விகர்ணனுக்குப் பதிலாக வீரனை அனுப்பி விட்டு உதயணன் பின்னால் மறைவாகச் சென்று தடாகத்தருகே மறைவாக நின்றான்.

வீரன் தடாகத்திற்குள் இறங்கும் போது அமானுஷ்ய குரலொன்று கேட்டது.

வீரனுக்குப் பின்னால் வினோதமானதோர் உருவம் சென்றது.

மறைவிலிருந்த உதயணன் அதைக் கண்டதும் வாளை உயர்த்திக் கொண்டும் உரக்கக் கூவிக் கொண்டும் அதன் மீது பாய முற்பட்டான்.

அது அப்படியே பறப்பது போல் தாவி ஓடியது. உதயணனும் பின்னாலேயே ஓடினான். அந்த உருவம் குரலெழுப்பிக் கொண்டே ஓடியது. அக்குரலை வைத்துக் கொண்டே பின் தொடர்ந்து ஓடினான். இரவில் கண் தெரியாவிட்டாலும் ஒரு வித வேகத்தில் ஓடினான்.

இதற்கிடையில் வீரன் ஏதோ குரல் கொடுக்க விகர்ணனும் பந்தத்தோடு அங்கே வர, இருவருமாக குரல் வந்த திசையை நோக்கி ஓடினார்கள்.

வினோத உருவம் ஓடிய திசை ஒரே இருட்டாக இருந்தாலும் "அது ஓடும் போது நமக்கென்ன குறைச்சல்?" என்ற எண்ணம் மேலோங்கவே ஒரு வித வெறியோடு ஓடினான் உதயணன்.

வினோத உருவம் எழுப்பி வந்தச் சத்தம் நின்று விடவே அதன் இருப்பிடம் வந்து விட்டதாகக் கருதிய உதயணன் சற்று தொலைவில் கறுத்த வடிவம் ஒன்றைக் கண்டான்.

அருகில் சென்ற போது தான் அது ஒரு இடிந்த மாளிகை என்பதை உணர்ந்த அவன் சுற்றும் முற்றும் பார்த்து விட்டு பூனையைப் போல மெல்ல உள்ளே சென்றான்.

உள்ளே ஏதோ பேச்சுக்குரல் கேட்டது.

ஒன்று மனிதனின் குரல். எங்கேயோ கேட்ட குரலாகவும் இருந்தது.

அந்த மனிதன் ஏதேதோ பேசிவிட்டு சாட்டையால் அடிப்பது போலத் தோன்றியது.

அடியை வாங்கிக் கொண்டு அலறியது தான் கண்ட வினோத உருவம்தான் என்பதும் புரிந்தது.

அந்த மனிதன் பேசிய மொழி புரியவில்லை. ஆனால் சாட்டையால் அடித்ததிலிருந்து வினோத உருவம் அவனது கட்டுப்பாட்டில் இருக்கிறது என்பதையும் அது ஏதோ தவறு செய்து விட்டதால் அவனிடம் அடி வாங்குகிறது என்றும் ஊகித்துக் கொண்ட உதயணன் இன்னும் சற்று முன்னேறி உள்பக்கமாகப் பார்த்தான்.

அது ஓர் அறை. அங்கே தீபம் ஒன்று சிறியதாக எரிந்து கொண்டிருந்தது. அங்கே திட்டிக் கொண்டிருந்த மனிதனைக் கண்டதும் அவன் யார் என்பது புரிந்தது.

மன்னரின் மகளுக்குச் சிகிச்சையளிப்பதாக வந்து விட்டு நோயை அதிகரித்துத் துன்புறுத்தி வந்த மாந்தரீகனான சுடுகாட்டு வாசனே அவன்.

அவனுக்கு முன்னால் சாட்டையடி வாங்கிக் கொண்டிருந்த உருவம் மிகவும் விசித்திரமாக இருந்தது.

மனிதனாகவும் இல்லை. மிருகமாகவும் இல்லை. மனிதனுக்கு உரிய உறுப்புகளும் முழுமையாக இல்லை. மிருகங்களுக்குரிய உறுப்புக்களும் முழுமையாக இல்லை.

கோரைப் பற்களுடன் கூரிய கோரமான முகம். முகத்தின் நடுவே ஒரே ஒரு கண். தலையில் நான்கு கொம்புகள். ஒரு கால். ஒரு கை. நீண்ட காதுகள். நீண்ட வால். உடம்பில் துணியேதும் இல்லை.

கற்பனை செய்ய முடியாத அந்த உருவத்தைக் காண்பதற்கே அச்சமாக இருக்க மாந்தரீகன் அதை மிரட்டிக் கொண்டிருப்பது ஆச்சரியமாக இருந்தது உதயணனுக்கு.

இதற்கிடையில் மாந்தரீகன் அந்த வினோத உருவத்தை வெட்ட முற்பட்ட போது "நில்" என்ற குரல் கொடுத்த படி அறைக்குள் சென்றான்.

அவனது வரவு உள்ளே இருந்த இருவருக்கும் வேண்டாததாக இருந்தது.

வினோத உருவத்தை வெட்ட எடுத்த வாளை உதயணனை நோக்கித் திருப்பினான் மாந்தரீகன்.

ஆனால் திரும்பி இயங்குவதற்குள் உதயணனின் குறுவாள் அவனது கழுத்தில் பாய்ந்து விட்டதால் 'ஹா' என்று சத்தமிட்டபடி சரிந்தான் மாந்தரீகன். அவனது வாளும் கீழே விழுந்தது.

அவன் விழுந்ததைப் பார்த்ததும் வினோத உருவம் குதித்து குதித்துச் சிரித்தது.

உதயணன் அந்த உருவத்தைக் காட்டி "இது யார்? உனக்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?" என்று கேட்டான்.

"எனக்கு உயிர் போகிறது. ரத்தப் போக்கு அதிகமாக இருக்கிறது. முதலில் என்னைக் கவனி" என்றான் மாந்தரீகன்.

"பாவியே! எங்கள் மகாராஜாவின் மகளை - எங்கள் குழந்தையை - சிகிச்சை செய்யாமல் சித்திரவதை செய்தாயே - எங்களுக்கு எத்துணை வேதனையாக இருந்திருக்கும்? நீ அதைப் பற்றிக் கவலைப்பட்டாயா? இப்போது ஏன் துடிக்கிறாய்? தனக்கு வரும் போது தான் மனிதனுக்கு துன்பத்தின் வேதனையும் விஸ்தாரமும் தெரியும். பட்டால் தான் அவனுக்குப் புத்தி வருகிறது. உனக்கு சிகிச்சை செய்வதற்காகக் குறுவாளை எறியவில்லை. நீ அவஸ்தை படு. அழு. அதே சமயம் என் கேள்விக்குப் பதில் சொல். இல்லையென்றால் உன் வாளால் உன் கையை வெட்டுவேன்" என்றான் உதயணன் மிரட்டும் குரலில்.

"என்னை எப்படி உங்களுக்குத் தெரியும்?" என்று கேட்டான் மாந்தரீகன்.

"இதோ பார். இந்தக் குழந்தைத் தனமான கேள்விகள் கேட்பதை நிறுத்தி விட்டு நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்."

"இது.... இது....பேய்க் கணத்தில் ஒன்று."

"பொய் சொல்லாதே. பேய்களைப் பற்றி எனக்கும் தெரியும்."

"இல்லை இது பேய்தான். முனிவர் ஒருவரிடமிருந்து வாங்கி வந்தேன். இதன் பெயர் ஜலஜாகினி."

"உன் கட்டுக் கதையை நான் நம்ப மாட்டேன். முனிவர்களிடமிருந்து பேய்களை வாங்கினேன் என்று சொல்வதை பேய்கள் கூட நம்பாது. உண்மையைச் சொல்."

உதயணன் இவ்வாறு பேசிய போது விகர்ணனும் நான்கு வீரர்களும் பந்தங்களோடு அங்கு வந்தார்கள்.

வினோத உருவத்தைப் பார்த்து வீரர்கள் பயந்தார்கள்.

ஆனால் விகர்ணன் பயப்படவில்லை.

அதன் அருகில் சென்று கொம்புகளைத் தடவிக் கொடுத்தான்.

உதயணனைப் பார்த்து "இவற்றைப் போன்ற வினோதமான உயிரினங்கள் தீவுகளிலும் மேற்கு மலைத் தொடர்ச்சிகளிலும் அடர்ந்த காடுகளிலும் வாழ்ந்து வருகின்றன. இவர்களும் மனிதர்கள் தான். இவர்களது இனம் குமானுயர் இனம் என்று சொல்லப்படுகிறது.* பார்ப்பதற்கு பயங்கரமாக இருக்கும் இவர்களைக் கொண்டு வந்து மாந்தரீகர்கள் அப்பாவி மக்களை பயமுறுத்துவார்கள். பணம் பறிப்பார்கள்" என்றான்.

உதயணன் மாந்தரீகனிடம் பார்த்து "இது உண்மையா? என்று கேட்டான்.

"உண்மைதான்" என்று ஒப்புக் கொண்டான் மாந்தரீகன்.

"எங்களை மிரட்டுவது தான் உன் உத்தேசமா?"

"ஐயா! உண்மையைச் சொல்லி விடுகிறேன். துவார சமுத்திரத்திலிருந்து வடமேற்கே 250 காத தூரத்தில் மேல்கோட்டை என்ற ஒரு கோட்டை இருக்கிறது என்றும் அங்கே சக்தி வாய்ந்த ஒரு முனிவர் இருக்கிறார் என்றும் அவர் பேய்ப்படை ஒன்றைத் தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்கிறார் என்றும், அந்தப் படையை எப்படியாவது கவர்ந்து கொண்டு வந்து விட்டால் மகாராஜாவையும் அவரது குடும்பத்தினரையும் அழித்து விடலாம் என்று கூறி என்னை அனுப்பி வைத்தார் நீலகேசி. நானும் யோசிக்காமல் புறப்பட்டு விட்டேன். சிறிது தூரம் சென்ற பின்புதான் எனக்குச் சந்தேகம் வந்தது. அவர் கூறிய 250 காத தூரம் என்பது அடைய முடியாத தூரம் என்பதும், என்னை ஒழித்துக் கட்டவே நீலகேசி பொய்யைச் சொல்லி என்னை அனுப்பியிருக்கிறார் என்பதும் எனக்குப் புரிந்தது. அச்சமயத்தில் நான் மலைக் காட்டில் இருந்தேன். எனக்கிருந்த மாந்தரீக சக்திகளின் மூலம் அக்காட்டில் விசித்திரமான உயிரினங்கள் இருப்பதைக் கண்டேன். அதில் ஒன்று தான் குமானுயர் இனத்தவனான இவன். இவனைப் பிடித்து நல்ல உருவத்தைத் தருவதாக ஆசை காட்டி அங்கிருந்து அழைத்து வந்தேன். நீலகேசியை நாசம் செய்ய வேண்டும் என்றும் அவர் நரக வேதனையை அனுபவிக்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு இந்த இடிந்த மாளிகைக்குக் குடியேறினேன். இங்கு வந்த சில நாட்களில் தங்கத்தைத் தோண்டியெடுக்கும் முயற்சியில்

* சூளாமணி. பாடல் எண் 1934.

பலர் இறங்கியிருப்பதாக அறிந்தேன். அவர்களைப் பயமுறுத்தி அழித்து விட்டு தங்கத்தைப் பெறுவதற்காகவே இந்த விசித்திர மனிதனைப் பயன்படுத்தினேன். இவனைக் கண்டதும் பயந்து போய் உங்களில் ஒருவன் இறந்து போனான். அதற்குப் பிறகு நிலைமை இப்படியாகி விட்டது."

மாந்தரீகன் இவ்வாறு சொல்லி முடித்ததும் "முதலில் அந்த வினோத மனிதனை விடுதலை செய்" என்றான் உதயணன்.

மாந்தரீகன் அந்த வினோத மனிதனைப் பார்த்து புரியாத மொழியில் ஏதோ பேசினான்.

அந்த வினோத மனிதன் கோபப்பட்டவனாய் ஏதேதோ குரலெழுப்பினான்.

"என்ன நடக்கிறது இங்கே?" என்று கேட்டான் உதயணன்.

"நான் ஏமாற்றி விட்டேன் என்று கோபப்படுகிறான்."

"அது உண்மை தானே?"

"ஆமாம்."

"அவனிடம் மன்னிப்புக் கேள். ஓடி விடும் படிச் சொல். இல்லையென்றால் இங்கிருப்பவர்கள் கொன்று விடுவார்கள் என்று சொல்."

மாந்தரீகன் அவ்வாறே சொன்னான்.

அது ஏற்றுக் கொள்ள மறுத்து ஏதோ பேசியது.

"இவன் நம்முடனேயே இருக்க விரும்புகிறான்" என்றான் மாந்தரீகன்.

விகர்ணன் குறுக்கிட்டு "இந்த விநோத மனிதன் நம்முடனேயே இருக்கட்டும். கொள்ளையர்களை அச்சுறுத்த உதவும்" என்றான்.

"இது பேசும் மொழி நமக்குத் தெரியவில்லையே!" என்றான் உதயணன்.

"மந்திரவாதி நம்மோடு இருக்கும் போது மொழிப் பிரச்சனை இருக்காது" என்றான் விகர்ணன்.

எல்லோரும் ஒரே முடிவிற்கு வந்தபின் மாந்தரீகனின் தோள் காயத்திற்கு சிகிச்சை செய்த உதயணன் தோளில் ஒரு கட்டைப் போட்டான்.

எல்லோருமாக அங்கிருந்து புறப்பட்டு தங்கம் தோண்டும் இடத்திற்குச் சென்றார்கள்.

அங்கிருந்த வீரர்களுக்கு மாந்தரீகனையும் விநோத மனிதனையும் அறிமுகம் செய்து வைத்தான் உதயணன்.

அந்த விநோத மனிதனைத் திரியவிட்டு சுரங்கப் பகுதியில் யாரும் வராமல் இருக்கச் செய்யும்படி கேட்டுக் கொண்டான்.

மாந்தரீகனும் அந்த விநோத மனிதனுக்கு கட்டளையிட்டு அனுப்பி வைத்தான்.

வீரர்கள் தங்கள் பணியினைச் செய்தார்கள்.

தங்குவதற்கு அங்கே அமைக்கப்பட்டிருந்த கூடாரத்திற்கு மாந்தரீகனை அழைத்து வந்த உதயணன் "உனக்கு மாந்தரீகம் தெரியுமா?" என்று கேட்டான்.

"மாந்தரீகனும் மந்திர வித்தையும் எனக்கு நன்றாகத் தெரிந்திருந்தது. அது எனது மிகப்பெரும் சக்தியாக என்னிடம் இருந்தது. ஆனால் அவற்றை நான் தவறாகப் பயன்படுத்தினேன். எனக்கு மாந்தரீகத்தையும் மந்திர வித்தைகளையும் கற்று கொடுத்த குருநாதர் 'மனிதனுக்குத் தன் சக்திக்கும் தகுதிக்கும் மீறிய சக்திகளும் ஆற்றல்களும் கைக் கூடும் போது அவற்றை உலக நன்மைக்காகப் பயன்படுத்தினால் நிலைக்கும். சுயநலத்திற்காகப் பயன்படுத்தினால் கலைந்து விடும்' என்றார். நான் அதைப் புறக்கணித்து விட்டு சுயநலத்திற்காகப் பயன் படுத்தினேன். ஆகவே என்னிடமிருந்த அபார சக்திகள் மறைந்து விட்டன. இப்போது நான் ஒன்றுமில்லாதவன். வெறும் பொம்மை" என்றான் மாந்தரீகன்.

"உண்மையை உணர்த்திய பிறகும் இந்த மனிதர்கள் அதை ஏன் புறக்கணிக்கிறார்கள் என்பது தெரியவில்லை. புறக்கணிப்பதால் தான் நாம் பிரச்சனைகளை உருவாக்குகிறோம். நாமே பிரச் சனையாகிறோம். நீயும் சரி சமண ஆச்சார்யர்களும் சரி இப்படி நடந்து கொண்டு தான் பிரச்சனையை உருவாக்கி வருகிற்ர்கள். கூடவே இருந்து சதி செய்த உன்னையே புறக்கணிப்பதற்காகத் தான் உன்னை மேல் கோட்டை என்ற இல்லாத ஊருக்கு அனுப்பியிருக்கிறார். அவரது கூட்டாளியாகிய என்ற உன்னைப் பார்த்தால் எனக்கு அருவருப்பாக இருக்கிறது. கொன்று விட்டால் என்ன என்று தோன்றுகிறது" என்றான் உதயணன்.

"ஐயா! எனக்கே கூட என்மீது வெறுப்பாகத்தான் இருக்கிறது. நமது ஆற்றலைக் கொண்டு நன்மைகளைச் செய்து கொண்டிருந்தால் சலிக்காது. மாறாகத் தீமைகளைச் செய்தால் விரைவில் கசந்து போய் விடும் என்று சொல்வார் எனது குருநாதர். அந்த விதத்தில் கணக்கற்ற தீமைகளைச் செய்த எனக்கு அவற்றின்

மீது சலிப்பும் வெறுப்பும் வந்து விட்டது. நீங்கள் நம்புவீர்களோ நம்பமாட்டீர்களோ - எனக்குத் தெரியாது" என்றான் உதயணன்.

"உன்னை நம்பினால் என்ன? நம்பாவிட்டால் என்ன? ஒரு வித்தியாசமும் இல்லை. உங்களது கணக்கற்றத் தீமைகளால் எங்களில் எத்தனை பேர்களது உழைப்பு வீணாகியது? அதை உங்களால் திருப்பித் தர முடியுமா?"

"ஐயா! இங்கே தங்கத்திற்காக முயற்சிக்கிறீர்களே! அது எதற்காக?"

"அது எதற்கு உனக்கு?"

"சொல்ல முடியுமென்றால் சொல்லுங்கள்."

சொன்னான் உதயணன்.

"தங்கம் இங்கே தான் கிடைக்கும் என்பதைக் கண்டுபிடித்து விட்டீர்களா?"

"அதனால்தான் தோண்டுகிறோம்."

"எப்படிக் கண்டுபிடித்தீர்கள்?"

"பொன் அகழும் எறும்புகளைக் கொண்டு."

"ஐயா! பொன் அகழும் எறும்புகளைப் பற்றி எனக்குத் தெரியும். அவை மகத நாட்டில் சில இடங்களில் இருக்கின்றன. ஆனால் அவற்றையே முழுக்க முழுக்க நம்பியிருக்காதீர்கள்."

"பொன் அகழும் எறும்புகளில் போலி எறும்புகள் இருப்பதைத் தானே சொல்கிறாய்?"

"இல்லை. உண்மையான எறும்புகளைச் சொல்கிறேன்."

"அவை சீதோஷ்ண நிலைக்கு ஏற்ப தங்களை மாற்றிக் கொள்ளாது."

"அப்படியென்றால்?"

"அவை மகத நாட்டிற்கு உரியவை. மகத நாட்டுச் சூழ்நிலைக்கு உரியவை. மகத மண்ணுக்கே உரியவை. அவை மகத நாட்டில் மட்டுமே இயற்கையாகவும் உண்மையாகவும் செயல்படும். பிற பிரதேசங்களில் அவ்வாறு செயல்படாது."

"அதாவது...."

"மகத நாட்டில் அவற்றை நம்பி தங்கத்தின் இருப்பிடத்தைச் சரியாக அறியலாம். இங்கே முடியாது"

"ஏன்?"

"இடம் மாறினாலும் அது மகத நாட்டில் இருப்பது போலவே செயல்படும். பிற நாடுகளின் மண்ணைப் பற்றி அவற்றுக்குத் தெரியாது. ஆகவே அவை சுட்டிக் காட்டும் இடங்களில் தங்கம் நிச்சயமாக இருக்கும் என்று நம்பமுடியாது"

"அப்படியானால் நாங்கள் தவறான இடத்தில் தோண்டிக் கொண்டிருக்கிறோம் என்கிறாயா?"

"என் அனுமானம் அதுதான். இதுவரை எவ்வளவு தூரத்திற்கு அகழ்ந்திருக்கிறீர்கள்?"

"முப்பதடி ஆழம். முப்பதடி அகலம்."

"நிச்சயமாக இங்கே தங்கம் இருப்பது சந்தேகம்தான். மகதத்தில் சாதாரணமாக இருபது அடி ஆழத்தில் தங்கம் புலப்படும்."

"மாந்தரீகா! மகத நாட்டு நிலம் வேறு. கர்நாடக நாட்டு மண் வேறு. இது எரிமலைப் பாறைகளால் ஆனது. இருபதடியில் தங்கம் எப்படிக் கிடைக்கும்?"

"கர்நாடகம் முழுவதும் எரிமலைப் பாறைகளால் ஆனது அல்ல. நீங்கள் அகழும் இடம் அப்படிப்பட்டதாக இருந்திருந்தால் முப்பது அடிக்குத் தோண்ட முடியாது. தோண்ட முடியாமல் பாறைகளாக இருக்கும். இங்கேயோ மண் வளம் நிறைந்திருக்கிறதே தவிர பாறை வளம் இல்லை. ஆகவே இங்கே தங்கம் கிடைத்தால் ஆச்சர்யம்தான்."

கொள்ளைக்காரர்களுக்குத் தவறான இடத்தைக் காட்டியதற்கு இது தண்டனையா என்று ஒரு கணம் யோசித்த உதயணன் "உன் பேச்சை நம்புவதா வேண்டாமா என்பதை விட இவ்வளவு தூரம் தோண்டி விட்ட பிறகு கைவிடுவதென்பது இயலாத காரியம் மாந்தரீகா. பொன்னகழும் எறும்புகள் மீது எனக்கு நம்பிக்கை இருக்கிறது. மனிதர்கள் ஏமாற்றலாம். விலங்குகள் ஏமாற்றாது. உன் விநோத மனிதனே அதற்கு சாட்சி" என்றான்.

"நல்ல விஷயத்திற்காக பொன்னைத் தேடுகிறீர்கள். அதற்கு பதிலாக நல்ல விஷயத்திற்குத் தேவையான பொருளைத் தீயவனிடமிருந்து பெற்றால் என்ன?"

"நீ என்ன சொல்கிறாய்?"

சொன்னான் மாந்தரீகன்.

அதிர்ந்தான் உதயணன்.





நல்லவர்களின் நம்பிக்கையைப் பெற்று விடுவதால் தான் தீயவர்கள் முன்னேறுகிறார்கள். சிலசமயம் வெற்றி பெற்று விடுகிறார்கள் – மாந்தரீகன்




"ஐயா! நிச்சயமில்லாத இந்தத் தங்க வேட்டையை விட பூரண நிச்சயமான ஓரிடத்தில் தேவையான அளவுக்குப் புதையல் இருக்கின்றன. இங்கே உங்களுக்குக் கிடைக்கும் தங்கத்தை விட அது அதிகம்" என்றான் மாந்தரீகன்.

"இங்கே தங்கம் கிடைக்காது என்றாய். இப்போது குறைவாகக் கிடைக்கும் என்கிறாய். புரிய வில்லையே" என்றான் உதயணன்.

"இங்கே தங்கம் கிடைத்தால் பேராச்சரியம் என்பது உண்மை. அதே சமயம் தங்கமானது நீங்கள் நினைப்பது போல் பாளம் பாளமாகக் கிடைக்காது. அது மகத நாட்டில் மட்டும்தான். இங்கே அப்படியில்லை. மலையை முழுவதுமாக ஆராய்ந்து ஓர் அரிய செடியைக் காண்பது போன்ற முயற்சி இது. உங்கள் எல்லோரது முயற்சிக்கும் கிடைக்கக் கூடியது வெறும் துரும்பாகத்தான் இருக்கும். ஆகவே தான் அப்படிச் சொன்னேன்" என்றான் மாந்தரீகன்.

"அதிகமாகக் கிடைக்கும் என்றாயே அது எவ்வளவு?"

"கண்ணால் கண்டிருக்கிறேன். ஆனால் அளவிட முடியாது."

"கண்ணால் கண்ட நீ எப்படி விட்டு வைத்தாய்? இன்று வரை நீ நினைத்தது, நடந்தது, நடந்து கொண்டது எல்லாமே தீய விஷயங்கள் தானே?"

"ஐயா, நான் கண்ட புதையல் எனக்கு வேண்டியவருக்குச் சொந்தமாக இருந்தது. நான் மதித்தவரின் சொந்தமாக இருந்தது. சொல்லப் போனால் என் குருவைப் போன்ற ஒருவரின் சொந்தமாக இருந்தது. ஆகவே அவற்றில் கையை வைக்க நான் முயன்றதில்லை."

"யார் அப்படிப்பட்டவர்?"

"நீலகேசி"

"நீலகேசியா? அந்தத் துறவியா? அவரிடமா புதையல் இருக்கிறது? உளராதே மாந்தரீகா?"

"நான் கூறுவது உண்மை."

"இதோ பார். அவரது நடவடிக்கைகள் முரண்பாடானதாக இருக்கலாம். மோசமானதாக இருக்கலாம். அநீதியாகவும் இருக்கலாம். ஆனாலும் அவர் ஒரு துறவி. இந்த விஷயத்தில் அவரைக் குற்றம் கூற என்னால் இயலாது."

"நல்லவர்களின் நம்பிக்கைப் பெற்று விடுவதால்தான் தீயவர்கள் முன்னேறுகிறார்கள். சில சமயம் வெற்றி பெற்று விடுவார்கள். அப்படித்தான் நீலகேசி. நீங்கள் சொன்னீர்களே அவரிடம் முரண்பாடு உண்டு என்று. நான் சொல்வதும் ஒரு முரண்பாடுதான். பற்றுகளை விட்டு விட்டு ஒரு துறவி செல்வங்களைக் குவிப்பது முரண்பாடு இல்லையா?"

"அதை நாம் கவரலாம் என்கிறாயா? என்னை என்ன கொள்ளைக்காரன் என்று நினைத்து விட்டாயா? இங்கே சுரங்கத்தைத் தோண்டுகிறேனே. அது கொள்ளை முயற்சியல்ல. அந்த இடம் மகாராஜாவின் ஆதிக்கத்தில் இருக்கிறது. இங்கே இருக்கும் தங்கத்தை எடுப்பது உபகாரம். கடமை. சொல்லப் போனால் இங்கே இருக்கும் தங்கத்தை எடுக்க பல மாதங்களாக கொள்ளைக்காரர்கள் நந்தி துர்க்கத்தில் முகாமிட்டிருந்தார்கள். அவர்களை ஏமாற்றி விட்டு இப்பணியில் ஈடுபட்டிருக்கிறோம். எங்களைப் போய் கொள்ளையடிக்கச் சொல்கிறாயா? அதுவும் ஒரு துறவி சேர்த்த புதையலை?"

"ஐயா! நீலகேசியுடன் இவ்வளவு காலம் இருந்து விட்டு தற்போது அவரைப் பற்றி வேறுவிதமாக நான் பேசுவது உங்களுக்கு வியப்பாக இருக்கலாம். தங்கம் கிடைப்பது துர்லாபம் என்பது தெரிந்தது. உங்களைச் சந்திப்பதற்கு முன்பு நீங்கள் இங்கே தங்கத்தைக் கண்டுபிடித்து விட்டீர்கள் என்று நினைத்தேன். ஆகவே தான் கவருவதற்கு முயன்றேன்."

"நீலகேசியுடன் விரோதம் ஏற்பட்டு இரண்டு மாதங்கள் ஆகி விட்டன. இந்த இரண்டு மாத காலத்தில் அவர் சேமித்து வைத்திருக்கும் புதையலை நீ கைப்பற்றியிருக்கலாமே?"

"அவர் புதையலை ச்ரவண பெலகுலாவுக்கு அருகில் இருக்கும் மலைக்குகையில் வைத்திருக்கிறார். அந்த குகையின் வாசலைத் திறக்கும் விசை எங்கே இருக்கிறது என்பது நீலகேசியைத் தவிர யாருக்கும் தெரியாது."

"ஒரு வேளை உனக்குத் தெரிந்திருந்தால் அவற்றைக் கவர்ந்திருப்பாய் அல்லவா?"

"இந்த கேள்விக்கு இப்போது அவசியம் இல்லை ஐயா."

“செல்வத்தில் பங்கு கேட்டு நீ அவரை பயமுறுத்தி யிருக்கிறாய். இந்த நிலையில் அவற்றை இடம் மாற்றியிருப்பார் அல்லவா?”

“யாருக்கும் தெரியாமல் அதை இடம் மாற்றுவது கஷ்டம். அதற்கு வாய்ப்பில்லை.”

“மாந்தரீகா! உனக்குக் கூட்டாளியாக இருந்தவர் விரோதி யானதும் அவரை காட்டிக் கொடுத்து விட்டாய். இது நல்ல அணுகுமுறையாகத் தோன்றவில்லை. உன்னை எப்படி நம்புவது? என்னையும் காட்டிக் கொடுக்கவும் முயல மாட்டாய் என்பதற்கு என்ன உத்திரவாதம்?”

“ஐயா! நான் ஏதோ பல முறை நட்பையும் விரோதத்தையும் பலமுறை வைத்துக் கொண்டு பலரைக் காட்டிக் கொடுப்பதையே வேலையாகக் கொண்டிருந்தது போல நினைத்துப் பேசுகிறீர்கள். நாம் நம்பியும் மதித்தும் பழகியதும் நீலகேசி மற்றும் ஜெயதேவர் ஆகியோரை மட்டும் தான். ஜெயதேவரைப் பற்றி எனக்கு எதுவும் தெரியாது. தெரிந்த தெல்லாம் நீலகேசியைப் பற்றி மட்டும் தான். அவர் மீது நான் வைத்திருந்த மதிப்பையும் நம்பிக்கையையும் அவரே தன் செயல்களால் அழித்துக் கொண்டதோடு என்னையும் அழிக்க முயன்றார். அதோடு அவர் நீதிக்குப் புறம்பாக ஏராளமான செல்வங்களைக் குவித்திருப்பது உண்மை. நீங்களோ படை திரட்டுவதற்காகத் தங்கச் சுரங்கத்தைத் தோண்டும் கடுமையான மற்றும் உத்தரவாதமில்லாத பணியைச் செய்து கொண்டிருந்தீர்கள். அதனால் தான் உபாயத்தைச் சொன்னேன்.”

“அப்படியானால் நீ திருந்தி விட்டாய் என்று கருதலாமா?”

“என்னிடம் இருந்த மந்திர சக்திகள் மறைந்த போதே நான் திருந்தி விட்டேன். உங்களையெல்லாம் மிரட்டப் பார்த்தது ஏதோ என் தீயகுணங்களின் விட்ட குறை தொட்ட குறை தான். உங்களுக்கு இன்னமும் என் மீது சந்தேகம் இருந்தால் மலைக் குகை இருக்கும் இடத்தைக் காட்டுகிறேன். உங்கள் திறமையால் அதைத் திறவுங்கள். உள்ளே புதையல் இருப்பது உண்மையானால் என்னை அங்கேயே கொன்று விடுங்கள்.”

“நல்லது மாந்தரீகா. விரைவிலேயே உனக்கு அழைப்பு வரும். அப்போது நீ மலைக்குகையைக் காட்டு” என்று சொன்ன உதயணன் மாந்தரீகன் விரும்பியதால் அவனையும் சுரங்கம் தோண்டும் பணியில் ஈடுபடுத்தினான்.

இதற்கிடையில் மாந்தரீகனைப் பற்றியும் அவன் தெரிவித்தச் செய்திகளைப் பற்றியும் சேனாதிபதி பகாசூரருக்குச் செய்தி அனுப்பினான்.

அவர் தாமதம் செய்யாமல் வீரர்களை பூதக் கோட்டைக்கு அனுப்பி மாந்தரீகனை அழைத்துச் சென்றார்.

தோண்டப்பட்டுக் கொண்டிருக்கும் சுரங்கத்தில் தங்கம் கிடைப்பது துர்லபம் என்று மாந்தரீகன் சொன்னதை அவன் விகர்ணனிடமோ வீரர்களிடமோ சொல்ல வில்லை.

எப்போதும் போலவே குதூகலத்தோடும் ஆர்வத்தோடும் தோண்டுதல் பணி நடந்தது.

முப்பத்தைந்தடி ஆழம் தோண்டிய போது பொன்னகழும் எறும்புகள் தெற்குத் திசையை நோக்கி குரலெழுப்பின.

"விகர்ணா! இனி ஆழமாகத் தோண்ட வேண்டாம். தெற்குப் புறத்தில் சுரங்கப் பாதையைப் போல குடைய வேண்டும் என்பதையே எறும்புகள் உணர்த்துகின்றன. ஆகவே அந்த விதமாகத் தோண்டுங்கள். மழை இல்லாத காரணத்தால் மண் சரியாது" என்று அறிவுரைகளைக் கூறினான் உதயணன்.

அதே சமயம் கொள்ளையர்கள் அகழ்ந்து கொண்டிருந்த பகுதிக்கும் சென்று வந்து கொண்டிருந்தான்.

உதயணனிடம் கொள்ளையர் தலைவன் முன்பு போல் சந்தேகப்படவில்லை.

ஆனால் சுரங்கம் தோண்டும் பகுதியில் அடிக்கடி அமானுஷ்யக் குரல் ஒன்று கேட்பதாகவும் கொள்ளையர்கள் அக்குரலைக் கேட்டு அச்சமடைவதாகவும் கூறினான்.

அக்குரல் மாந்தரீகன் கொண்டு வந்த வினோத மிருகத்தின் குரல் என்பதை ஊகித்துக் கொண்ட அவன் "ஏற்கனவே பிடாரி ஆலயத்தில் அமானுஷ்ய குரலும் அதையடுத்து உருவமும் தெரிந்ததால் தான் உங்களில் ஒருவன் பயந்து போய் இறந்து போனான். அந்த உருவம் தான் இந்தப் பகுதியில் திரிந்து கொண்டிருக்கலாம். பொன்னைக் காப்பதற்காக இந்தப் பகுதிகளில் ஆவி கணங்கள் உலவுவதாக பூதக் கோட்டை மக்கள் பேசிக் கொள்கிறார்கள். பொன்னைத் தேடி வந்து முயற்சியில் தோற்று இறந்து போனதாகவும் பொன் மீது உள்ள ஆசையால் அவை இந்த இடத்தை விட்டு நீங்க விரும்பாமல் ஆவி உருவங்களாக வலம் வருவதாகச் சொல்கிறார்கள். அவை நம்மை எதுவும் செய்யாது. நாமாக அஞ்சி சாகாமல் இருந்தால் போதும்" என்றான் உதயணன்.

"ஐம்பதடி ஆழத்திற்குத் தோண்டி விட்டோம். ஒன்றும் தட்டுப்பட வில்லையே?" என்றான் கொள்ளையர் தலைவன்.

"மூர்க்ககா! நமக்கு ஆறறிவு இருந்தாலும் சில நேரங்களில் ஐந்தறிவு ஜீவன்களை வைத்துக் கொண்டு தான் பிழைக்க வேண்டியிருக்கிறது. மிகவும் விலை உயர்ந்த பொருட்கள் எளிதில் கிடைக்கக் கூடுமானால் அவற்றுக்கு மதிப்பு இல்லை. தங்கமானது ஆழத்தில் இருக்கும் என்பது தான் மகதநாட்டு பொன் அகழும் மக்களின் நம்பிக்கை. நம்மிடம் பொன் அகழும் எறும்பு இருக்கும் வரை பொறுமையோடு இருந்து அது காட்டும் வழியில் செல்வது தான் சரி" என்றான் உதயணன்.

அவன் அவ்வாறு சொன்னதற்கு மறுநாள் பொன் துகள்கள் மண்ணோடு கலந்திருப்பதை கொள்ளையர்கள் கண்டதும் கூத்தாடினார்கள்.

"மண்ணோடு சேர்த்து மேலே கொண்டு வாருங்கள்" என்றான் உதயணன்.

கொள்ளையர்கள் மிகவும் சிரத்தையுடன் அந்த பொன் கலந்த மண்ணை பனை ஓலைகளில் வைத்துக் கட்டி மேலே அனுப்பினார்கள். தங்கத் துகள்கள் தென்பட்ட வரை மண்ணை மேலே அனுப்பியதும் அந்தக் கலவையை அங்கே அமைக்கப் பட்டிருந்த மண் அண்டாவில் கொஞ்சம் கொஞ்சமாகப் போட்டுத் தண்ணீரை நிரம்ப ஊற்றச் சொன்னான் உதயணன்.

"மூர்க்கா! இதை நீ உன் கையை விட்டுக் கலக்கு. மண்ணானது நீரில் கரைந்து விடும். தங்கம் கரையாமல் ஒதுங்கும்" என்றான்.

மூர்க்கனும் கலவையைத் தொட்டியில் போட்டு தண்ணீரை ஊற்றிக் கரைத்த போது தங்கத் துகள்கள் ஒதுங்கின. அவ்வாறு ஒதுங்கியத் துகள்களின் அளவு இரண்டு படி அளவே இருந்தாலும் கொள்ளையர்களுக்குள் கொண்டாட்டமாக இருந்தது.

"நமது முயற்சிக்கு வெற்றி நிச்சயமாகக் கிடைக்கும் தாமத மாகிறது என்று அயர்ந்து போய் விடாதீர்கள். துகள்கள் கிடைத்திருப்பது நமக்கு நல்ல அறிகுறி. அநேகமாக அடுத்து தங்கக் கட்டிகள் கிடைக்கலாம்" என்றான் உதயணன்.

கொள்ளையர்கள் துடிப்போடு பணியைத் தொடர்ந்தார்கள்.

கொள்ளையர் தலைவன் பெருமகிழ்ச்சியடைந்து உதயணனைப் பாராட்டினான்.

ஆனால் அவனது ஆசைநாயகி கள்ளழகிக்கு மகிழ்ச்சியாக இல்லை.

உதயணனைத் தனிமையில் சந்தித்து "எதற்காக என் திட்டத்தை ஏற்காமல் தாமதித்துக் கொண்டிருக்கிறீர்கள்? அதோடு தங்கமும்

கிடைக்க ஆரம்பித்து விட்டது. இனியும் தாமதம் செய்வது சரியே அல்ல" என்றாள்.

"எல்லாமே சரியாகத் தானே நடந்து கொண்டிருக்கிறது?" என்றான் உதயணன்.

"அது ஒரு தோற்றம். உண்மையில்லை. மூர்க்கனைப் பற்றி உங்களுக்குத் தெரியாது."

"இதுவரை நான் நடந்து கொண்டதெல்லாம் அதைத்தான் காட்டுகிறதா?"

"உங்களிடம் மூர்க்கன் நடிக்கிறான் என்பது தான் உண்மை. அவன் உங்களைக் கொஞ்சமும் நம்பவில்லை. இதை அவன் என்னிடமே சொன்னான்?"

"என்ன சொன்னான்?"

"உங்களை நம்புவது போலவும் மதிப்பது போலவும் நடிப்பதாகச் சொன்னான். எனது அனுபவத்தில் என்னை யாரும் ஏமாற்றியதில்லை. ஏமாந்ததும் இல்லை. இந்த உதயணன் என்னை ஏமாற்றி வருகிறான். நான் ஏமாறுகிறவன் இல்லை என்பது அவனுக்குத் தெரியவில்லை. என்னை ஏமாற்றுவதற்கு ஒருவன் இனிமேல் தான் பிறக்க வேண்டும் என்றான். ஏன் அப்படிச் சொல்கிறீர்கள்? உதயணன் நமக்கு உதவி தானே செய்து வருகிறார் என்றேன் நான். எல்லாம் பொய். விரைவிலேயே அவனது சாயத்தை வெளுக்கச் செய்வேன் என்றார். ஆகவே தான் சொல்கிறேன். அவன் மகா அயோக்கியன். நன்றி இல்லாத நாய். சுத்தம் இல்லாத பன்றி. நாம் இருவரும் கூட்டணி அமைத்து தங்கத்தைப் பிரித்துக் கொள்வோம்."

"மூர்க்கன் வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பானா?"

"அவன் வேடிக்கை பார்க்காமல் செய்து விடுவோம்."

"எப்படி?"

"கொன்று விடுவோம்."

"என்னால் முடியாது."

"நீங்கள் கொல்ல வேண்டாம். அதை நான் பார்த்துக் கொள்கிறேன். நீங்கள் என்னுடனான கூட்டணிக்கு ஒப்புக் கொண்டால் போதும்."

"என்னைப் பொறுத்த வரை நீயும் ஒன்றுதான். மூர்க்கனும் ஒன்றுதான்."

"எனக்கு அனுகூலமாக இருங்களேன்."

“எதற்கும் மூர்க்கனை உடனடியாகக் கொல்ல முயலாதே. கொள்ளையர்களிடம் பிரச்சனை வந்து விடும். தங்கம் அதிக அளவில் கிடைப்பதற்கான தடயங்கள் வரட்டும். அப்போது சொல்கிறேன்.”

அரை மனதோடு சம்மதித்தாள் கள்ளழகி.

இது நடந்து இரண்டு நாட்கள் கழித்து மூர்க்கனுக்கும் கள்ளழகிக்கும் தகராறு ஏற்பட்டது.

“என்ன விஷயம்?” என்று கேட்டான் உதயணன்.

“ஒப்பந்தப்படி நடந்து கொள்ள தலைவர் மறுக்கிறார்” என்றாள் கள்ளழகி.

“என்ன பிரச்சனை?” என்று கேட்டான் உதயணன்.

“இங்கே கிடைக்கும் தங்கம் அவருக்கும் உங்களுக்கும் சமமாகப் பிரிக்கப்பட வேண்டும் என்பது தானே ஒப்பந்தம்?”

“அதற்கென்ன?”

“சில நாட்களுக்கு முன்னால் இரண்டு படி தங்கத் துகள் கிடைத்ததல்லவா? ஒப்பந்தப்படி ஒரு படி உங்களுக்குச் சேர வேண்டுமல்லவா? கொடுக்கும்படிச் சொன்னால் மறுக்கிறார்.”

“போகட்டும் கள்ளழகி. விடு. அதை அவனே எடுத்துக் கொள்ளட்டும்.”

“அதெப்படி? சட்டம் எல்லோருக்கும் ஒன்று தான். அள்ளிய தங்கம் கொஞ்சம் என்பதால் பங்கு வேண்டாம் என்று சொல்லக் கூடாது.”

மூர்க்கன் குறுக்கிட்டு “அவரே வேண்டாம் என்கிற போது நீ ஏன் வற்புறுத்துகிறாய்?” என்று கேட்டான்.

“நாளைக்குப் பாளம் பாளமாய் தங்கம் கிடைக்கும். அப்போது இப்படிப் பேச மாட்டீர்கள் என்று என்ன நிச்சயம்? அவர் பங்கை உடனடியாகக் கொடுங்கள்” என்றாள் கள்ளழகி.

“கள்ளழகி. நான் உன் தலைவனைப் போன்ற ஈனப்பிறவியல்ல. இந்த முறை அவன் எனக்குப் பங்கு தராததால் எனக்கொன்றும் குடி மூழ்கிவிடப் போவதில்லை. அதே சமயம் எல்லா சமயங்களிலும் அவன் இவ்வாறு பேச முடியாது. நானும் அனுமதிக்க மாட்டேன். இந்தப் பிரச்சனையை இதோடு விடு” என்றான் உதயணன்.

மறுவாரமும் ஒரு பிரச்சனை உண்டாயிற்று.

உதயணன் விசாரித்தான்.

அப்போது மூர்க்கன் தரகனோடு சண்டையிட்டுக் கொண்டிருந்தான்.

"தரகரே! என்ன பிரச்சனை?" என்று கேட்டான் உதயணன்.

"இங்கே வேலை செய்யும் நபர்களின் கணக்கை இவர் தவறாகவே காட்டுகிறார். என் கணக்கும் இவர் கணக்கும் ஒத்துப் போகவில்லை. அதைச் சுட்டிக் காட்டினால் தன் கணக்கு தான் சரியானது என்று அடம் பிடிக்கிறார்" என்றான் தரகன்.

"உங்கள் கணக்கு என்ன? உங்களுக்கு நேரக் கூடிய இழப்பு என்ன?" என்று கேட்டான் உதயணன்.

தரகன் கூறினான்.

"சரி. உங்கள் கணக்கை நான் ஒப்புக் கொள்கிறேன். நாளை முதல் வேலைக்கு ஆட்களை அனுப்பாதீர்கள்" என்றான் உதயணன்.

"ஆமாம். அது தான் சரி" என்றாள் கள்ளழகி.

"நீ எதற்காக இங்கே தலையிடுகிறாய்?" என்று கேட்ட கொள்ளையர் தலைவன் உதயணனைப் பார்த்து "இதென்ன இப்படிச் சொல்கிறீர்கள்?" என்று கேட்டான்.

"பணி செய்வோரின் வயிற்றில் அடிக்காதே மூர்க்கா. அவர்களுக்குச் சேர வேண்டிய தொகையில் பிரச்சனை செய்தால் அவர்கள் பணிக்கு வரமாட்டார்கள். அவர்கள் பணிக்கு வராவிட்டால் உன் பணி நடக்காது" என்று சொன்ன உதயணன் "நீ எதற்கெடுத்தாலும் பிரச்சனை செய்கிறாய். அது உனக்கு வழக்கமாக இருக்கலாம். ஆனால் எனக்கு இது வேலையல்ல. உன் விவேகமற்ற பிரச்சனைகளையெல்லாம் என்னால் தீர்த்துக் கொண்டிருக்க முடியாது" என்றதும் -

வழிக்கு வந்த மூர்க்கன் தரகனிடம் மன்னிப்பு கேட்டுக் கொண்டு அவனது கணக்கை ஒப்புக் கொண்டான்.

அதையடுத்து மூன்று மாதங்கள் அமைதியாகக் கழிந்தன.

இந்த நிலையில் ஒரு நாள் விகர்ணன் உதயணனிடம் வந்து "தங்கம் தெரிகிறது" என்றான்.

உதயணன் சிந்தனையில் ஆழ்ந்தான்.





கொள்கைகள் கோட்பாடுகள் என்று நாம் ஆயிரமாயிரம் விஷயங்களை வைத்துக் கொண்டிருந்தாலும் என்ன நடக்க வேண்டும் என்று வகுக்கப்பட்டிருக்கிறதோ அதுதான் நடக்கும் – உதயணன்




சுரங்கத்தில் தங்கம் தட்டுப்படுவதாக விகர்ணன் கூறிய போது சற்றே சிந்தனையில் ஆழ்ந்த உதயணன் அவனோடு சுரங்கத்திற்குச் சென்றான்.

முப்பதடி ஆழத்தில் தெற்குப் புறமாகக் குடையப்பட்ட பகுதியில் பத்தடி தூரத்தில் கண்கள் கூசும் விதமாகத் தங்கப் பாளங்கள் இருந்ததையும் பொன் அகழும் எறும்புகள் 'கிறீச் கிறீச்' என்று கத்திக் கொண்டிருந்ததையும் கண்டான்.

தங்கப் பாளங்களை எடுக்க முற்பட்டால் சுரங்கம் இடிந்து விழுந்து விடும் என்று புரிந்தது. எனவே தங்கப் பாளங்கள் இருந்த இடத்திற்கு மேலே உள்ள மண் பகுதியை வெட்டி யெடுத்தால் தங்கப் பாளங்களைப் பெயர்த்தெடுக்கலாம் என்றான்.

விகர்ணனும் வீரர்களும் அவ்வாறே செய்தார்கள்.

உதயணன் வீரர்கள் இருவரை எங்கோ அனுப்பி விட்டு கொள்ளையர்களோ அவர்களது தலைவனோ அந்தப் பக்கம் வராதிருக்க மாந்தரீகனின் வினோத உருவத்தை சுரங்கத்தின் பக்கம் நடமாட விட எத்தனித்த போது துரதிர்ஷ்டவசமாக அது இறந்து கிடந்தது. அதன் உறுப்புக்கள் வெட்டப்பட்டுக் கிடந்ததால் யாரோ அதைக் குரூரமாகத் தாக்கிக் கொன்றிருக்க வேண்டும் என்பது தெரிந்ததே தவிர அது யாராக இருக்கக் கூடும் என்பது தெரியவில்லை.

எனவே கொள்ளையர்கள் இருந்த பகுதிக்குச் சென்று அவர்களோடு பேச்சு கொடுத்து அவர்கள் தனது பகுதியில் வராமல் பார்த்துக் கொண்டான்.

விகர்ணனும் அவனது வீரர்களும் பதினைந்து நாட்களாக இடைவிடாமல் பணியைச் செய்து தங்கத்தின் மேற்பகுதியை அகற்றினார்கள்.

அதன் காரணமாகத் தங்கப் பாளங்கள் மேலாக இருந்தன. அவற்றை வெட்டித் துண்டுகளாக்கி மேலே கொண்டு வந்தான் விகர்ணன். அப்போது உதயணனும் கூட இருந்தான்.

வெளியே கொண்டு வரப்பட்ட தங்கப் பாளங்களின் அளவு கணிசமாக இருந்தது.

அதனால் மட்டுமின்றி அங்கே தங்கம் கிடைப்பது துர்லாபம் என்று மாந்தரீகன் கூறியது பொய்த்தால் மகிழ்ச்சியடைந்தான்.

தங்கப் பாளங்கள் முழுதும் அகற்றப்பட்டு மேலே கொண்டு வரப்பட்டன. அதற்குப் பிறகு மண் மட்டுமே இருந்ததால் அதற்கு மேல் அகழ்வதை நிறுத்திவிட்டுச் சுரங்கத்தை மூடும் படிக் கட்டளையிட்டான்.

வெளியே எடுக்கப்பட்டத் தங்கம் துணிகளால் சுற்றப்பட்டு அடுக்கி வைக்கப்பட்டு அது தெரியாமல் இருக்க மரக்கிளைகள் போர்த்தப்பட்டன.

தங்கம் கிடைத்த இடத்திற்கு அடையாளமாக அங்கே பாறைகள் பத்து கோபுரம் போல் வைக்கப்பட்டன.

"வண்டிகளுக்குச் சொல்லியிருக்கிறேன். வந்தவுடன் கிளம்பி விடலாம்" என்றான் உதயணன்.

"வந்து விட்டன" என்று ஒரு குரல் எழுந்தது.

உதயணன் திரும்பிய போது அங்கே கொள்ளையர் தலைவன் மூர்க்கன் நின்று கொண்டிருந்தான்.

அவனோடு கள்ளழகியும் இருந்தாள். இதர கொள்ளையர் களும் இருந்தார்கள். எல்லோரும் உதயணனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் பார்த்துச் சிரித்தார்கள்.

உதயணன் எதுவும் பேசவில்லை.

மூர்க்கனோ பேச்சைத் தொடர்ந்து "வண்டிகளில் தங்கத்தை ஏற்றலாமே?" என்றான்.

அப்போதும் உதயணன் பேசவில்லை.

"என்ன அப்படியே இடிந்து போய்விட்டாய்; உன்னிடம் ஏமாறும் அளவிற்கு நான் அனுபவம் இல்லாதவனல்ல. ஏமாளியுமல்ல. உன்னை ஆரம்பம் முதலே சந்தேகித்தேன். இடையிடையே உன்னை நம்பியவனைப் போல நடித்தேனே தவிர நம்பவில்லை. என்னோடு நீ கூட்டுசேர வந்ததாகச் சொன்ன வினாடியிலேயே எனக்குச் சந்தேகம் வந்தது. நீ எங்களோடு இல்லாமல் அடிக்கடி அகன்று வந்த போது சந்தேகம் அதிகரித்தது. தங்கச் சுரங்கத்தைத் தனியாக அகழ்கிறாய் என்பது தெரியாமல் போனாலும் எனக்கு எதிராக ஏதோ செய்து கொண்டிருக்கிறாய் என்று நினைத்தேன். நீ எங்கு செல்கிறாய் என்ன செய்கிறாய் என்பதை அறிய சோமனை அனுப்பினேன்.

அவனது நாக்கை உனது ஆட்கள் அறுத்து விட்டார்கள். பயனற்றுப் போன அவனை வெட்டிச் சாய்த்த நான் அசலன் என்ற எனது கூட்டாளியை உன்னை வேவு பார்க்க அனுப்பி வைத்தேன். அவன் விசுவாசமும் துணிச்சலும் மிகுந்தவன். அவன் உன் இருப்பிடத்தை அறிந்தான், நீ பூமியை அகழ்வதை அறிந்தான். என்னிடம் சொன்னான். நான் அவசரப்படவில்லை. எங்களை பயமுறுத்துவதற்காக நீ அனுப்பிய வினோத மிருகத்தை அசலன் வெட்டிக் கொன்றான். நீ எங்களைப் பொய்யான இடத்தில் தங்கத்திற்காகத் தோண்ட செய்து விட்டு உண்மையிலேயே தங்கம் இருக்கும் இடத்தில் ரகசியமாக நீ அகழ்வதைச் சந்தேகமற உணர்ந்து கொண்ட நான் நீ தங்கத்தைத் தோண்டி எடுக்கும் வரை மௌனமாக இருந்தேன். பொய்யான இடத்தில் மெய்யாகத் தோண்டுவது போல் நடித்தேன். நான் எதிர் பார்த்தபடியே நீ தங்கத்தை எடுத்து விட்டாய். அவற்றைக் கொண்டு செல்ல உன் வண்டிகள் வந்ததும் நானும் வந்தேன். இப்போது இந்தத் தங்கத்தை நீ எடுத்துச் செல்ல முடியாது. நான் எடுத்துச் செல்கிறேன். உனக்கு நன்றி, என்று கூறிவிட்டுத் தன் சகாக்களிடம் தங்கப் பாளங்களை வண்டிகளில் அடுக்கச் செய்தான்.

“ஐயா! நீங்கள் என்ன பேசாமல் இருக்கிறீர்கள்? மோசம் போய் விட்டோம். தங்கம் பறி போகிறது” என்றான் விகர்ணன் பதற்றத்துடன்.

உதயணன் மூர்க்கனைப் பார்த்து “கொள்ளையர் தலைவரே! நடந்தது நடந்து விட்டது. தங்கத்தை நாம் இருவரும் சரியாகப் பங்கிட்டுக் கொள்வதே முறை” என்றான்.

“முறையா? அது எப்படி வந்தது இங்கு? நான் மட்டும் பாராதிருந்தால் நீ தானே எல்லா தங்கத்தையும் கொண்டு போயிருப்பாய்?” என்று கேட்டான் மூர்க்கன்.

“சரி பாதி இல்லையென்றாலும் மூன்றில் ஒரு பங்காவது கொடுங்கள். நாங்கள் மிகவும் கஷ்டப் பட்டிருக்கிறோம்.”

“மூன்றில் ஒரு பங்கா? முப்பதில் ஒரு பங்கு கூடத் தர முடியாது.”

“இங்கே பணிபுரியும் மக்களுக்கு கூலி தருவதற்காகத் தரகரிடம் கடன் வாங்கியிருக்கிறோம். அவருக்குத் தர வேண்டும். அதற்காகவாவது கொஞ்சம் தங்கம் கொடுங்கள்.”

உதயணன் இவ்வாறு பிச்சை கேட்பது போல் கேட்டதைப் பார்த்த கள்ளழகி “சீ! இந்த ஏமாளியிடமா கூட்டணி வைத்துக் கொள்ளத் தீர்மானித்தோம்?” என்று வெறுப்படைந்து

கொள்ளையர் தலைவனின் கழுத்தில் கையைப் போட்டுக் கொண்டு ஒய்யாரமாக நின்றாள்.

விகர்ணனும் பொறுமையை இழந்து "உதயணரே! இது என்ன நீங்கள் இப்படி ஆகி விட்டீர்கள்? உங்கள் வீரம் என்னவாயிற்று? இடையில் குறுவாட்கள் இல்லாததால் கோழையாகி விட்டீர்களா? கொள்ளையர்களைத் தடுக்கவும் முயலாமல் எதிர்க்கவும் முயலாமல் அவனிடம் கெஞ்சிக் கொண்டிருக்கிறீர்களே! கேவலம் அல்லவா இது? நாங்கள் அல்லும் பகலும் உழைத்ததெல்லாம் வீண்தானா? நாங்களெல்லாம் ஏமாளிகளா? நான் யார் என்பது உங்களுக்குத் தெரியுமல்லவா? தளபதி. எனது அதிகாரங்களைக் காட்டும் உரிமை எனக்கிருக்கிறது. இவர்களோடு நாங்கள் போர் புரியப் போகிறோம்" என்றான்.

உதயணனோ அவனைப் பொருட்படுத்தாமல் கள்ளழகியைப் பார்த்து "கள்ளழகி! நீயாவது தலைவரிடம் சொல். தரகருக்குத் தர வேண்டியதையாவது தரச் சொல்" என்று கெஞ்சினான்.

"நம்பிக்கை துரோகி நீ. உனக்குக் குன்றுமணிதங்கம் கூடத் தரமுடியாது" என்றாள் கள்ளழகி.

"நீயா என்னை நம்பிக்கை துரோகி என்கிறாய்? என்னுடன் கூட்டு சேர்ந்து கொண்டு தலைவரைக் கொலை செய்து விடலாம் என்றாயே! மறந்து விட்டதா?"

உதயணன் கூறியதைக் கேட்டதும் மூர்க்கன் ஆவேசப்பட்டு கள்ளழகியைப் பார்த்து "கள்ளழகி! உதயணன் என்ன சொல்கிறான்? அவனிடம் கூட்டு சேர விரும்பினாயா? என்னைக் கொல்ல திட்டம் தீட்டினாயா? உண்மையைச் சொல்" என்று கடுகடுத்தான்.

"அதெல்லாம் இல்லை தலைவரே. நிலைமை மாறி விட்டதால் பொய் சொல்கிறார்" என்றாள் கள்ளழகி.

"நான் சொன்னது உண்மை கொள்ளையர் தலைவரே! நீங்கள் அகழ்ந்தச் சுரங்கத்தில் தங்கத்துகள் இரண்டு படி கிடைத்தது. நான் அதில் பங்கு கேட்கவில்லை. ஆனால் பங்கு தரும் படி உங்களிடம் சண்டை போட்டாள். ஏன் என்று கேளுங்கள்?"

"கள்ளழகி! இப்போது தான் நினைவுக்கு வருகிறது. எனது ஆளான நீ இவனுக்காகச் சண்டை போட்டாய். எதற்கு? இவனோடு கூட்டு சேருவதற்காகத் தானே?"

"அது மட்டுமல்ல தலைவரே. தரகர் உங்களோடு தகராறு செய்த போது உங்களை ஆதரிக்கவில்லை. தரகனை ஆதரித்தாள். எனக்காக ஆதரித்தாள். அதன் உள் நோக்கம் என்ன என்று கேளுங்கள்."

மூர்க்கனுக்குக் கோபம் கொந்தளித்தது.

"இவன் சொல்வது உண்மை. அதற்கு உன் நடவடிக்கைகளே ஆதாரம். உதயணன் என் எதிரி. அவன் பொய் சொல்லவும் ஏமாற்றவும் உரிமையிருக்கிறது. நீயோ வெறும் சதைப் பிண்டம். ஆசை நாயகி. காசுக்காக உடலைக் காட்டும் காமுகி. நீ பொய் சொல்வதும் என்னைக் கொல்ல திட்டமிட்டதும் மன்னிக்க முடியாத குற்றங்கள். நீ உயிரோடு இருந்தால் எவனோடு வேண்டுமானாலும் கூட்டு சேர்வாய். என்னைக் கொல்ல முயல்வாய். நீ போனால் எனக்கு எத்தனையோ ஆசைநாயகிகள் கிடைப்பார்கள். இங்கே வந்ததில் எனக்குத் துரோகம் செய்த கூட்டாளிகளையே கொன்றவன் நான். உன்னை விட்டு வைப்பேன் என்று நினைக்காதே" என்று கர்ஜித்து விட்டு அவளது கழுத்தை அரக்கத் தனமாக நெரித்தான்.

அவள் வாயாலும் கண்களாலும் ஏதோ சொல்ல முயன்றாள்.

மூர்க்கன் எதையும் கவனிக்காமல் பெயருக்கு ஏற்ப மூர்க்கத் தனமாக நடந்து கொண்டு அவளது உயிரைப் போக்கிச் சடலமாக கீழே தள்ளினான்.

தன் சகாக்களைப் பார்த்து "இந்த உதயணனையும் அவனது ஆட்களையும் கொல்லுங்கள்" என்றான்.

உதயணன் விகர்ணனைப் பார்த்து "ஓடு விகர்ணா! ஓடு. எல்லோரும் ஓடுங்கள். கொள்ளையரிடம் சிக்காதீர்கள்" என்று கூறி விட்டு ஓடினான். விகர்ணனும் மற்றவர்களும் ஓடினார்கள் எதுவும் தோன்றாததால்.

கணிசமான தூரம் ஓடியபின் "போதும்" என்றான் உதயணன்.

"எதற்காகப் போதும் என்கிறீர்கள்? ஓடுவோம் ஓடுவோம். ஓடிக் கொண்டே இருப்போம்" என்றான் விகர்ணன் சற்றே நின்று.

"நம்மைக் கொள்ளைக்காரர்கள் துரத்தாத போது நாம் ஓட வேண்டியதில்லை விகர்ணரே" என்றான் உதயணன்.

"அவர்கள் துரத்தாவிட்டால் என்ன? மானம் துரத்துகிறதே! ஓடலாம்" என்றான் விகர்ணன்.

"உணர்ச்சிவசப்படாதீர்கள் விகர்ணரே."

"உணர்ச்சிகளைத்தான் கொள்ளையர்களிடம் இழந்து விட்டோமே! வசப்படுவதற்கு என்ன இருக்கிறது?"

"உயிர் இருக்கும் வரை உணர்ச்சிகள் சாகாது. உணர்ச்சிகள் செத்து விட்டால் உயிர் இருக்காது."

“போதும் போதும். இப்போது என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்?”

“எங்கேயிருந்து ஓட்டம் எடுத்தோமோ அங்கே போய் விட வேண்டியதுதான்.”

“அங்கே எதற்குப் போக வேண்டும்?”

“நாம் கஷ்டப்பட்டுக் கட்டிய சுரங்கத்தை மூடிவிட்டோம். அதைக் கடைசியாக ஒரு முறை பார்க்க வேண்டும். அதோடு நமது சமையல் பாத்திரங்கள் அங்கே தான் உள்ளன. அவற்றைப் பத்திரமாகக் கைப்பற்ற வேண்டும்.”

“என்ன சொல்கிறீர்கள் ஐயா? பாளம் பாளமாக தங்கங்களைப் பறிகொடுத்து விட்டோம். இந்தச் சமையல் பாத்திரங்களா இப்போது முக்கியம்?”

“இப்போது மட்டுமல்ல. எப்போதும் முக்கியம். பாத்திரங்கள் இருந்தால்தான் பலகாரங்களைச் செய்ய முடியும். பலகாரங் களைச் சாப்பிட்டால்தான் உயிர் வாழமுடியும். பொன்னை உண்ண முடியாதல்லவா?”

உதயணனுக்கு எதிர்பாராத ஏமாற்றத்தால் சித்தம் கலங்கி விட்டது என்ற முடிவுக்கு வந்த விகர்ணன் மேற்கொண்டு எதுவும் பேசாமல் அவனோடு புறப்பட்டான்.

தங்கச் சுரங்கம் தோண்டப்பட்ட இடத்தை அடைந்த உதயணன் அங்கே சமையல் பாத்திரங்கள் இருந்ததைக் கண்டு மகிழ்ந்தவனாய் “நல்ல வேளையாக கொள்ளையர்கள் இவற்றைக் கொண்டு செல்லவில்லை விகர்ணரே” என்று சொல்லி விட்டு உணவு தயாரிப்பதற்கான முயற்சியில் இறங்கினான்.

பாத்திரங்கள் இருந்த மறைவிடத்திலேயே உணவுப் பொருட்களும் இருந்ததால் அவற்றைக் கொண்டு சர்க்கரைப் பொங்கலை உதயணனே தயாரித்தான். பிறகு விகர்ணனுக்கும் வீரர்களுக்கும் சூடான பொங்கலைக் கொடுத்து “இனிப்பை உண்ண வேண்டிய நேரம். எல்லோரும் உண்ணுங்கள். நாம் எல்லோருமாகச் சேர்ந்து உணவுண்ணுவது இது தான் கடைசியாக இருக்கும் என்று தோன்றுகிறது” என்றான்.

எல்லோருக்கும் பசியாக இருந்த படியால் பொங்கலை உண்டார்கள்.

விகர்ணன் மட்டும் உண்ணவில்லை.

உதயணனோ ஒரு கட்டு கட்டினான். அவன் பகாசூரனைப் போல அள்ளி அள்ளி உண்பதைக் கண்ட விகர்ணனுக்கு வெறுப்பாக இருந்தது.

எதைப் பற்றியும் கவலைப்படாத உதயணன் உண்டு முடித்து விட்டு "என்ன நீங்கள் இன்னும் உண்ணவில்லையே! ஏன்?" என்று கேட்டான்.

"மானங் கெட்டவர்களுக்கு உணவுதான் குறையா?" என்று கேட்டான் விகர்ணன் வெறுப்புடன்.

"உணவு உண்ணாமல் இருந்து விட்டால் மானம் வந்து விடுமா? நம் வயிற்றுக்கு உணவு தான் தேவையாக இருக்குமே தவிர மானமும் மரியாதையும் அல்ல."

"உதயணரே! நீங்கள் சுயநினைவோடு தான் பேசுகிறீர்களா என்று தெரியவில்லை. வீரர்களுக்கு மானமே பெரிதல்ல. உணவு இல்லை."

"விகர்ணரே! நமது மகாராஜா, சேனாதிபதியார், பகாசூரர், இளவரசர் நரசிம்மர் ஆகிய எல்லோருமே போரில் தோற்றிருக்கிறார்கள். அதனால் அவர்கள் உண்ணாமல் இருக்கிறார்களா?"

"போரில் தோற்பது மானங்கெட்ட செயலாகாது உதயணரே. போரில் வெற்றியும் தோல்வியும் மாறி மாறி வரும். இந்த விஷயம் அப்படியல்ல. இங்கே போரும் இல்லாமல் எதிர்ப்பும் காட்டாமல் கஷ்டப்பட்டு அகழ்ந்த தங்கப் பாளங்களை கேவலம் கொள்ளையர்களுக்குக் கொடுத்து விட்டு முடவர்களாகவும் மூடர்களாகவும் அமர்ந்திருக்கிறோம். என் வாழ்க்கையில் இப்படியொரு மானக்கேட்டை நான் சந்தித்ததே இல்லை."

"விகர்ணரே! கொள்கைகள் கோட்பாடுகள் என்று நாம் ஆயிரமாயிரம் விஷயங்களை வைத்துக் கொண்டிருந்தாலும் என்ன நடக்க வேண்டும் என்று வகுக்கப்பட்டிருக்கிறதோ அது தான் நடக்கும். ஆண்களுக்கு வீரம் மட்டுமே கவசமல்ல. தந்திரமும், சாமர்த்தியமும் கூட கவசங்கள் தான். மௌனம் கூட சில நேரங்களில் கவசம் தான். எங்கெங்கே என்ன கவசம் அணிய வேண்டுமோ அவ்வப்போது அணிந்து கொள்ள வேண்டும். அதுவும் வீரம் தான்."

"படக் கூடாத கேவலத்தைப்பட்டு விட்டு இப்படியெல்லாம் பூசி மெழுகிறீர்களே! இதுவும் விதிதானா?"

"சரி விகர்ணரே. பேசியது போதும். நாம் போய் ராஜப் பிரதிநிதியைச் சந்திக்கலாம். போகலாம். பொங்கலை வீணாக்காமல் சாப்பிடுங்கள்" என்று சொன்ன உதயணன் வீராகளை வைத்து பாத்திரங்களைக் கழுவி சுத்தம் செய்து "தங்கத்தை எடுக்க மறுபடியும் நம்மவர் வந்தால் அவர்களுக்குப்

பயன்படக் கூடும். ஆகவே பாத்திரங்களை இங்கேயே புதைத்து விடுங்கள்” என்றான்.

பிறகு எல்லோருமாகச் சென்று அந்தப் பகுதியின் உண்மையான ராஜப் பிரதிநிதியைச் சந்தித்தார்கள்.

எல்லோரையும் மாலை மரியாதையோடு வரவேற்ற போது விகர்ணனுக்கு எதுவும் புரியவில்லை.

“எல்லாம் நீங்கள் சொன்னபடியே நடந்திருக்கிறது” என்றான் ராஜப்பிரதிநிதி.

அவனே தொடர்ந்து “தாங்கள் கூறியபடியே கொள்ளையர்கள் தங்கள் பாளங்களுடன் பார வண்டிகளில் புறப்பட்டு ஒரு காத தூரம் சென்ற நிலையில் பகாசூரர் படைப் பிரிவோடு வந்து கொள்ளையர்களை வளைத்துக் கொண்டார். கொள்ளையர்கள் வெட்டி வீழ்த்தப்பட்டார்கள். தங்கம் அனைத்தும் பத்திரமாக துவாரசமுத்திரத்திற்குச் சென்று கொண்டிருக்கிறது. சேனாதிபதிக்கு ஆனந்தமோ ஆனந்தம். உங்களையெல்லாம் தலைநகரில் வரவேற்கத் தயாராக இருப்பதாக உங்களிடம் சொல்லச் சொன்னார்” என்றார்.

விகர்ணரைப் பார்த்த உதயணன் “இப்போது திருப்தி தானா விகர்ணரே! நாம் தங்கத்தைக் கண்டுபிடித்ததும் நமது வீரர்கள் இருவரை சேனாதிபதி பகாசூரரிடம் அனுப்பினேன். தங்கங்களைச் சுமந்து செல்ல பார வண்டிகளை அனுப்பச் சொன்னேன். அதோடு படைப் பிரிவொன்றையும் அனுப்பச் சொன்னேன்” என்றான்.

“கொள்ளையர்கள் நாம் அகழ்ந்தத் தங்கத்தைக் கவர முயல்வார்கள் என்று எதிர்பார்த்தீர்களா?” என்று கேட்டான் விகர்ணன்.

“ஆமாம். கொள்ளையர் தலைவன் எப்படி நம்மை நம்பவில்லையோ அப்படித்தான் நானும் அவனை நம்பவில்லை. நாம் தங்கம் அகழ்வதை அவன் மோப்பம் பிடித்து விடுவான் என்று எதிர்பார்த்தேன். தங்கத்தை அவன் கவர நினைத்தால் கடைசி கட்டத்தில்தான் நடக்கும் என்று நினைத்தேன். அப்படியே நடந்தது. அந்த நேரத்தில் வீரத்தைக் காட்ட முற்பட்டால் காரியம் கெட்டு விடும் என்பதால் தான் கோழையைப் போல நடந்து கொண்டதோடு மட்டுமில்லாமல் எதிர்ப்பு காட்டாமல் இருந்தேன். அவர்கள் தாக்க முற்பட்ட போது பயந்து ஓடுவது போல் ஓடினேன். கொள்ளையர்கள் நிதானமாகச் செல்வார்கள் என்பதும் படைப் பிரிவினால் வளைக்கப்படுவார்கள் என்பதால் பதற்றமடையாமல் இருந்தேன்.”

"என்னை மன்னித்து விடுங்கள் உதயணரே. என் அனுபவத்திற்கும் உங்கள் அனுபவத்திற்கும் உள்ள வித்தியாசம் மகத்தானது என்பதைப் புரிந்து கொண்டேன். இந்த அனுபவம் வருங்காலத்தில் எனக்கு உபயோகமாக இருக்கும்" என்றான் விகர்ணன்.

பிறகு அவர்கள் இரண்டு நாட்கள் கழித்து துவார சமுத்திரத்திற்குச் சென்ற போது சேனாதிபதி பெரும் வரவேற்பு அளித்தார். மகாராஜா வாழ்த்தினார். இளவரசன் நரசிம்மன் உதயணனைக் கட்டிப் பிடித்துக் கொண்டு பாராட்டினான்.



துவார சமுத்திரத்தில் ஆதிநாதர் ஆலயத்தில் உபன்யாசம் செய்து கொண்டிருந்தார் நீலகேசி.

"நாம் எதற்காக வாழ்கிறோம் என்பதை விட எப்படி வாழ்கிறோம் என்பது தான் முக்கியம். புலி பசித்தாலும் புல்லைத் தின்பதில்லை. நாமும் அப்படித்தான் இருக்க வேண்டும். நிலைமைகள் மாறலாம். ஆனால் நாம் மாறிவிடக் கூடாது. உலகத்தில் தவறான அம்சங்களை நோக்கி நம்மை இழுக்கும் சக்திகள்தான் அதிகமாக இருக்கின்றன. மனிதர்களும் அந்த சக்தியை நோக்கிச் செல்ல விரும்புபவர்களாக இருக்கிறார்கள். நல்ல சக்திகளை நோக்கி நமது முதுகுதான் இருக்கிறதே தவிர முகம் இருப்பதில்லை. சமணம் நமக்கு வலியுறுத்துவது நிலை மாறாத தன்மையைத்தான். நிலைமாறாத தன்மையே நமது பிரதிக்ஞை. பிராணன். பிறவிப்பயன்" என்று சொல்லி முடித்தார்கள்.

அவனது உபன்யாசத்தைக் கேட்க சாதாரணமாக ஐநூறு சமணர்கள் திரள்வது வழக்கம்.

தற்போது ஐம்பது பேர் மட்டுமே வந்திருந்தார்கள்.

நீலகேசிக்கு ஆத்திரமாக இருந்தாலும் வந்திருந்த ஐம்பது பேரில் ஓர் அழகான பெண்ணும் இருந்ததால் மகிழ்ச்சியடைந்தார்.

எல்லோரும் வெளியேறும் நிலையில் அவரை நெருங்கிய அழகி "அடிகளே! என் சந்தேகம் ஒன்றைக் கேட்கலாமா?" என்று கேட்டாள்.





நாளைய சோற்றுக்கு வழியைக் காணாதவன் இன்றையச் சோற்றை நிம்மதியாக உண்ணமாட்டான் – நீலகேசி



சந்தேகம் கேட்க வந்த பெண் தளதளவென்று இருந்ததையும் தக்காளியைப் போல இருந்ததையும் கண்ட நீலகேசி "சல்லாபமாக இருப்பதை விட்டு இவளுக்கு எதற்காகச் சந்தேகங்கள்?" என்று தனக்குள் கேட்டுக் கொண்டதோடு இன்றைய இரவுக்கு இரை கிடைத்து விட்டது என்று எண்ணியவராய் "என் இருப்பிடத்திற்கு வா பெண்ணே. சந்தேகங்களைத் தீர்த்துக் கொள்ளலாம். இங்கே நாம் மற்றவர்களுக்கு இடைஞ்சலாக இருக்க வேண்டாம்" என்றார் உத்தமனைப் போல.

"அப்படியே ஆகட்டும் அடிகளே" என்று கூறிய அப்பெண் அவருக்குப் பின்னால் நடந்தாள்.

புலிக்குப் பின்னால் மான் செல்வது போல இருந்தது அக்காட்சி.

துறவிகள் சிலர் அக்காட்சியைப் பார்த்த போது அவ்வாறே நினைத்தார்கள்.

நீலகேசி யாரையும் கவனிக்கவில்லை.

நேராகத் தன் பரிவேணைக்குச் சென்றார். பணிமக்கள் பாலைக் கொடுத்தார்கள்.

"இவளுக்கும் கொடுங்கள்" என்றார். பணி மக்கள் அவளுக்கும் பாலைக் கொடுத்தார்கள்.

"நீங்களெல்லாம் வெளியே இருங்கள். இந்தச் சிறு பெண்ணின் பெரும் சந்தேகங்களைத் தீர்த்து விட்டு உங்களை அழைக்கிறேன்" என்றார் நீலகேசி.

பணி மக்கள் குறிப்பறிந்து வெளியேறினார்கள்.

கட்டிலில் அமர்ந்தார் நீலகேசி.

"நான் தங்கள் கால்களைப் பிடித்து விடட்டுமா சுவாமி?" என்று கேட்டாள் அவள்.

“இன்று நீ பிடித்து விடலாம். நாளைக்கு யார் வருவார்கள்?” என்றார் துறவி இயல்பான குரலில்.

“நாளைய நினைப்பு இன்று எதற்கு சுவாமி? இன்றைக்கு இந்த நேரம் தானே உண்மை?” என்று கேட்டாள் அவள்.

அவள் சரியாகக் கேட்டு விட்டதை எண்ணி சற்றே அதிர்ந்த நீலகேசி அதிர்ச்சியைக் காட்டிக் கொள்ளாமல் “நீ கூறுவது சரியல்ல பெண்ணே. நாளைய சோற்றுக்கு வழியைக் காணாதவன் இன்றையச் சோற்றை நிம்மதியாக உண்ண மாட்டான். நாளைய பொழுதிற்கு திட்டமிட வேண்டிய தென்றால் அதை இன்றுதான் இட முடியுமே தவிர நாளை இட முடியாது. துறவியாக இருப்பவன் கூட நாட்டின் மீது அக்கறையுள்ளவன் ஆதலால் நாளையைப் பற்றி அவன் கவலைப்படாமல் இருக்க முடியாது. நாளையைப் பற்றி நினைப்பவன் யோகி. இன்றைய நாளைப் பற்றி எண்ணுபவன் போகி. நேற்று இன்று நாளை என்று எதைப் பற்றியும் எண்ணாதவன் ரோகி” என்றார்.

“என்னை மன்னித்து விடுங்கள் சுவாமி. இந்த விஷயத்தில் இவ்வளவு நுட்பங்கள் இருக்கும் என்று எனக்குத் தெரியாது.”

“பாதகமில்லை. நீ சிறு பெண். உன் போன்றவர்களுக்கு வழிகாட்டத்தான் நாங்கள் இருக்கிறோம். அது போகட்டும். உன் சந்தேகம் என்ன? அதைக் கேள்”.

“சுவாமி! துறவிகள் காமத்தைச் சுவைக்கலாமா?”

முதல் சந்தேகமே வில்லங்கமாக இருந்தது நீலகேசிக்கு.

இவளுக்கு எதற்காக இந்தச் சந்தேகம்?

ஒரு வேளை நம்மைப் பற்றித் தெரிந்து கொண்டு காது குத்துகிறாளா?

என்றெல்லாம் நினைத்த நீலகேசி “பெண்ணே! காமம் என்றால் என்ன என்று உனக்குத் தெரியுமா?” என்று கேட்டார்.

“ஆணும் பெண்ணும் கூடி சல்லாபிப்பதுதான் காமம் சுவாமி” என்றாள் அவள்.

“உலகம் அதற்குச் சிற்றின்பம் என்று பெயர் வைத்திருக்கிறது. தெரியுமல்லவா?”

“தெரியும் சுவாமி.”

“அதாவது அதில் ஒன்றுமில்லை என்பது அதன் உட்பொருள். அதோடு காமம் என்பது வாழ்க்கையின் பல அங்கங்களில் ஒன்று. பல படிகளில் ஒன்று. அதைத் தாண்டிக் கொண்டு போவதும்

தவறு. அந்தப் படியிலே நின்று விடுவதும் தவறு. புரிகிறதா நான் சொல்வது?"

"புரியவில்லை சுவாமி."

"படிக்கட்டுகள் இருப்பது எதற்கு? அவற்றில் ஏறி உயரத்தை அடைவதற்குதான். உயரம் தான் முக்கியமே தவிர படிக்கட்டுகள் முக்கியமல்ல. காமம் ஒரு படிக்கட்டு. எல்லோரும் அதில் ஏறலாம். உயரத்திற்குப் போக வேண்டும் என்பதுதான் லட்சியமாக இருக்க வேண்டும். காமம் என்ற படிக்கட்டிலேயே உட்கார்ந்து விடக் கூடாது."

"அப்படியானால் துறவிக்கு காமம் தேவைதானா சுவாமி?"

"துறவிக்கும் படிக்கட்டுகள் தேவை. அவனால் உயரத்திற்குத் தாவிச் சென்று விட முடியாது."

"அப்படியென்றால் துறவிக்கும் மற்றவர்களுக்கும் வேறு பாடே இல்லையா?"

நீலகேசிக்கு எரிச்சலாக இருந்தது.

"இவள் எதற்காக இடக்கு மடக்காகக் கேட்டுக் கொண்டிருக் கிறாள்? இதற்கு நான் தானா? கிடைத்தேன். என்னிடம் இருக்கும் ஆண்மையைக் கேட்டுப் பெறுவதை விட்டுச் சந்தேகங்களைக் கேட்டுக் கொண்டிருக்கிறாளே பீடை" என்று தனக்குள் அலுத்துக் கொண்ட அவர் அந்த அலுப்பை மறைக்க லேசாகச் சிரித்தார்.

"உனக்கு ஏன் இந்தச் சந்தேகங்கள்? இந்த வயதில் இதெல்லாம் எதற்கு? துறவியாகப் போகிறாயா? சமணத்தில் பெண்கள் துறவுக்கு வர முடியாதே?" என்றார்.

"தெளிவு பெறுவதற்குத்தான் கேட்டேன் சுவாமி" என்றாள் அவள்.

"நீ பெற வேண்டியது சுகங்களையும் குழந்தைகளையும் தான்" என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்ட அவர் "துறவி காமத்தை அனுபவிப்பது என்பது சேற்றில் இறங்கி மேலே சென்று விடுவது போன்றது. மேலே வந்ததும் சேற்றை அவன் உதாசீனப்படுத்துகிறான். மற்றவர்களோ சேற்றிலேயே புரள்கிறார்கள். மேலே வந்தும் கூடச் சேற்றையே நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்" என்றார்.

"தாங்கள் எப்படி சுவாமி?"

உள்ளுக்குள் கோபப்பட்டுக் கொண்டாலும் அதைக் காட்டிக் கொள்ளாமல் "என்னைப் பற்றி நானே சொல்லிக் கொள்ள

வேண்டிய அவசியம் இல்லை. என்னைப் பற்றி பிறர் என்ன சொன்னாலும் கவலைப்படவில்லை'' என்றார்.

“உங்களைத் தூற்றினால் கூட கவலைப்பட மாட்டீர்களா?”

“என்னையா தூற்றுகிறார்கள்? இல்லை. இந்த உடம்பைத் தூற்றுகிறார்கள். இந்த உடம்பா நான்? இல்லை. ஆத்மாவே நான்.”

“சுவாமி! தங்களைப் பற்றி எனக்கு ஓரளவிற்குத் தெரியும். உங்களை எனக்கு மிகவும் பிடிக்கும். அதனால் தான் வந்தேன்.”

“அப்படி வா வழிக்கு” என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்ட அவர் “அப்படியானால் நீ சந்தேகம் கேட்க என்னிடம் வரவில்லையா?” என்று கேட்டார்.

“அதெல்லாம் எனக்கெதற்கு சுவாமி? அவற்றைத் தெரிந்து கொண்டு நான் என்ன செய்யப் போகிறேன்?”

“பிறகு?”

“அடிகளே! எனக்குத் திருமணம் நடக்கப் போகிறது.”

“நல்ல விஷயம் தானே?”

“என்னை மணக்க விருப்பவரை எனக்குப் பிடிக்க வில்லை.”

“அதைச் சொல்லி விடுவது தானே?”

“சொல்லி விட்டேன். ஏற்றுக் கொள்ள யாரும் தயாராக இல்லை.”

“பிறகு?”

“பழிவாங்கத் தீர்மானித்து விட்டேன்.”

“யாரை?”

“என்னை மணக்க விரும்புகிறவரை”

“எப்படி?”

“அவரை மணக்கும் முன்பாகக் கற்பை இழந்து விட விரும்புகிறேன்.”

“அடாத விருப்பம்தான். ஆனாலும் அது உன் விருப்பம். இதை என்னிடம் எதற்காகச் சொல்கிறாய்?”

“தாங்கள்தான் எனக்கு உதவ வேண்டும்.”

“நானா? எப்படி?”

சொன்னாள் அவள்.

“பழம் நழுவி பாலில் விழும் என்பார்களே அது இது தானா?” என்று உள்ளுக்குள் களிப்படைந்த நீலகேசி “நீ தவறான விலாசத்திற்கு வந்து விட்டாய் பெண்ணே. நான் துறவி” என்றார்.

"இருந்தாலென்ன சுவாமி? துறவிக்கும் காமம் உண்டு என்று நீங்கள் தானே சொன்னீர்கள்?"

"அது பொது. நான் அப்படியல்ல. எனக்கும் காமத்திற்கும் ரொம்ப தூரம். அதைப் பற்றி எனக்கொன்றும் தெரியாது."

"எனக்கும் தான் தெரியாது. அதை யார் கற்பிப்பார்கள் சுவாமி?"

"பெண்ணே! கட்டிளம் காளையர் பல இருக்க. மொட்டைத் தலை துறவியை நாடுவது மூடத்தனம்."

"தலையில் என்ன இருக்கிறது சுவாமி? எல்லாமே அதற்குக் கீழே தான்."

"பெண்ணே! எனக்குச் சங்கடத்தைத் தருகிறாய் நீ. துறவியின் தூய்மையைக் கெடுக்கிறாய். காமம் எனக்கு விரோதி."

"இருந்தாலும் அது ஒரு படிக்கட்டு தானே சுவாமி? நாமென்ன அதிலேவா நின்று விடப் போகிறோம்?"

"முதலில் நீ போய் கதவைச் சாத்து."

சாத்தினாள் அவள்.

நீலகேசி கட்டிலில் படுத்துக் கொண்டு "இப்போது என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டார்.

"இப்படிக் கேட்டால் எப்படி சுவாமி?" என்று கேட்ட அவள் அவளது காவி ஆடையை உருவினாள்.

கண்ட காட்சியைக் கண்டு கண்களை மூடிக் கொண்ட அவள் "சுவாமி! நீங்கள் திருடர். துறவியே அல்ல. இப்படியா?" என்றாள்.

"எப்படியா?"

"இதென்ன இப்படியெல்லாம் கேட்கிறீர்கள்?"

"சரி கேட்கவில்லை" என்று சொன்ன நீலகேசி அவளைப் பிடித்து இழுத்தார்.

அடுத்து அவர் நடவடிக்கையில் இறங்கிய போது அந்தப் பெண் அதிர்ந்து போனாள்.

"அடப்பாவி! துறவியா நீ? காமத்தைப் பற்றி ஒன்றும் தெரியாது என்று சொன்னாயே! காமத்தைக் கரைத்துக் குடித்தவனாக அல்லவா இருக்கிறாய்? உதிர்ந்த புஷ்பத்தைப் போல மிருதுவான தேகமே துறவியின் தேகம் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்? நீ கெட்டியான இரும்பு போல் அல்லவா இருக்கிறாய்? எத்தனை வேகம்? எத்தனை வீரியம்? காமாந்தகனும் காளைகளும் உனக்குத்

தூசிக்குச் சமம் என்றல்லவா நினைக்க வைத்து விட்டாய்?" என்று நினைத்து மாய்ந்தாள் அவள்.

அவரோ அவளது எண்ணங்களை அறியவில்லை. அது பற்றி கவலைப்படவும் இல்லை.

கரும்பு தோட்டத்தில் யானை நுழைந்தது போல் - குரங்கு ஒன்று மாலையைக் கைப்பற்றியது போல் பாய்ந்தும் புரட்டியும் அவளை வாட்டி எடுத்தார்.

இந்த முறையில் இப்படி அந்த முறையில் அப்படி என்று பல்வேறு லீலைகளைப் பற்றிச் சொல்லி அனுபவத்தில் காட்டி மகிழ்ந்தார்.

போதாத குறைக்கு இடையில் மதுவை வேறு எடுத்துக் குடித்து விட்டதால் தன் கதி அதோகதி தான் என்று நினைத்த அவள் "போதும். போதும். விடுங்கள்" என்றாள்.

"அப்படி விட்டு விடும் வழக்கம் எனக்கில்லை" என்று கூறி மீண்டும் ஒரு பிடி பிடித்தார் நீலகேசி.

சற்றே அவளைத் தளர்த்தி "உனக்கொரு விஷயம் தெரியுமா?" என்று கேட்டாள்.

நசுங்கிய நிலையில் இருந்த அவள் "என்ன?" என்று நடுங்கிய குரலில் கேட்டாள்.

"தேவலோகப் பெண்களுக்கு வயதானாலும் ஒரு உறுப்பு முற்றாதாம். இளமையாகவே இருக்குமாம். அது எது தெரியுமா?"

"எது?"

அவர் தொட்டுக் காட்டி விட்டு* "நீயும் தேவலோகப் பெண்மணி போல் இருப்பாயாக" என்றார்.

அவரது கிராதகத்தை அவளால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

பலத்தைத் திரட்டி அவரை உதறினாள்.

ஆடைகளைப் பொறுக்கி எடுத்து அணிந்து கொண்டாள்.

அவருக்கும் போதுமென்று இருந்ததால் மேன்மேலும் இடக்கு செய்யாமல் காவியை எடுத்து அணிந்து கொண்டு "போதுமா? இன்னும் கொஞ்சம் வேண்டுமா?" என்று கேட்டு விட்டுச் சிரித்த படி கட்டிலில் அமர்ந்தார்.

---

* 'முலை முற்றா இளமையார்' சூளாமணி. பாடல் எண் 2059.

"நீயா துறவி! இல்லை. நீ துறவியும் இல்லை. மனிதனும் இல்லை. மிருகம். காண்டாமிருகம். காட்டெருமை. காட்டு மிராண்டி. காமப் பேய்" என்று வார்த்தைகளால் தூற்றினாள் அப்பெண்.

"என்னிடம் சிக்கும் எல்லா பெண்களும் சொல்லும் வார்த்தைகள்தான் இவை" என்றார் நீலகேசி.

"பாவியே! நீ சாவாய்" என்றுச் சபித்தாள் அவள். அவளுக்கு உடம்பெல்லாம் வலித்தது.

"எனக்கு ஆயுள் 120. கொஞ்சத்தில் சாக மாட்டேன்" என்றார் நீலகேசி.

"அயோக்கியனே! உனக்குத் திங்களழகியைத் தெரியுமா?"

"எத்தனையோ அழகிகள் வந்திருக்கிறார்கள். திங்களழகி யார் செவ்வாய் அழகி யார் என்பது எனக்குத் தெரியாது."

"முரடர்களிடமிருந்து ஒரு பெண்ணைக் காப்பாற்றி வர்த்தமானீஸ்வர விஹாரத்திற்குக் கொண்டு வந்தாய். மயக்கமடையச் செய்து கெடுத்தாய். மறுபடியும் உங்களது அயோக்கியத்தனத்தை அறியாமல் விஹாரத்திற்கு வந்த போது மீண்டும் கெடுத்து நச்சுப் பொய்கையில் வீழ்த்தச் சொன்னாய். அர்ஷ்டவசமாக மீண்ட அவள் இங்கே வந்தாள். இங்கேயும் சீரழித்தாய்."

நீலகேசிக்கு நினைவிற்கு வந்தது.

"அவளா? அவள் உயிரோடு இருக்கிறாளா?"

"இருக்கிறாள். கருவுற்று இருக்கிறாள்."

"கருவெல்லாம் எதற்கு? வைத்தியர்களிடம் காட்டி கலைத்தழிக்க வேண்டியது தானே?"

"இல்லை. அது உனது குழந்தை. பெற்றெடுப்பாள். பெற்று வளர்ப்பாள். அது உன் குடும்பத்தையும் மதத்தையும் வேரோடு அழிக்கும்."

நீலகேசி சிரித்தார்.

"புல் பூண்டாகி செடியாகி மரமாகி மலையாகப் போகிறதா? சரிதான். அதற்குள் அந்தப் புல்லையே நான் பிடுங்கி விடுவேன்."

"எதையும் உங்களால் பிடுங்க முடியாது."

"என்ன மிரட்டுகிறாய்?"

"என்னை உன்னிடம் அனுப்பியவளே அவள் தான். உன்னிடம் உறவாடும் படிச் சொன்னதும் அவள் தான்."

"மிக்க மகிழ்ச்சி. பணியை நிறைவேற்றி விட்டாய்."

"என்ன பணி என்பது உனக்குத் தெரியுமா?"

"வேறென்ன இருக்கிறது? நாளைக்கும் வருகிறாயா?"

"மூடனே! நான் மோசமான கணிகை. பயங்கர நோய் என்னை ஆட்கொண்டிருக்கிறது. விரைவிலேயே நான் இறந்து விடுவேன். உன்னிடம் உறவு கொண்டதின் மூலம் என் நோய் உனக்கும் தொற்றி இருக்கும். நீ சொன்னது போல் 120 ஆண்டுகளுக்கு வாழ உன்னால் இயலாது. மரணத்திற்கான நாட்கள் எண்ணப்படுகின்றன. திங்களழகி இட்ட பணியை வெற்றிகரமாக நிறைவேற்றி விட்டேன்" என்று சொன்ன அப்பெண் அவரை அப்படியே தள்ளிவிட்டு கதவைத் திறந்து கொண்டு வெளியேறினாள்.

நரியொன்று எங்கோ ஊளையிட்டது.

நடந்ததெல்லாம் கனவு போலிருந்தது நீலகேசிக்கு. திங்களழகியை நினைத்த போது அவருக்குச் சற்று அச்சமாகவே இருந்தது. சாதாரணப் பெண்ணாக இருந்து கொண்டு அவள் தன்னைத் தொலைப்பதற்கு எப்படியெப்படியோ எல்லாம் முயன்று வருவதையும், தற்போது கொடிய நோய்க்கு ஆளானக் கணிகையை அனுப்பி உறவாட விட்டு அவளது நோய் தனக்குப் பரவும்படிச் செய்ததையும் கண்ட போது அவருக்கு வியப்பாகவும் இருந்தது.

இது உண்மையாக இருக்குமா என்று எண்ணிப் பார்த்தார்.

உண்மையாகத்தான் இருக்க வேண்டும் என்று தோன்றியது.

"ஆகா! இது தெரியாமல் எப்படியெல்லாம் அவளைப் புரட்டியெடுத்தோம்! வாட்டி எடுத்தோம்! எத்தனை வக்கிரங்கள் வினோதங்களைச் செய்தோம்! அதுவும் எத்தனை நாழிகைகளுக்கு! நிச்சயமாக அந்த நோய் நமக்கு வரப்போகிறது நம் கதி அதோகதி தான். நமது ஆட்டம் முடியப் போகிறது" என்று நினைத்த அவர் மறுகணமே -

"என் ஆட்டமாவது! நிற்பதாவது! நான் செத்த பின்பு கூட ஆட்டம் போடக் கூடியவன். எனக்கு ஆயுள் நிச்சயமாக 120 தான். நோயேன்ன நோய்? பேயே வந்து பீடித்தாலும் பாயாகப் பயன்படுத்துபவன் நான். இந்த நோய்க்கா என்னிடம் மருந்தில்லை? இருக்கும். இருக்கிறது. உண்மை. அதை அருந்துவேன். அமரனாவேன். யானை பலத்தைப் பெறுவேன். இந்தத் திங்களழகியையும் அவள் அனுப்பிய கணிகையையும்

தேடிப் பிடித்துக் கொல்வேன். அழகிகளை வளைத்து அனுபவிப்பேன். எனக்குத் தடை போட நினைப்பவர்கள் தடயம் இல்லாமல் அழிந்து போவார்கள். நீலகேசியும் நீலவானமும் ஒன்று. இரண்டிற்கும் அழிவில்லை" என்று சொல்லிக் கொண்டு தெம்படைந்தார்.

எஞ்சிய இரவு நேரத்தில் நிம்மதியாக உறங்கி விட்டு காலையில் எழுந்து நீராடி உணவை உண்டு விட்டு ஆதிநாதர் ஆலயத்திற்குச் சென்றார்.

"ஆதியே! ஆதியும் அந்தமும் இல்லாத ஜோதியே! உன்னில் பாதியாகக் கூட இல்லாமல் பாவியாய் இருந்து தவிக்கிறேன் ஐயனே! உலகம் என்னை எப்படிப் பார்த்தாலும், கலகம் தான் செய்தாலும் உன் திருவடிகளையே சிரசில் தாங்கும் எனக்குக் கலக்கமில்லை. களங்கமில்லை. என் வழி நிற்கும் சமணச் சிரோன்மணிகளுக்கும் நற்காலம் தானே தவிர நலிவுகள் இல்லை. உன் கடைக்கண் பார்வை ஒன்றினால் உலகை ரட்சிக்கும் நாதனே! ஞானபூதனே! உன் பாதமே சரணம். உன் திருநாமமே அபயம்" என்று வாய் விட்டே வேண்டிய போது பக்கத்தில் இருந்தத் துறவிகள் மருண்டார்கள்.

"உண்மையில் இவர் நல்லவர் தானோ? நாம் தான் தவறாக எடை போட்டு விட்டோமோ?" என்று நினைத்தார்கள்.

அங்கே தரிசனத்திற்கு வந்த மக்களும் நெகிழ்ந்து போய் அவரை வணங்கினார்கள்.

"என்னை வணங்காதீர்கள். ஆதிநாதனே வணக்கத்திற்கு உரியவன். அவனை வணங்குங்கள். அவனது திருவடிகளைத் தஞ்சம் அடையுங்கள். அவனே காப்பு, அவனே பாதுகாப்பு. அவனே கருணை. அவனே கடவுள்" என்று வார்த்தைகளை உதிர்த்து விட்டு நீலகேசி வெளியே வந்த போது சிவனடியார் அவருக்காகக் காத்திருந்தார்.

"வாருங்கள் சிவனடியாரே. உங்களைக் கண்டதில் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி" என்றார்.

"நான் சொல்லப் போகும் செய்தி மகிழ்ச்சியை அளிக்காது. மயக்கத்தைத் தரும்" என்றார் சிவனடியார்.

"என்ன அது?"

சொன்னார் சிவனடியார். மயங்கி விழுந்தார் நீலகேசி.





உண்மைகளை எவ்வளவு காலத்திற்கு வேண்டுமானாலும் கஷ்டமாக இருந்தாலும் சுமக்கலாம். பொய்களை ஒரு நாழிகை கூடச் சுமக்கக் கூடாது – நீலகேசி




"என்ன சொல்கிறீர்கள் சிவனடியாரே? என்ன சொல்லப் போகிறீர்கள் நான் மயக்கமடையும் அளவிற்கு? மகாராஜா இறந்து விட்டாரா என்ன?" என்று கேட்டார் நீலகேசி.

"மகாராஜா இறப்பதாவது! அவர் மேரு மலை அடிகளே. யாராலும் அசைக்க முடியாது" என்றார் சிவனடியார்.

"பிறகு என்ன விஷயம்?"

சொன்னார் சிவனடியார்.

"ஹா! ஐயோ" என்றபடி கீழே விழுந்து மயக்கமானார் நீலகேசி.

அருகில் இருந்தவர்கள் பதறிப் போய் நீரைக் கொண்டு தெளித்து மயக்கத்தைப் போக்கினார்கள்.

"என்ன ஆயிற்று ஆச்சார்யரே? ஏன் மயக்கமடைந்தீர்கள்?" என்று கேட்டார்கள்.

தன்னைச் சுற்றி நிறைய பேர் சூழ்ந்திருப்பதைக் கண்ட நீலகேசி "ஒன்றுமில்லை. மன அழுத்தம்தான். மதத்தின் நிலைபற்றி நினைத்துக் கொண்டேன். வேதனையில் மயக்கமாகி விட்டேன் போலிருக்கிறது" என்றார்.

அவரை அவரது இருப்பிடத்திற்கு கொண்டு போய் விட்டார்கள் மக்கள்.

ஒருவாறு தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்ட நீலகேசி பக்கத்தில் இருந்தச் சிவனடியாரைப் பார்த்து "சிவனடியாரே! என்ன சொல்கிறீர்கள்? மலைக்குகைப் புதையலா? என்னுடையதா? அரசாங்கம் எடுத்துக் கொண்டு விட்டதா? எங்கேயோ சொல்ல வேண்டிய விஷயத்தை என்னிடம் சொல்லி விட்டீர்கள். நான் உம்மை விட ஏழ்மையான துறவி ஐயா. போராடும் துறவியாக இருப்பதுண்டு. பெருஞ் செல்வம் சேர்க்கும் பேராசைத் துறவியாக இருந்ததில்லை" என்றார்.

"அப்படியென்றால் எதற்காக மயங்கி விழுந்தீர்கள்?"

"ஆச்சார்யர் ஜெயதேவர் இறந்து விட்டதாகத் தானே சொன்னீர்கள்?"

"அடிகளே! இப்படி முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்கப் பார்க்கிறீர்களே! நான் ஒன்று கூற உங்கள் செவிகளில் வேறொன்றா விழும்? உங்கள் காதுகள் பழுதாகி விட்டனவா?"

"காதுகள் மட்டுமல்ல சிவனடியாரே. உச்சி முதல் உள்ளங்கால் வரை பழுதாகி விட்டன. நானே பழுதாக்கிக் கொண்டேன். உலுத்தர்கள் ஆட்சி செய்யும் போது உயிர் வாழ்வதை விட உயிர் துறப்பது மேல். இந்த ஆட்சியில் பயிர்களுக்கு வேண்டுமானால் வாழ்க்கை இருக்கலாம். சமண உயிர்களுக்கு வாழ்க்கையில்லை. எனவே தான் தலைவன் என்ற முறையில் சிறுகச் சிறுக என்னை அழித்து வருகிறேன். நான் நலிய நலிய இந்நாட்டு மன்னனும் நலிவான். செத்துப் போய் நரகம் புகுவான்."

"அது இருக்கட்டும் அடிகளே. அது தெரிந்த விஷயம் தானே? நான் பேசுவது நீங்கள் காலம் காலமாக ச்ரவணபெலகுலாவுக்கு அருகில் உள்ள மலைக் குகையில் சேர்த்து வைத்த புதையல் களையெல்லாம் மாந்தரீகன் ஒருவன் அடையாளம் காட்டி விட்டானாம். சேனாதிபதி பகாசூரர் படைகளோடு சென்று அவற்றைக் கவர்ந்து வந்து அரசாங்கக் கருவூலத்தில் சேர்த்து விட்டாராம்."

சிவனடியார் கூறியது பிசகில்லாமல் இருந்ததால் பகீரென்றிருந்தது நீலகேசிக்கு. மலைக்குகை செல்வத்தில் மாந்தரீகன் தன்னிடம் பங்கு கேட்டுத் தராததால் அவன் இந்த வேலையைச் செய்திருப்பான் என்றே நம்பினார்.

அது மட்டும் உண்மையாக இருக்குமானால் தனது எதிர்காலம் இருண்டு விட்டது என்பதை உணர்ந்து பதைபதைத்தார். மாந்தரீகனைச் சபித்தார்.

ஒரு பக்கம் திங்களழகியும் மறுபக்கம் மாந்தரீகனுமாகச் சேர்ந்து கொண்டு தனக்கு கஷ்டத்தையும் நஷ்டத்தையும் விளைவிக்கிறார்கள் என்று நினைத்தாரே தவிர தன்வினை தன்னைச் சுடுகிறது என்று கருதவில்லை.

தலைசிறந்த நடிகராக இருந்தபடியால் உள்ளுணர்வுகளை யெல்லாம் மறைத்துக் கொண்டு லேசாகச் சிரித்தபடி "இந்த மாதிரியான பொய்யான விஷயங்களையெல்லாம் எங்கிருந்து எப்படிப் பெறுகிறீர்கள் ஐயா?" என்று கேட்டார்.

"எனக்கு ஒரு ஒற்றர் அரண்மனையில் இருக்கிறார் அடிகளே. அவர் மூலம் தான் அறிந்தேன். நீங்களோ இல்லை என்கிறீர்கள்.

தெரிந்த விஷயத்தைச் சொல்லி விட்டேன். உண்மையாய் இருந்தால் உங்கள் பாடு. பொய்யாய் இருந்தால் உடைப்பில் போடு.”

“உடைப்பில்தான் போட வேண்டும் சிவனடியாரே! உண்மை களை எவ்வளவு காலத்திற்கு வேண்டுமானாலும் கஷ்டமாக இருந்தாலும் சுமக்கலாம். பொய்களை ஒரு நாழிகை கூடச் சுமக்கக் கூடாது. உண்மையைச் சுமப்பது ஆனந்தத்தைச் சுமப்பது போன்றது. பொய்யைச் சுமப்பது நோயைச் சுமப்பது போன்றது.”

“அப்படியே இருந்து விட்டுப் போகட்டும் அடிகளே. இன்னொரு விஷயம் சொல்கிறேன். அதுவாவது உங்களுக்குத் தெரியுமா?”

“எதைச் சொல்கிறீர்கள்?”

“குவால புரத்திலிருந்து தங்கச் சுரங்கத்தைக் கண்டு பிடித்த சேனாதிபதி பாளம் பாளமாகத் தங்கத்தைக் கொண்டு வந்திருக்கிறார். தற்போகைக்குச் சோழர்களை விட செல்வச் செழிப்பில் முன்னணியில் இருப்பது ஹொய்சளர்தான்.”

நீலகேசி ஒரு மாதத்திற்கு மேலாகச் ச்ரவண பெலகுலாவில் இருந்து விட்டு துவாரசமுத்திரத்திற்கு வந்து ஒரு நாளே ஆகியிருந்த படியால் இந்த விஷயமும் தெரிந்திருக்க வில்லை.

இதையும் தெரியவில்லை என்று சொன்னால் கௌரவமாக இருக்காது என்று கருதிய அவர் “கேள்விப்பட்டேன் ஐயா. கேள்விப்பட்டேன். அரசாங்கம் அரசாங்கமாக இல்லை. கொள்ளையர் கூடாரமாகி விட்டது. மக்கள் கேள்வி கேட்க மறந்தால் அவர்கள் மாக்கள். மக்கள் கேள்வி கேட்க மறுத்தால் அரசாங்கம் கொள்ளைக் கூடாரம். அது தான் நிலை. அலங்கோல நிலை. அவமானமான நிலை. அதர்மமான அநீதியான நிலை. ஆகவே தான் நான் துக்கம் தாளாமல் என்னை அழித்து வருகிறேன்” என்றார்.

“உங்களை அழித்துக் கொண்டால் ஊருக்கென்ன பயன் அடிகளே? கேள்வி கேட்கும் நீங்களே உயிரை விட்டு விட்டால் உங்களை நம்பி வாழும் சமணர்களின் நிலை என்னாகும்? சில மாதங்கள் வரை என்னைப் போராடச் சொன்ன நீங்கள் இப்படிப் பேசினால் எப்படி?”

“போராட நான் தயாராக இருந்தாலும் உங்களைப் போன்றவர்கள் கோழைகளாக இருக்கும் போது நான் என்ன செய்ய முடியும்? தனி மரம் எதுவும் செய்யாது. தோப்பு தான் எதுவும் செய்யும்.”

"அதெல்லாம் உண்மையாக இருந்தாலும் இப்போதைக்குச் சரிபட்டு வராது அடிகளே. ஒரே ஒரு உபாயம் இருக்கிறது. அபாயமானது. விட்டு விட்டால் காலம் முழுவதும் அபயம் நாடி அடங்கியிருக்க வேண்டியதுதான்."

"என்ன உபாயம் ஐயா?"

"நீங்கள் உண்மையாக ஒத்துழைப்பதாக இருந்தால் ஒரே நாளில் முடித்து விடலாம்."

"நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?"

"மகாராஜாவை முடித்து விட வேண்டும்."

"ஐயோ!"

"என்ன ஐயோ என்கிறீர்கள்? பயப்படுகிறீர்களா?"

"பின்? நீங்கள் ஆட்டை வெட்டப் போவதில்லை. அரசனை வெட்டப் போகிறீர்கள்."

"அதனால் தான் ஆபத்தான திட்டம் என்றேன்."

"ஐயா சிவனடியாரே! சிவனடியாராக இருந்து கொண்டு இப்படியொரு கொலைத் திட்டத்தைக் கூறுகிறீர்களே, இது நியாயமா?"

"சிவபெருமான் அழிக்கும் கடவுள். சிவனடியாரும் அவ்வாறு இருப்பது தவறு இல்லை. அதோடு கொல்லப்படும் மகாராஜா சைவத்திற்கும் எதிரி. சமணத்திற்கும் எதிரி. வைஷ்ணவப் பதர். அவனைப் போன்ற தீவிர மதவெறியன் யாருமில்லை. அவனை அழித்து விட்டால் மத வெறி அழியும். மத நெறி மலரும்."

சிவனடியார் கூறிய திட்டம் நீலகேசிக்கு ஆனந்தமாக இருந்தது.

தான் பேச நினைப்பதெல்லாம் சிவனடியார் பேசி விட்டதாகவே கருதினார்.

தனது எண்ணங்களுக்கும் செயல்களுக்கும் மன்னன் விஷ்ணுவர்த்தனன் தான் முழு காரணம் என்பதையும், நாட்டில் நடக்கும் மதச் சலசலப்பிற்கும் மத மாற்றத்திற்கும் அவனே மூல காரணம் என்றும் கருதியிருந்த நீலகேசி மன்னன் கொல்லப் பட வேண்டும் என்றத் தீர்மானத்தில்தான் இருந்தார்.

சந்தர்ப்பம் அதற்குச் சரியாக அமைய வில்லையே தவிர அவரது எண்ணத்தில் மாற்றமில்லை.

எனவே சிவனடியார் தாமாக வந்து அந்த விஷயத்தை வெளியிட்ட போது அதிர்ஷ்டம் தன்னைத் தேடி வருவதாக

அகமகிழ்ந்த அடிகள் "அதற்குத் திட்டம் ஏதாவது வைத்திருக்கிறீர்களா? திட்டம் தோற்றுப் போனால் நாம் கூற்றுவன் கொற்றத்தில்தான் கிடக்க வேண்டியிருக்கும்" என்றார்.

"திட்டம் தீட்டாமல் பேச்சு கொடுக்க நான் முட்டாள் இல்லை அடிகளே. நான் வந்ததே அது விஷயமாகப் பேசத்தான். இடையில் நான் கேள்விப்பட்டச் செய்திகளைச் சொன்னேன். அவ்வளவுதான்."

"திட்டத்தைச் சொல்லுங்கள்."

"அடிகளே! மகாராஜாவின் தற்போதைய நிலையானது சற்று முன் கூறியது போல மகோன்னதமான நிலை. இப்போது விட்டால் அவரை எப்போதும் பிடிக்க முடியாது."

"உண்மை."

"அவரை இவ்வுலகிலிருந்து அகற்றா விட்டால் நாமும் நம் மதமும் இவ்வுலகத்தை விட்டு அகலும்படி இருக்கும்."

"மிகவும் சரி."

"இதோ பாருங்கள். இதைப் பிடியுங்கள். இது திருகு கத்தி. இதை மகாராஜாவின் உடலில் குத்தித் திருகினால் அந்த கணமே அவரது உயிர் போய் விடும்" என்று சொல்லி கத்தியைக் கொடுத்தார் சிவனடியார்.

அதை வாங்கிப் பார்த்த நீலகேசி "பயங்கரமான ஆயுதம்தான். நிச்சயமாக உயிரைக் குடிக்கும்" என்றார்.

"இந்தக் கத்தி உங்கள் வசம் இருக்கட்டும். நாளைக்கு நான் எனது ஒற்றனின் மூலம் நேரத்தை அறிந்து உங்களுக்குத் தகவல் சொல்லிவிட்டு அங்கேயே காத்திருக்கிறேன். நீங்கள் உடனே வாருங்கள். உங்களையோ என்னையோ யாரும் தடை செய்ய மாட்டார்கள். சந்தேகப்பட மாட்டார்கள். மகாராஜா தனி அறையில் தியானத்தில் அமரும் நேரம் அது. எனது ஒற்றன் தான் அறையில் பாதுகாப்பிற்கு நிற்பான். நம்மை அனுமதிப்பான். உள்ளே சென்றதும் நீங்கள் இந்த கத்தியால் மகாராஜாவைத் தீர்த்துக் கட்டி விடுங்கள்."

"அந்த காரியத்தை நீங்கள் செய்யக் கூடாதா?"

"என் கைகளுக்கு அந்த வலு இல்லை. நீங்கள்தான் அதைச் செய்ய முடியும்."

"என் மதத்திற்காக எதற்கும் நான் சம்மதம். நாளைக்கு மகாராஜா வீழ வேண்டும். மகாவீரர் உயர வேண்டும்" என்றார் நீலகேசி.

சிவனடியார் சென்றபிறகு இறுக்கத்துடன் அமர்ந்த நீலகேசி "திட்டம் கச்சிதமாக இருக்கிறது. சிவனடியாரின் ஒற்றனே அறைக் காவலனாக இருப்பதால் பிரச்சனையில்லை. பிரச்சனையே வந்தாலும் சிவனடியாரைக் கைகாட்டி விடலாம்" என்று தனக்குள் சொல்லிக் கொண்ட அவர் -

"பிட்டிதேவா! எங்களை அடக்க நினைத்த மட்டி தேவா! நாளைக்கு உனக்கு சங்கு. அதில் எனக்குண்டு பங்கு. சமணமே வென்றது. நீயும் நீ மாறிப் போய் விழுந்த வைஷ்ணவமும் அதைக் கட்டிக் காக்கும் இராமானுஜனும் ஒழிந்தார்கள். கஷ்டங்கள் கழிந்தன. வழிகள் திறந்தன என்று போல் எனக்குக் குன்று போல் குதூகலம். கொண்டாட்டம்" என்று சந்தோஷப் பட்டுக் கொண்டார்.

தனது அந்தரங்கத் துறவிகள் இருவரை அழைத்தார்.

"அடேய்! நாளைக்கு இருள் சூழப் போகிறது" என்றார் குதூகலத்துடன்.

"இது ஒரு விஷயமா அடிகளே? தினமும்தான் இருள் சூழ்கிறது. விலகுகிறது" என்றார்கள் துறவிகள்.

"மூடர்களே! நான் சொன்ன இருள் வேறு. இந்த ஹொய்சள சாம்ராஜ்யம் இருளில் மூழ்கப் போகிறது. மகா ராஜா மண்டையைப் போடப் போகிறார். நீங்கள் வேலா புரத்திற்குச் சென்று ஐநூறு துறவிகளுடன் மறைவாகக் காத்திருங்கள். மகாராஜா வீழ்ந்த செய்தி வந்தவுடன் நீங்கள் வேகமாகச் செயல்பட வேண்டும். அங்கே கட்டப்பட்டு வரும் பெருமாள் கோயிலை இடித்துச் சாய்க்க வேண்டும். இப்போதே புறப்படுங்கள்" என்றார்.

மறுநாள் விடியற்காலை நேரத்திலேயே உரிய இடத்திற்கு வரும்படிச் செய்தி வந்தது.

புறப்பட்டார்.

அணியும் ஆடை ஒரே ஆடையாதலால் கத்தியை எப்படி மறைப்பது என்று யோசித்தார்.

பிறகு ஒரு முடிவுக்கு வந்தவராய் இடையில் கூடுதலாக ஒரு பெருந்துண்டை கட்டிக் கொண்டு கத்தியை அதற்குள் மறைத்துக் கொண்டார்.

கோட்டைப் பகுதியிலோ அரண்மனைப் பகுதியிலோ அவரைத் தெரியாதவர்கள் என்று யாரும் இல்லை. எனவே அவரை யாரும் தடைசெய்யவில்லை. வணக்கமே செய்தார்கள்.

ஓரிடத்தில் ஓர் காவலன் அவரைப் பார்த்து "என்ன ஆச்சார்யரே! என்றுமில்லாமல் ஒரு துண்டைக் கூடுதலாக அணிந்திருக்கிறீர்கள்! ஏதாவது விசேஷமா?" என்று கேட்டான்.

யாரும் கவனிக்காததை அந்த மூத்த காவலன் கண்டு பிடித்து விட்டதை அறிந்து அவனை உள்ளுக்குள் திட்டிக் கொண்ட அவர் "என் தலையைப் பார்த்தாயா? ஒரு சில மயிர்கள் முளைத்திருக்கின்றன. அது ஏன் என்று நீ கேட்கவில்லை?" என்றார்.

"கோபம் வேண்டாம் அடிகளே. நான் சந்தேகப்பட்டு கேட்கவில்லை. யதார்த்தமாகத்தான் கேட்டேன்" என்றான் காவலன்.

"கத்தி ஒன்றை எடுத்து வந்திருக்கிறேன். அதை மறைப்பதற்காகத்தான் கூடுதலாக துண்டைக் கட்டிக் கொண்டிருக்கிறேன். போதுமா?" என்றார் நீலகேசி.

காவலன் சிரித்தான்.

"துறவியிடம் கத்தி எப்படி வரமுடியும்? உங்களைப் பற்றி எனக்குத் தெரியாதா? ஆனாலும் சமீப காலமாக உங்களுக்குக் கோபம் வருகிறது" என்றான்.

"என்ன செய்வது அப்பனே! யானை உட்கார்ந்து விட்டால் பூனைகள் அதன் மீது ஏறி விளையாடும் என்பார்கள். கோபப்படவில்லை என்றால் என்னைக் குனிய வைத்து தாண்டுவார்கள் போலிருக்கிறது. ஆகவேதான் சில நேரங்களில் கோபத்தைக் காட்ட வேண்டியிருக்கிறது. ஆனால் துறவிகளின் கோபம் தாபத்தைப் போல் பரவாது. பாதிக்காது. பிறந்ததுமே இறந்து விடும்" என்று சாதுர்யமாகப் பேசிவிட்டு "மகாராஜா எங்கிருக்கிறார்? தியான அறையில் தானே?" என்றார்.

"ஆம். அடிகளே. அதோ அந்த பச்சைநிற விதானம் தெரிகிறதே அங்கே தான்" என்றான் காவலன்.

அடிகள் எந்தப் பதற்றமும் இன்றி பச்சைநிற மாளிகையை அடைந்தார்.

அங்கே அவருக்காகக் காத்திருந்த சிவனடியார் "என்ன அடிகளே இவ்வளவு தாமதம்? மகாராஜாவின் தியானம் முடிந்து விடப் போகிறது. வாருங்கள்" என்று துரிதப் படுத்தி "கத்தி இருக்கிறதல்லவா?" என்று கேட்டார்.

"அது இல்லாமலா? ஆஹா" என்றார் நீலகேசி.

தியான அறைக்கு முன்னே நின்றிருந்தவனைப் பார்த்து "நீ இங்கேயே இரு. யாரும் வராமல் பார்த்துக் கொள்" என்று

சொல்லி விட்டு நீலகேசியை அழைத்துக் கொண்டு உள்ளே நுழைந்தார் சிவனடியார்.

உள்ளே மன்னன் பத்மாசனத்தில் ஆழ்ந்த தியானத்தில் இருந்தான்.

"சீக்கிரம். கத்தியை எடும். பாகுபலியை நினைத்துக் கொண்டு நெஞ்சிலே குத்தி உருட்டுங்கள்" என்றார் சிவனடியார்.

நீலகேசியின் உடலில் கொலை வெறி மூண்டது. இடையில் இருந்த துண்டை அகற்றிவிட்டு திருகு கத்தியை எடுத்துக் கொண்டு மன்னனை நோக்கி மெல்ல மெல்ல நகர்ந்தார்.

அருகில் சென்றதும் கத்தியைப் பாய்ச்சப் பாய்ந்த போது மன்னன் நகர்ந்தான். கண் விழித்தான். இலக்கு தவறியதால் கீழே விழுந்தார் நீலகேசி. கத்தியும் விழுந்தது.

கீழே விழுந்ததால் நெற்றியில் அடிபட்டிருந்தது. எழுந்து கொண்ட நீலகேசி பேசத் தெரியாமல் விழித்தார்.

மன்னன் அந்தத் திருகுக் கத்தியை எடுத்துப் பார்த்து விட்டு "பயங்கரமான ஆயுதம் தான். குத்தியிருந்தால் என்னால் கத்தி யிருக்கவும் முடியாது. செத்துப் போயிருப்பேன்? ஆமாம், இந்தக் கத்தி உங்களுக்கு எப்படிக் கிடைத்தது?" என்று கேட்டான்.

"இது இது. இந்தச் சிவனடியார்தான் கொடுத்தார். தங்களைக் கொல்லச் சொன்னதும் அவர்தான் மகாராஜா. நான் வேண்டாம் வேண்டாம் என்று மன்றாடினேன். உங்களைக் கொலை செய்யா விட்டால் என்னைக் கொலை செய்து விடுவேன் என்று மிரட்டினார். எங்கள் ஆச்சார்யர் ஜெயதேவரை கடத்தி வந்து பணயமாக வைத்திருக்கிறார். அனைத்திற்கும் அவரே காரணம். அவரைக் கழுவில் ஏற்றுங்கள்" என்றார் நீலகேசி.

மன்னனோ அவரது வார்த்தைகளை கவனித்ததாகத் தெரியவில்லை.

"அடிகளே! சமீப காலமாக நீங்கள் மதக்கலவரங்களையும் நாச வேலைகளையும் செய்வதற்குச் சமணர்களையும் தூண்டி யிருக்கிறீர்கள். சிவனடியாரையும் தூண்டியிருக்கிறீர்கள். இது முதல் குற்றம். மக்களிடம் தவறான முறையில் பணம் சேர்த்து துறவற தர்மத்திற்கு மாறாக மலைக் குகையில் செல்வங்களை சேர்த்தீர்கள். இது இரண்டாவது குற்றம். நாட்டை ஆளும் மன்னனைக் கொலை செய்ய முயன்றீர்கள். இது மூன்றாவது கடும் குற்றம்" என்றான்.

மூன்றுமே சரியாக இருந்தாலும் "இல்லை. இல்லை. இல்லவே இல்லை. ஆதாரமில்லாத குற்றச் சாட்டுகள்" என்று தடுமாறினார் நீலகேசி.

"முதல் குற்றச்சாட்டிற்குச் சாட்சி சிவனடியார். இரண்டாவது குற்றச்சாட்டிற்குச் சாட்சி மாந்தரீகன். மூன்றாவது குற்றச் சாட்டிற்குச் சாட்சி நான். ஆகவே மூன்று குற்றச்சாட்டுகளும் உண்மை. ஆகவே மன்னனின் பிரத்தியேக அதிகாரங்களின் பேரில் குற்றவாளியான உங்களைக் கழுவேற்ற முடியும் என்றாலும் நீங்கள் துறவி என்பதாலும் எனது குரு நாதராக இருந்தவர் என்பதாலும் கழுவேற்றத்தை விலக்கி ஐந்தாண்டுகள் சிறைத் தண்டனை விதிக்கிறேன்" என்றான் மன்னன்.

"அநியாயம். அக்கிரமம். எல்லாவற்றுக்கும் காரணம் சிவனடியார்தான். அவரை கழுவிலேற்றுங்கள்" என்றார் நீலகேசி.

"உமது தண்டனையைப் பற்றிப் பேசாமல் சிவனடியாரைத் தண்டிப்பது பற்றியே பேசுகிறீர்களே - சற்று திரும்பிப் பாரும்" என்றான் மன்னன்.

நீலகேசி திரும்பினார்.

அங்கே சிவனடியாருக்கு உரிய ஒப்பனைகளை எல்லாம் அகற்றி விட்டு நிர்மலமாக நின்றிருந்தான் இளவரசன் நரசிம்மன்.

நீலகேசிக்குத் தலையைச் சுற்றியது.





ஆபத்தில்லாத வாழ்க்கையும் அலைகள் இல்லாத கடலும் எங்கும் இல்லை. நம்மால் அடுத்த கணத்தை நிர்ணயம் செய்ய முடியாத போது ஆபத் தானது எப்போது வரும் எப்படி வரும் என்று சொல்ல முடியாது – இராமானுஜர்



87

நீலகேசி சிறையில் இருந்த ஐந்து ஆண்டுகளில் கர்நாடகத்தில் சமணமானது சீந்துவார் இல்லாத பண்டமாக இருந்தது. தூண்டி விடுவதற்கும் கொம்பு சீவி விடுவதற்கும் ஆளில்லாமல் போனதால் சமணம் இயல்பாகவும் இருக்குமிடம் தெரியாமல் ஓடும் ஆறு போலவும் இயங்கியது.

நீலகேசியால் சிறை வைக்கப்பட்ட ஜெயதேவர் அதிலிருந்து தப்பி வயநாட்டிற்கு ஓடி மறைந்திருந்தார். உளவாளிகளால் அவர் கண்டுபிடிக்கப்பட்டு துவார சமுத்திரத்திற்கு கொண்டு வரப்பட்டார். அவர் சமணரே இல்லை என்ற உண்மையும் நீலகேசியால் அமர்த்தப்பட்ட போலி மனிதர் என்பதும் அவர் வாக்குமூலத்திலிருந்தே தெரிய வந்ததால் அவரும் சிறையில் தள்ளப்பட்டார்.

கர்நாடக சமணத்தில் பிரதான ஆச்சார்யர் பதவியும் ச்ரவண பெலாவின் தலைமைப் பதவியும் கொஞ்ச காலம் வரை நிரப்பப்படாமலேயே இருந்தது. ஒரு வருடத்திற்குப் பிறகு பஞ்சப் பிரதானிகளும் மன்னனும் கூடி தகுதி வாய்ந்த சமணத் துறவியான நேமிநாதரை ச்ரவண பெலகுலாவின் தலைமைத் துறவியாக நியமித்தார்கள். கர்நாடகத்தின் பிரதான சமண ஆச்சார்யர் பதவியை நிரப்ப மன்னன் ஈடுபாடு காட்டவில்லை.

அதே சமயம் இந்த ஐந்து ஆண்டுகளில் கர்நாடகத்தில் வைஷ்ணவ மதம் ஏற்றம் பெற்றது. தொண்டனூரில் இருந்த இராமானுஜரால் நிறைய பேர் ஈர்க்கப்பட்டார்கள். அவரது உபதேசங்களும் வைணவ நெறிகளும் பலரையும் கவர்ந்ததால் சமண சமயத்தினர் மட்டுமின்றி பலரும் வைணவ மதத்தில் சேர்ந்ததால் எங்கேயும் வைணவமே எதிரொலித்தது.

இராமானுஜர் கர்நாடகத்திற்கு வருவதற்கு முன்னர் அவர் தொண்டனூருக்கு வந்ததில்லை. அங்கே ஓர் ஏரியை அமைப்பதற்கான சாத்தியக் கூறுகள் இருக்கக் கூடும் என்று

அறிந்திருக்கவில்லை. வந்த பிறகே ஏரிமைய அமைப்பதற்கான சாத்தியங்களை கண்டறிந்தார்.

மலையிடுக்குகளிலிருந்து வரும் நீர், தொலைவில் ஓடிக் கொண்டிருந்த யாதவ நதியின் நீர், மற்றும் மழை நீர் ஆகிய மூன்றும் இணைந்தால் கணிசமான நீரைத் தேக்கக் கூடிய ஏரியாக அமையும் என்று தோன்றியது.*

ஹொய்சள மன்னன் அவரது யோசனையைக் கேட்ட போது மன்னர்களுக்கு வராத யோசனை மகானுக்கு வந்திருக்கிறது என்று வியந்து அவரது திட்டத்தை அங்கீகரித்து நிதி உதவி மட்டுமின்றி ஆள் பலத்தையும் கொடுத்தானாதலால் ஐந்தாண்டு காலத்தில் தொண்டனூர் ஏரி சிறப்பாகக் கட்டி முடிக்கப்பட்டது. சமுத்திரத்தைப் போல அந்த ஏரி விளங்கியதால் அதற்கு திருமலா சாகரம் என்று பெயரிட்டார் இராமானுஜர். ஹொய்சள மன்னன் விஷ்ணு வர்த்தனனோ அதற்கு இராமானுஜர் ஏரி என்றே பெயர் சூட்டினான்.**

இந்த ஏரி தொண்டனூர் பகுதியையும் மேல்கோட்டைப் பகுதியையும் நீர்வளப் பகுதியாக மாற்றி விவசாயத்திற்கு வழிவகுத்துக் கொடுத்ததால் மன்னனும் மக்களும் இராமானுஜரை வாயாரப் புகழ்ந்தார்கள். கர்நாடகத்தை வளப்படுத்தவே இராமானுஜர் விஜயம் செய்ததாகக் கருதினார்கள்.

தொண்டனூர் ஏரி யாரும் எதிர்பார்க்காத நீர் வள அதிசயமாக உருவான நேரத்தில் மேல்கோட்டையிலோ அனாதி காலத்துப் பெருமாள் விக்கிரகம் இராமானுஜரால் கண்டெடுக்கப்பட்டு பிரதிஷ்டை செய்யப்பட்டு மன்னனால் கோயிலும் கட்டப்பட்டு வந்ததால் மக்களுக்கு இரட்டிப்பு மகிழ்ச்சியாக இருந்தது.

தங்களைக் காக்க மன்னன் மட்டுமின்றி மகானும் மகேசனும் வந்து விட்டதாக எண்ணிப் பரவசப்பட்டார்கள்.

ஆலய கட்டுமானம் இராமானுஜரின் திருவுள்ளப்படி அமைந்து வந்ததைக் கண்ட மன்னன் இராமானுஜரை வேலாபுரத்திற்கு அழைத்துச் சென்று அங்கே அவன் கட்டிக் கொண்டிருந்த சென்ன கேசவப் பெருமாள் ஆலயத்தைப் பார்வையிட்டு நிறைகுறைகளைக் கூறும் படிக் கேட்டுக் கொண்டான்.

ஆலய கட்டுமானத்தைக் கண்டு வியந்தார்.

---

* Mysore Grazeer 1897 By Rice.

** தற்போதும் அந்த ஏரியை நாம் காணலாம். இதற்கு 'மோதிதலாப் என்ற பெயர் தற்போது வழங்கப்பட்டு வருகிறது. பிற்காலத்தில் (கி.பி. 1746) முகம்மதியர் ஆட்சி தென்னாட்டில் பரவிய போது ஹைதராபாத் நவாபின் மகனான நாசிர்ஜங் ஏரிக்கு இப்பெயரைச் சூட்டினர். Page 98. Melkote through the Ages. Academy By Sanskrit research Melkote.

“சுவாமி! இந்த ஆலய நிர்மாணத்திற்குப் பல்லவர்கள் பயன்படுத்திய மணற் கற்களைப் பயன்படுத்தவில்லை. சோழர்கள் பயன்படுத்திய கடும் கருங்கற்களைப் பயன் படுத்தவில்லை. மிகவும் மிருதுவான அரிய வகை கற்களைப் பயன்படுத்தி வருகிறேன். பார்ப்பதற்கு அனைத்துமே கடையப் பட்டது போல் இருக்குமே தவிர கட்டப்பட்டது போல் இருக்காது. பிற கோயில்களைப் போல கோபுரங்களையும் அமைக்க வில்லை. சேரநாட்டில் அமைந்துள்ள மரக்கோயில் அமைப்பும் இங்கே கிடையாது. சுமார் பத்தடி உயர மேடை அமைக்கப்பட்டு அதற்கு மேல் நட்சத்திர வடிவத்தில் ஆலய அமைப்பு உருவாகியிருக்கிறது. இக் கோயிலைக் காண்பவர்கள் இது போன்ற ஆலயங்கள் இதுவரை யாரும் கட்டியதில்லை என்று சொல்வார்கள், இனிமேல் யாரும் இது போல கட்ட முடியாது என்றும் சொல்வார்கள். இந்த ஆலயம் தங்களை தரிசிப்பதற்கு முன் கட்டத் தொடங்கப் பட்டது. தங்களை தரிசித்த பின் மேல் கோட்டையில் ஆலயத்தைக் கட்டத் தொடங்கியிருக்கிறேன். தங்கள் சந்திப்பு என்னை வைஷ்ணவனாக்கியது. இன்னும் நான்கு பெருமாள் கோயில்களைக் கட்டவும் முடிவு செய்திருக்கிறேன்” என்றான் மன்னன்.

இராமானுஜர் சிறிது நேரம் வரை மௌனமாக இருந்தார். அவரது மனக்கண்கள் சோழநாடு முழுவதையும் ஒரு முறை பார்த்தது. பிறகு பேசினார்.

“விஷ்ணுவர்த்தனா! உனது பேச்சு எனக்கு மன மகிழ்ச்சியைத் தருகிறது. நான் தொண்டை நாட்டில் ஸ்ரீபெரும்புதூரில் பிறந்து காஞ்சியில் வளர்ந்தாலும் நான் சன்யாசம் பூண்டு பகவத் கைங்கர்யத்தில் ஈடுபட்டது சோழ நாட்டில்தான். செடியாய் இருந்த வைஷ்ணவத்தை மரமாய் வளர்த்ததும் சோழ நாட்டில்தான். சோழ மன்னன் கங்கை கொண்ட சோழனான இராஜேந்திரன் முதல் தற்போது ஆட்சி புரியும் (முதலாம்) குலோத்துங்கன் காலம் வரை சோழ நாட்டின் திருவரங்கத்தில் இருந்து கொண்டு பல மன்னர்களையும் கண்டு வந்திருக்கிறேன். குலோத்துங்கனுக்கு முன்னால் இருந்தச் சோழ மன்னர்கள் காலத்தில் எல்லாம் எனக்கோ, வைஷ்ணவத்திற்கோ எந்த நெருக்கடியும் வந்ததில்லை. வருந்துவது மாதிரி எதுவும் நேர்ந்ததில்லை. ஆனால் குலோத்துங்கனின் காலத்தில் தான் சோதனைகள் தொடங்கின. அதற்கு யார் காரணம் என்று உறுதியாகக் கூற முடியாவிட்டாலும் நடைபெற்றது குலோத்துங்கனின் காலம் என்பதை மறுக்க முடியாது. சோதனைகளின் விளைவாகத்தான் நான் சோழ நாட்டை - என்

தாய் நாட்டை - திருவரங்கன் துயில் கொள்ளும் திருநாட்டை விட்டு விட்டு கர்நாடகத்திற்கு வரும்படி ஆகிவிட்டது. சன்யாசியாக இருந்தாலும் இது எனக்கு வருத்தத்தையே தருகிறது.”

இவ்வாறு சொல்லி அங்கே இருந்த பாறைமீது அமர்ந்த இராமானுஜர் “பல்லவர்களை வென்று சாம்ராஜ்யத்தை உருவாக்கிய சோழர்கள் எல்லோருமே விஜயாலயன் முதல் குலோத்துங்கன் வரை சிறு பக்தர்களாகவே இருந்தார்கள். சைவ சமய ஆதரவாளர்களாக இருந்தார்கள். சிவாலயங்களுக்கே முன்னுரிமை கொடுத்தார்கள். ஆட்சிக்கு வந்தவர்கள் எல்லாம் தில்லை நடராஜரைக் குல தெய்வமாகக் கொண்டு அக்கோயிலுக்குத் திருப்பணி செய்தார்கள். ஆலய விமானங்களுக்குப் பொன் வேய்ந்தார்கள். இராஜராஜ சோழனும் இராஜேந்திர சோழனும் பிரம்மாண்டமான சிவாலயங்களை எழுப்பினார்கள். இனி ஆட்சிக்கு வருபவர்களும் அதைத் தொடர்வார்கள். சோழம் என்றால் சிவம் என்றும் சைவம் என்றும் ஆகிவிட்டது. அவர்களில் சிலர் ஒரு சில பெருமாள் கோயில்களுக்குத் திருப்பணி செய்திருக்கிறார்கள். நிவந்தம் அளித்திருக்கிறார்கள். யாருமே புதிதாக எந்தப் பெருமாள் கோயிலையும் கட்டவில்லை. அவர்களுக்கு முன்னால் இருந்த பெருமாள் கோயில்கள்தான் இன்னமும் இருக்கின்றன. இந்த நிலையில்தான் நான் திருவரங்கத்தை வைஷ்ணவர் கோட்டையாக மாற்றினேன். ஜாதி வித்தியாசங்களை ஒதுக்கித் தள்ளி திருமாலடியார்களை வைஷ்ணவத்தில் சேர்த்தேன். இந்த முயற்சி என் எண்ணத்தில் பிறந்தது அல்ல. மாமுனி நம்மாழ்வார் நாவிலேயே உதித்தது. ‘குலம் தாங்கும் ஜாதிகள் நான்கினிலும் தாழ்ந்தச் சண்டாளர்களாக இருந்தாலும் அவர்கள் திருமாலைத் தொழும் பக்தர்களாக இருந்தால் அவர்களே என் தெய்வம்’ என்றார். நானும் அதைத்தான் கடைப்பிடித்தேன். வைஷ்ணவமானது ஆல் போல் வளர்ந்து விழுதுகளை விட்டது.

“அப்போதுதான் சைவர்கள் விழித்துக் கொண்டார்கள். திருவரங்கம் என்பது உண்மையிலேயே ஆதி சேஷன் என்றும் அதை வளர விட்டால் சோழ நாட்டு சைவத்தை விழுங்கி விடும் என்று நினைத்தார்கள். சோழ மன்னனிடம் குறைபட்டுக் கொண்டார்கள். அதற்குப் பிறகு நடந்தது விதியா? சதியா? தெரியாது. வைஷ்ணவத்தை ஒடுக்குவதற்கான முயற்சிகள் தொடங்கின. என்னை அழிப்பதற்கும் யோசனைகள் பிறந்தன. திருவரங்கத்தில் நான் இருப்பதை விட இல்லாமலிருப்பதே வைஷ்ணவத்திற்கும் வைஷ்ணவர்களுக்கும் உகந்ததாக

இருக்கும் என்று கருதி இங்கே வந்தேன். இங்கே வந்ததும் மேல் கோட்டையில் திருநாராயணர் கிடைத்தார். நீ இங்கே வேலா புரத்தில் பெருமாள் கோயிலை கட்டிக் கொண்டிருக்கிறாய். சாலக் கிராமம் மற்றும் தொண்டனூரில் நரசிம்மர் ஆலயம் உள்ளன. மேல் கோட்டைக்கு மேலே உள்ள குன்றின் மீதும் நரசிம்மர் கோயில் இருக்கிறது. பிரஹலாதன் வழிபட்ட யோக நரசிம்மர் அவர். அங்கே தென்பத்ரி நாராயணரும் சேவை சாதிக்கிறார். நான் இங்கே வந்தது முதல் பேச்செல்லாம் பெருமாள் பேச்சாகவே இருக்கிறது. பார்ப்பதெல்லாம் பெருமாள் காட்சியாகவே இருக்கிறது. அதோடு நீயும் பல ஆலயங்களைக் கட்டப் போவதாகச் சொல்கிறாய். கர்நாடகம் தான் வைணவக் கோட்டையோ என்ற பிரமை ஏற்படுகிறது" என்றார்.



"பிரமையல்ல சுவாமி, உண்மை. உண்மையாகவே கர்நாடகம் வைணவ கோட்டையாக மாறும். நான் சொன்ன கோயில்கள் உருவாகும். தங்கள் திருக்கரங்களாலேயே பிரதிஷ்டையும் சம்ப்ரோஷணமும் நடக்கும். தாங்கள் சோழ நாட்டிற்குப் போக வேண்டியதே இல்லை. மதியாதார் தலைவாசலை தாங்கள் எதற்காக மிதிக்க வேண்டும்?" என்றான் விஷ்ணுவர்த்தனன்.

"மன்னா! திருவரங்கனையும் வரதனையும் தற்காலிகமாகத் தான் என்னால் பிரிந்திருக்க முடியுமே தவிர நிரந்தரமாக முடியாது. நான் பிறந்த மண்ணில் இருந்து கொண்டு சாதிக்க முடியாததை வேறெங்கு சென்று சாதித்தாலும் மன நிறைவைத் தராது. நான் நிச்சயமாகச் சோழநாட்டிற்குச் செல்லத்தான்

போகிறேன். அது எப்போது என்பதை அரங்கன்தான் நிர்ணயிக்க வேண்டும்'' என்றார் இராமானுஜர்.

"சுவாமி! தாங்கள் அனுமதி கொடுத்தால் சோழ நாட்டின் மீது நான் போர்தொடுத்து குலோத்துங்கனை வெல்கிறேன். தாங்கள் சோழ நாட்டிற்குத் திரும்பலாம்'' என்றான் மன்னன்.

"அது வழியில்லை மன்னா. நான் ஒருவன் சோழ நாட்டிற்குத் திரும்புவது என்பது பிரச்சனையில்லை. அங்கேயிருந்து துரத்தப்பட்ட வைஷ்ணவம் முன்பை விட பலம் பெற்ற ஒன்றாக அங்கே திரும்ப வேண்டும். அதுதான் என் லட்சியமாக இருக்கிறது.''

"தாங்கள் நினைப்பது கட்டாயம் நிறைவேறும் சுவாமி. அது விஷயமாக எந்த உதவியையும் செய்ய நான் தயாராக இருக்கிறேன்'' என்றான் மன்னன்.

பிறகு அவர்கள் மேல்கோட்டைக்குத் திரும்பிய போது இராமானுஜருக்கு ஒரு யோசனை தோன்றியது.

திருவரங்க ஆலயத்தில் அவர் ஏற்படுத்தியிருந்த நிர்வாக அமைப்புகளைப் போலவே மேல் கோட்டையில் நிர்மாணிக்கப் பட்டு வரும் திருநாராயணர் கோயிலுக்கும் ஏற்படுத்தலாம் என்று நினைத்தார்.

ஒவ்வொரு பணியாக அவர் இனம் பிரித்த போது ஒரு விஷயத்தை இவ்வளவு நாட்களாக எண்ணிப் பார்க்காமலேயே விட்டு விட்டதை நினைத்து வியந்தார்.

முதலியாண்டானை அழைத்து "ஆண்டான்! நமக்கு பெருமாள் விக்கிரகம் கிடைத்ததும் பேசாமல் இருந்து விட்டோமே! நமக்குக் கிடைத்திருப்பது மூலவர் விக்கிரகம் தானே! உத்ஸவர் விக்கிரகம் வேண்டுமல்லவா? அது இருந்தால் தானே உத்ஸவங்களை நடத்த முடியும்? அதை நாம் தேடவே இல்லையே?'' என்றார்.

"உண்மைதான் சுவாமி. எங்களுக்கும் அந்த யோசனை தோன்றவில்லை. மூலவர் கிடைத்த இடத்திலேயே அகழ்ந்து பார்த்தால் உத்ஸவர் விக்கிரகமும் கிடைக்கலாம் என்று தோன்றுகிறது'' என்றார் முதலியாண்டான்.

இராமானுஜர் மன்னனை அழைத்து விவரத்தைச் சொன்னார்.

உடனே மலைக் கோட்டையின் அடிவாரத்தில் கல்யாணி தீர்த்தத்திற்கு அருகில் மூல விக்கிரகம் கிடைத்த இடத்திலேயே அகழ்வாராய்ச்சி செய்யும்படி மன்னன் உத்தரவிட்டான். கல்யாணி தீர்த்தம் அளவிற்குத் தோண்டியும் எந்த விக்ரகமும் கிடைக்கவில்லை.

“தோண்டியது போதும் மன்னவா. உத்ஸவர் விக்ரகம் இங்கு இருக்க வழியில்லை. இப்பகுதியிலும் மற்றும் மேல்கோட்டை வட்டாரத்திலும் மூத்த குடிமக்களிடம் விசாரித்துப் பார்க்கும் படிச் செய். ஏதாவ்து துப்பு கிடைக்கலாம்” என்றார் இராமானுஜர்.

மன்னனின் உளவாளிகள் நான்கு மாதங்களாகப் பல பகுதிகளிலும் விசாரித்தார்கள்.

எந்தத் தகவலும் கிடைக்கவில்லை.

“புதியதாக உத்ஸவ விக்ரகத்தைத் தயாரித்து விடலாம்” என்றான் மன்னன்.

“மூலவர் இருக்கும் போது உத்ஸவர் நிச்சயமாக இருக்கும். அது நிச்சயமாக இல்லை அல்லது கிடைக்காது என்பது உறுதியாகும் வரையில் புது விக்ரகத்தை உண்டாக்குவது சரியல்ல. ஆலயம் கட்டி முடிக்கும் வரை காத்திருப்போம்” என்றார் இராமானுஜர்.

ஒரு சில மாதங்கள் கழித்து தொண்டனூர் நம்பி இராமானுஜரிடம் வந்தார்.

“சுவாமி! தொண்டனூரில் கிணறு ஒன்றைத் தோண்டு வதற்காக பூமியை அகழ்ந்த போது சிறியதொரு மண்டபம் சிதிலமடைந்து காணப்பட்டது. அதில் கல்வெட்டு ஒன்று காணப்பட்டது. டில்லியில் சுல்தானாக இருக்கும் கஜினி முகமதுவின் படைத்தலைவன் ஒருவனுக்கு அந்த மண்டபமானது நினைவுச் சின்னமாகக்* கட்டப்பட்டதாம்” என்றார்.

இராமானுஜருக்கு விளங்கிவிட்டது.

“நம்பீ! சுல்தானின் படைத் தலைவனுக்கு இங்கே நினைவுச் சின்னம் அமைக்கப்பட்டிருக்கிறது என்றால் அவன் இங்கே படையெடுத்திருக்க வேண்டும். மேல்கோட்டைக்கு வந்து அக்கோயிலில் இருந்த விக்ரகங்களையெல்லாம் கொள்ளை யடித்துச் சென்றிருக்க வேண்டும். எனது ஊகம் சரியாக இருந்தால் மேல்கோட்டையில் இருந்த விக்ரகத்தையும் அவனோ அவனது படைகளோ டில்லிக்கு எடுத்துச் சென்றிருக்க வேண்டும். அவனது திறமையைப் பாராட்டி இங்கே நினைவுச் சின்னத்தை எழுப்பியிருக்க வேண்டும்” என்று சொன்ன இராமானுஜர் தொண்டனூருக்கு வந்து நேரில் அதைப் பார்வையிட்டார்.

“வேறு ஏதாவது கல்வெட்டு இருக்கிறதா பார்” என்றார்கள்.

---

* பக்கம் 323 “ஸ்ரீ இராமானுஜர் வாழ்க்கை வரலாறு” By சுவாமி ராமகிருஷ்ணாநந்தா.

மண்டபத்தருகிலேயே மற்றொரு தூண் புதைந்து கிடந்தது. அதிலிருந்த கல்வெட்டு சிதைந்திருந்தாலும் சிதையாமல் இருந்த வார்த்தைகள் மூன்று இராமானுஜரின் ஊகத்தை உறுதிப் படுத்தின.

ராமப்பிரியா என்ற வார்த்தையும் டில்லி என்ற வார்த்தையும் மேல்கோட்டை என்ற வார்த்தையும் கல்வெட்டில் துலங்கியதையும் கண்ட இராமானுஜர் தனது சிஷ்யர்களையும், மன்னனையும், சேனாதிபதி பகாசூரரையும் வைத்துக் கொண்டு ஆலோசனை நடத்தினார்.

"கல்வெட்டுச் செய்தியிலிருந்து மேல்கோட்டை ஆலயத்தில் இருந்த உத்ஸவரின் பெயர் ராமப்பிரியர் என்று தெரிகிறது. எனது தகப்பனார் ஒருமுறை ராமபிரான் ஒரு விக்ரகத்தை வைத்துக் கொண்டு ஆராதித்து வந்ததாகக் கூறியிருக்கிறார். அந்த விக்ரகம் இதுவாகத் தான் இருக்கும். ராமர் வழிபட்ட காரணத்தால் அதற்கு ராமப்பிரியர் என்ற பெயர் வந்திருக்கலாம். அது கஜினி முகமதுவின் படைத் தலைவனால் மேல் கோட்டையிலிருந்து டில்லிக்கு கொண்டு செல்லப்பட்டிருக்க வேண்டும்" என்றார் இராமானுஜர்.

"தாங்கள் கருதுவது உண்மையாக இருக்கலாம் சுவாமி. ஆனால் முகம்மதியர்களான வெளிநாட்டுக்காரர்களான அவர்கள் அந்த விக்ரகத்தை இன்னமும் டில்லியில் வைத்திருப் பார்களா? யாருக்காவது விற்றிருக்கலாம் அல்லவா?" என்றான் மன்னன்.

"சிலைகளாக விற்க மாட்டார்கள். அவற்றை உருக்கி கட்டி களாக விற்பதுதான் அவர்கள் வழக்கம்" என்றார் சேனாதிபதி.

"உறுதி செய்து கொள்ளாமல் விக்ரகத்தை இல்லை என்று சொல்ல முடியாது" என்றார் இராமானுஜர்.

"எப்படி உறுதி செய்வது?" என்று கேட்டான் மன்னன்.

"டில்லிக்குச் சென்று அங்கிருக்கும் சுல்தானைச் சந்திக்க வேண்டும்" என்றார் இராமானுஜர்.

"சுவாமி! சுல்தானை சந்திப்பது என்பது சைத்தானைச் சந்திப்பதைப் போன்றது" என்றான் மன்னன்.

"நமக்கு ராமப்பிரியர் கிடைப்பாரென்றால் அதைத் தடுக்க சுல்தானால் மட்டுமல்ல சைத்தானாலால் கூட இயலாது."

"அப்படியென்றால் நான் டில்லிக்குப் படையெடுத்துச் சென்று விக்ரகத்தை மீட்டு வருகிறேன்."

“மன்னா! முள்ளில் சிக்கிய வஸ்திரத்தை எடுப்பது போன்ற காரியம் இது. படையெடுப்பு மூலமாகவோ போர் மூலமாகவோ மீட்க முடியாது. நிதானமாகவும் பக்குவமாகவும் செய்ய வேண்டிய காரியம் இது. ஆகவே நானே செல்கிறேன்.”

“சுவாமி! தாங்களா? அதுவும் டில்லிககா? அது பேராபத்தானது. வேண்டாம்.”

“ஆபத்தில்லாத தருணம் வாழ்க்கையில் இல்லை. ஆபத்தில்லாத வாழ்க்கையும் அலைகள் இல்லாத கடலும் எங்கும் இல்லை. நம்மால் அடுத்த கணத்தை நிர்ணயம் செய்ய முடியாத போது ஆபத்தானது எப்போது வரும் எப்படி வரும் என்று சொல்ல முடியாது. அதே சமயம் ஆபத்து வரக் கூடும் என்று செய்கையில் இறங்கவும் முடியாது.”

“தொலை தூரத்தில் இருக்கிறது டில்லி. வாகன வசதிகளும் இல்லை. தாங்கள் எப்படிச் செல்வீர்கள்.”

“மன்னா! சீதா மாதாவைத் தேடி ராமபிரான் அயோத்தி யிலிருந்து இலங்கைக்குப் போக வில்லையா? அவருக்கு என்ன வாகன வசதி இருந்தது? அவரே சென்ற போது எனக்கென்ன? அதோடு நான் திருவரங்கத்திலிருந்து காஷ்மீரத்திற்கும், பத்ரிகா சிரமத்திற்கும், சாளிக் கிராமத்திற்கும் சென்று வந்திருக்கிறேன். பயண அநுபவம் எனக்கிருக்கிறது. நீ கவலைப்பட வேண்டாம். நான் டில்லி புறப்படுவதற்கு ஏற்பாடுகளைச் செய்” என்றார் இராமானுஜர்.

மன்னனும் நன்கு திட்டமிட்டு ஏற்பாடுகளைச் செய்தான்.

கர்நாடகத்திற்கு வந்து ஏறக்குறைய ஏழாண்டுகள் முடிந்த நிலையில் தனது சீடர்களோடு டில்லிக்குப் புறப்பட்டார் இராமானுஜர்.



துவார சமுத்திரத்தில் ஆதிநாதர் விஹாரத்தில் துறவியொருவர் உபன்யாசம் செய்து கொண்டிருக்க அதை ஐந்நூறு பேர் செவிமடுத்துக் கொண்டிருந்தார்கள்.

அவர்களில் ஒருவராக எலும்பும் தோலுமாக ஒரு துறவியும் அமர்ந்து கொண்டு உபன்யாசத்தைக் கேட்டுக் கொண்டிருந்தார்.

அவருக்குப் பக்கத்தில் குரங்கு ஒன்று பவ்யமாக அமர்ந்திருந்தது.





தியாகம் செய்தவர்கள் தியாகம் செய்தேன் என்று நினைப்பதும், தானம் செய்தவர்கள் தானம் செய்தேன் என்று எண்ணுவதும், ஆசை களைத் துறந்தவர்கள் ஆசை களைத் துறந்து விட்டேன் என்று சொல்வதும் அகங்காரத்தை விட வில்லை என்பதற்கானப் பிரமாணங் களாகவே இருக்கும் – வைஷ்ணவர்



ஆதிநாதர் விஹாரத்தின் வளாகத்தில் உபன்யாசம் செய்து கொண்டிருந்தவர் சமணத்துறவியல்ல. வைஷ்ணவத் துறவி.

உடம்பில் பன்னிரு திருமண்காப்புகள் துலங்க, பின் தலையில் கட்டுக் குடுமி தொங்க பஞ்சகச்ச வேட்டி அணிந்து பளிச் சென்றிருந்த அவர் பேசலானார்.

“துறவி என்றால் துறந்தவன் என்பது பொருள். அவன் தன் செல்வத்தை இழக்கிறான். அந்தஸ்தை இழக்கிறான். பந்தங்களை இழக்கிறான். அனைத்து ஆசைகளையும் இழக்கிறான். இருப்பினும் கூடச் சிலர் ஒன்றை இழப்பதில்லை. அது தான் அகங்காரம். எல்லாவற்றையும் இழந்து எல்லா உறவுகளையும் அறுத்து விட்டு வந்த அவர்கள் “நாம் எல்லாவற்றையும் துறந்து விட்டோம்” என்ற எண்ணத்தோடு இருப்பார்கள். அது தான் அகங்காரம். அதையும் இழக்கும் போதுதான் ஒருவன் பரிபூரணமான துறவியாகிறான்.

“நமது கர்நாடகத்தில் ஒளிர்ந்த வண்ணமாய் விஜயம் செய்திருக்கும் மகான் இராமானுஜருக்கு இரண்டு பேர் பிரதான சீடர்களாக இருந்தார்கள். ஒருவர் கூரத்தாழ்வான். மற்றொருவர் முதலியாண்டான். ஆழ்வானும் ஆண்டானும் அவரது இரு கண்களாக இருக்கிறார்கள் என்று பிற சீடர்கள் கூறுவதுண்டு. இராமானுஜர் திருவரங்க மடத்திலிருந்து காவிரியில் நீராடச் செல்லும் போது அவ்விரு பிரதான சீடர்களின் தோள் மீது கையை ஊன்றியபடி செல்வார்.' நீராடி விட்டுத் திரும்பும் போது அவர்களது தோள் மீது ஈரத் துண்டை விரித்து அதன் மீது கையை ஊன்றிக் கொண்டு வருவார். இது ஏன் என்று ஆழ்வானுக்கும் தெரியவில்லை. ஆண்டானுக்கும் தெரியவில்லை. மற்ற சீடர்களுக்கும் தெரியவில்லை.

"ஒரு நாள் சீடர்கள் அவரிடம் வினவினார்கள். தங்களது இரு கண்களாக விளங்கும் அவர்களிடம் இப்படி நடந்து கொள்வது எங்களுக்குப் புதிராக இருக்கிறது என்றார்கள். அதற்கு இராமானுஜர் "நான் நீராடுவதற்கு முன் புறத் தூய்மை இல்லாதிருந்தேன். ஆகவே அவர்கள் தோள் மீது ஊன்றிக் கொண்டு சென்றேன். நீராடிய பின் அகமும் புறமும் தூய்மை யடைந்ததால் அவர்கள் தோள் மீது வெற்றுக் கையை ஊன்றாமல் ஈரத்துண்டைப் போட்டு விட்டு ஊன்றிக் கொண்டு வந்தேன்" என்றார்.

சீடர்களுக்குப் புரியவில்லை "ஆழ்வானும் ஆண்டானும் தங்களது த்ரிதண்டமும் பவித்திரமும் போன்றவர்கள் ஆயிற்றே? அவர்களது தோள்களைத் தொட்டால் தங்கள் அகத் தூய்மை எவ்வாறு கெடும்?" என்று கேட்டார்கள். அதற்கு அவர் "ஆழ்வானும் ஆண்டானும் எனது உத்தம சீடர்கள்தான். அவர்கள் செல்வத்திலும் அந்தஸ்திலும் உயர்ந்தவர்களாக இருந்து அவற்றை இழந்து என் சீடர்கள் ஆனார்கள். ஆனால் தாம் அனைத்தையும் துறந்து விட்டோம் என்ற அகங்காரம் அவர்களை விட்டுப் போகவில்லை. ஆகவே அவர்களது தோள்களைத் தொட்டால் அகத்தூய்மை கெட்டு விடும். அதனால்தான் நீராடியபின் அவர்களது தோள்களைத் தொடாமல் துண்டை விரித்து விட்டு கையை ஊன்றி வருகிறேன்" என்றார்.*

"இவ்வாறு பிரதம சீடர்களின் தோள் மீது துண்டை விரித்து கைய்ய ஊன்றி நடந்து வந்து கொண்டிருந்த இராமானுஜர் ஒரு நாள் காவிரியில் நீராடி விட்டு வரும் போது எதிரே உறங்காவில்லி தாசர் என்ற சீடர் வருவதைக் கண்டார். உடனே ஆண்டான் மற்றும் ஆழ்வான் தோள்களின் மீதான கைகளை எடுத்து விட்டு உறங்கா வில்லி தாசரின் வெற்றுத் தோள்களில் கைகளை ஊன்றியபடி மடத்திற்குச் சென்றார்.

"சீடர்களுக்கு மறுபடியும் சந்தேகம், குழப்பம். "உறங்காவில்லி தாசன் சீடனாகி ஒரு மாதம் கூட ஆகவில்லை. அதோடு அவன் உயர்ந்த குலத்தவனும் அல்ல. அவனது வெற்றுத் தோளில் கையை ஊன்றிய படிச் செல்கிறாரே! அகத்தூய்மை கெடாதா?" என்று குமைந்த அவர்கள் இராமானுஜருடன் சண்டைக்குச் சென்றார்கள்.

"சண்டை என்ன ஆயிற்று என்று கவனிப்பதற்கு முன் உறங்காவில்லி தாசர் யார் என்பதை அறிந்து கொள்ள வேண்டும்

* பக்கம் 171-173. 'ஞானபீடம்' By. தமிழருவி மணியன்.

என்ற ஆவல் வருகிறதல்லவா? அவரைப் பற்றிச் சொல்கிறேன். கேளுங்கள்."

"அவர் உயர்ந்த குலத்தில் பிறந்தவரல்ல. சாதாரணமானவர். தனது எஜமானன் உறங்கும் போது உறங்காமல் இருந்து பாதுகாத்து வந்ததால் அவரது இயற்பெயர் மறைந்து உறங்காவில்லி என்ற பெயர் வந்து விட்டது. அவரது மனைவியின் பெயர் பொன்னாச்சி. அவள் சாதாரண அழகியல்ல. பேரழகி. அவள் வெளியே சென்றால் சூரிய வெப்பம் மேலே விழுந்து விடக் கூடாது என்று அவளுக்குக் குடை பிடிப்பது உறங்கா வில்லியின் வழக்கம். அது மட்டுமல்ல. அவளது பட்டுப் பாதங்கள் தூசில் படியக் கூடாது என்று தனது மேல் துண்டை தரையில் விரித்து விரித்து அவளை நடக்கச் செய்வார். அவள் மீது அவருக்கு ஆரா அன்பு. ஆழ்ந்த காதல். அளவு கடந்த பிரேமை.

"அவரது செய்கையைக் கண்டு பலரும் சிரிப்பார்கள். பரிகசிப்பார்கள். ஏகடியம் பேசுவார்கள். அவரோ எதைப் பற்றியும் கவலைப்படுவதில்லை. காதல் மனைவியை கண்ணும் கருத்துமாக கவனிப்பதிலேயே உறுதியாக இருந்தார். ஒரு நாள் அரங்கன் கோயில் விழா ஒன்றுக்கு உறங்காவில்லி தனது மனைவியை பரம ஜாக்கிரதையாக அழைத்து வந்ததைக் கண்டார் இராமானுஜர். அவருக்கும் வியப்பு. பிறரைப் போல ஏளனம் செய்யாமல் அவரை தன் மடத்திற்கு வரச் சொன்னார்.

"உறங்காவில்லி! உன் அன்பு மனைவியை நீ கண்ணும் கருத்துமாகப் பாதுகாப்பது சரிதான். ஆனாலும் அவளிடம் அப்படி என்ன சிறப்பு இருக்கிறது என்று அவ்வாறு செய்கிறாய் என்று கேட்டார் இராமானுஜர். அதற்கு உறங்காவில்லி "அவள் பேரழகி சுவாமி. அப்படியொரு அழகி இதுவரை பிறக்கவில்லை. அவளது கண்களே கண்கள். ஒவ்வொரு கண்ணும் அட்சர லட்சம் பெறும். அக் கண்களுக்கு ஈடு இல்லை. இணை இல்லை" என்றான்.

"இருக்கிறது" என்றார் இராமானுஜர். "இருக்காது" என்றார் உறங்காவில்லி. "என்னோடு வா காட்டுகிறேன்" என்ற இராமானுஜர் அவரை அரங்கனுக்கு முன்னால் அழைத்துச் சென்றார். "பகவானின் திருக்கண்களைப் பார். நன்றாக உற்றுப் பார். இத்திருக்கண்களை விடவா பொன்னாச்சியின் கண்கள் அழகானவை? இத்திருக் கண்கள் அழகானவை மட்டுமல்ல. அழிவற்றவை. அனைவரையும் ரட்சிப்பவை" என்றார். உறங்கா வில்லிக்கு ஒரே பரவசமாக இருந்தது. அரங்கனின் கண்கள் மீது வைத்த பார்வையை அவரால் அகற்ற முடியவில்லை. "ஆகா! இதுவல்லவா கண்கள்! இதுவல்லவா அழகு. இக்கண்களை கண்ட

என் கண்கள் இனி எந்தக் கண்களைக் கண்டாலும் வியக்காதே! பொன்னாச்சியின் கண்களும் பொய்த்து விட்டதே!" என்று புலம்பிய அவர் "இப்போது நான் என்ன செய்ய வேண்டும் சுவாமி?" என்று கேட்டார்.

"நீ என் சீடனாகி விடு. போதும்" என்றார் இராமானுஜர். உறங்காவில்லிக்கு ஏதோ புதியதொரு கதவு திறப்பது போலிருந்தது. ஊனக்கண்கள் உலர்ந்து ஞானக் கண்கள் திறப்பது போல் தோன்றியது. அதுவரை தானிருந்தது பிரமை என்பதும் தெளிவை நோக்கி பயணப்படுவதும் புரிந்தது. "இதுவே எனக்கு பாக்கியம். இந்த நாள் எனக்குத் திருநாள். மாயையிலிருந்து விலகி மாதவனின் அருட் பார்வைக்குப் பாத்திரமாகி விட்டேன்" என்றார். இராமானுஜர் அவரைத் தனது சீடனாக்கிக் கொண்டதோடு தாஸ்ய நாமம் கொடுத்து உறங்காவில்லிதாசன் என்று பெயரிட்டார். அன்று முதல் அவரது அன்புக்குப் பாத்திரமானார் உறங்காவில்லிதாசர். சீடனாகி இரண்டு மாதங்களில் தான் நான் மேலே சொன்ன நிகழ்ச்சி நடந்தது. இது எப்படி அது எப்படி என்று இராமானுஜரோடு சீடர்கள் வாதிட்டார்கள். உறங்காவில்லி தாசனிடம் அகங்காரம் என்பது எள்ளளவும் இல்லை. தூய்மையானவன். வாய்மையானவன். பரமபக்தன். ஆகவே தான் அவனது தோளில் கையை ஊன்றி வந்தேன் என்றார் இராமானுஜர்.

சீடர்களோ ஒப்புக் கொள்ளவில்லை. உறங்கா வில்லி தாசருக்குத் தகுதியில்லை என்றார்கள். அவர்களுக்கெல்லாம் வில்லிதாசரைப் பற்றிய உண்மையையும் அவரது மேன்மையையும் நிரூபிக்க விரும்பிய இராமானுஜர் வில்லிதாசரை ஒருநாள் இரவு தனது மடத்திலேயே தங்கச் சொல்லி விட்டு சில சீடர்களை அழைத்து "நீங்கள் இவனது இல்லத்திற்குச் செல்லுங்கள். அங்கே இவன் மனைவி பொன்னாச்சி உறங்கிக் கொண்டிருப்பாள். அவளது காதணியைக் கழற்றி வாருங்கள்" என்றார்.

"சீடர்களும் சென்றார்கள். பொன்னாச்சி ஒருக்களித்துப் படுத்தபடி உறங்கிக் கொண்டிருந்தாள். சீடர்கள் முழங்காலிட்டு அமர்ந்து அவளது காதணியை லகுவாகக் கழற்றினார்கள். பொன்னாச்சிக்கு உறக்கம் கலைந்தது. கண்களை லேசாகத் திறந்தாள். வந்திருப்பது வைஷ்ணவர்கள் என்பது அவளுக்குத் தெரிந்தது. பாகவத உத்தமர்கள் தனது காதணியைக் கழற்றுவதை உணர்ந்து பரவசப்பட்ட அவள் ஒரு காதணியைக் கழற்றியதும் இன்னொன்றையும் அவர்கள் கழற்றிக் கொண்டு போவதற்கு ஏதுவாகத் திரும்பிப் படுத்தாள். சீடர்களோ அவள் விழித்துக்

கொண்டதை உணர்ந்து ஒரு காதணியோடு அங்கிருந்து அகன்று இராமானுஜரிடம் காட்டினார்கள்.

"பொழுது விடிந்தது. வில்லிதாசரை அவரது இல்லத்திற்குச் செல்லும் படி கூறினார் இராமானுஜர். காதணியைக் கொண்டு வந்தச் சீடர்களை அவர் அறியாமல் அவரைப் பின் தொடர்ந்து சென்று என்ன நடக்கிறதென்று பாருங்கள் என்றார். அங்கே பொன்னாச்சி பதற்றத்துடன் இருந்தாள். என்ன விஷயம் என்று வினவினார் வில்லிதாசர். பொன்னாச்சி இரவில் நடந்தச் சம்பவத்தைச் சொன்னாள்.

"வில்லிதாசருக்கு கோபமாகி விட்டது. ஆகா! உன் காதணிகளைப் பெறவந்த அடியவர்களை ஏமாற்றி விட்டாயே! இது உனக்குத் தகுமா? இரண்டாவது காதணியை நீயாக அல்லவா கழற்றித் தந்திருக்க வேண்டும்? அது தானே உகந்தது! நீ அப்படிச் செய்ய வில்லை. இன்னொரு காதணியை அவர்கள் பெறக் கூடாது என்று நீ சதி செய்திருக்கிறாய். பொன்னாச்சி என்ற பெயருக்கேற்ப உனக்கு பொன்னாசை வந்து விட்டது. ஆகவே தான் அடியவர்களை ஏமாற்றி விட்டாய். அடியே மூடமே! காதணிகள் நம்முடையது என்று நினைத்து விட்டாயா? நமது உடைமை என்று எதுதான் இருக்கிறது? நமக்குச் சொத்தும் இல்லை. உடைமையும் இல்லை. எல்லாம் அரங்கனுடையது. அவனது சொத்து. அதை அடியவர்களுக்குத் தராமல் உனக்காக வைத்துக் கொண்டது பாவம். அபச்சாரம். உன்னோடு வாழ்வது இனி எனக்கு இயலாத காரியம். உன்னை விவாகரத்து செய்வதே சரி என்று கடிந்து கொண்டு அவளையும் அழைத்துக் கொண்டு இராமானுஜரிடம் சென்றார்.

"இவளோடு வாழ முடியாது. இவள் பாமி என்றார் வில்லிதாசர். இவர் அன்றி யாரோடும் வாழ முடியாது என்றாள் பொன்னாச்சி. இருவரையும் சமாதானப் படுத்தி அனுப்பி வைத்த இராமானுஜர் சீடர்களை அழைத்தார். வில்லிதாசர் எப்படிப்பட்டவன் என்பதை அறிந்தீர்களா? உத்தமன் என்பதை உணர்ந்தீர்களா? திருடப் போன உங்களை கோபிக்காமல் அன்பு கெழுமிய மனைவியைக் கோபித்தான். அவளை போத்துப் போத்துப் பாதுகாத்த அவன் அவளைப் பிரிவதற்கும் தயாரானான். சீடனான பின் தனக்கு உடைமை என்று எதுவுமில்லை என்பதை உணர்ந்தான். அகங்காரம் என்பது அவனிடம் எள்ளளவும் இல்லை. அப்படிப் பட்டவனின் தோளில் நான் கையூன்றி நடந்தது தவறா சரியா என்று கேட்டார். சீடர்கள் வெட்கத்தால் தலை குனிந்தார்கள்" -

ஆதிநாதர் விஹாரத்தில் இராமானுஜர் வாழ்க்கைச் சம்பவம் ஒன்றை விளக்கிக் கூறிய வைஷ்ணவர் "இதையெல்லாம் நான் கூறியது அகங்காரம் என்பது கொடியது என்பதை உணர்த்தத்தான். அகங்காரம் துறவிகளுக்கும் இருந்து களங்கத்தை விளைவிக்கும் என்பதை புரிய வைப்பதற்காகத் தான். தியாகம் செய்தவர்கள் தியாகம் செய்தேன் என்று நினைப்பதும் தானம் செய்தவர்கள் தானம் செய்தேன் என்று எண்ணுவதும், ஆசைகளைத் துறந்தவர்கள் ஆசைகளைத் துறந்து விட்டேன் என்று சொல்லுவதும் அகங்காரத்தை விடவில்லை என்பதற்கான பிரமாணங்களாகவே இருக்கும்.

"நற்செயலைச் செய்யுங்கள். நல்லவற்றை நினையுங்கள். ஆனால் அவற்றை நமதாகக் கருதாமல் பகவானுடையது என்று கருதுங்கள். பகவானால் படைக்கப்பட்ட நாம் நமக்கு என்றும் நம்முடையது என்றும் சொல்வதற்கு எதுவுமே இல்லை. பகவானே எல்லாம். அவனைச் சரணடைவதை உய்யும் வழி. உடையவரான இராமானுஜரின் வழி" என்று கூறி உபன்யாசத்தை முடித்தார்.

உபன்யாசத்தைக் கேட்ட மக்கள் கலைந்தார்கள். அவர்களோடு ஒருவராய் கலைந்த கோலத்தோடும், குரங்கோடும் எலும்பும் தோலுமாய் அமர்ந்திருந்த சமணத் துறவியான நீலகேசியும் எழுந்து நடந்தார்.

விஹார முன் மண்டபத்தில் அமர்ந்திருந்த ராணி சாந்தலா தேவி அவரைப் பார்த்து விட்டாள். "அடிகளே! அடிகளே" என்று அழைத்தார்.

அவருக்கு அது காதில் விழுந்ததாகத் தெரியவில்லை. போய்க் கொண்டே இருந்தார்.

ராணி பணியாளன் ஒருவனை அழைத்து அவரை நிற்கும் படி கேட்டுக் கொண்டாள்.

அவர் நின்றார்.

அவர் அருகில் சென்ற ராணி "ஐயா! நீங்கள் நீலகேசி அடிகள் தானே?" என்று கேட்டாள்.

அவர் இல்லை என்பது போல் தலையாட்டி விட்டு நகர்ந்தார்.



விஹாரத்திலிருந்து அரண்மனைக்குத் திரும்பிய ராணி அன்றிரவு உண்ணவில்லை. அந்தப்புரத்திற்கு மன்னனை அனுமதிக்க வில்லை. மறுநாள் உண்ணாவிரதத்தைத் தொடங்கினாள். யார் தடுத்தும் கேட்கவில்லை.

மன்னனே நேரில் வந்து "தேவி! எதற்காக இந்தத் திடீர் உண்ணாவிரதம்?" என்று கேட்டான்.

"உடம்பு எலும்பும் தோலுமாய் ஆவதற்காகத்தான்" என்றாள் மகாராணி.

"வயதாக ஆக சுருங்கப் போகும் உடம்பு இது. உண்ணா விரதமிருந்து எதற்காக வதைக்க வேண்டும்? ஒரு வேளை சல்லேகனையைத் தொடங்கி விட்டாயோ?"

"உண்ணா விரதமும் சல்லேகனையும் ஒன்றுதான்"

"அந்த அளவிற்கு உனக்கென்ன பிரச்சனை வந்து விட்டது? நெருக்கடி வந்து விட்டது? வெறுப்பு வந்து விட்டது?"

"என் ஆச்சார்யர் எலும்பும் தோலுமாக அலையும் போது நான் உண்டு கொழுக்க முடியுமா?"

"யாரந்த ஆச்சார்யர்?"

"மறந்து விட்டீர்களா? நீலகேசி அடிகளைத்தான் சொல்கிறேன்."

"அவர் குற்றவாளி. தண்டனை விதிக்கப்பட்டு சிறைக்கு சென்றவர். ஆச்சார்யர் பதவியிலிருந்து நீக்கப்பட்டவர். அவர் எப்படி உன் ஆச்சார்யர் ஆக முடியும்?"

"அவர் தவறாகத் தண்டிக்கப்பட்டு விட்டார். அவர் குற்றவாளியே அல்ல."

"அவர் நம் மகளை குணமாக்காமல் குற்றுயிரும் கொலை யுயிருமாக ஆக்கியவர். அதற்காகக் கூட அவரை நான் தண்டிக்க வில்லை. பல பெண்களைக் கெடுத்துச் சீரழித்திருக்கிறார். அதற்காகவும் தண்டிக்கவில்லை. அவர் மதக் கலவரத்தைத் தூண்டினார். துறவியின் இலக்கணத்திற்கு மாறாக ஏழைகளை ஏமாற்றி பொருள் சேர்த்தார். என்னைக் கொலை செய்ய முயன்றார். அதற்காகத்தான் தண்டித்தேன்."

"அவர் மதக் கலவரத்தைத் தூண்டியிருக்கலாம். ஆனால் கலவரம் எதுவும் நடக்கவில்லை. அவர் பொருள் சேர்த்திருக்கலாம் தன் மத வளர்ச்சிக்காக. ஆனால் தங்களை ஏமாற்றி பொருள் சேர்த்ததாக மக்கள் யாரும் புகார் செய்யவில்லை. உங்களை அவர் கொல்ல முயன்றது நீங்கள் அவர் மீது விரித்த வலை. அவர் மீது தவறு இல்லை."

"தவறாகப் பேசுகிறாய் தேவி. குற்றம் புரிந்தால்தான் குற்றவாளி என்பதாகாது. குற்றம் புரியத் தூண்டுவது கூடக் குற்றம்தான். அவரை விட்டிருந்தால் மதக் கலவரம்

நிச்சயமாக மூண்டிருக்கும். அவர் மக்களை ஏமாற்றி பொருள் சேர்த்ததை அவருடன் இருந்த மாந்தரீகன் சத்திய வாக்குமூலம் அளித்திருக்கிறான். இந்நாட்டில் இருக்கும் விஹாரங்களுக்கும் சமண மதத்திற்கும் அரசாங்கமே நிதி வழங்கும் போது நீலகேசி தனியாகச் செல்வத்தைச் சேர்க்க வேண்டியதில்லை. அவர் சேர்த்த செல்வத்தைக் கைப்பற்றிய நான் என் சொந்த செலவுகளுக்காக வைத்துக் கொள்ளவில்லை. என் பரம்பரையினர் சுகத்திற்காக ஒதுக்கி வைக்கவில்லை. அரசு கருவூலத்தில்தான் சேர்த்தேன். அவர் என்னைக் கொல்வதற்கு வலை விரித்தது உண்மை என்று வைத்துக் கொண்டாலும் அவர் சிக்கியிருக்கக் கூடாது. அவரது இந்த குற்றங்களை தருமாசனத்தின் மீது வைத்திருந்தால் அவர் கழுவேற்றப்பட்டிருப்பார். அப்படி நான் செய்யவில்லை. அவர் ஆச்சார்யராக இருந்தவர் என்ற காரணத்தினாலேயே எனது பிரத்தியேக அதிகாரங்களைப் பயன்படுத்தி அவருக்கு ஐந்தாண்டுகள் சிறைத் தண்டனையை மட்டும் விதித்தேன்" என்று சொன்ன மன்னன் "ராணி! இப்போது அவருக்கு விதிக்கப்பட்ட தண்டனையைத் தவறு என்று தண்டனையை விதிப்பதற்கு முன்னால் ஏன் மௌனமாய் கூறவில்லை?" என்று கேட்டான்.

"தவறுதான் மகாராஜா. மௌனமாக இருந்த நான் அப்போதே ராணிக்குரிய அதிகாரங்களைப் பயன்படுத்தி அவரைப் பாதுகாத்திருக்க வேண்டும்."

"நீ பாதுகாக்கவில்லை. மௌனமாக இருந்து விட்டு தண்டனையெல்லாம் முடிந்தபின் எதிர்ப்பு தெரிவிக்கிறாய். இப்போது என்ன செய்ய முடியும்?"

"அவரைப் பழையபடி ஆச்சார்யராக நியமனம் செய்யுங்கள்."

"அவர் குற்றவாளி. சிறை சென்றவர். அவரை மீண்டும் ஆச்சார்யராக நியமிக்க முடியாது."

"எவன் ஒருவன் வாழ்நாள் முருக்கத் தவறு செய்து கொண்டிருக்க முடியாது. அதே போல் எவன் ஒருவனும் வாழ்நாள் முழுவதும் நல்லவனாக இருக்க முடியாது."

"நீலகேசி உன்னிடம் பதவியைக் கேட்டாரா ராணி?"

"தான் நீலகேசியே அல்ல என்று தலையை ஆட்டி விட்டுப் போகிறார். வெறும் பிரேதம் போல இருக்கிறார். அவரைக் காணவே சகிக்கவில்லை. நெஞ்சத்தில் ரத்தம் வடிகிறது."

"பிறகு எதற்காக அவருக்கு ஆச்சார்யர் பதவி?"

“என் மனம் கேட்கவில்லை. அவரில்லாத கர்நாடகமும் சமணமும் சூன்யமாகத் தோன்றுகிறது. அவர் ஆச்சார்யராக அமர்ந்தால்தான் சூன்யம் விலகி ஞான ஒளி எழும்.”

“உன் அபிமானம் சரியாக இருக்கலாம். அனுமானம் தவறு. நீலகேசியைப் பற்றி உனக்குத் தெரியாது. அதோடு அவர் இருந்த பதவிக்கு வேறொருவரை நியமனம் செய்தாகி விட்டது. நான் வைணவத்திற்கு மாறி விட்டேன். எனது ஆச்சார்யர் இராமானுஜர்தான். வேறு ஆச்சார்யர் பதவி தேவையில்லை. நீலகேசியை எந்தப் பதவியிலும் அமர்த்த முடியாது.”

“அதுதான் உங்கள் தீர்மானமென்றால் உண்ணாவிரதம்தான் என் தீர்மானம்” என்றாள் மகாராணி.

மகாராணியா இப்படிப் பேசுவது என்று வியந்தான் மன்னன். பதியே தெய்வம் என்று நினைத்து வாழும் ராணி பதியின் சொல்லுக்கு மாறாகச் சொல்லாடியது அவனுக்கு அதிர்ச்சியாக இருந்தது. மனதை மாற்றுவதற்கு யார் முயன்றாலும் தன்னை மாற்றத் தீர்த்தங்கரராலும் முடியாது என்ற கடப்பாடு கொண்ட ராணி மனம் மாறி பேசியதும் தனது உண்ணாவிரத முடிவை அகற்றாமல் பிடிவாதம் பிடித்ததும் நம்ப முடியாத வைகளாய் இருந்தது மன்னனுக்கு.

இத்தனைக்கும் வைஷ்ணவத்திற்கு அவன் மாறினாலும் அவளை மதம் மாறும் படித் தூண்டவில்லை. கட்டாயப் படுத்தவில்லை. அவள் விரும்பும்படி தன் வழிபாடுகளைச் செய்து கொள்வதிலும் குறுக்கிட வில்லை. நீலகேசி சிறையில் இருந்த போதெல்லாம் எதைப் பற்றியும் பேசாமல் இருந்த ராணி, நீலகேசி விடுதலையான பிறகு கேள்வி எழுப்பியதைக் கண்டபோது அதற்கு நீலகேசி காரணமாக இருப்பாரோ என்று சந்தேகம் கொண்ட மன்னன் “இப்போது நான் என்ன செய்ய வேண்டும்?” என்று கேட்டான்.

அதற்கு ராணி அளித்த பதில் மன்னனை அதிர வைத்தது.





தவறு செய்யாத மனிதர் யாருமில்லை. தவறு செய்யாதவர்கள் மனிதர்களாகப் பிறப்பதில்லை – நேமிநாதர்




"இப்போது என்ன செய்ய வேண்டும்?" என்று மன்னன் கேட்டபோது-

"மகாராஜா! சமண விஹாரத்தில் வைஷ்ணவர் அமர்ந்து உபன்யாசம் செய்வது எந்தச் சட்டத்தில் இருக்கிறது?" என்று கேட்டாள் மகாராணி.

"சட்டம் எதுவும் இல்லை" என்றான் மன்னன்.

"ஏன் மகாராஜா?"

"சட்டம் வேறு. வாழ்வியல் வேறு. வாழ்விற்கு வழிகாட்டும் கருவிதான் சட்டம். அதே சமயம் வாழ்வியலின் எல்லா அம்சங்களுக்கும் சட்டங்கள் இருக்க வேண்டியதில்லை."

"எதற்காகச் சுற்றி வளைத்துப் பேசுகிறீர்கள்? சமண விஹாரத்தில் வைஷ்ணவர் எப்படி உபன்யாசிக்கலாம்?"

"நீ கேட்டாயா? உபன்யாசத்தை?"

"கொஞ்சம் கேட்டேன்."

"மக்கள் கேட்டார்கள் அல்லவா?"

"ஆமாம்."

"அவர்கள் அந்த உபன்யாசத்திற்கு எதிர்ப்பு தெரிவித்தார்களா?"

"இல்லை"

"நீ மட்டும் எதற்காக எதிர்க்கிறாய்?"

"இது என்ன கேள்வி? சமணர்களுக்கென்றும், பௌத்தர்களுக்கென்றும், சைவர்களுக்கென்றும் தனித்தனியாக வழிபாட்டு ஸ்தலங்கள் எதற்காக உருவாக்கப்பட்டன? ஒவ்வொன்றும் தத்தம் தனி அடையாளங்களைக் காட்டிக் கொள்வதற்காகத் தானே? மதங்கள் பிரிந்திருப்பது போல மத ஆலயங்களும் பிரிந்திருக்கின்றன. அதில் முரண்பாடுகள் வரலாமா?"

"ராணி! உபன்யாசம் என்பது பொதுவானது. அதை எங்கேயும் நிகழ்த்தலாம். சமண விஹாரத்தில் பிற சமயத்தினர் அமர்ந்து கொண்டு சமணத்தைப் புறக்கணியுங்கள் என்று உபன்யாசம் செய்தால் அது தவறு. நீ கூறும் வைஷ்ணவ உபன்யாசகர் அப்படியா பேசினார்?"

"சமண விஹாரத்தில் இதர மதத்தினர் பேசுவதே தவறு என்கிறேன் நான்."

"உனக்கொன்று தெரியுமா? நாம் ஆச்சார்யர் என்று கருதிக் கொண்டிருந்த ஜெயதேவர் சமணரே அல்ல. ஆனால் அவர் கர்நாடகத்தின் எல்லா விஹாரங்களிலும் உபன்யாசங்களைச் செய்து கொண்டிருந்தார். நாம் கேட்டுக் கொண்டுதான் இருந்தோம்."

"அது நமக்குத் தெரியாமல் நடந்தது. இது நமக்குத் தெரிந்து நடக்கிறது."

"நமக்கு என்று யாரைச் சொல்கிறாய்? உன்னையும் என்னையுமா? ராணி மக்களுக்கு எதிர்ப்பில்லை என்றால் - மறுப்பில்லை என்றால் யாரும் எங்கும் உபன்யாசம் செய்யலாம். அது குற்றமில்லை."

"தாங்கள் சமணராக இருந்த போது இவ்வாறு நடந்ததில்லை. வைஷ்ணவராக மாறிய பிறகு தான் நடக்கிறது."

"அதுவும் சரிதான். சமணனாக இருந்த போது அதற்கேற்ப நடந்து கொண்டேன். இப்போது வைஷ்ணவனாக மாறி விட்டேன். எனக்கு இராமானுஜரே ஆச்சார்யர். ஆகவே அவரது மதத்தைப் பரப்புகிறேன்."

"நான் சமண மதத்தில்தான் நீடிக்கிறேன். ஆகவே நான் அதற்கேற்ப நான் நடந்து கொள்ளலாம் அல்லவா?"

"அப்படித்தானே நடந்து வருகிறாய்?"

"சாதாரண சமணக் குடிமகளாக இதுகாறும் இருந்து வந்தேன். இப்போது சமண ராணியாக நடந்து கொள்ளப் போகிறேன்."

"என்ன செய்யப் போகிறாய்?"

"ராணிக்கு என்று விசேஷ அதிகாரங்கள் உண்டு என்பதை அறிந்தேன். அவற்றைக் கொண்டு ச்ரவண பெலகுலாவின் தலைவராக நியமிக்கப்பட்டவரை நீக்கி விட்டு அந்தப் பதவிக்கு நீலகேசி அடிகளை மீண்டும் நியமிக்கப் போகிறேன்."

"ச்ரவண பெலகுலா பதவிக்கு நியமித்தது பஞ்ச பிரதானிகள். அவர்கள் நியமனம் செய்ததை நீ மாற்ற முடியாது."

“அப்படியானால் பஞ்சப் பிரதானிகளையே நீக்கி விட்டு நான் நீலகேசியை நியமிக்கிறேன்.”

“ராணி! அதிகாரச் சண்டை ஆபத்தானது. அது நம் தலையில் நாமே கொள்ளி வைத்துக் கொள்வதைப் போன்றது. இருக்கிற நிம்மதியை குலைத்துக் கொள்கிற முயற்சி அது. வேண்டாம்.”

“எனக்குச் சமணமும், சமணக் கொள்கையும் தான் நிம்மதியைத் தரும். அதற்காக அதிகாரத்துடன் சண்டை தான் போட வேண்டும் என்றால் அதற்கு நான் தயாராக இருக்கிறேன்.”

“சாந்தலை! நீயா இப்படிப் பேசுகிறாய்?”

“நான் இப்படிப் பேசுவதற்குக் காரணம் நீங்கள் தான் மகாராஜா. நீங்கள் மதம் மாறியது தவறு. நீலகேசி அடிகளைத் தண்டித்ததும் பதவி நீக்கம் செய்ததும் தவறு.”

“நான் மதம் மாறியதற்குக் காரணமே நீலகேசி. அவர் மாந்தரீகனோடு சேர்ந்து கொண்டு சிகிச்சை என்ற பெயரால் நமது மகளை பல ஆண்டுகளாகச் சித்திரவதை செய்தார். இராமானுஜரோ ஒரே நாளில் மகளைக் குணப்படுத்தினார். அவர் பிரவேசித்தது முதல் நல்லது நடக்கிறது. மக்கள் அவரால் ஈர்க்கப்பட்டார்கள். பாழும் கிணற்றில் கிடந்த எனக்குக் கிடைத்த கயிறு தான் இராமானுஜர். அந்தக் கயிற்றுக்கு மரியாதை செய்யும் விதமாகத்தான் நான் மதம் மாறினேன். அது இயற்கையான காரியம். நீலகேசி குற்றவாளி என்பதை ஏற்கனவே சொல்லி விட்டேன். ஆகவே உனது மாற்றத்திற்கும் மாறுபட்ட பேச்சிற்கும் நான் காரணமல்ல. ஆகவே நீ என்னைக் காரணம் காட்டி உன்னை அழித்துக் கொள்ளாதே. நீலகேசியை நம்புவதை விட நச்சுப் பாம்பை நம்பலாம். குள்ள நரிக்கு உதவுவதும் நீலகேசிக்கு உதவுவதும் ஒன்று. அவர் பசுத்தோலைப் போர்த்திய புலியாக நடமாடுகிறார். அவரை நம்பி மோசம் போகாதே. அவரை உயர்த்த நினைப்பது என்பது நமக்குச் சவக்குழியைத் தோண்டிக் கொள்வதைப் போன்றது. இராமானுஜர் ஒரு தலைவர் அல்ல. சக்தி. அதன் ஆளுமை கர்நாடகத்தை மாற்றப் போவது விதி. சமணத்தின் எழுச்சியை நீலகேசியே வீழ்த்தி அதற்குச் சமாதி கட்டி விட்டார். கர்நாடகத்தை விட்டுச் சமணம் விடை பெறப் போகும் காலம் இது. இதை உணர்ந்து கொண்டு மாற்றத்தை ஏற்றுக் கொள். நீ சமணத்தில் தொடர்வதற்கு எந்தத் தடையும் இல்லை” என்றான் மன்னன்.

மகாராணி அவன் பேச்சை ஏற்கவில்லை.

"நான் உயிரோடு இருக்கும் வரை சமணம் தாழ்ந்து போய் விட அனுமதிக்க மாட்டேன். அது அழிவதைப் பார்த்துக் கொண்டிருக்க மாட்டேன்."

"உன்னைப் பிடிவாதம் ஆட்டிப் படைக்கிறது. உறங்கு கிறவர்களை எழுப்பலாம். உறங்குவது போல் நடிப்பவர்களை எழுப்ப முடியாது. கணவன் என்ற முறையில் சொல்கிறேன். உன் எண்ணம் வீண் எண்ணம். உன் முயற்சி வீண் முயற்சி. விபரீத முயற்சி. ஹொய்சள ராஜ்யத்திற்கு அதன் ராணியால் பங்கம் வந்தது என்ற களங்கத்தை நீ ஏற்படுத்தாதே" என்று கூறிவிட்டு அகன்றான் மன்னன்.

மகாராணி தன் பணியாட்களை அழைத்தாள்.

நீலகேசி எங்கிருந்தாலும் மரியாதையோடும் பாதுகாப் போடும் தன் இருப்பிடத்திற்கு அழைத்து வரும்படிக் கட்டளையிட்டாள்.



நீலகேசிக்கு ஐந்து ஆண்டுகள் சிறைத் தண்டனை வழங்கப் பட்ட போது அவர் அதிர்ச்சியடைந்தார்.

ஆனாலும் அவரால் எதுவும் செய்ய முடியவில்லை.

சிறையில் அவருக்கு எந்த கடுமையும் காட்டப்படவில்லை.

சுதந்திரமும் தொடர்புகளும் பறிக்கப்பட்டதே தவிர வேறு எந்தத் துன்பமும் அவருக்கு நேரவில்லை.

ஆரம்பத்தில் நெருப்பில் விழுந்தவரைப் போலத் துடித்தாலும் போகப் போக இயல்பு நிலைக்குத் திரும்பினார்.

எல்லா மனிதனுக்குமே தன் இஷ்டப்படி வாழ முடியாத நிலைமை வாழ்க்கையில் எந்த கட்டத்திலாவது வரவே செய்யும். அக்கால கட்டத்தில் அமைதியாக இருந்து சகித்துக் கொள்வதுதான் சரியான நடைமுறையாக இருக்கும்.

சிறைக்கு வந்து துடித்த போது சிறைக்குள்ளே ஏதாவது புரட்சியைச் செய்து கலவரத்தைத் தூண்டி தப்பலாமா என்று யோசித்தார்.

ஆனால் எதிர்மறையான காரியங்கள் எப்போதுமே பலனளிக்காது என்பதை உணர்ந்து அடங்கினார்.

சிறையில் பல்வேறு கைதிகள் இருந்தார்கள். பல்வேறு அதிகாரிகள் இருந்தார்கள்.

கைதிகளில் சிலர் கொடூரமாக இருந்தார்கள். சிலர் சாந்தமாக இருந்தார்கள். சிலர் பைத்தியம் பிடித்துத் திரிந்தார்கள்.

சிறைக்கு வெளியிலும் இது தான் நிலை என்று கருதிய அவர் யாரிடமும் பேசவில்லை. இஷ்டப்படி உண்டு வந்த அவர் கால் வயிறு மட்டுமே உண்டார். சில நாட்களில் விரதமிருந்தார்.

பெரும்பாலான நேரங்களில் தியானத்தில் ஆழ்ந்தார்.

மனிதர்களில் சிலர் கடந்த காலத்தை எண்ணி எண்ணி நிகழ்காலத்தில் மாய்ந்து போவார்கள். அதே போல சிலர் எதிர்காலத்தைப் பற்றி எண்ணி எண்ணி நிகழ்காலத்தில் வதங்கிப் போவார்கள்.

நீலகேசி அவ்வாறு எண்ணவில்லை. நடப்பதுதான் வாழ்க்கை. நிகழ்காலம்தான் உண்மை என்று கருதியவராய் இருந்தார்.

திங்களழகி அனுப்பி வைத்த பெண்ணிடம் உறவு கொண்டதால் உண்டான நோய் அவரை வாட்டியது.

சிறையில் அந்த நோய்க்கான சிகிச்சைகள் அளிக்கப் பட்டதாலும் யோகாப்பியாசங்களைத் தொடர்ந்து பயின்ற தாலும் அவர் மரணத்தைத் தழுவவில்லை.

உடம்பால் இளைத்துப் போனார்.

ஆயினும் அவருக்கு வைரநெஞ்சம் இருந்ததால் உடல் இளப்பத்தைத் தாங்கிக் கொண்டார்.

அவர் சிறையில் இருந்த காலத்தில் குரங்கொன்று அவரிடம் பழகியது.

மனிதர்களிடம் பேசுவதை விட -

மனிதர்களிடம் பழகுவதை விட -

குரங்கிடமும் கோட்டானிடமும் பழகலாம் என்ற கருத்தில் அவர் குரங்குடன் பழகினார். அன்பு காட்டினார்.

ஐந்தாண்டுகள் கழித்து சிறையிலிருந்து விடுவிக்கப்பட்ட போது அந்தக் குரங்கு தான் அவருக்குத் துணையாக வந்தது.

சிறையை விட்டு வெளியே வந்ததும் என்ன செய்ய வேண்டும் என்பதில் அவர் தீர்மானமாக இருந்தார்.

ஐந்தாண்டு காலமாக அவருக்குத் தலையிலும் முகத்திலுமாக முடிக்காடு வளர்ந்திருந்ததாலும் உடம்பு எலும்பும் தோலுமாய் இளைத்திருந்ததாலும் யாருக்கும் அவரை அடையாளம் தெரியவில்லை.

அதோடு அவரது அடாவடிகள் துறவியர்கள் பலருக்குத் தெரிந்திருந்தன. மக்களில் பலரும் அறிந்திருந்தார்கள். அவர்களும் அவர் சிறை சென்ற பிறகு மறந்து விட்டிருந்

தார்கள். சிலர் அவர் சிறையில் இறந்திருப்பார் என்றும் நினைத்தார்கள்.

எனவே விடுதலையான போது வரவேற்பதற்கென்று யாரும் வரவில்லை.

அவரும் யாரையும் எதிர்பார்க்கவில்லை.

அவரைப் பார்த்தவர்கள் சிலரும் அவர் குரங்கோடு இருந்ததால் குரங்காட்டி என்றே நினைத்துக் கொண்டார்கள்.

அவரிடம் கண்டதை வாங்கி அள்ளி அள்ளித் தின்னும் அளவிற்குச் செல்வமில்லை.

சிறையில் இருந்த காலத்தில் நல்லவிதமாக நடந்து கொண்ட விதத்திற்காக அவருக்கு நூறு செப்பு வராகன் நாணயங்களைச் சிறையில் தந்திருந்தார்கள்.

அதையும் கூட அவர் உணவுக்காகச் செலவிடவில்லை.

பசியெடுக்கும் போது குரங்கிடம் ஏதாவது சொல்வார். அது சென்று பழங்களைக் கொண்டு வந்து கொடுக்கும். அதை அவரும் குரங்குமாக உண்டு விட்டு நடப்பார்கள்.

துவார சமுத்திர சிறையிலிருந்து வந்த அவர் அற்ப ஆகாரங்களையும் தண்ணீரையும் மட்டும் உண்டு நடந்தார். மனவலிமை அவருக்குத் துணையாக இருந்தது.

மேல் கோட்டைக்கு வந்து பல மாதங்கள் தங்கி அங்கே நடக்கும் காரியங்களைக் கண்டார்.

இராமானுஜரின் கை நாளுக்கு நாள் ஓங்குவதையும் அவர் மீது மக்களின் ஈர்ப்பு நேரத்திற்கு நேரம் அதிகரித்ததையும் கண்ட அவருக்கு ஆத்திரம் வரவில்லை. அசூயை வரவில்லை.

அவரவர்களுக்கு வர வேண்டியவை வந்து கொண்டிருக்கின்றன என்று நினைத்து அமைதியாக எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்தார்.

“கடந்த காலத்தில் ஆகாவென்று இருந்தோமே! இன்றைக்குச் சீந்துவார் இல்லாதப் பண்டமாகவும் நீந்துவார் இல்லாதப் பொய்கையாகவும் இருக்கிறோமே” என்று வருந்தவில்லை.

ஒரு வருட காலம் மேல்கோட்டையிலும் தொண்டனூரிலும் இருந்து விட்டு அங்கெல்லாம் வைஷ்ணவம் ஆழமாகக் காலூன்றி விட்டதை உணர்ந்தார்.

தொண்டனூரில் ஏரி அமைத்த விதமானது இராமானுஜரின் இணையற்ற தந்திரம் என்பதை அவர் உணர்ந்தார். துறவி

என்றும் ஆச்சார்யர் என்றும் இருந்து கொண்டு வெறும் உபதேசங்களைக் கூறிக் கொண்டிருக்காமல் மக்களைக் கவரக் கூடியதும் மக்களுக்கு நிகழ்காலத்திலும் எதிர்காலத்திலும் பயன் தரக் கூடிய நலத்திட்டங்களை நிறைவேற்றிக் காட்டியது தான் இராமானுஜருக்கும் அவரது மத வளர்ச்சிக்கும் பெரிதும் உதவியிருக்கிறது என்பது விளங்கியது.

அந்த விஷயத்தில் அவருக்கும் தனக்குமான இடைவெளி மிகவும் அதிகம் என்பதும் அவருக்கு விளங்கியது.

மேல் கோட்டையை விட்டுப் புறப்பட்டு ச்ரவண பெலகுலாவிற்குச் சென்றார்.

அங்கே செல்லும் போது தனது கோலம் சமணர் கோலமாய் இருக்க வேண்டும் என்று விரும்பி நன்றாக மொட்டை யடித்துக் கொண்டார்.

இந்திரகிரி மலைக்கு நடந்தே சென்றார். பாகுபலி சிலையைக் கண்டு வணங்கியதோடு அச்சிலையின் காலடியிலேயே தியானத்தில் அமர்ந்தார்.

அவரை அடையாளம் கண்டு கொண்ட சில துறவிகள் அவரது மெலிந்த தோற்றத்தைக் கண்டு இரங்கினார்கள்.

"அடிகளே! அடிகளே" என்றார்கள்.

அவர் கண்களைத் திறந்து பார்த்து வணக்கம் தெரிவித்தாரே தவிர எதுவும் பேசவில்லை.

இந்திர கிரியிலேயே பல இடங்களில் அமர்ந்து தவம் செய்தார்.

துறவிகளும் மக்களுமாக வந்து அவரைப் பார்த்து விட்டு வணங்கிய படிச் சென்றார்கள்.

அவரோடு பேச பலர் ஏங்கினாலும் அவர் பேசவில்லை.

அவருக்குப் பதிலாகப் பேசுவது போல அவருடன் இருந்த குரங்கு ஙீச்கீச்சென்று கத்தியது வேடிக்கையாக இருந்தது.

ஐந்தாறு மாதங்கள் இந்திரகிரியில் இருந்து விட்டுச் சந்திரகிரிக்குச் சென்றார்.

அங்கே சமணர் பரிவேணையில் தங்கியிருந்த ச்ரவண பெலகுலாவின் புதிய தலைவர் நேமிநாதரைக் கண்டு மேனி தரையில் பதியும் படி விழுந்து வணங்கினார்.

அருகில் இருந்த துறவிகள் நேமி நாதரிடம் "இவர் தான் இதற்கு முன் ச்ரவண பெலகுலாவின் தலைவராக இருந்தார். நீலகேசி அடிகள்" என்று அறிமுகம் செய்து வைத்தார்கள்.

நீலகேசியைப் பற்றிய விவரங்கள் நேமிநாதருக்குச் சொல்லப் பட்டிருந்தன. நீலகேசி சிறையில் இருந்ததால் அவரைப் பார்க்க முடியவில்லை.

தற்போது நேரில் பார்த்ததால் "அமருங்கள் அடிகளே!" என்றார்.

ஆனால் நீலகேசி அமரவில்லை.

"அடிகளே! தவறு செய்யாத மனிதர் யாருமில்லை. தவறு செய்யாதவர்கள் மனிதர்களாகப் பிறப்பதில்லை. வருந்தாதீர்கள். வருத்தம் சோக வாயில்களைத் திறக்காது. வருத்தத்தை விட்டால் தான் திறக்கும். யோக வாழ்வு வாழ வேண்டிய துறவிகள் சோக வாழ்வு வாழ வேண்டாம்" என்றார் நேமிநாதர்.

நீலகேசி எதுவும் பேசவில்லை.

மீண்டும் வணங்கி விட்டு வெளியே வந்தார்.

யட்சிணி அம்பிகாவின் ஆலயத்திற்கு வந்தார்.

அங்கிருந்தத் துறவிக்கு அவரைக் கண்டதும் பெருவியப்பு.

"ஆகா! எப்படி இருந்தவர் இப்படி ஆகி விட்டார். ஜாதிக் குதிரையைப் போல நடப்பாரே அவரா இவர்! எலும்புக் கூட்டிற்கு வண்ணமடித்தது போல அலங்கோலமாக இருக்கிறாரே! சிறை வாழ்வு சிதைத்து விட்டதா இவரை? இந்திர கிரியையும் சந்திர கிரியையும் ஆட்டிப் படைத்த மனிதர் இப்படி ஆடிப் போய் வாடிப் போய் வதங்கிப் போன மாலையைப் போல காட்சியளிக்கிறாரே! இது என்ன சோதனை?" என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்ட துறவி "அடிகளே! நீங்கள் தானா?" என்று கேட்டார்.

நீலகேசி அவரது வார்த்தைகளைக் கவனிக்கவில்லை.

யட்சிணி சிலைக்கு முன்னால் சென்று வணங்கினார்.

முன்னாலேயே அமர்ந்தார்.

"தாயே யட்சிணி! சமணத்திற்குச் சோதனை வந்து விடுமா? அதற்குத் தீர்வு வருமா என்று கேட்டேன். நீயோ மேல் கோட்டை என்ற ஒற்றை வார்த்தையை மட்டும் சொன்னாய். அதற்கு அர்த்தம் தெரியாமல் அன்று தவித்தேன். இன்று எல்லாம் தெரிந்து விட்டது. முடிந்தும் விட்டது. மேல் கோட்டைக்குத் தமிழகத்திலிருந்து வைஷ்ணவ சன்யாசி வந்தார். மாற்றங்கள் மளமளவென வந்தன. மன்னன் மதம் மாறினான். மக்களும் நிறைய பேர் மாறினார்கள். நானும் சிறையில் அடைக்கப் பட்டேன். சமணம் இன்று நோயாளி போல் நொடிந்து கிடக்கிறது. வெயில் வரும் போது நிழல் வருவது

போல ஏதோ ஓடிக் கொண்டிருக்கிறது. கர்நாடகத்தில் நதிகள் ஓடும். அவற்றில் நீர் எப்போதும் ஓடும். சமணம் அவ்வாறு ஓடுமா? ஓடாது. அது மூடப்பட்டச் சுரங்கம். முடக்கப்பட்ட இயக்கம். முடமாகி விட்டச் சரீரம். இது தான் உன் திருவுள்ளம் என்றால் அப்படியே நடக்கட்டும். இனி உன்னிடம் வந்து உன்னைத் தொந்தரவு செய்ய மாட்டேன். உனது திருவடிகள் போற்றி" என்று உள்ளுக்குள் கூறிக் கொண்டு அங்கிருந்து எழுந்தார்.

சந்திர கிரியிலேயே சில மாதங்கள் தங்கினார்.

மக்கள் அவரை அனுதாபத்துடன் பார்த்தார்கள்.

"இவரா இப்படி? இவருக்கா இப்படி?" என்று நினைத்தார்கள்.

அவரோ யாரைப் பற்றியும் கவலைப்படவில்லை.

நேமிநாதர் உபன்யாசம் செய்யும் போதெல்லாம் கடைக் கோடியில் அமர்ந்து கொண்டுச் சாதாரணத் துறவியைப் போலக் கேட்பார்.

ஓரிரு முறை அவரை உபன்யாசம் செய்யும்படி நேமிநாதர் அழைத்ததுண்டு.

நீலகேசியோ எதுவும் சொல்லாமல் எழுந்து சென்று விடுவார்.

இதற்கிடையில் மேல் கோட்டையில் இருந்த இராமானுஜர் டில்லிக்குப் புறப்பட்டு விட்டதாகத் தகவல்கள் வந்தன.

"இராமானுஜர் கொடுத்து வைத்தவர்" என்று மட்டும் சொல்லிக் கொண்டு மரத்தடியில் சாய்ந்து அமர்ந்தார்.

உண்பதற்கு எதையாவது கொண்டு வரும்படி குரங்கை அனுப்பி வைத்து விட்டு கண்களை மூடினார்.

இரவு நேரம்.

அதை நினைவூட்டுவது போல ஆந்தைகள் இரண்டு இரைந்தன.

ஜல்ஜல் என்ற ஓசை மெல்லக் கேட்டது.

நீலகேசியோ கண்களைத் திறக்கவில்லை.

"கண்களைத் திறவுங்கள் அடிகளே" என்ற குரல் ஒன்று எழுந்தது.

நீலகேசி கண்களைத் திறந்தார்.

அவருக்கு முன்னால் நின்றிருந்தாள் ஓர் அழகி.





கறைகளையும் குறைகளையும் மறைத்துக் கொண்டு வாழும் மனிதர்கள் இருக்கலாமேயன்றி கறைகளும் குறைகளும் இல்லாத மனிதர்கள் எங்கும் கிடையாது – அம்பிகாபதி




அழகியைப் பார்த்ததும் கண்களை மூடிக் கொண்டார் நீலகேசி.

"இதென்ன கண்களை மூடிக் கொண்டீர்கள் சுவாமி? வந்திருப்பது யார் என்று கூட கவனிக்கவில்லையே! நான் தான் சுகந்தி. உங்களைப் பகிர்ந்து கொண்ட அழகிகளில் ஒருத்தி. மறந்து விட்டீர்களா? என்னோடு சரசமாடிய நீங்கள் 'நான் மறக்க முடியாத சரசம் உன்னோடு தான்' என்றீர்களே! நினைவில்லையா? இரண்டு நாட்களுக்கு இடைவெளி யில்லாமல் இணைந்து இன்புற்றதை எப்படி மறந்து விட்டீர்கள் சுவாமி?" என்று கேட்ட அப்பெண் இருட்டில் கிடந்த அடிகளை உற்று நோக்கினாள்.

அப்போது தான் அவர் அலங்கோலமாக இருந்ததைக் கவனித்தாள். எலும்பும் கூடுமாக அவலமான நிலையில் சாகக் கிடப்பது போல் இருப்பதைக் கண்டாள்.

"சுவாமி! உங்களுக்கு என்ன ஆயிற்று? துறவியாக இருந்தாலும் உறவில் உறுதியான காளையாக இருக்கும் நீங்கள் பிணம் போல் இருக்கிறீர்களே ஏன்? ஏதாவது நோயா? நோயாக இருந்தால் அதைப் பேயை விரட்டுவது போல் விரட்டி விடுவீர்களே! ஏதாவது மனக் கஷ்டமா? அப்படியும் இருக்க முடியாதே! எதைப் பற்றியும் கவலைப்படாதவராயிற்றே நீங்கள்? பிறர் கஷ்டப்பட்டாலும் பொருட்படுத்தாத உங்களுக்குத் துக்கம் ஏது? துயரம் ஏது? நீங்கள் இருப்பதாகக் கேள்விப்பட்டதும் அந்த இரண்டு நாட்களை எண்ணிக் கொண்டு ஆனந்தம் தூய்க்கலாம் என்று வந்தால் நீங்கள் இப்படி இருக்கிறீர்களே!" என்று புலம்பினாள் அவள்.

அப்போது அவரது குரங்கு பழங்களோடு வந்து அவரை எழுப்பியது.

அது கொண்டு வந்திருந்த பழங்கள் இரண்டில் ஒன்றை அதற்குக் கொடுத்து விட்டு இன்னொன்றை நீலகேசி சாப்பிட்டார்.

அதைக் கண்ட அந்த பெண்ணிற்கு என்னவோ போல் இருந்தது.

ஊருக்கு அவர் எப்படியானாலும் தனக்கு அளவிலா ஆனந்தத்தைக் கொடுத்தவர் அவர். அவரோடு இருந்த இரண்டு நாட்களைப் போன்ற ஆனந்த நாட்கள் அதற்குப் பின் அவளுக்கு வந்ததில்லை.

அந்த இரண்டு நாட்களும் அவரும் அவளுமாக உண்டதெல்லாம் தேவலோகத்து அமரர்கள் உண்ணக் கூடிய அரிய உணவுகள்.

அவருக்குத்தான் அந்த உணவு வகைகள் எங்கிருந்து கிடைத்தனவோ!

அப்படியெல்லாம் உண்டு களித்த அவருக்குத் தற்போது ஒரே ஒரு பழம் தான் உணவா? அதையும் குரங்கு கொண்டு வந்து கொடுத்தால் தானா?

மனம் உருகிப் போன அவள் "சுவாமி! உங்களை இந்த நிலையில் பார்ப்பதற்கு என்னால் இயலவில்லை. இங்கேயே இருங்கள். பல்வேறு பலகாரங்களைக் கொண்டு வருகிறேன்" என்று கூறிவிட்டுச் சென்றாள்.

பலகாரங்களோடு அவள் மீண்டும் அங்கே வந்த போது நீலகேசியும் இல்லை. குரங்கும் இல்லை.



பெண்ணைப் பற்றிக் கவலைப்படாமல் சந்திரகிரியை விட்டு இறங்கினார் நீலகேசி.

துவாரசமுத்திரத்திற்கு செல்ல விரும்பினார்.

செல்லும் வழியில் வெயில் மண்டையைப் பிளந்தது.

வெப்பம் தாள முடியாமல் கீழே விழுந்து மயக்கமடைந்தார்.

குரங்கு கிறீச் கிறீச் என்று கத்தியது.

அவரது முகத்தைப் பார்ப்பதும் கத்துவதுமாக இருந்தது. இங்கும் அங்கும் தாவியது.

அப்போது அங்கே வந்து கொண்டிருந்த வாலிபன் அக்காட்சியைக் கண்டான்.

அருகில் வந்து பார்த்தான். பக்கத்திலிருந்து தண்ணீரைக் கொண்டு வந்து தெளித்தான்.

நீலகேசி கண்விழித்தார்.

குரங்கு மீண்டும் கத்தியது.

வாலிபன் அவரது மண்டைப் பகுதியில் ரத்தம் வழிவதைப் பார்த்தான்.

தனது தோளில் இருந்த மூட்டையை எடுத்து அதிலிருந்த களிம்பு ஒன்றை எடுத்து ரத்தம் கசிந்த இடத்தில் வைத்து அழுத்தினான்.

நீலகேசி சற்றே ஆசுவாசப்படுத்திக் கொண்டார்.

தனது துணி மூட்டையில் இருந்த பொரி உண்டைகள் இரண்டை எடுத்து அவருக்குக் கட்டி "உணவில்லாமல் களைத்து விட்டதால் விழுந்து விட்டீர்கள். நடப்பதற்கான தெம்பு உடம்பில் இல்லை. இதை அருந்துங்கள்" என்றான்.

அவர் அதை வாங்கி ஒன்றை குரங்கிற்குக் கொடுத்து விட்டு மற்றொன்றை உண்டார்.

வாலிபன் மூட்டையில் இருந்த குவளையை எடுத்துப் போய் தண்ணீர் கொண்டு வந்தான்.

அதை நீலகேசியும் குரங்கும் குடித்தார்கள்.

குரங்கு நன்றி உணர்ச்சியுடன் வாலிபனைத் தடவியது.

"ஐயா! நீங்கள் யார்? எங்கிருந்து வருகிறீர்கள்? எங்கு செல்கிறீர்கள்?" என்று கேட்டான் வாலிபன்.

நீலகேசி பதில் சொல்லவில்லை.

நீ யார் என்பது போல் கைகளை ஆட்டினார்.

"என் பெயர் அம்பிகாபதி - ச்ரவண பெலகுலாவுக்கு அருகே உள்ள கிராமத்தில் வசிப்பவன். யட்சிணி அம்பிகா தேவியின் அருளுக்குப் பாத்திரமானவன். அவள்தான் என்னை இளம் வயதிலேயே துறவியாக்கினாள். அந்தக் கணமே மொட்டையடித்துக் கொண்டு காவியை அணிந்து கொண்டேன். பரோபகாரமே உனது லட்சியமாக இருக்கட்டும் என்றாள் தேவி. துவாரசமுத்திரத்திற்குச் செல்லும் படியும் அவள்தான் சொன்னாள். செல்லும் வழியில் உங்களுக்கு உதவ நேர்ந்தது அவளது கிருபைதான். தாங்கள் எங்கே செல்கிறீர்கள்?"

நீலகேசி பதில் கூறவில்லை.

குரங்கு தான் ஏதோ கத்தியது.

அவர் மௌன விரதத்தில் இருப்பதாகக் கருதினான் அம்பிகாபதி.

அவர் எழுந்து நடந்தார். அவனும் கூடவே நடந்தான்.

துவாரசமுத்திரத்திற்குச் செல்லும் மார்க்கத்தில் இருந்த வர்த்தமானீச்சுர விஹாரத்தருகே வந்தபோது நீலகேசி அங்கே சற்று நின்றார்.

அந்த விஹாரத்தில் அப்பாவி பெண்ணான திங்களழகியைச் சேதப்படுத்தி விட்டு நச்சுப் பொய்கையில் வீசச் சொன்னது -

பிறகு ஒரு நாள் மற்றொரு அப்பாவிப் பெண்ணான சந்தன மாலாவைச் சேதாரப்படுத்திச் சாகடித்து நச்சுப் பொய்கையில் எறியச் சொன்னது -

அதையடுத்து விஹாரத் துறவிகள் தன்னோடு பிணக்கு கொண்டு பேசியது எல்லாம் நினைவுக்கு வந்தன.

விஹாரத்தின் படிகளைத் தொட்டு வணங்கிய நீலகேசி அங்கேயே தியானத்தில் அமர்ந்தார்.

அவரது பக்கத்தில் குரங்கு அமர்ந்தது.

அம்பிகாபதியும் அமர்ந்தான்.

விஹாரத்துத் துறவிகள் வந்து அவரைப் பார்த்தார்கள்.

"ஆட்டம் போட்டீர்களே அடிகளே! உங்களுக்கு இந்த நிலைமை சரிதான். விஹாரத்தை விகாரமாக்கினீர்களே அடிகளே! உங்களுக்கு இந்த அலங்கோலம் தேவைதான்" என்று நினைத்தார்கள்.

சிலர் வசை பாடினார்கள்.

இரண்டொருவர் மண்ணை வாரி வீசினார்கள்.

அப்போது அவருக்கு முன்னால் திரைபோல் வந்து நின்ற வாலிபன் அம்பிகாபதி "நிறுத்துங்கள் ஐயா. துறவி மார்களாக இருந்து கொண்டு இவ்வாறு நடந்து கொள்வது நல்லதல்ல. அதுவும் தியானத்தில் இருக்கும் துறவியைப் பார்த்து கேலி பேசுவதும் மண்ணை வீசுவதும் முறையாகாது. அவர் படிக் கட்டிற்கு பக்கத்தில் யாருக்கும் தொல்லை தராத விதமாக அமர்ந்திருக்கிறார். அவரது தோற்றத்தைப் பாருங்கள். உங்களுக் கெல்லாம் அனுதாபம் பிறக்கவில்லையா? இரக்கம் பிறக்க வில்லையா? கருணை பிறக்கவில்லையா? விஹார வாசலிலேயே வசையும் வன்முறையும் நடந்தால் விஹாரத்திற்கு என்ன மதிப்பு?" என்று கேட்டான்.

துறவியொருவர் பேசமுற்பட்டு "வாலிபனே! நீ யாரோ எவனோ என்பது எங்களுக்குத் தெரியாது. இவர் யார் தெரியுமா? நீலகேசி. மன்னரின் ஆச்சார்யராகவும் ச்ரவண

பெலகுலாவின் சமணத் தலைவராகவும் இருந்தவர். துறவி என்பது கோலத்தில் மட்டும் தான் இருந்தது. மற்றதெல்லாம் அலங்கோலம் தான். விஹாரத்தைக் காமக் கூடமாக்கி விகாரப் படுத்தியவர் இவர். எப்படியெல்லாம் இருக்கக் கூடாதோ அப்படியெல்லாம் இருந்தவர் இவர். நடந்து கொண்டவர் இவர். இவர் கால் பட்டு இந்த விஹாரம் அசுத்தமாகி விட்டது. இவரது தீமைகளுக்காகச் சிறைத் தண்டனை பெற்று ஐந்தாண்டுகள் கழித்து விடுதலையானவர் இவர். மோசமானவற்றுக்கு இவர் ஒரு நிரந்தரமான அடையாளம்'' என்றார்.

``நீங்கள் கூறுவது சரியல்ல துறவியரே. எந்த ஒரு மனிதனும் தவறு செய்வது எவ்வளவு இயல்பானதோ அந்த அளவிற்குத் திருந்துவதும் இயல்பானது. திருந்தியவனை மன்னிக்க முற்படாதவன் மனிதனே அல்ல. கறை படாத மனிதன் எங்கிருக்கிறான்? இந்த விஹாரத்தில் இருக்கிறார்கள் என்று சத்தியம் செய்து சொல்ல முடியுமா? கறைகளையும் குறைகளையும் மறைத்துக் கொண்டு வாழும் மனிதர்கள் இருக்கலாமே யன்றி கறைகளும் குறைகளும் இல்லாத மனிதர்கள் எங்கும் கிடையாது. தேவலோகத்தில் உள்ளவர்களுக்கும் ஆசூயை உண்டு. அகங்காரம் உண்டு. தவறான ஆசை உண்டு'' என்றான் அம்பிகாபதி.

துறவிகள் முணுமுணுத்து கொண்டு அகன்றார்கள்.

நீலகேசி நிறம் மாறாத மலர் போல நிர்மலமாக இருந்தார்.

விஹாரத்திற்கு முன்பு அமர்ந்து விவகாரமாகி விட வேண்டாம் என்று கருதிய அவர் நச்சு பொய்கைக்கு அருகில் இருந்த போதி மரத்தின் கீழே அமர்ந்தார்.

தியானமும் அங்கே தான். உறக்கமும் அங்கே தான்.

குரங்கு கொண்டு வந்து கொடுத்த பழங்களை மட்டுமே உண்டார். அம்பிகாபதி கொண்டு வந்தச் சிற்றுணவுகளை ஏற்கவில்லை.

அவரது போக்கு விஹாரத்துத் துறவிகளை அசைத்தது.

இவர் பழைய நீலகேசியல்ல என்று கருதினார்கள். தூய்மையாகி விட்டதாகக் கருதினார்கள்.

விஹாரத்திற்கு வந்த மக்களும் அவ்வாறே கருதி அவருக்கு முன்னால் அமர்ந்தார்கள்.

அவரோ அதிக நேரம் தியானத்தில் இருந்தாரே தவிர யாரிடமும் பேசவில்லை.

விஹாரத்தின் தலைமைத் துறவியான ரிஷப தேவரும் வந்து நீலகேசியின் நிலையையும் போக்கையும் கண்டு வியந்து போனார்.

அசுத்தம் அகன்ற பின்னரும் ஓரிடத்தை அசுத்தமாகவே கருதுவது தவறு என்றுணர்ந்த அவர் நீலகேசியை விஹாரத்திற்குள் வரும்படிக் கேட்டுக் கொண்டார்.

ஆனால் நீலகேசி செல்லவில்லை.

விஹாரத்திலிருந்து தின்பண்டங்கள் அனுப்பப்பட்டன.

நீலகேசி எதையும் ஏற்கவில்லை.

"ஒன்றிரண்டு பலகாரங்களையாவது ஏற்றுக் கொள்ள வேண்டும்" என்றார் ரிஷபதேவர்.

நீலகேசி மூன்று சீடைகளை எடுத்தார். அம்பிகாபதிக்கு ஒன்றும் குரங்கிற்கு ஒன்றும் கொடுத்து விட்டு மூன்றாவதை உண்டார்.

துறவிகள் பரவசப்பட்டார்கள்.

ஒரு நாள் மாலை அந்த விஹாரத்தில் வைஷ்ணவ துறவி உபன்யாசம் செய்வார் என்று அரச கட்டளை வந்தது.

அரச கட்டளையை யாரும் மீறமுடியவில்லை.

வைஷ்ணவர் வந்தார். உபன்யாசத்தை ஆரம்பித்தார்.

"தர்மங்களில் நான்கு விதங்கள் உண்டு. சாதாரண தர்மம் - சேஷ தர்மம் - விசேஷ தர்மம் - அதி விசேஷ தர்மம். இந்த நான்கு தர்மங்களும் ராமபிரானிடமும் அவரது சகோதரரிடம் இருந்தன. இராம பிரான் கடவுள். ஆனால் மனிதராய் அவதரித்து மனிதராய் வாழ்ந்தார். அவரது வாழ்க்கையானது சாதாரண தர்மம். அவரது சகோதரரான லட்சுமணன் தனக்காக வாழாமல் தன் சகோதரர் இராமனுக்காக வாழ்ந்தான். அவனது வாழ்க்கை சேஷ தர்மம். பரதன் இராமன் கொடுத்துச் சென்ற அரியணையில் அமராமல் அவரது பாதுகைகளை அமர்த்தித் தொழுது வந்தான். அவனது வாழ்க்கையானது விசேஷ தர்மம். பாதுகைகளை வைத்துத் தொழுது வந்த பரதனுக்கு உறுதுணையாய் இருந்தான் சத்ருக்கனன். அவனது வாழ்க்கை அதிவிசேஷதர்மம்.

"தனது வாழ்க்கையை விட்டு விட்டு தன் தமையனுக்காக வாழ்ந்தவன் இராமனின் அனுஜனான் லட்சுமணன். அவனுக்கு இராமானுஜன் என்ற பெயர் உண்டு. அதே பெயரில் கர்நாடகத்திற்கு விஜயம் செய்திருக்கும் இராமானுஜரும் தனக்கென்று வாழவில்லை. திருமாலைத் தொழும் அடியவர் களுக்காகவும் பாமர மக்களுக்காகவுமே வாழ்கிறார். அவர்களுக்

காகவே அடியெடுத்து வைக்கிறார். தற்போது டில்லியை நோக்கி அடியெடுத்து வைத்திருக்கிறார். எதற்கு?

“மேல்கோட்டையிலிருந்து மிலேச்சர்களால் கவரப்பட்டுச் சென்று ராமப்பிரியர் விக்ரகத்தை மீட்பதற்காகச் சென்றிருக்கிறார். அது தேவையில்லை என்றும் புதிய விக்ரகம் ஒன்றை உருவாக்கி வழிபடலாம் என்றார்கள் பலர். மன்னர் விஷ்ணு வர்த்தனர் கூட அவ்வாறே அபிப்ராயப்பட்டார். ஆனால் இராமானுஜர் சம்மதிக்க வில்லை. புராதனமான விக்ரகமே மகத்தானது என்றும் அது கிடைக்கவே கிடைக்காது என்ற நிலை வந்தாலொழிய அதைப் புறக்கணிக்கக் கூடாது என்று கூறி ஆபத்தான பயணத்தை மேற்கொண்டிருக்கிறார். இது எதைக் காட்டுகிறது? எண்ணத்திலும் செயலிலும் உள்ள உறுதியை அல்லவா காட்டுகிறது?

“உறுதியான எண்ணமும் உறுதியான செயலும்தான் மனிதனுக்கு வாழ்க்கையில் வெற்றியைத் தரும். சலனமான எண்ணங்களும் செயல்களும் வெற்றியைத் தவிர்க்கும்” என்று கூறிமுடித்தார் வைஷ்ணவர்.

அவரது உபன்யாசத்தை மக்கள் நிறையபேர் கூடி கேட்டார்கள்.

நீலகேசி கடைசியில் அமர்ந்து அமைதியாகக் கேட்டு விட்டுக் கலைந்தார்.

இரண்டு நாட்கள் கழித்து விஹாரத்தின் தலைமைத் துறவியான ரிஷபதேவர் நீலகேசியிடம் வந்து “அடிகளே! தாங்கள் விஹாரத்திற்கு வந்து உபன்யாசம் செய்ய வேண்டும்” என்றார்.

அவருக்கு முன்னால் ஐந்நூறு பேர் அமைதியாக அமர்ந் திருந்தார்கள். நீலகேசி விஹாரத்திற்குச் செல்ல வில்லை. மரத் தடியிலேயே இருந்த படி பாடினார்.

**ஜென்மம் நிறைந்தது சென்றவர் வாழ்க**
**சிந்தை கலங்கிட வந்தவர் வாழ்க**
**நீரில் மிதந்திடும் கண்களும் காய்க**
**நிம்மதி நிம்மதி இவ்விடம் சூழ்க** 1

**ஜனனமும் பூமியில் புதியது இல்லை**
**மரணத்தைப் போலொரு பழையதும் இல்லை**
**இரண்டும் இராவிடில் இயற்கையும் இல்லை**
**இயற்கையின் ஆணைதான் ஞானத்தின் எல்லை** 2

**பாசம் உலாவிய கண்களும் எங்கே**
**பாய்ந்து துழாவிய கைகளும் எங்கே**

தேகம் அளாவிய கால்களும் எங்கே
தீ உண்டதென்றது சாம்பலும் எங்கே 3

கண்ணில் தெரிந்தது காற்றுடன் போக
மண்ணில் பிறந்தது மண்ணுடன் சேர்க
எலும்பு சதைகொண்ட உருவங்கள் போக
எச்சங்களால் அந்த இன்னுயிர் வாழ்க. 4

பிறப்பு இல்லாமலே நாளொன்றும் இல்லை
இறப்பு இல்லாமலும் நாளொன்றும் இல்லை
நேசத்தினால் வரும் நினைவுகள் தொல்லை
மறதியைப் போல் ஒரு மாமருந்தில்லை. 5

கடல்தொடும் ஆறுகள் கலங்குவதில்லை
தரைதொடும் தாரைகள் அழுவதுமில்லை
நதி மழை போன்றதே விதியென்று கண்டும்
மதி கொண்ட மானுடர் மயங்குவ தென்ன? 6

மரணத்தினால் சில கோபங்கள் தீரும்
மரணத்தினால் சில தாபங்கள் தீரும்
வேதம் சொல்லாததை மரணங்கள் கூறும்
விதையொன்று வீழ்ந்ததில் செடிவந்து சேரும். 7

பூமிக்கு நாமொரு யாத்திரை வந்தோம்
யாத்திரை தீருமுன் நித்திரை கொண்டோம்
நித்திரை போவது நியதி என்றாலும்
யாத்திரை என்பது தொடர்கதையாகும். 8

தென்றலின் பூங்கரம் தீண்டிடும் போதும்
சூரியக் கீற்றொளி தோன்றிடும் போதும்
மழலையின் தேன்மொழி செவியுறும் போதும்
மாண்டவர் எம்முடன் வாழ்ந்திடக் கூடும்? 9

மாண்டவர் சுவாசங்கள் காற்றுடன் போக
தூயவர் கண்ணொளி சூரியன் சேர்க
பூதங்கள் ஐந்திலும் பொன்னுடல் சேர்க
போனவர் புண்ணியம் எம்முடன் சேர்க.* 10

*நீலகேசி மிருதுவான குரலில் பாடி முடித்த போது அதைக் கேட்டவர்களின் கண்கள் பனித்திருந்தன.*

*ரிஷபதேவர் கூட சற்றே பரவசப்பட்டார்.*

---

* பாடலாசிரியருக்கு நன்றி.

"இவரைப் போய் கேவலமாக நினைத்தோமே! மாசு என்றும் தூசு என்றும் நினைத்தோமே! மாசு மருவற்ற பனித்தூளைப் போல் அல்லவா இருக்கிறார்! தண்டனை பெற்றபின் தன்னிக ரில்லாதவரைப் போல் அல்லவா ஜொலிக்கிறார்? என்ன பாட்டு? என்ன அர்த்தம்? என்ன உருக்கம்? நான் பேசிய பேச்சுக்கள் ஒரு நாளும் இப்படி அமைந்ததில்லையே! சில மணித் துளிகளில் எல்லோரையும் கரைத்து விட்டாரே! பேசாமல் இருந்ததற்கெல்லாம் சேர்த்து வைத்து பொருள் கூறுவது போல் பாடி விட்டாரே! என்ன லயம்! என்ன பாவம்!" என்று தனக்குள் சொல்லிக் கொண்ட அவர் "அடிகளே! தயை கூர்ந்து விஹாரத்திற்கு விஜயம் செய்து தங்கள் தூய பாதங்களால் புனிதப்படுத்த வேண்டும்" என்றார்.

"என் கால்களில் மட்டுமின்றி மெய்யிலும் வாக்கிலும் படிந்துள்ள கறை விலகவில்லை ரிஷப தேவரே. என்னை மன்னித்து விடுங்கள்" என்று கூறிவிட்டுப் புறப்பட்டார் நீலகேசி.

எல்லோரும் அவரையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

"நான் உங்களை விட்டுப் பிரியலாமா அடிகளே?" என்று கேட்டான் அம்பிகாபதி.

"கசந்து விட்டதா வாலிபனே?"

"இல்லை சுவாமி.நான் உணவு கொடுத்தால் ஏற்க மறுக்கிறீர்கள். குரங்கு கொடுத்தால் மட்டும் ஏற்கிறீர்கள். மனதிற்கு கஷ்டமாக இருக்கிறது. என்னால் பயனில்லை என்று தோன்றுகிறது."

"உனக்கும் குரங்கிற்கும் உள்ள வித்தியாசம் பேச்சுதான். நீ பேசுகிறாய். அது பேசுவதில்லை. நீ வருத்தப்படுகிறாய். அது வருந்துவதில்லை. அம்பிகாபதி! நீ என்மீது அபிமானம் காரணமாக உண்ணுவதற்கு நிறையக் கொடுக்கிறாய். நிறைய உண்பதற்குப் பழகிவிட்டால் பட்டினி விரதம் இருக்க முடியாது. என் நிலை குரங்கிற்கு மட்டுமே தெரியும். அது எப்போதும் அளவோடுதான் கொண்டு வந்து கொடுக்கும். நீ அதை உணர்ந்து கொண்டு நடந்து கொண்டால் என்னுடன் வரலாம்."

"அப்படியே ஆகட்டும் சுவாமி" என்றான் அம்பிகாபதி.

இரண்டு நாள் கழித்து மூவரும் துவாரசமுத்திரத்தை அடைந்தார்கள்.





உதவியானது கொஞ்ச காலத்துக் கௌரவமாய் இருக்கும் வரை நிறைவானதாக இருக்கும். மீண்டும் மீண்டும் தொடர்ந்தால் கறை படியக் கூடியதாக ஆகி விடும் – நீலகேசி



# 91

மகாராணியின் உத்தரவை ஏற்று பணியாளர்கள் துவார சமுத்திரம் முழுவதும் தேடினார்கள்.

“நீலகேசி அடிகளைக் காணவில்லை மகாராணி” என்றார்கள்.

“நீங்கஎல்லாம் மனிதர்கள் அல்ல. மடையர்கள். உண்டு விட்டு உண்டு விட்டுச் சுகமாக உறங்குவதற்கு லாயக்கான வர்கள். எலும்பும் தோலுமாக இருக்கும் துறவி ஒரு நாளைக்குள் எங்கே சென்று விட முடியும்? இறக்கையா இருக்கிறது பறந்து செல்வதற்கு? மீண்டும் போய் தேடுங்கள். அவரோடு தான் நீங்கள் வரவேண்டும். இல்லையென்றால் உங்களைப் பணி நீக்கம் செய்து சிறையில் தள்ளி விடுவேன்” என்று சீறினாள் மகாராணி.

அவள் அந்த அளவிற்குக் கோபப்பட்டு பணியாளர்கள் பார்த்ததில்லை. எனவே மேலும் பல சீடர்களை அழைத்துக் கொண்டு புறப்பட்டார்கள்.

அவர்கள் சென்ற சிறிது நேரம் கழித்து இளவரசன் நரசிம்மன் வந்து மகாராணியை நமஸ்கரித்தான்.

“தாயே! தாங்கள் மகாராஜாவின் மனம் நோகும் படிப் பேசி விட்ட தாகக் கேள்விப்பட்டேன். உண்மை தானா?” என்று வினவினான்.

“மனம் என்பது மகாராஜாவுக்கு மட்டும் தான் இருக்குமா? அவருக்கு மட்டும் தான் மனம் நோகுமா?” என்று கேட்டாள் மகாராணி.

“தங்கள் கோபம் குறைந்த பின் வந்து பேசுகிறேன் தாயே” என்று கூறிவிட்டுச் சென்றான் நரசிம்மன்.

அரண்மனையில் மன்னன் கவலையோடு இருந்தான்.

“தாங்கள் இந்த அளவிற்கு வருந்த வேண்டியதில்லை மகாராஜா” என்றார் சேனாதிபதி பகாசூரர்.

“நான் கவலைப்படுவது நீலகேசியைப் பற்றியல்ல. மகாராணி அதிகாரங்களோடு மோதுவதற்கு முற்படுவது தான். மகாராணி

வேறு பெண்மணியல்ல. எனது குடும்பத்தவள். எங்களுக்குள் மோதல் வந்தால் - அதுவும் அதிகார மோதல் வந்தால் எல்லோரும் "குடும்பத்திற்குள் குழப்பம். குடுமிபிடிச் சண்டை" என்று ஏகடியம் பேசுவார்கள். குடும்பத்தினர் ஆட்சி அதிகாரங்களில் தலையிடுவதும் முந்திக் கொள்ள முற்படுவதும் குடும்பத்தையும் பாதிக்கும். ஆட்சியையும் பாதிக்கும். அது தான் என் கவலை" என்றான் மன்னன்.

"மகாராஜா! இந்தப் பிரச்சனை தீர எளிய வழி ஒன்றுதான் இருக்கிறது."

"சொல்லுங்கள்"

"மகாராணி தனது அதிகாரத்தைக் காட்ட முற்படுவதை அனுமதிக்காமல் தாங்கள் பஞ்சப் பிரதானிகளிடம் சொல்லி அவர்களை நியமித்த நேமிநாதரை நீக்கி விடுங்கள். நீலகேசியை அமர்த்தி விடுங்கள்"

"இதைத் தானே ராணியும் சொல்கிறாள்?"

"அதை ஏற்றுக் கொண்டு விட்டால் பிரச்சனை இல்லை. நீலகேசிக்குப் பதவியைத் தருவதால் என்ன ஆகி விடும்? அவர் செத்த பாம்பு. உதிர்ந்த மலை. உடைந்த சிலை. முறிந்த தேர். அவரால் அசையவே முடிய வில்லை. ஆட முடியுமா என்ன?"

"நீங்கள் எல்லோருமே நீலகேசியின் நிறம் தெரியாமல் பேசுகிறீர்கள். நல்லது சேனாதிபதி. நான் பஞ்சப் பிரதானிகளிடம் பேசுகிறேன்" என்றான் மன்னன்.



"மகாராணி! நாங்கள் எவ்வளவோ கேட்டுப் பார்த்து விட்டோம். அடிகள் இங்கே வரமறுத்து விட்டார்" என்றார்கள் சேவகர்கள்.

"அப்படியானால் ரதத்தை ஆயத்தப்படுத்துங்கள். அவர் இருப்பிடத்திற்கு நாம் போகலாம்" என்றாள் மகாராணி.

அடுத்த சில நிமிடங்களில் ரதம் தயாராகியது. மகாராணி பணிப் பெண்களோடும், பணியாட்களோடும், வீரர்களோடும், மகாராணிக்கு உரிய பரிவாரங்களோடும், அவளது பவனிக்கு உரிய வாத்திய வகையறாக்களோடும் புறப்பட்டாள்.

அவள் என்றைக்குமே அவ்வாறு ஆர்ப்பாட்டமாகச் சென்றதில்லை.

பெரும்பாலும் ஓரிரு பணிப் பெண்களுடன் பல்லக்கில் செல்வாள்.

ஒற்றை டமாரம் மட்டும் விட்டு விட்டு ஒலிக்கும்.

அதைக் கேட்டு மக்கள் இல்லங்களிலிருந்து வெளியே வந்து நிற்பார்கள்.

பல்லக்கில் பவனி வரும் மகாராணியைப் பார்த்து கைகளை அசைப்பார்கள்.

அவள் கூப்பிய கரத்தோடு செல்வாள்.

அவ்வளவு தான்.

தற்போது நகரமே அதிரும்படி வாத்திய முழக்கங்களுக்கும் பரிவாரங்களுக்கும் இடையே ஆர்ப்பாட்டத்துடன் மகாராணி தடதடவென ஊர்வலம் சென்றதைக் கண்டு மக்கள் வியந்தார்கள்.

தங்களது கையசைப்புகளை மகாராணி கண்டும் காணாதது மாகச் சென்றதைப் பார்த்து மேலும் வியந்தார்கள்.

கருணை மயமான மகாராணிக்கு ஏதோ கோபம் போலிருக்கிறது என்று எண்ணி மக்கள் அமைதியடைந்தார்கள்.

கோட்டை முழுவதும் ராணியின் பவனியைப் பற்றியே பேச்சாக இருந்தது.

பலர் மன்னனிடம் தெரிவித்தார்கள். மன்னன் எதுவும் கூறவில்லை.

அதே சமயம் பெண்ணொருத்தி முரண்பட்டு விட்டால் எத்தனை வேகத்தைக் காட்டுவாள் என்பதை உணர்ந்து கொண்டான்.

தேரானது துவாரசமுத்திரத்தின் கடைக் கோடி பகுதிக்குச் சென்றது.

அங்கே மடு ஒன்றுக்கு அருகில் தடாகக் கரையில் இருந்த மகிழ மரமொன்றுக்குக் கீழே கலைந்து போன ஆடையைப் போலவும் மாலையைப் போலவும் அமர்ந்திருந்தார் நீலகேசி.

அவரது பக்கத்தில் குரங்கும் இல்லை. அம்பிகாபதியும் இல்லை.

அவரது கோலம் - அவர் இருந்த இடம் - அங்கிருந்த தனிமை ஆகியவற்றைக் கண்டு அதிர்ந்து போன மகாராணி ஓடோடி வந்து அவரது கால்களில் விழுந்து வணங்கியதோடு மாலை ஒன்றையும் அவரது கால்களில் வைத்து "வந்தனம் அடிகளே. இந்த எளியவளின் வணக்கத்தை ஏற்றுக் கொள்ளுங்கள்" என்றாள்.

நீலகேசி எதுவும் பேசவில்லை.

"ஏன் பேசாமல் இருக்கிறீர்கள் அடிகளே? பேசியதெல்லாம் போதும் என்று நினைத்து விட்டீர்களா? உங்கள் ஒரு

வார்த்தைக்காக ஏங்கிக் கொண்டிருக்கிறேன். பேசுங்கள் அடிகளே. தயவு கூர்ந்து பேசுங்கள்'' என்று வேண்டினாள் மகாராணி.

நீலகேசியோ உணர்வே இல்லாது போல மௌனமாகவே இருந்தார்.

“தங்களின் வேதனை எனக்குப் புரிகிறது அடிகளே. தண்டனை என்ற பெயரில் உங்களை அவமானப்படுத்தி விட்டோம். கொடுமைபடுத்தி விட்டோம். அநீதி இழைத்து விட்டோம். மன்னித்து விடுங்கள்'' என்று பணிந்து சொன்னாள் மகாராணி.

நீலகேசியோ பிரமையில் வீழ்ந்தவர் போல் இருந்தாரே தவிரப் பேசவில்லை.

“ஐயா! தாங்கள் இல்லாத நாடு எப்படி இருக்கிறது தெரியுமா? உப்பில்லாதப் பண்டமாக இருக்கிறது. சத்தில்லாத உடம்பாக இருக்கிறது. நீரில்லாத பாண்டமாகவும் நீந்தும் மீன்கள் இல்லாத பொய்கையாகவும் இருக்கிறது. ஜீவனற்று இருக்கிறது. தெம்பிழந்து கிடக்கிறது. தெளிவில்லாமல் இருக்கிறது. இங்கே இருப்பது சமண மதமா பிணமதமா என்றே தெரியவில்லை. பாழாயும் பாலைவனமாயும் உருமாறிவிட்ட கர்நாடகத்தை தாங்கள் தான் காப்பாற்ற வேண்டும்'' என்று மன்றாடினாள் ராணி.

அப்போதும் நீலகேசி வாயைத் திறக்க வில்லை.

பேசும் சக்தியை அவர் இழந்து விட்டாரோ என்று நினைத்துக் கொண்ட மகாராணி “அடிகளே! நான் இவ்வளவு பேசியும் பதில் பேசாமல் இருக்கிறீர்களே! எங்கள் மீதான கோபம் தான் காரணமா? எங்கள் மீதான வருத்தம்தான் காரணமா? மன்னிக்கப் படும் தகுதியை நான் இழந்து விட்டேனா? அடிகளே! எனது பதி - மகாராஜா தங்கள் விஷயத்தில் நடந்து கொண்ட விதம் தவறு. அதைத் தடுக்காமல் மௌனமாக இருந்து விட்டது என் தவறு. என் மௌனம் கர்நாடகத்தைப் பாழ்படுத்தி விட்டதாகவே நினைக்கிறேன். சமணர் சோலையாக இருந்த கர்நாடகம் முழுவதும் தற்போது வைஷ்ணவ லீலைகள் அரங்கேறியிருக்கிறதென்றால் அதற்கு என் மௌனமே காரணம். மகாராஜாவிடம் எதிர்ப்பு தெரிவிக்காததே காரணம். நான் உண்மையான சமண மதத்தினளாக நடந்து கொள்ளாததே காரணம். எனது உயிர் போவதானாலும் கவலைப்பட மாட்டேன். ஆனால் சமணம் சாவதற்கு இடம் கொடுக்க மாட்டேன். ஆயிரம் இராமானுஜர்கள் வந்தாலும் என்னை அசைக்க முடியாது. தற்போது நான் மகாராஜாவை எதிர்த்துக் கொண்டு விட்டேன்.

எனது பிரத்தியேக அதிகாரங்களை உபயோகப்படுத்தவும் தயாராகி விட்டேன். ச்ரவண பெலகுலாவின் ஆச்சார்ய பதவியில் நியமிக்கப் பட்டிருக்கும் நேமி நாதரை அகற்றி விட்டு அங்கே பழைய படி உங்களை அமர்த்தவும் தீர்மானித்து விட்டேன். தாங்கள் ஆச்சார்யராக அமர்ந்தால்தான் சமணத்தை உயிர்ப்பிக்க முடியும். எனவே தயவு செய்து ஆச்சார்ய பதவியில் அமர்ந்து சமணத்தைக் காப்பாற்றுங்கள்'' என்று இறைஞ்சினாள்.

நீலகேசி தனது மௌனத்தைக் கலைத்து ''ராணி! நீ எவ்வளவு வேண்டிக் கொண்டாலும் நான் பதவியில் அமர மாட்டேன். இது சத்தியம்'' என்றார் உறுதியான குரலில்.

அதிர்ந்து போனாள் ராணி.

அதே சமயம் அவர் மீதான மரியாதை அவளுக்கு அதிகரிக்கவே செய்தது.

ராணியே நேரில் வந்து பணித்து வேண்டிக் கொண்ட போதும் பதவி வேண்டாம் என்று அவர் உதாசீனப்படுத்தி உதறியது அவளை அசைத்தது.

''உண்மையில் இவரே ஆச்சார்யர். இவரே தலைவர். இவரே துறவி. இவரே சமணர். இவரால் தான் சமணம் உயரும்'' என்று தனக்குள் சொல்லிக் கொண்ட மகாராணி ''எனக்குப் பெரும் ஏமாற்றத்தைத் தந்து விட்டீர்கள் அடிகளே. அதே சமயம் தங்கள் சிறப்பையும் இதன் மூலம் உணர்த்தி விட்டீர்கள். தங்களை நினைக்கும் போது எனக்குப் பரவசமாக இருக்கிறது'' என்றாள் நெகிழ்ச்சியுடன்.

நீலகேசி எதுவும் பேசாததால் ''தங்களுக்கு நான் செய்யக் கூடியது என்ன அடிகளே?'' என்று கேட்டாள் ராணி.

''செய்ததே போதும்.''

''தாங்கள் கூறுவது?''

''நடந்தவற்றை ஞாபகப்படுத்திக் கொள்வது நல்ல விஷயமாக இருந்தால் மகிழ்ச்சியைத் தரும். கெட்ட விஷயமாக இருந்தால் இருக்கும் மகிழ்ச்சியும் போய் விடும். மறந்து விடு ராணி. மறந்து விடு.''

''அடிகளே! அடுத்த பௌர்ணமியில் வாசந்திகா தேவியின் அவதார நாள். இங்கே பெரும் விழா எடுக்க உத்தேசித்திருக்கிறேன். வாசந்திகா தேவியைக் கோழிப்பாம்பு வாகனத்தில் காண்பதற்கு தாங்கள் அவசியம் வர வேண்டும்.''

''கோழிப் பாம்பா?''

"அது தானே சுவாமி தேவியின் வாகனம்? மறந்து விட்டீர்களா?"

நீலகேசி கண்களை மூடிக் கொண்டு தியானத்தில் ஈடுபட்டார்.

ராணி அவரை வணங்கி விட்டுத் திரும்பினாள்.

ராணி அகன்ற சிறிது நேரம் கழித்து அம்பிகாபதி வந்தான். குரங்கும் வந்தது.

நீலகேசி கண் விழித்தார்.

குரங்கு கொடுத்த பழத்தையும் அம்பிகாபதி கொடுத்த பாலையும் உண்டார்.

"சுவாமி! இங்கே மகாராணி வந்தாராமே! எதற்கு?" என்று கேட்டான் அம்பிகாபதி.

"நான் இழந்த பதவியை மீண்டும் தருவதாகச் சொன்னாள். மறுத்து விட்டேன்."

"ஏன் சுவாமி?"

"அம்பிகாபதி! இழந்து விட்ட பதவியை மீண்டும் பெறுவதென்பது இழந்து விட்ட கௌரவத்தை மீட்பதாக ஆகாது. இழக்காமல் இருக்கும் அமைதியை இழப்பதாகவே இருக்கும். பதவி என்பது கொஞ்ச காலத்து கௌரவமாய் இருக்கும் வரை நிறைவானதாக இருக்கும். மீண்டும் மீண்டும் தொடர்ந்தால் கறைபடியக் கூடியதாக ஆகி விடும்" என்றார் நீலகேசி.

"அழகாகச் சொன்னீர்கள் சுவாமி. ஆனால் அகிலத்தோர் யார் உணர்கிறார்கள்?"

"நாம் அதற்காக கவலைப்பட்டுக்கொண்டிருக்க முடியாது. நாளை நாம் குடுமபுரத்திற்குச் செல்கிறோம். ஆயத்தமாக இரு" என்றார் நீலகேசி.



அரண்மனைக்குச் சென்ற ராணி வருத்தத்தோடு இருந்தாள். மீண்டும் உண்ணாவிரதத்தைத் தொடக்கி விடுவாளோ என்று பணிப்பெண்களுக்கு பயம் வந்து விட்டது. மன்னனிடம் சொன்னார்கள்.

மன்னன் வந்தான்.

"வருந்தாதே சாந்தலை. பஞ்சப் பிரதானிகளிடம் நான் பேசி விட்டேன். ச்ரவண பெலகுலாவின் தலைவர் நேமி நாதரை நீக்கிவிட்டு நீலகேசியை அமர்த்த ஒப்புக் கொண்டு விட்டார்கள்" என்றான்

"நாம் வருந்த வேண்டியதில்லை மகாராஜா. வெட்கப்பட வேண்டும்."

"ஏன்?"

"பஞ்சப் பிரதானிகள் என்ன பஞ்சபாண்டவர்களே வந்து வேண்டிக் கொண்டாலும் அடிகளைப் பதவியில் அமர்த்த முடியாது."

"அது தான் ஏன்?"

"பதவியில் அமர மாட்டேன் என்று சத்தியம் செய்து விட்டார்."

"இதில் நாம் வெட்கப்பட என்ன இருக்கிறது?"

"நாம் பதவிகளைத் தேடிக் கொண்டு அலைகிறோம். பதவி தன்னைத் தேடி வந்தாலும் வேண்டாம் என்கிறார் அடிகள். இது நாம் வெட்கப்பட வேண்டிய விஷயமல்லவா?"

"நீலகேசி ஏற்கனவே பதவியில் இருந்தவர். அதோடு சமணரே அல்லாத வெற்று மனிதரை பிரதான ஆச்சார்யராக நியமித்தவர். பதவியில் இருந்த போது அதை உதறுவதற்கு அவருக்கு மனம் வரவில்லையே!. அவரும் நம்மைப் போன்றவர்தான். யாரும் வெட்கப்பட வேண்டியதில்லை."

ராணி சிறிது நேரம் வரை மௌனமாக இருந்தாள்.

"பிறகு வரும் பௌர்ணமியன்றி என் குல தெய்வம் வாசந்திகா தேவியின் அவதார நாள். அன்று ஆதிநாதர் விஹாரத்தில் விழா எடுக்கத் தீர்மானித்திருக்கிறேன். தேவியைக் கோழிப் பாம்பு வாகனத்தில் வைத்து ஊர்வலம் செல்ல வேண்டும். அதைச் செய்வீர்களா?" என்று கேட்டாள்.

"நான் சமண மதத்திற்கு எதிரியாகி விடவில்லை. எல்லா மதத்து விழாக்களுக்கும் அரசு ஏற்பாடு செய்யும். வாசந்திகா தேவி விழாவை முன்பை விடச் சிறப்பாக நடக்க ஏற்பாடு செய்கிறேன்" என்றான் மன்னன்.

"விழாவிற்கு நீலகேசி அடிகளை அழைத்திருக்கிறேன். அவர் விழாவில் கலந்து கொள்ளலாமல்லவா?"

"நீலகேசியை நாடு கடத்தி விட வில்லை நான். அவருக்கு இந்த அரசு தடையும் விதிக்கவில்லை. விழாவில் கலந்து கொள்ள எல்லோருக்கும் உரிமை உண்டு."

"ஊரெங்கும் அதற்கான அறிவிப்புகளைச் செய்யுங்கள்."



ராணியின் சந்திப்புக்கு மறுநாள் நீலகேசி குடும்புரத்திற்குப்* புறப்பட்டார்.

துவாரசமுத்திரத்திற்கு மேற்கில் அடர்ந்த காடுகளுக்கும் மலைகளுக்கும் இடையில் இருந்தது குடும்புரம்.

ஒழுங்கான பாதை இல்லை. சில இடங்களில் ஒற்றையடிப் பாதை இருந்தது. சில இடங்களில் அதுவுமில்லை. நீலகேசி நடப்பதற்குச் சிரமப்படவே பல சமயங்களில் அவரைத் தோளில் சுமந்து கொண்டு பயணம் செய்தான். அம்பிகாபதி

பயணமானது குரங்கிற்குத்தான் ஆனந்தமாக இருந்தது.

மரங்களில் தாவியும் குதித்துமாகப் பயணம் செய்தது. நீலகேசிக்கும் அம்பிகாபதிக்கும் தேவையான பழங்களையும் கீரைகளையும் கொண்டு வந்து கொடுத்தது. நீலகேசி ஒரு பழத்திற்கு பதிலாக இரண்டு பழங்களை உண்டார். அம்பிகாபதி கீரைகளைப் பொசுக்கி உண்டான்.

ஆங்காங்கே காட்டாறுகளுக்கு பக்கத்தில் ஓய்வெடுத்துக் கொண்டார்கள்.

தன்னை அம்பிகாபதி தோளில் சுமந்து சென்றதைக் கண்டு நெகிழ்ந்து போன நீலகேசி "என் தோளின் மீது வந்தவர்கள் எனது கால்களை வாரி விட்ட நிலையில் என்னால் எந்த பயனும் அடையாத நீ என்னைத் தோளில் சுமந்து வருகிறாய். இதற்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்?" என்று கேட்டார்.

"ஐயா! துறவியைச் சுமப்பது புண்ணியமல்லவா? அதற்கு கைம்மாறு எதற்கு? அதோடு யட்சிணி அம்பிகா தேவி என்னைப் பரோபாரம் செய்யும் படி பணித்திருக்கிறாள். அதைத் தான் நான் செய்து கொண்டிருக்கிறேன்" என்று சொன்ன அம்பிகாபதி "இந்தக் காடு மலைகளிலெல்லாம் பயணப்பட்டு எங்கே போகப் போகிறீர்கள் சுவாமி?" என்று கேட்டான்.

"அம்பிகாபதி! நீ என்ன மதம்?"

"சம்மதம்."

"சம்மதமா? அப்படியொரு மதமா?"

"நான் கூறியது எம்மதமும் சம்மதம் என்ற பொருளில் தான் சுவாமி"

"யட்சிணி அம்பிகா தேவியின் கட்டளைப்படி நடக்கும் நீ சமணன் தானே?"

---

* இது தற்போது தர்மஸ்தாா என்று அழைக்கப்படுகிறது.

“இல்லை சுவாமி. யட்சிணி அம்பிகா தேவியை நான் வணங்குவது உண்மை. அவள் எனக்கு உத்திரவிட்டதும் உண்மை. ஆனால் நான் சமணன் அல்ல. நான் எந்த மதம் என்பது எனக்கே தெரியாது. மதத்தைச் சொல்ல எனக்குத் தாய் தந்தையர் இல்லை. இன்று வரை அனாதையாக வாழ்ந்தவன் நான். ஒரு கட்டத்தில் இங்கே பல மதங்கள் இருப்பதைக் கண்டேன். அவற்றிலிருந்து ஒன்றைத் தேர்ந்தெடுக்க என் மனம் விரும்பவில்லை. எல்லா மதங்களையும் விரும்பினேன். ஆகவே தான் எம்மதமும் சம்மதம் என்றேன்.”

“தவறு அம்பிகாபதி. மனிதனின் முடிவான நிலை என்று ஒன்றிருக்கிறது. அதை ஒரு ஊர் என்று வைத்துக் கொண்டால் அந்த ஊரைப் போய் சேர்வதற்கான வழிகளைப் போன்றவை இந்த மதங்கள். வழிகள் பல இருந்தாலும் போக வேண்டிய ஊருக்கு நீ ஏதாவது ஒரு வழியில் தான் பயணம் செய்ய வேண்டும். எல்லாவழியும் எனக்கு வழிதான் என்றால் எந்த வழியிலும் போகமுடியாது. ஊரை அடைய முடியாது. எம்மதமும் சம்மதம் என்பது உளறல். அதை விட்டு விடு. யட்சிணி அம்பிகா தேவி அருள் பெற்ற நீ சமண மதத்தினனாக இரு. உன் பயணம் சமண மதமாக இருக்கட்டும். அப்போது தான் குழப்பம் இருக்காது.”

“அப்படியே ஆகட்டும் சுவாமி. வழிகாட்டுவோர் இல்லாத தால் தான் அப்படியொரு நிலையை எடுத்தேன். தற்போது தெளிவு பிறந்து விட்டது.”

“அம்பிகாபதி! மதம் என்பது தாய் மாதிரி. தாய் தன் மக்களுக்குத் தவறான வழியைக் காட்டுவாளா? மாட்டாள். மதத்தையும் தாயாக நீ கருதினால் அது காட்டும் வழி சரியாக இருக்கும். சிலர் மதம் மாறுகிறார்கள். மதம் மாறுவது என்பது தாயை மாற்றுவது போன்றது. ஒரு மனிதன் எதை வேண்டு மானாலும் மாற்றிக் கொள்ளலாம். தாயை மாற்றிக் கொள்ள முடியுமா? அப்படி மாற்றிக் கொண்டால் அவன் தரமற்றவன் அல்லவா? ஆகவே நீ சமணனாக இரு. சமணனாக வாழு. சமணனாக உயிரைப் போக்கு.”

“நான் கேட்ட கேள்விக்குத் தாங்கள் பதில் சொல்ல வில்லையே சுவாமி?”

“எங்கே செல்வதாகக் கேட்டாய். அம்பிகாவதி! மதத்தைத் தாய் என்று சொன்னேன். அந்தத் தாயை அழிக்க நினைப்பவனை பார்த்துக் கொண்டு மகன் சும்மா இருக்க முடியுமா? அவனது தீய முயற்சியைத் தடுக்க வேண்டாமா? அதற்கான பலமான

ஆயுதம் குடுமபுரத்தில் இருக்கிறது. அதைத் தேடித் தான் சென்று கொண்டிருக்கிறேன்."

"தங்கள் மதத்திற்கு ஊறு விளைவிப்பவர்கள் யார்?"

"அதை நீ விரைவில் தெரிந்து கொள்வாய்" என்றார் நீலகேசி.

இரண்டு நாட்களுக்குப் பிறகு குடுமபுரத்தை அடைந்தார்.

அது குக்கிராமமாகக் கூட இல்லை. மக்கள் யாரும் வசிப்பதாகவும் தெரியவில்லை.

குள்ள நரிகள் கூட்டம் கூட்டமாக நடமாடிக் கொண்டிருந்தன.

காட்டுப் பறவைகளும் பேய்ப் பறவைகளும் இரைந்து கொண்டு பறந்து கொண்டும் இருந்தன.

அடர்ந்த வனப்பகுதியில் சற்றே உயரமான இடத்தில் குடில்கள் சில தெரிந்தன.

அவற்றை நோக்கிச் சென்றார் நீலகேசி.

குடில்களில் பிரதானமாகவும் பெரியதாகவும் இருந்த ஒன்றில் நுழைந்த நீலகேசி அங்கே யாரும் இல்லாததை உணர்ந்ததும் அங்கிருந்த மணியொன்றை எடுத்து ஆட்டினார்.

ஏதேதோ அமானுஷ்ய குரல்கள் கேட்டன.

நீலகேசி மீண்டும் மணியை ஒலித்தார்.

அதையடுத்து ஆந்தையொன்று வந்து அவருக்கு முன்னால் அமர்ந்தது.

அதையடுத்து காட்டு மிராண்டியைப் போன்ற ஒரு மனிதன் வந்தான்.





பெண்களிடம் தான் எல்லாம் என்ற நினைப்பு இருக்கும் போது பெண்களே கதி என்று இருப்பதும் பெண்களை விடப் பெரிய விஷயங்கள் இருக்கின்றன என்று தெளியும் போது பெண்களைச் சகதி என்று நினைப்பதும் சகஜம் தான் – நீலகேசி



காட்டு மிரண்டியின் கோர சொரூபத்தைக் கண்டு நீலகேசி அஞ்சவில்லை. அம்பிகாபதி மட்டும் சற்றுச் சலனப்பட்டு நின்றான்.

அக்காட்டு மிராண்டி மனிதன் நீலகேசியைப் பார்த்து விட்டு "யார் நீ? என் அனுமதியில்லாமல் எப்படி இங்கே வந்தாய்?" என்று இடிபோன்ற குரலில் கேட்டான்.

"சாமுண்டி! உனக்கே என்னை அடையாளம் தெரியவில்லை என்றால் என்னை நான் மெச்சிக் கொள்ள வேண்டியது தான்" என்றார் நீலகேசி.

"யார்? நீலகேசி அடிகளா? நீங்கள் தானா? மலை எப்படி மடுவாயிற்று? நம்ப முடியவில்லையே!" என்றான் காட்டு மிராண்டியாக இருந்த சாமுண்டி.

"வானத்தை மேகம் மறைக்கும் போது வானத்தின் நிறம் கறுப்பாக இருக்கும். அதற்காக வானத்தின் நிறம் கறுப்பு என்று சொல்ல முடியுமா? நானும் அப்படித்தான் சாமுண்டி. மலையாக இருந்தாலும் மடுவாக இருந்தாலும் நீலகேசி நீலகேசி தான். நீலகேசியின் சீலம் ஞாலத்தை விடப் பெரியது. நீல வானத்தைப் போல் எல்லையற்றது" என்றார் நீலகேசி.

"மலை எப்படி மடுவானது அடிகளே?" என்று வியப்புடன் கேட்டான் சாமுண்டி.

"இருக்கும் கல்லுக்குப் பக்கத்தில் பெரிய கல் வந்து விட்டால் இது சிறியதாகி விடும். அப்படித்தான் இது."

"பெரிய கல் என்று நீங்கள் எதைக் குறிப்பிடுகிறீர்கள்?"

'இப்போதைக்கு அதை விதி என்று வைத்துக் கொள். நான் மிகவும் நொந்து போய் வந்திருக்கிறேன். வெந்து போய் வந்திருக்கிறேன். சிறையிலிருந்து வந்திருக்கிறேன். பழையதைக் கிளறினால் வேகிறது. வியர்க்கிறது. வெடிக்கிறது."

"உங்களைச் சிறையில் போடக் கூடியவனும் இருக்கிறானா அடிகளே?"

"துறவிகளைப் பொறுத்தவரை சிறை என்பது இல்லை. அவர்களுக்குச் சிறையும் ஒரு அறை தான். நான் எதிர்ப்பு காட்டியிருந்தால் - என் எழுச்சியைக் காட்டியிருந்தால் என்னைச் சிறைப்படுத்த முயன்றவன் தான் சிறையில் இருந்திருப்பான். சாமுண்டி! வாளுக்கு உறையில் இருக்க வேண்டிய காலம் ஒன்றுண்டு. எனக்கும் ஓய்வு தேவைப்பட்டது. அதற்குச் சிறையை விட நிறைவானதோர் இடம் இருக்க முடியுமா?"

"ஆனாலும் மிகவும் இளைத்து விட்டீர்களே?"

"இதுவும் எனக்குத் தேவையான ஒன்றுதான். நான் சிறை பட்ட போது உறையில் உறங்கிய வாட்களைப் போல் இருந்த மக்கள் எனது இந்த இளைத்த தோற்றம் கண்டு அனுதாபப்படுகிறார்கள். பரிவு காட்டுகிறார்கள். மரியாதை காட்டுகிறார்கள். என்னைப் புதிய பிறவியாக நினைக்கிறார்கள். புனிதம் பெற்றவராக எண்ணுகிறார்கள். நான் உணவைக் குறைத்து இரண்டு ஆண்டுகளுக்கு மேலாகி விட்டது. எனக்கு உடல் நலக் குறைவு இல்லை. உடலில் பலவீனமில்லை. மனம் தான் கசங்கிப் போய் கண்ணீர் வடிக்கிறது. என்ன தான் உறுதியானவன் நான் இருந்தாலும் எதிர்பாராத நிகழ்ச்சிகள் சதிராட்டம் போட்டதினால் பதிலாட்டம் போட முடியாமல் பொன்றிப் போய் இருக்கிறேன். மனநலம் குன்றிப் போய் இருக்கிறேன். சந்தோஷமானது இன்றிப் போய் இருக்கிறேன். நன்று என்று வருமோ என்பது தெரியாமல் நலிந்து கிடக்கிறேன்."

நீலகேசி புலம்பி சாமுண்டி கேட்டதில்லையாதலால் தற்போது அவர் புலம்பிய போது வியந்து போனான்.

நீலகேசியுடன் இருந்த குளுகுளு நாட்களை எண்ணிக் கொண்டான் சாமுண்டி.

"ஆகா! துறவியாக இருந்தாலும் எதையும் துறக்காமல் வாழ்ந்தவரல்லவா நீலகேசி! துறப்பதற்காக எதுவும் படைக்கப்படவில்லை. துய்ப்பதற்காகத்தான் படைக்கப் பட்டிருக்கின்றன. துய்க்க வேண்டிய காலத்தில் துறந்து நின்றால் வயது நகருவது போல சுகங்களும் நகருமே தவிர மீண்டும் வராது என்று புது இலக்கணம் சொல்லி சுகவாழ்வு வாழ்ந்தவரல்லவா நீலகேசி. பெண் வாடையே கூடாது என்பதை மாற்றி பெண்வாடை இல்லாத இடமே கூடாது என்று சொல்லி அவரும் நானுமாக எவ்வளவு பெண்களை அனுபவித்திருப்போம்! அந்த காலம் தவம் செய்தாலும் வராதல்லவா? தானும் மகிழ்ந்து

என்னையும் மகிழ்வித்தவருக்கா இந்த கதி?" என்று வருந்திய சாமுண்டி "இப்போது ஓய்வெடுங்கள் அடிகளே. இரண்டு நாட்களுக்குப் பிறகு பேசுவோம்" என்றான்.

நீலகேசி அம்பிகாபதியை அறிமுகப்படுத்தி "இவன் சுமை தாங்கி. மலைகளிலும் காடுகளிலும் என்னைச் சுமந்து வந்தவன். பாவங்களைக் கூடச் சுமந்து வரலாம். என்னைச் சுமந்து வர முடியாது. ஆனால் இவன் சுமந்தான். கூலிக்குச் சுமக்க வில்லை. பரோபகாரமாகச் செய்கிறான். இவனைப் போன்றவர்கள் லோகத்தில் யாரும் இருக்க முடியாது. என்னோடு சேர்ந்ததிலிருந்து சரியாக உண்ண வில்லை. உறங்கவில்லை. ஆகவே அவனது உணவுக்கும் உறக்கத்திற்கும் ஏற்பாடுகளைச் செய். அவன் இல்லாதிருந்தால் நானிங்கே வந்திருக்க முடியாது" என்றார்.

"இந்தக் குரங்கு எப்படி வந்தது சுவாமி?"

"சாமுண்டி! மனிதனைக் குரங்கு மனம் கொண்டவன் என்று இகழ்வார்கள். ஆனால் இக்குரங்கை அப்படி இகழ முடியாது. இது மனிதனை விட உயர்ந்தது. சிறையில் இருந்த நாள் முதலாக என்னுடனேயே இருந்து வருகிறது. இது தரும் பழங்கள் தான் எனக்கு இரண்டு வருடகாலமாக உணவாக இருக்கிறது" என்றார் நீலகேசி.

அந்த இரண்டு நாள் ஓய்வின் போது "காட்டில் பெண்கள் இருக்கிறார்கள் அடிகளே. கறுப்பாக இருந்தாலும் கட்டழகாக இருப்பார்கள். காட்டருவி போல் திளைப்பார்கள். கட்டி வெல்லம் போல் இனிப்பார்கள். அழைக்கட்டுமா?" என்று கேட்டான் சாமுண்டி.

"வேண்டாம் சாமுண்டி. எனது லட்சியம் நிறைவேற வேண்டும். இதற்கிடையில் நான் இழந்தச் சுகங்கள் எதுவும் வேண்டாம்" என்றார் நீலகேசி.

"நினைத்த போதெல்லாம் பெண் என்றிருந்த நீங்கள் பெண்கள் இல்லாமல் எப்படி இருக்கிறீர்கள்?"

"பெண்களிடம்தான் எல்லாம் என்ற நினைப்பு இருக்கும் போது பெண்களே கதி என்று இருப்பதும் பெண்களை விடப் பெரிய விஷயங்கள் இருக்கின்றன என்று தெளியும் போது பெண்களைச் சகதி என்று நினைப்பதும் சகஜம் தான்" என்றார் நீலகேசி.

இரண்டு நாட்கள் இயற்கையான சூழ்நிலையில் ஆழ்ந்து உறங்கினாலும் உணவு விஷயத்தில் அளவோடு இருந்தார்.

அம்பிகாபதியோ அவரைச் சுமக்கும் பலத்தைப் பெறும் வகையில் நன்றாக உண்டு உறங்கினான்.

மூன்றாம் நாள் "உனது படையைப் பார்க்க வேண்டும். வா" என்றார் நீலகேசி.

அம்பிகாபதியும் உடன் சென்றான்.

குடில்களுக்குப் பின்னால் கம்பிகள் பதிக்கப்பட்ட பெரிய அறையொன்றைக் காட்டி "இதோ என் படை. மொத்தம் பத்து" என்றார் சாமுண்டி.

படையைக் கண்ட நீலகேசிக்கு மகிழ்ச்சியாக இருந்தது.

அம்பிகாபதிக்கோ வியப்பாக இருந்தது.

"இதுவா படை? இது என்ன விலங்கு? விநோதமாக இருக்கிறதே?" என்று கேட்டான்.

"இதற்குக் கோழிப் பாம்பு என்று பெயர். இதன் தலை பாம்பு போல இருக்கும். உடம்பு கோழி போல இருக்கும். ஆகவே இதற்குக் கோழிப்பாம்பு என்றும் குட சர்ப்பம் என்றும் பெயர். ஆதியில் ச்ரவணபெலகுலாவில் பாகுபலி சிலையைச் சுற்றி இவை நடமாடிக் கொண்டிருந்தன* என்றார் நீலகேசி.

"இவற்றை நான் ச்ரவணபெலகுலாவில் பார்த்ததில்லையே?" என்றான் அம்பிகாபதி.

"அம்பிகாபதி! இது கோழியின் உருவத்தில் இருப்பதால் கோழியைப் போல பறக்கும். பாம்பின் தலை இருப்பதால் அதில் விஷம் இருக்கும். யாரையாவது கொத்தினால் அவர்கள் உடலில் விஷம் பாய்ந்து இறந்து போவார்கள். இவை சாபப் பறவைகள். முன்னொரு காலத்தில் சத்திய கோடன் என்ற அமைச்சன் பெரும் செல்வத்தை அடைந்தவுடன் செருக்குற்று தீய வழிகளில் நடந்து கொண்டு மக்களுக்குத் தீமைகளைச் செய்து வந்ததால் அடுத்தடுத்த பிறவிகளில் கோழிப் பாம்பாக பிறப்பெடுக்கும் படிச் சபிக்கப்பட்டான்** அவன் ச்ரவண பெலகுலாவில் கோழிப் பாம்பாகப் பிறந்து கோழிகளைப் புணர்ந்து இனத்தைப்பெருக்கி அங்கே வசித்து வந்தான். பாகுபலியை தரிசிக்க முடியாமல்

---

* பக்கம் 228. தமிழுக்கு வழங்கிய கொடை II - By மயிலை. சீனி. வேங்கடசாமி.

கர்நாடக மாநிலத்தில் ச்ரவண பெலகுலாவில் இந்திரகிரி மலையில் உள்ள பாகுபலி சிலைக்கருகில் சிறு பாறையொன்றில் கோழிப் பாம்பின் உருவம் செதுக்கப்பட்டுள்ளது.

** கொற்றவேல் குமர நீயிப் பிறவியைக் குறுக வஞ்சிற்
செற்றமும் பற்றும் நீங்கித் திருவறம் புணர்க என்றாள்
பற்றினால் பூதிப் பாம்பாய் சமரமாய்க் கோழிப் பாம்பாய்ச்
செற்றத்தால் தீயில் வெம்பு நரகத்தைச் செறிந்து நின்றான்.

மேரு மந்தார புராணம். நால்வரும் சுவர்க்கம் புக்க சருக்கம், ஈடல் எண் 590.



இந்தக் கோழிப் பாம்புகள் இடையூறு செய்து வந்ததால் மக்கள் அவற்றைத் தாக்கி அழிக்கலானார்கள். அவர்களில் ஒன்றிரண்டு தப்பி காடுகளில் வசித்தன. அப்படி வசித்த கோழிப் பாம்புகளில் சிலவற்றைச் சமீபத்தில் பிடித்தான் சாமுண்டி. அன்போடு வளர்த்தான். பழக்கினான். யாரையாவது குறிப்பிட்டு அவர் மீது ஏவினால் இந்தக் கோழிப் பாம்பானது இமைக்கும் நேரத்தில் அவரைக் கொத்தி விட்டு அகன்று விடும். கொத்தப் பட்டவர் சாக வேண்டியது தான். இவற்றின் எண்ணிக்கை பத்து என்பது குறைவாக இருக்கலாம். ஆனால் பத்தும் ஆபத்து" என்றார் நீலகேசி.

பிறகு சாமுண்டியைப் பார்த்து "சாமுண்டி! உனது படையின் உதவி எனக்கிப்போது தேவை" என்றார்.

"தங்களுக்கு உதவாமல் யாருக்கு உதவப் போகிறேன்?" என்ற சாமுண்டி "தங்கள் வலி தான் என்ன?" என்று கேட்டான்.

அவன் அப்படிக் கேட்டதும் அவனைப் பிடித்துத் தள்ளினார் நீலகேசி.

கீழே விழுந்த அவன் 'ஹா' என்று குரலெழுப்பிய வண்ணம் எழுந்து கொண்டு "என்ன அடிகளே இப்படித் தள்ளி விட்டீர்கள்? ஒரே வலி" என்றான்.

"தரையில் விழுந்ததற்கே உனக்கு இவ்வளவு வலி என்றால் மலையிலிருந்து விழுந்த எனக்கு எவ்வளவு வலி இருக்கும்?"

"ஆகா! இதை நன்றாகத்தான் புரியவைத்திருக்கிறீர்கள் அடிகளே. என்ன தான் ஆயிற்று?"

"உச்சாணிக் கொம்பில் இருந்த என்னை பீய்த்து சின்னாப்பின்னமாக்கி விட்டான் மன்னன் பிட்டிதேவன்."

"ஹொய்சள மன்னரையா சொல்கிறீர்கள்?"

"வேறு யார்? அவனைத்தான். என் புகழைச் சாய்த்து செல்வாக்கைச் சாய்த்து, நான் சேர்த்த செல்வங்களைச் சாய்த்து என்னைக் குற்றவாளி என்று சொல்லி சிறையில் ஐந்தாண்டு களுக்கு வைத்து விட்டான் சாமுண்டி. ச்ரவண பெலகுலாவின் தலைவன் மட்டுமல்ல. மகாராஜாவின் குருவாகவும் இருந்தவன்

நான். அப்படியிருந்த என்னைச் சிறையில் தள்ளி உருக்குலைத்து விட்டான் அந்தப் பாவி. இந்த வேதனை எப்படிப் பட்டது என்பதை எப்படி விவரிக்கச் சொல்கிறாய்? என்னென்று சொல்லுவேன்? எப்படிச் சொல்லுவேன்? அவனை எப்படி வெல்லுவேன்? கொல்லுவேன்? சொல் சாமுண்டி.

கர்நாடகத்தில் திரும்பும் இடமெல்லாம் சமணம் என்னும் சுகந்தம் வீசிக் கொண்டிருந்தது. சமணம் என்றால் நான் நான் என்றால் சமணம் என்றிருந்த நாடு ஐந்தாண்டுகளில் மறந்தே விட்டது. நான் மட்டும் உயிரோடு இல்லாமல் போயிருந்தால் மறைந்தே போயிருக்கும். மறைந்து மண்ணோடு மண்ணாகி விடக் கூடாது என்பதற்காகத் தான் அருகக் கடவுள் என்னை உயிரோடு வைத்திருக்கிறான் போலிருக்கிறது. கரைந்து போன என் செல்வாக்கை மீட்பதற்காகக் கடந்த இரண்டாண்டுகளாக உடம்பை எலும்பும் தோலுமாக்கி, மௌன விரதத்தைக் கடைப்பிடித்து ஓரளவிற்கு மீட்டிருக்கிறேன். சமணர்களும் சமணத் துறவிகளும் என் மீதிருந்த கசப்பை நீக்கிக் கொண்டு அனுதாபமும் மரியாதையும் காட்டி வருகிறார்கள். எனக்குப் பதவியைத் தர வந்த ராணியிடமும் நான் பதவி வேண்டாம் என்று சொல்லி மறுத்து விட்டேன். ராணி மட்டும் தான் என் பக்கம் இருக்கிறாள். ஆட்சியில் இருக்கும் ஓர் ஆணி கூட என்னை ஆதரிக்க வில்லை. நான் பெரிதும் நம்பியிருந்தச் சூளாமணியும் சூடாமணியும் எனக்குத் துரோகம் செய்து விட்டார்கள்."

"நான் என்ன செய்ய வேண்டும் அடிகளே?"

"வாசந்திகா தேவியின் விழாவைக் கொண்டாட வேண்டும் என்றும் யட்சிணியை அவளது கோழிப் பாம்பு வாகனத்தில் வைத்து ஊர்வலம் நடத்த வேண்டும் என்றும் சொன்னாள் ராணி. அப்போது தான் உன்னையும் உன் கோழிப் பாம்புகளையும் நினைத்துக் கொண்டேன். அவற்றை வைத்து அனைவருக்கும் ஒரு முடிவு கட்டுவது என்று தீர்மானித்தேன்."

"புரிந்து விட்டது அடிகளே. இப்போது நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டான் சாமுண்டி.

நீலகேசி அம்பிகாபதியைப் பார்த்து "நீ சற்று அப்பால் இரு அம்பிகாபதி. பேசிய பின் கூப்பிடுகிறேன்" என்றார்.

அம்பிகாபதி வெளியே சென்றதும் "திட்டம் மிகவும் ரகசியமாக இருக்க வேண்டும் சாமுண்டி. அதனால் தான் உத்தமனான அம்பிகாபதியைக் கூட வெளியே அனுப்பி விட்டேன்" என்று பீடிகையைப் போட்ட நீலகேசி "வாசந்திகா தேவியின் விழாவன்று மகாராஜா, ராணி, இளவரசன், சேனாதிபதி

ஆகியோர் சாக வேண்டும். அவர்கள் மீது கோழிப் பாம்பை ஏவி விட வேண்டும்" என்றான்.

"ராணி தான் உங்களை ஆதரிப்பதாகச் சொன்னீர்களே! அவளை ஏன் அழிக்க வேண்டும்?"

"மகாராஜாவை அழித்து விட்டால் அவள் கவலையில் ஆழ்ந்து விடுவாள். முடங்கி விடுவாள். என்னைச் சந்தேகிப்பாள். எனக்கு எதிராக எதை வேண்டுமானாலும் செய்வாள். ஆகவே அவளையும் தீர்த்துக் கட்டிவிட வேண்டும்."

"விழாவின் போது கூட்டம் இருக்கும். பாதுகாப்பு இருக்கும். அந்த நேரத்தில் ராஜ பிரமுகர்கள் மீது கோழிப் பாம்பை எப்படி ஏவி விடமுடியும்?"

"பிற சமயங்களில் ராணியைத் தவிர இதர பிரமுகர்களை அண்ட முடியாது. அதுவும் கோழிப் பாம்புடன் அலைய முடியாது. வாசந்திகா தேவியின் விழா நேரம் தான் சரியான நேரம். அந்த விழாவின் நடைமுறைகளைப் பற்றி நான் அறிவேன். வாசந்திகா தேவி கோழிப் பாம்பு வாகனத்தில் நகர்வலம் வந்தபின் துவாரசமுத்திர விஹார வளாகத்தில் வாகனத்தோடு அமர்த்தப்படுவாள். அப்போது மகாராஜா, ராணி, இளவரசன், சேனாதிபதி ஆகியோர் தத்தம் நலம் வேண்டி தேவிக்குத் தனியாக ஆரத்தி எடுப்பார்கள். துறவிகள் பெரும் பூக்குடலைகளுக்குள்ளிருந்து பூக்களை வாரி தேவி மீது விசுவார்கள். மக்களில் சிலரும் அவ்வாறு வீசுவார்கள். நீங்களும் வீசுங்கள்."

"பூக்களையா?"

'ஆமாம். உங்களிடம் பூக்குடலைகளில் பூ மேலே இருக்கும். கோழிப் பாம்பு கீழே இருக்கும். பூவை வீசுவது போல் வீசிவிட்டு உள்ளே இருக்கும் கோழிப் பாம்புகளை நான் சொன்ன நால்வர் மீது ஏவினால் அவர்கள் முடிந்து விடுவார்கள்."

"நாங்கள் எப்படி விஹாரத்திற்குள் செல்ல முடியும்?"

"உங்களது காபாலிகர்கள் சங்கம் துவார சமுத்திரத்தில் தானே இருக்கிறது? அவர்களுடன் சேர்ந்து கொண்டு காபாலி கர்களாக விஹாரத்திற்குள் வாருங்கள். விழாவின் போது எல்லா மதத்தினரும் வரலாம். பூச் சொரியலாம். புரிகிறதா?"

"புரிகிறது!"

"விழாக் காலங்களில் விஹாரத்திற்குள் மக்கள் தான் இருப்பார்கள். பாதுகாப்பு வீரர்கள் அதிகமாக இருக்க

மாட்டார்கள். உங்களில் பத்து பேர் பூக்கூடைகளில் பத்துக் கோழிப் பாம்புகளை எடுத்துச் செல்லுங்கள். நான்கு கோழிப் பாம்புகளை நான் சொன்ன நால்வர் மீது எறியுங்கள். மீதியுள்ள ஆறு கோழிப் பாம்புகளை அங்கிருக்கும் மக்கள் மீது ஏவுங்கள்."

"மக்கள் மீது எதற்கு?"

"மக்களும் கொஞ்சம் சாகட்டும். அப்போது தான் சந்தேகம் வராது.கோழிப் பாம்புகளால் பலர் செத்து குழப்பம் உண்டாகும். அதைப் பயன்படுத்திக் கொண்டு நீங்கள் தப்பி விடுங்கள்."

"விழாவிற்கு நீங்கள் வருவீர்களா?"

"நான் வர மாட்டேன். நான் இல்லாததை எல்லோரும் உணர்வது தான் நல்லது. அதே சமயம் நான் மாறு வேடத்தில் எல்லாவற்றையும் கண்காணிப்பேன்."

"அடிகளே! நீங்கள் கூறும் திட்டப்படி ராஜப் பிரமுகர்களை நான் அழித்து விடுகிறேன். அதனால் உங்களுக்கென்ன நன்மை?"

"சாமுண்டி! எனது எதிரிகளான நால்வரும் அழிந்தால் எனக்கான எதிர்ப்பு அகன்றுவிடும். அதிகார மையத்தில் குழப்பம் ஏற்படும். அப்போது நான் தலையைக் காட்டுவேன். என்மீது மரியாதையும் அனுதாபமும் கொண்ட மக்கள் என்னிடம் முறையிடுவார்கள். நான் எல்லோரையும் சமாதானப் படுத்துவேன். அவர்களது ஆதரவைத் திரட்டுவேன். முடிந்தால் அரியணையிலேயே அமர்வேன். சந்தேகமே வேண்டாம். நிச்சயமாக அமர்வேன். அரசனாவேன். அரசனாகி விட்டால் சமணத்தின் நிலை தானாகவே உயரும். இதர மதங்களை விரட்டியடித்து விட்டுச் சமணமே செங்கோலோச்சும் படிச் செய்வேன்."

"நல்லது அடிகளே. உங்கள் முயற்சி வெற்றிபெறும். உங்களை அவமானப்படுத்தியவர்களை இப்படி பழிவாங்குவதே சரி. உங்கள் சந்தோஷங்களைக் கெடுத்தவர்களுக்கு இந்தச் சோகமும் நஷ்டமும் தான் பரிகாரமாக இருக்கும்."

"பௌர்ணமிக்கு இருபது நாட்கள் இருக்கின்றன. நாளைக்கு நான் புறப்படுகிறேன். ஐந்தாறு நாட்கள் கழித்து நீ பூக்குடலைகளில் கோழிப் பாம்புகளை மறைத்து பார வண்டியில் ஏற்றிக் கொண்டு துவாரசமுத்திரத்திற்கு வந்து அங்கிருக்கும் காபாலிகர் சங்கத்தினரோடு தங்கி இரு. நடப்புகளை கவனி. பௌர்ணமியன்று ஊர்வலம் முடியும் நேரத்தில் நீ விஹாரத்திற்கு வந்து விடு. உனக்கு உதவியாக அம்பிகாவதி வருவான்" என்று

சொல்லி பேச்சை முடித்துக் கொண்ட நீலகேசி மறுநாள் புறப்பட்டார்.

"உங்களை துவாரசமுத்திரத்தில் விட்டு விட்டு நான் பிரியலாமா சுவாமி?" என்று கேட்டான் அம்பிகாபதி.

"ஏன் அம்பிகாபதி? என்னோடு இருப்பதற்குக் கசந்து விட்டதா உனக்கு?" என்று கேட்டார் நீலகேசி.

"நான் உங்களோடு வாழ்நாள் முழுவதும் இருப்பதற்கு வந்தவனல்ல. நமது சந்திப்பு தற்செயலானது. மயக்கமடைந்த உங்களைத் தெளிய வைத்தேன். துவார சமுத்திரம் வரை துணையாக வந்தேன். அங்கிருந்து குடுமபுரத்திற்குச் செல்ல வேண்டும் என்றீர்கள். அதற்கும் சம்மதித்து வந்தேன். உங்கள் காரியம் முடிந்து துவார சமுத்திரத்திற்குத் திரும்புகிறீர்கள். அதோடு என் பயணம் முடிந்து விட்டதாகக் கருதுகிறேன். பரோபகாரத்தைப் பலருக்கும் செய்ய வேண்டும் என்பது என் ஆசை. யட்சிணியின் கட்டளை" என்றான் அம்பிகாபதி.

"நீ கூறுவது முற்றிலும் சரி. உன்னைப் போன்ற உத்தமன் வேறு யாரும் கிடைக்க மாட்டார்கள் என்றாலும் உன்னை என்னோடு இருத்திக் கொள்வது முறையல்ல. இவ்வளவு தூரம் உதவிய நீ வரும் பௌர்ணமி வரை என்னுடன் இரு. பிறகு போய் விடலாம்."

"என்ன விசேஷம் சுவாமி?"

"பௌர்ணமியன்று விஹாரத்தில் திருவிழா. யட்சிணி வாசந்திகா தேவியின் அவதாரப் பெருவிழா. அன்று பற்பல அதிசயங்கள் நடக்க இருக்கின்றன. அப்போது சாமுண்டிக்கு நீ உதவியாக இருக்க வேண்டும். அதுவும் உன்னைச் சமணனாக இருக்கும் படிச் சொல்லியிருக்கிறேன். சமண யட்சிணி விழாவைக் கண்டு களித்து விட்டுச் செல்லலாம் அல்லவா?"

"வேண்டாம் அடிகளே. எனக்கு விழா காணும் ஆர்வம் இல்லை."

"ஏன் அவ்வாறு பேசுகிறாய்? என்மீது உனக்குக் கோபமா?"

"ஆமாம் சுவாமி"

"அப்படியா? என்ன கோபம்? சொல்"

சொன்னான் அம்பிகாபதி.

அதிர்ந்தார் நீலகேசி.





அரசியலில் விரோதிகளை அழிக்கும் போது குடும்பத்தோடு அழிக்க வேண்டும். பூண்டோடு அழிக்க வேண்டும். அப்படிச் செய்பவனே விவேகமானவன் – நீலகேசி




"சாமுண்டியோடு பேசிக் கொண்டிருந்த நீங்கள் என்னை வெளியேற்றினீர்களே அது ஏன் சுவாமி? உங்கள் உயிரைக் காத்து உங்களைத் தோளில் சுமந்து வந்தவனை நீங்கள் வெறும் பணியாளனாகத்தான் எண்ணுகிறீர்களா? நான் என்ன ஜடமா? நான் கேட்கக் கூடாதா உங்கள் பேச்சை? என்னிடம் நம்பிக்கை யில்லையா? இது தான் துறவியின் லட்சணமா? நான் உங்களைப் பெரும் துறவி என்று தான் கருதினேன். பதவியை வேண்டாம் என்று உதறித் தள்ளிய போது உங்கள் மீதான மதிப்பு உயர்ந்தது. ஆகவே தான் என்னை உங்களுக்கு அர்ப்பணித்துக் கொண்டு எனது வலிகளைப் பொறுத்துக் கொண்டுச் சுமந்து வந்தேன். இங்கே வந்த பிறகு தான் - சாமுண்டியிடம் பேசிய போது தான் நீங்கள் உயர்ந்தத் துறவியல்ல என்பதும் ராணியிடமும் மக்களிடமும் வேடம் தான் போடுகிறீர்கள் என்பதை உணர்ந்தேன்.

அதோடு நீங்கள் சிறைபட்டதற்காக மகாராஜா முதலியவர்களைத் தீர்த்துக் கட்ட நினைப்பதைக் கண்டு அதிர்ந்து போனேன். ஆயினும் அது உங்கள் சொந்த விஷயம். யாரை வேண்டுமானாலும் தீர்த்துக் கட்டிக் கொள்ளுங்கள். எனக்குக் கவலையில்லை. நீங்கள் உண்மைத் துறவியைப் போல நடித்து யாரை வேண்டுமானாலும் ஏமாற்றிக் கொள்ளுங்கள். அதைப் பற்றிக் கூட எனக்கு வருத்தமில்லை. ஆனால் என்னை உத்தமன் என்று சொல்லிக் கொண்டு பேச்சுக்கிடையில் வெளியேற்றியதுதான் எனக்கு வருத்தமாக இருக்கிறது. இந்த நடுக்காட்டில் உங்களை அப்படியே விட்டு விட்டுச் சென்றால் என்ன என்று தோன்றுகிறது" என்று அம்பிகாபதி கூறிய போது அதிர்ந்து போனார் நீலகேசி.

"நீ இந்த அளவிற்கு வருத்தப்படுவாய் என்பதை நான் அறியாமல் போனது தவறு தான் அம்பிகாபதி. என்னை மன்னித்து விடு. நான் தீட்டும் திட்டம் மிகவும் அபாயகரமானது. பெரிய இடத்து விவகாரம். அது மூன்றாமவனுக்குத் தெரிவது நல்லதல்ல என்ற பொதுவான கருத்தில் உன்னை வெளியேற்றி

விட்டேன். நீ மூன்றாமவன் அல்ல என்னுடையவன். அதை உணர்ந்து உன்னை என் கூடவே வைத்திருக்க வேண்டும். தவறு செய்து விட்டேன். நானும் சாமுண்டியும் தீட்டிய திட்டத்தை இப்போது உனக்குச் சொல்லி விடுகிறேன். போதுமா?" என்றார் நீலகேசி.

தோள் மீதிருந்த அவரை இறக்கி பாறையில் அமர வைத்த அம்பிகாபதி "உங்கள் திட்டம் எதுவானாலும் எனக்குக் கவலையில்லை சுவாமி. அதைத் தெரிந்து கொண்டு நான் என்ன செய்யப் போகிறேன். உங்களது போக்கு தான் எனக்கு அதிர்ச்சியாகவும் வருத்தமாகவும் இருக்கிறது. மேலிடத்து கொலைகளில் ஈடுபடப் போகிற உங்களோடு சேர்ந்திருக்கவே எனக்குப் பிடிக்கவில்லை" என்றான்.

குரங்கு பழங்களைக் கொண்டு வந்து கொடுத்தது. ஒன்றுக்கு இரண்டு பழங்களாகச் சாப்பிட்டார் நீலகேசி. அம்பிகாபதியோ குடுமபுரத்திலிருந்து கொண்டு வந்தக் கட்டுச் சோற்றை உண்டான். அப்படியே சாய்ந்து படுத்தான். ஆரம்பத்தில் நீலகேசி மீதிருந்த மரியாதையும் அனுதாபமும் அவனிடத்தில் தற்போது இல்லை.

நீலகேசியே பேசமுற்பட்டு "அம்பிகாபதி! நான் ஒரு அதிகார மையம். மகாராஜா விஷ்ணுவர்த்தனன் ஒரு அதிகார மையம். இரண்டு மையங்களுக்கிடையே கருத்து வேற்றுமையும் கருத்து மோதல்களும் வரும் போது விளையும் விளைவுகளைக் கொலை என்று கருதக் கூடாது. தீர்வு என்றே கருத வேண்டும். மகாராஜாவை நான் கொல்ல நினைப்பது ஒரு தீர்வு தான். தீர்வு என்பது எப்படிப்பட்டதாக இருந்தாலும் ஏதாவது ஒரு கட்டத்தில் பெறப்பட வேண்டும். இல்லையென்றால் பிரச்சனைகள் தீர்க்க முடியாத அளவிற்குப் பெரிதாகி விடும். நான் ஈடுபடப் போவது வெளித் தோற்றத்திற்கு கொலை முயற்சி போல் தோன்றலாம். உண்மையிலோ அது கொலை முயற்சியல்ல. தீர்வுக்கான முயற்சி. அடைபட்டு விட்ட வழியைத் திறப்பதற்கான முயற்சி" என்றார்.

அம்பிகாபதி எதுவும் பேசாமல் மௌனமாக இருந்தான்.

அவரே தொடர்ந்து "உனக்கு நான் ஏற்கனவே சொல்லி யிருக்கிறேன். மதம் என்பது தாய் மாதிரி. தாய்க்கு தீங்கு விளைவிப்பவனை தாயே தடுத்தாலும் விடுவதற்கில்லை. தீங்கு விளைவிப்பவன் தீன தயாளனாக இருந்தாலும் நாட்டு நாயகனாக இருந்தாலும் சரி தண்டிப்பது தான் சரி. நான் இது போன்ற முயற்சியில் ஈடுபடுவதால் என்னைத் துறவியல்ல என்று எண்ணி

விடாதே. துறவியென்பவன் நாளும் தவம் செய்து கொண்டு கல்லாக இருப்பவன் அல்ல. தன்னைச் சுற்றி நடப்பனவற்றைக் கவனிக்கிறவனாக இருக்க வேண்டும். தனது மதம் சுகமாக சுவாசிக்கிறதா என்பதைக் கவனிக்க வேண்டும். இடையூறுகள் ஏற்பட்டால் களைய வேண்டும். தானும் வளர்ந்து தன் மதத்தையும் வளர்ப்பவனே சிறந்த மதவாதி. அதைத் தான் நான் செய்கிறேன். அது என் கடமை" என்றார்.

அம்பிகாபதி வெறுமனே கேட்டுக் கொண்டிருந்தானே தவிர எதுவும் கேட்கவில்லை.

நீலகேசியே மேலும் தொடர்ந்து "என் திட்டம் இது தான் அம்பிகாபதி. பௌர்ணமியன்று வாசந்திகா தேவியின் திருவீதி உலா நடக்கும். ஊர்வலத்தின் முன்னால் மகாராஜா, மகாராணி, இளவரசர் ஆகியோர் வருவார்கள். ராஜபாட்டையில் துவங்கும் வீதியுலா ஆதிநாதர் ஆலயத்தருகே குறுகிய வீதியில் நுழையும். அப்போது அவர்கள் மீது சாமுண்டியும் அவனது ஆட்க்ளும் கோழிப் பாம்புகளை ஏவி விடுவார்கள். அவை இமைக்கும் நேரத்தில் அவர்களைக் கொல்லும்" என்றார்.

"மகாராணியார் உங்களுக்குப் பதவியைத் தர முன் வந்தவரல்லவா? அவர் மீதுமா கோழிப் பாம்பை ஏவப் போகிறீர்கள்?" என்று கேட்டார் அம்பிகாபதி.

"அம்பிகாபதி! அரசியலில் விரோதிகளை அகற்றும் போது குடும்பத்தோடு அழிக்க வேண்டும். பூண்டோடு அழிக்க வேண்டும். அப்படி செய்பவனே விவேகமானவன். அதோடு பதவியை வைத்துக் கொண்டு சாதிக்க முடியாதவன் மீண்டும் பதவியை அடைந்து சாதிப்பதில் மெச்சிக் கொள்வதற்கு எதுவும் இல்லை. பதவியில் இல்லாமல் சாதிக்க வேண்டும். அப்படி சாதிப்பதற்காகவே பதவியை வேண்டாம் என்று ராணியிடம் மறுத்தேன்" என்றார் நீலகேசி.

"நான் உதவ வேண்டும் என்றீர்களே அது என்ன?"

"சாமுண்டியும் அவனது ஆட்களும் கொலை முயற்சி முடிந்த பின் அவர்கள் தப்புவதற்கு ஏதுவாக நீ பைத்தியக்காரனைப் போல் நடிக்க வேண்டும். எல்லோரது கவனத்தையும் உன் மீது திருப்ப வேண்டும்."

"முடியாது அடிகளே. நற்காரியங்களைச் செய்வதற்காக யட்சிணி மூலம் பணிக்கப்பட்டவன் நான். கொலை காரர்கள் தப்புவதற்கு உதவ மாட்டேன். துவார சமுத்திரத்திற்குச் சென்றதும் நான் விடைபெற்றுக் கொள்கிறேன். இனிமேல்

உங்களைத் தோளில் சுமக்க மாட்டேன். தெரிந்தே பாவத்தைச் சுமக்க நான் விரும்பவில்லை.''

“உன் விருப்பம் அதுவானால் அப்படியே ஆகட்டும். ஆனால் என் முயற்சிகளை பாவகரமானவைகளாக நினைத்துக் கொள்ளாதே. உன் வயதில் பல விஷயங்களின் நுட்பம் உனக்குப் புரியாது.''

நீலகேசி இவ்வாறு சொன்னபிறகு அவனோடு அதிகமாகப் பேசவில்லை.

இருவரும் குரங்கோடு துவாரசமுத்திரத்தை அடைந்தார்கள்.

சொன்னது போலவே அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டான் அம்பிகாபதி.

நீலகேசி குரங்கோடு தனிமையான பகுதிக்குச் சென்றார். யாரும் தொந்தரவு செய்யாத வகையில் மரத்தடியொன்றைத் தேர்ந்தெடுத்து மிகவும் உத்தமனைப் போல நடித்தார்.

அவர் எதிர்பார்த்ததற்கு மாறாக பலர் அவரது இருப்பிடத்தைக் கண்டு பிடித்து வணங்கினார்கள். அவர் ஏதாவது பேசுவார் என்று எதிர்பார்த்து அவருக்கு முன்னால் அமர்ந்தார்கள். அவரோ அவர்களின் மதிப்பையும் அனுதாபத்தையும் பெற தொடர்ந்து மௌனமாகவே இருந்தார்.

மகாராணி கூட ஒருநாள் வந்து வணங்கினார்.

“எப்படி இருந்த தாங்கள் இப்படி ஆகிவிட்டீர்கள் அடிகளே! என்னால் சகித்துக் கொள்ளவே முடியவில்லை. நெஞ்சு கொதிக்கிறது. பதவியை வேண்டாம் என்று சொல்லி விட்டீர்கள். உணவையாவது ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்று கூறி பல்வேறு உணவு வகையறாக்களை வைத்தார்.

“துறந்தால் எல்லாவற்றையும் துறக்க வேண்டும் ராணி. ஒன்றிரண்டில் பற்று வைத்தால் உறவு தான் வளருமே தவிர துறவு வளராது. துறவிகளுக்கு உறவுகள் எதற்கு?'' என்று கேட்ட நீலகேசி குரங்கிற்கு ஏதோ சைகையைக் காட்டினார்.

குரங்கு உடனே பலகாரங்களை எடுத்து அங்கே இருந்தவர் களுக்குக் கொடுத்தது. ஒன்றைக் கூட நீலகேசிக்குத் தரவில்லை.

ராணி மிகவும் நெகிழ்ந்து போனாள்.

“மகா அடிகளே! விழாவிற்காவது கட்டாயம் வந்து விடுங்கள். என்னை ஏமாற்றி விடாதீர்கள்'' என்று கூறிவிட்டு அகன்றாள்.

இப்படி பலரும் வந்து தன்னைப் பார்த்துவிட்டு அபிமானித்து விட்டுச் சென்றாலும் சாமுண்டி தன்னை வந்து சந்திக்காதது குறையாகவே இருந்தது நீலகேசிக்கு அதோடு அவன் தனக்கு எந்தச் செய்தியையும் அனுப்பவில்லை. துவாரசமுத்திரத்தில் இருந்த காபாலிகர்கள் சங்கத்திற்கு குரங்கை அனுப்பிப் பார்த்தார். ஆனால் திட்டமிட்டபடி சாமுண்டி அங்கே கோழிப் பாம்புகளுடன் வந்து சேர வில்லை என்பது தெரிந்தது.

“என்ன ஆயிற்று இவனுக்கு? நாம் திட்டம் போட்டபடி இல்லாமல் வேறு ஏதாவது திட்டம் தீட்டிக் கொண்டானா? மகா முரடன். இவனிடம் உள்ள குறை இது தான். இஷ்டப் படி திட்டத்தை மாற்றி மாற்றி இழுத்து கடைசி நேரத்தில் முடிவான திட்டத்தைக் கூறுவான். தற்போதைய விஷயம் பயங்கரமானது. இது வெற்றி பெற்றே ஆக வேண்டும். தோற்றுப் போனால் அவ்வளவு தான்” என்று சொல்லிக் கொண்ட அவர் அம்பிகாபதியைப் பற்றியும் நினைத்துக் கொண்டார்.

பாவம் அவன். பரோபகாரமே இதம் என்றிருக்க அவனுக்கு மனவருத்தத்தை அளித்து விட்டேன். அந்த வெறுப்பில் என்னை விட்டே போய் விட்டான். இப்போது இருந்திருந்தால் பல விதத்திலும் உபயோகமாக இருந்திருப்பான் என்று தோன்றியது அவருக்கு.

இதற்கிடையில் விழா ஏற்பாடுகள் வெகு சிறப்பாக நடந்து கொண்டிருந்தன. துவார சமுத்திரம் தலைநகரமாக மாற்றப் பட்டபோது கூட இப்படியொரு சிறப்பு ஏற்பாடு நடக்க வில்லை என்று மக்கள் பேசிக் கொண்டார்கள். தலைநகரில் பல விடங்களில் செய்யப்பட்டிருந்த அலங்காரங்கள் அதற்குத் தனி சோபையைத் தந்திருந்தது. புது மணப்பெண் சிங்காரிக்கப் பட்டு அமர வைத்திருந்தது போல துவார சமுத்திரம் புதுப் பொலிவோடு திகழ்ந்தது.

நடக்கப் போகும் திருவிழா தனது குல தெய்வத்திற்கு என்பதால் மகாராணி பிரத்தியேக முயற்சிகளில் இறங்கி தனது கண்காணிப்பில் ஏற்பாடுகளைச் செய்தாள். யட்சிணி தேவி நகருலா வரும் வீதிகள் மட்டுமின்றி நகரத்தின் எல்லா வீதிகளிலும் அலங்கார வளைவுகளையும் மாவிலைத் தோரணங்களையும் கட்டச் செய்தாள் ராணி.

துவாரசமுத்திரத்திற்கு வெளியிலிருந்து வருபவர்களை வரவேற்கவும் உபசரிக்கவும் தனது பொறுப்பில் இருந்தவர்களை நியமித்திருந்ததால் பெருங் கூட்டம் தலைநகரில் கூடி நகரத்தைக் கர்ப்பிணியைப் போல் மாற்றியது. விழாவிற்கு ஐந்து நாட்களுக்கு

முன்பிலிருந்தே அன்னதானத்திற்கு உத்திர விட்டிருந்தா ளாதலால் நகரில் நாற்பதிற்கும் மேற்பட்ட அன்னதானக் கூடங்கள் தற்காலிகமாக அமைக்கப்பட்டன.

ஆதிநாதர் விஹார வளாகத்திலும் முன் பகுதியிலுமாகப் பெரிய பந்தல்கள் போடப்பட்டிருந்ததால் நகரில் குவிந்த கூட்டம் அங்கே தங்கி ஆரவாரம் செய்த படியால் விஹாரப் பகுதி இரைச்சல் மிகுந்து காணப்பட்டது.

கர்நாடகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் வரவழைக்கப் பட்ட சமணத் துறவிகள் விஹாரத்திற்குப் பின் புறம் அமைக்கப் பட்டிருந்த கூடாரங்களில் தங்க வைக்கப்பட்டுச் சிறப்பாகக் கவனிக்கப்பட்டு வந்தார்கள். அவர்களுக்கெல்லாம் விழாவும், ஏற்பாடுகளும், உபசரிப்புகளும் புது அனுபவங்களாகவும் புத்துயிர் அளிப்பதாகவும் இருந்ததால் மகிழ்ச்சியோடு இருந்து விஹாரத்தில் இருந்த ஆதிதேவர் முதலான அருகப் பெருமான் களுக்கும் யட்சிணிகளுக்கும் பூமாலையும் பாமாலையும் சூட்டி அப்பகுதியை தெய்வீகமானதாக ஆக்கியிருந்தார்கள்.

விழாவானது சமணர்கள் யட்சிணி சம்பந்தப்பட்டதாக இருந்தாலும் சமணர்கள் மட்டுமின்றி பௌத்தர்கள், சைவர்கள், காபாலிகர்கள், வைஷ்ணவர்கள் என்று பல்வேறு பட்டவர்கள் கலந்து கொண்டாலும் ராணிக்கு வைஷ்ணவர்களைப் பிடிக்காத காரணத்தால் அவர்களை அவ்வளவாகக் கண்டு கொள்ளவில்லை. விழா ஏற்பாடுகள் அனைத்திலும் மகாராணி மன்னனிடம் எதையும் ஆலோசிக்காமல் தனது ஆதர வாளர்களோடு தன்னிச்சையாகச் செய்து வந்தாள். எனவே மன்னன் ஏற்பாடு செய்திருந்த பாதுகாப்பு படைகளை விஹாரத்திற்குள் அவள் அனுமதிக்க வில்லை.

ஆதிநாதர் விஹாரத்தில் இருந்த கோழிப் பாம்பு வாகனம் புதுப்பிக்கப்பட்டு தங்கத் தகடுகளுக்கு தங்கமுலாம் பூசப்பட்டு பளபளத்தது. பாம்புத் தலையின் கண்கள் சிவந்த மாணிக்கக் கற்களால் அமைக்கப்பட்டிருந்ததால் பந்த ஒளியில் கோழிப் பாம்பின் கண்கள் பயங்கரமாகத் தோன்றின. அதன் வடிவழகைக் காண்பதற்காகவே பலர் கூட்டம் கூட்டமாக வந்தார்கள்.

கர்நாடகம் மட்டுமின்றிச் சுற்றுப்புற ஊர்களிலிருந்து வாத்ய வித்யாதரர்கள் வரவழைக்கப்பட்டிருந்ததால் மக்கள் அதுவரை கண்டறியாத வாத்தியங்களைக் கேட்டார்கள். கேட்டறியாத இசையைக் கேட்டார்கள். விழாவிற்கு முன்னால் வாத்ய வித்யாதரர்களின் உலாவுக்கும் ஏற்பாடு செய்தாள் ராணி.

நூற்றுக்கும் மேற்பட்ட வித்யாதரர்கள் வீதிகளில் பல்வேறு வாத்தியங்களை இசைத்து வந்த விதமானது கண்களுக்கு விருந்தாக இருந்தது. கோட்டையானது போர்க் காலங்களில் பேரிகைகள் முழக்கத்தால் அதிர்வதை விட தற்போது இசைக் கருவிகளின் சப்தத்தால் திணறித் தவித்தது.

விழாவிற்கு முன்நாள் வரை சாமுண்டியைப் பற்றி செய்தி வராததால் கடுப்பிற்கும் கோபத்திற்கும் ஆளான நீலகேசி அவனைக் கண்டபடி மனதிற்குள் சபித்தார்.

அதே சமயம் சாமுண்டியைப் பற்றி எதுவும் அறியாமல் திணறிக் கொண்டிருந்தான் அம்பிகாபதியாக நீலகேசியிடம் இருந்த உதயணன்.

நீலகேசி விடுதலையானதுமே சேனாதிபதி பகாசூரர் உதயணனை அழைத்தார்.

"இதே பார் உதயணா! சிறையிலிருந்து விடுதலையாகியிருப்பது நீலகேசியல்ல. நாகப் பாம்பு. அடிபட்ட பாம்பு. அது கடிக்காமல் விடாது. அந்த அடிபட்ட பாம்பான நீலகேசிக்கு இப்போது பதவிஇல்லை. மகாராஜாவுக்கு அவர் ஆச்சார்யரும் இல்லை. அவருக்குத் தற்போது எந்தப் பிடிப்பும் இல்லை. மகாராஜாவிடமும் வரமுடியாது. இளவரசரிடமும் வரமுடியாது. என்னிடம் வரமாட்டார். மக்கள் அவரை வரவேற்பார்களா என்பது தெரியாது. மகாராணி மட்டும் தான் சமண மதத்தை ஆதரித்து வருபவராகவும் சமண விஹாரங்களில் ஈடுபாடு கொண்டவராகவும் இருக்கிறார். அவர் கூட சிறைக்குச் சென்று வந்த நீலகேசியைச் சீந்துவாரா என்று தெரியவில்லை.

அறுந்து தொங்கும் கிளையைப் போல இருக்கும் அவரால் முன் போல ஆடமுடியாது. ஓட முடியாது. அதே சமயம் அவர் தனது தீய எண்ணங்களை அறவே துறந்து உண்மையானத் துறவியாகி விடுவார் என்று நம்புவதற்கில்லை. சிறையானது எல்லா குற்றவாளிகளையும் திருத்துவதில்லை. சிலரைச் சிறையானது முன்பை விட அதிகக் குற்றங்களைச் செய்யக் கூடிய தீவிரவாதிகளாக மாற்றும். அதுவும் பெரிதாக எதிர்பார்த்து ஏமாந்து போனவர்களைச் சிறை வாழ்வானது கொம்பைச் சீவி விடுமே தவிர திருத்தாது. அவருக்கு ஆயுள் வரை சிறையில் இருக்கும் படியான தண்டனையை வழங்கும் படி மகாராஜாவிடம் சொன்னேன். அவர்தான் கேட்கவில்லை. அவரது கருணையுள்ளம் நீலகேசிக்கு ஐந்தாண்டுகள் மட்டும் சிறைவிதித்தது. ஆனால் நீலகேசியின் உள்ளம் அப்படிப் பட்டதல்ல. அது கொடும் காடு. கடுங்கேடு. ஈரமற்ற வறண்ட

பாலைவனம். பட்டும் திருந்தாத பாழ் பிறவி. முன்பு போல ஆர்ப்பாட்டம் செய்ய மாட்டார். வெளிப் படையாகச் செயல்பட மாட்டார். உள்ளொன்றும் புறமொன்றுமாக இருப்பார். பதுங்குவார். பாய்வதற்கு கால நேரங்களைப் பார்ப்பார். ஆகவே நீ அவரைக் கண்காணிக்க வேண்டும். பொறுமையாகக் கண்காணிக்க வேண்டும். அவருக்குத் தெரியாமல் கண்காணிக்க வேண்டும். நேரம் வரும் போது அவரோடு சேர்ந்து கொள்ள வேண்டும். அவரது நம்பிக்கைக்குப் பாத்திரமாக வேண்டும். அவர் தனது குறுக்குப் புத்தியை நிச்சயமாகக் காட்டுவார். சதி வேலைகளையும் நாச வேலை களையும் திட்டமிடுவார். அதைப் பற்றி உறுதியாகத் தெரிந்த பின் என்னிடம் சொல்ல வேண்டும்" என்றார்.

அதையடுத்து உதயணன் தன்னை யாரும் அடையாளம் கண்டு விடக் கூடாது என்பதற்காக மொட்டையடித்துச் சமணத் துறவி போல மாற்றிக் கொண்டான். நீலகேசியைத் தொடர்ந்தான். அவர் சென்ற இடங்களுக்கெல்லாம் பின் தொடர்ந்தான் அவர் அறியாமல். சிறையிலிருந்து வெளியே வந்த அவர் துவாரசமுத்திரத்தில் இருக்காமல் தொண்டனூர் மேல்கோட்டை, இந்திரகிரி, சந்திரகிரி என்று பல இடங்களுக்குச் சென்று இரண்டு ஆண்டுகளுக்கு மேலாகத் தங்கினார். யாரிடமும் பேசாமல் மௌனம் காத்தார். எந்தச் சதியிலும் ஈடுபடவில்லை. யாரையும் தூண்டிவிடவில்லை.

இந்த நிலையில் சந்திரகிரியிலிருந்து அவர் துவார சமுத்திரத்திற்குத் திரும்பிய போது அதுதான் தருணம் என்று அவருக்கு உதவி செய்து அவரோடு சேர்ந்து அவரது அன்புக்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமானான்.

அதுவரை மௌனமாக இருந்து மக்களது அநுதாபத்தையும் துறவிகளது பச்சாதாபத்தையும் பெற்ற நீலகேசி குடுமபுரத்திற்குச் சென்று தனது தீய திட்டங்களைக் கட்டவிழ்த்தப் போது தான் அவரைப் பற்றிச் சேனாதிபதி கூறியது எத்துணை உண்மை என்பதை உணர்ந்தான்.

அவரோடு துவாரசமுத்திரத்திற்குத் திரும்பி அவரைக் கழற்றி விட்டு விட்டுச் சேனாதிபதியிடம் வந்து கோழிப் பாம்பு திட்டத்தைக் கூறினான்.

"சில மனிதர்கள் தாம் அடைய விரும்பும் ஒன்று - அது நல்லதாக இருந்தாலும் சரி கெட்டதாக இருந்தாலும் சரி முயன்று கொண்டுதான் இருப்பார்கள். அவர்களை அவர்களால் கூடத் தடுக்க முடியாது. நீலகேசி அப்படிப்பட்டவர்தான். ஆனால்

அவரது ஆசை துராசை மட்டுமல்ல. பேராசை" என்றார் சேனாதிபதி.

"மகாராஜா முதலானவர்களை மீது கோழிப் பாம்பை ஏவி விடப் போவதாக அவர் குறிப்பிட்ட இடம் ஆதிநாதர் ஆலயத்திற்கு அருகே உள்ள குறுகிய பாதை. எனக்கென்னவோ என்னை ஏமாற்றுவதற்காக நீலகேசி சொன்ன பொய்யாகத் தான் தோன்றுகிறது. உண்மையான இடம் வேறாக இருக்கும் என்று நினைக்கிறேன்" என்றான் உதயணன்.

"எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது. ஆகவே நாம் எல்லா இடங்களிலும் கவனமாக இருக்க வேண்டும். நீ சாமுண்டி எப்போது வருகிறான் எங்கே தங்குகிறான் என்பதைக் கண்காணித்து வா. வந்து எனக்கு விவரம் சொல்" என்றார் சேனாதிபதி.

ஆனால் சாமுண்டியைக் கண்டுபிடிக்க முடியாமல் தடுமாறிய உதயணன் சேனாதிபதியிடம் சொன்னான்.

அவர் சில யோசனைகளைச் சொல்லி அவனை அனுப்பினார்.

அதே சமயம் விழாவிற்கு முன்னாள் இரவு நீலகேசிக்குச் செய்தி வந்தது.

"எல்லாம் திட்டமிட்ட படி நடக்கிறது. கவலை வேண்டாம்" என்று செய்தியனுப்பியிருந்தான் சாமுண்டி.

நீலகேசி பெருமூச்செறிந்தார்.

மறுநாள் விழா தொடங்கியது.





மதங்கள் எதுவானாலும் அவற்றின் அடிப்படை ஒன்று தான். அது தான் மக்கள் நலம் – விஷ்ணுவர்த்தனன்




விழா கம்பீரமாகத் தொடங்கியது.

விஹாரத்தில் ஆயிரக் கணக்கான விளக்கொளியில் தங்கக் கோழிப் பாம்பு வாகனத்தில் ஜொலித்தாள் வாசந்திகா தேவி.

மன்னன், ராணி, இளவரசன், பஞ்சப் பிரதானிகள், ராஜ சூத்ர தாரி ஆகியோர் தேவியைத் தரிசித்தபின் அதிர்வேட்டுக்கள் முழங்கின. வாத்தியங்கள் முழங்கின. சமணர்கள் முழங்கினார்கள். மக்கள் முழங்கினார்கள். வானமும் அதிர்வது போல் இடி முழக்கங்களை எழுப்பின.

வாகனம் வீதி உலாவிற்குப் புறப்பட்டது. நீண்ட கழிகளால் வாகனமானது கயிற்றால் கட்டப்பட்டு கட்டுமஸ்தான நபர்கள் இருநூறு பேர் வாகனத்தைத் தோளில் தூக்கிக் கொண்டு வந்தார்கள். ராஜப் பிரமுகர்கள் முன்னே செல்ல அவர்களுக்குப் பின்னால் வாத்ய தாரர்களும், சமணத் துறவிகளும் வந்தார்கள். எல்லோருக்கும் முன்னால் பணிப்பெண்கள் வீதிகளில் மணமுள்ள மலர்களைச் சொரிந்ததால் வீதிகள் மணந்தன. மக்கள் வீதிகளில் இருபுறமும் திரண்டு ஆரவாரம் செய்தார்கள். அவர்களுக்கு மன்னனும் மகாராணியும் கைகளை ஆட்டி உற்சாகப்படுத்தினார்கள்.

ராஜ வீதிகளில் ராஜ உலா வந்தவர்கள் ஆதிநாதர் ஆலயத்திற்கு அருகே குறுகிய தெருவில் வந்த போது உதயணன் தனது நூறு பேர் படைகளோடு தயாராக இருந்தான். ஆனால் அங்கே அசம்பாவிதம் எதுவும் நடக்கவில்லை.

உலா சென்ற எந்த வீதியிலும் அசம்பாவிதங்கள் நடக்கவில்லை.

அதை நடத்த விருந்த சாமுண்டி பத்து பேர்களுடன் விஹாரத்தில் காத்திருந்தான். அனைவரும் சமணத் துறவிகளைப் போல் வேடமணிந்து பூக்குடல்களைப் பிடித்துக் கொண்டிருந்தார்கள். பூக்கூடைகளில் மேலே பூக்களும் கீழே கோழிப் பாம்புகளும் இருந்தன. வீதி உலா முடிந்து வாசந்திகா

தேவி விஹாரத்திற்கு வந்ததும் திருஷ்டி கழிக்கப்படும். ராஜப் பிரமுகர்கள் மீண்டும் வணங்குவார்கள். வாகனத்திற்கு இருபுறமும் நிற்கும் பக்தர்கள் பூச்சொரிவார்கள். அந்த நேரத்தில் பூக்களை எறிவது போல கோழிப் பாம்புகளை ஏவி விடத் தயாராக இருந்தார்கள் சாமுண்டியும் அவனது ஆட்களும்.

நீலகேசி திட்டமிட்ட படியே எல்லாம் நடந்து வந்தது.

வாகனம் உள்ளே வந்த போது மக்கள் கூட்டம் பந்தலிலேயே இருந்து நிறுத்தப்பட்டது.

வாகனம் கீழே வைக்கப்பட்ட போது சமணத் துறவிகள் சூடங்களை ஏற்றிக் காட்டி திருஷ்டி சுற்றினார்கள்.

அதையடுத்து மன்னன், மகாராணி, இளவரசன், இளவரசி சௌமிய குமாரி, சேனாதிபதி பகாசூரர், தளபதி கங்கராஜன் ஆகியோர் தேவியை வணங்கினார்கள்.

“எனக்குப் பரமதிருப்தி துறவிகளே. நீலகேசி அடிகள் வராதது தான் ஒரு குறை. மற்றபடி இந்த விழா இது வரை நடந்திராத அளவிற்குச் சிறப்பாக நடந்திருக்கிறது. இனி இது போன்ற விழாக்கள் அடிக்கடி நடக்கும்” என்று தன் மகிழ்ச்சியை வெளியிட்ட மகாராணி “பூக்களைச் சொரியுங்கள்” என்றாள்.

அதையடுத்து இரண்டு பக்கங்களிலிருந்தும் பூக்கள் சொரியப்பட்டன. சாமுண்டியும் அவனது ஆட்களும் பூச்சொரிந்தார்கள். கோழிப் பாம்பின் விஷம் தங்களைப் பாதிக்காமல் இருப்பதற்காக கைகளில் மூலிகைச் சாற்றைப் பூசியிருந்த அவர்கள் பூக்களைக் கொஞ்சம் எறிந்ததும் கோழிப் பாம்பை எடுத்தார்கள். மன்னன் முதலானவர்கள் எங்கே நிற்கிறார்கள் என்பதை முன் கூட்டியே அவர்கள் பார்த்திருந்த தால் சாமுண்டி தன்னிடம் இருந்த கோழிப்பாம்பை மன்னன் மீது ஏவினான். மற்றொருவன் ராணி மீது ஏவினான். அடுத்தவன் இளவரசன் மீது ஏவினான். அதற்கடுத்தவன் இளவரசி மீது ஏவினான். மற்றவர்கள் துறவிகள் மீது ஏவினார்கள்.

கோழிப் பாம்புகள் வெளிப்பட்ட அந்த நேரத்திலேயே உதயணனும் அவன் வீரர்களும் குறுவாட்களை எடுத்துச் சரசரவென்று கோழிப் பாம்புகளின் மீது எறிந்து விட்டார்களாதலால் அவை எதிராளிகளைக் கொத்துவதற்கு முன்பே இறந்து விழுந்தன.

திடீரென அப்படியொரு பயங்கரமான காட்சி வாசந்திகா தேவி முன்பே நடந்ததைக் கண்ட ராஜப் பிரமுகர்கள் அதிர்ந்தார்கள்.

இதற்கிடையில் உதயணனும் அவனது வீரர்களும் கொலை காரர்களை வளைத்துப் பிடித்தார்கள்.

"உதயணா! யார் இவர்கள்?" என்று கேட்டான் இளவரசன் நரசிம்மன்.

உதயணன் சாமுண்டியின் கழுத்தை நெரித்து "உண்மையைச் சொல் உன்னை அனுப்பியது யார்? எதற்காக அனுப்பினார்கள்?" என்று மிரட்டினான்.

சாமுண்டி உண்மையைச் சொன்னான்.

உதயணன் சேனாதிபதியின் உத்தரவின் படி அம்பிகாபதியாக நடித்து நீலகேசியின் நடவடிக்கைகளை எடுத்துச் சொன்னான்.

சதிகாரர்கள் சிறையில் அடைக்கப்பட்டு பின் கழுவேற்றப் பட்டார்கள்.

நீலகேசி கிடைக்கவில்லை.



மகாராணி கண்ணீர் சிந்திக் கொண்டிருந்தாள்.

அவளுடன் மன்னனும், இளவரசனும், சேனாதிபதியும் அமர்ந்திருந்தார்கள்.

"என்னை மன்னியுங்கள் பிரபு. தங்கள் வார்த்தைகளை நம்பாமல் நீலகேசியை நம்பி, மதித்து மோசம் போனேன்" என்றாள் ராணி.

"உன் கணவன் - மன்னன் இவர்களை விட மதம் உனக்குப் பெரிதாக போனது எப்படி ராணி? மத மோகம் தானே உன்னை இந்த அளவிற்கு மாற்றியது? நான் மதம் மாறியது தானே உன்னிடம் ஆத்திரத்தையும் உண்டாக்கியது. சாந்தலை! மதங்கள் எதுவானாலும் அவற்றின் அடிப்படை ஒன்று தான். அது தான் மக்கள் நலம். மக்களை உய்விக்கவே மதங்கள் தோன்றுகின்றன. ஒவ்வொன்றும் ஒவ்வொரு வழியைச் சொன்னாலும் போகும் ஊர் ஒன்றுதான். அது தான் மக்கள் நலம். அதை நீ மறந்தாய். நீலகேசி அறவே துறந்தார். இருவரும் மதவெறிக்கு அளாக்கி மக்கள் நலனைப் புறக்கணித்து விட்டீர்கள்" என்றான் மன்னன்.

"உண்மை தான் பிரபு. தாங்கள் கூறியது போல் மதத்தின் நெறிகளைப் போற்றாமல் மத வெறிக்கு ஆளானேன். தங்கள் வார்த்தைக்கு மறுவார்த்தை பேசாத நான் உங்களோடு அதிகாரச் சண்டைக்கும் தயாரானேன். கணவரின் வார்த்தைகளின் மீது நம்பிக்கையும் மரியாதையும் வைப்பவளே மனைவி. அதிலிருந்து

பிறழ்ந்து போய் நீலகேசி என்னும் பாவியிடம் சரணடைந்தேன். நான் தங்கள் தேவியாக இருக்கும் அருகதையை இழந்து விட்டேன். இந்த நாட்டின் ராணியாக இருக்கும் தகுதியை இழந்து விட்டேன்'' என்றாள் ராணி.

"நல்ல வேளையாக விபரீதங்கள் நடக்காமல் தடுக்கப் பட்டன. நடந்தவற்றை நீ மறந்து விடு. உன்னிடம் எந்தக் குற்ற உணர்வுகளும் இருக்க வேண்டாம். நீ தான் என் மனைவி. இந்த நாட்டின் ராணி'' என்றான் மன்னன்.

"பிரபு! நீலகேசி செய்தது அடாதது தான் என்றாலும் சமணத்தின் மீது எனக்கு வெறுப்பு வரவில்லை. இனி மதவெறியைக் காட்டாமல் நமது ஹொய்சள வம்சத்தின் குல தெய்வமான வாசந்திகா தேவியையும், தீர்த்தங்கரர்களையும் வணங்கி அதையே உய்யும் வழியாகக் கொள்வேன். சமண மதத்திலேயே தொடர்வேன். பிற மத விஷயங்களிலும் வளர்ச்சியிலும் தலையிட மாட்டேன். தங்கள் பத்தினியாக இருப்பேனேயன்றி ராணியாக நடந்து கொள்ள மாட்டேன். எனக்குச் சமண ஆச்சார்யர்கள் தேவையில்லை. மகாவீர வர்த்தமானரும், வாசந்திகா தேவியும் போதும். சமண தீர்த்தங்கரர்களின் அருள் நிறைந்த வாழ்க்கையைப் பற்றி எழுதி வைக்க வேண்டும் என்பது என் ஆசை. அதற்கு அனுமதிப்பீர்களா?'' என்று கேட்டாள் ராணி.

"அதற்கு யாருடைய அனுமதியும் தேவையில்லை சாந்தலை. சமணத்திற்காகத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டிருக்கும் நீ அவ்வாறு எழுதுவதற்கு முற்றிலும் தகுதியானவள். உனக்கு என் வாழ்த்துக்கள்'' என்றான் மன்னன்.



ராணியின் அதிகாரச் சண்டையானது விபரீதமாக மாறுவதற்குள் சம்பவங்கள் பல நடந்து அனைத்தும் சுமுகமாக முடிந்து விட்டதில் மன்னன் திருப்தியடைந்தான். ஆட்சியாளர்களது குடும்பத்தில் உண்டாகக் கூடிய அதிகாரச் சண்டையும் பதவிச் சண்டையும் எதிரிகளை விட ஆபத்தானவை. கூட இருந்தே கவிழ்த்துவிடக் கூடியவை என்று கருதியிருந்த மன்னன் அவ்வாறு ஆகும் வரை நிலைமை மோசமாகப் போகாததால் மகிழ்ச்சி அடைந்தான். வாசந்திகா தேவியின் திருவிழாவிற்குப் பிறகு மதக் கலவரங்கள் ஏற்படுவதற்கு வழியில்லை என்பதாலும் மதவெறி உண்டாவதற்கும் ஏது இல்லை என்பதாலும் மன்னனின் கவனம் போரை நோக்கித் திரும்பியது.

உதயணன் மூலம் குவலாலபுரத்தில் தங்கத்தின் இருப்பிடம் தெரிந்து அதைக் கொண்டு வந்தது எதிர்பார்த்தது. மாந்தரீகன் காட்டிக் கொடுத்ததைக் மலைக்குகையில் நீலகேசி சேர்த்து வைத்த தீயவழியில் சேர்த்த செல்வத்தைக் கொண்டு வந்தது எதிர்பாராதது.

படைகளைப் பெருக்க எவ்வளவு செல்வம் வேண்டுமோ அதற்கும் மேலாக அபரிமிதமான செல்வம் கிடைத்து விட்டதால் படைகளைப் பெருக்கும்படிச் சேனாதிபதி பகாசூரரிடம் சொல்லியிருந்தான் மன்னன். சேனாதிபதியும் விகர்ணனுமாகச் சேர்ந்து கடந்த ஏழு ஆண்டுகளாக கடும் முயற்சியெடுத்து இரண்டு லட்சம் வீரர்களைச் சேர்த்தார்கள். அதில் ஒரு லட்சம் படை வீரர்களை மன்னன் வெற்றி கொண்ட நாடுகளைப் பாதுகாக்க நிலைப் படைகளாகப் பிரிக்கப்பட்டு நிறுத்தப் பட்டார்கள்.

மீதமிருந்த லட்சம் வீரர்களில் ஐம்பதாயிரம் பேர் தொண்டனூரில் நிறுத்தி வைக்கப்பட்டார்கள். மற்ற வீரர்கள் வேலாபுரம், துவாரசமுத்திரம், ஸ்ரீரங்கப் பட்டினம் ஆகியவற்றில் பிரித்து வைக்கப்பட்டார்கள்.

ஆயிரம் புரவிகளைக் கொண்ட புரவிப் படை மேல் கோட்டையில் வைக்கப் பட்டிருந்தது.

நூறு யானைகளைக் கொண்ட யானைப் படை ஸ்ரீரங்கப் பட்டினத்தில் காவிரிக் கரையில் வைக்கப்பட்டிருந்தது.

நூறு எருதுகளைக் கொண்ட எருதுப் படை தொண்டனூரில் நிறுத்தப்பட்டது.

இப்படி எங்கு பார்த்தாலும் படைகளே தென்பட்டதைக் கண்ட மக்கள் மன்னன் மற்றுமோர் பெரும் போருக்குத் தயாராவதை உணர்ந்தார்கள்.

படை வீரர்களுக்கும் போர்த் தினவு நாளுக்கு நாள் அதிகரித்து வந்தது.

போராயுதங்களும் ஏராளமாக வடிக்கப்பட்டு படைகள் இருந்த முகாம்களில் குவிக்கப்பட்டிருந்தன.

படைகள் இருந்த இடங்களிலெல்லாம் முரசுகள் அடிக்கடி ஒலித்த விதமானது "எல்லோரும் விழிப்பாக இருங்கள்" என்று எச்சரிப்பது போல் இருந்தது.

இந்த நிலையில் போர் ஆலோசனைக்காக சேனாபதி பகாசூரர், இளவரசன் நரசிம்மன், தளபதிகளான கங்கராஜன்,

பரதன், விகர்ணன், மற்றும் புதியதாகச் சேனாதிபதியால் நியமிக்கப்பட்ட தளபதிகள், உபதளபதிகள் ஆகியோர் அழைக்கப்பட்டிருந்தார்கள்.

மன்னன் எழுந்து "மகா வீரர்களே! உங்களையெல்லாம் இங்கே எழுச்சியோடு காணும் போது எனக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது. மக்கள் எழுச்சியுடன் இருந்தால் நாட்டிற்கு நன்மை. துறவிகள் எழுச்சியுடன் இருந்தால் மதத்திற்கு நன்மை. வீரர்கள் எழுச்சியாக இருந்தால் படைக்கு நன்மை. இவர்கள் அனைவரது எழுச்சியும் மன்னனுக்கு நன்மை. நான் எதிர்பார்த்தபடி அனைத்தும் அமைந்திருப்பது நான் செய்த பாக்கியம் தான்" என்றான்.

சேனாதிபதி எழுந்து "மகாராஜா! சாளுக்கியர் ஆதிக்கத்திலிருந்து நாடுகளைத் தாங்கள் வென்று பல ஆண்டுகள் ஆகி விட்டன. அந்த நாடுகளிலிருந்து இன்று வரை எந்த எதிர்ப்பும் எழவில்லை. அந்த நாடுகளிலிருந்து ஆண்டுதோறும் கப்பம் வந்து கொண்டிருக்கிறது. இதுவும் மகிழ்ச்சியான விஷயம். திருப்தியான விஷயம்" என்றார்.

"அதில் சந்தேகம் இல்லை. அதே சமயம் அந்த நாடுகளில் பலவற்றில் நமது ஒரு லட்சம் படைகளைப் பிரித்து நிலைப் படையாக நிறுத்தும் படிச் சொன்ன போது நீங்கள் எதற்கு என்று கேட்டீர்கள். நாம் கூட சாளுக்கியர் ஆதிக்கத்தில்தான் இருந்தோம். படைகள் சேர்ந்த பிறகு எதிர்க்கும் எண்ணமும் வந்தபின் என்ன செய்தோம்? போருக்குத் தயாராக வில்லையா? இதே போல் நம் ஆதிக்கம் இருக்கும் நாடுகளும் ஒரு நாள் அவ்வாறு ஆசைப்படலாம். போருக்கு முற்படலாம். அதைத் தடுக்கவே நிலைப் படைகளை நிறுத்தச் சொன்னேன். சோழர்களைப் போல் நாம் எதிரிகளை வெல்வதோடு நின்றுவிட நினைக்கவில்லை. வென்ற நாடுகளை நம்மோடு இணைத்துக் கொண்டு சாம்ராஜ்யம் ஆக்கவே முயன்றோம். அதற்கு நாம் இப்போது செய்திருக்கும் ஏற்பாடு சரிதான்" என்றான் மன்னன்.

அவன் என்ன சொல்லப் போகிறான் என்பதைக் கேட்க ஆவலாக இருந்தார்கள் புதிய தளபதிகள்.

மன்னனே பேசமுற்பட்டு "உங்கள் எல்லோருக்கும் தெரியும். சோழர்களை முறியடித்து சோழராஜ்யத்தை நம்மோடு இணைத்துக் கொள்வதுதான் என் கனவு. அது நிறைவேற வேண்டும் என்பதற்காகத் தான் படை பெருக்கத்தில் ஈடுபட்டேன். அந்தப் பணியை நமது சேனாதிபதி மிகச் சிறப்பாகச் செய்து முடித்தார். இன்று நாம் சோழர்களை

எதிர்க்கும் பலத்தோடு இருக்கிறோம். தற்போது சோழ நாட்டிற்கு நாம் செல்வதற்குத் தடையாக இருப்பது தழைக் காட்டைத் தலைநகராக கொண்டிருக்கும் கங்கநாடு. கங்க நாடானது வெற்றி கொள்ளப்பட்டு சோழ நாட்டுப் பகுதியாக இருக்கிறது. சோழரது சேனாதிபதியால் ஆட்சி செய்யப்பட்டு வருகிறது. எனவே தழைக்காட்டை வீழ்த்தி வெற்றி பெற்றால் தான் நாம் சோழநாட்டிற்குள் நுழைய முடியும். ஆகவே தழைக் காட்டைக் கைப்பற்ற உங்களிடம் போர்த்திட்டம் இருந்தால் சொல்லலாம்" என்று கூறி நிறுத்தினான்.

இளவரசன் நரசிம்மன் பேசமுற்பட்டு "தந்தையே! தழைக்காடு மட்டும் சோழர் வசம் இல்லை. காஞ்சியும் சோழர் வசம் தான் இருக்கிறது. எனவே ஒரே நேரத்தில் இரண்டையும் தாக்கி வெற்றி பெற்றால் சோழரின் இரு கேந்திரங்களும் நம் வசப்படும். அந்த இரண்டு கேந்திரங்களிலிருந்து சோழநாட்டைச் சென்றடைவது சரியாக இருக்குமல்லவா?" என்று கேட்டான்.

"நரசிம்மா! இளவரசனுக்குரிய உத்வேகத்துடன் பேசினாய். மகிழ்ச்சி. ஆனால் உனது திட்டம் சரியல்ல - தழைக்காடு நமக்கு அருகில் இருக்கிறது. காஞ்சி கிழக்கில் தூரத்தில் இருக்கிறது. இந்த நிலையில் நமது படை இரண்டாகப் பிரிந்து இருவேறு பிராந்தியங்களுக்குப் போவது பாதகமேயன்றிச் சாதகமல்ல. மகத நாட்டைப் பிடிக்கத் திட்டமிட்டச் சாணக்கியர் கூட மகத நாட்டின் எல்லைப்புற நாடுகள் ஒவ்வொன்றாகக் கைப்பற்றும் படிச் சந்திரகுப்தருக்குச் சொன்னார். அவ்வாறே எல்லைப் புற ஊர்கள், அவற்றுக்கு அடுத்த ஊர்கள் என்று ஒவ்வொன்றாகச் சந்திரகுப்தர் கவர்ந்த போது மகதம் அனாதையாக நின்றது. அதை எளிதில் கைப்பற்றினார். இங்கே சோழ நாட்டின் தலையைப் போல அதைக் காத்துக் கொண்டிருப்பது தழைக்காடு. அதை முதலில் கைப்பற்றிய பிறகு காஞ்சியின் மீது படையெடுப்பதே விவேகமானது. அதோடு தழைக்காட்டை நீ அற்பமாகக் கருதக் கூடாது" என்றான் மன்னன்.

"தழைக்காட்டில் அப்படி என்னதான் இருக்கிறது?" என்று கேட்டான் இளவரசன்.

"நரசிம்மா! வடமேற்கிலிருந்து வரும் காவிரி தழைக் காட்டைப் பாதுகாப்பது போல அதை மூன்று பக்கங்களில் சுற்றிக் கொண்டு செல்கிறது. வடக்கு, மேற்கு, தெற்கு ஆகிய பக்கங்களில் வளைந்து செல்லும் காவிரி கிழக்கில் கீழே இறங்கி தெற்காக ஓடி தகடூரில் நீர்வீழ்ச்சியாக* விழுகிறது. மேற்குப் புறத்தில் ஆறு மலையைப்

* தர்மபுரி மாவட்டம் தகடூர். இங்கே குறிப்பிடப்படும் நீர்வீழ்ச்சி தற்போது ஹொகனேகல் நீர்வீழ்ச்சி என்று அழைக்கப்படுகிறது.

போல மணலை அள்ளிக் குவித்திருப்பதால் அந்தப் பக்கமாக நாம் செல்ல முடியாது. தழைக் காட்டின் கிழக்குப் புறம் அடர்த்தியான காடு இருக்கிறது. தழைக்காட்டிற்கு கஜாரண்யம் என்ற மற்றொரு பெயரும் உண்டு. அப்பெயருக்கேற்ப அக்காட்டில் நிரம்ப யானைகள் உலவுவதாகச் செய்தி. எனவே அந்தப் பக்கமும் செல்ல முடியாது. எஞ்சியிருப்பது வடக்குப் புறமும் தெற்குப் புறமும் தான். இருபுறமும் காவிரி ஓடுகிறது. தற்போது மாரிக்காலம் இல்லாததால் கரைகளைத் தொட்டுக் கொண்டு நீர் ஓடவில்லை என்றாலும் ஓரளவிற்காவது ஓடுகிறது. நமக்கு அருகில் இருப்பது வடக்குப் புறம் தான். அங்கே தான் எதிரி நம்மை எதிர்பார்க்கக் கூடும். நாம் விரைவாகச் சென்று அவற்றைக் கடந்து விட்டால் எதிரியை அழிப்பது எளிது" என்றான் மன்னன்.

"தந்தையே! எதிரி நம்மை வடக்குப் புறத்தில் எதிர்பார்க்கக் கூடும் என்று சொல்கிறீர்கள். அப்படியிருக்கும் போது நாம் தெற்குப் புறத்திற்குப் போய் விட்டால் என்ன?" என்று கேட்டான் இளவரசன்.

"நினைப்பு சரிதான். நாம் இப்படி நினைப்போம் என்பதைத் தழைக்காட்டில் இருக்கும் சோழர் படைத் தலைவனால் ஊகிக்க முடியாதா? அங்கே இருக்கும் சோழர் படைத் தலைவனான அதியமான் அனுபவம் வாய்ந்தவன் நம் சேனாதிபதி பகா சூலுரைப் போன்றவர் வீர ராஜேந்திர சோழர் காலத்திலிருந்து படைத் தலைவனாக இருந்தவன். சோழ நாட்டின் கதவாக விளங்கும் தழைக்காட்டிற்குத் தாழ்ப்பாளைப் போல இருப்பவன்* என்று அவனைப் பற்றிச் சொல்லுவார்கள். அவனை அலட்சியமாக நினைக்க வேண்டாம். நாம் தெற்குப் புறம் தான் வருவோம் என்று நினைப்பான் அவன். ஆகவே நாம் வடக்குப் புறமே அவனைத் தாக்குவோம்" என்றான் மன்னன்.

"அவனது படைபலம் எவ்வளவு?" என்று கேட்டான் இளவரசன்.

"ஒற்றர்கள் கொண்டு வந்தச் செய்தியின் படி இருபதினாயிரம் வீரர்கள் இருக்கலாம். நாம் படையெடுக்க முற்பட்டதும் தகடூரிலிருந்து படைகள் வரலாம். ஏற்கனவே தகடூரிலிருந்து தான் ஆயுதங்கள் வந்து கொண்டிருக்கின்றன."

"நமது படைபலம் அவனுக்குத் தெரியும் அல்லவா?"

"தெரிய வைத்திருக்கிறேன். அதோடு நமது படை வீரர்கள் பலபகுதிகளிலிருந்து திரண்டு ஒரு லட்சம் பேர் கொண்ட

---

* பக்கம் 99. தமிழக வரலாற்றில் அதியர் மரபு. By. வி. நா. மார்க்சிய காந்தி.

படையாக வரப் போவதாகவும் செய்தியனுப்பியிருக்கிறேன். நரசிம்மா! இந்தப் போரை நடத்தப் போவது நீயும் கங்கராஜனும் தான். தொண்டனூருக்குச் சென்று அங்கிருக்கும் படைகளில் முப்பதினாயிரம் வீரர்களுடன் விஜயதசமியன்று புறப்படு. திட்டமிட்டபடி தழைக்காட்டின் வடக்குப் புறமாகச் சென்று காவிரியைக் கடந்து விடு" என்றான் மன்னன்.

பெருமகிழ்ச்சியடைந்தான் நரசிம்மன்.

"கானகலா கோட்டைப் போரில் அடைந்த தோல்வியை இப்போரில் ஈடுகட்டுகிறேன் தந்தையே" என்று கூறி விட்டு புறப்பட்டான் இளவரசன்.

ஆனால் இளவரசன் தழைக்காட்டை அடைந்த போது சோழரது படை காவிரியின் வடகரையிலேயே தயாராக இருந்தது.





சரியான மனிதனைச் சரியான நேரத்தில் அடையாளம் கண்டு கொள்வதில் தான் வாழ்க்கையின் வெற்றி இருக்கிறது – அதியமான்




தல, காட ஆகிய இருவர் காட்டில் வேட்டையாடும் காலத்தில் மரம் ஒன்றை வெட்ட அதில் மறைந்திருந்த சிவலிங்கத்தை யானையொன்று பூஜித்து வந்ததைக் கண்டு அந்த இடத்திலேயே ஆலயத்தை எழுப்பி வழிபட்ட காரணத்தால் தலக்காடு என்றும், வசிஷ்ட முனிவரின் வழிவந்த முனிவர்கள் யானை உருவம் கொண்டு காட்டில் இருந்த படி நற்கதி வேண்டி சிவனை வழிபட்டதால் கஜாரண்யம் என்றும், தழைகளை மிகுதியாகக் கொண்ட மரங்கள் செறிந்த காடாக இருந்த படியால் தழைக்காடு என்றும், சோழர்களால் வெற்றி பெறப் பட்ட காரணத்தால் ராஜராஜ சோழபுரம் என்றும், கன்னடர்களால் 'தலிவனபுரா' என்றும், வடமொழியாளர் களால் 'தலவன' என்றும், ராமபிரான் இலங்கைக்குச் சென்ற போது இங்கே சில காலம் தங்கியிருந்ததால் இராமபுரம் என்றும் பல்வேறு பெயர்களால் அழைக்கப் பட்டதும், ஆதியில் கங்க வம்சத்தவரால் ஆளப்பட்டு பிற்காலத்தில் சோழர்களால் வெற்றி கொள்ளப்பட்டு சோழராஜ்ய பகுதியாகவும் ஆன தழைக் காட்டின் தங்க அரண்மனையில் ஆலோசனை செய்வதற்காகப் பலர் வந்திருந்தும், நேரம் அதிகமாகியும், சோழர் படைத் தலைவனான அதியமான் ஏதும் பேசாததால் இறுக்கமானச் சூழ்நிலை நிலவியது.

அதியமானுக்கு வயது அறுபது இருக்கலாம். நரைத்த முடியும் தாடியும் அதற்கு அத்தாட்சி சொல்வது போல் இருந்தன. முடி நரைத்திருந்தாலும் நாடி நரம்புகள் வீரியம் பெற்றிருந்ததை அவன் அமர்ந்திருந்த தோரணையே புலப்படுத்தியது. பூரண கவசங்களை அணிந்திருந்த அவன் சிங்கம் போல் அமர்ந்து கூரிய விழிகளால் அனைவரையும் அலட்சியமாக பார்த்த விதமானது அவன் ஒரு பலமான தலைவன் என்பதை பறைச் சாற்றியது.

தழைக்காடு சோழர் வசம் வருவதற்கு முன் அனேகப் பகுதிகள் காடுகளாகவே இருந்தன. சோழர் வசம் வந்த அவ்வூர் அதியமானின் ஆளுமையின் கீழ் வந்த பிறகு காடுகளைச் சீர்திருத்தி அழகான நகரை உருவாக்கியதோடு அதன் மத்தியில்

தங்க அரண்மனை ஒன்றையும் அமைத்தான். சோழ மன்னர் வீரராஜேந்திரரை அழைத்து அவருக்கு அரண்மனையை அர்ப்பணித்தான்.

வீரராஜேந்திரர் அந்த அரண்மனை தங்கத்தால் ஜொலிப்பதைக் கண்டு வியந்தார். அரண்மனை வளாகத்திலேயே சிவாலயம் முதல் பல தெய்வாலயங்களையும் அவன் அமைத்திருந்ததைக் கண்ட மன்னர் "சோழர் தலைநகரான கங்கை கொண்ட சோழபுரத்தில் கூட இப்படியொரு தங்க அரண்மனை இல்லையே! தழையும் காடுமாக இருந்த இடத்தில் போய் இப்படியொரு அரண்மனையை அமைத்திருக்கிறாயே - அது ஏன்?" என்று கேட்டார்.

"மன்னர் மன்னா! தங்கள் தளபதிகள் மாவீரர்கள், வீரத்திற்காக தங்களை அர்ப்பணித்துக் கொண்டவர்கள். அதை மீறியும் தங்களுக்கு அர்ப்பணிக்க விரும்பியே இந்தத் தங்க அரண்மனையைக் கட்டினேன். தாங்கள் ஓய்வு கிடைக்கும் போதெல்லாம் இங்கே வரவேண்டும். இந்தச் சிம்மாசனத்தில் அமரவேண்டும். தாங்கள் மட்டுமே அமர வேண்டும்" என்றான் அதியமான்.

"அதெல்லாம் சரிதான். நீ கட்டியிருக்கும் இந்தத் தங்க அரண்மனை பகைவர்கள் கண்ணை உறுத்துமே? கைப்பற்ற அல்லவா முயல்வார்கள்?"

"என் உயிர் இருக்கும் வரை அது நடக்காது பேரரசே"

"உனது நம்பிக்கை எனக்கு மகிழ்ச்சியை அளிக்கிறது அதியமான். நம்பிக்கை தான் ஒரு மனிதனை நிலை நிறுத்துகிறது. உயர்த்துகிறது. நம்பிக்கையற்ற மனிதன் வேரற்ற மரம் போன்றவன். அதிக காலத்திற்கு நீடிக்க மாட்டான். எனது தந்தையான ராஜேந்திர சோழர் செய்யாத சாதனை என்று ஏதாவது உண்டா?. சாளுக்கிய சாம்ராஜ்யத்தை அழித்தார். கங்கைக் கரை வரை இருந்த பல்வேறு அரசுகளை வீழ்த்தினார். பாண்டியர்களையும் சிங்களரையும் வென்றார். ரோகணத்தில் ஒளித்து வைக்கப்பட்டிருந்த பாண்டியனின் மகுடத்தையும் வீர வாளையும் கண்டு பிடித்துக் கொணர்ந்தார். கடல் கடந்து படையெடுத்துச் சென்று கடாரத்தையும் ஸ்ரீவிஜயத்தையும் வெற்றி கொண்டார். கங்கை கொண்ட சோழ புரத்தை உருவாக்கினார். அங்கே மாபெரும் ஆலயத்தையும் கட்டினார். இதெல்லாம் எப்படி முடிந்தது? நம்பிக்கையால் முடிந்தது. தன்னால் முடியும் என்ற தன்னம்பிக்கையால் முடிந்தது. அவர் எங்களுக்கு வீரத்தைக் கற்பிக்க வில்லை. ஏனென்றால் அது சோழர்களின் ரத்தத்திலேயே

இருக்கிறது. ஆகவே அவர் எங்களுக்குத் தன்னம்பிக்கையைக் கற்பித்தார். எனவே தான் இன்று வரைச் சோழர்கள் வெற்றிகளை மட்டுமே கண்டார்கள். அந்த நம்பிக்கை உன்னிடம் இருக்கிறது. அதியா! சோழ நாட்டிலிருந்து கர்நாடகத்திற்குப் படைகள் செல்வதற்கு கங்க நாடு தான் வாயில். அது சோழர்களுக்கு மட்டுமே திறக்க வேண்டுமே தவிர எதிரிகளுக்குத் திறக்கக் கூடாது. அதைக் கட்டிக் காக்க வேண்டும் என்று தான் தழைக்காட்டின் தலைவனாக உன்னை நியமித்தேன். உன் ஆயுள் வரை இந்தப் பதவியில் நீ நீடிக்க வேண்டும் என்று ஆக்ஞா பத்திரத்தையும் உண்டாக்கினேன். இன்று வரை தழைக்காடு உன்னிடம் பத்திரமாக இருக்கிறது. எப்போதும் பத்திரமாக இருக்க வேண்டும்."

மன்னர் வீரராஜேந்திரர் இவ்வாறு கூறியது தனக்குக் கிடைத்த மிகப் பெரிய அங்கீகாரம் என்று நினைத்து அதற்கேற்ப நடந்து கொண்டான்.

பதவி என்பது சிலருக்குக் குரங்கின் கையில் கிடைத்த மாலை போல் இருக்கும். தனக்கும் உதவாது. பிறருக்கும் உதவாது. பதவி என்பது சிலருக்குச் சூதாட்டமாக இருக்கும். அதை வைத்து விளையாடி கிடைக்கும் வெற்றிகளைக் குவிப்பார்கள். பதவி என்பது பலருக்கு உதவி செய்யும் வாய்ப்பாக இருக்கும். தங்களுக்கும் நன்மை. மற்றவர்களுக்கும் நன்மை.

அதியமானோ தனக்குக் கிடைத்த பதவியைத் தவமாக நினைத்தான். பவித்திரமானதாக நினைத்தான். பாக்கியமாக நினைத்தான்.

பதவிக்கு வந்ததுமே தழைக்காட்டின் முகத்தை மாற்றினான். அகத்தையும் மாற்றினான்.

பாதுகாப்பு ஏற்பாடுகளை அவன் எவ்வாறு செய்கிறான் என்பது பலரால் அறிந்து கொள்ள முடியாத விஷயமாக இருந்தது.

அவனது நடவடிக்கை என்னவாக இருக்கும் என்பது ஊகிக்க முடியாத விஷயமாக இருந்ததால் எதிரிகள் அவனைச் சிம்ம சொப்பனமாகக் கருதி அவனை அணுகவே பயந்தார்கள்.

இந்த நிலையில் தான் தழைக்காட்டின் மீது ஹொய்சளர்கள் படையெடுக்கிறார்கள் என்றும் அப்படையின் எண்ணிக்கை ஒரு லட்சம் என்றும் செய்திகள் வந்தன.

தளபதிகளான தாமோதரனும் நரசிம்மவர்மனும் அப் படையெடுப்பைப் பிரளயமாகக் கருதிக் கலங்கினார்கள்.

அதியமானோ பொருட்படுத்தவில்லை.

ஓரிருமுறை அது குறித்து தெரிவித்தபோது "புயல் வீசும் போது கவனித்துக் கொள்ளலாம். புயல் என்ற வார்த்தைக்கு நடவடிக்கை எடுக்க முடியாது. போங்கள்" என்று கூறியிருந்தான் அதியமான்.

"வருமுன் காக்க வேண்டும்" என்றார்கள் தளபதிகள்.

"எது வருமுன்?"

"ஆபத்து வரும் முன்."

"வரட்டும் காக்கலாம்."

இந்த நிலையில் தான் தளபதி தாமோதரனே போர் ஆலோசனைக்கு அனைவரையும் கூட்டியிருந்தான்.

எல்லோரும் பெரும் ஆர்வத்துடன் வந்திருக்க, அதியமான் மட்டும் வேண்டா வெறுப்பாக வந்திருந்தான்.

நீண்ட நேரமாக ஆலோசனை அவைச் சுவற்றில் வரையப் பட்டிருந்த வீரப் பிரதாப ஓவியங்களையெல்லாம் பார்த்து விட்டுத் திருப்தியடைந்தவனைப் போலத் தலையை ஆட்டிய படைத்தலைவன் அதியமான் அங்கிருந்தவர்களைப் பார்த்து "இந்த ஆலோசனைக் கூட்டத்தைக் கூட்டியது யார்?" என்று கேட்டான்.

"நான் தான்" என்றான் தளபதி தாமோதரன்.

"எந்த அதிகாரத்தில் கூட்டினாய்?"

"தளபதி என்ற அதிகாரத்தில்."

"நீ கூட்ட வில்லை என்றால் உபதலைவன் கூட்டுவானா? அவனும் கூட்டவில்லை என்றால் யானைகளைப் பராமரிக்கும் மாவுத்தன் கூட்டுவானா? அவன் கூட கூட்டவில்லை என்றால் ஆ:புதங்களுக்கு நெய்யைத் தடவுபவனும் புரவிகளுக்குப் புல்லைத் தருபவனும் கூட்டுவானா? நான் எதற்காக இருக்கிறேன்?"

"நீங்கள் கூட்டவில்லை என்பதால் நான் கூட்டினேன்."

"எதற்காக?"

"ஹொய்சளர் படையெடுப்பை முறியடிக்க ஆலோசனை செய்வதற்காகத்தான்."

அதியமான் சிரித்து விட்டுச் சொன்னான்.

"குலோத்துங்க மாமன்னர் அடிக்கடிச் சொல்லுவார். வேறு வேலை இல்லாதவர்களும், பிரச்சனையைத் தீர்க்க முடியாத வர்களும் கூட விரும்பினால் அது ஆலோசனை அவையாகத்தான்

இருக்கும் என்பார். ஆலோசனை அவை என்பது வேற்றுமைகளின் வெளிப் பாடுகளே தவிர ஒற்றுமையின் உறைவிடம் அல்ல என்று சொல்வார். ஆகவே தான் ஆலோசனை அவைகளைக் கூட்டுவதில்லை. யாரிடமும் ஆலோசனை கேட்பது இல்லை."

"ஹொய்சளர் படை ஒரு லட்சம் என்கிறார்கள். நம்மிடம் இருக்கும் படை எண்ணிக்கை இருபதாயிரம்" என்றான் தளபதி நரசிம்மவர்மன்.

"சிலந்திப் பூச்சி ஒன்றே ஒன்றுதான். ஆனால் அதன் வலையில் சிக்கும் பூச்சிகள் பலப்பல. ஆகவே எண்ணிக்கை முக்கியமில்லை. வலைதான் முக்கியம்" என்றான் படைத்தலைவன்.

"அப்படி வலை ஏதாவது பின்னியிருக்கிறீர்களா? நாங்கள் அறியலாமா?"

"நேரம் வரும் போது பின்னுவேன். வீசுவேன்."

"எதிரிப்படைகள் இரண்டு நாட்களில் வந்து விடும்."

"நேரம் வரும் போது பின்னுவேன். வீசுவேன்."

"சிங்கம் வருவதற்கு முன் வலை வீசவேண்டும். வந்த பின் வீசமுடியாது."

"நேரம் வரும் போது பின்னுவேன். வீசுவேன்."

படைத்தலைவன் ஒரே பதிலைத் திரும்பத் திரும்பக் கூறியதால் வேறு பதிலை எதிர்பார்க்க முடியாதென்பதை உணர்ந்த அவையோர்கள் அகன்றார்கள்.

"இவர்களுக்கெல்லாம் வாயிருப்பதால் தான் பேச வேண்டும் என்ற ஆசையே அதிகமாக இருக்கிறது. இவர்களுக்கு வாய்க்குப் பதிலாக கைகள் இரண்டு கூடுதலாக இருந்திருந்தால் வேறு ஆயுதங்களைக் கூடுதலாக ஏந்தலாம்" என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்ட படைத்தலைவன் அங்கிருந்து புறப்பட்டு வைத்தியநாத சுவாமி கோயிலுக்குச் சென்று வழி பட்டான். அதையடுத்து வீரபத்திரர் ஆலயத்திற்கும் சென்றான். தலக்காடு என்ற பெயர் வருவதற்குக் காரணமாக இருந்த தல மற்றும் காட ஆகிய வேடர்கள் இருவரது சிற்பங்களையும் வணங்கினான்.

அங்கிருந்து ஊரின் கிழக்கே இருந்த காட்டிற்குச் சென்றான்.

காட்டின் மத்திமப் பகுதியில் ஆசிரமம் ஒன்றிருந்தது. அங்கே ஒரு முனிவர் இருந்தார்.

அதியமான் அங்கே சென்ற போது அவர் நிஷ்டையில் இருந்ததால் அவருக்கு முன்பாக அமைதியாக அமர்ந்தான்.

ஒரு நாழிகை நேரம் கழித்து கண்களைத் திறந்த முனிவர் “வா அதியமான்” என்றார்.

அவரை வணங்கிய அதியமான் “தங்களை நானொன்று கேட்கலாமா முனிவரே?” என்றான்.

“கேள்”

“துஷ்ட மிருகங்கள் வாழும் இக்காட்டில் நீங்கள் எப்படி தனியாக வாழ்கிறீர்கள்?”

“இந்த உடலில் இருக்கும் உயிர் எப்போது போக வேண்டும் என்று இருக்கிறதோ அப்போதுதான் போகும். அப்படியிருக்கும் போது தனியாக வாழ்ந்தால் என்ன? கூட்டத்தில் இருந்தால் என்ன?”

“உங்களுக்கு உணவு எப்படி கிடைக்கிறது?”

“எனக்கு உணவு என்பது விருந்துணவல்ல. பழங்களும் தாவரங்களும்தான். அவற்றை மிருகங்களே கொண்டு வந்து தருகின்றன. இங்கிருக்கும் யானைகள்தான் பெரும்பாலும் அப்பணியைச் செய்கின்றன.”

“காட்டு மிருகங்கள் உங்களைத் தாக்குவதில்லையா?”

“காட்டு மிருகங்களை நம்பலாம். நாட்டு மனிதர்களை நம்ப முடியாது. மனிதர்கள் நன்றி மறப்பார்கள். துரோகம் செய்வார்கள். மிருகங்களுக்கு அந்தக் குணங்கள் கிடையாது.”

“ஐயா! தழைக்காட்டின் மீது எதிரிகள் படையெடுத்து வருகிறார்கள்.”

“ராஜ்யம் ஒன்றிருந்தால் போரும் படையெடுப்பும் இருக்கத் தான் செய்யும்.”

“இந்தப் போரில் நான் வெல்வேனா சுவாமி?”

“படையும் போராயுதங்களையும் நீ வைத்துக் கொண்டு என்னிடம் எதற்காக ஆருடம் கேட்கிறாய்?”

“முனிவர்கள் வாக்கு தெய்வ வாக்கு. அதனால்தான் கேட்கிறேன்.”

“நேர்மையான போர் நடத்து. அதோடு இக் காட்டில் இருக்கும் யானைகளைப் போரில் ஈடுபடுத்தாதே. ஏனென்றால் அவை யானை வடிவத்தில் இருக்கும் முனிவர்கள். இவ்விரண்டையும் கருத்தில் கொள். வெற்றி நிச்சயம்.”

“வந்தனம் அடிகளே. வருகிறேன்.”



முனிவரிடமிருந்து விடைபெற்றுக் கொண்ட அதியமான் ஊருக்குத் திரும்பி ஊரின் வடகோடியில் இருந்த வடக்கு மாளிகைக்குச் சென்றான்.

கதவுகள் திறந்திருந்தன.

உள்ளே சென்று கதவுகளை மூடினான்.

மாளிகைக்குள் இருந்த அறைக் கதவைத் தட்டினான்.

திறந்தாள் திரிலோகசுந்தரி.

"வாருங்கள் ஐயா" என்றாள்.

கட்டிலில் அமர்ந்த படைத்தலைவன் அவளை ஏற இறங்கப் பார்த்து விட்டு -

**பனி விழும் மலர்வனம் - உன்**
**பார்வை ஒரு வரம் - இனி**
**வரும் முனிவரும்**
**தடுமாறும் கனிமரம்***

என்றான்.

"இதென்ன புதுப் பழக்கம்? பாட்டெல்லாம் பாடுகிறீர்கள்?" என்று கேட்டாள் திரிலோகசுந்தரி.

"எனக்குப் புதியது பிடிக்கும்" என்றான் அதியமான்.

"எது புதியது?"

"பழையனவல்லாதது எல்லாம் புதியது" என்று சொன்ன அவன் "பூலோகம், தேவலோகம், பாதாளலோகம் ஆகிய மூன்று லோகங்களுக்கும் பொதுவான மூன்று லோகங்களும் ரசிக்கும் படியான அழகிய பெண்ணுக்குத்தான் திரிலோக சுந்தரி என்று பெயர். உனக்கு இப்பெயர் சரிதானா?" என்று கேட்டான்.

"நானா வைத்துக் கொண்டேன் இப்பெயரை? ஒன்றும் தெரியாத பருவத்தில் பெற்றோர் வைத்தார்களா? உற்றார் வைத்தார்களா? யாருக்குத் தெரியும்?"

"இப்போது பெயர் வைத்தால் கூட உனக்குத் திரிலோகச் சுந்தரி என்று பெயர் வைக்க முடியாது. ஏன் தெரியுமா?"

"ஏன்?"

"உன்னைப் போன்ற அழகி ஈரேழு பதினான்கு லோகத்திலும் இல்லை. உனக்குப் போய் மூலோகச் சுந்தரியாகக் கருதி திரிலோகச் சுந்தரி என்று எப்படிப் பெயர் வைக்க முடியும்?"

---

* பாடலாசிரியருக்கு நன்றி.

"ஆண்களின் வேலை இது தான்."

"எது?"

"பெண்களைப் புகழ்வது"

"நான் புகழ்ந்தது பொய்யா?"

"ஆமாம்."

"எப்படி?"

"நீங்கள் பதினான்கு உலகங்களையும் அங்கே உள்ள அழகிகளையும் பார்த்திருக்கிறீர்களா?"

"நீ அதைச் சொல்கிறாயா? கவிதா அம்சம் என்றால் என்னவென்று உனக்குத் தெரியுமா?"

"தெரியாது"

"நிலவைப் போன்ற முகம் என்கிறோம். உண்மையில் நிலவு ஓர் கரடு முரடான கிரகம். அதைப் போல பெண்ணின் முகம் இருக்குமா? இருந்தால் எவனாவது அருகில் வருவானா? மாட்டான். குயிலைப் போன்ற குரல் பெண்களுக்கு என்கிறோம். பெண்களின் குரல் குயிலைப் போன்று இருந்தால் ரசிக்க முடியுமா? முடியாது. பிடியைப் போன்ற நடை என்கிறோம். நீ நடக்கும் போது யானை நடப்பது போல் இருக்கிறது என்று நினைத்துக் கொண்டாலோ யானை நடக்கும் போது உன்னை நினைத்துக் கொண்டாலோ ரசிக்க முடியுமா? முடியாது. கவிதத்துவமாக சொல்லும் உவமைகளைக் கவித்துவமாகப் பார்க்க வேண்டுமே தவிர சரிக்குச் சரியாக ஒப்பிட்டுப் பார்க்க கூடாது."

"அப்படியானால் கவிஞர்கள் பொய்தான் சொல்கிறார்களா?"

"பொய் என்று சொல்லக் கூடாது. கவித்துவம் என்று தான் சொல்ல வேண்டும்."

"நீங்கள் இங்கே வந்தது கவித்துவம் பற்றி கதை பேசத் தானா?"

"இல்லை"

"இல்லை என்று சொல்கிறீர்களே தவிர இதுவரைப் பேசியது கவித்துவம் தானே?"

"சுந்தரி! நானிங்கே வந்தது போரைப் பற்றிப் பேசுவதற்கு

"போரைப் பற்றியா? என்னிடமா?"

"ஆமாம். தளபதிகள் போரைப் பற்றி என்னிடம் பேசத் துடிக்கிறார்கள். நானோ அவர்கள் பேசுவதையே வெறுக்கிறேன்.

நானே விரும்பி காட்டு முனிவரிடம் போய் போரைப் பற்றிப் பேசினேன். அவர் பேசியது எனக்குப் பிடிக்கவில்லை. அதனால் தான் உன்னிடம் பேசுவதற்காக வந்தேன்."

"போரைப் பற்றி எனக்கென்ன தெரியும்? ஊரைப் பற்றியே எனக்குத் தெரியாது."

"சுந்தரி! மகா அறிவாளியான சாணக்கியருக்கும் மாவீரரான சந்திர குப்தருக்கும் யோசனை சொன்னது மந்திரி மண்டலமல்ல. சாதாரணக் கிழவி."

"உண்மையாகவா?"

"ஆம். இந்த உலகம் விந்தையானது. மனிதர்களும் விந்தை யானவர்கள். இவருக்கு எல்லாம் தெரியும் என்று அனுமானித்துக் கொண்டுச் சென்றால் அவருக்கு எதுவும் தெரியாமல் இருக்கும். இவருக்கு எதுவும் தெரியாது என்று முடிவுகட்டிக் கொண்டு சென்றால் அவர் எல்லாம் தெரிந்தவராக இருப்பார். சரியான மனிதனைச் சரியான நேரத்தில் அடையாளம் கண்டு கொள்வதில் தான் வாழ்க்கையின் வெற்றி இருக்கிறது" என்று சொன்ன அதியமான் ஹொய்சளரது படையெடுப்பு பற்றியும், தனது படை எண்ணிக்கையைப் பற்றியும், தங்க அரண்மனைப் பற்றியும், தன் மீது சோழ மாமன்னருக்கு இருக்கும் நம்பிக்கையைப் பற்றியும், முனிவர் கூறியதைப் பற்றியும் விளக்கமாகச் சொல்லி விட்டு 'உனக்கு என்ன யோசனை தோன்றுகிறது?" என்று கேட்டான்.

சொன்னாள் திரிபுரசுந்தரி -

அசந்து போனான் அதியமான்.





கௌரவத்தைக் கற்பாகக் கருதும் பெண்கள் கற்பையும் இழந்து விட்டால் அவர்கள் விரும்பி ஏற்கக் கூடியது எதுவுமில்லை – திரிலோகசுந்தரி




அதியமான் கூறியதையெல்லாம் கேட்ட திரிலோகசுந்தரி "படைத்தலைவரே! நான் யார் என்பது தெரியுமல்லவா? பத்து வருடத்திற்கு முன்னால் கங்கை கொண்ட சோழபுரத்திற்கு வந்தீர்கள். சேனாதிபதியின் மகளான என்னைக் கவர்ந்து வந்தீர்கள். திருமணம் செய்து கொள்ளப் போவதாகச் சத்தியம் செய்து விட்டு வந்த நீங்கள் என்னை உங்கள் ஆசை நாயகியாக்கினீர்கள்" என்றாள்.

"போர் முடியட்டும் சுந்தரி. உன்னை நிச்சயமாக மணம் செய்து கொள்வேன். வாக்கைக் காப்பாற்றுவேன்" என்றான் அதியமான்.

திரிலோக சுந்தரி லேசாகச் சிரித்தாள்.

"அதற்காக நான் சொல்லவில்லை. என் ரத்தத்தில் வீரம் ஓடுகிறது என்பதை உணர்த்தவே சொன்னேன்" என்றாள் திரிலோகசுந்தரி.

"உண்மை உண்மை. நீ வாளெடுத்துப் போரிடுவதற்குத் தகுதியானவள்" என்றான் அதியமான்.

"படைத்தலைவரே! எதிரியின் படை ஒரு லட்சம் என்பது உண்மையானால் நீங்கள் தோற்பது உறுதி."

"இல்லை சுந்தரி. அது வெறும் மிரட்டல். நம்மை அச்சுறுத்துவதற்காக அனுப்பப்பட்ட வதந்தி."

"படை எண்ணிக்கை எவ்வளவு தான் இருக்கும்?"

"ஐம்பதாயிரம் இருக்கலாம்."

"உங்களிடம் இருப்பது இருபதாயிரம்."

"இருபதாயிரம் தான். ஆனால் தகடூரிலிருந்து சோழர் படை எவ்வளவு வேண்டுமானாலும் வரும்."

"அதை விடுங்கள். சோழ மாமன்னர் உங்கள் மீது அபார நம்பிக்கையை வைத்துள்ளார். அதைக் காப்பாற்றுவது தானே உங்கள் உத்தேசம்."

“ஆமாம். நிச்சயமாக.”

“காட்டில் இருக்கும் முனிவர் உங்களை நியாயமான நேர் வழியில் போரிடச் சொல்கிறார். அவர் வழியில் போரிட்டால் வெற்றி கிடைக்காது. போர் என்பது ஒரு சூதாட்டம். அதில் நேர் வழியும் உண்டு. குறுக்கு வழியும் உண்டு. வெற்றி பெறுவதற்கு எந்த வழி தேவைப்படுகிறதோ அதைத்தான் தேர்ந்தெடுக்க முடியுமே தவிர நேர்வழியே வழி என்று பிடிவாதம் பிடிக்க முடியாது. பஞ்ச பாண்டவர்கள் கூட குருக்ஷேத்திரப் போரில் நேர்வழியில் மட்டுமே நடப்பது என்று தீர்மானித்திருந்தால் கௌரவர்களை வென்றிருக்க முடியாது. சோழ மாமன்னர் உங்கள் மீது வைத்திருக்கும் நம்பிக்கையைத் தக்க வைத்துக் கொண்டு போரில் வெற்றி பெற வேண்டும் என்றால் முனிவரது அறிவுரைகளை உடனடியாக மறந்து விடுங்கள். எதிரியின் படை எண்ணிக்கை அதிகமாக இருக்கும் போது குறுக்கு வழிகளும் தந்திரங்களும்தான் ஆயுதமாக இருக்கும்.”

“எனது எண்ணமும் அதுதான்.”

“எதிரிகள் தலைக்காட்டின் தெற்குப் பக்கத்தில் எதிர்பாராத விதமாக வந்து தாக்குவார்கள் என்பது தளபதிகளின் அபிப்ராயம் என்று சொன்னீர்கள். ஆனால் எதிரிகள் அப்படியொரு தோற்றத்தை உண்டாக்கி விட்டு வடப் புறத்திலேயே வந்து தாக்குவார்கள். அப்படிவந்து காவிரியைக் கடந்து உட்புறம் வந்து விட்டால் நமக்கு கஷ்டம். ஆகவே நீங்கள் முந்திக் கொண்டு வடப்புறத்தில் இருக்கும் காவிரியைத் தாண்டிச் சென்று எதிரியைத் தாக்குங்கள். அவனுக்குரிய சாதகங்களைக் குறையுங்கள்” என்று சொன்ன திரிபுரசுந்தரி மேலும் சில யோசனைகளைச் சொன்னாள்.

அவளை அப்படியே கட்டிப் பிடித்த அதியமான் அவளது உதடுகளைக் கடித்து “நீ உண்மையிலேயே சேனாதிபதியின் மகள் தான். போர் முடிந்த பின் உன்னை மணப்பதோடு மட்டுமின்றி உன்னைத் தளபதியாக்குகிறேன்” என்றான்.

அதையடுத்து அதியமான் அவளோடு காமக் களியாட்டங் களை நடத்தினான்.

அதுவரை அவளிடம் காட்டாத வேகத்தையும் வக்கிரத்தையும் அவன் காட்டிய போது “இந்த வயதிலும் இவருக்கு இவ்வளவா?” என்று வியந்தாள்.

அவனே வயதை மறந்து போய் வாலிப வயது காளையைப் போல் காமத்தைக் கட்டவிழ்த்து விட்டு “காமம் என்றால்

இப்படித்தான் இருக்க வேண்டும்" என்பதை நிரூபித்துக் காட்டினான்.

பூவைப் போன்ற தன்னுடலில் அவனது அங்கங்கள் காட்டுத் தனமாக இயங்கிய போது அவளுக்கு ஆனந்தமாகவே இருந்தது.

பெண்களுக்கு இந்த ஆண்களுடைய முரட்டுத் தனம் அவசியம் தேவை. அது தான் ஆனந்தம். அதுவும் அந்த முரட்டுத் தனம் தான் காமத்தில் சிகரம் போன்றது சிறப்பானது என்று நினைத்தாள்.

திரும்ப அவன் கிடைப்பானா மாட்டானா என்று நினைத்தாளோ என்னவோ நீண்ட நேரம் வரை தனது பிடியிலிருந்து அவனை அவள் விடவில்லை.

பொழுது விடிந்து கணிசமான நேரம் கடந்த பிறகே அவனை விடுவித்தாள்.

"வெற்றி வீரனாகத் திரும்புவேன். உன்னிடம் புதுபுதுக் கலைகளை உருவாக்கிக் காட்டுவேன்" என்று கூறி விட்டு வெளியேறினான் அதியமான்.

திரிலோக சுந்தரி எதற்காகவோ சிரித்துக் கொண்டாள்.



தான் எதிர்பார்த்ததற்கு மாறாக சோழர் படைகள் தலைக் காட்டின் வடப்புறத்தில் காவிரியைத் தாண்டி வந்து அணிவகுத்திருந்ததைக் கண்ட இளவரசன் நரசிம்மன் "கங்கராஜரே! நாம் தலைக்காட்டின் தெற்குப் புறம் தாக்கலாம் என்றேன். மகாராஜா அது வேண்டாம் என்றார். எதிரி அப்படித் தான் எதிர்பார்ப்பான் என்றார். இப்போது பார்த்தீர்களா? எதிரி வடக்குப் புறம் வந்திருக்கிறான். காவிரியையும் கடந்து விட்டான்" என்றான்.

"இதில் அவனுக்குப் பெரும் சாதகம் இருப்பதாகத் தெரியவில்லை. இளவரசே நாம் முன்னேறித் தாக்கினால் அவன் ஆற்றில் தான் இறங்க வேண்டும். அப்போது நமக்குச் சாதகம்" என்றான் கங்கராஜன்.

ஆனால் கங்கராஜன் கூறியபடி நடக்கவில்லை. ஹொய்சளர் படையை நோக்கி அதியமானின் படைகள் தாக்குவதற்காக வேகமாக முன்னேறின. நரசிம்மனும் அவர்களைத் தாக்க உத்தரவிட்டான்.

அப்போது யாரும் வரமாட்டார்கள் என்று கருதப்பட்ட மேற்குப் பகுதி மணல் மேடுகளைத் தவிடு பொடியாக்கிக்

கொண்டு யானைகள் பல ஹொய்சளப் படையை நோக்கி வந்தன. அதே போல் கிழக்குப் பகுதியிலிருந்தும் யானைகள் வந்தன. காட்டு யானைகள் போல இருபுறங்களிலிருந்தும் அந்த யானையின் மீது அமர்ந்திருந்தவர்கள் ஹொய்சளர் படைமீது ஏதோ வீசினார்கள்.

அது கனமாக இருந்ததால் அது விழுந்த போது ஹொய்சளர் படை வீரர்கள் பலரது மண்டை உடைந்தது. அது என்ன பொருள் என்று கவனித்தான் நரசிம்மன். அது ஒரு கல் ஆயுதம். கனமான வட்ட வடிவமான கல். அதன் நடுவில் துளை. அதில் மரப்பிடி. கதாயுதம் போன்ற அமைப்பு. அது வரை கேள்விப் படாத ஆயுதமாக இருந்தது அது.* யானை மீதிருந்தவர்கள் அதன் பிடியை வசதியாகப் பிடித்துக் கொண்டு ஹொய்சளர் படையை நோக்கி கணிசமான தூரம் வரை வீசியதால் தலைக் கவசம் அணியாதிருந்த ஹொய்சள வீரர்களின் தலையில் வந்து விழுந்து மண்டையை உடைத்ததால் அவர்கள் அலறியபடிச் சாய்ந்தார்கள்.

நரசிம்மன் அந்த ஆபத்தை உணர்ந்தவனாய் சமிக்ஞைகளை உணர்த்தும் பேரிகைகளைக் கொட்டச் செய்தான்.

அதையடுத்து ஹொய்சளப் படைகள் வெகுவேகமாகத் திரும்பி ஓடின.

அதைக் கண்டு இடிபோல் சிரித்த அதியமான் "கோழைகள். ஓடுகிறார்கள். விடாதீர்கள். துரத்துங்கள்" என்றான்.

சோழர் படைகள் புலிக் கொடியை ஏந்திக் கொண்டு வீராவேச குரல்களை எழுப்பிக் கொண்டு துரத்தின.

பின்னோக்கி சென்ற ஹொய்சளப் படை கணிசமான தூரம் வரைச் சென்ற பின் நின்றன. திரும்பின. விசிறி போல் இருபுறமும் விரிந்தன.

அவ்வாறு விரிந்த போது சோழர் படையும் யானைகளும் அந்த இறக்கைக்குள் வந்தன.

இளவரசன் கொம்பை ஊதினான்.

ஹொய்சள வீரர்கள் ஈட்டிகளையும் அம்புகளையும் யானைகளின் மீது வீசியதால் அவை அவற்றால் தாக்கப்பட்டு அந்த பிராந்தியமே நடுங்கும் படி பிளிறின. மேன்மேலும் தாக்குதல் அவற்றின் பின்புறத்திலிருந்து ஹொய்சளப் படைகளால்

---

* இந்த ஆயுதம் 4000 ஆண்டுகள் பழமையானது. கும்பகோணத்திற்கு அருகே மிழிலை நத்தம் என்ற கிராமத்தில் கண்டெடுக்கப் பட்டது. 'கல் கதை' என்று இது குறிப்பிடப் பட்டுள்ளது. இது குறித்த செய்தி 11.3.2015 அன்று தி.ஹிந்து தமிழ் நாளேட்டில் வெளியாயிற்று.

நடத்தப்பட்டதால் அவை முன்னேற முடியாமல் சோழர் படை வீரர்கள் மீதே மோதி விழுந்தன.

அவை பழக்கப்பட்ட யானைகள் அல்ல. பக்குவப்பட்ட யானைகள் அல்ல. காட்டு யானைகள். அவற்றை அதியமான் அவசர கதியில் பயன்படுத்தியிருந்தான். ஆனால் அவை ஆயுதங்களால் தாக்கப்பட்டதுமே பொறுக்க முடியாமல், முன்னேற முடியாமல் சோழர்கள் மீது மோதி நொறுக்கின. அதோடு அந்த வீரர்கள் மீது யானைகளை மறைவாகக் கொண்டு தாக்குதலை ஹொய்சள வீரர்கள் நடத்தினர்.

சாதகமாக இருந்த தனது நிலை பாதகமாகி விட்டதை உணர்ந்த அதியமான் சற்றே தடுமாறி தனது படைகளை ஆற்றை நோக்கிப் பின் வாங்கும்படிக் கட்டளையிட்டான்.

சற்றுமுன் வரை ஹொய்சளப் படையைத் துரத்திய சோழர் படை தற்போது ஹொய்சளப் படையால் துரத்தப்பட்டு பின் வாங்கியது.

பின் வாங்கியப் படையை ஹொய்சள வீரர்கள் மட்டுமின்றி அடிபட்ட யானைகளும் தாக்கியதால் அவர்களின் நிலை ஆபத்தானதாக இருந்தது.

சோழர் படை ஆற்றுக்கு அருகே வந்த போது தூரத்தில் பேரிகைகள் ஒலிக்கும் சத்தம் கேட்டது. அதையடுத்து படைப் பிரிவு ஒன்று அதை நோக்கி வேகமாக வந்து கொண்டிருந்தது.

தான் கேட்டிருந்த உதவிப் படைதான் தகடூரிலிருந்து வந்து விட்டது என்று கருதி தெம்படைந்த அதியமான் தனது படைகளோடு ஆற்றில் இறங்கினான்.

அப்போது அவன் தகடூர் படை என்று நினைத்திருந்த படைகள் அவனது படைமீது ஈட்டிகளை எறிந்தபடி முன்னேறின.

ஹொய்சள மன்னனின் தலைமையில் வந்திருந்த பத்தாயிரம் படைகள் தெற்குப் புறத்திலிருந்து தாக்க, அதே சமயம் இளவரசனின் படைகள் வடப்புறத்திலிருந்து தாக்க, போதாத குறைக்கு அடிப்பட்ட யானைகள் ஆற்றில் இறங்கித் தாக்க, ஆற்றில் இருந்த அதியமானின் படைகள் தாக்கப்பட்டு வீழ்த்தப்பட்டன.

ஒரு வீரனையும் உயிரோடு விடக் கூடாது என்று மன்னன் உத்தரவிட்டதால் ஹொய்சள வீரர்கள் சோழ வீரர்களைத் தேடிக் கொன்றதால் போர் விரைவிலேயே முடிந்தது. வெற்றித் தாரகைகள் முழங்கின.

போர் முடிந்தாலும் அதியமான் சிக்கவில்லை. அவனைச் சரணடையும்படி அறிவிப்பை வெளியிட்டு தங்க அரண்மனையில் சிங்காசனத்தில் அமர்ந்தான் ஹொய்சள மன்னன் விஷ்ணுவர்த்தனன்.

அதியமானின் தளபதிகளான தாமோதரனும் நரசிம்ம வர்மனும் சரணடைந்தார்கள். அவர்களை நாடு கடத்த உத்தரவிட்டான் மன்னன்.

அதியமான் மன்னனிடம் சரணடையாமல் திரிலோக சுந்தரியிடம் சரணடைந்தான்.

அவள் அவனைக் கட்டிலுக்கு கீழே ஒளிந்து கொள்ளச் சொல்லி தனது தோழியை எங்கோ அனுப்பி வைத்தாள்.

அவளுக்கு தான் நினைத்ததை முடித்து விட்ட மகிழ்ச்சி உண்டாயிற்று.

"படைத் தலைவனே! சோழ நாட்டிலிருந்து என்னை என் இஷ்ட விரோதமாய் கவர்ந்தாய். திருமணம் செய்து கொள்வதாக என் தந்தையிடம் சத்தியம் செய்தாய். ஆனால் சத்தியத்தை நிறைவேற்ற வில்லை. என்னை ஆசை நாயகியாக்கி உன் அபிலாஷைகளையும் அயோக்கியத் தனமான வக்கிரங் களையும் தீர்த்துக் கொண்டாய். போர் முடிந்த பிறகு மணந்து கொள்கிறேன் என்றாய். தளபதியாக்குகிறேன் என்று சொன்னாய். அது பொய் என்பது எனக்குத் தெரியும். உண்மையாகவே இருந்தாலும் அதையெல்லாம் ஏற்றுக் கொள்ள நான் தயாராக இல்லை. கௌரவமாக் வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு பெண் இஷ்டவிரோதமாக ஒருவனால் களவாடப்பட்டு பெண்டாளப்பட்டு விட்டால் அவன் பிறகு சாம்ராஜ்யத்தையே தருவதாக இருந்தாலும் ஏற்க மாட்டாள். கௌரவத்தைக் கற்பாகக் கருதும் பெண்கள் கற்பையும் இழந்து விட்டால் அவர்கள் விரும்பி ஏற்கக் கூடியது எதுவும் இல்லை. இதைப் புரிந்து கொள்ளாமல் என்னிடம் வந்து நீ போருக்கு ஆலோசனை கேட்டாய். எதைச் செய்யக் கூடாதோ அதையெல்லாம் செய்யும்படியும் நீ நம்பும் படியும் சொன்னேன். நீ நம்பினாய் ஏற்றாய். நான் கூறியபடி நடந்து கொண்டால் உனக்குத் தோல்வி நிச்சயம் என்பது எனக்குத் தெரியும். நான் நினைத்தது போலவே நீ போரில் படுதோல்வி அடைந்து பேடியைப் போல என்னிடம் வந்து ஒளிந்து கொண்டிருக்கிறாய். உன் இருப்பிடத்தைப் பற்றி ஹொய்சள மன்னனிடம் செய்தி அனுப்பியிருக்கிறேன். விரைவிலேயே வீரர்கள் உன்னைக் கைது செய்வார்கள். மன்னன் உன்னைச் சிரச்சேதம் செய்வான். நீ சாவாய். நீ செத்த பின் நான்

ஆனந்தம் கொள்வேன்" என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள் அவள்.

கட்டிலின் கீழேயிருந்து வந்த அதியமான் "சுந்தரி! எனக்கு பயமாக இருக்கிறது. ஹொய்சள வீரர்கள் என்னைக் கண்டால் வெட்டிப் போடுவார்கள்" என்றான்

"என்னப் பேச்சு இது படைத்தலைவரே! வீரத்தின் விளை நிலமான நீங்கள் உயிருக்கு அஞ்சலாமா?" என்று கேட்டாள் திரிலோகசுந்தரி.

"போரில் இறக்க நேரிட்டால் பரவாயில்லை. ஆனால் எதிரியிடம் கைதியாகச் சிக்குவது கொடுமை. என்ன சித்திரவதை செய்வானோ தெரியாது" என்றான் அதியமான்.

"அப்படியென்றால் போரில் வீரமரணம் எய்தியிருக்க வேண்டியது தானே?"

"நன்றாகச் சொன்னாய் போ. நான் மிகவும் பாடுபட்டு கட்டிய தங்க அரண்மனையை எதிரிக்குச் சமர்ப்பிக்கச் சொல்கிறாயா? முடியாது சுந்தரி. முடியாது. என்னால் மட்டும் கிழக்கே இருக்கும் காட்டிற்குப் போய் விட முடியுமானால் அங்கிருந்து காஞ்சிக்குச் செல்வேன். அங்கிருந்து சோழ நாட்டிற்குச் செல்வேன். கடல் போன்றச் சேனையைக் கொண்டு வருவேன். ஹொய்சளர்களை விரட்டியடிப்பேன்."

"இப்போதைக்கு அறையை விட்டுச் செல்லும் எண்ணம் மட்டும் வேண்டாம். மாளிகையைச் சுற்றி பகை வீரர்கள் நடமாடிக் கொண்டிருக்கிறார்கள். நீங்கள் தலையைக் காட்டினால் தலையை மட்டும் கொண்டு போய் விடுவார்கள்" என்று சொன்ன திரிலோகசுந்தரி "என்னவெல்லாம் ஆசை காட்டினீர்கள்? இப்போது ஏமாற்றம் தானே மிச்சம்?" என்றாள்.

"போர் முடியவில்லை சுந்தரி. நின்றிருக்கிறது. அவ்வளவு தான். போர் மீண்டும் நடக்கும். நான் என் வாக்கை நிறைவேற்றுவேன்" என்றான் அதியமான்.

"இருபதாயிரம் வீரர்களை காவு கொடுத்து விட்டு என் கட்டிலுக்குக் கீழே ஒளிந்திருக்கும் நீயா வாக்கை நிறைவேற்றப் போகிறாய்? சிறிது நேரத்தில் கைதாகிச் சின்னா பின்னமாகக் கூடிய நீ இன்னமும் இச்சகம் பேசுகிறாயே தவிர உண்மையைப் பேசவில்லையே?" என்று உள்ளுக்குள் நினைத்துக் கொண்ட அவள் ஏதோ கேட்க முற்பட்ட போது "கதவைத் திற சுந்தரி. நான் விஷ்ணுவர்த்தனிடம் சரணடைய முடிவு செய்து விட்டேன்" என்றான் அதியமான்.

"படைத் தலைவரே! இது என்ன அபத்தமான முடிவு சரணடைந்தால் சாவு நிச்சயம்" என்றாள் திரிலோகசுந்தரி.

"எனக்கு இப்போது சாவு இல்லை சுந்தரி. நான் எதிரிகள் பலரை காவு வாங்க வேண்டும். அதற்கு பிறகுதான் சாவு" என்றான் அதியமான்.

அப்போது கதவு தட்டப்பட்டது.

திரிலோகசுந்தரி கதவைத் திறந்தாள்.

ஹொய்சள வீரர்கள் பாய்ந்து வந்து அதியமானைக் கைது செய்தார்கள்.

"சுந்தரி! இது உன் ஏற்பாடா?" என்று கேட்டான் அதியமான்.

"ஆமாம்."

"துரோகி"

"நீ தியாகியா? நீயும் துரோகிதான். என் வாழ்வைக் கெடுத்த பாவி நீ. நரகம் உனக்குக் காத்திருக்கிறது. போய் வா" என்றாள் திரிலோகசுந்தரி.



இதற்கிடையில் போரில் வீரமரணமடைந்தவர்களை தளபதி கங்கராஜனும் பரதனுமாகத் தனது வீரர்களைக் கொண்டு அடக்கம் செய்தும் தகனம் செய்தும் கடமைகளை நிறைவேற்றினார்கள்.

போரில் தங்கள் மீது ஏவப்பட்ட கல் கதைகளை மன்னனிடம் காட்டினான் இளவரசன்.

"அபாயகரமான ஆயுதம். பலமான ஆயுதம். பழைமையான ஆயுதம். பயன்படக் கூடிய ஆயுதம். நாம் இதைத் தயாரிக்கலாம்" என்றான் மன்னன்.

"தந்தையே! தாங்கள் மட்டும் வராதிருந்தால் என் கதி அதோகதியாகியிருக்கும் அல்லவா?" என்று கேட்டான் இளவரசன்.

"இல்லை நரசிம்மா. நீ கையாண்ட உத்தி சிறப்பானது. சோழர் படைகளிடம் சிக்காமல் அவர்களை உன்னிடம் சிக்கும் படிச் செய்து அவர்களை ஆற்றில் இறங்கும் படிச் செய்தாய். யானைகளையும் அவர்களை நோக்கி விரட்டினாய். அது அவர்களை நிர்மூலமாக்கியிருக்கும். நீ வென்றிருப்பாய். நானிங்கே வந்தது தற்செயலாகத்தான். நான் வராமல் இருந்தாலும் உனக்கு வெற்றி கிட்டியிருக்கும்" என்றான் மன்னன்.

“தந்தையே! போரின் போது நூறு யானைகள் சிக்கியிருக்கின்றன. அவற்றை துவார சமுத்திரத்திற்குக் கொண்டு செல்லலாமா?”

“வேண்டாம் நரசிம்மா. தழைக்காட்டில் உள்ள யானைகள் யானைகள் அல்ல. யானைகள் உருவத்தில் இருக்கும் முனிவர்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அவற்றைக் காட்டுக்கே அனுப்பி விடு.”

மறுநாள் தங்க அரண்மனையில் மன்னனுக்கு முன்னால் கொண்டு வந்து நிறுத்தப்பட்டான் அதியமான்.

“சரணடையும் படி அறிவிப்பு செய்த பின்பும் ஏன் சரணடைய வில்லை?” என்று கேட்டான் மன்னன்.

“சரணடையும் வழக்கம் தமிழர் படைத் தலைவர்களுக்கு இல்லை” என்றான் அதியமான் நெஞ்சை உயர்த்தி.

“அப்படியானால் ஓடி ஒளியும் வழக்கம் தமிழர் படைத் தலைவர்களுக்கு உண்டா - அதுவும் பெண்கள் இருக்கும் மாளிகையில்?”

“சுந்தரி காட்டிக் கொடுத்து விட்டாள். மற்றபடி நான் ஒளிந்தது உயிருக்குப் பயந்து அல்ல. புலிகள் பதுங்குவது பாய்வதற்காகத்தான்.”

“அப்படியா? இப்போது பாய வாய்ப்பு கொடுத்தால் பாய்ந்து விடுவாயா?”

“என்ன சொல்கிறீர்கள்?”

சொன்னான் மன்னன்.





மனிதனுக்கு இருக்க வேண்டியது வைராக்கியம். இருக்கக் கூடாதது சபலம். ஆனால் பெரும் பாலானவர்களுக்குச் சபலங்கள் தான் உள்ளனவே தவிர வைராக் கியங்கள் இருப்பதில்லை – நேமிநாதர்




"உன்னை விடுவித்து வாளும் தருகிறேன். பாயத் தயாராக இருக்கிறாயா?" என்று கேட்டான் மன்னன் விஷ்ணுவர்த்தனன்.

"தயார்"

"யாரோடு போரிட விரும்புகிறாய்?"

"உங்கள் மகன் நரசிம்மனோடு போர் செய்வேன். பராக்கிரமத்தைக் காட்டுவேன். போரில் வெல்வேன். வென்றால் தலைக் காட்டை எனக்கு மீண்டும் தரவேண்டும். சம்மதமா?"

"அதியா! உன்னைத் தனிப் போருக்கு அழைக்க வேண்டிய அவசியம் எனக்கில்லை. உன்னைக் கைது செய்து கழுவில் ஏற்றவே தீர்மானித்திருந்தேன். நீ பாய்வதாகச் சொல்லவே அதற்கு ஒரு வாய்ப்பளிக்கும் விதமாக இத்தனிப் போருக்கு அனுமதியளித்தேன். இதில் நிபந்தனை அளிக்கும் உரிமை உனக்கில்லை. என்றாலும் ஏற்கிறேன்" என்றான் மன்னன்.

அதையடுத்து இளவரசன் நரசிம்மனுக்கும் படைத் தலைவன் அதியமானுக்கும் அரண்மனையை அடுத்தத் திறந்த வெளியில் தனிப்போர் நடக்கும் என்றும் போரில் அதியமான் வெற்றி பெற்றால் தழைக்காடு மீண்டும் அவன் வசம் ஒப்படைக்கப் படும் என்றும் மன்னன் அறிவித்ததால் போர் வளாகத்தில் மக்கள் பெருமளவில் குவிந்தார்கள்.

ஹொய்சள மன்னனின் இந்த ஏற்பாடு அவர்களுக்குப் பிடித்திருந்தது. மன்னன் மனிதாபிமானத்தோடும் நியாயத்தோடும் நடந்து கொள்வதாக நினைத்தார்கள்.

அதியமான் அறுபது வயதுக்காரன் என்றாலும் போரின் போது இருபது வயதுக்காரனாகச் செயல்படக் கூடிய திறமை அவனுக்கிருந்தது. ஆகவே தான் தனிப் போர் அறிவிப்பு அவனைத் தெம்புடையவனாக்கியது. போரின் போது தனது வாள் ஒரே சமயத்தில் பலரது தலைகளை அதிரடியாக வீழ்த்தியிருந்ததால்

இளவரசன் நரசிம்மனின் தலையை வெட்டுவது பெரிய விஷயமல்ல என்று கருதினான்.

ஆனால் நினைப்பதெல்லாம் செயல் வடிவம் பெற்று விடாது என்பதையும், நினைப்பு வேறு செயல் வேறு என்பதையும் அவன் உணரவில்லை.

ஆகவே தனிப் போர் ஆரம்பித்தபோது முதலிலிருந்தே இளவரசனின் கைதான் ஓங்கியிருந்தது. அவனது கையில் இருந்த வாள் விதி விளையாடுவது போல் விளையாடியது. இருவரும் வீரர்கள்தான் என்றாலும் அதியமானிடம் வீரத்தோடு அகங்காரம் சேர்ந்திருந்ததால் போரில் அலட்சியத்தைக் காட்டினான்.

வென்று விடுவேன் என்று போரிட்டான் அதியமான். வெல்ல வேண்டும் என்று போரிட்டான் நரசிம்மன். மூன்று நாழிகை நடந்த தனிப்போரில் அதியமானின் அகங்காரம் தோற்றது. நரசிம்மனின் நம்பிக்கை வென்றது. எதிரியின் தலையைச் சீவி நிலத்தில் விழவைத்து வெற்றி முழக்கமிட்டான் இளவரசன்.

கானகலா போரிலிருந்து நரசிம்மனிடம் குறைவு மனப் பான்மை இருந்து வந்ததால் அதைப் போக்கவே மன்னன் அவனைத் தனிப் போரில் ஈடுபடுத்தினான். போரின் வெற்றி நரசிம்மனின் குறைவு மனப்பான்மையை நீக்கியது.

ஹொய்சள மன்னன் ஒரு மாத காலம் தழைக் காட்டிலேயே தங்கியிருந்து அதியமானின் ஆட்சிப் பகுதியில் இருந்த ஊர்களைப் பணியவைத்தான்.

கங்கநாடு தன் வசம் ஆகிவிட்ட நிலையில் சோழர்களின் இரண்டாவது தலைநகரான காஞ்சியின் மீது படையெடுக்கத் தீர்மானித்தான் ஹொய்சள மன்னன்.*

ஆனால் எதிர்பாராத விதமாகச் சோழ மன்னனிடமிருந்து சமாதான ஓலை வந்தது. ஹொய்சளர்களுடன் நட்பை விரும்புவதாகவும் படையெடுப்பு வேண்டாம் என்றும் குறிப்பிட்டிருந்தான் சோழமன்னன்.

விஷ்ணு வர்த்தனன் அதை அலட்சியப்படுத்த வில்லை. பேரரசு நட்பை விரும்பும் போது அதை அங்கீகரிப்பதே கௌரவம் என்று கருதி சோழ மன்னனுக்கு பதிலோலை அனுப்பி நட்பை அங்கீகரித்தான்.

---

* சில நூல்களில் ஹொய்சளர்கள் காஞ்சியையும் ராமேஸ்வரத்தையும் வென்றதாகக் கூறப்படுகிறது. ஆனால் அது நம்பும் படியாகவும் இல்லை. பலமான ஆதாரமும் இல்லை.

"தலைக்காடு கொண்டான்" என்ற பட்டத்தை அளித்த தழைக்காட்டுப் போருக்குப் பிறகு தழைக்காட்டில் கங்கராஜனை நிறுத்தி விட்டு துவாரசமுத்திரத்திற்குக் கிளம்பினான் ஹொய்சள மன்னன்.

தழைக்காட்டில் பெற்ற வெற்றிக்கு அடையாளமாக அங்கே ஒரு பெருமாள் கோயிலையும் கட்டத் தீர்மானித்தான்.*



ச்ரவண பெலகுலாவில் இந்திரகிரியில் பாகுபலியின் சிலைக்குப் பக்கத்தில் இருந்த மொட்டைப் பாறையில் உபன்யாசம் செய்து கொண்டிருந்தார் அதன் தலைவரான நேமிநாதர்.

"மனிதனுக்கு இருக்க வேண்டியது வைராக்கியம். இருக்கக் கூடாதது சபலம். ஆனால் பெரும்பாலானவர்களுக்குச் சபலங்கள்தான் உள்ளனவே தவிர வைராக்கியங்கள் இருப்பதில்லை. சபலம் என்பது வேசியைப் போலிருந்து மயக்கி அழிக்கும். வைராக்கியம் என்பது குருவைப் போல் இருந்து உயர்த்தும். மனிதனின் நல்வாழ்விற்கென்று நெறிகள் வகுக்கப்பட்டிருந்தாலும் அவற்றைக் கடைப்பிடித்து உயர வேண்டுமானால் வைராக்கியம் அவசியம் தேவை. வைராக்கியம் தான் மனக் கட்டுப்பாட்டைத் தரும். ஆசையை விலக்கும். சபலத்தை நெருங்க விடாது. லட்சியத்தை நோக்கி நேராகப் பயணம் செய்ய வைப்பது வைராக்கியம் தான். நமது தீர்த்தங்கரங்கள் வைராக்கியத்தால்தான் வைரங்களைப் போல ஜொலித்தார்கள்."

- இப்படியாக நேமிநாதர் இரண்டு நாழிகைகளுக்கு உபன் யாசத்தை நிகழ்த்தி முடித்த பின் அங்கு வந்தத் துறவியொருவர் "அடிகளே! தங்களை நீலகேசி அழைக்கிறார்" என்றார்.

நேமிநாதரும் எழுந்து அங்கேயிருந்த பள்ளிக்குச் சென்றார்.

அங்கே தரையில் கிழிந்த நாரைப் போல் படுத்திருந்த நீலகேசியின் அருகில் அமர்ந்தார்.

"கவலையை விடமாட்டீர்களா?" என்று கேட்டார் நேமிநாதர்.

"எப்படி விட முடியும் அடிகளே! தீராத பழிகளை என் மீது ஆட்சியாளர்கள் சுமத்தும் போது வேதனைப்படாமல் இருக்க முடியுமா? அவமானத்தால் புழுங்காமல் இருக்க முடியுமா? இந்த நாட்டில் கெடுதல் என்று எது நடந்தாலும் அதற்கு நான் தான்

* கீர்த்தி நாராயணன் கோயிலைக் கட்டினான் மன்னன். பிற்காலத்தில் அது மலை போல் குவிந்திருந்த காவிரியாற்றின் மணலால் மூடப்பட்டு விட்டது. தற்போது அந்த ஆலயத்தை அகழ்ந்து வெளியே கொண்டு வந்து கொண்டிருக்கிறார்கள்.

காரணம் என்று சொல்லி விடுவார்கள் போலிருக்கிறது" என்றார் நீலகேசி.

"நடந்ததையெல்லாம் மறப்பது தான் அமைதியைத் தருமே தவிர நினைத்துக் கொண்டே இருந்தால் அமைதி கிட்டாது."

"நடந்த விஷயம் நல்லதாக இருந்தால் நல்லது நடந்தது என்றெண்ணி மறந்து விடுவேன். ஆனால் நடந்த விஷயம் கெடுதலாக இருந்தால் மறக்க முடியுமா? கோழிப் பாம்புகள் மகாராஜா மீதும் மற்றவர்கள் மீதும் ஏவி விடப்பட்டதற்கு நான் தான் காரணம் என்கிறார்களே! இதை எப்படி நான் தாங்க முடியும்? அல்லது மறக்க முடியும்? நான் ஆட்சியாளர்களிடம் பதவி கேட்டேனா? பவிசு கேட்டேனா? பணம் கேட்டேனா? ஒன்றுமில்லையே! பிறகு எதற்கு இந்த வீண் பழியை என் மீது சுமத்துகிறார்கள்? நான் தான் காரணம் என்று எவனாது சொன்னால் நம்பி விடுவார்களா? விசாரிக்க மாட்டார்களா?"

"உங்களை நான் நம்புகிறேன். இங்கே இருக்கும் சமணத் துறவிகள் நம்புகிறார்கள். மற்றவர்கள் நம்பினால் என்ன? நம்பாவிட்டால் என்ன? அதோடு நீங்கள் துவாரசமுத்திரத்திற்கும் போவதுமில்லை. மகாராஜாவையும் அவரது வர்க்கத்தினரையும் சந்திப்பதுமில்லை. எந்தப் பதவிக்காகவும் கோருவதில்லை. எந்த கோஷ்டியிலும் சேருவதில்லை. பிறகு ஏன் அவர்களையும் அவர்களது பேச்சுக்களையும் ஏச்சுக்களையும் பழிகளையும் பற்றிக் கவலைப்பட வேண்டும்?"

"உண்மைதான் அடிகளே. தாங்கள் என்னை நம்பும் ஒரே காரணத்தினால்தான் நான் உயிரோடு இருந்து கொண்டு உயிர் பிரியும் நாளை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். நடந்தவற்றை மறந்தாலும் நடக்க வேண்டியவற்றை மறக்க முடியுமா?"

"எதைச் சொல்கிறீர்கள்?"

"சமண மதத்தின் எதிர்காலத்தைப் பற்றிதான் சொல்கிறேன் அடிகளே. இங்கே சமணனாய் இருந்த மன்னன் மதம் மாறினான். வைஷ்ணவ சன்யாசி இராமானுஜன் வந்த பிறகு மக்களும் அவனது மதத்திற்கு மாறுகிறார்கள். சமணர்கள் கூட மாறுகிறார்கள் - இது தொடருமானால் கர்நாடகத்தில் சமணத்திற்கு இருப்பு இருக்குமா நேமிநாதரே?" என்று சொன்ன நீலகேசி பெருமூச்செறிந்து விட்டு "அடிகளே! சந்திரகுப்த மௌரியரும் அவரது சமணகுரு பத்ரபாகுவும் இங்கே வந்தார்கள். அவர்களோடு எண்ணாயிரம் சமணர்கள் வந்தார்கள். இங்கே வந்ததற்குக் காரணம் சல்லேகனை புரிந்து உயிர் விடுவதற்காக என்று சொல்லப்பட்டது. ஆனால்

அது உண்மையா? சல்லேகனை புரிவதற்கு இங்கே எதற்காக வர வேண்டும்? மகதத்தில் அதற்கு இடமில்லையா?

அதோடு அவரோடு எண்ணாயிரம் சமணர்கள் வரவேண்டிய காரணம் என்ன? அவர்களெல்லாம் சல்லேகனை புரிந்து உயிரை விட்டார்களா? இல்லை. ஆகவே அவர்கள் இங்கே வந்ததற்கு உண்மையான காரணம் அதுவல்ல. அப்போது நடத்தப் பட்டது ஒரு சமயப் படையெடுப்பு. ஆமாம் அடிகளே. சமண சமயப் படையெடுப்பு.* சமண சமயத்தை தென்னாட்டிற்கு கொண்டு வருவதற்கான சாதகமான -அதே சமயம் சிறப்பான படையெடுப்பு.

ச்ரவண பெலகுலாவில் தான் அதற்குத் தளம் அமைக்கப்பட்டது. பத்ரபாகுவுடன் வந்தச் சமணர்கள் கர்நாடகத்தில் பல சமணப் பள்ளிகளைக் கட்டி, அன்ன தானங்களைச் செய்து சமணத்தைப் பரப்பினார்கள். பலரைச் சமணர்களாக்கினார்கள். இந்த நாடு சமணநாடாகியது.

இங்கேயிருந்து சமணம் காஞ்சி, திருப்பாதிரிப்புலியூர், மதுரை என பல இடங்களுக்குச் சென்றது. அங்கிருந்த மன்னர்களை மயக்கியது. போரையும் வீரத்தையும் மரபாகக் கொண்ட தமிழ் மன்னர்கள் மத மாயையினால் மந்தமாகிப் போனார்கள். வீரர்களுக்கு வேலையில்லை. ஆயுதங்களுக்கு வேலையில்லை. ஆயுத சாலைகளுக்கு வேலையில்லை. அனைவரும் மதத்தில் மூழ்கிப் போனார்கள். வீரமானது தமிழ்நாட்டில் உறங்கிய போது கர்நாடகத்திலிருந்து களப்பிரர்கள் தமிழ் நாட்டிற்குச் சென்று பல்லவநாடு, சோழநாடு, பாண்டிய நாடு, சேர நாடு என்று எல்லா நாட்டையும் எளிதாகக் கைப்பற்றினார்கள். சுமார் முன்னூறு ஆண்டுகளுக்கு தமிழ்நாடு அவர்கள் வசம் இருந்தது. சமணத்தின் வசம் இருந்தது. அப்படிப்பட்ட சமணம் கர்நாடகத்தில் தற்போது வழுக்கி விழுந்தக் கிழவியைப் போல நாதியற்றுக் கிடக்கிறது. அதைத் தூக்கி நிறுத்தத்தான் நான் முயன்றேன். என்னைத் தீயவன் என்று பழி சுமத்தி இங்கே கிடத்தி விட்டார்கள். அன்றைக்கு மன்னர்களால் முடியாத சமணத் தொண்டைச் சமணர்கள் செய்து மதத்தை உயர்த்தினார்கள். அது போல் நாம் செய்யக் கூடாதா? நமக்கு மன்னனும் வேண்டாம். ஆட்சியாளர்களும் வேண்டாம். நமக்கு நாமே முயலலாம்'' என்றார்.

“எப்படி?''

“இதர மதத்தினருடன் வாதப் போர் நிகழ்த்தலாம். வேத வாதம், பூத வாதம் நிகழ்த்தலாம். அனல் வாதமும் புனல் வாதமும்

* பக்கம் 119. கொங்கு வரலாறு. By. புலவர் குழந்தை.

செய்யலாம். இதை மன்னன் தடுக்க முடியாது. நாடு முழுவதும் தாங்களே சமய வாதங்களில் இறங்கினால் பெருகி வரும் வைஷ்ணவர்கள் ஒடுங்குவார்கள். இது முழுக்க முழுக்க மதச் சம்பந்தமான விஷயம். நானிருக்கும் நிலையில் அவ்வாறு வாதம் செய்ய இயலாது. உங்களால் முடியும். பிரதம துறவியான நீங்கள் உங்கள் மதத்திற்காகச் செய்யும் வாதங்களை அரசாங்கத்தால் தடுக்க இயலாது. ஆகவே தற்போதைய நிலையில் நடக்கக் கூடிய காரியம் இது தான். செய்வீர்களா? நான் உயிரை விடுவதற்கு முன் செய்வீர்களா? சமணத்தைக் காப்பாற்றுவீர்களா?"

"ஆகட்டும் அடிகளே" என்று சொன்ன நேமிநாதர் விரை விலேயே நான்கு விதமான வாதப் போர்களையும் துவக்கினார்.

சோர்ந்து கிடந்தச் சமணம் எழுச்சி பெறலாயிற்று.



மேல்கோட்டை ஆலயத்திற்கு உரிய உற்சவ மூர்த்தியான ராமப் பிரியரைக் கண்டெடுப்பதற்காகப் புறப்பட்ட இராமானுஜர் அயோத்தியிலிருந்து அந்த இராமபிரான் வந்த பாதையைத் தேர்ந்தெடுத்து அந்த வழியிலேயே சென்று சித்ரகூடத்தை அடைந்தார்.

கால் நடைப் பயணம் - காட்டு வழி மலை வழிப் பயணம் - ஆறுகள் பள்ளத்தாக்குகள் குறுக்கீடு - வன விலங்குகள் பேய் பிசாசுகளின் அச்சுறுத்தல் - இவற்றையெல்லாம் சகித்துப் பயணம் செய்பவர் சாதாரணமான மனிதராக இருக் முடியாது என்பதை இராமானுஜருடன் பயணம் செய்தவர்கள் உணர்ந்து கொண்டார்கள். தொண்ணூறு வயதான நிலையில் சளைக்காமல் பயணம் செய்ய இராமானுஜரால் முடிந்தது என்றால் அது தெய்வ அருளால்தான் என்பதைப் புரிந்து கொண்டார்கள்.

அவரிடம் இருந்த வைராக்கியம்தான் அவரைப் பல்வேறு சோதனைகளிலிருந்து வெற்றி பெறச் செய்திருக்கிறது என்பதைக் கண்டிருந்த அவர் இந்த டில்லிப் பயணத்தில் நிச்சயமாய் வெற்றி பெறுவார் என்று நம்பினார்கள்.

அவர் தன்னோடு அரங்கனின் அருளைத் தவிர வேறு எதையும் கொண்டு செல்லவில்லை. காஷாயமும் திரிதண்டமும் தவிர அவரிடம் உடைமைகள் என்று எதுவும் இல்லை.

உணவுப் பொருள்களைக் கூட அவர் சேமித்து வைத்துக் கொள்ள வில்லை. வழியில் கிடைத்ததை உண்டபடிச் சென்றார். மடியில் கனமில்லாததால் வழியில் பயமில்லை. தொந்தரவு இல்லை. அவரைக் கண்ணுற்ற மலை வாசிகளில் சிலர் அவரது

காந்தக் கண்களால் இழுக்கப்பட்டு அவருக்குத் துணையாக வந்தார்கள்.

அவர்களையெல்லாம் இராமானுஜர் மலைவாசிகளாகக் கருதவில்லை. வேடர்களாகக் கருதவில்லை. பஞ்சமர்களாகவும் தீண்டத் தகாதவர்களாகவும் கருதவில்லை. அரங்கனின் தூதுவர்களாகக் கருதினார். அத்திகிரி வரதனின் தொண்டர் களாகக் கருதினார். திருக்குலத்தவர் என்றே சொல்லிக் கொள்ளவும் செய்தார்.

மேல்கோட்டையிலிருந்து வடமேற்கே பயணம் செய்து சித்ரகூடத்தை* அடைந்த அவர் மந்தாகினி நதியில் நீராடி அங்கேயே சிலநாட்கள் தங்கினார். ராமபிரானும், சீதையும், லட்சுமணனும் வனவாசத்தை ஏற்றபின் வந்து தங்கிய இடமே சித்ரகூடம் என்பதினால் அங்கே தங்கி ராம நாமாக்களைச் சொல்லிய படி இருந்தார்.

தன்னோடு இருந்தவர்களைப் பார்த்து பேச முற்பட்ட அவர் ‘நான் வட நாடு செல்லும் போதெல்லாம் மிகமுக்கியமான காரியத்தை முன்னிட்டே செல்ல வேண்டியதாகிறது. முன்பு கூரத் தாழ்வானுடன் காஷ்மீரம் சென்றேன். ஆச்சார்யர் ஆளவந்தாரது விருப்பத்திற்கேற்ப பிரம்ம சூஸ்திரத்திற்கு பாஷ்யம் எழுத வேண்டிய பணி எனக்கிருந்தது. பிரம்ம சூஸ்திரத்தின் மூ லச் சுவடி காஷ்மீரத்தில் இருப்பதாக அறிந்து அதைப் படி எடுப்பதற்காகவே நாங்கள் அங்கு சென்றோம். மூலப்படியைக் கண்டோமே தவிர எடுத்து வந்து படியெடுக்க அனுமதியும் இல்லை. நேரமும் இல்லை. தவித்துப் போனேன். அப்போது கூரத்தாழ்வான் “சுவாமி! நீங்கள் மூலச் சுவடியில் இருப்பதைப் படியுங்கள். படிக்கும் போதெல்லாம் நான் கிரகித்துக் கொள்கிறேன்” என்றான். பல நாட்கள் சென்று நேரம் ஒதுக்கிய போது கொஞ்சம் கொஞ்சமாய் நான் படித்ததையெல்லாம் அவன் கிரகித்துக் கொண்டு திருவரங்கத்திற்கு வந்து முழுவதையும் எழுதிக் கொடுத்தான். எப்படிப்பட்ட ஞாபகச் சக்தி! அவன் மட்டும் என்னுடன் வாராதிருந்தால் பிரம்ம சூஸ்திர மூலம் எனக்குக் கிடைத்திருக்காது. முழுமையாகவும் விரிவாகவும் என்னால் பாஷ்யம் எழுதியிருக்கவும் முடியாது” என்று சொல்லி விட்டு சற்றே கலங்கியவராய் தொடர்ந்தார்:

“அந்த உத்தம சீடன் கூரத்தாழ்வானுக்கு நடந்த கொடுமையை அறியும் போது நெஞ்சம் பதைக்கிறது. என்னை மேல் நாட்டிற்குப் பத்திரமாக அனுப்பி வைத்த அவன் தன்னை

* இது குஜராத் மாநிலத்தில் உள்ளது.

பத்திரமாக வைத்துக் கொள்ளவில்லை. எனது ஆச்சார்யர் பெரிய நம்பிகளுடன் சோழரது தலை நகரத்திற்குச் சென்று வாதப் போர் செய்து வென்றான். ஆனால் அவனது வெற்றியை விரும்பாதவர்களும் ஏற்காதவர்களும் உண்மைக்கு மாறாக ஓலையில் கையெழுத்திடும்படி வற்புறுத்தினார்கள். அவனோ உண்மையை எழுதி விட்டு எழுத்தாணியால் தன் கண்களைப் பெயர்த்துப் போட்டான். அங்கிருந்தவர்கள் பெரிய நம்பிகளின் கண்களைச் சிதைத்தார்கள். இப்படியும் ஒரு ஆட்சியில் நடக்குமா? எது நடக்கக் கூடாதோ அது நடந்தது. எனது குருநாதர் - நூறு வயதைக் கடந்தவர் இம்சையைத் தாங்க முடியாமல் அங்கேயே பரமபதமடைந்தார். கண்களை இழந்த கூரத் தாழ்வானோ திருமாலிருஞ்சோலைக்குச் சென்று விட்டான். அவனது நிலை தற்போது என்ன என்பது தெரியவில்லை. மாருதி சிறியாண்டான் மேல்கோட்டையில் நானிருந்த போது கொண்டு வந்த செய்திக்குப் பிறகு வேறு செய்தியில்லை. என் பொருட்டு எனது சீடர்கள் துன்பத்திற்கு உள்ளாவது என்னை வாட்டுகிறது" என்றார்.

கேட்டவர்கள் நெகிழ்ந்தார்கள்.

சில நாட்கள் வரை சித்ர கூடத்தில் இருந்த இராமானுஜர் பிறகு பயணத்தைத் தொடர்ந்து ப்ரபாஸ தீர்த்தம் என்ற புண்ணிய ஷேத்ரத்தை அடைந்தார்.

அங்கே ஹீரண்யா, சரஸ்வதி, கபிலா ஆகிய நதிகள் இணைந்து கடலில் கலக்கும் இடமான ப்ராசீத்ரி வேணியில்* நீராடினார்.

"இங்கே தான் மகாபாரத முடிவில் ஸ்ரீ கிருஷ்ண பகவானைச் சேர்ந்த யாதவர்கள் சண்டையிட்டுக் கொண்டார்கள். இதே இடத்தில் தான் ஸ்ரீ கிருஷ்ணர் இவ்வுலகை விட்டு மறைந்தார்.** எல்லோரும் இங்கே அமர்ந்து மோட்சம் வேண்டி தியானம் செய்யுங்கள்" என்றார் இராமானுஜர்.

அங்கே சில நாட்களைக் கழித்து விட்டு பல மாதங்களுக்கு நெடிய பயணத்தை மேற்கொண்டு அயோத்தியை அடைந்தார்.

"இராம ஜென்ம பூமியில் யாரும் காலணிகளை அணியா தீர்கள். புண்ணிய மண்ணைத் தொட்டு வணங்குங்கள். கலியுகத்தில் இராம நாமமே உகந்தது என்று ஸ்ரீ விஷ்ணு சகஸ்ர நாமத்தில் கூறினார் பீஷ்மர். அதையே நாமும் சொல்வோம்" என்று சொல்லி சுலோகத்தைச் சொன்னார் இராமானுஜர்.

---

* இதுவும் குஜராத் மாநிலத்தில் உள்ளது.

** பக்கம் 21. 'திவ்ய தேச மஹாத்மியம்.'

**ஸ்ரீராம ராம ராமேதி**
**ரமே ராமே மனோரமே**
**ஸஹஸ்ரநாம தந்துல்யம்**
**ராம ராம வரானனே.**

இராம நாமங்களை உச்சரித்து ராம தரிசனம் செய்து பல நாட்கள் அங்கேயே தங்கி இராமாயணத்தின் மகிமைகளைப் பற்றி உபன்யாசம் செய்தார் இராமானுஜர்.

அதற்குப் பிறகு தான் செல்ல வேண்டிய இடம் டில்லி மாநகரம்தான் என்பதை உணர்ந்த போது அவருக்குள் சந்தேகம் எழுந்தது.

“மேல் கோட்டையில் இருந்த உற்சவ மூர்த்தியான ராமப் பிரியரை டில்லி சுல்தானியர்கள் கொண்டு சென்றிருப்பார்கள் என்பது ஊகம் தானே தவிர டில்லியில் தான் இருக்கும் என்று எப்படி உறுதியாகச் சொல்ல முடியும்? கவர்ந்து சென்றவர்கள் விக்கிரகமாக வைத்திருப்பார்களா அல்லது உருக்கியிருப்பார்களா?” என்று நினைத்த போது அவருக்குக் கவலை உண்டாயிற்று.

காஞ்சி வரதனை நினைத்துக் கொண்டு வேண்டினார்.

**தாயற்ற தாய் ஆகுவாய் தமர்**
**அற்றபேர் தமராகுவாய்;**
**சேயற்ற பேர் சேய் ஆகுவாய்; செயல்**
**அற்றபேர் செயலாகுவாய்;**
**வாய் அற்ற பேர் வாயாகுவோம்; மலை**
**போலும் நோய்க்கு உனை நம்பினால்**
**ஞாயிற்று முன் பணி நிற்குமோ**
**நாராயணா! நாராயணா!***

வேண்டிக் கொண்டே படுத்தார் இராமானுஜர்.

“தளர வேண்டாம். டில்லிக்குச் செல்” என்று தேவாதி தேவனான எம்பெருமான் கனவில் வந்து உரைத்தான்.

மறுநாள் டில்லிக்குப் புறப்பட்டார் இராமானுஜர்



* வடவேங்கட நாராயண சதகம். பாடல் 21.



துறவி என்றால் எல்லாவற்றையும் துறந்து விட்டு தனியாக வாழ்ந்து தவம் செய்வது ஒரு வகை. துறவி யாக இருந்தபடி மக்களை கடைத் தேற்று வதற்காகச் சமுதாயப் பணிகளில் ஈடுபடுவது மற்றொரு வகை. இரு தரப்பினரும் மக்களையே உய்விக் கிறார்கள் – இராமானுஜர்




பழங்காலத்தில் இந்திரப் பிரஸ்தம் என்றும் இக்கதை நடந்த காலத்தில் டில்லி என்றும் வழங்கப்பட்ட முகம்மதியர் ராஜதானிக்கு வந்தார் இராமானுஜர்.

இந்திய நாட்டின் மீது படையெடுத்து வந்த கஜினி முகமது பல தோல்விகளுக்கும் பிறகு வெற்றியடைந்து, ஆட்சியை அமைத்து, இந்துக் கோயில்களில் கொள்ளைகளைப் புரிந்து லாகூருக்குச் சென்ற பின் டில்லி ராஜதானிப் பகுதியில் ஆட்சி புரிய பல சுல்தான்களை நியமித்தான்.

அந்த சுல்தான்களில் சிலர் அவனது வேலைகளையே பல இடங்களில் செய்தார்கள். இந்துக் கோயில்களை இடிப்பதும் விக்கிரகங்களைக் கொள்ளையிடுவதும் அவர்களுக்கு முதன்மையான காரியமாக இருந்தது.

இக்கதை நடந்த காலத்தில் டில்லியில் சுல்தானாக இருந்த அப்துல்லாகான் ஹுசேன்* ஓரளவிற்குச் சாத்வீகமானவனாய் இருந்தான். இந்துக் கோயில்களை அவ்வளவாகச் சூறையாட வில்லை. ஆனாலும் அவனது பொக்கிஷத்தில் நிறைய விக்ரகங்கள் இருந்தன.

அவனைச் சந்திப்பதற்கு இராமானுஜர் இரண்டு மாதங்கள் காத்திருக்கும் படி இருந்தது.

பிறகு சந்திக்கச் சென்ற போது அவரது கோலத்தைப் பார்த்து வியந்தவனாய் "உங்களைப் பார்த்தால் உள் நாட்டுத் துறவியைப் போல இருக்கிறது. என்னிடம் கேட்பதற்கு என்ன இருக்கிறது?" என்று கேட்டான்.

"சுல்தான்! துறவி என்றால் எல்லாவற்றையும் துறந்து விட்டு தனியாக வாழ்ந்து தவம் செய்வது ஒரு வகை. துறவியாக இருந்தபடி மக்களை கடைத் தேற்றுவதற்காகச் சமுதாயப்

* Page 18. 'Ramanuja - Myth and Reality By. R. Nagasamy

பணிகளில் ஈடுபடுவது மற்றொரு வகை. நான் இரண்டாவது வகையில் வந்தவன். எனக்காக அன்றி எனது நாட்டு மக்களுக்காக வாழ்ந்து வருபவன்" என்றார் இராமானுஜர்.

"மிக்க மகிழ்ச்சி. எனக்குச் சோம்பேறித்தனமான சன்யாசிகளை விட உங்களைப் போல மக்களோடு இணைந்து அவர்களுக்காக உழைக்கும் சன்னியாசிகளைப் பிடிக்கும். சொல்லுங்கள். உங்களுக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டான் சுல்தான்.

"சுல்தான்! நான் மேல்கோட்டை என்ற புண்ணிய ஸ்தலத்திலிருந்து பல யோசனை தூரம் கடந்து வந்துள்ளேன். பலகாலத்திற்கு முன்பு சுல்தானியர்கள் அங்கே நடத்திய தாக்குதலில் அங்கே இருந்த கோயில் இடிக்கப்பட்டதாகவும் அங்கே இருந்த பெருமாள் விக்ரகம் கவர்ந்து செல்லப் பட்டதாகவும் தெரிகிறது. அந்த இடத்தில் இடிக்கப்பட்ட ஆலயத்தைக் கட்டி வருகிறோம். அந்த ஆலயத்தில் மக்கள் வந்து வழிபட வேண்டும் என்றால் அந்த விக்ரகம் இன்றியமையாதது. அதைக்கேட்டு வாங்கி வரவே நான் வந்திருக்கிறேன்."

"ஒரு சாதாரண சிலைக்காகவா தள்ளாத வயதில் நீங்கள் இவ்வளவு தூரம் வரவேண்டும்? வேறு சிலையை வடித்துக் கொள்ள முடியாதா?"

"முடியும். இருந்தாலும் புராதனமான விக்கிரகத்திற்குத்தான் சிறப்பு. நமது கால்களில் ஒன்று உடைந்து விட்டால் கொம்பை ஊன்றிக் கொண்டு நடக்கலாம். ஆனால் கொம்பு காலாகி விடாது. கொம்பு கொம்பு தான். கால் கால் தான்."

"சிலைகள் எதற்கு? சிலை வணக்கம் எதற்கு?"

"உங்களுக்கு ஒரு கோட்பாடு. எங்களுக்கு ஒரு கோட்பாடு. மக்கள் தங்கள் கவனத்தை ஒருமுகப்படுத்தி வழிபடுவதற்கு ஒரு இடம் தேவை. அதுவே ஆலயம். அங்கே ஒரு விக்ரகம் தேவை. அதுவே தெய்வம். பல யோசனை தூரம் பரந்து வாழும் ஜனங்களுக்கு தத்தம் வசதிகளுக்கேற்ப அவரவர் ஊர்களில் ஆலயங்களைக் கட்டி விக்ரகங்களை வைத்து வழிபடுவதென்பது நெடுங்காலமாக இருந்து வரும் வழக்கம். மேல்கோட்டையிலும் அது தான் நிலை. ஆகவே அக்கோயிலுக்குரிய விக்ரகத்தை நீங்கள் எங்கள் மக்களுக்குக் கொடுத்துதவ வேண்டும்" என்றார் இராமானுஜர்.

சுல்தான் சற்று யோசித்து விட்டு "எங்கள் கொட்டடியில் சில சிலைகள் இருக்கின்றன. அதில் நீங்கள் கோரும் சிலை இருப்பதாகத் தெரியவில்லை. வேண்டுமானால் போய் பாருங்கள்"

என்று கூறி இராமானுஜரை சில சேவகர்களுடன் கொட்டடிக்கு அனுப்பி வைத்தான்.

ஆனால் ஏமாற்றமே மிஞ்சியது.

கொட்டடியில் சுமார் நூறு பஞ்சலோக விக்ரகங்கள் இருந்தன. அவை யெல்லாம் அம்மன் சிலைகளாகவும் இதர தெய்வச் சிலை களாகவும் இருந்தன. ஒன்று கூட பெருமாள் சிலையாக இல்லை.

"நான் என்ன செய்யமுடியும் நீங்கள் கோரும் சிலை இல்லை யென்றால்?" என்று கேட்டான் சுல்தான்.

அப்போது பிரதானி ஒருவன் சுல்தானின் காதில் ஏதோ ஓத "அப்படியா?" என்று வியந்த சுல்தான் "எனது மகள் பீவி லகிமார் ஏதா ஒரு சிலையை வைத்திருக்கிறாளாம். ஒரு வேளை அதுவாக இருக்குமோ? அவள் எதற்காக அச்சிலையை வைத்திருக்கிறாள்?" என்று கேட்டுக் கொண்டான்.

"அவள் அந்தப்புரத்தில் அல்லவா இருக்கிறாள்? நீங்கள் எப்படி போக முடியும்? சரி சரி. நீங்கள் சன்யாசி தானே? பிரதானியை அழைத்துக் கொண்டு அந்தப் புரத்திற்குச் செல்லுங்கள். சிலை இருக்கிறதா என்று பாருங்கள். உங்களுடையது தானா என்பதை உறுதி செய்யுங்கள்" என்றான்.

பிரதானி பணிப் பெண்களோடு இராமானுஜரை அழைத்துக் கொண்டு அந்தப் புரத்திற்குச் சென்றான்.

அங்கே சுல்தானின் மகள் பீவி கட்டிலில் படுத்து உறங்கிக் கொண்டிருந்தாள். வயது இருபது இருக்கலாம். உறக்கத்தில் கூட அவளது முகம் களையாக இருந்தது. பொலிவு கலையாமல் இருந்தது. முகம்மதிய பெண்களுக்கு உரிய முகப் பொலிவு அவளிடம் இல்லை. ஏதோ ஒரு மாற்றமிருந்தது.

அவளது பக்கத்திலேயே சிலை இருந்தது.

பெருமாள் சிலையே தான்.

"இதுதான். இதுவேதான். ராமப்பிரியரேதான்" என்றார் இராமானுஜர்.

அவரது மனம் பரவசப்பட்டு முணுமுணுத்தன.

**ஆதியான வானவர்க்கும் அண்டமாய வப்புறத்து**
**ஆதியான வானவர்க்கும் ஆதியான ஆதிநீ**
**ஆதியான வானவாணர் அந்தகாலம் நீயுரைத்தி**
**ஆதியான காலம்நின்னை யாவர்காண வல்லரே!***

* திருமழிசை ஆழ்வாரின் திருச்சந்த விருத்தப் பாசுரம் எண் 759.

பிரதானி இராமானுஜரை அன்றிரவு தங்கியிருக்கும் படியும் சுல்தானிடம் பேசி விட்டு ஒரு முடிவுக்கு வரலாம் என்று தெரிவித்தார்.

இராமானுஜருக்கு உறக்கம் வரவில்லை.

விக்ரகம் கிடைக்காத வரை ஒரு கவலை.

விக்ரகம் கிடைத்த பிறகு வேறு கவலை.

"ஆகா! ராமப் பிரியரே! இது என்ன வேடிக்கை! முகம்மதியப் பெண்மணியின் பக்கத்தில் செல்லப் பிள்ளையைப் போல படுத்திருக்கிறீரே! என்ன வினோதம் இது! ஊரெல்லாம் உன்னைத் தேடித் தவித்துக் கொண்டிருக்க நீ இங்கே வாத்ஙல்ய மாகவும் உல்லாசமாகவும் படுத்திருக்கிறாயே! இது முறையா? இது தகுமா? உன்னைக் கண்டதும் வாரி அணைக்க வேண்டும் போலிருக்க, நீயோ இந்த முகம்மதியக் குழந்தையோடு சயனம் செய்கிறாயே! உனக்கென்ன ஆயிற்று! அல்லது அந்த பெண்ணிற்குத்தான் என்ன ஆயிற்று? இது என்ன நான் கண்டறியாத சேர்க்கை? வரதா! அரங்கா! தள்ளாத வயதில் இவ்வளவு தூரத்திற்கு என்னை இழுத்து வந்த நீ என்னை இன்றும் அல்லாட வைக்கப் போகிறாயா? கருணை காட்டு பகவானே!" என்று இறைஞ்சினார்.

மறுநாள் சுல்தான் தன் மகளைச் சந்தித்தான். அவள் மடியில் பெருமாள் சிலை இருந்ததைக் கண்டான்.

"இது என்ன வேடிக்கை பீவி! இந்தச் சிலையை எதற்காக உன்னோடு வைத்திருக்கிறாய்?" என்று கேட்டான்.

"இது சிலையில்லை வாப்பா. என் உயிர். இதைப் பிரிந்து என்னால் வாழ முடியாது" என்றாள் பீவி.

"சிலை வணக்கம் நமக்கில்லை பீவி. அதை விட்டு விடு"

"இது சிலை இல்லை. என் உயிர்."

"சிலையே வேண்டாம் என்னும் போது சிலை எப்படி உன் உயிராகும்."

"உங்களுக்குச் சிலையும் வேண்டாம் சிலை வணக்கமும் வேண்டாம் என்றால் போங்கள். எனக்கிது வேண்டும். வேறெதுவும் வேண்டாம்."

"உனக்குரிய மகிழ்ச்சியான விஷயங்கள் நிறைய இருக்கின்றன பீவி."

"என் மகிழ்ச்சி அனைத்தும் இது மட்டும் தான்."

"நீ அரியணையில் அமரக் கூடியவள்."

“எந்த அணையும் எனக்கு வேண்டாம். இந்த ஹரி மட்டும் எனக்குப் போதும்.”

“ஹரியா?”

“ஆம். இதன் பெயர் அது தான் என்று சொன்னார்கள். ஹரியே எனக்கு தெய்வம். ஹரியே என் பதி. எனக்கு வேறு எதுவும் தெரியாது.”

“தவறு பீவி. இந்தச் சிலைக்கு உரிமையானவர்கள் வந்திருக்கிறார்கள். அவர்களிடம் ஒப்படைப்பதே சரி”

“இவர் எனக்கு மட்டுமே உரிமையானவர். யாருக்கும் தர மாட்டேன்.”

அவளிடம் இரண்டு நாட்களாகப் பேசிப் பார்த்தான் சுல்தான்.

அவள் மசியவில்லை.

இராமானுஜரை அழைத்துச் சொன்னான்.

“உங்கள் மகளிடம் நான் கேட்டுப் பார்க்கிறேன்.”

“சரி வாருங்கள்”

இராமானுஜர் அறை வாசலில் வந்து நின்றதைக் கண்ட போது ஒளியுருவம் ஒன்று வந்து நின்றது போலிருந்தது சுல்தான் மகளுக்கு.

அவளுக்கு மெய் சிலிர்த்தது.

அவளைக் கனிவுடன் பார்த்த இராமானுஜர், “குழந்தாய்! நீ எங்கள் பெருமாளிடம் காட்டும் ஈடுபாடு எனக்கு அளவில்லா ஆனந்தத்தையும் ஆச்சரியத்தையும் தருகிறதம்மா. எங்கள் ஊரிலும் கோதை என்ற நாச்சியார் இருந்தாள். மானிடர்க்கு வாழ்க்கைப்பட மாட்டேன். அரங்கனுக்கே அர்ப்பணித்துக் கொள்வேன் என்று அவன் வயப்பட்டு அவனை ஆராதித்து அவனுக்குரிய மாலையை அணிந்து அவனிடமே ஒன்றிப் போனாள். நாங்களெல்லாம் போற்றி வணங்கும் தெய்வ மகள் ஆனாள். அவள் கூட எங்கள் குலப்பெண்மணி. நீயோ எங்கள் குலத்திற்கெல்லாம் அப்பாற்பட்ட அயல் நாட்டு மதத்திற் குரியவள். அப்படிப்பட்ட நீ எங்கள் எம்பெருமானிடம் ஈடுபடுகிறாய் என்றால் நீ பாக்கிய சாலி. அந்த எம்பெருமானின் அருள். இது சத்தியம் குழந்தாய். அந்த எம்பெருமானிடம் நீ செலுத்தும் ஈடுபாடும் பக்தியும் நிச்சயமாக உன்னை அவனிடம் சேர்க்கும். உன் வசம் உள்ள பெருமானை எதிர்பார்த்து எங்கள் ஊரில் ஆயிரக்கணக்கான மக்கள் காத்திருக்கிறார்கள் மகளே. அவர்கள் அனைவருக்கும் இவர் தான் தெய்வம். இவரை அங்கே பிரதிஷ்டை செய்து வழிபடுவதற்காகத்



தான் ஆலயம் கட்டப் பட்டு வருகிறது. விக்ரகம் இல்லாத ஆலயம் உயிரில்லாத சடலம் போன்றது. இவர் அங்கே சென்றால்தான் மக்கள் மகிழ்ச்சி யடைவார்கள். அமைதியடைவார்கள். எனவே ராமப் பிரியரை அந்த மக்களுக்காக தந்துதவு குழந்தாய். இந்த வயோதிகத் துறவியின் பயணத்தையும் பிரயாசையையும் வீணாக்கி விடாதே'' என்றான்.

பீவி எதுவும் பேசவில்லை. பிரமையில் இருப்பவளைப் போல அமர்ந்திருந்தாள்.

அவள் பக்கத்தில் இருந்த விக்ரகத்தைப் பார்த்த இராமானுஜர் "எங்கள் செல்லப் பிள்ளையே! என்னிடம் வரமாட்டாயா?'' என்றார்.

வானத்தில் இடி இடிக்கும் ஒலி கேட்டது.

"செல்லப் பிள்ளையே வாராய்'' என்றார் இராமானுஜர்.

விக்ரகம் நகர்ந்தது. இராமானுஜரின் மடியில் வந்து சாய்ந்தது.

சுல்தானுக்கு ஆச்சர்யம்!

பிரதானிக்கு அதிர்ச்சி!

பீவிக்குப் பிரமை!

இராமானுஜருக்கோ பரவசம்!

விக்ரகத்தைக் கட்டி அணைத்து ஆனந்தக் கண்ணீர் வடித்தார்.

"இவர் சாதாரணமானவரல்ல. சிலை இவருக்கு உரியது தான்'' என்று நினைத்த சுல்தான் "துறவியரே! இது தான் தக்க சமயம். மகள் பிரமையில் இருக்கும் இந்த நிலையில் எடுத்துச் செல்வது தான் உசிதம். எடுத்துச் செல்லுங்கள்'' என்றான்.

இராமானுஜர் சிலையுடன் எழுந்தார்.

சிலையைப் போலிருந்த பீவியைப் பார்த்து "நீடூழி வாழ்வாய் குழந்தாய்'' என்று வாழ்த்தி விட்டு அகன்றார்.

வெளியே இடியும் மின்னலுமாக உண்டாயிற்று. அகால மழை அசுரத் தனமாகப் பெய்தது. டில்லி அதிர்ந்தது.

தன்னுடன் இருந்தவர்களைப் பார்த்த இராமானுஜர் "இன்று இங்கே அதிசயமாக அகால மழை பெய்கிறது. ஸ்ரீவில்லி புத்தூரில் ஆண்டாள் நாச்சியார் அவதரித்த போது நடந்த அதிசயங்கள் எனக்கு நினைவுக்கு வருகின்றன" என்று சொல்லி அதைச் சொல்லவும் செய்தார்.

**'மண்ணோங்கின மானிடர் ஓங்கின சீர்**
**விண்ணோங்கின வேதியர் ஓங்கினர் ஏழ்**
**பண்ணோங்கின பாடல்கள் ஓங்கின தேர்**
**கண்ணோங்கின கற்றவர் ஓங்கினரால்'***

"ஆண்டாள் நாச்சியார் அவதரித்த போது நிகழ்ந்த அதிசயங்களைப் போலவே ராமப்பிரியர் அந்த முகம்மதிய பெண்மணியைப் பிரிந்த போது அகால மழை பெய்ததாகவே நான் கருதுகிறேன். அந்தப் பெண் பீவி சாதாரணப் பெண்ணாக இருக்க முடியாது. அவளுக்கும் ராமப் பிரியருக்கும் ஏதோ பந்தம் இருக்க வேண்டும். தற்போது அவள் வேறு குலத்தில் - மதத்தில் பிறந்திருந்தாலும் போன ஜென்ம பந்தம் தொடர்கிறது என்றே தோன்றுகிறது" என்று சொன்ன இராமானுஜர் "அப்பெண்ணை ஏமாற்றி ராமப்பிரியரைக் கொண்டு வந்து விட்டதாக நான் கருதவில்லை. அவள் பெருமாளோடு ஈடுபட்டிருந்தாள். தன்னை இழந்திருந்தாள். அவளது ஆறாத பக்தி ராமப்பிரியர் விக்ரகத்தை விட்டு அவன் பிரதிஷ்டையாகப் போகும் மேல்கோட்டைக்கே சென்று விட்டது என்று நினைக்கிறேன். பிரமையிலிருந்து விடுபட்டிருந்தாலும் அவள் மறுத்திருக்க மாட்டாள்" என்றார்.

ராமப்பிரியரை காஷாயத்தில் வைத்து ஊஞ்சலைப் போல ஆக்கி மூங்கிலில் கட்டி தூக்கி வந்தார்கள் இராமானுஜருடன் வந்தவர்கள்.

கங்கை, யமுனை முதலிய புண்ணிய நதிகளிலிருந்து புனித நீரையும் சேகரித்துக் கொண்டார்கள்.

ஓய்வெடுக்கும் காலங்களில் பெருமாளை ஊஞ்சலில் வைத்து ஆட்டித் தாலாட்டுப் பாடினார் இராமானுஜர்.

**மாணிக்கம் கட்டி வயிரம் இடைக்கட்டி**
**ஆணிப்பொன்னால் செய்த வண்ணச் சிறுத்தொட்டில்**
**பேணி யுனக்கு பிரமன் விடுதந்தான்**

* பாடல் எண் 1157. ஆழ்வார்கள் வைபவம் வடிவழகிய நம்பி தாசர் இயற்றியது.

மாணிக் குறளனே தாலேலோ!
வையம் அளந்தானே தாலேலோ! 1

உடையார் கனமணியோடு ஒண் மாதுளம்பூ
இடைவிரவிக் கோத்த எழில் தெழ்கினோடு
விடையேறு கபாலி ஈசன் விடுதந்தான்
உடையாய் அழேல் அழேல் தாலேலோ
உலகம் அளந்தானே தாலேலோ!* 2

ஸ்ரீவில்லிபுத்தூரில் கண்ணனை அலங்கரித்து அவனது பிள்ளைப் பருவங்களைப் பிள்ளைத் தமிழாகப் பாடினார் பெரியாழ்வார். கண்ணனுக்கு பிரமன், சிவன் முதலான பல்வேறு தேவன்கள் வழங்கிய ஆபரணங்களை குறிப்பிட்டுத் தாலாட்டு பாடுகிறார்.

ராமப் பிரியருக்கு இராமானுஜர் சூட்டிய் வெண் பருத்தி ஆடையைத் தவிர வேறு எதுவும் இல்லை.

இருப்பினும் ஆடைகளை விட ராமப் பிரியரே அங்கே அனைத்துமாய் இருந்ததால் இராமானுஜர் பெரியாழ்வாராக மாறி தாலாட்டு பாடியும் நீராட்டிப் பாராட்டியும் விக்ரகத்தைச் சுகமாகப் பயணப்படுத்தினார்.

டில்லியிலிருந்து திரும்பும் போது முன்பு வந்த பாதையில் பயணிக்காமல் வணிகர்கள் குழு வடக்கிலிருந்து தெற்கே பயணம் செய்யும் பெருவழிகளில் பயணம் செய்தார்.

விக்ரகத்தைக் கள்வர்கள் கவரமுற்படுவார்கள் என்ற கவலை அவருக்கு இல்லை.

இவ்வளவு தூரம் தன்னைப் பயணப்படுத்திய ராமப்பிரியன் தன்னைக் காத்துக் கொள்வான் என்று கருதினார்.

ஆனால் அயோத்தியைத் தாண்டிய போது பெருவழியில் சுமார் ஐம்பது புரவி வீரர்கள் அவரையும் அவரோடு வந்தவர்களையும் சூழ்ந்து கொண்டார்கள்.

“நில்லுங்கள்” என்றார்கள்.



* பெரியாழ்வார் திருமொழி. முதல் திருமொழி - நான்காம் பத்து பாசுரம் 1 மற்றும் 2.



புதுப்புது மதங்கள் தோன்றும் போது புதுப்புது கொள்கைகள் உண்டாகின்றன. அவை மக்களை சென்று வெற்றி பெறுவதற்கு வாதப் போர்களே சாத்வீகமான ஆயுதங்கள்
– இராமானுஜர்




இராமானுஜர் பதற்றப்படவில்லை. பயப்படவுமில்லை.

அனைத்தும் அரங்கன் செயல். அனைத்திலும் அரங்கனே என்று கருதுபவரான அவர் தற்போது விளைந்திருப்பதும் அரங்கனின் பயிரே என்றெண்ணி அமைதியாக நின்றார்.

கூட இருந்தவர்களும் அமைதியாக இருக்கும்படிச் சொன்னார்.

அவர்களைச் சுற்றி வளைத்த வீரர்கள் நில்லுங்கள் என்ற ஒரு வார்த்தையைப் புகன்று விட்டு சிறிது நேரம் கழித்து "பொறுங்கள்" என்றார்கள்.

பொறுமையாக இருக்க வேண்டிய இடத்தில் அவசரப் படக் கூடாது. அவசரப்பட வேண்டிய இடத்தில் பொறுமையாக இருக்கக் கூடாது.

தான் மேற்கொண்ட பயணமானது பொறுமையின் சிகரமாக இருக்கும் போது இடை வழியில் சற்று பொறுமையாக இருப்பது இராமானுஜருக்குச் சிரமமாக இல்லை.

அரை நாள் பொழுது அகன்ற பிறகே தேர்களும் பரிவாரங் களுமாக வந்தான் பிரதானி.

அவனோடு பல்லக்கில் வந்தாள் பீவி.

தேரிலிருந்து இறங்கிய பிரதானி இராமானுஜரைப் பார்த்து "ஐயா! பிரமை உலகத்திலிருந்து மீண்ட சுல்தான் அவர்களின் மகள் சிலையைக் காணாமல் அதிர்ந்தாள். சிலை எங்கே என்றாள். அதை நீங்கள் மேல் கோட்டை என்ற இடத்திற்கு எடுத்துச் சென்று விட்டதாகச் சொன்னேன். நீங்கள் வா என்றதும் சிலை தானாக நகர்ந்து உங்கள் மடியில் வந்து அமர்ந்ததைச் சொன்னேன். பீவி அழவில்லை. அரற்றவில்லை. என்னையும் மேல்கோட்டைக்கு அழைத்துச் செல்லுங்கள் என்றாள். வேண்டாம் பீவி. உனக்கு இங்கே பதவிகள் உள்ளன. பொறுப்புகள் உள்ளன. சந்தோஷங்கள் உள்ளன. சுகங்கள் உள்ளன. என்னை விட்டுப் போகாதே என்றார் சுல்தான். இங்கே எல்லாம் வெறுமையாக இருக்கிறது. எனக்கு

எல்லாமாக இருப்பது சிலைதான். அது இருக்கும் இடமே என் இடம். இங்கே ஒரு வினாடியும் இருக்க மாட்டேன். இருந்தால் இறந்து விடுவேன். என்னை அழைத்துச் செல்லுங்கள் என்றாள். பீவியைக் கட்டுப்படுத்தி வைப்பது இயலாத காரியம் என்பதை உணர்ந்த சுல்தான் என்னை அழைத்து இவளை பல்லக்கில் ஏற்றிக் கொண்டு அத்துறவியோடு விட்டு விடு அவள் தன் விருப்பம் போல் அச்சிலை இருக்கும் இடத்திலே இருக்கட்டும். அவள் சந்தோஷமாக இருந்தால் போதும் என்றார். எனவே தான் வீரர்களை அனுப்பி உங்களை நிற்கச் சொல்லி விட்டு பின்னால் நாங்கள் வந்தோம். எங்களோடு பல்லக்குத் தூக்கிகள் நூறுபேர் வந்திருக்கிறார்கள். அவர்கள் பல்லக்கை மாறி மாறி சுமப்பார்கள். சுல்தான் மகள் இனி உங்கள் பொறுப்பு. ஏற்றுக் கொள்ளுங்கள்" என்றான்.

இராமானுஜர் மறுப்பு தெரிவிக்கவில்லை. பீவியை மேல் கோட்டைக்கு அழைத்துச் செல்ல சம்மதித்ததோடு அவள் இருந்த பல்லக்கிலேயே ராமப்பிரியரையும் வைத்தார். பீவி அந்த விக்கிரகத்தை அணைத்தவாறே பயணம் செய்தாள். அவளுக்கு எல்லையில்லாத மகிழ்ச்சி.

அவள் வந்ததில் ராமப்பிரியருக்கும் பல்லக்கு கிடைத்ததாலும் அவளது பக்தையின் மடியிலேயே பயணம் செய்ய நேரிட்டதாலும் இராமானுஜரும் மகிழ்ச்சியடைந்தார்.

அனைவரும் கோதாவரிக் கரையை அடைந்து தங்கினார்கள்.

அப்போது பீவி இராமப்பிரியரைத் தூக்கி ஆற்றங்கரையில் இருந்தப் பாறை மீது அமர்ந்தாள்.

டில்லியில் இருந்த போது ஓரிருமுறை ராமப்பிரியரைத் தேரில் வைத்துக் கொண்டு யமுனையாற்றுக்குப் போவாள். அவரோடு ஆற்றங்கரையில் அமர்ந்து கொண்டு நெஞ்சுருகப் பாடுவாள்.

அதைக் கோதாவரி ஆற்றங்கரையில் நினைத்துக் கொண்டாள் பீவி.

அந்தப் பாடலை பாடவும் செய்தாள்.

**யமுனை ஆற்றிலே**
**ஈர காற்றிலே**
**கண்ணனோடு நான் ஆட**
**பார்வை பூத்திட**
**பாதை பார்த்திட**
**பாவை ராதையோ வாட**

**இரவும் போனது**
**பகலும் போனது**
**மன்னன் இல்லையே கூட**
**இளைய கன்னியின்**
**இமைத்திடா கண்**
**இங்குமங்குமாய் தேட**

**ஆயர் பாடியில்**
**கண்ணன் இல்லையோ?**
**ஆசை வைப்பதே**
**அன்பு தொல்லையோ?**
**பாவம் ராதா!***

தூரத்தில் இருந்து அந்தப் பாடலையும் அதன் இனிமையையும் கேட்ட இராமானுஜர் "இவள் ஆண்டாள் நாச்சியாரின் மறு அவதாரம்தான். இவளை பீவி நாச்சியார் என்றே அழைக்கலாம்" என்று சொல்லிக் கொண்டார்.

மேல் கோட்டைக்கு ஒரு காத தூரம் இருக்கும் போது யாரும் எதிர்பாராதது நடந்தது.

பல்லக்கில் ராமப் பிரியரை மார்பில் அணைத்தபடி வந்து கொண்டிருந்த பீவி அதிலேயே உயிரை விட்டிருந்தாள்.

அதைக் கண்ட இராமானுஜர் "பீவி நாச்சியார் ராமப் பிரியரிடம் ஐக்கியமாகி விட்டாள். ஆண்டாள் நாச்சியாருக்குப் பிறகு வேறு யாருக்கும் கிடைக்காத பேறு இவளுக்குக் கிடைத்து விட்டது. உடலால் இவள் பிரிந்து விட்டாலும் இவளது ஆத்மா பரமாத்மாவுடன் தான் இருக்கும். மேல் கோட்டையில் பெருமாளை பிரதிஷ்டை செய்யும் போது அவரது பரம பக்தையான இவளது வடிவத்தைப் பெருமாளின் திருவடிப் பிரதேசத்தில் வைக்க வேண்டும்.** இவளது உடல் புனித உடல். இவளுக்கு உரியவர்கள் டில்லியில் இருக்கிறார்கள். அவர்களை இங்கு வரவழைக்க முடியாது. மேல்கோட்டைக்குப் போன பின்பு அவர்களுக்குச் செய்தியனுப்பலாம். ஆகவே இவளது உடலை இங்கேயே அடக்கம் செய்து இந்தப் பல்லக்கையே சமாதியைப் போல அமையும் படி வையுங்கள்" என்றார்.

திருக்குலத்தோர் என்று இராமானுஜரால் கருதப்பட்ட வேடர்களும் மலைவாசிகளும் பீவியின் உடலை அவர் கூறிய படியே அடக்கம் செய்தார்கள்.

---

* பாடலாசிரியருக்கு நன்றி.

** இராமானுஜர் தான் கூறிய படியே மேல்கோட்டை ஆலயம் கட்டி முடித்த பிறகு மூலவர் விக்ரகத்தின் காலடியில் பீவி நாச்சியாரின் வடிவத்தைச் செய்து வைத்தார். அதனை இன்றும் காணலாம்.

எல்லோரும் தடாகத்தில் நீராடினார்கள்.

ராமப்பிரியரை இராமானுஜர் நீராட்டினார்.

அனைத்தும் முடிந்த போது முன்பு போல பெரு மழை பெய்தது. வானத்தைக் கிழிப்பது போல பளிச்சென்று மின்னல்கள் தோன்றின. மின்னல் கீற்றுகள் வழக்கத்திற்கு மாறாக வண்ண வண்ணமாகத் தோன்றி மறைந்தன. இடிமுழக்கமானது அது வரை கேட்டிராத பிரளயகால முழக்கமாக இருந்தது. இடி இடித்தால் மழை பெய்யாது என்ற விதிக்கு மாறாக இடியும் மின்னலும் மழையும் வாத்தியக் கச்சேரி நடத்துவது போல் அந்த பரம பக்தையான பீவியின் உடலுக்கு அஞ்சலி செலுத்தின.

மூன்று நாள் கழித்து மேல்கோட்டையை இராமானுஜர் அடைந்த போது மன்னனும், மற்றவர்களும் மக்களும் "நாராயணா! நாராயணா" என்று முழங்கி ஒட்டு மொத்தமாகத் தரையில் விழுந்து வணங்கினார்கள்.

இராமானுஜரிடம் இருந்த ராமப்பிரியர் விக்கிரகத்தைக் கண்ட மன்னன் விஷ்ணுவர்த்தனன் "சுவாமி! சாம்ராஜ்யாதி பதிகளால் இயலாத மாபெரும் காரியத்தை மகானாக இருந்து தாங்கள் நிறைவேற்றியிருக்கிறீர்கள். நாங்கள் படையெடுத்துப் போயிருந்தாலும் டில்லி சுல்தானை வென்றிருப்போமே தவிர பெருமாளைக் கொண்டு வந்திருக்க முடியாது. தங்களால் மட்டுமே முடிய வேண்டும் என்பது பெருமானின் சித்தமாக



இருக்க வேண்டும். இல்லையென்றால் சோழ நாட்டில் நிலைமை சீர்குலைந்து - தாங்கள் கர்நாடகத்திற்கு வந்து - திருமண்ணிற்காக மண்ணை அகழ்ந்து - அங்கே திருமண்ணோடு திருநாராயணனும் கிடைத்தது - அவர் கிடைத்ததால் இங்கே அவருக்கு ஆலயம் கட்ட முற்பட்டது - ஆலயம் கட்டும் வேளையில் உற்சவ மூர்த்தி இல்லாதது - அது டில்லியில் இருப்பதாகக் கண்டறிந்தது - தாங்கள் தங்கள் வயதையும் பொருட்படுத்தாமல் டில்லிக்குச் சென்று பெருமாளை மீட்டது ஆகிய எல்லாமே அதிசயங்களாகத் தோன்றுகிறது சுவாமி. மேல் கோட்டை தான் அந்த அதிசயங்களுக்கு நிலைக்களனாக அமைந்திருந்தது. மேல் கோட்டை அழிந்தாலும் மனித இனம் உள்ள வரை தங்களையும் தங்களது அருஞ் செயல்களையும் மறக்க முடியாது. எனது பணிவான வணக்கத்தையும் இந்த நாட்டு மக்களின் வணக்கத்தையும் ஏற்றுக் கொள்ளுங்கள். பெருமாளை என்னிடம் கொடுங்கள்" என்று சொல்லி இராமப்பிரியரை வாங்கிக் கொண்ட மன்னன் தலையிலே தாங்கிச் சென்று நடந்து உயரமான மேடை ஒன்றில் வைத்தான். மக்கள் எல்லோரும் பெருமாளைக் கண்ணாரக் கண்டு வாழ்த்து கோஷங்களை எழுப்பினார்கள்.



இரண்டு நாட்கள் ஓய்வெடுத்த பின் இராமானுஜர் மன்னனையும் சீடர்களையும் அழைத்து தனது டில்லி பயணத்தைப் பற்றி எடுத்துரைத்தார்.

"டில்லி சுல்தான் மற்றும் அவனது மகள் ஆகிய இருவரது மனமும் விசாலமாக இருந்திரா விட்டால் எனது பயணம் வெற்றி பெற்றிருக்காது. அரங்கன் தான் சுல்தானுக்குள் இருந்து கொண்டு அவனைக் கனிவானவனாக மாற்றியிருக்கிறான். ஆகவே அவனுக்கு எல்லோரும் மானசீகமாக நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுங்கள். விஷ்ணு வர்த்தனா! சுல்தான் மகளது மரணம் குறித்தும் அவள் அடக்கம் செய்யப்பட்டது குறித்தும் செய்தி அனுப்பு. அச் செய்தியில் "உங்கள் மகள் உடலைத்தான் விட்டாள். உயிர் எங்கள் பெருமாளுடன் சேர்ந்து விட்டது. பெருமாளை தரிசிப்பவர்கள் அவளையும் தரிசிப்பார்கள் என்பதைத் தவறாமல் குறிப்பிடு" என்றார்.

"அப்படியே ஆகட்டும் சுவாமி?"

"ஆலயம் எப்போது முடிவுபெறும்?"

"ஆறு மாதங்களில் பணிகள் நிறைவடைந்து விடும் சுவாமி."

"மன்னா! டில்லி சென்று வருவதற்கு மூன்று வருடங்கள் ஆகி விட்டன. அதற்கு முன்பாக இங்கே நான் எட்டு ஆண்டுகளாக இருந்தேன். தமிழ்நாட்டை விட்டு வந்து பதினோரு ஆண்டுகள் ஆகிவிட்டன. எப்போது திரும்புவேன் என்று தெரியவில்லை. நீ கூறிய பஞ்சநாராயண ஆலயங்கள் கட்டி முடிக்கத் தாமதமாகலாம். ஆனால் மேல்கோட்டை ஆலயம் நீ கூறியபடி ஆறுமாதங்களில் முடிய வேண்டும். பெருமாளை பூரணமான ஆலயத்தில் பிரதிஷ்டை செய்தால்தான் நான் மேல்கோட்டைக்கு வந்ததற்கு அர்த்தம் இருக்கும். அதோடு நீ இரண்டு விஷயங்களைக் கட்டாயம் செய்ய வேண்டும்."

"சொல்லுங்கள் சுவாமி"

"சுல்தானின் மகள் பீவி முகம்மதியப் பெண்ணாக இருந்தாலும் ராமப்பிரியரின் பரமபக்தையாக இருந்தாள். முன் பிறவியில் விட்டகுறை தொட்டகுறையாக இருந்த ஆசை தான் அவளுக்கு இந்தப் பிறவியில் நிறைவேறி இருக்கிறது. இந்துக்கள் கோயில்களில் புகுந்து விக்ரகங்களைக் கவர்ந்தவர்கள் முகம்மதியர்கள். இந்த ராமப்பிரியரைக் கவர்ந்து சென்றவர்களும் அவர்கள்தான். ஆனால் அவர்களைச் சேர்ந்த முகம்மதிய பீவி நம் பெருமாளை உயிருக்கு உயிராக நேசித்திருக்கிறாள். சிலை வணக்கம் இல்லாத மதத்தினளாக இருந்து கொண்டு பெருமாள் சிலையைத் தன்னுடனேயே இரவும் பகலும் வைத்துக் கொண்டு ஆராதித்து வந்த அவள் அதைப் பாதுகாத்தும் வந்திருக்கிறாள். அவளது அருஞ்செயலை நாம் அலட்சியப்படுத்தக் கூடாது. அங்கீகரிக்க வேண்டும். பீவி நாச்சியார் என்று அவர் போற்றப்பட வேண்டும்."

"அவளுக்கும் ஓர் ஆலயத்தை அமைத்து விடலாம் சுவாமி."

"வேண்டாம். அவளைப் பெருமாளிடமிருந்து பிரிக்க வேண்டாம். பெருமாளின் திருவடிகளைச் சேர்ந்து விட்டவள் அவள். ஆகவே பெருமாள் விக்ரகத்தின் திருவடிகளிலேயே அவளது வடிவத்தை அமைக்க வேண்டும். பிற்காலத்தில் பெருமாளைச் சேவிக்கும் பக்தர்களின் கரங்கள் அவளுக்காகவும் குவிய வேண்டும்."

"அப்படியே ஆகட்டும் சுவாமி"

"இரண்டாவது விஷயம். என் பயணத்தின் போது உன் வீரர்கள் பாதுகாப்பாக வரவில்லை. மலைவாசிகளும் வேடர்களும்தான் வந்தார்கள். பாதுகாத்தார்கள். அவர்கள் இல்லை என்றால் நான் டில்லிக்குப் போயிருக்கவும் முடியாது. அங்கிருந்து வந்திருக்கவும் முடியாது. வர்ணாசிரமத்தின் படி பார்த்தால்

அவர்கள் நான்காம் வர்ணத்தவர்கள் கூட அல்ல. ஐந்தாவதாக இருக்கக் கூடிய பஞ்சமர்கள். நானோ அவர்களைப் பஞ்சமராகக் கருதவில்லை. புனிதமானவர்களாகக் கருதுகிறேன். அவர்கள் திருக்குலத்தோர். எனக்கும் பெருமாளுக்கும் காப்பாக வந்த அந்தத் திருக்குலத்தோருக்கு மேல் கோட்டையில் நீ தான் குடியிருப்புகளைக் கட்டித் தர வேண்டும். இந்த ஆலயம் கட்டி முடித்து சம்ப்ரோட்ஷணம் செய்ததற்குப் பிறகு ஆண்டில் ஒரு நாள் அவர்கள் ஆலயப் பிரவேசம் செய்யவும் பெருமானைத் தரிசிக்கவும் அனுமதிக்க வேண்டும்."

"ஆகா! தங்கள் கருணையே கருணை! மகான்களால் மட்டுமே இவ்வாறு யோசிக்க முடியும். தங்கள் கட்டளையை நிச்சயம் நிறைவேற்றுவேன் சுவாமி" என்றான் மன்னன்.

மன்னன் அகன்ற பின் தன் சீடர்களுடன் ஏகாந்தமாகப் பேசினார் இராமானுஜர்.

சீடர்கள் ஒரு விஷயத்தை அவர்களிடம் தெரிவித்த போது -

"அதனால் என்ன? நீங்கள் வாதம் செய்ய வேண்டியது தானே?" என்று கேட்டார் இராமானுஜர்.

"தங்கள் கட்டளையின்றி நாங்கள் எதுவும் செய்ய முடியாது சுவாமி."

இராமானுஜர் முதலியாண்டானைப் பார்த்து "ஆண்டான்! நீயே தலைமையேற்று வாதப் போர்களை நடத்து. புதுப்புது மதங்கள் தோன்றும் போது புது புதுக் கொள்கைகள் உண்டாகின்றன. அவை மக்களிடையே சென்று வெற்றி பெறுவதற்கு வாதப் போர்களே சாத்வீகமான ஆயுதங்கள். ஆகவே அதை நீங்கள் கையிலெடுங்கள். சமணர்கள் அனல் வாதங்களையும் புனல் வாதங்களையும் செய்யும் முறை தவறு. அதைத் தடுங்கள். மக்களிடம் சொல்லுங்கள். முறையான வாதங்களுக்கு வழி செய்யுங்கள்" என்றார்.

ஒரு நாள் மேல் கோட்டையின் மேல் இருந்த குன்றின் மீதிருந்த யோகநரசிம்மர் ஆலயத்திற்குச் சென்று பெருமானை வழிபட்டார். பிரஹலாதனால் உருவாக்கப்பட்டு வழிபாடு செய்யப்பட்ட யோக நரசிம்மரைத் தொழுது விட்டு தெற்கு பத்ரிகாசிரமம் என்று சொல்லப்பட்ட பத்ரி நாராயணர் சன்னிதிக்கும் சென்று தொழுதார். அவரது மனம் சஞ்சலப் பட்டது.

அரங்கனின் நினைவு அவரை வாட்டியது. திருவரங்கமும் அதன் சிறப்புகளும் அவர் கண் முன்னே நிழலாடின. யோக

நரசிம்மர் ஆலயத்தில் இருந்த குன்றின் முனையில் நின்று அரங்கன் இருக்கும் தென் திசையை நோக்கினார்.

"அரங்கா! டில்லி வரை செல்ல வைத்த பெருமானே! அருகில் இருக்கும் திருவரங்கத்திற்கு எப்போது அழைத்துக் கொள்ளப் போகிறாய்? உனது எழில் கோலத்தைக் காணும் பாக்கியம் எனக்குக் கிடைக்குமா? உன் அருகே இருந்து உனக்குத் தொண்டு செய்யும் பாக்கியத்தைச் சீக்கிரமாக எனக்கு அருள்" என்று வேண்டிக் கொண்ட அவரது உதடுகள் முணுமுணுத்தன.

**'ஊனாகும் திருவரங்கம் உயிராகும் திருவரங்கம்**
**வானாகும் திருவரங்கம் வழியாகும் திருவரங்கம்**
**தானாகும் திருவரங்கம் சார்பாகும் திருவரங்கம்**
**தேனாகும் திருவரங்கம் தெவிட்டாது பாழ்மனமே!'***



நீலகேசியின் திட்டப்படி வர்த்தமானீஸ்வரத்தில் பிரதான சமணத் துறவியான நேமிநாதர் வேத வாதத்தில் ஈடுபட்டிருந்தார்.

வேதங்களைப் பற்றி முதலில் பேசிய அந்தணர் ஒருவர் வேதங்கள் மிகவும் பழமையானவை. அவற்றை யொட்டிய பிற நூல்கள் தோன்றின என்றார்.

"வேதங்களும் சரி அவற்றிலிருந்து பிறந்த நூல்களும் சரி, முரண்பாடானவை. அவற்றுக்கு ஒரு சிறப்பும் இல்லை" என்றார் நேமிநாதர்.

"நீர் நாத்திகவாதி. நம்பிக்கையில்லாமல் பேசுகிறீர்கள். வேதத்தை ஓதும் உரிமையற்ற நீர் அதனை எப்படிக் குற்றங் கூற முடியும்?" என்று கேட்டார் அந்தணர்.

"கற்பதற்கு தகுதியில்லை. நான் வேதங்களைக் கற்றதாலேயே அதிலுள்ள குறைகளைக் கூறுகிறேன்."

"என்ன குறை கண்டீர்? சொற்சுவையிலா? அல்லது பொருட் சுவையிலா?"

"ஒட்டு மொத்தமாகவே குறைகளைத்தான் காண்கிறேன். உங்கள் வேதம் மனிதரால் செய்யப்பட்டது என்பதாலும், பொய்களை உரைப்பதாலும், பொருள் வேட்கைக்கும் கூடா ஒழுக்கத்திற்கும் துணை போவதினாலும், இருளையொத்த மயக்கத்திற்கும், தடுமாற்றத்திற்கும், கொலை முதலிய தீவினை களுக்கு வழி கோலுவதாகவும் இருப்பது வேதங்களில் கறைகள். குறைகள்."

---

* பக்கம் 326 வைணவமும் செந்தமிழும் By. இரா. வ. கமலக்கண்ணன்.

“எங்கள் வேதங்கள் சுயம்பு. தாமாகவே தோன்றியவை.”

“இல்லவே இல்லை. ஒருவன் ஓர் ஊரில் நடுவீடு ஒன்றில் மலங்கழித்து விட்டுச் செல்கிறான் என்று வைத்துக் கொள்வோம். அவன் யார், அவன் எப்படி அங்கே வந்தான், அங்கிருந்து எப்படிச் சென்றான் என்ற விவரங்கள் தெரியவில்லை என்று வைத்துக் கொள்வோம். அதனால் மலமானது சுயம்பு என்றும் தானாகவே தோன்றியது என்றும் சொல்ல முடியுமா? அப்படித் தான் இருக்கிறது உங்கள் வேதவாதம்.”

“வேதம் பழமையானது என்பதையாவது ஒப்புக் கொள்கிறீர்களா?”

“இல்லை. வேதங்கள் உலகில் பிறந்த பலரது பெயர்களைக் கூறுவதாலும், பிற்காலத்து நூல்களில் உள்ள செய்திகளைக் கொண்டிருப்பதாலும் குமார சம்பவம் போன்ற பிற்கால நூல்களைப் போன்றது தான் வேதங்கள். அது அநாதியானதல்ல. அதோடு வேதங்களில் முரண்பாடுகள் அதிகம்.”

“என்ன முரண்பாடுகள்?”

“உயிர் கொலை கூடாது என்று சொல்லும் வேதங்கள் தான் பொருட்பேறு காரணமாகச் செய்யும் வேள்விகளில் உயிரினங்கள் பலியிடப்படுகின்றன. காமத்தை விடச் சொன்ன வேதங்கள் தான் காமத்தை மேற்கொள்வதால் வீடு பேறு கிடைக்கும் என்று சொல்கின்றன. பிற சமயத்தினர் கூறும் நெறிகளையெல்லாம் தீயவை என்று சொல்லி பிறகு உலகில் உள்ள பல்வேறு சமய சித்தாந்தங்கள் தங்கள் வேதத்தில் உள்ளன என்று கூறுகின்றேன். இப்படி எத்தனை எத்தனையோ முரண்பாடுகள்.”*

நேமிநாதர் இது போன்ற வேத வாதப் போரில் ஈடுபட்டு தொடர்ந்து வெற்றி பெற்று வந்தார்.

இந்த உலகை ஆட்டி வைப்பது பஞ்ச பூதங்களே என்பது பூத வாதம். அந்த வாதங்களிலும் சொற்போர் புரிந்து வென்ற நேமிநாதர் தோற்றவர்களின் காதுகளில் ஈயத்தை ஊற்றினார்.

அனல் வாதத்தில் வாதம் புரிபவர்கள் நெருப்புக்கு மேலே பலகைகளைக் கட்டி அதன் மீது நிற்பார்கள். தோற்பவர்களின் பலகை அறுக்கப்படும். அவர்கள் தீயில் விழுந்து மாள்வர். இந்த ரீதியில் பலரையும் தீயில் தள்ளினார் நேமிநாதர்.

புனல் வாதத்தில் வாதம் செய்பவர்கள் தண்ணீர் தொட்டிகளில் நின்று வாதிடுவர். தோற்றுப் போனால் அவர்கள் நிற்கும்

---

* மேற்கண்ட வாதங்கள் ‘நீலகேசி’ என்னும் காப்பியத்தில் வேதவாத சருக்கத்தில் கூறப்படுகின்றன.

தொட்டியில் நீர்மட்டம் உயர்த்தப்பட்டு அதிலே அவர்கள் மூழ்கி இறப்பார்கள்.

இவ்வாறெல்லாம் நான்கு விதமான வாதங்களில் வென்று, தோற்றவர்களை அழித்து நேமிநாதர் சமணத்திற்கு உயிரூட்டி வந்த நிலையில் இராமானுஜர் டில்லியிலிருந்து திரும்பி தனது உத்தமச் சீடர்களுக்கு வாதப் போர் புரிய அனுமதி கொடுத்ததும் நிலைமை தலைகீழாகியது.

அவரது சீடர்கள் வேதவாதம் பூதவாதம் ஆகியவற்றில் ஈடுபட்டு மூலைக்கு மூலை நேமி நாதரையும் அவரது சீடர்களையும் வென்றார்கள். நேமி நாதரைப் போல் காதுகளை அறுக்க வில்லை. காதுகளில் ஈயத்தை ஊற்றவில்லை.

அதே போல் நேமிநாதர் நடத்திய அனல்வாதம் புனல் வாதம் ஆகியவற்றைத் தவறான நடைமுறை என்பதை எடுத்துரைத்தார்கள்.

அனல் வாதம் என்றால் வாதிடுபவர்கள் தங்கள் வாதத்தை முடித்தபின் வாத ஓலைகளை அனலில் போட வேண்டும். அனலில் எரியாமல் நிற்கும் ஓலையே சரியான ஓலை என்றும் அந்த ஓலையை வைத்து செய்யப்பட்ட வாதமே சரியான வாதம் என்று முடிவுகட்டப்பட்டது.

அதே போல புனல் வாதத்தில் ஓலைகள் ஓடும் நீரில் விடப்படும். நீரோடு போய் விடும் ஓலை தோற்றதாகவும் நீரில் மீது உறுதியாக நிற்பது வென்றதாகவும் கருதப்பட்டது.

மேற்கண்ட நான்கு விதமான வாதங்களிலும் இராமானுஜரின் சீடர்கள் சமணர்களை வென்றதால் அதுவரை நேமிநாதரால் உயர்த்தி நிறுத்தப்பட்டச் சமணம் சாயத் தொடங்கியது.

அதோடு சாரநாத்திலிருந்து வந்த பௌத்தர்களை இராமானுஜரே வாதம் செய்து தோற்கடித்தார்.

ச்ரவண பெலகுலாவில் இந்திர கிரியில் உடல் நலத்தால் குணமாகி கணிசமாகத் தேறியிருந்த நீலகேசிக்கு இந்த அவலநிலை கவலையை அளித்தது.

செய்வதறியாமல் தவித்த அவர் பிறகு "அது தான் சரி. அவர் தான் சரி. அவரால் தான் முடியும்" என்று கருதினார்.

காஞ்சிக்குப் புறப்பட்டார்.





ஸ்ரீரங்க மங்கள நிதிம் கருணா
நிவாசம் ஸ்ரீவேங்கடாத்ரி
சிகராலய காளமேகம்
ஸ்ரீஹஸ்திசைல சிகரோஜ்வல
பாரிஜாதம் ஸ்ரீஸம் நவாமி சிரசா
யதுசைல தீபம் – இராமானுஜர்




இராமானுஜர் வேண்டிக் கொண்டபடி ஆறு மாத காலத்தில் மேல்கோட்டை ஆலயம் சிறப்பாகக் கட்டி முடிக்கப்பட்டது. சம்ப்ரோக்ஷணம் செய்வதற்கான நாளும் குறிக்கப்பட்டது.

நாடு முழுவதிலிருந்துமிருந்து ஆயிரம் வேத விற்பன்னர்கள் வரவழைக்கப்பட்டி.ருந்தார்கள். சம்ப்ரோக்ஷணத் திருவிழா பத்து நாட்களுக்கு நடைபெறும் என்று அறிவித்த மன்னன் தினந்தோறும் காலையில் சதஸ் வைபவங்களையும் மாலையில் கலை நிகழ்ச்சிகளையும் நடத்தினான்.

பல்வேறு நாடுகளிலிருந்து ஆகமங்கள், சிற்பங்கள், ஓவியங்கள் ஆகியவற்றில் கைதேர்ந்த வல்லுனர்கள் காலை நேரங்களில் அவை குறித்து ஆய்வு நடத்தி சொற்பொழிவு நடத்தினார்கள். ஆலயத்தின் ரங்க மண்டபத்தில் பல்வேறு வடிவ சிற்பங்கள் அமைக்கப்பட்டிருந்ததைச் சிலாகித்துப் பேசினார்கள். ஒரே மண்டபத்தில் வித்தியாசமான சிற்பங்களோடும் வித்தியாசமான வடிவங்களோடும் அமைக்கப்பட்டது போன்றத் தூண்கள் வேறு எங்கேயும் அமைக்கப்படவில்லை என்பதைச் சுட்டிக் காட்டிப் பாராட்டினார்கள்.*

மாலை நேரங்களில் இசை வாணர்கள் இசைத்தார்கள். விதவிதமான வாத்தியங்கள் இசைக்கப்பட்டன. நடன மங்கையர்கள் பாரம்பரிய நடனங்களை ஆடினார்கள். கூத்துகள் நடந்தன. உபன்யாசங்கள் நடந்தன.

யாகசாலையானது மிகவும் பிரம்மாண்டமாக அமைக்கப் பட்டிருந்த விதமானது மகா மேருவே அங்கே பெயர்ந்து வந்து விட்டது போல் எண்ண வைத்தது. நாட்டின் பல புண்ணிய நதிகளிலிருந்து கொண்டு வரப்பட்ட புனித நீர் வெள்ளிக் குடங்களில் நிரப்பப்பட்டு யாககுண்டங்களுக்குப் பக்கத்தில் வைக்கப் பட்டு மந்திர ஜபங்களால் மேலும் புனித மாக்கப்

* மேல் கோட்டை ஆலயத்தின் சிறப்பு இந்த வித்தியாசமானத் தூண்கள் தான். அவற்றை நாம் இன்றும் காணலாம்.

பட்டது. வேத கோஷங்கள் முழங்கி இருக்கும் இடத்தை இந்திரலோகமாக மாற்றியது.

கருவறையில் பிரதிஷ்டை செய்யப்பட்ட திருநாராயணப் பெருமாளின் சிலா ரூபத்தில் இராமானுஜர் கூறியபடி திருவடிகளுக்குக் கீழே பீவி நாச்சியாரின் வடிவம் அமைக்கப் பட்டது. கருவறைக்கு வலப்புறம் ராமப்பிரியர் பிரதிஷ்டை செய்யப் பட்டிருந்தது.

இராமானுஜரும் அவரது சீடர்களும் பரமானந்தத்தில் இருந்தார்கள். சோழ நாட்டில் நடந்து விட்டக் கசப்பான சம்பவங்களுக்குப் பிறகு அவர்களையெல்லாம் பரவசப் படுத்தும் விதமாக ஆலய நிர்மாணமும் சம்ப்ரோக்ஷணமும் நடை பெற்றதால் அவர்கள் பெரும் திருப்தியடைந்தார்கள். மனதிற்கு இதமாக இருந்தது.

மன்னன் விஷ்ணுவர்த்தனன் சம்ரோக்ஷண தினத்தன்று கர்நாடகத்தில் இருக்கும் அனைத்து ஆலயங்களிலும் விஹாரங்களிலும் சிறப்பு வழிபாடு நடத்தப்பட வேண்டும் என்று கட்டளையிட்டிருந்தான். விழாவிற்கு தான் வெற்றி கொண்ட நாட்டின் அரசர்கள் அனைவருக்கும் அழைப்பு விடுத்திருந்ததால் எல்லோருமே வந்திருந்தார்கள். அவர்கள் அனைவருக்கும் இராமானுஜரைப் பற்றியத் தகவல்கள் கூறப் பட்டிருந்ததால் அவர்கள் சந்தித்து ஆசை பெற்றார்கள்.

மன்னனுக்குத் துணையாக இளவரசனும், இளவரசியும், சேனாதிபதியும், தளபதிகளும், பஞ்சப் பிரதானிகளும் இருந்து கவனித்தார்கள். இளையராணி சௌமியகுமாரி தனது பாலகன் வல்லாளனோடு மேல்கோட்டைக்கு வந்து எல்லா நிகழ்ச்சி களிலும் பங்கேற்றாள். மகாராணி சாந்தலை மட்டும் வரவில்லை.

மக்களைப் பற்றிக் கேட்க வேண்டாம். இராமானுஜர் வரும் வரை நாடு ஏறக்குறைய சமண நாடாக இருந்தது. மன்னனும் சமணனாக இருந்தான். சமணக் கோட்பாடுகளே நிலவி வந்தன. இராமானுஜர் வந்து இளவரசி தர்ம தேவியைக் குணப் படுத்திய பின் அனைத்தும் மாறிப் போயின. பெருமாள் சிலை கிடைத்தது. ஏரி வெட்டப்பட்டு நீர் வளமும் பயிர் வளமும் பெருகியது. மன்னன் வைணவ மதத்திற்கு மாறினான். மேல் கோட்டையில் கோயில் கட்ட முற்பட்டான். வேலாபுரத்தில் கேசவ நாராயணன் கோயிலும் துவார சமுத்திரத்தில் ஹொய்சளேஸ்வரர் கோயிலும் அமைக்கப்பட்டதோடு, விஜயாபுரத்தில் விஜயநாராயணன் கோயிலும், தொண்டனூரில் நம்பி நாராயணன் கோயிலும், கதுகலத்தில் வீர நாராயணன் கோயிலும், தழைக்காட்டில் கீர்த்தி

நாராயணன் கோயிலும் கட்டப்படும் என்று அறிவித்ததால் அவர்கள் குதூகல மடைந்தார்கள்.

அதோடு இராமானுஜர் டில்லிக்குச் சென்று சுல்தானி டமிருந்து ராமப் பிரியரை மீட்டு வந்தது மக்களால் பெரிதும் சிலாகிக்கப்பட்டது. அதை எல்லோருமே அவரது அருள் சாதனையாகக் கருதினார்கள். அதிசயமாகக் கருதினார்கள். அதோடு முகம்மதிய பீவிக்கு ஆலயத்தில் சிலா ரூபத்தில் கௌரவப் படுத்தியதையும் மலைவாசிகள் முதலானவர்களைத் திருக்குலத்தோர் என்று அழைத்து அவர்களுக்குக் குடியிருப்பை ஏற்படுத்தி வருடத்தில் ஒருநாள் ஆலயத்தில் பிரவேசிக்க அனுமதித்ததும் இராமானுஜர் மீது மக்களுக்கு அளப்பறிய மரியாதையை அளித்தது. அவரை மகானாகக் கருதாமல் தெய்வமாகவே கருதினார்கள். எனவே அவர் சம்ப்ரோக்ஷணம் செய்ய விருந்ததால் அவர்கள் குடும்பத்தோடு வந்து மேல் கோட்டையை அதிர வைத்தார்கள்.

திருநாள் வந்தது. வேத கோஷங்கள் முழங்கின. வாத்தியங்கள் முழங்கின. நூறு யானைகள் பிளிறின. மக்கள் வெள்ளம் "நாராயணா! நாராயணா" என்று முழங்கினார்கள். தேவர்களும் ஆசிர்வதித்திருக்க வேண்டும்.

இராமானுஜர் கருவறை விமானத்திற்கு அமைக்கப்பட்டிருந்த படிகளில் ஏறி திருநாராயணர் விமானத்திற்கு காவிரி நீரை ஊற்றி "அரங்கா! அரங்கா" என்று உள்ளுக்குள் உச்சரித்தார். அவரை அடுத்து மன்னன் கங்கை நீரை ஊற்றினான். ஒவ்வொருவரும் ஒவ்வொரு ஆற்று நீரை ஊற்றினார்கள். வருகை தந்திருந்த வேற்று நாட்டு அரசர்களுக்கும் வாய்ப்பளிக்கப்பட்டது.

விமானத்திலிருந்து இராமானுஜர் புனிதக் கலச நீரைத் தெளித்த போது இறைவனே வந்து தெளிப்பது போலிருந்தது மக்களுக்கு.

பிறகு இராமானுஜர் சீடர்களுடன் சன்னதிக்கு வந்து கோயில் திருவாய் மொழிப் பாசுரங்கள், திருப்பல்லாண்டு, திருப்பாவை ஆகியவற்றை முறைப்படி இசைத்தார்கள்.

பிறகு ஸ்ரீரங்கராய பட்டர் பெருமாளுக்கு அர்ச்சனை செய்வதற்கு ஏதுவாக இராமானுஜர் எம்பெருமானைப் போற்றும் பாசுர அடிகளைக் கூறினார்.

**உயர்வர உயர்நலம் உடைய பெருமாள்!**
**மயற்வற மதிநலம் அருளிய பெருமாள்!**
**அயற்வறு அமரர்கள் அதிபதியான பெருமாள்!**
**பத்துடை அடியவர்க்கு எளியனான பெருமாள்!**

மயற்வற என்மனத்தே மன்னின பெருமாள்!
குன்றமேந்திக் குளிர்மழை காத்த பெருமாள்!
அன்று ஞாலம் அளந்த பெருமாள்!
மறையாய நால் வேதத்துள் நின்ற பெருமாள்!
பிறையேறு சடையானும் பிரமனும் இந்திரனும் ஏத்த
நின்ற பெருமாள்!

ஈருலகைப் படைக்க எண்ணியிருந்த பெருமாள்!
எழில்மலரோன் தன்னை அன்றே ஈந்த பெருமாள்!
அருமறையை ஊழிதனில் காத்த பெருமாள்!
அது தன்னை அன்றயனுக்கு அளித்த பெருமாள்!
தருமன் விடத்தான் தூது போன பெருமாள்!
பாஞ்சாலி குழல் முடித்த பெருமாள்!
தரணி பொறாத் திண்பாரம் தணித்த பெருமாள்!
அஞ்சின நீ என்னை அடை என்று
அஞ்சல் அஞ்சல் என்று அழைக்கும் பெருமாள்!
அந்தியம் போதில் அரியுருவாகி அரியை அழித்த
பெருமாள்!

முனிவன் மூர்த்தி மூவராகி வேதம் விரித்துரைத்த
பெருமாள்!

மாய மதுகைபரை மதித்திட்ட பெருமாள்!*

அர்ச்சனை முடிந்த பின் மக்கள் சுவாமி தரிசனத்திற்கு அனுமதிக்கப்பட்டார்கள்.

ஒரு மண்டலம் வரை மக்கள் கூட்டத்தால் மேல் கோட்டை சூல் கோட்டையானது.

மண்டலாபிஷேகம் சிறப்பாக நடந்தேறியது.

அது நடந்து முடிந்த நான்காம் நாள் சோழ மன்னன் (முதல்) குலோத்துங்கன் மரணமடைந்து விட்டதாகச் செய்தி வந்தது.

இராமானுஜர் தன் சீடர்களை அழைத்தார்.



ச்ரவணபெலகுலாவிலிருந்து புறப்பட்ட நீலகேசி காஞ்சியை அடைந்தார்.

சமணத்தை உயிர்ப்பிக்கவும் இராமானுஜரின் முகத்தில் கரியைப் பூசி சோழநாட்டிற்குத் துரத்தவும் இதை விட்டால் வேறு வழியில்லை என்று கருதியே அந்த முடிவிற்கு அவர் வந்தார்.

அதே சமயம் உள்ளுக்குள் நடுக்கமாக இருந்தது அவருக்கு.

* இவையனைத்தும் நாலாயிரம் திவ்யப் பிரபந்தத்தில் உள்ள வரிகள்.

காஞ்சியில் அவர் சந்திக்கப் போவது கர்நாடக நாட்டுச் சமணத்தின் பிரதான ஆச்சார்யரான ஆரிய நந்தி.

அவரது சீடராக ச்ரவண பெலகுலாவில் இருந்த நீலகேசி அவரை வெறுத்தார்.

ஆரிய நந்தியின் நிதானமும் சாத்வீகமும் அவருக்கு அறவே பிடிக்கவில்லை.

அதிரடி முயற்சிகளால் தான் சமணத்தை கர்நாடகத்தில் சிறப்புறச் செய்ய முடியும் என்று கருதினார். ஆரிய நந்தியோ அவரது எண்ணங்கள் நிறைவேற ஆவேசம் காட்டவில்லை.

பத்து ஆண்டுகளுக்கு முன்னால் மகாவீர வர்த்தமானரின் அவதார ஸ்தலத்திற்கு யாத்திரை செல்ல விரும்பினார் ஆரிய நந்தி.

அவர் இருக்கும் வரை தன்னால் அதிரடியாகச் செயல்பட முடியாது என்று கருதிய நீலகேசி ஸ்தல யாத்திரையின் போது ஆரியநந்தியை மயக்கமுறச் செய்து தனது ஆட்களுடன் கடத்திச் சென்று காஞ்சியில் இருந்த ஜைன பீடமான திருப்பருத்திக் குன்றத்தில் ரகசிய இடத்தில் சிறை வைத்தார். தனது விசுவாசிகளைக் காவல் வைத்து கவனித்து வந்தார்.

அதோடு ஆரியநந்தி ஸ்தலயாத்திரையின் போது நிர்வாணம் எய்தி விட்டதாகவும், அவரைக் கங்கைக் கரையிலேயே புனித அடக்கம் செய்து விட்டதாகவும் கதை விட்டார். ஆரிய நந்தி தனக்குப் பிறகு ஜெயதேவரை பிரதான ஆச்சார்யராக நியமிக்கும் படி ஆணையிட்டதாகச் சொல்லி ஹொய்சள மன்னன் மூலமாக தன் அடிமையான ஜெயதேவனை அப்பதவிக்கு நியமனம் செய்தார். அவரைக் கைப்பொம்மையாக வைத்து தனது அதிரடிகளை ஆரம்பித்தார்.

ஆக -

தன்னால் கடத்தப்பட்டுச் சிறைவைக்கப்பட்ட பிரதான ஆச்சார்யரை பத்து ஆண்டுகளுக்குப் பிறகு சந்திப்பதென்றால் அச்சம் இல்லாமல் இருக்க முடியுமா?

ஆனால் திருப்பருத்திக் குன்றத்திற்குச் சென்று அங்கிருந்த ரகசிய இடத்தில் ஆரிய நந்தியைச் சந்தித்த போது அவர் சீறவில்லை. சபிக்கவில்லை.

உண்மையான சமணராக - சாந்தஸ்வரூபியாகவே இருந்தார்.

பத்தாண்டுகள் ஓடிவிட்டதற்கு அறிகுறியாக முதுமை வந்திருந்ததே தவிர கண்களிலிருந்த தீட்சண்யம் அகலவில்லை. சிறைப் பட்டதற்கான சோர்வோ சோகமோ இல்லை.

"துறவிக்கு இடம் முக்கியமல்ல. மனம் தான் முக்கியம். எங்கிருந்தாலும் அவன் மனதை இயக்கி ஆள்வான். உண்மைத் துறவியின் அருள் அலைகள் கடல்களைத் தாண்டிச் செல்லக் கூடியவை. அதைத் தடுக்க எந்த உபாயமும் உபகரணமும் பயன் தராது" என்று சொல்வது போல் இருந்தது அவரது தோற்றம்.

தரையில் விழுந்து அவரை வணங்கிய நீலகேசி, "ஆச்சார்யரே! நான் பாவி. மன்னிக்க முடியாத பாவத்தைச் செய்தப் பாதகன் நான். என்னைத் தண்டியுங்கள் அடிகளே" என்றார்.

"நீலகேசி! ஒருவனது கயமைகளையும் தீமைகளையும் தண்டிக்கும் சக்தி வெளியில் இல்லை. அவனுக்குள் தான் இருக்கிறது. நேரம் வரும் போது அது தண்டிக்கத் தயங்காது" என்றார் ஆரிய நந்தி.

"உண்மைதான் அடிகளே. அதனால்தான் வழிகளைத் தொலைத்து விட்ட வழிப் போக்கனைப் போல வழியைத் தேடி உங்களிடம் வந்திருக்கிறேன்" என்றார் நீலகேசி.

"நீ வருவாய் என்பது எனக்குத் தெரியும். அதனால் தான் நாம் தப்ப முயற்சிக்க வில்லை. எனக்குள் நான் அடங்கினேன்" என்று சொன்ன ஆரியநந்தி ரகசிய இடத்தை விட்டு வெளியே வந்தார்.

வர்த்தமானர் ஆலயத்திற்குச் சென்று வணங்கினார்.

அங்கேயிருந்த தர்மகுரா மரத்தின் கீழே அமர்ந்தார்.

"நீலகேசி! உனக்கு இந்த தர்மகுரா மரத்தைப் பற்றி தெரியுமா? இது அதிகம் வளராமலும் அதிகம் குறுகாமலும் எப்போதும் ஒரே அளவில் சீராக இருக்கும். ஒரு மன்னனுக்கு, ஒரு துறவிக்கு இந்த மரம் ஒரு அடையாளம். அதுவும் சமணத் துறவிக்கு இது தான் சரியான அடையாளம். அதனால் தான் இந்த மரம் இருந்த இடத்தில் சமணர் பீடம் தோன்றியது. பின்னாளில் ஆலயமும் கட்டப்பட்டது. இந்த மரத்தினால் திருப்பருத்திக் குன்றத்திற்குப் பெருமை. இங்கே வாழும் சமணர் களுக்குப் பெருமை. இங்கே உள்ள சமணம் அழிந்தாலும் இந்த மரம் அழியாது. என்றைக்கும் நிலைத்து நிற்கும்"* என்றார்.

---

* 'தன்னளவில் குன்றாது உயராது தன் காஞ்சி
முன்னுளது மும்முனிவர் மூழ்கியது
மன்னவன் தன் செங்கோல் நலங்காட்டுத்
தென் பருத்திக் குன்றமர்ந்த கொங்கார் தர்மகுரா'

South Indian Subscriptions - volume 7 - No 399.

காஞ்சிக்குத் தெற்கே பாலாற்றங்கரையில் திருப்பருத்திக் குன்றத்தில் உள்ள வர்த்தமானர் ஆலயத்தில் இந்த மரம் இன்றும் இருக்கிறது.

"இந்த தர்மகுரா மரத்தைப் போல் சீராக இருக்க வேண்டிய நீ சீர் கெட்டாய். சிதைந்தாய். நீயும் வளரவில்லை. நீ நினைத்ததும் நடக்கவில்லை. நீலகேசி! நீ குருவுக்கு இழைத்த கொடுமையைக் கூட புறக்கணித்து விடலாம். ஆனால் சமணத்திற்கு இழைத்துள்ள கொடுமை குருத்துரோகத்தை விட கொடுமையானது" என்று மேலும் சொன்னார்.

"அடிகளே! நான் சமணத்தை உயர்த்தத்தான் எல்லாவற்றையும் செய்தேன்."

"அது உண்மையாக இருக்குமானால் சமணம் உயர்ந்திருக்கும். நீ இங்கு வந்திருக்க மாட்டாய். நீ உன் உயர்வுக்காக பாடு பட்டாய். அதுவும் தீயவழியாக இருந்து விட்டதால் நீயும் உயரவில்லை. போகட்டும். நடந்தது என்ன? அதைச் சொல்."

நீலகேசி அனைத்தையும் சொன்னார்.

சொல்லிவிட்டு "அனைத்திற்கும் அந்த வைஷ்ணவ சன்னியாசி இராமானுஜனே காரணம். ஹொய்சள மன்னனால் சாதிக்க முடியாததை அவன் சாதித்து விட்டான்" என்றார்.

"நீயே சொல்லி விட்டாய் அவர் சாதித்து விட்டார். நீ ஏன் சாதிக்கவில்லை? உனக்கும் அவருக்கும் உள்ள வித்தியாசம் அது தான். நீ வெறும் மடு. மலை என்று நினைத்துக் கொண்டு செயல்பட்டாய். குலைந்து போனாய். கலைந்து போனாய். அவர் உண்மையிலேயே மலை. ஆகவே குலையவில்லை. கலைய வில்லை. உயர்ந்து விட்டார். மதத்தை வளர்க்கத் தெரிந்த அவரே தலைவர். விஷயம் எல்லை மீறி விட்டது. ஒன்றும் செய்ய முடியாது" என்றார் ஆரியநந்தி.

"ஆச்சார்யரே! தாங்களே இப்படிச் சொல்லி விட்டால் நாங்கள் என்னாவது? என்னால் புல்லையும் அசைக்க முடியாது என்பதினால்தான் புயலை உருவாக்கக் கூடிய தங்களிடம் வந்தேன்."

"நீலகேசி! இராமானுஜரை வீழ்த்தினாப் தான் சமணம் துளிர் விடும். அதற்கு ஒரு வழி இருக்கிறது. அதர்ம வழி தான். வேறு வழி இல்லை. ஆனால் அதைக் கையாண்டால் உன் உடலில் உயிர் தங்காது."

"என் உயிரால் எனக்கெந்த பயனும் இல்லை. சமணத்திற்கு பயனாக இருக்குமானால் இப்போதே கூட உயிரைத் துறக்கச் சித்தமாக இருக்கிறேன்."

"சத்தியமாகத்தான் சொல்கிறாயா?"

"சமணத்தின் மீது ஆணையாகச் சொல்கிறேன்."

ஆரியநந்தி வழியைச் சொன்னார்.

"தாங்கள் கர்நாடகத்திற்கு வரவில்லையா?"

"நீ வெற்றி பெற்று காட்டு. வருகிறேன்."



இராமானுஜர் மேல்கோட்டை திருநாராயண பெருமாள் கோயில் நிர்வாகத்திற்கான அமைப்பை உண்டாக்கினார்.

ஐம்பத்திரண்டு வைஷ்ணவர்களை பெருமாள் கோயில் நிர்வாகத்திற்காக அமைத்து திருவனந்தபுரம் தாசர், மாலாகார தாசர், திருக்குறுங்குடி தாசர், யதிராச தாசர் ஆகியோரது தலைமையில் அவர்களை நியமித்தார்.

தனது பணி நிறைவேறி விட்டதாகவும் சோழ நாட்டிற்குத் தான் திரும்ப முடிவு செய்திருப்பதாகச் சொன்ன போது பட்டர்கள் கலங்கினார்கள்.

**'சந்ததி யில்லா மனைமகள் போலே**
**தடமுலையில்லா மடமகள் போலே**
**செந்தணலில்லா ஆகுதி போலே**
**தேசிகனில்லா ஓதுகை போலே**
**சந்திரனில்லாத் தாரகை போலே**
**இந்திரன் இல்லா உலகம் போலே**
**எங்கள் இராமாநுசமுனி போனால்**
**இப்புவிதான் இனி எப்படியாமோ?'***

- என்று அழுது புலம்பினார்கள்.

மன்னனும் அவர்களோடு சேர்ந்து "சுவாமி! தாங்கள் அகன்று விட்டால் வெற்றிடம் உண்டாகி விடும். மேல் கோட்டை மட்டுமல்ல கர்நாடகமே கலங்கி நிற்கும்" என்றான்.

"மன்னவா! இந்த கர்நாடக நாட்டிலேயே என் வாழ்நாளைக் கழிப்பதற்காக நானிங்கு வரவில்லை. சிலர் எண்ணுவது போல் வைணவத்தை இங்கே பரப்புவதற்காகவும் வரவில்லை. இன்னும் சொல்லப் போனால் எந்த வித நோக்கமும் இல்லாமல் தான் இங்கு வந்தேன். அரங்கன் அனுப்பி வைக்கிறான் என்று தான் வந்தேன். வந்த பிறகு நடந்ததெல்லாம் உனக்கே தெரியும். மேல் கோட்டையில் திருநாராயணர் விக்ரகம் கிடைக்கும் என்று யாராவது எதிர்பார்த்திருக்க முடியுமா? உற்சவர் விக்ரகம் டில்லியில் இருக்கும் என்று அது மீட்கப்படும் என்றும் எதிர்

---

* பக்கம் 277 வைணவமும் செந்தமிழும் By. இரா. வ. கமலக்கண்ணன்.

பார்த்திருக்கக் கூடுமா? ஆனால் இவையெல்லாம் நடந்தன என்றால் அது அந்த அரங்கனின் அருட் செயலேயன்றி வேறு என்ன? இங்கே உனது பரம பக்தியாலும் சாதுர்யத்தாலும் தான் இந்த ஆலயம் கட்டிமுடிக்கப்பட்டு பெருமாள் பிரதிஷ்டை நடந்தது. ஆலய நிர்வாகத்தையும் அமைத்துக் கொடுத்து விட்டேன். இதோடு என் பணி முடிந்தது என்பது தான் அனைவரும் புரிந்து கொள்ள வேண்டியது. எந்தச் சோழ மன்னனது நடவடிக்கையினால் மனம் நொந்து அந்த நாட்டை விட்டு அகன்றேனோ அந்த மன்னன் மரணமடைந்து இருமாதங்கள் ஓடிவிட்டன. கர்நாடகத்திற்கு வந்து பன்னிரண்டு ஆண்டுகளும் முடிந்து விட்டன. இது தான் நான் தமிழ் நாட்டிற்குத் திரும்ப வேண்டிய தருணம்'' என்றார் இராமானுஜர்.

“தங்கள் பிரிவைத் தாங்கிக் கொள்ளும் வழியை யாவது எங்களுக்குச் சொல்லுங்கள்'' என்றார்கள் பட்டர்கள்.

“ஒன்று செய்யலாம். நான் பத்மாசனத்தில் அமர்கிறேன். நீங்கள் சிலை ஒன்றை வடிவமைத்துக் கொள்ளுங்கள். எனக்குப் பதிலாக அந்தச் சிலை இந்த ஆலயத்தில் இருக்கட்டும். உங்கள் பிரிவுத் துயரம் நீங்கும்'' என்றார் இராமானுஜர்.*

இராமானுஜரின் யோசனையை ஆகா என்று அனைவரும் சிலாகித்தார்கள்.

மறுவாரம் அதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டு சிற்பிகள் அவரது திருவுருவத்தை வடிவமைத்தார்கள்.

மன்னன் மிகவும் மகிழ்ச்சியடைந்து “தகுந்த யோசனையைச் சொல்லி எங்களது கவலையைக் குறைத்தீர்கள். வேலாபுரத்தில் கட்டப்பட்டு வரும் கேசவப் பெருமாள் ஆலயம் இன்னும் சில மாதங்களில் கட்டி முடிக்கப்படும். தாங்கள் தான் வந்து பெருமாளைப் பிரதிஷ்டை செய்ய வேண்டும். அதோடு தழைக் காடு, தொண்டனூர், கதுகலம், விஜயாபுரம் ஆகிய ஊர்களிலும் பெருமாள் ஆலயங்கள் அமைக்கவிருக்கிறேன். இந்த பஞ்ச நாராயணர்களின் பிரதிஷ்டை தங்கள் திருக்கரங்களால்தான் நடக்க வேண்டும்'' என்றான்.

“பகவத் கிருபையால் அனைத்தும் நடக்கும்'' என்றார் இராமானுஜர்.

---

* இவ்வாறு சொல்லி தன்னைப் போன்றச் சிலையை செய்ய வைத்தார் இராமானுஜர். அது தமர் உகந்த திருமேனி. அதாவது அடியார்கள் விரும்பியவாறு அமைந்த திருமேனி என்று வழங்கப்பட்டது. மேல் கோட்டையில் இருக்கும் இராமானுஜர் சிலைதான் அவர் வாழ்நாளிலேயே முதன் முதலாக அமைக்கப்பட்டதாகும்.

அப்போது அங்கே சமணர்கள் புடை சூழ பிரவேசித்தார். நீலகேசி.

"இராமானுஜரே! எங்களுக்குப் பதில் தராமல் நீங்கள் மேல் கோட்டையை விட்டு நகர முடியாது" என்று கர்ஜித்தார்.

அவரது வரவு மன்னனுக்கும் மற்றவர்களுக்கும் பிடிக்கவில்லை.

தப்பி விட்ட நரி தானாக வந்த சிக்கி விட்டதாகக் கருதிய மன்னன் நீலகேசியை உடனே கைது செய்து கழுவில் ஏற்றும் படிக் கட்டளையிட்டான் மன்னன்.

"சற்று பொறு மன்னா. அவர் என்னதான் சொல்கிறார் என்று கேட்போம்" என்றார் இராமானுஜர்.

சுவாமி! இந்த மனிதர் ஒரு புல்லுருவி. சமண மதத்தில் இருந்து கொண்டு சமணத்திற்குச் சம்பந்தமில்லாத காரியங்களில் ஈடுபட்டுத் தாழ்ந்து போனவர். என் மகளின் வாழ்க்கையோடு விளையாடியவர். கொலைகளுக்கு அஞ்சாத கொடுமையாளர். சிறையில் ஐந்து வருடங்கள் கழித்து விட்டு வந்த பின்பும் கொலை முயற்சியில் இறங்கி கேடு விளைவிக்க முற்பட்ட காதகர்..சமண மதத்தில் ஒட்டிக் கிடக்கும் ஒட்டடை. சமண மதத்தில் பல காலமாக இருந்து வந்த களங்கம். எங்கள் கண்களிலிருந்து தப்பி மறைந்து தவறான அனல் வாதங்களையும் புனல் வாதங்களையும் செய்யச் சொல்லி பலரை மரணத்திற்கு அனுப்பி வைத்தவர். இவர் ஒரு கணம் கூட உயிரோடு வாழ்வதற்கு அருகதையற்றவர். இவரை இங்கேயே கழுவில் ஏற்ற எனக்கு அனுமதி கொடுங்கள்" என்றான் மன்னன்.

"இருக்கட்டும் மன்னா. அவர் சவாலிட்டிருப்பது எனக்கு. அது இன்னதென அறியாமல் போவது தவறு. என்ன சொல்கிறார் என்று கேட்போம்" என்றார் இராமானுஜர்.

"இராமானுஜரே! உமது அணுகுமுறை குறித்து சந்தோஷப் படுகிறேன். கர்நாடகத்தில் இருந்த சமணத்தைச் சாய்த்து விட்டு வைஷ்ணவ விருட்சங்களை உருவாக்கிய சதிகாரர் நீங்கள். சுயநலமும் தற்பெருமையும் கொண்ட நீங்கள் நாடு விட்டு நாடு வந்து கலகம் செய்து மதவெறியை ஊட்டியிருக்கிறீர்கள். உம்மைச் சோழ மன்னன் தன் நாட்டை விட்டு வெளியேற்றியது முற்றிலும் பொருந்தும். உமது ஆட்டம் வேற்று நாட்டிலேயே இவ்வளவு வேகமாக இருக்கிறதென்றால் சொந்த நாட்டில் எப்படி இருந்திருக்கும்? சோழ நாட்டில் புயலாக இருந்தவர் நீர். மதவெறிக்கு மறுபெயர் இராமானுஜர் என்று இனி மக்கள் சொல்வார்கள். மேதினியே சொல்லும்" என்றார் நீலகேசி.

மன்னன் குறுக்கிட்டு "சுவாமி! இவரைப் பேச விட்டால் நல் வார்த்தைகள் வராது. இது போன்ற அல் வார்த்தைகளும், அற்ப வார்த்தைகளும், அதிகப் பிரசங்கித் தனமான வார்த்தைகளும் தான் வரும். இந்தப் பிராந்தியமே நாறி விடும். இவர் பூக்கடையல்ல. சாக்கடை. அதை அகற்றுவதே சரி" என்றார்.

இராமானுஜர் நீலகேசியைப் பார்த்து "துறவியே! வீண் வார்த்தைகள் எதற்கு? உமது சவால்தான் என்ன?" என்று கேட்டார்.

"நாங்கள் ஆயிரம் பேர் ஒரே நேரத்தில் கேள்விகளைக் கேட்போம். அதற்கு நீர் ஒரே நேரத்தில் பதில் கூற வேண்டும். தயாரா?" என்று கேட்டார் நீலகேசி.

"சுவாமி! இவன் இல்லாத ஊருக்கு வழி கேட்கிறான். இவன் துறவியல்ல. மனிதனே அல்ல. இவனிடம் பேசுவது நேரத்தை வீணடிப்பதாகும்" என்று மரியாதையைக் கைவிட்டுப் பேசினான் மன்னன். அவனது கண்கள் சிவந்தன.

"நீலகேசி! தீய துறவியே! என்ன பேசுகிறாய் என்பதை உணர்ந்துதான் பேசுகிறாயா? ஆயிரம் பேர் ஒரே நேரத்தில் கேள்வி கேட்பதும் அதற்கு ஒருவர் ஒரே நேரத்தில் பதில் கூறுவதும் இயலக்கூடிய காரியமா? நாங்கள் ஆயிரம் பேர் அவ்வாறு கேள்விகளைக் கேட்டால் உங்களால் பதில் சொல்ல முடியுமா? உலகத்தில் எங்கேயும் கண்டறியாத - கேட்டறியாத சவாலை இடுகிறீர்களே! உமக்கு லவலேசமாவது அறிவிருக்கிறதா? உமது நோக்கம் புரிந்து விட்டது. தீய நோக்கம். நடக்க முடியாத ஒன்றைச் சொல்லி இராமானுஜரை ஒடுக்க நினைக்கும் நீர் அற்பர்களில் அற்பர். உமது உயிரை என் வாளாலேயே நீக்குகிறேன்" என்று வாளை உருவினான் மன்னன்.

"துறவியிடம் வாளை உயர்த்தும் மன்னா! நீ வாழ்க. உன் வீரம் வாழ்க. இப்படியொரு மன்னனை அடைய இந்த நாடு புண்ணியம் செய்திருக்க வேண்டும். என் சவாலை ஏற்க வேண்டியவர் அமைதியாக இருக்கும் போது நீ எதற்காகச் சீறுகிறாய் என்று தெரியவில்லை. உன்னையா நான் பதில் கூறும் படிக் கேட்டேன்?"

நீலகேசி இவ்வாறு கூறிய போது அதை எதிர்த்து எல்லோரும் குரல் கொடுத்தார்கள்.

அவர்களை அமைதிப்படுத்திய இராமானுஜர் நீலகேசியைப் பார்த்து "துறவியே! உமது சவாலை ஏற்றோம்" என்றார்.

"ஏற்றால் போதாது. இந்தச் சவாலில் நாங்கள் தோற்றால் ஆயிரம் பேரும் கழுவில் ஏறுகிறோம். மாறாக நீர் தோற்று

விட்டால் வைஷ்ணவத்தை விட்டு விலக வேண்டும். சமணனாக மாறவேண்டும். உம்மால் மாற்றப்பட்டவர்களும் சமணர்களாக வேண்டும் இந்த மன்னன் உட்பட. அதற்குப் பிறகு இந்தக் கர்நாடகத்தில் வைணவத்தைப் பற்றி ஒருவர் கூட வாயைத் திறந்து பேசக் கூடாது. என்ன? சம்மதமா?'' என்று கேட்டார் நீலகேசி.

“சம்மதம்” என்றார் இராமானுஜர்.



இராமானுஜர் இவ்வாறு சம்மதம் தெரிவித்தது மன்னனுக்கு அதிர்ச்சியைத் தந்தது. பட்டர்களுக்கு வியப்பைத் தந்தது. அங்கிருந்த மக்களுக்கு ஆர்வத்தைத் தந்தது. இராமானுஜரின் சீடர்கள் மட்டுமே அமைதியாக இருந்தார்கள்.

இவர்கள் எல்லோரையும் விட அதிகமான அதிர்ச்சிக்கு ஆளானது நீலகேசியும் அவரைச் சேர்ந்த ஆயிரம் சமணர்களும் தான்.

“இது எப்படி சாத்தியம்? ஆயிரம் பேர்களது கேள்விகளுக்கு ஒரே நேரத்தில் ஒரு மனிதனால் எப்படி பதிலளிக்க முடியும்? முடியாது என்பதால் தானே இந்த திட்டத்தைச் சொன்னார் ஆரியநந்தி? அவரென்ன நமக்கேகூடப் புரிகிறதே இது நடக்க முடியாத ஒன்று என்று? இராமானுஜர் எப்படிச் சம்மதித்தார்? அவர் மதவாதி தானே? மகேசன் அல்லவே! வெறும் சன்யாசி தானே? சர்வேஸ்வரன் அல்லவே! சர்வகலா வல்லவனால் கூட முடியாததை இவர் எப்படிச் செய்வார்?'' என்றெல்லாம் கேட்டுக் கொண்டார் நீலகேசி.

சமணர்கள் அவரைக் கேள்விகளால் துளைத்து துவைத்தார்கள்.

“போதும் நிறுத்துங்கள். இராமானுஜனிடம் கேட்க வேண்டிய கேள்விகளை மனப்பாடம் செய்யுங்கள். வெற்றி நமக்குத் தான். சமணத்திற்குத்தான். இனி சமணம் கர்நாடகத்தின் தலையாய மதமாகும். தோற்றுப் போகப் போகும் இராமானுஜரை இரண்டு சாத்து சாத்து கர்நாடகத்தை விட்டு உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு ஓட வைப்போம். அங்கேயும் சமணப் பள்ளியை அமைப்போம். மன்னனைச் சமணனாக மாற்றுவோம். அவன் கட்ட உபதேசித்திருக்கும் பெருமாள் கோயில்களுக்கு மாறாகச் சமண விஹாரங்களைக் கட்ட வைப்போம்'' என்றார் நீலகேசி.

போட்டியானது தொண்டனூர் ஏரிக் கரையில் ஏற்பாடு செய்யும்படிச் சொன்னார் இராமானுஜர்.

அங்கே பிரம்மாண்டமான பந்தல் அமைக்கப்பட்டது. ஆயிரக்கணக்கான மக்கள் ஆர்வத்தால் கூடினார்கள். ஆயிரம் சமணர்களும் நீலகேசியுடன் வந்து அமர்ந்தார்கள். அவர்களுக்கு வலது புறத்தில் மன்னனும் இராமானுஜரின் சீடர்களும் அமர்ந்தார்கள். இவர்களுக்கு முன்னால் இராமானுஜர் அமர சிறிய மேடை அமைக்கப்பட்டிருந்தது. அவருக்கும் முன்னால் இருந்தவர்களுக்கும் இடையே திரை ஒன்று தொங்கவிடப் பட்டிருந்தது. இராமானுஜர் அங்கே வந்து அமர்ந்தாரே தவிர அவரை யாரும் காணமுடியாதபடி திரை அமைந்திருந்தது.

என்ன நடக்கப் போகிறது என்பதை அறியும் ஆவலில் அனைவரும் அமைதியாக இருந்தார்கள்.

சமணர்கள் கேள்விகளைக் கேட்க அனுமதியளிக்கும் விதமாகக் கண்டாமணி ஒலியை எழுப்பி அடங்கியது.

ஆயிரம் சமணர்களும் கேள்விகளைக் கேட்டார்கள்.

ஒரே அமைதி.

அதையடுத்து திரைக்குப் பின்னாலிருந்த இராமானுஜ ரிடமிருந்து ஒரே நேரத்தில் ஆயிரம் கேள்விகளுக்கும் பதில் வந்தது.

உரத்த குரலில் எல்லோரும் கேட்கும் படி வந்தது.

அனைவருக்கும் ஆச்சரியம்!

நீலகேசிக்கோ அதிர்ச்சி.

மெல்லத் திரையை விலக்கிப் பார்த்தார்.

ஹா!

அந்தக் காட்சி -

ஒரு கணம் தான் அவரால் காண முடிந்தது.

மறுகணம் அவரது கண்கள் பார்வையை இழந்தன.

பந்தலில் ஒரே கூச்சல்.

"சமணர்கள் அனைவரையும் கழுவில் ஏற்றுங்கள்" என்றான் மன்னன்.

அதற்கு ஏதுவாக நரசிம்மர் ஆலயத்திற்குப் பின்னால் ஆயிரம் கழுமரங்கள் தயாராக இருந்தன.

மன்னன் உத்திரவிட்ட அதே நேரத்தில் திரை விலகியது.

இராமானுஜர் சொர்ண புஷ்பத்தைப் போல காட்சியளித்தார்.

எல்லோரும் எழுந்து அவரை வணங்கினார்கள்.

"மன்னா! நடக்க வேண்டியவை நடந்து விட்டன. சமணர்கள் யாரையும் கழுவேற்ற வேண்டாம்" என்றார் இராமானுஜர்.

அதைக் கேட்டுப் பல சமணர்கள் அவர்களை வணங்கி வைணவத்தில் சேருவதாக ஆணையிட்டார்கள்.

சமணத்தில் தீவிரப் பற்று கொண்ட ஒரு சில சமணர்கள் அவமானம் தாங்க முடியாமல் தாமாகவே சென்று கழுவேறி உயிரை விட்டார்கள்.

இதற்கிடையில் அந்த இடத்திலிருந்து ஊர்ந்தும் நெளிந்தும் தப்பிக் கொண்டிருந்த நீலகேசியை ஒரு சிறுவன் "வாருங்கள் ஐயா" என்று கூறி மறைவிடங்கள் மூலமாக அழைத்துச் சென்றான்.

வரவேண்டிய இடம் வந்ததும் "நில்லுங்கள் ஐயா" என்றான்.

"இது என்ன இடம் சிறுவனே?" என்று கேட்டார் நீலகேசி.

"அருவி விழும் இடம். காட்டுப் பகுதி" என்றான் சிறுவன்.

"நீ யாரப்பா?"

"உங்கள் மகன்"

"மகனா? நீயா?"

அப்போது பெண்குரல் ஒன்று குறுக்கிட்டது.

"மறந்து விட்டீர்களா அடிகளே! இவன் உன் மகன் தான். நான் தான் திங்களழகி. காப்பாற்றுவது போல் காப்பாற்றி வர்த்தமான விஹாரத்தில் வந்த என்னைச் சீரழித்து நச்சுப் பொய்கையில் எறியச் சொன்னீர்களே! ஞாபகமிருக்கிறதா? உங்களைக் கொல்லுவதற்காக துவாரசமுத்திர பள்ளியறைக்கு வந்த போத என்னை வீழ்த்திச் சீரழித்தீர்களே! நினைவிருக்கிறதா? அங்கே ஒரு நோயுற்ற அழகியை அனுப்பி உங்களோடு இணையச் சொன்னேனே! நினைவுக்கு வருகிறதா? அவளது நோய் உங்களுக்குப் பரவி நீங்கள் விரைவிலேயே சாவீர்கள் என்று கூறியது நினைவில் இருக்கிறதா? என் மகன் உங்களைப் பழி வாங்குவான் என்று சொன்னாளே! நினைவிருக்கிறதா? அவன் - உங்கள் மகன் தான் இன்று உங்களைப் பழிவாங்ககுவதற்கு எந்துள்ளான்" என்றாள் திங்களழகி.

"தனது சவால் தோற்று இராமானுஜர் வென்று விட்டார். தனது கண்பார்வையும் போய் விட்டது. மன்னனின் ஆட்கள் தன்னைக் கண்டால் உயிரோடு விடமாட்டார்கள். கண் பார்வை இல்லாததால் தப்பவும் முடியாது" என்று நினைத்த அவர் -

"நல்லது திங்களழகி. கண்பார்வையை இழந்த எனக்கு இந்த உலகில் எதுவுமில்லை. என்னை யாரோ தண்டிப்பதை விட என் மகன் தண்டிப்பது எனக்கு மகிழ்ச்சியை தருகிறது. தண்டனையை நிறைவேற்று" என்றார் நெஞ்சை நிமிர்த்தி.

"தந்தையே! இந்தச் சுறுக்குக் கயிற்றில் தலையை நுழையுங்கள்" என்றான் சிறுவன்.

தூக்குக் கயிற்றில் தலையை நுழைத்தார் நீலகேசி.

திங்களழகி கயிற்றை இழுத்தாள்.

நீலகேசியின் உடல் மேல் நோக்கி இழுக்கப்பட்டது.

துடிதுடித்தார்.

கண்களும் நாவும் பிதுங்கி இறந்தார்.

சடலத்தைக் கீழே இறக்கிய திங்களழகி அதை இழுத்துப் போய் அருவியில் விட்டாள்.

அருவி நீர் அச்சடலத்தை இழுத்துச் சென்றது.

"வா மகனே. தீயசக்தியாக இருந்த உன் தந்தையைத் தண்டித்து நீ தூயவனாகி விட்டாய். இனி நீ தூய சக்தியாக வளர்ந்து சமணத்தை வளர்க்க வேண்டும். இப்போதைக்கு நாம் இங்கு இருக்கக் கூடாது. எங்காவது சென்று விடுவோம் வா" என்றாள் திங்களழகி.



நீலகேசியின் அதர்மமான சவால் ஆச்சரியமான விதத்தில் இராமானுஜரால் வெற்றி கொள்ளப்பட்டாலும் எப்படி வெற்றி கொள்ளப்பட்டது என்பது மர்மமாகவே இருந்தது. அதில் தெளிவு பெற விரும்பிய மன்னன் இராமானுஜரின் பிரதான சீடராகிய முதலியாண்டானிடமே வினவினான்.

"மகாராஜா! எங்கள் ஆச்சார்யர் வெற்று மனிதரல்ல. மாபெரும் சக்தி. அவர் ஆதிசேஷனின் அவதாரம் என்பது உங்களைப் போன்றவர்களுக்குத் தெரியாது. ஆயிரம் தலைகளை உடையது ஆதிசேஷன். நீலகேசி ஆயிரம் சமணர்கள் கேட்கும் ஆயிரம் கேள்விகளுக்கு ஒரே நேரத்தில் பதில் கூற வேண்டும் என்று சொன்ன போது அவர் அரங்கனை ஆராதித்து ஆயிரம் தலைக் கொண்ட ஆதிசேஷனாக மாறி ஆயிரம் கேள்விகளுக்கு ஒரே நேரத்தில் பதிலளித்தார். ஆதிஷேஷன் கோலத்தை பிறர் கண்டால் கண்கள் பொசுங்கிப் போய் விடும் என்பதால் தான்

தனக்கு முன்னால் திரையைத் தொங்கவிடச் சொன்னார்" என்று சொல்லி மர்மத்தை உடைத்தார் முதலியாண்டான்.

மன்னன் அசந்து போனான்.



மேல் கோட்டை.

இது சமணர்களுக்கு முடிவு கட்டியது.

இராமானுஜருக்கு, திருநாராயண பெருமாளுக்குக் கோயில் கட்டும்படி ஈர்த்தது.

ஹொய்சள மன்னன் சமணத்தை விட்டு வைஷ்ணவத்திற்கு மாறினான்.

கர்நாடகத்தில் வைஷ்ணவம் வேரூன்றியது.

எனவே இந்த மூன்று தரப்பினரும் மேல் கோட்டையை மறக்க இயலாது.

அந்த விதத்தில் எல்லோருக்கும் மேலான கோட்டையாக மேல் கோட்டை உயர்ந்து நின்றது.



சோழ நாட்டிற்குப் புறப்படுவதற்கான எல்லா வசதிகளையும் திறம்படச் செய்திருந்தான் விஷ்ணு வர்த்தனன்.

சோழ நாட்டிலிருந்து இராமானுஜர் வந்த போது உண்டான எந்த விதமான இடர்பாடுகளும் தற்போது நிகழா வண்ணம் பயணப் பாதையை வகுத்து பயணம் முழுவதும் பாதுகாப்பு நல்க வீரர்களையும் நியமித்தான்.

அனைவரிடமும் விடைபெற்றுக் கொள்ள வந்த இராமானுஜர் மன்னனைப் பார்த்து "மன்னா! நீ செய்திருக்கும் தொண்டு மகத்தானது. கர்நாடக வரலாற்றில் மட்டுமின்றி இந்த இராமானுஜனின் வரலாற்றைப் பேசும் இடங்களில் எல்லாம் உன் பெயரும் பேசப்படும். உனக்கு என் நன்றி உரித்தாகட்டும். நீயும் உன் வம்சமும் நீடூழி வாழ்வீர்களாக" என்று வாழ்த்தினார்.

மன்னன் கலங்கினான்.

பட்டர்கள் கலங்கினார்கள்.

ராஜப் பிரமுகர்கள் கலங்கினார்கள்.

மக்கள் கலங்கினார்கள்.

அவரால் உயர்த்தப்பட்ட திருக்குலத்தோர் முதன் முதலாக ஆலயப் பிரவேசம் செய்து பரவசத்துடன் கலங்கி நின்றார்.

இராமானுஜர் திருநாராயணப் பெருமாளின் முன் நின்று அனைத்தையும் மறந்தார்.

அவரது தெய்வீக உதடுகள் ஸ்லோகத்தை உச்சரித்தன.

**ஸ்ரீரங்க மங்கள நிதிம் கருணா நிவாசம்**
**ஸ்ரீவேங்கடாத்ரி சிகராலய காளமேகம்**
**ஸ்ரீஹஸ்தி சைவ சிகரோஜ்வல பாரிஜாதம்**
**ஸ்ரீஸம் நவாமி சிரசா யதுசைல தீபம்!**

ஸ்ரீரங்கத்தில் மங்களமான நதி போல் கருணைக்கு இருப்பிடமாக இருக்கும் ரங்கநாதனையும், திருவேங்கட மலையின் சிகரத்தில் கருமுகிலாக விளங்கும் ஸ்ரீ வேங்கடேசனையும், அத்திகிரியின் சிகரத்தில் பிரகாசிக்கும் பாரிஜாதமாக விளங்கி வரங்களைக் கொடுக்கும் வரதராஜனையும், யதுகிரி* மேல் தீபம் போல் ஜொலிக்கும் திருநாராயணனையும் தலையால் வணங்குகிறேன்.

நிறைந்தது

* மேல்கோட்டை

